Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

B-22

ஸ்ரீ:.
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்.

ப்ரபந்நஜனகூடஸ்தரான

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி.

[முதல் ஸம்புடம்.]

பெருமாள்கோயில்
பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியரால்
எல்லார் தமக்கும் இன்பம் பயக்குமாறு எளிய நடையில் தெளிய எழுதப்பட்ட
திவ்யார்த்த தீபிகையுடன்,

சென்னை:
திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை ஆபீஸாரால்
"ஹாடன் அண்டு கம்பெனியில்" அச்சிடப்பட்டது.
1933
ஸ்ரீமுகஹு விஜயதசமி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

## ஸ்ரீமத் உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யார் ஸ்வாமிகள் அருளிச்செய்த உரைப்புத்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழி | ... | 3 | 0 |
| திருப்பாவை | ... | 1 | 4 |
| நாச்சியார் திருமொழி | ... | 1 | 12 |
| பெருமாள் திருமொழி | ... | 1 | 8 |
| திருச்சந்தவிருத்தம் | ... | 1 | 8 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு | ... | 1 | 4 |
| முதலாயிரம் முழுமையும் 3 வால்யூம்களாக உள்ளது | ... | 10 | 0 |
| பெரியதிருமொழி I 1, 2 (பத்துக்கள்) | ... | 3 | 0 |
| ஷை II 3, 4, 5 ஷை | ... | 3 | 8 |
| ஷை III 6, 7, 8 ஷை | ... | 3 | 8 |
| ஷை IV 9, 10, 11 திருத்தாண்டகங்களுடன் | ... | 5 | 0 |
| இயற்பா I (முதல் 4 திருவந்தாதிகள்) | ... | 4 | 8 |
| ஷை II (திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி | ... | 4 | 0 |
| ஷை III (திருவெழுகூற்றிருக்கை, திருமடல்கள், இராமாநுசநூற்றந்தாதி | ... | 3 | 0 |
| இராமாநுச நூற்றந்தாதி | ... | 1 | 0 |
| திருவிருத்தம் | ... | 2 | 4 |
| திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் | ... | 1 | 8 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரம் | ... | 1 | 0 |
| முகுந்தமாலை | ... | 0 | 6 |
| ஸுதர்சநசதகம் | ... | 1 | 0 |
| ஸ்ரீரங்கராஜஸ்தவம் (பூர்வசதகம்) | ... | 1 | 12 |
| கூரத்தாழ்வான் வைபவம் | ... | 0 | 4 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் | ... | 1 | 4 |
| சேஷாவதாரச் சிறப்பு | ... | 0 | 2 |
| ஸ்தோத்ரவ்யாக்யான சோதநம் | ... | 0 | 3 |
| ப்ரணவாதிகாரதத்துவம் | ... | 0 | 4 |
| வாத்ஸல்யார்த்த விவரணம் | ... | 0 | 2 |
| விதவாவபந வித்வம்ஸநம் | ... | 0 | 4 |
| பாதுகாஸஹஸ்ராவதார தத்துவம் (ஸம்ஸ்க்ருத பாஷை) | ... | 0 | 4 |
| வேதாத்யயநஸர்வஸ்வம் ஷை | ... | 1 | 0 |
| அதிமாநுஷஸ்தவம் (தெலுங்கு லிபி) | ... | 0 | 12 |
| ரஹஸ்யமூலம் ,, | ... | 0 | 6 |
| ஆசார்யஹ்ருதயமூலம் ,, | ... | 0 | 3 |

கிடைக்குமிடம்:—

திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை ஆபீஸ்,
32, பந்தர்தெரு, மதராஸ்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத் தனியன்கள்.



நம்பெருமாள் அருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்।
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம் ॥

கூரத்தாழ்வான் அருளிச்செய்தது.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம் ।
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தேகுருபரம்பராம் ॥

𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤 𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜 𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

யோநித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே ।
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



### ஆளவந்தார் அருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌳𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் |
ஆத்யஸ்ய நஃ குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ||

### ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰 𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁 𑌪𑌰𑌕𑌾𑌲 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந் |
பக்தாங்க்ரிரேணு பராகால யதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத் பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ||

போதுத்தனியன்கள் முற்றும்.

---



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:



நம்மாழ்வார் திருவடிகளே சரணம்

# நம்மாழ்வார் வைபவம்.



நெடியானருள் சூடும் படியான் சடகோபன்
அடிசே ரடியார்கட்கடையா விடர்தானே.

"நலமந்தமில்லதோர் நாடு" என்னப்படுகிற ஸ்ரீவைகுண்ட நகரிலே செம்பொன் செய் கோயிலிலே திருமாமணி மண்டபத்திலே * ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைகள் செய்கிற ஆதிசேஷனது ஸ்வரூபமான சீரிய சிங்காசனத்திலே ஸ்ரீ பூமி நீளைகளென்னும் தேவிமார் மூவரொடுங் கூடி வீற்றிருந்து நித்ய முக்தர்களுக்கு அளவிலாத ஆனந்தத்தை அநுபவிப்பித்தருளுகிற ஸகல கல்யாண குண பரிபூர்ணனான ஸர்வேச்வரன் அவ்விபூதியிலுள்ளார் எப்போதும் பரமாநந்தத்தையே அநுபவித்து வருதல் போல, இந் நிலவுலகத்திலுள்ள வுயிர்களும் தம்தம் ஆத்மகுண பரிபூர்த்தியால் அப்பெரும் பதவியைப் பெற்று இன்புற்று வாழலாம் படியிருக்க, இதற்கு உபயோகமாகவே தான் கொடுத்தருளின கரண களேபரங்களையும் சப்தாதி விஷயாந்தரங்களிலே செல்லவிட்டு * மாரனார் வரி வெஞ்சிலைக்கு ஆட்செய்து மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து இறந்து கரையற்ற கருமப் பெருங் கடலினுள் அமிழ்ந்து வருந்தி அலைவதை உற்றுநோக்கி அவ்வான்மாக்களையும் அழிவில் வீட்டை அடைவித்துக்கொள்ள வேண்டுமென்று இயல்பாக எழுந்த இன்னருளாலே அவ்வுயிர்கள் நல்வழி தீவழிகளை நன்றாகப் பகுத்துணர்ந்து நடக்கு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மாற்றை அறிவித்தற் பொருட்டு, தன் கட்டளை ரூபமான வேதங்களை வெளியிட்டருளி, அரிய பெரிய அவ்வேதங்களின் ஆழ்ந்த மறை பொருளைச் சில்வாழ்நாட் பல் பிணிச் சிற்றறிவினராகிய நம்போன்றவர்களும் தெள்ளிதில் தெரிந்துகொள்ளுதற்கு உபயோகமாம்படி அவற்றிற்கு அங்கமான அநேக சாஸ்திரங்களையும் முனிவர் முதலானுரைக்கொண்டு வெளியிட்டருளினன்.

பேரிருளிலே திரிவார்க்குப் பொருள் விளக்கம் பிறக்குமாறு கைவிளக்குக் கொடுத்தாற்போல, அநாதி அஜ்ஞாநாந்தகாரத்தில் அகப்பட்டவர்க்கு அர்த்தஜ்ஞாந ப்ரகாச முண்டாகுமாறு இப்படி சாஸ்திர தீபத்தைக் காட்டிக் கொடுக்கவும், விழியிலார்க்கு விளக்கு பயன்படாதவாறுபோல, பகவத் பக்தி யாகிற ஸித்தாஞ்ஜனத்தினுல் நெஞ்சென்னும் உட் கண்ணின் குருடு தீராத உலகத்தார் பலர்க்கு அந்த ப்ரமாண ப்ரதீபமும் முழுப்பயன் படாதாயிற்று. அவர்கள் சாஸ்திரங்களின் ஸித்தாந்தத்தைத் தீரத் தெளிய ஆய்ந்து ஓய்ந்து உணராமல் நுனிப்புல் மேய்ச்சலாக மேல் நோக்காகப் பார்த்தறிந்து நிலையில்லாதவற்றை நிலையுடையனவென்றும், நிலையினவற்றை நிலையிலவென்றும் விபரீதமாகத் துணிந்து அர்த்த காமங்களில் மிகவும் அபிமுகரும் மோக்ஷத்தில் அதி விமுகருமாய் அழிந்துபோவதை ஆலோசித்து, கருணைக்கடலான எம்பெருமான், தன் ஆணை செல்லாத இடங்களில் அரசன் தானே நேரிற்சென்று தண்டம் நடத்துதல் போலவும், கிணற்றினுள் வீழ்ந்த குழந்தையை யெடுக்கத் தாய் தானும் அதனுட் குதித்தல் போலவும் தானே ராம க்ருஷ்ணுதிரூபத்தால் * ஆதியஞ்சோதி யுருவை யங்கு வைத் திங்குப் பிறந்து பரத்வத்தை இருந்தது தெரியாதபடிவிட்டு ஸௌலப்யத்தையே தலைமைக்குணமாகக் கொண்டு உலகத்தோடொத்து வாழ்ந்து துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனஞ்செய்து அறத்தை நிலைநிறுத்தித் தன் வடிவழகாலும் உபதேச முகத்தாலும் அனுட்டான மூலமாகவும் பிரஜைகளைத் தன் வசப்படுத்தத் தொடங்கியவளவிலும், பலர் அநாதி கரும வாஸனையாலே சீர்திருந்தாமல் அத்திருவவதார மூர்த்திகள் திறத்து மநுஷ்ய புத்தியையேபண்ணித் தம்மைப் போலவே அவர்களைப் பாவித்து எதிரம்புகோத்துப் போருக்கு நின்றும் * கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளையே வைதும் விச்வரூபத்தையுமுட்பட இந்திர ஜாலமென்று இகழ்ந்தும் அதமகதிகளை அடையலாயினர்.

அதுகண்டு திருமால் திருவுள்ளமிரங்கி 'இனி இவர்களை வசிகரித்தற்கு வழி யாதோ?' என்று திருமகளோடு தீர்க்காலோசனை செய்து 'ஸஜாதீய மிருகங்களைக்கொண்டே மிருகங்களைப் பிடிப்பதுபோல, இவர்களினத்தவரென்னலாம்படியான சேதநரைக்கொண்டு இவர்களைக் கைப்பற்றுவதே உத்தமமான உபாயம்' என்று அறுதியிட்டு ஸ்ரீ பூமி நீளாதேவிகளையும் ஸ்ரீ பஞ்சாயுதங்களையும் ஸ்ரீவத்ஸ கௌஸ்துப வநமாலாதி சிஹ்னங்களையும் அநந்த கருட விஷ்வக்ஸேநாதியரையும் பார்த்து 'நீங்கள் ஏற்றபடி பூலோகத்தில் பல சாதிகளிலும் பிறந்து பிரபஞ்சத்தவரைப் பிறவிப் பெருங்கடலினின்று கரையேற்றிவாருங்கள்' என்று ஆணையிட்டனுப்ப, அவர்கள் அப்பணியைச் சிரமேற்கொண்டு ஆழ்வாராதியராக அவதரித்தார்கள்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இவர்கள், எம்பெருமானுடைய ஸகல மங்கள குணங்களாகிய அமுத வெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுபவராதலால் இவர்களுக்கு 'ஆழ்வார்' என்று திருநாமம் வழங்குதல் மரபு.

இவர்கள் ரிஷிகள்போலத் தாமாக மிகமுயன்று தத்துவஞானத்தைப் பெறுதலின்றி எம்பெருமான் தானே வந்து தன்னைக்காட்டிக் கொடுக்கக்கண்டு ஞான பக்தி விரக்திகளை எளிதிற்பெற்று, சிலர்க்கு விலக்காக மறுக்கப்படுகிற வேதம் போலன்றி யாவர்க்கும் ஒருங்கே உதவும்படி ஸகல வேத வேதாங்க[ரஹஸ்யார்த்தங்களைத் தமிழ்த் திவ்ய ப்ரபந்தங்களாக அருளிச்செய்து தம்முடைய அநுபவத்தைப் பிறர்க்கு உணர்த்தி உலகத்தை வாழ்வித்தருளுதலால் கூறுதற்கரிய வீறு பெறுவர்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற் சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப்படுகின்ற இவ்வாழ்வார்கள் பதின்மர்.

திருமாலின் வேறு தசாவதார மென்னலாம்படியான வீறுபாடுடைய இவ்வாழ்வார்களது திருவவதாரக் கிரமம்.

‡ "பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
அய்ய னருள்மாறன் சேரலர்கோன் — துய்யபட்ட
நாதனன்பர் தாள்தூளி நற்பாணன் நன்கலியன்
ஈதிவர் தோற்றத்தடைவா மிங்கு."

என்று முறைமை பெற்றிருக்கும். நம்மாழ்வார் திருவடிகளான ஸ்ரீ மதுரகவிகளையும், பட்டர்பிரா னென்னும் பெரியாழ்வாரது திருமகளாரான சூடிக்கொடுத்த நாச்சியாரையுஞ் சேர்த்து 'ஆழ்வார்கள் பன்னிருவர்' என்றுஞ் சொல்லுவதுண்டு.

புறவிருளைப் போக்குகின்ற த்வாதசாதித்யர்களிற்காட்டிலும் பெருமை பெற அகவிருளொழித்த இவ்வாழ்வார்களுடைய சரிதவிபவங்களுக்கு ஓர் எல்லையில்லை.

இவர்களுள் நம்மாழ்வார், மற்றையாழ்வார்களைப்போல இவ்வுலக வுணர்ச்சி நடையாடாநிற்க எம்பெருமானருளால் ஒரு காலவிசேஷத்திலே தத்துவஞான முதலியன தோன்றப்பெற்று அநுபவித்தவரன்றி, திருத்துழாய் மணத்தோடே முளைக்குமாபோலே அவதரிக்கும்போதே இயற்கையில் ஞானபக்திகளையுடையவராய் அங்ஙனம் என்றும் மாறாதிருந்ததனால் தலைவராகக் கூறப்பட்டு இதுவே காரணமாக அவரை அவயவியாகவும் மற்றையாழ்வார்களை அவர்க்கு அவயவமாகவும் பூருவர்கள் நிரூபித்தார்கள்.

அங்ஙனம் உருவகப்படுத்துமிடத்து, நம்மாழ்வாருக்கு, பூதத்தாழ்வாரைத் திருமுடியாகவும் பொய்கை பேயாழ்வார்களைக் கண்களாகவும் பெரியாழ்வாரை முகமாகவும் திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும் குலசேகராழ்வாரையும்

‡ உபதேசரத்தினமாலை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும் தொண்டரடிப்பொடியாழ்வாரை மார்பாகவும் திருமங்கையாழ்வாரைக் கொப்பூழாகவும் மதுரகவியாழ்வாரைத் திருவடியாகவும் உரைத்தனர். இதற்கேற்ப, "பூதம் ஶிரோ ஹ்ருத³மஹாஹ்வயமக்ஷியுக்³மம் ப⁴ட்டார்யமாஸ்யமத² பா⁴ர்க³வமஸ்ய கண்ட²ம் | பா³ஹூ வத³ந்தி குலஶேக²ரயோகி³வாஹௌ தோ³ர்மத்⁴யநாபி⁴ சரணௌ இதராந் ஶடா²ரே:॥ = பூதம் சிரோ ஹ்ரத மஹாஹ்வயமக்ஷியுக்மம் பட்டார்யமாஸ்யமத பார்க்கவமஸ்ய கண்டம் - பாஹூ வதந்தி குலசேகரயோகிவாஹௌ தோர் மத்யநாபி சரணௌ இதராந் சடாரே:." என்றும், "பூ⁴தம் மஸ்தகமக்ஷிணீ ஹ்ரத³மஹத்ஸூரீ ச ப⁴ட்டேஶ்வரம் வக்த்ரம் ப⁴க்திஸாரம் க³ளம் குலஶிரோபூ⁴ஷம் முநிம் காயகம் | தோ³ர்யுக்³மம் ஹரிதா³ஸபத்³ரஜ உரோ நாபி⁴ம் கலித்⁴வம்ஸிநம் ஶ்ரீபாத³ம் மது⁴ரம்கவிம் யதிபதிம் சாஹு: ஶடா²ரேர் பு³தா⁴:=பூதம் மஸ்தகபக்ஷிணீ ஹ்ரதமஹத்ஸூரீ ச பட்டேச்வரம், வக்த்ரம் பக்திஸாரம் களம் குலசிரோபூஷம் முநிம் காயகம்; தார்யுக்மம் ஹரிதாஸபத்ரஜ உரோ நாபிம் கலித்வம்ஸிநம் ஸ்ரீபாதம் மதுரம்கவிம் யதிபதிஞ் சாஹுச் சடாரேர் புதா:." என்றுமுள்ள ச்லோகங்கள் திருவவதரித்தன.

ஆக, பொய்கையார் முதலான ஆழ்வார்களை அவயவபூதராகக்கொண்டு அவயவியாய் ப்ரபந்நஜநகூடஸ்தரான நம்மாழ்வாருடைய சரித்திரம் எங்ஙனேயென்னில்;—

† "பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து" என்ற முதியார் மொழியின்படி முத்துவளத்தை மிகுதியாகவுடையதும் செந்தமிழ் நாடென்று சிறப்புற்றதும், ‡ "ஈரொன்பதாம் பாண்டி" என்கிறபடியே பதினெட்டுத் திருப்பதிகளையுடையதுமான பாண்டிய நாட்டிலே, கங்கை யமுனை முதலிய புண்ணிய நதிகள் பலவற்றிலும் விஞ்சிய வீறுபெற்ற தாமிரபர்ணி யென்னும் பொருநையாற்றின் கரையிலே திருநகரி யென்பது ஒரு திவ்ய தேசம் அத்திருக்குருகூரிலே வேளாளவருணத்திலே வம்ச பரம்பரையாகத் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுஞ் சிறந்த குலத்திலே திருவழுதி வளநாடரென்னும் பாகவதரது அறந்தாங்கியாரென்ற சக்கரபாணியாரது தனயராகிய அச்சுதரைத் தந்தையாகவுடையவர் செந்தாமரைக் கண்ணர். அவர்பாலுதித்த செங்கண்ணரது குமாரரான பொற்காரியார் தமது புதல்வராய்த் தோன்றிய காரியாருக்குக் கலியாணஞ் செய்விக்கக்கருதி மலைமா நாட்டில் திருவண்பரிசாரமென்னும் திருப்

† "வேழமுடைத்து மலைநாடு மேதக்க, சோழவளநாடு சோறுடைத்துப்-பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடுசான்றோ ருடைத்து." — ஔவையார் தனிப்பாடல்.

‡ சீரிருப்தாஞ் சோழமீரொன்பதாம் பாண்டி, ஓர் பதின்மூன்றாம் மலைநாடோரிரண்டாம் — சீர்நடுநா, டாறோடீரெட்டு தொண்டையவ்வட நாடாறிரண்டு. கூறுதிருநாடொன்றாக்கொள்."—நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பதியிலுள்ள திருவாழ் மார்பரென்னும் பகவத் பக்தரது திருமகளான உடைய நங்கையாரை மணப்பேசி முடிக்க, பின்பு இருவர்க்கும் அவ்வூரில் வெகு ஸம்பிரமமாக விவாஹமஹோத்ஸவம் நடந்தேறியது. பின்னர் இத்தம்பதிகள் திருக்குருகூருக்கு வந்து சிறப்பாகப் பலவாண்டு இல்லறம் நடத்தி வருகையில் ஒரு நாள் மாமனார் வேண்டுகோளின்படி, காரியார், தமது வாழ்க்கைத்துணைவியுடனே திருவண்பரிசாரத்தை யடைந்து அங்குச் சிலகாலம் வஸித்திருந்தார். பிறகு தமது தருமபத்தினியுடனே தம் ஊருக்கு மீண்டு வருகையில் திருக்குறுங்குடி யென்னுந் திருப்பதியை யடைந்து அங்கு எழுந்தருளியிருக்கிற நம்பியென்னுந் திருநாமமுடைய எம்பெருமானை வந்தித்து வாழ்த்தி 'அடியேங்களுக்கு ஒரு புத்ரஸந்தானத்தை அளித்தருளவேணும்' என்று பிரார்த்திக்க, அவ்வாதிமூர்த்தி 'நாமே வந்து பிறக்கிறோம்' என்று பேரருள் பொலிந்து அர்ச்சகமுகமாகச் சொல்லியருளித் தனது தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டம் முதலியவற்றை ப்ரஸாதித்தருளினான். இங்ஙனம் பெற்ற அவர் திருநகரியிற்சென்று வாழ்கையில், உடைய நங்கையார் கர்ப்பவதியாக, அவரது திருவயிற்றினின்று பகவானது அம்சமும் ஸ்ரீகௌஸ்துபத்தினது அம்சமும் ஸேனைமுதலியாரது அம்சமுமாக ஒரு குமாரர் வைகாசி விசாகத்திலே திருவவதரித்தார்.

இப்படி ஒருவர் மூவரது அம்சமாக இருக்கக்கூடுமோ? எனில்; சக்கரவர்த்தியான அரசன் அஷ்டதிக்பாலகர்களின் அம்சங்கள் கூடிப் பிறந்தவனென்றும், லக்ஷ்மணனும் பலராமனும் தனித்தனி ஆதிசேஷாம்சத்தோடு பகவானது அம்சமும் பொருந்தியவரென்றும், ஹநுமான் வாயுவின் அம்சத்துடன் ருத்திராம்சமும் உடையவரென்றும் நூல்கள் கூறுகையால் அவைபோலவே இதுவும் ஒக்குமென்ப. இங்ஙனம் கூறுவது புராணப்ரக்ரியையை அடியொற்றி யென்பர்.

பூருவாசாரியர்களின் திருவுள்ளத்தை ஆராய்ந்து பேசுமிடத்துப் பலபடியும் பேசலாயிருக்கும். ஆசார்யஹ்ருதயத்தில்

> "அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸுநந்தஸூநுவானவனுடைய
> யுகவர்ணக்ரமாவதாரமோ? வ்யாஸாதிவத் ஆவேசமோ?
> மூதுவர் கரைகண்டோர் சீரியரிலே ஒருவரோ? முன்னம்
> நோற்ற அனந்தன்மேற் புண்ணியங்கள் பலித்தவரோ வென்று
> சிங்கிப்பர்கள்."

என்றுள்ள சூர்ணிகையின் கருத்தை விவரிப்போமிங்கு;—கிருதயுகத்திலே அத்ரியும் ஜமதக்நியுமாகிற ப்ராஹ்மணோத்தமர்களுக்குப் பிள்ளையாய்க்கொண்டு தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய், திரேதாயுகத்திலே க்ஷத்ரியனாய் தசரத சக்ரவர்த்திக்குப் பிள்ளையாய், த்வாபரயுகத்தில் ராஜ்யப்ராப்தியில்லாத யது குலத்திற் பிறந்து க்ஷத்ரியரில் தண்ணியரும் வைச்யப்ராயருமான வஸுதேவர்க்கும் தோரக்ஷணத்தாலே ஸாக்ஷாத் வைச்யரான ஸ்ரீ நந்தகோபர்க்கும் பிள்ளையாய் ஆகவிப்படி கிருதம் முதலிய யுகங்களினடைவே ப்ராஹ்மணாதி வர்ணக்ரமேண அவதரித்துவந்த ஸர்வேச்வரன் நான்காவதான கலியுகத்திலே நான்காவது வருணத்திலே ஆழ்வாராக வந்து அவதரித்தபடியோ! என்றும், வேதங்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



களைப் பகுத்தல் முதலிய காரியங்களுக்காக வியாஸர் முதலிய மஹர்ஷிகள் பக்கலில் ஆவேசித்ததுபோலே தமிழ் வேதத்தை வெளியிடுதற்காக இவர் பக்கல் ஆவேசித்தபடியோ! என்றும், இவ் விபூதியைத் திருத்துகைக்காக ஈச்வர நியமனத்தாலே நித்யஸூரிகளிலொருவர் வந்தவதரித்தபடியோ!, அன்றியே, முக்தரிலே ஒருவர்வந்தவதரித்தபடியோ!, அன்றியே ச்வேதத்வீபவாஸிகளிலொருவர்வந்தவதரித்தபடியோ வென்றும், அல்லது கீழ்ச்சொன்னவர்களொருவருமன்றியே ஸம்ஸாரிகள் தம்மிலே ஜந்மாந்தர ஸஹஸ்ர ஸஞ்சிதமான தம்முடைய ஸுக்ருத பலமாகக்கொண்டு இங்ஙனம் திருந்தினரொருவரோ! என்றும், அன்றியே நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷத்தாலே நித்ய ஸம்ஸாரியை நித்யஸூரிகல்பமாக்கவல்ல அநந்தசாயியான ஸநாதந புண்யம் முழுநோக்காகப் பலித்தபடி திருந்தினரொருவரோ! என்று மிப்படிப்பட்ட வகைகளாலே இவரை இன்னாரென்று நிச்சயிக்கமாட்டாமல் ஜ்ஞானிகள் சங்கிப்பார்கள் — என்றவாறு. அதன்மேலுள்ள சூர்ணிகைகளின் போக்கையும் அவற்றின் வியாக்கியான ப்ரக்ரியையையும், மற்றும் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை முதலானோர் அருளிச்செயல் வியாக்கியானங்களில் அருளிச்செய்யும் புடைகளையும் நோக்குமிடத்து, நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்தாரொருவர் நிர்ஹேதுக பகவத்கடாக்ஷ விசேஷத்தாலே இங்ஙனே திருந்தினரென்னுமதுவே ஸம்ப்ரதாய நிர்வாஹமாகத் தேறுகின்றதென்று பெரியோர் பணிக்கக் கேட்டிருக்கை. "சேமங் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ — தாமந், துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு முளவோ பெருமானுனக்கு" என்றிவை முதலான பல பாசுரங்கட்கிணங்க ஆழ்வாரை பகவதவதாரமென்று கொள்ளுதலும் இவரது மிக்க பெருமைக்குப் பொருந்தியதேயாகும். இதுநிற்க.

இப்படி பகவான் அவதாரஞ்செய்தற்கு முன்னமே, அவனுக்குப் பலவாற்றாலும் அடிமை செய்வதையே உறுதொழிலாகக்கொண்ட திருவனந்தாழ்வான், இக் குமாரர்மீது வெயில் மழை முதலியன படாதிருக்குமாறு ஒரு பெரிய புளியமரமாக வந்து அவதரித்திருந்தார்.

நம்பி தந்தருளின வரத்தின்படி உதித்த குமாரர் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல் பாலுண்ணுதல் முதலிய லோக வியாபாரமொன்று மின்றியும் வாட்டமில்லாது பரிபூர்ணராயிருக்கிற அதிசயத்தைக் கண்டு தாய் தந்தையர் எம்பெருமான் பக்கலிலே பாரத்தைவைத்திட்டுத் தாம் சிறிதுங் கவலைப்படாமல் பிறந்த பன்னிரண்டாநாளில் அத் திருநகரியிலுள்ள திருக்கோயிலுக்கு அக் குழந்தையை யெடுத்துக்கொண்டுபோய் அங்கு எழுந்தருளியிருக்கிற பொலிந்துநின்றபிரானைச் சேவிக்கப் பண்ணுவித்து அப் பெருமாளது திருமுன்பே அந்தத் தெய்வக் குழந்தைக்கு, உலக நடைக்குமாறாக இருந்ததனால் மாறன் என்று திருநாமஞ்சாத்தி, அருகிலிருந்த திருப்புளியமரத்தினடியிலே * ஆணிப்பொன்னாற் செய்த வண்ணச் சிறுத்தொட்டிலிலே வளர்த்தி ஓம்பி வந்தார்கள்.

கர்ப்பத்திலிருக்கும்பொழுது ஞானமுடையனவாயிருக்கிற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனது ஸ்பர்சத்தால் அஜ்ஞானத்துக்கு உள்ளாக்கி அழுதல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அாற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சட மென்னும் வாயு இவரையும் பிறந்தபொழுது தொடுதற்குவர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்து ஓட்டி யொழித்ததனால் இவர்க்கு 'சடகோபர்' என்றுந் திருநாமமாயிற்று.

1 "நஞ்சடகோபனைப் பாடினையோவென நம்பெருமாள், விஞ்சிய வாதரத் தாற் கேட்ப" என்று பின்புள்ளாருங் கொண்டாடும்படி இவர் நம்பெருமாளால் 'நம் ஆழ்வார்' என்று அபிமானித்து விசேஷ கடாக்ஷஞ்செய்யப்பட்டு மற்றை யாழ்வார்களனைவரினும் உயர்வு பெற்றதனால் 'நம்மாழ்வார்' என்று ஒரு திருப் பெயர் பெற்றனர்.

இப்படிப்பட்ட ஆழ்வார் பதினாறு பிராயமளவுங் கண் விழியாமல் மௌனத்தோடு எழுந்தருளியிருக்க, அது நோக்கிய நங்கையாரும் அவர் கொழுநரும் 'இவர், தம்மைப்போன்ற நிலையுடையாரெவரையும் உலகத்தில் காணாமையால் யாரோடும் பேசாமலிருக்கிறார்' என்று அறியாமல் 'எம்பெருமான் விஷயத்தில் நாம்செய்த அபராதம் ஏதேனும் உண்டோ?' என்று கருதிக் கலங்கியிருந்தனர்.

அப்பொழுது பரமபதநாதனது நியமனத்தால் சேனைமுதலியார் என்கிற விஷ்வக்ஸேநர் ஏகாந்தமாக எழுந்தருளி இவருக்குத் † திருவிலச்சினை செய்து ஸகல மந்த்ரார்த்தங்களையும் உபதேசித்தருளினர்.

இப்படிப்பெற்ற இவர் பதினாறு கலைகளும் நிறைந்த சந்திரன்போலப் பதினாறு பருவம் நிரம்பி உறங்காப்புளி நிழலிலே பத்மாஸநங்கொண்டு வீற்றிருந்து பரதத்துவத்தைத் தியானஞ்செய்து ஞான முத்திரை கைக்கொண்டிருந்த காலத்தில் திவ்யதேச யாத்திரையாகச் சென்றிருந்த மதுரகவியாழ்வார், இவரது வைபவத்தைக் கேட்டும் இவரது திவ்ய ஒளியைக் கண்டும் திருவயோத்தியினின்று புறப்பட்டு வந்து அருகில் நின்று இவர்க்கு 'உணர்ச்சி உளதோ? இலதோ?' என்று சோதிக்கும்பொருட்டு இவர் முன்னிலையிலே ஒரு சிறு கல்லை யெடுத்துப்போட, அது விழுந்த வொலியைக் கேட்டவுடனே இவர் திருக்கண்களை விழித்துப்பார்த்தருளினர். உடனே மதுரகவிகள் 'இவர்க்கு வாக்கு உண்டோ? இன்றோ? அறிவோம்' என்று எண்ணி இவரைநோக்கி — 'அசித்தாகிய சரீரத்திலே அணுவளவினதான ஆத்மா ஸம்பந்தித்தால் அது எதை அநுபவித்து எங்கு இருக்கும்?' என்னுங் கருத்தையமைத்து, "செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று வினவ, ஆழ்வார் 'அச் சரீரத்தைச் சார்ந்த சுகதுக்கங்களை அநுபவித்துக்கொண்டு அதனையே ஆச்ரயித்திருக்கும்' என்ற கருத்தை யமைத்து "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று விடையருளிச் செய்தார்.

["சிறியதின் வயிற்றிற் பெரியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?" என்று மதுரகவிகள் வினவியதாகவும், "அத்தைத் தின்று அங்கே

1. சடகோபரந்தாதி — பாயிரம் 3.

† பஞ்ச ஸம்ஸ்காரம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கிடக்கும்'' என்று ஆழ்வார் விடை யளித்ததாகவுங் கூறுவாருமுளர்; 'அணு ரூபமான சேவனிடத்து விபுரூபமான ஞான விகாஸ முண்டானால் எதை அநுபவ யோக்கியமாகக்கொண்டு எங்குச் சேரும்?'' என்பது வினாவின் கருத்தாகவும், 'அகாரவாச்யமான பரப்ரஹ்மத்தை அநுபவித்து அதன் பக்கலிலே பற்றும்' என்பது விடையின் கருத்தாகவுங் கொள்ளத்தக்கது.]

அது கேட்டு மதுரகவிகள் மிக மகிழ்ந்து சடகோப முனிவரது ஞானத்தைக் கொண்டாடி இவரை யடைந்து தாம் கடைத்தேறக்கருதி, இவர் திருவடிகளிலே ஸாஷ்டாங்க ப்ரணாமமாகத் தாளுந் தடக்கையுங்கூப்பி விழுந்து தண்டனிட்டு இவரது இணையடித் தாமரைகளைத் தியானித்தலும் திருநாமங்களை வழுத்துதலும் செய்துகொண்டு இவரை ஆசிரயித்து 'அடியேனுக்குத் தத்வ ஹித புருஷார்த்தங்களை விளக்கியருள வேண்டும்' என்று பிரார்த்தித்தனர்.

அவ்வாறிருக்கையில், ஸ்ரீவைகுண்டநாதன் ஆழ்வாரது ஞானக் கண்ணுக்குச் சேவைசாதிக்கத் திருவுள்ளங்கொண்ட வளவிலே பெரிய திருவடியும் தனது பக்ஷபாதந்தோன்ற முன்வந்து நிற்றலும் பெருமாள் பிராட்டியுடனே கருடவாஹநாரூடனாய் எழுந்தருளி எதிர்வந்து நிற்க, † ''கரு முகில்தாமரைக்காடுபூத்து நீடிரு சுடர்இருபுறத்தேந்தி யேடவிழ் திருவொடும் பொலிய ஓர் செம்பொற்குன்றின்மேல் வருவபோல் கலுழன்மேல் வந்து தோன்றிய'' அம் முகில்வண்ணனது திருமேனி யழகைச் சேவித்துக் கண்கள் ஆனந்தவருவி சொரிய உடம்பு உரோமாஞ்சங்கொள்ள ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தார். அநந்தரம் நூற்றெட்டுத் திருப்பதி யெம்பெருமான்களும் அங்கு எழுந்தருளிக் காட்சிகொடுக்க, அவர்களை ஸேவித்து அவர்களது திவ்யகுணங்களை அநுபவித்து அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதி உள்ளடங்காமல் அதனைப் பிரபந்த முகமாக வெளியிடக் கருதி நான்கு வேதங்களுள் ருக்கு, யஜுஸ், ஆதர்வணம் என்ற மூன்று வேதங்களின் ஸாரப்பொருளைத் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்ற மூன்று பிரபந்தங்களின் மூலமாக வெளியிட்டு, அவ் வேதங்களுட் சிறந்ததும் பகவானது ஸ்வரூபமாகவே யுள்ளதுமான ஸாமவேதத்தின் தத்துவப்பொருளைச் சரம ப்ரபந்தமான திருவாய்மொழியால் அருளிச்செய்து அவற்றை மதுரகவிகளுக்கு உபதேசித்தருளினார்.

அக்காலத்தில் நித்யஸூரிகளும் ச்வேதத்விபவாஸிகளான ஸ்ரீவைஷ்ணவச்ரேஷ்ட்டர்களும் காரிமாறப்பிரானது மஹிமையைக் காணும்பொருட்டு முன் வந்து சேர, அவர்களைத் தமது பிரபந்தத்திலே ''போலிக போலிக'' என்று வாழ்த்தியருளினார்.

தம் பக்கல் திருவுள்ளமுவந்து பொலிந்துநின்றபிரான் ப்ரஸாதித்தருளின மகிழமலர் மாலையைத் தரித்ததனால் வகுளாபரணர் என்றும், பிறமதஸ்தர்களாகிய யானைகளைத் தமது திவ்ய ப்ரபந்தங்களிற் கூறிய தத்துவார்த்தங்களாற் செருக்கடக்கி அவர்களுக்கு மாவெட்டி யென்னுங் கருவிபோல இருத்தலால்

† கம்பராமாயணம் — திருவவதாரப் படலம் 13.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பராங்குசர் என்றும் திருநாமம் பெற்ற குருகைப்பிரான், பரப்ரஹ்மஸ்வரூபமும் ஜீவாத்மாவினது தன்மையும் பரமாத்மாவை அடையும் உபாயமும் அங்ஙனம் அடைதலின் பயனும் அடைதற்கு உள்ள பிரதிபந்தகமும் என்று ஸகல வேத சாஸ்திரங்களிலும் ஸாரமாகச் சொல்லப்பட்ட அர்த்த பஞ்சகத்தையும், மந்த்ர ச்ரேஷ்ட்டமான த்வயமென்னும் சரணாகதி மந்திரத்தின் அர்த்தத்தையும் பிர பந்த ரூபமாக யாவரும் எளிதில் அறியத் தெரிவித்தருளி

1. "களிர்மதிச்சடையனும் நான்முகக் கடவுளும்
தளிரொளியிமையவர் தலைவனு முதலா
யாவகையுலகமும் யாவருமகப்பட
நிலநீர்தீகால் சுடரிருவிசும்பும்
மலர்சுடர் பிறவும் சிறிதுடன்மயங்க
ஒருபொருட் புறப்பாடின்றி முழுவதும்
அகப்படக்கரந்தோராலிலைச் சேர்ந்தவெம்
பெருமா மாயனையல்லது
ஒருமாதெய்வம் மற்றுடையமோயாமே."

என்று தமது ஸித்தாந்தத்தின் தத்துவத்தை நன்கு வெளியிட்டு, தமது வாழ் நாள் முழுவதிலும் பிறிதொன்றிற் சிந்தை செலுத்தாது பரமனையே சிந்தித்து பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளை யுடையராய்க்கொண்டு உலக நடையாட்டம் சற்றுந் தொடரப் பெறாமல் முப்பத்தைந்து திருநக்ஷத்திரம் வாழ்ந்திருந்து, அப்பால், இமையவர் எதிர்கொள்ள, கின்னர கந்தர்வாதியர் கீதம்பாட, தேவர் கள் தோத்திரஞ்செய்ய, வைகுந்தமாநகர்புக்குத் திருமாமணி மண்டபத்தில் அந்தமில் பேரின்பத்தில் அமர்ந்தனர்.

இப்படி ஒப்புயர்வற்ற இவ்வாழ்வார் எம்பெருமானது திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கராக இருந்ததனால் பெருமாளது பாதுகை 'ஸ்ரீசடகோபன்' என்று இவரது திருநாமத்தையிட்டு வழங்கப்படுகின்றது.



## நம்மாழ்வார்க்கு அந்தரங்கரான மதுரகவியாழ்வாரது வரலாறு. †

பாண்டியநாட்டிலே திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரிக்கு அருகி லுள்ள திருக்கோளூரிலே, துவாபரயுகத்தில், எட்டுலக்ஷத்து அறுபத்துமூவா யிரத்து ஏண்ணூற்றெழுபத்தொன்பதாவதான ஈச்வர வருஷத்தில் சித்திரை

1. திருவாசிரியம் - 7.

† நம்மாழ்வார் வரலாற்றோடு தொடர்ச்சியுள்ளதனால் இவ்வாழ்வார் வரலாறும் இங்குக் காட்டப்படுகிறது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

மாதத்திலே சித்திரை நக்ஷத்திரத்திலே கணேசரான குமுதருடைய அம்சமும் கருடாழ்வானுடைய அம்சமுமாய் ஒருவர் அவதரித்தார். ஸூர்யோதயத்திற்கு முன் கிழக்கிற் காணப்படுகின்ற அருணோதயம்போலப் பராங்குசர் உதிப்பதற்கு முன் தென்தேசத்தில் தோன்றிய இவர், வேதசாஸ்திரங்களை இளமையிலேயே பயின்று செவிக்கினிய செஞ்சொற்கவிகளைப் பாடவல்லவராய் அதனால் மதுரகவி என்று திருநாமம்பெற்று மெய்யுணர்வினால் அவாவற்று மஹாவிரக்தராய் விஷ்ணுபக்திவிஞ்சி யோகநிஷ்டையிலும் தேர்ந்து தீர்த்தயாத்திரை திவ்யதேச யாத்திரைகளிலே திருவுள்ளமுடையராய்ப் புறப்பட்டுச் சஞ்சரிக்கலுற்று வட நாட்டுத் திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு திருவயோத்தியை அடைந்து அங்கு அர்ச்சாவதாரரூபமாய் எழுந்தருளி யிருக்கின்ற இராமபிரானையும் பிராட்டியையும் ஸேவித்துத் திருவடிதொழுது அந்தப் பரிசுத்த பூமியில் நித்ய வாஸஞ் செய்யக்கருதிச் சிலகாலம் வசித்திருந்தார்.

அக்காலத்தில் ஒருநாளிரவில் இவர் திருக்கோளூரெம்பெருமானைத் திசை நோக்கித் தொழக்கருதித் தெற்குத்திக்கில் கண்செலுத்தியபொழுது, அப்பக்கத்திலே வானுறவளர்ந்து விளங்குகின்றதொரு திவ்யமான பேரொளியைக் கண்ணுற்று அது இன்னதென்றறியாமல் 'கிராமநகரங்கள் வேகின்றனவோ? காட்டுத்தீயோ?' என்று சங்கித்துத் திகைத்து நின்றார். நின்றவர், இங்ஙனமே அடுத்த இரண்டு மூன்று நாள்களிலுங்கண்டு, அச்சுடர்த்திரள் முச்சுடரொளியினும் மிக்கு விளங்கியதனால் வெகுவியப்புற்று, அதனை அருகிற்சென்று பார்த்துத் தெளியத்துணிந்து புறப்பட்டு, அச்சோதியையே குறியாகக்கொண்டு அதிவிரைவாக நெடுவழிகடந்து, நடந்துவந்து ஆழ்வார் திருநகரியை அடைந்து அதில் அவதரித்தருளியுள்ள சடகோபமுனிவரது திருமேனி விளக்கத்தைச் சேவித்து இதுவே அத்தனை நெடுந்தூரம் பிரகாசித்ததென்று அறிந்து வியந்து, அவ்வாழ்வாரது நிலைமையை முன்பு தாம் கேள்வியுற்றிருந்தபடியே அப்ராக்ருதமாயிருக்கக்கண்டு, அவர்க்குக்கட்புலனும் வாய்ப்புலனும்உள்ளனவா வென்பதைச்சில உபாயங்களால் பரிசோதிப்பவரானார். அப்பொழுது காரிமாறப்பிரான் கண் திறந்து கடாக்ஷித்து, இவர் கேட்ட கேள்விக்கு ஏற்ற விடை சொல்லியருள, அதுகேட்டு மதுரகவியாழ்வார் அவரது ஞானவைபவத்துக்கு அதிசயித்து ஈடுபட்டு அவரையே ஆசாரியராகக்கொண்டு சரணம் புகுந்தனர்.

அப்பொழுது நம்மாழ்வார் பஞ்சஸம்ஸ்காரம் ப்ரஸாதித்து இவரை ஆட்கொண்டு, பரத்வம் வ்யூஹம் விபவம் அந்தர்யாமித்வம் என்னும் நான்குநிலைகளுக்கு முறையே வேதம் பாஞ்சராத்ரம் இதிஹாஸம் ஸ்ம்ருதி என்பனபோல அர்ச்சாவதாரத்திற்கு ஏற்ற துதிவடிவமான தமிழ்நூல்களை அருளிச்செய்யத் தொடங்கி, சதுர்வேதத்தின் ஸாரமாக நான்கு திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்து, அவற்றை அம்மதுரகவிக்கு உபதேசித்தருளினர்.

'முந்தின மூன்றுயுகங்களில் த்யான யாக அர்ச்சநங்களால்போலக் கடையுகத்தில் ஸ்தோத்திரமாத்திரத்தால் உயர்கதி உளதாம்' என்று நூற்கொள்கைக்கு ஏற்ப மதுரகவிகள் தாம் உபதேசம்பெற்ற திவ்யப்ரபந்தங்களைக் கைத்தாள

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யெடுத்துப் பண்ணிசையோடு எப்பொழுதும் பாராயணஞ்செய்துகொண்டு திருக்குருகூர்நகர் நம்பிக்கு ப்ரதான சிஷ்யராய், பரதாழ்வானுக்கே பணிவிடை புரிந்தொழுகின சத்ருக்நாழ்வானைப்போலப் பகவத்பக்தியினும் பாகவதப்ராப்தி பத்தியையே பரமாநுஷ்டாநமாகத் தலைக்கொண்டு அவ்வாழ்வார் விஷயமாக 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்ற திவ்யப்ரபந்தத்தைப்பாடி முமுக்ஷுக்களுக்கு உபகரித்தருளி வாழ்ந்திருக்கையில், தேவிற்சிறந்த திருமாற்குத்தக்க தெய்வக் கவிஞரும் பாவிற்சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதருமான காரிமாறர் திரு நாட்டை அலங்கரித்தார்.

அப்பால், ஆசிரியரைப் பிரிந்ததற்கு மிக இரங்கி அரிதில் தேறிய மதுர கவிகள் அர்ச்சாரூபமான ஆழ்வார் விக்ரஹத்தை அத்திருநகரியில் எழுந்தருளப் பண்ணிப் பிரதிஷ்டிப்பித்து அவர்க்கு நித்யநைமித்திக உத்ஸவங்களையெல்லாம் சிறப்புற நடத்திக்கொண்டுவந்தார். அத்திருவிழாக்களில் 'வேதந்தமிழ்செய்த மாறர் வந்தார்; திருமாலுக்குரிய தெய்வப்புலவர் வந்தார்; அளவிலாஞானத்து ஆரியர் வந்தார்!' என்று இவை முதலாக அநேக விருதுகளைக்கூறித் திருச்சின்னம் முழங்குதலைக் கேள்வியுற்றவளவிலே, மதுரைச்சங்கத்தாரது தூண்டுதலால் அவர்கள் மாணாக்கர்கள்வந்து எதிரிட்டு 'உங்களாழ்வார் பக்தரேயன்றிப் பகவானல்லரே; இவர் சங்கமேறிய புலவரோ? இவர் பாடிய திருவாய்மொழி சங்கமேறிய செய்யுளன்றே; இவரை வேதந்தமிழ் செய்தவரென்று சிலாகிப்பது தகுதியோ?' என்று பல குதர்க்கம்பேசி விருதுகளைத் தடுத்திட்டனர். அதற்கு மதுர கவிகள் மனம் பொறாமல் வருந்தி 'இவர்கட்குக் கர்வபங்கமாம்படி தேவரீர் செய்தருளவேண்டு' மென்று ஆழ்வாரையே பிரார்த்திக்க, சடகோபர் ஒரு கிழப் பிராமணவடிவத்தோடு வந்து, திருவாய்மொழியில் "கண்ணன்கழலிணை நண்ணும் மனமுடையீர்! எண்ணுந் திருநாமம் திண்ணம் நாரணமே" என்ற பாசுரத்தின் முதலடியை ஒரு சிற்றேட்டில் எழுதிக்கொண்டுபோய்ச் சங்கப் பலகையில் வைத்திட்டால் அவர்கள் செருக்கு அடங்கும்' என்று கூறியருளினார். அந்த நியமனத்தின்படியே சடகோபபக்தர் கண்ணன்கழலிணையை எழுதிய ஏட்டை எடுத்துப்போய் வைத்திட்ட மாத்திரத்தில், சங்கப்புலவர்கள் ஏறியிருந்த பலகை பொற்றாமரைப் பொய்கையில் மூழ்கித் தன்மேலிருந்த புலவர்களையெல்லாம் நீரில் வீழ்த்தி உடனே மேலெழுந்து தன்மீது வைத்த சிறுமுறியை மாத்திரம் ஏந்திக்கொண்டு மிதந்தது. அப்பொழுது நீரில்விழுந்து அமிழ்ந்து தடுமாறி யெழுந்து மெல்ல நீந்திக் கரைசேர்ந்த சங்கப்புலவர்கள், ஸகல வேத சாஸ்திரங்களையும் பிறரால் கற்பிக்கப்படாமல் தாமே யுணர்ந்து பகவதம்சமாகிய ஆழ்வாருடைய தைவிகமான பாண்டித்யத்தைத் தெரிந்துகொண்டு இறுமாப்பொழிந்து, தாம் முன்பு அபசாரப்பட்டதற்கு அநுதாபமுற்று, அதனை க்ஷமித்தற்பொருட்டு அவரது மஹிமையைக் குறித்துத் தோத்திரமாகத் தனித் தனி ஒவ்வொரு பாடல்பாடி வெளியிடுபவரானார்கள். அங்ஙனம் வெளியிடுகையில், அப்பாடல்களியாவும்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



"சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ — தாமந்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு
முளவோ பெருமா னுனக்கு."

என்ற இப்பாடல் வடிவாகச் சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்டிருக்க, இதுபற்றி அவர்களனைவரும் 'இது என்ன அற்புதம்! என்ன அற்புதம்!! இதுவும் ஆழ்வாரது தெய்வத்திருவருளே!!!' என்று அதிசயப்பட்டு,

"ஈயாவேதோ கருடற்கெதிரே இரவிக்கெதிர் மின்மினியாவேதோ ?
நாயாவேதோ உறுமிப்புலிமுன் நரிகேசரிமுன் நடையாவேதோ ?
பேயாவேதோ அழகூர்வசிமுன் பெருமான் வகுளாபரணன் னருள்கூர்ந்
தோவாதுரையா யிரமாமறையின்னொரு சொற்பொருமோவுலகிற்கவியே."

என்பது முதலாகச் சிற்சில கவிகள்பாடிப் புகழ்ந்து அன்றுமுதல் ஆழ்வார்க்கு விருதுகூறல் முதலிய ஸகலவிபவங்களையும் முன்னிலும் பலமடங்கு மிகுதியாக நடப்பித்து வந்தனர்.

இப்படி மதுரகவியாழ்வார் தமது ஆசாரியருடைய பெருமைகளை வெளியிட்டுக்கொண்டு அத்தலத்திலே சிலகாலம் எழுந்தருளியிருந்து, பின்பு, சிந்தையும் மொழியுஞ் செல்லாநிலைத்தான பேரின்பப் பெருவீட்டை அடைந்தனர்.

இங்ஙனம் இவ்வாழ்வார் நம்மாழ்வாருக்குத் திருவடித்தொண்டராயொழுகியதுபற்றி, அவரது திருவடிநிலை 'மதுரகவிகள்' என இவரது திருநாமத்தையிட்டு வழங்கலாகும்.

["மாறனடிபணிந்துய்ந்தவிராமாநுசன்" என்பதற்கிணங்க, நம்மாழ்வார் திருவடி நிலைகளுக்கு இராமாநுசன் என்று பல திவ்யதேசங்களில் வழங்கும் திருநாமமும் பொருத்தமுடையதே.]

"ஏரார் மதுரகவி யிவ்வுலகில் வந்துதித்த
சீராருஞ் சித்திரையில் சித்திரைநாள்—பாருலகில்
மற்றுள்ள வாழ்வார்கள் வந்துதித்த நாட்களிலும்
உற்றதெமக் கென்று நெஞ்சே! ஓர்"

மதுரகவியாழ்வார் வைபவம் முற்றிற்று.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழித் தனியன்கள்.

(ஸ்ரீமந்நாதமுனிகள் அருளிச்செய்தது,)

𑌭𑌕𑍍𑌤𑌾𑌮𑍃𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌜𑌨𑌾𑌨𑍁𑌮𑍋𑌦𑌨𑌂
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌦𑌂 𑌶𑍍𑌰𑍀𑌶𑌠𑌕𑍋𑌪𑌵𑌾𑌙𑍍𑌮𑌯𑌮𑍍 ।
𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌾𑌖𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑌮𑌾𑌗𑌮𑌂
𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌵𑍇𑌦𑌸𑌾𑌗𑌰𑌮𑍍 ॥

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோபவாங்மயம்,
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிட வேதஸாகரம்.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| பக்த அம்ருதம் | தொண்டர்கட்கு அமுதமா யிருப்பதும் | ஸ்ரீசடகோப வாங்மயம் | நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தி மயமுமான |
| விச்வ ஜந அநுமோதநம் | ஸகல ஜனங்களையும் ஆனந்திக்கச் செய்வதும் | | |
| ஸர்வ அர்த்ததம் | ஸமஸ்த புருஷார்த்தங்களையும் அளிக்கவல்லதும் | த்ராவிட வேத ஸாகரம் | தமிழ் வேதக் கடலை |
| ஸஹஸ்ர சாக உபநிஷத் ஸமாகமம் | ஆயிரக்கணக்கான சாகைகளையுடைய உபநிஷத்துக்களின் திரட்சியாயிருப்பதும் | அஹம் | அடியேன் |
| | | நமாமி | ஸேவிக்கிறேன். |

* * *—திருவாய்மொழி ஒரு கடலாக ரூபணம் செய்யப்படுகின்றது. கடலுக்குள்ள தன்மையடங்கலும் திருவாய்மொழிக்குமுண்டென்று ஐந்து விசேஷணங்களினால் நிரூபிக்கப்படுகின்றது. [பக்தாம்ருதம்.] உலகிற்காணும் கடலானது பண்டொருகால் * வங்கக் கடல்கடைந்த மாதவனாலே கடையப்பட்டுத் தேவர்கட்கு அமுதமளித்தது ஆகையாலே பக்தர்களான தேவர்கட்கு அது அமுதமாயிருந்தது; திருவாய்மொழியோ வென்னில்; "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றும் "பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்" என்றும் ஆழ்வார் தாமே அருளிச்செய்தபடியே அநந்ய ப்ரயோஜநர்களான பாகவதர்கட்கு நித்ய போக்யமான அமுதமாயிருக்கும். "வைகல் பாடவல்லார் வானோர்க்கு ஆராவமுதே" என்கிறபடியே திருவாய்மொழியைப் பாடுமவர்களே வானோர்க்கு ஆராவமுதமாகும்போது அந்தத் திருவாய்மொழி ஆராவமுதமாகச் சொல்லவேணுமோ?

[விச்வஜந அநுமோதநம்] கடலைக் கண்டு களியாத ஜனங்களில்லை. யார் எத்தனை தடவை கண்டாலும் ஆராதே அபூர்வ வஸ்துவாகி ஸந்தோஷஜநகமாயி



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ருக்கும் கடல்; திருவாய்மொழிதானும் அப்படியே காணும். "என்னாவிலின் கவி" என்றும் "பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்" என்றும் "தூமுதல் பத்தர்க்கு" என்றும் "கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" என்றும் "தென்னாவென்னு மென்னம்மான் திருமாலிருஞ் சோலையானே" என்றும் 'பார்பரவின்கவி" என்றும் சொல்லுகிறபடியே ஆழ்வாரோடு மற்றையாரோடு வாசியறவும் நித்யஸூரிகளோடு நித்ய ஸம்ஸாரிகளோடு வாசியறவும் ஸர்வேச்வரனோடு தச்சேஷபூதர்களோடு வாசியறவும் எம்பெருமானோடேகூட உபய விபூதியும் புஜிக்கைக்கு உரியதாகையாலே விஶ்வபோக்யமாவதானை எம்பெருமானுக்கும் மற்றுமுள்ள ஜனங்களுக்கும் அநுமோதநமாயிருக்கும்.

[ஸர்வார்த்ததம்] கடல் ரத்நாகரமாகையாலே சிறந்த பொருள்களை யெல்லாம் தன்னுள்ளே அடக்கிக்கொண்டிருந்து தன்னிலே அவகாஹித்து எடுத்தாள வல்லவர்கட்குத் தந்து உபகரிக்கும். திருவாய்மொழி தானும் ஸகல புருஷார்த்தங்களையுமளிக்கும். "குருகூர்ச்சடகோபன் சொன்ன பாடலோராயிரத்துள் இவையு மொருபத்தும் பயிற்ற வல்லார்கட்கு, அவன் நாடு நகரமும் நன்குடன் காண நலனிடையூர்திபண்ணி, வீடும் பெறுத்தித் தன் மூவுலகுக்குந் தருமொரு நாயகமே" என்கிறபடியே திருவாய்மொழி அளிக்கமாட்டாத புருஷார்த்தமில்லை யென்க. "மிக்க வேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி" என்கிறபடியே முமுக்ஷுக்களுக்கு அவசியமறியவேண்டிய வேதாந்த துட்பொருள்களை யெல்லாம் சுரக்கும்படியைச் சொல்லுகிறதாகவுமாம்.

[ஸ்ரீசடகோபவாங்மயம்] கடலானது ஒருகால் அகஸ்திய மஹாமுனியின் வாயில் நுழைந்து புறப்பட்டதாகையாலே அது அகஸ்த்ய வாங்மயமாயிருக்கும், திருவாய்மொழி குருகூர்ச் சடகோபன் சொல்மாலையாயிருக்கும். 'ஆழ்வாருளிச்செயல்' என்னுமத்தனையே ஏற்றத்திற்கு உடலென்க. * காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயூடு நின்று தவஞ்செய்த ரிஷிகளிற்காட்டில் * உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணனெம்பெருமானென்றே கண்கள் நீர்மல்கிக் கிடந்த ஆழ்வார்க்குநெடுவாசியுண்டே.

[ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம்.] * தொக்கிலங்கியாறெல்லாம் பரந்தோடித்தொடுகடலேபுக்கன்றிப் புறம் நிற்கமாட்டாதாகையாலே நதிகள் கடலிலே புகும்போது பலபல மரங்களையும் அடித்துக்கொண்டுபோய்ப் புகுமாகையாலே கடலானது ஆயிரக்கணக்கான சாகைகளின் [கிளைகளின்] சேர்க்கையைப் பெற்றிருக்கும். திருவாய்மொழியோ வென்னில், ஸஹஸ்ரசாகைகளை யுடைத்தான உபநிஷத்துண்டு — ஸாமவேத ஸாரமான சாந்தோக்ய உபநிஷத்து.* அத்தோடே. ஸமமான ஆகம [வேத]மாக இருக்கும். அனேக சாகைகளையுடையன வான உபநிஷத்துக்களெல்லாம் திரண்ட திரட்சியாயிருக்கும் திருவாய்மொழி என்னவுமாம். ஆக இப்படிப்பட்ட பொருத்தங்களாலும் உள்ளாழமறியக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

கூடாமையினுலும் கடல் என்று சொல்லத் தகுந்ததான தமிழ் வேதத்தை நமஸ்கரிக்கிறேனென்றதாயிற்று.

த்ராவிட வேதஸாகரத்தை அவகாஹிக்கிறேன் என்னுமல்: நமஸ்கரிக்கிறேன் என்றது — 'வந்தே ராமாயணார்ணவம்'' [ஸ்ரீராமாயணமாகிற ஸமுத்ரத்தை நமஸ்கரிக்கிறேன்] என்று சொன்னதை அடியொற்றி யென்பர். ''ஶ்லோக ஜால ஜலாகீர்ணம் ஸர்க்க கல்லோல ஸங்குலம் | காண்டக்ராஹ மஹாமீநம் வந்தே ராமாயணார்ணவம் = ச்லோக ஜால ஜலாகீர்ணம் ஸர்க்க கல்லோல ஸங்குலம் — காண்டக்ராஹ மஹாமீநம் வந்தே ராமாயணார்ணவம்'' என்றது காண்க. ச்லோகங்களாகிற ஜலம் நிரம்பியும், ஸர்க்கங்களாகிற அலைகள் நிறைந்தும், காண்டங்களாகிற முதலைகளும் பெருமீன்களும் மலிந்து மிருக்கின்ற ஸ்ரீராமாயண ஸமுத்ரத்தை நமஸ்கரிக்கிறே னென்றது. அது இருபத்தினுலாயிரம் ச்லோகமாயிருக்கும். இது நீர்த்தங்களாயிரமான * சீர்த்தொடையாயிரமாயிருக்கும். அதில் ஐந்நூறு ஸர்க்கமாயிருக்கும்; இது பத்து நூறாயிருக்கும். அது ஆறு காண்டமாயிருக்கும்; இது ஷட்பதத்தின் (த்வயத்தின்) அர்த்தத்தைப் பேசுகின்ற பத்துப் பத்தாயிருக்கும். அது ராமாயணார்ணவம், இது த்ராவிட வேதஸாகரம். அது ரகுவம்ச சரிதம்; இது முகில்வண்ணனடிமேற் சொன்ன சொல்மாலை அது வால்மீகிமஹர்ஷிப்ரோக்தம்; இது ஸ்ரீசடகோப மஹர்ஷி ஸாக்ஷாத்க்ருதம். அது * மஹாபாதக நாசகம்; இதுவும் * அருவினை நீறுசெய்யும். அது ''ஸம்ஸாரம் ஸ விஹாய கச்சதி ஸ நர: விஷ்ணோ: பதம் சாச்வதம்'' என்கிறபடியே மோக்ஷப்ராபகமா யிருக்கும்; இதுவும் ''வானின்மீதேற்றி யருள்செய்து முடிக்கும் பிறவிமாமாயக்கூத்தினையே'' என்று திருவடியேயடைவிக்கும். ... ... ... ... ... ... (*)

## ஈச்வரமுனிகளருளிச்செய்த தனியன்.

திருவழுதி நாடென்றுந் தென்குரு கூரென்றும்
மருவினிய வண்பொருந லென்றும் — அருமறைகள்
அந்தாதி செய்தா னடியிணையே யெப்பொழுதும்
சிந்தியாய் நெஞ்சே தெளிந்து.

## பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே !, | அரு மறைகள் | அருமையான வேதங்களை |
| திரு வழுதி நாடு என்றும் | திருவழுதி நாடென்கிற தேசத்தை அநுஸந்தித்தும் | அந்தாதி செய்தான் | அந்தாதித் தொடையான திருவாய்மொழி முகத்தாலே பாடின ஆழ்வாருடைய |
| தென் குருகூர் என்றும் | அழகிய திருக்குருகூரென்கிற திவ்யதேசத்தை அநுஸந்தித்தும் | அடி இணையே | உபய பாதங்களையே |
| மருவ இனிய வண் பொருநல் என்றும் | ஆசைப்படும்படி போக்ய மாய் அழகியதான தாமிரபர்ணியாற்றை அநுஸந்தித்தும், | எப்பொழுதும் | இடைவிடாமல் |
| | | தெளிந்து | தெளிவுடனே |
| | | சிந்தியாய் | சிந்தை செய்யக்கடவை. |

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.
CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — ஆழ்வாருடைய திருவடிகளை அநுஸந்திக்கும்போது அவரது திருவவதார ஸ்தலமான திருநகரியையும், அது இருக்கும் நாடாகிய வழுதிவளநாட்டையும், அந்நாட்டுக்கு அலங்காரமாய் ஆழ்வார்க்குப் ப்ராண நிரூபகமுமான தாமிரபரணி திவ்ய நதியையும் அநுஸந்தித்துப் பின்பு 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' என்னவேணுமென்கிறது. இதனால் உத்தேச்ய வஸ்துவின் ஸம்பந்த ஸம்பந்தம்பெற்ற வஸ்துக்களும் உத்தேச்யம் என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியிடப்பட்டதாகும். எம்பெருமான் சேவடியை அநுஸந்திக்குமவர்கள் * வைகுந்த வானாட்டையும் * இறந்தால் தங்குமூரான கண்ணன் விண்ணூரையும் * அமுத விரசையாற்றையும் அநுஸந்திக்குமாபோலே.

"வாய்ந்த வழுதிவளநாடன் மன்னு குருகூர்ச் சடகோபன்" என்றும் "நல்லார் நவில் குருகூர்நகரான்" என்றும் "பொருநற் செங்கணி துறைவன்" என்றும் நாட்டையும் ஊரையும் ஆற்றையும் தமக்கு நிரூபகமாக ஆழ்வார் தாமே அருளிச் செய்திருக்கையாலே அம் மூன்றையும் அநுஸந்திக்கச் சொல்லிற்று.

தெளிந்து = ஆழ்வார் திருவடிகளே உபாயமும் உபேயமும் என்கிற தெளிந்த அத்யவஸாயங்கொண்டு என்றபடி. ... ... ... .... (*)

## சொட்டைநம்பிகளருளிச்செய்த தனியன்.

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்
இனத்தாரை யல்லா திறைஞ்சேன் — தனத்தாலும்
ஏதுங் குறைவிலேன் எந்தை சடகோபன்
பாதங்கள் யாமுடைய பற்று.

### பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| மனத்தாலும் | நெஞ்சினாலும் | ஏதும் குறைவு இலேன் | எவ்விதமான குறையுமுடையேனல்லேன்; (ஏதனாலென்னில்) |
| வாயாலும் | வாக்கினாலும் | | |
| வண் குருகூர் பேணும் | திருநகரியை ஆதரிக்கின்ற | எந்தை சடகோபன் | அஸ்மத் ஸ்வாமியான நம்மாழ்வாருடைய |
| இனத்தாரை அல்லாது | கோஷ்டியில் சேர்ந்தவர்களைத் தவிர (மற்றையோர்களை) | பாதங்கள் | திருவடிகள் |
| இறைஞ்சேன் | வணங்கமாட்டேன் ; | யாமுடைய | நம்முடைய |
| தனத்தாலும் | செல்வத்தினாலும் | பற்று | ஆதாரமாயிராநின்றது. |

* * * — ஆழ்வார் திருநகரியையே போற்றிக்கொண்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் அந்வயித்த மஹான்களைத்தவிர மற்று எவரையும் வணங்கமாட்டேனென்றது, எப்போதும் அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவ சிகாமணிகளையே வணங்குவே னென்றபடி.

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணுகையாவது — "திருக்குருகூரதனை உளங்கொள் ஞானத்து வைம்மின்" என்றும் "திருக்குருகூரதனைப் பாடியாடிப் பரவிச்சென்மின்கள்" என்றும் ஆழ்வார் உபதேசித்தருளினபடியே திருக்குருகூரை நெஞ்சாலே சிந்தித்தும் வாயாலே சொல்லியும் போருகை. மன

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மொழிகளிரண்டைச் சொன்னது மூன்றாவதான சரீரத்திற்கும் உபலக்ஷணம் என்று சிலர் கொள்வர். திருநகரியைச் சென்றடைதல் மெய்யினால் பேணுத லாகும். திருக்குருகூரை நெஞ்சினால் நினைந்து வாயினால் மொழிதலே போதும், சென்று சேவிக்கவேணுமென்னும் நிர்ப்பந்தமில்லை என்பது இத்தனியனருளிச் செய்தவரின் திருவுள்ளமென்ப. "பேணுமினத்தாரை" என்றது, பேணுகிறவர் களின் ஜாதியைச் சேர்ந்தவர்களெல்லாரையும் குறிக்கும்.

ஆழ்வார் திருவடிகளே தமக்குத் தஞ்சமென்றும் அவையே தமக்கு வைத்தமாநிதி யென்றும் பின்னடிகளிற் சொல்லுகிறது. ஆழ்வார் திருவடிகளை ஆச்ரயிக்கப்பெற்ற நமக்கு இனியொரு குறையுமில்லை யென்கிறார். எம்பெருமானை ஆச்ரயித்தவர்கள் "ധനം ஜீயம தவ வாடிவம்கஜ௶ = தநம் மதீயம் தவ பாதபங்கஜம்" என்று அவனது திருவடிகளையே தமக்குச் செல்வமாக நினைத்திருப்பதுபோல, ஆழ்வாரை ஆச்ரயித்தவர்கள் "விஹ-ஏ திஸ்லவ-ும யடெவ நியஜெ-ந ஊ-நுயா-நா௶ = விபூதிஸ் ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்" என்று ஆழ்வார் திருவடிகளையே ஸகலைச்வர்யமாக நினைத்திருப்பரா கையாலே 'தனத்தாலு மேதுங் குறைவிலேன்" என்றது.

ധനം என்னும் வடசொல் தனமெனத் திரிந்தது. எந்தை - என் தந்தை.

முன்னடியில் இறைஞ்சேன் என்று ஒருமையாகச் சொல்லிப் பின்னடியில் யாமுடைய என்று பன்மையாகச் சொன்னது. இயல்புபற்றிய தனித்தன்மைப் பன்மை; ஸ்வஸம்பந்திகளையுங் கூட்டிக்கொண்டு பேசுகிறு ரென்னவுமாம் ....(*)

## அநந்தாழ்வானருளிச்செய்த தனியன்.

ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன் — ஆய்ந்தபெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வே தந்தரிக்கும்
பேராத வுள்ளம் பெற.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| ஆய்ந்த | குற்றங் கலசாதம | உள்ளம் | நெஞ்சை |
| பெரு சீர் | சிறந்த திருக்குணங்களினால் | பெற | பெறும் பொருட்டு, |
| ஆர் | பரிபூர்ணரான | ஏய்ந்த பெரு கீர்த்தி இராமாநுச முனி தன் | தகுதியான பெரும்புகழை யுடைய எம்பெருமானாரது |
| சடகோபன் | நம்மாழ்வார் அருளிச்செய்த | | |
| செந்தமிழ் வேதம் | செவ்விய தமிழ் வேதத்தை | வாய்ந்த பாதம் மலர் | பொருத்தமான திருவடித் தாமரைகளை |
| தரிக்கும் | தாங்கிக்கொள்ளவல்லதாய் | | |
| பேராத | வேறொன்றில் செல்லமாட்டாததான | வணங்குகின்றேன் | வணங்குகின்றேன். |

* * * — மேல் தனியனில் "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்னப்படுதலால்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருவாய்மொழியை வளர்த்தவரான எம்பெருமானாருடைய திருவருளின்றித் திருவாய்மொழியை மனப்பாடமாகத் தரிக்கவல்ல சக்தி வாய்க்கமாட்டாதாதலால், செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராதவுள்ளம் பெறுதற்காக இராமாநுசனது மலர்ப்பாதம் வணங்குகின்றே னென்கிறது இதில்.

எம்பெருமானார் தாம் * மாறனடிபணிந்துய்ந்த விராமாநுசனாய் * மாறன் பணித்த மறையுணர்ந்தோனாய் *தென்குருகைப்பிரான் பாட்டென்னும் வேதப் பசுந்தமிழ்தன்னைத் தன்பத்தியென்னும் வீட்டின்கண்வைத்த விராமாநுசனாய் * பண்டரு மாறன் பசுந்தமிழானந்தம்பாய்மதமாய் விண்டிடும் வேழமாய் * திருவாய்மொழியின் மணந்தரு மின்னிசை மன்னு மிடந்தொறும் புகுந்து நிற்கும் குணந்திகழ் கொண்டலாய் * உறுபெருஞ் செல்வமுந் தந்தையுந் தாயும் உயர்குருவும் வெறிதரு பூமகள்நாதனும் மாறன் விளங்கியசீர் நெறிதருச் செந்தமிழாரணமே யென்றிருப்பாராய் (நூற்றந்தாதியில்) ப்ரஸித்தராகையாலே, திருவாய்மொழியைத் தரிக்கும் நெஞ்சு பெறுதற்கு அவரைப் பிரார்த்தித்தல் பொருந்துமென்க. இப்படிப்பட்ட அந்தரங்க பக்தராகையாலன்றோ ஆழ்வாரது திருவடிநிலைக்கு இராமாநுசன் என்றே திருநாமம் வழங்கிவருவது ஸம்ப்ரதாயமாயிற்று.

"எங்கள் கதியே யிராமாநுசமுனியே, சங்கைகெடுத்தாண்ட தவராசா, பொங்குபுகழ் மங்கையர் கோனீந்த மறையாயிரமனைத்தும், தங்குமனம் நீயெனக்குத்தா" என்ற பெரிய திருமொழித் தனியனையும் இங்கு ஸ்மரிப்பது. .... (*)

## பட்டர் அருளிச்செய்த தனியன்.

வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ்மறைக ளாயிரமும் — ஈன்ற
முதற்றாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தா யிராமா னுசன்.

### பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| வான் திகழும் சோலை | ஆகாசத்தளவும் ஓங்கி விளங்குகின்ற சோலைகளையும் | தமிழ் மறைகள் ஆயிரமும் | தமிழ் வேதமான ஆயிரம் பாசுரங்களையும் |
| மதிள் | ஸப்த ப்ராகாரங்களையும் உடைத்தான | ஈன்ற முதல் தாய் | பெற்ற முக்கியமான மாதா |
| அரங்கர் | திருவரங்கத்தில் பள்ளி கொண்ட எம்பெருமானுடைய | சடகோபன் | நம்மாழ்வாராவர்; |
| | | மொய்ம்பால் | மிடுக்குடனே |
| | | வளர்த்த | அதனை வளர்த்த |
| வண் புகழ் மேல் ஆன்ற | திருக்கல்யாண குண விஷயமாக அமைந்த | இதம் தாய் | ஹிதமான மாதா |
| | | இராமாநுசன் | எம்பெருமானாராவர். |

* * * — கீழ்த் தனியனிலே "செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராதவுள்ளம் பெற — இராமாநுசமுனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்" என்று பேசும்படி எம்பெருமானார்க்கும் திருவாய்மொழிக்குமுள்ள தொடர்பை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வெளியிடுவது இப்பாசுரம். உலகத்தில் பிரஜைகளுக்குப் பெற்றதாய் என்றும் வளர்த்ததாய் என்றும் இரண்டு தாய்மார் ஏற்படுவதுபோல் திருவாய்மொழியாகிற ப்ரஜைக்கும் இரண்டு தாய்மாருண்டு; அவர்களாகிறார் நம்மாழ்வாரும் எம்பெருமானாரும். ஆழ்வார் பெற்றருளினர்; எம்பெருமானார் போஷித்தருளினர். கண்ணபிரானுக்கு தேவகிப்பிராட்டியும் யசோதைப்பிராட்டியும் போலே.

ஈன்ற தாய் பெற்றுப் பொகட்டுப்போனால் வளர்க்குந்தாய் தன் மிடுக்காலே காத்து நோக்குமாபோலே எம்பெருமானார் திருவாய்மொழியைக் காத்தருளினவாறு என்னென்னில்; "பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை, தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை, மணவாளயோகி திருவாய்மொழியைக்காத்த, குணவாளரென்று நெஞ்சே கூறு" என்று உபதேசரத்தினமாலையில் மணவாள மாமுனிகள் அருளிச்செய்தபடியே திருவாய்மொழியைக்காத்த ஆசிரியர் ஐவருள் முதல்வரான திருக்குருகைப்பிரான் பிள்ளானைக் கொண்டு ஆறாயிரப்படி வியாக்கியான மிடுவித்தது எம்பெருமானாரன்றோ. ("தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப்பிரான், பிள்ளான் எதிராசர் பேரருளால் — உள்ளாரும், அன்புடனே மாறன் மறைப்பொருளை யன்றுரைத்தது, இன்பமிகுமாறாயிரம்" என்ற உபதேசரத்தினமாலை காண்க.) முதன்முதலாகத் திருவாய்மொழியை வளர்த்தவர் எம்பெருமானாரேயென்க. "பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" என்றது முதலான ஆசார்யஹ்ருதய ஸூக்திப்படியே திருவாய்மொழியை யடியொற்றியே எம்பெருமானார்தர்சநத்தின் மஹார்த்தங்கள் யோஜிக்கப்பட்டிருத்தல் முதலான காரண விசேஷங்களும் இங்கு அநுஸந்திக்கவுரியன.

திருவாய்மொழியில் "கங்குலும் பகலும்" என்ற ஒரு திருவாய்மொழி தவிர மற்று ஒரு பாசுரத்திலும் திருவரங்கநாதனுடைய ப்ரஸ்தாவமே இல்லையாயிருக்க "மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும்" என்று திருவாய்மொழி ஆயிரமும் ஸ்ரீரங்கநாதன் விஷயமாக அருளிச்செய்யப் பட்டதாகப் பேசுகைக்கு அடியென்? என்னில்; நம் பூருவாசாரியர்களனைவரும் நிர்வஹிப்பது இப்படியே; ஆழ்வார் திருவரங்கநாதனுக்கென்றே திருவாய்மொழியாயிரத்தையும் ஸங்கல்பித்து அதிலிருந்து மற்றைத் திருப்பதியெம்பெருமான்களுக்குப் படியளந்தார் என்றருளித்து பட்டர் அருளிச்செய்யும்படி, 'திருவேங்கடத்துக்கிவைபத்தும்' "வண்திருமோகூர்க்கு ஈத்தபத்திவை" என்றாற் போன்ற சொற்போக்கில் இந்த நிர்வாஹம் ஸ்வாரஸமாக விளங்குமென்ப.

ஈற்றடியில், ஹிதம் என்னும் வடசொல் இதம் எனத்திரிந்தது. ... ... (*)

(இதுவும் பட்டரருளிச்செய்த தனியன்.)

மிக்க விறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்
தக்க நெறியுந் தடையாகித் — தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன்
யாழினிசை வேதத்தியல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

### பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| குருகையர் கோன் | திருநகரியிலுள்ளார்க்குத் தலைவரான ஆழ்வார் (அருளிச்செய்த | தக்க நெறியும் | ஸ்வரூபாநுரூபமான உபாயத்தின் ஸ்வரூபத்தையும் |
| யாழின் இசை வேதத்து இயல் | வீணைகானம்போன்ற திருவாய்மொழிப் பாசுரங்கள் | தடை ஆகி தொக்கு இயலும் ஊழ் வினையும் | (பகவத்ப்ராப்திக்குப்) பிரதிபந்தகமாகிச் சேர்ந்து கிடக்கிற முன்னை வினைகளாகிற விரோதி ஸ்வரூபத்தையும் |
| மிக்க இறை நிலையும் | ஸர்வோத்க்ருஷ்டனான எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் | வாழ்வினையும் | வாழ்வாகிற பரம புருஷார்த்த ஸ்வரூபத்தையும் |
| மெய்யாம் உயிர் நிலையும் | நித்யனான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும் | ஓதும் | கூறுவன. |

* * * — திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தங்கள் இன்னவையென்கிறது இதில். திருமந்திரத்திற் சொல்லுகிற அர்த்தமே திருவாய்மொழியிற் சொல்லப்படுகின்றன: அதாவது அர்த்தபஞ்சகம். "𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍁𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 | 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌂 𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌃 𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌚 || 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌸𑌕𑌲𑌾 𑌵𑍇𑌦𑌾𑌃 𑌸𑍇𑌤𑌿𑌹𑌾𑌸𑌪𑍁𑌰𑌾𑌣𑌕𑌾𑌃 | 𑌮𑍁𑌨𑌯𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌵𑍇𑌦𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌪𑌾𑌰𑌗𑌾𑌃." என்று சொல்லப்பட்ட ஐந்து அர்த்தங்களே ஸகல சாஸ்த்ரங்களுக்கும் ப்ரமேயமாயிருக்கும். அந்த அர்த்தங்கள் இத் தனியனில் அடைவே சொல்லப்படுகின்றன: சேதநர்களால் அடையப்படவேண்டியவனான எம்பெருமானுடைய ஸ்வரூபம், அவ்வெம்பெருமானை அடைகின்ற சேதநர்களின் ஸ்வரூபம், அடைவிக்கின்ற வழியின் ஸ்வரூபம், அடையவொட்டாமல் தடைசெய்யுமதான ப்ரதிபந்தகத்தின் ஸ்வரூபம், பிரதிபந்தகம் தொலைந்து பெறக்கடவதான பலத்தின் ஸ்வரூபம் — என்பதே அர்த்தபஞ்சகமாகும்.

எம்பெருமானே ஸர்வஸ்மாத்பரன், ஜீவாத்மா அவ்வெம்பெருமான் பக்கலில் சேஷத்வத்தையே தனக்கு நிரூபகமாகவுடையனாயிருப்பன், சரணாகதியே எம்பெருமானைப் பெறுதற்கு வழி, பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்புமாகிற இவையே பிரதிபந்தகம், ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமைசெய்வதே பரமபுருஷார்த்தம் என்கிற இவ்வைந்து அர்த்தங்களும் இத் திருவாய்மொழியில் பன்னிப்பன்னி யருளிச்செய்யப்படுமாறு காண்க.

தனியன் உரை முற்றிற்று.

---

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி — அவதாரிகை.

இது, மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களுள் தலைவரும் ப்ரபந்நஜன கூடஸ்தருமான நம்மாழ்வார் அருளிச்செய்த நான்கு திவ்ய ப்ரபந்தங்களுள் நான்காவதான ப்ரபந்தம்; சரமப்ரபந்தமெனப்படும். திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்களும் நம்மாழ்வாருடைய திவ்ய ஸூக்திகளாம். இந்நான்கும் முறையே நான்கு வேதங்களின் ஸாரமாம். நாலாயிரப் பிரபந்தத்தில் திருவாய்மொழி நான்காவது ஆயிரமாக அமைக்கப்பட்டுள்ளது; இது ஸாமவேத ஸாரமாகும்.

ஆழ்வார் தமது ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி 'தேவரீரை அநுபவிப்பதற்கு இடையூறான தேஹ ஸம்பந்தத்தை யறுத்துத் தந்தருளவேணும்' என்று ஸம்ஸாரஸம்பந்த நிவ்ருத்தியை அபேக்ஷித்தார் முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில். ஆழ்வார் அப்படி பிரார்த்தித்தபோதிலும் எம்பெருமான் இவ்வாழ்வாரைக்கொண்டு நாட்டுக்கு நன்மையாகச் சில திவ்ய ப்ரபந்தங்களை வெளியிடுவித்து ஸம்ஸாரிகளைத்திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம் பற்றினவனாகையாலே "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும் இந்நின்ற நீர்மையினியாமுறாமை" என்று இவர் அபேக்ஷித்த போதே இவருடைய பிரார்த்தனையைத் தலைக்கட்டித் தந்தருளவில்லை. "இவ்வாழ்வார் இந்த ஸம்ஸாரத்தை விட்டு விலகி ஒரு * நலமந்தமில்லதோர் நாட்டிலே போய்ச்சேரவேணுமென்று பாரிப்பது நம்முடைய குணங்களை அநுபவிப்பதற்காகவேயன்றி வேறொன்றுக்காகவன்றே; அந்த குணாநுபவத்தை இவர்க்கு நாம் இவ்விடத்திலேயே வாய்க்கச் செய்வோம்; இங்கேதானே இவர் குணாநுபவம்பண்ணிக் களித்தாராய் அவ்வநுபவம் உள்ளடங்காமல் புறவெள்ளமிட்டுப் பிரபந்தங்களாகப் பெருகி லோகோபகாரமும் செய்தாராகட்டும்" என்று எம்பெருமான் திருவுள்ளம்பற்றித் தனது ஸ்வரூபரூபகுண விபூதிகளைக் காட்டிக் கொடுக்க, ஆழ்வார் அவற்றைக்கண்டு பரமாநந்தம்பொலிய அநுபவித்தார் திருவாசிரியத்திலே. அப்படி அநுபவித்த பகவத்விஷயத்திலே அவ் விஷயத்திற்குத் தகுதியாக ஆசை கரைபுரண்டு பெருகிச் செல்லுகிறபடியைப் பேசினார் பெரிய திருவந்தாதியில்.

தாயானவள் தனது பிரஜைக்கு அஜீர்ணத்தையறுத்துப் பசியை மிகுத்துச் சோறிடுமாபோலே எம்பெருமான் தமக்கு ருசியைப் பிறப்பித்தபடியையும், அந்த ருசிதான் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாய்க்கொண்டு பக்குவமான படியையும், பின்பு பிரகிருதி ஸம்பந்தமற்றுப் பேற்றோடே தலைக்கட்டினபடியையும் அருளிச்செய்கிறார் இத் திருவாய்மொழியில்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனர் காட்டுக்கெழுந்தருளின பிறகு மாதுல க்ருஹத்திலின்றும் அயோத்திக்கு மீண்டுவந்த பரதாழ்வானை நோக்கிக் கைகேயியானவள் 'ராஜந் !' [அரசனே !] என்று அழைத்தவளவில் பரதன் அச் சொல்லைக் கேட்டு என்ன ஸங்கடமடைந்தனனே அந்த ஸங்கடம் ஆழ்வார்க்குத் திருவிருத்தத்திலேயாயிற்று. பிறகு அப்பரதன் சில பரிஜனங்களைக் கூட்டிக்கொண்டு சித்திரகூடஞ்சென்று இராமபிரானை மீட்டு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருவதாகப் புறப்பட்டுச்செல்லும்போது அப்பரதனது நெஞ்சில் என்னதரிப்பு இருந்ததோ அவ்வகையான தரிப்பு ஆழ்வார்க்குத் திருவாசிரியத்திலேயாயிற்று. பிறகு பரதன் ஸ்ரீநந்திகிராமத்திலே யிருந்துகொண்டு பதினுன்குவருஷம் தனது ஆசையை வளர்த்துக்கொண்டிருந்த நிலைபோலும் பெரிய திருவந்தாதியில் ஆழ்வாருடையநிலை. பெருமாள் மீண்டு திருவயோத்திக் கெழுந்தருளித் திருவபிஷேகங் கண்டருளி அப் பரதனும் ஸ்வரூபாநுரூபமான பேறு பெற்றாற்போலேயாம் இத் திருவாய்மொழியில் ஆழ்வார் பெறும்பேறு.

திருவாய்மொழி என்பதற்கு - மேன்மையையுடைய வாயினுற் சொல்லுஞ் சொற்களினாலாகிய நூல் என்பது பொருள். திரு என்பது வாய்க்கும் அடைமொழி [விசேஷணம்] ஆகலாம், வாய்மொழிக்கும் அடைமொழியாகலாம். வாய்மொழி என்னும் முதற்கருவியின் பெயர் அதன் காரியமாகிய பிரபந்தத்திற்கு ஆனது, காரியவாகு பெயர். அது திரு என்னும் அடைமொழியினால் அடுக்கப்பட்டதுபற்றி அடைபடுத்த ஆகுபெய ரெனப்படும்.

திரு — உயர்வை விளக்கும் அடைமொழி. இந்த அடைமொழி கொடுக்குப்படி ஆழ்வாரது வாக்குக்குள்ள விசேஷம் அவரது திருநாவீறுடையபிரான் என்னுந் திருநாமத்தாலும் விளங்கும். திருமங்கையாழ்வாருளிச்செயலாகிய திருமொழியினும் வேறுபாடு விளங்குதற்குத் ;திருவாய்மொழி யெனப்பட்டது.

இப் பிரபந்தம் நூறு பதிகங்களாக அமைந்த ஆயிரத்தொருநூற்றிரண்டு செய்யுள்களையுடையது, பத்துப் பத்தாக அமைந்தது. இப் பிரபந்தம் முழுவதும் அந்தாதித் தொடையாற் பாடப்பட்டது. அந்தாதித் தொடையாவது— முன்நின்ற பாசுரத்தின் இறுதி அடுத்துவரும் பாசுரத்தின் முதலாக அமைவது. இவ்வந்தாதி, சொற்றொடர்நிலை பொருட்டொடர்நிலை என்ற தொடர்நிலைவகையிரண்டனுள் சொற்றொடர்நிலையாகும்; "செய்யுளந்தாதி சொற்றொடர்நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும். இத் திவ்யப்ரபந்தத்தின் பாசுரங்கள் பொருளில் ஒன்றை ஒன்று தொடர்ந்துநிற்பது தோன்ற அறிவிற் சிறந்த ஆசிரியர்கள் வியாக்கியானித்தருள்வதனால் இது பொருட்டொடர் நிலையுமாம். "பொருளினுஞ் சொல்லினு மிருவகை தொடர்நிலை" என்னுந் தண்டியலங்காரச் சூத்திரத்தின் உரையில் "இரண்டென்னுது வகையென்ற மிகையான் மூன்றுவது — பொருளினுஞ் சொல்லினுந் தொடர்தலு முண்டெனக் கொள்க" என்றது காண்க. நெடுக ஒரு கதையாகக் கூறுதலல்லாமல் ஸ்தோத்ரரூபமாக அருளிச்செய்யப்பட்ட பாசுரங்களாதலால் சொற்றொடர் நிலையாகவே கொள்ளலாம் என்பது ஒரு சாரார் கொள்கை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தொல்காப்பியத்துச் செய்யுளியலிற் கூறப்பட்ட அம்மை அழகு தொன்மை தோல் விருந்து இயைபு புலன் இழைபு என்ற எண்வகை வனப்பினுள் இந்நூல் விருந்தென்னும் வனப்பின் பாற்படும். † "விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்ற தொல்காப்பியச் சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் "விருந்துதானும் பழங்கதைமேலதன்றிப் புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்துவரத் தொடுத்துச் செய்யப்படும் தொடர்நிலை மேலது" என்றும், "அது, முத்தொள்ளாயிரமும் பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும் என உணர்க; கலம்பகம் முதலாயினவுஞ் சொல்லுப" என்றும் உரைத்துள்ளமை காண்க.

ஆழ்வார்களுள் நம்மாழ்வார்க்கு ஏற்பட்ட ஒப்புயர்வற்ற அதிசயம் போலவே இத் திருவாய்மொழிக்கும் மற்றை அருளிச்செயல்களிற் காட்டில் ஏற்றம் உண்டு. திருவாய்மொழி திருவீதிகளில் ஸேவிக்கப்படாமல் ஆஸ்தானத்திலேயே ஸேவிக்கப்பட்டுவருகிற ஸம்ப்ரதாயமும், இத் திருவாய்மொழிக்கே பலபல வியாக்கியானங்கள் ஏற்பட்டிருக்கின்றமையும் இதன் ஏற்றத்தை வற்புறுத்தும்.

இந்தத்திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான்பிள்ளான் அருளிச்செய்த ஆறாயிரப்படி, நஞ்சீயர் அருளிச்செய்த ஒன்பதினாயிரப்படி, பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி, நம்பிள்ளை அருளிச்செய்ததை வடக்குத்திருவீதிப்பிள்ளை பட்டோலைகொண்ட ஈடு முப்பத்தாறாயிரப்படி, வாதிகேஸரி அழகியமணவாளசீயர் அருளிச்செய்த பன்னீராயிரப்படி என்னும் ஐந்து வியாக்கியானங்கள் ப்ரஸித்தமாக வழங்கிவருகின்றன. வடவாசார்ய ஸம்ப்ரதாயத்திலும் ஒன்பதினாயிரப்படி, பதினெண்ணாயிரப்படி, இருபத்துநாலாயிரப்படி என்று சில வியாக்கியானங்கள் உண்டு. மேற்கூறிய வியாக்கியானங்களைத் தழுவியும் ஆவச்யகமான மற்றும் பல விஷயங்களைச் சேர்த்தும் இவ்வுரை எழுதப்படுகின்றது.

இத் திருவாய்மொழிக்குப் பாசுரங்களின்மேல் வியாக்கியானமாக அல்லாமல் ஒவ்வொரு திருவாய்மொழியினுடையவும் ஒவ்வொரு பத்தினுடையவும் ஸாரஸங்க்ரஹ ரூபமாக வடமொழியிலும் தென்மொழியிலும் சில திவ்யக்ரந்தங்கள் நம்பூருவர்களால் அருளிச்செய்யப்பட்டுள்ளன: ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் அருளிச்செய்த த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி, த்ரமிடோபநிஷத்ஸாரம், அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்த த்ரமிடோபநிஷத் ஸங்கதி என்பவை ஸம்ஸ்க்ருத ச்லோகரூபமானவை. மணவாளமாமுனிகள் அருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதி ஸுப்ரஸித்தம்.

அரிய பெரிய ஆழ்பொருள்கள் உள்ளடங்கியிருக்கப்பெற்ற இந்த த்ராவிட வேதஸாகரத்திலே சிற்றறிவினனாகிய அடியேன் வாய்வைக்கச் சிறிதும் யோக்யதையுடையேனல்லேனாயினும், ஆசிரியர்கள் காட்டியருளின வழியைப் பின்பற்றி எழுதுமிவ்வுரையை குணக்ராஹிகளான ரஸிகர்கள் இயற்கையின்னருளால் நோக்கியருள்க. ... ... ... .... ... ... (*)

திருவாய்மொழி அவதாரிகை முற்றிற்று.

---

† தொல்காப்பியம் - பொருளதிகாரம் - செய்யுளியல் 240

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி.

பெருமாள்கோயில் ப்ரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.



## முதற் பத்து — முதல் திருவாய்மொழி.

உயர்வறவுயர்நலம் உடையவன்யவனவன்*
மயர்வறமதிநலம் அருளினன்யவனவன்*
அயர்வறுமமரர்கள் அதிபதியவனவன்*
துயரறுசுடரடி தொழுதெழென்மனனே. (க)

### பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| என் மனனே | எனது மனமே!, | அருளினன் | (அடியேனுக்குக்) கிருபை பண்ணினவன் |
| உயர்வு அற | (தன்னைப் பார்க்கிலும்) உயர்த்தி இல்லாதபடி | யவனவன் | யாவனொருவனோ, |
| உயர் | உயர்ந்த | அயர்வு அறும் | மறப்பு இல்லாத |
| நலம் | (ஆனந்தம் முதலிய) கல்யாண குணங்களை | அமரர்கள் | நித்யஸூரிகளுக்கு |
| உடையவன் | (சுயமாக) உடைத்தானவன் | அதிபதி யவன் | ஸ்வாமி யாவனொருவனோ |
| யவனவன் | யாவனொருவனோ, | அவன் | அந்த எம்பெருமானுடைய |
| மயர்வு அற | அஜ்ஞானம் நசிக்கும்படி | துயர் அறு சுடர் அடி | துக்கங்களைப் போக்குகிற சோதிமயமான திருவடிகளை |
| மதி நலம் | ஞானத்தையும் பக்தியையும் | தொழுது | வணங்கி |
| | | எழு | நீ கடைத்தேறக்கடவை. |

* * * — இதில், மஹோபகாரங்களைத் தமக்குச் செய்தருளின எம்பெருமானுடைய திருவடிகளைத் தொழுது மேன்மை பெறும்படியாக ஆழ்வார் தமது திருவுள்ளத்திற்கு உபதேசிக்கிறார்.

புறமதத்தவருடைய கொள்கைப்படி எம்பெருமான் நிர்க்குணனல்லன், ஸமஸ்த கல்யாணகுணாத்மகன் என்கிற வேதாந்த ஸித்தாந்தத்தை முதலடியிலே வெளியிட்டருளுகிறார். இதனால், எம்பெருமான் தனது திருக்கல்யாண குணங்களைக் காட்டி இவ்வாழ்வாரை ஈடுபடுத்திக்கொண்டமை விளங்கும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



குணங்களுக்குத் தோற்று அடிமைப்படுதல் என்றும் ஸ்வரூபமாகவே அடிமைப்பட்டிருத்தல் என்றும் இருவகைப்பட்டுள்ளதான அடிமையில் குணப்ரயுக்தமான அடிமையிற்காட்டிலும் ஸ்வரூபப்ரயுக்தமான அடிமையே சிறக்குமென்பது ஸம்ப்ரதாய ஸாரார்த்தமாயினும், ஆழ்வார் தம்மை எம்பெருமான் அகப்படுத்திக்கொண்டது திருக்குணங்களைக் கொண்டாதலால் தாம் இழிந்த துறையை முதலிலே பேசுகிறாரென்க. ஸ்வரூப ப்ரயுக்தமான அடிமையும் ஆழ்வார்க்குக் குறைவற்றதென்னுமிடம் 1. ஆகிலுங் கொடியவென்னெஞ்ச மவனென்றேகிடக்குமெல்லே" என்ற பாசுரத்தால் வெளியிடப்படுகின்றமை காண்க.

ஸ்வரூபப்ரயுக்தமான அடிமை இயற்கையிலேயே இருக்கச்செய்தேயும் சேஷியானவன் கல்யாணகுணங்கட்கும் கொள்கலமாயிருப்பதனால் இக் குணங்களும் அடிமைக்கு ஓர் உபாதியாக அமைகின்றன வென்றுணர்க. ஸ்ரீராமபிரானுடைய வநவாஸ ஸமயத்திலே அத்ரிபகவானுடைய ஆச்ரமத்தில் பெருமாள் எழுந்தருளி மஹர்ஷியை அநுவர்த்தித்திருந்த பின்பு அவருடைய தேவியான அநஸூயையைப் பிராட்டி அநுவர்த்தித்திருக்கிறவளவிலே, அவள் பிராட்டியைப் பார்த்து 'உற்றாரையும் செல்வத்தையும்விட்டுப் பெருமாள் பின்னே காட்டுக்குவந்த விது தைவயோகத்தாலே உமக்கு நன்றாகக் கூடிற்று; நகரத்திலிருக்கிலுமாம், காட்டிலிருக்கிலுமாம்: பெண்டிர்க்குத் தெய்வம் பர்த்தாவே கிடீர். நீர் இப்படியே எப்போதும் பெருமாள்விஷயத்திலே அநுகூலித்திருக்கக் கடவீர்' என்று சொல்ல; பிராட்டி வெட்கமடைந்து கவிழ்தலையிட்டிருந்து 'எனக்குப் பெருமாள்பக்கலில் அநுராகம் ஸ்வரூபமாகவே உண்டாயிருக்கச்செய்தே அவர் தாம் குணங்களிற் சிறந்தவராகையாலே என்னுடைய அநுராகத்தை குணப்ரயுக்தமாக நாட்டார் நினைக்கக்கூடும்: எப்போதாவது ஒருஸமயம் அவரைக் குணங்களைவிட்டுப் பிரித்துக்காட்டக்கூடுமாகில் அப்போது என்னுடைய அநுராகம் ஸ்வரூபப்ரயுக்தமேயன்றி குணப்ரயுக்தமல்ல என்பது நன்கு விளங்க அவகாசமுண்டாகும்; அப்படி ஒரு நொடிப்பொழுதும் காட்டமுடியாதபடி அவர் எப்பொழுதும் ஸமஸ்தகல்யாணகுணாம்ருதஸாகரமாக இருப்பதால் நான் அவர் பக்கல் இருக்குமிருப்பை அறிவிக்கப்பெறுகிறிலேன்; அவர் குணஹீநருமாய் விரூபருமா யிருந்தபோதிலும் நான் அவர்பக்கல் இப்படியே காணு மிருப்பேன்' என்றாள் என்பது ப்ரஸித்தம். இளையபெருமாள் திருவடியோடே தம்மைப்பற்றிச் சொல்லிக்கொள்ளும்போது "அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்ய முபாகத:" என்று பெருமாளுடைய திருவுள்ளத்தாலே நான் அவர்க்கு உடன் பிறந்தவனாகிறேன்; என்னுடைய கருத்தினால் குணங்கட்குத் தோற்று அவர்க்கு அடிமைப்பட்டவன் நான் என்றதும் இங்கு நினைக்கத்தக்கது.

உபநிஷத்தானது எம்பெருமானுடைய ஆநந்தமென்கிற ஒரு குணத்தை மாத்திரம் வருணிக்க இழிந்து "யதோ வாசோ நிவர்த்தந்தே ...... 

---

1. திருவாய்மொழி 5 - 3 - 5.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ ஏகோ மாநுஷ ஆநந்த:" என்று மநுஷ்யனுக்கு உண்டாகக்கூடிய ஆனந்தந் தொடங்கி "ஸ ஏக: ப்ரஜாபதேராநந்த:" என்று பிரமனுடைய ஆனந்தத்தளவுஞ் சென்று அதற்குமேலும் "தே யே ஶதம் ப்ரஜாபதேராநந்தா:" என்று அந்தப் பிரமனுடைய ஆனந்தத்தையும் நூறுமடங்காகப் பெருக்கிக்கொண்டு சென்று பின்னையும் பரப்ரஹ்மாநந்தத்தைப் பரிச்சேதிக்க மாட்டாமல் "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்று கையொழிந்து போயிற்று. இப்படி ஆநந்தகுணமொன்றின் அளவிடமுடியாமை கூறினது மற்ற குணங்களின் அளவிடமுடியாமைக்கும் உபலக்ஷணம் என்பது "ஏவம் ததா சதுரயா தவ யௌவநாத்யா: ஸர்வே குணாஸ் ஸஹ ஸமஸ்தவிபூதிபிஶ்ச | ப்ரவ்யாஹ்ருதாஸ்ஸ்யுரவதீநவதீரயந்தோ வாசாமகோசரமஹாமஹிமாந ஏவ = ஏவம் ததா சதுரயா தவ யௌவநாத்யாஸ் ஸர்வே குணாஸ் ஸஹ ஸமஸ்தவிபூதிபிச் ச—ப்ரவ்யாஹ்ருதாஸ் ஸ்யுரவதீந் அவதீரயந்த: வாசாமகோசரமஹாமஹிமாந ஏவ." என்ற ஆழ்வானது ஸ்ரீவைகுண்டஸ்தவ ஸ்ரீஸூக்தியாலும், "ஹந்தைவம் த்வத்குணாநாமவதிகணநயோ: கா கதா ஸித்தவாசோ: = ஹந்தைவம் த்வத்குணாநாம் அவதிகணநயோ: கா கதா ஸித்தவாசோ: என்ற பட்டரது ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்தியாலும் விளங்கும். அந்த உபநிஷத்துப்போலே பகவத்குணத்தை அளவிடப்புகுந்து பின்வாங்கிப் பரிபவப்படாமல் ஆழ்வார் "உயர்வறவுயர்நலமுடையவன்" என்று அழகாகப் பேசி முடித்தனரென்ப.

உயர்வு அற உயர்நலம் — உயர்ந்தவையென்று பேர்பெற்ற மற்றவஸ்துக்களெல்லாவற்றினுடையவும் உயர்த்தி உண்மையன்றென்னும்படியும் தன்னுயர்த்தியே சாச்வதமாகும்படியும் உயர்ந்த கல்யாணகுணங்களை யுடையவன் என்றதாயிற்று.

இனி, உயர்வு என்று † வருத்தத்திற்கும் பேருண்டாதலால், வருத்தமில்லாமல் உயர்த்திபெற்றனவான குணங்களையுடையவன் என்றலுமொன்று. மற்றையோர்க்கு ஒரு உயர்த்தியுண்டாக வேண்டுமானால் மிக்க வருத்தத்தாலன்றி உண்டாகமாட்டாது; "யுககோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: | புநஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும = யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: | புநஸ் த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி சுச்ரும." என்று—நான்முகக்கடவுள் பல்லாயிரம் யுகங்கள் விஷ்ணுவை ஆராதித்து ஸித்தி பெற்றானென்று சொல்லிற்று; பரமசிவன் முதலிய ஒவ்வொரு கடவுளரும் இங்ஙனமே வருத்தப்பட்டு ஸித்தி பெற்றமை வேத வேதாங்கங்களிற் கூறப்பட்டுள்ளது. அவர்களைப்போலன்றிக்கே எம்பெ

† உயவு என்னுஞ் சொல்லுக்கே வருத்தமென்ற பொருளுண்டென்றும் உயர்வு என்பதற்கு அப்பொருளில்லை யென்றும் சிலர் கூறுவர்; பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களில் இவ்வர்த்தமுள்ளது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

ருமானது குணோத்கர்ஷம் ஆயாஸத்தாலுமன்றி இயற்கையாகவே அமைந்ததாயிற்று.

ஆளவந்தார் முதலிய நம் ஆசாரியர்கள் எம்பெருமானுடைய குணசாலித்வத்தை அருளிச்செய்யுமிடங்களில் "ஸ்வாபாவிகாநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகண: = ஸ்வாபாவிகாநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகண:" என்றருளிச்செய்வது காண்க. இதில் 'ஸ்வாபாவிக' என்றது —வருத்தமின்றி இயற்கையாகவே அமைந்த என்றபடி.

"உயர்வறவுயர்குண முடையவன்" என்னாதே 'நலமுடையவன்' என்கையாலே அவனது திருக்குணங்கள் முழுதும் பரம போக்யம் என்னுமிடம் பெறப்படும். நன்மையே உருவெடுத்திருக்கும் போலே. நலம் என்பது பால்பகா அஃறிணைப் பெயராதலால் பன்மைப்பொருள்பட்டு குணஸமூஹங்களைச் சொல்லக்கடவது. ஆனந்தகுணமொன்றையே சொல்வதாகவுங் கொள்வர்; அப்போது மற்ற குணங்கட்கும் உபலக்ஷணமாகிறது. ஆனந்தாவஹமான விபூதியையுடையவன் என்றலுமொன்று; "ஆயுர்க்ருதம்" இத்யாதி ஸ்தலங்களிற்போல் காரியத்தைச் சொல்லும் சப்தத்தினால் காரணத்தை லக்ஷிக்கிற முறைமையில் (இங்கும்) காரியமான ஆனந்தத்தைச் சொல்லுகிற நலமென்னுஞ் சொல் காரணமான விபூதியை லக்ஷிக்கக் குறையில்லையென்க. இரட்டுற மொழிதலால், உயர்வறவுயர்ந்த திருக்குணங்களையும் விபூதியையு முடையவன் என்றும் முதலடிக்குப் பொருள் கொள்ளத்தகும்.

கூரத்தாழ்வான் இம் முதலடியிலே மிகவும் ஈடுபட்டிருப்பராம்: 'எம்பெருமானுக்குக் குணமில்லை, விபூதியில்லை' என்கிற குத்ருஷ்டிகளின் மிடற்றைப் பிடித்தாற்போல உபக்ரமத்தில்தானே உயர்வறவுயர்நலமுடையவன் என்ற அழகு என்னே! என்று உருகிப்போவராம். (இஃது ஈடு முப்பத்தாறாயிரப்படியிலுள்ள ஐதிஹ்யம்; இதன் விவரணத்தைப் பெரியோர் கூறுவதாவது:—

ஆழ்வான் பகவத்விஷயத்திலே மிக்க உருக்கமுடையராயிருந்தமையாலே அவரிடத்திலே எம்பெருமானார் ஒருரு திருவாய்மொழிப் பொருள்கேட்க விரும்பினர். ஆழ்வான்தாம் சேஷத்வத்தின் எல்லையிலே நிற்பவராகையாலே, ஜகதாசார்யரான எம்பெருமானார்க்குத் தாம் ஆசிரியர்போன்று எங்ஙனே பொருளுரைக்க இசைந்திடுவர் ?; இசையமாட்டாதொழியவே, முதலியாண்டான் முதலானோர்க்கு இவர் திருவாய்மொழிப் பொருள் சொல்லக்கடவதாகவும், அப்படியே அவர்கள் கேட்டுவந்து எம்பெருமானார் ஸந்நிதியிலே விண்ணப்பஞ் செய்யக்கடவதாகவும் ஒரு நியதி ஏற்பட்டு முதலிகளனைவரும் இவர் பக்கலிலே கோஷ்டியாக இருந்து உயர்வறவுயர்நலமுடையவன் என்று திருவாய்மொழி மூலந்தொடங்கினவாறே மதியெல்லா முள் கலங்கி மயங்கித் தரைப்பட்டாரிவர்; பரசமயவாதிகள் 'பரப்ரஹ்மத்திற்குக் குணமென்பதே கிடையாது, அது நிர்க்குணம்' என்று பிதற்றுகின்றார்களே, அவர்களது மிடற்றைப் பிடித்தாற்போலே ஆழ்வார் முதலடியிலே உயர்வறவுயர்நலமுடையவன் என்றபடி என்னே! என்றாய்த்து

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இவர் மோஹித்து வீழ்ந்தது. இங்ஙனே ஆழ்வான் மோஹித்தவாறே முதலிக ளெல்லாரும் கடுக எழுந்து எம்பெருமானாரிடம் ஓடிச்சென்று 'காணவாரீர்! காணவாரீர்!!' என்றழைக்க, அவரும் ஓடிவந்து "அன்று 1. எத்திறமுரலினோ டிணைந்திருந்தேங்கிய வெளிவே! என்று ஆறுமாஸம் மோஹித்துக்கிடந்த ஆழ்வாரை ஸேவிக்கப்பெறுத குறைதீர இன்று கண்ணாரக் காணப்பெற்றோமே!" என்று உள்ளெலாமுருகிக் குரல் தழுத்துப்பேசித் தண்டனிட்டு நெடும்போது பார்த்திருந்தும் உணர்க்காணுமையாலே அருகே எழுந்தருளி "ஆழ்வான்! ஆழ்வான்!! ஆழ்வான்!!! என்று கூவித் திருமுதுகைத் தட்டியுணர்த்தத்தொடங்கும்போதே * உயர்வறவுயர்நல முடையவனென்பதே!' என்று சொல்லிக்கொண்டே துணுக்கென்றெழுந்தாராம். [உருக்கத்திலே ஆழ்வாரைப்போன்றமையாலே எம்பெருமானார் ஏகவசனமாக ,ஆழ்வான்! என்றுசொல்லித் தட்டியுணர்த்தினரென்பது பற்றி அன்று முதலாக அவ் வாசிரியர்க்கு ஆழ்வானென்று திருநாமம் வழங்கலாயிற்று என்றும், அதற்கு முன்பு அவர் ஸ்ரீவத்ஸாங்கர், திருமறுமார்பர், என்றே அழைக்கப்பட்டுவந்தார் என்றும் ப்ரஸித்தம்.]

மயர்வுஅற மதிநலமருளினன் = அடியோடு ஞானமே இல்லாமையும், ஒன்றை வேறொன்றாக அறிகையும், அதுவோ இதுவோவென்று ஸந்தேஹங்கொள்ளுதலும், தெரிந்ததை மறந்தொழிகையு மாகிற இவையெல்லாம் மயர்வு எனப்படும்; அது அறும்படியாக ஜ்ஞாந பக்திகளிரண்டையும், தமக்குத் தந்தருளினபடியைக் கூறினர். மதிநலம் என்பதை 'நலம்மதி' எனக்கொண்டு 'நல்ல ஞானத்தையருளினன்' எனவும் பொருள்கூறுவர்; முளைக்கும்போதே வயிரம்பற்றி முளைக்கும் பதார்த்தம்போல உபக்ரமமே பக்திதசையாகப்பெற்ற ஞானம் என்றபடி.

'எனக்கு அருளினன்' என்ன வேண்டாவோ? எனக்கென்பதை ஏன்விட்டார்? என்னில்: எம்பெருமானுடைய விஷயீகாரம் பெறுதற்கு முன்பு தம்மை அஸத்கல்பராக [இல்லாதவராக] நினைத்திருக்கின்றமையால் 'மயர்வறமதிநலமருளினன்' என்பதற்கு முன்னே 'எனக்கு' என்று ஸ்வஸத்தையைக்கூறத் திருவுள்ளம்பற்றிலர் என்பர். துயரறு சுடரடி தொழுது என்றபிறகே தம்மை உளராக நினைத்தார்போலும்; அதன்பிறகேயன்றோ என் என்று தமது ஸத்தையை வெளியிட்டுக்கொண்டார்.

'மயர்வறமதிநலமருளினன்' என்ற இரண்டாமடியால், இத்தலையில் நினைவின்றியேயிருக்க, தானேவந்து அருளினன் என்றார்: அங்ஙனம் தானாகவே வந்து அருளினவன் தன்னருள்கொள்வாரில்லாத ஒருவனோ? என்ன; அவனருளையே எதிர்பார்த்திருப்பார் ஒருநாடாகவுளர் என்கிறார் மூன்றாமடியால்.

அயர்வறுமமரர்களதிபதி = அயர்வாவது மறப்பு; அது ஒருநாளுமில்லாதவர்களான நித்யஸூரிகளுக்கு நியாமகன் என்க.

துயரறு சுடரடி = அடியார்களுடைய துக்கங்களையெல்லாம் போக்கி அதனால் ஒளிபெற்று விளங்குகின்ற திருவடி என்று எம்பெருமானார்க்கு முந்திய

1. திருவாய்மொழி 1—3—1.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



முதலிகள் நிர்வஹிக்கும்படி: அதாவது — துயராறுக்குஞ் சுடரடி என்று கொண்டார்கள். அங்ஙனன்றியே எம்பெருமானார் 'துயரறும் சுடரடி' என்று பொருள் நிர்வஹிப்பராம். அதாவது — அடியார்கள் துயர்தீர, தான் துயர் தீர்ந்தானாயிருக்கை. எம்பெருமான் பரதுஃக்கதுஃக்கியாகையால் ஆச்ரிதருடைய துஃக்க நிவ்ருத்தியைத் தன்னுடைய துஃக்க நிவ்ருத்தியாகக் கொள்ளுமியல்வினன் என்பதாம்.

இங்கே ஈடு முப்பத்தாறாயிரம்:— "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ஹ்ருஶம் ஭வதி து:கித:' என்றால் துஃக்கநிவ்ருத்தியும் அவனதாயிருக்குமிறே. இவர் துயரறத் தான் துயர்தீர்ந்தானாயிருக்கை. இத்தால், இவர் மயர்வு அற, அவன் துயரற்றபடி."

எழு = அதோகதியடைவதைத் தவிர்ந்து உயர்கதியடைந்திடு என்றவாறு: உஜ்ஜீவித்துப்போ என்றதாயிற்று.

இப் பிரபந்தத்தில் நிரூபிக்கப்படுகிற தத்துவ ஹித புருஷார்த்தங்களைச் சுருங்கச் சொல்லுகிறது இப்பாசுரம். திருமாலே பரதத்துவமென்றும் அவனது அடி தொழுகையே பரமஹிதமென்றும், (தத்க்ரதுந்யாயத்தாலே) அதனை ப்ராப்திக்கையே புருஷார்த்தமென்றும் சொல்லிற்றாகிறது.

பிரபந்தம் இடையூறின்றி முடிவதற்காகப் பிரபந்தாரம்பத்தில் இயற்றப்படவேண்டிய இஷ்ட தேவதாநமஸ்காரம் முதலான மங்களமும் சுடரடிதொழுதெழு என்பதனால் இயற்றப்பட்டதென்றுணர்க.

இப்பாட்டில், யவனவன் என்பதை ஒரே சொல்வடிவாகக்கொண்டு பொருளுரைக்கப்பட்டது. (வடமொழியில் 'யோஸௌ' என்பதுபோல இதனைக் கொள்க.) அன்றியும், யவன் – யாவனொருவன், அவன் – அவனுடைய என்று முதல் மூன்றடிகளிலும் பொருள்கூறி ஒவ்வொரு அடியோடும் 'தொழுதெழென் மனனே!' என்று கூட்டி மூன்று வாக்கியமாயும் யோஜித்துப் பொருள்கூறுவர். உயர்வறவுயர்நல முடையவன் யவன், அவன் துயரறுசுடரடி தொழுதெழு; மயர்வறமதிநலமருளினன் யவன், அவன் துயரறு சுடரடி தொழுதெழு; அயர்வறுமமரர்களதிபதியவன், அவன் துயரறு சுடரடி தொழுதெழு — என்றிப்படி மூன்று வாக்கியமாகிறது. இதுவன்றி, (முதலடியில்) யவன் - யாவனொருவனோ, அவன்....அருளினன் என்றும், (இரண்டாமடியில்) யவன் - அப்படி அருளினவன் யாவனோ, அவன்...அதிபதி என்றும், (மூன்றாமடியில்) யவன் - அப்படி அதிபதியானவன் யாவனோ, அவன் - அவனுடைய, அடி தொழுது எழு என்றிப்படி வாக்யைக வாக்யமாகவும் யோஜிப்பதுண்டு. [வாக்யைக வாக்யம்-பல சிறு வாக்கியங்கள் உள்ளடங்கிய மஹாவாக்யம்.]

யவனவன் என்னுமிடங்களில் யாவன் என்பது யவன் எனக் குறுகியுள்ளது. 1. "நெஞ்சினால் நினைப்பான் யவன்" 2. "பயிலும் திருவுடையார் யவரேலுமவர்கண்டீர்" 3. "விண்ணும் கடந்தும்பரப்பால்மிக்கு மற்றெப்பால் யவர்க்

1. திருவாய்மொழி 3-6-9. 2. ஷை 3-7-1. 3. திருவிருத்தம் 43.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தும்" என்றவிடங்களிலும் இவ்வாறே. இங்கே யாவினு எஞ்சாமைப் பொருளது. 1. "ஆவோடல்லது யகரமுதலாது" என்ற விதியைக்காட்டி (மேற்குறித்தவிடங்களில்) யவன், யவர், யவர்க்கும் என்றுள்ள பாடங்களை மறுத்து எகரமுதலதாகப் பாடங்கொள்ளவேணுமென்று சிலர் வற்புறுத்துவர்; அது அஸம்ப்ரதாயம். ஏட்டுப்பிரதிகளிலெல்லாம் யகர முதலதான பாடமே காண்கிறது; "ஆவோடல்லது யகர முதலாது" என்ற விதிக்குக் கதியில்லையோவெனின்; அச் சூத்திரவிதி இயற்கை மொழிக்கேயன்றிச் செய்யுளில் வேண்டுழிக் குறுக்கல் பெற்ற மொழிக்கு விலக்காகாது என்று கற்றுணர்ந்த பெரியோர் கூறுவர்.

இப்பாட்டில், முதலடியால் கல்யாணகுணமுடைமையும், இரண்டாமடியால் அவற்றுள் முக்கியமான காருண்யமும், மூன்றாமடியால் நித்யவிபூதியாட்சியும், நான்காமடியால் திருமேனியுடைமையும் அருளிச்செய்ததனால் இப்பாசுரம் முழுதும் குத்ருஷ்டிகட்குக் கழுத்துப்பிடியாமென்ப.

ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதனான பேரருளாளனுடைய திருவடிகளைத் † துயரறு சுடரடி என வ்யவஹரித்தல் ஸம்ப்ரதாயமாதலால் இப்பாசுரம் தேவப்பெருமாளை நோக்கியதென்று பெரியோர் பணிப்பர்.

இது நேர்க்கியும் மற்றும் பல காரணங்கள் பற்றியும் ஸ்ரீமத் வேதாந்த தேசிகனும் "ப்ரதமசதகே வீக்ஷ்ய வரதம்" [த்ரமிடோபநிஷத்ஸாரம் - 5.] என்றருளிச் செய்தார்.

இத் திருவாய்மொழி பரமபதநிலயனான பெருமாளைப் பேசாநிற்கச்செய்தேயும் இதில் அர்ச்சாவதாராநுபவமும் குறையற்றுச் செல்லும் என்று அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்யும்படி. .... ... ... ... (க)

மனனகமலமற மலர்மிசையெழுதரும் *
மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன் *
இனனுணர்முழுநலம் எதிர்நிகழ்கழிவினும் *
இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே. * (உ)

| | | | |
|---|---|---|---|
| மனனகம் | மனத்திலேயிருக்கிற | மிசை எழுதரும் | மேலே மேலே விருத்தியாகிற |
| மலம் அற | (காமம் கோபம் முதலிய தீக்குணங்கள் கழியக் கழிய (அதனால்) | மனன் உணர்வு | மானஸ ஜ்ஞானமென்கிற யோக வுணர்ச்சியால் |
| மலர் | மலர்ந்ததாகி | அளவிலன் | அளவிடப்படாதவனும் |

1. தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - மொழிமரபு 32.

† திருவேங்கடமுடையான் திருவடிகளைப் பூவார்கழல்களென்றும், அழகியமணவாளன் திருவடிகளைப் பொதுநின்ற பொன்னங்கழல் என்றும் திருப்பொலிந்த சேவடி என்றும் வழங்குதல் போல.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| பொறி உணர்வு அவை இலன் | (மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும்)வெளி யிந்திரியங்களின் ஞான த்தினல் அளவிடப்ப டாதவனுமாய் | எதிர் நிகழ் கழி வினும் | எதிர்காலம் நிகழ்காலம் இறந்தகாலம் என்ற மூன்றுகாலங்களிலும் |
| இனன் | இப்படிப்பட்டவனும் | இனன் இலன் | ஒப்பு இல்லாதவனும் |
| முழு உணர் நலம் | பரிபூர்ண ஞானனந்த ஸ்வரூபியும் | மிகுநரை இலன் | மேற்பட்டவரில்லாதவனுமாயிருப்பவன் |
| | | என் நன் உயிர் | எனக்கு நல்ல ஆத்மா. |

* * * — எம்பெருமான் இவ்வாழ்வாரை வசப்படுத்திக்கொண்டது தனது திருக்கல்யாண குணங்களைக் காட்டியாதலால் அக்குணங்களிலே முற்பட இழிந்து பேசினர். அக்குணங்கள் ஸ்வரூபத்தைப்பற்றி நிற்குமேயொழிய நிராச்ரயமாய் நில்லாது; ஆகவே அக்குணங்களுக்கு ஆச்ரயமான ஸ்வரூபத்தை அவன் அவன் என்று கீழ்ப்பாட்டிலேயே ப்ரஸ்தாவித்தார். அந்த திவ்யஸ்வரூபமானது சித்து அசித்து என்கிற இரண்டு தத்துவங்களிற்காட்டிலும் விலக்ஷணமாயிருக்கிறபடியை இப்பாட்டில் அருளிச்செய்கிறார்.

“மனனகமலமற மலர் மிசையெழுதரும் மனனுணர்வளவிலன்” என்னுமளவால் ஜீவாத்மஸ்வரூபத்திற்காட்டிலும் பரமாத்மஸ்வரூபம் விலக்ஷணம் எனப்படுகிறது. “பொறியுணர்வவையிலன்” என்று ஜடப்பொருள்களிற்காட்டில் விலக்ஷணம் எனப்படுகிறது. ஞானமும் ஆனந்தமுமே வடிவெடுத்ததாயும், முக்காலங்களிலும் ஒப்புயர்வற்றதாயுமிருக்கிற அந்த பரமாத்மஸ்வரூபம் அடியேனுக்குத் தாரகமாயுமிராநின்றது என்கிறார் பின்னடிகளில். எனனுயிர் என்றதையும் ஒரு விசேஷணமாகக்கொண்டு அப்படிப்பட்டவனது சுடரடிதொழுதெழென்மனனே!—என்று முன் பாட்டோடே கூட்டிப் பொருளுரைத்துக்கொள்வதுமுண்டு.

அற என்றதை ‘அறஅற’ என்று இரட்டித்துக்கொள்க. ‘கிரமமாகவொழிய’ என்பது பொருள். மனனகமலம்=“കാമഃ ക്രോധശ്ച ലോഭശ്ച ഹർഷോ മാനോ മദോ ധൃതിഃ | വിഷാദശ്ചാഷ്ടമഃ പ്രോക്തഃ ഇത്യേതേ മനസോ മലാഃ = காமஃ க்ரோதச்ச லோபச்ச ஹர்ஷோ மானோ மதோ த்ருதிஃ— விஷாதச்சாஷ்டமஃ ப்ரோக்தஃ இத்யேதே மநஸோ மலாஃ” என்று சொல்லப்பட்ட காமம் குரோதம் முதலிய துர்க்குணங்கள் படிப்படியாகக் கழிந்துகொண்டேவர, அதனால் மனவுணர்ச்சியானது விகாஸம் பெற்று மேன்மேலுங் கொழுந்துவிட்டுக் கிளர்ந்துவரும். அப்படிப்பட்ட மாநஸஜ்ஞாநத்தாலே ஜீவாத்மா உணரப்படுவன்; எம்பெருமானேவெனில் அப்படி உணரப்படமாட்டான் என்க.

[மனன் அகம்] அகம் — ஏழாம்வேற்றுமையுருபு; மநஸ்ஸிலே என்றபடி. மலர் — வினைத்தொகை. (பெயர்ச்சொல் அன்று.) மனனுணர்வு — மாநஸஜ்ஞானம்; (அதனலே) அளவு — பரிச்சேதித்தல்; அதை யுடையவன் ஜீவாத்மா; அஃதில்லாதவன் எம்பெருமான் என்க. இங்ஙனன்றியே, மனனுணர்வு என்பதற்கே ‘மனத்தினலுணரப்படும் ஜீவாத்மா’ என்று பொருள்கொண்டு, அதனளவல்லாதவன் எம்பெருமான் என்றும், பொறியுணர்வவை என்பதற்கு — கண்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



முதலிய இந்திரியங்களால் உணரப்படும் பொருள்கள் என்று பொருள்கொண்டு, அவைபோலல்லாதவன் எம்பெருமான் என்றும் உரைப்பர்.

பகவத் ஸ்வரூபமானது சேதநாசேதந ஸ்வரூபங்களிற் காட்டில் விலக்ஷணம் என்று சொல்லவேணுமானல் 'ஜீவாத்மாவைப்போலல்ல; ஜடப்பொருள்போலல்ல' என்றிப்படி எளிதாகச் சொல்லலாமே; அங்ஙனம் சொல்லாமல் "மனனகமலமற" என்று தொடங்கி 'ஜீவாத்மா மாநஸஜ்ஞானத்திற்கு விஷயமாகவல்லவன், ஜடப்பொருள் பாஹ்ய இந்திரியங்களுக்கு விஷயமாகவற்று' என்கிற விஷயங்கள் சொல்லப்படுதற்குக் காரணம் ஏதென்னில்; உலகத்திற் சில பதார்த்தங்களுக்குப் பரஸ்பர வைலக்ஷண்யம் குறையற்றிருக்கச் செய்தேயும் ஏதாவது ஒரு ப்ரகாரத்தாலே ஸாம்யமும் சொல்லக்கூடியதாயிருக்கும்: காண்மின்; பொன்னும் கரியும் ஒன்றோடொன்று நெடுவாசி பெற்றிருக்கச்செய்தேயும், பொன்னைக் காண்கிற கண்ணே கரியையுங் காண்கிறது; கரியைக் காண்கிற கண்ணே பொன்னையுங் காணாநின்றது என்று இப்படியால் [ஏககெந்த்ரிய க்ராஹ்யத்தாலே] ஒரு ஸாம்யமும் சொல்லக்கூடியதாயிருக்குமே; அப்படிப்பட்ட ஸாம்யமாவது எம்பெருமானுக்கு சேதநாசேதநங்களோடு உண்டோவென்னில் அதுவுமில்லையென்கைக்காக ஜீவாத்மாவை க்ரஹிக்கிற இந்திரியம் இன்னதென்றும் ஜடப்பொருள்களை க்ரஹிக்கிற இந்திரியங்கள் இன்னவையென்றும் கூறப்பட்டதென்க.

இங்ஙனம் சொல்லக்கூடுமோ? எம்பெருமான் பாஹ்ய இந்திரியங்களாலே க்ரஹிக்கக்கூடியவனல்லனாயினும் அழுக்கற்ற மனத்தினால் க்ரஹிக்கக்கூடியவனாக ஓதப்பட்டிருக்கின்றானே, அதற்கு மாறாக "மனனுணர்வளவிலன்" என்னக்கூடுமோ? என்னில்; கூடும்: எம்பெருமான் விசுத்தமான மனத்தினால் க்ரஹிக்கக்கூடியவன் என்று ப்ரமாணங்கள் சொன்னதற்குக் கருத்து யாதெனில்; 'எம்பெருமான் அப்படிப்பட்டவனல்லன், அவ்வளவனல்லன்' என்றிப்படி அறியக்கூடியவன் என்று சொல்லுகிறதேயொழிய 'அயமீத்ருஶ:, இயாந்' என்று க்ரஹிக்கத்தக்கவன் என்று சொல்லுகிறதல்ல. ஆகலால் அந்த:கரணத்தினால் ஜீவாத்மா க்ரஹிக்கப்படுவதற்கும் பரமாத்மா க்ரஹிக்கப்படுவதற்கும் நெடுவாசியுண்டென்க. "யம் பரோக்ஷோபதேஶதஸ் த்ரயீ நேதி நேதி பராமர்ஶ பூர்வகம் வதத:" = யம் பரோக்ஷ முபதேசதஸ் த்ரயீ நேதிநேதி பராமர்யுதா வதத:" என்ற வரதராஜஸ்தவ ஸூக்தியின் பொருள் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

எம்பெருமான் அடியோடு ஞானத்திற்கே விஷயமல்லன் என்று சொல்லிவிட்டால், ஆகாசத்தாமரை, மலடிமகன், முயற்கொம்பு முதலிய வஸ்துக்கள்போல் எம்பெருமானும் ஒரு அஸத்பதார்த்தம் [இல்லாத பொருள்] என்று சொன்னதாக முடியுமாதலால், அப்படிப்பட்ட துச்சத்வத்தை எம்பெருமானிடத்து உண்டாகாமைக்காக விசுத்தமான அந்த:கரணத்தினால் க்ரஹிக்கக்கூடியவனாகச் சொல்லிற்றேயன்றி, உண்மையில், அணுத்ரவ்யமான ஜீவாத்மா க்ரஹிக்கப்படுவதுபோல் விபுத்ரவ்யமான பரமாத்மா க்ரஹிக்கப்பட முடியாதென்ப.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இனன்=இப்படிப்பட்டவன். முன்னடிகளிற் சொன்ன தன்மைகளையே உட்கொண்டு 'இப்படிப்பட்டவன்' என்று அநுபாஷிக்கிறபடி. முன்பு சொல்லப்பட்டதையே மீண்டும் அநுபாஷணஞ் செய்தல் ஈடுபாட்டின் மிகுதியை விளக்கும்.

உணர் முழுநலம் = உணர் என்றது உணர்வு என்றபடி; ஞானம் என்க. நலம்—ஆனந்தம். முழு என்றதை இரண்டனோடுங் கூட்டுக, கட்டடங்க ஞானமுமாய் கட்டடங்க ஆனந்தமுமாயிருக்குமென்றவாறு. பரமாத்ம ஸ்வரூபத்தில் ப்ரகாசமல்லாததும் அநுகூலமல்லாததுமான பாகமே கிடையாதென்றதாயிற்று. ஆனந்தமும் ஞானவிசேஷமே யாதலால் ஒன்றைச் சொன்னாலே போதுமே; ஆனந்தம் ஞானம் என்ற இரண்டையுஞ் சொல்லத் தேவையில்லையேயென்னில்; அப்போது இனன் என்றதற்கு 'உபமானம்' என்று பொருள் கொண்டு, லோகத் தன்னை அறிய முடியாமையாலே எப்போதும் உபமானத்தினாலேயே அறியப்படுவதான முழுநலமாயிருக்கும் என்று உரைத்துக்கொள்ளலாம். (இப்பக்ஷத்தில் உணர்—வினைத்தொகை.) உபநிஷத்து "யதா ஸைந்தவ கந:" என்று ஓர் உபமானத்தையிட்டேயன்றோ பரப்ரஹ்ம ஸ்வரூபத்தை நிரூபிப்பது. ஆழ்வார் தாமும் 1. "கடிசேர்நாற்றத்துள்ளாலையின்பத்துன்பக் கழிநேர்மை, ஒடியாவின்பப் பெருமையோன்" என்று ஓர் உபமானத்தையிட்டு நிரூபிக்கின்றமை காண்க.

நம் தர்சனத்தில், சித்து அசித்து ஈச்வரன் என மூன்று தத்துவமே உள்ளது. ஈச்வரன் மற்றை யிரண்டு தத்துவங்களிற் காட்டில் விலக்ஷணன் என்பது முன்னடிகளிலேயே வியக்தமாகச் சொல்லப்பட்டிருக்க, 'எதிர்நிகழ்கழிவினும் இனனிலன்' என்று மூன்று காலங்களிலும் ஒப்பில்லாதவன் என்று மறுபடியுஞ் சொல்வதற்குப் பயன் என்? என்னில்; கேண்மின்; ஸாதர்மிய த்ருஷ்டாந்தமென்றும் வைதர்மிய த்ருஷ்டாந்தமென்றும் த்ருஷ்டாந்தம் இருவகைப்படும்; 'அவனைப்போல இவனிருக்கிறான்' என்று அந்வயமுகத்தாலே ஒப்புச்சொல்லுகை ஸாதர்மிய த்ருஷ்டாந்தம்; 'அவன் எப்படி அயோக்யனாயிருக்கிறானோ அப்படி இவன் அயோக்யனல்லன்' என்று வ்யதிரேக முகத்தாலே சொல்லுகை வைதர்மிய த்ருஷ்டாந்தம். இப்பாட்டின் முன்னடிகளால் எம்பெருமானுக்கு ஸாதர்மிய த்ருஷ்டாந்தமில்லை யென்றது, 'இனனிலன்' என்பதால் வைதர்மிய த்ருஷ்டாந்தமும் இல்லை யென்னப்படுகிறது. 'சேதநாசேதனங்களைப்போல எம்பெருமானும் இந்த்ரிய க்ராஹ்யன்' என்னக்கூடுமானால் அப்போது ஸாதர்மிய த்ருஷ்டாந்த முண்டாகும்; அங்ஙனல்லன் என்று சொல்லப்பட்டமையால் ஸாதர்மிய த்ருஷ்டாந்தமில்லை யென்று முன்னடிகளிற் சொல்லிற்றாயிற்று. இனி, 'எம்பெருமான் அவைபோலல்லன்' என்று சொல்லுகிற முகத்தால் வைதர்மிய த்ருஷ்டாந்த ஸத்பாவமாவது எம்பெருமானுக்குச் சொல்லக்கூடுமோ வென்று விமர்சித்துப் பார்த்து அதுவுமில்லை யென்கிறது இனனிலன் என்பது.

---

1. திருவாய்மொழி. 8-8-2.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இப்படிச் சொல்லும்பக்ஷத்தில் 'எம்பெருமான் சேதநாசேதநங்கள் போலல்லன் என்றுஞ் சொல்லமுடியாது' என்பதாகத் தேறுகின்றது; ஆகவே 'எம்பெருமான் சேதநாசேதநங்களைப் போன்றவன்' என்று முன்னடிகட்கு முரணாக ஸ்தாபிக்கப்பட்டதாகிறதே என்று சிலர் சங்கிக்கலாம்: அப்படியல்ல. வைதர்மிய த்ருஷ்டாந்தமில்லையென்று சொல்வதன் கருத்து யாதெனில்; 'வஸிஷ்டன் சண்டாளனைப்போலல்ல' என்று ஒருவன் சொன்னால், 'சீ சீ, அப்படி சொல்லாதே' என்று ஒருவன் அதனை மறுத்துச் சொன்னானாகில் 'வஸிஷ்டர் சண்டாளனைப்போன்றவர்தாம்' என்று ஸ்தாபிப்பதா அதன் கருத்து? அல்ல; எடுத்துக் கழிக்கவும் தகாத ஒரு ஹேயவஸ்துவோடே ஸர்வோத்க்ருஷ்ட வஸ்துவுக்கு ஸாம்யம் உண்டென்கையும் ஸாம்யம் இல்லையென்கையும் இரண்டும் இகழ்வாம்; "ஹீநஸாம்யாஸஹநம் ஹீந ப்ரதிஷேத:" என்றும் "கதம் ஹீநஸாம்யம் ப்ரதிஷேத்யதே?" என்றும் சாஸ்த்ரஜ்ஞர்கள் சொல்லுவர்களாகையாலே ஸாம்யப்ரஸக்தியே யில்லாத வஸ்துவோடே ஸாம்யத்தை மறுப்பதும் தகாததேயாம்.

இவ்வளவு அர்த்தங்களைபுஞ் சுருக்கி ஒன்பதினாயிரப்படியிலே நஞ்சீயர் அருளிச்செய்கிறார் — 'அவனோடு ஒவ்வாதென்று சொல்லுகைக்கும் ஸத்ருசமாயிருப்பதொரு பதார்த்தத்தையுடையனல்லன் என்கிறது" என்று. "ஆக்ஷேப: ஸ்வயமுக்தஸ்ய ப்ரதிஷேதோ விசாரணாத்" என்ற ஆக்ஷேபாலங்காரத்தின் சைலி இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

இங்ஙனேயாகில், "கார்வண்ணந் திருமேனி கண்ணும்வாயும் கைத்தலமுமடியிணையுங் கமலவண்ணம்' என்றும் "நீலமேகநிபம்" என்றும் இப்படியே பலரும் பல த்ருஷ்டாந்தங்களைக்கொண்டு எம்பெருமானை வருணிப்பது சேருமோ? எனில்; சேராதுதான்: நெஞ்சில் ஒருபடியாகப் பதிவதற்காக ஏதோ சில உபமானங்களைக் கூட்டிச்சொல்லுகிறதே யொழிய, உண்மையில், பரஞ்சோதிக்கு ஸர்வாத்மநா விஸத்ருசமான வஸ்துக்களை உவமைகூறுதலும் இகழ்வேயாமென்பதை இவ்வாழ்வார்தாமே மேலே "ஒட்டுரைத்திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும், பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதி!" என்று ஸ்பஷ்டமாகவே அருளிச்செய்கிறார்.

இனனுணர்முழுநலம் என்பதற்கு "கோசுத் தன்னை அறிய முடியாமையாலே எப்போதும் உபமானத்தாலேயே அறியப்படுவதான முழுநலமாயிருக்கும்" என்றும் ஒரு பொருள் கொள்ளலாமென்று மூன்றாமடியில் சொல்லி வைத்து, நான்காமடியில் வந்த இனனிலன் [உபமானமற்றவன்] என்று சொல்லுவது நேர்விரோதமன்றோ வென்று சிலருடைய நெஞ்சு குழம்பியே கிடக்கும். இதற்கு நாம் என்செய்வோம்!. ஏதாவதொரு உபமானத்தையிட்டுப் புகழ்ந்தாலன்றி வஸ்துஸ்வரூபம் தெரியமாட்டாதாகையாலே உபமானத்தைக்கொண்டே உணரவேண்டியதாயுமிராநின்றது; உபமானத்துக்கு அர்ஹமானவஸ்து எதுவுமில்லை என்கிற உண்மைப்பொருளை மறையாதே வெளியிடவேண்டியதாயுமிராநின்றது: ஆகையாலே இந்த விரோதம் அபரிஹார்யமாய் ஸஹ்யமாக்கடவது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இதனை எதுபோலக் கொள்ளவேணுமென்றால், — 1. "எனதாவி தந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே" என்று ஆத்மஸமர்ப்பணம் பண்ணி 2. "எனதாவியார் யானார் தந்த நீ கொண்டாக்கிளையே" என்று அதனை உடனே மறுத்துக்கூறுமிடத்து 'ஆத்மஸமர்ப்பணம் பண்ணவும் வேணும், ஐயோ! அநியாயமாகப் பண்ணினோமே! என்று அநுதாபப்படவும் வேணும்' என்று சாஸ்த்ரார்த்தம் தேறுவதுபோல், எம்பெருமானை உபமானமுகத்தாலே புகழவும் வேணும், உடனே, ஐயோ! விலக்ஷண வஸ்துவுக்கு ஒப்புச்சொல்லி அவத்யத்தை விளைத்தோமே! என்று அநுதாபப்படவும் வேணும் என்று சாஸ்த்ரார்த்தமாகக் கொள்ளத்தக்கது.

மிகுநரை இலன்=மிகுநர் என்றால் தன்னைப்பார்க்கிலும் மேற்பட்டவர்; எம்பெருமான்தானே ஸர்வஸ்மாத்பரனாகையாலே அவனுக்கு மேற்பட்டார் ஆருமில்லையென்கிறது. அவனுக்கு ஸமானமானவர்களே இல்லை என்று முடித்தபின்பு, மேற்பட்டாரிருக்கக்கூடுமோ வென்கிற சங்கையே உண்டாக இடமில்லாதிருக்க, 'மிகுநரையிலன்' என்னக்கூடுமோ வெனின்; "ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே = ந தத்ஸமச்சாப்யதிகச் ச த்ருச்யதே" என்ற ச்வேதாச்வதர உபநிஷத்தின் சாயையை அடியொற்றிச் சொல்லுகிறபடி. அவ்வுபநிஷத்துத்தான் அப்படி சொல்லக்கூடுமோவென்னில்; எம்பெருமானுக்கு மேற்பட்டவர்கள் எப்படி அஸம்பாவிதர்களோ அப்படியே ஒத்தாரும் அஸம்பாவிதர்களென்று உபமாநராஹித்யத்தைத் திடப்படுத்துவதற்காகவே சொல்லுகிறதென்று நஞ்சீயர் ஒருவழிகாட்டினர்.

முதற்பாட்டில் உயர்வில்லாதவனென்றார்; உயர்வில்லாவிடினும் ஒப்புண்டோ என்று சங்கித்து, 'மிகுநரையிலனே' என்று கொண்டு முன் சொன்ன உயர்வில்லாத ஸர்வேச்வரனைச் சுட்டி, அவன் சேதநாசேதந விலக்ஷணஜ்ஞாநாநந்த ஸ்வரூபியாதலால் எதிர்நிகழ்கழிவினும், இனனிலன்—ஸமாநனில்லாதவன் என்றார் இப்பாசுரத்தில் என்றுங்கொள்ளலாம். அப்பொழுது, இனன் — இப்படிப்பட்டவனுடைய என்று பொருள்கொண்டு, சுடரடிதொழுதெழென் மனனே! என்று முன்பாட்டோடே கூட்டிக்கொள்க.

எனனுயிர் என்பதை, என் நன் உயிர் என்றும், எனன் உயிர் என்றும் இரண்டுவகையாகவும் பிரிக்கலாம்.

மனன் இனன் என்ற விடங்களில் மகரனகரப்போலி அறிக. மனம் என்றாலும் மனன் என்றாலும், இனன் என்றாலும் இனம் என்றாலும் ஒக்குமென்க. இனன் 'என்பதற்கு இப்படிப்பட்டவனென்று பொருளாகும்போது, இனன் என்று னகர வீற்றதாகவே சொல்வடிவமாகும். .... ... ... (உ)

1. திருவாய்மொழி 2-3-4. 2. ஷை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இலனதுஉடையனிது எனநினைவரியவன் *
நிலனிடைவிசும்பிடை உருவினனருவினன் *
புலனொடுபுலனலன் ஒழிவிலன்பரந்த * அந்
நலனுடையொருவனை நணுகினம்நாமே. * (௩)

| | |
|---|---|
| அது இலன் (என) | அந்தப்பொருள் (தனக்கு) இல்லாதவனென்றும் |
| இது உடையன் என | இந்தப்பொருளை யுடையவன் என்றும் |
| நினைவு அரியவன் | நினைப்பதற்கு அருமைப் பட்டவனாகியும் |
| நிலன் இடை | பூமி முதலான (கீழ்) உலகங்களிலும் |
| விசும்புஇடை | ஆகாசம் முதலான (மேல்) உலகங்களிலும் (உள்ள) |
| உருவினன் | ரூபியான அசேதநப் பொருள்களை யுடையவனாகியும் |
| அருவினன் | ரூபியல்லாத சேதனர்களை யுடையவனாகியும் |
| புலனொடு | (இப்படிப்) புலன்களுக்கு விஷயமாகிற பொருள்களோடு (கலந்து நின்றும்) |
| புலன்அலன் | (தான்) புலன்களுக்கு விஷயமாகாதவனாகியும் |
| ஒழிவுஇலன் பரந்த | எப்பொழுதும் எங்கும் வியாபித்திருக்கிற |
| அ நலன்உடை ஒருவனை | முன் சொன்ன கல்யாண குணங்களையுடைய ஒப்பற்ற எம்பெருமானை |
| நாம் நணுகினம் | நாம் கிட்டப்பெற்றோம். |

* * * — கல்யாணகுணமுடைமையையும் நித்யவிபூதியாட்சியையும் திவ்ய மங்கள விக்ரஹமுடைமையையும் முதற் பாட்டிலே அநுஸந்தித்து, அவற்றிற்கு ஆச்ரயமான திவ்யாத்மஸ்வரூபத்தின் வைலக்ஷண்யத்தை இரண்டாம் பாட்டிலே அருளிச்செய்து, அவற்றோடே சேர்த்து ஒரு கோர்வையாக அநுபவிக்கத் தக்கதான லீலாவிபூதியுடைமையை இப்பாட்டிலே அருளிச்செய்கிறார்.

பரமபோக்யமான கல்யாணகுணம் முதலியவற்றை ஒரு பெரிய திருநாள் போலே அநுபவியாநின்ற இவர்க்கு அத்யந்த ஹேயமாய் * இருள்தருமாஞாலமென்று பெயர்பெற்றதான இந்த லீலாவிபூதியின் ஆட்சியை அநுபவித்தல் ப்ராப்தமாகுமோ? ஞானிகள் அருவருக்கும்படியாயன்றோ இவ்விபூதியிருப்பது: இதனை அநுஸந்திக்க இவர் எங்ஙனே மிழிந்தார்? என்று சங்கை பிறக்கக்கூடும்; இவ்விபூதி இருள்தருமாஞாலமாயிருந்தாலும் ஆழ்வார் மயர்வற மதிநலமருளப் பெற்றவராகையாலே அந்த ஞானவிளக்கத்தினால் இவ்விபூதியின் இழிவை நோக்காது 'இதெல்லாம் எம்பெருமானுடைய ஆட்சியின்கீழ் அமைந்தது' என்று கொண்டு ததீயத்வாகாரத்தையிட்டுப் பார்க்குமவரான பின்பு அவனுடைய ஐச்வரியங்களையெல்லாம் ஒன்றுவிடாமல் அநுபவிக்கிற அடைவிலே இதனையும் அநுபவிக்கிறார் என்று கொள்க.

இங்கே ஈடு முப்பத்தாறாயிரப்படி யருளிச்செயல்:— "ராஜாக்களுக்கு நாடெங்கும் செல்லாநிற்கச்செய்தே மஹிஷிகளும் தாங்களுமாகச் சில பூந்தோட்டங்களைக் குடநீர்வார்த்து ஆக்குவது அழிப்பதாய் லீலாரஸ மநுபவிக்குமா போலே 1. 'திருவிண்ணகர்ச் சேர்ந்தபிரான் பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடை

1. திருவாய்மொழி, 6-3-5.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மூவுலகு'' என்கிறபடியே ஸர்வேச்வரனும் பெரியபிராட்டியாருமாகக் கடாக்ஷித்த போது உண்டாய் இல்லையாகில் இல்லையாய் அவர்களுக்கு லீலாரஸவிஷயமாயிருக்கிற லீலாவிபூதியை அநுபவிக்கிறார்'' என்று.

இலன்அது, உடையன்இது - என நினைவு அரியவன் = 'இவனுக்கு அது இல்லை' என்றும் நினைக்கமுடியாது; 'இவனுக்கு அது உண்டு' என்றும் நினைக்க முடியாது.—'இவனுக்கு அது இல்லை' என்று நினைக்குமிடத்துக் குறைவுபாடு ஏற்படுமாகையாலே அப்படி நினைக்கக்கூடாதாயினும் 'இவனுக்கு அது உண்டு' என்று நினைப்பதற்குத் தடை என்ன ? என்னில்; 'இராமனுக்கு வியாகரணம் தெரியும்' என்றால் 'அவனுக்கு மீமாம்ஸை தெரியாது, தர்க்கம் தெரியாது, வியாகரணமொன்றுதான் தெரியும்' என்று நினைக்க இடமுண்டாவதுபோல, ஒரு பொருளைச் சுட்டி 'எம்பெருமான் அதனையுடையன்' என்றால் 'அது தவிர மற்ற பொருள்கள் அவனுக்கு இல்லை' என்று தோற்ற இடமுண்டாகிக் குறையாய்த் தலைக்கட்டுமாதலால் 'இவனுக்கு அது இல்லை' என்று சொல்வதோடு 'இவனுக்கு அது உண்டு' என்று சொல்வதோடு வாசியற இரண்டும் ஒண்ணாதவையே என்றுணர்க.

ஆனால் எம்பெருமானுடைய ஐச்வரியத்தை எப்படிதான் பேசக்கடவதென்றால், நிலனிடை விசும்பிடை யுருவினனருவினன் என்று பேசவேணுமென்கிறார். வேதபுருஷன் ''பதிம் விச்வஸ்ய'' என்று பேசினாப்போலே ஸர்வஸ்வாமி யென்னவேணுமென்க. பூமி முதற்கொண்டு பாதாளம் வரையிலுள்ள கீழுலகங்களிலும், பரமபதம் தவிர அதற்குக் கீழ்ப்பட்டதான மேலுலகங்களிலும் சேதநபதார்த்தங்களும் ஜடப்பொருள்களும் எத்தனையுண்டோ அவற்றையெல்லா முடையவன் என்னவேணும். இதில் 'பரமபதந்தவிர' என்றதனால், பரமபதம் எம்பெருமானுடைய ஆட்சிக்கு உட்பட்டதன்றோவென்று சங்கிக்க வேண்டா; லீலாவிபூதிச் செல்வத்தை மாத்திரமே இப் பாட்டில் அருளிச்செய்கிறாராகையாலும் நித்யவிபூதிச் செல்வத்தை முதற் பாட்டில் அருளிச்செய்தாராகையாலும்.

உருவினன் அருவினன் = 'ரூபி' என்னும் வடசொல் உரு என்றும், 'அரூபி' என்னும் வடசொல் அரு என்றும் சிதைந்துகிடக்கிறது. ஜடப்பொருள்களெல்லாம் ஒரோருவகையான ரூபத்தையுடையனவாகக் காணப்படுதலால் அவை ரூபி யெனப்படும். (ரூபி - ரூபமுடையது.) ஜீவாத்மா உருவமற்றவனாதலால் அரூபி யெனப்படுவான். நிலனிடை விசும்பிடை யுருவினன், நிலனிடை விசும்பிடை யருவினன் என்க. நிலன்—நிலம்; மகரனகரப்போலி.

இப்படி ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன் இந்த லீலாவிபூதியின் ரக்ஷணத்திலே உதாஸீநனாய்க்கொண்டு பரமபதத்திலே ஹொமவுஞ்வணனாயிருப்பவனல்லன்; இவற்றினுடைய லாபநஷ்டங்களையே தன்னுடைய லாப நஷ்டங்களாகக் கொண்டு, புலப்படும் பதார்த்தங்களெல்லாவற்றிலும் அந்தர்யாமியா யிருப்பவன் என்கிறார் புலனொடு என்று. புலன் என்பது இங்கு புலன்களாலறியப்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



படும் பொருள்களுக்காயிற்று. லக்ஷணையென்க. புலப்படுகின்ற ஸகல பதார்த்தங்களோடும் அந்தராத்மாவாய்க் கலந்து நின்றானேயாகிலும் என்றபடி. அழுக்குவஸ்துவோடே உறைகின்ற அரும்பொருளும் அந்த ஸம்பந்தத்தாலே தானும் அழுக்கேறப்பெறுவதுபோல தோஷமே வடிவான பதார்த்தங்களிலே உறைகின்ற எம்பெருமானும் அவற்றின் தோஷங்கள் தன்னிடத்திலே தட்டப்பெற்று ஜடப்பொருள்களைப்போலே பரிணாமசாலியாயும் சேதனரைப்போலே ஸுகது:க்கங்கள் கலசியிருப்பவனாயும் ஆய்விடக்கூடுமோவென்று சங்கைபிறக்கக்கூடுமாதலால் அந்த சங்கையை ஒழித்தருளுகிறார் புலனலன் என்று. புலன்களினுடைய படியை யுடையவனல்லன். ஜடப்பொருள்போலே விகாராஸ்பதமல்லன்; ஒட்டற்று விளங்காநிற்குமவன் என்க.

ஒழிவு இலன் பரந்த = ஒழிவு இல்லாதவனாய் வியாபித்த என்கை. ஒரு வஸ்துவு மொழியாமல் ஸகல வஸ்துக்களிலும் வியாபித்த என்றாவது, ஒருகாலமு மொழியாமல் ஸர்வகாலங்களிலும் வியாபித்த என்றாவது பொருள்காண்க.

கீழிரண்டு பாட்டிலுஞ் சொன்ன குணங்களோடு கூடியிருக்குந்தன்மையை அநுவாதஞ்செய்கிறார் அந்நலனுடையொருவனை என்று. இப்படி பரமவிலக்ஷணனை எம்பெருமானை நாம் கிட்டப்பெற்றோமேயென்று ஆனந்தம் தோற்ற முடிக்கிறார். நெடுங்காலம் பிறவிக்கடலிலே அழுந்தி எம்பெருமானுடைய கதையின் வாஸனையையும் அறியாதிருந்த நாம் இப்படி உபயவிபூதியுக்தனா யிருந்துள்ள அவனைப் பூர்ணமாக அநுபவிக்கப்பெற்றோம் என்னும் மகிழ்ச்சி சொல் தொடையிலே விளங்கும்.

அன்றியே, நணுகினம்நாமே! என்று காகுஸ்வரமாகக் கொண்டு, அப்படிப்பட்ட எம்பெருமானை நீசரில் நீசரான நாமோ நணுகினோம்!; நணுகுவதற்கு நமக்கு யோக்யதையில்லாதிருக்க நணுகினதுபோல் தோற்றுகிறவிது ஒருகால் சித்தப்ரமமாக விருக்குமோ? என்பதாகவும் உரைப்பர். ... ... (௩.)

நாமவனிவனுவன் அவளிவளுவளேவள் *
தாமவரிவருவர் அதுவிதுவுதுவேது *
வீமவையிவையுவை அவைநலந்தீங்கவை *
ஆமவையாயவை ஆய்நின்றவவரே. * (௪)

| | | | |
|---|---|---|---|
| நாம் | நாம் முதலான தன்மைப் பொருள்களும் | தாம் | தாம்என்னும் பன்மைப் பொதுப் பொருளும் |
| அவன் இவன் உவன் | அவன் இவன் உவன் என்கிற ஆண்பால் சுட்டுப் பொருள்களும் | அவர் இவர் உவர் | அவர் இவர் உவர் என்னும் பலர்பால் சுட்டுப்பொருள்களும் |
| அவள் இவள் உவள் | அவள் இவள் உவள் என்னும் பெண்பால் சுட்டுப்பொருள்களும் | அது இது உது | அது இது உது என்னும் ஒன்றன்பால் சுட்டுப் பொருள்களும் |
| எவள் | எவள் என்கிற பெண்பால் வினாப்பொருளும் | எது | எது என்னும் ஒன்றன்பால் வினாப்பொருளும் |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| வீம்அவை | நசிக்குந்தன்மையுள்ள பொருள்களும் | ஆம்அவை | எதிர்காலப்பொருள்களும் |
| இவை உவை அவை | இவை உவை அவை என்னும் பலவின்பால் சுட்டுப் பொருள்களும் | ஆயஅவை | இறந்தகாலப் பொருள்களும் |
| நலம் அவை | நல்ல வஸ்துக்களும் | ஆய் நின்ற | ஆகிநின்ற எல்லாப் பொருள்களும் |
| தீங்கு அவை | கெட்ட வஸ்துக்களும் | அவரே | அந்த ஸர்வேச்வரனேயாம். |

* * * — இப்பாட்டுமுதல் மேற்பாட்டுக்களெல்லாம் கீழ்ப்பாட்டிற் சொன்ன லீலாவிபூதிச் செல்வத்தைப்பன்னிப்பன்னி யுரைக்கின்றன. பரமபோக்யமான * நலமந்தமில்லதோர் நாடாகிய நித்யவிபூதியை [பரமபதத்தை] விட்டு இருள் தருமா ஞாலமாகிய இந்நிலத்தை விசேஷமாக வருணிப்பதேன்? என்னில்; அந்தத் திருநாட்டிலுள்ளவர்கள் அஜ்ஞாநம் அந்யதாஜ்ஞாநம் விபரீதஜ்ஞாநம் அந்யசேஷத்வம் உபாயாந்தர பரத்வம் உபேயாந்தர பரத்வம் முதலிய குற்றங் குறைகளில் ஒன்றுமின்றியே எம்பெருமான் திருவுள்ளமுகக்குமாறு இருப்பவர்களாகையால் அந்த நாடு திருந்துவதற்காகச் சொல்லவேண்டிய பாசுரம் என்ன இருக்கிறது? 1. "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப" என்கிறார் ஆழ்வார்தாமே. அதாவது, பரமபதத்தில் பெருமாளும் பிராட்டியுமே எழுந்தருளியிருப்பதாகப் பேசியுள்ளார். "வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதிஃ ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ = வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதிஃ- ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ." என்று எண்ணிறந்த நித்ய முக்தர்களோடுகூட ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமான் எழுந்தருளியிருப்பதாக ப்ரமாணங்கள் சொல்லாநிற்க, பெருமாளும் பிராட்டியுமே அங்கு எழுந்தருளியிருப்பதாக ஆழ்வார் அருளிச்செய்வதற்கு என்ன கருத்தென்னில்; நித்ய முக்தர்கள் யாவரும் அந்த திவ்ய தம்பதிகளின் நிழலும் ¶ அடிதாறும் போலே அவர்களில் ஐக்கியப்பட்டிருத்தலால் அங்ஙனம் சொல்லலாயிற்று. ஆகவே அவ்வளவு பாதந்திரமாயிருக்கிற அந்தத் திருநாட்டைப்பற்றிப் பேச வேண்டியதொன்றில்லை, இந்த நாடோவென்னில்; அதற்கு எதிர்த்தட்டாயிருக்கையாலே இதைப்பற்றியே பன்னியுரைக்க ப்ரஸக்தியுள்ளது. ஆகவே மேற்பாசுரங்களாலே லீலாவிபூதிச் செல்வத்தைப் பரக்க அருளிச்செய்வது பொருந்துமென்க.

எம்பெருமானார் ஸூத்ரத்தில் * ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திபேதம் என்று அருளிச்செய்வது — இது முதல் முறையேயுள்ள மூன்று பாசுரங்களிலும் சொல்லுகிற பொருளையே ஸங்க்ரஹித்தபடியாம். ஸகல சேதநாசேதநங்களின் ஸ்வரூபம் எம்பெருமானுடைய அதீநமாயிருக்குமென்பது இப்பாட்டிற் சொல்லுகிறது; அப்படியே அவற்றின் ஸ்திதியும் [ரக்ஷணமும்] அவனதீநமாயிருக்குமென்பது மேற்பாட்டிற் சொல்லு

1. திருவாய்மொழி. 4-9-10.   ¶ அடிதாறு = பாதரேகை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கிறது. அவற்றின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் அவனதீநங்களா யிருக்கு மென்பது அதற்கு மேற்பாட்டிற் சொல்லுகிறது.

இந் நாட்டிலுள்ள ஸகல பதார்த்தங்களினுடையவும் ஸ்வரூபம் எம்பெருமானுக்கு அதீநமென்னுமிடம் இப் பாட்டிற் சொல்லுகிறது. இவற்றின் ஸ்வரூபம் அவனதீநமாயிருக்கையாவது என்னென்னில்; ஸ்ருஷ்டி காலத்திலே எம்பெருமான் தானே இவற்றை யுண்டாக்கி ஜீவத்வாரா உட்புகுந்து வஸ்துவாகவும் ஒரு பெயருடையதாகவுமாக்கியும், பிறகு பிரளயகாலத்திலே இவற்றையெல்லாம் தன் பக்கலிலே ஸூக்ஷ்ம ரூபமாகக் கிடக்கும்படி ஏறிட்டுக்கொண்டு தரித்தும் போருகையாகிற இதுதான் இவற்றின் ஸ்வரூபம் அவனதீநமாயிருத்தலாம்.

உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளையும் தனித்தனி யெடுத்துக்கொண்டு 'இதன் ஸ்வரூபம் அவனதீநம், இதன் ஸ்வரூபம் அவனதீநம், இதன் ஸ்வரூபம் அவனதீநம்' என்றிப்படி சொல்லுவதென்றால் இஃது ஒருநாளும் ஓயாத கதையாகும். இங்ஙனன்றியே, 'ஸகல பதார்த்தங்களும் அவனதீநம்' என்று ஒரே வார்த்தையாகச் சொல்லி முடித்துவிடலாமே யென்றால், இதில் ஸ்வாரஸ்யமில்லை; கேட்போர்க்கு ரஸிக்காது; ஆழ்வார்க்கும் திருப்திபிறவாது. ஆகவே பெருக்கமும் சுருக்கமு மின்றியே பேசியருளுகிறார்.

நாம் என்று தன்மையாக [= உத்தமபுருஷனாக]ச் சொல்லிக்கொள்ளப்படுகிற வ்யக்திகளும், அவன் என்று தூரத்திலுள்ளவர்களாகச் சொல்லப்படுகிற ஸாமாந்ய புருஷவ்யக்திகளும், இவன் என்று ஸமீபத்திலுள்ளவர்களாகச் சொல்லப்படுகிற ஸாமாந்ய புருஷவ்யக்திகளும், உவன் என்று—மிக்க தூரத்திலுமல்லாமல் மிக்க ஸமீபத்திலுமல்லாமல் நடுவணுள்ளவர்களாகச் சொல்லப்படுகிற ஸாமாந்ய புருஷவ்யக்திகளும், அவள் என்று தூரத்திலுள்ளவர்களாகச் சொல்லப்படுகிற ஸ்த்ரீவ்யக்திகளும், இவள் என்று ஸமீபத்திலுள்ளவர்களாகச் சொல்லப்படுகிற ஸ்த்ரீவ்யக்திகளும், உவள் என்று நடுவணுள்ளவர்களாகச் சொல்லப்படுகிற ஸ்த்ரீவ்யக்திகளும். எவள் என்று வினவப்படுகிற வ்யக்திகளும், அது, இது, உது, எது என்னப்படுகிற அஃறிணைப்பொருள்களும் [அதாவது — அசேதநவஸ்துக்களும்], அழியக்கூடிய பொருள்களும், நல்லபொருள்களும் கெட்டபொருள்களும், இனி உண்டாகப்போகிற பொருள்களும் கீழ்உண்டாகிக் கழிந்த பொருள்களுமாகிய அனைத்தின் ஸ்வரூபமும் எம்பெருமானுக்கு அதீநம் என்றதாயிற்று.

'எம்பெருமானுக்கு அதீநம்' என்று மூலத்தில் இல்லாதிருக்க எவ்விதம் அந்த அர்த்தம் செய்கிறது? மூலத்தில் அவரே என்றிருப்பதால் ஸகல-வஸ்துக்களுக்கும் எம்பெருமானுக்கும் அபேதமேயன்றோ சொல்லப்படுகிறது; ஆகவே அத்வைதமாகச் சொல்லியிருக்க வேறுவகையாகப் பொருள்பணிப்பது எங்ஙனே? எனில்; கேண்மின்;—மேல் ஏழாம் பாட்டில் "உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்று ஸர்வவஸ்துக்களிலும் எம்பெருமான் அந்தர்யாமி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யாக இருக்கிறுனென்பதை வ்யக்தமாகப் பேசியிருக்கிற ஆழ்வார்க்கு அத்வைத வாதம் விவக்ஷிதமென்று கனவிலுங் கருத ப்ரஸக்தியில்லை. * ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம * தத்த்வமஸி ஶ்வேதகேதோ * இத்யாதி ச்ருதிச்சாயையாலே ஆழ்வாரருளிச்செய்கிறவித்தனை. அந்த ச்ருதிவாக்யங்களின் ஸமஞ்ஜஸமான அர்த்தத்தை ஸ்ரீபாஷ்யாதிகளிலிருந்து ஸங்க்ரஹித்து பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ - உத்தரசதகத்தில் * க்ஷிதித்வதத்திவ்ருத்தி ஶ்ருஸநியமநவ்யாபநே ப்ராதநஸ்த்வ ஶேஷோ ஶேஷ: ப்ரபஞ்சோ வசாம்ஸிதி ஸ்வதஸ்த்வஸ்வா ஸேஷ வாசா: | ஸர்வம் வஸ்த்வேதத்தாத்மம் ஸகலஶரீரம் தச்ச ஶரீரவாசா வ்யாவ்ருத்தா ரங்கராஜப்ரவண! விஜயிஹிவேதஷி தேஹஸாமாநாதிகரண்யம் || என்ற ச்லோகத்தில் தெளிய வெளியிட்டருளினர். அவ்விடத்து வியாக்கியானத்திலே ஸாமாநாதிகரண்யநிர்தேசங்களின் உண்மைப்பொருளை விரித்துரைத்துவைத்தோம், அங்கே பார்க்கக் கண்டு கொள்க.

இப் பாட்டில் முதலடியிலுள்ள அவன் இத்யாதிகள் ஜாத்யேகவசனமாகக் கொள்ளத்தக்கன. இரண்டாமடியில் அவர் இத்யாதிகள் பன்மையாக இருக்கும்போது, அவன் இத்யாதியை ஜாத்யேகவசனமாகக் கொள்ளவேண்டிய அவசியமில்லையே யென்னில்; இரண்டாமடியில் அவர் இத்யாதியாகவுள்ள பன்மை வ்யக்திபஹுத்வத்தைச் சொல்லவந்ததன்று; 'பூஜாயாம் பஹுவசநம்' என்பதுண்டாகையால் பூஜ்யத்வத்தை மாத்திரம் காட்ட வந்த பன்மையாகக் கொள்ளத்தக்கது. பூர்வர்களின் வியாக்கியானங்களிலும் இங்ஙனமேயுள்ளது, இதை நோக்கி, முதலடியிலுள்ளவை ஸாமாந்ய புருஷ வாசகங்களென்று கொள்ளப்பட்டது. எவள் என்றது பும்லிங்கநிர்த்தேசத்திற்கும் உபலக்ஷணமாகக் கொள்ளத்தக்கது. இங்ஙனமே, வீமவை என்று அழியக்கூடிய பொருள்களைச் சொன்னது அழியாப் பொருள்களுக்கும் உபலக்ஷணமாகும். அழியாப்பொருள்களின் ஸ்வரூபமும் எம்பெருமானுடைய அதீநமோ என்கிற சங்கையை ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் "ஜ்ஞாத்வா தவைவ விபவாயத்தஸத்தா நித்யம் ப்ரியாஸ்த்வத்கேவல தேஹநித்யா: | நித்யம் த்வதேகபரதந்த்ர நிஜஸ்வரூபா: பாவத்க மங்களகுணாஹி நிதர்ஶநம் ந:." என்கிற ச்லோகத்தால் தீர்த்தருளினர்.

நலம் தீங்கவை—நன்மை தீமை என்று பண்பை [தர்மத்தை]ச் சொல்லுகிறதாகவுங் கொள்ளலாம்; நல்லபொருள் தீயபொருள் என்று பண்பியை [தர்மியை]ச் சொல்லுகிறதாகவுங் கொள்ளலாம். ஜாதியோடும் வ்யக்தியோடும் வாசியறவும், குணத்தோடும் த்ரவ்யத்தோடும் வாசியறவும், க்ரியையோடும் க்ரியாவத்தோடும் வாசியறவும் எல்லாவற்றின் ஸ்வரூபமும் எம்பெருமானதீநம் என்றதாயிற்று.

ஆமவை என்று எதிர்காலப்பொருள்களையும் ஆயவை என்று இறந்தகாலப் பொருள்களையும் சொன்னதுபோல நிகழ்காலப்பொருள்களையும் சொல்லவேண்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

டியிருக்கச் சொல்லாது விட்டதேன்? எனில்; நிகழ்காலமென்பது ஒரு நொடிப் பொழுதேயாகும்; இது இறந்தகாலத்திலும் எதிர்காலத்திலும் அடங்கிப்போகக்கடவதாதலால் தனிப்படச் சொல்லவேண்டிய அவசியமில்லையென்பர்.

ஆக இப்பாட்டால், ஆண், பெண், அலி, சிறந்தபொருள்கள், அழியும் பொருள்கள், விலக்ஷணப்பொருள்கள், அவிலக்ஷணப்பொருள்கள், இறந்தகாலப் பொருள்கள், எதிர்காலப்பொருள்கள் — என்று சில வகைகளாலே இந்த லீலா விபூதியிலுள்ள ஸகல பதார்த்தங்களையும் நிர்த்தேசித்து, இவற்றின் ஸ்வரூபம் எம்பெருமானதீநமென்று அருளிச்செய்தாராயிற்று. .... .... ... (௪)

அவரவர்தமதமது அறிவறிவகைவகை *
அவரவரிறையவர் எனவடியடைவர்கள் *
அவரவரிறையவர் குறைவிலரிறையவர் *
அவரவர்விதிவழி அடையநின்றனரே. * (௫)

| | |
|---|---|
| அவர்அவர் | அந்தந்த அதிகாரிகள் |
| தமதமது | தங்கள் தங்களுடைய |
| அறிவு | ஞானத்தாலே |
| அறி | அறியப்படுகிற |
| வகைவகை | பலபல படிகளாலே |
| அவரவர் | அந்தந்த தெய்வங்களை |
| இறையவர் என | ஸ்வாமிகளென்றெண்ணி |
| அடி அடைவர்கள் | ஆச்ரயிப்பர்கள்; |
| அவரவர் இறையவர் | அந்தந்த அதிகாரிகளால் தொழப்படுகிற தெய்வங்கள் |

| | |
|---|---|
| குறைவு இலர் | (அவரவர்கள் விரும்பின பலன்களைக் கொடுப்பதில்) குறையற்றனவே; |
| | (எதனாலே என்னில்;) |
| இறையவர் | ஸர்வஸ்வாமியான ஸ்ரீமந் நாராயணன் |
| அவரவர் | அந்தந்த அதிகாரிகள் |
| விதிவழி | தங்கள் தங்கள் அத்ருஷ்டாநுஸாரமாக |
| அடைய | பலன்பெறும்படியாக |
| நின்றனர் | (அந்தந்த தேவதைகளுக்கு) அந்தர்யாமியாக எழுந்தருளியுள்ளான். [அதனாலே காண்மின்.] |

* * * — ஸகல பதார்த்தங்களினுடையவும் ஸ்வரூபம் எம்பெருமானதீநமென்று கீழ்ப்பாட்டிற் சொல்லிற்று; ஸ்வரூபம்போலவே ஸ்திதியும் [அதாவது — ரக்ஷணமும்] எம்பெருமானதீநமே என்கிறது இப்பாட்டில். இவ்வுலகில் ரக்ஷகர்களென்று பேர்சுமப்பவர்கள் பலவகைப்பட்டிராநின்றனர். ஒருவன் ஒரு வீட்டுக்குமாத்திரம் ரக்ஷகனென்றிருப்பன்; ஒருவன் ஒரு க்ராமத்துக்காக ரக்ஷகனென்றிருப்பன்; ஒருவன் ஒரு நாட்டுக்காக ரக்ஷகனென்றிருப்பன்; ஒருவன் மூவுலகுக்கு ரக்ஷகனென்றிருப்பன்; ஒருவன் பதினாலுலகுக்கு ரக்ஷகனென்றிருப்பன். ஆகவிப்படிப்பட்ட அவரவர்கள் ரக்ஷகரென்னும்படி நிற்பது அந்த வ்யக்திகளில் எம்பெருமான் அந்தராத்மாவாய் நின்று நடத்துகையாலத்தனையேயன்றி, இவனுடைய அநுப்ரவேசமின்றி ஒருவராலும் ஒரு ரக்ஷணமும் பண்ணமுடியாது என்பது ஸகல சாஸ்த்ரங்களிலும் முறையிடப்பட்டுள்ளது.

"𑌨 𑌸𑌂𑌪𑌦𑌾𑌂 𑌸𑌮𑌾𑌹𑌾𑌰𑍇 𑌵𑌿𑌪𑌦𑌾𑌂 𑌵𑌿𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍇 । 𑌸𑌮𑌰𑍍𑌥𑌾

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஊருடைதெ கஸ்ரிக் தம்விநா வாருஷோத்தமம் = ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே - ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித் தம் விநா புருஷோத்தமம்." [ஸம்பத்துக்களைச் சேமித்துக்கொடுப்பதிலும் ஆபத்துக்களைத் தவிர்த்தொழிப்பதிலும் எப்பெருமானுக்கன்றி மற்றொருவற்கும் சக்தியில்லை] என்று சொல்லிற்று. இதனை இப்பாட்டில் அருளிச்செய்கிறார்.

உலகத்திலுள்ள சேதநர்கள் ஸாத்விகராகவும் ராஜஸராகவும் தாமஸராகவுமுள்ளார்கள்; சுத்த ஸாத்விகராயிருப்பவர்கள் 1, "உன்னித்து மற்றொரு தெய்வந்தொழாள் அவனையல்லால்" 2. "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்னுமாபோலே எம்பெருமானையன்றி மற்றொருதெய்வத்தையும் தொழாதவர்களாயும் ஒரு ப்ரயோஜனத்தையும் விரும்பாதவர்களாயுமிருப்பர்கள்; அன்னவர்களைப்பற்றி இங்குச் சொல்லவேண்டியதொன்றுமில்லை. மற்ற குணங்கட்கு வசப்பட்டவர்கள் ஆரோக்யம், ஐச்வரியம் ஸந்தாநம் முதலிய க்ஷுத்ரபலன்களை விரும்பினவர்களாய், அப்படிப்பட்ட பலன்களையும் நேர்கொடுநேரே எம்பெருமானிடத்துச் சென்று விரும்புதலின்றியே தாம் தாம் அபிமானித்திருக்கிற தெய்வங்கள் பக்கலிலே விரும்புமவர்களாயிருப்பர்கள்; அப்படிப்பட்டவர்களைக் குறிக்கிறார் அவரவர் என்று.

தமதமது அறிவு=ஒவ்வொரு சேதநருடையவும் ஞானம் ஒவ்வொருவிதமாயிருக்குமன்றோ. இங்கு ஞானமென்று ருசியைச் சொல்லுகிறது. தங்கள் தங்களுடைய ருசியினாலே யென்றபடி. ஒருவனுக்கு ஸ்வர்க்கபோகத்திலே ருசியுண்டாகும்; மற்றொருவனுக்கு இஹலோக போகங்களிலே ருசியுண்டாகும்; இன்னொருவனுக்கு இன்னொன்றிலே ருசியுண்டாகும்; ஆகவே அதிகாரிகள் பலவகைப்பட்டிருக்கிறாப்போலவே அவர்களுடைய ருசிகளும் பலவகைப்பட்டிருக்கும். தமதமது என்கிற இரட்டிப்பால் அந்த ருசி பேதங்கள் காட்டப்படுகின்றன. அப்படிப்பட்ட ருசிபேதங்களினால், அறி — அறியப்பட்ட, வகை வகை=சேதநர்கள் பலவகைப்பட்டிருக்கிறாப்போலவும் அவர்களுடைய ருசிகள் பலவகைப்பட்டிருக்கிறாப்போலவும் அவர்கள் கோலின பலன்களுக்காக அனுஷ்டிக்கும் ஸாதனங்களும் பலவகைப்பட்டிருக்குமே; 'வகைவகை' என்ற இரட்டிப்பால் அது சொல்லப்படுகிறது. சிலர் த்யானத்தினாலும், சிலர் யஜ்ஞங்களினாலும், சிலர் அர்ச்சனையினாலும், சிலர் நாம ஸங்கீர்த்தநங்களினாலும், சிலர் அபிஷேகத்தினாலும் ஆகவிப்படி வெவ்வேறுபட்ட வகைகளாலே தெய்வங்களை வழிபடுவர்களன்றோ; அந்த வகைகளெல்லாம் இங்குக் குறிக்கொள்ளத்தக்கன. அப்படிப்பட்ட உபாயங்களைக் கொண்டு,

அவரவர் இறையவரென அடியடைவர்கள் = முதலடியிலுள்ள 'அவரவர்' என்றது வழிபடுகின்ற சேதநர்களைச் சொல்லிற்று; இவ்வடியிலுள்ள 'அவரவர்' என்பது வழிபாடுசெய்யப்படுகிற பலபல தெய்வங்களைக் குறிக்கின்றது. இந்திரனென்றும் சந்திரனென்றும் சிவனென்றும் பிரமனென்றும் காளியென்றும் பகா

1. திருவாய்மொழி. 4 - 6 - 10. ௸ 2. 5 - 8 - 8.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ளியென்றும் ஐயனென்றும் அம்மனென்றும் இப்படி உரைக்கப்படுகின்ற நாம பேதங்களைத் திருவுள்ளம்பற்றி அவரவர் என்கிறார். இறையவரேன = 'இறையவர்' என்கிற வாசகம் ஸ்ரீமந்நாராயணனுக்கே அஸாதாரணமாயினும், பிரதிபத்திசெய்கிற சேதநர்களின் அபிமாநத்தையடியொற்றி [அவர்களது கருத்தாலே] இறையவர் என்கிறார்; ஒவ்வொருவர் ஒவ்வொரு தெய்வத்தை ஸ்வாமியாகக் கொள்வர் என்றவாறு.

அடியடைவர்கள் = இங்கே ஒரு விசேஷம் உற்றுநோக்கத்தக்கது; அதாவது — இப்படிப்பட்ட க்ஷுத்ர தெய்வபக்தர்களான க்ஷுத்ர சேதநர்கள் அந்தத் தெய்வங்களை வழிபடுகையாவது 'அடியடைகை' அன்று; 'ஆட்டை யறுத்துத்தா, கோழியையறுத்துத்தா' என்று பரஹிம்ஸைகளை வேண்டுகின்ற தெய்வங்களைப்பற்றுமவர்கள் † "கொல்வனமுதலா வல்லனமுயலும் இனையசெய்கை" என்கிறபடியே கொலைத்தொழில்களைச் செய்து வழிபடவேண்டுமே யல்லது ஸ்ரீமந்நாராயணனிடத்துப்போலே திருவடியடைதல் என்பது இல்லையே; அப்படியிருக்க, 'அடியடைவர்கள்' என்றது ஆழ்வார் தம்முடைய வாஸனையினாலேயென்க. தெய்வத்தை ஆச்ரயிப்பதென்றால் திருவடிகளிலே வணங்குகையென்றேயாய்த்து ப்ரபந்நர்களின் வ்யுத்பத்தி. "ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே" என்றும் 'வண்புகழ்நாரணன் திண்கழல் சேரே" என்றும் "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்" என்றும் இவ்வகைகளிலேயிறே இவர்களுடைய வாசகங்களிருப்பது. இப்படிப்பட்ட வாஸனையினாலே அடியடைவர்கள் என்றே பரவசமாய் ஆழ்வார் திருவாக்கில் வந்துவிட்டதென்க.

"அடியடைவர்களென்று ஸௌஹார்த்தவாஸனையாலே அருளிச்செய்கிறார்." என்பது இருபத்திநாலாயிர ஸ்ரீஸூக்தி. "அவ்வவ தேவதைகள் தாம் க்ஷுத்ராயுத தேவதைகளாய் 'ப்ரஜையை அறுத்துத்தா, ஆட்டையறுத்துத்தா' என்றுநிற்கச் செய்தேயும், ஆச்ரயணமாவது அவற்றின் காலிலே குனியுமதுக்கு அவ்வருகில்லையென்றிருக்கிறாரிவர் ஸௌஹார்த்தவாஸனையாலே; ஓர் அஞ்ஜலி ஸாத்யவஸ்துவோடேயிறே தமக்கு வாஸனை." என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

"தொழுது மாமலர்நீர்சுடர் தூபங்கொண்டு, எழுதுமென்னுமிது மிகை" என்கிற்படியே தொழுதுஎழுவதுதானும் மிகையாம்படியான பகவத்விஷயத்திலே வாஸனைபண்ணிப்போருகின்ற ஆழ்வார் திருவாக்கில் அடியடைவர்கள் என்கிற வாசகமேயாய்த்து வரக்கூடியது.

அவரவரிறையவர்குறைவிலர்=அவரவர்களுடைய இறையவர் என்றாவது, அவரவர்களாகிய இறையவர் [அதாவது, அந்தந்த இறையவர்] என்றாவது உரைக்கலாம். முதற்பொருளில், ஆச்ரயிப்பவர்களான அந்தந்த சேதநர்களினால் போற்றப்பட்ட தெய்வங்கள் என்றபடி. இரண்டாவது பொருளில் ஸ்பஷ்டம். குறைவிலர்=தம்மை அடுத்தவர்கட்கு வேண்டிய பலன்களையளிப்பதில் தகுதியுடையார் என்றபடி. ஆனால், அத் தெய்வங்கள் தாமாகவே பல

† திருவாசிரியம்—6.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



னளிப்பதில்லை; எம்பெருமான் தங்களிடத்தில் அநுப்ரவேசித்திருப்பதனால் தான் தாங்கள் பலனளிக்கத் திறமைபெறுகிறார்களென்கிறார் வாக்ய சேஷத்தினால். [அவரவர் விதிவழியடைய இறையவர் நின்றனர்] என்று அந்வயிப்பது. இங்கே 'இறையவர்' என்றது பெய்யே இறைவனான ஸ்ரீமந்நாராயணனையென்க, ''பதிம் விஶ்வஸ்ய'' என்ற உபநிஷத்தில் ஓதியபடியே எல்லார்க்கும் நிருபாதிகனான இறையவன் ஸ்ரீமந்நாராயணனேயாவன். தேவதாந்தரங்களைத் தொழுகின்ற சேதநர்களோடு, அந்தத் தேவதாந்தரங்களோடு, ஆழ்வாரோடு வாசியற எல்லார்க்கும் இறைவனாகையாலே பொதுவிலே இறையவர் என்கிறார். இப்படிப்பட்ட எம்பெருமான் [அவரவர்விதிவழியடையநின்றனர்] ஆச்ரயிப்பவர்கள் விதிப்படியே ஆச்ராயிக்கவும் ஆச்ரயிக்கப்படுகிறவர்கள் அவர்கட்குப் பலனளிக்கவல்லராம்படியாகவும் அந்தந்த தேவதைகள் பக்கலிலே அந்தராத்மாவாக நிற்கின்றானென்றபடி. ''ஸ ஸூதா; ஸம்மாநந்நா தெவதாஃ'' என்று வேதயோதினபடியே இதர தேவதைகள்யாவும் எம்பெருமானுக்கு சரீரபூதர்களாய் எம்பெருமான் சரீரியாய் நிற்கிறானாகையாலே சரீரியான பெருமானே சரீரத்வாரா காரியஞ்செய்கிறானென்றதாயிற்று.

ஈடு முப்பத்தாறாயிரப்படியில் இங்கே ''ஐயன்பாழியிலானை போர்க்கு உரித்தாமன்றாயிற்று அவ்வோ தேவதாமாத்ரங்களுக்கு ஸமுஹநா நமக்தியுள்ளது'' என்று ஸ்ரீஸூக்தியுள்ளது; இதன் கருத்தாவது — பிடாரிகோவில்களின் வாசலில் குயவன்செய்த பெரிய பெரிய யானை குதிரைகள் நிறுத்தப்பட்டிருக்கும். ஆனால் அவை போர்செய்யமாட்டா; ஒழுங்காக அங்கு நிற்குமத்தனையேயன்றி ஒரு காரியமும் செய்யமுடியா; அதுபோலவே தேவதாந்தரங்களும் என்றபடி. [ஐயன் பாழி=சாஸ்தா என்கிற தெய்வத்தின் கோவில் என்க. ஆனை=யானை குதிரை முதலானவை. போர்க்கு உரித்தாமன்று=யுத்தஞ் செய்ய உபயோகப்படுமேயானால் என்றவாறு.]

ஆக இப்பாட்டால் சொல்லிற்றாயிற்று என்னென்னில்; உலகத்தில் நடக்கிற ரக்ஷணத்தொழில் யாவும் எம்பெருமானுடையதே. அக்நி, இந்திரன், சிவன், பிரமன் முதலிய இதர தெய்வங்களைக்குறித்து அவரவர்கள் வழிபாடுகள் செய்து தாம்தாம் கோலின பலன்களைப் பெறுவதாகக் கண்டாலும் அதுவும் எம்பெருமான்றானே அத்தெய்வங்களுக்கு உள்ளீடாக இருந்து நடத்துகிற ரக்ஷணமேயன்றி அத் தெய்வங்களே ஸ்வதந்திரமாகச் செய்துவிடுகிற ரக்ஷணமன்று என்றதாயிற்று. பகவத்கீதையில் ஏழாவது அத்யாயத்தில் ''காமைஸ் தைஸ் தைர் ஹ்ருதஜ்ஞாநாஃ ப்ரபத்யந்தே ந்ய தெவதாஃ'' என்று தொடங்கி ''லபதெ ச ததஃ காமாந் மயைவ விஹிதாந் ஹிதாந்'' என்றளவாகவுள்ள ச்லோகங்கள் இப் பாசுரத்திற்குப் பொருத்தமாக அநுஸந்திக்க வுரியன. ... ... ... ... ... ... .... (ரு)



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நின்றனரிருந்தனர் கிடந்தனர்திரிந்தனர் *
நின்றிலரிருந்திலர் கிடந்திலர்திரிந்திலர் *
என்றுமோரியல்வினர் எனநினைவரியவர் *
என்றுமோரியல்வொடு நின்றவெந்திடரே. * (சு)

நின்றனர் — நிற்பவர்கள்
இருந்தனர் — இருப்பவர்கள்
கிடந்தனர் — கிடப்பவர்கள்
திரிந்தனர் — திரிபவர்கள் (ஆகஇப்படிப் பட்டவர்களினுடைய நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதலாகிற ப்ரவ்ருத்திகளெல்லாம் அப் பெருமானுடைய அதீநமே:)
நின்றிலர் — நில்லாதவர்கள்
இருந்திலர் — இராதவர்கள்
கிடந்திலர் — கிடவாதவர்கள்
திரிந்திலர் — திரியாதவர்கள் (ஆக இப்படிப்பட்டவர்களினுடைய நில்லாமை இராமை கிடவாமை திரியாமையாகிற நிவ்ருத்திகளெல்லாமும் அப்பெருமானுடைய அதீநமே:)
என்றும் — எப்போதும்
ஓர் இயல்வினர் என நினைவு அரிய — ஒரேவிதமான இயற்கையையுடையவரென்று நினைக்க முடியாதவரும் (அவரே.)
(அவர்தாம் யாவரென்னில்;)
என்றும் — எப்போதும்
ஓர் இயல்வொடு நின்ற — ஒரேவிதமான இயற்கையோடு கூடியிருக்கின்றவராய்
எம் திடர் — திடமான ப்ரமாணத்தினால் ஸித்தரான நம்முடையவர்.

* * * — லீலாவிபூதியின் ஸ்வரூபமும் ரக்ஷணமும் எம்பெருமானுடைய அதீநமென்பது கீழிரண்டு பாசுரங்களில் அருளிச்செய்யப்பட்டது; அதனுடைய ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் அவனுடைய அதீநமே யென்கிறது இப்பாட்டில். இதில் முதலடியில் ப்ரவ்ருத்திகளைச் சொல்லுகிறது; இரண்டாமடியில் நிவ்ருத்திகளைச் சொல்லுகிறது.

நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர் = நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் என்கிற காரியங்களைச் செய்கின்ற புருஷர்களைச்சொல்லுகிற சொற்கள் இவையாயினும் புருஷர்கள்வரையில் விவக்ஷிக்கவேண்டிய அவசியம் இங்கு இல்லை: கீழ் நாலாம்பாட்டிலேயே உலகத்திலுள்ள ஸகல வ்யக்திகளினுடையவும் ஸ்வரூபம் எம்பெருமானுடைய அதீநம் என்பது சொல்லப்பட்டுவிட்டபடியால் அதனையே மீண்டுஞ் சொல்லுவதாகக் கொள்ளில் பயனில்லை; அபூர்வமான பொருளே இங்குக்கூறப்பட்டதாகவேண்டும். ஆகவே, நின்றனர் இத்யாதிக்கு— நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் என்கிற தொழில்கள் மாத்திரமே இங்குப் பொருளாக அமையும். இங்ஙனமே இரண்டாமடியிலும் நின்றிலர் இத்யாதிக்கு- நில்லாமை இராமை கிடவாமை திரியாமை என்பவைகளை பொருளாகப் பொருந்தும். மூலத்தில் புஜீவாவகஸூவும் இருக்கச் செய்தேயும் தர்மியை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



விட்டு தர்மத்தை மாத்திரம் பொருள்கொள்ளுமிது ஸம்ஸ்க்ருத சாஸ்திர மரி யாதைக்கு மிகவுமிணங்கினதேயாகும்: எங்ஙனே யென்னில்;—

"அருணயா பிங்காக்ஷ்யா க்ரீணாதி" என்று வேதத்திலுள்ளது. யஜ்ஞத்திற்காக ஸோமம் ஸம்பாதிக்க வேண்டுமென்றும் அதனை விலைகொடுத்து வாங்கவேணுமேயன்றி வேறுவகையால் ஸம்பாதிக்கலாகாதென்றும் சொல்லி வருகிற பிரகரணத்திலே * அருணயா பிங்காக்ஷ்யா க்ரீணாதி என்கிற வாக்கியம் [யஜுர்வேதம் - ஆறுவது காண்டம் - முதல் ப்ரச்நம் 45-ஆவது பஞ்சாதி.] உள்ளது. சிவந்ததாயும் பொன்வர்ணமான கண்களையுடையதாயு மிருக்கின்ற பசுவை விலையாகக்கொடுத்து ஸோமம் வாங்கவேண்டியது என்பது இதன் பொருள். இவ்விடத்தில், இரண்டு விசேஷணங்களோடுகூடின விசேஷ்ய மான பசுவாகிற வ்யக்தி மூலத்தில் சொல்லப்பட்டிருந்தாலும் அதில் நோக் கில்லை; பசுவைக்கொண்டுதான் ஸோமம் வாங்கவேண்டுமென்பது ஏற்கனவே கீழ்வாக்கியங்களிலும் இதர விதிவாக்கியங்களிலும் ஸித்தித்துவிட்டபடியால் இங்கே விசேஷ்யமான அம்சத்தில்நோக்கு இன்றியே விசேஷணமான அம்சத் தில் மாத்திரமே நோக்கு என்று கொள்ளவேணும்; இப்படியே சாஸ்திரஜ்ஞர் கள் கொண்டிருக்கிறார்கள். அதாவது, 'சிவப்பு நிறமுடைய பசு' என்கிறவரை யில் இங்கு விதேயமல்ல; சிவப்பு நிறம் என்பதுமாத்திரமே இங்கு விதேயம் என்று கொண்டார்கள்.

மற்றொரிடமும் காண்மின்;— "லோஹிதோஷ்ணீஷா ருத்விஜ: ப்ரசரந்தி" என்பதாக ஓதப்பட்டுள்ளது; அபிசார கருமத்தில் ருத்விக்குக்கள் சிவந்த தலைப்பாகையுடையவர்களா யிருத்தல் வேண்டுமென்று சொல்லிற்று. தலைப்பாகையோடுகூடி யிருக்கவேண்டுமென்பது ஏற்கனவே வேறு பிரமாணத் தினால் கிடைத்திருப்பதால் சிவப்பு மாத்திரமே இங்கு விதிவிஷயம் என்று கொண்டார்கள். ஆக இப்படிப்பட்ட வழியாகவே இப் பாசுரத்திலும் விசேஷ் யாம்சத்தைத் தவிர்த்து விசேஷணாம்சத்தில் மாத்திரமே [அதாவது நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல்: நில்லாமை இராமை கிடவாமை திரியாமை என் கிற ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி அம்சங்களில் மாத்திரமே] நோக்காகக் கொள்வது ஆவச்யகமும் பொருத்தமுடையதுமாம்.

நின்றனர் இத்யாதிக்கு நிற்றல் முதலியவற்றைப் பொருளாகக்கொண்டா லும் அந்த நிற்றல் முதலியவை எம்பெருமானுடைய ஸங்கல்பாதீந மென்பது மூலத்தில் சொல்லிற்றில்லையே யென்னில்; நன்கு சொல்லிற்று: எங்ஙனேயென் னில்; "நின்றனர் (முதலிய யாவரும்) எம் திடர்". என்று மூலத்திலுள்ளதன்றோ? திடர் என்றது - திடமான பிரமாணமாகிய வேதத்தினால் ஸித்திக்கும் எம்பெரு மான் என்றபடி. 'நின்றனர் முதலான யாவரும் எம்பெருமான்' என்று ஸாமா நாதிகரண்யத்தாற் சொல்லுகிறவிதற்குக் கருத்து 'எம்பெருமானுக்கு அதீநம்' என்று சொல்லுமதுவேயாம்.

இங்கே ஒரு சங்கை;—ப்ரவ்ருத்திரூபமான காரியங்களெல்லாம் எம்பெரு மானுடைய ஸங்கல்பாதீநம் என்பதில் தட்டில்லை; நிவ்ருத்தியும் அவனுடைய

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அதீநம் என்று ஏதுக்கு இசையவேண்டும்? ஒரு வியாபாரமுமற்றிருக்கையாகிற நிவ்ருத்தி ஸ்வயமாகவே யுள்ளதன்றோ? உயர விசி யெறியப்படுங் கல்லானது தன்னடையே கீழே விழாநின்றால் அந்த நிவ்ருத்தியும் பகவத் ஸங்கல்பாதீந மென்று கொள்ளவேணுமோ? என்று. இந்த சங்கைக்கு எம்பார் அருளிச் செய்த ஸமாதானமாவது;— "ஸ்வர்க்கத்தில் நின்றும் விழுகிற த்ரிசங்குவை ஸக்திமாக் நிற்கச்சொல்ல நிற்கவேண்டிற்றுக் கண்டாயே; அப்படியே நிவ்ருத் திக்கும் அவன் வேணுங்காண்" என்றருளிச்செய்தாராம். இதனை விரித்துரைப் போமிங்கு;—

த்ரிசங்கு என்னும் ஸூர்யவம்ஸத்து மன்னவன் தனது குலகுருவாகிய வஸிஷ்டமஹாமுநியை வரவழைத்து 'இந்த வுடலோடு யான் ஸ்வர்க்கலோகம் செல்லுமாறு அருள்புரியவேணும்' என்று வேண்ட, வசிட்டன் அங்ஙனஞ் செல்லுதல் இயலாதென்று மறுத்துக்கூற, த்ரிசங்கு குருபுத்திரர்களைச் சார்ந்து வஸிஷ்டர் நிராகரித்ததைச் சொல்லித் தன் கருத்தை நிறைவேற்றுவிக்குமாறு வேண்ட, அவர்களும் கடிந்துகூற, த்ரிசங்கு 'என் குருவும் எனது குரு புத்தி ரர்களாகிய நீங்களும் என்கருத்தை முற்றுவிக்க முடியாதென்று நிராகரித்தத னால் என் கருத்தை நிறைவேற்றுவிக்கவல்ல வேறொருகுருவைத்தேடிக்கொள்ளு கிறேன்' என்ன, அந்த வஸிஷ்ட குமாரர்கள் நூற்றுவரும் அரசனை நோக்கி 'மதிகேடனே! நீ குலகுருவைவிட்டு வேறொரு புரோஹிதரை யடுக்குமாறு நினைத்தாயாதலால் சண்டாளனாகக்கடவாய்' என்று சபித்துவிட்டுப்போக, த்ரிசங்குராஜன் முன்னைய வடிவம்நீங்கிச் சண்டாள வடிவத்துடனே அயோத்தி சேர, நகரத்தவர் சீசீ யென்று இகழ்ந்ததனால் நகரத்தைவிட்டுக் காடு சேர்ந்து வஸிஷ்டருக்கு விரோதியான விச்வாமித்ரமுநியை நாடி யடைய, அவரும் 'இவ் வுடலோடு சுவர்க்கஞ் சேருமாறு வேட்பிப்பேன்' என்று சொல்லி அந்த யாகத் திற்கு முனிவர்களை வரவழைக்கக்கருத, விச்வாமித்ரனுடைய சிஷ்யர்கள் பல விடங்கட்குஞ் சென்று வேள்விக்கு அந்தணர்களையழைக்க, அந்தணர் யாவரும் வர, 'தான் யாகஞ் செய்தலே யொழியச் செய்விக்கும் உரிமை யில்லாதவனான க்ஷத்ரியன் [விச்வாமித்திரன்] சண்டாளனுக்கு யாகஞ் செய்விக்கிறது மிக நன்று; இந்த வேள்வியில் எங்ஙனம் தேவர்கள் ஹவிர்ப்பாகம் பெறுவார்கள்? சண்டாளனது அன்னத்தை எங்ஙனம் புஜிப்பார்கள்?' என்றாற்போலச் சொல்லி மஹோதயனென்ற முனிவனும் வஸிஷ்ட குமாரர்கள் நூற்றுவரும் வரமாட் டோமென்ன, அதனை அச் சீடர்கள் விச்வாமித்திரனிடம் வந்து சொல்ல, பெருஞ்சினங்கொண்ட அம்முனிவன் 'மஹாநுபாவர்களின் தேஜோவிசேஷத் தினால் எத்தொழிற்கும் எவ்வகைத் தீங்கும் உண்டாகாது' என்ற நியாயத்தை மறந்து என்னை இகழ்ந்ததனால் வஸிஷ்ட குமாரர்கள் முஷ்டிகரென்னும் ஈன சாதியராகி உலகத்தில் வெகுகாலம் உழலுமாறும், மஹோதயன் வேடனாகி யுழலுமாறும் சாபங்கொடுத்துவிட்டுத் தான் அத்வர்யுவாக நின்று யாகஞ்செய்யத் தொடங்கி ஹவிஸ்ஸைப் பெறுமாறு தேவர்களை மந்திரஞ் சொல்லி வெகுநேர மாக அழைத்தும் ஹவிர்ப்பாகத்தைப் பெறுமாறு தேவர்கள் வாராமையால்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



முனிவன் பெருஞ்சினங்கொண்டு ஹோமஞ் செய்யும் அகப்பையை உயரவெடுத்து 'யாகம் இருக்கட்டும்; என் தவத்தின் பயனால் இச் சரீரத்துடனே சுவர்க்கஞ் செல்லுக' என்ன முனிவர் யாவரும் பார்த்துக்கொண்டிருக்கையில் த்ரிசங்கு சுவர்க்கஞ் சேர, தேவர்களும் இந்திரனும் 'குரு சாபத்தினால் நீசனான நீ இங்கு இருக்கத் தக்கவனல்லை, தலைகீழாக விழுந்திடுக' என்ன, த்ரிசங்கு விழுகையில் கதற, அது கேட்ட விச்வாமித்திரன் 'அங்குத் தானே நில்' என்று சொல்லித் தவமகிமையால் அவனை வானத்திலே தான் கண்ட இடத்தில் தானே நிறுத்தினன் என்பது வரலாறு. இதில், மேலிருந்து கீழே விழுகின்ற த்ரிசங்குவுக்கு அந்த வீழ்ச்சிக்கும் ஒரு தடை ஏற்பட்டது பகவத் ஸங்கல்பத்தாலன்றோ? ஆகவே ப்ரவ்ருத்தியோடு நிவ்ருத்தியோடு வாசியற எல்லாம் பகவத் ஸங்கல்பாதீன மென்பதில் பொருந்தாமையொன்றுமில்லை யென்க;

என்றும் ஓரியல்வினரேனநினைவரியவர்=எம்பெருமானுடைய படிகள் பல பலவாகையாலே எத்தனைநாள் ஆராய்ந்தாலும் இன்னபடிப்பட்ட ஸ்வபாவத்தையுடையவனென்று நெஞ்சால் நினைக்கவுங்கூட முடியாதவனெம்பெருமான். "என்று மோரியல்வினரென நினைவரியவர்" என்று சொல்லிவைத்து உடனே "என்று மோரியல்வொடுநின்ற" என்றுரைத்தது பொருந்துமோ எனின்; கேண்மின்; * என்று மோரியல்வினரென நினைவரியவர் என்று சொல்லப்பட்ட இயல்வு என்றைக்கும் ஒருபடிப்பட்டிருக்கு மென்பதே ஈற்றடியின் கருத்தாம்.

திடர் = 'த்ரு஢' என்னும் வடசொல் திடமெனத் திரியும். த்ருடமான வேதப்ரமாணத்தினால் ஸித்திப்பவர் என்றபடி. எம்பெருமான் அப்படி ஸித்திப்பது வைதிகோத்தமராகிய தமக்குப் பரமலாபம் என்பது தோன்ற "எம் திடர்" என்கிறார். ... .... .... ... ... .... .... (சு)

திடவிசும்பெரிவளிநீர்நிலமிவைமிசை *
படர்பொருள்முழுவதுமாய் அவையவைதோறும் *
உடன்மிசையுயிரெனக்கரந்தெங்கும்பரந்துளன் *
சுடர்மிகுசுருதியுள் இவையுண்டசுரனே. * (எ)

| | | | |
|---|---|---|---|
| திடம் | உறுதியான | அவை அவை தொறும் | அந்தந்த பதார்த்தங்களெல்லாவற்றிலும் |
| விசும்பு | ஆகாசமென்ன | உடல் மிசை உயிர் என | சரீரத்தில் ஆத்மா வியாபிப்பதுபோல |
| எரி | அக்நியென்ன | கரந்து | மறைந்து |
| வளி | வாயுவென்ன | எங்கும் பரந்து | உள்ளிலும் வெளியிலும் வியாபித்து, |
| நீர் | ஜலமென்ன | சுடர்மிகு சுருதியுள் உளன் | தேசுபொலிந்த வேதத்தில் உள்ளவனான எம்பெருமான் |
| நிலம் | பூமியென்ன | இவை உண்ட சுரன் | (ஸம்ஹாரகாலத்தில்) இவற்றையெல்லாம் தன் பக்கலிலேயாக்கிக் கொள்ளும் தேவனானவன். |
| இவைமிசை | ஆகிய இவற்றை ஆதாரமாகக்கொண்டு | | |
| படர் பொருள் முழுவதும் ஆய் | படர்ந்த பதார்த்தங்கள் யாவும் தானாம்படி அவற்றுக்கு உபாதானமாய் [-அவற்றை யுண்டாக்கி] | | |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — கீழ்ப்பாசுரங்களில் எல்லாப் பொருள்கட்கும் எம்பெருமானே நியாமகன் என்று [வ்யதிகரண நிர்தேசமாகச்] சொல்லவேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாமல் 'எல்லாம் எம்பெருமானே' என்று [ஸமாநாதிகரண மாகச்] சொல்லியிருப்பதால் அத்வைதாபிப்ராயம்போல் தோன்றக்கூடுமென்னே? உண்மையில் அப்படியில்லை. ஸகல சேதநாசேதநங்களும் சரீரமாய் எம்பெருமான் [ஸகலதத்வசரீரகனாய்] சரீரியாய் நிற்றலால் இப்படிப்பட்ட சரீர சரீரிபாவ ஸம்பந்தத்தைப்பற்றவே ஐக்கியம் சொல்லப்பட்டதென்று நிரூபிக்கிறது இப்பாசுரம். விசிஷ்டாத்வைதக் கோட்பாட்டை இப் பாட்டு ஸாரமாக எடுத்துரைக்கின்றது என்றுணர்க.

திடவிசும்பு என்று தொடங்கி முழுவதுமாய் என்னுமளவும் — பஞ்சபூதமடியாகவுண்டாகின்ற ஸகல பதார்த்தங்களுக்கும் எம்பெருமானே உபாதாந காரணம் என்று சொல்லுகிறது. ஆகாசம் அக்நி வாயு ஜலம் பூமி என்கிற ஐந்து பூதங்களின் காரியப்பொருளாக விரிகின்ற தேவமநுஷ்யாதி ஸகல பதார்த்தங்களையும் உண்டாக்கி என்றபடி. முதலிலுள்ள திடம் என்னும் அடைமொழி ஆகாசமொன்றில் மாத்திரம் அந்வயிப்பதாகவுமாம்; மேலுள்ள நிலமீறான பூதங்களிலும் அந்வயிப்பதாகவுமாம். காரியங்கள் அழிந்துபோனாலும் காரணங்களான பூதங்கள் சிறிது காலமளவும் அழியாதிருத்தல்பற்றித் திடமென்று பூதங்களை விசேஷிப்பதாகக் கொள்க, இது ஆகாசத்திற்கு மாத்திரம் விசேடணமென்று கொள்ளில், * தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூத: என்கிற உபநிஷத்தின்படியே ஆகாசமானது மற்றுள்ள பூதங்களுக்கு முன்னே யுண்டாகி அவை யழிந்தாலும் சிலநாள் நிற்கக் கடவதாகையாலே திடமென்றதென்க. அன்றியும், லோகாயதிகன் முதலான சிலர் 'ஆகாசந்தவிர நான்கே பூதங்கள்' என்று கொள்ளுகிறபடியால் அக் கொள்கையைக்கண்டித்து ஆகாசம் திடமாகவுண்டென்று காட்டுகிறபடியுமாம்.

முழுவதுமாகி என்னாதே ஆய் என்றது— * ஸ ஏவ ஸ்ருஷ்டி: ப்ரஜா யேய என்கிற உபநிஷத்தின் சாயையை அடியொற்றி யென்ப.

அவையவைதோறும் உடன்மிசை உயிரெனக்கரந்து எங்கும் பரந்துளன் = உண்டான ஒவ்வொரு பொருளிலும் சரீரத்தில் ஆத்மா உறையுமாபோலே மறைந்திருந்து எல்லாவற்றிலும் தனித்தனியே குறைவற வியாபித்திருக்குமெம்பெருமான். [உடன்மிசை உயிரென] நம்முடைய சரீரத்துக்கு ஆத்மா தாரகனும் நியாமகனும் சேஷியுமாயிருப்பதுபோல அந்த சரீராத்மாக்களுக்கு எம்பெருமான்தான் தாரகனும் நியாமகனும் சேஷியுமாயிருக்குமென்றபடி. கரந்து என்றது ஒருவர்க்குந் தெரியாமல் என்றபடி. எங்கும் பரந்து என்றது உள்ளும் புறமும் வியாபித்து என்றபடி.

ஆழ்வார் தாம் இப்படி நிஷ்கர்ஷித்து அருளிச்செய்கிற விஷயத்திற்கு மூலப்ரமாணம் வேதமே யென்று காட்டுகிறார் உளன் சுடர் மிகு சுருதியுள் என்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ச்ருதி என்னும் வடசொல் சுருதி யெனத் திரிந்தது. சுடர்மிகு என்று விசேஷணமிட்டதனால், வேதம் அபௌருஷேயமாயும் நித்யமாயும் நிர்த்தோஷமாயுமுள்ளதென்கிற சிறப்பு தெரிவிக்கப்பட்டதாகும். இத்தகைய சிறப்பை இங்குச் சிறிது விவரிப்போம்.

ப்ரத்யக்ஷம் அநுமாநம் சப்தம் என ப்ரமாணங்கள் மூன்று. அவற்றுள் சப்தம் இரண்டுவிதம் - லௌகிக சப்தமென்றும் வைதிக சப்தமென்றும். லௌகிக சப்தமென்றால் புதிதுபுதிதாய் அஸ்மதாதிகளால் சொல்லப்படும் சப்தம். வைதிக சப்தங்களை வேதமெனப்படும். வேதமாவது - எப்பொழுதும் ஒரேவிதமாய் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டு உச்சரிக்கப்படும் சப்தங்களின் கூட்டம், இவ் வேதமானது ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் ஈச்வரனால் நான்முகனுக்கு உபதேசிக்கப்பட்டு அவனால் தனது சிஷ்யர்களுக்கு உபதேசிக்கப்பட்டு சிஷ்ய ப்ரசிஷ்ய பரம்பரையாய் நமக்குக் கிடைத்திருக்கின்றது. இது ப்ரத்யக்ஷத்தாலும் அநுமாநத்தாலும் அறிய முடியாத பொருள்களை அறிவிப்பதனால் வேதம் என்று காரணப்பெயர் பெற்றது. இது ஏட்டில் எழுதப்படாமல் ச்ரவண பரம்பரையாகவே அதிகரிக்கப்பட்டு வருவதால் ச்ருதி என்றும் பெயர்பெற்றது.

இது அபௌருஷேயமெனப்படும். அபௌருஷேயமென்றால் புருஷனால் செய்யப்படாததென்று பொருள். கண்டம், தாலு, பல், உதடு முதலிய முகத்திலுள்ள உறுப்புகளினின்று வெளியாகும் ஒலியே சப்தமாதலால் அப்படிப்பட்ட சப்தங்களின் கூட்டமே வேதமாகையினால் ஒவ்வொரு சப்தமும் புருஷனால் செய்யப்பட்டுத்தான் வெளியாகின்றமைபோல் வேதமாகிற சப்தராசிகளும் புருஷனால் உண்டாக்கப்பட்டுப் பௌருஷேயமாகத்தானே யிருக்கவேண்டும்; அபௌருஷேயமென்று எங்ஙனே சொல்லலாம்? என்றொரு சங்கை உதிக்கலாம். இதற்கு ஸமாதானம் கூறுமுன் பௌருஷேயமும் அபௌருஷேயமுமான இரண்டு த்ருஷ்டாந்தங்களை யெடுத்துக்கொண்டு விமர்சிப்போம்; காளிதாஸரால் இயற்றப்பட்ட * 𑌵𑌾𑌗𑌰𑍍𑌥𑌾𑌵𑌿𑌵 𑌸𑌂𑌪𑍃𑌕𑍍𑌤𑍌 — வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ. என்கிற ச்லோகத்தை எடுத்துக்கொள்வோம். அதுபோல் யஜுர்வேதத்திலுள்ள * 𑌇𑌷𑍇 𑌤𑍍𑌵𑍋𑌰𑍍𑌜𑍇 𑌤𑍍𑌵𑌾 * என்கிற ஒரு மந்திரத்தையும் எடுத்துக்கொள்வோம்; இவ்விரண்டுக்குமுள்ள வாசி என்ன வென்பதை ஆராய்வோம். * வாகர்த்தாவிவ * என்கிற ச்லோகத்தில் வாக் அர்த்தௌ இவ ஸம்ப்ருக்தௌ என்கிற பதங்கள் வரிசையாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இப் பதங்கள் காளிதாஸரால் புதிதாக உண்டாக்கப்பட்டவைகளல்ல என்பது அனைவருமறிந்ததே. ஆனால் காளிதாஸர் செய்ததென்ன? தான் வெளிப்படுத்த உத்தேசித்த அர்த்தங்களை வெளிப்படுத்துவதற்கு வேண்டியபடி பதங்களை முன்பின்னாகச் சேர்த்துப் பிணைத்ததே காளிதாஸர்செய்த காரியம். இதைக்கொண்டே நாம் ரகுவம்ச காவியம் காளிதாஸர் இயற்றியது, மற்றொன்று மற்றொருவர் இயற்றியது என்கிறோம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இதுபோல் * ஐஷெத்வொஜெ-ஜ்வா * என்கிற மந்திரத்திலுள்ள இஷே த்வா ஊர்ஜே த்வா என்கிற பதங்களை இப்பொழுது காணப்படும் வரிசைக்கிரமமாகச் சேர்த்தது யார்? அப்படி சேர்த்துப் பிணைத்தவர் யாராவது இருப்பரேயானால் அவரே வேதங்களைச் செய்தவர் எனத்தகும்; ஆனால் அப்படிப்பட்டவர் ஒருவருமில்லையெனச் சொல்லவேண்டியிருக்கிறது: ஏனென்றால், வேதத்தைச் செய்தவர் யாரேனுமிருப்பரேயானால், பாரதம் ராமாயணம் முதலிய க்ரந்தங்களைச் செய்த வியாஸர் வால்மீகி முதலியவர்களின் பெயர்களைப் பாம்பரையாக நாம் எப்படிச் சொல்லுகிறோமோ அப்படியே வேதகர்த்தாவின் பெயரையும் சொல்லிவந்திருக்கவேணும்: வேதகர்த்தாவின் பெயரை நாம் நம் முன்னோர்களின் எந்த நூலிலும் காண்கின்றிலோம்; கர்ணபரம்பரையாகவும் கேள்விப்படுகின்றிலோம். ஸாதாரணமான சிறு சிறு நூல்களின் கர்த்தாக்களினது பெயர்களை நாம் பரம்பரையாகத் தெரிந்துகொண்டிருக்கும்போது மிகவும் பெரிய முக்கியமான வேதத்தின் கர்த்தாவின் பெயரை நாம் கேட்கவும் பெறுமலிருப்பதால் உண்மையில் வேதகர்த்தா ஒருவருமில்லையெனவே நிச்சயிக்கக் கூடியது. இதுவே காளிதாஸருடைய நூலுக்கும் வேதத்திற்கு முண்டான வாசி. காளிதாஸர் * வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ * என்றுதியாகவுள்ள ச்லோகங்களிலுள்ள பதங்களை வரிசைக்கிரமமாக அமைத்து முதல் முதலாகச் சொன்னார்: பிறகு அதையொட்டி அதேவரிசைக்கிரமத்தில் பின்னுள்ளோரும் சொல்லி வருகிறார்கள். ஆனாலும் முதலில் பதங்களின் வரிசைக்கிரமத்தை யமைத்தவர் காளிதாஸராகையால் அவரே ரகுவம்ச காவியத்திற்குக் கர்த்தாவாகச் சொல்லப்படுகிறார். வேதத்தை நாமெல்லோரும் ஓதுகின்றோமானாலும் காளிதாஸர் போல் வேதத்திலுள்ள பதங்களின் வரிசைக்கிரமத்தை அமைத்தவர் ஒருவருமில்லையாகையால் வேதகர்த்தா ஒருவருமில்லையெனக்கொள்ளத் தட்டில்லை.

வேதம் நித்யம்;—நித்ய வஸ்துக்கள் இரண்டுவகை; ஸ்வரூப நித்யமென்றும் ப்ரவாஹ நித்யமென்றும். எந்த வஸ்துக்கள் முக்காலங்களிலும் ஒரே தன்மையையுடையனவாய்க்கொண்டு எப்பொழுதும் அழிவில்லாமலிருக்கின்றனவோ அவை ஸ்வரூப நித்யமெனப்படும். மூலப்ரக்ருதியும் ஜீவாத்மாக்களும் பரமாத்மாவும் ஸ்வரூப நித்யமாம். இம் மூவகைப் பொருள்களின் ஸ்வரூபமும் எப்பொழுதும் ஒரே தன்மையையுடைத்தாய் என்று மழியாமலிருக்கின்றது. எம்பெருமான் எந்த அவதாரமெடுத்தாலும் அவனது ஸ்வரூபத்தில் எவ்விதமான மாறுதலும் ஏற்படுவதில்லை. ஜீவாத்மாக்கள் கர்மாநுகுணமாகப் பல சரீரங்களெடுத்தாலும் ஸ்வரூபத்தில் எவ்வகைத்தான மாறுதலு முண்டாவதில்லை. மாறுதலாவது விகாரம்; இஃது இரண்டுவிதம் — ஸ்வரூபத்தைப்பற்றியதும் ஸ்வபாவத்தைப்பற்றியதும். ஈச்வரனுக்கு இவ்விரண்டுவித விகாரங்களுமில்லையா. ஜீவாத்மாவுக்கு ஸ்வரூப விகாரமில்லையெனினும் ஸ்வபாவ விகாரம் மாத்திரமுண்டு, பத்தன் என்றும் முமுக்ஷு என்றும் முக்தன் என்றும இங்ஙனே ஸ்வபாவம் மாறுகின்றதன்றோ. மூலப்ரக்ருதியின் ஸ்வரூபம் எப்போதும் விகாராஸ்பதமாகவே யிருந்தாலும் அது என்றுமழியாத நித்யவஸ்துவென்று ச்ருதி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்மிருதிகளிற் சொல்லப்பட்டிருப்பதால் மூலப்ரக்ருதியும் ஸ்வரூப நித்யமே யாம். ஆகவே இம் மூவகைப்பட்ட பொருள்களும் ஸ்வரூப நித்யங்களாம். இனி, பானை துணி முதலிய பொருள்கள் ப்ரவாஹநித்யங்க ளெனப்படும். இவை அழியாப் பொருளல்லவென்பது உண்மையே; ஆனாலும் ஒரு பானை உடைந்துபோய்விட்டாலும் அதுபோன்ற பல பானைகள் உலகத்தில் இடைவிடாது இருந்துகொண்டே யிருக்கும். எக்காலத்திலும் பானையில்லை யென்பது கிடையாது. துணியும் அப்படியே. அழியும் பொருள்களென்று நாம் காண்கிற எப்பொருளுமிப்படியே. ஆகவே எச்சாதிப் பொருள்களுள் ஒன்று நசித்தாலும் மற்றொன்று இருந்துகொண்டே யிருக்குமோ, உலகமுள்ள எக்காலத்திலும் அச்சாதிப்பொருள் இல்லை யென்பது கிடையாதோ அச்சாதிப் பொருள்கள் ப்ரவாஹ நித்யங்களென்றதாகும். வேதமும் இந்த ப்ரவாஹ நித்ய கோடியில் சேர்ந்ததாம். அநந்தகோடி ப்ரஹ்மாண்டங்களுள் ஏதாவ தொன்றில் எந்த மூலையிலாவது ஒருவன் வேதமோதிக்கொண்டேயிருக்கிறான்; வேதவொலி யில்லாத காலமே கிடையாது. எல்லோரும் ஒரே மாதிரியில் தான் வேதத்தை ஓதுகிறார்கள். ஆகவே வேதம் ப்ரவாஹநித்யம்.

வேதம் நிர்த்தோஷம் = வேதம் என்பது சப்தம் என்று முன்பு கூறினோம். சப்தத்திற்கு தோஷமாவதென்ன? பிசகான பொருளைத் தெரிவிப்பதே சப்தத் திற்கு தோஷமாம். தனிப்பட ஒருபதம் பிசகான பொருளைத் தெரிவிக்கமா ட்டாது. பல பதங்கள் சேர்ந்த வாக்கியம் தப்பான அர்த்தத்தைத் தெரிவிக் கும். 'இது வெள்ளி' என்ற இவ்விரண்டு பதங்கள் தனித்தனியாக எவ்வித மான தப்புப்பொருளையும் தெரிவியாது. ஆனால் இவ்விரண்டு பதங்களையும் ஒன்றுசேர்த்து ஈயத்தைச் சுட்டிக்காட்டி 'இது வெள்ளி' என்று பிரயோகிக்கப் பட்டால் வெள்ளியல்லாததை வெள்ளியென்று போதிப்பதால் இவ்வாக்கியம் தோஷமுடையதென்று கொள்ளப்படும். இவ் வாக்கியம் இப்படி தப்பான அர் த்தத்தைப் போதிக்கக் காரணமென்ன? இரண்டு பதங்களுள்ள இவ்வாக்கியத் தில் என்ன தோஷமிருக்கிறது? இப் பதங்கள் தனித்தனியாகப் பிரயோகிக் கப்பட்டபோது எப்படி யிருந்தனவோ அப்படியே தானே கூட்டிச் சொன்ன போதும் இருக்கின்றன: சப்தத்தில் எவ்விதமான தோஷமும் காணமுடி யாது. ஆனபின்பு இவ் வாக்கியம் தப்பான பொருளைப் போதிப்பதேன்? எனில்; இதைப் பிரயோகித்த புருஷன் இப் பதங்களைச் சரியாக உபயோகியா மல் தப்பாக உபயோகித்ததே இப் பதங்கள் தப்பான பொருளைக் காட்டுதற் குக் காரணமாயிருக்கின்றது.

ப்ரமம், ப்ரமாதம், விப்ரலிப்ஸை என்று சில தோஷங்கள் மனிதர்கட்கு உண்டு. ப்ரமம் இரண்டுவிதம் — ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாகத் தெரிந்துகொள்வது ஒன்று. ஒரு வஸ்துவைத் தெரிந்துகொள்ளும்போது அதன் ஸ்வபாவமான குணங்களை மாறுடி வேறு குணங்களோடு கூடினதாகத் தெரிந்து கொள்ளுதல் மற்றொன்று. இவற்றுள் முதலாவதற்கு விபரீத ஜ்ஞாநமென்றும் இரண்டாவதற்கு அந்யதாஜ்ஞாநமென்றும் பெயர். முத்துச்சிப்பியைப் ப்ார்த்து



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வெள்ளியென்று ப்ரமிப்பது விபரீதஜ்ஞாநம். வெண்ணிறமுள்ளதான சங்கைப் பார்த்து மஞ்சள் நிறமுள்ளதாக ப்ரமிப்பது அந்யதாஜ்ஞாநம். இவ்விரண்டு வகையான ப்ரமமும் மநுஷ்யனுடைய தோஷமாகும். மனிதன் வஸ்துவை உள்ளபடி அறிந்துகொள்ளாமற்போகையே ப்ரமிக்கையாம். இனி ப்ரமாதமாவது பிசகிப்போதல். விப்ரலிப்ஸையாவது — பிறரை வஞ்சிக்கவேணுமென்கிற விருப்பம். மனிதனிடத்துள்ள இப்படிப்பட்ட தோஷங்களானவை அவனால் ப்ரயோகிக்கப்படுகிற சப்தங்களை தோஷமுடையனவாகச் செய்கின்றன. ஒருவன் கயிற்றைப் பார்த்துப் பாம்பு என்று ப்ரமிக்கிறான். அவன் அப்பால் இருந்துகொண்டு 'அதோ பாம்பு' என்று கயிற்றைக் காண்பிக்கின்றான். இங்கு அவனால் ப்ரயோகிக்கப்பட்ட சப்தத்தில் எவ்விதமான தோஷமும் இல்லையென்பது உண்மையேயானாலும் அந்த சப்தத்தினால் பிறர்க்கு உண்டாகும் ஞானம் யதார்த்தமன்றாதலால் அந்த சப்தம் தோஷமுடையதாகக் கொள்ளப்பட்டு அப்ரமாணமாகக் கருதப்படுகிறது. இங்கு மனிதனுடைய ப்ரமமே சப்தம் அப்ரமாணமாவதற்குக் காரணமாயிற்று. ஒருவன் கயிற்றைக் கயிறென்று தெரிந்துகொண்டிருந்தும் அவஸரத்தினால் வாய்தவறிப் பாம்பு என்று பிசகாகச் சொன்னால் அவனுடைய அச்சொல்லும் தப்பான பொருளைக் காட்டுகிறது; அதற்குக் காரணம் அப்புருஷனுடைய ப்ரமாதமேயாம். மற்றுமொருவன் கயிற்றைக் கயிறென்று தெரிந்துகொண்டிருந்தும் விளையாட்டுக்கோ கெட்ட எண்ணத்தினாலோ மற்றொருவனை அச்சமுறுத்த விரும்பி 'அதோ பாம்பு' என்கிறான். இங்கும் சப்தமானது தப்பான பொருளைத் தருகின்றது. அதற்குக் காரணம் அந்த மனிதனுடைய விப்ரலிப்ஸையாம். ஆகவே மனிதனுடைய ப்ரமம் ப்ரமாதம் விப்ரலிப்ஸை என்கிற தோஷங்களே சப்தம் அப்ரமாணமாவதற்குக் காரணமே யொழிய சப்தத்தில் இயற்கையான தோஷமில்லையென்று ஏற்படுகின்றது. இங்ஙனம் புருஷனுடைய தோஷங்களால் அப்ரமாணமாகும் சப்தங்கள் எவையென்றால், அந்தப்புருஷன் ஒரு அர்த்தத்தைக் காட்டுவதற்காகப் பல பதங்களை வேண்டியபடி சேர்த்து வாக்கியமாக ப்ரயோகிக்கும் சப்தங்களேயாம். வேதமென்கிற சப்தராசியானது எந்தப் புருஷனாலும் தன் இஷ்டப்படி முன் பின்னாகப் பிணைக்கப்பட்டவையல்லவென்றும் நித்யமென்றும் முன்னே சொன்னோமாதலால் புருஷனுடைய தோஷங்களால் துஷ்டமாகக் கூடிய நிலைமை வேதங்களுக்கு இல்லையென விளங்கிற்றாகிறது. ஆகையால் வேதம் நிர்த்தோஷம் என்னத் தட்டில்லை.

ஈச்வரன் வேதகர்த்தாவல்லவா? — ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் ஈச்வரன் நான்முகனுக்கு வேதோபதேசம் செய்வதாகச் சொல்லப்படுகிறதே, ஸ்ருஷ்டிக்கு முன்பு வேதம் இருக்கமுடியாதே; ஆகையால் ஈச்வரனால்தான் வேதம் முதலில் செய்யப்பட்டிருக்கவேணுமென்று ஏற்படுகிறதே; ஆனபின்பு வேதம் அபௌருஷேயம் என்பது எங்ஙனே? எனக் கேள்விபிறக்கலாம். உண்மையென்னவெனில், வேதத்திற்கு நாம் எப்படி கர்த்தாக்களல்லமோ அப்படியே ஈச்வரனும் கர்த்தாவல்லன்; உலகத்தில் ஸ்ருஷ்டியானது ஒன்றன்பின் ஒன்றாக

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அநாதிகாலமாக நடந்து வருகின்றது. ஒவ்வொரு கல்பத்தின் ஆரம்பத்திலும் ஈச்வரன் நான்முகனுக்கு வேதத்தை உபதேசிக்கிறான். ஆனால், முன் கல்பத்தில் வேதம் எவ்விதமான ஆநுபூர்வியோடு இருந்ததோ, அவ்விதமாகவே மறு கல்பத்தின் ஆரம்பத்திலும் வேதத்தை யுபதேசிக்கிறான். எவ்விதமான மாறுதலும் செய்வதில்லை: அநாதிகாலமாக இங்ஙனமே செய்துவருகிறான். இவ்வளவுதான் ஈச்வரன் செய்வது. புதிதாக வேதத்தை நிருமிப்பதில்லை. எவ்வித மாறுபாடும் செய்வதில்லை. ஆகையால் ஈச்வரனும் வேத கர்த்தாவல்லன்.

வேதம் அவிச்சிந்நபரம்பரா ப்ராப்தம் = ஸ்மிருதி இதிஹாஸம் புராணம் என மற்றும் பலவிதமான க்ரந்தங்களும் உள்ளன. ஆனால், வேதம் எப்படி அநாதி காலமாய் சிஷ்ய ப்ரசிஷ்ய பரம்பரையாய் அத்யயநம் செய்யப்பட்டு வருகிறதோ அப்படி மற்ற க்ரந்தங்கள் அத்யயநம் செய்யப்பட்டு வரவில்லை; ப்ராஹ்மணன் க்ஷத்ரியன் வைச்யன் என்ற மூன்று வருணத்தவர்களும் தவறாமல் வேதமோதியே தீரவேண்டுமென்றும் ஆசார்யமுகத்தாலேயே வேதம் அதிகரிக்கப்படவேணுமென்றும் நியமங்களை ஏற்படுத்தி, இந்த விதிகளை மீறினால் பிராயச்சித்தங்களும் விதிக்கப்பட்டிருப்பதனாலே புத்திக்கு எட்டாத காலம் முதல் ஒரேமாதிரியாக வேதம் ஓதப்பட்டு வருவதோடு எவ்விதமான ஸந்தேஹங்களுக்கும் இடமின்றியு மிராநின்றது. இப்படி வேதம் அபௌருஷேயமாய் நித்யமாய் நிர்த்தோஷமாய் அவிச்சிந்ந பரம்பராப்ராப்தமா யிருப்பதனாலே ஆரியர்களான நமக்குப் பரமப்ரமாணமாயுள்ளது. இப்படிப்பட்ட அதிசயத்தைத் திருவுள்ளம்பற்றியே ஆழ்வார் சுடர்மிகு சுருதி என்று அருளிச்செய்தருளினாரென்க.

சுருதியுள் என்ற இவ்விடத்தில் சுருதி என்னுஞ்சொல் பால்பகா அஃறிணைப் பெயராதலால் பன்மைப்பொருள்படத் தட்டில்லை. எல்லையில்லாத வேதங்களுள்ளும் என்றவாறு. கிருஷ்ண யஜுர்வேதத்தின் ப்ராஹ்மணத்தில் ஒரு பகுதியான காடகம் என்னும் சாகையில் முதல் ப்ரச்நத்தில் பதினோராவது அநுவாகத்தில் * "அநந்தா வை வேதா:" என்கிற வாக்யமுள்ளது. அவ்விடத்தில், வேதங்கள் அளவற்றவை என்பதைப்பற்றி ஓர் உபாக்கியானம் ஓதப்பட்டுள்ளது. முன்பொருகால் பரத்வாஜரென்னும் மஹர்ஷியானவர் ஸகல வேதங்களையும் ஓதி முடிக்கவேணுமென்ற முயற்சிகொண்டு அதற்குரிய ஆயுஸ்ஸைப் பெறுவதற்காக இந்திரனை உபாஸித்து அவனை ப்ரஸந்நனாக்கி அவனது ப்ரஸாதத்தினால் ஒரு புருஷாயுஸ்ஸுக்கு நூறாண்டுவிழுக்காடு முந்நூற்றாண்டு கொண்ட மூன்று ஆயுஸ்ஸுக்களை வரம்பெற்று அந்த வாழ்நாளில் குருகுலவாஸஞ்செய்து வேதமோதிவந்தார். முந்நூறாண்டும் முடிந்து ஜீர்ணசரீரராய்க் கிழத்தனமடைந்து ஆஸந்நதசாபந்நராய்ப் படுத்திருக்கும் அம்முனிவரை இந்திரன் வந்தணுகி, 'ஓ முனிவரே! மீண்டும் ஓர் நூறாண்டு கொண்ட ஆயுஸ்ஸை உமக்கு நான் தருவேனாகில் அந்த வாழ்நாளை நீர் எவ்விதமாகக் கழிக்கக் கருதுகின்றீர்? அந்த ஆயுளில் நீர் ஸாதிக்க விரும்பும் புருஷார்த்தம் யாது? என்று கேட்க, அதற்கு அம்முனிவர் 'வேறு நான் என்ன செய்யப்போகிறேன்? அந்த

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆயுஸ்ஸிலும் வேதமே ஓதக்கடவேன்' என்று விடையளிக்க, அதைக்கேட்ட இந்திரன் 'ஓ! இவர் ஸகல வேதங்களையும் ஓதிவிடவேணுமென்று ஆசைப்படு கிறார்போலும்' என நினைத்து அது ஒருநாளும் முடியாதகாரியமென்பதைத் தெரிவிப்பதற்காக, ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் என்ற மூன்று வேதங் களையும் தனது யோக ஸாமர்த்தியத்தினால் மூன்று மலைகளாக்கி, இதற்குமுன் அம் முனிவர் கண்டறியாத மலைவடிவமான அந்த வேதங்களை அவர்க்குக்காட்டி, பிறகு அவற்றுள் ஒவ்வொரு மலையில்நின்றும் ஒவ்வொரு முஷ்டியால் தூள்களை யெடுத்துக்காட்டி 'ஓ பரத்வாஜரே! இம் மூன்று மலைகளும் வேதங்களே, இதில் ஒவ்வொருதுகளும் ஒவ்வொரு வேதமாதலால் வேதங்களுக்கு எல்லையேகிடை யாது' என்று இந்திரன்கூற, அதுகேட்ட முனிவர் 'இப்படியாகில் இன்றுவரை நாம் ஓதியுள்ள வேதம் எவ்வளவாயிருக்கும்' என்று சிந்தித்தமையை அறிந்த இந்திரன் 'முனிவரீர! இம்மூன்று முஷ்டிகளில் அடங்கியுள்ள வேத ராசியைத் தான் நீர் இதுவரை மூந்நூறாண்டுகளாகக் குருகுலவாஸஞ்செய்து ஓதினீர்; இதோ மலைமலையாகக்கிடக்கும் வேதங்கள் உம்மால் ஓதப்படவில்லை; ஆகவே ஸகல வேதங்களையும் ஓதி முடிப்பதென்பது ஒருநாளும் மாளாத காரியமென்று கொள்ளீர் என்றான் — என்பதாம்.

அப்படிப்பட்ட வேதங்களிலிருந்து நாம் நேரே ஒரு பொருளும் நிஷ்கர்ஷி த்து உணரவல்லமையற்றிராநின்றோமாதலால் * அயர்வறுமமரர்களதிபதியால் * மயர்வறமதிநலமருளப்பெற்று ஸர்வஜ்ஞரான ஆழ்வார் "மேகம் பருகின ஸமுத்ராம்புபோலே தூற்கடற் சொல் இவர்வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" என்று ஆசார்யஹ்ருதயத்தி லருளிச்செய்தபடி யே ஸர்வாதிகாரி போக்யமாக அந்த வேதார்த்தங்களையே நமக்கு உபகரித்தரு ளுகிறாரென்பது இப்பாசுரத்தினீற்றடியால் விளங்கும்.

இவையுண்ட சுரன்=கீழ்ப் பாசுரங்களில் ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி கள் எம்பெருமானுடைய அதீனமென்று சொல்லிற்று; ஸம்ஹாரமும் அவ்வெம் பெருமானுடைய செயலே யென்கிறது இதனால். பிரளயகாலத்திலே எம்பெரு மான் ஸகலலோகங்களையும் தனது திருவயிற்றிலே வைத்தடக்கி ஆலந்தளிரிலே பள்ளி கொள்வதாக நூற்கொள்கை.

ஸுரஃ என்னும் வடசொல் சுரனென்று கிடக்கிறது. தேவன் என்றபடி. (எ)

சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும் *
வரன்முதலாயவை முழுதுண்டபரபரன் *
புரமொருமூன்றெரித்து அமரர்க்குமறிவியந்து *
அரனயனெனை உலகழித்தமைத்துளனே. * (அ)

| | | | |
|---|---|---|---|
| சுரர் அறிவு அரு நிலை | (பிரமன்முதலிய)தேவர்க ளுக்கும் அறிய வொண் ணாத நிலைமையையுடை த்தான | விண் முதல் முழுவதும் | மூலப்ரக்ருதி முதலாகவுள் ள ஸகலவஸ்துக்களுக்கும் |
| | | வரன் முதல் ஆய் | சிறந்த காரண பூதனாய் [அவற்றை யெல்லாம் படைத்தவனாயும்] |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| அவை முழுது உண்ட | அவற்றையெல்லாம் (பிரளயகாலத்தில்) திருவயிற்றிலே வைத்து நோக்கு பவனுயுமுள்ள | உலகு அழித்து | உலகங்களை அழித்தல்செய்தும் |
| பரபரன் | பரமபுருஷன் | அயன் என | நான்முகக்கடவுள் என்னும் படியாக நின்று |
| அரன் என | ருத்ரமூர்த்தியின் உருவத்தைத் தரித்தவனுகி | அமரர்க்கு அறிவுஇயந்து | தேவர்களுக்கு ஞானத்தைக்கொடுத்தும் |
| ஒரு மூன்று புரம்எரித்து | இணையில்லாத திரிபுரங்களைத்தரித்தும் | அலகு அமைத்து | உலகங்களைப் படைத்தல் செய்தும் |
| | | உளன் | அவர்களுக்குள்ளே ஆத்மாவாயிருக்குமவன். |

* * * — வேதாந்தங்களில் ஸித்திப்பவனும் எம்பெருமானேயென்றும் அனைத்துக்கும் ஆத்மாவாய் நிற்பவனும் அவனேயென்றும் உலகத்தின் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகிறவனும் அவனேயென்றும் கீழ்ப்பாசுரங்களில் அருளிச்செய்த ஆழ்வாரைநோக்கிச் சிலர் ‘இப்படி எல்லாப் பெருமைகளையும் ஒருவன் தலையிலேயே ஏற்றிச் சொல்லிவிடலாமோ? பிரமன் சிவன் முதலான தேவர்களும் சிலசில அரியபெரிய காரியங்களை நடத்திப்போருவதாக ப்ரமாணங்களில் விளங்காநின்றதே; சிவபிரான் த்ரிபுரஸம்ஹாரமாகிற மிகப்பெரிய அருந்தொழிலை நடத்தினனென்றும் ஸகலலோகத்தின் ஸம்ஹாரத்தொழிலுக்கு அதிகாரியாயிருக்கின்றுனென்றும், பிரமனும் தேவர்களுக்கெல்லாம் ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினுனென்றும் லோகஸ்ருஷ்டியை நடத்திப் போருகிறுனென்றும் பிரமாணங்களால் நன்கு விளங்கும்போது எல்லாப்பெருமைகளையும் விஷ்ணுவாகிற ஒரு வ்யக்தியின்மேலேயே ஏறிட்டுச்சொன்னுல் பக்ஷபாதத்தாலே சொல்லுகிறதாக ஆகுமே’ என்று கூற, அவர்களுக்குத் தெளிவுபிறக்குமாறு அருளிச்செய்யும் பாசுரம் இது.

முன்னடிகளில் ஸ்ருஷ்டியையும் ஸம்ஹாரத்தையும் பேசியிருப்பதன் கருத்து—இந்த இரண்டு தொழில்களையும் பிரமனுக்கும் சிவனுக்கும் அஸாதாரணமாகச் சிலர் நினைப்பதனுல் அந்த நினைவைக்குலைப்பதற்குத் தம்முடைய ஸித்தாந்தத்தை ஸ்தாபித்துச்சொல்லுகிறபடி. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களென்னும் மூன்று காரியங்களில் ரக்ஷணமாகிற ஸ்திதிஎன்னும் காரியம்மாத்திரம் எம்பெருமானுடையது, மற்ற இரண்டு காரியமும் ப்ரஹ்மருத்ரர்களினுடையது என்று பலர் நினைத்திருப்பர்கள்; அன்னவர்களுடைய நினைவின்படி ரக்ஷணத்தொழில் எம்பெருமானுடையதே என்பதில் விவாதமொன்றுமில்லாமையால் பிரதிபக்ஷிகளாலும் அங்கீகரிக்கப்பட்ட அவ்விஷயத்தை மீண்டும் நாம் எடுத்து ஸ்தாபிக்கவேண்டிய அவசியமில்லையென்றும் விவாதாஸ்பதமான மற்ற இரண்டு காரியங்களைப்பற்றியே இங்கு உண்மையைப் பேசவேண்டுமென்றும் திருவுள்ளம் பற்றிய ஆழ்வார் அவ்விரண்டையுமே இப்பாட்டில் பிரஸ்தாவித்து உண்மையுணர்த்துகின்றுரென்று உணர்க.

சுரரறிவருநிலைவிண்முதல் முழுவதும் வரன்முதலாய் = நமது ஸித்தாந்தத்தில், சித்து அசித்து ஈச்வரன் என மூலப்பொருள்கள் மூன்றே. இவையே தத்வத்ரயம் எனப்படும். எல்லா ஜகத்தினுடையவும் பிறப்புக்குக் காரணம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பரப்ரஹ்மமென்னும் ஈச்வரனே. ப்ரஹ்மமே ஜகத்தின் உபாதாநகாரணமும் நிமித்தகாரணமும் ஸஹகாரிகாரணமுமாகும். உலகில் ஒவ்வொரு காரியப் பொருளுக்கும் உபாதாநகாரணம் நிமித்தகாரணம் ஸஹகாரிகாரணம் என மூன்று காரணங்களுண்டு: மண்ணினாலாகிய ஒரு பானைக்கு மண் உபாதான காரணம்; குயவன் நிமித்தகாரணம்; சக்கரம் தடி தண்ணீர் முதலியன ஸஹகாரிகாரணங்கள். அஸத்தான [அதாவது - எந்த ஆகாரத்தாலுமில்லாத] வஸ்துவின் உத்பத்தி யென்பது நமது தர்சனத்தில் கிடையாது. ஒருவிதமான அவஸ்தையோடு கூடின ஒரு வஸ்துவுக்கு இன்னொரு அவஸ்தை ஏற்படுவதே உத்பத்தியாம். அந்த நிலைமையைவிட்டு மற்றொரு நிலைமையை அடைவதே அந்த வஸ்துவுக்கு நாசமாம். மண் என்கிற ஒரு வஸ்துவானது முதலில் பிண்டத்வாவஸ்தை [உருண்டை வடிவமான நிலைமை]யில் இருந்தது. அப்போது அந்த மண்ணானது பிண்டம் என்ற பெயரால் வழங்கப்பட்டது. அந்த மண்ணே பெரிய வயிறும் கழுத்தும் வாயுமுடையதாய் வேறுநிலைமையில் மாறவே, பானை, குடம் என்ற பெயர்களால் வழங்கப்பட்டது. பிண்டம் என்ற பெயரால் வழங்கப்பட்டபோது இருந்த மண்ணே பானை என்ற பெயரால் வழங்கப்படும்போதும் உளதேயன்றி வேறு வஸ்து புதிதாக யாதொன்றும் உண்டாகவில்லை. பானை என வழங்கப்பட்ட அந்த மண்ணே உடைந்துபோய்ப் பொடியாய் சூர்ணம் என்ற பெயரால் வழங்கப்படுகிறது. இந்த நிலைமையிலும் பானையென வழங்கப்பட்ட மண்ணேதான் உள்ளது. நிலைமை மாத்திரம் மாறுபடுகின்றது. இந்த நிதர்சனத்தால் தெரிந்துகொள்வதென்ன? ஒரே மண்ணானது பல நிலைமைகளை அடைவதைக் கண்டுகொள்ளுகிறோம். பானையின் உற்பத்தியாவது பிண்டரூபமாயிருந்த மண்ணுக்கு வேறொரு நிலைமை விளைவதேயாம். எனவே, அந்த நிலைமையே உத்பத்தியென்று ஏற்பட்டது. பானைக்கு நாசமாவது பொடியாய்ப் போவதேயாம். இதுபோலவே மற்றெல்லாக் காரியப் பொருள்களிலுங் காண்க.

ஸ்ருஷ்டிக்கு முன்பு பிரளயதசையிலும் சித்தும் அசித்தும் உண்டு. அஸத்தான பொருளுக்கு உத்பத்தி கிடையாதென்கிற கொள்கையின்படி ஸ்ருஷ்டிக்குப் பின்பு காணப்படும் சித்தும் அசித்தும் ஸ்ருஷ்டிக்கு முன்பும் இருந்திருக்க வேண்டியவைகளே. ஆனால் ஸ்ருஷ்டிக்குப் பின்பு இவை எத்தன்மையனவாய்க் காணப்படுகின்றனவோ அத்தன்மையனவாய் ஸ்ருஷ்டிக்கு முன்பு இருப்பது கிடையாது. அதாவது ஸ்ருஷ்டிக்குப் பின்பு காணப்படும் ஸ்தூலமான ரூபங்களும் நாமங்களும் ஸ்ருஷ்டிக்கு முன்பு இவற்றுக்கில்லை, ஸூக்ஷ்மமான உருவமும் பொதுவான ஒரே நாமமுந்தான் அத்தசையில் இவற்றுக்குண்டு. இதுவே காரண தசையாம். ஸ்ருஷ்டிக்குப் பின்பு உள்ள ப்ருதிவி அப்பு தேஜஸ் வாயு ஆகாசம் முதலிய நாமங்களும் அத்தத்துவங்களுக்குள்ள ஸ்தூலமான ரூபங்களும் ஸ்ருஷ்டிக்கு முன்பு பிரக்ருதிக்கு இல்லை. அதிஸூக்ஷ்மமான உருவமேயுண்டு. 'பிரகிருதி' என்கிற ஒரே பெயர்தான் வழங்கப்படக்கூடியதாகும். அதுபோலவே ஜீவாத்மாக்களும் அக்காலத்தில் சரீர இந்திரியங்களின்றி ஞான விகாஸமற்று ஸூக்ஷ்மதசையில் இருக்கிறார்கள்; ஸ்ருஷ்டிக்குப் பின்பு சரீர இந்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திரியங்கள் பெற்று அவற்றின் மூலமாக ஞானவிகாஸமும் சக்தியுமுடையவர்களாகிறார்கள். ஆகவே ப்ரக்ருதிக்கும் ஜீவாத்மாக்களுக்கும் ஸ்தூலமான ரூபங்களை அடைவதாகிற ஸ்தூலதசையே உத்பத்தியாகும். அத் தசைக்கு மாறுபட்ட ஸூக்ஷ்மதசையை அடைவதே நாசமாகும். ஆக இப்படிப்பட்ட உத்பத்தி விநாசங்கள் பகவத்ஸங்கல்பத்தினாலேயே நடைபெற்று வருகின்றமையால் ஸ்ருஷ்டிக்கும் ஸம்ஹாரத்திற்கும் பகவானே காரணமென்னக் குறையில்லை.

ஜடப்பொருளான பிரக்ருதிக்குத் 'தமஸ்ஸு' என்றும் 'அவித்யை' என்றும் 'மாயை' என்றும் பெயர் வழங்கிவருகின்றன. மஹா ப்ரளயதசையில் இந்த ப்ரக்ருதியானது ஈச்வரனோடு ஒன்று சேர்ந்து நாமரூபவிபாகத்திற்கு அநர்ஹமாய் அசித்தென்றுகூட அறியக்கூடாத நிலைமையிலிருக்கும். அப்பொழுது அதற்கு அவிபக்த தமஸ்ஸென்று பெயர். பிரக்ருதியின் இயற்கைக் குணங்களான ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்கள் இத்தசையில் ஏற்றத்தாழ்வின்றி ஒரே அளவுள்ளனவாயிருக்கும். ஆகையல் இத்தசையை "குணத்ரயஸாம்யாவஸ்தை" என்பர். குணங்களில் ஏற்றத்தாழ்வு ஏற்படும்வரை பிரக்ருதி எவ்விதமான பரிணாமத்தையும் அடையாது. அசேதநமாகையால் சேதநனான ஈச்வரனுடைய ப்ரேரணையின்றியும் எவ்விதமான பரிணாமத்தையும் அடையமுடியாது. ஆகையால் மஹா ப்ரளயகாலத்தில் மூலப்ரக்ருதியானது பரிணாமத்திற்கு உந்முகமல்லாமல் ஸ்திரமாயிருக்கும்.

ஸ்ருஷ்டிகாலம் வந்தபோது ப்ரக்ருதியானது ஈச்வரனுடைய ப்ரேரணையால் அவனிடத்திலிருந்து பிரிந்து நாமரூப விபாகார்ஹமாய் பரிணாமோந்முகமாய் அசித்தென்று அறியக்கூடியதான நிலைமையை அடைகின்றது. அத்தசையில் அதற்கு விபக்ததமஸ் என்றுபெயர். அதாவது பிரிந்து தனிப்பட்டு நிற்கும் தமஸ்ஸு என்றதாகும். இந்த நிலைமையை ஓர் அவஸ்தையென்று சொன்னாலும் பிரக்ருதியின் ஸ்வரூபத்தில் எவ்விதமான மாறுபாடும் விளைவதில்லை. ஈச்வரனோடு ஒன்று சேர்ந்திருந்து தனிப்படக் காணமுடியாதிருந்த நிலைமைபோய், அவனின்றும் பிரிந்து தனிப்பட்டு அசித்தென்று காணக்கூடியநிலைமை மாத்திரம் உண்டாகின்றது.

இந்நிலைமைகளை த்ருஷ்டாந்தமிட்டுக் காட்டவேணுமானால், அவிபக்த தமஸ்ஸை நீரில்கரைத்த உப்புக்கும் விபக்ததமஸ்ஸை ஸூர்யகாந்தக்கல்லிலுள்ள நெருப்புக்கும் ஒப்பாகச் சொல்லலாம். அவிபக்த தமஸ்ஸை உழுதுபண்படுத்திய பூமியிலிட்ட விதைக்கொப்பாகவும் விபக்த தமஸ்ஸை மண்ணிலிருந்து வெளிப்பட்டுநிற்கும் விதைக் கொப்பாகவும் சொல்வதுண்டு. ஈச்வரப்ரேரணையால் ஸ்ருஷ்டிக்கு உந்முகமாய் அசித்தென்றறியக்கூடிய நிலைமையில் நின்ற விபக்த தமஸ்ஸெனப்படும் பிரக்ருதியானது அதன்பின்பு அக்ஷரமெனப்படுகிற அவஸ்தையை அடைகின்றது. இதை, உழுது பண்படுத்திய பூமியிலிடப்பட்டு ஜலம் கட்ட நன்றாய் நனைந்து மிருதுவான விதைக்கொப்பாகச் சொல்வர். இத்தசையிலும் குணங்கள் வைஷம்யத்தை யடைகிறதில்லை. இந்த நிலைமைக்கு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அக்ஷரமென்று பெயரிட்டதற்குக் காரணமென்னவெனில், அக்ஷரங்களான ஜீவ ராசிகள் பிரக்ருதிக்குள் அடங்கியிருக்குமது காணக்கூடியதாயிருக்கையாலே.

விபக்த தமஸ், அவிபக்த தமஸ் என்கிற அவஸ்தைகளிலும் ஜீவராசிகள் பிரக்ருதியில் அடங்கியிருந்தாலும் அப்பொழுது தனிப்படக் காணமுடியாம லிருக்கும். அக்ஷராவஸ்தையில் தனித்தனி காணக்கூடியதாயிருக்கும். ஒரு புஷ்பம் முதலில் அரும்பென்று சொல்லப்பட்டு, பிறகு மொக்கென்று சொல்லப் பட்டு, பின்னர் பூவென்று சொல்லப்படுகிறது. இங்கு தமஸ்ஸை அரும்பின் ஸ்தானத்திலும் அக்ஷரத்தை மொக்கின் ஸ்தானத்திலும் வைக்கலாம். அரும்பு, மொக்கு, பூ என்னுமிவை தனித்தனியான பொருள்களல்ல. எல்லாம் ஒன்றே. அதுபோலவே இங்கும். தமஸ் அக்ஷரம் இவைகளும் தனித்தனி வஸ்துவல்ல, ஒன்றேயாம்; நிலைமை மாத்திரம் சிறிது மாறுபடுகின்றது.

அக்ஷரமென்கிற நிலைமை மாறி இன்னும் சிறிது விகாஸமடைந்தபோது பிரக்ருதியானது அவ்யக்தமென்னும் பெயரையடைகின்றது. இதை, ஜலத்தி னால் நனைந்து சிறிது உப்பிப்பருத்த விதைக்கு ஒப்பாகச் சொல்வர். அவ்யக்த மென்றால் வ்யக்தமாகாததென்றவாறு. குணஸாம்ய வைஷம்யங்கள் எந்த நிலை மையில் வ்யக்தமாகவில்லையோ அது அவ்யக்தாவஸ்தையாம்.

விபக்த தமஸ் அக்ஷரம் அவ்யக்தம் என்கிற இம் மூன்று அவஸ்தைகளும் பிரக்ருதியின் ஸ்தூல ஸூக்ஷ்மாவஸ்தைகளேயன்றி விலக்ஷணமான பரிணாம மல்ல. ஆனதுபற்றியே இவற்றுக்கு அரும்பு மொக்கு புஷ்பம் என்னும் நிலை மைகள் உவமை கூறப்பட்டன.

இந்த அவ்யக்தத்திலிருந்து ஸத்வரஜஸ்தமோகுணங்கள் ஏற்றத்தாழ்வு டைய 'மஹாந்' என்கிற தத்துவமுண்டாகிறது. மூலப்ரக்ருதியிலும் ஸத்வ ரஜஸ்தமோகுணங்களிருந்தாலும் ஏற்றத்தாழ்வின்றி ஸமமாயிருக்கையாலே அவற்றைத் தனித்தனிக் கண்டுபிடிக்க முடியாது. மஹத்தத்வம்முதல் இக் குணங்கள் தமது காரியங்களைக்கொண்டு கண்டுபிடிக்கக்கூடியதாயிருக்கும். குண வைஷம்யம் ஏற்பட்டு முதன்முதலாகவுண்டாகும் தத்துவம் மஹானே. இந்த மஹத்தத்வமானது ஸாத்விக மஹத்தென்றும் ராஜஸமஹத்தென்றும் தாமஸ மஹத்தென்றும் மூன்றுவிதமாயிருக்கும். அவ்யக்தம்வரையிலுள்ள தத்துவங் களில் ஏற்படாத குணவைஷம்யம் இந்த மஹத் தத்துவத்தில்தான் ஏற்படத் தொடங்கினதுபற்றியே இந்த வேற்றுமையுண்டாயிற்று. இந்த மஹத்தத்து வமே புத்தியை உண்டாக்குவது.

நமது சரீரம் 'பாஞ்ச பௌதிகம்' என்று சொல்லப்பட்டாலும் சரீர ஆரம் பகங்களான திரவ்யங்கள் எட்டு. அவையாவன, ஐந்து மஹாபூதங்களும் அவ்யக் தமும் மஹானும் அஹங்காரமும். சரீரத்துள் மஹத் தத்துவம் சேர்ந்திருப்ப தாலும் அது மூவகைப்பட்டிருப்பதாலும் நமது புத்தியும் ஸாத்விகபுத்தி ராஜஸபுத்தி தாமஸபுத்தியென மூவகைப்பட்டிருக்கும். ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி கள், கார்ய அகார்யங்கள், பயாபயங்கள், பந்த மோக்ஷங்கள் என்னுமிவற்றை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

உள்ளபடியறியும் நிச்சயாத்மகமான புத்தியே ஸாத்விக புத்தியாம். ஒருவஸ்துவிலுள்ள தருமங்களை மாறுபாடாக அறிதலாகிற அந்யதாஜ்ஞாநம் ராஜஸ புத்தியாம். ஒரு வஸ்துவை மற்றொருவஸ்துவாக அறிதலாகிற விபரீதஜ்ஞாநம் தாமஸ புத்தியாம். இங்ஙனே மூன்றுவிதமான புத்திகளை மூன்றுவிதமான மஹத்தத்துவம் உண்டாக்குகின்றது. மேன்மேலும் காரியவர்க்கங்களின் உற்பத்திக் கிரமத்தைக் கண்டும் கேட்டு முணர்க.

விண் என்னுஞ் சொல் ஆகாசத்தைத்தானே சொல்லும்; மூலப்ரக்ருதியைச் சொல்லக்கடவதோவென்னில்; வேதாந்தக் கட்டளையிலே சொல்லக் குறையில்லை: * ஏதஸ்மிந்நு கல்வக்ஷரே கார்க்யாகாஶ ஓதஶ்ச ப்ரோதஶ்ச * என்கிற உபநிஷத் வாக்கியத்தில் ஆகாஶ சப்தத்தினால் ப்ரக்ருதியைச் சொல்லுகிறதாக வேதாந்திகளின் ஸித்தாந்தம். அந்த ரீதியில் விண் என்கிற ஆகாஶவாசக சப்தமும் ப்ரக்ருதி வாசகமாகும் என்று ஆசார்யர்கள் நிர்வஹித்தருளினர். இனி, விண் என்கிற இச்சொல் பூதங்களிலொன்றாகிய ஆகாசத்தையே சொல்லுகிறதென்பாருமுளர். * ஆகாஶாத் வாயு:. வாயோரக்நி: * என்று ஆகாசமடியாக ஸ்ருஷ்டிக்ரமம் சொல்லுகிற ஒரு புடையும் வேதாந்தங்களிலுள்ளதனால் அதற்கிணங்கும்.

வரன்முதலாய் = வரம் என்பது வடசொல்; சிறந்தது என்று பொருள். வரன் என்றது—மகர னகரப்போலி. ச்ரேஷ்டமான காரணபூதனாய் என்றபடி. உலகத்தில் ஒரு காரியப்பொருள் உண்டாகவேணுமானால் உபாதாநகாரணம், ஸஹகாரிகாரணம், நிமித்தகாரணம் என்று மூவகைக் காரணங்கள் வேண்டியிருக்கும், அவை வெவ்வேறு பொருளாயுமிருக்கும். பிரபஞ்சஸ்ருஷ்டி விஷயத்திலோவென்னில் அந்த மூவகைக் காரணமும் எம்பெருமான் தானொருவனேயாக நிற்கையாலே விலக்ஷண காரணபூதனென்கிறது. வேதாந்த தேசிகன் பணித்த அச்யுத சதகத்தில்— "வ..ரிஸவஹாணஸரீரொ ஹ..வணாணஂ ஹொவஸி ஸுஹு..ஸு உவாதாணஂ | ணிஸஸஂகப்பஸணாஹொ வஹஸி ணிமித்தணஂ வி ஸஹ்..ஸஸத்தீ = வ....ஷஹ்யாணஸரீரொ ஹ..வணாணஂ ஹவஸ்..வ..தொவாஹாணு | நிஜஸஂகப்பஸணாஹொ வஹஸி நிமித்தகஉவஹீ..தஸத்தீ ||" என்ற ச்லோகமும் அதன் தாற்பரியமும் இங்கு உணரத்தக்கது.

அவைமுழுதுண்டபரபரன் = ம்ருத்யு முதலானவர்களுக்கு ஏகதேச ஸம்ஹாரகத்வமே உள்ளது, ஸம்ஹார கர்த்தாக்களையுமுட்பட ஸம்ஹரிக்கவல்ல பராத்பரன் எம்பெருமானேயாவன்.

புரம்ஒருமூன்றெரித்து = த்ரிபுரஸம்ஹாரம் என்னுஞ் செயல் சிவபெருமான் செய்தது; அதன் விவரணம் வருமாறு:— தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் கோரமான தவமியற்றி மயனென்பவனால் ஸ்வர்க்கம் மத்திமம் பாதாளம் என்னும் மூன்றிடத்திலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரண்வகுக்

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கப்பட்டு ஆகாயமார்க்கத்தில் ஸஞ்சரிக்கும் தன்மைவாய்ந்த மூன்று பட்டணங்களைப் பெற்று மற்றும் பல அசுரர்களோடும் அஹங்காரங்களுடனே தாம் நினைத்த விடங்களிற் பறந்துசென்று பலவிடங்களையும் பாழாக்கி வருகையில், அத் துன்பத்தைப்பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோர்து வேண்டுகோளால், சிவபெருமான் பூமியைத் தேராகவும் சந்திர ஸூர்யர்களைத் தேர்ச் சக்கரங்களாகவும் நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாக்வும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை நாணாகவும் விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்த அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும் மற்றைத்தேவர்களைப் பிற போர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தஸந்நத்தனாகிச்சென்று போர்செய்ய முயலுகையில் தேவர்கள் தத்தமது வல்லமையை நினைந்து அஹங்காரப்பட்டதை யுணர்ந்து சினந்து அவர்களுதவியைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாமல் தானே புன்சிரிப்புச்செய்து அசுரரனைவரையும் பட்டணங்களோடு எரித்தனன் என்பதாம். இந்த வரலாறு தைத்திரீய யஜுர்வேதத்திலும் ஆறுவது காண்டம் இரண்டாவது ப்ரச்நத்தில் "தேஷாமஸுராணாம் திஸ்ர: புர ஆஸந்நயஸ்மய்யவமாரஜதாதஹரிணீ தா தேவா ஜேதும் நாசக்நுவந்... தா உபஸதைவ ஜிகீஷந் தஸ்மாதாஹுர் யஞ்சைவம் வேத யஞ்ச ந உபஸதா வை மஹாபுரம் ஜயந்தீதி த இஷும் ஸமஸ்குர்வதாக்நிமநீகம் ஸோமம் சல்யம் விஷ்ணும் தேஜநம் தேவா ஊசுர்விஷ்ணோதீதி" இப்பாதியால் ஒருவாறு சொல்லப்பட்டுளது. இந்த சுருதியில் * விஷ்ணும் தேஜநம் * என்றது முக்கியமாக நோக்கத்தக்கது. மஹாபாரதத்திலும் கர்ணபர்வத்தில் — "விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ: | தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்சம் ஸ விஷேஹே மஹேச்வர: ||" = விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமித தேஜஸ: - தஸ்மாத் தநுர்ஜ்யாஸம்ஸ்பர்சம் ஸ விஷேஹே மஹேச்வர:." என்று சொல்லப்பட்டது. பரமசிவனுக்கு விஷ்ணு ஆத்மாவா யிருந்தமையால்தான் அந்தச் சிவபிரான் த்ரிபுர ஸம்ஹார காலத்தில் வில்நாணியைத் தொடவும் வல்லவரானர் என்பது மேற்குறித்த ச்லோகத்தின் கருத்து.

இப் பாசுரத்தின் ஈடு முப்பத்தாறாயிரப்படியில்—"தான் பூட்டின நாணி தன் கழுத்தை யறுத்துக்கொண்டு போகாதொழியும் போதும் ஈச்வரன் அந்தராத்மாவாய் நிற்கவேணும்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இதன் கருத்து யாதெனில்; தைத்திரீய ஆரண்யகத்தில் முதல் ப்ரச்நத்தில் * அதி தாம்ராணிவர்ஷாம்ஸி * என்று தொடங்கியுள்ள ஒரு அநுவாகத்தில் சிவபிரானுடைய ஒரு கதை ஓதப்பட்டிருக்கின்றது. அதாவது—["நைவ தேவோ ந ஐது: | ந ராஜா வருணோ விபு: | நாக்நிர்நேந்த்ரோ ந பவமாந: | மாத்ருக்கச்ச ந விச்யதே"] 'தேவனோ மனிதனோ ஒருவனும் என்னைப்போன்றவனல்லன்; வருணன் அக்நி இந்திரன் வாயு முதலானா யாவரும் எனக்கு ஈடல்லன்' என்று ருத்ரன் செருக்குக் கொண்டிருந்ததாகவும்; [திவ்யஸ்யைகா தநுராத்நி: | ப்ருதிவ்யாமபரா ச்ரிதா | தஸ்யேந்த்ரோ வத்ரிரூபேண |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யந்ஜ்ஞாரூஷிநஸ்ஷ்யடி | தஷிஜ்யஂநாரிதாஜ்ஞு| ஸஹவணொஷ வக்ஷதெ...வ தஜ்ஞாஹவஷ்ய யநாஃ | ஜாஹவஷ்தெவ யநாராதீஃ| ஸிர உதிவெஷ|] ஒருகால் அந்த ருத்ரன் தனது வில்லை ஊன்றிக்கொண்டு நிற்க, அந்த வில்லின் ஒரு முனை நிலத்திலும் மற்றொரு முனை விண்ணிலு மாயிற்று; அந்த நிலைமையை நோக்கின இந்திரன் (ருத்ரனுடைய செருக்கை அடக்குவதற்காக) செல்லு வடிவம் பூண்டு அந்த வில் நாணியை மென்று தின்று விட, உடனே நாணியற்ற அந்தவில் எழும்பி மேகமண்டலத்தில் பாய்ந்துவிட்டது: அப்படி அது எழும்பும்போது ருத்ரனுடைய தலையை அரிந்து கொண்டு போயிற்று; அந்த வில் நாளைக்கும் மேக மண்டலத்தில் நாணியில்லாததாகத் தென்படாநின்றது; இந்திரன் செல்லு வடிவினனாகி நாணியை மென்று எழுப்பின வில்லாதல்பற்றியே அது 'இந்திரதநுஸ்' என்று வ்யவஹரிக்கப்படுகிறது— என்பதாகவும் உபாக்கியானம் உள்ளது. இந்த உபாக்கியானத்தைத் திருவுள்ளம்பற்றியே ஈட்டில் மேற்குறித்த ஸ்ரீஸூக்திகள் அவதரித்தனவென்று பெரியோர் அருளிச்செய்வது. அப்போது ஸ்ரீ மஹாவிஷ்ணு துணைசெய்யாமையினால் தலையறுப்புண்டு போகும்படியாக நேர்ந்தது; த்ரிபுரஸம்ஹாரத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு துணைசெய்தமையால்தான் அப்படிப்பட்ட ஆபத்து ஒன்றுமின்றியே வெற்றிபெறலாயிற்று என்பது திருவுள்ளம். "குழல்நிறவண்ண! நின்கூறு கொண்ட தழல்நிறவண்ணன் நண்ணார் நகரம்விழ, நனிமலை சிலைவளைவுசெய்து அங்கு அழல்நிற அம்பதுவானவனே!" என்ற திருமங்கையாழ்வார் பாசுரமும் இங்கு அநுஸந்திக்கவுரியது. ஆக இவ்வகைகளாலே, த்ரிபுரதஹனமாகிற செயல் எம்பெருமானாலேயே நிர்வஹிக்கப்பட்டதாகத் தேறினபடியால் புரமொரு மூன்றெரித்து என்றருளிச்செய்யப்பட்டதென்க.

அமரர்க்கும் அறிவியந்து—நான்முகன் தேவர்கட்கு ஞானமளித்ததாக ஒரு ப்ரஸித்தியுண்டு. அதனையும் நிரூபித்துப் பார்க்குமளவில், ச்வேதாச்வதர உபநிஷத்தில் "யொ ப்ரஹ்மாணம் விஜ்யாதி பூர்வம் யொ வை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்று எம்பெருமானே நான்முகனைத் தனது திருநாபிக்கமலத்தில் தோற்றுவித்து அவனுக்கு வேதோபதேச முகத்தால் ஞானமூட்டினதாக ஓதிக் கிடக்கையாலே பிரமன் செய்த ஜ்ஞாந ப்ரதானமும் எம்பெருமானதீனமாகவே யிருக்குமாயிற்று. "ஏதௌ த்வௌ விபுத ச்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌ ஸ்ம்ருதௌ | ததா தர்சிதபந்தாநௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ = ஏதௌ த்வௌ விபுதச்ரேஷ்டௌ ப்ரஸாத க்ரோதஜௌ ஸ்ம்ருதௌ-ததா தர்சிதபந்தாநௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ." என்று மோக்ஷதர்மத்திற் சொல்லியுள்ளதும் இங்கு அநுஸந்தேயம். இதன் கருத்தாவது — பிரமன் சிவனென்கிற இரண்டு தேவர்களும் முறையே எம்பெருமானுடைய அநுக்ரஹத்தில் நின்றும் சீற்றத்தில்நின்றும் தோன்றினவர்கள்; அப்பெருமான் காட்டின வழியின்படியே ஸ்ருஷ்டியும் ஸம்ஹாரமும் நடத்துகின்றவர்கள் என்பதாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* சுராறிவருநிலைவின்முதல்முழுவதும்வான்முதலாய் அவைமுழுதுண்ட பரபரன் அரனெனப் புரமொருமூன்றெரித்து உலகு அழித்து, அயனென அமரர்க்கு அறிவியந்து உலகு அமைத்துளன்—என்று அந்வய க்ரமமாயிற்று. (அ)

உளனெனி லுளன் அவனுருவ மிவ்வுருவுகள் *
உளனலனெனில் அவனருவ மிவ்வருவுகள் *
உளனென விலனென இவைகுணமுடைமையில் *
உளனிருதகைமையொடு ஒழிவிலன் பரந்தே. * (கூ)

| | | | |
|---|---|---|---|
| உளன் எனில் | ஈச்வரனுண்டென்று (வைதிகர்கள் சொல்லுகிறாப்போலே) சொன்னாலும் | இவ்வுருவுகள் இவ்வருவுகள் | உருவ முடையன வாயும் உருவ மில்லாதனவாயு மிருக்கின்ற உலகப் பொருள்கள் யாவும் |
| உளன் அலன் எனில் | ஈச்வரனில்லை யென்று (நாஸ்திகர்களின்படியே) சொன்னாலும் | அவன் உருவம் அவன் அருவம் | அப்பெருமானுக்கு ஸ்தூல சரீரங்களும் ஸூக்ஷ்ம சரீரங்களும். |
| உளன் | ஈச்வரனுண்டென்பதாகவே தேறும்; | இரு தகைமையோடு | இரண்டு தன்மையோடும் (அதாவது ரூபியாம் அரூபியுமான ஸ்தூலஸூக்ஷ்மப்ரபஞ்சங்களை வடிவாகக்கொண்டு) |
| உளன் என இலன் என இவை குணம் உடைமையின் | உளனென்றும் இலனென்றுஞ் சொல்லப்படுகிற அஸ்தித்வ நாஸ்தித்வங்களை ப்ரகாரமாகவுடையனாகுந்தன்மையினாலே | ஒழிவு இலன் பரந்து உளன் | எல்லாக்காலங்களிலும் எல்லாவிடங்களிலுமுள்ளவனாகவே ஸித்திப்பன் |

* * * — [உளனெனிலுளன்.] இப்பாட்டால் ஸர்வ சூந்யவாதி நிரஸிக்கப்படுகிறான். ப்ரஹ்மஸூத்ரம் இரண்டாவது அத்யாயம் இரண்டாவது பாதத்தில் * ஸர்வதாநுபபத்தேஶ்ச * என்கிற ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் பாஷ்யகாரர் சூந்யவாதத்தைக் கண்டித்திருப்பது பெரும்பாலும் இப் பாசுரத்தின் நடையை உட்கொண்டேயாம். அங்கு ஸ்ரீபாஷ்யத்திலுள்ளதை இங்குச் சுருக்கமாக நிரூபித்துக் காட்டுவோம்;— 'ஸர்வம் சூந்யம்' என்று நீ ஸாதிக்க விரும்புவது ஒருபடியாலும் ஸம்பவிக்கமாட்டாது. ஸர்வசூந்ய வாதியான நீ என்னவென்று சொல்லுகிறாய்? 'எல்லாம் உள்ளது' என்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறாயா? அல்லது 'எல்லாம் இல்லது' என்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறாயா? ஸர்வ சூந்யவாதியான நான் 'எல்லாம் உள்ளது' என்று ப்ரதிஜ்ஞை பண்ணுவதற்கு ப்ரஸக்தி லேசமுமில்லாதிருக்க இப்படி விகல்பிக்கலாமோ என்கிறாயோ, இங்ஙனே நன்கு விகல்பிக்கலாம். 'எல்லாமுள்ளது' என்று ப்ரதிஜ்ஞை பண்ணினால் என்ன தேறுமோ அதுவேதான் 'எல்லாம் இல்லது' என்கிற ப்ரதிஜ்ஞையாலும் தேறும் என்று நிரூபிப்பதேகாண் இங்ஙனே விகல்பிக்கின்ற எம்முடைய கருத்து. உலகத்தில், உண்மையென்றும் இல்லாமையென்றும் இரண்டுவகையான சப்தங்களும் ப்ரதீதிகளும் இருக்கின்றனவே; அவற்றின் விஷயம் என்னவென்று ஆராய்ந்தால், உள்ளதான வஸ்துவுக்கே நிலைமைவேறுபாடுகள் நேருவதே மேற்குறித்த ப்ரதீதிகளுக்கு விஷயமாகும். 'இங்கே துணியிருக்கின்றது'

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்றால் பஞ்சினுடைய அல்லது நூலினுடைய நிலைமைவேறுபாடு தோன்றும். முன்பு பஞ்சாகவோ நூலாகவோ இருந்த பொருள் இப்போது துணியாகிய வேறொரு நிலைமையைப் பெற்றுள்ளது என்றபடியாகும். 'துணி அழிந்து போயிற்று' என்றால் துணி யென்னும்படியான காரிய நிலைமையைவிட்டுக் காரணாவஸ்தையாக மாறிவிட்டது என்றபடியாகும். இந்த விதமாகவே எந்த ப்ரதியாலும் அடியோடு சூந்யத்வமென்பது ஸித்திக்கவேமாட்டாது.

'முயற்கொம்பு இல்லை, மலடிமகன் இல்லை, ஆகாசத்தாமரை இல்லை' என்றால் மேற்குறித்த வஸ்துக்களின் அத்யந்த சூந்யத்வம் விளங்குகின்றதே; இவ்விடங்களில் அவஸ்தாந்தராபத்தி யென்பது சொல்லமுடியாதன்றோ என்னில்; இங்கும் அடியோடு சூந்யத்வமென்பது ஒருநாளும் ஏற்படாது. முயற்கொம்பு இல்லையென்றால் முயல் இல்லையென்றும் கொம்பு இல்லையென்றும் ஏற்படுமோ? மலடி மகன் இல்லையென்றால் மலடியில்லையென்றும் மகன் இல்லையென்றும் ஏற்படுமோ? ஆகாசத்தாமரை யில்லை யென்றால் ஆகாசமேயில்லை, தாமரையே யில்லையென்பதாக ஏற்படுமோ? மேற்குறித்த பொருள்களெல்லாம் உண்டென்பது மறைக்கமுடியாது; ஆனால், 'முயலுக்கும் கொம்புக்கும் ஸம்பந்தமில்லை, மலடிக்கும் மகனுக்கும் ஸம்பந்தமில்லை, ஆகாசத்திற்கும் தாமரைக்கும் ஸம்பந்தமில்லை' என்று அந்தந்த வஸ்துக்களுக்குப் பரஸ்பர ஸம்பந்தமில்லை யென்பதாக ஸம்பந்தாபாவம் மாத்திரம் ஏற்படுமேயன்றி அந்த வஸ்துக்களே அடியோடு இல்லையென்பதாக ஒருபோதும் ஏற்படாது. ஆகவே ஸர்வசூந்யவாதம் ஒருவழியாலும் ஸித்திக்க வகையில்லை. மேலும் ஒரு ப்ரமாணத்தைக்கொண்டு ஸர்வ சூந்யத்வத்தை ஸாதிக்கிறாயா? அல்லது ஒரு ப்ரமாணமுமின்றித் தாந்தோன்றியாக ஸாதிக்கிறாயா? என்று கேட்போம். ப்ரமாணத்தைக்கொண்டு ஸாதிக்கிறேனென்னில், அப்படிப்பட்ட ப்ரமாணம் ஒன்று ஸத்யம் என்பதாக ஏற்பட்டுவிடுமாதலால் ஸர்வம் சூந்யமென்கிற வாதம் ஒழிந்ததாகிறது. ப்ரமாணமில்லாமே தாந்தோன்றியாக ஸாதிக்கிறேனென்னில், அப்போதும் அப்ராமாணமான பேச்சென்று ஒழிந்ததேயாகிறது. — இத்யாதிகள் ஸ்ரீபாஷ்யகாரர் நிரூபித்தருளின விஷயங்கள். இவற்றை நெஞ்சில் தேக்கிக்கொண்டு இனி இப்பாசுரத்தின் கருத்தை நோக்குமின்.

உளனெனில் உளன் = 'ஈச்வரன் இல்லை' என்கிற நிரீச்வரவாதம் இப்பாட்டில் நிரஸிக்கப்படுகிறதாக விளங்குகின்றதேயன்றி ஸர்வசூந்யவாதம் நிரஸிக்கப்படுவதாக விளங்கவில்லையே என்று சிலர் சங்கிப்பர்கள். உண்மையில் ஸர்வசூந்யவாதியே இப்பாட்டில் நிராகரிக்கப்படுகிறான். ஸர்வமும் சூந்யமென்கிற வாதத்தில் ஈச்வரனுடைய சூந்யத்வமும் அடங்கினதாதலால் அதை நிரஸித்து 'ஈச்வரனுளன்' என்று ஸ்தாபிக்கப்பட்டுவிட்டால் ஈச்வரன்தானும் விபூதியுக்தனாகவே தேறுவானாதலால் அம்முகத்தாலே ஸகலமுமுள்ளதாக ஸ்தாபிக்கப் பட்டுவிடுகிறதென்பது ஆழ்வார் திருவுள்ளமாகக் காண்கிறது. ஒரு மனிதன் உளனாக ஏற்படும்போது செவி வாய் கண் மூக்குடல் முதலான உறுப்புகளோடு கூடியே ஏற்படுதல்போல எம்பெருமானுளனென்று ஏற்படுமிடத்தும் சேதநா

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சேதநங்களாகிற சரீரத்தோடு கூடியே ஏற்பட வேண்டுகலால் எம்பெருமானு டைய உண்மையை ஸாதிக்குமளவே ஸர்வசூந்யவாத கண்டனத்திற்குப் போதுமாயிற்று.

இல்லை என்று சொல்லுகிற வாதியைநோக்கி "உளனெனிலுளன்" என்று ஆழ்வாரருளிச்செய்வது எப்படிகூடும்? உளன் என்கிற பேச்சு அந்த வாதியின் வாயில் இல்லாதிருக்க உளனெனில் என்கைக்கு என்ன ப்ரஸக்தி? என்று சங்கை பிறக்கலாம். கேண்மின்; 'ஈச்வரனுளன்' என்று சொன்னால் எப்படி ஈச்வரனுடைய வுண்மை தேறுமோ அப்படியே 'ஈச்வரன் உளனலன்' என்று லும் ஈச்வரனுடைய உண்மையே தேறும்என்று காட்டுதற்கே ஆழ்வார் இங்ஙன மருளிச்செய்தவாறு. வைதிகர்களான நாங்கள் உளன் என்கிற சொல்லாலே ஈச்வரனுடைய உண்மையை ஸாதிக்கிறோம்; அந்த வுண்மையையே இலன் என்கிற சொல்லாலே நீ ஸாதித்தாயாகிறாய் என்று நிரூபிக்கிறபடி.

சூந்யவாதியான உன்னைக் கேட்போம்; ஈச்வரனில்லாமையை ஸாதிக்க நினைக்கிற நீ ஸாதிக்கவேண்டிய அம்சத்தை ஒரு வாக்யத்தாலே ப்ரதிஜ்ஞை பண்ணிப் பின்பு ஒரு ஹேதுவாலே அதனை ஸாதிக்கவேணுமே; அப்படி நீ ஹேது சொல்லுவதற்கு முன்பே உன் ப்ரதிஜ்ஞையைக் கொண்டே ஈச்வரனுள னென்றதாக ஸாதிப்பேன். ஈச்வரனுடைய இல்லாமையை நீ ப்ரதிஜ்ஞை பண்ணுவது உளனென்கிற சொல்லாலேயோ? உளனலன் [இலன்] என்கிற சொல்லாலேயோ? இப்படி கேட்கைக்குக் கருத்து என்? என்கிறாயோ, உளனென் கிற சொல்லால் இல்லாமையைக் காட்டமுடியாதாப்போலவே இலனென்ற சொல்லாலும் நீ ஸாதிக்க நினைக்கிற இல்லாமை காட்டமுடியாதென்கை. அது எங்ஙனே யென்னில்; உண்டு என்ற சொல்லாலும் இல்லை என்ற சொல்லாலும் உலகத்தில் யாதொரு பொருள் தேறக்காண்கிறோமோ அப்பொருள் தானே உன் சொற்களுக்கும் பொருளாகத் தேறவேணும். உலகிற் கண்டறியாத பொருளை இந்தச் சொற்கள் காட்டமாட்டாவே. உலகத்தில் 'குடம் உண்டு' என்றால் குடமென்று சொல்லப்படுகிற பொருள் உண்மையென்பதொரு தருமத்தை யுடையதென்று தோற்றுகிற்கும். அவ்விடத்தில் குடமாவது மண்ணாலே பண் ணினதொன்று. அதின் உண்மையாவது — மண்ணு முருவையுமன்றியே இரண்டுக்கும் நடுவில்நிலைமையாய் வயிறும் வாயுமுடைத்தான மண்ணுபிருக்கை. இதுபோல, ஈச்வரனுளன் என்னில், உளனுத் தேறும்; இச் சொல்லால் அவ னுடைய இல்லாமை காட்டவொண்ணாது. ஈச்வரனுளன் என்னவே ஐச்வரி யத்தை யொழிய ஈச்வரன் உளனுகக் கூடாமையால் அவனுடைய விபூதியான [ஐச்வரியமான] ஜகத்தும் உள்ளதாகத் தேறும். தேறுமிடத்து அவனுக்குச் சரீரமாகவே தேறும். [ஆக இவ்வளவும் முதலடியின் கருத்து.]

[இனி இரண்டாமடியின் கருத்து.] ஈச்வரனிலன் என்ற சொல்லாலே அவனுடைய சூந்யத்வத்தைக்காட்ட நினைத்தாயாகில்; இல்லையென்பதிலும் உலகத்திற்கண்ட பொருள் கொள்ளவேணும். உலகத்தில் 'குடமில்லை' என்றால், இங்கு இல்லை என்றோ, இப்போது இல்லை என்றோ, மண்ணு நீளப் பிருந்து

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



குடமாய்ப் பிறந்ததில்லை யென்றோ, தளர்ந்து ஓடுகளாய்க் கிடந்ததென்றோ இவற்றிலொன்று பொருளாகக்கண்டோம். இப்படியல்லாமல் வெறுமனே குடமில்லை யென்னில், என்றைக்கும் எவ்விடத்தும் எப்படியும் குடமில்லையென்று சொல்லிற்றாகவேணும்; அப்படியாகில் எப்படியும் குடமென்று ஒன்று அறிய உபாயமில்லையாகையால் குடமென்று சொல்லவுங்கூடாது, நினைக்கவுங்கூடாது. ஆதலால் ஒன்று இல்லை யென்பவன் அஃது ஒருபடியாலன்றியே மற்றைப்படியாலிருப்பதாக இசையவேணும். ஆகவே, இங்கில்லை யென்றது அங்குண்டு என்றவாறு. இப்போதில்லை யென்றது மற்றொருபோதிலுண்டென்றவாறு. குடமில்லை யென்றது மண்ணுருவையாகவாதல் ஓடுகளாயாதல் இருந்ததென்றவாறு. ஆகவிப்படியால், இல்லாமை யென்பது மற்றொருபடியால் உண்மை யென்பதாக முடிந்தது. இவ்விதமாகவே ஈச்வரனில்லை யென்றானுக்கும் அவன்றன்னையும் அவனது ஐச்வரியங்களையும் ஒருபடியாலுளவாகக் கொண்டு மற்றைப்படியால் இல்லை யென்றதாகவேண்டும். ஆதலால் உளன் என்ற சொல்லாலே அவனும் அவனைச்வரியமும் ஸித்திக்குமாபோலே இலன் என்ற சொல்லாலும் அவன் றன்னுடைய வுண்மையும் அவனது ஐச்வரியத்தினுண்மையும் ஸித்தித்ததாயிற்று.

[உளனெனில் அவனுருவம் இவ்வுருவுகள்; உளனலனெனில் அவனருவமிவ்வருவுகள்.] ஈச்வரனுக்கு உளனாயிருக்குந் தன்மையாவது ஸ்தூலரூபத்தோடுகூடிய சேதநாசேதநங்களைச் சரீரமாகவுடையனாயிருக்குந் தன்மையேயாம். இனி, இலனாயிருக்குந்தன்மையாவது ஸூக்ஷ்மரூபத்தோடுகூடிய சேதநாசேதநங்களைச் சரீரமாகவுடையனாயிருக்குந்தன்மையேயாம். உபநிஷத்தில் * ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் * என்றும் * அஸதேவேதமக்ர ஆஸீத் * என்றும் ஓதப்பட்டுள்ள இடங்களில் 'ஸூக்ஷ்மசிதசித் சரீரகத்வமே அஸத்த்வம்' என்று நிர்ணயிக்கப்படுவதாகத் தேறுதலால் அதனை அடியொற்றி ஆழ்வார் உளனலனெனில் அவனருவமிவ்வருவுகள் என்றருளிச்செய்தாரென்க. 'ஈச்வரனுண்டு' என்றால் ஸ்தூலரூப ப்ரபஞ்ச விசிஷ்டத்வம் விவக்ஷிதம்; 'ஈச்வரனில்லை' என்றால் ஸூக்ஷ்மரூப ப்ரபஞ்ச விசிஷ்டத்வம் விவக்ஷிதம்; ஆக இவ்விரண்டு வகை தவிர அடியோடு சூந்யத்வமென்பது எவ்வழியாலும் ஏற்படாதென்றதாயிற்று.

பின்னடிகளின் கருத்தாவது — உளன் என்ற ப்ரதிஜ்ஞையாலே உண்மை ஏற்படுகிறது; இலன் என்ற ப்ரதிஜ்ஞையாலே இன்மை ஏற்படுகிறது. உண்மையாவது அஸ்தித்வம்; இன்மையாவது நாஸ்தித்வம். இவ்விரண்டு தருமங்களும் ஒரு பொருளை ஆச்ரயித்தேயிருக்க வேண்டுதலால் நாங்கள் சொல்லுகிற அஸ்தித்வத்திற்கு ஆச்ரயமாகவும் நீ சொல்லுகிற நாஸ்தித்வத்திற்கு ஆச்ரயமாகவும் ஒரு வஸ்து ஸித்தித்தே தீரவேண்டும். நாஸ்தி என்று இல்லைசெய்யாநிற்க எங்ஙனே ஒரு வஸ்து தேறும்? என்று ஆக்ஷேபிக்க முடியாது; ஏதோ வொரு வஸ்துவைச் சுட்டித்தானே நாஸ்தி யென்னவேண்டும்; அப்படி நாஸ்தி என்று நீ சொல்லுகிற வஸ்து எது? என்று கேட்டால் அப்போது அதனை நீ நிரூபித்தே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யாகவேண்டுமே; ஆனதுபற்றியே நாஸ்தித்வத்திற்கு ஆச்ரயமாகவும் வஸ்துவி னுண்மை ஸித்தித்தே தீருமென்கிறோம். அப்படி ஸித்திக்குமளவில் அதற் குள்ள ஸ்வரூப ஸ்வபாவங்களோடு கூடவே அந்த வஸ்து ஸித்திக்கு மாதலால் ஸர்வதேச ஸர்வகால வ்யாபியான எம்பெருமான் ஸவிபூதிகனாய் ஸித்தித்தா னாயிற்று என்றதாம்.

இப்பாட்டின் கருத்தை இதற்கு மேற்படவும் பன்னியுரைக்க இயலாது; எவ்வளவு பன்னிப்பன்னி யுரைத்தாலும் வல்லார்வாய்க்கேட்டுணர்ந்தாலன்றித் தெளிவு பிறவாது. .... .... .... .... .... .... ... (கூ)

பரந்ததண்பரவையுள் நீர்தொறும்பரந்துளன் *
பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவற *
கரந்தசிலிடந்தொறும் இடந்திகழ்பொருடொறும் *
கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்டகரனே * (கO)

| பதம் | பொருள் |
|---|---|
| பரந்த | எங்கும் வியாபித்த |
| தண் பரவையுள் | குளிர்ந்த கடலினுள் |
| நீர் தொறும் | ஜலபரமாணுதோறும் |
| பரந்த அண்டம் இது என பரந்து உளன் | விஸ்தாரமான இவ்வண்டத்தி லிருக்குமாபோலே நெருக்குண்ணாமல் இருப்பவனாய் (இப்படி) |
| நிலம் | பூமியிலும் |
| விசும்பு | மேலுலகங்களிலும் |
| ஒழிவு அற | ஒன்றொழியாமே |
| கரந்த சில் இடம் தொறும் | அதி ஸூக்ஷ்மமாய் அற்பமான இடங்கள் தோறும் |
| இடம் | அவ்வவ்விடங்களிலே |
| திகழ் | விளங்காநின்ற |
| பொருள் தொறும் | ஆத்மவஸ்துக்கள் தோறும் |
| கரந்து | (வ்யாப்யவஸ்துக்களும் அறியாதபடி) மறைந்து |
| எங்கும் பரந்து உளன் | எல்லாவிடங்களிலும் வியாபித்திராநின்றான் (யாவனெனில்;) |
| இவை உண்ட கரன் | இவ்வஸ்துக்களை ஸம்ஹாரதசையிலும் தனக்குள்ளே யடக்கி,தான் ஸ்திரமாயிருக்கு மெம்பெருமான் |

* * * — [பரந்ததண்பரவையுள்.] பரத்துவத்தைப் பேசுவதான இப்பதிகத்தில் ஸ்ரீமந்நாராயணனுக்கே பரத்வமுள்ளதாக ஸ்தாபித்தல் ஆழ்வாருடைய திருவுள்ளத்திலுள்ளது. அந்த நாராயணத் திருநாமத்தை மேற்பதிகங்களிலே ஸ்பஷ்டமாகப் பேசியருளுகிற ஆழ்வார் இந்தப் பதிகத்திலே ஒருவாறு மறைத்தே காட்டினர். கீழ் ஏழாம்பாட்டில் 'சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே'' என்றது முக்கியமாக நாராயணத் திருநாமத்தைத் திருவுள்ளம்பற்றியேயாமென்பது ஸம்ப்ரதாயம். சுருதி யென்றால் வேதம்; மிகுசுருதியென்றால் வேதாந்தமாகிய உபநிஷத்து; சுடர்மிகுசுருதி யென்றால் நாராயணாநுவாகம். ஆகவே நாராயணாநுவாக ஸித்தனான எம்பெருமானுக்கே இப் பதிகத்தில் பரத்துவம் பேசப்பட்டதென்பது குறிக்கொள்ளத்தக்கது. ஸர்வவ்யாபகத்வமே நாராயண நாமத்தின் தேர்ந்த பொருளாதலால் அதனை இப்பாட்டில் அருளிச்செய்கிறார்.

பரந்து குளிர்ந்திருந்துள்ள கடலில் நீர்த்திவலைகள்தோறும் வியாபித்திரா நின்றான் என்று முதலடியில் கூறினர். சாந்தோக்ய உபநிஷத்தில் சாண்டில்ய

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வித்யையில் — * ஸஹஷ்ர ஸ்தூணா கூஞஹ்ரூஉயெ ஜூாயாநுவ்யூயிவூா: ஜூாயா நஞூஸிக்ஷாஸ ஜூாயாநுதிவொ ஜூாயாநெஹெூா ஹொகெஷூ:'' என்று மிகப் பெரிதாக ஓதப்பட்டுள்ள பரம்பொருள் நீர்த்திவலையிலே வியாபியாநின்றால் அவகாசம் அற்பமாகி நெருக்குப்பட்டிருக்குமோவென்ன, அப்படிப் பட்ட வருத்தமில்லையென்று வ்யாப்தியின் ஸௌகரியத்தை இரண்டாமடியாற் கூறுகின்றார். ஓர் அண்டத்தை ஸ்ருஷ்டித்து அதிலே ஏகாகியை வைத்தால் எப்படியிருக்குமோ அப்படி அஸங்குசிதமாகவே வ்யாப்தியுள்ள தென்றவாறு.

இப்படி ஜலபரமாணுக்களிலே வியாபித்துவிடு மிவ்வளவேயோவென்ன; நில விசும்பொழிவற என்று பூமியிலும் ஆகாசத்திலும்அப்படியே யென்கிறார். ஸகல பதார்த்தங்களிலும் வியாப்தியுண்டென்று சொன்னபடி. அதனையே பின்னடிகளில் விவரிக்கின்றார் [கரந்தசிலிடந்தோறும் இத்யாதியால்.] இமையோடு இமைபொருந்தும்போதைக் காற்றிலே முடியும்படியான ஸூக்ஷ்மமான அல்ப சரீரங்கள்தோறும், அந்தந்த சரீரங்களிலே ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய்க்கொண்டு விளங்காநின்ற ஆத்மாக்கள்தோறும் யார்க்கும் தெரியாதபடி வியாபித்திருக்கும்.

ஜீவாத்மாவானவன் சரீரத்திலே வியாபித்திருப்பது ஞானத்தினாலேயன்றி ஸ்வரூபத்தாலேயன்று; பரமாத்மா அங்ஙனன்றியே ஸ்வரூபத்தாலே எங்கும் வியாபித்திராநின்றானென்க.

இப்படி சொல்லக்கூடுமோ? ஜீவஸ்வரூபமோ அணுவாக ஓதப்பட்டது; பரமாத்ம ஸ்வரூபமோ விபுவாக ஓதப்பட்டது. அணுவஸ்துவினுள்ளே விபுவான வஸ்து குறையற வியாபித்திருக்குமென்றால் இது எங்ஙனே ஸம்பாவிதம்? என்ன, இவையுண்டகரனே என்பது இதற்கு ஸமாதானம்போலுள்ளது. "சிறு வடிவைக்கொண்டு பெரியவற்றையெல்லாம் தன்வயிற்றிலே வைத்தால் * தாழ் குழலார்வைத்த தயிருண்ட பொன்வயிறு, இவ்வேழுலகுமுண்டுமிடமுடைத்தால் என்கிறபடியே பின்னையும் அவ்வயிறே இடமுடைத்தாம்படி யிருக்கவல்ல ஸர்வ சக்தி சிறியவற்றிலே குறைவற இருக்கமாட்டானோ என்கிறார்" என்பது நம்பிள்ளையீடு.

கரன் = வர: என்ற வடசொல்விகாரம்; திடமாகவுள்ளவன் என்றபடி: திடமான பிரமாணமாகிய வேத வேதாந்தங்களில் ஸித்தன் என்றவாறு.

ஜாதியானது வ்யக்திதோறும் பரிஸமாப்யவர்த்திக்குமாபோலே எம்பெருமான் பதார்த்தங்கள்தோறும் பரிஸமாப்யவர்த்திப்பன் என்பது "பரந்தவண்டமிதெனப் பரந்துளன்" என்றவிதில் அநுஸந்தேயம். பரிஸமாப்ய வர்த்தித்வமாவது 'ஒவ்வொரு வஸ்துவிலும் 'ஸ்வரூபம் ஸமாப்தமாயிற்று' என்னும்படியாக நிறைந்திருக்கை. "வ்யாப்தனுக்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வமாவது ஓரோரு உவாயூவ தூஹவூஜெமமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல சக்தியுடைத்தாயிருக்கை; அல்லது வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தியன்று; இது கொள்ளில் ஷஹி வஷூாஷிக்கு விருத்தமாம்; இத்தை அகடிதகடநா சக்தியாலே நிர்வஹிக்கில் விருத்தஸமுச்சயங்கொள்ளும் பரமதங்களிற்படியாம்" என்று சில ஆசார்யர்கள்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருவுள்ளம் பற்றுகிறார்கள். ப்ரஹ்மஸூத்ரத்தில் இரண்டாவது அத்தியாயத்தில் முதற்பாதத்திலுள்ள ஜ்யோதிராத்யதிகரணத்தில் * ஜ்யோதிராத்யதிஷ்டாநம் து ததாமநநாத் ;* என்னும் ஸூத்ரத்தின் வியாக்கியானத்தில் [வேதாந்த ஸாரத்தில்] “யதா ஜாதிவாசிநாம் ஜாதே: ஸர்வத்ராவிஷ்டா” என்று ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்தி நோக்கத்தக்கது. * ஒன்றுந்தேவுமென்கிற திருவாய்மொழியின் [4-10-1.] ஈடு முப்பத்தாறாயிரப்படி ப்ரவேசத்தில் “ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்யவர்த்திக்குமென்றால் அசித் பதார்த்தத்துக்கு இது கூடும் என்றிருப்பர்கள்; பரமசேதநனாயிருப்பா னொருவன் பரிஸமாப்யவர்த்திக்குமென்றால் இது கூடாதென்று ஸம்சயியா நிற்பர்கள்” என்று நம்பிள்ளை அருளிச்செய்திருக்கையாலே ‘ஈச்வரனுக்கு வஸ்துதோறும் ஸ்வரூபத: பரிஸமாப்யவர்த்தித்வம் கூடாதென்கிற கொள்கை நம்பிள்ளைக்கு மிக முன்னமேயே சில ஆசார்யர்களின் கொள்கையாக இருந்ததென்று புலப்படாநின்றது. ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் ஈச்வரபரிச்சேதத்தில்— “திவ்யாத்மஸ்வரூபஸ்ய ஸர்வகதத்வம்” என்று தொடங்கிப் பல விகல்ப தூஷணங்கள் பண்ணிக்கொண்டுபோய் “அதஸ்ஸர்வஞ் * ஜ்யோதிராத்யதிஷ்டாநம் ததாமநநாத் இதி ஸர்வகதஸ்ய * ஜ்யோதிராத்யதிஷ்டா... இத்யாதிபி: ஸர்வாந்தர்யாமித்வம் ஸ்வரூபேணைவ ஸித்த்யதி. அதோயதாத்ரயம் ஸ்வரூபேணைவ ஸர்வகதோ பவதி” என்றருளிச்செய்திருக்கையாலே ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளத்தையே தேசிகனும் தழுவியருளினார் என்னப் பொருந்தும். .... .... .... .... .... (௧௦)

கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை *
வரனவில்திறல்வலி அளிபொறையாய்நின்ற *
பரனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொல் *
நிரனிறையாயிரத்து இவைபத்தும் வீடே. * (௧௧)

| | | | |
|---|---|---|---|
| கரம் | திடமான | வலி | (எதையும் தூக்கவல்ல) பலமென்ன |
| விசும்பு | ஆகாசமென்ன | அளி | குளிர்ச்சியென்ன |
| எரி | அக்னியென்ன | பொறை | எதையும் பொறுத்துக் கொண்டிருப்பதாகிற க்ஷமையென்ன |
| வளி | வாயுவென்ன | ஆய் நின்ற | ஆகிய இத்தருமங்களெல்லாம் தன்வசமாயிருக்கப்பெற்ற |
| நீர் | ஜலமென்ன | பரன் | ஸர்வேச்வரனுடைய |
| நிலம் | பூமியென்ன (ஆகிய) | அடி மேல் | திருவடிவிஷயமாக |
| இவை மிசை | இவற்றின்மீதுள்ள [இவற்றிற்கு ஸ்வபாவங்களாயுள்ள] | குருகூர் சடகோபன் சொல் | திருநகரியில் திருவவதரித்த நம்மாழ்வார் அருளிச்செய்த |
| வரன் | சிறந்த | | |
| நவில் | சப்தமென்ன | | |
| திறல் | (கொளுத்தும்) சக்தியென்ன | | |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| சொல் நிறை ஆயிரத்து | சப்தபூர்த்தியும் அர்த்த பூர்த்தியுங்கொண்ட ஆயிரம் பாசுரங்களிலே |
| இவை பத்தும் வீடு | இப்பத்துப்பாசுரமும் மோக்ஷப்ராபகம். |

* * * — [கரவிசும்பெரிவளி.] இது திருநாமப்பாட்டு எனப்படும். இப் பதிகம் கற்பார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிறது இது. இவை பத்தும்வீடே யென்றது இப் பத்துப் பாசுரமும் வீடாகிய மோக்ஷ ஸாம்ராஜ்யத்தைத் தர வல்லது என்றபடி.

பரனடிமேல் குருகூர்ச் சடகோபன்சொன்ன ஆயிரத்தில் இப்பத்தும் வீட ளிக்குமென்க. பரனுக்கு அடைமொழியாய் நிற்பன முன்னிரண்டடிகள். முத லடியில் ஐந்து பூதங்கள் சொல்லப்படுகின்றன. இரண்டாமடியில் அந்தப் பூதங் களின் குணங்கள் முறையே சொல்லப்படுகின்றன.

(1) விசும்பு - ஆகாசம்; அதன் குணம் - நவில் - சப்தம்.
(2) எரி - அக்நி; அதன் குணம் - திறல் - தஹநசக்தி.
(3) வளி - வாயு; அதன் குணம் - வலி - மிடுக்கு.
(4) நீர் - ஜலம்; அதன் குணம் - அளி - குளிர்ச்சி.
(5) நிலம் - பூமி; அதன் குணம் - பொறை - க்ஷமை.

என்று உணர்க.

இவையாய்நின்ற பரன் என்றது — இப்படிப்பட்ட பூதங்களையும் அவற்றின் குணங்களையும் உண்டாக்கி அவையெல்லாம் தானிட்ட வழக்காம்படி யிராநின்ற பரமபுருஷன் என்றபடி. பஞ்சபூதங்களையும் அவற்றின் குணங்களையும் சொன் னது மற்றுமுள்ள தத்துவங்களையுஞ் சொன்னபடியாய் லீலாவிபூதி முழுவதை யுஞ் சொல்லிற்றாகி, நித்ய விபூதிக்கும் அது உபலக்ஷணமாகி, ஆக உபயவிபூதி நிர்வாஹகனாயிருக்கிற பரமபுருஷனென்றதாயிற்று. அவனது திருவடிகளின் மேலே குருகூர்ச்சடகோபன் சொன்னவாயிரமென்க. எம்பெருமானுடைய ஸ்வ ரூபம் ரூபம் குணம் விபூதி முதலிய எல்லாவற்றையும் விஷயமாகக்கொண்டு அருளிச்செய்யப்பட்டதாயிருக்க அடிமேற் சொன்னதாக அருளிச்செய்ததென்? எனில்; இது உபசாரவழக்கு.

குருகூர்ச்சடகோபன் சொல் = 'குருகா' என்னும் வடசொல் குருகை யென ஐயீறாயிற்று. ஆழ்வார் திருநகரி வடமொழியில் 'குருகாபுரீ' என வழங் கப்பட்டது; அதுவே தமிழில் குருகூரென வழங்கலாயிற்று. சடகோபன் = கர்ப் பத்திலிருக்கும்பொழுது ஞானமுடையனவா யிருக்கிற குழந்தைகளைப் பிறந்த வுடனே தனது ஸ்பர்சத்தால் அஜ்ஞாநத்துக்கு உள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந்தன்மையான சடமென்னும் வாயு இவரையும் பிறந்தபொழுது தொடுதற்குவர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒறுத்து ஓட்டியொழித்ததனால் இவர்க்குச் சடகோபர் என்று திருநாமமாயிற்று.

ஆழ்வார்தாமே * குருகூர்ச்சடகோபன்சொன்ன என்று பிறர்போலக் கூறி னது கவிஸம்ப்ரதாயம். பக்தி தலையெடுத்துத் திவ்யப் பிரபந்தங்களை அரு ளிச்செய்கிற ஆழ்வார் தமது திருநாமத்தை நிர்த்தேசித்துக் கொள்வது —

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பின்புள்ளார் ஆதரித்துப் பரிக்ரஹித்தற் பொருட்டாம். வேதத்தில் * യച്ച കിഞ്ചിജ്ജഗത്സവ്വം ദൃശ്യതേ * സഹോവാച വ്യാസഃ പാരാശര്യഃ * ബ്രഹ്മവാദിനോ വദന്തി * என்பனபோன்ற நிர்த்தேசங்கள் ஆப்திக்கு உடலாக அமைந்ததுபோலே இதுவும் அமைந்ததென்று கொள்க. ஸ்ரீராமாயணத்தில் பாலகாண்டத்தில் நான்காவது ஸர்க்கத்தில் * പ്രാപ്തരാജ്യസ്യ രാമസ്യ വാല്മീകിർഭഗവാനൃഷിഃ | ചകാര ചരിതം കൃത്സ്നം വിചിത്രപദമാത്മവാൻ=ப்ராப்தராஜ்யஸ்ய ராமஸ்ய வால்மீகிர் பகவாந் ருஷி: -, சகார சரிதம் க்ருத்ஸ்நம் விசித்ரபதமாத்மவாந்." என்று வால்மீகிமுனிவர் தாமே சொல்லிக்கொண்டிருப்பதும் இங்கு உணரத்தக்கது.

நிரனிறையாயிரத்து என்றவிடத்து ஈடு முப்பத்தாறாயிரப்படி ஸ்ரீஸூக்திகள் காண்மின்; — "நிரல்நிறை என்னுதல், நிரன் நிறை என்னுதல். நிரல் நிறை என்றபோது சப்தங்களும் நிறைந்து அர்த்தங்களும் புஷ்கலமாயிருக்கை. நிரன் நிறை என்றபோது நேரே நிறுத்தப்படுகை. * ശബ്ദാർത്ഥൌ സത്കവിരിവ ദ്വയം * വാദഃ പരോക്ഷരസർവ്വജ്ഞഹൃദയ സമ്മിതഃ * என்கிறபடியே லக்ஷணங்களிற் குறையாமே எழுத்துஞ் சொல்லும் பொருளுமந்தாதியும் க்ரமத்திலே நிறுத்தப்படுகை."

ஆயிரம்=ஆயிரம் பாசுரம் பாடவேணுமென்று ஆழ்வார் ஸங்கல்பஞ்செய்து கொண்டு அருளிச்செய்யப்புகவில்லை; * மயர்வற மதிநலமருளப்பெற்றவராகையாலே ஆயிரம் பாசுரங்கள் தம் திருவாக்கில் அவதரிக்குமென்றுணர்ந்து அருளிச்செய்தபடி. எம்பெருமான் விஷயத்திலே ஆயிரம் பாசுரம் பேசியல்லது தரிக்கமாட்டாத தம்முடைய நிலைமையைக்கொண்டு அருளிச்செய்தபடியாகவுமாம்.

எம்பெருமானுக்கு இங்ஙனே ஒரு ஆயிரம் பாடல் அமைந்த அதிசயத்தைப்பற்றிக் கம்பர் சடகோபரந்தாதியில் இட்ட செய்யுள் காண்மின்;— "சோதனவுளவோ பெருஞ் செல்வர்க்கு வேதஞ் செப்பும், பேராயிரந் திண்பெரும்புயமாயிரம் செய்துளவத், தாரார் முடியாயிரம் குருகூர்ச் சடகோபன்சொன்ன, ஆராவமுதக்கவியாயிரமவ்வரியினுக்கே." (சடு.) என்பதாம் இதன் கருத்தாவது- ஸ்ரீமந்நாராயணனுக்கு வேதங்களெடுத்துரைத்த திருநாமங்கள் ஆயிரம்; வலிய பெரிய தோள்கள் ஆயிரம்; திருத்துழாய்மாலை பொருந்திய திருமுடிகள் ஆயிரம். இப்படி எல்லாம் ஆயிரமாகவே அமைப்பெற்றுள்ள எம்பெருமானுக்கு நம்மாழ்வார் பாடிய அமுதம்போன்ற பாசுரங்கள் ஆயிரமும் அமைந்தன; பெருஞ் செல்வமுடையார்க்கு மற்றுஞ் சேராத பொருள்களுமுண்டோ? பெருஞ் செல்வமுடையார்க்கே யன்றோ மேன்மேலும் பெருஞ் செல்வம் வந்து சேருவது என்பதாம்.

இவைபத்தும் வீடே=இப்பத்துப்பாசுரங்களும் எம்பெருமானுடைய திருவடிகளின்மேல்விடப்பட்டன-ஸமர்ப்பிக்கப்பட்டன என்றும் பொருளுரைப்ப.(கக)

முதல் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

—

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

ஜீயர் திருவடிகளே சரணம்.

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

(தனியன்கள்.)

அல்லும் பகலு மனுபவிப்பார் தங்களுக்குச்
சொல்லும் பொருளுந் தொகுத்துரைத்தான் — நல்ல
மணவாள மாமுனிவன் மாறன் மறைக்குத்
தணவாநூற் றந்தாதி தான்.

பதவுரை.

| பதம் | பொருள் |
|---|---|
| அல்லும் பகலும் | இரவும் பகலுமாகிய எப்பொழுதும் |
| சொல்லும் பொருளும் | (இனிமையான) சொற்களையும் பொருள்களையும் |
| அனுபவிப்பார் தங்களுக்கு | (நெஞ்சு குளிரும்படி) அநுபவிக்கவிரும்புமவர்கட்காக, |
| நல்ல மணவாள மாமுனிவன் தான் | நன்மை பொருந்திய மணவாள மாமுனிகள் |
| மாறன் மறைக்கு | நம்மாழ்வாரருளிச்செய்த தமிழ் வேதமான திருவாய்மொழிக்கு |
| தணவா நூற்றந்தாதி | மிகவும் பொருந்தின நூற்றந்தாதியை |
| தொகுத்து உரைத்தான் | ஸங்கிரஹமாக அருளிச் செய்தார். |

* * * — நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் ஒவ்வொரு பதிகத்திற்கும் ஸாரஸங்கிரஹமாக மணவாளமாமுனிகள் ஒவ்வொரு வெண்பா அருளிச்செய்து, அது 'திருவாய்மொழி நூற்றந்தாதி' என்று பிரஸித்தமாகவுள்ளது. சிலர் அழகிய சொல்தொடையமைந்த பிரபந்தங்களை அநுபவிக்க விரும்புவர்கள்; சிலர் அழகிய பொருட் பொலிவு அமைந்த பிரபந்தங்களை அனுபவிக்க விரும்புவர்கள். சிலர் சொற்செறிவு, பொருட்பொலிவு என்ற இரண்டு அமைதியும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற பிரபந்தங்களைக்கொண்டு போதுபோக்க விரும்புவர். இந்தத் திருவாய்மொழி நூற்றந்தாதி சப்த ஸந்தர்ப்பத்தின் காம்பீர்யத்தினாலும் அர்த்தஸ்வாரஸ்யத்தினாலும் நெஞ்சைக் கவரவல்லதாதலால், அல்லும் பகலும் சொல்லும் பொருளுமனுபவிக்க ஆசைப்படுமவர்கட்கு ஏற்ற விருந்தாக அமைந்தது என்க.

ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் எது ஸாரமான பொருளோ அது இதில் ஒவ்வொரு பாசுரத்திலும் அமைந்துள்ளது. ஒவ்வொரு பாட்டிலும் நம்மாழ்வாருடைய திருநாமமும் அவருடைய துதியும் அமைந்துள்ளது. திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகத்தின் தொடக்கச்சொல்லே இப்பாசுரங்கட்கும் தொடக்கச் சொல்லாக அமைந்துளது. அவ்வளவு மாத்திரமன்றியே இப் பிரபந்தமும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

அந்தாதித் தொடையிலே அமைக்கப்பட்டுள்ளது. ஆகவே இத்தனை ஸ்வாரஸ்யங்களோடுகூடின பிரபந்தம் இந்நிலவுலகத்தில் வேறொன்றில்லை யென்பது வெளிப்படை. மணவாளமாமுனிகளின் ஒப்புயர்வற்ற ஆராய்ச்சித் திறனையும் இனிய எளிய சொற்களால் பாடுந்திறனும் இதிற் புலனாகும். .... ... (*)

---

(மற்றொரு தனியன்.)

மன்னு புகழ்சேர் மணவாள மாமுனிவன்
தன்னருளா லுட்பொருள்கள் தன்னுடனே — சொன்ன
திருவாய் மொழிநூற்றந் தாதியாந் தேனை
ஒருவா தருந்துநெஞ்சே யுற்று.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே! | சொன்ன | அருளிச்செய்த |
| மன்னு புகழ் சேர் | நிலைபெற்ற கீர்த்தியையுடையரான | திருவாய்மொழி நூற்றந்தாதி ஆம் தேனை | திருவாய்மொழி நூற்றந்தாதியாகிற தேனை |
| மணவாளமாமுனிவன் —; | | ஒருவாது | இடைவிடாமல் |
| தன் அருளால் | தமது கிருபையினாலே | உற்று | ஊன்றி |
| உள் பொருள்கள் தன்னுடனே | ஆழ்ந்த கருத்துக்கள் அமையும்படி | அருந்து | பருகக்கடவை. |

*** — "பாலோடமுதன்னவாயிரம்" என்றும் "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றும் "கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" என்றும் சொல்லுகிறபடியே பரம மதுரமான திருவாய்மொழியின் ஸாரமாகிய இந்த நூற்றந்தாதிப் பிரபந்தம் அது தன்னிற் காட்டிலும் அத்யந்த மதுரமாகையாலே "திருவாய்மொழி நூற்றந்தாதியாந் தேன்" எனப்பட்டது. உலகத்திலுள்ள தேனானது வாயினால் மாத்திரம் பருகத்தக்கது; இந்தத் தேன் வாயினாலும் நெஞ்சினாலும் பருகத்தக்கது; வாயினாற் பருகாவிடினும் நெஞ்சினாலாவது பருகினாற் போதுமென்பது தோன்ற "நெஞ்சே! திருவாய்மொழி நூற்றந்தாதியாந் தேனை அருந்து" எனப்பட்டது. எப்போதும் இப் பிரபந்தத்தைத் தியானிக்கவேணுமென்றபடி. .... .... (*)

தனியன் உரை முற்றிற்று.

---

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.
CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஜீயர் திருவடிகளே சரணம்.

## மணவாளமாமுனிகள் அருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதியில், முதற்பத்து முதல் திருவாய்மொழிக்கான பாசுரம்.



உயர்வே பரன்படியை உள்ளதெல்லாந் தான்கண்டு *
உயர்வேத நேர்கொண் டுரைத்து * — மயர்வேதும்
வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன் சொல் *
வேராகவே விளையும் வீடு.

பதவுரை.

| | |
|---|---|
| உயர்வு எய் | உயர்த்தி பொருந்திய |
| பரன் | பரமபுருஷனுடைய |
| படி உள்ளதை எல்லாம் | ஸ்வரூப ஸ்வபாவங்களாயி ருப்பவற்றை யடங்கலும் |
| தான் கண்டு | தாம் ஸாக்ஷாத்கரித்து |
| உயர் வேதம் நேர் கொண்டு | உயர்ந்த ப்ரமாணமாகிய சுருதியின் சாயையாலே |
| உரைத்து | அருளிச்செய்து, |
| மயர்வு ஏதும் வாராமல் | சிறிது அஜ்ஞானமும் தலைகாட்டாதபடியாக |
| மானிடரை | மனிதர்களை |
| வாழ்விக்கும் | உஜ்ஜீவிப்பித்தருளின |
| மாறன் | நம்மாழ்வாருடைய |
| சொல் வேர் ஆக | ஸ்ரீஸூக்தியடியாக |
| வீடு விளையும் | மோக்ஷமுண்டாகும். |

* * * — முதல் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய பரத்துவம் பிரதிபாதிக்கப்பட்டது. * ஆடவை யாயவையாய் நின்றவவர் என்றும் * முழுதுண்ட பரபரன் என்றும் * அளிவொறையாய்நின்ற பரன் என்றும் பரத்வமேயாயிற்று இதிற் சொன்னது.

உள்ள தெல்லாம் தான் கண்டு=கல்யாணகுணயுக்தன், நித்யவிபூதிநாதன் விலக்ஷண விக்ரஹ விசிஷ்டன் என்பன முதற்பாட்டில்; முதற்பாட்டிற் சொன்ன கல்யாணகுணங்கட்கு ஆச்ரயமான திவ்யாத்ம ஸ்வரூபம் சேதந அசேதந விலக்ஷண மென்பது இரண்டாம் பாட்டில்; நித்ய விபூதியோடொக்கவே ததீய மென்கிற ஆகாரத்தாலே உத்தேச்யமாய்த் தோற்றுகிற லீலாவிபூதியோகம் மூன்றும் பாட்டில்; அந்த லீலாவிபூதியின் ஸ்வரூபம் எம்பெருமானுடைய அதீனமென்பது நாலாம் பாட்டில்; அந்த லீலாவிபூதியின் ஸ்திதியும் அவனதீனமென்பது ஐந்தாம் பாட்டில்; அதன் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் அவனதீனமென்பது ஆறும் பாட்டில், ஜகத்துக்கும் ஈச்வரனுக்குமுண்டான சரீராத்மபாவம் ஏழாம் பாட்டில்: த்ரிமூர்த்தி ஸாம்யவாத நிரஸநம் எட்டாம் பாட்டில்; சூந்யவாதி நிரஸநம் ஒன்பதாம் பாட்டில்; வ்யாப்தி ஸௌகர்யம் பத்தாம் பாட்டில்; ஆக இப்படி உள்ளதெல்லாவற்றையும் * 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌦𑌦𑌾𑌮𑌿 𑌤𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌪𑌶𑍍𑌯 𑌮𑍇 𑌯𑍋𑌗𑌮𑌐𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 = திவ்யம் ததாமி தே சக்ஷுஃ பச்ய மே யோகமைச்வரம்.'' என்னுமாபோலே * மயர்வறமதிநலமருளப் பெறுகையாலே அவன் நிர்ஹேதுக க்ருபையினாலே காட்டக்கண்டு,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



உயர்வேத நேர்கொண்டு உரைத்து = எம்பெருமானுடைய பரத்வம் மேல் இரண்டாம் பத்தில் * திண்ணன்வீடுமுதல்முழுதுமாய் என்கிற இரண்டாந் திருவாய்மொழியிலும் அருளிச்செய்யப்பட்டிருந்தாலும் அங்கு இதிஹாஸ புராண ப்ரக்ரியையாலே அருளிச்செய்யப்படுகிறதென்றும் இங்கு ச்ருதிச் சாயையாலே அருளிச் செய்யப்படுகிறதென்றும் வாசியுண்டாகையாலே அது தெரியுமாறு "வேத நேர்கொண்டுரைத்து" எனப்பட்டது. "உளன் சுடர்மிகு சுருதியுள் இவையுண்டசுரனே" என்று ஆழ்வாராலும் இது வாய்விட்டுரைக்கப்பட்டதாயிற்று. ஆழ்வார் "சுடர்மிகு சுருதி" என்றதனால் இவர் "உயர் வேதம்" என்றார்.

மயர்வு ஏதும் வாராமல் = ஆழ்வாருடைய மயர்வை எம்பெருமான் போக்கினான்; ஸம்ஸாரிகளுடைய மயர்வை ஆழ்வார் போக்கினார் என்க. அடியோடு ஞானமே யில்லாமையும், ஒன்றை வேறொன்றாக அறிகையும், அதுவோ இதுவோவென்று ஸந்தேஹங்கொள்ளுதலும், தெரிந்ததை மறந்தொழிதலுமாகிற இவையெல்லாம் மயர்வு எனப்படும்; அது மானிடர்க்கு வாராமல் ஸ்ரீஸூக்திகளைத் தந்தருளி ஆழ்வார் வாழ்வித்தாராயிற்று.

உரைத்து மானிடரை வாழ்விக்கும் = அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யரென்றும் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரென்றும் ஆசார்யர்கள் இருவகைப்படுவர்: திருக்கோட்டியூர்நம்பிபோல்வாரைப்போலே பலகால் துவளவைத்து வருந்தி உபதேசிக்கும் ஆசார்யர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யரெனப்படுவர். * மூலைக்கடுப்பாலே தரையிலே பீச்சுவாரைப்போலே * பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொண்டு தம்பேறாக சிஷ்யர்களை உஜ்ஜீவிப்பிக்கும் ஆசாரியர் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரெனப்படுவர். அறிவிலிகளான ஸம்ஸாரிகளுக்கு உபதேசிக்கிறவளவில் ஸம்ஸாரத்தில் விரக்தராய் ஆத்மகுணங்கள் நிரம்பியவராய் நன்கு உபஸத்தி பண்ணினவர்களான சீடர்களுக்கு உபதேசிக்கவேண்டும் அர்த்த விசேஷங்களை பகவத்விமுகராய்ப் பிரயோஜநாந்தரபரராய் அநுவர்த்தந ஹீநரானவர்களுக்கும் வலியப்பிடித்து உபதேசிப்பது பரமகிருபையினாலன்றோ. "ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமான்" என்று நித்ய விபூதியிலுள்ளாரோடொக்க லீலாவிபூதியிலுள்ளார்க்கும் எம்பெருமானோடு ஸம்பந்தம் ஒத்திருக்க இவர்கள் அவனை இழந்துகிடக்க வொண்ணாதென்கிற ஸம்பந்த ஜ்ஞானமும் "கண்டு ஆற்றேனுலகியற்கை" என்று இவர்கள் ஸம்ஸாரத்தில்படுகிற அநர்த்தங்கண்டு பொறுக்கமாட்டாத ஸ்வபாவமும், ஈச்வரன் கைவிட்டவர்களையும் திருத்தியல்லது நிற்கமாட்டாத கரைபுரண்ட காருண்யத்தைக் கிளப்பியேதீரும்: அப்படிப்பட்ட காருண்யத்தினால் ஸம்ஸாரிகளுக்கு அரிய பெரிய ஆழ்பொருள்களை ஸ்வாநுபவ வ்யாஜத்தாலும் உபதேசரூபமாகவும் வெளியிட்டு வாழ்ச்சியை உண்டுபண்ணினார் ஆழ்வார்.

மாறன் சொல்வேராகவே விளையும் வீடு = வேர் இன்றி விருக்ஷம் கிளம்பாதவாறுபோல, ஆழ்வாரருளிச்செயலின்றி மோக்ஷம் விளையாதென்று காட்டினபடி.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஶ்ரீ:.

## ஶ்ரீகாஞ்சீ அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்த த்ரமிடோபநிஷத் ஸங்கதியில் இத்திருவாய்மொழிக்கான ச்லோகம்.



தத்ராதௌ து ஶதகே ப்ரதமகே ததாத்யே
ஸத்குணாக்ருதிவிபூதிவிஶேஷதுஷ்டௌ |
அத்யக்ஷயந் பரநரஹரி தத்பதீயாஸ்
தஸ்யாஸக்தியோஜிதமனாஸ்ஸம்ஜிஜ்ஞஹேவ ||

இதன் கருத்து;— திருவாய்மொழி முதற்பத்தின் முதற்பதிகத்தில், திருக் கல்யாண குணங்களோடும் திவ்யமங்கள விக்ரஹத்தோடும் விபூதியோடும் கூடிய எம்பெருமானை அவன்றன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலே நன்றாக ஸாக்ஷாத்கரிக்கப் பெற்ற நம்மாழ்வார் "தொழுதெழென் மனனே!" என்று அப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருவடிகளைத் தொழுகையிலே ஒருப்பட்ட நெஞ்சையுடையராயினர் — என்றவாறு.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஶ்ரீ:.

ஶ்ரீமத் வேதாந்ததேசிகன் இத்திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகத்திற்கும் ஸாரஸங்க்ரஹமாக த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளீ என்கிற க்ரந்தமும், ஒவ்வொரு சதகத்தின் ஸாரஸங்க்ரஹமாக த்ரமிடோபநிஷத்ஸார மென்கிற க்ரந்தமும் அருளிச்செய்துள்ளார். அவை உரையுடன் தனிப்புத்தகமாக வெளிவரும்.





CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி முதற்பத்து

## இரண்டாந்திருவாய்மொழி — வீடுமின்முற்றவும்.

# அவதாரிகை.

முமுக்ஷுக்கள் உபஜீவிக்கவேண்டியதான மோக்ஷசாஸ்த்ரம் முக்கியமாக இரண்டு விஷயங்களை நோக்கியிருக்கும்: அவையாவன — தத்துவமும், உபாஸநமும். இன்னது தத்துவமென்றும், அதன் ஸ்வரூபரூபகுண விபூதிகள் இப்படிப்பட்டவையென்றும் விவரிப்பதான சாஸ்திரம் தத்வபர சாஸ்த்ரமெனப்படும். அந்தத் தத்துவத்தைக் கிட்டுவதற்கான வழிகளை [—உபாயங்களை] வெளியிடுகின்ற சாஸ்த்ரம் உபாஸநபர சாஸ்த்ரமெனப்படும். வேதாந்த சாஸ்த்ரங்களில் தலையான ப்ரஹ்மஸூத்ரம் நான்கு அத்யாயங்கள்கொண்ட தென்பது ப்ரஸித்தம். அந்த நான்கு அத்யாயங்கள் வூர்வஷட்கம் [பூர்வத்விகம்] என்றும், உத்தரஷட்கம் [உத்தரத்விகம்] என்றும் இரண்டு பகுதியாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஸமந்வயாத்யாயம், அவிரோதாத்யாயம், ஸாதநாத்யாயம் பலாத்யாயம் என்று பெயரிடப்பெற்றிராநின்ற அந்த நான்கு அத்யாயங்களுள் முன்னிரண்டு அத்யாயங்கள் தத்வபரமென்றும் பின்னிரண்டு அத்யாயங்கள் உபாயபரமென்றும் ஆசார்யர்களால் நிஷ்கர்ஷிக்கப்பட்டிருப்பது இங்கு உணரத்தக்கது. ஃபலத்தைச் சொல்லுவதான நான்காவது அத்யாயத்தையும் மூன்றுவது அத்யாயத்தோடொக்க உபாயபரமாகச் சொல்லிவிடலாமோ வென்னில்; பலன் உபாயஸாத்யமாகையாலே சொல்லக் குறையில்லையென்று ஆசார்யர்களின் திருவுள்ளம்.

அப்படிப்பட்ட ஸம்ஸ்க்ருத வேதாந்த சாஸ்த்ரமே திருவாய்மொழியாகிய த்ராவிட வேதாந்த சாஸ்த்ரமாக வடிவெடுத்திருப்பதால் அந்த சாஸ்த்ரத்தின் விஷயங்களே இந்த சாஸ்த்ரத்திலும் அருளிச்செய்யப்பட்டுள்ளனவென்றும், முதலிரண்டு திருவாய்மொழிகள் ஸ்பஷ்டமாகவே தத்வபரமாகவும் உபாஸநபரமாகவும் அவதரித்துள்ளனவென்றும் நம் ஆசார்யர்கள் அழகாக நிர்வஹித்தருள்வர்கள். ஸ்ரீ காஞ்சி அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்த ஶாரீரக ஶாஸ்த்ர ஸங்கதி ஸாரமென்கிற விரிவான ஸ்ரீகோசத்தில் இவ்விஷயம் பரக்க நிரூபிக்கப்பட்டுள்ளமை காணத்தக்கது. ஸ்ரீமத் வேதாந்த தேசிகனும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் * ஸூக்ஷ்மௌ ஶாரீரகார்த்த க்ரமஇஹ விஶதம் விம்ஶதிர்ப்பூஷயந்தி ஸாத்ரா * என்றும், த்ரமிடோபநிஷத் ஸாரத்தில்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

* விகாஹ்யாம் ஆஷ்டாம்ஹி ப்ரபத்யதிகரணீதிஸ்ஸ்வர்ணிதா யத்ஞ்யா ஈஶாம்ஸா ப்ராக் திஷ்டவரதத்வம் ப்ரப்ருண்வத | தத்ராத்ர ஶாஸ்த்ராதி ப்ரபத்தி ரயிக்ஷவிம்ஶாஹிதஹ ந: க்ருதீ ஸாரக்³ராஹம் ப்ரதர்ஶிதஹ ஸம் க்ஷேப க்ருபயா || * என்றும் அருளிச்செய்துள்ளார்.

இப்படிப்பட்ட நிர்வாஹ ப்ரக்ரியையிலே முதல் திருவாய்மொழியானது தத்வபரமென்றும் இந்த இரண்டாந்திருவாய்மொழியானது உபாயபரமென்றும் விளங்காநின்றது. ப்ரஹ்மஸூத்ரத்தில் ஸமந்வயாத்யாயமென்று சொல்லப்படுகிற முதலத்யாயமானது ஸகல வேதாந்த வாக்யங்களும் பரப்ரஹ்மத்தினிடத்திலே நன்றாகப் பொருந்துமென்பதையும், அவிரோதாத்யாயமென்று சொல்லப்படுகிற இரண்டாவது அத்யாயமானது அப்படி நிர்ணயிக்கப்பட்ட வஸ்துவுக்கு பாஹ்ய குத்ருஷ்டிகளால் ஒரு பாதையுமில்லையென்பதும் நிரூபிக்கப்படுவதுபோல, கீழ்த்திருவாய்மொழியில் முதலேழு பாட்டாலே ஸமந்வயாத்யாயத்தின் அர்த்தம் மூதலிக்கப்பட்டது. மேல், * சுடரறிவருநிலை * உளனெனிலுளன் * என்கிற இரண்டு பாட்டாலும் பாஹ்யகுத்ருஷ்டிகளால்வரும் பாதையில்லாமை சொல்லும் முகத்தாலே அவிரோதாத்யாயத்தின் அர்த்தம் மூதலிக்கப்பட்டது. ஆனதுபற்றியே ' தத்வபரமாகச் சொல்லவேண்டுவதெல்லாம் சொல்லிற்று கீழிற்றிருவாய்மொழியிலே" என்று ஈடு முப்பத்தாறுயிரத்தி லருளிச்செய்யப்பட்டது.

இனி உபாயவிஷயமாகச் சொல்லவேண்டுவதைச் சொல்லுகிறது இந்த இரண்டாந் திருவாய்மொழி. தேசிகன் ந்யாஸதிலகத்தில் * நாநாஶப்³தா³தி³பே⁴தா³த் ஶ்ருதிஷு நிக³தி³தே ஸம்விதே³ ஸம்ஶ்ரிதாகாரபே⁴தை³: * என்று அருளிச்செய்தபடியே வேதாந்த ஸித்தமான உபாயம் பக்தி யென்றும் ப்ரபத்தியென்றும் இரண்டுவகைப்பட்டதாதலால் அவற்றுள் எந்த வுபாயத்தை இந்தத் திருவாய்மொழி தெரிவிக்கின்றதென்னில்; எம்பெருமானார்க்கு முன்புள்ள முதலிகள் ப்ரபத்தியே இந்தத் திருவாய்மொழிக்கு நோக்கு என்று நிர்வஹித்துப் போந்தார்கள். எம்பெருமானார்தாமும் அப்படியே நிர்வஹித்து வந்து ஸ்ரீபாஷ்யமருளிச் செய்தபின்பு பக்திபரமாக நிர்வஹித்தருளினாராம். ஏனென்னில்; ஸ்ரீபாஷ்யத்துக்கு மூலமான ப்ரஹ்மஸூத்ரமும் திருவாய்மொழியும் ஐககண்டியம் பொருந்தியதாக அமையவேண்டுதலால் ஸ்ரீபாஷ்யத்திற்கு பக்தி பரத்வமும் இதற்கு ப்ரபத்தி பரத்வமுமானால் ஐககண்டியம் குன்றியதாகுமென்று திருவுள்ளம்பற்றி உபயவேதாந்தத்திற்கும் ஓரே நோக்கு என்று நிர்வஹிப்பாரானார் — என்க.

ஆனால் திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கப்படுகிற பக்தி ஸாதந பக்தி என்று நினைக்கவேண்டா; பின்னை என்னென்னில்; ஸாத்யபக்தி எஃபதாம்; அதாவது பரபக்தி எனப்படும். புருஷார்த்தரூபமாக ப்ரார்த்திக்கப்படுகிற பக்தி பலபக்தி யெனப்படும். ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்நத்தில் * ஹஷவநு

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஹக்திரவி ஷூயதூ செ * என்று பிரார்த்திக்கின்றாரே, அந்த பக்தி ஸாதநபக்தி யன்றே; ஸாத்யபக்தியேயன்றோ. போஜனத்திற்கு முன் பசிபோலும் நிலைமையதாம் இது. இப்படிப்பட்ட பக்தியே ஆழ்வார்க்கு உள்ளதாதலால் இது தன்னையே பிறர்க்கு உபதேசித்தருளுகிறார்.

கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வார்க்கு நிகழ்ந்த பரத்வாநுபவம் ஒரு பெரிய திருநாள்போலே யிருந்தது; இவர் இப்போது நெஞ்சொழிந்திருந்து பிறர்க்கு உபதேசிக்கத் தொடங்கிவிட்டாரே, இது எங்ஙனே? கீழே தாம் அநுபவித்த விஷயத்தை எல்லை கண்டு விட்டாரோ? அல்லது, தாம் அநுபவித்தது போதுமென்று விரக்தியடைந்துவிட்டாரோ? என்னில்; இரண்டுஞ் சொல்ல முடியாது. * தனக்குந் தன் தன்மையறிவரியான் * என்கிறபடியே எம்பெருமான் தன்னாலும் எல்லைகாண முடியாததான அவ்விஷயம் இவர்தமக்கு எல்லை கண்டதாக எங்ஙனே ஆகும்? * கொள்ளமாளாவின்பவெள்ளம் * என்று கொள்ளக் கொள்ள மாளாத இன்பவெள்ளமாயன்றோ அவ்விஷய மிருப்பது. ஆழ்வாருடைய ஆசையைப் பார்த்தாலோ * காதல் கடலின் மிகப்பெரிதால் * மண் திணிஞாலமு மேழ்கடலும் நீள்விசும்புங் கழியப்பெரிதால் * சூழ்ந்து அதனிற் பெரிய என்னவா * என்று தாமே சொல்லிக்கொண்டபடியே மிகவும் பெருகிப் போகின்றது. ஆகவே, அநுபவிக்கப்படும் விஷயமாகிய பகவத்விஷயமும் சுருங்கமாட்டாததாய், அநுபவிக்கிறவராகிய தம்முடைய காதலும் அளவுபட மாட்டாததாய் இருக்கையாலே அநுபவத்தில் நின்றும் இவர் மீள்வதற்கு வழியில்லை.

ஒரு விஷயத்தைச் சிறிதுகாலம் அநுபவித்தால் அதே விஷயத்தில் மற்றொருகால் விரக்தியுண்டாகக் காணாநின்றோம்; அப்படியே ஆழ்வார் தமக்கும் சிறிது பகவத்விஷயாநுபவத்தில் விரக்திபிறந்துவிட்டதோ என்னில்; * எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டூழியூழிதொறும்; அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே * என்னும்படி தெவிட்டாத அமுதமாயிருக்குமே ஆழ்வார்க்கு பகவத்விஷயம். அப்படியிருக்க அநுபவத்தில் நின்றும் கையொழிந்து உபதேசத்திலே எங்ஙனே கைவைத்தார்? தாம் உபதேச முகத்தாலே ஆசார்ய பதவியை நிர்வஹிக்கவேணுமென விரும்பினர் என்னவும் போகாது; * நீசனேன் நிறையொன்றுமிலேன் * என்றும் * தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் * என்றும் தம்மை மிகத்தாழ்வாக அநுஸந்தித்துக் கொள்ளுமியல்வினரான ஆழ்வார்க்கு அப்படிப்பட்ட விருப்பம் உண்டாக ப்ரஸக்தியில்லையே. ஆகில் அநுபவத்தைவிட்டு உபதேசத்திலே இப்போது இவர் ஊன்றினது என் என்னில்; அநுபவத்தின் முதிர்ச்சி இருந்தபடி.

அதாவது என்னென்னில்; தாம் அநுபவிக்கும் பகவத்விஷயம் தனியே அநுபவிக்கக்கூடியதல்லாமையாலே "மச்சித்தா மத்கதப்ராணா போதயந்தஃ பரஸ்பரம்" = மச்சித்தா மத்கதப்ராணாஃ போதயந்தஃ பரஸ்பரம்" என்று கீதாசார்யன் பணித்தபடியே பிறரோடு கூசாவியே போதுபோக்கித் தரிக்கவேண்டி

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யவரான தாம் அப்படிப்பட்ட அதிகாரிகளைப் பெறுதற்காக நாற்புறமும் கண் வைத்துப்பார்த்தார்; எல்லாரும் ஸம்ஸாரிகளாயிருந்தனர்; தாம் பகவத்விஷயத்திலே ஊன்றி யிருக்கிறபோலே அவர்கள் விஷயாந்தரங்களிலே ஊன்றியிருக்கக் கண்டார் ஆழ்வார். அன்னவர்களுடைய அநர்த்தத்தைத் தவிர்க்காமல் நிற்கமாட்டிற்றிலர். அவர்களை எப்படி மீட்கலாமென்று பார்த்தார். 'இவர்களோ சேதநராயிருந்தார்கள்; விஷயாந்தரங்களிலே வாசியறிந்து தீயவற்றைக் கழித்து நல்லவற்றைக் கைக்கொள்பவராயிராநின்றார்கள்; காய்கறி முதலான வற்றிலும் நன்மை தீமைகளை ஆராய்ந்து நல்லவற்றைப் பரிக்ரஹிக்கவும் தீயவற்றைப் பரிஹரிக்கவும் வல்லவரான இவர்கள் இன்னமும் சிறிது ஆராய்ச்சியைச் செலுத்தமாட்டாதே யிராநின்றார்கள்; பகவத்விஷயத்தின் நன்மையையும் விஷயாந்தரங்களின் தீமையையும் நாம் எடுத்துக்காட்டினால் உண்மையை ஆராய்ந்து பார்த்து ஹேயவிஷயங்களைவிட்டு உபாதேய விஷயத்தைப் பற்றக் கூடுமே; ஆதலால் அதை உபதேசித்துப் பார்ப்போம்' என்று திருவுள்ளம்பற்றி, எம்பெருமானுடைய நன்மையையும், ஸம்ஸாரிகள் பற்றிக்கிடக்கிற விஷயாந்தரங்களின் அற்பத்தன்மை அநித்தியத்தன்மை முதலியவற்றையும் அருளிச் செய்யாநின்றுகொண்டு விஷயாந்தரங்களில் நசையற்று பகவத்பக்தியைப் பண்ணுங்கோளென்று உபதேசிக்க இழிகிறார். .... .... .... .... (*)

வீடுமின்முற்றவும் * வீடுசெய்து * உம்முயிர்
வீடுடையானிடை * வீடுசெய்ம்மினே * (க)

| | | | |
|---|---|---|---|
| முற்றவும் | (பஜந விரோதியான ஸாத்ய ஸாதனங்கள்) எல்லாவற்றையும் | உம் உயிர் | உங்களுடைய ஆத்மவஸ்துவை |
| வீடுமின் | விட்டுவிடுங்கள்; | வீடு உடையான் இடை | மோக்ஷ நிர்வாஹகனான ஸ்வாமியிடத்திலே |
| வீடு செய்து | அப்படி விட்டு, | வீடு செய்ம்மின் | ஸமர்ப்பியுங்கள். |

[வீடுமின்.] எம்பெருமானைத் தவிர்ந்த மற்றெல்லா விஷயங்களையும்விட்டு எம்பெருமானது திருவடிகளிலே ஆத்மாவை ஸமர்ப்பியுங்கோளென்கிறார். "முற்றவும் வீடுமின்" என்று அடைவே சொல்லலாயிருக்க, அப்படிச் சொல்லாமல், தொடங்கும்போதே வீடுமின் என்பானென் னென்னில்; ஒரு சிறு குழந்தை கையிலே ஒரு பாம்பைப் பிடித்துக்கொண்டு கிடந்தால் 'போடு, போடு' என்று சொல்லி, பிறகு 'பாம்பு' என்னுமாபோலேயும், ஒருவன் வீட்டினுள்ளே கிடந்து உறங்காநிற்க வெளியிலே நெருப்புப்பற்றி எரியாநின்றால் 'புறப்படு, புறப்படு' என்று கோஷித்துவிட்டுப் பிறகு 'நெருப்பு' என்னுமாபோலேயும் முந்துற, விடுங்கோளென்கிறார்.

ஒருவன் ஞானபக்தி விரக்தியோடேவந்து 'ஆழ்வீர்! அடியேனுக்கு உபதேசிக்கவேணும்' என்று விநயத்தோடே கேட்க உபதேசிக்கிறாரல்லரே ஆழ்வார்; ஸம்ஸாரதாபம் எல்லார்க்கும் ஒத்திருக்கையாலே ருசிபிறந்தபோது யாரேனுமொருவர்க்குப் பலிக்கட்டுமென்று எல்லார்க்குமாக உபதேசித்து வைக்கிறாரென்பது 'வீடுமின்' என்ற பன்மையாற் போதரும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



எதை விடுவதென்ன, முற்றவும் என்கிறார். அஹங்கார மமகாரங்களாலே தூஷிக்கப்பட்டவற்றிலே சிலவற்றை வைத்துக்கொண்டு சிலவற்றை விடுவதென்பது கூடாதே; முழுவதையும் விடவேண்டுமாதலால் முற்றவும் என்கிறார்.

வீடுசெய்து=இந்தப் பதம் இல்லாமலேயிருக்கலாம்; “வீடுமின் முற்றவும் உம்முயிர் வீடுடையானிடை வீடு செய்ம்மினே” என்றால் அந்வயம் பொருந்திவிடுமே; இடையே ‘வீடுசெய்து’ என்ற வினையெச்சம் ஏதுக்கு? என்று சிலர் சங்கிக்கலாம்: தகாதவற்றை விடுதல், தகுந்ததைப் பற்றுதல் என்கிற இரண்டு காரியங்களுள் தகுந்ததைப் பற்றுதலென்கிற இரண்டாவது காரியம் ஸித்தியாமற்போனாலும் தகாதவற்றை விடுதலென்கிற ஒன்றுமாத்திரமாவது ஸித்தித்தாலும் சாலும் என்ற கருத்தைக் காட்டுதற்கே வீடுசெய்து என்று மீண்டும் அநுவதிக்கப்பட்டதென்ப. முடிசூடி மகிழ்ந்திருக்கவேண்டியவனான ராஜகுமாரன் சிறையிலே கிடந்தானாகில், அவன் சிறைநீங்கி முடிசூடி ராஜ்யம் பண்ணுவதிற்காட்டிலும் சிறைநீங்குகைதானே பேறாயிருக்குமாபோலே பகவத்விஷயத்தைப்பற்றிக் களிப்பதிற்காட்டிலும் விஷயாந்தர ஸங்கத்தைவிட்டுத் துயர் தீருகைதானே சிறப்பாயிருக்குமன்றோ?

உம்உயிர்வீடுடையானிடை = இதற்குப் பலபடியாகவும் பொருளுரைக்கலாம். உங்களுடைய உயிரையும் அதற்கு வீடாகிய சரீரத்தையும் தனக்குச் சரீரமாகவுடையனான பகவானிடத்தில் என்னலாம்: உங்களுடைய உயிரை வீடாகவுடையனான எம்பெருமானிடத்தில் என்னலாம். உம் உயிர் - உங்களாத்மாவை, வீடு - விடுமிடத்தில், உடையானிடை - ஸ்வாமியிடத்தே, வீடு செய்மின் —, என்னலாம். வீடுடையானிடை - வீடாகிய பரமபதத்தையுடையவனான எம்பெருமானிடத்தில், உம்முயிர் வீடு செய்மின் என்னலாம்.

‘அநித்யமான சரீரத்திற்கு ஒரு நன்மை தேடிக்கொள்ளச் சொல்லுகிறேனல்லேன், நித்யமான ஆத்மவஸ்துவுக்கன்றோ நானொரு நன்மை தேடிக்கொள்ளச் சொல்லுகிறது’ என்ற கருத்தும், என் உயிர்க்கா நான் நன்மை தேடச் சொல்லுகிறேன், உங்கள் உயிர்க்கன்றோ’ என்ற கருத்தும் ‘உம்முயிர்’ என்பதில் தோன்றும்.

வைசம்பாயகர் ஜநமேஜயனை விளித்து ‘முற்றமுடிய பாரத கதையைச் சொல்லுகிறேன் கேள்’ என்ன, ‘அது கேட்க எனக்கு அவகாசமில்லை’ என்று ஜநமேஜயன் சொல்ல, அப்படியானால் ஒரு அத்யாயமாவது கேள் என்ன, அதற்கும் அவகாசம் இல்லையென்ன, ஒரு ச்லோகமாவது சொல்லிப்போகிறேன் கேள் என்ன; ஆனால் சொல்லீர் என்ன; “𑌦𑍍𑌵𑌾𑌵𑌿𑌮𑍌 𑌪𑍁𑌰𑍁𑌷𑍌 𑌮𑍂𑌢𑍌 𑌦𑍁𑌰𑍍𑌯𑍋𑌧𑌨𑌦𑌶𑌾𑌨𑌨𑍌 । 𑌗𑍋𑌗𑍍𑌰𑌹𑌂 𑌵𑌨𑌭𑌙𑍍𑌗𑌂 𑌚 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌪𑍁𑌨𑌃𑌪𑍁𑌨𑌃 = த்வாவிமௌ புருஷௌ மூடௌ துர்யோதந தசாநநௌ கோக்ரஹம் வநபங்கம் ச த்ருஷ்ட்வா யுத்தம் புந:புந:.” என்று மேன்மேலும் ஆகாங்க்ஷை பிறக்கும்படியாகச் சொல்லிவைக்க, அதிலே ருசிபிறந்து, ‘கோக்ரஹணமாவது என்ன? வநபங்கமாவது என்ன?’ என்று கேட்க, பிறகு அடிதொ

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



டங்கிப் பாரதகதையெல்லாம் பகர்ந்தார் வைசம்பாயனர் — என்று சொல்லிப் போருவதுண்டு; அதுபோலே ஆழ்வாரும் பொதுவாக உடையான் என்று சொல்லிவைக்கிறூர்; அந்த உடையான் [ஸ்வாமி] யாவன்? என்னில்; * வண் புகழ் நாரணன் என்று மேலே சொல்லுவாராக.

'வீடு செய்மினே' என்றும் 'வீடு இசைமினே' என்றும் இரண்டு பாடங்களும் வியாக்கியானங்களில் பரிக்ரஹிக்கப்பட்டுள்ளன. "வீடு இசைமினே" என்றது — விட இசையுங்கோள் என்றபடி. விடவேண்டியவற்றை விடாமற் போனாலும் விடவேணுமென்கிற அபேக்ஷையையாவது நெஞ்சிற் கொள்ளுங் கோள் என்றவாறு. 'பிள்ளாய்! பள்ளிக்கூடஞ்சென்று படி' என்று தந்தை நியமித்தால், அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்டு உடனே பிள்ளை பள்ளிக் கூடஞ்சென்று படியாவிடினும், 'பள்ளிக்கூடம் போகமாட்டேன்' என்று மறுத் துச் சொல்லிவிடாமல் 'படிக்கிறேன்' என்று இசைவுதோற்ற வாயாற் சொன்ன லும் போதுமன்றோ. அது போலவே, ஆபிமுக்யம் காட்டுகிறவளவிலேயே பரம ஸந்தோஷமடையுமியல்வினனான எம்பெருமானுக்கு இந்த சேதநன் விஷ யாந்தரங்களை அற விடுவதிற்காட்டிலும் விட இசைவதுதானும் மகிழ்ச்சிக்குறுப் பாகும் என்க.

மநுஸ்மிருதியில் [8-92.] "யமொ வைவஸ்வதொ ராஜா யஸ்த வைஷ ஹ்ருதி ஸ்திதஃ | தேந சேதவிவாதஸ்தே மா கங்காம் மா குரூந் கமஃ = யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்திதஃ-தேந சேத் அவிவாதஸ்தே மா கங்காம் மா குரூந் கமஃ" என்று சொல்லிற்று. இதன் கருத்தாவது — ஸர்வநியாமகனும் தண்டதரனும் (அல்லது ஸூர்யவம்சத் திற் பிறந்தவனும், அல்லது, ஆதித்யமண்டலவாஸியாயும்) எல்லார்க்கும் இனியனுமிருக்கிற எம்பெருமான் உனது உள்ளத்தினுள்ளேயுளன்; அவனோடு விவாதம் நெடுநாளாக அநுவர்த்தித்துக்கொண்டு வருகிறது. அதாவது — இந்த ஆத்மவஸ்துவை அவன் தன்னுடையதாக அபிமாநித்தால் அதற்கு இசை யாதே 'இது என்னுடையதுதான்' என்று செருக்கியிருப்பதுவே விவாதம். இந்த விவாதம் தொலைந்தொழியுமாகில் கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களில் குடைந்தாடப்போகவும் வேண்டா; குருக்ஷேத்ரம் முதலிய புண்ய க்ஷேத்ரங்களை ஸேவிக்கப் போகவும் வேண்டா. அஹங்கார மமகாரங்களை உள்ளே வைத்துக் கொண்டு பிராயச்சித்தம் பண்ணுகையாவது ஒரு பாத்திரத்தினுள்ளே அமேத் யத்தை யிட்டுவைத்து மேலே பளபளவென்று சுத்தி செய்வதுபோலாதலால் உள்ளே எம்பெருமானோடு விவாதத்தை வைத்துக்கொண்டே க்ஷேத்ர தீர்த்தயும் ஸஞ்சாரம் செய்வது எதுக்கு? அந்த விவாதம் தீர்ந்துவிட்டால் இருந்த இடத் திலேயே பரமசுத்தி யுண்டாதலால் ஒரு க்ஷேத்திரத்தையும் ஒரு தீர்த்தத்தை யும் தேடிப்போகவேண்டா என்றபடி. ஆகவே விவாதம் நீங்குமளவே வேண்டிய தாதலால் வீடு இசைமினே என்கிறூர். .... .... .... .... (க)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

மின்னின்னிலையில * மன்னுயிராக்கைகள் *
என்னுமிடத்து - இறையுன்னுமின் நீரே. (உ)

| | | | |
|---|---|---|---|
| உயிர் மன்னு | ஆத்மா பொருந்தி வர்த்திக்கிற | என்னும் இடத்து | என்று சொல்லுமளவில் |
| ஆக்கைகள் | சரீரங்கள் | நீரே | நீங்களே |
| மின்னின் | மின்னலைக்காட்டிலும் | இறை | சிறிது |
| நிலையில | நிலையுடையனவல்ல; | உன்னுமின் | ஆராய்ச்சி பண்ணிப் பாருங்கள். |

[மின்னின்நிலையில.] எம்பெருமானைத் தவிர்ந்த மற்ற விஷயங்களைவிட்டு அவன் பக்கலிலே ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணப் பாருங்கோள் என்றார் கீழ்ப் பாட்டில்; அது கேட்டவர்கள் 'இது எங்ஙனே ஸாத்யமாகும்? நெடுநாளாக வாஸனைபண்ணித் தொடர்ந்துவருகிற விஷயங்களை விடமுடியுமோ?' என்ன அவற்றின் குற்றங் குறைகளைக்காணவே நன்கு விடலாமென்கிறார் இப்பாட்டில்.

'உயிர்மன்னு ஆக்கைகள் மின்னின்னிலையில' என்றும் அந்வயிக்கலாம், 'மன்உயிர் ஆக்கைகள் மின்னின்னிலையில' என்றும் அந்வயிக்கலாம். ஆத்மாக்கள் விஷயபோகங்களுக்கு ஆயதநமாகப் பற்றியிருக்கிற சரீரங்களானவை மின்னல் போலவுங்கூட நிலைத்திராதவை; என்றும், நித்யர்களான ஆத்மாக்கள் கொண்ட சரீரங்களானவை — என்றும முறையே உரைத்துக்கொள்க. "𑌸𑌂𑌪𑌦𑌃 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌸𑌂𑌕𑌾𑌶𑌾𑌃 𑌯𑍌𑌵𑌨𑌂 𑌕𑍁𑌸𑍁𑌮𑍋𑌪𑌮𑌮𑍍 । 𑌤𑌡𑌿𑌚𑍍𑌚𑌞𑍍𑌚𑌲𑌮𑌾𑌯𑍁𑌶𑍍𑌚 𑌕𑌸𑍍𑌯 𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑌾𑌨𑌤𑍋 𑌧𑍃𑌤𑌿𑌃 = ஸம்பத: ஸ்வப்நஸங்காசா: யௌவநம் குஸுமோபமம் தடிச்சஞ்சலமாயுச் ச கஸ்யஸ்யாத் ஜாநதோ த்ருதி:" = செல்வம் கனுப்போல் தோற்றிமாயும்படியானது; யௌவனபருவம் பூப்போலச் சிலகாலம் அழகாயிருந்து தளரும்படியானது; ஆயுள் மின்னல்போலே நிலையில்லாதது, என்பதைத் தெரிந்துகொண்டால் எவன்றான் தைரியத்தோடிருக்க முடியும் என்றபடி. இந்த ச்லோகத்தில் தடிச்சஞ்சலமாயு: என்றதன் மொழிபெயர்ப்புப்போலேயுள்ளன முன்னடிகள். தடிச்சஞ்சலம் என்பதற்கு தடிதிவ சஞ்சலம், தடிதோபி சஞ்சலம் என்று இரண்டுவகையான விக்ரஹமும் கொள்ளக்கூடுமாதலால், மின்னல்போல் நிலையில்லாதது மின்னலைக்காட்டிலும் நிலையில்லாதது என்கிற இரண்டு பொருளுமுண்டு; அவ்விரண்டு பொருளும் கிடைக்கும்படியாகவே ஆழ்வாருமருளிச்செய்கின்றார் - மின்னின் = மின்னல்போல; மின்னலைக்காட்டிலும்.

என்னுமிடத்து இறையுன்னுமின்நீரே = இந்த விஷயத்தை நீங்களே ஆராய்ந்து பார்க்கலாமே; இதற்காக ஒரு ஆசார்யோபதேசம் வேணுமோ? என்றவாறு. தோஷம் ப்ரத்யக்ஷமாதலால் உங்களுக்கே தெரியுமே.

பன்னீராயிர வுரையின்படிக்குப் பின்னடிகளின் கருத்தாவது — மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள் என்று சொல்லும்படியாதலால் நீங்கள் இறை — ஸ்வாமியை, உன்னுமின் - மநநம் பண்ணுங்கோள் என்பதாம். .... (உ)

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நீர்நுமதென்றிவை * வேர்முதல் மாய்த்து * இறை
சேர்மினுயிர்க்கு * அதன் நேர்நிறையில்லே * (௫)

| | | | |
|---|---|---|---|
| நீர் நுமது என்ற இவை | அஹங்கார மமகாரங்களாகிற இவற்றை | இறை | ஸ்வாமியை |
| | | சேர்மின் | அடையுங்கள்; |
| வேர் முதல் மாய்த்து | (ருசி வாஸனைகளாகிற) பக்கவேரோடே முதலறுத்து | உயிர்க்கு | ஆத்மாவுக்கு |
| | | அதன் நேர் | அதனோடொத்த |
| | | நிறை இல் | பூர்த்தி இல்லை. |

[நீர்நுமது.] விடவேண்டிய வஸ்துக்கள் பலபல கிடப்பதால் அவற்றை எல்லாம் தனித்தனியே எடுத்துரைத்தல் பெரும்பாடாகுமாதலால் விடவேண்டியவற்றைச் சுருங்க அருளிச்செய்கிறாரிதில். * 𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍 𑌯𑌾 𑌅𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌯𑌾 𑌮𑌤𑌿𑌃 | 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌰𑍁𑌸𑌂𑌭𑍂𑌤𑌿𑌬𑍀𑌜𑌮𑍇𑌤𑌦𑍍 𑌦𑍍𑌵𑌿𑌧𑌾 𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 = அநாத்மந்யாத்மபுத்திர் யா அஸ்வே ஸ்வமிதி யா மதி: - அவித்யாதருஸம்பூதிபீஜமேதத் த்விதா ஸ்திதம் * என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற் சொல்லப்பட்டது. ஆத்மாவல்லாததிலே ஆத்மா என்கிற புத்தியைப் பண்ணுதலாகிற அஹங்காரமும், தன்னுடையதல்லாததிலே தன்னுடையதென்கிற புத்தியைப் பண்ணுதலாகிற மமகாரமும் அவித்யையாகிற விருக்ஷம் முளைப்பதற்கான இரண்டுவகை விதைகளாம் என்றபடி. இதைத் திருவுள்ளம் பற்றியே ஆழ்வார் "நீர்நுமதென்றிவை "வேர் முதல்" என்றார். இங்கு 'நான் எனதென்றிவை' என்றோ 'நாம் நமதென்றிவை' என்றோ இருக்கவேண்டும்; அப்படியிருந்தால்தான் அஹங்கார மமகாரங்களுக்குப் பர்யாயமாகும்: ஆழ்வார் அப்படியருளிச்செய்யாது நீர் நுமது என்றது - அநுவாதரீதியாலுங்கூட அஹங்கார மமகார ஸ்பர்சம் தமக்குக்கூடாதென்ற கருத்தினாலென்க. இங்கேஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் — "நான் எனது என்று தம்வாக்காலே சொல்லமாட்டாரே, நாக்கு வேம் என்று."

இறை சேர்மின்=ஸ்வரூபத்திற்குச் சேராத விஷயங்களைவிட்டு ஸ்வரூபாநுரூபமான விஷயத்தைப்பற்றப் பாருங்கள். உயிர்க்கு அதன் நேர்நிறை யில்லே= நேர் என்பதை நிறைக்கு அடைமொழியாக்கியுரைத்தல், நேரும் நிறையுமென உம்மைத்தொகையாக்கியுரைத்தல் என்ற இரண்டுவழிகளுமுள்ளன. அஹங்கார மமகாரங்களை விட்டு எம்பெருமானைச் சென்று சேர்வதற்கு ஸமானமான சிறப்பு ஆத்மாவுக்கு வேறொன்று இல்லை; (அல்லது) எம்பெருமானைச் சென்று சேர்வதற்கு ஸமானமானதும் அதிற்காட்டிலும் மேற்பட்டதும் வேறொன்றில்லை என்க. ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் — "𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑌗𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌷𑌯𑌾𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌮𑍍 | 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑍋𑌤𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌸𑍍𑌤𑌿 𑌪𑌰𑌾𑌯𑌣𑌮𑍍 = ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம் - விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்." என்றது இங்கே அநுஸந்திக்கவுரியது. இதன் கருத்து — ஸம்ஸாரமாகிற கடலிலே மூழ்கி விஷயாந்தரங்களில் நெஞ்சு பறியுண்டு பரிதபிக்கின்றவர்களுக்கு எம்பெருமானாகிற ஓடமொன்று தவிர வேறொன்றும் புகலாகமாட்டாதென்கை. ... ... ... ... (௫)



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இல்லதுமுள்ளதும் * அல்லதவனுரு *
எல்லையிலந்நலம் * புல்குபற்றற்றே * (ச)

| | | | |
|---|---|---|---|
| அவன் உரு | அந்த எம்பெருமானுடைய ஸ்வரூபமானது, | எல்லை இல் | எல்லையில்லாத |
| இல்லதும் அல்லது | விகாராஸ்பதமாகையாலே அஸத்து என்னப்படுமதான அசேதநத்தின் படியை யுடையதுமன்று ; | அ நலம் | அப்படிப்பட்ட ஆநந்தஸ்வரூபியாயிருக்கும் ; (ஆதலால்) |
| | | பற்று அற்று | ஹேய விஷய ஸங்கத்தை விட்டு |
| உள்ளதும் அல்லது | ஸத்து என்னப்படுபவனான ஜீவாத்மாவின் படியையுடையதுமன்று ; | புல்கு | (அப்பெருமானை) ஆச்ரயிக்க. |

[இல்லதுமுள்ளதும்.] விடவேண்டிய விஷயத்தின் தோஷமிகுதியை இரண்டாம்பாட்டிலருளிச்செய்தார்; பற்றவேண்டிய பகவத்விஷயத்தின் நன்மைமிகுதியை இப்பாட்டிலருளிச்செய்கிறார். அவனுரு உள்ளதுமல்லது இல்லதுமல்லது = நம்முடைய ஸித்தாந்தத்தில் எல்லாம் உள்ள வஸ்துக்களேயன்றி இல்லாத வஸ்து ஒன்றுமேயில்லையே; அப்படியிருக்க இல்லது என்பதேன்? எனில்; கேண்மின்: இங்கே இல்லது என்றதற்கு 'அடியோடு இல்லாதது' என்றுவது 'பொய்யானது' என்றுவது பொருளில்லை; 'அழியுந்தன்மையுடையது' என்று பொருள். உள்ளது என்றது அழியாத பொருள் என்றபடி. அசித்தையும் சித்தையும் சொன்னபடி. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் இரண்டாவது அம்சத்தில் பன்னிரண்டாவது அத்யாயத்தில் — "ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் புவநாநி விஷ்ணுः வநாநி விஷ்ணுர் கிரயோ திசஶ்ச । நத்யஸ் ஸமுத்ராஶ்ச ஸ ஏவ ஸர்வம் யதஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய ॥ ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் புவநாநி விஷ்ணுः வநாநி விஷ்ணுः கிரயோ திசச் ச - நத்யஸ் ஸமுத்ராச் ச ஸ ஏவ ஸர்வம் யதஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய !" என்றுள்ள ச்லோகத்தில் அஸ்தி சப்தத்தாலே சித்தையும் நாஸ்தி சப்தத்தாலே அசித்தையும் சொல்லியிருக்கையாலும், தைத்திரீய உபநிஷத்தில் "ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்" என்றவிடத்து ஸத்ய சப்தத்தால் சித்தையும் அந்ருத சப்தத்தால் அசித்தையும் சொல்லியிருக்கையாலும் அவற்றை அடியொற்றி ஆழ்வாரும் உள்ளது இல்லது என்ற சப்தங்களினால் சித்தையும் அசித்தையும் குறித்தனரென்ப.

இனி, உள்ளது — உள்ளேயிருப்பது [சரீரத்தினுள்ளேயிருப்பது] என்று பொருளாய் ஆத்மாவைச் சொல்லிற்றாகி, இல்லது—(இல்-வீடு) வீடாகவுள்ளது, [ஆத்மாவுக்கு இருப்பிடமாகவுள்ளது] என்று பொருளாய் உடலைச் சொல்லிற்றாகி ஆக இவ்வழியாலே சித்தையும் அசித்தையும் சொல்லிற்றாகவுங் கொள்ளலாமென்பர். பரமாத்மாவினுடைய ஸ்வரூபம் சேதந அசேதந விலக்ஷணம் என்றதாயிற்று.

ஆனால் பரமாத்ம ஸ்வரூபம் எங்ஙனே யிருக்குமென்ன, எல்லையிலந்நலம் என்கிறது. எல்லையில்லாத ஆநந்தமயமாயிருக்குமென்றவாறு. அப்படிப்பட்ட

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பரம்பொருளை, பற்றற்றே புல்கு = விஷயாந்தரங்களில் நசையையும் கூடவே வைத்துக்கொண்டு பற்றினால் பயனில்லையாம்: "மாற்பால் மனஞ் சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு" என்கிறபடியே * புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விட்டே பற்றவேணும்.

புல்கு என்னும் ஏவலொருமை வினைமுற்றுக்குச் சேர விளி வருவித்துக் கொள்க. நாட்டைநோக்கிச் சொல்வதாகக் கூறுப. .... .... ... (ச)

அற்றது பற்றெனில் * உற்றது வீடுயிர் *
செற்றது மன்னுறில் * அற்றிறைபற்றே * (ரு)

| | | | |
|---|---|---|---|
| பற்று அற்றது எனில் | விஷயாந்தரஸங்கம் அற்றொழிந்தது என்னுமளவிலேயே | செற்று | வெறுத்து |
| உயிர் | ஆத்துமா | மன்ன உறில் | நிலைநிற்கும்படி பகவத் விஷயத்தைக் கிட்டப்பார்க்கில் |
| வீடு உற்றது | மோக்ஷத்தைப்பெற்றானவன்; [கைவல்ய மோக்ஷமுண்டாகும் ;] | அற்று | (ஆச்ரயிக்கும்போதே) எம்பெருமானுக் கென்றே அற்றுத் தீர்ந்து. |
| அது | அந்தக் கைவல்ய மோக்ஷத்தை | இறை பற்று | அந்த எம்பெருமானை பற்றுக. |

[அற்றதுபற்றெனில்.] எம்பெருமானைப் பற்றுதற்கு இடையூறாகக் கைவல்ய மோக்ஷத்தில் நசையுண்டாகக் கூடியதாதலால் அந்த இடையூறுதன்னை விலக்கிக்கொள்ளுமாறு உபதேசித்தருளுகிறாரிப்பாட்டில்.

உலகத்தில் அவரவர்களது ருசியின்படி விருப்பங்கள் பலவகைப்படும். இஹலோகத்துப் பரிபூர்ண ஐச்வரியத்தையே சிலர் விரும்புவர்; தேவேந்திர பட்டத்தில் விருப்பமுள்ளவர்கள் இவ்வுலகச் செல்வக்களிற் கண்வையார். நான்முகக் கடவுளது பதவியை விரும்புமவர் இந்திரபதவியிற் கண்வையார். ஆத்மாநுபவமாகிற கைவல்ய மோக்ஷத்தில் விருப்பமுடையார் கீழ்ச்சொன்னவற்றிற் கண்வையார். * உயர்வறவுயர்நலமுடையனும் * அயர்வறுமமர்களதிபதியாய் * திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டனுன எம்பெருமானிடத்திலே பற்றுடையார் இவை யித்தனையிலும் கண்வையார். ஆகவே கைவல்ய மோக்ஷத்தில் கண்வைக்க வேண்டாவென்று நியமிக்கிறது இதில்.

பற்று அற்றதேனில் = ப்ரக்ருதியிலும் ப்ராக்ருதங்களிலுமுண்டான பற்று ஒழிந்த மாத்திரத்திலே என்றபடி. உயிர்வீடு உற்றது = ஆத்மாநுபவமாகிற மோக்ஷம் வந்து புகுந்ததாயிடும் — கைவல்யமோக்ஷத்திலே இச்சை பிறக்கும் என்றவாறு. 'மறுபடியும் பிறத்தல் இறத்தலாகிற துன்பங்கள் உண்டாகாதபடியிருந்தால் போதுமானது' என்கிற இவ்வளவையே ஆசைப்பட்டு அதற்காகக் கைவல்ய மோக்ஷத்தளவிலே த்ருப்திபெறுதலாகிற ஒரு நிலைமை நேரும் என்றபடி. விலக்ஷணமான ஞானத்தையும் ஸ்வரூபத்தையும் உடைத்தான ஜீவாத்மாவாகிற வஸ்துவுக்கு அசித் ஸம்பந்தமேயன்றோ மறைவை உண்டுபண்ணிக்கொண்டிருந்தது; அப்படிப்பட்ட அசித் ஸம்ஸர்க்கம் கழிந்தவாறே ஆத்மஸ்வரு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பம் ப்ரகாசிக்கும். அதுதான் நித்யமாயும் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபியாயுமிருக்கையாலே 'இத்தகைத்தான ஆத்மவஸ்துவையே அநுபவித்துக்கொண்டிருக்கலாமே' என்று ஆசை பிறக்கும்படி நேர்ந்துவிடுமென்க. அது சேற்று = அதில் விருப்பமற்று என்றபடி. மன்னுறில் = மன்ன + உறில், மன்னவுறில் என்று புணரவேண்டுமிடத்து 'மன்னுறில்' என்றானது தொகுத்தல். 'அதற்குமேலும் ஒரு புருஷார்த்தமுண்டு' என்று ஆசைப்பட்டு அப்பால் போகவேண்டியதொன்றில்லாதபடி ஒப்புயர்வற்ற புருஷார்த்தமாகிய பகவத்ப்ராப்தி லக்ஷண மோக்ஷத்தைப் பெறவேண்டியிருக்கில் என்றபடி.

அற்று = ஆச்ரயிக்கும்போதே எம்பெருமானுக்கேயாக அற்றுத் தீர்ந்து என்றபடி.

அற்று என்பதிலுள்ள வினையெச்ச விகுதியைப் பிரித்தெடுத்து பற்று என்பதனோடு கூட்டி, பற்று என்பதிலுள்ள ஏவல்விகுதியைப் பிரித்தெடுத்து அற்று என்பதில் கூட்டி, "பற்றி அறு" என்றாக்கி, இறையைப்பற்றிக் கைவல்ய மோக்ஷருசியை அறு என்பதாகவுமுரைப்பர்.

இப்பாட்டுக்குப் பரகாலஸ்வாமி பணித்த பதினெண்ணாயிரப்படி வியாக்கியானத்திலே "கைவல்ய நித்ய பக்ஷநிராஸாய மன்னுறிலேன்று அருளிச்செய்தார்" என்றெழுதப்பட்டுள்ளது. 'கைவல்ய மோக்ஷத்தைப்பற்றினால் அதுவும் அஸ்திரமான புருஷார்த்தமாகையாலே நிலைநின்று அநுபவிக்க முடியாது; அங்ஙனன்றியே சாச்வதமாக அநுபவிக்கவேண்டில் எம்பெருமானை அநுபவிக்கப் பார்க்கவேணும்' என்பதாக உரைத்தல் இவரது கருத்து. திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஆறாயிரப்படியில் "பகவத்சேஷதைகரஸமான உன்னுடைய ஸ்வரூபத்தைப் பெற்று நிலைநிற்கவேண்டில்" என்று பொருளருளிச் செய்திருக்கையாலே அதனோடு முரண்படுமிது. ஆகவே நாம் கீழே உரைத்த பொருளே பொருந்தும்.

ஆத்மாநுபவம் மோக்ஷமன்றென்றும் மீட்சியுண்டென்றும் ஆகவே இது அநித்ய புருஷார்த்தமென்றும் சில ஆசார்யர்களின் திருவுள்ளம். ஆத்மாநுபவமென்பது மீட்சியற்ற மோக்ஷமேயென்பது பல ஆசார்யர்களின் திருவுள்ளம். ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகன் ஸ்ரீ ந்யாயஸித்தாஞ்ஜநத்திலே இவ்விஷயமாக அருளிச்செய்துகொண்டு போம்போது ஸ்ரீபாஷ்ய ஸூக்திக்கும் கீதாபாஷ்ய ஸூக்திக்கும் சிறிது முரண்பாடு இருப்பதாகத் திருவுள்ளம்பற்றி *[illegible]* என்றவொரு வாக்கியத்தினால் கீதாபாஷ்ய ஸூக்திக்கு அஸ்வாரஸ்யம் திருவுள்ளம்பற்றும்படியாயிற்று. ஸ்ரீபாஷ்ய ஸூக்திகளையும் கீதாபாஷ்ய ஸூக்திகளையும் ஒன்றோடொன்று வாசியற ஸமரஸமாக நிர்வஹிப்பது அஸாத்யமாகையாலே இரண்டத்தொன்றுக்கு அஸ்வாரஸ்யம் அவச்யம் கல்பிக்கவேண்டிற்றாயிற்றென்பர்.

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யங்களில் அருளிச்செய்திருப்பவை அஸ்வாரஸ்ய லவலேசமின்றிக்கே நன்கு பொருந்தத் தடையில்லையென்று கற்றுணர்ந்த பெரியோர் பலர் நிரூபித்தருளுகிறார்கள். எங்ஙனேயென்னில்;—

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கீதாபாஷ்யத்தில் பஞ்சாக்நி வித்யா நிஷ்டனான கேவலனுக்கு ப்ரஹ்மாத்மக ப்ரக்ருதி வியுக்தாத்ம ஸ்வரூபாவலோகநத்தையும் ப்ரக்ருதிவியுக்தாத்மஸ்வரூபாவாப்தி ரூபமோக்ஷத்தையும் அபுநராவ்ருத்திமத் பரமபத ப்ராப்தியையும் அருளிச்செய்துளர். ஸ்ரீபாஷ்யத்தில் * அப்ரதீகாலம்பநாந்நயதீதி பாதராயண: * என்ற ஸூத்ரத்தின் விவரணத்தில் "பஞ்சாக்நி வித்யாவித அபுநராவ்ருத்திநாமதஸ்ய ப்ரஹ்மப்ராப்திபூர்வாநாவ்ருத்திச்ரவணாத் | அதஏவ தத்க்ரதுந்யாயாத் ப்ரக்ருதிவிநிர்முக்த ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுஸந்தாநம் ஸித்தம்." என்றருளிச் செய்திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்ம ப்ராப்தியாகிற பலன் ஸ்ரீபாஷ்யத்திலருளிச்செய்யப்பட்டதாகத் தேறுகின்றது. ஆகவே, கீதாபாஷ்ய ஸூக்தியும் ஸ்ரீபாஷ்ய ஸூக்தியும் பரஸ்பர விருத்தம்போல் தோற்றும். இந்த விரோதத்தை விலக்கமுயன்ற தேசிகன் மதுவித்யா ந்யாயத்தைத் திருவுள்ளத்திலேகொண்டு ப்ரக்ருதிவியுக்தாத்மாநுபவத்தை அவாந்தர பலனாகவும் ப்ரஹ்மாநுபவத்தைப் பிரதான பலனாகவும் கல்பித்து நிர்வஹித்தருளினர். இப்படி நிர்வஹிக்குமளவில் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியில் அஸ்வாரஸ்யம் ஏறுகின்றது. அவ்வளவேயன்று; அவாந்தரபலனைக் கல்பிக்கவல்ல ப்ரமாணமும் துர்லபம். மதுவித்யா ந்யாயம் இங்கே அப்ரஸக்தமாகவுமுள்ளது. ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் * முக்தாநாம் பரமா கதி: * என்றவிடத்தில் * பரமேதி விசேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித் அபரா அபி கதிரபேக்ஷ்யதே * என்று பட்டர் அருளிச்செய்ததும், ஸ்ரீவேதார்த்த ஸங்கிரஹ தாத்பர்யதீபிகையில்— "பரம: ஸ்வராடிதி முக்தாத்மாபேக்ஷயா; அத்ர பரமசப்தேந கைவல்யமோக்ஷவ்யாவ்ருத்தி:." [பக்கம்-256] என்று ச்ருதப்ராகாசிகாபட்டர் அருளிச்செய்ததும் பழுதாம். ஒரு விரோதமும் வாராதபடி நிர்வஹிக்கும்வழி ஏதென்னில்; கேண்மின்:—

ப்ரக்ருதிவியுக்தாத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதான பலன். இங்ஙனாகில் ப்ரஹ்மப்ராப்தியை ப்ரதிபாதியாநின்ற ஸ்ரீபாஷ்ய ஸூக்தி எங்ஙனே சேரும்? "ப்ரஹ்மப்ராப்திபூர்வாநாவ்ருத்தி ச்ரவணாச்ச" என்று ஸ்ரீபாஷ்ய பங்க்தியன்றோ? எனனில்; ஆம்; அங்கு அடுத்தபடியாகவே "அதஏவ தத்க்ரதுந்யாயாத் ப்ரக்ருதிவிநிர்முக்தப்ரஹ்மாத்மகஸ்வாத்மாநுஸந்தாநம் ஸித்தம்" என்கையாலே, தத்க்ரது ந்யாயப்படியே ப்ரஹ்மாத்மகஸ்வாத்மப்ராப்திதான் ப்ரஹ்மாத்மகஸ்வாத்மாவலோகநாநுபவமாகத் தகும். ஆகவே விசேஷணதயா ப்ரஹ்மண: ப்ராப்யகோடி சேருகையாலே ப்ராஹ்ம ப்ராப்தி சொன்னது பொருந்தும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இப்படி ப்ரஹ்மப்ராப்தியு முண்டாகில் 1. "இறுகலிறப்பென்னும் ஞானிக்குமப்பயனில்லையேல்" என்றும், 2. "ஆத்மாநுபவ ஸ்ம்ருதி யாக்ரு உக்தி ருக்தா | ஸ்வயம் ஹரௌ ஜநஜோஷம் ஜுஷேய." என்று மித்யாதி ப்ரமாணங்களாலும் ப்ராக்ருதயான பாசுரத்தினாலும் கைவல்ய மோக்ஷத்திற்கு ஹேயத்வம் விளங்குவது எங்ஙனே சேருமென்னில்; ப்ரஹ்மாநுபவம் அப்ரதாநமாகவும் ஆத்மாநுபவம் ப்ரதாநமாகவு முள்ளமையாலே ஹேயமென்கிற தத்தனை.

இனித்தான் ஸர்வகர்ம விநிர்மோக முண்டான பின்பு பரமாத்மாநுபவம் ப்ரதாநமாக ப்ராப்தமாயிருக்க இங்ஙனே சொல்லுகைக்கு நியாமகமேதென்னில்; தத்க்ரது ந்யாயமேயாய்த்து இதற்கு நியாமகம். ஸர்வ கர்ம விநிர்மோக முண்டானாலும் தத்க்ரது ந்யாயத்தாலே ஸ்வாத்மோபாஸநத்துக்குப் பலனாக ஸ்வாத்மாநுபவத்தைத் தந்தருள்வதாக பகவத் ஸங்கல்பமாகையாலே, அந்த ஸங்கல்பமானது ந்யாயேந நேரும் ப்ரஹ்மாநுபவத்தைக் குலைக்கும். ஸ்வாநுபவ ந்யாயத்துக்குப் பிரதிபந்தகமான அந்த பகவத்ஸங்கல்பத்துக்கும் ஸர்வகர்ம விநிர்மோகத்தோடு கூடவே விநிர்மோகம் உண்டாகாதோவென்னில்; பர்யங்காரோஹண ஸமயத்தில்தான் தாத்ருஶ ஸங்கல்பம் நசிக்கிறதென்று ஸ்வாமி தாமே அருளிச்செய்து வைத்திருக்கையாலும் விரஜாநதியைக் கடந்தவுடனே கைவல்ய மோக்ஷம் வாழ்க்கையாலும், அப்போது அந்த ஸங்கல்பம் உள்ளமையாலும் அப்ரதாந ப்ரஹ்மாநுபவமும் ப்ரதாந ஆத்மாநுபவமும் கூடாநின்றது.

இப்படி நிர்வஹிக்கில் ஸர்வம் ஸமஞ்ஜஸமாகிறது. இங்ஙனன்றிக்கே ப்ரக்ருதிவியுக்தாத்மாநுபவத்தை அவாந்தர பலனாகவும் ப்ரஹ்மாநுபவத்தை முக்கிய பலனாகவும் கல்பிப்பது நிர்மூலமென்னுமளவே யல்ல; கீதாபாஷ்ய ஸூக்திக்கு அஸ்வாரஸ்ய கல்பகமாகவும் முடிகின்றது. வஸ்தாநிவிஷ்டாநிஷ்டனுக்கு உபயநாஸ்ஃதாநிஷணமும் ஸ்வவயாநேந ஸநுஸாதமும் ஞானதஸ்காமிகொத்தும். ஜாபகோபாக்யாநத்தில் வ்யவயாநேந ஸநுஸ்ரோதயானதை இங்கு நிதர்சிக்கவொண்ணாது. ஜாபகனுக்கு நேர்ந்த ப்ரஹ்மகாய நிஷேவணரூபமான வ்யவயாநப் ஜிஹ்வாதோநிஷ்ஹணஸ்யாக்ஷமென்று உணரக்கடவது.

இவ்விஷயத்தில் இவ்வள வெழுதுவதே ஸாரம். ஸாரக்ராஹிகளாயிருப்பார் இவ்வளவில்தானே தெளியக்கடவர்கள். ஆகவே பூர்வாசார்ய வியாக்கியாந விருத்தமாகப் பரகாலஸ்வாமி பணித்தது அநாதரணீயமென்று உபேக்ஷிப்பது. .... .... .... .... .... .... .... (ரு)

1. திருவாய்மொழி. 4-1-10.
2. வரதராஜஸ்தவம்—81.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பற்றிலனீசனும் * முற்றவும் நின்றனன் *
பற்றிலையாய் * அவன் முற்றிலடங்கே * (கூ)

| | | | |
|---|---|---|---|
| ஈசனும் | எம்பெருமானும் | பற்றிலை ஆய் | எம்பெருமானோடு பொருந்தியிருப்பதையே இயல்வாகவுடைத்தாய் |
| பற்றிலன் | ஆச்ரிதர்களோடு பொருந்தியிருப்பதையே இயல்வாகவுடையனாய் | அவன் | அப்பெருமானுடைய |
| முற்றவும் | தாரகம் போஷகம் போக்யம் என்னும்படியான ஸகல வஸ்துவாகவும் | முற்றில் | ஸகல கைங்கரியங்களிலும் |
| நின்றனன் | இராநின்றான்; (ஓலோகமே !) | அடங்கு | அந்வயிப்பது. |

[பற்றிலனீசனும்.] 'ஆழ்வீர்! புறம்புள்ளவற்றைவிட்டுப் பரமபுருஷனைப் பற்றும்படி உபதேசிக்கிறீர்; அவன்தான் ஸர்வேச்வரனன்றோ? நமக்கு அவன் முகந்தருவனோ' வென்று ஸம்ஸாரிகள் சங்கிப்பதாகக்கொண்டு, எம்பெருமானை அப்படி நினைக்கலாமோ? ஈச்வரத்வம் வந்தேறி யென்னும்படி ஸௌசீல்யமே வடிவாயிருப்பவனன்றோ அவன் என்று ஸமாதாநம் பண்ணுகிறாரிதில்.

ஈசனும் பற்றிலன் = 'எம்பெருமான் பற்றில்லாதவன்' என்றும் பொருள் கொள்ளலாம்படியிருக்கும்: ஆனால் பூருவாசாரியர்கள் அப்பொருளைக்கொண்டிலர்; "ஸர்வேச்வரனேயாகிலும் ஆச்ரிதரெல்லார் பக்கலிலுமொக்க ஸ்நேஹ ஸ்வபாவனாயிருக்கும்." என்று ஆறாயிரப்படியிலே திருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச்செய்தது நோக்கத்தக்கது. பற்றிலானென்பது பற்றிலனென்று குறுகிக்கிடக்கிறதென்பர். பற்றோடுகூடி யுள்ளவனென்றபடி. ஆச்ரிதர்களுடன் புரையறக் கலந்து பழகுவதையே இயல்வாகவுடையவனென்கை.

ஈசனும்=ஈச்வரனாயிருக்குந் தன்மையாகிற மேன்மையும் கூட இல்லாவிடில் அந்தச் சீல குணம் நிறம்பெறமாட்டாதன்றோ. பரத்துவமுள்ளவிடத்தே காணப்படும் ஸௌலப்யமேயன்றோ போற்றத்தக்கதாகும். காஷ்ட லோஷ்டங்கள் மிகவும் எளியனவாயிருக்கின்றன வென்றால் யாது பயன்? ஒன்றுமில்லை. ஆகவே மேன்மை கிடக்குமிடத்தேயுள்ள நீர்மையே பாராட்டுதற்குரியது. இதற்காகவே எம்பெருமானிடத்தில் மேன்மை குடிபுகுந்ததேயன்றி, அது கண்டு நாம் அஞ்சுவதற்காகவன்று.

முற்றவும் நின்றனன் = ஸகலவித பந்துவுமாகவும், தாரக போஷக போக்ய வஸ்துக்களெல்லாமாகவும், அறிவு ஒழுக்கம் ஜாதி முதலியவற்றால் ஏற்றத்தாழ்வு பெரிதுமுடைய எவ்வகுப்பினர்க்கும் ஒருங்கே ஆச்ரயணீயனாகவும் நின்றான் என்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பற்றிலையாய்='பற்றிலன்' என்பதன் முன்னிலைபிது. அச் சொல்லுக்குக் கொண்ட பொருளே இச்சொல்லுக்குங் கொள்ளத்தக்கது. அவன் உன்னிடத்தில் பற்றுவைத்திருப்பது போலவே நீயும் அவனிடத்துப் பற்றுடையனாய் என்றபடி. அவன் முற்றில் அடங்கு=அவனுடையதான எல்லாவற்றிலும் அந்வயிக்கக்கடவை என்றபடி. "𑌭𑌵𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌸𑌹 𑌵𑍈𑌦𑍇𑌹𑍍𑌯𑌾 𑌗𑌿𑌰𑌿𑌸𑌾𑌨𑍁𑌷𑍁 𑌰𑌂𑌸𑍍𑌯𑌤𑍇 । 𑌅𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌜𑌾𑌗𑍍𑌰𑌤𑌃 𑌸𑍍𑌵𑌪𑌤𑌶𑍍𑌚 𑌤𑍇 = பவாந் து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே - அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஃ ஸ்வபதச் ச தே" என்று இளையபெருமாள் பாரித்தாற்போலவும், "𑌅𑌶𑍇𑌷𑌦𑍇𑌶𑌾𑌖𑌿𑌲𑌕𑌾𑌲𑌯𑍋𑌗𑌿𑌰𑍀𑌷𑍁 𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌵𑌸𑍍𑌥𑌾𑌸𑍍𑌵𑌖𑌿𑌲𑌾𑌸𑍍𑌵𑌨𑌨𑍍𑌯𑌧𑍀𑌃 । 𑌅𑌶𑍇𑌷𑌦𑌾𑌸𑍍𑌯𑍈𑌕𑌰𑌤𑌿𑌸𑍍𑌤𑌥𑌾𑌚𑌰𑌨𑍍 𑌕𑌰𑍀𑌶 𑌵𑌰𑍍𑌤𑍇𑌯 𑌸𑌦𑌾 𑌤𑍍𑌵𑌦𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 = அசேஷதேசாகிலகாலயோகிரீஷு அஹம் த்வவஸ்தாஸ்வகிலாஸ்வநந்யதீஃ - அசேஷதாஸ்யைகரதிஸ் ததாசரந் கரீச வர்த்தேய ஸதா த்வதந்திகே." என்று [வரதராஜஸ்தவத்தில்] கூரத்தாழ்வான் பாரித்தாற்போலவும் பாரித்து ஸகலவித கைங்கரியங்களிலும் ஊன்றியிருக்கக்கடவை என்றதாயிற்று.

இப்பாசுரத்திற்கு பட்டர் அருளிச்செய்யும்படியொன்றுண்டு; அதாவது — ஈசனும் — ஷாட்குண்ய பரிபூர்ணனாய் ஸ்ரீவைகுண்ட நிலயனான எம்பெருமானும், பற்றிலன் - அங்குள்ள நித்யமுக்தர்களிடத்தும் பற்று இல்லாதவனாய், முற்றவும் நின்றனன் - இன்று ஆச்ரயிக்கிற ஸம்ஸாரிகளிடத்திலேயே பரிபூர்ணமான காதல்கொண்டிராநின்றான். பற்றிலையாய் - ஹேய விஷயங்களிலே நீ வைத்திருக்கிற பற்றை விட்டவனாகி, அவன்முற்றிலடங்கு - அவனையே எல்லாமாகப் பற்றுவாயாக என்று.

இப்பாட்டிலும் அடங்கு என்ற ஏவலொருமை வினை முற்றுக்குச்சேர விளி வருவித்துக்கொள்க. உலகத்தை விளித்துச் சொல்லுகிறபடி. .... (௬)

அடங்கெழில்சம்பத்து * அடங்கக்கண்டு * ஈசன்
அடங்கெழிலஃதென்று * அடங்குக வுள்ளே. (௭)

| | | | |
|---|---|---|---|
| அடங்க எழில் | முற்றிலும் அழகியதான | ஈசன ஃது | எம்பெருமானுடையதான |
| சம்பத்து அடங்க | (எம்பெருமானுடைய) விபூதியை எல்லாம் | எழில் என்று | ஸம்பத்து என்று அணிந்து |
| கண்டு | பார்த்து | உள்ளே | அந்த பகவத் விபூதிக்குள்ளேயே |
| அடங்க | அதெல்லாம் | அடங்குக | சொருகிப்போவது. |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



[அடங்கெழில்.] கீழ்ப்பாட்டில், எம்பெருமான் அடியார்களோடு புரை யறக் கலந்து பழகுவதையே இயல்வாகவுடையவனென்றார்; அவன் அப்படி யிருந்தாலும், உண்மையில் அளவிடமுடியாத உபயவிபூதிச் செல்வத்தையுடை யனு யிருக்கையாலும் நாம் மிகப் புல்லியராயிருக்கையாலும் அவனோடு நமக்குச் சேர்த்தி எளிதாயிராதே; கடலிலே புகுந்த ஒரு துரும்பானது அலைமேல் அலை யாகத் தள்ளுண்டுவந்து கரையிலே சேருகிறப்போலே அப்பெருமானது ஐச் வரிய அலைகள் நம்மைத் தள்ளிவிடமாட்டாவோ? "அம்மானாழிப்பிரானவ னெவ்விடத்தான் யானார்" என்று பின்வாங்கப் பண்ணுமே! என்று ஒரு சங்கை யுண்டாக, அதற்குப் பரிஹார மருளுகிறார்போலும் இப் பாசுரத்தினால்: எம் பெருமானது ஐச்வரியம் அளவற்றதென்பது உண்மையே; அப்படிப்பட்ட ஐச் வரியமெல்லாம் நமது நாதனுடைய ஐச்வரியமன்றோ என்று அநுஸந்தித்து நாமும் அந்த ஐச்வரியத்தினுள் அந்தர்ப்பவிக்கவும் பெற்றால் பின்வாங்க ப்ர ஸக்தியிராதென்கிறார். எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள உறவை உணரவே கூச்சம் குலையும் என்பது இப்பாட்டுக்குத் தேர்ந்த கருத்தாம்.

ஸம்பந்தவுணர்ச்சி உண்டாகுமத்தனையே போதுமென்பதற்கு ஈடுமுப் பத்தாறாயிரப்படியில் ஒரு கதை அருளிச்செய்யப்பட்டுள்ளது; அதனை விவரித் துரைப்போமிங்கு;—

ஒரு நகரத்தில் ஒரு வணிகர்தலைவனிருந்தான்; அவன் வெளிநாடுகளில் நீண்டகாலம் வஸித்து வர்த்தகஞ்செய்து விசேஷமாகப் பொருள்படைக்க விரும்பி த்வீபாந்தர யாத்திரைசெய்ய முயன்றான். அத்தருணம் அவனது மனைவி கர்ப்பிணியா யிருந்தாள். அப்போதே அவன் புறப்பட்டு த்வீபாந்தரம் போய்ச்சேர்ந்தான். பிறகு இரண்டொருமாதங் கடந்தபின் அவனது மனைவி ஊரில் பிள்ளைபெற்றாள். அம்மகன் நாளொரு மேனியும் பொழுதொருவண்ண முமாகச் சுக்கிலபக்ஷச் சந்திரன்போன்று வளர்ந்து வருகின்றான். த்வீபாந்த ரத்தில் வர்த்தகஞ்செய்து வாழ்ந்துகொண்டிருக்கும் அவ்வணிகன் பிள்ளை பிறந்த செய்தியையறிந்து பேரானந்தமடைந்து விரைவிலேயே ஊர்வந்து சேர் தற்குப் பெருமுயற்சி செய்தும் மேன்மேலும் வர்த்தகத்தில் மீதூர்ந்து சென்ற மிலைப்பினால் கடுக மீண்டு வரமுடியாமல் நெடுங்காலம் அங்கேயே தங்கிவிட் டான். மகனுக்கு உரிய வயது வாய்த்தவளவில் தானும் தனது குலத்தொழி லாகிய வர்த்தகத்தையே கைப்பற்றிவந்தான்; இவனுக்குப்பலவயது சென்ற வளவிலும் இவனது தகப்பன் த்வீபாந்தரத்திலேயே வாழ்கிறான். பின்பொரு நாள் அவ்வணிகன்மகன் தொழில்முறையில் வெளிநாட்டுக்குச் சென்றிருந்து பலசரக்குக்களுடன் கடல் வழியாய் ஊர்த்துறை முகம்வந்து சேர்ந்தான். அவன் வந்த கப்பலிலேயே அவனது தந்தையும் த்வீபாந்தரத்திலிருந்து பல மூட்டைக ளுடன் ஊர் வந்தனன். அந்தக் கப்பல் துறைமுகஞ் சேர்ந்தவுடனே குமாரன் தனது மூட்டைகளை இறக்குவதாக உத்தேசித்த ஓர் இடத்திலேயே தகப்பனும் தான் கொணர்ந்த மூட்டைகளை இறக்க நினைத்தனன். இவ்விருவரும் தங்க ளுக்குள்ள பித்ரு புத்ரபாவ ஸம்பந்தத்தை அறியாதவர்கள். 'இவன் நம் மகன்'



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்று தந்தை யறியான்; 'இவர் தகப்பனுர்' என்று மகனுமறியான். உண்மையில் இவர்கட்கு இவ்வுறவுமுறை தெரிவதற்கு ப்ரஸக்தியில்லையே: இக்குமாரன் பிறப்பதற்கு முன்னமேயன்றே அவ்வணிகன் வெளிநாடு சென்றிட்டான். ஆகவே 'இவன் யாரோ வொரு வெளிநாட்டு வர்த்தகன்' என்று பாவிக்கலானுன், தந்தையும் மகனை அங்ஙனமே பாவித்தான். இறக்குமதியிடத்தைப் பற்றிய விவாதம் இவர்களுக்கு முற்றிவிட்டது. 'இவ்விடத்தை நானே முதலில் உத்தேசித்தேன்' என்று இருவரும் நெடும்போதாக வாதாடுகின்றனர். அப்போது, இவ் விருவருடையவும் உறவுமுறையை உணர்ந்திருப்பானெரு கிழவன் கண்டு 'அந்தோ! உறவறியாமல் இது என்ன விவாதம்!' என வருந்தி, 'இவன் உன் பிதா, நீ அவன் மகன்; இவன் உன்மகன், நீ இவனுடைய பிதா; ஆயிருக்க எதுக்கு இங்ஙனே வீண் விவாதம்?' என்று அறிவித்தனன். அதன் பிறகு அங்கு என்ன நடந்திருக்கவேணும். ஸம்பந்த வுணர்ச்சி யுண்டானவுடனே கிழிழந்த நாளைக்குச் சோகித்து இருவர் சரக்கும் ஒரு சரக்காய், தந்தை ரக்ஷகனுய் மகன் ரக்ஷ்யனுய் விவாதம் நீங்கிப் பரமரஸம் தலைப்பற்றி வாய்க்கொண்டவாறு பேச்சுக்கு நிலமாமோ?

அதுபோலவே நாமும் நிருபாதிக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய "உன்றன்னேடுறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது" என்னும்படியான உறவின் உறுதியை உற்றுநோக்கி, ஈச்வரன் "த்வம்மே" [நீ எனக்கு அடியன்] எனில், "அஹம்மே" [நான் எனக்கே உரியன்] என்னும் விவாதத்தை விட்டொழித்தால் அப்பெருமானது செல்வமிகுதியைக் கண்டு சிறிதும்கூச நேரிடாதென்க.

ராஜகுமாரன் ஒரு அழகிய தோட்டத்தைக் கண்டு உள்ளே புகநினைத்தும் கட்டுங்காவலுமா யிருந்தது கண்டு அஞ்சி நிற்கு மளவில் 'இஃது உன் தகப்பனது தோட்டங்காண்' என்னவே நினைத்தபடி புகுந்து திளைத்துப் பரிமாறலாமன்றே; அதுபோலவுங் கொள்க.

அடங்க எழில் சம்பத்து அடங்கக் கண்டு = முழுதும் நன்முன செல்வத்தையெல்லாங் கண்டு. அதாவது — முற்றுமழகிய உபயவிபூதியையும் பார்த்து என்றபடி. நித்யவிபூதி யென்கிற திருநாடுதான் முற்றுமழகாயிருக்கும்; * பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்புமிந்நின்ற நீர்மையர் நிரம்பிய மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலமாகிய இவ்விருள்தருமாஞாலம் முற்றவு மழகாயிராதே; அப்படியிருக்க அடங்கெழில் என்று பொதுவிலே சொல்லலாமோ? எனின்; இந்நிலத்தில் வெறுக்கத்தக்க விஷயங்கள் பலபல கிடந்தாலும் 'எம்பெருமானுடைய விபூதி இது' என்று அவனுடைய ஸம்பந்தத்தையிட்டு நோக்குமளவில் ஞானிகளுக்கு ஒருவகையான உவப்பு உண்டாகுமாதலால் அதுபற்றிச் சொல்லிற்றென்க. அடங்க+எழில்; தொகுத்தல் விகாரம். சம்பத்து — ஸம்பத் என்ற வடசொல் விகாரம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஈசனடங்கெழிலஃதென்று — 'அஃதடங்க ஈசனெழிலென்று' என அந்வயித்துக்கொள்ளவேணும். அஃதெல்லாம் நமது ஸ்வாமியானவனுடைய ஸம்பத்து என்று அநுஸந்தித்து என்றபடி.

உள்ளே அடங்குக = எம்பெருமானது விபூதியினுள்ளே தானுமொருவனாக அடங்கப் பார்க்கவேணும். அதற்கு வெளிப்பட்டால் விநாசமே பலிக்கும்; அதனுட் பட்டுவிட்டால் கூசவேண்டிய அவசியமேயில்லை யென்க. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;— "ஸ்வஸ்வாமி பாவ ஸம்பந்த ஜ்ஞாநமடியாகத் தானும் அவன் விபூதியிலே ஒருவனாய் அந்வயிக்கலாமிறே. ஸமுத்ரம் அபரிச்சிந்நமானாலும் அதினுள்ளில் ஸத்வங்களுக்கு வேண்டினபடி புகலாமிறே. அதுபோலே ஸம்பந்த ஜ்ஞாநமடியாகக் கிட்டலாம். ஸம்பந்த ஜ்ஞாநமில்லாத த்ருணத்தையிறே கடல் கரையிலே யேறத்தள்ளுவது. ஸம்பந்த ஜ்ஞாநம் பிறப்பிக்கையிறே வடுககூராதல்." ... .... .... .... .... (எ)

உள்ளமுரைசெயல் * உள்ள விம்மூன்றையும் *
உள்ளிக்கெடுத்து * இறையுள்ளிலொடுங்கே. * (அ)

| | | | |
|---|---|---|---|
| உள்ளம் | நெஞ்சு என்றும் | உள்ளி | ஆராய்ந்துபார்த்து |
| உரை | வாக்கு என்றும் | கெடுத்து | அவற்றிற்குள்ள விஷயாந்தரப்பற்றைத் தவிர்த்து |
| செயல் | உடல் என்றும் | | |
| உள்ள | ஏற்கனவே யுள்ள | இறை உள்ளில் | எம்பெருமான் பக்கலிலே |
| இம்மூன்றையும் | இந்த மூன்று உறுப்புக்களையும் | ஒடுங்கு | அந்வயிப்பது. |

[உள்ளமுரைசெயல்.] என்ன உபகரணங்களைக்கொண்டு எம்பெருமானுக்கு அடிமைசெய்வது என்ன, புதிதாக ஸம்பாதிக்க வேண்டாமல் ஏற்கனவே அமைந்திருந்துள்ள மனமொழி மெய்கள் மூன்றையும் 'இவை எம்பெருமானுக்கு அடிமைசெய்வதற்குறுப்பாகவே கண்டவை' என்று அநுஸந்தித்து, புறம்புண்டான விஷயங்களில் நின்றும் மீட்டு எம்பெருமான் பக்கலிலே ஊன்றவைப்பதென்கிறு ரிப்பாட்டில்.

* யந்மநஸா த்⁴யாயதி தத்³வாசா வத³தி தத்கர்மணா கரோதி *
என்று வேதம் சொல்லிற்று. நெஞ்சு நினைப்பதை வாய் சொல்லுகிறது, வாய் சொன்னதை உடல் செய்கிறது என்பது மேற்குறித்த வேத வாக்கியத்தின் பொருள். எதையேனும் நினைப்பதற்கென்றே ஏற்பட்டிருக்கிற நெஞ்சை விஷயாந்தர சிந்தனையில் நின்றும் மீட்டு உள்ளே யடக்கினவாறே எம்பெருமானைச் சிந்திப்பதற்கு உறுப்பாகும். அந்தச்சிந்தனை முற்றி வெளியேவழிந்து "பொங்கேழ்புகழ்கள்வாயவாய்" என்கிறபடியே சொற்களாய்ப் புறப்படுகைக்கு உடலாகும் வாக்கு. வாக்கினால் துதிக்கத் துதிக்கத் தலைவணங்கித் திருவடிகளிலே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



விழுந்து ஸகல ஸகர்கரியங்களும் பண்ணுகைக்கு உடலாகும் உடம்பு. இவ் வுறுப்புக்களை இன்றாகப் புதிதாய்த் தேடவேண்டாதே முதலிலேயே எம்பெரு மான் இவற்றை உண்டாக்கிவைத்தனனாதலால் "உள்ளவிம்மூன்றையும்" என் றார். இங்கு "நா வாயிலுண்டே நமோ நாரணாவென்று, ஓவாதுரைக்குமுரை யுண்டே, மூவாத மாக்கதிக்கட்செல்லும் வகையுண்டே, என்னொருவர் தீக்கதிக் கட்செல்லுந்திறம்." என்ற பொய்கையார் பாசுரத்தையும், "தாமுளரே தம் முள்ள முள்ளுளதே, தாமரையின் பூவுளதே வத்தும் பொழுதுண்டே, வாமன் திருமருவு தாள்மருவு சென்னியரே செவ்வே, அருநரகஞ் சேர்வதரிது." என்ற பூதத்தார் பாசுரத்தையும் சேர்த்துக்கொள்வது.

இம்மூன்றையும் உள்ளி = மனமொழி மெய்கள் மூன்றையும் ஆராய்ந்து பார்க்கவேணு மென்கிறார். அதாவது — 'இவை எதற்காகப் படைக்கப்பட்ட வை? இவை இப்போது என்ன வுபயோகத்திலிருக்கின்றன' என்று ஆராய்ந்து பார்க்கவேணு மென்கை. அங்ஙனம் ஆராய்ந்து பார்த்தவளவில் 'பகவத்விஷ யத்தில் ஈடுபடுவதற்காகக் கண்டவிவை ஸ்வரூபத்திற்குத்தகாத விஷயங்களிலே பாய்ந்து சென்று கிடக்கின்றன' என்பது அறியப்படும்; உடனே [கெடுத்து] கெடுப்பதாவது அந்த ஸ்வபாவத்தை மாற்றுவது: விஷயாந்தரங்களில் நின்றும் மீட்பதாம். அப்படி மீட்டு, இறையுள்ளிலொடுங்கே = பாழிலும் மேட்டிலும் பாய்கிற நீரைப் பள்ளத்திலும் பயிரிலும் பாய்ச்சுவாரைப்போலே ப்ராப்த விஷயத்திலே யாக்கப்பார்ப்பது.

ஒடுங்கு என்பதைத் தன்வினையாகவும், பிறவினையில்வந்த தன்வினையாகவுங் கொள்வர். நீங்கள் ஒடுங்கவேணுமென்றும், உங்கள் உறுப்புக்களை ஒடுங்கச் செய்யவேணுமென்றும் முறையே பொருள்காண்க. ஒடுங்குதல் — அந்வ யித்தல். .... ... ... .... .... .... .... .... (அ)

ஒடுங்க வவன் கண் * ஒடுங்கலுமெல்லாம் *
விடும் பின்னுமாக்கை * விடும்பொழுதெண்ணே * (கூ)

| | | | |
|---|---|---|---|
| அவன் கண் | அந்த எம்பெருமான் பக்க லிலே | விடும் | விட்டு நீங்கும்; |
| ஒடுங்க | அந்வயிக்கவே | பின்னும் | அதற்குப்பிறகு |
| எல்லாம் ஒடுங்கலும் | (ஆத்மாவை) ஒடுங்கப்பண்ணுவதான அவித்யை முதலானவை யெல்லாம் | ஆக்கை விடும் பொழுது | சரீரம் தொலையும் நாளை |
| | | எண் | எதிர்பார்த்திருப்பது. |

[ஒடுங்கவவன்கண்.] எம்பெருமானோடு நமக்குள்ள உறவின் உணர்ச்சி யுண்டாகவே கூசாமல் அனுகலாமென்றார் ஏழாம் பாட்டில். அவன் தன் விஷ யத்தில் உபயோகப்படுத்துதற்காகவே தந்தருளின உறுப்புக்களை அவன் விஷ யத்திலேயே உபயோகப்படுத்து மத்தனையே வேண்டுவது என்றார் எட்டாம் பாட்டில். இவற்றைக் கேட்ட வுலகர்கள் 'ஆழ்வீர்! நாங்கள் ஸ்வாதந்திரியம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பாராட்டி அதனால் பகவத்விஷயத்தில் ஊற்றமற்றிருக்கின்றோமல்லோம்; எம்பெருமானுடைய போக்யதையை அறியாமலிருக்கிறோமல்லோம்; அப்ராப்தங்களான விஷயாந்தரங்களை விட்டு ப்ராப்தனான அவனையே பஜிக்கவேணுமென்னும் விருப்பம் மிகவுடையோமாயினும் பஜிக்கவொட்டாத விரோதிகள் கனக்கவுண்டாயிருப்பதனாலன்றோ நாங்கள் பஜியாமலிருக்கிறோம்' என்ன; நீங்கள் அவனைக் கிட்டவே அந்த விரோதிகளெல்லாம் உடனே விட்டு நீங்குமென்கிறாரிப்பாட்டில்.

அவன்கண் ஒடுங்க = "நானேயீச்வரன்' என்று இறுமாந்திருக்குமிருப்புத் தவிர்ந்து எம்பெருமானுடைய ஆட்சியை யிசைந்து அவனது அபிமானத்தினுள்ளே அடங்குங்கோள் என்றபடி. அப்படி ஒடுங்கினால், எல்லாம் ஒடுங்கலும் விடும் = ஆத்மாவுக்கு ஸங்கோசத்தை விளைப்பவையான அவித்யா கர்மவாஸநா ருசிகள் யாவும் வாஸனையோடே விட்டுக்கழியும். நல்லதைச் செய்யவே தீயவை தன்னடையே விட்டுப்போமென்பது சொல்லவேணுமோ? இவ்வாழ்வார் தாம் பெரிய திருவந்தாதியில் "வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ, கானோ வொருங்கிற்றுக் கண்டிலமால் — ஆனின்ற கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள் பணிந்தோம், வன்துயரையாவாமருங்கு." என்று ஸ்வாநுபவஸித்த விஷயத்தை அருளிச்செய்தவராதலால் இங்ஙனே பிறர்க்கும் உபதேசிப்பது உசிதம். ஆத்மாவுக்கு ஒடுக்கத்தைப் பண்ணுமவையான அவிஞ்சை முதலானவை ஒடுங்கல் என்ற சொல்லாற் குறிக்கப்பட்டன. வந்தேறியாய் ஒடுங்கிக் கிடப்பவை என்ற காரணத்தினால் அவை ஒடுங்கல் எனப்பட்டன என்றுங் கூறுவர்.

அவித்யை முதலானவை கழிந்து போய்விட்டால் பின்பு இந்நிலத்திலே செய்யவேண்டிய காரியம் ஏதென்ன, பின்னும் ஆக்கை விடும்பொழுது எண் என்கிறார். முமுக்ஷுப்படியில் "பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்குத்வரிக்கையும்" என்று அருளிச்செய்த கட்டளையிலே 'ப்ராப்யம் கைபுகுந்தாவது எப்போதோ' என்று அதில் பதற்றங்கொண்டிருக்கவேணுமென்கை. காமினியானவள் தன்னுடம்பி லழுக்குக் கழற்றிப் போகத்தில் அந்வயிக்கும் ஸமயம் எதிர்பார்த்திருப்பதுபோல, சரீரம் முடியும் நாளை எதிர்பார்த்திருத்தல் வேண்டும். "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னாவி தங்கும்" என்ற ஆண்டாளைப்போலே பதறியிருக்க வேண்டுமென்ப.

"ஹ்ரியோ ஹ்யக்ருத க்ருத்யாஸ் ஸ்யுர்மர்த்யோர் விஜதே ஜநஃ। க்ருதக்ருத்யாஃ ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம் = ப்ராயோ ஹ்யக்ருதக்ருத்யத்வாத் ம்ருத்யோருத்விஜதே ஜநஃ - க்ருதக்ருத்யாஃ ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்." என்கிற மஹாபாரத ச்லோகத்தைப் பின்னடிகட்கு ஸம்வாதமாக எடுத்துக்காட்டியருளினர் பூருவாசாரியர்கள். ராஜஸூயத்தில் தருமபுத்திரரை நோக்கிக் கண்ணபிரான் பணித்த ச்லோகம் இது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இதன் அருமையான கருத்து ஆய்ந்துணரத்தக்கது. இதனைச் சிறிது விவரிப்போமிங்கு.

இவ்வுலகில் பலவகையான துக்கங்களுள்ளன. அவற்றுள் மரண துக்கம் எல்லாவற்றிலும் பெரிது. மரணகாலத்தில் சரீரம் அஸ்வாதீனமாய்விடுகிறது. மனம் கலக்கமுறுகின்றது. புத்தி ஸ்வாதீனமற்றுப் போகின்றது. இந்திரியங்கள் நிலைகுலைகின்றன; என்றிவை முதலான காரணங்களினால் மரணத்தைப் பற்றி மஹத்தான துக்கமுண்டாகின்றது. இவ்வுலகத்தோடு அதுவரையிலிருந்த ஸம்பந்தமென்ன, பந்து மித்ர புத்ர களத்ராதிகளோடிருந்த ஸம்பந்தமென்ன, இன்னமும் தன்னுடையனவாகப் பாவித்த வீடு வாசல் முதலிய பலவகைப் பொருள்களோடு வைத்துக்கொண்டிருந்த ஸம்பந்தமென்ன ஆகிய இவற்றையெல்லாம் விடநேருகின்றது. தாம் செய்யவேணுமென்று நினைத்துக் கொண்டிருந்த பலவகைக் காரியங்கள் குறைபட்டு நிற்கின்றன. — இத்யாதி காரணங்களாலும் மரணமென்றால் யாருக்கும் ருசிப்பதில்லை. ஆகையால் மரணமென்றால் மனிதர் பெரும்பாலும் துக்கமடைவது இயல்பு.

பரலோக முண்டென்றும் பாப புண்யங்கட்குப் பலன் கிடைத்தே தீருமென்றும் ஸ்வர்க்க நரகங்கள் புண்ய பாப பலன்களாம் என்றும் நம்பிக்கையுள்ளவர்களுக்கு ஜீவித்திருந்த காலத்தில் தாம் செய்த பலவகைப் பாவங்களை நினைத்து அவற்றின் பலன்களை அநுபவிக்க நேரிடுமே யென்கிற அச்சத்தினால் மிக்க துக்கமுண்டாகக்கூடியது. ஜீவித்திருந்த காலத்திலோ வென்னில்; சிலர் உலக வியாபாரங்களில் மண்டிப் பரலோகத்தைப்பற்றி நினைக்க அவகாசமும் பெறாமல் விஷய சுகங்களுக்காகப் பாவஞ் செய்கிறார்கள். சிலர் பரலோகத்தையும் பாப புண்யங்களையும் ஈச்வரனையும் இல்லைசெய்து சரீர ஸுகத்திற்காக வேண்டிற்றெல்லாஞ் செய்யலாமென்று நினைத்துப் பாவஞ் செய்கிறார்கள். சிலர், தாம் நீண்டகாலம் ஜீவித்திருக்கப்போவதாகவும், கடைசி காலத்தில் பரலோகத்திற்கு வேண்டியதைச் செய்துகொள்ளப் பார்க்கலாமென்றும் நினைத்து உள்ளவரையில் ஸாம்ஸாரிகஸுகத்திற்காகப் பாவச்செயலில் இழிந்து பிறகு மீளமுடியாமல் நிற்கின்றனர். மிருத்யுவோ நமது எண்ணங்களையும் காரியங்களையும் ஸமய ஸந்தர்ப்பங்களையும்நோக்காமல் சடக்கென வந்துவிடுகின்றது. ஆகையால் பெரும்பாலும் எல்லோருமே மிருத்யுவுக்கு அஞ்சி வருந்துகின்றனர். ஆனால், உண்மையான பக்தர்களும் உலகத்தின் போக்கை நன்றாய்க் கண்டறிந்தவர்களும் எப்போதும் பகவத் பாகவதர்களைச் சிந்தை செய்துகொண்டு ஆத்மானந்தத்தில் ஆழ்ந்து கிடப்பவர்களும் மரணத்தைப்பற்றிச் சிறிதும் வருந்தமாட்டார்கள். மரணத்தை அவர்கள் ஓர் உத்ஸவமாகநினைத்துப் பெருமகிழ்ச்சியே கொள்வர்கள்.

ஸ்வதேசத்தையும் மாதாபிதாக்களையும் மற்றுமுள்ள உறவினரையும் விட்டுப்பரதேசம்போய்ப் பொருளீட்டும் ஒரு சிறுவன் தன் முயற்சிகைகூடி, மிக்க பொருள்திரட்டிக்கொண்டு தன்வீடு திரும்பும்போது சிறிதும் வருந்துவதில்லையன்றோ. பந்துக்களையும் ஸ்வதேசத்தையும்விட்டு நீண்டகாலம் பரதேசத்தில் வஸித்த அச்சிறுவன் தன்னில்லம்திரும்பி ஸ்நேஹமயியான மாதா

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வையும் பந்துபாந்தவர்களையும் எப்பொழுது பார்க்கப்போகிறோமென்று ஆவலோடு காத்திருந்தவன் அச்சமயம் நெருங்கும்போது மஹத்தான ஸந்தோஷத்தையே அடைகிறான். ஸாத்யமானவளவும் விரைவில் தன்னில்லம்போய்ச் சேர நினைக்கிறான். மாதாபிதாக்களைக்கிட்டி அவர்களது அன்புக்கு நாம் எப்பொழுது இலக்காகப்போகிறோமென்று குதுகலிக்கிறான். ஏனென்றால், அவன் பரதேசத்தில் நீண்டகாலமிருந்தாலும் தன்முயற்சியில் ஸித்திபெற்று நிரம்பிய பொருளைத் திரட்டியிருப்பதால் ஒருவகையான ஆத்மஸந்தோஷத்தை அடைந்திருக்கிறான். இவ்விதமாகத்தான் திரும்பும்போது தகப்பனார் தன்னை மிகவும் பாராட்டப்போகிறாரென்கிற நம்பிக்கை அவனது மனத்தை உத்ஸாஹப்படுத்திக்கொண்டிருக்கின்றது. தன்முயற்சியில் ஸித்தியடைந்த புதல்வன் தன் தந்தையிடம் திரும்பிப்போகும்போது அடைகின்ற ஆனந்தம் விலக்ஷணமாயிருக்கும். அதுபோல் உண்மையாகத் தன் நிலைமையையறிந்த பக்தனானவன் இவ்வுலகத்தில் தன் கடமைகளை ஒழுங்குபடச்செய்து எம்பெருமானது நியமனத்தால் ப்ராப்தபோகம் முடிந்து பிதாவான அவ்வீச்வரனது ஸந்நிதானத்திற்குப் போகுங்காலம் கிட்டும்போது (அதாவது) இவ்வுலகத்தின் துக்கமயமான நிலைமையிலிருந்து முடிவாக விடுபடும்போது மஹத்தான ஆனந்தத்தை அடைகின்றான். அவ்வானந்தத்தை எதனோடும் ஒப்பிடமுடியாது. ஆனதுபற்றியே ஆக்கைவிடும்பொழுதெண்ணே என்கிறார்.

எம்பார் ஒருருவிலே ஆக்கைவிடும்பொழுது எண்ணே என்பதற்கு, இனிச் சரீரம்விட்டுத் தொலையும்விஷயத்திலே ஒருகவலையுண்டோ? என்று பணித்தாராம். காரணங்கழிந்தால் காரியமும் தன்னடையே கழியுமென்பவாதலால் சரீரஸ்திதிக்குக் காரணமான அவித்யாகர்மவாஸநாருசிகள் கழிந்தபோதே காரியமான சரீரமும் கழியக்கூடியதாதலால் அவ்விஷயத்தில் எண்ணே?— விசாரமென்? என்றவாறு.

இனி, ஆக்கைவிடும்பொழுதெண்ணே என்பதற்கு "அந்திமஸ்ம்ருதி உண்டாகவேணும்" என்பதாகச் சிலர் பொருள்கூறுவது அஸம்பிரதாயம். அவசியமல்லாத அந்திமஸ்ம்ருதியை ஆழ்வார் விதிக்கமாட்டாரென்க.

* தஸ்ய தாவதேவ சிரம் யாவந்நவிமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே * என்கிற உபநிஷத்தின்பொருள் பின்னடிகளில் உறையுமென்றுணர்க. .... (கூ.)

எண்பெருக்கந்நலத்து * ஒண்பொருளீறில *
வண்புகழ் நாரணன் * திண்கழல்சேரே. * (கய)

| | |
|---|---|
| எண் பெருக்கு — எண்ணிக்கை பெருகிக் கொண்டேயிருக்கும்படி அளவிறந்த | ஒண் பொருள் — சிறந்தபொருளாகிய ஜீவாத்ம வர்க்கத்தையும் |
| அ நலத்து — அப்படிப்பட்ட ஞானம் முதலிய குணங்களையுடைய | ஈறு இல — முடிவில்லாத |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| வண் புகழ் | திருக்கல்யாண குணங்களையும் உடையனான | திண் கழல் | (அடியாரை ஒருநாளும்) கைவிடகில்லாத திருவடிகளை |
| நாரணன் | நாராயணனுடைய | சேர் | ஆச்ரயிப்பது. |

[எண்பெருக்கு.] கீழே ஆழ்வார் உபதேசித்தபடிகளையெல்லாங்கேட்ட ஸம்ஸாரிகள் "ஆழ்வீர்! அப்படியேசெய்வோம்; எம்பெருமானைப் பஜிப்போம்; பஜநத்திற்கு ஆலம்பனமாக ஒரு மந்த்ரம் வேணுமே, அது என்ன மந்த்ரம்?" என்ன, அந்த மந்த்ரம் இன்னதென்று தெரிவித்தருளுகிறாரிப்பாட்டில். நாராயண திருநாமத்தின்பொருளை அநுஸந்தானஞ் செய்துகொண்டே அத்திருநாமத்தை வெளியிட்டருளுகின்றார்காண்மின். மற்றையோர் இந்தத் திருநாமத்தை ஜபம் ஹோமம் முதலியவற்றில் உபயோகப்படுத்திக் காரியங் கொள்வர்கள்; நம் ஆசாரியர்களோவென்னில், இதன் அர்த்தத்தை அநுஸந்தானஞ் செய்வதே உற்றது என்றுகொண்டு தாங்களும் அப்படியே அநுஸந்தித்துத் தம்மைக் கிட்டினார்க்கும் அப்படியே உபதேசித்துப் போருவர்கள்.

இப்பாசுரம் திருமந்த்ரார்த்தம் என்னுமிடம் ஆழ்வானுடைய இதிஹாஸத்தினால் நன்கு விளங்கும்; அது வருமாறு:—அழகிய மணவாளனுடைய அநுக்ரஹத்தினால் ஆழ்வானுக்கு இரண்டு திருக்குமாரர்கள் திருவவதரிக்க, ஆழ்வான் அக்குமாரர்கட்கு நாமகரணம் முதலியன செய்வித்தற்கு உடையவர் கடவரென்று எண்ணித் தாம் ஒன்றுஞ்செய்யாதிருக்க, நம்பெருமாள் திருவருளால் ஆழ்வானுக்கு உபயகுமாரர்கள் உதித்ததாகப் பெருமகிழ்ச்சிகொண்டிருந்த ஸ்ரீபாஷ்யகாரர் அக்குழந்தைகள் பிறந்த பதினோராநாளிலே சிஷ்யவர்க்கத்துடன் ஆழ்வான் திருமாளிகைக்கெழுந்தருளித் தமது பிரதான சிஷ்யர்களில் ஒருவரான எம்பாரைநோக்கிக் 'குழந்தைகளை எடுத்துக்கொண்டுவாரும்' என்ன, அவர் அங்ஙனமே பிரபன்னகுலக்கொழுந்தான அக்குழந்தைகளையெடுத்து வரும்போது த்ருஷ்டிதோஷாதிகள் தாங்காதபடி ரக்ஷையாக த்வயமென்னும் மந்த்ரரத்நத்தை அநுஸந்தித்து வாழ்த்திக்கொண்டே வந்து குழந்தைகளை எம்பெருமானார்க்குக் காட்டினர். அவர் மிக்க களிப்புடனே ஆனந்தக் கண்ணீர் துளிக்கத் தம் திருக்கண்களாற் குளிரக்கடாக்ஷிக்கும்போது அத் தெய்விக சிசுக்களின் தேஜோவிசேஷத்தைக் கண்டு வியப்புக்கொண்டு 'எம்பாரே! இக்குழந்தைகளிடம் த்வயம் பரிமளிக்கின்றதே, இங்ஙனம் ஆகுமாறு என்செய்தீர்?' என்று வினவ, எம்பார் 'குழந்தைகட்குக் காப்பாக த்வயாநுஸந்தானஞ்செய்துகொண்டு வந்தேன்' என்றுசொல்ல, உடையவர் அப்படி எம்பார் காப்பிட்டதற்கு உகந்து அவரைப்பார்த்து 'இக்குழந்தைகள் உய்யும்வகையை நாடிச்செய்தற்கு முற்பட்டீராதலால் இவர்கட்கு நீரே ஆசார்யராகக் கடவீர்' என்று நியமித்துவிட்டார். இக்குமாரரிருவர்க்கும் கூரத்தாழ்வான் திருவாய்மொழிப் பொருள் சொல்லிவரும்போது * எண்பெருக்கந்நலத்து இத்யாதியான இந்தப் பாசுரம் வந்தவளவிலே இது திருமந்திரார்த்தத்தை விவரிக்கிறதாதலாலும் மந்த்ரார்த்தம் ஆசார்யரிடத்திலேயே கேட்டறியவேண்டியதாதலாலும் அதனை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அவர்கட்குச் சொல்லாது நிறுத்தி 'இதனை உங்கள் ஆசாரியர்பக்கலிலே கேட்டுக் கொள்ளுங்கள்' என்று சொல்ல, அதனை விரைவில் அறிந்துகொள்ளவேணு மென்னும் அவாவினால் உடனே அவர்கள் எழுந்து தங்கள் ஆசார்யரான எம்பார் எழுந்தருளியிருக்குமிடத்தைக் குறித்துப் போகப்புக்கவளவில், ஆழ்வான் யாக்கைநிலையாமையைத் திருவுள்ளத்திற்கொண்டு அவர்களை யழைத்து 'இன்ன போது இன்னாரிருப்பார் இன்னார் போவாரென்று தெரியாது, ஆதலால் இருந்து கேளுங்கள்' என்று திருமந்திரத்தைச் சொல்லி இப்பாட்டின் பொருளை யும் விவரித்து 'இப்பாசுரத்தைத் திருமந்திரத்தின் அர்த்தமாக நினைத்திருங்கள்' என்று பணித்தருளினார்—என்பதாம்.

எண்பெருக்கந்நலத்தொண்பொருள் = இவ்வளவாலும் ஜீவாத்மாக்களைச் சொன்னபடி. இப்படிப்பட்ட ஜீவாத்மாக்களையுடையவன் என்று நாராயண னுக்கு விசேஷணமாயிருக்கின்றது. எண்ணமுடியாதவர்களாய் ஞானம் ஆனந்தம் என்ற சிறந்தகுணங்களையுடையவர்களாய் நித்யமாய் விலக்ஷணமான ஸ்வரூபத்தை யுடையவர்களான ஸகல ஆத்மாக்களையுமுடையவன் நாராயணன் என்க. எண்பெருக்கென்றது ஜீவர்கள் அனந்தகோடிக்கணக்காக வுள்ளவர்க ளென்றவாறு.

ஈறில என்பது மத்யமதீபந்யாயத்தாலே கீழும் மேலும் அந்வயிக்கக் கடவது; ஈறு இல்லாமையாவது நித்தியமாயிருத்தலாம். கீழோடே அந்வயித்த போது ஜீவாத்மாக்களின் நித்யத்வம் சொல்லப்படும்; மேலோடே அந்வயித்த போது திருக்கல்யாணகுணங்களின் நித்யத்வம் சொல்லப்படும். ஈறிலவான ஆத்மாக்களையும் ஈறிலவான கல்யாணகுணங்களையுமுடையனுகையாயிற்று நாராயணனுகையாவது. அப்படிப்பட்ட நாராயணனுடைய, திண்கழல்சேர் = அடியவர்களை ஒருநாளுங் கைவிடமாட்டாத திருவடிகளைச் சேருங்கள் என்ற வாறு. இப்பாட்டிலும் விளி வருவித்துக்கொள்வது. .... .... .... (கo)

சேர்த்தடத் * தென்குரு கூர்ச்சடகோபன்சொல் *
சீர்த்தொடையாயிரத்து * ஓர்த்த விப்பத்தே. (கக)

| | |
|---|---|
| சேர் தடம் { செறிந்த தடாகங்களையுடைய | சீர் தொடை { கவியுறுப்புக்க ளெல்லாம் நன்கு அமையப்பெற்ற |
| தென் குருகூர் திருநகரியில் அவதரித்த | ஆயிரத்து ஆயிரத்தினுள்ளே |
| | இ பத்து இப்பத்துப்பாசுரம் |
| சடகோபன் சொல் } நம்மாழ்வார் அருளிச்செய்த | ஓர்த்த { ஆராய்ந்து சொல்லப்பட்டது. |

* * * [சேர்த்தடம்.] இத்திருவாய்மொழி வாய்வந்தபடி சொல்லிற்றன்று, சேதநருடைய ஹிதத்துக்கீடாக ஆராய்ந்து சொல்லப்பட்டதென்று நிகமனஞ் செய்கிற பாசுரம் இது.

சேர்த்தடத்தென்குருகூர்ச்சடகோபன்சொல் = இங்கு ஈடுமுப்பத்தாறுயிரப் படியில் "சேர்த்தடம் என்கிற வித்தைச் சேர்தடமாக்கி" என்றருளிச்செய்யப்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பட்டுள்ளது. இலக்கணப்படிக்குச் சேர்தடமென்று இயல்பாகவே யிருக்க வேண்டுமல்லது சேர்த்தடமென்று தகரவொற்று மிகவேண்டிய அவசியமில்லை; ஆனாலும், மற்ற மூன்றடிகளிலும் இதேஸ்தானத்தில் வல்லொற்றுமிக்கிருப்ப தனால் அதற்கிணங்க முதலடியிலும் மிக்கது: சொற்செறிவு அங்ஙனமிருந் தாலும் பொருட்சேர்த்திக்கு ஏற்பத் தகரவொற்று இன்றியே கொள்க என்கிறார் நம்பிள்ளை.

பொய்கைகளோடு பொய்கைகள் சேர்ந்திருக்கும்படியான தென்குருகூர் என்றபடி. இதனால் திருநகரியின் நீர்வளம் சொல்லிற்றாகிறது. வரிசையாகப் பொய்கைகளே எங்கும் நிறைந்திருக்குமென்க. 'தடம் சேர் தென்குருகூர்' என்று அந்வயித்து, பொய்கைகளோடு கூடியிருக்கின்ற' திருநகரி என்னவுமாம். ஆக இப்படிப்பட்ட திருநகரியில் அவதரித்தருளின ஆழ்வார் அருளியவார்த்தை.

சீர்த்தொடையாயிரத்து = கவியுறுப்பான சீருந்தொடையும் நிரம்பினவாயிர மென்க. இனி, சீர் என்று எம்பெருமானது திருக்குணங்களைச் சொல்லிற்றாய், பகவத்குணங்களைத்தொடுத்து அமைக்கப்பட்ட வாயிரம் என்னவுமாம். இப்ப டிப்பட்ட ஆயிரத்திலே, இப்பத்து ஓர்த்த = சேதநருடைய ஹிதத்தை மிகவு மாராய்ந்து சொன்னது இந்தத்திருவாய்மொழியென்க.

பாட்டின்முதலிலுள்ள சேர் என்பதை வினைமுற்றாகவுங் கொள்ளலாம்; இப்பத்தே சேர் — இப்பத்துப்பாட்டையும் சேருங்கள், (அதாவது) அநுஸந்தா னஞ் செய்யுங்கள் என்றபடி. முதற்பாட்டில் வீடுமின் என்ற பன்மைக்குச்சேர இக்கும் பன்மையாகவே பொருள்கொள்ளவுரியது. .... .... .... (கக)

இரண்டாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## மணவாளமாமுனிகளருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத் திருவாய்மொழிக்கான பாசுரம்.

வீடுசெய்து மற்றெவையும் மிக்கபுகழ் நாரணன்றாள் *
நாடு நலத்தாலடைய நன்குரைக்கும் * — நீடுபுகழ்
வண்குருகூர் மாறன் இந்த மாநிலத்தோர் தாம்வாழ *
பண்புடனே பாடியருள் பத்து.

### பதவுரை.

| பதம் | பொருள் |
|---|---|
| நீடு புகழ் | பெரும்புகழையுடையரும் |
| வண் குருகூர் | வளப்பத்தையுடைய திருநகரியில் திருவவதரித்தவருமான |
| மாறன் | நம்மாழ்வார் |
| இந்த மா நிலத்தோர் தாம் | இப்பெரிய பூமியிலுள்ளவர்கள் |
| வாழ | உஜ்ஜீவிப்பதற்காக |
| பண்புடனே | கிருபையுடனே |
| பாடி அருள் | பாடியருளின |
| பத்து | (வீடுமின்முற்றவுமென்று தொடங்கியுள்ள) பத்துப்பாசுரங்களானவை |
| மற்று எவையும் | (பகவத்விஷயந்தவிர) மற்றெல்லாவற்றையும் |
| வீடு செய்து | விட்டு |
| மிக்க புகழ் | மிகுந்த புகழுடைய |
| நாரணன் | நாராயணனது |
| தாள் | திருவடிகளை |
| நாடு | உலகத்தாரெல்லாரும் |
| நலத்தால் அடைய | பக்தியுடன் ஆச்ரயிக்குமாறு |
| நன்கு உரைக்கும் | நன்றாக உபதேசிக்கும். |

* * * — ஆழ்வார் தம்முடைய திருவுள்ளம் தமது அநுபவத்திற்குத் துணையாய் எங்ஙனம் திருந்தியிருக்கிறதோ அங்ஙனம் ஸம்ஸாரிகளும் திருந்தும்படி அவர்களைக் குறித்து பகவத் பஜநத்தை யுபதேசிக்கின்ற இரண்டாந் திருவாய்மொழியின் ஸாரார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறது இப்பாட்டு.

எம்பெருமானைப் பஜிப்பதற்கு இடையூறும் அஹங்கார ஹேதுவாயுமுள்ள எல்லாவற்றையும்விட்டு, கல்யாணகுணங்கள் நிறைந்த ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை உலகம் முழுவதும் ஆச்ரயித்து உஜ்ஜீவிக்குமாறு நம்மாழ்வார் பரம கிருபையுடன் உபதேசித்த பதிகம் இது என்க.

இத் திருவாய்மொழியில், முதல் மூன்று பாசுரங்களில் வினைமுற்றுக்கள் பன்மையாகவும், மற்ற மேற்பாசுரங்களில் வினைமுற்றுக்கள் ஒருமையாகவும் உள்ளன; ஒருமையாகவுள்ளதற்குச் சேர 'நாடு' என்பது விளிபொருளாகக் கொள்ளத்தக்கதென்பது "நாடு நலத்தாலடைய" என்பதனால் ஸூசிப்பிக்கப்பட்டதென்பர். .... ... .... .... .... .... .... (*)

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.



ஸ்ரீ:.

# ஸ்ரீகாஞ்சீ அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்த த்ரமிடோபநிஷத் ஸங்கதியில் இத்திருவாய்மொழிக்கான ச்லோகம்.



𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑍋𑌽𑌪𑍍𑌯𑌨𑍁𑌜𑌿𑌘𑍃𑌕𑍍𑌷𑍁𑌰𑌸𑍌 𑌦𑌯𑌾𑌲𑍁𑌃

𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌾𑌸𑍍𑌥𑌿𑌰𑍇𑌤𑌰𑌪𑍁𑌮𑌰𑍍𑌥𑌰𑍁𑌚𑌿𑌂 𑌨𑌿𑌰𑌸𑍍𑌯 ।

[illegible]

[illegible] ॥

கருத்து:—பேரருள் பொலிபநின்ற நம்மாழ்வார் ஸம்ஸாரிகளையும் அநுக்ரஹிக்க விரும்பி, அற்பங்களாயும் அஸ்திரங்களாயுமுள்ள இதர புருஷார்த்தங்களில் அவர்களுக்குள்ள ஆவலைத் தவிர்த்து, அத்தகைய புருஷார்த்தங்களை விட்டு எம்பெருமான் பக்கலில் பக்தி செய்யவேணுமென்று இரண்டாந் திருவாய்மொழியில் உபதேசித்தருளினரென்றவாறு.

ஜீயர் திருவடிகளே சரணம்.



Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி முதற்பத்து
# மூன்றுந்திருவாய்மொழி — பத்துடையடியவர்.



## அவதாரிகை.

முதற்றிருவாய்மொழியில் எம்பெருமானுடைய பரத்துவத்தைப் பேசினுர்; அங்ஙனம் பரனுன அப்பெருமானைப் பஜியுங்கோளென்று இரண்டாந் திருவாய் மொழியில் உபதேசரூபமாக அருளிச்செய்தார். அங்ஙனம் உபதேசித்த ஆழ்வாரை நோக்கி ஸம்ஸாரிகள் "ஸ்வாமிந்! பஜியுங்கோள் பஜியுங்கோள் என்று பலகாலும் அருளிச்செய்கின்றீர்; இருகை முடவனை நோக்கி 'ஆனையேறு, ஆனையேறு' என்றால் அவனால் ஏறப்போமோ? அப்படியே, ஸர்வேச்வரனுய் "நாகணைமிசை நம்பரர் செல்வர் பெரியர்" என்னும்படி மிகப் பெரியனுயிருக்கின்ற அவனை நீசரான ஸம்ஸாரிகளாலே பற்றப்போமோ?" என்ன, அவ்வானை தானே அவ்விருகை முடவனுக்கும் ஏறலாம்படி படிந்து கொடுக்குங்கால் ஏறத் தட்டில்லையன்றே; அப்படியே ஸம்ஸாரிகளுக்குப் பஜிக்கலாம்படி அவன் தன்னைத் தாழவிட்டு எளியனுமாகில் பஜிக்கத் தட்டில்லையே யென்கிறுர்.

எம்பெருமான் பக்கலில் பரத்வ ஸௌலப்யங்களென்று இரண்டு குணங்களுள்ளன; ஸௌலப்யமின்றியே வெறும் பரத்வம் மாத்திரமிருந்தாலும் பயனில்லை; பரத்வமின்றியே வெறும் ஸௌலப்யம் மாத்திரமிருந்தாலும் பயனில்லை; தெருவிலேகிடக்கிற காஷ்ட லோஷ்டங்களுக்கு ஸௌலப்யமிருந்தும் பரத்வமில்லாமையாலே பயனில்லை; மேருமலை, கைலாஸமலை என்னும்படியானவற்றுக்குப் பரத்வமிருந்தும் ஸௌலப்யமில்லாமையாலே பயனில்லை; இரண்டுங் கூடியிருந்தாலாயிற்றுப் பயனுள்ளது. பரத்வத்தைக்கண்டு பின்வாங்கவேண்டாமைக்கு ஸௌலப்யம். ஸௌலப்யத்தைக்கண்டு உபேக்ஷிக்கவேண்டாமைக்குப் பரத்வம். ஆக இவ்விரண்டு குணங்களும் எம்பெருமான் பக்கல் குறையறவுள்ளன. அவற்றுள் ஸௌலப்யகுணம் இத் திருவாய்மொழியில் அநுபவிக்கப்படுகின்றது.

எம்பெருமானுடைய பரத்வத்தை எவ்வளவும் பேசலாம்; எளிமையைப் பேசுவதென்பது அரிது; 'அப்படிப்பட்ட பெரியவன் இப்படித் தாழ நின்றுனே!' என்று * உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்து உடம்பெலாங் கண்ணநீர்சோரப் பேசவேண்டிய விஷயமாகையாலே தெளிந்திருந்து பேசப் போகாது. ஆழ்வாரை ஆறுமாதம் மோஹிக்கப்பண்ணின விஷயமாயிற்று இது. .... .... (*)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன் * மலர்மகள்விரும்பும் நமரும்பெறலடிகள் *
மத்துறுகடை வெண்ணெய்களவினில் உரவிடையாப்புண்டு *
எத்திறமுரலினோடு இணைந்திருந்தேங்கிய வெளிவே. (க)

| | |
|---|---|
| பத்து உடை | பக்தியையுடைய |
| அடியவர்க்கு | அடியார்களுக்கு |
| எளியவன் | ஸௌலபனும் |
| பிறர்களுக்கு | மற்றையோர்களுக்கு |
| அரிய | துர்லபனுயுமிருக்கிற |
| வித்தகன் | ஆச்சரியபூதனும், |
| மலர் மகள் விரும்பும் | பெரியபிராட்டியார் விரும்புதற் கிடானவனும் |
| பெறல் அரு | பெறுதற்கு அரியனுமான |
| நம் அடிகள் | நமது ஸ்வாமி |

| | |
|---|---|
| மத்து உறு கடை வெண்ணெய் களவினில் | (யசோதைப்பிராட்டி) மத்தையுறுத்திக் கடைகின்ற வெண்ணெயினுடைய களவில் |
| உரம் இடை | மார்வினிடையிலே |
| ஆப்புண்டு | கட்டுண்டு |
| உரலினோடு இணைந்திருந்து | உரலோடு பொருந்தியிருந்து |
| ஏங்கிய | ஏங்கியிருந்த |
| எளிவு | எளிமைக்குணம் |
| எத்திறம் | எப்படிப்பட்டது ! |

* * * — எம்பெருமானுடைய ஸௌலப்யம் நன்கு விளங்கினது அவதாரங்களிலாதலால் அப்படிப்பட்ட அவதாரங்களுள்ளும் நீர்மைக்கு எல்லையான க்ருஷ்ணவதாரத்திலே யிழிந்து, அதிலேயும் பரத்வத்தோடு ஸமமாகச் சொல்லக்கூடிய நிலைகளிற் செல்லாதே, வெண்ணெய் களவுகண்டு கட்டுண்டு வருந்தியேங்கி நின்ற நிலையிலே யகப்பட்டு இப்படியும் ஒரு எளிமைக்குணமுண்டோவென்று ஈடுபடுகிறார்.

பத்துடையடியவர்க்கு எளியவன் = பக்தியையுடைய அடியவர்கட்கு மிகவும் ஸௌலபன் என்றபடி. பக்தி என்னும் வடசொல் 'பத்தி' என விகாரப்பட்டு அதுவே 'பத்து' என்றும் விகாரப்பட்டதெனக்கொள்க. திருமழிசைப்பிரான் திருச்சந்தவிருத்தத்தில் "எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால் மனந்தனைக் கட்டி" என்றருளிச்செய்தார்; எட்டோடு இரண்டு சேர்ந்தால் பத்து ஆகிறது. அங்குப் பத்து என்கிற எண் விவக்ஷிதமன்று; பக்தியே விவக்ஷிதம். ஆகவே பக்திவாசகமான பத்து என்னுஞ் சொல் ஆழ்வார்கள் கோஷ்டியில் ப்ரஸித்தம்.

பக்தியைச் சொல்லுகிறதென்றே கொள்வோம்; பக்திக்குப் பலபல கணுக்கள் உண்டாதலால் ஆரம்ப தசையாகிய பக்தியைக் கொள்வதா? சிறிது முதிர்ந்த பக்தியைக் கொள்வதா? முற்ற முதிர்ந்த பக்தியைக் கொள்வதா? என்னில்; ஆரம்பதசையாகிய பக்தியைக் கொள்வதே இங்குச் சிறக்குமென்பர். ஏனென்றால், எம்பெருமானது குணத்தைப் பாராட்டிச்சொல்லுகிற ப்ரகரணமாதலால் "முற்ற முதிர்ந்த பக்தியையுடையார்க்கு எளியன்" என்றுரைப்பது ஆழ்வார்க்கு விவக்ஷிதமாயிராது; 'தன்பக்கலில் சிறிது ஆசைவைத்தவர்களையும் தான் விடமாட்டாமலிருக்கிறான்' என்று சொல்லுவதே ஏற்றதாகும். ஆகவே, அத்வேஷமாத்திரமே இங்குப் பத்து என்னுஞ் சொல்லுக்குப் பொருளாகவுரியதாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஈடு முப்பத்தாறுயிரப்படி காண்மின்; — "தந்தாமை பொழியச் செல்லாதார்க்கு ஸ்நேஹிக்குமது அல்லாதார்க்கு முண்டாகையாலும் 'மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந' என்னுமவனாகையாலும் பக்தியின் உபக்ரமமாத்ரத்தையே சொல்லிற்றாகக்கடவது. ஆசாலேசமுடையார்க்குத் தன்னைக்கொடுப்பதாக பகவதுக்திய முண்டாயிருந்ததிறே. * எதிர் சூழல்புக்கு என்றும் * என்னின் முன்னம் பாரித்து என்றும் விலக்காமை தேடித் திரிகிறவனிறே."

பத்து உடை = கீழ்ச்சொன்ன பக்தியை உடைமையாகக் கொண்டுள்ளவர்கள் என்றவாறு. இதுவேயன்றோ பாகவதர்கட்குச் சிறந்த செல்வம். இலங்கைச் செல்வமனைத்தையும் விட்டிட்டுப் புகலற்று வானத்திலே வந்து நின்ற ஸ்ரீவிபீஷணாழ்வானை "அந்தரிக்ஷகதஃ ஸ்ரீமாந் = அந்தரிக்ஷகதஃ ஸ்ரீமாந்" என்றார் வான்மீகி முனிவர். அப்போது அவ் விபீஷணரிடத்து இருந்த ஸ்ரீயாவது ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம். இராமபிரான்பின்னே காட்டுக்குப்புறப்பட்ட இளையபெருமாள் "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" எனப்பட்டார். அப்போது லக்ஷ்மணனுக்கிருந்த லக்ஷ்மியாவது ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியேயாம். முதலையின் வாயிலே அகப்பட்டுத் துடியாநின்ற கஜேந்திராழ்வான் "ஸ து நாகவரஃ ஸ்ரீமாந்" எனப்பட்டான்; அப்போது கஜேந்திராழ்வானுக்கிருந்த ஸ்ரீயாவது ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம்.

இப்படிப்பட்ட பக்திமான்களுக்கு எளியவன் = கையாளாக இருக்குமவன் என்றபடி. விச்வாமித்திர முனிவனோடு கூடச்சென்ற ராமலக்ஷ்மணர்கள் "இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ | ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம். = இமௌ ஸ்ம முநிசார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ - ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை சாஸநம் கரவாவ கிம். = முனிவரே! இதோ நாங்கள் தேவரீருக்குப் பணிவிடை செய்பவர்களாயிருக்கின்றோம்; எதுவேணுமானாலும் கூசாதே நியமித்தருளவேணும்" என்றாப்போலே ஏவிற்றெல்லாம் செய்யக் கடமைப்பட்டிருப்பனென்க. "பக்த்யா த்வநந்யயா சக்ய: அஹமேவம்விதோர்ஜுந = பக்த்யா த்வநந்யயா சக்ய: அஹமேவம்விதோர்ஜுந!" என்று கீதையில் அர்ஜுநனை நோக்கிக் கண்ணபிரானருளிச்செய்ததும் இங்கு உணரத்தக்கது: 'நான் பக்திக்குக் கட்டுப்படுவேன் காண்' என்று சொன்ன கண்ணபிரானை நோக்கி அர்ஜுநன் 'அது எங்ஙனம்?' என்று கேட்க; [அர்ஜுந! அஹம் ஏவம்விதஃ] உலகில் ஒருவன் கறுத்திருக்கவும் ஒருவன் சிவந்திருக்கவுங் கண்டாயே; அவை எப்படி அவரவர்களுடைய ஸ்வபாவமோ அப்படியே எனக்கும் இது இயல்பென்று கொள்ளாய் - என்றான் கண்ணபிரான்.

எளியவனாயிருக்குந்தன்மை எல்லாரிடத்துங் காட்டப்பட்டால் அனர்த்தமாகுமே; உகந்தவர்கட்கு மாத்திரம் எளியனாய், உகவாதார்க்கு அருமைப்பட்டவனாயிருந்தால்தானே அன்பர் தேறியிருக்கமுடியும்; அதற்காக அருளிச்செய்கிறார்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பிறர்களுக்கு அரிய வித்தகன் என்று. எம்பெருமானையே உபாயமாகக்கொள்ளாமல் பிறிதொன்றை உபாயமாகக் கொள்ளுமவர்கள் இங்குப் பிறர்களாவார்; அன்னவர்கட்கு அருமைப்பட்டிருத்தலாகிற ஆச்சரியத்திற்கு ஆஸ்பதன் எம்பெருமான் என்க. என்ன ஆச்சரிய மென்னில்; யசோதைப்பிராட்டி முதலானார்க்கு விதேயனாயிருந்த நிலைதன்னிலேயே பூதனை, சகடம், மருதம் முதலியவற்றுக்கு அணுகவுமொண்ணாதிருந்தமை காண்க. இன்னமுங்காண்மின்;— கண்ணபிரான் பள்ளிகொண்டருளா நிற்கச்செய்தே அர்ஜுநனும் துரியோதனனும் படைத்துணை வேண்டிவர, அர்ஜுனனுக்குத் தன்னையே கொடுத்து, துரியோதனனுக்கு நவகோடி நாராயணர்களாகிற குப்பைக்கூளங்களைக் கொடுத்துவிட்டதும் அறிக.

இவ்விடத்தில் நம்பிள்ளையீடு:—"நம்முடையவர்கள் எம்பெருமானையே உபாயமாகப்பற்றாநிற்க, அல்லாதார் அசேதநக்ரியாகலாபங்களைப் பற்றுகிறாப் போலேயிறே துர்யோதனன் நிலை"—என்பதாம். இந்த ஸ்ரீஸூக்தியின் உட்பொருள் உய்த்துணரத்தக்கது.

மலர்மகள் விரும்பும் அரும்பெறல் நம் அடிகள்=தாமரைமலரிலே பிறந்து அதனையே இருப்பிடமாக வுடையளாயிருந்த பிராட்டி அங்கே அடிக்கொதித்து அதனைவிட்டு "அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கை யுறைமார்பா" என்கிறபடியே திருமார்பை விரும்பி விடாதேயிருக்கப்பெற்ற பெருமான். "மலர்மகள் விரும்பும்" என்பதற்கு அடுத்தபடியாக "அரும்பெறலடிகள்" என்கையாலே, பிராட்டிக்கு வல்லபனாயிருத்தலே எம்பெருமானுடைய ஸர்வாதிகத்வத்திற்கு ஹேது என்பது விளங்கும். இராவணன் மாரீசனிடம் சென்று இராமபிரானுக்குத் தீங்கிழைக்கத் துணைவேண்டினபோது மாரீசன் சொன்ன சொல் காண்மின்;— "அப்ரமேயம் ஹி தத் தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா —அப்ரமேயம் ஹி தத் தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்றான்; விச்வாமித்திர முனிவனோடுகூட யாகஸம்ரக்ஷணார்த்தமாக ப்ரஹ்மசாரியாய் வந்திருந்தபோதே ஸ்ரீராமனுடைய திறல் அற்புதமாயிருந்தது; பின்னை ஜனகராஜன் திருமகளைக் கைப்பற்றினபின்பு அவளோடுண்டான சேர்த்தியால் அளவிடமுடியாதபடி யன்றோ அவனுடைய திறல் இருப்பது என்றான்.

முதல் திருவாய்மொழியில் "உளன் சுடர்மிகு சுருதியுள்" என்று ஆழ்வார் ஏகாந்தமாகக்காட்டின லக்ஷ்மீஸம்பந்தம் இப்பாட்டில் நன்கு வெளியிடப்பட்டதாயிற்று.

முதலடியில் "பத்துடை யடியவர்க்கெளியவன்" என்று சொன்ன பக்தபாரதீனத்வமானது பின்னடிகளில் உபபாதிக்கப்படுகிறது—மத்துறு கடைவெண்ணெய் என்று தொடங்கி. "ஆங்கொருநாள் ஆய்ப்பாடிச், சீரார்கலையல்குல்சிரடிச்செந்துவர்வாய், வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு, ஏரரிடை நோவ எத்தனையோர் போதுமாய்ச், சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை, வேரார் நுதல்மடவாள் வேறோர் கலத்திட்டு, நாராறுறி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யேற்றி நன்கமைய வைத்ததனைப், போரார்வேற்கண்மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம், ஓராதவன்போல் உறங்கியறிவுற்றுத், தாரார் தடந்தோள் களுள்ளளவுங் கைநீட்டி, ஆராதவெண்ணெய் விழுங்கி, அருகிருந்த மோரார் குடமுருட்டி முன்கிடந்த தானத்தே, ஓராதவன்போற் கிடந்தானைக் கண்டவ ளும், வாராத் தான் வைத்ததுகாணாள், வயிறடித்து இங்காரார் புகுதுவார் ஐயரி வால்லால், நீராமிது செய்தீரென்றோர் நெடுங்கயிற்றால், ஊரார்களெல்லாருங் காண வுரலோடே, தீராவெகுளியளாய்ச் சிக்கனவார்த்து அடிப்ப, ஆராவயிற்றி னோடு ஆற்றாதான்'' [சிறிய திருமடல்] என்கிறபடியே நடந்ததொரு கதையை அநுஸந்தித்து ஈடுபடுகின்றார்.

யசோதைப்பிராட்டி மத்தையுறுத்தித் தயிர் கடையும்போது அவளது நிழலிலே யொதுங்கியிருந்து களவுவழியிலே வெண்ணெயை அள்ளி அமுது செய்யக் கையோடே பிடியுண்டு உரலோடே மார்வை நெருக்கிக்கட்டியிட்டு வைக்கப்பெற்று அழுது ஏங்கிநின்றநிலைமை என்னே! என்று கரைகின்றா ராழ்வார்.

''உரலினோடிணைந்திருந்தேங்கிய வெளிவு எத்திறம்!'' என்று சொல்லிக் கொண்டே ஆழ்வார் மோஹித்துவிட்டாரென்பது ''த்வாம் நந்த கோப ஸுத ஸர்வ ஸஹஸ்ர பேஷம் யஶோதா கர்வீ ஸ்வதீய வாஸநத்ரைஷவிராணா| ஸோஹ்ம் ஶாஸவரிணா ஜுஷா பபந்த தாத்ருஶே வரித ராயஜநாஸ்ஸஹ ஸே=த்வாமங்யகோபக்ருஹகவ்யமுஷம் யசோதா குர்வீ த்வதீயமவமாநமம்ரு ஷ்யமாணா - ப்ரேம்ணாத தாமபரிணாமஜுஷா பபந்த தாத்ருங் ந தே சரிதமார்ய ஜநாஸ் ஸஹந்தே.'' என்ற அதிமாநுஷஸ்தவ ஸ்ரீஸூக்தியில் ஈற்றடியால் வெளி யிடப்பட்டது கூரத்தாழ்வானால். ஆசார்யஹ்ருதயத்திலும் ''மூவாறுமாஸம் மோஹித்து'' என்றருளிச்செய்யப்பட்டது.

உரவிடை—இதற்குப் பலபடியாகப் பொருள் கூறுவர். உரஸ் என்னும் வடசொல் உரமெனத் திரிந்ததாகக்கொண்டு 'மார்பினிடையிலே' என்று பொ ருள்கொள்ளுதல் ஒன்று. உதரம் என்ற வடசொல் இடைக்குறையாக உர மெனத் திரிந்ததாகக்கொண்டு, 'வயிற்றினிடையிலே' என்று பொருள்கொள்ளு தல் மற்றொன்று. அன்றியே, உரம் விடை எனப்பிரித்து, செருக்குடைய காளைபோன்ற கண்ணபிரான் என்றலுமொன்று. இப்பொருளில் முற்றுவமை.

எளிவருமியல்வினன் நிலைவரம்பிலபலபிறப்பாய் *
ஒளிவருமுழுநலம் முதலில கேடிலவீடாம் *
தெளிதருநிலைமையது ஒழிவிலன்முழுவதுமிறையோன் *
அளிவருமருளினோடு அகத்தனன் புறத்தனனமைந்தே. (௨)

நிலை வரம்பு இல பல பிறப்பு ஆய் { ஒரு நிலையும் ஒரு நியதியும் இல்லாத பலவகைப்பட்ட பிறப்பையுடையனாய் | முதல் இல கேடு இல முழு நலம் { முதலுமில்லாமல் முடிவுமில்லாமலிருக்கின்ற கல்யாண குணங்களெல்லாம்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஒளி வரும் — ஒளிமல்கும்படியான

எளிவரும் இயல்வினன் — { ஸௌலப்யத்தையே இயல்வாக வுடையனாய்

வீடு ஆம் தெளி தரு நிலைமை அது முழுவதும் — { மோக்ஷமாகிற தெளிவைத் தருதலாகிற அந்த நிலைமையை முழுவதும்

ஒழிவு இலன் — { எப்போதும் உடையவனாய்

இறையோன் — ஸ்வாமியானவன்

அளிவரும் அருளினோடு அமைந்து — { அளிந்த கிருபையோடே கூடி

அகத்தனன் — { (அடியவர்க்கு) அந்தரங்கனாய்

புறத்தனன் — { (மற்றையோர்க்கு) அணுகத்தகாதவனாயிருப்பன்.

* * * — கீழ்ப்பாட்டில் "எத்திறமுரலினோடு இணைந்திருந்தேங்கிய வெளிவே !" என்று சொல்லி ஆறுமாதம் மோஹித்துக்கிடந்தாரன்றோ ஆழ்வார். இங்ஙனே இவர் மோஹித்துக்கிடக்கும்போது, நன்றாகப் பலித்ததொரு மரத்தைப் பறவைக்கணங்கள் மொய்த்துக்கொண்டு கிடக்குமாபோலவும், ஸ்ரீராமபிரானும் பிராட்டியும் பள்ளிகொண்டருளின விடத்தை ஸ்ரீகுஹப்பெருமாள் நோக்கிக்கொண்டு கிடந்தாப்போலவும் ஸ்ரீமதுரகவிகள் முதலான ஸத்துக்களடங்கலும் மோஹிதரான ஆழ்வாரைச் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். திருவாய்மொழியை அநுபவிக்கப்பிறந்த மஹான்களின் பாக்கியத்தினால் மோஹங்கழிந்து தெளிவுபெற்ற ஆழ்வார் மதுரகவிகளை நோக்கி 'நான் இங்கே என்னசொல்லி நின்றேன் ?' என்று கேட்க; "எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கிய வெளிவே" என்று சொல்லி மோஹித்துக்கிடந்தீர் என்று சொல்ல, ப்ரஸ்துதமான ஸௌலப்ய குணத்தை விசேஷித்து அருளிச்செய்பத் தொடங்குகிறாரிதில்.

எளிவருமியல்வினன் = எளியனாயிருக்குந்தன்மையை [அதாவது — ஸௌலப்யத்தை] ஸ்வபாவமாகவுடையவன் என்றபடி. கீழ்ப்பாட்டில் "பத்துடையடியவர்க்கு எளியவன்" என்று ஸ்நேஹிகளுக்கு ஸுலபனாயிருப்பவன் என்று சொன்னது தகுதியன்றென்று திருவுள்ளம்பற்றினபடி. எல்லார்க்கும் ஏதோ சில காலங்களில் ஸௌலப்யம் இருக்கக்கூடும்; எம்பெருமான்படி அங்ஙனன்றியே எளிமைதானே ஸ்வரூபமாயிருக்குமென்கிறது.

நிலைவரம்பில பலபிறப்பாய் = நிலையில்லாதனவும் வரம்பில்லாதனவுமான பலவகைப்பட்ட அவதாரங்களைச் செய்பவனென்றபடி. இன்ன யோநியில் தான் பிறப்பதென்று ஒரு வ்யவஸ்தை கொள்ளாமையாலே 'நிலையில' என்றது; இன்ன சேஷ்டிதந்தான் செய்வது என்று ஒரு வ்யவஸ்தை கொள்ளாமையாலே 'வரம்பில' என்றது — என்று பூருவாசாரியர்கள் நிர்வஹித்தார்களாம். பட்டர், 'நிலையில' என்பதற்கே அவ்விரண்டு பொருளையுங்கொண்டு, இனி 'வரம்பில' என்பதற்கு—"வரம்பில்லாமையாவது, அவதரித்து எளியனாய் நின்ற நிலைதன்னிலே பரத்வந்தோற்ற நின்றாலும் நிற்கையாம்" என்று அருளிச்செய்வாராம். எங்ஙனே யென்னில், அர்ஜுநனுக்குச் சாரதியாய் நின்று தாழ நிற்கச்செய்தேயும் விச்வரூபத்தைக் காட்டினபடியும், சிவபிரான் பக்கல் புத்திரவரம் வேண்டிப்போகா நிற்கச்செய்தே கண்டாகர்ணனுக்கு முத்தியளித்தபடியும், ஏழுபிராயத்திலே கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்தபடியும் முதலானவை நோக்கப்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



படின், ஒன்றிலும் ஒரு நியதியில்லை, ரக்ஷிப்பதற்கு உறுப்பாகுமத்தனையே வேண்டுவது என்ற திருவுள்ளம் விளங்கும்.

பலபிறப்பாய் = எம்பெருமான் தன் வாக்காலே சொல்லும்போதும் "வஹூநி மெ வ்யதீதாநி ஜந்மாநி = பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி" என்று தனக்குப் பல பிறப்புக்கள் நிகழ்ந்தனவாகச் சொல்லுகிறான்; வேதமும் "அஜாயமாநோ வஹுயா விஜாயதெ" என்று ஓதுகின்றது; ஆழ்வார் போல்வாரான வைதிகர்களும் * பலபிறப்பு என்னாநின்றார்கள். கரும மடியாகப் பிறக்கின்ற நம்முடைய பிறவிக்கு ஒரு எல்லை ஏற்பட்டாலும் கருணையே காரண மாகப் பிறக்கின்ற எம்பெருமானுடைய பிறவிகட்கு ஒருநாளும் முடிவு ஏற்படா தென்ப.

பலபிறப்பாயொளிவரு முழுநலம்=பிறக்கப் பிறக்க நாம் புகாழிந்து வாரா நின்றோம்; அங்ஙனல்லாமல் எம்பெருமான் பிறக்கப் பிறக்கக் கல்யாணகுணங் கள் மிகவும் புகர்பெற்று விளங்குமாயிற்று. "ஸ உ ஶ்ரெயாநு ஹவதி ஜாய மாநஃ" என்று வேதமும் ஓதிற்று. [ஸஃ (ஹமவாநு) ஜாயமாநஸ்ஸநு ஶ்ரேயாநேவ ஹவதி] என்றபடி. கருமமடியாகப் பிறந்தாலன்றோ பிறக்கப் பிறக்கப் புகர் அழிவது; அநுக்ரஹமடியாக வருகிற அவதாரமாதலால் ஔஜ்ஜ் வல்யம் மிக்கிருக்குமென்க.

முதலில கேடில = ஒருநாளில் தோன்றி ஒருநாள்வரையிலே முடியுமவை யல்லாமல் நித்ய ஸித்த குணங்கள் என்றவாறு.

வீடு ஆம் தெளிதருநிலைமையது முழுவதும் ஒழிவிலன் = வீடு — மோக்ஷம்; அதுவாகிற தெளிவைத் தந்தருளுமியல்வு என்றைக்கு மொருபடிப்பட்டிருக்கப் பெற்றவன் என்கை. இதனால் மோக்ஷப்ரதத்வ மென்கிற குணம் சொல்லப் பட்டதாயிற்று. இக்குணம் கீழே முழுநலம் என்றதிலேயே அடங்கக்கூடுமா யினும், இது சிறந்த குணமாதலால் தனிப்படச் சொல்லலாயிற்று. ஆளவந் தாரும் ஸ்தோத்ரரத்நத்தில் "த்வதாஶ்ரிதாநாம் ஜகதுத்பவஸ்திதி ப்ரணாஶஸம்ஸாரவிமோசநாதயஃ — த்வதாச்ரிதாநாம் ஜகதுத்பவஸ்திதி ப்ர ணாச ஸம்ஸாரவிமோசநாதயஃ" என்ற ச்லோகத்தில் * ஸம்ஸாரவிமோசந பதத் தினால் மோக்ஷப்ரதத்வத்தைத் தனியே அருளிச்செய்தார். ஸ்ரீபாஷ்யகாரரும் * அகில புவந ஜந்மஸ்தேமபங்காதிலீலே என்கிற ஸ்ரீபாஷ்ய மங்களச்லோகத்தில் * விநத விவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே என்று மோக்ஷப்ரதத்வத்தைத் தனியே அருளிச்செய்தார்.

தெளிவு என்னுஞ்சொல் தெளி என்று குறைந்து கிடக்கின்றது. பரமபதத் தைத் "தெளிவிசும்பு" என்றே வழங்குவர். தெளிவே வடிவெடுத்திருக்குமிட மாதல் அறிக. "அவன் இங்கே வந்து அவதரிக்கிலும் சோக மோஹங்களைப் பண்ணும் இவ்விடம்; இவன் அங்கே செல்லிலும் தெளிவைப்பண்ணும் அவ் விடம்" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி உணரத்தக்கது. இந்த லீலாவிபூதி கலக்கத்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திற்கே ஏற்பட்டதுபோல அந்த நித்யவிபூதி தெளிவுக்கே ஏற்பட்ட தென்ற வாறு.

இறையோன் = மோக்ஷமளிக்கவல்லவனே ஈச்வரனுகுந் தகுதியுடையவனுதலால் இங்கு இறையோனென்றது. இப்படிப்பட்ட ஸர்வேச்வரன் அளிவருமருளினேடு அமைந்து அகத்தனன் புறத்தனன் = அளிந்த அருளோடுகூடி, அடியவர்க்கு அந்தரங்கனுயும் மற்றையோர்க்குக் கிட்டவொண்ணுதபடியனுயு மிருப்பனென்றபடி.

அருளுக்கு அளிவருதலாவது நிர்ஹேதுகத்வமாம். பாண்டவர்போல்வார்க்குக் கையாளாயிருக்கையும் துரியோதனுதியர்க்கு ஆளிட்டுவிடுகையும் ஈற்றடிக்கு விஷயம். .... .... .... ... .... .... .... (உ)

அமைவுடையறநெறி முழுவதுமுயர்வறவுயர்ந்து *
அமைவுடை முதல்கெடல் ஒடிவிடையற நிலமதுவாம் *
அமைவுடையமரரும் யாவையும்யாவரும் தானும் *
அமைவுடைநாரணன்மாயையை அறிபவர்யாரே. (௩)

| | | | |
|---|---|---|---|
| அமைவு உடை | நல்ல பலபரிபாகத்தையுடைத்தான | அற | மிகவும் |
| அறம் நெறி முழுவதும் | தருமமார்க்கம் எல்லாவற்றுலும் | நிலம் அது ஆம் | கைவந்திருக்கப்பெறுவதாகிற |
| உயர்வுஅற உயர்ந்து | இதற்குமேல் உயர்த்தியில்லை யென்னும்படியாக மிகவுமுயர்ந்தவர்களாகி, | அமைவு உடை | சதிரையுடையான |
| அமைவு உடை | (ஆச்சரியப்படத்தகுந்த அமைதியையுடைய) | அமரரும் | பிரமன் முதலிய தேவர்களும் |
| முதல் | ஸ்ருஷ்டியென்ன | யாவையும் | எல்லா அசேதனங்களும் |
| கெடல் | ஸம்ஹாரமென்ன | யாவரும் | எல்லாச்சேதனர்களும் |
| இடை ஒடிவு | அவாந்தர ஸம்ஹாரமென்ன | தான் ஆம் | தானேயாம்படியான |
| | (ஆகிய இவை) | அமைவுஉடை | பொருத்தம் பொருந்திய |
| | | நாரணன் | நாராயணனுடைய |
| | | மாயையை | அவதார ரஹஸ்யத்தை |
| | | யாரே அறிபவர் | ஆர்தாம் அறியவல்லார்? [ஆருமில்லை.] |

* * * — எம்பெருமானுடைய அவதாரரஹஸ்யம் ஒருவர்க்கும் அறியவொண்ணுதென்கிறது இப்பாட்டில். முதலடியில் அமைவுடை யென்று தொடங்கி, மூன்றுமடியில் அமைவுடை என்னுமளவும் அமரர்க்கு (விசேஷணம்) அடைமொழி.

அமைவுடையறநெறி முழுவது முயர்வறவுயர்ந்து = ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்குக் கடவரான பிரமன் முதலிய அமரர்கள் எப்படிப்பட்டவர்களென்றால், நன்கு அமைந்த தருமமார்க்கமெல்லாவற்றுலும் மிகவுயர்ந்தவர்களாம். "யுக கோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: | புநஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுச்ரும" = யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மாராத்ய பத்மபூ: - புரஸ் த்ரைலோக்ய தாத்ருத்வம் ப்ராப்தவாநிதி சுச்ரும.” [பிரமனானவன் அனேகமாயிரம்யுகங்கள் விஷ்ணுவை ஆராதித்துப் பிரமபதவியையடைந்தான்] என்றும் “ஜஹாஜெவ ஹூவ-ுஜெயெ ஜஹாதூா ஹூ-சுவா தூா_நஂ ஜெவஜெவொ லஹ-வ = மஹாதேவஸ் ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வா ஆத்மாநம் தேவதேவோ பபூவ” [பரமசிவனும் பரமாத்மாவை ஆராதித்தே தேவரிற் சிறந்தவனாயினன்] என்றும் பிரமாணங்கள் சொல்லுகிறபடியே அவர்கள் அனுட்டித்த தருமங்களைச் சொன்னவாறு. அறநெறிக்கு அமைவுடைமையாவது பயனளித்தே தீருமாற்றல். இடையூறு ஒன்றுமின்றி ஸபலங்களான தருமங்களெல்லாவற்றாலும் மேம்பட்டவர்களாம் அவ்வமரர்.

அவர்கள் இன்னமும் எப்படிப்பட்டவர்களென்னில்; அமைவுடை முதல் கெடலோடிவிடையற நிலமதுவாமமைவுடையர்=முதல் என்று ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது; கெடல் என்று ஸம்ஹாரத்தைச் சொல்லுகிறது. ஓடிவிடையென்பது ‘இடையொடிவு’ என்றாகி அவாந்தர ஸம்ஹாரத்தைச் சொல்லுகிறது. ஆகிய இக்காரியங்கள், அற—மிகவும், நிலமதுவாம் அமைவுடை=கைவந்திருக்கும் பூர்த்தியை யுடையார் என்றபடி.

“அமைவுடை முதல்” என்பதற்கு—ஆச்சரியப்படத்தகுந்த ஸ்ருஷ்டி என்று கருத்து. பிரமன் உலகங்களைப்படைத்தால் ‘ஸர்வேச்வரனுடைய ஸ்ருஷ்டிதானோ இது!’ என்று அதிசயிக்கவேண்டும்படி யிருக்குமாம். அற நிலமதுவாம் என்பதற்கு ஈட்டில் அருளிச்செய்கிறார்காண்மின்—“ இவை தங்களுக்கு நிலையிட்டுக்கொடுத்த ஸர்வேச்வரனையும் மறுத்துக் கேள்விகொள்ள வேண்டாதபடி மிகவும் விதேயமாம்படி சமைந்த ப்ரஹ்மாதிகளும்” என்று. அதாவது—மாணாக்கற்கு உபாத்தியாயர் பாடஞ் சொல்லிக்கொடுத்தால் மறுபடியும் உபாத்யாயர் பக்கலிலே அந்த மாணாக்கன் ஸந்தேஹம் கேட்கும்படியிருப்பதுண்டே; அப்படியன்றியே எம்பெருமானாகிற உபாத்தியாயர் பக்கலிலே ஸ்ருஷ்டிஸம்ஹாரக்ரமங்களை ஒருகால்பயின்ற மாத்திரத்திலே மிகவும் வல்லவர்களாய் மீண்டும் கேள்விகேட்கவேண்டாமல் மிக்க தேர்ச்சிபெற்ற மாணாக்கர்களாம் அயனும் அரனும்.

அமரரும் யாவையும் யாவரும் தானாமமைவுடை நாரணன்=கீழ்ச்சொன்ன கடவுளர்களென்ன, ஸகல அசேதநப்பொருள்களென்ன, மற்றுள்ள ஸகல சேதனப் பொருள்களென்ன— ஆகிய எல்லாம் தான் என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படியான அமைதியையுடையனாய், இதுபற்றியே நாராயணனென்னுந் திருநாமம் படைத்தவனான எம்பெருமானுடைய என்றபடி. “தானும் அமைவுடை நாரணன்” என்றவிடத்திற்கு ஈட்டில் அருளிச்செய்த மிக அழகிய ஸம்வாதம் ஆய்ந்துணரத்தக்கது. “ஒருவன் ஒருவனை உனக்கு ஜீவனம் என்ன வேணுமென்றால் தன் புத்ராதிகளையுங் கூட்டிக்கொண்டு ‘எனக்குக் கலநெல்லு வேணும்’ என்னாநின்றானிறே; அப்படியே இவையடங்கலும் தன் அஹம்சப்தத்துக்குள்ளேயடங்கி, தான் இவற்றுக்கு அபிமாநியா யிருக்கும்படியைச் சொல்லுகிறது” என்பதாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மாயையை அறிபவர்யாரே?=இப்படிப்பட்ட எம்பெருமானுடைய அவதார ரஹஸ்யம் ஒருவர்க்கும் அறியப்போகாதென்றவாறு. மாயை யென்றால் அவதார ரஹஸ்யமென்று பொருளாமோவென்னில்; ஆம்; "ஸம்ஹவாம்யாத்ம மாயயா=ஸம்பவாமி ஆத்மமாயயா" என்று - கீதையிலே பகவான் தானே அவதாரத்தை அருளிச்செய்யுமிடத்து உள்ளதனால் மாயாப்ரயுக்தமான அவதாரத்தைச் சொல்லக்குறையில்லை யென்பர். மாயையென்று ஆச்சரியமாய், தனக்குப் புத்திர ப்ராயர்களான தசரதவஸுதேவாதிகளைத் தனக்குத் தந்தையாகக் கொண்டு, அவர்கள் என்மகனென்று அபிமானிக்கும்படி வந்துபிறந்த ஆச்சரியத்தை ஆரும் அறியகில்லார் என்று முரைப்ப.

யாரே அறிபவர் ?=நித்யஸூரிகள் பரத்வாநுபவத்திலே போதுபோக்குகையாலே இதனை அறியார்கள்; ஸம்ஸாரிகள் உண்டியே உடையே உகந்தோடுமவர்களாகையாலே அறியார்கள்; மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களோ மோஹித்துக்கிடப்பர்கள் ; ஆகையாலே ஒருவருமறியார்கள். ... (௩.)

யாருமோர்நிலைமையனென அறிவரியவெம்பெருமான் *
யாருமோர்நிலைமையனென அறிவெளியவெம்பெருமான் *
பேருமோராயிரம் பிறபலவுடையவெம்பெருமான் *
பேருமோருருவமும் உளதில்லையிலதில்லைபிணக்கே. * (௪)

| | | | |
|---|---|---|---|
| பேரும் | (விக்ரஹத்தைப் பற்றின) திருநாமங்களும் | ஓர் நிலைமையன் என அறிவு எளிய எம்பெருமான் | ஒருபடிப்பட்டவனென்று அறியக்கூடிய பெருமானான பகவானுக்கு |
| பிற | (அந்தத் திருநாமங்களுக்கேற்ற) விக்ரஹங்களும் | | |
| பல ஆயிரம் உடைய | அனேகமாயிரம் உடையனாய்க்கொண்டு தோற்றி | ஓர் பேரும் | ஒரு பேரும் |
| எம் பெருமான் | எமக்கு நாதனானவனாய், | ஓர் உருவமும் | ஒரு ரூபமும் |
| யாரும் | எப்படிப்பட்ட ஞானிகளுக்கும் | உளது இல்லை | உண்டாயிருப்பதில்லையென்று (ப்ரதிகூலர்க்கும், |
| ஓர் நிலைமையன் என அறிவு அரிய எம்பெருமான் | 'ஒருபடியையுடையவன்' என்று அறுதியிடவொண்ணாத பெருமானாய் | இலது இல்லை | இல்லையாய் இருப்பதில்லையென்று (அநுகூலர்க்கும்) |
| யாரும் | (அன்பர்களாகில்) அறிவில்லாதவர்களானார்க்கும் | பிணக்கே | நித்திய விவாதமாயேயிருக்கும். |

* * * — எம்பெருமானுடைய திவ்யாவதாரங்கள் ஒருவர்க்கும் அறியப்போகாதோவென்ன, அடியவர்க்கு எளிதில் அறியக்கூடியவையாய் மற்றையோர்க்குச் சிறிதும் அறியப்போகாதனவாயிருக்குமென்கிறாரிதில்.

யாரும் ஓர்நிலைமையனென அறிவு அரிய எம்பெருமான் = எவ்வளவேனும் அதிசயித்த ஞானத்தையுடையரேனும் அப்படிப்பட்டவர்களும் தமது முயற்சியாலே காண விரும்பினால் இன்னபடிப்பட்டிருப்பதொரு ஸ்வபாவத்தையுடையவனென்று அறியவொண்ணாத எம்பெருமான். — எம்பெருமானுடைய நிர்ஹே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



துக விஷயீகாரத்திற்கு இலக்காகப் பெறாதவர்கள் எவ்வளவு சீரியராயினும் எம்பெருமானது நிலைமையை ஒரு ஸ்தூலாகாரமாகவும் அறியகில்லாராய்க் கிடப்பரென்றபடி.

யாருமோர்நிலைமையனென அறிவு எளிய எம்பெருமான் = பிறப்பாலும் செய்கையாலும் ஞானத்தாலும் எத்தனை தாழ்ந்தவர்களாகிலும் தன்னுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இலக்காகப் பெற்றவர்களாகில் அன்னவர்களாலே எளிதிலறியக்கூடியபடிகளையுடையனாயிருப்பன். "நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி ஶபரீ குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ருதிதி | அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரிபதேருந்நதிமபி ப்ரபூதை: ஸ்ரோதோபி: ப்ரஶமயஹநுகம்பே! ஸமயஸி = நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ மால்யக்ருதிதி — அமீஷாம் நிம்நத்வம் வ்ருஷகிரிபதேருந்நதிமபி ப்ரபூதைஸ் ஸ்ரோதோபி: ப்ரளபமநுகம்பே ஸமயஸி." என்று தயாசதகத்தில் நிகமாந்ததேசிகன் பணித்த ச்லோகம் இங்கு அநுஸந்திக்கவுரியது. [குஹப்பெருமாள், ஸுக்ரீவன், சபரி, குசேலர், கூனி, இடைச்சியர், மாலாகாரர் போல்வாரான வ்யக்தி விசேஷங்கள் பக்கலிலே எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகாரம் காணத்தக்கதென்பது தேர்ந்த கருத்து.]

பேருமோராயிரம் = அநுபவிக்குமடியவர்க்கு இழிந்தவிடமெல்லாம் துறையாம்படி பல்லாயிரந் திருநாமங்களையுடையனாயிருப்பன். எம்பெருமானுடைய ஸ்வரூபத்திற்கும் ரூபத்திற்கும் குணங்களுக்கும் விபூதிகட்கும் திவ்ய சேஷ்டிதங்களுக்கும் வாசகமாக ஏற்பட்டிருக்கின்ற திருநாமங்களுக்கு எல்லையில்லாமையாலே பேருமோராயிரம் என்றார். ஆயிரமென்றது அநேக பர்யாயம்.

பிறபலவுடைய எம்பெருமான் = இங்குப் 'பிற' என்பது திவ்யமங்கள விக்ரஹத்தை நோக்கியது. நாமத்திற்கும் ரூபத்திற்கும் எங்கும் ஒரு சேர்த்தியுண்டாகையாலே இங்ஙனே பொருள் கொள்ளுதல் பொருந்தும். "பேருமோருருவமும்" என்ற ஈற்றடியுங்காண்க. திருநாம வாச்யங்களாயும் தன் இச்சையாலே பரிக்ரஹிக்கப்படுமவைகளாயு முள்ள பலபல திருவுருவங்களையுடையானென்றவாறு.

பேரும் ஓருருவமும் உளதில்லை இலதில்லை பிணக்கே = இதற்குப் பலபடியாகப் பொருள்கொள்ளலாம். பேரும் ஓருருவமும் உளது, இலதில்லை, பிணக்கு இல்லை' என்று மூன்று வாக்கியமாகக்கொண்டு — அப்படிப்பட்ட எம்பெருமானுக்கு விலக்ஷணமான நாமங்களும் ரூபங்களும் உண்டு; இல்லையென்பது கிடையாது; ஆகையால் சாஸ்த்ர விச்வாஸசாலிகளுக்கு விவாதமில்லை — என்பதாக ஒரு யோஜனை. அன்றியே, பேரும் ஓருருவமும் உளதில்லை=(எம்பெருமான் பக்கலில் அன்பு இல்லாதார்க்கு) ஒரு திருநாமமும் ஒரு விக்ரஹமும் உண்டாயிருப்பதில்லை (என்று தோற்றியிருக்கும்); இலதில்லை — (எம்பெருமான் பக்கலில் அன்புடையார்க்கு) அந்த நாம ரூபங்கள் உண்டாகியே தோற்றும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பிணக்கே — அன்புடையார்க்கும் அன்பிலாதார்க்கும் இப்படி விவாதமாயே யிருக்கும் என்றுமாம். மற்றும் பலவகைகளுங் காண்க. .... .... (௪)

பிணக்கறவறுவகைச்சமயமும் நெறியுள்ளியுரைத்த *
கணக்கறுநலத்தனன் அந்தமிலாதியம்பகவன் *
வணக்குடைத்தவநெறி வழிநின்றுபுறநெறிகளைகட்டு *
உணக்குமின்பசையற அவனுடையுணர்வுகொண்டுணர்ந்தே. * (௫)

| | |
|---|---|
| அறு வகை சமயமும் பிணக்கு அற | ஆறுவகைப்பட்ட மதங்களும் (வைதிகமார்க்கத்தோடு) பிணக்கம் ஒழியும்படி |
| நெறி | வேதமார்க்கத்தை |
| உள்ளி | ஆராய்ந்து |
| உரைத்த | அருளிச்செய்த |
| கணக்கு அறு நலத்தனன் | எண்ணிறந்த கல்யாண குணங்களையுடையவனும் |
| அந்தம் இல் ஆதி | முடிவில்லாத முதல்வனும் |
| அம் பகவன் | அழகாகிய ஞானம்முதலிய ஆறு குணங்களையுடையவனுமான எம்பெருமானது, |
| வணக்கு உடை | வணக்கத்தையுடைய |
| தவம் நெறி | பக்தி (அல்லது) ப்ரபத்தி ஆகிற |
| வழி நின்று | மார்க்கத்தில் நின்று |
| புறம் நெறி | வேறு மார்க்கங்களாகிற |
| களை | களையை |
| கட்டு | பறித்து, |
| அவனுடைய உணர்வு கொண்டு | அவனளித்த கீதையைக் கொண்டு |
| உணர்ந்து | உணர்ச்சிபெற்று |
| பசை யற | வாஸநாரூபமான பற்றும் அறும்படி |
| உணக்குமின் | உலர்த்திவிடுங்கள். |

* * * — 'ஆச்ரயிக்கத்தக்கவனான எம்பெருமான் எளியனென்பது அறிந்தோம்; அன்னவனை ஆச்ரயிக்கும் வழி என்ன ?' என்று ஸம்ஸாரிகள் கேட்பதாகக் கொண்டு, அவன் கீதையிலே அருளிச்செய்துவைத்த பக்திமார்க்கத்தாலே அவனை ஆச்ரயியுங்கோள் என்கிறார்.

அறுவகைச் சமயமும் பிணக்கு அற நெறி உள்ளியுரைத்த = ஸாங்கியம், யோகம், காணுதம், பௌத்தம், ஜைநம், பாசுபதம் என்ற ஆறுவகைப்பட்ட சமயங்களும் வைதிக சமயத்தோடு பிணக்கங்கொண்டிருக்கும் ; அந்தப்பிணக்கம் தீருமாறு வேதமார்க்கத்தை ஆராய்ந்து அருளிச்செய்தவனும் எண்ணிறந்த திருக்கல்யாண குணங்களையுடையவனும் ஒருநாளும் முடிவில்லாத ஜகத்காரண பூதனும் 'பகவாந்' என்று அஸாதாரணமான திருநாமத்தையுடையனுமான எம்பெருமான் திறமான பக்தியோகத்திலே நின்று ப்ராக்ருதவிஷயங்களாகிற களைகளைக்கடிந்து அவற்றின் ஸங்கத்தையும் விடுங்கோள் ; எங்ஙனே விடுவதென்னில், அவனருளிச்செய்த கீதையாலே அவனையுணர்ந்து புறம்புண்டான பற்றுக்களையெல்லாம் விடுவது என்றவாறு.

ஸாங்கமான ஸகல வேதங்களுக்கும் தானே பொருள் என்பதை ஸ்ரீகீதையிலே அருளிச்செய்கையாலே அறுசமயக் கொள்கைகள் அஸத்யமென்று கழியுண்டனவாயிற்று. கீதை அவதரியாவிடில் அறுசமயங்களுக்கும் வைதிக சம

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யத்திற்கும் பரஸ்பரம் ஏற்பட்ட பிணக்கு அறுதேயிருக்கும் ; வைதிக மார்க்கத்தை நிலைநிறுத்தி கீதை அவதரித்துவிட்டபடியாலே அந்தப்பிணக்கு அற்றதென்க.

கண்கறுநலத்தனன்=நலமென்று குணத்திற்கு வாசகமாகக்கொண்டால் எல்லையில்லாத குணங்களையுடையவன் என்றபடி. நலமென்று நேசத்திற்கும் பெயராதலால், ப்ரஜைகள் பக்கலிலே அபாரமான ஸ்நேஹமுள்ளவன் என்றுமாம்.

அந்தமில் ஆதி=பிறப்புமிறப்புமில்லாதவன் என்றபடி. இத்தால், யதார்த்தம் தவிர வேறு சொல்லகில்லாதவனென்கை. நமக்கெல்லாம் பிறப்புமிறப்புமுண்டாகையாலன்றோ ஜ்ஞாந ஸங்கோசம் ஏற்பட்டு அதனால் அஜ்ஞாநம் அந்யதாஜ்ஞாநம் விபரீதஜ்ஞாநம் ப்ரமாதம் விப்ரலிப்ஸை முதலானவற்றுக்கு வசப்பட்டுத் தப்புர்தவறுமாக வியவஹரிக்க நேருகின்றது. எம்பெருமானுக்கு இவையில்லாமையாலே ஆப்ததமத்வம் சொல்லிற்றாகிறது.

அம்பகவன்='பகவாந்' என்கிறசொல் ஷாட்குண்ய பரிபூர்ணன் என்னும் பொருளது. இச்சொல் எம்பெருமானொருவனுக்கே ஏற்கும். மற்றும் பலரையும் பகவச் சப்தத்தையிட்டுச் சொல்லுவதுண்டாகிலும் அது ஔபசாரிக ப்ரயோகமென்பது சாஸ்த்ர ஸித்தம். "தலூாடிநூடு தஜூ⁻ணறெூமயொமாஜ ஔவவாரிகஃ......ஹமவஜ்ஜவஜ." என்ற ஸ்ரீபாஷ்ய ஸூக்தியும் காண்க. ஆகவே, முக்கியமான பகவச் சப்தத்தாலே வாச்யன் என்பது விளங்க இங்கு அம்பகவன் என்றது.

'பகவன்' என்பதற்கு * வணக்குடைத் தவநெறி வழியென்பதோடே அந்வயம்; பகவானுடைய வழி — பகவான் அருளிச்செய்த வழி என்றவாறு. அந்த வழி எப்படிப்பட்டதென்னில்; வணக்குடைத் தவநெறிவழி. கீதையிலே ஒன்பதாவது அத்யாயத்தில் "நஉவஸ்ஞஜூ உாம ஹக்ஷூா - நமஸ்யந்தச் ச மாம் பக்த்யா" என்றும், "உநூநா ஹவ உஜூக்ஷோ உஜூாஜீ உாம நஉவஸ்ரு⁻- மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு" என்றும் பக்தி சரீரத்தை நமஸ்கார சிரஸ்கமாக அருளிச்செய்தமையால் வணக்குடைத் தவநெறி எனப்பட்டது.

தவஸ என்னும் வடசொல் தவமெனத் திரிந்தது. இச் சொல் பக்தியையுஞ் சொல்லும், ப்ரபத்தியையுஞ் சொல்லும். இங்கு இரண்டுவகையான நிர்வாஹமுமுண்டு. பக்திபரமாகக் கொண்டால் புறநெறிகளைகட்டு என்பதற்கு— வேறுபலன்களை விரும்புவதாகிற விலக்கடிகளைத் தள்ளி என்று பொருள் கொள்க. ப்ரபத்திபரமாகக் கொண்டால், (புறநெறிகளை கட்டு என்பதற்கு) வேறு உபாயங்களைத் தள்ளி என்று பொருள்கொள்க.

பசை அற உணக்குமின் = கீதையில் இரண்டாவது அத்யாயத்தில் (59) "விஷயா விநிவதஂநெ நிராஹாரஸ்ய தெஹிநஃ | ரஸவஜஂம்,



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

𑌰𑌸𑌵𑌰𑍍𑌜𑌂 𑌰𑌸𑍋𑌽𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑌰𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 = விஷயா விநிவர்த்தந்தே நிரா ஹாரஸ்ய தேஹிந: - ரஸவர்ஜம், ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே' என்று ஓதப்பட்டது. [அதாவது — இந்திரியங்களுக்கு ஆஹாரம் சப்தாதி விஷயங்கள்; அந்த ஆஹாரத்தை அவற்றிற்குக் கொடாமல் யாவனொருவன் பட்டினிபோடுகிறானோ அவனை அவ்விஷயங்கள் அணுகமாட்டா; ஆனால் அவற்றில் அவனுக்கு ருசி மாத்திரம் இருக்கும்; அதுவும் விஷயங்களைக்காட்டிலும் உத்க்ருஷ்டனாய் அதிக ஸுகரூபனா யிருக்கிற ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்தால் அடியற்றுப்போம். என்றபடி.] அதன்படியே, இந்திரிய ஜயத்தாலே விஷயப்பற்றை விலக்கிக்கொண்டு பகவத் ஸாக்ஷாத்காரத்தாலே ருசி வாஸனைகளைப் போக்கிக்கொள்ளுங்கோள் என்கிறாராயிற்று.

இதெல்லாம் எதுகொண்டு என்ன, அவனுடையுணர்வுகொண்டு என்கிறார். இவ்விடத்தில் உணர்வு என்கிறது உணர்வுக்கு உறுப்பான கீதையை. கீதா சாஸ்திரத்தைக் கொண்டு தெரிந்துகொண்டு பசையற வுணக்குமின் என்க. (௫)

> உணர்ந்துணர்ந்திழிந்தகன்று உயர்ந்துருவியந்தவிந்நிலைமை *
> உணர்ந்துணர்ந்துணரிலும் இறைநிலையுணர்வரிதுயிர்காள்! *
> உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து அரியயனரனென்னுமிவரை *
> உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து இறைஞ்சுமின்மனப்பட்டதொன்றே *(௬)

| | |
|---|---|
| உணர்ந்து உணர்ந்து | உணர்வையே இயற்கையாக வுடையனாகி |
| இழிந்து அகன்று உயர்ந்து | (அந்தவுணர்வு அகண்டமாகையாலே) பத்துத் திக்கிலும் வியாபித்து |
| உரு வியந்த | ஜடப்பொருளில் நின்றும் வேறுபட்டிருக்கிற |
| இ நிலைமை | இந்த ஆத்மாவின் ஸ்வரூபத்தை |
| உணர்ந்து | கேள்வியாலே அறிந்து |
| உணர்ந்து | மநநத்தினாலே அறிந்து |
| உணரிலும் | யோகத்தாலே ப்ரத்யக்ஷமாக அறிந்தாலும் |
| இறை நிலை உணர்வு | ஸர்வேச்வரனுடைய நிலைமையை அறிவதானது |
| அரிது | அருமையாயிருக்கின்றது; (ஆயினும்;) |
| உயிர்காள் | சேதநர்களே! |

| | |
|---|---|
| அரி அயன் அரன் என்னும் இவரை | விஷ்ணு பிரமன் ருத்ரன் என்று சொல்லப்படுகிற இவர்களை |
| உணர்ந்து உணர்ந்து | (ஒவ்வொருவருடையவும் குணம் முதலியவற்றைக்கொண்டு) பலகாலும் ஆராய்ந்து |
| உரைத்து உரைத்து | (அதற்கு இணங்கப்) பிரமாணங்களை வ்யவஹரித்துப் பார்த்து |
| மனப்பட்டது ஒன்று | உங்கள் மனதில் ஈச்வரனாகத்தோன்றின ஒரு பொருளை |
| உணர்ந்து உணர்ந்து | பலகாலும் அநுஸந்தித்து |
| உரைத்து உரைத்து | (அப்பொருளின் மந்திரம் திருநாமம் முதலியவற்றைப் பலகாலும் சொல்லி |
| இறைஞ்சுமின் | உபாஸியுங்கோள். |

* * * — ஸம்ஸாரிகள் ஆழ்வாரை நோக்கி 'ஆழ்வீர்! அவதாரத்திலே ஆச்ரயிக்கும்படிசொல்லா நின்றீர்; "𑌮𑌧𑍍𑌯𑍇 𑌵𑌿𑌰𑌿𑌞𑍍𑌚𑌗𑌿𑌰𑌿𑌶𑌂 𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌵𑌤𑌾𑌰𑌃 — மத்யே விரிஞ்சகிரிசம் ப்ரதமாவதார:" [ஸ்ரீரங்கராஜஸ்தவம் — உத்தர சதகம்.] என்கிறபடியே, பிரமனுக்கும் சிவனுக்கும் நடுவே அவதரித்து நிற்கிற நிலையாயிருந்

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



த்து முதலவதாரம்; அதில் மூவரும் ஒரு நிகரானவர்போலத் தோற்றியிராநின்றார்கள்; அம்மூவரும் முக்கியர்களோ? அல்லது, மூவரிலே ஒருவன் முக்கியனோ? மூவர்க்குமப்பால் ஒருவன் முக்கியனோ? என்று எங்களால் ஆராய்ந்து அறுதியிடப்போகாமையாலே ஆச்ரயிப்பதிலே ஒரு ஆலோசனை உண்டாயிற்று; அதனை நீக்கி ஆச்ரயணீய வஸ்துவை நிஷ்கர்ஷித்துத் தரவேணுமே நாங்கள் ஆச்ரயிக்கும்படி'' என்று விஜ்ஞாபிக்க, த்ரிமூர்த்திஸாம்ய ப்ரமத்தைப் பரிஹரிக்குமடைவிலே அருளிச்செய்கிற பாசுரம் இது.

ஜீவாத்மஸ்வரூபத்தை ஒருபடி ஸாக்ஷாத்கரிக்கப்பெற்றாலும் பரமாத்மஸ்வரூபம் அறுதியிடவரியது என்கிறார் முன்னடிகளால்.

ஜீவாத்மஸ்வரூபம் எப்படிப்பட்டதென்னில்; உணர்ந்துணர்ந்து இழிந்து அகன்று உயர்ந்து உருவியந்த=ஞானமாத்திர ஸ்வரூபமன்றியே ஞானத்திற்கு ஆச்ரயமாயிருக்கும்படியை 'உணர்ந்துணர்ந்து' என்பதனால் அருளிச்செய்தபடி. 'இழிந்து அகன்று உயர்ந்து' என்பதனால் ஸர்வ வ்யாப்தி சொல்லப்படுகிறது; ஜீவ ஸ்வரூபம் அணுவானதாயினும் தர்மபூதஜ்ஞாநத்வாரா வ்யாப்தி யுண்டாதலால் இங்ஙனமருளிச்செய்யக் குறையில்லை என்க. இங்கே ஈடு;—''இச்சேதனன் தான் அணுபரிமாணனா யிருக்கச்செய்தேயும், ஈச்வரன் ஸ்வரூபத்தாலே எங்கும் வியாபித்திருக்குமாபோலே ஜ்ஞாநத்தாலே எங்கும் வ்யாபித்திருக்குமென்கிறது." என்பதாம். இழிந்து என்பதனால் கீழ் நிலங்களில் வியாப்தியும், அகன்று என்பதனால் நடுநிலங்களில் வியாப்தியும், உயர்ந்து என்பதனால் மேல் நிலங்களில் வியாப்தியும் சொல்லுகையாலே ஸர்வவ்யாப்தி சொல்லிற்றாயிற்று.

உருவியந்த என்பதனால் தேஹத்திற்காட்டிலும் விலக்ஷணன் என்னுமிடம் சொல்லப்பட்டது. உரு என்று ரூபவத்தான அசேதநவஸ்து ஸமுதாயத்தைச் சொல்லுகிறது. வியந்த என்றும் பிரிக்கலாம், இயந்த என்றும் பிரிக்கலாம்; பொருள் ஒன்றே.

ஆக இப்படிப்பட்டதான இந்நிலைமை உணர்ந்துணர்ந்து உணரிலும்= ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தை ச்ரவணம் மநநம் முதலியவற்றால் ஸாக்ஷாத்கரிக்கக் கூடினாலும். — தேஹாதிரிக்தமாயிருக்கிற ஆத்மாவின் ஸ்வரூபத்தை யோகசாஸ்திரத்திற் சொல்லுகிற க்ரமத்தாலேயிழிந்து வருந்தி ஒருவகையாய் அறிந்தாலும் என்றபடி.

உயிர்காள்! இறைநிலை உணர்வரிது=சேதநர்களே! ஸர்வேச்வரன் பிரமருத்திரர்களுக்கு அந்தராத்மாவாய் அவர்களைச் சரீரமாகக்கொண்டு தான் சரீரியாய்நிற்கிற நிலை அறியமுடியாததென்கை.

''இறைநிலை உணர்வரிது'' என்று சொல்லிவிடலாகுமோ? அல்பஜ்ஞர்களான எங்களால் அறியமுடியாதென்பது உண்மையே; அறிந்தவர்களில் தலைவரான தேவரீர் நிஷ்கர்ஷித்து அருளிச்செய்தால் நாங்கள் அறிந்துகொள்ளத் தடையில்லையே என்ன; மத்யஸ்த த்ருஷ்டியாலே ஆராய்ந்து பார்க்கும்படி அருளிச்செய்கிறார் அரியயனரனென்னுமிவரை உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து இத்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யாதி. நாராயணனென்றும் நான்முகனென்றும் ருத்ரனென்றுமுள்ள மூன்று மூர்த்திகளின் ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் ஆராய்ந்து பாருங்கோள்; அந்த ஸ்வரூபஸ்வபாவங்களைத் தெரிவிக்கின்ற பிரமாணங்களையும் ஒருவர்க்கொருவர் சொல்லிப்பாருங்கோள்; ஒருவன் படைப்பவனாய் இருவர் படைக்கப்படுமவர்களாய், ஒருவன் ஸாத்விகனாய் இருவர் ராஜஸதாமஸர்களாய்ப் புலப்படுவர்கள். அங்ஙனம் புலப்படுமவர்களில் நிஷ்பக்ஷபாதமாய் எந்தத்தெய்வம் உங்கள் நெஞ்சில் சிறந்ததாகத் தோன்றுகின்றதோ அதனை நீங்களே நிஷ்கர்ஷித்துப் பற்றுதல் நன்று என்றதாயிற்று.

நம்பிள்ளையீடு;—"லிங்கத்துக்கே உத்கர்ஷம் தோன்றும்படியா யிருப்பதொரு ப்ரபந்தம் பண்ணித்தரவேணுமென்பாரைப்போலே ஒரு வ்யக்தியிலே பக்ஷபதிக்கப்பாராதே இவர்கள் ஸ்வரூபஸ்வபாவங்களைப் பலகாலும் ஆராய்ந்து பார்த்து, கோல்விழுக்காட்டாலே உத்கர்ஷம் கிடந்த வ்யக்தியைப்பற்றப் பார்ப்பது; இப்படி ஆராய்ந்தவாறே ஒருவஸ்துவே ப்ரதாநமென்று உங்கள் நெஞ்சிலே தோற்றும்; அவ்வஸ்துவை ச்ரவணமநநாதிகளாலே 'கைபுகுந்தது' என்று விச்வஸிக்கலாமளவும் ஆச்ரயிக்கப்பாருங்கோள்."—என்பதாம். .... (சு)

ஒன்றெனப்பலவென அறிவரும்வடிவினுள்நின்ற *
நன்றெழில்நாரணன் நான்முகனரனென்னுமிவரை *
ஒன்றநும்மனத்துவைத்து உள்ளிநும்மிருபசையறுத்து *
நன்றெனநலஞ்செய்வது அவனிடைநம்முடைநாளே. * (எ)

| | | | |
|---|---|---|---|
| ஒன்று என | ஒன்றென்றும் | ஒன்ற | மத்யஸ்த த்ருஷ்டியாக |
| பல என | பலவென்றும் [அதாவது — ஒருவன் பிரதானனென்றும் பலர் பிரதானரென்றும்] | நும் மனத்து வைத்து | உங்களது நெஞ்சில் வைத்து |
| அறிவு அரு | அறிதற்கு அரிதான | உள்ளி | (அவர்களது ஸ்வரூபஸ்வபாவங்களை ப்ரமாணங்கொண்டு) ஆராய்ந்து |
| வடிவினுள் | உருவுக்குள்ளே | நும் | உங்களுக்குண்டான |
| நின்ற | நிலைத்திருக்கிற | இரு பசை அறுத்து | இருவர் திறத்திலாகும் ஈச்வர புத்தியையொழித்து |
| நன்று | விலக்ஷணமான | அவனிடை | அந்த நன்றெழில் நாரணன் பக்கலிலே |
| எழில் | கல்யாண குணங்களாலே பிரகாசிக்கிற | நம்முடை | நம்முடைய |
| நாரணன் | ஸ்ரீமந்நாராயணன் | நாள் | வாழ்நாளில் |
| நான்முகன் | பிரமன் | நன்று என | நன்றாக |
| அரன் | ருத்ரன் | நலம் செய்வது | பக்திபண்ணுதற்குஉரியது. |
| என்னும் இவரை | என்கிற இத்தெய்வங்களை | | |

* * * — ஆராயவேண்டியபடியை விசதமாகவுபதேசித்து விரைவாக ஆச்ரயியுங்கோளென்கிறாரிப்பாட்டில்.

ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள்நின்ற = அரி அயன் அரன் என்கிற மூன்று மூர்த்திகள் பிரதானர்களாய், மூவர்க்கும் மூன்று சரீரங்களிலும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஒரு ஆத்மாவே உள்ளானோ? அன்றியே, மூன்றிலும் மூன்று சேதநர் தனித் தனி புகுந்து நிற்கின்றனரோ? என்று ஸந்தேஹம்வரின் நிர்ணயம் பெறமுடியாதபடி யிருக்கின்ற வடிவையுடையரான நாராயணன் நான்முகன் அரன் என்கிற மும்மூர்த்திகளையும் நிஷ்பக்ஷபாதமாக நெஞ்சிலேகொண்டு ஆராய்ந்து பார்க்கவேணும்; அங்ஙனம் பார்த்தவாறே அவற்றுள் ஒரு மூர்த்தி முக்கியமாகவும் மற்ற இரு மூர்த்திகள் அமுக்கியமாகவும் புலப்படும்; அப்போது, அவ்விரு மூர்த்திகளின் பக்கலிலே நம்முடைய வாழ்நாளில் விரைவாக அநந்ய ப்ரயோஜநமான பக்தியைச் செலுத்தப்பார்ப்பது என்றதாயிற்று.

"ஒன்றெனப்பலவென அறிவரும் வடிவினுள்நின்ற" என்பது "நான்முகனரனென் னுமிவர்" என்பதற்கு விசேஷணம். ஆராய்ந்தபார்க்குமளவில் ஒரு ஆத்மாவே மூன்றுமூர்த்திகளாக வடிவெடுத்திருக்கிறபடியா? அல்லது மூன்று மூர்த்திகளிலும் தனித்தனியே ஆத்மாதிஷ்டானமுண்டா? என்று சங்கை பிறந்தால் இப்படிதானென்று நிர்ணயிக்கப்போகாதபடி யிருக்கின்றதென்றவாறு. ஏனெனில்; "ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகரணீம் ப்ரஹ்மவிஷ்ணு ஶிவாத்மிகாம் | ஸ ஸம்ஜ்ஞாம் யாதி பகவாந் ஏக ஏவ ஜநார்தந:" = ஸ்ருஷ்டிஸ்தித்யந்த கரணீம் ப்ரஹ்மவிஷ்ணு சிவாத்மிகாம் - ஸ ஸம்ஜ்ஞாம் யாதி பகவாந் ஏக ஏவ ஜநார்தந:" [அதாவது—ஸ்ருஷ்டியையும் ரக்ஷையையும் ஸம்ஹாரத்தையும் செய்யக்கடவ விஷ்ணு பிரமன் ருத்ரன் என்னும்படியான பெயரை ஒரு எம்பெருமானே அடைகின்றான்] என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்திற் சொல்லுகையாலே நாராயணமூர்த்தியாகிய ஒரு ஆத்மாவே மூன்றுவடிவாக நிற்கின்றானென்று சொல்வதற்குமிடமுண்டு; "நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்" என்றிவை முதலான ப்ரமாணகதியைப் பார்த்தாலோ தனித்தனியே ஆத்மாதிஷ்டாநமுள்ள மூன்று மூர்த்திகளென்று சொல்வதற்குமிடமுண்டு.

முதலடிக்கு மற்றொருவகையாகவும் பொருள் கொள்ளலாம்; அதாவது—முதலடியை காரணனுக்குமாத்திரம் விசேஷணமாக்கி, "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம" "நேஹ நாநாஸ்தி கிஞ்சந" "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்றிவைமுதலான அபேதச்ருதிகளின்படியே (விசிஷ்டமான) ஒரு வஸ்துவே உள்ளதென்றும், "க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:" "அஜோ ஹ்யேகோ ஜுஷமாணோऽநுசேதே" என்றிவை முதலான பேதச்ருதிகளின்படியே (விசேஷணவிசேஷ்யங்களான பல பல வஸ்துக்களுள்ளனவென்றும் சொல்லும்படிக்கிடோன்—என்று பொருள் கொள்ளலாம். கம்பராமாயண யுத்தகாண்டக் காப்புச் செய்யுளில் "ஒன்றேயென்னின்ஒன்றேயாம் பலவென்றுரைக்கிற் பலவேயாம்" என்ற முதலடியின் பொருளும் ஈண்டு நோக்கத்தக்கது. [இப்பொருள் பூருவாசாரியர்களால் அருளிச்செய்யப்படாததாதலால் ஆழ்வார் திருவுள்ளம்பற்றின தன்றென்று நினைக்கத்தக்கது.]

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மூன்றுமடியில், ஒன்ற என்றது நிஷ்பக்ஷபாதமாக என்றபடி. ஆராய்வதற்குமுன்னே விஷ்ணுவுக்கே சிறப்பு வேணுமென்றுவது, மற்ற இருவர்க்கே சிறப்பு வேணுமென்றுவது ஆக்ரஹம்கொள்ளாமல் பிரமாணகதியின்படியே எங்ஙனம் தேறுகின்றதோ அங்ஙனம் கொள்வதே கடமையென்று தேறி என்பது கருத்து.

இருபசையறுத்து—இருமூர்த்திகளிலேயுள்ள பசையை யறுத்து என்றபடி. "பாருருவி நீரெரிகால் விசும்புமாகிப் பல்வேறு சமயமுமாய்ப் பரந்துநின்ற, ஏருருவில் மூவருமே யெனநின்ற இமையவர்தந் திருவுருவேறெண்ணும்போது, ஒருருவம் பொன்னுருவமொன்று செந்தீ ஒன்று மாகடலுருவமொத்துநின்ற, மூவுருவுங்கண்டபோது ஒன்று ஆஞ்சோதி முகிலுருவமெம்மடிகளுருவந்தானே" என்ற திருநெடுந்தாண்டகப் பாசுரம் இங்கு அநுஸந்திக்கவுரியது.

நம்முடைநாளே என்றவிடத்து நம்பிள்ளையீடு;—"கெடுவிகாள்! நம்முடைய ஆயுஸ்ஸின் நிலை அறிவிகோளே; கடுக ஆச்ரயிக்கப்பாருங்கோள். 'நம்முடை நாள்' என்னுங்காட்டில் [—என்றவளவால்] ஆயுஸ்ஸின் நிலையை அறிந்தபடி யென்னென்னில்; முன்பே 'மின்னின்னிலையில' என்றாரிறே. ஒருவன் இரண்டு கதவையும் அடைத்துக்கொண்டு கிடந்து உறங்காநிற்க நெருப்புப்பற்றி யெரியாநின்றால் அவிக்கிறோமென்று ஆறியிருக்கலாமோ? * நஜஷூஷித ஸூஷி தெ௯ நஷஜஷூஸ்ஷிதெ ஈவள| ஆதூநொ நாவவுஷூஜெ உநுஷூ ஜீவிதக்ஷயழ = நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்தி அஸ்தமிதே ரவௌ - ஆத்மநோ நாவபுத்த்யந்தே மநுஷ்யா ஜீவிதக்ஷயம் * ஆதித்யோதயத்திலே வந்தவாறே த்ரவ்யார்ஜநகாலம் வந்ததென்று உகப்பர்கள்; அவன் அஸ்தமித்த வாறே அபிமதவிஷயங்களோடே ரமிக்கைக்குக் காலம்வந்ததென்று உகப்பர்கள். சாலிலெடுத்த நீர்போலே தங்களாயுஸ்ஸு குறைகிறதென்று அறியாதிராநின்றார்கள் என்னுநின்றதிறே" என்பதாம். ... ... .... (எ)

நாளுநின்றநேமபழமை அங்கோவேினையுடனே
மாளும் * ஓர்குறைவில்லை மனனகமலமறக்கழுவி *
நாளுநந்திருவுடையடிகள்தம் நலங்கழல் வணங்கி *
மாளுமோரிடத்திலும் வணக்கொமோள்வதுவலமே. * (அ)

| | | | |
|---|---|---|---|
| மனனகம் | மனத்திலுண்டான | நம் | நமக்கென்றே உரிய |
| மலம் அற | (மும்மூர்த்திகளும் சமமானவர் என்னும் விப்ரதிபத்தியாகிற) அழுக்கு ஒழியும்படி | திரு உடை அடிகள் தம் | திருமகள் கொழுநனை ஸ்வாமியினுடைய |
| கழுவி | விவேகத்தாலே பரிசுத்தப்படுத்தி | நலம் கழல் | அழகிய திருவடிகளை |
| நாளும் | நாள்தோறும் | வணங்கி | ஆச்ரயிக்க, |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| நாளும் நின்று அடும் நம பழமை அம் சொடு வினை உடனே மாளும் | எப்போதும் விடாது நின்று வருத்துகின்ற நாம திங்தே நமக்கென்றுதேடின பழமையாகிய மிகவுங் கொடிய பாபங்கள் ஆச்ரயித்தவுடனே தொலையும்; | | (இப்படி ஆச்ரயிக்குமிடத்தில்) |
| | | மாளும் ஓர் இடத்திலும் | சரீரத்தை விடுகிற காலத்திலும் |
| | | வணக்கொடு | வணக்கத்தோடு |
| | | மாள்வது | முடிவது |
| ஓர் குறைவு இல்லை | ஒரு குறைவு முண்டாகாது; | வலம் | நன்று. |

* * * — கீழ்ப்பாட்டில் "நன்றெனநலஞ்செய்வதவனிடை" என்றருளிச்செய்ததைக் கேட்ட ஸம்ஸாரிகள், அநாதிகாலமாக நாங்கள் பண்ணிக் கூடு பூரித்துக் கிடக்கிற பிரபல கருமங்கள் பிரதிபந்தகமாயிருக்க நாங்கள் எப்படி எம்பெருமானை ஆச்ரயிக்கமுடியும்? அன்றியும் எங்களுடைய வாழ்நாள் வெகுவாய்க் கழிந்து ஒழிந்ததாகையாலே இனி ஆச்ரயிக்க நாள்தானுமில்லையே! என்ன, அவர்களுக்கு உத்தரம்போல் அருளிச்செய்யும்' பாசுரம் இது. நீங்கள் செய்து கிடக்கிற பாவங்களை நினைத்து அஞ்சவேண்டா; நீங்கள் எம்பெருமானை ஆச்ரயிப்பதாக முயன்றவளவிலே விரோதி கருமங்களடங்கலும் தொலைந்துபோம்; அவற்றைத் தொலைக்கப் பிராட்டிஸந்நிதாநமுண்டுகாணும்; வாழ்நாள் பெரும்பாலுங் கழிந்தொழிந்ததே யென்றிருக்கவும் வேண்டா; நீங்கள் * தண்டுகாலாவூன்றியூன்றித்தள்ளி நடக்கும்போதாகிலும் அக்கோலோடே சாய்ந்தால் அதுதானும் ஒரு நமஸ்காரமாகக் கணக்கிடப்பெறலாகும் என்கிறார்.

"மனனகமலமறக்கழுவி நாளும் நம் திருவுடையடிகள் தம் நலங்கழல் வணங்க, நாளும்நின்றடுநமபழமை யங்கொடுவினையுடனேமாளும், ஓர் குறைவில்லை; மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே" என்று அந்வயிப்பது.

பரதத்துவம் நாராயணனே, பிரமனே, ருத்ரனே என்று நெஞ்சிற்கவலை கொள்வதுதான் இங்கு மனனகமலமாகும்; அப்படிப்பட்ட மலம் அறும்படி மனத்தைக் கழுவுதலாவது ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்று திடமாகக் கொள்ளுதலாம். அங்ஙனங்கொண்டு ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை வணங்கப்பெறின், நாடோறும் இடைவிடாதே நின்று நலியுமவையாய் நாமே ஸம்பாதித்துக்கொண்டவையாய் அநாதிகாலமாக ஏற்பட்டுள்ளவையாய் மிகக் கொடியவையான பாவங்களெல்லாம் உடனே நசித்தொழியும். கீழ்ப்பண்ணின பாவங்கள் தொலையுமென்பது மாத்திரமன்று; பிரக்ருதிவாஸநை முதலியவற்றால் மேல்வினையும் பாவங்களும் ஸம்பந்திக்கமாட்டா என்பது "ஓர் குறைவில்லை" என்பதன் கருத்து.

சாரீரகமீமாம்ஸையில் [—ப்ராஹ்மஸூத்ரத்தில்] நான்காமத்யாயத்தில் முதற்பாதத்தில் * ததிகம உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶௌ தத்வ்யபதேஶாத் * என்ற ஸூத்ரத்தின் பொருள் இங்கு உணரத்தக்கது. அது வருமாறு:—ப்ரஹ்மவித்யையை உணர்ந்த அதிகாரிக்கு முன்னைய பாவங்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கள் தொலைந்துபோகின்றன வென்றும் இனிமேற் பாவங்களின்பற்று உண்டாக மாட்டாதென்றும் சுருதியிற் கூறப்பட்டுள்ளது; "தத்யதேஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாநஃ ப்ரதூயந்தே" என்ற சுருதி பூர்வபாபவிநாசத்தைக் கூறுவது; "தத்யதா புஷ்கரபலாச ஆபோ ந ச்லிஷ்யந்த ஏவம் ஏவம்விதி பாபம் கர்ம ந ச்லிஷ்யதே" "தமேவைவம் வித்வாந் ந லிப்யதே கர்மணா பாபகேந" என்ற சுருதிகள் மேல்விளையும் பாவங்களின் பற்றுண்டாகாமையைக் கூறுவன. இவ்விரண்டும் பொருந்துமா? பொருந்தாவா? என்று ஸம்சயம்; பொருந்தாவென்று பூர்வபக்ஷம். எங்ஙனேயெனில்; "நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிசதைரபி" [கருமபலன் அனுபவித்தே அறவேணும்] என்ற சாஸ்திரத்தோடு விரோதிக்குமாதலால். ஆகில், பூர்வ பாபவிநாசம் உத்தரபாப அச்லேஷம் என்கிற இவ்வர்த்தமும் சாஸ்த்ரோக்தமாகையால் அதனை அப்ராமாணிகமாகக் கூறுதல் விருத்தமன்றோவென்னில், அன்று, மேற்கூறிய விநாச அச்லேஷவ்யபதேசம் மோக்ஷஸாதநமான வித்யையை விதிக்கும் வாக்ய சேஷத்திலுள்ளதாகையால் அது வித்யையின் ஸ்தோத்ரத்திற்காகப் பிறந்ததென்று உபபத்திகூற இடமுளதாதலால். அன்றியும், வித்யை பூர்வோத்தர பாபங்களுக்கு ப்ராயச்சித்தமாக எங்கும் விதிக்கப்பட்டிலாமையால் வித்யை பூர்வபாப விநாசகமாகவாவது உத்தரபாப அச்லேஷகமாகவாவது வழியில்லை. * ப்ரஹ்மவிதாப்நோதி பரம் * ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி * என்றிவை முதலிய சுருதிகளினால் வித்யை ப்ரஹ்ம ப்ராப்திக்கு உபாயமாக வன்றோ விதிக்கப்பட்டுள்ளது; ஆனபின்பு வித்யைக்குப் பூர்வபாபநாசகத்வமும் உத்தரபாப அச்லேஷகத்வமும் சொல்லவொண்ணாது—என்ற இப்பூர்வபக்ஷத்தின்மேல் ஸித்தாந்தம் கூறப்படுகின்றது—[ததிதிகமே இத்யாதி.]

ப்ரஹ்மவித்யையை உணர்ந்த அதிகாரிக்கு அவ்வித்யையின் மஹிமையினால் உத்தரபூர்வபாபங்களின் அச்லேஷ விநாசங்கள்கூடும். ஏனெனில், வித்யாமஹிமையை விவரிக்கப்பிறந்த "ஏவம்விதி பாபம் கர்ம ந ச்லிஷ்யதே" "ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாநஃ ப்ரதூயந்தே" என்ற சுருதிகள் இங்ஙனம் கூறுகின்றனவன்றோ. அஃது எங்ஙனே? * நாபுக்தம் க்ஷீயதே கர்ம * [கருமபலன் அநுபவித்தேயறவேணும்] என்கிற சாஸ்திரத்தோடு விரோதிக்கின்றதேயென்னில், விரோதமொன்றுமில்லை; விஷயபேதங்கொண்டு இரண்டு சாஸ்திரங்களையும் பொருந்தவிடத்தட்டில்லை. இனி, விஷயபேதம் எவ்வாறெனில், 'கருமபலன் அநுபவித்தே அறவேணும்' என்கிற சாஸ்திரம்—கருமங்கள் பலன் தருவதில் திண்ணிய சக்தியுடையன எனக்கூறுதலை விஷயமாகவுடையது. * ஏவம்ஹாஸ்ய * இத்யாதிச்ருதிகள் ப்ரஹ்மவித்யை ப்ராசீநபாபங்களுக்குள்ள பல ப்ரதாந சக்தியை நாசஞ்செய்வதிலும் பவிஷ்யத் பாபங்களுக்குள்ள பல ப்ரதாந சக்தி உத்பத்தியைத் தடைசெய்வதிலும் வல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



லமையுள்ளதெனக் கூறுதலை விஷயமாகவுடையன. ஆகையால் இரண்டிற்கும் விஷயம் வேறுபட்டதாயிற்று. அக்நிக்குத் தாப ஸாமர்த்தியத்தையும் ஜலத்திற்குத் தாபநிவாரண ஸாமர்த்தியத்தையும் கூறுகின்ற இரண்டு பிரமாணங்கள் விஷய பேதத்தாலே அவிருத்தமாவதுபோல இதனைக்கொள்க.

இனி, உத்தரபாபங்களுக்கு அச்லேஷத்தைப் பிறப்பிக்கையாவது—வைதிக கருமங்களில் அயோக்யனாகைக்கும் பாபகரும வாஸநைக்கும் ப்ரத்யவாயத்திற்கும் ஹேதுவான சக்தியைப் பிறக்கவொண்ணாமற் செய்கை. [பாபங்களுக்கு, வைதிக கர்ம அயோக்யதாஸம்பாதநத்திலும் ஸஜாதீயங்களான வேறு பாபங்களைச்செய்வதில் ருசியையுண்டாக்குவதிலும் ப்ரத்யவாய ஸம்பாதநத்திலும் சக்தியுண்டாதலால் அந்த சக்தியைத் தலையெடுக்கவொட்டாமற் செய்வதே உத்தரபாபப்பற்று உண்டாகாமற் செய்வதாம்.] இனி, முன்னைய பாபங்களை நசிப்பிக்கையாவது—மேற்கூறிய சக்தி பிறந்தபின்னர் அதனைத் தடிக்கையாம். எம்பெருமானது திருவுள்ளத்திற் பிறக்கும் அப்ரீதியேதான் சக்தியெனப்படும். இனி இதன் விரிவை ஸ்ரீபாஷ்யாதிகளிற்காண்க.

இப்பாட்டின் முதன்மூன்றடிகட்குச் சந்தையாக * த்வதங்க்⁴ரிமுத்³தி³ஶ்ய கதா³பி கேநசித் யதா² ததா² வாபி ஸக்ருத் க்ருதோஞ்ஜலி: | ததை³வ முஷ்ணாத்யஶுபா⁴ந்யஶேஷத: ஶுபா⁴நி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே = த்வதங்க்ரிமுத்திச்ய கதாபி கேநசித் யதா ததாவாபி ஸக்ருத் க்ருதோஞ்சலி:, ததைவ முஷ்ணாத்யசுபாந்யசேஷத: சுபாநி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே" என்ற ஆளவந்தார் ஸ்தோத்ரரத்ந ஸ்ரீஸூக்தி அநுஸந்திக்கவுரியது.

ஸ்ரீவிஷ்ணு தர்மத்தில் — * ஸக்ருத் ஸ்ம்ருதோபி கோ³விந்தோ³ ந்ருணாம் ஜந்மஶதைஶ்சிதம் | பாபராஶிம் த³ஹத்யாஶு தூலராஶிமிவாநல: || ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு ராஶிபி: பாபஸஞ்சய: | கேஶவம் ஶ்ருத்வா ஸஹஸா தூலவத்³விலயம் வ்ரஜேத் || * என்றிவை முதலான பிரமாணங்களும் காண்க.

மூன்றாமடியின் முடிவில், வணங்கி என்றது எச்சத்திரிபாய் வணங்கவென்றபடி. வணங்கின் என்ற பாடத்தில் இங்ஙனங்கொள்ளவேண்டிய அருமையில்லையாயினும் அது பாடமன்று.

மூன்றாமடிக்கு ஒரு ஸம்வாதமருளிச்செய்கிறார் நம்பிள்ளை; அதாவது— "ஸர்வேச்வரனை ஆச்ரயித்தானாகில் அவன் பலப்ரதனாகிறான், பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றவேண்டுகிறதென்? என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க, *நாளுநந் திருவுடையடிகள் தம்நலங்கழல்வணங்கி யென்று அவள் முன்னாக ஆச்ரயிக்கவேணுமென்னுநின்றது கண்டீரே! என்று அருளிச்செய்து, அவனை ஆச்ரயிக்குமிடத்தில் இவன் குற்றம் பாராதே தன்னிழலிலே இவனைவைத்து அவன் பக்கல் முகம் பெற்றவாறே குற்றத்தைப் பொறுப்பிக்குமவள் முன்னாகப் பற்றவேணும் என்றருளிச்செய்தார்" என்பதாம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நலங்கழல்=பிராட்டி புருஷகாரமாகப் பற்றினாருடைய குற்றங்களைக் கணிசியாதே கைக்கொள்ளவல்ல திருவடிகள் என்றவாறு. இதுவாயிற்றுத் திருவடிகட்கு நன்மை.

மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வதுவலமே=இராவணன் "𑌦𑍍𑌵𑌿𑌧𑌾 𑌭𑌜𑍍𑌯𑍇𑌯𑌮𑌪𑍍𑌯𑍇𑌵𑌂 𑌨 𑌨𑌮𑍇𑌯𑌂 𑌤𑍁 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 = த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்." என்றான்; 'நான் உடல் பிளந்து செத்துப்போகும்படி நேர்ந்தாலும் சரீரம் இருதுண்டாகப் பிளவுற்றுக் குறுக்கே விழுமத்தனையொழிய அப்போதும் ஒருவனை வணங்கினாற்போல் விழமாட்டேன்' என்றான். அப்படிப்பட்ட விருத்தஸங்கல்பமின்றியே, சாகிறபோதாவது தலைகவிழ்ந்து சாவப்பெற்றால் நன்று என்கிறாராழ்வார். .... .... .... (அ)

வலத்தனன்திரிபுரமெரித்தவன் இடம்பெறத்துந்தித்
தலத்து * எழுதிசைமுகன்படைத்த நல்லுலகமும்தானும் *
புலப்படப் பின்னும்தன்னுலகத்தில் அகத்தனன்தானே *
சொலப்புகிலிவைபின்னும் வயிற்றுள இவையவன்துயக்கே. (௯)

| | | | |
|---|---|---|---|
| எழு | பதினான்கு லோகங்களையும் நிர்வஹித்தற்குரிய எழுச்சியையுடைய | தானே | தானே |
| திசைமுகன் | நான்முகக்கடவுள் | தன் உலகத்தில் | தன்னதான லோகத்தில் |
| படைத்த | ஸ்ருஷ்டிசெய்த | அகத்தனன் | அவதரித்து உள்ளேயிருப்பன்; |
| நல் உலகமும் தானும் | நல்ல லோகங்களும் தானுமாக | சொல புகில் | இப்படி சொல்லப்பார்த்தோமாகில் |
| துந்தித் தலத்து இடம் பெற | திருநாபியில் இடம் பெற்றிருக்க, | இவை | இந்தக் குணங்கள் |
| திரிபுரம் எரித்தவன் | முப்புரங்களை எரித்தவனாகிய ருத்ரன் | பின்னும் | பின்னையும் |
| வலத்தனன் | வலதுபக்கத்திலிருப்பான்; | வயிறு உள | தொலையாமல் உள்ளேயிருக்கும்; |
| பின்னும் | மேலும் | இவை அவன் துயக்கு | இவைகளே அவன் மயங்கப்பண்ணும்படி. |
| அவன் புலப்பட | அவன் கண்ணுக்கு இலக்காக | | |

* * * — கீழ்ப்பாசுரங்களில் பிரமன் முதலானாருடைய அவரத்தன்மையையும் எம்பெருமானுடைய பரத்வத்தையும் குறிப்பிட்டருளினார். இப்பாட்டில், அந்தப் பிரமனும் சிவனும் எம்பெருமானைப்பற்றியே தாங்கள் ஸ்வரூபம் பெற்றிருக்கிறபடியையும், அந்த ஸாமாந்ய தெய்வங்களும் காலிடமாட்டாத இந்நிலவுலகத்திலே எம்பெருமான் ஆச்ரிதர்கட்காக வந்து திருவவதரிக்கிறபடியையும் அருளிச்செய்கிறார்.

முப்புரமெரித்த கடவுளாகிய ருத்ரன் எம்பெருமானுடைய வலவருகை ஆச்ரயித்திருப்பன்; நான்முகக்கடவுளும் அவன் படைத்த வுலகமும் திருநாபிக்கமலத்திலே நெருக்கமறப் பொருந்தியிருப்பன; இப்படியாலே பரதத்துவமான ஸ்ரீமந்நாராயணன் "காணவாராய்" என்று விரும்பி வேண்டுமவர்களுடைய

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கண்ணுக்கு இலக்காவதற்காகத் தானே [கருமத்தாலன்றியே தன் இச்சையாலே] உலகத்தினிடையே அவதரித்து நிற்கும். ஆகவிப்படி எம்பெருமானுக்கு ஏற்பட்டிருக்கின்ற குணங்களைச் சொல்லப்பார்த்தோமாகில், சொல்லித் தீர்ந்த குணங்கள் சிலசிலவேயாம், சொல்லப்படாமல் வயிற்றினுள்ளே யிருக்கும் குணங்கள் அகாதமாய்த் தொலையாதவையாயிருக்கும். இப்படிகளை எல்லாம் தெரிந்துகொள்ளாமற்போவதேன்? என்னில்; விமுகராயிருக்குமவர்களுக்கு ஸம்சய விபர்யயங்களை அவன்தானே பண்ணிவைக்கிறானத்தனை என்றாராயிற்று.

வலத்தனன் திரிபுரமெரித்தவன் என்பதனால், ருத்ரன் எம்பெருமான் திருமேனியின் ஏகதேசத்தைப்பற்றி உளனாகிறானென்பதோடு எம்பெருமானது ஸௌசீல்ய குணமும் அநுபவிக்கப்படுகிறது. தாமஸ தெய்வமான ருத்ரனுக்கும் தனது திருமேனியின் வலப்பக்கத்தில் இடங்கொடுத்து ஆதரிக்குமவனன்றோ எம்பெருமான். இப்பாட்டின் ஈட்டில் "வஶ்யைகாடிஶ ேம ருடிாந் உக்ஷிணம் வாஶ்வமாஶ்ரிதாந = பச்யைகாதச மே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந்" என்ற மோக்ஷதர்மவசநம் உதாஹரிக்கப்பட்டுள்ளது. "தவஸா தோஷிதஸ்தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா | ஸ்வபார்ஶ்வே உக்ஷிணே ஶம்போ: நிவாஸ: பரிகல்பித: = தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா - ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போ: நிவாஸ: பரிகல்பித:" என்றொரு வசனமும் இருபத்தினாலாயிரப்படியிற் காண்பதுண்டு. [பண்ணின தவத்தினால் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத் தனது வலவருகிலே வாஸஸ்தானம் அமைத்துக்கொடுத்தருளினன் என்பது இதன் பொருள்.]

"ஏறாளுமிறையோனும் திசைமுகனும் திருமகளும், கூறாளுந்தனி யுடம்பன்" என்றும் "அக்கும்புலியினதளுமுடையாரவரொருவர், பக்கம் நிற்கநின்ற பண்பர்" என்றும் ஆழ்வார்கள் அடிக்கடி அருளிச்செய்கிறார்களே; சிவன் முதலானோர் எப்போதும் எம்பெருமானுடைய திருமேனியைப் பற்றியிருக்கிறார்களோ? என்றொரு சங்கை பிறக்கக்கூடும்; இந்த சங்கையும் இதற்குப் பரிஹாரமும் பூருவர்களின் வியாக்கியானங்களிலேயே உள்ளன. எங்ஙனேயென்னில்;

"ஸர்வகாலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே யிருப்பர்களோவென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹா குணமாகையாலே ஆழ்வார்கள் எப்போதுமொக்க அருளிச்செய்துகொண்டு போருவர்கள். ஸாமந்தர்க்குப் புறம்போகுகள் கனக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே; அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஓரோகலஹங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹந் தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



'இவ்விடம் இன்னார்பற்று, இவ்விடம் இன்னார்பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமாபோலே."

என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் காணத்தக்கன.

முற்காலத்தில் தாரகாசுரனுடைய புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து பிரமனிடம் பெருவரம் பெற்று, வானத்தப்பறந்து செல்லுந் தன்மைவாய்ந்த மூன்று பட்டணங்களை படைந்து மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்தவிடங்களிற் பறந்துசென்று பலவிடங்களின்மேலும் இருந்து அவ்விடங்களைப் பாழாக்கி வருகையில் அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும் சந்திரஸூரியர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும் நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை வில்நாணியாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்நியை முனையாகவுடைய அம்பாகவும் அமைத்துக்கொண்டு யுத்தஸந்நத்தனுய்ச் சென்று போர் தொடங்கும்போது சிரித்து அச்சிரிப்பில்நின்று உண்டான நெருப்பினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டான் — என்பது திரிபுரமெரித்த வரலாறு.

திரிபுரம் = திரிந்துகொண்டிருந்த பட்டணங்கள் எனப் பொருள்படுதலால் வினைத்தொகை. இனி, த்ரிபுரம் என்னும் வடசொல் திரிபுரமெனத்திரிந்ததாகவுங் கொள்ளலாம்; மூன்று பட்டணங்கள் என்பது பொருள்.

பின்னும் தன்னுலகத்திலகத்தனன், புலப்பட = இப்படி அவர்களுக்குத் தன் திருமேனியிலே இடங்கொடுத்ததுக்கு மேலே, * காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து அலமந்து அழைக்குமவர்களுக்கு ஸேவைஸாதிக்கும் பொருட்டு இந்த ஸம்ஸார நிலத்திலே வந்து அவதரித்தானென்கிறது. எம்பெருமானுடைய திருவவதாரத்திற்கு மூன்றுவிதமான பிரயோஜனங்கள் சொல்லப்பட்டுள்ளன; "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் | தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே = பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே." என்னப்பட்டது. ஸாதுக்களை ரக்ஷிப்பதும் அஸத்துக்களை சிக்ஷிப்பதும் தருமமார்க்கத்தை நிலைநிறுத்துவதுமாக மூன்று காரியங்களுக்காக எம்பெருமான் இந்நிலத்தின்கண் அவதரிக்கின்றானென்றது. ஆராய்ந்துபார்க்குமளவில், இக்காரியங்கள் எம்பெருமானுடைய தட்டுத்தடங்கலில்லாத ஸங்கல்பத்தினாலேயே நிறைவேறிவிடக்கூடுமன்றோ; பரமபதத்திலிருந்துகொண்டே ஸங்கல்பித்தமாத்திரத்தினால் இவையெல்லாம் நிறைவேறிவிடுமே; அவதரிப்பானேன்? என்னில், நேரே ஸேவிக்கப்பெறவேணுமென்று ஆவல்கொள்ளுமன்பருடைய மநோரதம் ஸங்கல்பத்தினால் நிறைவேற்றக்கூடியதன்றியே நேர்கொடு நேரே வந்து ஸேவைஸாதித்தே தீர்க்கவேண்டியதாதலால் அதற்காகவே திருவவதாரமென்பது விளங்க, புலப்பட என்றருளிச் செய்யப்பட்டது. "மழுங்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

சாத வைநுநிய சக்கரநல்வலத்தையாய், தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே." [3—1—9] என்று இவ்வாழ்வார் தாமே மேலே அருளிச்செய்யும் பாசுரமும் காண்க.

இவை பின்னும் வயிற்றுள என்பதற்கு — அவன் இப்படி அவதரித்துப் பண்ணும் ரக்ஷணங்களில் ஏதோ சில பாகம் சொல்லில் சொல்லக்கூடுமேயன்றி எல்லாஞ்சொல்லித் தலைக்கட்டப்போகாது; சொல்லப்புகில் உள்ளே யுள்ளேயாமித்தனை, வெளிவந்து முடிவுபெறமாட்டா; என்கிற பொருள்தவிர மற்றொரு பொருளும் கூறுவர்; — இந்த ஜகத்துக்கு ஓர் ஆபத்து வந்தால் வயிற்றினுள்ளே வைத்து நோக்கும்படியைச் சொல்லிற்றாகவுமாம். "நளிர்மதிச்சடையனும் நான்முகக் கடவுளும், தளிரொளி யிமையவர்தலைவனும் முதலா, யாவகை யுலகமும் யாவருமகப்பட, நிலநீர் தீ கால் சுடரிருவிசும்பும், ஒரு பொருட் புறப்பாடின்றி முழுவது மகப்படக் கரந்து, ஓராலிலைச் சேர்ந்த எம்பெருமா மாயனையல்லது, ஒருமா தெய்வம் மற்றுடையமோ யாமே" என்ற திருவாசிரியப் பாசுரங் காண்க. .... .... .... .... .... .... .... (கூ)

துயக்கறுமதியில்நன்ஞானத்துள் அமரரைத்துயக்கும் *
மயக்குடைமாயைகள் வானிலும்பெரியனவல்லன் *
புயற்கருநிறத்தனன் பெருநிலங்கடந்தநல்லடிப்போது *
அயர்ப்பிலனலற்றுவன் தழுவுவன்வணங்குவனமர்ந்தே. * (கo)

| | |
|---|---|
| துயக்கு அறு | கலக்கமற்ற |
| மதியில் | நெஞ்சில் பிறந்த |
| நல் ஞானத்துள் | நல்ல ஞானத்தையுடையரான |
| அமரரை | தேவர்களையும் |
| துயக்கும் | கலங்கப்பண்ணுகிற |
| மயக்கு உடை | மயக்குகிற வல்லமையையுடைய |
| மாயைகள் | அவதார ஆச்சரியங்கள் |
| வானிலும் | எல்லையற்ற ஆகாசத்திற்காட்டிலும் |
| பெரியன வல்லன் | பெரியனவாகச் செய்ய வல்லவனாய், |
| புயல் | நீலமேகம்போலே |
| கரு நிறத்தனன் | கருநிறத்தையுடையனான எம்பெருமானுடைய |
| பெரு நிலம் கடந்த | பெரிய பூமிப்பரப்பை எளிதாக அளந்த |
| நல் | விலக்ஷணமான |
| அடி போது | திருவடித்தாமரைகளை |
| அமர்ந்து | வேறுபிரயோஜனங்களில் பற்றற்று அமர்ந்து |
| அயர்ப்பு இலன் | மறப்பில்லாதவனாய் |
| அலற்றுவன் | முறைமாறி அவன் குணங்களை வாயாலே சொல்லுவேன்; |
| தழுவுவன் | ஆலிங்கனம்பண்ணுவேன்; |
| வணங்குவன் | தலையாலேவணங்குவேன். |

* * * — எம்பெருமான் தன்னிடத்து அமர்ந்த காதல் அமையப்பெறுதவர்கள் திறத்தில் பண்ணும் மாயமயக்குக்களை முன்னடிகளில் அருளிச்செய்து, அது தான் எப்படியேயானாலும், அவன் காட்டின வழியே காணவிருக்கின்ற நாம் மனமொழிமெய்களாலே நம் விடாய்கெட உலகளந்த திருவடிகளை அநுபவிப்போமென்று தாம்கொண்ட பாரிப்பைப் பின்னடிகளில் வெளியிடுகிறார்.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



துயக்காவது ஸம்சய விபர்யயங்கள். 'அதுவோ இதுவோ! அப்படியோ இப்படியோ!' என்று ஐயங்கொள்ளுதலாகிற ஸம்சயமும், ஒன்றை வேறொன்றாகவே துணிந்துவிடுதலாகிற விபர்யயமும் இல்லாத மதியையுடையராய் உள்ளது உள்ளபடியே க்ரஹிக்கவல்லவர்களான தேவர்களையும் கலங்கப்பண்ணும் ப்ராமகத்வ [ஹ்ரமகத்வ] சக்தியையுடைய ஆச்சரியமான தன்மைகளுக்கு எல்லையில்லாதவன் என்பன முன்னடிகள்.

இங்கு அமரர் என்றது இந்திரன் முதலிய தேவர்களை என்றும், நித்திய ஸூரிகளை யென்றும் அருளிச்செய்வர். இந்திராதி தேவர்களுக்கு ரஜோகுண தமோகுணங்கள் மிக்கிருக்கச் செய்தேயும் ஸத்வகுணம் தலையெடுத்தாலும் அதுவும் அப்படியே கனத்திருக்கும். அப்படி ஸத்துவம் தலையெடுக்குங் காலத்து 'நம்முடைய காரியம் நம்மாற் செய்துநிறைவேற்றுவித்துக்கொள்ள முடியாது; எம்பெருமானே நம் காரியத்துக்கு நிர்வாஹகன்' என்றிருந்து அவன் பக்கலிலே யாசித்துக் காரியத்தையும் நிறைவேற்றுவித்துக்கொண்டு அடுத்த க்ஷணத்திலே எதிரிடுவர்கள். இந்திரனுடைய கதையே இதற்கு உதாஹரணமாகும். இங்கே நம்பிள்ளையீடு:—

> "தங்களிருப்பிடமுமிழந்து ஸ்த்ரீகளும் பிடியுண்டு எளிமைப்பட்டவளவிலே அத்தைப் பரிஹரித்துத் தரவேணுமென்று இரந்து பின்னை இவனும்போய் நரகவதம்பண்ணிச் சிறைகிடந்த ஸ்திரீகளையும் மீட்டுக்கொடுத்துப் போராநிற்கச்செய்தே, புழைக்கடைக்கே நின்றதொரு பூண்டைப் பிடுங்கிக்கொண்டு போர, வஜ்ரத்தைக்கொண்டு தொடர்ந்தானிறே" என்பதாம்.

எம்பெருமான் வராஹாவதாரஞ்செய்து பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்தபோது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனாய்ப்பிறந்தவனும் அஸமயத்திற்சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மைபூண்டவனுமான நரகனென்பவன் ப்ராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகலப்ராணிகளையும் நலிந்து தேவஸித்தகந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக்கொண்டுபோய்த் தான் மணம் புணர்வதாகக்கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரிசிகரமான ரத்நபர்வதத்தையும் தேவமாதாவான அதிதிதேவியின் குண்டலங்களையுங் கவர்ந்துபோனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக்கொண்டுபோகச் சமயம்பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரன்வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்துப் பூமிதேவியின் அம்சமான ஸத்யபாமையுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தையடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்த்ரியான முரன் முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத் தள்ளி அழித்து, அவன் பலதிசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினறாயிரத்தொருநூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு, நரக

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



னால் முன்பு கவரப்பட்ட (இந்திரமாதாவான அதிதிதேவியின்) குண்டலங்களை அவ்வதிதிதேவிக்குக் கொடுக்கும்பொருட்டு ஸத்யபாமையுடனே கருடன்தோள் மேல் ஏறிக்கொண்டு தேவலோகத்துக்குச்செல்ல, அங்கு இந்திராணி ஸத்ய பாமைக்கு ஸகல உபசாரங்களைச்செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப்பெண்ணாகிய இவளுக்குத்தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லையாதலின், அதனைக்கண்டு பாமை விருப்புற்றவளாய் நாதனைநோக்கி 'பிராணநாதனே! இந் தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுபோகவேண்டும்' என்றதைக் கண்ணபிரான் திருச்செவிசார்த்தி உடனே அந்த வ்ருக்ஷத்தை வேரோடு பெயர்த் துக் கருடன் தோளின்மேல் வைத்தருளி த்வாரகைக்குக் கொண்டுபோக, அப் பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப் போர்செய்த இந் திரனை ஸகல தேவஸைந்யங்களுடன் சங்காதத்தினாலே பங்கப்படுத்திப்பின்பு அம்மரத்தைக்கொணர்ந்து ஸத்யபாமையின் வீட்டுப் புழைக்கடைத் தோட்டத் தில் நாட்டியருளின னென்றவரலாறு இங்கு அறியத்தக்கது.

இனி, அமரர் என்பதற்கு நித்யஸூரிகளென்று பொருள்கொள்ளும்பக்ஷத் தில் பெரிய திருவடியின் இதிஹாஸம் உணரத்தக்கது. இங்கே நம்பிள்ளையீடு:—

> "அன்றிக்கே, நன்ஞானத்துளமரர் என்கிறது நித்யஸூரிகளையாய் ஜ்ஞாநாதிகனான பெரிய திருவடியும் 'தேவரீரையும் நாய்ச்சிமாரையும் வஹித்தேன் நானன்றோ' என்றாற்போலே சிவியார் சொல்லும் வார்த் தையைச் சொன்னானிறே"

என்பதாம். இங்கு அறியவேண்டிய கதையாவது—தேவேந்திரனுக்கு நண் பனும் மந்திரியும் ஸாரதியுமான மாதலியானவன் அழகிலும் குணத்திலும் மிகச் சிறந்த தன் புத்திரியான குணகேசியென்னுங் கன்னிகைக்குத் தக்கவரனைத் தேடுபவனாய்ப்புறப்பட்டு வழியில் நாரதமுனிவரைச் சந்தித்துத் துணையாகக் கொண்டு பலவுலகங்களிற்சென்று பார்த்துத் தக்கவரனைக் காணாமல் பாதாள லோகத்தில் வாஸுகியினாலாளப்படுகின்ற போகவதியென்னுஞ் சிறந்த நகரத் தையடைந்து அங்கேயிருக்கின்ற அநேக குமாரர்களைப் பார்க்கின்றபொழுது ஸுமுகனென்னும் நாககுமாரனை நோக்கி அவனுடைய ரூபலாவண்யங்களிலீடு பட்டு அவனுக்குத் தன் மகளைக்கொடுக்கக்கருதி அவனது பாட்டனாரைக்கண்டு பேச, அவர் மகிழ்ச்சியோடு துயரமுங்கொண்டவராய் 'இவனது தந்தையைக் கரு டன் பக்ஷித்து இந்த ஸுமுகனையும் ஒருமாதத்திற்குள் பக்ஷிப்பேனென்று சொல்லி யிருக்கின்றானாதலால் இவனுக்கு மணஞ்செய்தல் ஏற்றதன்று' என்று தெரிவித் தார். அதுகேட்ட மாதலி 'என்னால் மருமகனாக வரிக்கப்பட்ட உனது பௌத் திரன் எங்களுடன்வந்து தேவேந்திரனைக் காண்பனாயின் இவனுக்கு ஆயுளைத் தந்து கருடனைத்தடுக்க முயல்வேன்' என்றுசொல்லி ஸுமுகனை யழைத்துக் கொண்டு இந்திரனிடஞ்சென்று சேர, அங்கு இந்திரனுடனே உபேந்திரமூர்த்தி யான திருமாலும் வீற்றிருக்கையில், நிகழ்ந்த செய்திகளையெல்லாம் நாரதமுனி வர் சொல்லக்கேட்ட திருமால் இந்திரனைநோக்கி 'இவனுக்கு அமிர்தத்தைக் கொடுக்கலாம்; அதனால் இவர்கள் இஷ்டஸித்தியடைந்தவராவர்' என்று சொல்லி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யருள, இந்திரன் கருடனது பராக்ரமத்தை ஆலோசித்துத் திருமாலைநோக்கி 'தேவரீரே அவனுக்கு அமுதத்தையும் ஆயுளையும் தந்தருள்க' என்றதற்கு, திருமால் 'ஸகலலோகாதிபதியான நீ கொடுப்பதே போதும், அதனை மாற்றுபவர் யார்? என்றுகூற, பிறகு இந்திரன் ஸுமுகனுக்கு அமிர்தமுண்பியாமல் நீண்ட ஆயுளை வரமளிக்க, உடனே மாதலி ஸுமுகனுக்குத் தன் மகளை மணம் புரிவித்தான். இச்செய்தியைக் கேள்வியுற்ற கருடன் கோபங்கொண்டு இந்திரனேடு மாறுபட்டுத்தனது இரையை அவன் தடுத்துவிட்டதற்காகப் பலபல நிஷ்டுரவார்த்தைகள் கூறுகையில், ஸுமுகன் தான் நீண்ட ஆயுளை வரம்பெற்றிருந்தாலும் கருடனுடைய கறுவுதலைக்கண்டு அஞ்சிப் பாம்புவடிவாய்த் திருமாலினருகிற்சேர்ந்து அப்பெருமானது கட்டிலின் காலைக்கட்டிக்கொண்டு சரண்புக, பின்பு கருடன் திருமாலைநோக்கி 'ஸகல தேவர்களினுள்ளும் மஹாபலசாலியான வுன்னைச் சிறிதும் சிரமமின்றி இறகு முனையாற் சுமக்கின்ற என்னினும் வலிமையுடையார் யார்? இதனைச்சற்று ஆலோசித்துப்பார்' என்று செருக்கிப் பேச, அக்கடுஞ்சொற்கேட்ட திருமால் கருடனைநோக்கி 'மிகவும் துர்ப்பலனுன நீ உன்னைத்தானே மஹாபலசாலியாக எண்ணி எமது முன்னிலையில் தற்புகழ்ச்சி செய்துகொண்டது போதும்; மூவுலகமும் எனது உடம்பை வஹிக்கமுடியாவே; யானே எனது சக்தியால் என்னை வஹித்துக்கொண்டு உன்னையும் வஹிக்கின்றேன்; எனது இந்த வலக்கையொன்றை மாத்திரமாவது நீதாங்கவல்லையாயின் உனது செருக்குமொழி பயன்பட்டதாகும்' என்று சொல்லிக் கருடனது தோளில் தனது வலக்கையை வைத்தமாத்திரத்தில் அவன் அதன் அதிபாரத்தைத் தாங்கமாட்டாமல் வருந்தி வலிமையொழிந்து மூர்ச்சித்துவிழுந்து, பின்னர் அரிதில் தெளிந்து திருமாலை வணங்கிப் பலவாறு பணிமொழிகூறி 'என் பிழையைப் பொறுத்தருளவேண்டு' மென்று பிரார்த்திக்க, திருமால் திருவுள்ளமிரங்கி அவனுக்கு ஸமாதானங்கூறித் தனது திருவடியின் பெருவிரலால்ஸுமுகனையெடுத்துக் கருடன் தோளிலிட்டு 'இவனை நீ உனது அடைக்கலமாகக் கொண்டு பாதுகாக்கக்கடவை' என்று குறிப்பிக்க, அதுமுதல் கருடன் ஸுமுகனேடு நண்புகொண்டு அவனைத் தோளில் தரிக்க அவனும் அச்சமின்றி 'கருடா! ஸுகமா?' என்று க்ஷேமம் விசாரிப்பவனுயினன்—என்பதாம்.

இப்படி இந்திராதி தேவர்களையும் நித்யஸூரிகளையும் மயக்கவல்ல மாயைகள் எம்பெருமானிடத்தில் அளவிடமுடியாதவை யிருக்கின்றன என்பது கிடக்கட்டும்; அவனநுக்ரஹத்தாலே காட்டின வடிவழகை நாமநுபவிப்போமென்கிறுர் மேலடிகளில். நீர்கொண்டெழுந்த காளமேகம் போன்ற திருமேனியையுடையவனும், பரம்பின நிலத்தை அளக்கிறவிடத்து வஸிஷ்ட சண்டாள விபாகமின்றியே எல்லார் தலையிலும் திருவடிகளைவைத்தவனுமான எம்பெருமானுடைய, "நீயொருநாள் படிக்களவாக நிமிர்த்த நின்பாதபங்கயமே தலைக்கு அணியாய்" என்று ஆசைப்படவேண்டும்படி மிகவழகிய திருவடித் தாமரைகளை மனமொழி மெய்கள் மூன்றினுலும் அநுபவிக்கப்பெறுவேனுகவேணுமென்று மநோரதிக்கின்றுர்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஈற்றடியிலுள்ள வினைமுற்றுக்களுக்குப் பிரார்த்தனைப் பொருள் கொள்ளாமல் இயல்புப்பொருள் கொண்டு 'அலற்றுவதையும் தழுவுவதையும் வணங்குவதையுமே ஸ்வபாவமாகவுடையேன்' என்பதாகவும் உரைப்பர். (இது ஆறாயிரப்படி நிர்வாஹம்.) .... .... .... .... .... .... .... (கo)

அமரர்கள்தொழுதெழ அலைகடல்கடைந்தவன்தன்னை *
அமர்பொழில்வளங்குருகூர்ச் சடகோபன்குற்றேவல்கள் *
அமர்சுவையாயிரத்து அவற்றினுள்இவைபத்தும்வல்லார் *
அமரரோடுயர்வில்சென்று அறுவர்தம்பிறவியஞ்சிறையே. * (கக)

| | |
|---|---|
| அமரர்கள் | தேவர்கள் |
| தொழுது எழ | ஸேவித்து விருத்தியை யடைய |
| அலை கடல் | அலையெறிகின்ற திருப்பாற்கடலை |
| கடைந்தவன் தன்னை | கடைந்தவனான ஸர்வேச்வரனைக் குறித்து, |
| அமர் | பொருந்தின |
| பொழில் வளம் | சோலைவளமுள்ள |
| குருகூர் | திருக்குருகூரில் அவதரித்த |
| சடகோபன் | ஆழ்வாருடைய |
| குற்றேவல்கள் | (வாக்கினாலாகிய) கைங்கரியமான |
| அமர் சுவை | சுவையமைந்த |
| ஆயிரத்து அவற்றினுள் | ஆயிரம் பாடலுக்குள் |
| இவை பத்தும் | இந்தப்பத்துப் பாசுரமும் |
| வல்லார் | கற்கவல்லவர்கள் |
| அமரரோடு | நித்யஸூரிகளோடு |
| உயர்வில் | பரமபதத்தில் |
| சென்று | சேர்ந்து |
| தம் பிறவி | தம் பிறப்பாகிற |
| அம் சிறை | உறுதியான பந்தத்தில் நின்றும் |
| அறுவர் | நீங்கப்பெறுவர்கள். |

* * * — இத்திருவாய்மொழி வல்லவர்கள் நித்தியஸூரிகளோடொக்க உயர்த்தியைப் போய்ப்பெற்று ஸம்ஸார ஸம்பந்தமறப் பெறுவரென்று பலன் சொல்லித் தலைக்கட்டுகிற பாசுரம் இது.

அமரர்கள் தொழுதெழ அலைகடல் கடைந்தவன்தன்னை = தேவர்கள் வணங்கி வேண்டினவளவிலே அவர்களது வேண்டுகோளுக்கிரங்கி அலைகடல் கடைந்தவன் என்றும் பொருள்கொள்ளலாம். அமரர்கள் தொழுதெழும்படியாக அலைகடல் கடைந்தவன் என்றும் பொருள்கொள்ளலாம். முதற்பொருளில் (தொழுதெழ என்பது) இறந்தது தழுவிய வினையெச்சம்; இரண்டாம் பொருளில் எதிர்காலந்தழுவிய வினையெச்சம். இரண்டாம் பொருளையே ஆசாரியர்கள் இனிதாகக் கொள்ளுவர்கள். கடல்முகமாகக் கவிழ்ந்துகொண்டு 'உப்புச்சாறு எப்போது கிளரப்போகிறதோ?' என்று தங்களுணவையே நோக்கிக்கொண்டிருந்த ப்ரயோஜநாந்தரபரமான தேவஸமூஹமுங்கூட, தோளுந் தோள்மாலையுமாய்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஒரு கடல் ஒரு கடலைநின்று சலடையுமாபோலே சலடைந்த அழகுக்குத் தோற்றுப் பரவசமாய் வணங்கும்படியாக என்றவாறு. இதனால் விமுசரையும் ஈடுபடுத்தவல்ல அழகுடைமை சொல்லிற்றாகிறது.

இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயமாக, சோலைவளம் பொருந்திய திருக்குருகூர்க்குத் தலைவரான ஆழ்வார் வாக்கினலடிமைசெய்தபடியான, ரஸமே வடிவெடுத்த திருவாய்மொழி யாயிரத்தினுள்ளும் இப்பத்துப் பாசுரங்களை ஓதவல்லார் நித்யஸூரிகளோடொத்த உயர்த்தியையுடையராய்த் தங்களுடைய பிறப்பாகிற விலங்கு விட்டகலப் பெறுவர்கள் என்றதாயிற்று. ... .... (கக)

மூன்றாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

———

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஜீயர் திருவடிகளே சரணம்.

மணவாளமாமுனிகளருளிச்செய்த

திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத் திருவாய்மொழிக்கான பாசுரம்.

---

பத்துடையோர்க் கென்றும் பரனெளிய னும்பிறப்பால் *
முத்திதரும் மாநிலத்தீர் மூண்டவன்பால் * — பத்திசெயு
மென்றுரைத்த மாறன்தனின் சொல்லாற்போம் * நெடுகச்
சென்ற பிறப்பாமஞ்சிறை,

பதவுரை.

| | |
|---|---|
| பரன் | ஸர்வேச்வரன் |
| பத்துஉடையோர்க்கு | பக்திமான்களுக்கு |
| என்றும் | எந்நாளும் |
| பிறப்பால் | அவதாரத்தினால் |
| எளியன் ஆம் | ஸுலபனாவன்; |
| முத்தி தரும் | மோக்ஷத்தையும் தந்தருளுவன்; (ஆதலால், அவன் அவதரிப்பதற்குஉரிய) |
| மா நிலத்தீர் | (இந்தப்) பெரிய நிலவுலகத்திலுள்ளவர்களே ! |
| மூண்ட அன்பால் | கிளர்ந்தெழுந்த ப்ரேமத்துடனே |
| பத்தி செயும் | (அவன் பக்கலிலே) பக்தியைப் பண்ணுங்கோள்; |
| என்று உரைத்த | என்று உபதேசித்தருளின |
| மாறன் தன் | ஆழ்வாருடைய |
| இன் சொல்லால் | இனிமையான அருளிச் செயலான இத்திருவாய்மொழியினால் |
| நெடுக சென்ற பிறப்பு ஆம் அம் சிறை போம் | நீளமாகத் தொடர்ந்துவந்த பிறவியாகிய கடுஞ் சிறை நீங்கும். |

* * * — எம்பெருமான் பக்திமான்களுக்கு அவதரித்து எளியனாய் முத்தியுமளிப்பானாகையாலே அவன் திறத்துப் பத்தி புரியுங்கோளென்று உபதேசித்த இத் திருவாய்மொழியை அநுஸந்திக்கப்பெற்றால் அநாதியான ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் வீடுபெறலாகுமென்றாராயிற்று. முத்தி — முக்தி. "மூண்டு அவன்பால்" என்றும் பிரிப்பாருளர். அவன்பால் அவகாஹித்து என்றபடி. ... (*)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஸ்லோ || உதாத்தவேஷ்யே ஸுத்ருசி ப்ரஸஹ்ய
ஸேவ்யத்வம் ஆச்ரிதஸஹஸ்ரவச்யதாம் ச |
ச்ருத்வாய ஸக்த்யவி தத்ர வியாய தஸ்ய
ஸேவாம் வகாஸ்க்ஷ கரணத்ரய தஸ்த்ருதீயே ||

* சேணுயர்வானத்திருக்குந் தேவபிரானாகிய எம்பெருமான் பரஸ்தனானாலும் தன்னிச்சையாலே பரிக்ரஹிக்கின்ற பற்பல அவதாரங்களாலே எளியனாமியல்பினனென்றுரைத்து அவன் திறத்திலே பக்தி பண்ணவும் விதித்து, தாமும் அவனுடைய ஸேவையை த்ரிகரணங்களாலும் விரும்பினாராழ்வார் மூன்றாந் திருவாய்மொழியிலென்றவாறு. ... .... .... .... (ரு)

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி முதற்பத்து

## நான்காந் திருவாய்மொழி — அஞ்சிறையமடநாராய்.

# அவதாரிகை.

எம்பெருமானை அநுபவித்தல் பலவகைப்பட்டிருக்கும்; அவனுடைய திருநாமங்களைச் சொல்லியநுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லியநுபவித்தல், வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவனுகந்தருளின திவ்யதேசங்களின் வளங்களைப் பேசியநுபவித்தல், அங்கே அபிமானமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப்பேசி யநுபவித்தல் — என்றிப்படி பல வகைப்பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகைகளில் பரம விலக்ஷணமான மற்றொருவகையுமுண்டு; அதாவது — ஆழ்வார் தாமான தன்மையைவிட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசியநுபவித்தல். இப்படி அநுபவிக்குந்திறத்தில், தாய்பாசுரம், தோழிபாசுரம், மகள்பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. அப்போது ஆழ்வார்க்குப் பராங்குசர் என்ற ஆண்மைப்பெயர் நீங்கி, 'பராங்குசநாயகி' என்று பெண்மைப் பெயர் வழங்கப்பட்டு வரும். தாய் சொல்வதுபோலவும் தலைமகள் சொல்வது போலவும் தோழி சொல்வதுபோலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும், பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். ஒரு ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகினாலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாயிருக்குமாபோலே, இம்மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் "ஆமர் பொழில் வளங்குருகூர்ச் சடகோபன் குற்றேவல்கள்" என்று ஆழ்வார் பாசுரமாகவே தலைக்கட்டும்.

ஆழ்வார் தாமான தன்மையை விட்டிட்டு ஸ்த்ரீபாவனையை ஏறிட்டுக் கொள்ளுதல் எதுக்காக வென்னில்; ஆழ்வார் தாமாக ஏறிட்டுக்கொள்ளுகிறாரல்லர்; அந்த அவஸ்தைதானே பரவசமாக வந்து சேருகின்றது. புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்குமுன் உலகமடங்கப் பெண்தன்மையதாயிருக்கையாலும், ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்திரிய நாற்றமேயின்றிப் பாரதந்திரியமே வடிவாயிருக்கையாலும் இவ்வகைகளுக்கேற்ப ஸ்த்ரீபாவனை வந்தேறியன்று என்றே கொள்ளலாம். தண்டகாரண்யவாஸிகளான முனிவர் இராமபிரானது ஸௌந்தர்யத்திலீடுபட்டுப் பெண்மை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர் மங்கையராய்க் கண்ணனைக் கூடினர் என்ற ஐதிஹ்யமுமுண்டு, ஆழ்வார்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கள் அப்படியன்றியே அப்போதே பெண்மையை யடைந்து புருஷோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர்.

ஆண் பெண் என்ற வ்யவஹாரங்கள் சிற்றின்பநுகர்ச்சிக்கன்றோ ஏற்பட்டவை; பேரின்பவநுபவத்திலே ஊன்றின ஆழ்வார்கள் பெண்மை யெய்துவதாகவும், கோங்கை முதலிய சொற்களையிட்டுப் பாசுரங்கூறுவதாகவும் நிகழ்கிறவிது என்னோ? எனின்; விஷயாந்தரகாமம் என்றும் பகவத்விஷயகாமம் என்றும் காமம் இருவகைப்படும்; வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட பக்தியே ஆழ்வார்களுக்கு ச்ருங்கார முறைமையில் பரிணமித்து நிற்கும். சிற்றின்பவநுபவத்திற்குக் கொங்கை முதலியன ஸாதநமாயிருப்பதுபோல, பகவத் விஷயாநுபவத்திற்குப் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் இன்றியமையாதனவாயிருப்பதால் அவையே கொங்கை முதலிய சொற்களால் இவ்வருளிச்செயல்களிற் கூறப்படுகின்றனவென்று கொள்க.

ச்ருங்காரரஸத்தின் ஸம்பந்தம் சிறிதுமின்றியே கேவலம் சுத்தபக்திரஸமாகவே பாசுரங்கள் அருளிச்செய்யக் கூடுமாயினும், ஆழ்வார்கள் ச்ருங்காரரஸத்தைபுங்கலந்து பாசுரங்கள் பேசுவதற்குக்காரணம் யாதெனில்; ஆரோக்யத்திற்குக் காரணமாகிய வேப்பிலைபுருண்டையை உட்கொள்ள இறாய்க்குமவர்களுக்கு வெல்லத்தை வெளியிற் பூசிக்கொடுத்துத் தின்பிப்பதுபோலச் சிற்றின்பம் கூறும் வகையாற் பேரின்பத்தைக்காட்டி நாட்டுகின்றனரென்ப.

பகவத்விஷயத்தில் அபிநிவேசம் மீதூர்ந்தகாலத்தில் தன் நிலை மாறிப் பெண்நிலைபெற்றுப் பேசுமிடத்தில் தாய்பாசுரமென்றும் தலைவிபாசுரமென்றும் தோழிபாசுரமென்றும் இப்படி வகுத்துக் கூறுவதற்கும் உட்கருத்து உண்டு;— தோழியாகப் பேசுவதற்குக் கருத்து:— நாயகனையும் நாயகியையும் இணக்கிச் சேர்க்குமவள் தோழியாவள்; திருமந்திரத்தில் பிரணவத்தினால் எம்பெருமானோடு இவ்வாத்மாவுக்குச் சொல்லப்பட்ட அநந்யார்ஹ சேஷத்வம் முதலிய ஸம்பந்தங்களை உணருகையே அப்பெருமானோடு இவ்வாத்மா சேருகைக்கு ஹேதுவாகையாலே அந்த ஸம்பந்த ஞானமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தோழி யென்பதாகக் கொள்க.

பெற்று வளர்த்துப் பெண்பிள்ளை யௌவன பருவத்தில் நாயகனிடத்துள்ள அன்பு மிகுதியால் அவனிருப்பிடத்துக்குச் செல்லவேணுமென்று பதறுமளவில் படிகடந்து புறப்படுகை குலமரியாதைக்குப் பொருந்தாதென்று தடுப்பவள் உலகில் தாய் எனப்படுவள்; ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றினவர்கள் பேற்றை விளம்பித்துப் பெறுதலில் காரணமில்லாமையாலே அதனை விரைவில் பெறவேணுமென்கிற ஆவலைப் பிறப்பித்து அதனால் படிகடந்து நடக்கவேண்டி வந்தவளவில் இது ப்ரபந்நர் குடிக்கட்டுப்பாட்டுக்குச் சேராததென்று விலக்கி 'எம்பெருமான் தானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்க வேணும்' என்று சொல்லித் துடிப்பை அடக்கப்பார்க்கிற நமபதத்திற் கூறப்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பட்ட உபாய அத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தாய் என்பதாகக் கொள்க.

உறவினர் கூட்டக் கூடுகையன்றியே தானாகவே புணர்ந்து நாயகனுடைய மேம்பாட்டிலே ஈடுபட்டுக் குடியின் கட்டுப்பாட்டையும் பாராமல் 'அவனைக் கிட்டியல்லது நான் உயிர்வாழ்ந்திருக்கமாட்டேன்' என்னும் பதற்றத்தையுடைய வளாயிருப்பள் உலகில் மகள்; பிரணவத்தினாலும் நமஸ்ஸாலும் சேஷியென் றும் சரண்யனென்றும் உணரப்பட்ட எம்பெருமானுக்கு நாராயண பதத்தினாற் கூறப்பட்ட ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி முதலியவற்றின் சேர்க்கையாலுள்ள பெருமையை அநுஸந்தித்து அதனாலே அவனைத் தாமதித்து அநுபவிக்க நிற்க மாட்டாமல் 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டை அதிக்கிரமித்து, கிட்டி யநுபவித்தாலொழியத் தரிப்புற்றிருக்கவொண்ணாதபடி நடக்கிற ப்ரஜ்ஞா வஸ்தையை மகள் என்பதாகக் கொள்க.

இம்மூன்று அவஸ்தைகளுள் முதல் அவஸ்தை நடக்கும்படியைத் தோழி பாசுரத்தாலும் இரண்டாவது அவஸ்தை நடக்கும்படியைத் தாய் பாசுரத்தா லும் மூன்றாவது அவஸ்தை நடக்கும்படியை மகள் பாசுரத்தாலும் வெளியிடுவ ரென்றதாயிற்று. ஆகவே, தலைமகள் பாசுரமாகச் செல்லுகிற இத் திருவாய் மொழியில் எம்பெருமானை அநுபவிப்பதில் ஆழ்வார்க்கு மிக்க விரைவு உண்டா னமை விளங்கும்.

நாயகி பாசுரமாகச் செல்லுகிற இத் திருவாய்மொழியில் சில பறவைகள் தூதுவிடப்படுகின்றன. இதற்கு உள்ளுறைபொருள் [ஸ்வாபதேசம்] "சேர்ப் பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞாந கர்மங்களைச் சிறகென்று குருஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்யஸ்தாநே பேசும்" என்று ஆசார்யஹ்ருதயத்தில் அருளிச்செய்யப்பட்டு ள்ளது. பகவத்விஷயத்தில் அந்வயிப்பிக்குமவர்களைப் பக்ஷிகளாக ப்ரதிபத்தி பண்ணுகிறது. பறவையானது இரண்டு சிறகுகளாலே எப்படி உயர்கதியை யடைகின்றதோ அப்படியே ஞான அநுஷ்டானங்களினால் உயர்கதியை யடை கின்றார்களவர்கள். ஆசார்யர்களென்ன, உடன் கல்வி பயின்றவர்களென்ன, புத்திரர்களென்ன, சிஷ்யர்களென்ன ஆகிய இவர்கள் தூதுவிடப்படுகின்றார்க ளாக [அவ்வவ்விடங்கட்கு ஏற்ப]க் கொள்ளப்படுவர்கள்.

திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங்கள் நான்கு;— (க) அஞ்சிறைய மடநாராய். (உ) வைகல்பூங்கழிவாய். (ங) பொன்னுலகாளீரோ. (ச) எங் கானலகங்கழிவாய்.

"தம்பிழையும் சிறந்த செல்வமும் படைத்த பரப்பும் தமரோட்டை வாஸ மும் மறப்பித்த க்ஷமாதீக்ஷாஸாரஸ்ய ஸௌந்தர்யங்களை புணர்த்தும் வ்யூஹ விபவ பரத்வத்வயார்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம்" என்ற ஆசார்ய ஹ்ரு தய ஸ்ரீஸூக்தியும் அதன் வியாக்கியானமும் இங்கு உணரத்தக்கன. [வ்யூ ஹத்திலே தூதுவிடுவது * அஞ்சிறைய மடநாரையில்; விபவத்திலே தூதுவிடு வது * வைகல் பூங்கழிவாயில். பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



விடுவது * பொன்னுலகாளீரில். அர்ச்சையில் தூதுவிடுவது * எங்கானலகங் கழிவாயில்.]

முதல் தூதாகிய இத்திருவாய்மொழியில் "என்பிழையே நினைந்தருளி அருளாத திருமாலார்க்கு என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" "கட லாழிநீர் தோற்றியதனுள்ளே கண்வளரு மடலாழியம்மானைக் கண்டக்காலிது சொல்லியருள்" என்கிற பாசுரங்கள் உயிர்நிலையானவை.—எம்பெருமான் தனது ஸௌசீல்யத்தினாலே முதலில் என்னோடு கலந்துவிட்டான்; கலந்தபிறகு என்னு டைய தோஷங்களைக் கண்டான்; அதனால் உபேக்ஷித்துப் பிரியலுற்றான். தன் னிடத்தில் க்ஷமாகுணம் நிரம்பியிருக்கும்போது என் பிழைகளை அவன் லக்ஷி யம் பண்ணக்காரணமேயில்லை; என்னுடைய பிழைகளானவை அவனது பொறு மைக்குணத்தையும் மறப்பித்தனபோலும்; அக்குணத்தைச் சிறிது நினைப்பூட்டி விட்டால் போதும் என்று நினைத்த ஆழ்வார் அந்த க்ஷமாகுணத்தை நினைப் பூட்டுதற்கே தூதுவிடுகின்றாரெனக்கொள்க. இஃது எந்த இடத்தை நோக்கி விடும் தூதென்றால்? "கடலாழி நீர்தோற்றி அதனுள்ளே கண்வளருமடலாழி யம்மானைக் கண்டக்காலிது சொல்லி" என்றதனால், ஜகத்ஸ்ருஷ்டிக்காக ஏகார்ண வத்திலே கண்வளர்ந்தருளினவனுக்கு ஸ்ருஷ்டிப்ரயோஜனம் "விசித்ரா தேஹ ஸம்பத்திரீச்வராய நிவேதிதும் = விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவே திதும்" என்கிறபடியே திருவடிகளிலே அடிமை கொள்ளுகையன்றோவென்று இதனைச்சொல்லவேணுமென்று வ்யூஹத்திலே விடுகின்ற தூது என்க.

சகுந்தலை துஷ்யந்த மஹாராஜனோடு கலந்து பிரிந்தாப்போலே ஒருவிளை யாடு சூழலிலே பரமபுருஷனாகிற தலைவனோடு கலந்து பிரிந்தவொருபிராட்டியின் நிலைமையை ஏற்றுக்கொண்ட ஆழ்வார், அவ்வெம்பெருமான் விரைந்து மீண்டு வரக்காணாமையாலும் அவனைப்பிரிந்து தான் ஆறியிருக்கமாட்டாமையாலும் தானே அவனிருப்பிடம் நோக்கிச் செல்லுதற்கு இயலாதபடி மேனி மெலிந்து கிடக்கையாலும் கண்ணிற்கண்ட நாரை குருகு வண்டு முதலிய பறவைகளைத் தூதுவிடுகிறார், அதாவது ஆழ்வார், ஞானமனுட்டான மிவை நன்றாகவேயுடை யரான சில மஹான்களைத் தம்மை எம்பெருமான் பக்கல் சேர்ப்பதற்கு உரிய ஆசாரியராகவரித்து அவர்களை நோக்கிச் சொல்லுகின்றாரென்றதாயிற்று.

இங்கே பட்டர் அருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு;—"சக்ரவர்த்தி திருமகனார் [ஸ்ரீராமபிரான்] திருவவதரித்த பின்பு வாநரஜாதி வீறுபெற்றது போல, ஆழ்வார்கள் திருவவதரித்தபின்பு பக்ஷிஜாதி வீறுபெற்றது" என்றும். இராமபிரான் * முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்ததுபோல ஆழ் வார்கள் * அஞ்சிறைய புட்கள்தமை ஆழியானுக்குத் தூதுவிடுகின்றார்களென்க.

முற்காலத்தில் ஸாமாந்யனாயிருப்பானொருவன், விரக்தர்களும் வைதிகர்களு மான மஹான்கள் பலரும் திருவாய்மொழியைப் பரிக்ரஹிக்கையாலே இது தத்வபரமாயிருக்குமென்று கருதி இத்திவ்யப்ரபந்தத்தை அதிகரித்துவந்து, இத்திருவாய்மொழியில் வந்தவாறே 'இது காமுகவாக்யமாயிருக்கின்றது!'

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்று உபேக்ஷித்துவிட்டுப் போனனும். வேதாந்தங்களில் விதிக்கப்படுகிற பகவத்காமமே இப்படிப்பட்ட பாசுரங்களாகப் பரிணமித்ததென்று அவன் அறிந்திலன் கருவிலே திருவிலாமையாலே—என்று நம்பிள்ளை மிக வருந்திப் பேசுவர்.

வேதாந்ததேசிகன் "வாஞ்சாஸீமா த்ருஶொஸாஹ்ய தஹ்ய ஷயவய ஶுவஶ வஶாஹவநீதஹ்வா வதஹ்ள வஷாவஸஹாயெ ஹ்ணயிநி ஹஜதஃ ஹ்யவஸீவாரதஞ்ஹ்ழ | ஸக்தஃ ஶ்யாமாரவ்யத்ஹ்வா வரிணஉதி ஊஙெந ஹஶாவவஸஹ்யிஹ்னா யொமாஶஹ்ரா ஶூக்தஸாவஷிதிரிஹ விரஹொ ஷெஶிகாஷ்த்ரு ஊஶதாஃ ||" என்று த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியிலும், "ஹொக்தாம் தவ ஹ்ரியதமம் ஸவதீவ ஶொஷெ! ஸக்தம் நிஜாம் ஹ்ணயஸாவநயா ஶ்ணஞஃ | உஹ்வாவவெவிஶுரஹவம் ஶஉஜெர ஷஞஞஃ ஶ்யாமாரயஞி ஹ்ஷயம் ஶூரவஹ்ஷீயாஃ ||" என்று கோதா ஸ்துதியிலுமருளிச்செய்தவை இங்கு ஸ்மரிக்கத்தக்கன. .... .... (*)

அஞ்சிறையமட்நாராய் அளியத்தாய் * நீயும்நின்
அஞ்சிறையசேவலுமாய் ஆவாவென்றெனக்கருளி *
வெஞ்சிறைப்புள்ளுயர்த்தார்க்கு என் விடு தூதாய்ச்சென்றக்கால் *
வன்சிறையிலவன்வைக்கில் வைப்புண்டாலென்செய்யுமோ.* (க)

| | |
|---|---|
| அம் சிறைய | அழகிய சிறகுகளையுடைய |
| மடம் | இளமைதங்கிய [அல்லது, விதேயமான] |
| நாராய் | நாரைப் பறவையே !, |
| அளியத்தாய் | தயைபண்ணுதற்கு உரியாய் !, |
| நீயும் | நீயும் |
| நின் | உன்னுடைய |
| அம் சிறைய சேவலும் ஆய் | அழகிய சிறகுகளையுடைய ஆணுமாய் [இருவருங் கூடி] |
| ஆ ஆ என்று எனக்கு அருளி | ஐயோவென்று என் விஷயத்தில் கருணைகூர்ந்து, |
| வெம் சிறை புள் உயர்த்தார்க்கு | விரோதி பயங்கரமான சிறகுகளையுடைய பெரிய திருவடியைக் கொடியாக வெடுத்த பெருமானுக்கு |
| என் விடு தூது ஆய் | என்னால் விடப்பட்ட தூதாய் |
| சென்றக்கால் | போனல், |
| அவன் | அந்த எம்பெருமான் |
| வன் சிறையில் வைக்கில் | கடினமான சிறையிலே வைத்திட்டால் |
| வைப்புண்டால் | அதை நீ அநுபவித்திருப்பாயானல் |
| என் செய்யும் | என்ன கெடுதலுண்டாகும் ? |

* * * — பிரிவாற்றுமையோடு கூடியிருக்கின்ற பராங்குசநாயகி "பிரிந்தாரிரங்குவது நெய்தல்நிலத்திலே" என்ற தமிழர்களது கொள்கையின்படி இப்போது நெய்தல்நிலத்திலே யிருக்கின்றளென்று கொள்ளவேணும். [முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என நிலத்தை நால்வகையாகப் பிரித்தனர் தமிழர். காடும் காடுசார்ந்த இடமும் முல்லையாம்; மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியாம்; நாடும் நாடுசார்ந்த இடமும் மருதமாம்; கடலும் கடல்சார்ந்த இடமும் நெய்தலாம். இவைதவிர, பாலைநிலமென்று தனியே ஒரு நிலமுண்டென்பது சிலாது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கொள்கை: அது, நீரும் நிழலுமில்லாத கொடுநிலம். கீழ்ச்சொன்ன நால்வகை நிலங்களும் தம் தம் தன்மை கெட்டவிடத்தே பாலையாமென்கிற கொள்கை உணரத்தக்கது.] நீர்நிலத்தருகேயிராநின்ற பராங்குசநாயகி, தன் ஸமீபத்திலிருப்பதொரு நாரையைப் பார்த்து 'நாராய்! நீ என் நிலைமையைக் கருளக் கொடியொன்றுடையானுக்கு அறிவித்து என்னையும் அவனையுஞ் சேர்க்கவேணும்' என்று இரக்கின்றாள். எம்பெருமானைப் பிரார்த்திக்கும்போது புருஷகாரபூதையான பிராட்டியை முன்னிட்டே பிரார்த்திக்கும் தம் இயற்கையினாலே இங்கும் பேடையை முன்னிட்டுச் சேவலைப்பற்றுகின்றாளென்ப.

அஞ்சிறைய மடநாராய்!=குழந்தை தாயினுடைய எல்லா அவயவங்களுங் கிடக்க முலையிலே வாய்வைப்பதுபோல, இங்கு நாரையினுடைய மற்ற அவயவங்களைவிட்டுச் சிறகிலே கண்வைப்பது—விரைந்து செல்லுதற்கு அதுவே ஸாதனமென்பதுபற்றி. நாரையே! நீ அழகிய சிறகுகள் படைத்திருப்பது எனக்காக விரைந்து தூதுசெல்லுதற்காகவன்றோ என்றவாறு. சொன்னசொல் மறுக்காமல் உடனே புறப்பட ஸித்தமாயிருப்பதுபோலக் கண்டதனால் 'மட' என்று விசேஷிக்கப்பட்டது. ஏவிக் காரியங்கொள்ளலாம்படி பவ்யமாயிருக்கின்ற நாரையே! என்றபடி. நாரை என்பதன் ஈறுதிரிந்தவிளி—நாராய் என்பது; நங்காய், காளாய் என்பனபோல.

அளியத்தாய்=என்மீது கருணைபுரிவதற்கு உரியாய் என்றபடி. அவன் உபேக்ஷித்துவிட்டுப்போயிருக்கும் ஸமயத்திலே என் வருத்தங்களை முறையிட்டுக்கொள்ளலாம்படி வந்து முகங்காட்டின உன் கருணையே கருணை என்று கொண்டாடுகின்றமை தோற்றும். பம்பா ஸரஸ்ஸின் கரையிலே அநுமன் வந்து காட்சிதந்தபோது இராமபிரானுக்கு உண்டான மகிழ்ச்சி இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

நீயும் நின் அஞ்சிறைய சேவலுமாய்=பெடையும் ஆணும் விட்டுப்பிரியாமல் தூதுபோகவேணுமென்கிறது. "ஆசாரியன் பக்கலிற்போலவே ஆசாரியனது தேவிகளின் பக்கலிலும் பக்திபூண்டிருத்தல்வேண்டும்" என்கிற சாஸ்த்ரார்த்தம் இங்கு ஸூசிதமாகலாம்.

ஆ! ஆ!! என்று எனக்கருளி=ஐயோ ஐயோ! என்னும் பொருளதான ஹாஹா என்கிற வடசொல் ஆவா வெனத்திரியும். அவனோடே கலந்து பிரிந்து அவனை மீண்டுங்கண்ணாலே காண்பதெப்போதோவென்று விடாய்த்துக்கிடக்கிற என் விஷயத்தில் கருணைகூர்ந்து, விரஹம் தின்ற என்வடிவைக்கண்டு 'இப்படியும் ஒரு ஆபத்து விளைவதுண்டோ' என்று இரங்கவேணுமென்கிறது.

நாங்கள் இரங்கிச் செய்யவேண்டிய காரியம் என்னவென்று நாரை கேட்க, தூதுசெல்லவேணுமென்று ஆழ்வார் சொல்ல, யாரிடத்தில் தூதுசெல்லவேணுமென்று கேட்க, எம்பெருமானிடத்தில் என்று சொல்ல, 'உம்மையே உபேக்ஷித்திருக்கின்ற அவர் எங்களுடைய வார்த்தைக்கோ இரங்கப்போகிறார்?' என்று சொல்ல, "அப்படி நினைக்கவேண்டா; அடியார்களை நோக்குவதற்கென்றே அவர் கொடிகட்டிக்கொண்டு இருக்கின்றாராதலால் சிறிது ஞாபகப்படுத்தவே அவரை



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



குலையத் தலைகுலைய ஓடிவருவர்" என்று விடையளிப்பதான கருத்துப்பட வெஞ்சிறைப்புள்ளுயர்த்தார்க்கு என்கிறார். கூடியிருந்தகாலத்தில் திடீரென்று பிரித்துக்கொண்டுபோனான் கருடன் என்றிட்டு அவன்மீது மாச்சரியம் தோற்ற வெஞ்சிறைப்புள் என்றது.

என்விடுதூதாய்ச் சென்றக்கால் = எம்பெருமான் நாயகி பக்கலில் தூதுவிடுவது ஸ்ரீராமாயணாதிகளிலே கண்டோம்; நாயகன் விடுகிற தூதைக்காட்டிலும் நாயகி விடுகிற தூதுக்கு ஏற்றமுண்டு. எங்ஙனே யென்னில், இராமபிரான் "முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து" என்கிறபடியே மாருதியை இலங்கைக்குத் தூதுவிட்டான்; அங்கே அக் குரக்கரசனுக்குச் சிறை கட்டுதல் சிங்கவிளக்கேரித்தல் முதலிய பரிபவங்கள் நேர்ந்தன; அந்த மாருதி தானே பிராட்டியின் தூதாக ஸ்ரீராமனிடம் மீண்டு வந்தபோது "ஏஷ ஸர்வஸ்வபூதஸ் து பரிஷ்வங்கோ ஹநூமத:| மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மந:॥ = ஏஷ ஸர்வஸ்வபூதஸ் து பரிஷ்வங்கோ ஹநுமத:, மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மந:." என்கிறபடியே திருமார்போடே அணைக்கப்பெற்றான். ஆதலால் அவன் விடு தூதாய்ச் செல்வதன்றியே என்விடு தூதாய்ச் செல்வது உங்களுடைய பாக்கியமேயாகும் என்ற குறிப்பு.

வன்சிறையில் அவன் வைக்கில் வைப்புண்டால் என் செய்யுமோ?—இங்கே சிறைவைப்பதாகச் சொல்வது - எம்பெருமான் முகங்கொடாமல் உதாஸீநனாயிருக்கையை யென்க. இங்கு நின்றுப் தூது செல்கின்ற பறவைகளைப் பிடித்து அவன் சிறைவைப்பனென்பது ஸம்பாவிதமன்றே; முகங்கொடாமல் அந்யபரனாயிருக்குந்தன்மையே சிறைவைப்பதாகச் சொல்லப்பட்டது. இங்கே நம்பிள்ளையீடு;— "இவள்பாடு நின்றுஞ் சென்றவற்றைச் சிறையிட்டுவைக்கிறானன்றே; இவற்றுக்கு முகங்கொடாதே அந்யபரனாகையிறே சிறையிட்டுவைக்கையாவது: ராஜபுத்ரர்களுக்கு ப்ராப்தகாலங்களிலே 3 வெள்ளிலையிடாதபோது மாந்துவர்களிறே."

வைப்புண்டால் என் செய்யுமோ? = அப்படி அவன் உபேக்ஷித்துவிட்டாலும் பாதகமில்லை யென்றபடி. 1. "செம்மையுடைய திருமார்பில் சேர்த்தானேலு மொருநான்று, மெய்ம்மைசொல்லி முகம்நோக்கி விடைதான் தருமேல் மிகநன்றே" என்றும், 2. "பாவிநீயென்று ஒன்று சொல்லாய் பாவியேன் காணவந்தே" என்றும் எம்பெருமானுடைய அநுக்ரஹத்தோடு நிக்ரஹத்தோடு வாசியற இரண்டும் போக்யமேயென்று கொள்ளுகிற நிலைமையும் ஒன்று உண்டாதலால் இங்ஙனே சொல்லிற்றென்க. அவனுடைய அநுக்ரஹத்தையே எதிர்நோக்குகின்ற இவர்கள் நிக்ரஹத்தையும் போக்யமாகக் கொள்ளும்படி எங்ஙனே? என்னில்; நெஞ்சு முரிந்து சொல்லுகிற வார்த்தைகாணும்; 'எம்பெருமானுடையதாகக் கிடைப்பது ஏதாகிலுமாம்' என்ற கருத்து சில ஸமயங்களில் தோன்றிவிடும்.

---

1. நாச்சியார் திருமொழி 13—9. 2. திருவாய்மொழி 4 7-3. 3. வெள்ளிலை—வெற்றிலை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இப் பாட்டில் நாரையை விளித்துக் கூறினதற்கு ஸ்வாபதேசம் கூறப்படு கின்றது;—

"ஆசறுதூவியென்னும் பாஹ்யாப்யந்தர சுத்தியோடே திரையுக ளும் வ்யஸந வ்யதையற்றுத் தாய் வாயிலுண்ணும் பிள்ளைக்கு இரை தேடி வைகலுடன் மேய்ந்து தூங்கால் பைங்கானமென்று ப்ராஹ்மாதம் பண்ணிக் கொடுத்தவைகொண்டு நல்ல பதத்தையும் வேண்டேனென் னும் தனிப்பெரும்பித்தர் நம்முதலிகள் போல்வாரை நாரை கொக்கு குருகென்னும்."

என்பது ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தி. (இதன் கருத்தாவது) — தூது விடும் பிரகரணங்களில் நாரை யென்றும் கோக்கு என்றும் குருகு என்றும் பேசு வது சில சிறந்த ஆழ்வார்களையும் ஆசாரியர்களையுமாகும். எப்படியென்னில், * ஆசறுதூவி வெள்ளைக்குருகே! * என்று சொல்லுகிறவிடத்தில், பழிப்பற்ற சிறகையுடைத்தாய் உள்ளும் புறமும் ஒருபடியாக நிர்மலமாயிருக்கின்ற குருகே! என்றவிதனால் "𑌯𑌃 𑌸𑍍𑌮𑌰𑍇𑌤𑍍 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑌂 𑌸 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑌃 𑌶𑍁𑌚𑌿𑌃 = யஃ ஸ்மரேத் புண்டரீகாக்ஷம் ஸ பாஹ்யாப்யந்தரஃ சுசிஃ" என்கிற படியே உள்ளும் புறமுமொத்த சுத்திபுடைமை விவக்ஷிதம். "மநஸ்யந்யத் வச ஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம்" என்கிறபடியன்றியே "மநஸ்யேகம் வச ஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்" என்கிறபடியே மனமொழி மெய்கள் ஒன்றியிருக்கப்பெற்றவர்கள் விவக்ஷிதர்களென்க. * வாயுந்திரையுகளும் கானல் மடநாராய் * என்று சொல்லுகிறவிடத்தில், உணவைத் திரட்டுவதிலுண்டான ஊக்கத்தினால் அலைகள்வந்து கிட்டி மேலே தாவிப்போகாநிற்கிற கடற்கரையிலே அசையாமலிருக்கிற நாரையே! என்றவிதனால், * 𑌗𑌿𑌰𑌯𑍋 𑌵𑌰𑍍𑌷𑌧𑌾𑌰𑌾𑌭𑌿𑌃 𑌹𑌨𑍍𑌯𑌮𑌾𑌨𑌾 𑌨 𑌵𑌿𑌵𑍍𑌯𑌥𑍁𑌃 । 𑌅𑌭𑌿𑌭𑍂𑌯𑌮𑌾𑌨𑌾 𑌵𑍍𑌯𑌸𑌨𑍈𑌃 𑌯𑌥𑌾𑌽𑌧𑍋𑌕𑍍𑌷𑌜𑌚𑍇𑌤𑌸𑌃 = கிரயோ வர்ஷதாராபிஃ ஹந்யமாநா ந விவ்யதுஃ, அபிபூயமாநா வ்யஸநைஃ யதா அதோக்ஷஜ சேதஸஃ" என்கிறபடியே எம்பெரு மான் பக்கலில் நெஞ்சை ஊன்றவைத்து நிற்பதனால் ஸம்ஸாரக் கடலலைகளான தாபத்ரய வ்யஸநங்கள் மேன்மேலும் வந்து நெருங்காநின்றாலும் அவற்றுக்கு வருந்தாதே யிருக்குந்தன்மை விவக்ஷிதம். "தாய்வாயில் கொக்கின் பிள்ளை வெள்ளிறவுண்ணும்" என்றும் "பழனக் கழனியதனுட்போய்ப், புள்ளுப் பிள்ளை க்கு இரைதேடும்" என்றும் சொல்லுகிறவிடங்களில் கொக்கானது தன் வாயாலே யெடுத்துக்கொடுக்க ஜீவித்திருக்கும் தன் பிள்ளைக்கு வாய்க்கு அடங்குகின்ற இரையைத்தேடி யிடுமென்கிறவிதனால், தங்கள் வாக்கால் உபகரிக்கும் பகவத் விஷயத்தை உபஜீவித்திருக்கும் சிஷ்யர்களுக்கு அதிகாராநுகுணமாய் க்ரஹிக் கக்கூடிய உசிதமான அர்த்த விசேஷங்களை சாஸ்திரங்களிலே ஆராய்ந்து உதவுந் தன்மை விவக்ஷிதம். "வைகல்பூங்கழிவாய் வந்து மேயுங் குருகினங்காள்" என்றும் "காதல் மென்பெடையோடுடன் மேயுங் கருநாராய்" என்றுஞ் சொல் லுகிற விடங்களில், பேடைகளுடனே இனிய நீர்நிலங்களில் தங்கியிருக்கு மென்றவிதனால், தங்களைப் பிரியில் தரியாத ப்ரேமமுடைய சிஷ்யர்களுடனே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

கூட மனத்துக்கினிய காலக்ஷேப கூடங்களிலே சென்று பகவத்குணானுபவம் பண்ணுந் தன்மை விவக்ஷிதம். "செங்காலமடநாராய் — நுங்கால்களென்தலை மேல் கெழுமீரோ நுமரோடே" என்று சொல்லுகிறவிடத்தில் ஸபரிவாரமான நாரையின் கால்களைத் தம் தலைமேல் வைக்கும்படியாகச் சொல்லுகிறவிதனால், தங்கள் பக்கல் உபஜீவித்த சிஷ்யர்கள் செய்நன்றியறிவினால் சிரஸாவஹிக்கை யாகிற ப்ரஹ்மரதம் பண்ணிக்கொடுக்குந்தன்மை விவக்ஷிதம். "செங்காலமட நாராய் — நாளும் பைங்கானமீதெல்லாமுனதேயாக" என்கிறவிதனால் "ஶரீர [illegible] = சரீரமர்த்தம் ப்ராணம் ச ஸத்குருப்யோ நிவேதயேத்" என்கிற வடைவிலே ஆதரத்தோடு ஸமர்ப்பித்தவற்றை அங்கீகரிக்குந் தன்மை விவக்ஷிதம்.

ஆக, உள்ளும் புறமுமொத்த சுத்தியுடையவர்களாய், எம்பெருமான் பக்கலில் நெஞ்சை ஊன்றவைத்திருந்து ஸம்ஸாரதாபங்களுக்குத் தடுமாறாதவர்களாய், சிஷ்யர்களுக்கு யோக்யதைக்குத் தக்கவாறு உசிதமான அர்த்த விசேஷங்களைக் கற்பிக்குமவர்களாய், தங்களைப் பிரியில் தரிக்கமாட்டாதபடி பேரன்பு வாய்ந்த சிஷ்யர்களுடனே கூடியிருந்து பகவத்குணானுபவம் பண்ணுகிறவர்களாய், க்ருதஜ்ஞர்களான சிஷ்யர்களாலே சிரஸாவஹிக்கப்படுமவர்களாய், அவர்கள் ஆதரவோடளித்த உடல் பொருளுயிர் முதலானவற்றை ஏற்றுக்கொள்பவர்களான மஹான்கள் நாரையாகக் கொள்ளத்தக்கவர்களென்றதாயிற்று. .... (க)

என்செய்யதாமரைக்கண் பெருமானார்க்கென்தூதாய் *
என்செய்யுமுரைத்தக்கால் இனக்குயில்காள் நீரலிரே *
முன்செய்தமுழுவினையால் திருவடிக்கீழ்க்குற்றேவல் *
முன்செய்யமுயலாதேன் அகல்வதுவோவிதியினமே. * (உ)

இனம் குயில்காள் கூட்டமான குயில்களே!,
என் என்னுடைய
செய்ய தாமரை கண் { செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடைய
பெருமானார்க்கு எம்பெருமானுக்கு
என் தூது ஆய் நான்விட்ட தூதாகி
உரைத்தக்கால் { சென்று ஸமாசாரமறிவித்தால்
என் செய்யும் { (அந்தச் செயல் உங்களுக்கு) என்ன தீமையை விளைவிக்கும்?

நீர் அலிரே { (நெடுநாளாகப் பழகிப் போந்த) நீங்களல்லீர்களோ?
முன் செய்த முற்பிறப்பில் பண்ணின
முழு வினையால் பெரும்பாவத்தினால்
திரு அடி கீழ் திருவடிகளிலே
குற்றேவல் செய்ய { கைங்கரியம் பண்ணுதற்கு
முன் முயலாதேன் { முன்னம் முயற்சி செய்யாத நான்
இனம் இன்னமும்
அகல்வதுவோ விதி { விலகியிருப்பதேயோ முறைமை?

* * * — [என் செய்யதாமரைக்கண்.] கீழ்ப்பாட்டில் நாரையைத் தூதுபோகுமாறு இரந்த தலைவி, அங்குப்போனால் சொல்லவேண்டிய செய்தியைச் சில குயில்களுக்குச் சொல்லுகின்றாள். ஒருவரையழைத்துவிட்டு மற்றொருவர்க்கு ஸமாசாரஞ் சொல்லுகிறவிதனால் மிக்க கலக்கம் விளங்கும். இத்தகைய கலக்

கத்தை யுண்டுபண்ணுவதேயாயிற்று விஷயாந்தரங்களிற்காட்டில் பகவத் விஷயத்திற்குண்டான ஏற்றம்.

என்செய்ய தாமரைக்கட்பெருமானுர்க்கு=எம்பெருமான் இப்போது உற வறுத்துக்கொண்டு உபேக்ஷித்துப்போயிருக்க இந்த ஸமயத்தில் என் என்று உறவுகொண்டாடிச் சொல்லலாமோ? எனின்; அவன் கூடியிருந்தகாலத்தில் அளவுகடந்த உறவுகொண்டாடி இவளிட்டவழக்காக இருந்ததனுல் பிரிந்தபோதிலுங்கூட உறவு அறுமல் தொடருகிறபடி. அன்றியே, அவன் பிரிகிற ஸமயத்தில் 'எங்குச்செல்லுகின்றீர்? எத்தனைநாளில் திரும்பிவருவீர்?' என்று நாயகி கேட்பளே; அப்போது 'நங்காய்! இந்த வஸ்து எங்குப்போனுலென்ன? எங்கிருந்தாலென்ன? உன்னுடைய சரக்கன்றோவிது' என்று உத்தரங்கூறுவனுகையாலே அதனைநினைந்து சொல்லுகிறபடியாகவுமாம்.

செய்யதாமரைக்கண் பெருமானுர்க்கு=எம்பெருமானுடைய பரத்வத்தை உபபாதிக்கிறவளவிலே ஆளவந்தார் "கஃ வுண்டரீகநயநஃ = கஃ புண்டரீக நயநஃ?" என்று செந்தாமரைக்கண்ணுடைமையை ஒரு லக்ஷணமாக அருளிச் செய்கையாலே இயற்கையாகவே செய்ய தாமரைக்கட்பெருமானுர்; அதற்கு மேலே ஸ்வகீய வஸ்துக்களிடத்துண்டான ப்ரேமத்தாலும் கண் சிவக்கும்; தலைவியோடு கலந்ததனுலுண்டான களிப்பினுலும் சிவக்கும்; பிரிவாற்றுமையாலுஞ் சிவந்திருக்கும்.

பெருமானுக்கு என்னுதே "பெருமானுர்க்கு" என்று பெருமைக்குமேலே யும் ஒரு பெருமையை யேற்றிச் சொல்லியிருப்பது—எம்பெருமான் இயற்கையான ஐச்வர்யத்துக்குமேலே இவள் தன் பக்கலுள்ள செல்வங்களையும் அபஹரித்துப்போனதனுலுண்டான ஐச்வரிய விரட்டிப்பைக் காட்டுதற்கென்ப 1. "நான் மறையின் சொற்பொருளாய் நின்றார் என்மெய்ப்பொருளுங் கொண்டாரே" 2. "ஓ துள்ளுநீர்க் கண்ணபுரந்தொழுதாளிவள் கள்வியோ, கைவளை கொள்வது தக்கதே" இத்யாதி பாசுரங்களினுல் இத்தலையிலுண்டான செல்வங்களைக் கவர்தல் அறிக.

"என் தூதாய்" என்று தன் உடம்பைத் தொட்டுக்காட்டுகிறாள்போலும்; கடலேறி வடிந்தாற்போலேயன்றோ நானிருக்கிறேன்; அவனோடு கலந்து பிரிந்து வெறுந்தரையாயன்றோ நானிருக்கிறேன்; இப்படிப்பட்ட எனக்குத் தூதாய்ச் செல்லுகை தருமமன்றோ என்கிறாள்.

என்செய்யுமுரைத்தக்கால்=எனக்காக அவன் பக்கலிற்சென்று தூதுசொன்னுல் உங்களுக்கு என்ன தீங்குவரும்? 'ஒரு தீங்கும் வாராது என்கிறவளவேயோ? உபயவிபூதியும் உங்களுக்குப்பரிசாகவுங்கிடைக்குமன்றோ' என்பதாகக் கருத்தை விரிக்க. 'உரைத்தக்கால் என் செய்யும்'=எம்பெருமானை இங்கே கொண்டு வந்து சேர்க்கவேணுமென்கிறேனோ? அத்தனை வருத்தம் வேண்டாவே; என் நிலைமையை அங்குச்சென்று அறிவித்தால் போதுமே; இவ்வளவு காரியஞ் செய்தால் என்ன கெடுதியுண்டாமுங்களுக்கு?

1. நாச்சியார் திருமொழி 11—6 2. பெரிய திருமொழி 8—2—1.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இனக்குயில்காள்!=என்னைப்போலே நீங்களும் தனியாயிருக்கவில்லையே; கூடிக்களித்திருக்கின்ற நீங்கள் ஸந்தோஷமாக இது செய்யலாமே யென்றபடி. இங்ஙனஞ் சொல்லியும் அவை கேளாமையாலே நீர் அலிரே என்கிறாள். அல்லீர் என்பது அலிர் என்று தொகுத்தலும் குறுக்கலும் பெற்றுக்கிடக்கிறது. "வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல், விரித்தல் தொகுத்தல் வருஞ் செய்யுள் வேண்டுழி" என்பது நன்னூல். நீர் அல்லீரே?=நீங்கள் நீங்களல்லவோ? அவனும் நானுமாய்க் கூடியிருந்தபோது கேட்ட வார்த்தைகளுக்கெல்லாம் மறுமொழி கூறிக்கொண்டிருந்த நீங்கள் அவன் பிரிந்துபோனவாறே வேறுபட்டீர்களோ?

'ஒரு நொடிப்பொழுது தாமதித்தவளவால் இப்படியுஞ் சொல்லலாமோ? எம்பெருமான் பக்கலில் நாங்கள் சென்று சொல்லவேண்டிய செய்தி என்?' என்று குயில்கள் கேட்டனவாகக்கொண்டு பின்னடிகளில் ஸமாசாரங்கூறுகின்றாள் [முன்செய்த முழுவினையால் இத்யாதி.] அநாதிகாலமாகத் திரட்டின பாபத்தாலே திருவடிவாரத்திலே அந்தரங்க கைங்கரியம்பண்ணுதற்கு ஏற்கவே முயலப்பெறாத நான் அகன்றுபோக வேண்டுவதேயோவென்று கேளுங்கோளென்கிறாள். முன்—எனக்குத் தெரியாத காலம் முதலாக என்றபடி. செய்த—பாவஞ்செய்யவேணுமென்று நினைத்தமாத்திரமேயன்று, செய்துமுடிக்கவும் பட்டதென்கை. முழுவினையால்—செய்யநினைத்த பாவங்களில் சில செய்து சில விட்டமையுண்டோ? குறையற முழுதுஞ்செய்தற்ற தென்றவாறு.

முழுவினையென்றவிடத்திற்கு ஒரு ஐதிஹ்யங்காட்டியருளுகிறார் நம்பிள்ளை;—பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருந்தகாலத்து அங்குத் தெற்காழ்வானென்றும் கோளரியாழ்வானென்றும் இரண்டுபேர்களுண்டு; அவர்களில் கோளரியாழ்வான் நற்குணநல்லொழுக்கங்களுடையவன்; தெற்காழ்வான் ஸாமாந்யனுயிருப்பன். இவ்விருவரும் ஒரு விசேஷதிவஸத்தில் ஒன்று சேர்ந்தார்கள். கோளரியாழ்வான் தெற்காழ்வானை நோக்கி 'அப்பா! இன்று புண்ய தினமாயிற்றே, இன்றாகிலும் ஒரு முழுக்கிடமாட்டாயோ?' என்றானும்; அது கேட்ட தெற்காழ்வான் 'முழுக்கிடவேணுமென விதிக்கின்ற உன்னுடைய அபிப்ராயம் என்னுடைய பாவங்கள் இந்த முழுக்கினால் சில தொலையக்கூடுமென்பது தானே; அந்தோ! என்னுடைய பாபம் (திருக்கோட்டியூர்) ஸௌம்ய நாராயணப் பெருமாளுடைய திருக்கையில் திருவாழியாலே போக்கினால் போகுமேயல்லது ஒன்றிரண்டு முழுக்கால் போகக்கூடியதன்றுகாண்' என்றானும். அந்த வார்த்தை பட்டருடைய திருச்செவியிலே விழுந்தவளவில் 'ஆ! ஆ!! எவ்வளவு ஆஸ்திகனுயிருந்தால் இந்தவார்த்தை சொல்லமுடியும்; இவனை மேலெழுந்தவாரியாகப் பார்த்து நாஸ்திகனென்று நினைத்திருந்தோமே, இவ்வளவு பேசும் பரிபாகமுடையவனு இவன்!' என்று மிகவும் ஈடுபட்டாராம்.

நம்முடைய உபாயவிசேஷங்களால் போக்கிக்கொள்ள முடியாமல் எம்பெருமானே அநுக்ரஹஸங்கல்பத்தினால் போக்கவேண்டிய முழுவினை என்பதற்காக இவ்வைதிஹ்யம் இங்குக் காட்டப்பட்டது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருவடிக்கீழ்க் குற்றேவல்=இப்போது ஆழ்வார் தாமான தன்மையில் இல்லை; நாயகி ஸமாதியிலே நின்றிருக்கிறார். இந்த நிலைமையில் "கொம்மை முலைகளி டர் தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல்" என்ற ஆண்டாளைப்போலே 'முலையால ணைக்க' என்று சொல்லவேண்டியிருந்தும் 'திருவடிவாரத்திலே அந்தரங்ககைங் கரியம்பண்ண' என்று சொல்லுகிற அழகுகாண்மின். இங்கே நம்பிள்ளையீடு:— "ப்ராஹ்மணர் பிச்சேறினாலும் ஒத்துச் சொல்லுமாபோலே இவர் பிராட்டியானா லும் முலையாலணைக்க நினையார்; திருவடிகளிலே அணையத்தேடுமத்தனை."—வேத மோதின அந்தணனுக்குப் பைத்தியம் பிடித்தாலும் வேதாத்யயனமே சொல் லித் திரிதல்போல ஆழ்வாருக்கு நிலைமைமாறினாலும் பாசுரம் பேசும் முறைமை மாத்திரம் மாறவில்லையென்றபடி. "தேறியுந் தேறாதும் மாயோன் திறத்தனளே யித்திருவே" என்பதும் இங்கு அநுஸந்திக்கவுரியது.

குற்றேவல் முன்செய்ய முயலாதேன் அகல்வதுவோ விதியினமே=திருவடி களின்கீழ திருமுன்பேயிருந்து அடிமை செய்தற்கு உறுப்பாயிருப்பதொரு ஸாதநாநுஷ்டானம் என்தலையால் பண்ணாத நான் திருவடியைவிட்டு விலகியே போமித்தனையோ? என்கிறாள். இன்னம் என்பது இனம் என்று தொக்கிக் கிடப்பதாகக்கொண்டு, "இன்னம் அகல்வதுவோ விதி?"=என்கையிலே ஒன்று மின்றியே அவன் கையையே எதிர்பார்த்திருக்குமிந்த நிலைமையிலும் இழப்ப துண்டோ? என்பதாகப் பொருள்காண்க. "விதியினனே" என்றும் ஒரு பாட முண்டாம்: அப்போது, விதியினன்—பாபத்தையுடையேனான நான், அகல் வதுவோ? என்றுரைப்பது.

இப் பாட்டில் குயிலென்றதற்கு ஸ்வாபதேசம் வருமாறு:— 1. "மாம் பொழில் தளிர்கோதிய மடக்குயில் வாயது துவர்ப்புஎய்தத், தீம்பலங்கனித் தேனதுநுகர்" என்றவிடத்து, மாஞ்சோலையிலே போய்ப்புகுந்து அங்குள்ள தளிர்களைத் தின்ற குயில் வாய் துவர்ப்புடைத்துபோக, அத் துவர்ப்பை வேறு ரஸத்தாலேமாற்றவேண்டி இனிய பலாப்பழத்திலே சென்று வாய்வைக்கிறபடி யைச் சொலுகிறவிதனால்,- துவர்ப்பான விஷயாந்தரங்களில் நின்றும் இனிமை யான பகவத்விஷயத்திலே அவகாஹித்து ரஸித்திருக்கின்றமை விவக்ஷிதம். 2. "புன்னைமேலுறை பூங்குயில்காள்" 3. "புன்னை குருக்கத்திஞாழல் செருந்திப் பொதும்பினில் வாழுங்குயிலே" என்ற விடங்களில் புன்னைமாத்தைக் குயில் களுக்கு உறைவிடமாகச் சொல்லுகிறவிதனால் — "ஸ்ரீரங்கராஜகரநிர்மித ஸாவிகாஹ்: ருக்ஷ்யா ஸ்வஹஸ்தகலித ச்ரவணாவதம்ஸ:| வாஹாம ஸாமஜஸஜஸஹஸ்ர மீதி லோகோத்திவ்யநிஜஸௌரபஹாஸநாஸ: = ஸ்ரீரங்கராஜகரநிர்மிதசாகிகாப்யஃ லக்ஷ்ம்யா ஸ்வஹஸ்தகலித ச்ரவணவதம்ஸம், புந்நாகதல்லஜமஜஸ்ரஸஹஸ்ரகீதி லேகோத்ததிவ்யநிஜஸௌரபமாமநாம:" [ஸ்ரீ ரங்கராஜஸ்தவம்] என்று பட்டரருளிச்செய்யும்படி திருவாய்மொழியின் ரஸமு

1. பெரிய திருமொழி 5-3-4.
2. திருவாய்மொழி 6-1-6.
3. நாச்சியார் திருமொழி 5-1.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



விசேஷார்த்தங்கள் கேட்டு வளர்ந்தமை
தின கோயிற் புன்னைமரத்தின் கீழமர்ந்து
விவக்ஷிதம். குயிலுக்கு வடமொழியில் பரப்ருதம் [பரப்ருதம்] என்று பெயர்;
பிறரால் வளர்க்கப்படுவது என்று பொருள்; குயில்களின் வழக்கம் இதுவே
யென்பது ப்ரஸித்தம்; அதுபோல, ஆசாரியர்களுடையவும் பாகவதர்களுடைய
வும் அபிமாநத்திலொதுங்கி அவர்களால் வளர்க்கப்படுகின்றமை விவக்ஷிதம்.
இன்னமும், "வஸந்தகாலே ஸம்ப்ராப்தே காக: காக: பிக: பிக: =
வஸந்தகாலே ஸம்ப்ராப்தே காக: காக: பிக: பிக:," என்கிறபடியே சிலகால
விசேஷங்களில் குயில் தன் மிடற்றோசைகாட்டி வீறுபெறும்; அதுபோல,
ஆசிரியர்களும் ஸமயவிசேஷங்களிலே கம்பீரமாக வாய்விட்டு உபந்யஸித்து
மற்றையாரிற்காட்டில் தமது வைலக்ஷண்யத்தை விளக்குவர்கள். இங்ஙனே
மற்றும் பலவகைப் பொருத்தங்களுங் காண்க. .... .... .... (உ)

விதியினால்பெடைமணக்கும் மென்னடையவன்னங்காள் *
மதியினால்குறள்மாணாய் உலகிரந்தகள்வர்க்கு *
மதியிலேன்வல்வினையே மாளாதோவென்று * ஒருத்தி
மதியெலாமுள்கலங்கி மயங்குமாலென்னீரே. * (௩)

| | | | |
|---|---|---|---|
| விதியினால் | பாக்யவசத்தினால் | மதியிலேன் | புத்தியில்லாத என்னுடைய |
| பெடை மணக்கும் | பேடையோடுகூடிக் களித்திருக்கின்ற | வல் வினையே யோமாளாது | பெரிய பாவந்தானோ முடியாதிருப்பது ! |
| மெல் நடைய | மெல்லிய நடையையுடைய | என்று | என்று சொல்லி, |
| அன்னங்காள் | அன்னப்பறவைகளே ! | ஒருத்தி | ஒரு பெண்ணானவள் |
| மதியினால் | புத்தியினால் | மதி எல்லாம் உள் கலங்கி | புத்திமுழுதும் அடிமண்டியோடே கலங்கப்பெற்று |
| குறள் மாண் ஆய் | வாமந ப்ரம்மசாரியாய் | மயங்கும் | அறிவழிந்து கிடக்கின்றாள்; |
| உலகு இரந்த | உலகங்களை யாசித்த | ஆல் | அந்தோ ! |
| கள்வர்க்கு | கபடமுடைய பெருமானுக்கு, | என்னீர் | என்று சொல்லுங்கோள் |

* * * — [விதியினால் பெடைமணக்கும்.] கீழ்ப்பாட்டில் "முன்செய்த முழு
வினையால் திருவடிக்கீழ்க் குற்றேவல், முன்செய்ய முயலாதேன் அகல்வதுவோ
விதியினமே" என்றதற்குமேல், 'ஆழ்வீர் ! இங்ஙனஞ் சொல்வது தகாது,
செய்த பாபம் அநுபவித்தே தீரவேண்டுங்காணும்' என்று எம்பெருமான் திரு
வுள்ளமாகக்கூடுமென்று கருதி, 'நான் பண்ணின பாபமேயோ அநுபவித்தாலும்
மாளாதது? என்று சொல்லுங்கோள்' என்று சில அன்னங்களைக் குறித்துச்
சொல்லுகிற பாசுரம் இது.

விதியினால் பெடைமணக்கும் மென்னடைய வன்னங்காள் = அன்னத்தை
விளிக்கும்போதே தனது நிர்வேதமெல்லாம் விளங்க விளிக்கின்றாள்; * "தைவம்
திஷ்டம் பாகதேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி: = தைவம் திஷ்டம் பாக
தேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி:" என்ற அமரகோசத்தின்படியே விதி
யென்று பாக்யமாய், உங்களுடைய பாக்கியமே பாக்கியம் ! என்னைப்போலே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பிரிந்து வருந்தாதே கூடிக்களித்திருக்கின்றீர்களே! என்பதாம். அன்றியே, என்னுடைய பாக்கியத்தாலன்றோ நீங்கள் பிரிவுறாதே கூடியிருக்கிறது என்கிறுளாகவுமாம். அவையும் இவளைப்போலே பிரிவாற்றாமை கொண்டிருந்தால் தனக்குக் காரியஞ் செய்யும்படி வேண்டிக்கொள்ள ப்ரஸக்தியேயிராதன்றோ.

இனி, விதியென்று சாஸ்திரவிதியாய், நீங்கள் சாஸ்திரப்படியே மணந்து கொண்டதனாலன்றோ பிரிவுத்துயரம் விளையப்பெறாமலிருக்கின்றீர்கள்; நான் அப்படியன்றியே காந்தர்வ விவாஹம்போல் மனப்பாங்கினால் கூடினபடியாலன்றோ இப்போது இங்ஙனம் பிரிவாற்றாமையெய்திப் பரிதபிக்கின்றேன் என்பதாகவு முரைப்பர். இப்பொருள்களெல்லாவற்றினும், 'என்னுடைய பாக்கியத்தினால்' என்னும் பொருளே சிறக்கும். இதற்குச்சேர நம்பிள்ளையீடு காண்மின்;— "பெருமாள் பிராட்டியைப் பிரிந்து கடலும் மலையும் அரித்துக்கொண்டு வாராநிற்கச்செய்தே ராஜ்யதாரங்களை யிழந்துகிடந்த மஹாராஜரைக்கண்டு அவர் குறையைத் தீர்த்தபின்பிறே தம்மிழவில் நெஞ்சு சென்றது: அங்ஙனன்றிக்கே, இப்போது இவை குறைவற்றிருக்கிற விதுதான் இவள் பாக்யமாயிருக்குமிறே."

மதியினால் குறள்மாணாய் உலகிரந்த கள்வற்கு = தூது செல்லவேண்டுமிடத்தை நிரூபிக்கின்றாள்; தனது தலைவன் மஹாபுத்திமான் என்று கொண்டாடுகின்றாள். "ஸ்ம்ருதிவ்யதீதவிஷயா மதிராகாமிகோசரா | புத்திஸ் தாத்காலிகீ ப்ரோக்தா ப்ரஜ்ஞா த்ரைகாலிகீ மதா = ஸ்ம்ருதிர் வ்யதீத விஷயா மதிராகாமி கோசரா, புத்திஸ் தாத்காலிகீ ப்ரோக்தா ப்ராஜ்ஞா த்ரைகாலிகீ மதா." [கீழே கழிந்துபோன விஷயத்தைப்பற்றின வுணர்வு ஸ்மிருதி என்றும், மேலே வரப்போகிற விஷயத்தைப்பற்றின வுணர்வு மதி யென்றும், அப்போதைக்கப்போது நடக்கவேண்டிய விஷயங்களைப்பற்றின உணர்வு புத்தி யென்றும், முக்காலத்து விஷயங்களையும் பற்றினவுணர்வு ப்ரஜ்ஞை யென்றுஞ் சொல்லப்படும்.] என்கிறபடியே, மேல்வருவதைத் தெரிந்துகொண்டு அதற்கு இணங்கக் காரியஞ் செய்யவல்ல சாதுரியமே மதி யெனப்படுதலால், அப்படிப்பட்ட சாதுரியத்தினால் மாண்குறள் கோலவடிவு காட்டி யாசகனாயினான் என்கிறது. மாவலியினிடத்தில் யாசகனாகச் சென்றாலல்லது நமது காரியம் நிறைவேறாதென்று சூதறிந்து செய்தவனென்கை. மாவலியோ இராவணனைப்போலே தலையறுத்துவிடவேண்டும்படியான குற்றமொன்றும் செய்திலன்; கேட்பார் கேட்பதெல்லாங்கொடுக்கிறதென்கிற ஔதார்யவிரதமும் ஏற்றுக்கொண்டிராநின்றான்; இந்திரனோ ராஜ்யங்களை இழந்து பல்காட்டி நிற்கின்றான்; இந்த நிலைமையில் என்ன செய்யலாமென்றுபார்த்து, தனது * அலம்புரிந்த நெடுந்தடக்கையைக் கொண்டு யாசகஞ்செய்து காரியம் நிறைவேற்றிக்கொண்ட சதுரன். "ஔதார்யஸ்ருஷ்டயா ஜ்ஞாவிஹதிவை நயது வாமனோ யஜ்ஞ ஸுவர்ணஸீ: = ஔதார்யேந்த்ராயாச்ஞாவிஹதிமபநயந் வாமநோர்த்தீ த்வமாஸீ:." என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ - உத்தரசதக ஸ்ரீஸூக்தியிலும் இப்பொருள் போலியும். அப்படி மஹாபலி பக்கலில் யாசகஞ் செய்ததும் அக்குணத்தில் ஈடு



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



படுத்தி என்னை இப்பாடு படுத்துவதற்காகவே என்னுங்கருத்தை * மதியினால் * கள்வர்க்கு * என்ற பதங்களிற் காண்க.

கள்வர்க்கு = இங்குக் கள்வமாவது முதலில் சிறிய வடிவைக்காட்டிப் பிறகு பெரிய வடிவான வஞ்சகம் என்று திருமாலையாண்டான் கூறுவராம்; எம்பெருமானார் நிர்வஹிப்பதாவது — ஒன்றை நினைத்து ஒன்றைச்செய்த மாயமே இங்குக் கள்வம் என்றும். மஹாபலியை வஞ்சித்ததும் அந்தச் செயலாலே என்னை வசப்படுத்திக்கொள்வதற்காக வென்றபடி. 1. "முன்னங் குறளுருவாய் மூவடிமண் கொண்டளந்த, மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன்பயந்தேன்" என்றார் திருமங்கையாழ்வாரும்.

தலைவன் பிரிந்துபோம்போது அங்ஙனம் போகவொண்ணாதபடி வளைத்துத் தடுத்து நிறுத்திக்கொள்ளமாற்போனேனே! மதிகேடியானேனே! என்னும் பரிதாபத்தை மதியிலேன் என்ற சொல்லால் விளக்குகின்றாள். [வல்வினையே மாளாதோ] வல்வினையேயோ மாளாது என இயைக்க. 2. "யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேப்யநாச்யம் தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே = யத் ப்ரஹ்மகல்பநியுதாநுபவேபி அநாச்யம் தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே." [லக்ஷக்கணக்கான ப்ரஹ்ம கல்பங்களில் ஜனனமெடுத்துப் பலாநுபவம் பண்ணினாலும் தீராத பாபங்களை அரைநொடிப் பொழுதில் சேதநவர்க்கங்கள் செய்கின்றன] என்கிறபடியே அளவில்லாத பாபங்களை அநவரதமும் செய்கின்ற ஜனங்கள் நிறைந்த இவ்வுலகின்கண் நானொருத்திசெய்த பாவந்தானா அநுபவித்தும் மாளாதது? என்று கேளுங்கோளென்கிறாள்.

அவரைக் கேட்கவேண்டிய கேள்வி கிடக்கட்டும்; அவரிடத்துச் சொல்லவேண்டிய ஸமாசாரமென்ன? என்று கேட்க, ஒருத்தி மதியெல்லாமுள்கலங்கி மயங்குமாலென்னீரே என்கிறாள். ஒருத்தி அறிவழிந்து வருந்திக்கிடக்கின்றாளென்று சொல்லுங்கோளென்கிறாள். ஒருத்தி யென்றால் தெரியுமோ? இன்னாளென்று குறிப்பிடவேண்டாவோ வென்னில்; வேண்டா; ஒருத்தி யென்றபோதே அவன் தானே பராங்குசநாயகி யென்று தெரிந்துகொள்ளத்தட்டில்லை. இங்ஙனே மதியெல்லா முள்கலங்கி மயங்கும்படியாகத் தன்னால் செய்துவைக்கப் பட்டவள் இந்நிலத்தில் பராங்குசநாயகி யொருத்தி தவிர வேறு யாருமில்லை யாதலால் விசேஷித்துச் சொல்லவேண்டிய அவசியமில்லை யென்க. இங்கே நம்பிள்ளையீடு:— "ஒருத்தி யென்றால் அறியுமோவென்னில், எய்தவன் கை உணராதோ? இன்ன காட்டிலே மான் பேடை ஏவுடனே கிடந்து உழையாநின்றதென்று ஊரிலே வார்த்தையானால் எய்தவன் கை உணராதோ? 'நீயன்றோ எய்தாய்' என்று சொல்லவேண்டாவிறே."

ஒருத்தி = அத்விதீயை; தன்னோடு ஒரு கோர்வையாக விரல் மடக்குவதற்கு வேறொரு வ்யக்தியில்லாமே தனித்து நிற்பவளென்கை. [மதியெல்லாம்

1. பெரிய திருமொழி 9-4-2. 2. ஸ்ரீவைகுண்டஸ்தவம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

இத்யாதி.] ஒருத்தி அறிவு கலங்கினாளென்னுங்கோள்; அது கேட்ட எம்பெருமான் 'தன்னதான அறிவு கலங்கப்பெற்றாலும் நாம் கொடுத்த அறிவு இருக்குமே; அதுகொண்டு ஆறியிருப்பள்' என்பன்; அப்போது 'மதியெல்லாம் கலங்கிற்று' என்னுங்கோள்! அதுகேட்ட எம்பெருமான் 'நாம் கொடுத்த அறிவு அப்படி கலங்கிவிடாது; கலங்கினாலும் மேலெழச் சிறிது கலங்குமே யல்லது உள்ளே கம்பீரமாகவே யிருக்கும்' என்பன்; அப்போது மதியெல்லா முள்கலங்கிற்று என்னுங்கோள். அதுகேட்ட எம்பெருமான் 'எல்லாம் உள்கலங்கிப் போனாலென்ன ? நாம் இருக்கிறோமே; பின்பு நாம் அணுகும்போது அறிவு கொடுத்துக்கொள்ளுகிறோம்' என்பன்; அப்போது 'மயங்குமால்' என்று சொல்லுங்கோள்; அதாவது — முடியுந்தருணமாயிற்று என்று சொல்லுங்கோள் என்கை. மயங்கினாள் என்று முடிந்ததாகவே சொல்லிவிட்டால், 'அப்படியா? முடிந்துபோய்விட்டாளா? இனிப்போய் நாம் என்செய்வது?' என்று சொல்லி ஒரு முழுக்குப்போட்டுவிட்டு நிற்பன்; அப்படியன்றியே அரைகுலையத் தலைகுலைய ஆனைக்கு உதவ ஓடிவந்தாற்போலே கடுக ஓடிவரும்படியாகச் சிறிது பசை யிருப்பதாய்ச் சொல்லுங்கோள் என்கிறாளாயிற்று.

ஹம்ஸத்திற்கு ஸ்வாபதேசம் ஆசார்யஹ்ருதயத்தில் —

"விவேகமுகாய் நூலுரைத்து அள்ளலில் ரதியின்றி அணங்கின் நடையைப் பின்சென்று குடைநீழலிலே கவரியசையச் சங்கமவை முரல வரிவண்டிசைபாட மாநஸ பத்மாஸநத்திலே யிருந்து விதியினை விடரிலந்தரமின்றி யின்பம்படக் குடிச்சீர்மையிலேயாதல் பற்றற்ற பரமஹம்ஸராதலான நயாசலன் மெய்ந்நாவன் நாதயாமுநர்போல் வாரை அன்னமென்னும்."

என்றருளிச் செய்யப்பட்டுளது. இதன் கருத்தாவது — நீரையும் பாலையும் கலந்துவைத்தால் அவற்றைப் பிரிக்க வல்லமையுடையது ஹம்ஸம்; இதனால், ஸாராஸாரங்களும் அஸாரங்களும் கலந்த கட்டியாயிருக்கின்ற சாஸ்திரங்களில் ஸாரங்களைப் பகுத்தறியுந்தன்மை விவக்ஷிதம். * அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த * அன்னமாய் நூல்பயந்தான் * என்கிறபடியே வேத சாஸ்திரங்களை வெளியிட்டது பகவதவதாரமான ஹம்ஸம். அதுபோலே, சிஷ்யர்களைக் குறித்து சாஸ்திரங்களை உபதேசிக்குந்தன்மை விவக்ஷிதம். * ந வஸ்ஸாதி ரதிம் ஹம்ஸ: க்ஷாவிஸ க்ஷ-ஜாஞவஸி * ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்த்தமாம்பஸி * [ஹம்ஸமானது சேற்று நிலத்தில் ஒருபோதும் மனம்பொருந்தியிருக்கமாட்டாது.] என்கிறபடியே ஹம்ஸம் சேற்றில் பொருந்தாது. அதுபோலே 1. "மாறன் விண்ணப்பஞ்செய்த சொல்லார் தொடையலிந்நூறும் வல்லார் - பிறப்பாம் பொல்லாவருவினை மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே அழுந்தார்" என்கிறபடியே ஸம்ஸாரமாகிற சேற்று நிலத்தில் பொருந்தமாட்டாததன்மை விவக்ஷிதம். 2. * பெடையோடு அன்னம் பெய்வளையார்தம்பின்

---

1. திருவிருத்தம் — 100.
2. பெரிய திருமொழி 6-5-5.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சென்று * என்கிறபடியே ஹம்ஸமானது மாதர்களின் நடையழகைக்கண்டு தானும் அப்படி நடக்கைக்காகப் பின்செல்லும். அதுபோலே, 1. * அன்ன நடைய அணங்கு * என்று அன்னநடையை யுடையவளாகச் சொல்லப்பட்ட பிராட்டியினுடைய நடையாகிய புருஷகாரத்வமும் அநந்யார்ஹ சேஷத்வம் முதலானவைகளுமாகிறவற்றை அநுகரித்திருக்குந்தன்மை விவக்ஷிதம். 2. * அன்னமென்கமலத்தணிமலர்ப்பீடத்தலைபுனலிலைக்குடைநீழல், செங்நெலொண்கவரியசைய வீற்றிருக்கும் * 3. * சங்கமவைமுரலச் செங்கமலமலரையேறி * 4. * வரிவண்டிசைபாட அன்னம் பெடையோடுடனாடும் * என்னு மிப்பாசுரங்களில் ஹம்ஸமானது, (க) மேலேயெழுந்த தாமரையிலையைக் குடையாகவும் (உ) பக்குவமான செங்நெற்பயிர் அசைந்தாடுவதைச் சாமரம் வீசுதலாகவும் (ங) சங்குகளின் முழக்கத்தை விஜயகோஷமாகவும் (ச) வண்டுகளின் மிடற்றோசையைப் பாட்டாகவுங்கொண்டு (ரு) [மாநஸ] ஸரஸ்ஸிலுள்ள தாமரையையே ஆஸநமாக வீற்றிருக்குமென்று சொல்லப்படுகிறது. இதனால் 5. * (க) அக்கமலத்திலைபோலுந் திருமேனியடிகள் * என்று தாமரையிலைபோற் சாமளமான பகவானது திருமேனியைத் தமக்கு ஸம்ஸாரதாபஹரமாகவும் (உ) செங்நெற்பயிர்போலே * "அஹமம்நமஹமம்நமஹமம்நம்" என்னும்படி பரிபக்குவஜ்ஞானமுடையவர்கள் அநுகூலவ்ருத்தி செய்யவும் (ங) சங்குபோலே சுத்த ஸ்வபாவமுடையவர்கள் தோத்திரஞ்செய்யவும், (ச) வண்டுபோலே ஸாரக்ராஹிகளாயிருப்பார் ஸாமகானம் பண்ணவும் பெற்று (ரு) "குருபாதாம்புஜம் த்யாயேத்" என்கிறபடியே ஆசார்யர் திருவடியிணையை எப்போதும் நெஞ்சுக்குள்ளே கொண்டிருக்கும் சிஷ்யர்களுடையதாயும் பிரம குருவுக்கு இருப்பிடமானதாயுமுள்ள * போதிற்கமலவன்னெஞ்சம் * என்கிற மாநஸபத்மத்தை வாஸஸ்தானமாகவுடையராயிருக்குந்தன்மை விவக்ஷிதம். * விதியினால் பெடைமணக்கும் மென்னடையவன்னங்காள் ! * என்றவிதனால் சாஸ்திரமுறைப்படி க்ருஹஸ்தாச்ரமத்திலிருக்குந்தன்மை விவக்ஷிதம். 6. * இடரில் போகம் மூழ்கியிணைந்தாடும் மடவன்னங்காள் * என்றவிதனால் [இடர் இல்லாத போகமாகிய] ஸம்ஸார ஸம்பந்தமான தாபமொன்றும் தட்டாத பகவதநுபவம் விவக்ஷிதம். 7. * அந்தரமொன்றுமின்றி அலர்மேலசையுமன்னங்காள் ! * என்றவிதனால் இடையூறொன்றுமில்லாமல் எம்பெருமானது பாதாரவிந்தத்தின்மீது பொருந்தியிருக்குந்தன்மை விவக்ஷிதம். 8. * தடம்புனல்வாய் இரைதேர்ந்து மிகவின்பம்படமேவும் மென்னடையவன்னங்காள் ! * என்றவிதனால் ஸதாசார்யத்துறைகளில் போக்யமான நல்ல அர்த்தங்களைப்பெற்று ஆனந்திக்குந்தன்மை விவக்ஷிதம். 9. * குடிச்சீர்மையிலன்னங்களே ! * என்றவிதனால் நல்ல குலத்திற் பிறப்புடைமை விவக்ஷிதம். இங்ஙனே மற்றும் உவமைப் பொருத்தங்கள் காண்க. ... (ங)

---

1. பெரிய திருமடல். 2. பெரிய திருமொழி 9-1-5.
3. பெரிய திருமொழி 7-8-2 4. ஷை 7-5-9.
5. திருவாய்மொழி 9-5-3. 6 திருவாய்மொழி 6-1-4.
7. ஷை 6-8-10. 8. ஷை 9-5-10.
9. திருவிருத்தம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்னீர்மைகண்டிரங்கி இதுதகாதென்னாத *
என்னீலமுகில்வண்ணர்க்கு என்சொல்லியான்சொல்லுகேனோ *
நன்னீர்மையினியவர்கண் தங்காதென்றொருவாய்ச்சொல் *
நன்னீலமகன்றில்காள் நல்குதிரோ நல்கீரோ. * (௬)

| பதம் | பொருள் |
|---|---|
| என் நீர்மை கண்டு | எனது ஸ்வபாவத்தை (நேரில்) பார்த்திருந்தும் |
| இரங்கி | (பிரிவுகாலத்தில்) மனமிரங்கி |
| இது தகாது என்னாத | இப்படி நாம் பிரிந்திருப்பது தகுதியன்று என்னாத |
| என் நீல முகில் வண்ணர்க்கு | நீலமேகத்தின் நிறம்போன்ற நிறமுடையனான எம்பெருமானுக்கு |
| என் சொல்லி | என்ன வார்த்தையைச் சொல்லி |
| யான் சொல்லுகேனோ | நான் சொல்லப்போகிறேன் !; |
| இனி | இனிமேல் |
| அவர் கண் | (பராங்குசநாயகியாகிய) அவளிடத்தில் |
| நல் நீர்மை | நல்லுயிர் |
| தங்காது | தங்கியிருக்கமாட்டாது |
| என்று ஒரு வாய் சொல் | என்றொருவாய்ச் சொல்லை |
| நல் நீலம் மகன்றில்காள் | நல்ல நீலநிறமான மகன்றிற் பறவைகளே ! |
| நல்குதிரோ நல்கீரோ | (எம்பெருமானிடத்துச் சென்று) சொல்லுவீர்களோ மாட்டீர்களோ ? |

* * * — [என்னீர்மைகண்டிரங்கி.] பராங்குசநாயகி பல பறவைகளை விளித்துச் சொல்லிக்கொண்டிருப்பதைக்கண்ட சில மகன்றில் பறவைகள் 'நமக்கும் கைங்கரியம் செய்யச் சிறிது அவகாசம் நேர்ந்தது' என்று மகிழ்ந்து அருகே வந்து 'எங்களுக்கு ஏதேனும் நியமனமுண்டோ ?' என்று கேட்பனபோல நிற்க, அவற்றைக்கண்டு, 'அந்தோ ! எனது நிலைமையைப் பலகாலும் கண்டுவைத்தும் இரங்காதே போனவர்க்கு நான் என்ன ஸமாசாரம் சொல்லியனுப்புவது ?' என்று நசையற்றவளாய், பின்னையும் வெறுமனிருக்கமாட்டாமையினாலே, 'மகன்றில்களே ! என்னிலைமையை அவர்க்குச் சொல்லுவீர்களோ ? மாட்டீர்களோ ?' என்கிறாள்.

பிரிவில் தரிக்கமாட்டாத என்னுடைய ஸ்வபாவத்தை நன்றாகக் கண்டு வைத்தும் 'ஐயோ ! இப்படிப்பட்டவளையோ விட்டுப்பிரிவது !, ஒருகாலும் பிரியத்தகாது' என்றிராத என்னீலமுகில்வண்ணர்க்கு என்ன ஸமாசாரம் சொல்லுவேனென்கிறாள் முன்னடிகளில். முற்காலத்தில் ஒரு தமிழன் பட்டரிடத்தில் வந்து இப்பாட்டின் முதலடியில் ஒரு ஆக்ஷேபம் செய்தானாம்; அதாவது — இது பிரிந்திருக்கும் நிலைமையில் சொல்லுகிற பாசுரமேயன்றிக் கூடியிருக்கும் நிலைமையிற் சொல்லுகிற பாசுரமன்றே; பிரிந்திருக்குங்காலத்தில் தலைவியின் தன்மைகளைத் தலைமகன் பிறர்சொல்லக் காதால் கேட்கலாகுமே தவிரக் கண்ணால் நேரில் காண முடியாதன்றோ; ஆகவே, "என்னீர்மை கேட்டிரங்கி யிது தகாதென்னாத" என்று பாசுரமிருக்கவேண்டியது உசிதமாயிருக்க, "என்னீர்மை கண்டிரங்கி" என்று எப்படிச் சொல்லலாம் ? என்று பூர்வபக்ஷம் செய்தானாம். பட்டர் அதைக்கேட்டு, 'பண்டிதரே ! நன்கு கேட்டீர்; * புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேனவ்வளவில், அள்ளிக்கொள்வற்றே சப்பு. *

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்ற திருக்குறளும், * ஊருண்கேணியுண்டுறைத் தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே * என்ற குறுந்தொகைச் செய்யுளும் உமக்குத் தெரியாதுபோலும்' என்று சொல்லி அவற்றைப் பரக்க உபந்யஸித்து ஸமாதானப்படுத்தியருளினராம். (ஸமாதான விவரணம் வருமாறு:—)

* புல்லிக்கிடந்தேன் * என்ற குறள் திருக்குறளில் பசப்புறு பருவரல் என்னுமதிகாரத்தில் ஏழாவதாகும். இது நாயகியின் பேச்சு; முன்பொரு நாள் நான் காதலரை அழுந்தத் தழுவிக்கிடந்தேன்; கை மாறுவதற்காகச் சிறிது புடைபெயர்ந்தேன்; ஒரு நொடிப்பொழுது விலகினமாத்திரத்திலும் பசலைநிறம் வந்து உடம்பெல்லாம் மூடிக்கொண்டது என்பது இதன் கருத்து. * ஊருண் கேணி * என்ற செய்யுள் குறுந்தொகையில் முந்நூற்றுத் தொண்ணூற்றொன்பதாவது. இதன் கருத்தாவது — ஊரிலுள்ள ஜனங்களாலே நீருண்ணப்பெறுகிற கேணியினுள்ளே படர்ந்துகிடக்கும் பாசிபோன்றது பசலை நிறம்; தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கைபட்டவிடங்களில் பாசி நீங்கும்; கையை எடுத்துவிட்டோமாகில் அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும்; அதுபோல, கணவனுடைய கைபடுமிடங்களில் பசலைநிறம் நீங்கும்; அணைத்தகை நெகிழ்த்தவாறே அப்பசலை நிறம் படரும்; ஆதலால் பாசிபோன்றது பசலைநிறம் என்றபடி. (தோவேழித்தோவேழி—தொட்டவிடங்கள்தோறும். விடுவேழிவிடுவேழி—விட்டவிடங்கள்தோறும். பரத்தலான்—வியாபிக்கிறபடியினாலே.) பிரிவாற்றாமையினால் ஸ்த்ரீகளின் மேனியில் தோன்றும் நிறவேறுபாடு பசலைநிறமெனப்படும். நாயகனைவிட்டுப் பிரிந்தகாலத்திலே நாயகியினுடலில் இந்த நிறவேறுபாடு தோன்றுவது ஆச்சரியமல்ல; ஒரு படுக்கையிலேயே படுத்துக் கூடியிருக்கும்போதே க்ஷணகாலம் கைநெகிழ்ந்தவளவில் இந்தப் பசலைநிறம் படர்கின்றதென்றால் பிரிந்த நிலைமையிற் கேட்கவேண்டியதில்லையன்றோ.

பட்டரிடத்தில் ஆக்ஷேபம் செய்த தமிழனுக்கு இப்போது என்ன ஸமாதானமாயிற்றென்னில், இப்பாட்டு பிரிவுகாலத்திற் சொல்லுவதானாலும் கூடியிருந்த காலத்தில் நிகழ்ந்த ஸம்பவத்தையே நினைப்பூட்டுவதாதலால் கேட்டிரங்கி என்னவேண்டியதில்லை; கண்டிரங்கி என்றே சொல்லத்தகும் என்றதாயிற்று.

என் நீலமுகில்வண்ணர்க்கு—என்னோடு முன்பு கலந்ததனாலே மேனி நிறம் பெற்றவர்க்கு என்றபடி. எம்பெருமான் இயற்கையிலேயே நீலமுகில்வண்ணனாயிருந்தாலும் அன்பர்களோடு கலக்கப்பெறுதவளவில் வைவர்ணியமடைந்தேயிருப்பனென்க. 'என்னைவிட்டுப் பிரிந்தபின்பும் குறியழியாதே நீலமுகில் வண்ணராயேயிருக்கின்றவர்க்கு' என்று உரைக்கவுமாம். இப்போதும் அவர் நீலமுகில்வண்ணராயே யிருப்பது இவளுக்கு எங்ஙனே தெரியுமென்னில்; வைவர்ணியமடைந்திருப்பானாகில் பதறி ஓடிவரமாட்டானோ? அங்ஙனம் வாராமையினாலே அவர்க்குப் பிரிவாற்றாமையுமில்லை, அதனாலாகக்கூடிய வைவர்ணியமுமில்லை என்று அறுதியிடத் தட்டில்லையே.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



**என் சொல்லி யான் சொல்லுகேனே?** = என்ன பாசுரத்தையிட்டு எதை உங்களுக்கு நான் சொல்லிவிடுவது? நான் சொல்லியனுப்பவேண்டும்படியாக இருக்கிறவரோ உங்கள் வார்த்தைகேட்டு வரப்போகிறார்? என்று நசையற்றுக் கையொழிந்தவள் பின்னையும் நப்பாசையினால் ஒன்று சொல்லத் தொடங்குகின்றாள்.

கண்ணபிரான் கோபிமார்களைவிட்டுப் பிரிந்து மதுரைக்குச் சென்று பல நாள்வரையில் மீண்டுவாராதே அவ்விடத்தே தாமதித்திருக்க, 'ஆய்ச்சிகள் மிகவும் ரோஷங்கொண்டிருப்பர்களாதலால் இப்போது முந்துற நாம் நேரில் செல்லலாகாது; நம்பிமூத்தபிரானை [பலராமனை] அனுப்பிச் சிறிது சீற்றமாற்றிப் பிறகு செல்வோம்' என்று கருதின கண்ணபிரான் அப்படியே பலராமனைத் திருவாய்ப்பாடிக்கு அனுப்ப, அவனும் வந்து சேர்ந்தவளவிலே சில ஆய்ச்சிகள் பெரும்பசியன் சோற்றைக்கண்டு பதறுமாபோலே பதறி அவனருகிற்சென்று ப்ரணய ரோஷத்தையும் மறந்து கண்ணபிரானைப் பற்றி விசாரித்து உடனே * 𑌅𑌥𑌵𑌾 𑌕𑌿𑌂 𑌤𑌦𑌾𑌲𑌾𑌪𑍈𑌃 𑌕𑍍𑌰𑌿𑌯𑌨𑍍𑌤𑌾𑌮𑌪𑌰𑌾𑌃 𑌕𑌥𑌾𑌃 = அதவா கிம் ததாலாபை: க்ரியந்தாமபரா: கதா: * என்று அந்த க்ருஷ்ணனைப்பற்றின பேச்சு நமக்கு ஏதுக்கு? அதைவிட்டுத்தொலையுங்கள்; வேறுபேச்சு ஏதாகிலும் எடுப்பது நல்லது என்று ஆசைவிட்டமை தோன்றச் சொன்னவர்கள் உடனே * 𑌅𑌪𑍍𑌯𑌸𑍌 𑌮𑌾𑌤𑌰𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌂 𑌸𑌕𑍃𑌦𑌪𑍍𑌯𑌾𑌗𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ='அப்ய ஸௌ மாதரம் த்ரஷ்டும் ஸக்ருதப்யாகமிஷ்யதி * என்று நப்பாசை தோற்றப் பேசினார்கள், அதாவது — க்ருஷ்ணன் நமக்காக இங்கே வாரானாகிலும் பெற்ற தாயைக்காணவேண்டியாகிலும் ஒருகால் வாராமற் போவானோ? என்றார்கள். அவர்களுக்குப் போலவே பராங்குசநாயகிக்கும் நப்பாசை பின்னாட்டுகிறபடி.

**தலைவனுக்குச் சொல்லியனுப்புகிற செய்தி யாதெனில்; நன்னீர்மை இனி அவர்கண்தங்காது** = நன்னீர்மையாவது நல்லுயிர்; இது இன்றளவும் ஒருவாறு தங்கியிருந்தாலும் இனி ஒரு நொடிப்பொழுதும் தங்காதென்று சொல்லவேணுமென்கிறாள். அசோகவனத்தில் வந்து முகங்காட்டின அனுமானைப் பிராட்டி கண்ட பிறகு ஸ்ரீராமபிரான் பக்கல் ப்ரணயரோஷத்தாலே 'அவரனுப்பின ஆளன்றோ இவன்' என்று சீறிச் சிலவார்த்தை அருளிச்செய்ய, அதற்கு அனுமான் ஸீதே! பெருமாள் தேவரீருடைய போக்கிடமறியாம லிருந்தாரித்தனையல்லது அன்பு குறையப்பெற்றாரென்பதுண்டோ? நீர் இங்ஙனே இலங்கையிலிருக்கிறீர் என்றறிந்த பின்பு இனித்தாமதித்தாராகிலன்றோ அவர்மேல் குற்றஞ் சொல்லலாம்' என்று பிராட்டியின் ரோஷம் ஆறும்படிச் சில வார்த்தை விண்ணப்பஞ்செய்து, அவ்வளவோடு நில்லாமல் 'நீரும் பெருமாளைப் பிரிந்து பத்துமாஸ காலமாகத் தரித்திருப்பதுண்டே; பெருமாள்மீது நீர் ஏறிட்டுச் சொல்லுங் குற்றம் உம்மிடத்திலும் உள்ளதன்றோ' என்று தான் கருதியிருப்பதாகக்காட்ட, அதற்குப் பிராட்டி சொன்னாள் — 'ஓ ராமதூதனே! இப்படியோ நீ நினைத்திருக்கிறாய்? நாட்டார்க்குத் தாய் என்றும் தந்தை யென்றும் உற்றாரென்றும் உறவினரென்றும் ப்ரீதிக்குப் போக்கிடம் பலதலைத்திருக்கையாலே அவர்களு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



டைய ஸ்நேஹம் எங்கும் பரவிப்பாய்ந்திருக்கும்; பெருமாள் அப்படியல்லாமல் எல்லார் பக்கலிலும் பண்ணக்கூடிய ஸ்நேஹத்தை என்னொருத்தி பக்கலிலே ஒருமடையாகச் செய்துவைக்கையாலே சிறிது தாமதித்தாகிலும் கடலை அணை செய்து விரோதிகளையும் தொலைத்து அளவுகடந்த ஆவலோடே வருவது தவிர மாட்டார்; வந்தேதீருவர்; வெய்யிலில் அடிபட்டவன் பெருவிடாய்ப்பட்டுத் தண்ணீர்ப்பந்தலண்டை வந்து சேர்ந்தவாறே தண்ணீர்ச்சால் உருண்டு கிடந்தால் ஐயோவென்று உயிர் துறக்குமாபோலே அவர் பெருமுயற்சிகள் செய்து இங்குவந்து சேர்ந்தவாறே நான் முடிந்துகிடந்தேனாகில் பின்னை அவர் பிழைக்கும் வகையுண்டோ? உலகமெல்லாம் அநாதமாய்விடுமன்றோ? அங்ஙனமாகாமற் பொருட்டு அவர்க்காக என்னுயிரைக் காத்துக்கொண்டிருக்கிறேன்காண் §' என்றாளாம். அப்படியே இப்பராங்குசநாயகியும் 'அவரைவிட்டுப் பிரிந்தவன்றே என்னுயிரை நான் மாய்த்துக்கொண்டிருக்கவேணும்; அப்படியானால் அவர் முடிந்திடுவரோ, உலகு அநீச்வரமாகுமோ! என நினைத்தே இதுவரை ஒருவாறு உயிர்தரித்திருந்தேன் என்பதான கருத்தை உள்ளடக்கி, இனித் தரிக்கும் விரகு இல்லாமையாலே முடிந்தேபோமித்தனை யென்கிறாள்.

ஒருவாய்ச்சொல்= * "வாசா தர்மமவாப்நுஹி = வாசா தர்மமவாப் நுஹி" என்று பிராட்டி அநுமனை நோக்கிச்சொன்ன சொல்லின்பொருள் இதில் உறையும். [மகன்றில்—ஓர் பக்ஷிவிசேஷம். "அன்றிலிலே ஓர் அவாந்தரபேதம்" என்று ஆசார்யஹ்ருதய வியாக்யானத்திலுள்ளது. கணவனைப் பிரிந்தவாறே கதறியழுது உயிர்துறப்பது அன்றில்; அதுபோலே எம்பெருமானுடைய விச்லேஷத்தில் உயிர்மாயுமளவான நிலைமையைப்பெறும் ஆசிரியர் ஸ்வாபதேசத்தில் விவக்ஷிதர்கள்.]

"ஒருவாய்ச்சொல் நல்கவேணும்" என்னாதே "நல்குதிரோ நல்கீரோ" என்றது ஆற்றாமையின் கனம். .... .... .... .... (௪)

நல்கித்தான்காத்தளிக்கும் பொழிலேழும்வினையேற்கே *
நல்கத்தானாகாதோ நாரணனைக்கண்டக்கால் *
மல்குநீர்ப்புனற்படப்பை இரைதேர்வண்சிறுகுருகே *
மல்குநீர்க்கண்ணேற்கு ஓர்வாசகங்கொண்டருளாயே * (௫)

| | | | |
|---|---|---|---|
| மல்கு | நிறைந்த | படப்பை | பூந்தோட்டங்களிலே |
| நீர் | { ஸீர்ச்சியாகிய ஸ்வபாவத்தையுடைய | இரை தேர் | இரை தேடுகின்ற |
| புனல் | நீர்வாய்ந்த | வண் சிறு குருகே | { அழகிய சிறிய குருகே!, |

§ ஸ்ரீராமாயணம் ஸுந்தரகாண்டம் (36—30) "நசாஸ்ய மாதா ந பிதா நசாந்ய: ஸ்நேஹாத் விசிஷ்டோஸ்தி மயா ஸமோ வா । தாவத்த்வஹம் தூத! ஜிஜீவிஷேயம் யாவத் ப்ரவ்ருத்திம் ச்ருணுயாம் ப்ரியஸ்ய ॥" என்ற ச்லோகத்திற்கு இன்சுவைமிக்க நம்பிள்ளை வியாக்கியானம் காண்க. [5—4—3.]

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| தான் நல்கி | தானே அநுக்ரஹித்து |
| காத்து | அபிஷ்டங்களையெல்லாம் போக்கி |
| பொழில் ஏழும் | ஏழுலகங்களையும் |
| அளிக்கும் | ரக்ஷித்துக்கொண் டிருக்கின்றானெம்பெருமான்; (அப்படிப்பட்ட அவன்) |
| வினையேற்கே யோ நல்கத் தான் ஆகாது | பாபியான எனக்குமாத்திமேயோ தான் கிருபை பண்ணலாகாது; |
| நாரணனை | (அந்த) நாராயணனை |
| கண்டக்கால் | கண்டபொழுதில், |
| மல்கும் நீர் கண்ணேற்கு | நீர்நிறைந்த கண்களையுடைய [அழுகண்ணியான] எனக்கு |
| ஓர் வாசகம் கொண்டு | (அப் பெருமானிடத்தில் நின்று) ஒரு வார்த்தையைக் கொணர்ந்து |
| அருளாய் | கிருபைபண்ணவேணும். |

* * * — [நல்கித்தான்] நான் எக்கேடாவது கெட்டுப்போகிறேன்; நாராயணனென்றும் ஸகலலோக ஸம்ரக்ஷகனென்றும் விருதுசுமக்கின்ற அவர்க்கு ஒரு கெடுதல் இல்லாமலிருக்கவேண்டுமே; என்னொருத்தியை ரக்ஷியாமையினாலே, அவர் படைத்த பெயரெல்லாம் மழுங்கிப்போகுமன்றோ; அங்ஙனம் போகாமே நோக்கிக்கொள்ளும்படி சொல்லவேணுமென்று ஒரு குருகைநோக்கி இரக்கின்றாள்.

ஒருவருடைய அபேக்ஷையையும் எதிர்பாராமல் உலகங்களுக்கெல்லாம் அபீஷ்டங்களை அளிக்கின்றாரே; அப்படிப்பட்டவர் பாவியான எனக்குத் தானோ உதவலாகாது, அவர் நாராயணரன்றோ. நாரபதத்தின் அர்த்தத்தில் நான் சேர்ந்தவளல்லேனோ? என்னைவிட்டால் அவர்க்கு நாராயணத்வம் எங்ஙனே நிரம்பும்? என்ற கருத்து உள்ளுறையும்.

பொழிலேழும் = ஏழுதீவுகளையுடைத்தான பூமியென்றபடியாய், இவ் விபூதியைச் சொன்னது நித்யவிபூதிக்கும் உபலக்ஷணமாய், ஆக உபயவிபூதியையும் தன்பேறாக நிர்வஹித்துக்கொண்டு போருகிறவர் என்றதாயிற்று.

வினையேற்கே நல்கத்தானாகாதோ?=கடலில் ஏற்றமிட்டுத் தண்ணீர் ஆய் விட்டது என்னும்படி நேர்ந்தால் மஹாபாபந்தவிர வேறொன்றும் காரணமாகச் சொல்லலாவதில்லை; அதுபோலே, ஸர்வரக்ஷகனுக்கு வாழ்க்கைப்பட்ட நான் பிரிவாற்றாமையுற்றுக் கிடக்கிறேனென்றால் வல்வினையேயன்றோ இதற்குக் காரணம் என்கிறாள்போலும். இங்கே நம்பிள்ளையீடு காண்மின்;—"இல்லாதவன்று உண்டாக்கினாய்; உண்டாக்கினதுக்கு பலம் கர்மத்தையேறிட்டுக் கைவிடுகையோ? ஸர்வஜநரக்ஷணம் பண்ணுகிறவர் ஸ்வஜநரக்ஷணம் பண்ணலாகாதோ? நாட்டுக்கிட்ட நினைப்பு அந்தஃபுரத்துக்கு அரிதாகவேணுமோ? கடலிலே ஏற்றமிட்டுத் தண்ணீர் அரிதாம்படியான பாபத்தைப் பண்ணுவேனோ?"

நாரணனைக்கண்டக்கால்=நாராயணன் என்ற சொல் நாரணனென்று சிதைந்து கிடக்கிறது; பொருள் ஒன்றே. நாரபதப்பொருளான ஸகல சேதநங்களுக்கும் தான் இருப்பிடமாய் அவற்றையும் தான் இருப்பிடமாகவுடையனாயிருக்கும் பெருமானன்றோ அவர்; இவற்றிலே ஒன்று குறைந்தாலும் தமக்கு இழவாம்படி யிருப்பவரன்றோ அவர். கள்ளிச்செடிக்கு மஹாவ்ருக்ஷமென்று



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பேர் இருப்பதுபோலே வெறும் ரூடியாகவோ அவர்க்கு இந்தத் திருநாமம் ஏற்பட்டது? திருநாமத்திற்கு அர்த்தபுஷ்டி இல்லையோவென்று கேளுங்கோள் என்பது உட்கருத்து.

மல்குநீர்ப்புனல் படப்பை இரைதேர்வண் சிறுகுருகே!— நீர்நிறைந்திருக்கும்படியான கொடித்தோட்டங்களிலே இரைதேடுகின்ற குருகே! என்றதனால், தேடுகின்ற இரை தனக்காகவன்றியே தன் குட்டிக்காக என்பது விளங்கும். தனக்காகவாகில் இரைதேடவேவேண்டா; பெருப்பெருத்தகயல்கள் அங்குத் ததும்பிக்கிடக்குமாகையாலே கொள்ளைகொள்ளையாகக் கிடைக்கும்போது ஏதுக்குத்தேடவேண்டும்? குட்டிகளுக்காகத் தேடவேண்டுமோவென்னில்; பெருத்த கயல்கள் குட்டிகளின் வாய்க்கு அடங்கமாட்டாவாகையாலே சிறியன பார்த்துத் தேடவேண்டுமே.

பெரிய திருமொழியில் (5-2-1) "பள்ளச்சேறுவில் கயலுகளப் பழனக் கழனியதனுட்போய்ப், புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும் புள்ளம் பூதங்குடிதானே" என்றொரு பாசுரமுள்ளது. முற்காலத்தில், ஆலவாயுடையான் என்பானொரு தமிழன் பட்டரிடம் வந்து இப்பாட்டில் ஒரு கேள்வி கேட்டான்;—பள்ளச் சேறுவில் கயலுகள' என்றபோதே அவ்விடத்து வயல்களில் மீன்கள் அளவற்றுக்கிடக்கின்றமை வெளிவந்துவிட்டது; அப்படியிருக்க, ஈற்றடியில் "புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடும்" என்று எங்ஙனே சொல்லலாம்? மீன் அருமைப்பட்டிருந்தாலன்றோ இரைதேடவேண்டும்; கொள்வார் தேட்டமாம்படி குறையற்றுக்கிடக்கும்போது தேடிப்பிடிப்பதாகச்சொல்வது பொருந்ாதன்றோ? என்று கேட்டான்;—இதற்கு பட்டர் அருளிச்செய்ததாவது, பிள்ளாய்! நீ கற்றவனுபினும் சொற்போக்கு அறிந்திலை; பிள்ளைக்கு இரை தேடும் என்றுள்ளது காண்; அங்குள்ள மீன்கள் நிலமிதியாலே தூணும் துலாமும்போலே தடித்திருக்கும்; அவை பறவைக் குட்டிகளின் வாய்க்குப் பிடிக்கமாட்டாவாகையால் உரிய சிறுமீன்கள் தேடிப்பிடிக்கவேண்டுமெத்தனையன்றோ? என்றாராம், அஃது இங்கு நினைக்கத்தக்கது. தம் பக்கல் அர்த்தம் கேட்கிற சிஷ்யர்களின் யோக்யதைக்குத்தக்கவாறு அவர்கள் க்ரஹிக்கக்கூடிய அர்த்தங்களை சாஸ்திரங்களிலிருந்து கண்டுபிடித்து உசிதமாக உபதேசிக்கிற ஆசிரியர்கள் ஸ்வாபதேசத்தில் விவக்ஷிதர்கள்.

மல்குநீர்க்கண்ணேற்கு=எப்போதும் நீர் வெள்ளமிட்டுக்கொண்டே யிருக்கின்ற கண்களையுடையளான எனக்கு என்றபடி. ஆழ்வார்க்குக் கண்ணீரே நிருபகம்போலும்; கூடியிருக்குங்காலத்திலோ ஆனந்தக்கண்ணநீர்; பிரிந்திருக்குங்காலத்திலோ சோகக்கண்ணீர்.

ஓர்வாசகங்கொண்டு=உண்டு இல்லையென்பவற்றில் ஏதேனுமொரு ஸமாசாரத்தைக் கொண்டுவந்தாலும் போதுமென்கிறாள்போலும். எம்பெருமான் பக்கலிலிருந்து கிடைக்கும் ஸமாசாரம் எதுவானாலும் போக்யமாமிவர்கட்கு. அருளாய் என்று கௌரவந் தோற்றச் சொன்னதனால், பகவத் விஷயத்தை உப

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கரிப்பவர்கள் எந்தச்சாதியரானாலும் விஷய வைலக்ஷண்யமே காரணமாக மரியாதை செய்யத்தக்கவர் என்பது பெறுவிக்கப்படுகின்றதென்ப. பட்டர் காலத்தில் 'நம்பி ஏறுதிருவுடையான்' என்று ஒரு சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர் இருந்தார்; அவர் பரமபதிக்க அந்தச் செய்தியைப் பட்டர் ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்யவந்தவர் 'ஏறு திருவுடையதாஸர் திருநாட்டுக்கு நடந்தார்' என்றாராம்; பட்டர் அதைக்கேட்டு 'அந்தோ ! அவருடைய பெருமைக்குத் தக்கவாறு 'திருநாட்டுக்கெழுந்தருளினார்' என்ன வேண்டாவா ?' என்றருளிச்செய்தாராம். ... .... .... .... .... .... (ரு)

அருளாதநீரருளி அவராவிதுவராமுன் *
அருளாழிப்புள்கடவீர் அவர்வீதியொருநாளென்று *
அருளாழியம்மானைக் கண்டக்காலிதுசொல்லி
யருள் * ஆழிவரிவண்டே யாமுமென்பிழைத்தோமே. * (சு)

| | |
|---|---|
| ஆழி வரி வண்டே | வட்டமான ரேகைகளையுடைய வண்டே ! |
| அருள் ஆழி அம்மானை | அருட்கடலான எம்பெருமானை |
| கண்டக்கால் | காணும்பொழுது, (அவரைநோக்கி) |
| அருளாத நீர் | '(இவ்வளவில்) கிருபை பண்ணாத நீர் |
| அருளி | கிருபைபண்ணி |
| அவர் ஆவி துவரா முன் | அவருடைய [ஆழ்வாருடைய] உயிர் நீர்மைகெடுவதற்கு முன்னே |
| அருள் ஆழி புள் | கருணைக்கடலான பெரிய திருவடியை |
| அவர் வீதி | அவரிருக்கிற வீதியில் |
| ஒரு நாள் | ஒருநாளாயினும் |
| கடவீர் என்று | நடத்துவீராக" என்று |
| இது சொல்லி | இந்த வார்த்தையைச் சொல்லி |
| அருள் | கிருபைபண்ணவேணும்; |
| யாமும் | நாமும் |
| என் பிழைத்தோம் | என்ன குற்றம் செய்தோம் ? |

* * * — [அருளாதநீரருளி.] என்னுடைய வருத்தத்தைப் பரிஹரியாதொழிந்தாலும், தம்முடைய நாராயணத்வத்தையாவது காப்பாற்றிக்கொள்ளச் சொல்லவேணுமென்கிறாள் கீழ்ப்பாட்டில்; இதற்கு எம்பெருமான் 'நம்முடைய நாராயணத்வம் தொலைந்தாலும் தொலையட்டும்; ஒருவிதத்திலும் நமக்கு ஈடல்லாத இந்தப் பராங்குசநாயகியோடு கலந்து அவத்யம் பெறுவதிற்காட்டிலும் நாராயணத்வம் அழிய நிற்பதே அமையும்' என்று திருவுள்ளமாகக் கூடுமென்று கருதிய தலைவி, அவருக்கும் அவத்யம்வராமல் எனக்கும் ஸத்தை கிடக்கும்படியாக ஒரு வழியுண்டு; தாம் திருவீதி உலாவப்புறப்படுதல், ஆனைக்கு அருள் செய்யப்புறப்படுதல், என்றிப்படிச் சில யாத்திரைகள் செய்வதுண்டே; அப்படி ஏதேனுமொரு வியாஜங்கொண்டு எங்கள் தெருவேபோனால் தமக்கும் அவத்யம் வாராது, நானும் சாலகவாசல்பற்றி நோக்கி ஜீவிப்பேன்; இதை அவர்க்குச் சொல்லாய் என்று ஒருவண்டை இரக்கிறாள்.

"அருளாத நீரருளி அவராவி துவராமுன் அருளாழிப் புட்கடவீர் அவர் வீதியொருநாள்" என்னுமளவும் எம்பெருமானிடத்தில் வண்டு சொல்ல வேண்டிய வார்த்தை. பரமதயாளுவென்று பேர்பெற்றிருக்கின்ற எம்பெரு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மானை 'அருளாத நீர்' என்பது என்ன ஆற்ருமையின் கனத்திஞலோ, அறியோம். “ஸுஹயஂஸவ-ுஹ-௵தெஹெ௱ ஊௗ௰ வஊதஅ௲தம ௨௨ = அபயம் ஸர்வ பூதேப்யோ ததாமி ஏதத்வ்ரதம் மம.” என்று உலகுக்கெல்லாம் அருள்செய்ய தீக்ஷைபண்ணிக்கொண்டிருக்கிறவர் தன் விஷயத்தில் மாத்திரம் அருளாமைக்கு தீக்ஷைபண்ணிக்கொண்டிருப்பதாகப் பராங்குச நாயகியின் கருத்துப்போலும். இங்கே நம்பிள்ளையீடு;—“மயர்வற மதிநலம் அருளினன் என்று நெஞ்சுருகிக் கிடக்குமிவர் அருளாத நீர் என்கிறது என்னதசாவிசேஷமென்றறிகிறிலோம்; 'அருளாத நீர்' என்று ஒரு திருநாமம் சாற்றுகிருள்” என்பதாம்.

“அருளாதநீர் அருளி' என்பதற்கு மற்ருெருவகையாகவும் பொருள் கொள்ளலாம்; அருளாத—அருளுக்கு விஷயம் [இலக்குப்] பெருத என்றபடி. இந்த விபூதியிலே * உண்டியே உடையே உகந்தோடுமவர்களே மலிந்திருப்பத ஞல் அவர்கள் உம்முடைய அருளை வேண்டுவாரன்றே; நானொருத்தியே யன்றே உமது அருளை வேண்டுபவள்; ஆகையாலே, வேறிடத்திலே அருளுக்கு அவகாசம் பெருத நீர் அதனை என் திறத்திலே செய்யவேணுமென்றவாறு.

அவராவி துவராமுன்=என்றேனுமொருநாள் நீர் அருள் செய்யவேபோகி நீர்; ஆனுல், ஆவி போனபின்பு வீணுக அருள் செய்வதிற்காட்டிலும் முந்துற முன்னமே அது செய்வது நலமென்க. “ஜீவந்தீஂ ஊஂ யயா ஈாஃ ஸஂஹாவயதி கீதி-ுஊாநு | தஐ ஃவயா ஹநூஊநு வாவெ௱ வாவா யஊ-ு ஊவாவு-ஹி = ஜீவந்தீம் மாம் யதா ராமஃ ஸம்பாவயதி கீர்த்திமாந் - தத் த்வயா ஹநுமந் வாச்யஃ வாசா தர்மமவாப்நுஹி.” என்ற ஸ்ரீராமாயண ச்லோகத்தின் விசேஷார்த்தம் இங்கு நினைக்கத்தக்கது. இது பிராட்டி அனுமானைக் குறித்துச் சொன்ன ச்லோகம்: இதற்கு மேலெழுந்தவாரியாய்ச் சிலர் பொருள் கூறுவர் — அவரைப் பிரிந்த பின்பு நான் மரணமடைந்துவிட்டதாக அவர் நினைத்து வாளா இருக்கக்கூடும்; அப்படி நான் மரணமடையவில்லை, இன்னமும் பிழைத்தே யிருக்கின்றேனென்று அவர் தெரிந்துகொள்ளுமாறு நீ தெரிவிக்க வேணும் — என்று பிராட்டி அனுமனிடம் சொல்லியனுப்புவதாகச் சொல்லுவர்கள். இது உசிதமான பொருளன்று. உத்தம நாயக நாயகிகளின் தன்மை எப்படிப்பட்டதென்றல், இருவரில் ஒருவருடைய உயிர்போயிற்றென்றல் அப்போதே மற்றொருவருடைய உயிரும் ஒழிந்தே தீரும்; நாயகன் தான் ஜீவித்திருந்தால் நாயகியும் ஏதோ வோரிடத்தில் ஜீவித்துத்தானிருக்கிருளென்று நிச்சயித்துக் கொள்ளலாம். அப்படியே நாயகி தான் ஜீவித்திருந்தால் நாயகனும் ஏதோவோரிடத்தில் ஜீவித்துத்தானிருக்கிருனென்று நிச்சயித்துக்கொள்ளலாம்: ஒருவரையொழிய ஒருவர் ஜீவித்திருக்கமாட்டாரென்பது கொள்கை. இவ்விஷயம் இராமபிரானுக்கும் தெரியுமாகையாலே அவன் தான் ஜீவித்திருக்கும்போது பிராட்டியும் ஜீவித்தே யிருக்கின்ருளென்று திடமாகத் தெரிந்துகொள்ள இடமுண்டாதலால் 'நான் ஜீவித்திருப்பதாகச் சொல்' என்று பிராட்டி தெரிவிக்கத் தேவையில்லையன்றே. ஆதலால் இது பொருளன்று. பின்னை ஏதென்னில்; [ஈாஃ ஜீவந்தீஂ ஊஂ யயா ஸஂஹாவயதி, தயா வாவ௱ஃ] இங்கே ஸம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பரிவன்றியாவது க்ருபைபண்ணுதல்; அவர் எனக்கு என்றேனுமொருநாள் அருள் செய்யவே போகிறார்; ஆனால் நான் உயிரோடிருக்கும்போதே அந்த அருளைச் செய்தாலன்றோ அது நிறம்பெறும்; நான் முடிந்த பிறகு யார் நிறத்து அருள் செய்வது? அது பழுதாகாமே நான் ஜீவித்திருக்கும்போதே அருள் செய்யச் சொல்லாய் என்பதே உசிதமானபொருள். அங்ஙனமே இங்கும் அவராவி துவரா முன் எனப்பட்டதென்க.

அங்குப்போய் விண்ணப்பஞ்செய்தால் உடனே அவர் இங்கு வந்து சேருமாறு அவரைக் கொணர்தற்குக் கருடாழ்வான் அருகேயுளன் என்று அவனை நினைப்பூட்டுகின்றாள் அருளாழிப்புள் என்று. கீழ் முதற்பாட்டில் வெஞ்சிறைப்புள் என்று வெவ்விதாகச்சொன்ன வாயினால் இங்கு அருளாழிப்புள் என்று கொண்டாடிச் சொல்லுகிறாள். அருள்கூர்ந்து அக் கருடனே எழுந்தருளப்பண்ணிக் கொண்டுவரவேணுமென்று.

அவர்வீதி ஒருநாள் கடவீர்=பராங்குசநாயகி இருக்கிற வீதிவழியாகக் கருடனை ஒருநாள் செலுத்தவேணுமென்று சொல்லவேணுமென்கிறாள். அப்படி ஒரு வீதிவழியாகச் சென்றால் யாரேனும் பார்த்து ஏதேனும் சங்கை கொள்ள மாட்டார்களோவென்னும் வார்த்தைக்கு இடமறும்படி ஒருநாள் எனப்பட்டது. ஒருநாள் எழுந்தருளினால் இவளுடைய ஆசை தணிந்துவிடுமோ வெனில்; பெருவிடாய்ப்பட்டவர் 'துளி நாக்கு நனைக்கத் தண்ணீர் தந்தால் போதும்' என்னுமாபோலே சொல்லுகிறபடி.

அருளாழியம்மானை=ஆழியென்று கடலுக்கும் சக்கரத்துக்கும் பெயராதலால் அவ்விருபொருளும் இங்கு ஏற்கும்; அருளுக்குக் கடல்போன்றவம்மான் என்றாவது, அருள்மிகுந்த திருவாழியாழ்வானைப் படையாகவுடைய அம்மான் என்றாவது பொருள்காண்க. கண்டக்கால் என்றதனால் காட்சியின் அருமை கூறியவாறு. என்னைப்போலே இரங்குதற்குரியார் அவர்க்கு எத்தனையோ பேர்கள் உண்டே; யாரையேனும் கடாக்ஷிக்க எங்கேனும் எழுந்தருளியிருந்தால் காணக்கிடையாரே; ஒருகால் என் அத்ருஷ்டவசத்தினால் காணப்பெறின் என்றபடி.

இதுசொல்லியருள்='அருளாழிப் புட்கடவீர் அவர் வீதியொருநாள்' என்கிற வார்த்தையைச் சொல்லியருளவேணும். 'சொல்' என்னாதே 'சொல்லியருள்' என்று கௌரவந்தோற்றக்கூறினது, ஸ்வாபதேசத்தில் ஆசார்யரே விவக்ஷிதர் என்பதை விளக்குதற்கென்ப.

ஆழிவரிவண்டே!=கம்பீரத்தன்மையும் அழகும் பொருந்தியவண்டே! என்றவாறு. வண்டுக்கு ஸ்வாபதேசம் ஆசார்யஹ்ருதயத்தில்—

''என் பெறுதியென்ன ப்ரமியாது உள்ளத்துாறிய மதுவ்ரதமாய்த் தூமது வாய்கள் கொண்டு குழல்வாய்வகுளத்தின் ஸாரம் க்ரஹித்துத் தேதெனவென்று ஆளம் வைத்துச் சிறுகாலெல்லியம்போது குமிஞ்சி மருள்காமரம் கந்தாரம் தலைக்கொள்ளப்பாடித் துன்னிட்டு செருக்க

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நீக்கென்று கடந்துபுகுந்து தகைவறப்புக்கு வண்டொத்திருண்ட குழலிலே சங்கையறமருவி அருளாத யாமென்றேடிவந்து வாசமே யூதி வண்டேகரியான தெய்வவண்டோடே சேர்விக்கும் சேமமுடை நாரதன் முநிவாஹநர் தம்பிரான்மார்போல்வாரை வண்டுதும்பியென்னும்."

என்றுரைக்கப்பட்டது. வண்டு மதுவ்ரதமென்று பெயர் பெற்றிருக்கும்; தேன்தவிர வேறொன்றைக் கொள்ளாது என்றபடி. அதுபோல, (1) 'உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்தூறிய தேன்" என்று தேனாகச் சொல்லப்பட்ட பகவத்விஷயத்தை விரும்பி (2) "தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி | ஸ்திதே அரவிந்தே மகரந்தநிர்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே = தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி · ஸ்திதே அரவிந்தே மகரந்தநிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே" என்கிறபடியே மற்றொன்றைத் திரும்பிப்பாராமல் இதனை அநுபவிப்பதையே விரதமாகக் கொண்டிருக்குந்தன்மை விவக்ஷிதம். இங்ஙனமே மற்றுங்காண்க.

யாமும் என்பிழைத்தோமே=எம்பெருமான் இப்படி உபேக்ஷிக்கும்படி என்னபாவம் பண்ணினேம்!; அவரைப்பிரிந்து ஆறியிருக்கமாட்டாதே துவள்கின்றவிதனைப் பிழையாக நினைத்தாரோ? என்னைப்போலே ஒருத்தியான ஸீதாபிராட்டியைப் பிரிந்தகாலத்து உண்ணாது உறங்காது வானரத்தின்வாயில் தூது மொழிந்து இப்படியெல்லாம் துவண்டவர்தாமாயிருக்க, அந்தத் துவட்சியையெல்லாம் இப்போது நான் அடைந்துகிடப்பது பிழையாயிற்றுப்போலும்....(கூ)

என்பிழைகோப்பதுபோலப் பனிவாடையீர்கின்ற *
என்பிழையேநினைந்தருளி அருளாததிருமாலார்க்கு *
என்பிழைத்தாள்திருவடியின் தகவினுக்கென்றேருவாய்சொல் *
என்பிழைக்குமிளங்கிளியே யான்வளர்த்தநீயலையே. * (எ)

| | |
|---|---|
| என்பு | எலும்பிலே |
| இழை | நுலிழைநுழைய |
| கோப்பது போல | நுழைத்தாற்போல |
| பனி வாடை | குளிர்ச்சிபொருந்திய வாடைக்காற்று |
| ஈர்கின்ற | வருத்துகின்றது; |
| என் | (இப்படி வருத்தப்படுகின்ற) என்னுடைய |
| பிழையே | குற்றங்களையே |
| நினைந்தருளி | எண்ணி |
| அருளாத | கிருபைபண்ணாமலிருக்கிற |

| | |
|---|---|
| திரு மாலார்க்கு | லக்ஷ்மீநாதனுக்கு [லக்ஷ்மீநாதனிடம் சென்று] |
| திருவடியின் | "ஸ்வாமியான தேவரீருடைய |
| தகவினுக்கு | கிருபைக்கு (பாங்காகும்படி) |
| என் பிழைத் தாள் என்று | (பராங்குசநாயகி) என்ன பிழைசெய்து விட்டாள்" என்று |
| ஒரு வாய் | ஒரு வார்த்தை |
| சொல் | சொல்லவேணும்; |

(1) பெரியதிருமொழி 4—3—9 (2) ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| என்பு | எலும்பை | யான் வளர்த்த நீ அலையே | நான்வளர்த்த நீ அல்லையோ? [வேறுபட்டாயோ?] |
| இழைக்கும் | செதுக்குகிற | | |
| இள கிளியே | கிளிப்பிள்ளாய்! | | |

* * * [என்பிழை கோப்பதுபோல.] இத்திருவாய்மொழிக்கு இப்பாட்டு உயிர் நிலையாயிருக்கும். பிழைகளைப்பொறுத்தருளுந் தன்மையாகிற அபராத ஸஹத்வமென்னுங்குணம் பற்றாசாகத் தூதுவிடுகிறாளென்று அவதாரிகையிற் கூறினது இப்பாட்டைக் கணிசித்தேயாம். பிழைகளை அளவின்றிச்செய்துவைத்து 'அருளாழிப்புட்கடவீரவர்வீதி யொருநாள்' என்றால் இது எப்படி ஸாத்யமாகும்? என்று எம்பெருமானுக்குக் கருத்தாகக் கூடுமென்று நினைத்த பராங்குசநாயகி, 'எங்கள் குற்றத்தைமாத்திரமேயோ பார்ப்பது, குற்றங்களைப் பொறுத்தருள்பவர் என்று அவர்தாம் விருது பெற்றிருக்கின்றாரே, அதனைச்சிறிது பார்க்க வேண்டாவோவென்று சொல்' என்று தன் கிளியை இரக்கின்றாள்.

என்பு இழைகோப்பதுபோலப் பனிவாடை ஈர்கின்ற=எலும்பிலே துளைத்து நூலைக்கோத்தால் எவ்வளவு ஹிம்ஸையாயிருக்குமோ, அவ்வளவு ஹிம்ஸையைச் செய்கின்றது இந்தக் குளிர்காற்று என்றபடி. எலும்பின் ஸ்தானத்திலே தனது சரீரமும் நூலின் ஸ்தானத்திலே காற்றும் ஆகும். இதனால், இப்போது தனது சரீரம எலும்பும் நரம்புமேயாம்படி மிகவும் மெலிந்துபோயிற்றென்பதும் ஸூசிப்பிக்கப்பட்டதாகும். 'ஈர்கின்றது' என்னும் வினைமுற்று ஈறுகெட்டு 'ஈர்கின்ற' என்றிருக்கின்றது. இனி, வினைமுற்றாகக் கொள்ளாமல் மேலடியின் முதலிலுள்ள என் என்பதற்கு அடைமொழியாகக்கொண்டு 'பனிவாடையினாலே ஹிம்ஸிக்கப்படுகின்ற என்னுடைய' என்றுரைத்தலுமொன்று.

என்பிழையே நினைந்தருளி=எனது பிழைகளை மாத்திரம் நினைந்தாரேயல்லது, பிழைபொறுக்கவல்ல தமது க்ஷமாகுணத்தை நினைந்தாரில்லையே, அதனை மறந்தாப்போலே எனது பிழைகளையும் மறந்தாலாகாதோ? "நினைந்தருளி" என்றது உபசார வழக்கு: வெறுத்துரைக்கச்செய்தேயும் கௌரவச்சொல் தவிரலாகாதே.

அருளாத திருமாலார்க்கு=பிழையுடையார் பக்கலிலே அருள் செய்யாவிடின் இவர் எங்ஙனம் திருமாலாக இருக்கமுடியும்? 1. "ஸஹாயஶூந்யஸ்ய மமாசேஷ ஸம்ஶ்ரித ஜநமஸிதாஸ்பத | ஸநாதந ஸஹாயமே வதே நித்யாஜ்ஞாத நிக்ரஹாய = ஸஹதர்மசரீம் சௌரே: ஸம்மந்த்ரித ஜகத்திதாம் - அநுக்ரஹமயீம் வந்தே நித்யம் அஜ்ஞாதநிக்ரஹாம்" என்கிறபடியே அநுக்ரஹமே வடிவெடுத்தவளென்றும் நிக்ரஹமென்பதைக் கனவிலுங் கண்டறியாதவளென்றும் புகழ்பெற்றவளான பிராட்டிக்கு இவர் மணவாளராகில் அவளது உபதேசத்தின்படி நடக்கவேண்டியவரன்றோ இவர்; "ந கஶ்சிந்நாபராத்யதி = ந கச்சின் நாபராத்யதி." [பிழைசெய்யாதவனே உலகில் இல்லை] என்று நிரூபிக்கின்ற பிராட்டியோடே இவர் ஸம்பந்தம்பெற்றுவைத்து இங்ஙனே பிழைகண்டு உபே

1. யதிராஜஸப்ததி—2.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



க்ஷித்தல் தகுதியோ? இப்படி இவர் பிழைகண்டு ஒதுங்குகின்றாரென்பதைப் பிராட்டியறிந்தால் அவள் தானும் பிறகு இவர் முகத்திலே விழிப்பளோ? என்கிற இவ்வளவு கருத்தும் அருளாத திருமாலார்க்கு என்ற சொற்செறிவிலே அடங்கும். பெரிய பிராட்டியார் பக்கலிலே அவர் லீலாரஸம் அநுபவித்து அவளுடைய போகமயக்குக்களிலே மூழ்கிக்கிடக்கையாலன்றோ இத்திசை நோக்கவும் மாட்டாது அருளாதிருக்கின்றார் என்பதாகவும் உட்கருத்துரைக்கலாம். இது பிள்ளான் நிர்வாஹம்; முந்தினது நஞ்சீயர் நிர்வாஹம்.

இளங்கிளியே!, 'இப்படி அருளாதிருக்கலாமா?' என்று அவரிடத்துச் சென்று கேள்; அதற்கு அவர், "குற்றங்களை அளவில்லாதபடி செய்துவைத்திருந்தால் நாம் எப்படி அருள்செய்யக்கூடும்? தன் குற்றங்களைப் பாராமல் அருள் அருள் என்பதேயோ?" என்று இடித்துச் சொல்லக்கூடும்; அங்ஙனஞ் சொன்னால் திருவடியின் தகவினுக்கு என் பிழைத்தாள் என்று மடிபிடித்துக் கேள் — என்று கிளிக்குச் சொல்லித்தருகின்றாள் பராங்குசநாயகி. திருவடி யென்பது ஸ்வாமி யென்றபடி. 'அடிகள்' என்னுமாபோலே. திருவடியின் தகவினுக்கு என் பிழைத்தாள்=தேவரீருடைய கருணைக்குப் போதும்படி என்ன பிழைசெய்தாள்? என்றவாறு. உண்மையில்; தான் பிழைசெய்தது உண்டாகிலும் எம்பெருமானுடைய கருணைத்திறத்தைக் காணுமிடத்து 'அதன் வயிறு நிறையுமாறு நாம் பிழைசெய்யவில்லையே!, நாம் செய்த பிழை அக் கருணையின் வயிற்றுக்கு ஒரு கவளத்திற்கும் போதாதே' என்று நினைக்கவேண்டும்படியாக இருத்தலால் இங்ஙனஞ் சொல்லுகின்றாளென்க. இங்கே ஈடு முப்பத்தாறாயிரம்:—"என் குற்றத்தைப் பார்த்து உபேக்ஷிக்க நினைத்தாராகில்,....ஸ்வாமிகளான தம் பொறை வயிறுநிறைய எங்களால் குற்றஞ்செய்யப்போமோ? என்னுங்கோள்." என்பதாம். எத்தனை பிழைகள் செய்திருந்தாலும் ஒரு நொடிப்பொழுதில் அவற்றைக் கபளீகரிக்கவல்ல கருணைக்குணம் தம்மிடத்தில் இருக்கும்போது, பிழை என்று வாய்திறக்கவும் வழியுண்டோ? என்பது கருத்து. இவ்விடத்திற்குப் பொருத்தமாக வேதாந்ததேசிகன் தயாசதகத்தி லருளிச்செய்த "மயி திஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே மிததோஷாநிதராந் விசிந்வதீ த்வம்। அபராதசதை: அபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே! கதம் பவித்ரீ? = மயி திஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே மிததோஷாந் இதராந் விசிந்வதீ த்வம், அபராதசதை: அபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே! கதம் பவித்ரீ." என்ற ச்லோகார்த்தம் இங்கு அநுஸந்திக்கவுரியது.

எம்பெருமானுடைய க்ஷமா குணத்தையும் பார்த்து தம்முடைய பிழையையும் பார்த்தால் இதுவொரு பிழையாகவே தோன்றமாட்டாது. ஸ்ரீராமபிரான் வாலியை வதைத்து ஸுக்ரீவனுக்கு முடிசூட்டி அவனைக் கிஷ்கிந்தைக்குப் போகவிட்டு வர்ஷாகாலம் முடிந்தவாறே இலங்கைக்குப்புறப்படப் படைதிரட்டிக்கொண்டு வருமாறு நியமித்துவிட்டுத் தானும் மால்யவானிலே காலங்கழியா நிற்க, நாளடைவிலே வர்ஷாகாலமும் முடிந்தும் ஸுக்ரீவன் போகபரவசனாய்க்கிடந்து வாராதேயிருக்க, பெருமாள் சீறிச்சிவந்து இளையபெருமாளை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யனுப்பி நாஜெளஷிபெழுப்பி அச்சமுறுத்த அப்போது தாரைவந்து கேட்கிருள் "கிம் கோபமூலம் மநுஜேந்த்ர புத்ர !" என்கிருள். இங்ஙனே சீறிவருவதற்குக் காரணமென்? என்று கேட்கிற அவளுக்குக் காரணம் தெரியாமையில்லையிறே; ஆயினும் கேட்கிற தன் கருத்து என்ன? உங்களுடைய க்ஷமாகுணத்தை நம்பியன்றோ நாங்கள் பராக்காயிருந்தது, அப்படியிருந்தும் சீறலாமோ? என்பதன்றோ அங்குக் கேள்வியின் கருத்து. அதுபோலவே இங்கு மென்க.

"திருவடியின் தகவினுக்கு என்பிழைத்தாள்" = இந்தச் சொல்தொடைக்கு மற்றொருவகையாகவுங் கருத்து அமையும். தேவரீருடைய கருணைக்கு இடையூறாக என்ன பிழை செய்தாள்? நான் ஏதாவது ஸ்வப்ரவ்ருத்திபண்ணியிருந்தேனாகில் 'தன் தலையாலே தன்னைக் காத்துக்கொள்ளப்பார்த்தாள், அப்படியே பார்த்துக்கொள்ளட்டும், நமக்கென்ன?' என்று தேவரீர் உதாஸீநராய் இருக்கலாம்; அப்படி நான் ஒன்றுஞ் செய்யவில்லையே!' தேவரீருடைய கருணை தாராளமாகப் பெருகலாம்படி நானிருக்கிறேனேயொழிய, அக்கருணை தடைபடும்படி ஒரு அதிப்ரவ்ருத்தியுஞ் செய்திலேனே' என்கிருளென்க.

> "தேவரீர்க்ருபைக்குத் தண்ணீர்த் துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் பண்ணிற்றுண்டோ? என்று நம்பிள்ளை அருளிச்செய்யும்படி." என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியின் சுவை இங்கு அறியத்தக்கது.

என்று ஒருவாய் சொல் = இந்த வொருவார்த்தையை மாத்திரம் நீ அங்குச் சென்று சொல்லவேணுமென்று கிளியை வேண்டுகின்ருள்.

என்பிழைக்கும் இளங்கிளியே = என்பு இழைக்கும், என் பிழைக்கும் என இருவகையாகவும் பிரிப்பர்: என்பு இழைக்கும் — (எனது) எலும்பைச் செதுக்குகின்ற (கிளியே!) என்றபடி: வடிவில் பசுமையாலும் வாயில் பழுப்பாலும் மழலைச் சொற்களாலும் எம்பெருமானை அநவரதம் நினைப்பூட்டாநின்றுகொண்டு என்னை வருத்துகின்ற கிளியே! என்றவாறு. என் பிழைக்கும்?=(என் நிலைமையை அங்குச்சென்று அறிவித்தால்) என்ன தப்பு உண்டாகும்? என்றபடி.

யான்வளர்த்த நீயலையே = இதற்கு இரண்டுவகையாகக் கருத்துக்கூறுவர்; நீ என்னால் வளர்க்கப்பட்டவனுயிருந்து இவ்வளவு உபகாரமுஞ் செய்யலாகாதோ? என்பது முதற் கருத்து. என்னால் வளர்க்கப்படுகிறவர்களெல்லாரும் எனக்குத் தீங்கிழைப்பதென்றே வழக்கமாய்விட்டது; எம்பெருமான் இப்போது எனக்குத் தீங்கிழைப்பதும் என்னுடைய ஸம்பந்தமே காரணமாகவன்றோ; அதுபோல என்னுடைய ஸம்பந்தமே காரணமாக நீயும் என் சொற்கேளாதே எனக்குத் தீங்கிழைத்துக்கொண்டிருப்பது வியப்பன்று; என்னால் வளர்க்கப்பட்டவனன்றோ நீ; இது என் தலைவிதிகாண் என்பதாக மற்றொரு கருத்து.

கிளி யென்றதற்கு ஸ்வாபதேசம் — "கண்வலைப்படாதே அகவலைப்பட்டு வளர்த்தெடுப்பார்கையிருந்து தயிர் செய்யமர் பாலமுதுண்டு......." இத்யாதி ஆசார்யஹ்ருதய சூர்ணிகையில் அருளிச்செய்யப்பட்டுள்ளது. கிளி வலையில்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அகப்படுமாபோலே 1. "தாமரைத்தடங்கண்விழிகளின் அகவலைப்படுப்பான்" என்கிறபடியே எம்பெருமானது திருக்கண்ணோக்கவலையில் அகப்பட்டும், கிளி வளர்த்தெடுப்பாருடைய கைவசமா யிருப்பதுபோல, போஷகர்களான ஆசார்யர்களுடைய அதீனர்களாயிருந்துகொண்டும், கிளி கற்பித்ததையே சொல்லுமாபோலே * முன்னோர்மொழிந்தமுறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசுமவர்களாயும் உள்ளவர்கள் விவக்ஷிதர்கள், கிளி யென்பது பெரும்பாலும் சிஷ்யர்களைச் சொல்லுமதில் நோக்கு என்பர். .... .... (எ)

நீயலையேசிறுபூவாய் நெடுமாலார்க்கென்தூதாய் *
நோயெனதுநுவலென்ன நுவலாதேயிருந்தொழிந்தாய் *
சாயலொடுமணிமாமை தளர்ந்தேன்நான் * இனியுனது
வாயலகிலின்னடிசில் வைப்பாரைநாடாயே. * (அ)

| | | | |
|---|---|---|---|
| சிறு பூவாய் | சிறிய பூவையே!, | நான் | யான் |
| நீ அலையே | நீ அல்லவோ? (இப்போது வேறுபட்டாயோ?) | சாயலொடு | ஒளியோடுகூடின |
| | | மணி மாமை | அழகாகிய நிறத்தை |
| நெடு மாலார்க்கு | 'புருஷோத்தமனுக்கு | தளர்ந்தேன் | இழந்தேன்; |
| என் தூது ஆய் | என் தூதாகிச்சென்று | இனி | இப்படியானபின்பு |
| எனது நோய் | எனது பிரிவாற்றாமையை | உனது | உன்னுடைய |
| நுவல் என்ன | 'சொல்' என்று வேண்டச் செய்தேயும் | வாய் அலகில் | வாயலகுக்குள்ளே |
| | | இன் | மதுரமான |
| நுவலாதே | (போய்ச்) சொல்லாதே | அடிசில் | இரையை |
| இருந்தொழிந் தாய் | வாளா இருந்திட்டாய்; | வைப்பாரை | ஊட்டவல்லவர்களை |
| | | நாடாய் | தேடிக்கொள். |

* * * — [நீயலையே.] தன்னுடைய நிலைமையைப் பூவையென்னும் ஒரு பக்ஷிக்குக்காட்டி 'ஏற்கனவே உன்னை நான் வேண்டிக்கொண்டிருந்தும் எனக்காகத் தூது செல்லாதே உபேக்ஷித்திருந்தாய்; நானோ இப்போது முடியப்புகாநின்றேன்; இனிமேல் உனக்கு இரையிடுவாரை நீயே தேடிக்கொள்ளாய் என்று சரம ஸமயத்தில் வார்த்தைபோலே சொல்லுகின்றாள்.

சிறு பூவாய்! நீ அலையே=பூவாய் என்பது பூவை யென்பதன் விளி; பூவை-நாகணவாய்ப்புள் எனப்படும். நீயலையே — நீ இதுவரையில் இருந்தமாதிரியில்லையே என்றபடி. நான் எது சொன்னாலும் விரைந்துசெய்து முடிப்பதே இயல்வாக இருந்த நீ இப்போது சொன்ன சொல் கேளாமையினால் வேறுபட்டாய்போலும் என நினைக்கவேண்டும்படியிருக்கின்றாய் என்றவாறு. எப்போதும் உத்ஸாஹமாகவே யிருக்குமியல்வுடைய நீ இப்போது என் நிலைமையைக்கண்டு வருந்திக்கிடக்கின்றாயாதலால் வேறுபட்டாய் போலும் என்னவுமாம்.

நெடுமாலார்க்கு என்தூதாய் எனதுநோய்நுவல் என்ன நுவலாதே யிருந்தொழிந்தாய்=நமது தலைவரோ நெடுமாலார் — பக்தர்கள் பக்கலில் பைத்தியம் பிடித்தவர்; நானும் தூதுவிட வேண்டுமளவான பைத்தியம் பிடித்தவள்; ஆகவிப்படி

1. திருவாய்மொழி. 6-2-9.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இரண்டுதலையும் அன்பார்ந்திருக்கும்போது இடையிலே சேரவிடுவார் வேண்டு மத்தனையே. அது உன்னாலாகக்கூடியதாதலால் 'என் நோயை அங்குச்சென்று தெரிவியாய்' என்று உன்னைப் பல்காலும் இரந்தேன்; இரந்தும் உபேக்ஷித் திருந்துவிட்டாய் என்கிறாள்.

"நோய் எனது" என்றவிடத்து நம்பிள்ளையீடு: — "ஸ்ரீபரதாழ்வான் நோ யென்றால் சாதுர்த்திக [வாதுக்ஷயிபுக]மாயிராதே." என்றுள்ளது. சாதுர்த்திக மாவது இரண்டுநாள் விட்டு மூன்றுநாளுக்கொருமுறை யடிக்கிற ஜ்வரம்; இது மிகவும் ஆபத்தாக முடியும் ஜ்வரமென்று சொல்லுவர்கள். ஸ்ரீராமனைப் பிரிந் திருந்தகாலத்தில் பரதாழ்வான் நோயாளியாயிருந்ததாகச் சொல்லப்படுகிறது, ஆனால் அந்த நோய் சாதுர்த்திகஜ்வரம்போன்ற நோய் அன்று; பிரிவாற்றாமை யேயாகும்; அதுபோலவே யிங்கும் என்றபடி. "மணிகெழுநீர்மருங்கலரும் வயவாலி மணவாளன் பணியறியேன் நீசென்று என்பயலைநோய் உரையாயே" என்ற பெரிய திருமொழியுங் காண்க.

தற்கால நிலைமையைச் சொல்லுகிறாள் சாயலோடு என்று தொடங்கி. சாயல் என்பது ஸமுதாயசோபை; இது வடமொழியில் லாவண்யமெனப்படும்; மணிமாமை என்பது அழகு; இது ப்ரத்யங்க ஸௌந்தர்யமெனப்படும். இவ் விரண்டும் நீங்கப்பெற்றேனென்கிறாள். இவள் இங்ஙனஞ் சொல்லக்கேட்ட பூவையானது 'இதோ விரைந்துசென்று எம்பெருமானுக்கு அறிவிக்கிறேன்' என்று புறப்படப்புகுமளவிலே இனியுனதுவாயலகிலின்னடிசில் வைப்பாரை நாடாயே என்கிறாள். நானோ முடியாநின்றேன்; இனியுனக்கு ரக்ஷகராவா ரைத் தேடிக்கொள் என்றவாறு.

இவ்விடத்திலே ஒரு ஐதிஹ்யம்;—பெரிய திருமலை நம்பியென்னுமாசிரி யர் 'வெண்ணெய்க்காடும்பிள்ளை' என்கிற ஸ்ரீக்ருஷ்ண விக்ரஹத்தை ஆரா தித்துவந்தார்; அவர் திருவாராதநம் ஸமர்ப்பிக்க அசக்தராய் அந்திமதசை யானவாறே பெருமாள் ஸந்நிதிமுன்பே தண்டன் ஸமர்ப்பித்துத் திருத்திரை யை நீக்கச்செய்து "சாயலொடு மணிமாமை தளர்ந்தேன்|நான் இனியுனது வாய லகிலின்னடிசில் வைப்பாரை|நாடாயே" என்று கைகூப்பி விண்ணப்பஞ்செய்தா ராம். அடியேனோ ஆசாரியன் திருவடியடையாநின்றேன்; இனித் திருவாரா தனம் கண்டருளப்பண்ணுவாரைத் தேடிக்கொள்ளாய் என்றபடி ... (அ)

நாடாதமலர்நாடி நாடோறும்நாரணன்தன் *
வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகுக்கின்று *
வீடாடிவீற்றிருத்தல் வினையற்றதென்செய்வதோ *
ஊடாடுபனிவாடாய் உரைத்தீராயெனதுடலே. * (கூ)

| | |
|---|---|
| ஊடு ஆடு | அங்குமிங்கும் நடையாடுகிற |
| பனி வாடாய் | குளிர்காற்றே!, |
| நாடாத மலர் நாடி | தேடவொண்ணாத புஷ்ப ங்களைத் தேடி |
| நாள் தோறும் | தினந்தோறும் |
| நாரணன் தன் | ஸ்ரீமந்நாராயணனுடைய |
| வாடாத மலர் அடி கீழ் | வாடாததாமரைமலர் போன்ற திருவடிகளில் |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| வைக்கவே | ஸமர்ப்பிப்பதற்காகவே | (வாடாய்) | காற்றே!; |
| வருக்கின்ற | (அவயவங்களை) ஏற்படுத்தியிருக்க, | உரைத்து | (அப்பெருமானுக்குத்) தூதுசொல்லி |
| வீடு ஆடி வீற்றிருத்தல் | (இப்படி) பிரிவிலே மூழ்கியிருப்பதாகிற | | (அனுகூலமான மறுமொழி பெறுவிடின்) |
| வினைஅற்றது | தௌர்ப்பாக்கியம் | எனது உடல் | என் சரீரத்தை |
| என் செய்வதோ | எதற்காக நேர்ந்ததோ!; | ஈராய் | இருபிளவாக்கிவிடு. |

* * * — கீழ்ப்பாட்டில் "சாயலொடு மணிமாமை தளர்ந்தேன்நான்" என்றாரே. அப்படி மேனிமெலிந்திருக்கிற ஸமயத்திலே ஒரு வாடைக்காற்று வந்து உடம்பிலேபட்டது; 1. "என்றும் புன்வாடை யிதுகண்டறிதுமிவ்வாறு வெம்மை, ஒன்று முருவுஞ் சுவடுந் தெரியலம்" என்றாப்போலே அதனுடைய அபூர்வமான கொடுமையைக்கண்டு 'அரசர்கள் ராஜத்ரோஹஞ் செய்தவர்களை ஹிம்ஸிக்க வேற்காரரை அனுப்புமாபோலே நம்மைக் கொலைசெய்ய ஸர்வேச்வரன் இவ்வாடையை அனுப்பியிருக்கவேணும்' என நினைத்து அந்த வாடையை நோக்கிச் சொல்லுகின்றாள் — 'வாடையே! நான் சொல்லுகிற வொருவார்த்தையை நீ அங்கே சென்று அறிவித்துவிட்டு, பின்னை அவசியம் வந்து என்னை முடித்திடாய்' என்கிறாள்.

இவ்வுலகத்திலுள்ள சிறந்த புஷ்பங்களையெல்லாம் தேடிச் சமர்ப்பித்து எம்பெருமானிணையடிக்கீழ் அடிமைசெய்வதற்காகவே இவ்வாத்மவஸ்து அமைந்தது; அப்படிப்பட்டதான இவ்வாத்மவஸ்து இங்ஙனே எம்பெருமானைவிட்டுப் பிரிந்து தூரத்ருஷ்டத்தில் தலைநின்றிருப்பது ஏனோ! எதுக்காக இவ்வாத்மவஸ்து இப்படி அநர்த்தப்பட்டுக்கிடக்கவேணும்? என்கிற இவ்விஷயத்தை ஓவாடைக்காற்றே! எம்பெருமானிடத்து விண்ணப்பஞ்செய்து, அதற்குப்பிறகு நீ இவ்வுடலை எப்படி வேணுமானாலும் அறுத்துத் தொலைத்திடு என்கிறாள்.

நாடாதமலர்நாடி — * அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரியநிக்ரஹ: | ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத: || ஜ்ஞானம் புஷ்பம் தப: புஷ்பம் த்யானம் புஷ்பம் ததைவ ச | ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத் = அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரியநிக்ரஹ: ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:-ஜ்ஞானம் புஷ்பம் தப: புஷ்பம் த்யானம் புஷ்பம் ததைவ ச-ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத்." என்கிறபடியே, அஹிம்ஸை, இந்த்ரியநிக்ரஹம், ஸர்வப்ராணிகளிடத்தும் இரக்கம், பொறுமை, ஞானம், தவம், தியானம், ஸத்தியம் என்று எட்டுவகையான புஷ்பங்களாகச் சொல்லப்பட்டவற்றை ஸமர்ப்பித்து என்றும், மலர்போலே எம்பெருமானுக்குப் பரமபோக்யமான ஆத்மபுஷ்பத்தை ஸமர்ப்பித்து என்றும், "எண்டிசையுமுள்ள பூக்கொண்டு" என்கிறபடியே தேடவரிய புஷ்பங்களெல்லாம் தேடி என்றும் பலபடியாகப் பொருள் கூறுவர்.

---

1. திருவிருத்தம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நாடோறும்=இதுதான் ஒருநாளோடே ஸமாப்தியடைகிற காரியமன்றே; வாழ்நாள் உள்ளளவிரையில் இடைவீடின்றியே கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறம் பெறவேணுமே. நாரணன்தன் வாடாத மலரடிக்கீழ் வைக்கவே=நமக்குத் தகாத தேவதாந்தரங்களுக்கன்றே நாம் அடிமை செய்யவேண்டுவது; * ஈாதா விதா ஹாதா நிவாஸஸ்ஸரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயணः = மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயணः'' என்கிறபடியே நமக்கு எல்லாமுமான ஸ்வாமியினுடைய, செவ்விமாறாத பூப்போலே யிருக்கிற திருவடிகளின்கீழே கிஞ்சித்காரம் செய்யவன்றோ விதிவாய்த்தது.

வைக்கவே வகுக்கின்று=''விசித்ரா தேஹஸம்பத்திரீஸ்வராய நிவேதிதும் | பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா = விசித்ரா தேஹஸம்பத்திः ஈச்வராய நிவேதிதும்.பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் - ஹஸ்தபாதாதிஸம்யுதா.'' என்கிறபடியே பகவானை ஆராதிப்பதற்கென்றே நமது கரணகளேபரங்கள் ஏற்பட்டன. இப்படியிருக்க;

வீடாடி வீற்றிருத்தல் வினையற்றது என்செய்வதோ?=வீடாவது விடுதல்; அதாவது விட்டுப்பிரிதல்; பிரிவிலே அவகாஹித்தலாவது பிரிவதேயாம்; ஆகவே, வீடாடி என்றது பிரிந்து என்றபடியாயிற்று. வீற்றிருத்தலாவது சலன மில்லாதிருத்தல்; ஆக இவ்வளவாலும் நெடுநாள் பிரிந்திருத்தலைச் சொன்ன படி. வினையற்றது—தௌர்ப்பாக்கியநிலைமை; நெடுநாள் பிரிந்திருப்பதாகிற இந்த தௌர்ப்பாக்கிய நிலைமை ஏதுக்காகவுண்டாயிற்று? என்கிறாள்.

மூன்றுமடியிலுள்ள இவ்விஷயத்தை எம்பெருமானிடத்துச்சென்று சொல்லி, அதற்கும் அவன் காது கொடாதிருந்தால் உடனே வந்து என்னை முடிப்பது நன்று என்றாளாயிற்று.

ஊடாடபனிவாடாய்= அங்குமிங்கும் திரிகின்ற குளிர்ந்தகாற்றே! என்றபடி. அங்கே அந்தரங்கமாய்த் திரியவல்ல காற்றே என்றுமாம்.

நம்பிள்ளையீடு:—''நித்யகைங்கர்யத்துக்கு இட்டுப்பிறந்தவஸ்து இப்படி யிருக்கக்கடவதோ'' என்று அறிவித்தால் 'அத்தலையால்வரும் கைங்கரியமும் நமக்குவேண்டா' என்றிருந்தானாகில் அவச்யம் வந்து அவனோட்டைப் பிரிவுக் குச் சிளையாத என்னுடலை முடித்துவிடவேணுமென்று § காலைப்பிடித்து வேண் டிக்கொள்ளுகிறாள்.''

இப்பாட்டில் காற்று என்றது காற்றுப்போலே உலகுக்கு ஜீவநஹேதுவான ஆசாரியனைச் சொன்னபடி. .... .... .... (௯)

உடலாழிப்பிறப்புவீடு உயிர்முதலாமுற்றுமாய் *
கடலாழிநீர்தோற்றி அதனுள்ளேகண்வளரும் *
அடலாழியம்மானைக் கண்டக்காலிதுசொல்லி *
விடலாழிமடநெஞ்சே வினையோமொன்றாமளவே. * (க௦)

§ கால்—காற்று என்றும் தொனிக்கும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| ஆழி மட நெஞ்சே | ஆழ்ந்த மடநெஞ்சே!; | கடல் | ஸமுத்திரத்திலே |
| உடல் | சரீரஸம்பந்தம்பெற்று | தோற்றி | ஆவிர்ப்பவித்து |
| ஆழி | சக்ராகாரமாக | அதன் உள்ளே | அக்கடலினுள்ளே |
| பிறப்பு | மாறிமாறிப்பிறக்கிற ஸம்ஸாரிநிலமும் | கண்வளரும் | சயனித்தருள்கின்ற |
| வீடு | மோக்ஷமும் | அடல் ஆழி அம்மானை | தீக்ஷ்ணமான சக்கரப்படையையுடைய பெருமானை |
| உயிர் | (இவற்றை அடைதற்கு உரிய) ஆத்மாவும் | கண்டக்கால் | கண்டால் |
| முதல் ஆம் முற்றும் ஆய் | ஆகிய இவை முதலான ஸகல பதார்த்தங்களும் தானிட்ட வழக்காம்படி ஸர்வநிர்வாஹகனாய் | இது | இந்த நிலைமையை |
| | | சொல்லி | அவனுக்குச்சொல்லி |
| | | வினையோம் | பாபிகளான நாம் |
| | | ஒன்று ஆம் அளவு | அவனோடு ஒன்று படும் வரையில் |
| ஆழி நீர் | ஆழ்ந்த நீரையுடைய | விடல் | விடாதே. |

* * * — [உடலாழிப் பிறப்புவீடு] கீழ்ப்பாட்டில் "நாரணன்றன் வாடாத மலரடிக்கீழ் வைக்கவே வகுக்கின்று" என்று கைங்கரிய ப்ரஸ்தாவம் வந்ததனால், தாய் முலையை நினைத்த கன்றுபோலே திருவுள்ளமானது பதறி உடலைவிட்டுப் புறப்படத் தொடங்கிற்று; அதனைநோக்கி 'நெஞ்சே! நம் காரியம் ஒருவிதமாக நிஷ்கர்ஷமாகுமளவும் நீ என்னை விடாதே யிருக்கவேணு' மென்று வேண்டிக்கொள்ளுகிறாள். அன்றியே, தூதுவிடுகிற பிரகரணமாதலால் நெஞ்சைத் தூதுவிடுகிறாள் என்பாருமுளர். அப்போது, விடல் என்றது—அவனை விடவேண்டா என்றபடி.

முதலடிக்குப் பலவகையாகக் கருத்துக்கூறுவர்; "உயிர் உடலாழிப் பிறப்பு வீடு முதலா முற்றுமாய்" என்று அந்வயித்து, உயிரினுடைய உடலாழிப்பிறப்பு வீடு முதலான முற்றும் ஆவதற்காக என்று கொள்க. உடலாழிப் பிறப்பாவது-உடலிலே வட்டவடிவமான பிறப்பு: பிறப்பு வட்டவடிவமா யிருப்பதாவதென்? என்னில்; வட்டவடிவமாக ஒன்று கீறினால் அதில் முதலும் முடிவும் கண்டுபிடிக்க வொண்ணாதே யிருக்குமன்றோ; அதுபோலே பிறவிக்கு முதலும் முடிவுமில்லாமை கூறினவாறு. அப்படிப்பட்ட பிறவிக்கு வீடு உண்டாவதற்காக — ஸம்ஸாரம் தொலைவதற்காக என்றபடி. வீடுமுதலா முற்றுமாய் — மோக்ஷம் முதலான எல்லாப் புருஷார்த்தங்களையும் பெறுதற்காக என்க. ஸ்ருஷ்டிக்கு முக்கியமான ப்ரயோஜனம் மோக்ஷமாதலால் அதனைச் சுட்டினபடி. ஆழிப்பிறப்பு என்றவிடத்தில் ஆழியென்று கடலைச் சொல்லிற்றாய், கடல்போலே எல்லைகாணமுடியாத பிறப்பு என்னவுமாம்.

உயிர் என்பதை உள்ளவிடத்திலேயே வைத்து அந்வயித்தலுமுண்டு;— உடலாழிப்பிறப்பு - ஜன்மங்கள்தோறு முண்டான வீடு — சரீரத்தினுள்ளே சேருகிற, உயிர்முதலா — ஆத்மா முதலாக, முற்றும் ஆய் — எல்லாக்காரியங்களையு முண்டாக்குகைக்காக என்று கொள்க. ஆய் - எச்சத் திரிபு. பிறவினைப்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பொருள்கொண்டது "வஹூஸ்யாம் ப்ரஜாயேயேதி" என்ற உபநிஷத்தின் சாயையாலே என்பர்.

கடலாழி நீர்தோற்றி அதனுள்ளே கண்வளரும் = ஆழ்ந்த நீரையுடைய கடலை முந்துற முன்னம் உண்டாக்கி மேல் ஸ்ருஷ்டி முதலானவற்றுக்காக அங்கே கண்வளர்ந்தருளாநின்ற. அடல் ஆழியம்மானை = 1. "நம்மேல் வினை கடிவான் - எப்போதுங் கைகழலாநேமியான்" என்கிறபடியே ஆச்ரித விரோதிகளைத் தொலைப்பதற்காகத் திருவாழியுங் கையுமாகவே கண்வளர்ந்தருளுகிறான் போலும். கண்டக்கால் = அப்படிப்பட்ட எம்பெருமானைக் காண்பது அரிது; பாக்யவசத்தாலே காணப்பெற்றால். இதுசொல்லி = "நாடாத மலர்நாடி நாடோறும் நாரணன்றன், வாடாத மலரடிக்கீழ்வைக்கவே வகுக்கின்று" என்று சீழ்ப்பாட்டிற் சொன்ன விஷயத்தைச் சொல்லி என்றபடி. அன்றியே, இப்பாட்டின் முதலடியிற் சொன்ன விஷயத்தை என்னவுமாம். 'இவ்வாத்மா ஸம்ஸாரத்தில் நின்றும் விட்டு நீங்கி வீடுபெறுவதற்கன்றோ தேவரீருடைய க்ருஷி' என்பதாகச் சொல்லி.

ஆழிமடநெஞ்சே! வினையோம் ஒன்றுமளவும் விடல் = சுழன்று வருகிற பேதை நெஞ்சே!, நாம் பிறந்ததற்குப் பயன் அவரைக்கிட்டி அடிமைசெய்கையாயிருக்க, அதுசெய்யாதே இங்ஙனம் பிரிந்து பரிதபிக்கும்படியான பாபத்தைப் பண்ணிக்கிடக்கிற நாம் அவரோடே சேருகிறவரையில் அவரை நீ விட வேண்டா — அவரை விடாதே அநுவர்த்தித்து என்னைச் சேர்க்கப்பாராய் என்றபடி. விடல் — எதிர்மறை வினைமுற்று. என்னை விடாதே என்றும் பொருள்கொள்ளலாம்; ஆகையாலே உயிர்தரித்திருக்கப் பாரிக்கிறபடி ... (கo)

அளவியன்றவேழுலகத்தவர் பெருமான்கண்ணனை *
வளவயல்சூழ்வண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த *
அளவியன்றவந்தாதி ஆயிரத்துள்ளிப்பத்தின் *
வளவுரையால்பெறலாகும் வானோங்குபெருவளமே. * (கக)

| | |
|---|---|
| அளவு இயன்ற | எல்லையைக்கடந்த |
| ஏழ் உலகத்தவர் பெருமான் | ஏழுலகங்களிலுமுள்ள சேதனர்களுக்கும் தலைவனான |
| கண்ணனை | எம்பெருமானைக்குறித்து, |
| வளம் வயல் சூழ் | வளப்பமுள்ள கழனிகள் சூழ்ந்த |
| வண் குருகூர் | அழகிய திருநகரிக்குத் தலைவராகிய |
| சடகோபன் | ஆழ்வார் |
| வாய்ந்து உரைத்த | அன்புபூண்டு அருளிச்செய்த |
| அளவு இயன்ற | கட்டளைப்பட்ட [ஸகல லக்ஷண ஸம்பந்தமான] |
| அந்தாதி | அந்தாதித்தொடையான |
| ஆயிரத்துள் | ஆயிரத்துக்குள்ளே |
| இ பத்தின் | இந்தப் பதிகத்தினுடைய |
| வளம் உரையால் | வளமாகிய சொல்லளவினாலே |
| வான் ஓங்கு பெரு வளம் | பரமபதத்தில் சிறந்த செல்வமாகிய கைங்கரிய ஸம்பத்து |
| பெறல் ஆகும் | அடையலாகும். |

1. பெரிய திருவந்தாதி—87.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [அளவியன்ற.] இத் திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டும் பாசுரம் இது. இத் திருவாய்மொழியில் சொல் மாத்திரத்தைக் கற்றாலும் திருநாட்டைப் பெறுதற்குப் போதும் என்கிறார்.

எல்லையைக் கடந்திருக்கின்ற ஏழுவகைப்பட்ட உலகங்களிலுமுள்ள சேதந வர்க்கத்திற்கு ஸ்வாமியாய் அடியவர்க்கு எளியனான கண்ணபிரானைக் குறித்து * நல்லார்நவில் குருகூர் நகரான் மாறன் சடகோபன் விண்ணப்பஞ்செய்ததும் கட்டளைப்பட்டதுமான இவ்வந்தாதி யாயிரத்துள்ளும் இப்பத்துப் பாசுரங்களி லுள்ள இனிய சொற்களைச் சொன்னமாத்திரத்திலும் திருநாட்டில் உத்துங்க மான கைங்கரிய ஸாம்ராஜ்யம் பெறப்பட்டதாகு மென்றாராயிற்று.

மேல் பத்துப் பாசுரங்களிலும் ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து வாசாமகோசரமாகக் கதறி நின்றபடியைக்கண்ட பரமபுருஷன் 'இவ்வளவான நிலைமையிலும் நாம் மறைந்துகிடந்தோமாகில் இனி ஆழ்வாரை இந்நிலவுலகத் தவர் இழக்கவேநேரும்' என்று திருவுள்ளம்பற்றிப் பதறி யெழுந்தருளி ஸேவை ஸாதிக்க, மகிழ்ச்சியோடே தலைக்கட்டப்படுகின்றதென்பது சொல்நயத்தில் விளங்கும். ஆழ்வார் தம்மொருவர்க்கு வந்து முகங்காட்டினவளவையே கொண்டு 'ஏழுலகத்தவர் பெருமான்' என்றார். எம்பெருமான் இப்போது முகங் காட்டா தொழியில் 'எம்பெருமான் லோகநாதனல்லன்' என்று சொல்லி முடிக்க வேண்டியதாகும்போலும். கண்ணனை என்றதும் ஸாபிப்ராயம்: இங்கே நம் பிள்ளை யீடு:— "இவ்வளவிலே வந்து முகங்காட்டிற்றிலனென்கிற குற்றந்தீர வந்து முகங்காட்டுகையாலே ஆச்ரித ஸுலபனானான். * பத்துடையடியவரில் க்ருஷ்ணாவதாரத்திலே அநுபவிக்கப் பாரித்து, அது கிடையாமையாலே தூது விட்டாராகையாலே இங்கு முகங்காட்டினான் க்ருஷ்ணனென்னவுமாம். இத் தால், அவனுடைய மேன்மையும் ஸௌலப்யமும் நிலைநின்றது இவர்க்கு முகங் காட்டின பின்பாயிற்றென்றபடி."

ஸம்ஸாரத்திலே சுருங்கியிருத்தலாகிற நிலைகழிந்து பரமபதத்திலேபோய் ஸ்வஸ்வரூபத்தைப்பெற்று விரிதலாகிற பேறு இப்பதிகத்திற்கு உரைக்கப்பட்ட தாயிற்று. .... .... .... .... .... .... .... .... (கக)

நான்காந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத் திருவாய்மொழிக்கான பாசுரம்.

---

அஞ்சிறைய புட்கள்தமை ஆழியானுக்கு * நீர்
என்செயலைச் சொல்லு மெனவிரந்து * — விஞ்ச
நலங்கியதும் மாறனிங்கே நாயகனைத் தேடி *
மலங்கியதும் பத்தி வளம்.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| மாறன் | நம்மாழ்வார், | இரந்து | வேண்டிக்கொண்டு |
| அம் சிறைய புட்கள்தமை | அழகிய சிறகுகளையுடைய (நாரை முதலிய) பறவைகளைநோக்கி, | விஞ்ச | மிகவும் |
| நீர் | 'நீங்கள் | நலங்கியதும் | நலங்குலைந்ததும், |
| ஆழியானுக்கு | சக்ராப்ஜநாதன் பக்கலிலே சென்று | இங்கே | இந்நிலத்திலே |
| என் செயலை | என் படியை | நாயகனை | நாயகனான எம்பெருமானை |
| சொல்லும் | தெரிவியுங்கள்' | தேடி | தேடி |
| என | என்று | மலங்கியதும் | நிலைதளும்பியதும் |
| | | பத்தி வளம் | பத்தியின் பெருமையாகும். |

* * * — இப் பாசுரத்தினால், * அஞ்சிறையமடநாராய் என்னு மித்திருவாய்மொழியின் ப்ரமேயத்தையும், இத் திருவாய்மொழியில் ஆழ்வார் பெண்ணிலைமை யெய்தித் தூதுவிட்டமைக்கு உரிய உபபத்தியையும் சேர்த்து அருளிச்செய்தாராயிற்று.

ஆழ்வார், அழகிய சிறகுகளையுடைய சில பறவைகளை நோக்கி, நீங்கள் * கடலாழி நீர்தோற்றி யதனுள்ளே கண்வளருமடலாழியம்மானைக் கண்டு நான் இங்ஙனே கிடந்து துடிக்கிற துடிப்பைத் தெரிவிக்கவேணுமென்று பிரார்த்தித்துத் தமது வருத்தங்களை மிகவும் வெளியிட்டார்; பரம புருஷனாகிற அந்த நாயகனைத் தேடி நோவுபட்டார் என்பது இத் திருவாய்மொழியின் ப்ரமேயம். பத்திவளம் என்றது - ஆண்மைமாறிப் பெண்மை விளைந்து இப்படிப்பட்ட பாசுரம் வெளிவருதற்கான காரணங் கூறியபடி. ஜ்ஞாநதசையென்றும் ப்ரேமதசையென்றும் இரண்டு அவஸ்தைகளுண்டு: அவற்றில் ஞான தசையில் பக்தியானது வரம்புபட்டிருக்கும்: ப்ரேம தசையில் அது வரம்புகடந்திருக்கும். கீழே சென்ற * உயர்வறவுயர்நலம் * வீடுமின்முற்றவும் * பத்துடையடியவர் * என்ற மூன்று திருவாய்மொழிகளும் ஞான தசையில் நிகழ்ந்தனவாதலால் அவற்றிலே ஆழ்வாருடைய பக்தி அளவுபட்டிருந்தது. இத் திருவாய்மொழி அங்ஙனன்றியே ப்ரேம தசையில் நிகழ்ந்ததாதலால் பக்தி அளவுகடந்ததாகி



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ச்ருங்காரஸாரணியில் பரிணமித்துத் தலைவிபேச்சாலே வெளிவந்தது — என்கிற இவ்வளவு கருத்தை உள்ளடக்கி, மலங்கியதும் பத்திவளம் என்றருளிச்செய்தார்.

பக்தி என்னும் வடசொல் பத்தியெனத் திரிந்தது. வ்ளமாவது செழிப்பு; முதிர்ச்சியைச் சொன்னபடி. பக்தியின் பரிபாக தசை இது என்றவாறு.

அஞ்சிறைய புட்கள்தமை = உச்சைர்க்கதிக்கு ஸாதனங்களான ஞானமும் அனுட்டானமும் நிரம்பிய ஆசாரியர்களை என்பது உள்ளுறை பொருள். ஆழியானுக்கு=ஆழி யென்று கடலுக்கும் சக்கரத்துக்கும் பெயராதலால், கடலிலே பள்ளிகொண்டவனுக்கு என்றும், சக்கரத்தண்ணலுக்கு என்றும் பொருள் கொள்ளலாம். "கடலாழிநீர்தோற்றி அதனுள்ளே கண்வளரும்" என்ற விசேஷணத்தை நோக்கி முந்திய பொருள்; "அடலாழியம்மானை" என்ற விசேஷ்யத்தை நோக்கிப் பிந்தியபொருள்,

சொல்லும் = முன்னிலையேவற் பன்மை வினைமுற்று. ... .... (ச)

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

---

ச்லோ|| தாத்ருக் க்ஷிப்தாநயி மஹேந ஸ்வநிவிஷ்ண:
ஸ்தாத்வா ஶமாஞ்ச ஸரிஸ்ஸ்வவிஸ்வஸ்தநாயத: |
ஸகலாபராதஸஹதாஶ்ரவ வோச ச ஏதை:
ஸாமர்த்ய: ஸ்வதோஷவாதாஶுந்ய நாவ்ரத்யேஷு ||

கீழ்த் திருவாய்மொழியில் "புயற்கருநிறத்தனன் பெருநிலங்கடந்த நல்லடிப்போது, அயர்ப்பிலனலற்றுவன் தழுவுவன் வணங்குவனமர்ந்தே" என்று உலகளந்த திருவடிகளைத் தழுவி வணங்கப்பாரித்த ஆழ்வார் அப்பேறு கிடைக்கப் பெறாமையினாலே வருந்தி எம்பெருமானோடு கலந்து பிரிந்தவொரு பிராட்டியின் நிலைமையை எய்தினவராகி அப்பெருமான் பக்கலிலே தூதுவிட்டு "என்பக்கலில் பிழைகள் நிரம்பியிருக்கின்றமையை மாத்திரமே பார்த்துக் கைவிட நினைத்திருக்குமவர் ஆச்ரிதாபராதங்களை ஸஹிப்பதாகிற பொறுமைக்குணம் தம்மிடத்துக் குறையற்றிருக்கும்படியை மறக்கலாமோவென்று சொல்லுங்கோள்" என்றறிவித்து, தம் பிழையையே நினைத்து அருளாதிருக்குந்தன்மை எம்பெருமானைவிட்டு நீங்குமாறு செய்துகொண்டார் இந்த நான்காந் திருவாய்மொழியில் என்றதாயிற்று.

இத் திருவாய்மொழிக்கு 'அபராதஸஹத்வம்' என்கிற குணத்தைப் பிரசுரப்படுத்துகையில் நோக்கு என்னுமிடத்தை மூன்றுவது பாதம் விளக்கும்.

ஶுந்யநாத = ஒழித்தார் என்றபடி. .... .... ... (*

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி முதற்பத்து

## ஐந்தாந் திருவாய்மொழி — வளவேழுலகு.

## அவதாரிகை.

ஆழ்வார் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணத்தை வெளியிட்டுக்கொண்டு வருகின்றாரன்றே. முதல் திருவாய்மொழியில் பரத்துவத்தைப் பேசினர். இரண்டாந் திருவாய்மொழியில் பஜநீயத்வத்தை யருளிச்செய்தார். மூன்றாந் திருவாய்மொழியில் ஸௌலப்யத்தை வெளியிட்டார். கீழ்த் திருவாய்மொழியில் அபராதஸஹத்வத்தை ஆவிஷ்கரித்தார். இத் திருவாய்மொழியில் சீலகுணத்தை விளக்கியருளுகிறார்.

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களெல்லாவற்றினுள்ளும் சீல குணமென்பது மிகச் சிறக்கும். பரத்பரனான தான் நம்போல்வாருடைய அற்பத்தனத்தைச் சிறிதுங் கணிசியாது தன்னைத் தாழவிட்டுக்கொண்டு நம்மோடு புரையறக் கலந்து பழகுந்தன்மையே சீலமெனப்படும். இது ஸௌசில்யமென்றும் வழங்கப்பெறும். *𑌮𑌹𑌤𑍋 𑌮𑌨𑍍𑌦𑍈𑌸𑍍𑌸𑌹 𑌨𑍀𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑍇𑌣 𑌸𑌂𑌶𑍍𑌲𑍇𑌷𑌃 - 𑌸𑍌𑌶𑍀𑌲𑍍𑌯𑌮𑍍 * என வடமொழியாளர் இக் குணத்திற்கு லக்ஷணங் கூறுவர், மஹானாயிருப்பவன் மந்தர்களோடு நெருங்கிப் பழகுவதே சீலம் என்றவாறு.

குணம் என்னும் சொல் பொதுப்பெயராகி ஸகல குணங்களையுஞ் சொல்லக் கடவதேயாயினும் ஸௌசீல்ய மென்னும் குண விசேஷத்திற்கு இது சிறப்புப் பெயராகவும் வழங்குவதுண்டு: ஸ்ரீராமாயணத்தில் வால்மீகி மஹர்ஷி நாரதமா முனிவரை நோக்கிச் சில கேள்விகள் கேட்பதாகக் கூறுமிடத்து [முதல் ஸர்க்கத்தில்] * 𑌕𑍋 𑌨𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑌾𑌮𑍍𑌪𑍍𑌰𑌤𑌂 𑌲𑍋𑌕𑍇 𑌗𑍁𑌣𑌵𑌾𑌨𑍍 𑌕𑌶𑍍𑌚 𑌵𑍀𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 ? = கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச் ச வீர்யவாந்? * என்னும் ச்லோகத்திலுள்ள குணவாந் என்பது ஸௌசீல்ய குணத்தைப்பற்றின தென்றே ஆசார்யர்கள் வியாக்கியானஞ் செய்தருளினர். ஆளவந்தாரும் தமது ஸ்தோத்ர ரத்நத்தில் ““𑌵𑌶𑍀 𑌵𑌦𑌾𑌨𑍍𑌯𑍋 𑌗𑍁𑌣𑌵𑌾𑌨𑍃𑌜𑍁𑌃 𑌶𑍁𑌚𑌿𑌃 𑌮𑍃𑌦𑍁𑌰𑍍𑌦𑌯𑌾𑌲𑍁𑌰𑍍𑌮𑌧𑍁𑌰𑌃 𑌸𑍍𑌥𑌿𑌰𑌃 𑌸𑌮𑌃 । 𑌕𑍃𑌤𑍀 𑌕𑍃𑌤𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃 𑌸𑌮𑌸𑍍𑌤𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑍁𑌣𑌾𑌮𑍃𑌤𑍋𑌦𑌧𑌿𑌃 = வசீ வதாந்யோ குணவாந் ருஜு: சுசி: ம்ருதுர் தயாலுர் மதுரஸ் ஸ்திரஸ் ஸம: - க்ருதீ க்ருதஜ்ஞஸ் த்வமஸி ஸ்வபாவதஸ் ஸமஸ்த கல்யாணகுணாம்ருதோததி:” என்னும் ச்லோகத்தில் குணவாந் என்ற பதத்தினாலேயே எம்பெருமானுடைய சீலகுணத்தை யருளிச்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



செய்தாரென்பதும் குறிக்கொள்ளத்தக்கது, இதனாலும் சீலகுணமே மிகச் சிறந்ததென்பது பெறப்படும்.

அவதாரங்களில், குஹப்பெருமாள், வானரமுதலிகள், விபீஷணாழ்வான் போல்வார்திறத்திலே விளங்கக் காட்டப்பட்ட குணமாமிது. 1. "ஏழையேத லன் கீழ்மகனென்றிரங்கி மற்றவற்கின்னருள் சுரந்து, மாழைமான் மடநோக்கியுன்தோழி உம்பியெம்பியென்றொழிந்திலை, உகந்து தோழன் நீயெனக்கிங் கொழியென்ற சொற்கள்வந்தடியேன் மனத்திருந்திட" என்பது முதலான பாசுரங்களில் இந்த சீலகுணத்தையே வாய்வெருவி நைந்து கரைந்துருகுவர்கள்.

எம்பெருமானது ஒப்புயர்வற்ற பெருமையையும் தமது மிக்க நைச்சியத்தையும் அநுஸந்தித்த ஆழ்வார் "அம்மானாழிப்பிரானவன் எவ்விடத்தான் யானார்!" என்னுமாபோலே, இப்படிப்பட்ட பரம புருஷனை நாயினுங் கடைகெட்ட நாம் தீண்டிக் கெடுத்தல் தகுமோவென்று சிந்தித்து அவன்றன்னோடு சேர இருப்பத்து நெகிழப்புக, எம்பெருமான் தனது சீலகுணத்தைக் காட்டி ஆழ்வாரைத் தன்னோடு சேர்த்துக்கொள்ளுகின்றானென்பது இத் திருவாய்மொழியின் ப்ரமேயம்.

கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார் வாசாமகோசரமான வருத்தத்தைக் காட்டி மிக்க ஹாஹாகாரத்தோடிருந்தவர், பேரருள்பொலிய நின்று அணுக வந்த எம்பெருமானைக் கண்டவாறே பதறிக் கலவிசெய்ய ப்ராப்தமாயிருக்க, நைச்சியாநுஸந்தானத்தாலே நெகிழ நினைப்பதற்கு அடி என்? எனின்; அளவு கடந்த ஆசைபோடே அவனைத் தழுவி முழுசிப்பரிமாற அபேக்ஷித்தாரென்பது உண்மையே. அவனும் தன்னுடைய பெருமை யெல்லாம் பொலியவந்து நின்ற வாறே அப்பெருமையிற் கண்வைத்து ஆச்சரியப்பட்ட ஆழ்வார் உடனே தமது சிறுமையையும் நினைக்கப்பெற்று 'ஐயோ! நாமெங்கே, அவனெங்கே; * பொய்ந் நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பு முடையோமான நாம் * அமலன் விமலன் நிமலன் நின்மலனென்னும்படியான அவனோடே கலந்தால் அப் பரஞ்சுடர்ச்சோதிக்கு ஒரு அவத்யம் விளையுமே!' என்று திருவுள்ளத்திலே தோன்றி இருப்பக்கப்புக்காரென்ற விதற்கு நாம் என்ன காரணம் கூற வல்லோம். எம்பெருமானுடைய பெருமைபடுத்துகிறபாடு இது என்னலாமத்தனை.

ஆளவந்தாரும் ஸ்தோத்ர ரத்நத்தில் * விராஜமாநோஜ்ஜ்வல பீதவாஸஸம் * என்ற முப்பத்திரண்டாம் ச்லோகம் முதலாக * அசிந்த்ய திவ்யாத்புத * இத்யாதியான நாற்பத்தைந்தாம் ச்லோகமளவும் எம்பெருமானை அற்புதமாக வருணித்து, அதற்குமேல் * பவந்தமேவாநுசரந் நிரந்தர: ப்ரசாந்த நிச்சேஷ மநோரதாந்தர: | கதாஹமைகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித: = பவந்தமேவாநுசரந்நிரந்தரம் ப்ரசாந்தநிச்சேஷமநோரதாந்தர:, கதாஹமைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி

1. பெரிய திருமொழி 5-8-1.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்நாதஜீவித:. என்ற ச்லோகத்தினால் - 'மேலே வருணிக்கப்பட்டபடி ஸ்வரூப ரூபகுண விபூதிகளால் பரிபூர்ணனாய் நித்யவிபூதியிலே குறைவின்றி யெழுந்தருளி யிருப்பவனான வுன்னை நித்யாநுபவம்பண்ணி உன் திருவுள்ளத்திலிருந்த வருத்தத்தைத் தீர்த்து மகிழ்விப்பது என்றைக்கோ? இடைவிடாமல் உன்னையே சூழ்ந்துகொண்டும் நீ தவிர மற்ற விஷயங்களில் நசைகளை அடியோடு ஒழித்துவிட்டும் சாச்வதமான கைங்கரியத்தைச் செய்துகொண்டும் என்றைக்கு நான் உன்னை உகப்பிக்கப்போகிறேனோ?' என்று தம்முடைய பாரிப்பை அளவின்றிக் காட்டியிட்டும், அதற்கடுத்ததான * 𑌧𑌿𑌗𑌶𑍁𑌚𑌿𑌮𑌵𑌿𑌨𑍀𑌤𑌂 𑌨𑌿𑌰𑍍𑌦𑌯𑌂 𑌮𑌾𑌮𑌲𑌜𑍍𑌜𑌂 𑌪𑌰𑌮𑌪𑍁𑌰𑍁𑌷 𑌯𑍋𑌽𑌹𑌂 𑌯𑍋𑌗𑌿𑌵𑌰𑍍𑌯𑌾𑌗𑍍𑌰𑌗𑌣𑍍𑌯𑍈𑌃 | 𑌵𑌿𑌧𑌿𑌶𑌿𑌵𑌸𑌨𑌕𑌾𑌦𑍍𑌯𑍈𑌰𑍍𑌧𑍍𑌯𑌾𑌤𑍁𑌮𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌦𑍂𑌰𑌂 தவ 𑌪𑌰𑌿𑌜𑌨𑌭𑌾𑌵𑌂 𑌕𑌾𑌮𑌯𑍇 𑌕𑌾𑌮𑌵𑍃𑌤𑍍𑌤𑌃 = திகசுசிமவிநீதம் நிர்த்தயம் மாமலஜ்ஜம் பரமபுருஷ! யோஹம் யோகிவர்யாக்ரகண்யை:, விதிசிவஸநகாத்யை: த்யாதுமத்யந்ததூரம் தவ பரிஜநபாவம் காமயே காமவ்ருத்த:. * என்ற ச்லோகத்தினால் "அவன் எங்கே! அதமாதமனான நான் எங்கே!; தேவர்களுக்கே அர்ஹமான புரோடாசத்தை நாய் விரும்புவதுபோலன்றோ மஹான்களுக்கே அர்ஹமான அவனுடைய கைங்கரியத்தை நாயினேன் விரும்புவது; மதிகெட்டுப்போய் இப்படியும் விரும்புவேனோ? ஸம்ஸார நாற்றமே அறியாத நித்யஸூரிகள் ஆசைப்படவேண்டுமதான நித்ய கைங்கர்யத்தை நித்ய ஸம்ஸாரியான நான் ஆசைப்படுவதானது ராஜபோக்யமான அன்னத்திலே விஷத்தைக் கலப்பதுபோலாகுமன்றோ? ஹா ஹா!; என்ன ஸாஹஸமான காரியஞ்செய்யத் துணிந்தேன்!—என்று தம்மைத் தாமே வெறுத்துக்கொண்டார். இத்தகையதான ஆளவந்தாருடைய அநுஸந்தானம் இத் திருவாய்மொழியி லாழ்வாருடைய அநுஸந்தானத்தை அடியொற்றினபடியா மென்றுணர்க.

கூரத்தாழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் இப்படியே முந்துற பகவதநுபவத்தில் தமக்குண்டான பெருநசையைப் பல ச்லோகங்களாலே வெளியிட்டருளி, உடனே * 𑌅𑌂𑌹𑌃 𑌪𑍍𑌰𑌸𑌹𑍍𑌯 𑌵𑌿𑌨𑌿𑌗𑍃𑌹𑍍𑌯 = அம்ஹ: ப்ரஸஹ்ய விநிக்ருஹ்ய * இத்யாதி ச்லோகத்தாலே தம்முடைய அயோக்யதையை நோக்கி அகலப் பார்த்தார்.

அவரது திருக்குமாரரான பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் இவ்வண்ணமே "𑌗𑌰𑍍𑌭𑌜𑌨𑍍𑌮𑌜𑌰𑌾𑌮𑍃𑌤𑌿 𑌕𑍍𑌲𑍇𑌶𑌕𑌰𑍍𑌮𑌷𑌡𑍂𑌰𑍍𑌮𑌿𑌕𑌃 | 𑌶𑍍𑌵𑍇𑌵 𑌦𑍇𑌵𑌵𑌷𑌟𑍍𑌕𑍃𑌤𑌂 𑌤𑍍𑌵𑌾𑌂 𑌶𑍍𑌰𑌿𑌯𑍋𑌽𑌹𑌮𑌕𑌾𑌮𑌯𑍇 = கர்ப்பஜந்மஜராம்ருதிக்லேசகர்மஷடூர்மிக:, ச்வேவ தேவவஷட்க்ருதம் த்வாம் ச்ரியோர்ஹமகாமயே. * என்றருளிச்செய்தார்.

ஆக இந்த ஸ்ரீஸூக்திகளெல்லாவற்றாலும் — 'பகவத்கைங்கரியத்தை ஆசைப்படவும் வேணும், உடனே அயோக்யதையை அநுஸந்தித்து அநுதபிக்கவும் வேணும்' என்கிற சாஸ்த்ரார்த்தமே சிக்ஷிக்கப்பட்டதாகும். எம்பெருமானுடைய ஒவ்வொரு குணமும் சேதநர்களிடத்துள்ள துர்க்குணங்களினாலேயே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



விளக்கமுறத்தக்கது. நாமும் எம்பெருமானைப்போலவே குணசாலிகளாக இருந்திட்டோமாகில் அவனது ஒரு திருக்குணமும் விளங்குதற்கு ஹேதுவேயில்லையாகும். நாம் துக்கிகளா யிருந்தால்தான் அவனுடைய தயாகுணம் ஒளிபெறும். நாம் தோஷதூஷிதர்களா யிருந்தால்தான் அவனுடைய க்ஷமா வாத்ஸல்யாதிகள் ஒளிபெறும். இந்த ரீதியிலே அவனுடைய சீலகுணம் ஒளி பெறுதற்கு நம்முடைய நைச்சியம் இன்றியமையாததாம். அப்படிப்பட்ட நைச்சியத்தின் அநுஸந்தான முகத்தினால் இத் திருவாய்மொழியில் எம்பெருமானது சீலகுணத்தை அநுபவிப்பதும் வெளியிடுவதுமாய்ச் செல்லுகிறு ரென்க. .... .... ... ... ... .... .... .... (*)

வளவேழுலகின்முதலாய வானோரிறையையருவினையேன் *
களவேழ்வெண்ணெய்தொடுவுண்ட கள்வாவென்பன்பின்னையும் *
தளவேழ்முறுவல்பின்னைக்காய் வல்லானாயர்தலைவனாய் *
இளவேறேழுந்தழுவிய எந்தாயென்பன்நினைந்துநைந்தே. * (க)

| | |
|---|---|
| வளம் | வளப்பம்பொருந்திய |
| ஏழ் உலகின் | ஏழுலகத்திற்கும் |
| முதல் ஆய | முதலாகிய |
| வானோர் இறையை | நித்யஸூரி நாதனான எம்பெருமானை, |
| அரு வினையேன் | போக்கவொண்ணாத பாபத்தை யுடையேனாகிய நான் |
| நினைந்து | மனத்தினால் தியானித்து |
| நைந்து | உடம்பும் கட்டுக்குலைந்து |
| களவு ஏழ் வெண்ணெய் தொடு உண்ட கள்வா என்பன் | 'களவுத்தொழில் விளங்கும்படி வெண்ணெயை ஒளித்துண்ட கள்வனே!' என்று சொல்லியழைக்கின்றேன்; |
| பின்னையும் | அதற்குமேலும் |
| தளவு ஏழ் முறுவல் | முல்லை யரும்புபோலத் தோன்றுகிற புன்னகையை யுடைய |
| பின்னைக்கு ஆய் | நப்பின்னைப் பிராட்டிக்காக |
| வல் ஆனாயர் தலைவன். ஆய் | சிறந்த இடையர் தலைவனாய் வந்து |
| இள | இளமைதங்கிய |
| ஏறு ஏழும் | எருதுகளேழையும் |
| தழுவிய | அணைத்துமுடித்த |
| எந்தாய் | என் ஸ்வாமியே ! |
| என்பன் | என்றும் சொல்லுவேன். |

* * * — [வளவேழுலகின்.] * அயர்வறுமமரர்களென்றிருக்கும் நித்யஸூரிகளாலே அநுபவிக்கத்தக்கவனான எம்பெருமானை அந்தோ! நான் மனமொழி மெய்களினால் தூஷித்துவிட்டேனே யென்கிறார். இவர்தாம் தூஷித்தமை என்னென்னில்; சில சேஷ்டிதங்களைச் சொல்லி இவற்றைச்செய்த எம்பெருமானே! என்று அழைப்பதெல்லாம் வாயினால் தூஷித்தபடியாம்; அவனையும் அவனது சேஷ்டிதங்களையும் சிந்தித்ததானது நெஞ்சினால் தூஷித்தபடியாம். இங்ஙனம் நெஞ்சினால் நினைந்ததனாலும் வாய்விட்டுச் சொன்னதனாலும் உடல் சிதிலமாகப் பெற்றமை சரீரத்தினால் தூஷித்தபடியாம்.

எம்பெருமானையே சிந்தியுங்கோளென்றும், அவனையே வாயார வாழ்த்துங்கோளென்றும், அவனையே சரீரத்தாலும் அணைக்கப்பாருங்கோளென்றும் கீழும் மேலும் பன்முறையும் பிறர்க்கு உபதேசிக்கின்ற இவ்வாழ்வார் இப்போது இங்ஙனம் அருளிச்செய்வது ஸர்வாத்மநா தம்முடைய நைச்சியத்தை வெளி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யிட்டுக்கொள்ளுகிற ஒரு முறையாகும். இந்த நடையை அடியொற்றித் திருவரங்கத்தமுதனாரும் இராமாநுச நூற்றந்தாதியில் "போற்றருஞ் சீலத்தி ராமாநுச! நின்புகழ்தெரிந்து சாற்றுவனேல் அது தாழ்வு, அதுதீரில் உன் சீர்தனக்கு ஓரேற்றம்" என்றருளிச்செய்திருப்பதும் இங்கு நினைக்கத்தக்கது.

"வளவேழுலகின் முதலாயவானோரிறை" என்பதனால் சாமானியரால் எடுத்துரைக்கத்தகாத பெருமையுடைமை எம்பெருமானுக்கு நிரூபிக்கப்பட்டதாயிற்று. அருவினையேன் என்றதனால் பகவத்விஷயத்தில் சிறிதும் வாய்வைக்கத் தகுதியின்மையாகிற தமது தாழ்வு தெரிவிக்கப்பட்டது.

வளம் என்பது ஏழுலகிலாவது, ஏழுலகின் முதல்வனாகிய எம்பெருமானிடத்திலாவது வானோரிடத்திலாவது விசேஷணமாக அந்வயிக்கலாம். "வளவேழுலகின் முதலாய" என்பதனால் லீலாவிபூதி நாயகத்வமும் "வானோரிறை" என்பதனால் நித்யவிபூதி நாயகத்வமும் சொல்லிற்றாகி உபயவிபூதிநாதனென்று பெருமையின் எல்லை சொல்லிற்றாயிற்று.

அருவினையேன் = சாஸ்த்ரஜ்ஞர்கள் ஆத்மஸ்வரூபத்தை ஞானத்தையிட்டும் ஆனந்தத்தையிட்டும் நிரூபிப்பர்கள்; ஆழ்வார் அங்ஙனன்றியே பாபத்தையிட்டே ஸ்வாத்மஸ்வரூபத்தை நிரூபிக்கிறார் காண்மின். பாபமே வடிவெடுத்தவன் நான் என்கிறார், மிகவும் தர்மசீலனாயிருப்பானொருவன் அறிவுகலங்கி வீட்டிலே நெருப்பையிட்டுப் பிறகு ஸத்வம் தலையெடுத்தவாறே 'அந்தோ! பாவியேன்! அக்ருத்யம் செய்துவிட்டேனே!' என்று அநுதபிக்குமாபோலே, ஆழ்வாரும் எம்பெருமானை விரும்பினதற்கு அநுதபிக்கிறபடி என்னே! பாரீர்.

நீசராகக்கொண்ட தாம் எம்பெருமானைச் செய்தது என்? என்ன; அதனை மூன்றடிகளால் அருளிச்செய்கிறார். வெண்ணெய் திருடின கள்வனே! என்றும், நப்பின்னைப் பிராட்டிக்காக எருதுகளேழையும் வலியடக்கினவனே! என்றும் தாம் சொல்லிவிட்டாராம்; இதற்கே அநுதபிக்கின்றாராயிற்று. மேற்குறித்த இரண்டு வார்த்தைகளும் வஸ்துஸ்திதியைச் சொல்வனவே யானாலும் எம்பெருமானுக்கு ஸந்தோஷ ஹேதுவான விளிகளே யானாலும், அந்த வார்த்தைகளைச் சொல்லி எம்பெருமானை யழைப்பதற்கு உண்மையான பரிவுடையாரன்றோ அர்ஹதையுள்ளவர்கள்; யசோதைப்பிராட்டி, நப்பின்னைப்பிராட்டி போல்வார் உள்கனிந்து உருகிச் சொல்லவேண்டிய வார்த்தைகளை அநுவாதஞ் செய்யவும் எனக்குத் தகுதியில்லையே!; அந்தோ! நாயினேன் சொல்லிவிட்டேனே! என்று அநுதபிக்கின்ற முகத்தாலே தம்முடைய பரம நைச்யத்தை அநுஸந்தித்தாராயிற்று.

தோவேுண்ட கள்வா! = களவினால் உண்ட கள்வனே! என்றபடி. † "மாயை தோடு பட்டிமை வஞ்சனையாகும்" என்றது காண்க. திருவாய்ப்பாடியில் கண்ணபிரான் அடிக்கடி வெண்ணெய் களவாடி அமுதுசெய்தமை ப்ரஸித்தம்.

† பிங்கலந்தை - பண்பிற் செயலிற் பகுதிவகை, 135.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கள்வா! என்பன் என்றவிடத்து, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் பிள்ளைப்பெருமாளையங்கார் "பண்டேயுன்தொண்டாம் பழவுயிரையென்ன தென்று, கொண்டேனைக் கள்வனென்று கூறாதே - மண்டலத்தோர், புள்வாய் பிளந்தபுயலே! உனைக்கச்சிக் கள்வாவென்றோதுவதென்கண்டு?" என்றுரைத்த பாசுரமும் அதன் உருக்கமான பொருளும் உணரத்தக்கது. (இதன் கருத்து.) ஒருவர்க்கு உரிய பொருளைத் தன்னதாகக் கொள்வது கள்ள மெனப்படும். ஆகவே அநாதியாக உனக்கே உரியதாய்க்கிடந்த ஆத்மாவை நான் என்னுடைய தென்று கொண்டிருக்கிறேனாதலால் என்னைக் கள்வனென்று சொல்லத்தகும். உலகத்திலுள்ள பொருள்கள் யாவும் நின்னுடையனவே யாதலால் வெண்ணெய் கொள்ளுதல் முதலிய தொழில்களைச் செய்யினும் உன்னைக் கள்வனென்று கூறுதல் தகாது; இவ்வாறிருக்க, இத்தன்மையை ஆய்ந்தறியாமலே என்னை யானே திருடிக்கொண்ட பெருந் திருடனாகிய என்னைக் கள்வனென்னாமல் ஸர்வஸ்வாமியான உன்னைக் கள்வனென்பது என்ன பேதைமை! என்று சமத் காரந்தோன்றக் கூறியவாறு.

பின்னைக்காய் இளவேறேழுந்தழுவிய வரலாறு:— கும்பனென்னும் இடையர் தலைவனது மகளாயும் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப் பிராட்டியை மணஞ் செய்துகொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவருக்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழ எருதுகளையுங் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ் செய்து கொண்டன னென்பதாம்.

வல்லானயர்தலைவனாய் = 'வல்' என்கிற அடைமொழி பசுக்களுக்கு மாகலாம், ஆயர்க்குமாகலாம், ஆயர் தலைவனுக்குமாகலாம். ஆயர் தலைவனுக்கு விசேஷணமாவதிலே ஸ்வாரஸ்யமுண்டு:—இடையர்களில் கொழுத்த இடையன் என்றபடி: இடைச்சாதியன் என்பதை மற்ற இடையர்களைக் காட்டிலும் அதிகமாகக் காட்டிக்கொள்பவன் என்றவாறு. இங்கே நம்பிள்ளையீடு:— "உடம்பிருக்கத் தலைகுளித்தும் தலையிருக்க வுடம்பு குளித்துமிறே திரிவது; (இடையர்) கார்த்திகை புதியதுக்குக் குளித்தார்களாகில் இவன் அதுவுஞ் செய்யாதே இடைத்தனத்திலே ஊன்றி நிற்கும்படியைச் சொல்லுதல், இப்படி யிருக்கை யல்லது பெண் கொடார்களிறே இடையர்."

என்பன், நினைந்து, நைந்து என்ற மூன்றினாலும், எம்பெருமானை மூன்று கரணங்களினாலும் தாம் கெடுத்தமையைக் கூறினாராவர்; என்பன் — எருதேழடர்த்த செயலுக்குத் தோற்று நப்பின்னைப் பிராட்டி சொல்லும் பாசுரத்தைச் சொன்னேன்; இது வாயாலே கெடுத்தமை. நினைந்து — ஒரு வார்த்தை சொல்லும்போது முந்துற நெஞ்சினால் நினைந்தே சொல்லவேண்டுதலால் நினைத்தலுஞ் செய்தேன்; இது மனத்தினால் கெடுத்தமை. நைந்து = அந்தச் சொல்லைச் சொல்லும்போது மெய்யன்புடையார்க்குப்போல உடலம் நீராயலைந்து கரைந்துருகுந் தன்மையை அபிநயித்தேன்; இது மெய்யினால் கெடுத்தமை. ... ... ... ... ... (க)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

நினைந்துநைந்துள்கரைந்துருகி இமையோர்பலரும்முனிவரும் *
புனைந்தகண்ணிநீர்சாந்தம் புகையோடேந்திவணங்கினால் *
நினைந்தவெல்லாப்பொருள்கட்கும் வித்தாய்முதலில்சிதையாமே *
மனஞ்செய்ஞானத்துன்பெருமை மாசூணாதோ? மாயோனே! * (௨)

| | |
|---|---|
| மாயோனே! | ஆச்சரியனான எம்பெருமானே! |
| இமையோர் | (பிரமன் முதலிய) தேவர்களும் |
| முனிவரும் | (ஸநகன் முதலிய) ரிஷிகளுமான |
| பலரும் | பலபேர்களும் |
| நினைந்து | (உனது குணங்களைச்) சிந்தித்து |
| நைந்து | (அதனாலே) சரீரமும் கட்டுக்குலைந்து |
| உள் கரைந்து | மனம் கரைந்து |
| உருகி | நெகிழ்ந்து |
| புனைந்த கண்ணி | தொடுக்கப்பட்ட மாலைகளையும் |
| நீர் | திருமஞ்சனத்தீர்த்தத்தையும் |

| | |
|---|---|
| சாந்தம் | சாத்துப்படியையும் |
| புகையோடு | தூபத்தையும் |
| ஏந்தி | கையிலேந்திக்கொண்டு வந்து |
| வணங்கினால் | தொழுதால், |
| நினைந்த எல்லாம் பொருள்கட்கும் | நினைக்கப்பட்ட ஸகல பதார்த்தங்களுக்கும் |
| வித்து ஆய் | மூலமாகி |
| முதலில் சிதையாமே | ஸ்வரூபவிகாரம் பிறவாதபடி |
| மனம் செய் ஞானத்து | மனத்தினால் செய்யப்பட்ட ஸங்கல்பரூபமான ஞானத்தையுடைய |
| உன் | உன்னுடைய |
| பெருமை | பெருமையானது |
| மாசு உணாதோ | அழுக்கடையாதோ? |

* * * — [நினைந்து நைந்து.] கீழ்ப்பாட்டைக் காட்டிலும் இப்பாட்டு பரம விலக்ஷணமானது. கீழ்த் திருவாய்மொழிகளில் தாம் சொன்ன சொற்களுக்கு அநுதாபம் காட்டினார் கீழ்ப்பாசுரத்தினால்; கீழ்ப்பாசுரத்திற் கூறியதற்கும் அநுதாபம் காட்டுகிறார் இப்பாட்டில். எம்பெருமானைக் கெடுத்துவிட்டேனென்று சொல்வதற்கும் நான் அதிகாரி யல்லேனே; என் அதிகாரத்திற்குட்படாத வார்த்தையை நான் சொல்லிவிட்டேனே யென்று தடுமாறுகிறார். அதாவது என்ன? எனின்; 'பகவத்விஷயத்தில் அதிகரிப்பதற்கு நான் அர்ஹனல்லேன்' என்பதுதானே கீழ்ப்பாட்டில் தெரிவிக்கப்பட்டது. இங்ஙனஞ் சொல்லவேண்டுமானால் "ஶ்ரவஸக்துவெஸூவ ஹி ஶ்ருதிஷெயஃ" என்கிற நியாயத்தினாலே பகவத்விஷயத்தில் அதிகரிக்க ப்ரஸக்தி தமக்குண்டென்பது ஒருவாறு விளங்கிவிடுகின்றது. அப்படி ஆக்ஷேபதஃப்ரஸக்தமாகிற அதிகாரமும் தமக்கு அஸஹ்யம் போலும்: நான் வாய் மூடிக்கொண்டிருக்கவேணுமேயன்றி வாய்திறந்து 'அநர்ஹன்' என்று சொல்லுவதோடு 'அர்ஹன்' என்று சொல்லுவதோடு ஒரு வாசியில்லையென்று திருவுள்ளம் பற்றுகிறார். வேதத்தை அதிகரிக்கத்தகாத யோநியிலே பிறந்தவொருவன் "எனக்கு வேதம் தெரியாது" என்று உள்ளதையே சொல்வதுங்கூட அவத்யமாம்; ஏன்? வேதம் தெரிந்துகொள்வதற்குத் தனக்கு ப்ரஸக்தியுண்டுபோலவும் ஆனால் அதைத் தான் தெரிந்துகொள்ள முயலவில்லைபோலவும் அந்த வார்த்தையினால் தொனிக்கக்கூடுமாதலால்.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே ஸ்ரீரங்கநாதனைத் துதிப்பதாகத் தொடங்கி பகவத் குணங்களின் எல்லையின்மையையும் தமது ஜ்ஞான சக்திகளின் புன்மையையும் நோக்கி * ஸ்தோஷ்யாமஹே வயம் கிமிதி தம் நஸக்நுமஃ = ஸ்துமஹே வயம் கிமிதி தம் ந சக்நுமஃ * என்று அவனைத் துதிக்க என்னாலாகாது என்று சொன்னார்; உடனே இங்ஙனஞ் சொல்வதற்கும் தமக்கு அதிகாரமில்லையென்பதை * யதி ஹி ஸஹஸ்ரவக்த்ராதிவைஹவம் நிஜஸ்வப்நயோஸ்ஸ கிஞ்சநம்ஹாஸ்ரமாஃ | அத ஸேஷவத் மம ச தத்வதேவ வா ஸ்துதிஸக்தி பாவவிபவேபி பாகிதா = யதி மே ஸஹஸ்ரவதநாதிவைபவம் நிஜமர்ப்பயேத் ஸ கில ரங்கசந்த்ரமாஃ, அத சேஷவத் மம ச தத்வதேவ் வா ஸ்துதிசக்தியபாவவிபவேபி பாகிதா * என்ற அடுத்த ச்லோகத்தினால் அருளிச்செய்தார்; அதுவும் இங்கு உணரத்தக்கது.

கீழ்ப்பாசுரத்திற் கூறிய விஷயத்திற்கும் அநுதாபரூபமாக இப்பாசுரம் அமைந்திருக்கின்றதென்னும் விஷயம் இப்பாட்டில் எந்த ஸ்ரீஸூக்தியினால் தெரிகின்றது? என்னில்; இப்பாசுரத்தின் தாற்பரியத்திலிருந்து தொனிக்கின்ற தாற்பரியம் இது. அதனை விவரிக்கின்றேன்;— விலக்ஷணர்களான பிரமன் முதலிய தேவர்கள் நியமங்களோடு உன்னை ஆச்ரயித்தாலுங்கூட, அப்படிப்பட்ட அவர்களின் ஆச்ரயணமும் உனது சிறந்த மேன்மைக்குக் குறையாகுமன்றோ என்பது இப்பாட்டில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிற அர்த்தம். கீழ்ப்பாட்டில் தாம் பண்ணின நைச்யாநுஸந்தானத்தைப் பண்ணுவதற்கு அந்த இமையோர் தாம் அதிகாரிகள் என்பது இதன் தாற்பரியமாக முடிந்தது. அப்படி உயர்ந்தோர் பண்ணவேண்டிய நைச்யாநுஸந்தானத்தைப் பண்ணுவதற்கும் நான் அதிகாரியல்லேன் என்பது அதன் பரமதாற்பரியமாகுமென்றுணர்க.

ஆழ்வார் இங்ஙனம் அருளிச்செய்வதிலிருந்து பல சங்கைகள் உதிக்கும்; எங்ஙனேயென்னில்; பிரமன் சிவனிந்திரன் முதலான தேவர்களுங்கூட எம்பெருமானைத் தொழுவதற்கு யோக்யதையுடையாரல்லர் என்று இங்குச் சொல்லுகின்ற ஆழ்வார் தாமே பலவிடங்களில், அத் தேவர்களின் தொழுகையை எம்பெருமானுக்குச் சிறப்பாக அருளிச்செய்கிறாரே; அன்றியும், 'அத்தேவர்கள் தாம் எம்பெருமானைத் தொழுவதற்கு உரியார்' என்றும் அருளிச்செய்கிறாரே; அன்றியும். ஒருபடியாலும் எம்பெருமானைத் தொழுவதற்கு யோக்யதையற்றவராக இப்போது தம்மைச் சொல்லிக்கொண்டவிவர் மேலே பலவிடங்களில் அவனையே தொழுவதுமாய் அவனையே தொழக் காதலிப்பதுமாய்ப் பாசுரங்களருளிச்செய்கிறாரே; இவையெல்லாம் ஒன்றோடொன்று முரண்பட்டிருக்கவில்லையா? எவ்வண்ணம் பொருந்தும்? என்று சிலர் சங்கிக்கக்கூடும். இவை பரஸ்பர விருத்தங்களான விஷயங்களல்ல; எம்பெருமானது ஒப்புயர்வற்ற மேன்மையை விளக்கும்போது பேசுகிற பாசுரங்களும், அவனது சீலகுணத்தில் கால் தாழ்ந்து உருகி உள்குழைந்து பேசுகிற பாசுரங்களும் ஒன்றோடொன்று முரண்படுமவையல்ல: "எனதாவிதந்தொழிந்தேன்" என்று முந்துற ஆத்ம ஸமர்ப்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பணம் பண்ணுவதும், உடனே "எனதாவியார் யானார் தந்தநீ கொண்டாக்கினை யே" என்று அந்த ஆத்ம ஸமர்ப்பணத்தையும் மறுப்பதும், மறுபடியும் "தாள்களையெனக்கே தலைத்தலைச்சிறப்பத்தந்த பேருதவிக் கைம்மாறாத், தோள்களையாரத்தழுவி யென்னுயிரை அறவிலைசெய்தனன் சோதீ!" என்பதும் ஆகிய இவையெல்லாம் தனித்தனி சாஸ்த்ரார்த்தங்கள் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கும் நியாயமே இங்குங் கொள்ளத்தக்கதாம்.

நினைந்து நைந்து உள்கரைந்து உருகி = இச் செயல்கள் எம்பெருமானை வணங்குகின்ற இமையோர்களுடையவை. அவர்கள் எம்பெருமானை வணங்குதற்கு உடலாகச் சூட்டு நன்மாலைகளையும் நீர் சுடர் தூபங்களையும் சேகரிக்கும்போது நினைப்பதும் நைவதும் உள்கரைவதும் உருகுவதுமாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. 'இவ்வுபகரணங்களை ஏந்திக்கொண்டு நாம் பகவத் ஸந்நிதியிலே சென்றால் பகவான் நம்மைக் குளிரக் கடாக்ஷிப்பனன்றோ?' என்று நினைப்பர்களாம்; பிறகு அந்தக் கடாக்ஷதாரைகளை மாநஸாநுபவமாக அநுபவித்து அவயவங்களில் சில விகாரம் பெறுவர்களாம்; அதன்பிறகு நெஞ்சும் கட்டுக்குலைந்து மங்குவர்களாம். இப்படியெல்லாம் ஆகிறவர்கள் ஆரென்னில்;

இமையோர் பலரும் முனிவரும் = பிரமன் முதலிய தேவர்களும் ஸநக ஸநந்தநாதி மஹர்ஷிகளுமாம். அத் தேவர்கள் தாம் தங்களையே பரதெய்வமாக அபிமானித்துக்கொண்டு அஹங்காரிகளாயிருப்பதாகச் சொல்லும் புடைகளும் பலவுண்டாதலால் அவற்றோடு விரோதம் சங்கிக்க வொண்ணாதபடி நம்பிள்ளை அருளிச்செய்கிறார் — "இவர்கள் ரஜஸ்தமஸ்ஸுக்களாலே அபிபூதரான போது பண்ணும் துர்மாநம் கனத்திருக்குமாபோலே யாயிற்று ஸத்வம் தலையெடுத்தபோது பகவத்குணாநுபவம் பண்ணி சிதிலராம்படியும்" என்று.

தேவர்கள் முக்குணங்களும் கலசப்பெற்றவர்களாதலால் ரஜஸ்தமோகுணங்கள் மிக்கிருக்கும்போது அஹங்காரம் பாராட்டுவர்கள்; ஸத்வகுணம் தலையெடுத்தபோது 'ஆழ்வார்களும் இவர்கட்குக் கீழ்ப்படிதான்' என்னும்படியாகவே அகாதமாக அவகாஹிப்பர்கள் என்றவாறு. ஆகவே, அவர்கள் ஸத்வகுணம் தலையெடுத்திருக்கப்பெற்ற நிலைமை இங்குச் சொல்லப்படுகின்றதெனக் கொள்க. இங்ஙனம் ஸத்வகுணமடியான ப்ரேமமுடையவர்களாதலால் ஆதரத்தோடு தொடுத்த மாலைகளையும் அர்க்கிய பாத்ய ஆசமநீய தீர்த்தங்களையும் சாத்துப்படி தூபதீபங்களையும் ஏந்திக்கொண்டுவந்து வணங்குகின்றனராம்.

"வணங்கினால் உன் பெருமை மாசூணாதோ" என்று அந்வயம். இப்படிப்பட்ட ஸாமாந்யர்கள் வணங்கும்படியாயோ உன் பெருமை யிருப்பது? ஏறக்குறைய உன்னோடு ஒத்திருப்பார் வணங்குவதன்றோ உனக்குத் தகுதி. 'சிங்கத்தைச் சில எறும்புகள் வணங்கின' என்றால் அது எப்படி பரிஹாஸமாகுமோ அப்படியே இவர்கள் உன்னை வணங்கினார்களென்பதும் பரிஹாஸமாய்த் தலைக்கட்டுமதன்றோ என்கை. இதனை மெய்ப்பித்தற்பொருட்டு எம்பெருமானுடைய அஸாதாரணமான வொரு பெருமையை ஒன்றரையடிகளால் அருளிச்செய் கி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ரூர்—நினைந்தவென்று தொடங்கி. புருஷார்த்தோபயோகியான கரணகளேபரங்களை ஸம்ஹார ஸமயத்திலே யிழந்து இறகொடிந்த பறவைபோலே யிருக்கு மிருப்பிலே எம்பெருமானது திருவுள்ளத்தில் ஐயோ! என்று ஓர் இரக்கநினைவு உண்டாகுமன்றே; அப்படிப்பட்ட நினைவுக்கு இலக்கான எல்லாப்பொருள் கட்கும் என்றபடி.

வித்தாய் முதலில் சிதையாமே = உலகத்தில் ஒவ்வொரு காரியப்பொருளுக்கும் உபாதாநகாரணம், ஸஹகாரிகாரணம், நிமித்தகாரணம் என மூன்று காரணங்கள் இன்றியமையாதவை. அப்படியே ஜகத்துக்கும் மூன்று காரணங்களும் வேண்டும். அம்மூவகைக் காரணங்களும் எம்பெருமானே யென்பது வேதாந்திகளின் கொள்கை. இங்கு வித்து என்பதனால் உபாதாந காரணத்வமே முக்கியமாய் விவக்ஷிதம். உலகத்தில் உபாதாந காரணத்தின்படி எங்ஙனே யிராநின்றதென்றால், காரியப்பொருள் உண்டாய்விட்ட பின்பு அந்த உபாதான காரணப்பொருள் முதல் சிதைந்து விட்டதாகவே காணப்படுகிறது; வஸ்த்ரத்திற்குப் பஞ்சு உபாதாந காரணம்; வஸ்த்ரமாகிற காரியப்பொருள் தேறிவிட்ட பின்பு பஞ்சாகிற உபாதாந காரணப்பொருள் முதல் சிதையாதே காணக்கூடியதாக இல்லையன்றே; அப்படியே ஜகத்துக்கு உபாதாந காரணபூதனான பகவானும் ஜகத்ஸ்ருஷ்டி தேறினபின்பு முதல் சிதைந்தானாக வேண்டுமே என்ன, அந்த லௌகிக நியாயம் இங்குக் கொள்ளத்தக்கதன்று; அத்புத சக்தியுக்தனான பகவான் முதலில் சிதையாமே வித்தாகின்றான் எனப்பட்டது.

மனஞ்செய் ஞானத்து உன்பெருமை = திருவுள்ளத்தினாலே செய்யப்பட்ட ஸங்கல்பரூப ஜ்ஞானத்தையுடையனான உன்னுடைய பெருமை என்றபடி. ஆக, இப்படி விலக்ஷணமான பெருமை படைத்தவனுக்குக் கார்யபூதர்கள் செய்கிற வழிபாடுகள் என்ன ஏற்றம்? ஏற்றமில்லை யென்பது மாத்திரமன்று; தாழ்வுமாகும் என்றதாயிற்று. ... ... .... .... .... .... (உ)

மாயோனிகளாய்நடைகற்ற வானோர்பலரும்முனிவரும் *
நீயோனிகளைப்படையென்று நிறைநான்முகனைப்படைத்தவன் *
சேயோனெல்லாவறிவுக்கும் திசைகளெல்லாந்திருவடியால்
தாயோன் * எல்லாவெவ்வுயிர்க்குந்தாயோன் தானோருருவனே. * (௩)

| | |
|---|---|
| மா யோனிகள் ஆய் | பெருமையுள்ள பிறப்பையுடையவர்களாய்க் கொண்டு |
| நடை | ஸ்ருஷ்டி முதலான வியாபாரங்களை |
| கற்ற | அறிந்திருக்கிற |
| வானோர் | தேவர்களும் |
| முனிவரும் | ரிஷிகளும் |
| பலரும் | மற்றும் பலருமாகிய |
| யோனிகளை | காரணபூதர்களான பிராணிகளை |
| நீ படை என்று | நீபடைக்கக்கடவாயென்று |
| நிறை நான் முகனை படைத்தவன் | (ஞான சக்திகள்) நிறைந்த சதுர்முகனை ஸ்ருஷ்டித்தவன் |
| எல்லா அறிவுக்கும் சேயோன் | எல்லா ஞானத்துக்கும் எட்டாதவன் |
| திசைகள் எல்லாம் | ஸகல லோகங்களையும் |
| திரு அடியால் | திருவடியினால் |
| தாயோன் | அளந்தவன் |
| எல்லா எவ்வுயிர்க்கும் | எவ்வகைப்பட்ட ஸகலமான பிராணிகளுக்கும் |
| தாயோன் | தாய்போன்றவன்; |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தான் { இப்படிப்பட்ட எம்பெருமான் | ஓர் உருவனே { (ஸௌசீல்யமாகிற) ஒரு படியை யுடையவனு யிருக்கின்றனே!.

* * * — [மாயோனிகளாய்.] கீழ் இரண்டு பாட்டாலும் எல்லைகடந்த நைச்சியத்தை அநுஸந்தித்து அகலப்பார்த்த ஆழ்வாரைநோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! நீர் இங்ஙனம் நம்முடைய மேன்மையைப் பார்த்து நெகிழ நினைத்தல் தகுமோ? நம்முடைய மேன்மையை மாத்திரமேயோ நீர் பார்ப்பது? நாம் எல்லாரோடும் கலந்தும் தாழநின்றும் பொருந்தும்படியான சீலகுணத்தையும் பார்க்கவேண்டாவோ?' என்று தனது சீலகுணத்தைக் காட்டும் முகமாக உலகளந்தவரலாற்றை நினைப்பூட்ட, அதனை அநுஸந்தித்து அகலவும் மாட்டாமல் அணுகவும்மாட்டாமல் நடுவே நின்று பேசிப் போதுபோக்குகிறபடியாய்ச் செல்லுகின்றது இப்பாசுரம்.

முந்துற மேன்மைக்குணத்தை விரிவாக அருளிச்செய்து பின்னர் சீலகுணத்தைப் பேசி, 'இப்படியும் ஒரு மஹாநுபாவனிருப்பதே!' என்று ஈடுபடுகிறாராயிற்று.

எம்பெருமான் எப்படிப்பட்டவன்? நிறை நான்முகனைப் படைத்தவன். என்னவென்று சொல்லி நான்முகனைப் படைத்தான்? நீ யோனிகளைப் படையென்று சொல்லி நான்முகனைப் படைத்தான். எந்த யோனிகளைப் படையென்று சொன்னான்? மாயோனிகளாய் நடைகற்ற வானோர் பலரும் முனிவருமான யோனிகளைப் படையென்றான் — அதாவது, ஸப்த ரிஷிகள் தசப்ரஜாபதிகள் ஏகாதச ருத்ரர்கள் த்வாதசாதித்யர்கள் அஷ்ட வஸுக்கள் என்றிப்படிச் சொல்லப்பட்டுள்ளவர்களும் விலக்ஷண ஜன்மங்களையுடையவர்களும் தத்தமது அதிகாரங்கட்கு ஏற்ற ஸ்ருஷ்டி முதலியவற்றை நன்கு அறிந்திருப்பவர்களுமான சிறந்த வ்யக்திகளை நீ படை யென்று நியமித்து நான்முகக் கடவுளைப் படைத்தானென்றவாறு.

எல்லாவறிவுக்கும் சேயோன் = பிரமன் முதலானோருடைய அறிவுக்கும் எட்டாதவன் என்றபடி. "தாம் தம்பெருமையறியார்" என்றும் "தன்க்குந் தன் தன்மையறிவரியான்" என்றுஞ் சொல்லுகிறபடியே தனது பெருமை தன்னுணர்வுக்கே விஷயமாகாதது என்னும்போது, மற்றையோருடைய அறிவுக்கு விஷயமாகாதது என்பது சொல்லவேணுமோ? சேயோன் — தூரத்திலிருப்பவன் என்பது பொருள். இப்படி பேரறிவாளருடைய அறிவுக்கும் எட்டாதவனுயிருந்து வைத்து, தானே தன்னைக்கொண்டுவந்து காட்டத் திருவுள்ளம்பற்றுமாகில் தடையின்றிக் காட்டவல்லவன் என்பதைத் திசைகளெல்லாந் திருவடியால்தாயோன் என்றதனால் வெளியிக்கின்றார். பூமிப்பரப்பை யடங்கலும் திருவடிகளாலே தாவியளந்துகொண்டவன். பிராட்டிமார் தொடும்போதும் பூத் தொடுமாபோலே கூசித் தொடவேண்டும்படியான மெல்லிய திருவடிகளைக்கொண்டு கல்லுங் கரடுமான உலகங்களையெல்லாந் தாவி யளப்பதே! என்ற ஈடுபாடும் இதில் உள்ளுறை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இங்ஙனே எல்லார் தலையிலும் திருவடிகளைக் கொண்டுவந்து வைப்பதற்குக் காரணம் கூறுவார்போல் எல்லா வெவ்வுயிர்க்குந்தாயோன் என்கிறார்.

தான் ஒருருவனே ! = எம்பெருமானுடைய எல்லையற்ற மேன்மையையும் அதற்கு எதிர்த்தட்டான நீர்மையையும் பேசி, "இப்படியும் ஒரு பகவான் இருக்கிறபடி என்னே !" என்று வியந்து தலைக்கட்டுகிறார். ஒருருவனு யிருக்கை யாவது மேன்மைபோலே நீர்மையும் அளவிறந்திருக்கையாம். ... (ரு)

தானேருருவேதனிவித்தாய்த் தன்னில்மூவர்முதலாய *
வானேர்பலரும்முனிவரும் மற்றும்மற்றும்முற்றுமாய் *
தானேர்பெருநீர்தன்னுள்ளேதோற்றி அதனுள்கண்வளரும் *
வானேர்பெருமான்மாமாயன் வைகுந்தனெம்பெருமானே. * (சு)

| | |
|---|---|
| தான் | பிரம ருத்ராதிகளொருவருமின்றி ஒருவனேயாகி நின்ற தான் |
| ஓர் உருவே | ஒருருவமுடையனுய்க் கொண்டே |
| தனி | நிமித்தகாரணம் வேறு அல்லாமையால் தனியனை |
| வித்து ஆய் | உபாதான காரணமாய்க் கொண்டு |
| தன்னில் | இப்படி மூவகைக் காரணமான தன் ஸங்கல்பரூபஜ்ஞானத்திலே |
| மூவர் முதலாய வானேர் | பிரமன் சிவன் இந்திரனு கிய மூவர் முதலான தேவர்களும் |
| முனிவரும் | ரிஷிகளும் |
| பலரும் | பல சேதனர்களும் |
| மற்றும் | மற்ற மானிடசாதியும் |
| மற்றும் | மற்ற மிருகம் பறவை முதலியவும்ஸ்தாவரமுமான |
| முற்றும் ஆய் | எல்லாமுமாகி |
| தான் | இப்படி ஸங்கல்பத்தோடு கூடியிருக்கிற தான் |
| தன்னுள்ளே | தனக்குள்ளே |
| ஓர் | ஒப்பற்ற |
| பெரு நீர் | மஹத்தான அர்ணவத்தை |
| தோற்றி | தோன்றுவித்து |
| அதனுள் | அதிலே |
| கண்வளரும் | நித்திரைசெய்கிற |
| வைகுந்தன் | பரமபதநாதன் |
| வானேர் பெருமான் | நித்யஸூரிகளுக்குத் தலைவன் |
| மா மாயன் | மிகவும் ஆச்சரியகுண சேஷ்டிதங்களை யுடையவன்; |
| எம் பெருமான் | எனக்கு ஸ்வாமி. |

* * * — [தானேருருவேதனிவித்தாய்.] ஆழ்வார் நைச்யாநுஸந்தானம் பண்ணி அகல நினைத்தது கிழ்ப்பாட்டில் சிறிது தணியத்தொடங்கிற்று; அதைக் கண்ட சிலர் 'ஆழ்வீர் ! இனி நீர் என் செய்வதாக நினைக்கிறீர்; அணுகப் பார்க்கிறீரோ ? அகலப் பார்க்கிறீரோ ?' என்று கேட்க, நான் அகல நினைத்தாலும் ஸ்வாமியான அவன் விடுவதாக இல்லையே; அவன் ஒன்றுமொன்று குறைவில்லாதவனுயிருந்து வைத்தும் ஸ்ருஷ்டி முதலான க்ருஷிகளைப்பண்ணி என்னை ஒரு பொருளாகக் கொண்டபின் நான் அகல்வேனென்றாலும் தன் ஸௌசில்ய குணத்தினுல் என்னை விடமாட்டாதவனுயிராநின்றுனே யென்கிறார்.

தானேருருவே தனிவித்தாய் = சாந்தோக்ய உபநிஷத்தில் * ஸதேவ ஸௌம்ய ! இதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம * என்று ஓதிக் கிடக்கிறவிடத்தில் 'ஸதேவ' என்றும் 'ஏகமேவ' என்றும் 'அத்விதீயம்'

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்றும் மூன்று வாக்கியங்களிருப்பதனால் அம்மூன்றாலும் மூவகைக் காரணங்களும் எம்பெருமானே யென்கிறது என்று கொள்ளவேணும்; வேறொரு உபாதாந காரண வஸ்து இல்லாமல் தானே உபாதாந காரணபூதனாய், வேறொரு ஸஹகாரி காரணமில்லாமல் அதுவும் தானேயாய், வேறொரு நிமித்தகாரணமில்லாமல் அதுவும் தானேயா யிருப்பவன் என்பதையே அந்த உபநிஷத்வாக்கியம் தெரிவிக்கும். அதுபோலவே இங்கும், வித்தாய், தனிவித்தாய், ஓர் தனிவித்தாய் என்றுகி அம்மூவகைக் காரணமும் தானேயாயிருக்குந்தன்மை சொல்லிற்றாகிறதென்ப. தான் என்பதனால் வேறோர் உபாதாநகாரண மில்லையென்றும், ஓர் என்பதனால் வேறொரு ஸஹகாரிகாரணமில்லையென்றும், தனி என்பதனால் வேறொரு நிமித்தகாரணமில்லையென்றுஞ் சொல்லப்பட்டதென்க.

[தன்னில் மூவர் முதலாய வானோர்பலரு மித்யாதி.] தன்னோடு சேர்ந்து மூவராகநின்றவர்கள் பிரமனும் சிவனுமாவர்; அவர்கள் முதலான தேவர்களையும் ஸநகாதி மஹர்ஷிகளையும் ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் இன்னமுஞ் சொல்லப்படாத மற்றெல்லாவற்றையு முண்டாக்குகைக்காக — என்பது இரண்டாமடிக்குப் பொருள். தன்னில் என்பதற்கு, 'தன்னோடு' என்று பொருள் கொள்ளாமல் 'தன்னுடைய ஸங்கல்பமாகிற ஸ்வரூபத்திலே' என்றும் பொருள் கொள்வர்; இப்பொருளில், மூவர் என்றது இந்திரனையுங்கூட்டி மூவரென்றபடி. "மூவர் முதலாய வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றும் தன்னில் ஆய்" என்று இப்பக்ஷத்தில் அந்வயிக்கவேணும். ஆய் என்றது ஆகைக்காக என்றபடி. பிரமன் சிவனிந்திரன் முதலான தேவர்கள் முதலான எல்லாமும் தானேயாகி என்று முரைப்ப. உலகத்தில் கப்புங் கிளையுமான மரம் வித்துக்குள் ஸூக்ஷ்மமாக வுள்ளதே யென்கிற கொள்கைப்படி, கார்யாவஸ்தையில் ஸ்தூலரூபமாய்த் தெரிகிற எல்லாப்பொருள்களும் காரணாவஸ்தையில் ஸூக்ஷ்மரூபமாகவுள்ளனவே யாதலால் இங்ஙனஞ் சொல்லக்குறையில்லை. ஆக முன்னடிகளிரண்டாலும் எம்பெருமானுடைய காரணாவஸ்தை கூறப்பட்டதாயிற்று.

தானோர் பெருநீர் தன்னுள்ளேதோற்றி அதனுட் கண்வளரும் = இப்படி ஸ்ருஷ்டிப்பதிலே ஒருப்பட்ட தான் தனக்குக் கண்வளர்ந்தருளுகைக்குப் போதும் படியான பரப்பையுடைய ஏகார்ணவத்தைத் தன் பக்கல் நின்று முண்டாக்கி அதனுட் கண்வளர்ந் தருளுகிறபடி. இவன்றான் ஆரென்னில், [வானோர்பெருமான்] நித்யஸூரிகளுக்குத் தலைவன். [மாமாயன்] ஆச்சரியமான குணசேஷ்டிதங்களை யுடையவன். [வைகுந்தன்] திருநாட்டைத் தனக்கு நிலயமாகவுடையவன். [எம்பெருமான்] இச்தப் பதமே இப் பாட்டிற்கு மருமமாகும்: உடைமை தப்பிப்போகத் தொடங்கினால் உடையவன் ஆறியிருப்பனோ? மக்கள் பெறுவதற்காக ஏற்கவே நோன்பு நோற்றுப் படாதபாடுகள்பட்டுப் பிள்ளைபெற்ற தாயானவள் அந்த மகன் நடக்கவல்லனான ஸமயத்திலே தேசாந்தரஞ் செல்வேனென்றால் விட்டு ஆறியிருக்கமாட்டாளன்றோ; அப்படியே நெடுநாளாகத் தன் வாசியறியாமற்போன எனக்கு அறிவைத் தந்தருளித் தன்னை உள்ளபடி யறிவித்தவன், தான்தந்த அறிவைக்கொண்டு நான் விலகிப்போகத் தொடங்கினால்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அவன் எப்படி ஆறியிருக்கக்கூடும்? என்கிற இவ்வளவு கருத்தை உள்ளடக்கி எம்பெருமானே என்றார். .... .... .... .... (ச)

மானேய்நோக்கிமடவாளை மார்வில்கொண்டாய்மாதவா *
கூனேசிதையவுண்டைவில் நிறத்தில்தெறித்தாய்! கோவிந்தா! *
வானார்சோதிமணிவண்ணா! மதுசூதா! நீயருளாய் * உன்
தேனேமலருந்திருப்பாதம் சேருமாறுவினையேனே. * (ரு)

| | |
|---|---|
| மான் எய் நோக்கி மடவாளை | மானை நிகர்த்த பார்வையை யுடையவளாகியபெரிய பிராட்டியை |
| மார்பில் கொண்டாய் | திருமார்பிலே உடைய னாய் (அது காரணமாக) |
| மாதவா | மாதவனென்ற திருநாமம் பெற்றவனாய், |
| கூனே சிதைய | (கூனியின்) கூன் ஒன்றே நிமிரும்படி [மற்ற ஒரு அவயவத்திற்கும் வாட்டமுண்டாகாதபடி] |
| உண்டை வில் நிறத்தில் | சண்டுவில்லை நிமிர்க்கிற ரீதியிலே [சிறிதும் சிரமமின்றி] |
| தெறித்தாய் | நிமிர்த்தவனே! |
| கோவிந்தா | கோவிந்தனே! |
| வான் ஆர் சோதி | வானுலகம் இடமடையும்படியான ஒளியை யுடைய |
| மணி வண்ணா | நீலமணிபோன்ற நிறமுடையவனே! |
| மதுசூதா | மது வென்னு மசுரனைக் கொன்றவனே! |
| நீ | நீ |
| உன் | உன்னுடைய |
| தேனே மலரும் திரு பாதம் | தேனோடுகூடி மலர்கின்ற திருவடித் தாமரைகளை |
| வினையேன் | பாபியான நான் |
| சேரும் ஆறு | கிட்டும்படியாக |
| அருளாய் | கிருபைபண்ணவேணும். |

* * * — [மானேய்நோக்கி மடவாளை.] இப்பாட்டுக்கு இரண்டுவகையாக அவதாரிகை கூறுவர்; முதலிற் பண்ணின நைச்சியாநுஸந்தானம் தலைமடிந்து எம்பெருமான் விஷயத்திலே சிறிது ஆபிமுக்கியத்தைக் கீழ்ப் பாசுரத்திற்காட்டின ஆழ்வார் என்னை யவி அடிமைகொள்ளவேணுமென்று இப்பாட்டில் பிரார்த்திக்கின்றாரென்பது ஒரு அவதாரிகை. — ஆழ்வார்க்கு இப்போதுண்டான ஆபிமுக்கியம் நிலைத்திருக்கவேணுமென்றும், இவரைத் துடிக்கவிட்டே சேர்த்துக் கொள்ளவேணுமென்றுங் கருதிய எம்பெருமான் முகங்காட்டாதே மறைய நிற்க, அது தாளாமல் 'அருளாய்' என்று பிரார்த்திக்கிறாரென்பது மற்றோரவதாரிகை.

மான்பேடையினது நோக்குப்போன்ற நோக்கை யுடையளான ஸ்ரீ மஹாலக்ஷ்மியைத் திருமார்பிலே கொண்டு அதனால் மாதவனென்னுந் திருநாமமுடையோனே!, கூனி கூன் நிமிர்த்த கோவிந்தனே!, பரமபதம் நிரம்பும்படியான தேஜஸ்ஸையும் நீலமணிபோன்ற நிறத்தையு முடையவனே!, மதுசூதனே!, உன்னுடைய பரம போக்யமான திருவடிகளை பாபினேன் பெறும்படி அருள் புரியவேணு மென்கிறார்.

சேதநர்கட்குப் புருஷகாரஞ் செய்வதையே தொழிலாகவுடைய பெரிய பிராட்டியார் திருமார்பிலே நித்ய ஸந்நிதாநம் பண்ணியிருக்கும்போது அருளாமைக்குக் காரணமில்லை! என்பார்போன்று முதலடி யருளிச்செய்தார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



முதலடியிலுள்ள இரண்டு விளிகளில் ஏதேனும் ஒன்று போருமே; அர்த்த பேதமின்றியே இரண்டு விளிகள் எதுக்கு?—என்று சிலர் நினைக்கக்கூடும்: அந்த சங்கைக்குப் பரிஹாரமாக நம்பிள்ளை அருளிச்செய்வது:— "மாம்பழத்தோடு ஒரு ஸம்பந்தமின்றிக்கேயிருக்கச்செய்தே அப்பேரைத் தரிக்குமாபோலேயிறே இவனையொழிய ஸ்ரீமானென்னும் பேரைத் தரிக்கிறவர்கள். அங்ஙனன்றிக்கே......அவள் திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகையாலே மாதவனென்னுந் திருநாமத்தையுடையவனே!" என்று.

உலகத்தில் மற்றும்பல தெய்வங்களும் 'ஸ்ரீமாந் ஸ்ரீமாந்' என்று சொல்லப்படுவதுண்டு; மாம்பழத்தோடு சிறிதும் ஸம்பந்தமில்லாத ஒரு ஜந்துவுக்கு மாம்பழவுண்ணியென்று பேர் வழங்குவதுபோலவேயாகும் அது. எம்பெருமானொருவனுக்கே ஸ்ரீமானென்பது ஏற்கும் என்று விளக்குதற்கே "மானேய் நோக்கி மடவாளை மார்பிற்கொண்டாய்" என்று முந்துற யோகார்த்தவிவரணம் பண்ணிப் பின்பு மாதவா என்றது.

இரண்டாமடியிற் குறித்த வரலாறு:—பலராமனுங் கண்ணபிரானும் வில் விழவுக்கென்று கம்ஸனாலழைக்கப்பட்டு மதுரைக்குச் செல்லுங்கால் ராஜவீதியில் சந்தனக் கிண்ணத்தைக் கையிலேந்திவருகிற மங்கைப்பருவமுடைய ஒரு கூனியைக்கண்டு 'நங்காய்! யாருக்கு நீ இந்தப் பூச்சுக்கொண்டுபோகிறாய்?' என்று விலாஸத்தோடு கேட்டருள, அந்தக் கூனி இவ்வாறு காதலுடையவன் போலக் கண்ணன் அருளிச்செய்தது கேட்டு, அவனது திருக்கண்களாலே மனமிழுக்கப்பட்டவளாய் 'அழகனே! நான் நைகவக்கிரை யென்பவளென்றும், கம்ஸனாலே சந்தனாதிப் பூச்சுக்கள் ஸித்தஞ்செய்யும் வேலையில் வைக்கப்பட்டவளென்றும் நீ அறியாயோ?' என்ன; கண்ணன், 'எங்கள் திருமேனிக்கு ஏற்ற வெகு நேர்த்தியான இந்தப் பூச்சை எங்கட்குக் கொடுக்கவேணும்' என்று சொன்னவுடனே, அவள் 'அப்படியே திருவுள்ளம் பற்றுங்கள்' என்று சொல்லி மிக்க அன்போடு ஸமர்ப்பிக்க, அப் பூச்சைத் திருமேனியிலணிந்து ஸ்ரீக்ருஷ்ணன் இவளிடத்து மிகவும் ப்ரஸந்நனாய், நடுவிரலும் அதன் முன்விரலுங் கொண்ட நுனிக்கையினாலே அவளை மோவாய்க்கட்டையைப் பிடித்துத் தன் திருவடிகளினால் அவள் கால்களை யமுக்கி இழுத்துத் தூக்கிக் கோணல் நிமிர்த்து அவளை மகளிரிற் சிறந்த உருவினளாக்கியருளின னென்பது க்ருஷ்ணாவதாரத்திற் கதை.

ஸ்ரீராமாவதாரத்திலும் *கூனே சிதைய உண்டைவில்நிறத்தில் தெறித்த கதை ஒன்றுண்டு:— இராமன் சிறுவனாயிருந்த காலத்தில், ஒருநாள் கையில் சிறுவில்லும் மண்ணுண்டையுங்கொண்டு விளையாடி வருகையில் ஒருகால், விற்கொண்டு எய்த உண்டை கைகேயியின் வேலைக்காரியான மந்தரையென்னுங் கூனியின் முதுகின் புறத்தே தெறிக்க, அவள் தனது கூனுடைமையை இராமன் இங்ஙனம் பரிஹஸித்தனனென்று தவறாகக் கருதி மனம்வருந்தி, அவன்மேற் சினங்கொண்டு, ராஜபுத்திரனாகையாலே அப்பொழுது ஒன்றுஞ் செய்யமாட்டாமற் சென்று, தனக்கு வாய்க்குந்தருணம் நோக்கிக் கறுக்கொண்டிருந்து,



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பின்பு தசரதன் இராமபிரானுக்கு முடிசூட்ட நிச்சயித்ததை உணர்ந்தவளவில் கோபதாபம்மிக்கவளாகி, அதற்கு எப்படியாவது தான் தடைசெய்யவேண்டுமென்று நிச்சயித்து, கைகேயிக்குக் கலகஞ்செய்து அவள் மனத்தைமாற்றி, அவளைக்கொண்டு இராம பட்டாபிஷேகத்தைத் தவிர்த்து அப்பெருமானை வனம் புகுவித்தனள்—என்று சொல்லுவதொரு இதிஹாஸமுண்டு. இதனைக் கம்பரும் தமது இராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்து அரசியற்படலத்தில் "சிறியரென்றிகழ்ந்து நோவுசெய்வன செய்யல் மற்றிந், நெறியிகந்து யானோர் தீமையிழைத்தலா லுணர்ச்சிநீண்டு, குறியதா மேனியாய கூனியாற் குவவுத் தோளாய்!, வெறியனவெய்தி நொய்தின் வெந்துயர்க்கடலின் வீழ்ந்தேன்" என்ற செய்யுளிற் குறிப்பித்துள்ளார். [இச்செய்யுள் இராமபிரான் வாலிவதமான பின்பு ஸுக்ரீவனுக்கு முடிசூட்டி அவனுக்குச் சில ஹிதோபதேசங்கள் செய்யுமடைவிலே உள்ளது. 'எவர் விஷயத்திலும் வலிமை நிலைகளில் எளியவரென்பதுபற்றி அலக்ஷியஞ்செய்து வருத்தந்தருஞ் செயல்களைச்செய்யாதே; நான் இந்தச் சன்மார்க்கத்தின் வரம்பைக்கடந்து ஒரு தீங்கு செய்ததனாலே கூனியினிடம் கஷ்டங்களையடைந்து துன்பக்கடலில் விழுந்தேன்' என்பது மேற்குறித்த செய்யுளின் கருத்து.

"கூனே சிதைய" என்கிற இவ்விடத்திற்கு மேற்குறித்த ஸ்ரீராமக்ருஷ்ண வ்ருத்தாந்தங்களிரண்டையும் வியாக்கியானங்களில் முன்னோர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். கண்ணபிரானுடைய சரித்திரபரமாகக் கொள்ளும்போது "உண்டைவில் நிறத்தில்" என்பதை ஒரு சொல்வடிவமாகக் கொண்டு, சுண்டுவில்லை நிமிர்ப்பதுபோலே இலேசாகக் கூனி கூன் நிமிர்த்தபடியைச் சொல்லிற்றுகிறது. [நிறத்தில் என்றது - அவ்விதமாக என்றபடி.] "சுண்டுவில்லைத் தெறித்தாப்போலே அநாயாஸேந நிமிர்த்தாய்" என்பது இருபத்தினாலாயிரத்தில் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி.

இனி, ஸ்ரீராமபிரானுடைய சரித்திரபரமாகக் கொள்ளும்பக்ஷத்தில், கூனே சிதைய — (மந்தரையின்) கூன் முன்னும் பின்னும் தள்ளுண்ணும்படியாக [நோவு அடையும்படியாக], உண்டைவில் — சுண்டுவில்லைக்கொண்டு, நிறத்தில் — மருமத்திலே, தெறித்தாய் — எய்தாய் என்று பொருள் காண்க. இங்ஙனே இராமபிரானுடைய சரிதையைக் கூறுவதாகில், கோவிந்தா! என்கிற விளி பொருந்தாதே; காகுத்தா! என்றன்றோ விளிக்கவேண்டும் — என்று சிலர் சங்கிக்கக்கூடும். இதற்கு இருவகையாக ஸமாதானமுரைத்தனர் பூருவர்கள். கோவிந்தா! என்றது பசுக்களை மேய்ப்பவன் என்னும் பொருளில் இங்கு வந்ததன்று; வடமொழியில் பூமிக்கும் கோவென்று வாசகமுண்டாதலால், பூமிக்கு ரக்ஷகனானவனே! என்கிறது. இஃது இராமபிரானுக்கும் விளியாகலாம் என்பது முதல் ஸமாதானம்.

"அன்றிக்கே, தீம்பு சேருவது க்ருஷ்ணனுக்கே யாகையாலே * போம் பழியெல்லாம் அமணன் தலையோடே என்றுமாபோலே அவன் தலையிலே ஏறிட்டுச் சொல்லுதல்." (நம்பிள்ளையீடு.)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்பது இரண்டாவது ஸமாதானம். அதாவது — "கூனேசிதைய வுண்டை வில் நிறத்தில் தெறித்தாய்" என்று இராமபிரானுடைய சரிதையைச் சொல்லி விட்டு, குணக்கடலாகிய இராமபிரான் இப்படிப்பட்ட வொரு தீம்பு செய்ததாகச் சொல்லுவதற்குத் திருவுள்ளமில்லாமல், § "பல்லாயிரவரிவ்வூரிற் பிள்ளைகள் தீமைகள் செய்வார், எல்லாமுன்மேலன்றிப்போகாது" என்கிறபடியே ஊர்ப் பட்ட தீம்புகளையெல்லாம் தனக்கே கொள்ளப்பிறந்த கண்ணபிரான்மேலே இந்தத் தீம்பையும் ஏறிட்டுவிடலாமென்று ஆழ்வார் திருவுள்ளம்பற்றிப்போலும் கோவிந்தா! என்று க்ருஷ்ண ஸம்போதநம் பண்ணிற்று என்றபடி.

மேலே உதாஹரித்த நம்பிள்ளை யீட்டில் * போம்பழியெல்லாம் அமணன் தலையோடே என்ற ஸ்ரீஸூக்தியில் அடங்கிய வரலாறு வருமாறு:— ஒரு கள்ளன் ஒரு பிராமணனுடைய (அன்றைக்குத்தான் சுவர் வைக்கப்பெற்ற) புழைக்கடை யிலே கன்னம்வைக்க, அது ஈரச்சுவராகையாலே இறுத்தியதனால் அந்தக் கள்ளன் மாண்டுபோக, அவ்வளவில் அவனது உறவினர் வந்து பிராமணனைப் பழிதரவேணுமென நிர்ப்பந்திக்க, இரண்டு திறத்தாரும் நியாயாதிபதி பக்கல் செல்ல, அவ்வரசன் அவிவேகியும் மூர்க்கனுமாகையாலே 'பிராமணா! நீ ஈரச் சுவர் வைக்கவே யன்றோ அவன் முடிந்தான், ஆகையாலே நீ பழிதரவேண்டி யதே' என்ன, அவன் 'எனக்குத் தெரியாது; சுவர்வைத்த கூலியாளைக் கேட்க வேணும்' என்ன; அவனை யழைத்து அரசன் விசாரிக்க, அவனும் 'தண்ணீர் விடுகிறவன் அதிகமாக விட்டிட்டான்; நான் என் செய்வேன்?' என்ன; அவனை யழைத்துக் கேட்க, 'குயவன் பெரிய பானையைத் தந்தான், அதனால் நீர் அதிக மாயிற்று, நான் என் செய்வேன்?' என்று அவன்கூற, அரசன் குயவனை யழை த்துக்கேட்க, அவனும் 'என்னால் வந்ததன்று; நான் பானையைச் சிறிதாகவே செய்ய நினைத்தேன்; அது செய்துகொண்டிருக்கும்போது ஒரு தாஸி போக்கு வரத்தாயிருந்தாள்; அவளைப் பார்க்கிற பராக்கிலே பானை பருத்துவிட்டது. நானென் செய்வேன்?' என்ன; பிறகு தாஸியை அழைத்து விசாரிக்க, 'வண் ணான் என் சேலையை விரைவில் கொணர்ந்து தாராமையினாலே போகவரத் திரிந்தேன்' என்று அவள் கூற, வண்ணானை யழைத்துக் கேட்க, அவன் 'துறை யில் கல்லிலே ஓர் அமணன் [திகம்பரச்சாமி] உட்கார்ந்திருந்தான்; எவ்வளவு உரப்பியும் அவன் எழுந்து செல்லவில்லை; பிறகு அவனாகவே எழுந்து சென்ற பின்பு சேலையைத் தோய்த்துத் தரவேண்டியதாயிற்று; நான் என் செய்வேன்; அந்த அமணனே தாமதத்திற்குக் காரணம்' என்று கூற, அந்த அமணனைத் தேடிப்பிடித்துக் கொண்டுவந்து 'நீயன்றோ இத்தனையுஞ் செய்தாய்; நீயே பழி தரவேணும்' என்று அரசன் கட்டளையிட, அவ்வமணன் மௌனச்சாமி யாகை யாலே ஒன்றும் விடை கூறாதிருக்க, 'உண்மையில் பழி தன்னிடத்திலுள்ளத னால்தான் இவன் வாய்திறந்திலன்; இவனே குற்றவாளன்' என்று அரசன் அவன் தலையை அரியக் கட்டளையிட்டான்—என்பது அந்யாயதந்ய சரிதத்தி லுள்ள ஒரு கதை. [அமணன் குற்றஞ் செய்யாதிருக்கவும் அவன் தலையில்

§ பெரியாழ்வார் திருமொழி 2-8-5.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஏறினைப்போலே கண்ணபிரான் தீம்பு செய்யாதிருந்தாலும் பிறருடைய தீம்பும் அவன் தலையில் ஏறுமென்று விநோதமாகக் காட்டினபடி.]

மதுசூதா ! = மதுவென்னும் அசுரனை யொழித்தாப்போலே, நைச்சியாநுஸந்தானம் பண்ணி அகலுகையாகிற என் விரோதியைப் போக்கினாய் என்ற குறிப்பு.

வினையேன் உன் திருப்பாதம் சேருமாறு அருளாய்=கலத்திலிட்ட சோற்றை விலக்குவாரைப்போலே முதலில் நீவந்து கிட்டும்போது அகன்றொழியும்படியான பாபத்தைப் பண்ணின நான் திருவடிசேர்ந்து வாழுமாறு அருள்புரிய வேணும். ... .... .... ... .... (ரு)

வினையேன்வினைதீர்மருந்தானாய் விண்ணோர்தலைவாகேசவா ! *
மனைசேராயர்குலமுதலே மாமாயனேமாதவா ! *
சினையேய்தழையமராமரங்க ளேழுமெய்தாய்சிரீதரா *
இனையாயினையபெயரினாய் என்றுநைவனடியேனே. * (சு)

| | |
|---|---|
| வினையேன் | பாபியான என்னுடைய |
| வினை தீர் | பாபத்தை ஒழிப்பதற்குரிய |
| மருந்து ஆனாய் | ஔஷதமாயிருப்பவனே ! |
| விண்ணோர் தலைவா | நித்யஸூரிநாதனே ! |
| கேசவா | கேசவனே ! |
| மனை சேர் ஆயர் குலம் முதலே | குடிசைகளில் பொருந்திய இடையருடைய குலத்திற்கு முதல்வனானவனே ! |
| மாமாயனே | மிகுந்த ஆச்சரிய குண சேஷ்டிதங்களை யுடையவனே ! |
| மாதவா | மாதவனே ! |
| சினை ஏய் தழைய மரா மரங்கள் ஏழும் | கிளைகளோடு சேர்ந்து தழைகள் பொருந்திய ஆச்சாமரங்களேழையும் (ஸ்ரீராமாவதாரத்தில்) |
| எய்தாய் | (ஓர் அம்பினால்) துளைபடுத்தினவனே ! |
| சிரீதரா | ஸ்ரீதரனே ! |
| இனையாய் | இப்படிப்பட்ட ஸ்வரூபத்தை யுடையவனே ! |
| இனைய பெயரினாய் என்று | இப்படிப்பட்ட திருநாமங்களையுடையவனே ! என்று சொல்லி |
| அடியேன் நைவன் | நான் அழியாநின்றேன். |

* * * — [வினையேன் வினைதீர்.] இப் பாசுரமும் கீழ்ப்பாசுரத்தோடு ஒக்கும். கீழ்ப்பாட்டிலுள்ள 'நீயருளாய், உன்தேனேமலரும் திருப்பாதஞ் சேருமாறு வினையேனே' என்பதை இப்பாட்டோடும் கூட்டி யுரைத்தருளினர் திருக்குருகைப்பிரான்பிள்ளான். ஆதலால் கீழ்ப்பாட்டின் அவதாரிகையே இதற்குமாகும். நைச்சியாநுஸந்தானம்பண்ணி அகன்றது தவிர்ந்து அணுகி அபேக்ஷித்தபோதே எம்பெருமான் முகங்காட்டாமையாலே அவனுடைய குணசேஷ்டிதங்கள் நினைவுக்குவந்து நலிய, திருவுள்ளமுடைந்து பேசுகிறார் என்னவுமாம்.

என்னிடத்துள்ள நீசத்தன்மையைநோக்கி அகன்றுபோக நினைத்த என் வினையை ஸௌசீல்யகுண ப்ரகாசநத்தாலே போக்கி என்னை அபிமுகனாக்கினார். நைச்சியம் பாவித்து அகலாதே நித்யாநுபவம் பண்ணிக்கொண்டிருக்கிற நித்ய முக்தர்களின் திரளிலிருந்து, என்னை சீலகுணத்தாலே அகப்படுத்திக்கொள்ள இங்கு வந்தவனே ! என்கிறார் விண்ணோர்தலைவா ! என்பதனால்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கேசவா = இத் திருநாமத்திற்கு மூவகைப் பொருள்களுண்டு. * க இதி ப்ரஹ்மணோ நாம ஈசோஹம் ஸர்வ தேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந். * என்று ஹரிவம்சத்திலுள்ள நிருக்தியின்படியே பிரமனுக்கும் சிவனுக்கும் நிர்வாஹகன் என்பது ஒரு பொருள். (க்ருஷ்ணாவதாரத்தில்) குதிரைவடிவுகொண்டு கம்ஸப்ரேரணையால் நலியவந்த கேசி யென்னும் அஸுரனை வதஞ்செய்தவன் என்பது மற்றொரு பொருள். சிறந்த மயிர்முடியை யுடையவன் என்பது மற்றொரு பொருள்.

மனைசேராயர்குலமுதலே! மா மாயனே = இடைக்குலத்திலே வந்து பிறந்து, அவர்கள் தங்களுடையதாக அபிமானித்த பொருளையே [வெண்ணெய் முதலியவற்றையே] தாரகமாகக்கொண்டு, அதுதன்னைத் திருடி அமுதுசெய்யவேண்டும்படியாய், அந்தக் களவையும் ஜரிப்பித்துக்கொள்ளமாட்டாதே 'வாயது கையதாக அகப்பட்டுக் கட்டுண்டு அடியுண்டு நிற்கும் நிலையை விவக்ஷித்து இந்த இரண்டு விளிகள் இடப்பட்டன. 'மனைசேர்' என்ற அடைமொழி ஆயர் குலத்துக்குமாகலாம், ஆயர்குல முதல்வனுக்குமாகலாம்; முதற் பக்ஷத்தில், மனையோடு மனைசேர்ந்து எண்ணிறந்துள்ள ஆயர்குலத்திலே முதற் கிழங்காக வந்தவனே! என்றபடி. இரண்டாவது பக்ஷத்திலே, விண்ணோர் மனையைவிட்டு ஆயர்மனையிலே வந்து சேர்ந்தவனான ஆயர்குலமுதலே! என்றவாறு.

சினையேய்தழைய மராமரங்களேழுமெய்த வரலாறு:— ஸுக்ரீவன் இராமனால் அபயப்ரதானஞ் செய்யப்பெற்ற பின்பும் மனந் தெளியாமல் வாலியின் போராற்றலைப்பற்றிப் பலவாறு சொல்லி வாலி மராமரங்களைத் துளைத்ததையும், துந்துபியின் உடலெலும்பை ஒரு யோஜனைதூரந் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக்கூறி, இவ்வாறு போராற்றலமைந்தவனை வெல்வது கூடுமோ? என்று சொல்ல, அது கேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு நம்பிக்கை இல்லையாயின் இப்போது என்ன செய்யவேண்டுவது?' என்ன; ஸுக்ரீவன், 'இராமபிரான் நீறுபூத்த நெருப்புப்போலத் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும்போது சங்கையுண்டாகின்றது; ஏழு மராமரங்களைத் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு விரற்கடைதூரம் தூக்கி யெறிந்தால் எனக்கு நம்புதலுண்டாகும்' என்று சொல்ல; ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாகுமாறு அவனது வார்த்தைக்கு இசைந்து இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது காற்கட்டை விரலினால் இலேசாய்த் தூக்கிப் பத்து யோஜனைதூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட ஸுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கியெறிந்தான்; இப்போது உலர்ந்துவிட்ட இதனைத் தூக்கியெறிதல் ஒரு சிறப்பன்று' என்றுகூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை ஏழு மரங்களின்மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச் சென்று மீண்டு அம்பறாத்தூணியை அடைந்தது என்பதாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இங்கு, மாமரங்களுக்குச் சினையேய்தழைய என்று அடைமொழி கொடுத்தது இராமபிரானுடைய வல்லமையின் கனத்தைக்காட்டும். கிளைகளோடு கிளைகள் நெருங்கித் தழைத்து கிளைத்தபடி இலக்குக் குறிக்க வொண்ணுதபடி நின்ற மாமரங்களையும் அவலீலையாகத் துளைபடுத்தின னென்க. 'நம்மை ரக்ஷிப்பனே மாட்டானே' என்று அடியார்க்குச் சங்கை பிறந்தால், அந்த சங்கையைப்போக்கி அரியன செய்தும் அடியாரைக் காத்தருள்பவன் என்ற மஹாகுணம் இந்தச் சரிதையினல் விளங்கும்.

சிரீதரா! என்றது அந்த மராமரங்களேழையும் எய்து நின்றபோது உண்டான வீரஸ்ரீயின் ஸம்ச்லேஷத்தைச் சொன்னபடி.

இனையாய் = இன்னமும் இப்படிப்பட்ட பலவகையான சேஷ்டிதங்களையுடையவனே! என்றபடி. இனைய பெயரினய் = அந்த சேஷ்டிதங்களைத் தெரிவிக்கின்ற திருநாமங்கள் இங்ஙனே மற்றும் பலவும் வாய்ந்தவனே என்றபடி. [என்று நைவன் அடியேனே.] அருளாய், இரங்காய் என்றாப்போலே சில வினைமுற்றுக்களைக் கூட்டிப்பேசவும் மாட்டாதே திருநாமங்களைச் சொன்னமாத்திரத்திலேயே நைந்துபோகின்றேனடியேன்; இப்படிப்பட்ட என்னை இன்னமும் சிக்ஷியாதே கடுக உன் தேனேமலருந் திருப்பாதஞ் சேருமாறு அருளாய்.

அடியேன்சிறியஞானத்தன் அறிதலார்க்குமரியானை *
கடிசேர்தண்ணந்துழாய்க் கண்ணிபுனைந்தான் தன்னைக் கண்ணனை *
செடியாராக்கையடியாரைச் சேர்தல்தீர்க்கும்திருமாலை *
அடியேன்காண்பானலற்றுவன் இதனில்மிக்கோரயர்வுண்டே ?* (எ)

| | |
|---|---|
| சிறிய ஞானத்தன் | அற்ப ஞானத்தையுடையவனுகிய |
| அடியேன் | நான் |
| ஆர்க்கும் அறிதல் அரியானை | எப்படிப்பட்ட ஞானிகளுக்கும் அறியக்கூடாதவனுய் |
| கடி சேர் தண் அம்துழாய் கண்ணி புனைந்தான் தன்னை | பரிமளம் பொருந்திய குளிர்ந்த அழகிய திருத்துழாய் மாலையைத் தரித்தவனும் |
| கண்ணனை | க்ருஷ்ணனென்ற திருநாமமுடையவனும் |
| அடியாரை | அடியார்களுக்கு |
| செடி ஆர் ஆக்கை சேர்தல் தீர்க்கும் | ஸம்ஸாரமாகிற பெருங்காடு நிறைந்த சரீரஸம்பந்தத்தைத் தவிர்த்துத் தருகின்றவனுமான |
| திரு மாலை | லக்ஷ்மீநாதனை |
| அடியேன் | நான் |
| காண்பான் | காணும் பொருட்டு |
| அலற்றுவன் | கூவுகின்றேனே!, |
| இதனில் மிக்கு | இதனிலும் மேற்பட்டு |
| ஓர் அயர்வு உண்டே | ஒரு அவிவேகமுண்டோ? |

* * * — [அடியேன் சிறிய ஞானத்தன்.] கீழ்ப்பாட்டில் 'நைவன்' என்ற ஆழ்வாரை நோக்கின எம்பெருமான் 'இனி நாம் இவர்க்கு முகங்காட்டாதிருந்தால் இவர் முடிந்துவிடக்கூடும்' என்றெண்ணி இவர்க்கு முகங் காட்டுவதாகத் திருவுள்ளம்பற்ற, அஃதறிந்த ஆழ்வார் பின்னையும் அவனது பெருமையையும் தமது சிறுமையையும் சிந்தித்துப் பின்வாங் குதலைத் தெரிவிக்கும் இந்தப் பாசுரம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நானோ மிகவும் அற்பமான ஞானம் படைத்தவன்; எம்பெருமானோ எப்படிப்பட்ட ஸர்வஜ்ஞர்களுடைய அறிவுக்கும் எட்டாதவன்; போக்யதையைப் பார்த்தாலோ * தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையான்: அறிதலார்க்கு மரியானயிருந்து வைத்து இடையர்க்கும் இடைச்சிகட்கும் தன்னை எளியனாக்கி வைத்தவன்; தன்னையே உபாயமாகப்பற்றி 'ஜராமரணமோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே'' என்கிறபடியே சரீரஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ள நினைக்கும் கைவல்ய காமுகர்களுக்கு அதனைத் தவிர்த்துக்கொடுக்கும் ஸ்ரீமான். அப்படிப்பட்ட விலக்ஷணனான அவனைக் காணவேணுமென்று நீசரிற் கடைகெட்ட நாயேன் அலற்றுகின்றேனே; இதைக்காட்டிலும் மூடத்தனம் வேறுண்டோ? என்கிறார்.

இப்பாட்டில் ஆழ்வார் எம்பெருமானுக்கு அடிமைசெய்யத் தாம் தகுதியற்றவர் என்பதை வெளியிட்டுக்கொண்டே தொடக்கத்தில் அடியேன் என்கிறாரே, இது பொருந்துமோ? என்றொரு சங்கை. இதற்கு சமாதானம்:— அடியேனென்கிற வார்த்தை மநஸ்கரித்துச் சொன்னதன்று; தமக்கு அடிமையுள்ளதாகவொரு அநாதிவாஸனை யிருக்கையாலே அது சொல்லுவிக்கிற வார்த்தை; உலகத்திலும் ஆசார்ய சிஷ்யர்களுக்கும் ஒரு விவாத முண்டாகி சிஷ்யன் ஆசார்யனைக் கடிந்து சொல்லச்செய்தேயும் அவன் வாக்கில் அடியேனென்கிற சொல் பரவசமாக அடிக்கடி வருவதைப் பார்க்கலாம்; 'தேவரீர் இப்படிச்செய்தால் அடியேனுக்கு ப்ரமாதமான கோபம்வரும்' என்கிறான்; 'கோபம்வரும்' என்கிற வார்த்தைக்கும் 'அடியேன்' என்கிற வார்த்தைக்கும் எவ்வளவு தூரமுண்டு? சிறிதேனும் பொருத்தமுண்டோ? இல்லையாயிருக்கவும் சொற்பழக்கத்தினலன்றோ அடியேன் என்று அந்த விவாத ஸமயங்களிலும் வாக்கில் வந்துவிடுகிறது; அதுபோலவே இங்கும் ஆழ்வார் அடிமைக்கு இறாய்க்கச்செய்தேயும் வாஸநா பலத்தாலே அடியேனென்று மெய்மறந்து சொல்லிவிட்டார் என்பது ஒரு ஸமாதானம். அன்றியே, இப்போது அடியேனென்றது அடிமைத்தொழில் செய்யத் தமக்கு அர்ஹதையுண்டென்று இசைந்து சொல்லுகிற வார்த்தையன்று; ஜீவாத்மாவுக்கு ஞானம் ஆனந்தம் என்கிற குணங்கள் இருப்பதுபோல சேஷத்வமென்கிற ஒரு குணமுமிருப்பதாக ஸ்வரூபத்தை ஆழ்வார் அறிந்தவராதலால் அஹம் என்று சொல்லுகிற ஸ்தானத்திலே அடியேனென்கிறாரத்தனை என்பது மற்றொரு ஸமாதானம்.

சேடியாராக்கையடியாரைச் சேர்தல் தீர்க்குந் திருமாலை என்கிற மூன்றாமடி மிகவும் ஆழ்ந்த கருத்தை யுட்கொண்டது; [செடியாராக்கை சேர்தல் தீர்க்கும்] பிறப்பதும் இறப்பதுமாகிற ஸம்ஸார பந்தத்திற்கு மூலமான சரீர ஸம்பந்தத்தைப்போக்கித் தருமவன் என்று பதப்பொருள். இங்ஙனே, சரீர ஸம்பந்தம் மறுபடியும் என்றைக்கு மூண்டாகாதபடி பகவான் அருள்புரிவது கைவல்ய மோக்ஷத்தை விரும்புகின்றவர்களுக்கு முண்டு, பரமபதத்தை விரும்புகின்றவர்களுக்குமுண்டு. வாசி என்னவென்னில்; சரீர ஸம்பந்தத்தைப் போக்கிக் கொடுப்பதுடன் தன்னடிக்கீழ்ச் சேர்த்துக்கொள்வதாகிற சிறந்த புருஷார்த்தத்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தையுங் கொடுப்பதுண்டு மோக்ஷார்த்திகளுக்கு. கைவல்யார்த்திகளுக்கோ வென்னில் அது கிடையாது. இவ்விடத்தில் * செடியாராக்கை யடியாரைச் சேர்தல் தீர்க்கு மென்றது மேற்சொன்ன இருவகைப்பட்ட அதிகாரிகட்கும் ஒக்குமாயினும் இங்குக் கைவல்யார்த்திகளையே விவக்ஷித்துச் சொல்வதாகக் கொள்வதே ப்ரகரணத்திற்கு நன்கு பொருந்தும். ஆறுயிரப்படியில் — "இவனைக் காணவேணுமென்று ஆசைப்படாதே இவன் பக்கலிலே கைவல்யாதி ப்ரயோஜநங்களைக் கொண்டு அகன்றுபோமவர்கள் என்ன பாக்யம் பண்ணினரோ? நானும் அங்ஙனேயாகப் பெற்றிலேனே! என்று சோகிக்கிறார்" என்று பிள்ளான் பணித்தது பரமபோக்யம். கைவல்ய மோக்ஷத்தையும் அதனை விரும்புகின்ற அதிகாரிகளையும் ஆழ்வார் பல விடங்களிலும் நிந்திப்பவரே யானாலும் இங்கு ஒருவாறு புகழ்ந்து கூறுகின்றாரென்பது உட்கருத்து. எம்பெருமானைக் கிட்டி அவனுக்கு ஒரு அவத்யத்தை விளைக்கப்புகாமல் தங்களளவிலே தாங்கள் நிற்கிறார்களன்றோ அந்தக் கைவல்யார்த்திகள்; இது மிகவும் பாங்கு என்பது இங்கு ஆழ்வார் திருவுள்ளம். இங்கே பரம போக்யமான நம்பிள்ளையீடு காண்மின்:—

> "ஜராமரணமோக்ஷாய மாமாச்ரித்ய யதந்தி யே என்று அவனையே உபாயமாகப் பற்றி, தூறுமண்டின சரீரத்தை யறுத்துக்கொள்ளு மடியாருண்டு — கேவலர், அவர்களுக்கு அத்தைத் தவிர்த்துக்கொடுக்கும் ஸ்ரீமானை. அவர்கள் பின்னை அடியாரோவென்னில்; 'அடியாராவார் அவர்களே' என்றிருக்கிறார். † என்றியவென்னில், சேஷிக்கு அதிசயத்தை விளைக்குமவர்களிறே சேஷபூதராகிறார். என்னைப் போலே கிட்டி அவனுக்கு அவத்யத்தை விளைக்கப்பாராதே ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுத்துக்கொண்டு கடக்கநிற்கிறவர்களிறே."

அடிமைத்தொழிலை விரும்பாதவர்களான கைவல்யார்த்திகளை இங்கு அடியாரென்னலாமோ? என்கிற சங்கைக்கும் பரிஹாரம் மேலே காட்டிய நம்பிள்ளை ஸ்ரீஸூக்தியிலுள்ளது காண்க. உண்மையாக அவர்கள் தாம் அடியவர் என்பது இப்போது ஆழ்வார் திருவுள்ளம். தம்மைப்போலே அவர்கள் எம்பெருமானைக் கிட்டி அவத்யத்தை விளைக்கப்புகாமையாலென்க.

மூன்றாமடியில் கைவல்யார்த்திகளைப் புகழ்ந்து கூறுதல் சொல் தொடையில் சிறிது மில்லையாயினும், சொற்செறிவில் அது நன்கு தொனிக்கும். இது பரிகராலங்கார மரியாதை.

கைவல்யார்த்திகளே சிறந்தவர்களென்று அவர்களைக் கொண்டாடவேண்டும்படியாக உமக்கு இப்போது என்ன இழிவு வந்துவிட்டதென்ன; அடியேன் காண்பானலற்றுவன் என்கிறார், எம்பெருமானை ஸேவிக்கத் தகாத நீசனாகிய நான் அவனை ஸேவிக்கவேணும் ஸேவிக்கவேணுமென்று அலற்றுகின்றேனல்லவா; இது அவனுக்கு அவத்யமன்றோ? இப்படி அந்தக் கைவல்யார்த்திகள் அலற்றுகின்றார்களில்லை யன்றோ என்றபடி.

† என்றியவென்னில் — ஏனென்னில் என்றபடி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

இதனின்மிக்கு ஓரயர்வுண்டே? = கீழுள்ள காலங்களில் * மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து நித்ய ஸம்ஸாரியாய்த் தொலைந்தேனே, அந்த நிலைமையி லிருந்த அவிவேகமே நன்றுபோலும்; அப்போது நான் எம்பெருமானைக்கிட்டி அவனுக்கு நிறக்கேடு உண்டாக்கப் பார்த்திலேனே. * மயர்வறமதிநலமரு ளப்பெற்ற இப்போதன்றோ அவனுக்கு நான் அவத்யம் விளைப்பது; இதிற் காட்டில் அவிவேகமுண்டோ? என்கிறார். நைச்யாநுஸந்தானத்திற்கு இப் பாசுரந்தான் எல்லை நிலம். இதற்கு மேற்பட நைச்யம் அநுஸந்திக்க வழி யில்லை யென்க. .... .... ... ... .... (எ)

உண்டாயுலகேழ்முன்னமே உமிழ்ந்துமாயையால்புக்கு *
உண்டாய்வெண்ணெய்சிறுமனிசர் உவலையாக்கைநிலையெய்தி *
மண்தான்சோர்ந்ததுண்டேலும் மனிசர்க்காகும்பீர் * சிறிதும்
அண்டாவண்ணம்மண்கரைய நெய்யூண்மருந்தோ! மாயோனே! * (அ)

| | |
|---|---|
| மாயோனே | ஆச்சரிய குணசேஷ்டிதங் களையுடையவனே! |
| உலகு ஏழ் | ஏழுலகங்களையும் |
| முன்னமே உண்டாய் | முற்காலத்திலே திருவயி ற்றிலே வைத்தாய்; |
| உமிழ்ந்து | அவற்றை வெளிப்படுத்தி |
| சிறு மனிசர் | அற்ப மனிதருடைய |
| உவலை | அருவருப்பான |
| யாக்கை நிலை | உடம்பினது நிலைமையை |
| எய்தி | அடைந்து |
| மாயையால் புக்கு | மாயையினால் இவ்வுலகில் வந்து சேர்ந்து |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| உண்டாய் | அமுதுசெய்தாய்; |
| மண் தான் சோர்ந்தது உண்டேனும் | (திருவயிற்றிலே) மண்கட் டிகள் மிச்சப்பட்டிருந் தாலும் |
| மனிசர்க்கு | மனிதர்கட்கு |
| ஆகும் | உண்டாகக்கூடியதான |
| பீர் | வெள்ளைமாந்தம் |
| சிறிதும் | அற்பமும் |
| அண்டாவண்ணம் | சோராதிருக்கும்படி |
| மண் கரைய | அந்த மண்கட்டிகள் கரை வதற்கு |
| நெய் ஊண் மருந்தோ | நெய் அமுதுசெய்தது மருந்தோ? (அல்ல.) |

* * * — [உண்டாயுலகேழ்முன்னமே.] இப் பாட்டின் ஸந்நிவேசத்தை ஊன்றி நோக்குமிடத்து எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் விநோதமானவொரு ஸம் வாதம் நிகழ்ந்தமை நன்கு புலப்படும்.

கீழ்ப்பாட்டில் எல்லைகடந்த நைச்யாநுஸந்தானம் பண்ணிப் பின்வாங்கின ஆழ்வாரை எம்பெருமான் நல்லதோருபாயத்தினால் தன்னோடு பொருந்தவிட் டுக் கொள்ளவேணுமென்று பார்த்து அவரோடே பேசத் தொடங்கினான்; 'வாரீர் ஆழ்வீர்! என்னுடைய செயல்களெல்லாம் உமக்கு நன்றாய்த் தெரியு மன்றோ?' என்றான். அவற்றை எம்பெருமான் வாய்கொண்டே கேட்கவேணு மென்னும் விருப்பமுடைய ஆழ்வார் 'உன்னுடைய செயல் எனக்கு ஒன்றும் தெரியாது' என்றார்.

எம்பெருமான்:— இப்படி நீர் சொல்வது மெய்தானா? இப்படியும் பொய் சொல்லலாமா? இப்போது கேட்கிறேன் சொல்லும்; நான் ஒரு காலத்திலே உலகங்களெல்லாவற்றையு மெடுத்து வயிற்றினுள்ளே அடக்கிவைத்துப் பிறகு



Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.
CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வெளிப்படுத்தினேனென்பதும் திருவாய்ப்பாடியிலேபுக்கு வெண்ணெய் விழுங்கினேனென்பதும் உமது காதில் விழுந்ததில்லையா ? உண்மையாகச் சொல்லும்.

ஆழ்வார்:— ஆம்; கேட்டிருப்பதுண்டு; "களிர்மதிச்சடையனும் நான்முகக் கடவுளும், தளிரொளி யிமையவர்தலைவனுமுதலா, யாவகையுலகமும் யாவருமகப்பட, நில நீர் தீ கால் சுடரிருவிசும்பும், மலர் சுடர் பிறவுஞ் சிறிதுடன் மயங்க, ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவதுமகப்படக் கரந்து, ஓராலிலைச் சேர்ந்த எம்பெருமாமாயனையல்லது, ஒரு மா தெய்வம் மற்றுடையமோ யாமே" என்றும், "மத்துறுகடை வெண்ணெய்களவினில் உரவிடையாப்புண்டு" என்றும் அடியேனே சொல்லியுமிருக்கிறேனே.

எம்பெருமான் :— ஆழ்வீர்! இவ்விரண்டு காரியமும் நான் எதற்காகச் செய்தேன் ? தெரியுமா ? உலகங்களை உண்டுமிழ்ந்து வெண்ணெயுண்டது எதற்காக ? ஆராய்ந்து சொல்லும் பார்ப்போம்.

ஆழ்வார் :— உன்னுடைய காரியங்களுக்கெல்லாம் காரண மறிவாரார்? ஏதோ உன் திருவுள்ளத்தில் தோன்றின காரியங்களையெல்லாம் நீ செய்துகொண்டிருக்கிறாய்; எனக்கொன்றும் காரணந் தெரியாது.

எம்பெருமான்:— உமக்குத் தெரியாதாகில் நான் சொல்லக் கேட்கலாமன்றோ? சொல்லுகிறேன், கேளும். பிரளயங் கொள்ளாதபடி உலகங்களை வயிற்றிலடக்கி நோக்கினேன்; பிரளயம் நீங்கினவாறே அவ்வுலகங்களை வெளிப்படுத்தினேன்; உள்ளடக்கியிருந்த வுலகங்களில், வெளிப்படாமல் உள்ளேயே மிச்சமாய் நின்றுவிட்டது ஏதேனு மிருந்தாலு மிருக்கக்கூடும்; அந்த மண்ணும் கரைந்து வெளிவந்துவிடட்டுமென்றே திருவாய்ப்பாடியில் வெண்ணெயும் நெய்யுமுண்டேன் காணும்.

ஆழ்வார் :— இது யாரை மயக்குகிற வார்த்தை ? உலகமுண்டுமிழ்ந்தது எப்போதோ போயிற்று; வெண்ணெயுண்டது மற்றெப்போதோ ஆயிற்று? 'அதற்கு மிதற்கும் என்ன ஸம்பந்தம்?' திண்ணைக்குத் தேள்கொட்டத் தீர்த்தமிடாவுக்கு நறிகட்டிற்று' என்னுமாபோலே நல்ல கார்ய காரண பாவஞ்சொல்லுகிறாய் பிரானே!.

எம்பெருமான்:— 'நான் வெண்ணெயுண்டதற்கு என்ன காரணமிருக்கும், நீர் சொல்லும்' என்றால் எனக்குத் தெரியாதென்கிறீர்; உள்ள காரணத்தை நானே சொன்னாலும் இது அஸம்பாவிதமென்கிறீர். நான் சொல்லுகிற காரணம் தவறாக இருந்தால் நீர்தாம் ஆலோசித்து ஒரு காரணம் சொல்லும்.

ஆழ்வார்:— ஆச்ரிதர்களின் ஸம்பந்தம்பெற்ற வஸ்துவே உனக்குத் தாரகமாதலால் வெண்ணெயுண்டாயத்தனை; இதுதான் காரணம்; வேறு காரணம் பரிஹாஸ்யம்.

எம்பெருமான்:— ஆழ்வீர்! ஆச்ரிதர்களின் வஸ்துவே நமக்குத் தாரகமென்பதை நீர் நன்கு அறிந்திருக்கிறீரன்றோ? உம்முடைய உடலும் எனக்கு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அந்த வெண்ணெய்போன்றதே காணும்; இதுவே எனக்குத் தாரகங்காணும்: ஆனபின்பு நீர் உம்மைக்கொண்டு அகல்வீராகில், திருவாய்ப்பாடியில் வெண்ணெயூண் விலக்கினர்புக்க லோகம் புகுவீரத்தனை; இனி நம்மை அணுகப் பாரும்.

இங்ஙனம் எம்பெருமான் சோதிவாய் திறந்து சொல்லிவிட்ட பின்பு, மேலே ஒன்றும் வாய்திறக்க வழியில்லாத ஆழ்வார் எம்பெருமானது கருத்தைத் தாம் அறிந்தமை தோற்றவும் மேலே காட்டின ஸம்வாதம் வெளிப்படவும் பாங்காக இப் பாசுர மருளிச்செய்கிற அழகு பாரீர். இவ்வளவு ஆழ்ந்த கருத்தை அழகாகக் கண்டுபிடித்து வியாக்கியானங்கள் அமைத்தருளின பூருவாசாரியர்களின் மதிக்கு மண் விண்ணெல்லாங்கூடியும் விலைபோருமோ?

உண்டாயுலகேழ்முன்னமே = முடிவில் மஹா ப்ரளயப் பெருங்கடல் வெள்ளத்தில் உலகங்களெல்லாம் அழியப்புக, திருமால் அவற்றையெல்லாம் தனது விசித்திர சக்தி விசேஷத்தாலே சிறிய திருவயிற்றிலே விசாலமாக இருத்தி ஆதிசேஷாம்சமான சிறியதோர் ஆலந்தளிரிலே யோகநித்திரை புரிவதாகவும், அவ்வுலகங்களைப் பிரளயம் நீங்கினபின் வெளிப்படுத்துவதாகவும் நூற்கொள்கை, இங்கு 'முன்னமே' என்றதனால் வெண்ணெ யுண்டதற்கு எம்பெருமான் இயம்பின காரணம் அஸம்பாவிதமென்று ஆழ்வார் மறுத்தமை காட்டப்பட்டது. 'நெய்யூண் மருந்தோ?' என்றதனால், 'வெண்ணெய் நெய் முதலானவற்றை யுண்டது மண் கரைவதற்கு மருந்தாக' என்று எம்பெருமான் கூறினனென்பது விளங்கும்.

வெண்ணெய் திருடி அமுதுசெய்ய விரும்பி அதற்காக இக்ஷ்வாகு வம்சத்திலே க்ஷத்ரிய குமாரனாய்ப் பிறந்தால் அது கிட்டாதேயென்று க்ஷுத்ரரான மனிசருடைய ஹேயமான சரீரத்தின் நிலையை அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தானத்துக்கு உண்டாக்கிக் கொண்டுவந்தாய் என்பது இரண்டாமடியின் கருத்து.

மண்தான் சோர்ந்ததுண்டேலும் = பிரளயத்தில் உள்ளடக்கிவைத்த உலகங்களைப் பிறகு வெளிப்படுத்தியபோது உள்ளே சில மண்கள் நின்றிருக்கலாம்; ஆனால் அந்த மண் கரைவதற்காக நெய்யும் வெண்ணெயு முண்டேனென்று நீ சொல்வது பொருந்தாது என்கிறார்.

"மனிசர்க்கு ஆகும் பீர் சிறிது மண்டாவண்ணம்" என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறுவர். இந்த வாக்கியத்தை 'மண்கரைய' என்பதனோடு அந்வயித்துப் பொருள் கொள்வது ஒரு பக்ஷம்; 'நெய்யூண்' என்பதனோடு அந்வயித்துப் பொருள்கொள்வது மற்றொரு பக்ஷம், முந்தின பக்ஷத்தில், பீர் என்று நிறவேறுபாட்டுக்குப் பெயர். (வைவர்ண்ய மெனப்படும்.) வயிற்றினுள்ளே மண் தங்கினால் மனிசர்கட்கு நிறவேறுபாடு உண்டாவது இயல்புதானே; இப்படிப்பட்ட நிறவேறுபாடு உண்டாகாமல் மண் கரைவதற்காக என்றபடி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மற்றொரு பக்ஷத்தில், சிறிதும் என்பதற்கும் பீர் என்பதற்கும் அர்த்தம் ஒன்றே; மனிசர்க்கு ஆகும்படியாக மிகச் சிறிதளவுகூட நெய் மிச்சப்படாதபடி அமுது செய்வதோ மருந்து? என்றவாறு.

'மருந்தோ' என்ற ஓகாரம் - அன்று என்ற பொருளைத்தரும். மாயோனே ! என்றது - ஆச்ரிதரின் ஸம்பந்தம்பெற்ற பொருளாலன்றி வேறொன்றால் தரிப்புறாதபடியான வ்யாமோஹத்தாலே வெண்ணெயும் நெய்யு முண்டாய் என்ற குறிப்பு. அப்படிப்பட்ட வ்யாமோஹத்தினால் 'தான் உம்மையும் விரும்புகின்றேனென்று எம்பெருமானுரைத்தது உள்ளுறை. .... .... (அ)

மாயோம்தீயவலவலைப் பெருமாவஞ்சப்பேய்வீய *
தூயகுழவியாய்விடப்பாலமுதா அமுதுசெய்திட்ட
மாயன் * வானோர்தனித்தலைவன் மலராள்மைந்தன் எவ்வுயிர்க்கும்
தாயோன் * தம்மானென்னம்மான் அம்மாமூர்த்தியைச்சார்ந்தே. * (கூ)

| | | | |
|---|---|---|---|
| தீய | கொடிய வினைகளை யுடையவளாய் | வானோர் தனி தலைவன் | நித்ய ஸூரிகளுக்கு அத்விதீயநாதனும் |
| அலவலை | பஹுஜல்பிதங்களையுடையவளாய் | மலராள் மைந்தன் | திருமகள் கொழுநனும் |
| பெரு மா வஞ்சம் | மிகப் பெரிய வஞ்சகையான | எவ் உயிர்க்கும் தாயோன் | எல்லாவுயிர்களுக்கும் தாய்போன்றவனும் |
| பேய் | பூதனையானவள் | தம்மான் | தனக்குந்தானே ஸ்வாமியும் |
| வீய | முடியும்படி | என் அம்மான் | எனக்கு ஸ்வாமியும் |
| தூய குழவி ஆய் | பசுங்குழந்தையாகி | அ மா மூர்த்தியை | அப்படிப்பட்ட மேலான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையனுமான பெருமானை |
| விடம் பால் அமுது ஆ | (அந்தப் பூதனையின்) விஷங்கலந்த பால் அமிருதமாம்படி | சார்ந்து | கிட்டி |
| அமுது செய்திட்ட | அமுதுசெய்த | மாயோம் | இருவரும் மாயாது வாழக்கடவோம். |
| மாயன் | ஆச்சரியஸ்வபாவனும் | | |

* * * — [மாயோம் தீயவலவலை.] கீழ்ப்பாட்டில் எம்பெருமான் வெண்ணெயின் ப்ரஸ்தாவமெடுத்து ஆழ்வார் வாயை மூடுவித்தானே; அதற்குமேல் ஆழ்வார் — 'எம்பெருமானே ! திருவாய்ப்பாடியில் வெண்ணெய் உனக்குப் பரமபோக்யமென்பது மெய்யே; ஒப்பற்ற பரிவுடைய யசோதைப்பிராட்டி முதலானாருடைய வெண்ணெ யாகையாலே அஃது உனக்கு அமுதமாயிருக்கும்; பாபியான என்னுடைய ஸம்பந்தம் உனக்கு விஷமாயிருக்குமே' என்றார்; அது கேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர் ! அப்படி விஷமானாலும் நமக்குக் குறையில்லை காணும்; பூதனையின் கதை உமக்குத் தெரியாமை யில்லையே; அவளுடைய விஷமும் நமக்கு அமுதமாயிற்றன்றோ; அதுபோலவே உம்மால் விஷமென்று நினைக்கப்படுவதும் எனக்கு அமுதமேயாகத் தடையில்லை' என்று சொல்லிக்கொண்டு ஆழ்வாரது திருமேனியை மேல்விழுந்து கைக்கொள்ள, இனி அகல்வேனல்லேனென்று பொருந்துகின்றாரிதில். "விடப்பாலமுதா அமுது செய்திட்ட மாயன்" என்று இப்பாட்டிலுள்ள சொற்போக்குக்கு இந்த அவதாரிகை இணங்கியதே.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பாட்டின் தலையிலுள்ள மாயோம் என்பது வினைமுற்று; "அம்மாமூர்த்தியைச்சார்ந்துமாயோம்" என்று அந்வயம். பிரிகை யென்றும் மாய்கை யென்றும் பரியாயம். இனிமேல் ஒருகாலும் பிரிந்து தொலைபக்கடவோமல்லோம் என்கிறார். 'மாயேன்' என்று ஒருமையாகச் சொல்லாமல் பன்மையாகச் சொன்னதனால் எம்பெருமானையுங் கூடிக்கொண்டு சொல்லுகிறாரென்பது பெறப்படும். சேதநனைவிட்டுப் பிரிவது எம்பெருமானுக்கு மாய்வு; எம்பெருமானை விட்டுப் பிரிவது சேதநனுக்கு மாய்வு; இருவரும் கூடியே யிருந்திட்டால் ஒருவர்க்கும் மாய்வில்லை யாதலால் 'அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி யாயிரம் பல்லாண்டு' என்றாராயிற்று,

'தீயவலவலைப் பெருமாவஞ்சம்' என்னுமளவும் பேய்ச்சிக்கு விசேஷணம்.—* ஒருத்தி மகனாய்ப்பிறந்து ஓரிரவி லொருத்திமகனா யொளித்து வளர்கின்ற ஸ்ரீகிருஷ்ண சிசுவை நாடி யுணர்ந்து கொல்லும்பொருட்டுக் கஞ்சன் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனை யென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ண சிசுவை யெடுத்துத் தனது நஞ்சுதீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானாகிய குழந்தை அவ் வரக்கியின் ஸ்தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தருளினன் என்பது பேய்வீயத் தூயகுழவியாய்விடப் பாலமுதாவமுது செய்திட்ட வரலாறு.

அலவலை = அளவுகடந்து வார்த்தை சொல்லுகிறவனுக்கு 'அலவலை' என்று பெயர்; பூதனை யசோதையின் உருக்கொண்டுவந்து யசோதைபோலவே பரிவு தோற்றப் பல வார்த்தைகளுஞ் சொன்னதுபற்றி அவளை இங்கு அலவலை யென்றது. [தூய குழவியாய்] ஈச்வரத்தன்மை கலசாத வெறுங் குழந்தையாய் என்றபடி. ஈச்வரத்தன்மையில்லையாகில் விஷத்தால் முடிந்திருக்கவேண்டுமே; அதனை அமுதமாக அமுது செய்தமை எங்ஙனே? என்னில்; "விஷம் அம்ருதமாம் முஹூர்த்தத்திலேயாயிற்று பிறந்தது" என்கிறார் நம்பிள்ளை. பூதனை முதலானார் இவனுடைய ஈச்வரத்தன்மையினால் முடிந்தார்களல்லர்; இவன் பிறந்த முஹூர்த்தத்தின் வன்மையால் முடிந்தார்களத்தனை என்றபடி. இது ரஸோக்தி.

[விடப்பால் அமுதாவமுது செய்திட்ட.] "𑌸𑍍𑌤𑌨𑍍𑌯𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑌸𑌂𑌮𑌿𑌶𑍍𑌰𑌂 𑌰𑌸𑍍𑌯𑌮𑌾𑌸𑍀𑌜𑍍𑌜𑌗𑌦𑍍𑌗𑌰𑍋𑌃 = ஸ்தந்யம் தத் விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீத் ஜகத்குரோ:" என்ற [ஹரிவம்ச] ப்ரமாணத்தை அடியொற்றி அருளிச்செய்தபடி. இப்படி அமுதுசெய்த மாயனும், நித்யஸூரிகளுக்கு அத்விதீய நிர்வாஹகனும், தாமரையைப் பிறப்பிடமாகவுடைய பிராட்டிக்கு போக்யமான யௌவனத்தையுடையனும், ஸகலாத்மாக்களுக்கும் தாய்போல் பரிவனும், தனக்குத் தானே கடவனும், என்னை அகலவொட்டாமல் இழுத்துப்பிடித்துக்கொண்ட ஸ்வாமியும்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அதுக்கடியான விலக்ஷண விக்ரஹத்தை யுடையனுமான பெருமானை அணுகி இனி ஒருகாலும் பிரியக்கடவேனல்லேன் என்றாராயிற்று. .... ... (௯)

சார்ந்தவிருவல்வினைகளும்சரித்து மாயப்பற்றறுத்து *
தீர்ந்துதன்பால்மனம்வைக்கத்திருத்தி வீடுதிருத்துவான் *
ஆர்ந்தஞானச்சுடராகி அகலம்கீழ்மேலளவிறந்து *
நேர்ந்தவுருவாயருவாகும் இவற்றினுயிராம்நெடுமாலே. * (௧௦)

| | | | |
|---|---|---|---|
| சார்ந்த | சேர்ந்திருக்கிற | ஆர்ந்த | பரிபூர்ணமான |
| இரு வல் வினைகளும் | (புண்யபாப ரூபங்களான) இருவகைப்பட்ட வல் வினைகளையும் | ஞானம் சுடர் ஆகி | (ஸ்வயம்ப்ரகாச) ஞானவொளியையுடையனாய் |
| சரித்து | தொலைத்து | அகலம் கீழ் மேல் அளவு இறந்து | சுற்றும் கீழும் மேலும் எல்லையற்று எங்கும் வியாபித்தவனாய் |
| மாயம் பற்று அறுத்து | அஜ்ஞாந காரியமான விஷயஸங்கத்தையும் தவிர்த்து | நேர்ந்த | மிகவும் நுட்பமான |
| தன்பால் தீர்ந்து மனம் வைக்க திருத்தி | தன்னிடத்திலே உறுதி கொண்டு நெஞ்சைப் பொருந்த வைக்கும்படி என்னைத் திருத்தி | உரு ஆய் அரு ஆகும் இவற்றின் | அசித்தும் சித்துமாகிற இந்தப் பொருள்களுக்கு |
| வீடு திருத்துவான் | (எனக்குத் தருவதான) மோக்ஷ ஸ்தானத்திலும் சில திருத்தங்களைச்செய்து ஒழுங்குபடுத்துவதாக ஆரம்பித்துவிட்டான்; (அவன் யாவனென்னில்;) | உயிர் ஆம் | அந்தர்யாமியாகிநிற்கிற |
| | | நெடு மால் | வ்யாமோஹமே வடிவான எம்பெருமான். |

* * * — [சார்ந்தவிருவல்வினைகளும்.] கீழ்ப்பாட்டைத் திருச்செவி சார்த்தின எம்பெருமான் "அம் மாமூர்த்தியைச் சார்ந்து மாயோம்" என்ற வுறுதியையறிந்து திருவுள்ளம் பூரித்து, எப்போதும் விட்டுப் பிரியகில்லாத திருநாட்டிலே இவ்வாழ்வாரைக் கொண்டுபோய் நித்யாநுபவம் பண்ணக்கருதி, ஒரு புதுமையுஞ் செய்யவேண்டாதபடியான பரமபதத்தையும் தமக்காக அவன் கோடிக்கப்புக்கதைக் கண்டு ஈதென்ன வ்யாமோஹமோ! என்று ஈடுபடுகிறாரிதில்.

பின்னடிகளை முந்துற அந்வயித்துக்கொண்டு முன்னடிகளைப் பின்னே அந்வயித்துக்கொள்வது. ஆர்ந்த ஞானச் சுடராகி அகலங்கீழ்மேலளவிறந்து நேர்ந்த வுருவாயருவாகு மிவற்றினுயிராம் நெடுமால், சார்ந்த விருவல்வினைகளுஞ் சரித்து மாயப்பற்றறுத்துத் தீர்ந்து தன்பால் மனம்வைக்கத் திருத்தி வீடுதிருத்துவான் என்க. எள்ளில் எண்ணெய் போலவும் கட்டையில் தீப் போலவும் பிரிக்க முடியாதபடி பொருந்திக் கிடக்கிற புண்ய பாப ரூபமான இருவகைக் கருமங்களையும் போக்கி ருசி வாஸநைகளையுங் கழித்துத் தன்பக்கலிலேயே நான் முழுநோக்காக மனம் வைக்கும்படி என்னைத் திருத்தி [அதாவது, நான் அயோக்யன் என்று அகன்று போவது தவிர்ந்து அபிமுகனும்படிசெய்து] * கலங்காப் பெருநகரமாகிய பரமபதத்திற்கும் ஒரு புதுமைசெய்து அதனைக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கோடிக்கப் புகுகின்றான் — (யாவனென்னில்;) பரிபூர்ணமான ஞான வொளியையுடையனாய், கீழும் மேலும் சுற்றிலுமுள்ள எல்லாத் திசைகளிலும் வியாபித்து அநிஸூக்ஷ்மமான சேதநாசேதநங்களுக்கும் ஆத்மாவாயிருக்கிற பரமபுருஷன்.

இருவல்வினைகளும் = 'இரு' என்று பெருமையைச் சொன்னபடியாய் மிகப்பெரிய கொடிய பாபங்களை யெல்லாம் என்றும் பொருள்கொள்ளலாம்: இருப்புவிலங்கான பாபத்தோடொக்கப் பொன் விலங்கான புண்யமும் கழியுண்ண வேணுமாதலால், இருவகைப்பட்ட வல்வினைகளையுஞ் சரித்து என்றலும் ஏற்கும்.

பின்னடிகளில் எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வத்தையும் வ்யாப்தியையுஞ் சொன்னது — இப்போதுதான் அவன் தனது திருக்குணங்களையெல்லாம் ஸபலமாக நினைத்தான்போலுமென்று காட்டுகிறபடி. .... .... (கo)

மாலேமாயப்பெருமானே மாமாயனேயென்றென்று *
மாலேயேறிமாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன் *
பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரத்தின்
பாலேபட்ட * இவைபத்தும்வல்லார்க்கு இல்லைபரிவதே. * (கக)

| | |
|---|---|
| மாலே | பெரியோனே! |
| மாயம் பெருமானே | ஆச்சரிய குணநிதியே! |
| மா மாயனே | மஹத்தான ஆச்சரிய சேஷ்டிதங்களை யுடையவனே! |
| என்று என்று | என்று இங்ஙனம் பலவிதங்களான திருநாமங்களைச் சொல்லி |
| மாலே ஏறி | பித்தம் பிடித்து |
| மால் அருளால் மன்னு | ஸர்வேச்வரனது க்ருபையினால் பொருந்தப்பெற்ற |
| குருகூர் சடகோபன் | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் (அருளிச்செய்ததான) |

| | |
|---|---|
| பால்ஏய் தமிழர் | பாலுக்குச் சமானமான இனிமையுள்ள தமிழில் வல்லவர்களென்ன |
| இசைகாரர் | இசையறிந்து பாடவல்லவர்களென்ன |
| பத்தர் | பக்திமான்களென்ன ஆகிய இவர்களெல்லாரும் |
| பரவும் | கொண்டாடும்படியமைந்த |
| ஆயிரத்தின் பால் | ஆயிரம் பாட்டினுள் |
| பட்ட | தோன்றின |
| இவை பத்தும் | இந்தப்பத்துப்பாட்டையும் |
| வல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| பரிவது இல்லை | யாதொரு துக்கமும் உண்டாகமாட்டாது. |

* * * — [மாலேமாயப்பெருமானே.] இத் திருவாய்மொழியைக் கற்பார்க்கு ஒருவகைத் துன்பமும் நேரிடாதென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். எம்பெருமான் ஸௌசீல்யாதிக்கவர, 'நான் அயோக்யன்' என்று அகன்று தாம் பட்ட வருத்தங்கள் இத் திருவாய்மொழி கற்பார்க்கு உண்டாகமாட்டாவென்றவாறு.

தாம் எப்படிப்பட்டவரென்றால், மாலே! மாயப்பெருமானே! மாமாயனே! என்றிப்படி அநேகத் திருநாமங்களை வாயாரச்சொல்லிப் பித்தம் பிடித்து ஸர்வேச்வரனுடைய க்ருபையினாலேயே பொருந்தப் பெற்றவர் என்கிறார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீபாஷ்யத்தில் ப்ரஹ்ம சப்தத்தை வியாக்கியானித்தருளாநின்ற ஸ்ரீபாஷ்யகாரர் எம்பெருமானுக்கு இரண்டு வகைகளாலே பெருமையை உபபாதித்தார்; ஸ்வரூபத்தாலே ஒரு பெருமையும் குணங்களாலே ஒரு பெருமையுமாக. அப்படியே இங்கும் மாலே! என்றது ஸ்வரூபத்தால் வந்த பெருமையைச் சொன்னபடி. மாயப்பெருமானே! என்றது குணங்களால் வந்த பெருமையைச் சொன்னபடி. இனி, மூன்றாவதான ஒரு பெருமையையும் ஆழ்வாரருளிச்செய்கிறார் மாமாயனே! என்று; இது சேஷ்டிதங்களால் வந்த பெருமையைச் சொன்னபடி. என்றென்று என்றது—தாம் அநுஸந்தித்த திருநாமங்களுக்கு எல்லையில்லாமை காட்டினபடி. மாலே ஏறி = 'நான் அயோக்யன்' என்று அகலும்படியான ஒரு பித்தம் தலையெடுத்ததே, அதைச் சொன்னபடி. 'என்னத்தனர்ச்சனரங்களுக்கடியார்களாகி அவனுக்கே பித்தராமவர்'' என்று சொல்லப்பட்ட பித்தமாகவுமாம்.

அருளால் மன்னு குருகூர்ச்சடகோபன் = ஆழ்வார் எம்பெருமானது திருவருளாலே ஸத்தைபெற்றவர் என்கிற பரமார்த்தத்தைச் சொல்லுகிறபடியாகவுமாம்; தாம் அகன்று போகப்புக, சிலகுணத்தைக் காட்டிப் பொருந்தவிட்டுக்கொண்ட சிறப்பைச் சொல்லுகிறபடியாகவுமாம். ''தன்னை முடித்துக்கொள்வதாகக் கழுத்திலே கயிற்றையிட்டுக்கொண்டவனை அறுத்து விழ விடுவாரைப் போலே, அகன்று முடியப்புக்க விவரைப் பொருந்விட்டுக்கொள்ள அவனருளாலே பொருந்தின வாழ்வார்'' என்பது நம்பிள்ளையீடு.

[பாலேய் தமிழர் இத்யாதி.] சிறந்த தமிழ்க்கவிகளைக்கொண்டு போதுபோக்க வேணுமென்றிருப்பார்க்கு இத் திருவாய்மொழியே தஞ்சம்; நல்ல இசைகளைப் பாடிப் போதுபோக்கவேணுமென்றிருப்பார்க்கும் இத் திருவாய்மொழியே தஞ்சம்; * குருகையர்கோன் யாழினிசை வேதத்தியலாதலால். பகவத்குணாநுபவத்திலிழிந்து பக்திரஸமே போதுபோக்காக இருக்கவேணுமென்பார்க்கும் திருவாய்மொழியே தஞ்சம் என்றவாறு. ''பாலேய்தமிழரென்று முதலாழ்வார்களை விவக்ஷித்தபடி; இசைகாரரென்று திருப்பாணாழ்வாரை விவக்ஷித்தபடி; பத்தர் என்று பெரியாழ்வாரை விவக்ஷித்தபடி'' என்று ஆளவந்தார் அருளிச்செய்வராம். ''ஸ்ரீபராங்குச நம்பியைப் பாலேய்தமிழரென்கிறது; ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரை இசைகாரரென்கிறது; பிள்ளையுறங்காவில்லிதாஸரைப் பத்தரென்கிறது'' என்று ஒருருவிலே கூரத்தாழ்வானருளிச்செய்தாராம்.

ஆயிரத்தின்பாலேபட்ட இவைபத்தும் = திருவாய்மொழி யாயிரமும் மிகச் சிறந்ததாகவேயிருக்கச்செய்தேயும் இந்தத் திருவாய்மொழியையும் மற்றவற்றையும் பார்க்குமிடத்து, மற்றவை கடல்போலவும் இது முத்துப்போலவுமிருக்கும் என்ற கருத்து இதில் தொனிக்கும். 'கடலில் முத்துப்பட்டது' என்னுமா போலேயன்றோ இங்குப் பிரயோகமிருப்பது.

பரிவது இல்லை = பரிவு - துயரம். 'அது' என்பது முதல் வேற்றுமைச் சொல்லுருபு. இத் திருவாய்மொழியை ஓத வல்லார்க்கு ஒரு துக்கமுமில்லையென்றாயிற்று. ... .... .... ... .... ... (கக)

ஐந்தாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத் திருவாய்மொழிக்கான பாசுரம்.

வளமிக்க மால்பெருமை மன்னுயிரின் தண்மை *
உளமுற்றங் கூடுருவ வோர்ந்து * — தளர்வுற்று
நீங்கநினை மாறனைமால் நீடிலகு சீலத்தால் *
பாங்குடனே சேர்த்தான் பரிந்து.

பதவுரை.

| | |
|---|---|
| வளம் மிக்க | செல்வத்தால் மிகுந்த |
| மால் | எம்பெருமானுடைய |
| பெருமை | (நித்யஸூரிநாதத்வம் முதலிய) பெருமையும் |
| மன் உயிரின் | ஆத்மாவினுடைய |
| தண்மை | நைச்சியமும் |
| உளம் உற்று | திருவுள்ளத்தில்பட, |
| அங்கு | அப்போது |
| ஊடுருவ ஓர்ந்து | உட்புகுந்து ஆராய்ச்சி செய்து |
| தளர்வுற்று | தளர்ந்து |
| நீங்க நினை | (எம்பெருமானைவிட்டு) நீங்கவேணுமென நினைத்த |
| மாறனை | ஆழ்வாரை |
| மால் | ஸர்வேச்வரன் |
| நீடு இலகு சீலத்தால் | நெடுகி விளங்குவதான (தனது) சீலகுணத்தினால் |
| பரிந்து | ஸ்நேஹித்து |
| பாங்குடனே | நன்றாக |
| சேர்த்தான் | அணைத்துக்கொண்டான். |

* * * — "வளரேவழுலகின்முதலாய வானோரிறை" என்கிறபடியே எம்பெருமானுக்கு ஏற்பட்டுள்ள அபாரமான மேன்மையும், "நீசனேன் நிறையொன்றுமிலேன்" "சீலமில்லாச்சிறியன்" இத்யாதிப்படியே இத்தலைக்கு ஏற்பட்டுள்ள சிறுமையும் தமது திருவுள்ளத்திலே ஸ்புரிக்க, இவ்விரண்டையும் நன்றாக ஆராய்ந்து பார்த்தவளவில் 'பெருமையில் தலைநின்ற அப்பெருமானைச் சிறுமையில் தலைநின்ற நாமோ அணுகுவது!' என்று தளர்ச்சியுண்டாகி எம்பெருமானை விட்டு நீங்கப்பார்த்தார் ஆழ்வார்; அப்போது அவர்க்கு எம்பெருமான் தனது சிறந்த சீலகுணத்தைக் காட்டி 'ஆழ்வீர்! என்னுடைய பெருமையை மாத்திரம் பார்த்து நீங்க நினைக்கின்ற நீர் எனது சீலகுணத்தையும் சிறிது பார்க்க வேண்டாவோ? எத்தனையேனும் சிறுமைப்பட்டவர்களோடேயே கலந்து பழகுவதன்றோ எனது இயல்வு' என்று தெரிவிக்க, அந்த சீலகுணத்திலீடுபட்டு ஆழ்வார் எம்பெருமானோடு பொருந்தினபடியைப் பேசின திருவாய்மொழியின் ப்ரமேயத்தை இப்பாட்டினால் வெளியிட்டாராயிற்று.

உளமுற்று — எச்சத்திரிபு; உளமுற என்றபடி. "சொல் திரியினும் பொருள்திரியா வினைக்குறை." ... ... ... .... (ரு)

ஜீயர் திருவடிகளே சரணம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஶ்லோ॥ ஸ்ராந்திம் நாதிவ்யதோ வாஞ்சோ த்தவேஷி
ஸ்ராயோக்யதா ஸஹித விஷ்வஷ்ணாலி: ।
ஸை த்ரைவிக்ரமசரிதம் ப்ரதிபோத்ய தேந
நீத: ஸ்வஶீலவஶதாம் ஶடஜித் ஸ பஞ்சமே ॥

(கருத்து) கீழே "அஞ்சிறைய மடநாராய்" என்கிற திருவாய்மொழியில் ஆழ்வார் பட்ட க்லேசங்களைக் கண்ட எம்பெருமான் உடனே அவரைத்தழுவி முழுசிப் பரிமாறுவதாகத் திருவுள்ளம்பற்றிப் பதறி ஓடிவந்து நிற்க, ஆழ்வார் தம்முடைய நைச்யத்தைச் சிந்தித்துப் பின்வாங்கினர்; அப்படிப்பட்டவர்க்கு எம்பெருமான் உலகளந்த சரிதையைக் காட்டும் முகத்தால் தனது சீலகுணத்தைக்காட்டி அவரை அதற்கு வசப்பட்டவராக ஆக்கிக்கொண்டான் ஐந்தாவதான இத் திருவாய்மொழியிலே. .... .... .... .... .... (*

ஜீயர் திருவடிகளே சரணம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி முதற்பத்து
# ஆருந் திருவாய்மொழி — பரிவதிலீசனை.

## அவதாரிகை.

ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு திருக்குணத்தை அநுபவித்து வெளியிட்டுவருகிற முறைமையில், இத் திருவாய்மொழியில் 'ஆராதனைக்கெளியன்' என்கிற ஒரு திருக்குணத்தை வெளியிட்டருள்கிறார். இக்குணம் வடமொழியில் (ஸ்வாராத்யத்வம்) 'ஸ்வாராதத்வம்' எனப்படும். [ஸ்வேந ஸுகேந ஆராதயிதும் ஶக்ய: ஸ்வாராத்ய:; தஸ்ய பாவ: ஸ்வாராத்யத்வம்.] சிரமமின்றி எளிதாகவே ஆராதிக்க உரியனாயிருக்குந் தன்மை என்றவாறு:

இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோவிதங்களால் வேறுபாடு பெற்றிருப்பதுபோலே இவ்வகையாலும் வேறுபாடு பெற்றிருப்பன். 'ஆடு பலிகொடு, கோழி பலிகொடு' என்று அருந்தேவைகளையிட்டு மஹா பரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள். எம்பெருமான்படியோ அப்படியன்று; நாம் இட்டதுகொண்டு த்ருப்தியடைவதே அவனது ஸ்வரூபம், என்பது சாஸ்த்ரங்களில் தேர்ந்த விஷயம். அதுவே இத் திருவாய்மொழிக்கு ப்ரமேயம்.

கீழ்த் திருவாய்மொழியிலே நைச்யத்தைச் சிந்தித்து அகன்ற ஆழ்வாரை எம்பெருமான் பொருந்தவிட்டுக்கொண்டது சீலகுணத்தாலெனப்பட்டது: அவன் சீலவானாயிருந்தாலும் அவனை ஆராதிக்கப் புகுமிடத்தில் குறைவில்லாமல் ஆராதித்துத் தீரவேண்டுமே; நாமோ க்ஷுத்ரர்களும் க்ஷுத்ரமான உபகரணங்களையுடையவர்களுமாயிராநின்றோம்; ஆனபின்பு எங்ஙனே அவனை ஆச்ரயித்து ஆராதித்துத் தலைக்கட்டுவது? என்கிற சங்கை அடுத்தபடியாக விளையக் கூடியதாதலால் அதனைப் பரிஹரித்துக்கொண்டு இந்தத் திருவாய்மொழி அவதரிக்கின்றதென்க.

எம்பெருமானுக்கு நாம் சில வஸ்துக்களை இடுவதானது அவனுக்கு ஏற்கனவேயில்லாததொரு பூர்த்தியை உண்டாக்குவதற்காகவா? நாம் ஸத்தை பெறுவதற்காகவா? என்று ஆராயவேண்டும்; அவனோ அவாப்தஸமஸ்தகாமன்; அன்னவன் நாமிட்டதுகொண்டு பூர்த்தியடைகிறானென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பது கடல் நிரம்புவதற்காகவன்றே; "வர்ஷதி ஜலதௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப:" — வர்ஷபிந்தோரிவாப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப:" என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்) பட்டர் அருளிச்செய்தபடியே,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தான் ஸத்தை பெறுதற்காகவே மேகம் கடலிலும் வர்ஷிக்கின்றதென்பது பரமார்த்தம். அதுபோலவே ஸ்வதஃ பரிபூர்ணனான பரமபுருஷன் திறத்திலே நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம்பெறுதற்கேயன்றி, அவனை நிரப்புவதற்கன்று என்பது வெளிப்படை. ஆகவே, நாம் சிறந்த பெரும் பொருள்களைத்தேடி ஆராதிக்கவேணுமென்பதில்லை; இடுகிறபொருள் எதுவாயினும், இடுவது ப்ரேம பூர்வகமாகவேணுமென்பதொன்றிலேயே நியதியுள்ளது.

* மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த திருமங்கையாழ்வாரும் "கள்ளார்துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார்முளரியும் ஆம்பலும் முன்கண்டக்கால், புள்ளாயோரேனமாய்ப்புக்கிடந்தான் பொன்னடிக்கென்று, உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக்கொள்ளோமே" என்றருளிச்செய்கிறார். திருத்துழாய் முதலிய எந்த வஸ்துவைக்கண்டாலும் 'இது எம்பெருமானுக்குச் சாத்தத்தக்கது' என்று அத்யவஸாயங்கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ளமாட்டோமென்றுரைக்கின்ற இப்பாட்டில், எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களுங்கூட்டியெடுக்கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கவேணுமென்கிற சுத்தபாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி' என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவேயிருக்கவேணுமென்கிற நியதியில்லை; ஏதேனுமொரு பூவாயிருக்கலாமென்பதும் பக்திப்பெருங்காதலே முக்கியமானது என்பதும் தோற்றுவிக்கப்படும்.

ஸ்ரீஜகந்நாதத்திலெம்பெருமான் செண்பகப்பூவை உகந்து சாத்திக்கொள்வது வழக்கமாதலால் முற்காலத்தில் சில ராஜகுமாரர்கள் அப்பெருமானுக்குச் செண்பகப்பூ ஸம்பாதித்து ஸமர்ப்பிக்கவேணுமென்று கடைவீதியேறச் சென்றனர்; அங்குப் பூவெல்லாம் விற்றுப்போய் ஒரேஒருபூ மாத்திரம் மிகுந்திருந்தது. விலைக்கு வாங்கவந்த ராஜகுமாரர்கள் செல்வச்செருக்குடையவராதலால் ஒவ்வொருவரும் இப்பூவை நாமே பெற்றுப்போய் ஸமர்ப்பிக்கவேணுமென்கிற ஆவல்கொண்டவராகி மேன்மேலும் விலையை ஏற்றிக்கொண்டேவந்தார்கள். கடைசியாக அளவற்ற விலைகொடுத்து ஒரு ராஜபுத்திரன் அதை வாங்கிப் பெருமாளுக்குச்சாத்த, அன்றிரா அவனுடைய கனவிலே எம்பெருமான் காட்சிதந்து 'நீ இட்ட பூ எனக்குக் கனத்துச் சுமக்கவொண்ணாததாயிருக்கிறது' என்றருளிச்செய்தான்—என்ற இதிஹாஸமும் அப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளையாலருளிச்செய்யப்பட்டுளது. இதனால், ஸ்நேஹபூர்வகமாகப் பூவிட்டால் அதுவே எம்பெருமானுக்கு அலப்யலாபமாயிருக்குமென்றதாகும். இது புஷ்பவிஷயமொன்றில் மாத்திரமன்று; நாம் பகவானுக்கு இடுவது எதுவானாலும் அஃதெல்லாவற்றிற்குமே இந்த நியாயம் ஒக்கும்.

கீதாசார்யனும், * பத்ரம் புஷ்பம் ஃபலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி। ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந: = பத்ரம் புஷ்பம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி, ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந:. * என்றருளிச்செய்கிறான். இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லை, இடுகிறவன் நெஞ்சில் ஈரமுள்ளதா என்பதொன்றையே பார்ப்பேன் என்றன்றோ இதிற் சொல்லுவது. * [illegible] | [illegible] அந்யத் பூர்ணதபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத், அந்யத் குசலஸம்ப்ரச்நாத் ந சேச்சதி ஜநார்த்தந:. * என்றும் * யா: [illegible] | [illegible] யா: க்ரியாஸ் ஸம்ப்ரயுக்தாஸ் ஸ்யு: ஏகாந்தகதபுத்திபி:, தாஸ் ஸர்வா: சிரஸா தேவ: ப்ரதிக்ருஹ்ணாதி வை ஸ்வயம். * என்றுமுள்ள ப்ரமாண சதங்களாலும் எம்பெருமான் ஆராதனைக் கெளியனென்பது விசதீகரிக்கப்பட்டுள்ளது. அந்தத் திருக்குணத்தையே இத் திருவாய்மொழியில் ஆழ்வார் அநுபவித்து வெளியிட்டருள்கிறார். ... ... .... (*)

பரிவதிலீசனைப்பாடி * விரிவதுமேவலுறுவீர் *
பிரிவகையின்றிநன்னீர்தூய் * புரிவதுவும்புகைபூவே. * (க)

| | | | |
|---|---|---|---|
| பரிவது இல் | துன்பமற்ற | நல் நீர் - | நல்ல தீர்த்தத்தை |
| ஈசனை | ஸர்வேச்வரனை | தூய் | ஸமர்ப்பித்து |
| பாடி | துதிசெய்து | புரிவதுவும் | (அதன்பிறகு) ஸமர்ப்பிப்பதும் |
| விரிவது | ஸ்வரூபவிகாஸத்தை | புகை பூவே | ஏதேனுமொரு தூபமும் ஏதேனுமொரு புஷ்பமுமேயாகும். |
| மேவல் உறுவீர் | பெறவேணுமென்கிற உறுதியுடையவர்களே !, | | |
| பிரி வகை இன்றி | பிரயோஜனத்தைக் கொண்டு விலகிப்போதலின்றியே | | |

* * * — [பரிவதிலீசனை.] எம்பெருமானை ஆராதிக்கு முபகரணங்களின் ஸௌகர்யம் இப் பாசுரத்தில் அருளிச்செய்யப்படுகிறது. எம்பெருமானைப் பற்றிச் சொல்லுகின்ற சாஸ்த்ரங்கள் அவனை 'அகிலஹேய ப்ரத்யநீகன்' என்கின்றன; ஹேயகுணங்களெல்லாவற்றிற்கும் அவன் எதிர்த்தட்டானவன் என்றபடி. அவனிடத்திலுள்ளவை யெல்லாம் கல்யாணகுணங்களேயன்றி ஒருவகையான ஹேயகுணமும் இல்லாமையால் அங்ஙனஞ் சொல்லுகிறது. அந்த ஹேய ப்ரதிபடத்வமே இங்குப் 'பரிவதில்' என்ற விசேஷணத்தினால் கூறப்படுகின்றது. துக்கமில்லாதவன் என்றது, மற்றுமுள்ள ஹேயகுணங்களொன்றுமில்லாமையைச் சொன்னபடிக்கு உபலக்ஷணம்.

எம்பெருமானுக்கு துக்கமில்லையென்று சொல்லிவிடமுடியுமோ? விபவாவதாரங்களிலே ஸீதாவியோகம் முதலான நிமித்தங்களினால் வாசாமகோசரமாகத் துயருற்றமை இதிஹாஸ புராணங்களில் ஸித்தமாயிருக்கின்றதே; துக்கமில்லாதவனென்று எங்ஙனஞ் சொல்லலாம்? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; அவ

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தாரங்களில் உண்மையான துக்கமில்லை; அது அபிநய மாத்திரமே யென்பது ச்ருதப்ரகாசிகை முதலியவற்றில் நிர்ணயிக்கப்பட்டிருத்தலால் இந்த சங்கைக்கு இடமில்லை. ஸீதா வியோகாதி நிமித்தங்களினாலுண்டாகின்ற துக்கம் அபிநய ரூபமென்று சொல்லிவிட்டாலும், எம்பெருமானை 'தயாளு'என்றிசையும்போது, "தயையாவது — பிறர்படும் துக்கத்தைக்கண்டு தானும் துக்கப்படுகை" என்று ஆசிரியர்களால் நிர்வஹிக்கப்படுவதால், இந்த துக்கத்தையும் அபிநயரூபமென்று அங்கீகரிக்கவொண்ணாதே; இதற்கு எங்ஙனே ஸமாதானமென்று சிலர் சங்கிப்பதுண்டு; 'இது ஹேயப்ரத்யநீகத்வத்திற்கு விரோதியன்று' என்பதே சுருக்கமான ஸமாதானம். துக்க ஸாமாந்யமும் ஹேயமன்று; ஸ்வார்த்தமாகப் படும் துக்கமே ஹேயமாகும்; பிறர்படும் இழவைக்கண்டு தரித்திருக்கமுடியாமல் பரவசமாகப் படுகின்ற துக்கம் ஹேயமன்று, மிகவும் உபாதேயமாகவேயாகும். இதனைச் சிறிது விவரிப்போம்;- பிறர்படுகின்ற துக்கத்தைக்கண்டு துக்கப்படுவதென்பது குணமா? தோஷமா? என்று விமர்சிக்கவேணும். ஸ்ரீராமாயண, அயோத்யாகாண்டத்தில் ஸ்ரீராமபிரானுடைய திருக்கல்யாண குணங்களைச் சொல்லிக்கொண்டுவரும் பிரகரணத்தில் "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:கித: = வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:கித:." (பிரஜைகள் துக்கப்படுங் காலங்களில் ஸ்ரீராமன் மிகவும் துக்கப்படுகிறான்) என்று சொல்லப்பட்டிருப்பது ஒருபுறம் நிற்க. உலகத்தில் ஒருவன் துக்கப் படும்போது அந்த துக்கத்தைக் கண்டுகொண்டிராநின்ற மற்றொருவன் தானும் துக்கப்படாமல் வாளாகிடந்தால் அவனைக் கல் நெஞ்சனென்றும் ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாதவனென்றும் வசை கூறுவதும், பிறர் துக்கிப்பதைக்கண்டு பரவசமாக ஒருவன் துக்கிப்பானாகில் அவனை ஈரநெஞ்சனென்றும் இரக்கமுள்ளவனென்றும் பரம தயாளுவென்றும் சொல்லிப் புகழ்வதும் இன்றாக ஒருவராலும் அபலாபஞ் செய்யவொண்ணாதவை. ஆகவே பரது:க்க து:க்கித்வமென்பது சிறந்த குணங்களில் முதன்மையாகக் கணக்கிடக்கூடியதேயன்றி துர்க்குணமாக ஒருவராலுங் கூறவொண்ணாதது. இப்படிப்பட்டவொரு சிறந்த குணம் எம்பெருமானுக்கு இல்லையென்று எங்ஙனே சொல்லலாகும்?

ஆனால் இங்கு ஒன்று சொல்லலாம்; பிறர்படும் துயரத்தைப் பரிஹரிக்கக் கூடிய சக்தி நமக்கில்லாமையாலே நாம் அத்துயரத்தைக்கண்டு துயரப்படலாம்; பரிபூர்ண சக்தியுக்தனான எம்பெருமான் எளியெனும்பான நம்மைப்போலன்றியே பிறருடைய துயரத்தைக்கண்டு தானும் துயரப்படக் காரணமேயில்லையென்னலாம்; இங்குக் குறிக்கொள்ளவேண்டியதாவது — பிறர்படும் துயரத்தைக்கண்டு துயருறுகை என்கிற ஒரு தன்மையும், பிறர்படுந் துயரத்தை நீக்க வல்ல சக்தியுடைமை யென்கிற வொரு தன்மையும் பரஸ்பர விருத்தமென்று நினைக்கலாகாது; உண்மையில் இவை ஒன்றோடொன்று விரோதமுடையன வல்ல; தன் குழந்தைக்கு ஒரு துன்பம் நேர்ந்துவிட்டால் அதனை உடனே பரிஹரிக்கவல்ல சக்தி மாதாவுக்கு இருக்கச்செய்தேயும் அப்படியே அத் துன்பத்தை அவள் பரிஹரித்துவிடச் செய்தேயும் 'குழந்தைக்குத் துன்பம் நேராமல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



காக்கவேண்டியது நமது கடமையாயிருந்தும் ஏமாந்துபோனேமே!, அந்தோ! அநியாயமாய்க் குழந்தையைத் துடிக்கவிட்டோமே!' என்று பலவாறாகக் கதறி வருந்தும்படியைக் காணாதாருண்டோ?

துச்சாஸநன் கையிலே த்ரௌபதி பரிபவப்பட்டுக் கூவினபோது கண்ண பிரான் ஒருவாறு அவளது துயரைத் தீர்த்திருக்கச் செய்தேயும் 'ஐயோ! அவள் கூவினபோது நான் நேரில் சென்றிருந்து உதவாதொழிந்தேனே!, ஐயோ! அவளுக்குப் பரிபவம் நேர்ந்து அவள் கதறினபின்பு நான் அதைப் போக்கினேனேயன்றி, முதல்தன்னிலே பரிபவமே உண்டாகாதபடி ஜாகரூகனா யிருக்கை தவிர்ந்தேனே! அவளுக்கு நான் பெரிய கடனாளியாய்விட்டேனே! என் பிறப்பு என்னுயிற்று!' என்று தன் காவற்சோர்வை நினைத்துத் திருவுள்ளம் வேவுண்டு பலவாறு கதறினபடியுண்டே. இது விஷயமாக ஆசாரியர்கள் அரு ளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—

"த்ரௌபதி சரணமென்ற உக்தியைத்தன்னையும் திருவுள்ளத்திலே கிட ந்து, ஸதஸ்ஸில் அவள் பரிபவித்த பரிபவத்தையும் பரிஹரித்து துர் யோதநாதிகளையும் நிரஸித்து தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலையும் முடிப்பித்துப் பின்பும் * ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி * என்று குறைவாளனாய்ப் பரமபதத் துக்கு எழுந்தருளுகிறபோதும் * நாதிஸ்வஸ்தமநா யயௌ * என் னும்படி திருவுள்ளத்தில் புண்ணோடேயிறே எழுந்தருளிற்று.." இத்யாதி.

மடுவின்கரையிலே முதலைதன்னலடர்ப்புண்ட ஸ்ரீகஜேந்திராழ்வானுடைய இடரை எம்பெருமான் தீர்த்தருளினனேலும் அவன்முன் பட்ட பரிதா பம் பேச்சுக்கு நிலமன்றே. "ஸ்ரூஷ்டி ... =ஸ்ரக்ஷ்ரூஷாம்பரமபதாயதம் ததாநோ திங் மாமித்யநுகஜகர்ஜமாஜகந்த" என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே பட்டர் அருளிச் செய்தமை கண்டீரே. கெட்டேன்! கெட்டேன்!! என்று நொந்துகொண்டே எம்பெருமான் அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்தானென்றால் இது என்சொல்!

ஸஹஸ்ரநாமத்தில் 'ஊர்ஜிதஃ' என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலும் இதனை விளக்கியருளினர் பட்டர்,

ஆழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில், "... = விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூயஃ ஸஞ்ஜஹ்ருஷஸ் ஸதி ஸமாச்ரிதவத்ஸலத்வே, ஆஜக்முஷஸ் தவ கஜோத்தம ப்ரும்ஹிதேந பாதம் பராமம்ருசுஷோபி ச கா மஷா?" என்றருளிச்செய்தார். எம்பெருமான் தான்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சாத்தியருளின திருப்பரிவட்டத் தலைப்பைச் சுருட்டித் திருப்பவளத்திலே வைத்து ஊதி கஜேந்திராழ்வானுடைய புண்வாயை வெதுகொண்டு திருக்கையாலே குளிரத்தடவிக்கொடுத்தானென்றால் அந்த ஸமயத்திலே எம்பெருமான் திருவுள்ளத்திற் கொதிப்பு வாசாமகோசரமன்றோ?

இங்ஙனே எம்பெருமான் நெஞ்சாறல்பட்ட பிரகரணங்கள் பல்லாயிரமுண்டு; இவ்விடங்களுக்குச் சிலர் சொல்லுவதென்னவென்றால், எம்பெருமான் அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநனாகையாலே அவனுக்கு மெய்யே துக்கமுண்டாக ப்ரஸக்தியில்லை; துக்கப்படுபவன்போல் அபிநயிக்குமளவேயன்றி உண்மையான விகாரங்கள் அவனுக்கில்லை யென்கிறார்கள்; பகவதவதாரங்களிலே துக்காநுபவம் அபிநயமாத்திர மென்பது ச்ருதப்ரகாசிகை முதலியவற்றிலுமுள்ளது. ஆனால் ராவணாதிகளோடு போர்புரிந்த காலத்தில் பெருமாள் அஸ்த்ரங்களால் கட்டுண்டு மூர்ச்சித்துக்கிடந்தாரென்றும், ஆய்ச்சியர் தாம்பினால் கட்டுண்டு அடியுண்டு அழுதேங்கினானென்றும் இப்படியாகச் சொல்லும் துக்கங்கள் ஒரு காரியப்பாடாக அபிநயிக்கப்பட்டவை என்று சொல்லிற்றத்தனையொழிய, தயாளுத்வத்திற்கு ஐகாந்திகமான துக்கமும் அபிநயரூபமாகச் சொல்லப்படவில்லை யென்பது பட்டர் முதலானோருடைய திருவுள்ளம்.

* 𑌅𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌯 𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌯 = அவிகாராய சுத்தாய * என்ற ஸாமாந்ய வசனமொன்றையே பற்றிநின்று விசேஷகுணங்களை இல்லைசெய்யலாகாது. ஆச்ரித ஸம்ச்லேஷ விச்லேஷங்களில் எம்பெருமானுக்கு விகாரமுண்டாவதில்லையென்று சொல்லுதல் எம்பெருமானைக் காஷ்டலோஷ்ட ப்ராயனாக இசைந்தமைக்குப் பர்யாயமாமத்தனை. * ஏறாளுமிறையோனு மென்கிற திருவாய்மொழியில் மூன்றாம் பாட்டில் "படநாகத்தணைக்கிடந்த பருவரைத்தோள் பரம்புருடன்" என்றவிடத்து ஈடு முப்பத்தாறாயிரத்திலே — "திருவனந்தாழ்வானோட்டை ஸ்பர்சத்தாலே ஏகரூபமான விக்ரஹத்துக்குப் பிறக்கும் விகாரத்தைச் சொல்லுகிறது. கர்ம நிபந்தநமான விகாராதிகள் இல்லையென்றவித்தனை போக்கி, ஆச்ரித ஸம்ச்லேஷத்தில் விகாரமில்லையென்னில்; அவ் வஸ்துவை அணைய ஆசைப்படவேண்டாவே." என்று அழகாக அருளிச்செய்யப்பட்டுள்ளது. இவ்வளவு விரிவும் மிகையாம்படி, ஸஹஸ்ரநாமத்திலே விகர்த்தா என்னுந் திருநாமத்தின் பாஷ்யத்திலே —

> "[illegible] (இதன் கருத்து:—) தமக்காக இன்ப துன்பங்களில்லாமலிருந்தும் பிறர் இன்ப துன்பங்களை அநுபவிப்பதனால் தாம் இன்ப துன்பங்களையடைந்து விகாரப்படுகிறவர்; இந்த விகாரம் பிறரிடத்திலுள்ள அன்புபற்றியதாதலால் ஈச்வரனுக்குக் குற்றமாகாது."

என்று பட்டர் ஸ்புஷ்டமாகவே அருளிச்செய்துள்ளார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆதலால், இப்பாட்டில் பரிவதிலீசன் என்றது ஹேயமான துக்கமில்லாதவன் என்றபடியாமத்தனையென்று தலைக்கட்டிற்றாயிற்று.

ஈசனை=நமக்கென்று ஏற்பட்ட ஸ்வாமியை என்றபடி, உலகத்தில் ஒருவனுக்கு ஒருவன் விருந்திடும்போது நெடுநாளாக ஒரு நல்லபொருளைச் சேகரித்து விருந்திட்டால் 'இதை இவன் ஸ்வீகரித்து என்ன குறை சொல்லப்போகிறானோ' என்று நெஞ்சு தளும்பியிருக்கவேண்டிவரும். புத்திரன் பிதாவுக்கு விருந்திட்டால் விருந்தில் ஏதேனுங் குறையிருந்தாலும் அது தமப்பனுடைய தாய் நெஞ்சாறல்படவேண்டாதிருக்குமன்றோ; அப்படிப்பட்ட ஸம்பந்தம் எம்பெருமானுக்கும் நமக்குமுண்டென்று காட்டினபடி.

பாடி=பெரியவர்களின் ஸந்நிதானத்திலே வாயைத் திறவாமல் மௌனமாயிருக்க ப்ராப்தமாயினும், ஆனந்தம் உள்ளடங்கியிருக்கமாட்டாமல் வாய்விட்டுப் பாட நேர்ந்துவிடுமென்க. பரமபதத்திலே * ஏதத்ஸாமகாயந்நாஸ்தே * என்று சொல்லப்பட்ட பாடுதல் இங்கே விவக்ஷிதம். [பாடி விரிவது மேவலுறுவீர்.] இந்த ஸம்ஸார நிலத்திலிருக்கும்வரையில் சேற்றிலழுந்தின மாணிக்கம் ஒளி சுருங்கியிருக்குமாபோலே ஆத்மாவுக்கும் ஞானாநந்தாதிகள் விரிவின்றிச் சுருங்கியிருக்க நேருமே; அந்தச் சுருங்குதல் தொலைந்து ஸ்வரூப விகாஸத்தைப் பெறவேண்டி யிருப்பவர்களே! என்று முமுக்ஷுக்களை விளித்தபடி.

அப்படிப்பட்ட கனத்த பேறு பெறுதற்குச் செய்யவேண்டுவதென்னென்ன; க்ஷுத்ர பலன்களைப் பெற்று அவனை விட்டுப்பிரிந்துபோவதல்லாமல், ஏதேனும் தீர்த்தத்தை ஸமர்ப்பித்து ஏதேனுமொரு பூவையிட்டு ஏதேனுமொரு புகையைக் காட்டினாலும் போதுமென்கிறார் பின்னடிகளில்.

இப் பாசுரத்தை பட்டர் உபந்யஸிக்கும்போது "புரிவதுவும் புகை பூவே" என்ற சப்தஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி 'இவ்விடத்தில் அகில் புகையென்றாவது கருமுகைப்பூ என்றாவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; $ செதுகையிட்டுப் புகைக்கலாம், கண்டகாலிப்பூவுஞ் சூட்டலாம்' என்று உபந்யஸித்தாராம். அதை நஞ்சீயர் கேட்டு "ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச்செய்யலாமோ? என்று கேட்டார்; அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி:— "சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்தபடியன்று; அடியார்கள் அப்பூவைப் பறித்தால் கையில் முள் பாயுமே என்று பக்தர்கள் பக்கலில் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததேயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ ஏதுவுமில்லை" என்றும், இதர ஸம்பிரதாயத்திலுள்ள வியாக்யாதாக்கள் சிலர் இந்த ஸம்வாதத்தைக்கண்டு ரஸியாமல் திரஸ்கரித்துரைத்திருப்பதில் விவேகிகட்குக் கண் செல்லாது. அருளிச்செயல்தொடை யழகை நோக்கி ரஸப்பொருளுரைத்ததில் குதர்க்கவாதஞ் செய்கை மனக்குற்ற மாந்தர்க்குரியதே.

---

$ தச்சன் செதுக்குகிற சராய் முதலியவற்றையிட்டு என்றபடி.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பிரிவகையின்றி = இதற்கு இரண்டு வகையாகப் பொருள் கொள்ளலாம்; ஐச்வர்யம் ஸந்தானம் கைவல்யம் முதலான அற்ப பலன்களைக்கேட்டுப் பெற்றுக்கொண்டு அவனைவிட்டுப் பிரிந்து போய்விடாமல் என்பது ஒருவகை. (கீழ்த் திருவாய்மொழியிற்போலே) நைச்யாநுஸந்தானம் பண்ணி அகன்று போய்விடப் பாராமல் என்பது மற்றொருவகை.

நன்னீர் = நல்லநீர் என்றது சுத்த ஜலம் என்றபடியாய், 'சுத்த கங்கை' என்றால் யமுனை ஸரஸ்வதி முதலிய இதர நதிகள் கலசாத வெறும் கங்கை என்று பொருளாவதுபோல, ஏலம் லவங்கம் முதலிய இதரவஸ்துக்கள் சேராத வெறும் தீர்த்தம் என்றவாறும்: இதனால் ஆராதனை எளிமைதோற்றும்.

"புரிவதுமாவது பூவே" என்று பாடாந்தர மிருப்பதாகப் பன்னீராயிரப் படி யுரைகாரர் கூறியுள்ளார். .... ... ... (க)

மதுவார்தண்ணந்துழாயான் * முதுவேதமுதல்வனுக்கு *
எதுவேதென்பணி யென்னாததுவே ஆட்செய்யுமீடே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அம் | அழகிய | எது பணி | (தகுதியாகச்செய்யக்கூடிய) கைங்கரியம் எது ? : |
| மது வார் | தேன் ஒழுகுகின்ற | என் பணி எது | (அதிலும்) நான் செய்யக்கூடிய கைங்கரியம் எது? |
| தண் | குளிர்ந்த | என்னாததுவே | என்று சிந்தியாமலிருப்பதே |
| துழாயான் | திருத்துழாய்மாலையை அணிந்துள்ளவனும் | ஆள் செய்யும் ஈடு | அடிமைசெய்தற்கொப்பாகும். |
| முது வேதம் முதல்வனுக்கு | பழமையான வேதங்களால் முழுமுதற் கடவுளாகச் சொல்லப்பட்டவனுமான பெருமானுக்கு | | |

* * * [மதுவார்.] எம்பெருமானுக்கு இடுவதற்கு இன்னபொருள்தானென்கிற நியதியில்லை யென்றார் கீழ்ப்பாட்டில்; பொருள்நியதியில்லாததுபோலவே அதிகாரி நியதியுமில்லையென்பது இப்பாசுரம்.

அந்தாதித்தொடையான இப்பிரபந்தத்தில், பூவே என்று கீழ்ப்பாட்டில் முடித்துவிட்டு அங்குள்ள சொல்லையோ எழுத்தையோ இங்குக்கொள்ளாமல் மதுவார் என்று தொடங்கியிருப்பது அந்தாதித்தொடைக்கு எங்ஙனேபொருந்து மென்னில்; இங்குச் சொற்றொடையந்தாதியாகக் கொள்ளாமல் பொருட்டொடையந்தாதியாகக் கொள்ளலாம்; அதாவது—கீழ்ப்பாட்டில் முடித்த பூவுக்கும் இப்பாட்டில் தொடங்குகிறமதுவுக்கும் சேர்த்தியுண்டாதலால் [அதாவது—பூவும் தேனும் விட்டுப்பிரியாதிருத்தலால்] இப்படிப்பட்ட பொருட் சேர்த்தியையிட்டு அந்தாதித்தொடை பொருந்தலாம் என்பது ஒருவகை நிர்வாஹம். "மதுவார்" என்று பாடமின்றியே "வதுவார்" என்றுபாடமாகக் கொள்வதுமுண்டாதலால் கீழ்ப்பாட்டில் வகாரவீற்றதாக முடித்ததற்குச் சேர இப்பாட்டு வகாரமுதலதாகத் தொடங்கப்படுதல் மிகப்பொருந்தும் என்பது மற்றொரு நிர்வாஹம்.

"மதுவார் தண்ணந்துழாயான்" என்ற பாடத்தில் தேன் வெள்ளமிடுகின்ற தண்ணந்துழாய்மாலை யணிந்தவன் என்று பொருள்; வதுவார் என்றபாடத்தில்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பரிமளம்மிகுந்த தண்ணந்துழாய் மாலையையுடையவன் என்றபடி. "வதுவை என்று மணம்; இங்கே வது என்றது கடைக்குறை" என்பது ஆன்றோர்களின் வியாக்கியானம். மது என்பதுபோலவே வது என்பதும் தேனுக்குப் பேராக வுண்டென்பர் நவீனர்.

"ஒரு வாடல் மாலையைக்கொண்டுவந்து திருக்குழலிலே வளையமாக வைத்தால், திருக்குழலோட்டை ஸ்பர்சத்தாலே செவ்விபெற்று மது நிரம்பிச் சினையாறுபட்டு வார்ந்து வெள்ளமிடாநிற்கும்" என்ற நம்பிள்ளையீட்டு ஸ்ரீஸூக்திகளின் இனிமை நோக்கத்தக்கது.

முதுவேதமுதல்வனுக்கு=எம்பெருமானை அநுமாநம் முதலிய ப்ரமாணங்களாலே ஸாதிக்கிற இதர தர்சநஸ்தர்களைப்போலல்லாமல், ப்ரஹ்மஸூத்ரகாரரான வியாஸர் "சாஸ்த்ரயோநித்வாத் = சாஸ்த்ரயோநித்வாத்" என்று சாஸ்திரங்களைக்கொண்டே எம்பெருமான் ஸாதிக்கத்தகுந்தவன் என்று நிஷ்கர்ஷித்ததை அடியொற்றி ஆழ்வார் இங்ஙனம் அருளிச்செய்தபடி. "உளன்சுடர்மிகு சுருதியுள் இவையுண்டசுரனே" என்றார் முதல் திருவாய்மொழியிலும். புராதனங்களான வேதங்களாலே முதல்வனென்று ப்ரதிபாதிக்கப்பட்ட ஸர்வேச்வரனுக்கு என்றபடி.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானுக்கு எது பணி? என் பணி ஏது? என்னததுவே ஆட்செய்யுமீடு=நித்ய ஸூரிகளன்றோ அவனுக்குத் தகுதியாக அடிமை செய்யவல்லவர்கள்; அற்பனான நான் செய்யக்கூடிய பணிவிடை உண்டோ என்று நெகிழாததுவே ஆட்செய்கைக்கு அதிகாரமாவது என்றபடி. இத்தால், அடிமைசெய்வது ஸர்வாதிகாரமென்றதாயிற்று.

என்னத + அதுவே, என்னததுவே; தொகுத்தல் விகாரம். இயல்பில், என்னது என்று நிறுத்துவது தகுதியற்றதென்க. .... .... (௨)

ஈடுமெடுப்புமிலீசன் * மாடுவிடாதென்மனனே *
பாடுமென்னாவவன்பாடல் * ஆடுமெனங்கமணங்கே.* (௩)

| | | | |
|---|---|---|---|
| என் மனன் | எனது மனமானது | என் நா | எனது நாவானது |
| ஈடும் எடுப்பும் இல் | குற்றம்பார்த்துத் தள்ளிவிடுதலும் குணம்பார்த்துக் கைக்கொள்ளுதலுமில்லாத | அவன் | அந்த ஸர்வேச்வரன் விஷயமான |
| | | பாடல் | துதிகளை |
| | | பாடும் | பாடுகின்றது; |
| ஈசன் | ஸர்வேச்வரனுடைய | என் அங்கம் | எனது உடம்பு |
| மாடு | ஸமீபத்தை | அணங்கு ஆடும் | தைவாவேசங் கொண்டது போல் ஆடுகின்றது. |
| விடாது | விடுகிறதில்லை; | | |

* * * — [ஈடுமெடுப்புமில்.] எம்பெருமான் விஷயத்தில் அடிமைசெய்கைக்கு அதிகாரி நியதியில்லையென்று காட்டப்பட்டது கீழ்ப்பாட்டில்; அஃது எதனாலென்ன; அடிமைசெய்கையில் விருப்பமுடையவர்களை ஜாதி குணம் தொழில் முதலியவற்றால் நிஹீநரென்று கைவிடும் ஸ்வபாவம் எம்பெருமானுக்கில்லாமையாலே என்கிறது இப்பாட்டில்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஈடும் எடுப்பும் இல் ஈசன்=இவர்கள் நிஹீநஜாதியர்கள், இவர்கள் அறிவில்லாதவர்கள், இவர்கள் ஒழுக்கமற்றவர்கள் என்று சிலரை யுபேக்ஷித்தலும், இவர்கள் நற்குலத்தவர்கள், இவர்கள் நல்லறிவினர், இவர்கள் சிறந்த அநுஷ்டான ஸம்பந்நர்கள் என்று சிலரை அங்கீகரித்தலுமாகிற ஈடு எடுப்புகளில்லாதவன் ஸர்வேச்வரன். "𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌦𑌾𑌨𑌵𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌮𑍍 = தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்." என்கிறபடியே தேவர்களோடு அசுரர்களோடு வாசியற எல்லார்க்கும் பொதுவாகவுள்ளவன் என்றபடி. இப்படியாகில் "அமரர்கட்கிடர்கெட அசுரர்கட்கு இடர்செய்" என்று அமரரை வாழ்விப்பதாகவும் அசுரரை மாய்ப்பதாகவும் சொல்லப்படுகிறதே, இதுவென்? என்னில்; தேவஜாதியிலே அநுக்ரஹமும் அஸுர ராக்ஷஸ ஜாதியிலே நிக்ரஹமும் இயற்கையாக எம்பெருமானுக்குக் கிடையாது. அஸுரஜாதியிலே ப்ரஹ்லாதன் போல்வாரும், ராக்ஷஸஜாதியிலே விபீஷணன் போல்வாரும் வாழ்ந்து போகவில்லையா? ஆதலால், எல்லாருடைய உபயோகத்திற்குமாக அமைத்த தடாகத்திலே சிலர் தாமாக விழுந்து மடிகிறாப்போலே அஸுர ராக்ஷஸாதிகளும் எம்பெருமானாகிற தடாகத்திலே வாழகில்லாது மடிந்துபோவது எம்பெருமானுடைய குற்றமாகாதென்க. இப்படிப்பட்ட ஈசன்மாடு என்மனன் விடாது= "மாடு பொன் பக்கஞ் செல்வம்" என்ற நிகண்டின்படி, ஈசன்மாடு என்றது ஈசனிடத்திலே என்றபடி. என்மனமானது எப்போதும் அவனைவிட்டு நீங்காது.

இப்போது இது எதற்காகச் சொல்லுகிறாரென்றால், 'எம்பெருமான் ஆராதனைக்கு எளியன்' என்பதை ஸம்ஸாரிகளுக்கு விரிவாக உபதேசிக்க ஆரம்பித்த தமக்கு மனமொழி மெய்கள் ஸ்வாதீநமாயிருக்கவேண்டுமே; அப்படியில்லையாகில் உபதேசிக்க முடியாதே; அப்படி உபதேசிக்க முடியாதபடி நெஞ்சு ஈசன்மாடு குடிகொண்டது; நாவும் அவனுடைய பாடலிலேயே ஆழ்ந்தது; சரீரமும் அவ்விஷயத்திலேயே ஆவேசங்கொண்டது; இனி என்ன வுபகரணங்கொண்டு உங்களுக்கு உபதேசிப்பேனென்றவாறு.

"சூருமணங்குத் தெய்வப் பெண்ணே" என்பது நிகண்டு. 'அணங்காடும்' என்றது அணங்குபோல் ஆடும் என்றவாறு. .... .... .... (௫)

அணங்கெனவாடுமெனங்கம் * வணங்கிவழிபடுமீசன் *
பிணங்கியமரர்பிதற்றும் * குணங்கெழுகொள்கையினனே. * (௬)

| | | | |
|---|---|---|---|
| அணங்கு என ஆடும் | தைவாவேசங் கொண்டார் போல ஆடுகின்ற | அமரர் | நித்யஸூரிகள் |
| என் அங்கம் | எனது சரீரம் | பிணங்கி | பரஸ்பரவிவாதம் செய்து |
| வணங்கி வழிபடும் | சேவித்து ஆராதிக்கும்படி நின்ற | பிதற்றும் | பிதற்றும்படியாயுள்ள |
| ஈசன் | எம்பெருமான் (எப்படிப்பட்டவனென்றால்) | குணம் கெழு | பல திருக்குணங்கள் பொருந்திய |
| | | கொள்கையினன் | கோட்பாட்டை யுடையவன். |

* * * [அணங்கெனவாடும்] இப்பாட்டுக்கு இரண்டுவகையாக அந்வயக்ரமமுண்டு; [பதவுரைபின்படியே] பாசுரத்தை உள்ளபடியே அந்வயித்துப்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பொருள்கொள்வது ஒன்று; பிணங்கி யமரர் பிதற்றும் குணங்கெழு கொள்கையினானை ஈசனை, அணங்கென ஆடும் என் அங்கம், வணங்கி வழிபடும் என்று கொள்வதுமன்றொன்று. இப்பொருளில், ஈசன் என்றது இரண்டாம் வேற்றுமைத் தொகை.

தம்முடைய மனமொழி மெய்களுக்கு எம்பெருமான் பக்கலிலுண்டான ஊற்றம் சிறிதுபோது உண்டாய்விடுகையன்றியே நித்யஸூரிகளுக்குப்போலே நிரந்தரயாத்ரையானபடி சொல்லுகிறது இப்பாட்டு.

[பிணங்கியித்யாதி.] எம்பெருமானது குணங்களிலே புகுந்துவிட்டால் ஒவ்வொரு குணத்தினுடைய அதிசயமும் எல்லைகாணவொண்ணாததாயிருக்கும்; பரத்வத்திற்கு ஈடான குணங்களும், ஸௌலப்யத்தற்கு ஈடான குணங்களுமாக வகுக்கப்பட்டுள்ள குணங்களிலே ஒருவர் ஒரு குணத்தை அநுபவித்து அதன் அருமைபெருமைகளைச் சொல்லிக்கொண்டாட, மற்றொருவர் மற்றுமொரு குணத்தையநுபவித்து அதன் அருமைபெருமைகளையெடுத்துரைத்துக் கொண்டாட, இங்ஙனே வாதவிவாத கலஹங்கள் ஏற்பட்டுவிடும்.

ஆறாயிரப்படியில் பிள்ளானருளிச்செயலை நோக்குமிடத்து "கொள் கலனே" என்பதாகப் பாடம் புலப்படும் கலம் எனினும் கலன் எனினும் ஒக்கும்; மகரனகரப்போலி. பாத்திரம் என்றபடி. ... .... (௪)

கொள்கைகொளாமை யிலாதான் * என்கலிராகமிலாதான் *
விள்கைவிள்ளாமைவிரும்பி * உள்கலந்தார்க்கோரமுதே. * (ரு)

| | | | |
|---|---|---|---|
| கொள்கை | குணம்பார்த்துக் கொள்ளுதலும் | விள்கை | வேறு பிரயோஜனங்களைக் கொண்டு விலகிப் போவதையும் |
| கொளாமை | குணமில்லாமை பார்த்துத் தள்ளுதலும் | விள்ளாமை | (தன்னையே விரும்பி) விடாதிருப்பதையும் |
| இலாதான் | இல்லாதவனாய் | விரும்பி | எதிர்பார்த்து |
| என்கல் | கைவிடுகைக்கு அடியான மனநெகிழ்ச்சியும் | உள் கலந்தார்க்கு | (விண்டுபோகாமல்) தன்னில் கலந்தவர்கட்கு |
| இராகம் | கைக்கொள்ளுதற்கு அடியான ஆசையும் | ஓர் அமுது | ஒப்பற்ற அமுதமாயிருப்பன். |
| இலாதான் | இல்லாதவனாய், | | |

* * * —[கொள்கைகொளாமை.] நமக்கு 'அநந்ய போக்யத்வம்' என்பதாக ஒரு ஸ்வரூபமுண்டு; அதாவது, எம்பெருமானைத் தவிர்த்து மற்ற அற்ப பலன்களை விரும்பாமல் அவனையே பரம போக்யவஸ்துவாகக்கொண்டு அவனையே ஆசைப்படுவதாம். இப்படிப்பட்ட அதிகாரிகள் விஷயத்திலே அவன் அமுதமாகவேயிருப்பன் என்கிறது. தன்னைவந்து பணிகின்ற அதிகாரிகளைத் தான் பரீக்ஷித்துப்பார்ப்பன்; இவர்கள் ஏதேனும் க்ஷுத்ரபலன்களைப் பெற்றுக்கொண்டு நெகிழ்ந்து போய்விடுகிறவர்களா? அல்லது அவற்றில் நசையற்று நம்மையே பரமப்ரயோஜநமாகப் பற்றுகிறவர்களா? என்று பார்ப்பன்; அகன்று போகிறவர்களாயிருந்தால், க்ஷுத்ரபலன்களைத்தந்து அவர்களை அகற்றிவிடுவன்; அங்ஙனல்லாதவர்களுக்குத்தானே முற்றூட்டாக இருப்பன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கீழே 'ஈடுமெடுப்புமிலீசன்" என்றதற்கும், இங்கு கொள்கை கொளாமை யிலாதான்" என்பதற்கும் என்ன வாசியென்னில்; அடியவர்களில் ஏற்றத்தாழ்வு பாராதே ஆசையுடையாரெல்லாரையும் அடிமைப்படுத்திக்கொள்ளு மியல்வினன் என்பது அத்தப் பாசுரத்திற்கு விவக்ஷிதம்; அப்படி அடிமைப்படுத்திக் கொள்ளுமளவில் சிலரிடத்தே உயர்த்தி கண்டு அவர்களை அந்தரங்க கைங்கரியத்திலே ஏவிக்கொள்ளுதல், சிலரிடத்தே தாழ்வுகண்டு அவர்களை பஹிரங்க கைங்கரியத்திலே ஏவிக்கொள்ளுதல் என்னும்படியான வாசிவையாதவன் என்பது இவ்விடத்திற்கு விவக்ஷிதம் - என்று பிள்ளான் ஆறுயிரத்திலே பணித்தபடி.

எள்கல் இராகமிலாதான் = எள்கலாவது உபேக்ஷை; இராகமாவது அபேக்ஷை; இவை யிரண்டுமில்லாதவன்; கைங்கரியங்கொள்ளுகிறவிஷயத்தில் வாசிவையாமை மாத்திரமன்று; திருவுள்ளத்திலேயே உபேக்ஷையும் அபேக்ஷையுமில்லாதவன் என்றவாறு. இங்கே நம்பிள்ளையீடு:—"திருவுள்ளத்தாலே சிலரை இகழ்ந்திருத்தல் சிலரை ஆதரித்தல் செய்யான்; * ஈடுமெடுப்புமிலீசன் * என்றவிடம் ஸ்வீகார ஸமயத்தில் குணதோஷங்கள் பாரானென்றது; இங்கு பரிமாற்றத்தில் தரமிட்டுக்கொள்ளா னென்கை."

விள்கைவிள்ளாமைவிரும்பி உள்கலந்தார்க்கு ஓரமுது = எம்பெருமான் பார்ப்பது இவ்வளவே; 'இவர்கள் ப்ரயோஜநாந்தரங்களை விரும்பிப் பெற்றுக்கொண்டு நம்மைவிட்டு ஓடிப்போகிறவர்களா? அன்றி, நம்மையே விரும்பி விடாதிருப்பவர்களா?' என்கிற இவ்வளவையே ஆராய்ந்துபார்த்து, தன்னையே பிரயோஜனமாகப்பற்றித் தன்னுடனே ஒரு நீராகக் கலக்க விரும்பியிருப்பவர்களுக்கு * அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே * என்னும்படியாயிருப்பன்:

பகவத்கீதையில், 'தேஷாம் ஸததயுக்தாநாம்'' என்றவிடத்தில்'எப்போதும் தன்னோடு கூடியிருப்பவர்களுக்கு' என்பது பொருளாயிருக்கச்செய்தேயும் [ஆசம்ஸாயாம் க்தப்ரத்யயமாகக்கொண்டு] 'எப்போதும் தன்னோடு கூடியிருக்க விரும்பியிருக்குமவர்களுக்கு' என்று ஸ்ரீபாஷ்யகாரர்கள் பொருள் பணித்தபடியே இங்கும் உள்கலந்தார்க்கு என்பதற்கு 'உள்கலக்க விரும்பியிருக்குமவர்கட்கு' எனப் பொருள்கொள்ளுதல் பொருந்தும். ... .... ... (ரு)

அமுதமமரர்கட்கீந்த * நிமிர்சுடராழிநெடுமோல் *
அமுதிலுமாற்றவினியன் * நிமிர்திரைநீள்கடலானே. *

(சு)

| | |
|---|---|
| அமரர்கட்கு | தேவர்கட்கு |
| அமுதம் ஈந்த | அமிர்தத்தைக் கொடுத்தவனும் |
| நிமிர் சுடர் ஆழி | வளர்கின்ற ஒளியையுடையதிருச்சக்கரத்தையுடையனும் |
| நெடு மால் | எல்லைகடந்தபெருமையையுடையனுமாய்க்கொண்டு |
| நிமிர் திரை நீள் கடலான் | அலையெறிகின்ற விசாலமான திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளின |
| அமுதிலும் | (அக்கடலிலுண்டான) அமிர்தத்தைவிட |
| ஆற்ற இனியன் | மிகவும் போக்யன். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [அமுதமமரர்கட்கு.] கீழ்ப்பாட்டில் * விள்கைவிள்ளாமை விரும்பி * என்று சொன்ன சொற்போக்கிலே பிரயோஜநாந்தரபரர்கள் ப்ரஸ்தாவிக்கப் பட்டமையால், ஐயோ! உள்கலந்தார்க்கு ஓரமுதாயிருக்கு மெம்பெருமானை விட்டுப் பிரயோஜநாந்தரபரர்களாய் ஆபாஸமான அமுதத்தைப் பெற்றுக் கொண்டு விலகிப்போவாரும் சிலரே! என்று தேவர்களை நிந்திப்பதிலே நோக்காகச் செல்லுகிறது இப்பாட்டு. ஆறாயிரப்படி யருளிச்செயல் காண்மின்;— "அம்ருதத்திற்காட்டிலும் பரமபோக்யனாயிருந்தவனுடைய திருவாழியுங் கையுங் கண்டுவைத்தும் சிலர் அதி க்ஷுத்ரமான ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு போவதே! என்ன பாக்யஹீநரோ! என்று கொண்டு கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதமான ப்ரயோஜநாந்தரார்த்திகளிழவை அநுஸந்தித்து இன்னாதாகிறார்." என்று.

தேவர்களின் நிந்தை இதில் ஸ்பஷ்டமாக இல்லையாயினும் "அமுதமமரர் கட்கீந்த" என்று எம்பெருமானைக் கொண்டாடுவதில் அவர்களது நிந்தையே உள்ளுறைவதென்க. எம்பெருமான் என்ன பரமோதாரனோ!, 'எங்களுக்கு நீவேண்டா; சாவா மருந்து தந்தாற்போதும்' என்றவர்களுக்கு அவர்கள் விரும்பிய பொருளையே கொடுத்துவிடுவதே! என்று கொண்டாடிச்சொல்லுகிற பாசுரம் முதலடி. அவர்கள் கொண்ட பிரயோஜநத்தை அருவருத்து, தாம் உகந்த பரமப்ரயோஜநமான எம்பெருமானுடைய பரமபோக்யதையை அநுபவிக்கிறார் மற்றையடிகளால். .... .... ... .... .... (சு)

நீள்கடல்சூழிலங்கைக்கோன் * தோள்கள்தலை துணிசெய்தான் *
தாள்கள் தலையில்வணங்கி * நாள்கடலைக்கழிமினே. * (எ)

| | | | |
|---|---|---|---|
| நீள் கடல் சூழ் | நீண்ட கடலினால் சூழப்பட்ட | துணிசெய்தான் | அறுத்தொழித்த ஸ்ரீராமபிரானுடைய |
| இலங்கை | லங்காபுரிக்கு | தாள்கள் | திருவடிகளை |
| கோன் | தலைவனாயிருந்த இராவணனுடைய | தலையில் வணங்கி | தலையாலே வணங்கி |
| தோள்கள் | இருபது தோள்களையும் | நாள் கடலை | காலமாகிய கடலை |
| தலை | பத்துத் தலைகளையும் | கழிமின் | தாண்டுங்கள். |

* * * — [நீள்கடல்சூழ்.] இங்ஙனம் பரமபோக்யனான எம்பெருமானுடைய குணங்களை அநுபவித்துக்கொண்டு போதுபோக்குவதே ப்ராப்தமென்கிறாரிதில்.

"பாந்தகடலை அகழாகவுடைத்தாய், அந்தக் கடல்தானும் மிகையாம்படியான அரணையுடைத்தாயிருந்துள்ள இலங்கைக்கு அதிபதியன்றோ நான்!' என்று கொண்ட செருக்கினால் சக்ரவர்த்தி திருமகனென்று மதியாதே எதிரிட்ட பயலுடைய தோள்களையும் தலையையும் துணித்த மனத்துக்கினிய இராமபிரானுடைய திருவடிகளை வணங்கி, [அதாவது, அநுமானைப்போலே அவனுடைய வீர சரிதங்களைக்கொண்டு போதுபோக்கி] ஸம்ஸார நிலத்திலிருக்கும் வரையில் கடல்போலே பெருகிச் செல்லுகின்ற நாள்களைத் தொலையுங்கோள் என்றாராயிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஈற்றடியில், ''நாட்கடலை'' என்ற ஸ்தானத்தில் 'நாழ்க்கடலை' என்றும் பாட முண்டாதலால், நாழ் என்று பாபமாய், பாபமாகிற கடலைக் கழியுங்கோள் என்ற படி யாசவுமாம். ... .... .... .... .... (எ)

கழிமின்தொண்டீர்கள்! கழித்து * தொழுமினவனைத்தொழுதால் *
வழிநின்றவல்வினைமாள்வித்து * அழிவின்றி யாக்கந்தருமே. * (அ)

| | |
|---|---|
| தொண்டீர்கள் | தொண்டர்களே! |
| கழிமின் | விஷயாந்தர ஸங்கத்தைக் கழித்துவிடுங்கள்; |
| கழித்து | அதனைக் கழித்துவிட்டு |
| அவனை | அப்பெருமானை |
| தொழுமின் | தொழுங்கள்; |
| தொழுதால் | தொழுதமாத்திரத்தினால் (அவன்) |
| வழி நின்ற | ஜன்ம பரம்பரையாய்த் தொடர்ந்துநின்ற |
| வல் வினை | வலிய பாவங்களை |
| மாள்வித்து | ஒழித்து |
| அழிவு இன்றி | சாச்வதமான |
| ஆக்கம் | முக்திஸம்பத்தை |
| தரும் | தந்தருள்வன். |

* * * — [கழிமின் தொண்டீர்கள்.] ஸ்ரீராமபிரானுடைய வீரசரிதத்தை யநுஸந்தித்து இதர விஷயப்பற்றுகளைத் தவிரவே, அவன்றானே இடையூறுகளைப் போக்கி நித்ய கைங்கரியத்தைத் தந்தருள்வனென்கிறார். தொண்டீர்கள்! கழிமின்=தொண்டு பூண்டு அமுதமுண்ண விரும்பியிருப்பவர்களே! புறம்புண்டான பற்றுக்களில் நசையைத் தவிருங்கோள்; அங்ஙனம் தவிர்ந்து அப்பெருமானைத் தொழுங்கோள்; அங்ஙனம் தொழுதால் இவ்வாத்மாவோடே பொருந்தியிருக்கின்ற ப்ரபல கருமங்களை வாஸனையோடே போக்கி மீட்சியற்ற செல்வமாகிய மோக்ஷ புருஷார்த்தத்தை அவன்றானே கொடுத்தருளக் குறையில்லையென்றாயிற்று.

ஆக்கம் — ஸம்பத்து. .... .... .... .... (அ)

தருமவரும்பயனாய * திருமகளார்தனிக்கேள்வன் *
பெருமையுடையபிரானார் * இருமைவினைகடிவாரே. * (கூ)

| | |
|---|---|
| அ அரு பயன் ஆய | அப்படிப்பட்ட அருமைப் பயனான புருஷார்த்தத்தை; |
| திரு மகளார் தனி கேள்வன் | பெரிய பிராட்டியார்க்கு ஒப்பற்ற நாயகனாய்க் கொண்டு [பிராட்டியோடுகூடி நின்று] |
| தரும் | தந்தருள்வன்; |
| பெருமை உடைய பிரானார் | (லக்ஷ்மீ ஸம்பந்தத்தாலே) மேன்மையை யுடைய (அந்த) ஸர்வேச்வரன் |
| இருமை வினை | இருவகைப்பட்ட (புண்ய பாபரூபமான) கருமத்தை |
| கடிவார் | போக்குவான். |

* * * — [தருமவரும்.] எம்பெருமான் தன்னைப்பற்றின மாத்திரத்திலே இப்படி இடையூறுகளையெல்லாம் போக்கிப் பரம புருஷார்த்தத்தையும் தந்தருளக்கூடுமோவென்ன; பிராட்டி அருகேயிருக்கும்போது எதுதான் செய்யக் குறை? என்கிறார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



முதலடியை, தரும் அவ்வரும்பயனாய என்றும், தரும அரும்பயனாய என்றும் இருவகையாகப் பிரித்துப் பொருள் கூறுவர். ஆசார்யஹ்ருதயத்தில் (4-1) * பரபரனாய்நின்ற * என்ற சூர்ணிகையில் "தொழுதால் அரும்பயனாய தரும்" என்றருளிச்செய்திருப்பதும் இங்கு நினைக்கத்தக்கது. அ + அரும்பயனாய, அவ்வரும்பயனாய என்று சந்தியாகவேண்டு மிடத்து "அவரும்பயனாய" என்று ஆனது தொகுத்தல்விகாரமென்க. பெறமுடியாததாக சாஸ்திரங்களிலே ப்ர ஸித்தமாகவுள்ள புருஷார்த்தங்களைத் தந்தருள்வன் என்றபடி.

இனி, மற்றைப்படியான பதவிபாகத்தில் * தருமவ்வரும்பயனாய * என்பது திருமகளார்க்கு அடைமொழியாகும். தருமத்தினுடைய பரமப்ரயோஜனமே ஒரு வடிவுகொண்டாப்போலே யிருக்கிற பெரியபிராட்டியார்க்குத் தனிக்கேள் வன் என்றபடி. "லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்ய ரூபயா | ரக்ஷகஸ் ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே = லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா, ரக்ஷகஸ் ஸர்வஸித் தாந்தே வேதாந்தேபி ச கீயதே." என்கிற ஸ்ரீபாஞ்சராத்ர வசனம் இங்கு அநுஸந்திக்கத்தகும். 'தேவ்யா காருண்யரூபயா லக்ஷ்ம்யா" என்றதன் கருத்தே * தருமவரும் பயனாய திருமகளார் * என்பதில் உறையுமென்க.

இருமைவினைகடிவார் = பாபத்திற்காட்டிலும் புண்ணியம் நன்றாயிருந்ததே யாகிலும் மோக்ஷமார்க்கத்திற்கு இடையூறாகும் திறத்தில் இரண்டும் ஒக்குமாத லாலும் "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்று உபநிஷத்தும் ஓதுகையாலும் புண்ய பாபங்களிர ண்டுமே தொலையக்கடவனவாம். புண்ணியங்களுக்குப் பலனாக ஸ்வர்க்காநுப வம் முதலிய ஆபாஸ புருஷார்த்தங்கள் கிடைக்கும்; பாவங்களுக்குப் பலனாக நரக வேதனைகள் கிடைக்கும்; பரம புருஷார்த்தத்தை விரும்பி நிற்பார்க்கு ஸ்வர்க்க நரகங்களிரண்டும் பரியாயமாதலால் புண்ய பாபங்களிரண்டும் தொ லையவேணுமென்று சாஸ்திரம் சொல்லி நின்றது என்றுணர்க. இந்த சாஸ்த் ரார்த்தத்தை ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகனும் வரதராஜ பஞ்சாசத்தில் * ஸத்யப்யஜஸ்ரி வரத த்வயி பத்தபாவா: பைதாமஹாதிஷு பதேஷ்வபி பாவபந்தம் | கஸ்மை ஸ்வதேத ஸுகஸஞ்சரணோத்ஸுகாய காராக்ருஹே கநகச்ருங்கலயாபி பந்த: = ஸத்யஸ் த்யஜந்தி வரத! த்வயி பத்தபாவா: பைதாமஹாதிஷு பதேஷ்வபி பாவபந்தம், கஸ்மை ஸ்வ தேத ஸுகஸஞ்சரணோத்ஸுகாய காராக்ருஹே கநகச்ருங்கலயாபி பந்த: ? * என்ற ச்லோகத்தினால் உரைத்தருளினர். புண்ணியம் பொன்விலங்குபோன் றது, பாவம் இரும்பு விலங்குபோன்றது என்பது இந்த ச்லோகத்தின் தேர்ந்த கருத்து. யதேஷ்டமாக ஸஞ்சரிக்க விரும்புகின்றவர்களை இரும்பு விலங்கினால் கட்டிவைத்தாலென்ன ? பொன் விலங்கினால் கட்டிவைத்தாலென்ன ? இரண்டும் துக்கஹேதுவேயாகு மெய்றவாறு.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இங்கே நம்பிள்ளை யீடு காண்மின்;—

“[இருமைவினைகடிவாரே] பேர்வாசியேயாம்படி நாம் பண்ணிவைத்த இரு வகைப்பட்ட கர்மங்களையும் போக்குவார், புண்ய பாவங்களுக்குத் தன்னில் தான் வைஷம்யமுண்டேயாகிலும் மோக்ஷ விரோதித்வாத் த்யாஜ்யமாகா நின்றவையிறே.” ... .... ... .... ... (௯)

கடிவார்தீயவினைகள் * நொடியாருமளவைக்கண் *
கொடியாவடுபுள்ளுயர்த்த * வடிவார்மாதவனாரே. * (௧0)

| | | | |
|---|---|---|---|
| அடு | பகைவரை அழிக்கின்ற | மாதவனார் | லக்ஷ்மீபதியானவர் |
| புள் | கருடப்பறவையை | தீய வினைகள் | கொடிய பாவங்களை |
| கொடி ஆ உயர்த்த | த்வஜமாக எடுத்தவரும் | கொடி ஆரும் அளவை கண் | ஒரு கொடிப் பொழுதிற் குள்ளே |
| வடிவு ஆர் | விலக்ஷணமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவருமான | கடிவார் | போக்கியருள்வார். |

* * * — [கடிவார்தீயவினைகள்.] எம்பெருமான் பிராட்டியோடுகூடி அடியார்க்குக் காரியஞ் செய்தருள்வது தாமதமாக நடைபெறுமோ என்ன; இல்லை; ஒரு நொடிப்பொழுதிலே நடைபெறு மென்கிறது இப்பாட்டு. இத் திருவாய்மொழியில் * வழிநின்றவல்வினைமாள்வித்து * இருமை வினை கடிவார் * கடிவார் தீயவினைகள் * என்ற மூன்று இடங்களில் எம்பெருமான் நமது பாவங்களைத் தொலைத்தருள்வனென்பது சொல்லப்பட்டிருக்கின்றது; இவை புநருக்தியாகாது; ஒவ்வோரிடத்திற்கும் ஒவ்வொரு அம்சத்திலே நோக்கு; எங்ஙனேயென்னில்; ஆச்ரயித்தவர்கள் விஷயத்திலே இக்காரியஞ் செய்தருள்வது என்பது * வழிநின்ற வல்வினைமாள்வித்து * என்ற விடத்திற்கு விவக்ஷிதம்; பிராட்டியின் புருஷகாரமடியாக அக்காரியஞ் செய்தருள்வனென்பது * இருமை வினை கடிவாரே * என்ற விடத்திற்கு விவக்ஷிதம்; அது செய்வது ஒரு நொடிப்பொழுதிலே என்பது இப்பாட்டிற்கு விவக்ஷிதம் என்று வாசிகாண்க.

இங்ஙனே மூன்று விஷயங்கள் விவக்ஷிதமானால், இம்மூன்றையுஞ் சேர்த்து ஒரு பாசுரமாகவே அமைத்துவிடலாகாதோ? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; அநுபவப்ரகாரங்களிலே போகிற போக்குக்கள் ஆழ்வாருடைய திருவுள்ளத்திற்குத் தெரியாதவையன்றோ? ‘இப்படி அமைக்கவேணும்’ என்று ஒரு எண்ணத்தோடே ஆழ்வார் பாசுரமமைக்கின்றாரல்லரே; ஆதலால் இந்த சங்கைக்கு உதயமேயில்லை.

“கொடியா அடு புள்ளுயர்த்தவடிவார் மாதவனார் நொடியாருமளவைக்கண் தீய வினைகள் கடிவார்” என்று அந்வயிப்பது. பின்னடிகளில் பெரிய திருவடியின் ப்ரஸ்தாவம் வந்திருப்பது ‘பெரிய திருவடியை அடிமைகொள்ளுமா போலே நித்ய ஸம்ஸாரிகளான நம்மையும் அடிமை கொள்வன்’ என்கிற கருத்தைக் காட்டுதற்காகவென்று திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவுள்ளம் பற்றுகிறார். “பிராட்டியோடே கூட நின்று, பெரிய திருவடிக்குக் கொடுத்தருளுமா

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



போலே தந்தருளும்'' என்பது ஆறாயிரப்படி யருளிச்செயல். இக்கருத்துப் பொலியவே ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்திலே — ''யஃக்ஷ்ஷிஷெவ யஷி கிஞ்ஞ ஹஞ ஜஞூஃ ஹவெூ ஹஜெத ஹமவஞஉநநூவெதாஃ | தம் வொயஶீஷூஸ ஐயாநி.திவாவூஜாநநு வெஹ வெநதெயவஸஉவூ ஸரீகவொஷி = யஃ சச்சிதேவ யதிகிஞ்சந ஹந்த ஜந்துர் பவ்யோ பஜேத பகவந்தம் அநந்யசேதாஃ, தம் ஸோயமீத்ருச இயாஙிதிவாப்யஜாநந் ஹைந வைநதேயஸமமபி உரரீகரோஷி.'' என்று ஒரு ச்லோக மருளிச்செய்தார். அன்று வந்து பணிந்த ஒரு அடியானைக் கைக்கொள்ளுமிடத்து, நித்யஸூரிகளில் தலைவனான பெரிய திருவடியோடுமொக்கக் கைக்கொள்ளுகிறானென்பது இந்த ச்லோகத்தின் கருத்து.

மாதவனூரே என்றவிடத்திற்கு நம்பிள்ளையீடு காண்மின்;— ''பிராட்டி அருகேயிருந்து போக்குவிக்கவாயிற்று போக்குவது; ஒருதலை ஜன்மம்; ஒருதலை மரணம்; நடுவே ஆதிவ்யாதிகள்; இவை செய்த குற்றங்களைப் பார்க்கக்கடவதோ? குற்றங்கண்டுவிடில் விபூதியாக விடவேண்டிவாராதோ? பொறுத்தருளீர்' என்றால், அவளுக்காகப் பொறுத்தோமென்னு மித்தனை.'' .... (சய)

மாதவன்பால் சடகோபன் * தீதவமின்றியுரைத்த *
ஏதமிலாயிரத்திப்பத்து * ஓதவல்லார்பிறவாரே. * (கக)

| | |
|---|---|
| சடகோபன் | ஆழ்வார் |
| மாதவன் பால் | லக்ஷ்மீநாதனான எம்பெருமான் பக்கலில் (பக்தியுக்தாராய்) |
| தீது அவம் இன்றி உரைத்த | தனது மேன்மையைப் பார்த்து உதாஸீநனாயிருத்தல், அடியாருடைய குற்றங்களைப் பார்த்துக் கைவிட்டொழிதல் ஆகிற இருவகைக்குற்றமும் எம்பெருமானுக்கு இல்லையென்பதை யெடுத்துரைத்த |
| ஏதம் இல் ஆயிரத்து | வழுவற்ற இத்திருவாய்மொழியாயிரத்தில் |
| இ பத்து | இப் பத்துப்பாசுரங்களையும் |
| ஓத வல்லார் | (குருமுகமாக) அதிகரிக்க வல்லவர்கள் |
| பிறவார் | மீண்டும் பிறந்து வருந்தமாட்டார்கள். |

* * * — [மாதவன்பால்.] இத் திருவாய்மொழியை ஓதவல்லவர்கள் மீண்டும் இந்த ஸம்ஸாரநிலத்தில் வந்து பிறக்கப் பெறார்களென்று பயன்சொல்லித் தலைக்கட்டுகிற பாசுரமிது.

இப் பாட்டில், தீது அவம் ஏதம் என மூன்று சொற்கள் உள்ளன; குற்றம் என்பதே மூன்றுக்கும் பொருள். மூன்று விஷயங்களுக்குக் குற்றமில்லாமை சொல்லப்படுகின்றது; அதாவது — கவிபாடுகிற தமக்கும் பாட்டுண்கிற எம்பெருமானுக்கும் இக் கவிகளுக்கும் ஒரு தீங்குமில்லாதபடி மாதவன்பாற் சடகோபனுரைத்த ஆயிரம் என்பதாக. ப்ராமாணமாகிய இத் திருவாய்மொழியும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ப்ரமேயனை எம்பெருமானும் ப்ரமாதாவான ஆழ்வார் தாமும் குற்றமற்றிருக்கின்றமையைச் சொன்னவாறு. இது ஆறுயிரப்படியில் பிள்ளான் அருளிய நிர்வாஹம்.

இங்கே பட்டர் விலக்ஷணமாக அருளிச் செய்வராம்; எங்ஙனேயென்னில்; ஏதமிலாயிரம் என்று இப் ப்ரபந்தத்தைக் குற்றமற்றதாகச் சொன்னபோதே ப்ரபந்த ப்ரதிபாத்யனுக்கும் ப்ரபந்தவக்தாவுக்கும் குற்றமில்லாமை சொன்னதாகவே தேறிவிடும்; அவை தனிப்படச் சொல்லவேண்டா; ஆகவே "தீதுஅவம் இன்றி" என்பதற்கு வேறு தாற்பரிய மிருக்கத்தகும்; அதாவது — "மாதவன் பால் தீதவமின்றியுரைத்த" = எம்பெருமானுக்கு இரண்டுவகையான குற்றம் ஸம்பாவிதமாகலாம்; தன்னுடைய மேன்மையைப் பார்த்து ஆச்ரிதர்களைக் கைவிடுதல், ஆச்ரிதர்களின் நீசத்தன்மைகளைப் பார்த்துத் தான் ஒதுங்கிநிற்றல் என்கிற இவ்விரண்டு குற்றங்களும் எம்பெருமானுக்கு இல்லையென்பதைச் சொன்னவிப்பத்து என்க. 'எம்பெருமான் ஆராதனைக்கு எளியன்' என்று சொன்னதுதான் இது. .... .... ... ... ... (கக)

ஆறாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத் திருவாய்மொழிக்கான பாசுரம்.



பரிவதி லீசன்படியைப் பண்புடனே பேசி *
அரியனல ராதனைக் கென்று * — உரிமையுடன்
ஓதியருள் மாறன் ஒழிவித்தா னிவ்வுலகில் *
பேதையர்கள் தங்கள் பிறப்பு. *

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| பரிவது இல் | ஹேயகுணமற்றவனான | உரிமையுடன் | ஔசித்யத்தோடு |
| ஈசன் | எம்பெருமானுடைய | ஓதி அருள் | அருளிச்செய்த |
| படியை | (ஆராதிப்பதற்கு எளியன் என்கிற) ப்ரகாரத்தை | மாறன் | நம்மாழ்வார் |
| பண்புடனே பேசி | அழகாக அருளிச்செய்து | இ உலகில் | இவ்வுலகத்திலுள்ள |
| ஆராதனைக்கு அரியன் அலன் என்று | (அவன்) ஆராதிப்பதற்கு அருமையானவனல்லன் என்று (இவ்விஷயத்தை) | பேதையர்கள் தங்கள் | பாமரர்களினுடைய |
| | | பிறப்பு | பிறவியை |
| | | ஒழிவித்தான் | தொலைத்திட்டார். |

* * * — அகில ஹேயப்ரத்யநீககல்யாணைகதானனான ஸர்வேச்வரன் அவாப்த ஸமஸ்தகாமனாகையாலே நாம் இட்டதுகொண்டு நிறையவேண்டியவனல்லனாத லால் அன்போடு நாம் இடுவது அணுவளவேயாயினும் அதுதன்னையே கொண்டு பரம த்ருப்தியடைகிறானென்பதைத் தெரிவிக்கின்ற முகத்தால் எம்பெருமா னுடைய ஆராதநஸௌகர்யத்தை ஆழ்வார் இத்திருவாய்மொழியிலருளிச் செய்து. இத்தகைய திருவாய்மொழியை உபகரித்தவதனால் நம்போன்ற அறி விலிகளின் பிறவித்துன்பத்தையும் போக்கியருளினாராயிற்று என்பதாம். .... (சு)

---

த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

---

ஶ்லோ॥ दास्येषु देशकालयोरङ्गकलापकर्तृ
द्रव्यादिना न नियमः [illegible] |
भक्तिः परं बहुमता [illegible]
स्वाराध्य [illegible] षष्ठे ॥

எம்பெருமானுக்குச் செய்புமடிமைத் திறங்களில் தேசநியமமாவது கால நியமமாவது அங்ககலாப நியமமாவது அதிகாரி நியமமாவது பொருள் நியம மாவது மற்று எந்த நியமமாவது சிறிதுங்கிடையாது; பக்திநியமமொன்று தான் உள்ளது; ஆதலால் எம்பெருமான் ஆராதனைக்கு எளியன்—என்பது ஆறாந் திருவாய்மொழியி லருளிச்செய்யப்பட்டதென்றவாறு. ... (சு)

ஜீயர் திருவடிகளே சரணம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி முதற்பத்து

## ஏழாந் திருவாய்மொழி — பிறவித்துயரற.

---

## அவதாரிகை.

கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆராதனைக்கு அரியனல்லன், மிகவும் எளியன் என்பதை அருளிச்செய்தார். ஆராதனம் எளிதாயிருந்தாலும் ஆச்ரயணம் இனிதாயிருந்தாலன்றோ நெஞ்சு பொருந்தும்; உலகில் பலபேர்கள் நாம் இட்டதுகொண்டு பரம த்ருப்தியடையுமவர்களாய் ஆராதனைக்கு எளியரா யிருக்கக்கூடும்; இருந்தாலும் அவர்களுடைய ஆச்ரயணம் நமக்கு இனிமைமிக்க தாயிருந்தாலன்றிப் பயனில்லையன்றோ: அப்படியே எம்பெருமானும் ஆராதிக்க எளியனானாலும் ஆச்ரயணத்தில் ஸாரஸ்யமுடையனா யிருக்கவேண்டுவதொன்று உண்டாதலால் அஃது அப்படியே உண்டென்பதை இத் திருவாய்மொழியி லருளிச்செய்கிறார்.

“பகவத் ஸமாச்ரயணமாகிறதுதான் இதுக்கு இட்டுப் பிறவாத ஸர்வேச்வரனும் ஆசைப்படும்படி போக்யரூபமாயிருப்பதொன்றிறே” என்பது நம்பிள்ளையருளிச்செயல். தன்னுடைய வைலக்ஷண்யத்தை எம்பெருமான் தானும் பார்த்துத் தனக்குத்தானே அடிமைசெய்துகொள்ள விரும்பும்படியாயிருக்குமென்று ஒரு அதிசயோக்தியாக இது அருளிச்செய்தபடி. ‘இப்படியும் இருக்குமா? எம்பெருமான் அவ்வளவு உன்மத்தனா?’ என்று சிலர் நினைத்துவிடக்கூடும்; ‘எம்பெருமானுடைய இனிமை ஒப்புயர்வற்றது’ என்று காட்டுவதில் மாத்திரம் இந்த ஸ்ரீஸூக்தி நோக்குடையதென்று கொள்க.

இதற்கு ஸம்வாதமாக பட்டருடையவும் வேதாந்ததேசிகனுடையவும் இரண்டொரு ஸ்ரீஸூக்திகளைக் காட்டுகிறோம், காண்மின்;— பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வசதகத்தில், “[illegible] = அக்ரே தார்க்ஷ்யேண பச்சாத் அஹிபதி சயநே நாத்மநா பார்ச்வயோச் ச ஸ்ரீபூமிப்யாமத்ருப்த்யா ந்யந சஷகைஸ் ஸேவ்யமாநாம்ருதௌகம்.” என்றருளிச்செய்தார்; உத்ஸவமூர்த்தியாகிய நம்பெருமாளை மூலமூர்த்தியாகிய பெரியபெருமாள் பின்புறத்திலும் பெரிய திருவடி முன்புறத்திலும் திருமடந்தை மண்மடந்தைகள் இரண்டருகுமிருந்துகொண்டு எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்தி பிறப்பதேயில்லையென்பது இதன்கருத்து. எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹாநுபவம் பிறர்க்கு எப்படி ஸ்ப்ருஹ

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ணீயமோ அப்படி ஸ்வாத்பாவுக்கும் ஸ்ப்ருஹணீயமாயிருக்குமென்பது விளங்க இதில் * அஹிபதிசயநோ ஆத்மநா * எனப்பட்டது.

வேதாந்ததேசிகன் பாதுகாஸஹஸ்ரத்தில் — ‘‘உநுஜசுதிரொஹிதெந ஸகெ்யா வவுஷைகெந விரொயிநாம் நிராவெ | சுஹஜஜ்ஞ தாஜிஹெஉஃஸ்ஃ ஷூயாராயயிதுஂஹி வாஉகெ! சுவாழ — மநுஜத்வ திரோஹிதேந சக்யே வபுஷைகேந விரோதிநாம் நிராஸே, அபஜத் பாதாதி பேதமீசஃ ஸ்வயமாராதயிதும் ஹி பாதுகே! த்வாம்.’’ என்றருளிச்செய்கிறார். எம்பெருமான் மானிட வுருக்கொண்டு சக்ரவர்த்தி திருமகனுய்த் திருவவதரித்தது விரோதிநிரஸநத்திற்காகவாகில் நரஸிம்ஹாவதாரம் முதலான அவதாரங்களிற்போலே தான் ஒருவனுகவே அவதரித்துக் காரியம் நிறைவேற்றி யிருக்கலாம்; அப்படி ஒருவனுக அவதரியாமல் பரதாழ்வான் முதலானோராகவும் தன்னை வகுத்துக்கொண்டு திருவவதரித்தது எதற்காகவென்னில்; தனக்கும் பரமபோக்யமான தன்னுடைய பாதுகையைத் தானே ஆராதிக்கவேணுமென்று தனக்கு ஆசையுண்டாயிற்று; தானே ஸாக்ஷாத்தாக ஆராதித்தால் உலகம் ஏசுமே என்றெண்ணித் தம்பியாக வேற்றுருக்கொண்டு ஆராதித்தானத்தனை என்பது இந்த ச்லோகத்தின் தாற்பரியம்.

ஆக இவற்ருல் எம்பெருமானுடைய படிகள் எம்பெருமான்றனக்கும் பரமபோக்யமாயிருக்குமென்பது விளங்கும். இத்தகையதான போக்யதையே இத்திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கப்படுகின்றதென்க. * தூயவமுதைப் பருகிப்பருகி * இத்யாதிகள் இத்திருவாய்மொழிக்கு உயிர்நிலையாயிருக்கும். (*)

பிறவித்துயரற ஞானத்துள்நின்று *
துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார் *
அறவனை ஆழிப்படை யந்தணனை *
மறவியையின்றி மனத்துவைப்பாரே. * (க)

| | | | |
|---|---|---|---|
| பிறவி துயர் அற | ஜநநமரணங்களினல் வரும் துன்பம் மாத்திரம் நீங்குகைக்காக | அறவனை | பரமதர்மிஷ்டனுயும் |
| ஞானத்துள் நின்று | ஆத்மாவலோகநமாகிற கைவல்யோபாஸநத்தில் ஊன்றி | ஆழி படை | திருவாழியாழ்வானை ஆயுதமாகவுடையனுயும் |
| துறவி சுடர் விளக்கம் தலைப்பெய்வார் | ஸகல உபாதிகளையும் விட்டவனுன ஸ்வயம் ப்ரகாசனுன ஆத்மாவினுடைய ஸாக்ஷாத்காரத்தைப் பெறவிரும்புகின்ற கைவல்யார்த்திகள், | அந்தணனை | பரம பரிசுத்தனுயுமிருக்கின்ற எம்பெருமானை |
| | | மறவியை இன்றி | (தாம் விரும்பிய பலனில்) மறப்பில்லாமல் |
| | | மனத்து வைப்பார் ஏ | உபாஸிக்கின்ருர்களே!. |

* * * [பிறவித்துயரற.] எம்பெருமானுடைய போக்யதையை ஆழ்வார் தாம் தமது திருவுள்ளத்தினுல் முந்துற அநுபவித்து அதனை வாய்விட்டுப் பாசுரமிட்டுப் பேசுவதற்குமுன்னே, இங்ஙனம் பரம போக்யமானவனை ஆச்ரயித்து

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

வைத்து அந்தோ ! அற்ப பலனாகிய கைவல்யத்தை அபேக்ஷிப்பதே! என்று கேவலர்களை நிந்தித்து, 'அவர்களுடைய புன்மையைப் பாராதே அவர்கள் அபேக்ஷித்ததைக் கொடுப்பதே!' என்று எம்பெருமானது நீர்மையைக்கண்டு வியந்து கூறுவது இப்பாட்டு.

கீழே * வளவேழுலகில் "செடியாராக்கையடியாரைச் சேர்தல் தீர்க்குந் திருமாலை" என்றவிடத்து விரிவுரையை நோக்கி இவ்விடத்தையும் நோக்கினால் அந்தோ! ஈதென்ன பரஸ்பரவிருத்தமான வார்த்தை! என்று நாம் நினைக்க நேரும்; அங்கே கைவல்யார்த்திகளை உயரத்தூக்கிவைத்துப் பேசியுள்ளார் ; இங்கு அவர்களைக் கீழேதள்ளி நிந்தித்துப் பேசுகிறார்; இவை எங்ஙனே பொருந்தும்? என்று சங்கிக்கலாம்., அந்த ப்ரகரணத்திற்கு அது பொருந்தும்; இந்த ப்ரகரணத்திற்கு இது பொருந்தும் என்பதே இங்குச் சொல்லக்கூடிய ஸமாதானம். ஆழ்வார் எம்பெருமானது பெருமேன்மையையும் தமது நைச்யத்தையும் நோக்கிப் பின்வாங்கப்பார்த்த அவ்விடத்திலே, 'எம்பெருமானை அணுகாமலிருக்கின்ற கேவலர்கள் மிக நல்லவர்கள்' என்று கொண்டாடவேண்டியது அவசியமாயிற்று. எம்பெருமான் சீலகுணத்தைக் காட்டினபின்பு அந்த * வளவேழுலகில் நிலைமை ¶ நீங்கிவிட்டதாதலாலும் அவனுடைய பரமபோக்யதையிலே இப்போது நெஞ்சு சென்றிருத்தலாலும், இப்படிப்பட்ட போக்யதையிலே எல்லாரும் ஈடுபட்டு அந்வயிக்க ப்ராப்தமாயிருக்கச் சிலர் இழந்தொழிகின்றார்களே! என்று வருந்தவேண்டி நேர்ந்தபடியாலும் அந்த வருத்தத்தினால் கேவலர்களை நிந்திக்கிறவிது இங்குப் பொருந்துமென்றுணர்க.

பிறவித்துயரற = ஸம்ஸார நிலத்தைப்பற்றிவரும் ஸகலமான துயரங்களும் தொலைய என்றபடி. இது கைவல்யார்த்திகளுக்குப் போலவே பகவத்ப்ராப்திகாமர்கட்கும் உண்டாயினும் இங்குக் கைவல்யார்த்திகளே விவக்ஷிதர்கள்; "ஸ்வஸ்தி வாயவே ஸவ்யம் வாக்யம் ஸாவயாரணு" என்கிற நியாயப்படிக்கு "பிறவித்துயர் அறுவதற்காக மாத்திரம்" என்று இங்குப் பொருளாகும். பகவத்ப்ராப்திகாமர்கள் மஹாநந்தம் பெறுவதையும் விரும்புகின்றவர்களாதலால் அவர்கள் தள்ளுண்டார்கள். பிறவித்துயரறுவதை மாத்திரமே விரும்புகின்றவர்கள் கைவல்யார்த்திகளேயென்க.

ஞானத்துள் நின்று = ஆத்மாவலோகனமாகிற ஞானத்திலே நிற்பார்களாம் கேவலர்கள். கைவல்யமோக்ஷ ஸாதனமானவொரு உபாஸநத்திலே ஊன்றி என்றபடி.

துறவிச் சுடர்விளக்கம் தலைப்பெய்வார் = முதலடியிற் சொல்லப்பட்ட உபாயாநுஷ்டானத்திற்குப் பலன் சொல்லுகிறது இவ்வடி. ப்ரக்ருதி ஸம்பந்தம் வேரற நீங்குவதுதான் இங்குத் துறவி யெனப்படுகிறது ; ஞானஸ்வரூபியான ஆத்மாவை அநுபவிப்பதுதான் சுடர்விளக்கந் தலைப்பெய்தல். எல்லாவுபாதி

¶ அதாவது—நைச்யாநுஸந்தானம் பண்ணிப் பின்வாங்கும் நிலைமை.

களும் விட்டு நீங்கப்பெற்ற சுடரொளிமயமான ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத் கரிக்கவேண்டி யிருப்பவர்கள் என்றபடி.

ஆக, மூன்னடிகளின் தேர்ந்த பொருளை நம்பிள்ளை யெடுத்துக்காட்டுகிறார்- "ஸாம்ஸாரிக ஸகல துக்கங்களும் போகவேணுமென்று ஆத்மஜ்ஞாநத்திலே ஊன்றி நின்று ப்ரக்ருதிவிநிர்முக்தமான ஆத்மஸ்வரூபத்தை ப்ராபிக்க வேண்டியிருப்பார்" என்று.

அறவனை ஆழிப்படை அந்தணனை = துறவிச் சுடர்விளக்கந் தலைப்பெய்வாரான கேவலர்கள் மறவியையின்றி மனத்துவைப்பார்; எவனை? என்னில்; எம்பெருமானை என்று சொல்லவேண்டுமிடத்து அந்த எம்பெருமானுக்கு வாசகமாக "அறவனை ஆழிப்படையந்தணனை" என்கிறவிது ஆழ்ந்த கருத்தோடு கூடியது. அறவன் என்பது தார்மிஷ்டன் என்றபடி; கைவல்யார்த்திகளது விருப்பத்தின்படியையும், அப்படிப்பட்டவர்களுக்கும் பலன் கொடுக்கிற எம்பெருமான் படியையும் பார்த்து இப்படியும் ஒரு உதாரனுண்டோ! என்று ஆழ்வார் உருகியருளிச் செய்கிறபடி. இங்கே நம்பிள்ளையீடு:—"ஏதேனுமொரு ப்ரயோஜநத்துக்கும் தன்னையே அபேக்ஷிக்குமத்தனையாகாதே வேண்டுவது; எங்களுக்கு நீ வேண்டா, க்ஷுத்ரப்ரயோஜனம் அமையும் என்றிருக்குமவர்களுக்கும் அத்தைக்கொடுத்துவிடுவதே! என்ன தார்மிகனோ வென்கிறார்" என்பதாம்.

ஆழிப்படை = கையுந்திருவாழியுமான அழகைக்கண்டால் "வடிவார் சோதி வலத்துறையுஞ் சுடராழியும் பல்லாண்டு" என்று மங்களாசாஸநம்பண்ணுகிறவர்களல்லரே கேவலர்கள்; தங்களுடைய விரோதிகளைத் தொலைப்பதற்கு நல்ல ஸாதனமுண்டு என்று நினைப்பவர்களே யத்தனை. அந்த நினைவையே காட்டுதற்காம் இங்கு இந்தப் பிரயோகம்.

அந்தணனை = உலகில் ஒரு வகுப்பினரை அந்தணரென்று வழங்குவதுண்டு; அந்தத்தை [வேதாந்தத்தை] ‡ அணவுபவர்—சார்பவர் என விரித்துக் காரணப் பொருளுரைத்தார் நச்சினார்க்கினியர். அங்ஙனன்றியே, அம் தண் அர் எனப் பிரித்துப் பலவாறுகப் பொருள் கொள்வாருமுளர். "அந்தணரென்போரறவோர் மற்றெவ் வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்" என்ற திருவள்ளுவர் திருக்குறளும் அவ்விடத்துப் பரிமேலழகருரையும் நோக்கத்தக்கது. "நூலேகரகம் முக்கோல்மணையே, ஆயுங்காலை அந்தணர்க்குரிய" என்ற தொல்காப்பிய மரபியற் சூத்திரத்தின் கருத்தை நோக்குமிடத்து அந்தணரென்ற சொல் யதிகளைக்குறிக்குமென்பது விளங்கும். இப்பாசுரத்தில் அந்தணனென்று எம்பெருமானைச் சொல்லியிருக்கின்றது; "கொந்தணைந்த பொழிற்

‡ அணவுபவர் என்பது அணர் என விகாரப்பட்டது. "ஆரணத்தின் சிரமீதுறை" என்ற சடகோபரந்தாதிச் சிறப்புப்பாயிரச் செய்யுளின் ஈற்றடியில் "கார் அணனைக் கம்பனை நினைவாம்" என்றவிடம் காணத்தக்கது. அந்தம் அணர், அந்தணர்; தொகுத்தல்.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கோவனுலகளப்பானடி நிமிர்த்த $ அந்தணனை" என்றும் ¶ "இந்தளூரந்தணனை" என்றும் திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்கிறார். அந்தணனென்பதற்குப் பரிசுத்தனென்று பொருள் என்று பூருவாசாரியர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். கைவல்யார்த்திகள் எம்பெருமானைச் சாணிச்சாறுபோலே பரிசுத்தனென்று கொண்டார்களத்தனையொழிய போக்யதையிலே கண்வைத்து ஈடுபடப் பெற்றிலர்கள்! என்கிற வருத்தம் இங்குத் தொனிக்குமென்ப.

மறவியையின்றி மனத்துவைப்பாரே != பரம போக்யனான எம்பெருமானைச் சிந்தித்தவாறே தாங்கள் விரும்பிய கைவல்ய புருஷார்த்தம் மறந்துபோக வேண்டியிருக்கவும் அதனை மறவாதே அவனை உபாஸிக்கின்றார்களே! அந்தோ! என்று பரிதபிக்கிறாராயிற்று.

இப்பாசுரத்தை அநுஸந்திக்குங்கால், "அறவாழியந்தணன் தாள்சேர்ந்தார்க்கல்லால், பிறவாழி நீந்தலரிது" என்ற திருக்குறள் நினைவுக்கு வருமென்று பெரியார் பணிப்பர். ... ... ... ... (க.)

வைப்பாம்மருந்தாம் அடியரை * வல்வினைத்
துப்பாம்புலனைந்தும் துஞ்சக்கோடானவன் *
எப்பால்யவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்து *
அப்பாலவன் எங்களாயர்கொழுந்தே. * (உ)

| | | | |
|---|---|---|---|
| அடியரை | தன்னடியாரை | அவன் | அந்த எம்பெருமான் |
| வல் வினை | வலிய கருமங்களினுடைய | எப்பால் | எவ்விடத்துமுள்ள |
| துப்பு ஆம் | மிடுக்கின் வழியிலே ஸஞ்சரிக்கிற | யவர்க்கும் | யாவர்க்கும் |
| புலன் ஐந்தும் | பஞ்சேந்திரியங்களிலும் அகப்பட்டு | நலத்தால் உயர்ந்து உயர்ந்து | ஆனந்தகுணத்தினால் மிகவும் உயர்ந்து |
| துஞ்சக் கொடான் | நசித்துப்போம்படி விட்டுக் கொடாதவன் | அப்பாலவன் | வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாதபடி அப்புறப்பட்டவனாய் |
| வைப்பு ஆம் | (அவர்களுக்குப் புருஷார்த்தமான) நிதியுமாய் | எங்கள் | எங்களுக்கே உரியவனான |
| மருந்து ஆம் | (விரோதி நிரஸந முகத்தால்) மருந்துமாவன்; | ஆயர் கொழுந்து | ஆயர் தலைவன். |

* * * — [வைப்பாம் மருந்தாம்] கீழ்ப்பாட்டில் 'ஐயோ! கைவல்யார்த்திகள் எம்பெருமானைப் பணிந்து க்ஷுத்ரமான பலனைப் பெற்றுப்போவதே!' என்று அவர்களை நிந்தித்தார்; அவன்றன்னையே ஆசைப்பட்டிருக்குமவர்கள் திறத்தில் அவன் இருக்கும்படியை அருளிச்செய்கிறாரிப்பாட்டில். "வைப்பாம் மருந்தாம்" என்ற இரண்டாலும் எம்பெருமானுடைய உபேயத்வமும் உபாயத்வமும் சொல்லப்பட்டதாகும். "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்றும் "வைத்த மாநிதியாம் மதுசூதனன்" என்றும் சொல்லுகிறபடியே கொள்ளக்கொள்ளக் குறையாத மஹாநிதிபோலே * கொள்ளமாளாவின்ப வெள்ளமாய் எப்போதும்

$ பெரிய திருமொழி 5, 6, 7
¶ பெரிய திருமடல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அநுபவிக்க வுரியனாயிருக்குந்தன்மை 'வைப்பாம்' என்பதனால் சொல்லப்படுகிறது. அப்படி அநுபவிக்க சக்தியற்றவர்களுக்கு சக்தியைக் கொடுத்தருளுந் தன்மை 'மருந்தாம்' என்பதனால் சொல்லப்படுகிறது; இதுதான் உபாயத்வம்.

[அடியரை இத்யாதி.] வணங்காமுடிமன்னனாயிருக்கு மிருப்புத்தவிர்ந்து அவனையே பரம ப்ரயோஜனமாகப் பற்றி நிற்குமடியார் விஷயத்திலே மஹோபகாரஞ் செய்தருள்பவன்; அப்படிப்பட்ட அடியார்களை வலிய வினைகளிலே கொண்டுபோய் மூட்டவல்ல ஸாமர்த்தியத்தையுடைய இந்திரியங்களைந்தினாலும் நசித்துப்போகாமை செய்தருள்பவனென்றபடி.

[எப்பால் யவர்க்கும் இத்யாதி.] மண்ணுலகம் விண்ணுலகம் முதலான எல்லாவிடங்களிலும் எல்லாவற்றாலும் உயர்த்தி பெற்றிருப்பார் பலர் உண்டே; அவர்களெல்லாரையும் ஆனந்த குணத்தாலே வென்று அவர்களுக்கு எவ்வளவோ மேற்பட்டவ னென்னவேண்டும்படியான நிலைமையிலே நிற்பவன்; இப்படிப்பட்ட ஒப்புயர்வற்ற மேன்மை இருக்கச்செய்தேயும் அதனை யெல்லாம் மறைத்துக்கொண்டு கோபாலக்ருஷ்ணனாய்த் திருவவதரித்தவன். .... (௨)

ஆயர்கொழுந்தாய் அவரால்புடையுண்ணும் *
மாயப்பிரானை என்மாணிக்கச்சோதியை *
தூயவமுதைப் பருகிப்பருகி * என்
மாயப்பிறவி மயர்வறுத்தேனே. * (௩)

| | | | |
|---|---|---|---|
| ஆயர் கொழுந்து ஆய் | இடையர் தலைவனான கோபாலக்ருஷ்ணனாகி | தூய அமுதை | பரிசுத்தமான அம்ருதம் போன்றவனுமான பெருமானை |
| அவரால் | அவ்விடையர்களாலே | பருகி பருகி | இடையறாமல் அநுபவித்து |
| புடை உண்ணும் | (வெண்ணெய்க் களவு முதலியவற்றிற்காக அடியுண்கிற | என் | என்னுடைய |
| மாயம் பிரானை | மாயச்செயல் வல்லவனும் | மாயம் | ப்ரக்ருதியின் காரியமாய் வருகின்ற |
| என் | எனக்கு விதேயனும் | பிறவி | பிறவியினாலுண்டான தாகிய |
| மாணிக்கம் சோதியை | மாணிக்கம்போல் ஒளிபெற்ற வடிவையுடையவனும் | மயர்வு | அஜ்ஞானத்தை |
| | | அறுத்தேன் | போக்கிக்கொண்டேன். |

* * * — [ஆயர்கொழுந்தாய்.] முதற்பாட்டில் ப்ரயோஜநாந்தரபரர்களான கேவலர்களை நிந்தித்தார்; இரண்டாம் பாட்டில், அநந்யப்ரயோஜநாதிகாரிகள் விஷயத்தில் எம்பெருமான் இருக்கும்படியை யருளிச்செய்தார்; 'ஆக இவ்விரண்டு வகுப்பிலே நீர் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்?' என்று ஆழ்வாரைச் சிலர் கேட்க; 'நான் அநந்யப்ரயோஜநனாய் அவனைப்பற்றினேன்' என்று நேரே சொல்லமாட்டாமல் 'அவனை அநுபவித்துக்கொண்டேயிருக்கச்செய்தே விரோதிகள் தன்னடையே கழிந்துபோகப் பெற்றவன் நான்' என்கிறார் இதில்.

கீழ்ப்பாட்டில், ஆயர்கொழுந்தென்று கண்ணபிரானை நினைத்தாரே; அப்போதே அவனுடைய மாயச்செயல்களும் நினைவுக்குவர, திருவாய்ப்பாடியில்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

பஞ்சலக்ஷங்குடியிலுள்ளாரெல்லாராலும் மத்தாலே புடைக்கப்பெற்று அழு தேங்கிநிற்கும் மாயத்தைப் பேசுகிறார்.

“புடையுண்ணும் மாயப்பிரானை என் மாணிக்கச்சோதியை” என்ற சேர்த்தியழகால், அடியார்கள் மத்தாலும் கயிற்றாலும் கட்டியடிக்கவடிக்க, களங்கமறக் கடையுண்ட மாணிக்கம்போலே திருமேனி புகர்பெற்று வருகின்றமையை அருளிச்செய்கிறவாறு தோன்றும்.

பட்டர் திருக்கோட்டியூரிலெழுந்தருளியிருக்கும்போது ஒரு ஸ்வாமி வந்து ‘அடியேனுக்கு ஒரு திருவிருத்தம் பொருளருளிச் செய்யவேணும்’ என்று ப்ரார்த்திக்க, ‘நம்பெருமாளைப் பிரிந்த துயரத்தினால் எனக்கொன்றுஞ் சொல்லப்போகிறதில்லை; நஞ்சீயர் பக்கலிலே கேட்டுக்கொள்ளும்’ என்று சொல்லி நஞ்சீயருக்கு நியமிக்க, சீயரும் திருவிருத்தத்திற்குப் பொருளருளிச்செய்து வருகையில் * அடைக்கலத்தோங்கு கமலத்து * என்கிற எண்பத்தாறும் பாட்டளவிலே வந்தவாறே ஈற்றடியில் “புடைக்க அலந்தானை” என்கிற பாடப்படியே நஞ்சீயர் பொருளுரைக்க; [அதாவது—வெண்ணெய் திருடின குற்றத்திற்காக யசோதைப்பிராட்டி உரலோடு பிணைத்துத் தாம்பினால் கட்டியடிக்க வருந்தியிருந்தவனை என்று பணிக்க:] ஒரு புறத்திலே சயனித்துக்கொண்டிருந்த பட்டர் அதுகேட்டு ‘ஜீயா! அலந்தானை என்றபாடத்திற்காட்டிலும் “அலர்ந்தானை” என்ற பாடம் ஆழ்வார் திருவுள்ளத்திற்கு மிகப் பொருந்தும்போலே இன்று தோன்றுகின்றது’ என்றருளிச்செய்தாராம். ஆய்ச்சி அடிக்கஅடிக்க முகமலர்ந்தானும் கண்ணபிரான். (இதனை விவரிப்போம்.) கண்ணபிரான், வெண்ணெய் களவுசெய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால் கட்டி வருத்துகின்றாளென்று வீட்டிலுள்ள கயிறுகளைத் துண்டுதுண்டாக அறுத்துவைத்திடுவான்; அவற்றை அவள் ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு கயிறுவடிவமாக்கி அதுகொண்டு இவனைக் கட்டுவள்: அப்படி கட்டும்போது தன்னுடம்புக்கு எட்டம்போராதபடியான அக்கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டமுடியாதபடி எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ளவல்லவனாயினும், தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரிதபாரதந்திரியம் முதலிய சீலங்களை வெளியிடுவதற்கென்றே பரத்வ நிலையைத் தவிர்ந்து மநுஷ்யஸஜாதீயனாக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டு அடியுண்டிருக்கை முதலான இவ்வகைகளால்தான் அக்குணங்களை விளங்கச் செய்துகொள்ளவேணுமென்று கொண்டு ஒரு சுற்றுக்கும் போராத தாம்பு இரண்டுமூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் $ சுருக்கி அமைத்துக்கொண்டு “கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்” என்னும்படி ஆவன், ‘இங்ஙனே நம்முடைய ஸௌசீல்யகுணங்கள் விளங்கப்பெற்றோமே; அவதாரப்ரயோஜனம் நன்கு நிறைவேறப்பெற்ற

---

$ “ஶுநீதமேந்ர நிஜபந்தநாய தாமாவிநம் ஸம்ஹிதமப்ய பூர்ணம் | நிரீக்ஷ்ய நிஷ்பூர்ணயியா ஜநந்யாஃ ஸம்கோசமச்நுத ஸஹஸ்ர பத்ந ஸ்வயம் ||” என்ற யாதவாப்யுதய ஸ்ரீஸூக்திகாண்க.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தன்றோ' என்று முகமலர்ச்சியடைந்திடுவன் என்க. இவ்வர்த்தங்களெல்லாம் இங்கு "மாணிக்கச் சோதியை" என்றதில் பொலியும்.

தூயவமுதைப் பருகிப்பருகி=தேவர்களுண்ணும் அமுதமானது பல நியமங்களை அபேக்ஷித்திருக்குமாதலால் அப்படிப்பட்டதல்லாத பகவத்விஷயமாகிற அமுதமே தூயதாகுமென்க. இதனை ஆராப்பருகி என் மாயப் பிறவி மயர்வறுத்தேனென்றாயிற்று.

மயர்வறவென்மனத்தே மன்னினான்தன்னை *
உயர்வினையேதரும் ஒண்சுடர்க்கற்றையை *
அயர்விலமரர்கள் ஆதிக்கொழுந்தை * என்
இசைவினை என்சொல்லியான் விடுவேனோ. * (ச)

| | | | |
|---|---|---|---|
| மயர்வு அற | அஜ்ஞானம் தொலையும்படி | ஆதி கொழுந்தை | முதல் தலைவனாய் |
| என் மனத்தே | எனது நெஞ்சிலே | என் இசைவினை | (தன்னைக் கிட்டுமாறு) எனக்கு இசைவை விளைவித்தவனான எம்பெருமானை |
| மன்னினான் தன்னை | நித்யவாஸஞ் செய்பவனாய் | யான் | அடியேன் |
| உயர்வினையே தரும் | (எனக்கு) ஞானபக்தி வளர்த்தியையே தந்தருளுகின்றவனாய் | என் சொல்லி | என்ன குறையைச்சொல்லி |
| ஒண் சுடர் கற்றையை | அழகிய தேஜோராசியாய் | விடுவேனோ | விடக்கடவேனோ? [விடமாட்டேன்.] |
| அயர்வு இல் அமரர்கள் | மறப்பில்லாத நித்யஸூரிகளுக்கு | | |

* * * — [மயர்வற.] கீழ்ப்பாட்டில் "என் மாயப்பிறவி மயர்வறுத்தேன்" என்று அருளிச்செய்த ஆழ்வாரை நோக்கி 'ஆழ்வீர்! மாயப்பிறவி மயர்வு அறவேணுமென்பதுதானே உமது உத்தேச்யம்; அது நிறைவேறிவிட்டதாக நீரே சொல்லிவிட்டீரே; இனி நீர் ஓய்ந்திருக்கலாமன்றோ' என்று சிலர் சொல்ல; எம்பெருமானை எங்ஙனம் நான் விடுவேனென்கிறார்.

அஜ்ஞாநராசியை வாஸனையோடே போகச்செய்ததுமன்றியே 'இனி ஒரு நாளும் அது குடிபுகவொண்ணாது' என்று என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து ஸ்திரமாக இருப்பவனும், அப்படியிருந்துகொண்டு "நாவலிட்டுழிதருகின்றோம் நமன்றமர்தலைகள்மீதே" என்று சொல்லி யமபடர்கள் தலையிலும் அடியிட்டுத் துள்க்கக்கும்படியான உயர்த்தியையுந் தந்தருள்பவனும், இப்படியென்னை வசப்படுத்திக்கொள்வதற்குப் பாங்கான வடிவழகுடையவனும், அப்படிப்பட்ட வடிவழகை யநுபவிக்கும் அயர்வறுமமரர்களை ஒரு நாடாகவுடையவனும், என்னை இசைவித்துத் தன் தாளிணைக் கீழ்ப் புகுவித்துக்கொண்டவனுமான ஸர்வேச்வரனை என்ன ஹேதுவைக்கொண்டு விடுவேன்? ... .... (ச)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



விடுவேனோவென்விளக்கை என்னாவியை *
நடுவேவந்து உய்யக்கொள்கின்றநாதனை *
தொடுவேசெய்து இளவாய்ச்சியர்கண்ணினுள் *
விடவேசெய்து விழிக்கும்பிரானையே. * (ரு,

| | |
|---|---|
| என் விளக்கை | எனக்கு எல்லாப் பொருள்களையும் விளக்கிக் காட்டுகிற விளக்குப்போன்றவனும் |
| என் ஆவியை | என் உயிராயிருப்பவனும் |
| நடுவே வந்து | திடீரென்று ஒருநாளிலே |
| உய்யக்கொள்கின்ற நாதனை | உஜ்ஜீவிப்பிக்கின்ற ஸ்வாமியும் |
| தொடுவே செய்து | கபடச்செயல்களையே செய்து |
| இள ஆய்ச்சியர் கண்ணினுள் | இளமைதங்கிய இடைப்பெண்களின் கண்களிலே |
| விடவே செய்து | விடத்தனமேசெய்து |
| விழிக்கும் பிரானை | கண்கலப்புச் செய்கிற பிரபுவுமாகிய எம்பெருமானை |
| விடுவேனோ | விடவல்லேனோ? [விடமாட்டேன்.] |

* * * — [விடுவேனோ.] இதுவும் கீழ்ப்பாட்டுக்கு சேஷபூதம். திருவாய்ப்பாடியிலிடைப் பெண்கள் கண்ணபிரானைவிட்டுப் பரமபதத்தை விரும்பினால் நானும் எம்பெருமானைவிட்டுப் புறம்புபோவே னென்கிறார்.

தன் விஷயமாக விளையக்கூடிய அஜ்ஞாநாந்தகாரம் தொலையும்படி என்னை நிர்ஹேதுகமாக விஷயீகரித்துத் தன்னுடைய ஸ்வரூபரூப குண விபூதிகளை எனக்கு நன்கு விளங்கக் காட்டியருளினவனும், * மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து * ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்று துளங்கிக்கிடந்த என்னைத் தானாகவேயெடுத்துக் கரைசேர்த்தவனும், இங்ஙனம் என்னைக் கரைசேர்ப்பதற்குறுப்பான அவர்ஜநீய ஸம்பந்தமுடையவனும், திருவாய்ப்பாடியில் வெண்ணெய் முதலியவற்றைக் களவுகண்டு 'இவன் திருடினான்' என்று முறையிடவந்த இளவாய்ச்சியர்க்கு மறுமாற்றங்கொடுக்க வொண்ணாதபடி வேறொருவர்க்குந் தெரியாமே அவர்கள் கண்ணுள்ளே படும்படியாக 'ஜாரசோர சிகாமணி' என்று ப்ரஸித்தமாம்படியான சேஷ்டிதங்களையும் கண்ணோட்டங்களையுஞ் செய்து அப்பெண்களை அடிமைகொண்டாப்போலே என்னை அடிமைகொண்டவனுமான பெருமானை விடுவேனோ? என்றாராயிற்று.

விடவு = விடனுடைய தன்மை: விடனென்பது வட சொல்; பெண்டிர்பால் தூர்த்தத்தனஞ் செய்பவன் விடன்; அவனது செயல், அல்லது தன்மை— விடவு. ... .... ... .... .... .... (ரு)

பிரான் பெருநிலங்கீண்டவன் * பின்னும்
விராய்மலர்த்துழாய் வேய்ந்தமுடியன் *
மராமரமெய்தமாயவன் * என்னுள்
இரானெனில் பின்னையானொட்டுவேனோ. * (சு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| பிரான் | உபகாரகனும் |
| பெரு நிலம் கீண்டவன் | (வராஹாவதாரத்தில்) பெரிய பூமியைப் பிளந்தெடுத்தவனும் |
| பின்னும் | பின்னப்பட்ட [தொடுக்கப்பட்ட] |
| விராய் | பரிமளம் பொருந்திய |
| துழாய் மலர் | திருத்துழாய் மாலையாலே |
| வேய்ந்த | சூழப்பட்ட |
| முடியன் | திருமுடியையுடையவனும் |
| மாமரம் எய்த | ஏழுமராமரங்களை (ஸுக்ரீவனுடைய நம்புதலுக்காக ஓர் அம்பினால்) எய்தவனுமான |
| மாயவன் | ஆச்சரியபூதன் |
| என் உள் | எனது நெஞ்சினுள்ளே |
| இரான் எனில் | எழுந்தருளியிரானாயின் |
| பின்னை | பின்பு |
| யான் | நான் |
| ஒட்டுவேனோ | தரித்திருப்பேனோ? |

* * * — [பிரான்.] ஆழ்வீர்! நீர் அவனைவிடமாட்டாதொழியினும் அவன் றான் உம்மைவிடில் என் செய்வீரென்ன; அவன் விடும்படியாக நான் ஸம்மதிப்பேனோ வென்கிறார்.

பிரான் = பிறர்க்கேயாயிருக்குமவன் என்பது கருத்து, நிலா, தென்றல், புஷ்பம், சந்தனம் முதலான பொருள்கள் தமக்கென்று ஒன்றின்றியே பிறர்க்காகவே அமைந்ததுபோல எம்பெருமானும் நம்போலியர்க்காகவே அமைந்தவனென்க. "ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம்| ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே = ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம், ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ; ப்ரகாசஸே." என்ற ஜிதந்தாஸ்தோத்ரமும், ; "வஸிஜநவஸி வஹ்நி ஹ்ருஷணாந்யாயுதாநி ப்ரவரகுணகணாஸ் ஜ்ஞாந சக்த்யாதயஸ்தே | பரமபதமதாண்டாந் யாத்மதேஹஸ் ததாத்மா வரத! ஸகலமேதத் ஸம்ஸ்ரிதார்த்தம் சகர்த்த = பரிஜநபரிபர்ஹா பூஷணாந்யாயுதாநி ப்ரவரகுணகணாச் ச ஜ்ஞாநசக்த்யாதயஸ் தே, பரமபதமதாண்டாநி ஆத்மதேஹஸ் ததாத்மா வரத! ஸகலமேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த!" [வரதராஜஸ்தவம்] என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியும் காண்க.

பெருநிலங்கீண்டவன் = ஹிரண்யகசிபுவின் உடன் பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அசுரன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹா வராஹரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கோட்டினாற் குத்திக்கொன்று பாதாளலோகத்திற் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற்குத்தி அங்கு நின்று மெடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருளினன் என்பது பெருநிலங்கீண்ட வரலாறு. இப்பொழுது நடக்கிற ச்வேத வராஹகல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப்பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளயஜலத்தில் மூழ்கியிருந்த பூமியை மேலேயெடுக்கநினைத்து மஹாவராஹரூபியாகிக் கோட்டு நுனியாற் பூமியை எடுத்து வந்தனனென்ற

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வரலாறும் உண்டு; "பாராருலகம் முதுமுந்நீர் பரந்தகாலம் வளைமருப்பில், ஏராருருவத்தேனமாயெடுத்தவாற்றலம்மான்" என்ற திருமங்கையாழ்வாரருளிச் செயலை நோக்குக.

பின்னும் விராய்மலர்த்துழாய்வேய்ந்தமுடியன் = நெருங்கத் தொடுக்கப்பட்டு நறுமணம்மிக்குச் செவ்வி பெற்றிருந்துள்ள திருத்துழாய் மாலையாலே சூழப் பட்ட திருவபிஷேகத்தை யுடையவன். இத்தால் திவ்யமங்கள விக்ரஹ போக் யதையை அநுபவிக்கிறபடி.

மாராமரமெய்த வரலாறு "வினையேன் வினைதீர்மருந்தானுப்" என்ற பாட்டி னுரையில் விரித்துரைக்கப்பட்டது காண்க. ஆக இப்படிப்பட்ட எம்பெருமான் என்னிசைவின்றியே எங்ஙனே விட்டுப்போகவல்லான்?

"பின்னை யான் ஒட்டுவேனோ?" என்பதற்கு — அப்பெருமான் என்னை விட்டகன்றால் நான் தரித்திருப்பேனோ? என்றும் பொருள் பணிப்பர். ஆசார்ய ஹ்ருதயத்திலும் இப்பொருள் ஆதரிக்கப்பட்டது; "இரானேனில் நசுவாகக் குழைத்தவன்" என்ற சூர்ணிகை காண்க. .... ... ... (௬)

யானொட்டியென்னுள் இருத்துவமென்றிலன் *
தானொட்டிவந்து என்தனிநெஞ்சைவஞ்சித்து *
ஊனொட்டிநின்றுஎன்னுயிரில்கலந்து * இயல்
வானொட்டுமோ இனியென்னைநெகிழ்க்கவே. * (௭)

| | | | |
|---|---|---|---|
| யான் | நான் | ஊன் ஒட்டி | சரீரத்திலே பொருந்தி |
| ஒட்டி | இசைந்து | நின்று | புகுந்துநின்று |
| என்னுள் | என்னுள்ளே | என் உயிரில் கலந்து | எனது ஆத்மாவில் கூடி |
| இருத்துவம் என்றிலன் | (எம்பெருமானை) இருத்துவதாக நினைத்திலேன்; | இயல்வான் | இப்படி நடக்கிற ஸர்வேச்வரன் |
| தான் | தானே | இனி என்னை நெகிழ்க்க | இனி என்னைவிட்டு நீங்க |
| ஒட்டி வந்து | பிரதிக்ஞை பண்ணிவந்து | ஒட்டுமோ | ஸம்மதிப்பனோ? |
| என் தனி நெஞ்சை | என்னுடைய ஸ்வதந்திரமான மனத்தை | | |
| வஞ்சித்து | நானறியாதபடி வசீகரித்து | | |

* * * — [யானொட்டியென்னுள்.] எம்பெருமான் தம்மை ஒருநாளும் விடயாட் டானென்பதை வற்புறுத்தியருளிச் செய்கிறாரிதில். அவன் தானாகவே வந்து கைக்கொண்டவனாயிருந்து வைத்து எங்ஙனே விட்டு நீங்கவல்லானென்கிறார். [யானொட்டியென்னுள் இருத்துவமென்றிலன்.] எம்பெருமானை என்னெஞ்சினுள் ளே யிருத்திக்கொண்டது நானாகவோ? அவன்தானே வந்து 'ஆழ்வீர்! உம் முடைய நெஞ்சிலே உறையக்கடவேன்' என்றாலும் வேண்டா வேண்டாவென்று விலக்குவதன்றோ என் பணியாயிருந்தது; 'இப்படி நீர் விலக்குவதனால் நான் இங்கு இருந்தே தீரக்கடவேன்' என்று சபதம் பண்ணிக்கொண்டு அவனாகவே வந்து இருக்கின்ற இருப்பன்றோவிது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தானொட்டிவந்து என்ற விடத்து நம்பிள்ளையீட்டில் வெகு அழகாக அருளிச்செய்யப்பட்டிருந்த ஒரு வாக்கியம் நெடுநாளாகவே பிழைபட்டிருக்கின்றது என்பதை ஈண்டு விரியவுரைக்க ப்ராப்தமாகிறது.

ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டம் — இருபத்தோராவது ஸர்க்கத்தில், கடலைக்கடந்து இலங்கைக்குச் செல்லக் கருதிய இராமபிரான் ஸமுத்ரராஜனை நோக்கிச் சரணாகதிபண்ணினபடியைச் சொல்லிவரும் பிரகரணத்தில் — “ஒக்ஷிணொ உக்ஷிணம் ஬ாஹுு உஹாவறிவஸஷிஹு | மொஸஹ ஸுஹுஷா தாரஃவயாய உஹஜுஜ || கூஷு ஜெ உரணம் வாஜ தரணம் ஸாமரஸுவா | ஐதி ராஜொ உதிம் கூுகா உஹாவாஹு உபெஹாஷயி | கூயிஶிஶெுஸ வியிவஜ ஷுயதொ நியதொ ஊநிஃ= தக்ஷிணே த க்ஷிணம் பாஹும் மஹாபரிக ஸந்நிபம், கோஸஹஸ்ரப்ரதாதாரம் உபதாய மஹத் புஜம், அத்ய மே மரணம் வாத தரணம் ஸாகரஸ்ய வா, இதி ராமோ மதிம் க்ருத்வா மஹாபாஹுர் மஹோததிம்; அதிசிச்யே ஸ விதிவத் ப்ரயதோ நியதோ முநிః.” என்கிற ச்லோகங்கள் உள்ளன. இராமபிரான் வலத்திருக்கையின்மீது திருவடியைச் சாய்த்துக்கொண்டு சாஸ்த்ரோக்த ரீதியில் சரணாகதி செய்தாரென்பது மேற்குறித்த ச்லோகங்களின் தேர்ந்த கருத்து. இந்த ச்லோகங்களில் “அத்யமே மரணம் வா” இத்யாதிபாகத்திற்கு ஸாதாரணமாக என்ன பொருள்? என்று விவேகிகள் தாமே ஆராய்ந்துபார்த்தால் ச்லோகத்தை உள்ளபடியேதான் அந்வயித்துப் பொருள் விளக்கக்கூடும். அதாவது—‘ இன்று நான் மரணமடைதலோ அன்றிக் கடலைக்கடந்து செல்லுதலோ இரண்டத்தொன்று திண்ணம் என்று இராமபிரான் அறுதியிட்டுச் சரணாகதிசெய்தார்” என்கிற இப்பொருளே ச்லோகத்தில் அஸ்கலிதமாகத் தோற்றக்கூடியது. இந்த ச்லோகத்திற்கு நம் பூருவாசாரியர்கள் எவ்விதமாக அர்த்தம் திருவுள்ளம்பற்றியிருக்கிறார்களென்பதைப்பற்றிப் பிறகு விசாரமெடுத்துக்கொள்வோம். ஸ்ரீராமாயணத்திற்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானங்கள் மூன்று அவதரித்துள்ளன, அச்சிடப்பட்டுமுள்ளன. 1. கோவிந்தராஜீய வியாக்கியானம். 2. மஹேச்வரதீர்த்தீய வியாக்யானம். 3. திலக வியாக்கியானம். இவற்றுள் மஹேச்வரதீர்த்தீய வியாக்கியானத்தில் ச்லோக முள்ளபடியே அந்வயித்து நாம் கீழ் விவரித்தபடியே பொருளுரைக்கப்பட்டுள்ளது. மற்ற இரண்டு வியாக்கியானங்களிலோ வென்னில்; “அத்ய மே தரணம் வா ஸாகரஸ்ய மரணம் வா (பவது) இதி மதிம் க்ருத்வா” என்று அந்வயம் காட்டப்பட்டுள்ளது; அதாவது, “இன்று நான் கடலைக் கடக்கவாவதுவேணும்; அதனைக் கொலைசெய்யவாவது வேணும் என்று கருதி” என்பதாகப் பொருள் ஏற்படுகிறது. இப்படி வ்யவஹிதாந்வயம் செய்து வருந்திப் பொருள் கொள்வதில் என்ன பயன்? என்று விமர்சிக்கவேண்டும்.

இதற்குச் சிலர் சொல்லுகிறார்கள்:— இராமபிரான் மஹா வீர புருஷனாதலால் கோழைகள் சொல்லத்தக்க வார்த்தையை அவன் சொல்லான்; ‘நானாவது ஒன்று மரணமடையவேணும், கடலையாவது ஒன்று கடக்கவேணும்’ என்று



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பிரதிஜ்ஞை பண்ணிக்கொண்டானென்றால் இது அச்லீலமாயும் மஹா வீர புருஷத்வ விருத்தமாயும் இருக்கின்றது. ஆக இந்த அஸ்வாரஸ்யத்தை உட்கொண்டே வருந்தியாகிலும் வ்யவஹிதாந்வயம் செய்யலாயிற்று—என்கிறார்கள்.

இது க்ஷோதக்ஷமமான ஸமாதானமாகமாட்டாது. இந்த இராமபிரானே இராவணனோடு போர்புரியுங்காலத்து இராவணனால் பிரயோகிக்கப்பட்ட சக்தியினால் இளையபெருமாள் நிலத்தில் விழுந்து மூர்ச்சித்தவாறே இராமன் பொறுக்க முடியாத கோபாவேசங்கொண்டு வாநர வீரர்களை நோக்கி ஓர் ப்ரதிஜ்ஞை செய்கிறார் — "அஸ்மிந் முஹூர்த்தே ந சிராத் ஸத்யம் ப்ரதிச்ருணோமி வ: । அராவணமராமம் வா ஜகத் த்ரக்ஷ்யத வாநரா: = அஸ்மிந் முஹூர்த்தே ந சிராத் ஸத்யம் ப்ரதிச்ருணோமி வஃ, அராவண மராமம் வா ஜகத்-த்ரக்ஷ்யத வாநரா:l. (101—49.) என்கிறார். 'இன்றோடு இராவணனையாவது ஒன்று ஒழித்துவிடுகிறேன், நானாவது ஒன்று மடிந்துவிடுகிறேன் பாருங்கள்' என்பதன்றோ இந்த ச்லோகத்தின் கருத்து. ஆரியர்காள்!, மேற்குறித்த ச்லோகம் - மஹாவீரத்தன்மையும் க்ஷத்ரரோஷமுந் தோன்ற மீசை முறுக்கி ஆண்புலியாய்ச் சொல்லும் பிரகரணத்திலுள்ளது. இந்த ப்ரகரணத்தில் பெருமாள் எவ்வாறு பிரதிஜ்ஞை செய்வது தகுமென்றால், "பாருங்கள், இந்த க்ஷணத்தோடு இந்த ராவணப்பயலைத் தீயினில் தூசாக்கிவிடுகிறேன்" என்று சொல்வதே பொருத்தமுடைத்தாகும். அங்ஙனஞ் சொல்லவேண்டிய இந்த ஸமயத்திலேயே இன்று நானாவது ஒன்று மாண்டுபோகிறேன், இராவணனையாவது ஒன்று ஒழித்து விடுகிறேன்' என்று சொல்லியிருக்கும்போது, ஸமுத்ரராஜனை நோக்கிச் சரணாகதி செய்யுமடைவிலே இவ்விதமான வார்த்தை சொல்வது எங்ஙனே தகுதியற்றதாகும்? இதுவே தகுதியாம்.

அன்றியும், பிரக்ருத ஸ்தலத்தில் வ்யவஹிதாந்வயம் பண்ணி ஸாதிக்கப் படுகிற பொருள் பிரகரணத்திற்கும் சேர்ந்திருக்கவில்லை. ஏனென்றால், உதாஹரித்த ச்லோகமுள்ளவிடம் ஸமுத்ர சரணாகதி ப்ரகரணமாயிராநின்றது. இந்த ச்லோகங்கொண்ட ஸர்க்கத்தின் முதல் ச்லோகம் "ததஸ் ஸாகரவேலாயாம் தர்ப்பாநாஸ்தீர்ய ராகவ:, அஞ்சலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே:" என்பதாம். ஆகிஞ்சந்யத்தையும் அநந்யகதித்வத்தையும் முன்னிட்டுக் கொண்டு சரணாகதி செய்யவேணுமென்று சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. இராமபிரான் செய்த சரணாகதி சாஸ்த்ரீயமாய் ஸலக்ஷணமானதென்றே ஏற்படுகிறது. எங்ஙனே யென்னில், அத்ய மே மரணம் வா என்கிற இந்த ச்லோகத்தின் அடுத்த ச்லோகத்தில் "அதிசிச்யே ஸ விதிவத் ப்ரயதோ நியதோ முநி: = அதிசிச்யே ஸ விதிவத் ப்ரயதோ நியதோ முநி:" என்றுள்ளது. இங்கு, விதிவத் — சாஸ்த்ரோக்தரீதியாய், ப்ரயத: — காயிக நியமத்தோடு கூடியவராய், நியத: — வாசிகநியமத்தோடு கூடியவராய், முநி: — மாநஸிக நியமத்தோடுங் கூடியவராய்க் கடலரசனை நோக்கிச் சரணாகதி செய்தார் என்று வியாக்கியானஞ் செய்துள்ளார்கள். இங்ஙனே யிருக்கும்போது "அத்ய மே தரணம் வா, ஸாகரஸ்ய மரணம் வா" என்று அந்வயித்துக் கூறப்படுகிற

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பொருள் எங்ஙனே பொருந்தக்கூடும்? நெஞ்சில் தீய எண்ணங்கொண்டு கபடமாகச் சரணாகதி செய்தார் என்றன்றோ இதனால் ஏற்படும். அப்படியாகில், சாஸ்த்ரோக்தரீதியாய் மாநஸிக நியமத்தோடு கூடியவராய்ச் சரணாகதி செய்தார் என்றது விபரீத லக்ஷணையாகவன்றோ தேறும்.

"தஸ்ய ராமஸ்ய ஸுப்தஸ்ய குசாஸ்தீர்ணே மஹீதலே | நியமாத் அப்ரமத்தஸ்ய நிசாஸ் திஸ்ரோதி சக்ரமு:" = தஸ்ய ராமஸ்ய ஸுப்தஸ்ய குசாஸ்தீர்ணே மஹீதலே, நியமாத் அப்ரமத்தஸ்ய நிசாஸ் திஸ்ரோதி சக்ரமு:." என்று மூன்றுநாள் வரையில் நியமம் தவறாமல் ப்ராயோபவிஷ்டராய்க் கிடந்தார் என்றுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இங்ஙனம் மூன்று நாள் நடந்தபின்பும் கடலரசன் முகங்காட்டாதொழியவே, பெருமாள் எல்லைகடந்த சீற்றமடைந்து "ஸாகரம் சோஷயிஷ்யாமி" = பார் இதோ கடலை வற்றச் செய்துவிடுகிறேன்' என்றருளிச்செய்ததுண்டு. * அத்ய மே மரணம் வா * என்கிற இந்த ச்லோகம் அந்த ப்ரகோப ப்ரகரணத்தில் இருந்திருந்தால் இப்படி வ்யவஹிதாந்வயம் பண்ணுவது பொருந்தும்; ப்ராயோபவேச ப்ரகரணத்திலுள்ள இந்த ச்லோகத்திற்கு இவ்வாறு பொருள்கூறுதல் ஏலாது என்பது விவேகிகளுக்கு அறிவரிதன்று.

இனி, இப்படி அநுபபந்நமான அர்த்தத்தை ப்ரஸித்த வ்யாக்யாதாவாகிய ஸ்ரீகோவிந்தராஜரும் மற்றொருவரும் எழுதியது எதுகொண்டு? என்று கேள்வி பிறக்கக்கூடும், இக் கேள்விக்கு உத்தரம் உரைக்கின்றேன்;—

யானொட்டி யென்னுள் என்கிற இந்தப்பாசுரத்தின் ஈடு முப்பத்தாறாயிரப் படி வியாக்கியானத்தில் * அத்யமே மரணம் வா * என்கிற இந்த ச்லோகம் உதாஹரிக்கப்பட்டு ஸங்க்ரஹமாக விவரிக்கப்பட்டுள்ளது. தமிழ்லிபியிலும் தெலுங்குலிபியிலும் பதிப்பிக்கப்பட்டுள்ள பகவத்விஷய ஸ்ரீகோசங்களில் அவ்விடத்துள்ள பங்க்தி—

"[தான் ஓட்டிவந்து] 'அத்யமே மரணம் வாபி தரணம் ஸாகரஸ்ய வா' என்று இத்தை முடித்தல் கடத்தல் செய்யுமதுக்கு மேற்படவில்லை என்றாற்போலே ப்ரதிக்ஞை பண்ணியாயிற்றுப்புகுந்தது" என்றும்.

இங்கு "இத்தை முடித்தல் கடத்தல்" என்றிருக்கிறது. [இந்த வாக்கியத்தின் நிஜஸ்வரூபமென்னவென்பதை மேலே விளக்குவேன்.] இவ்விடத்திற்கு அரும்பதவுரை யெழுதியவர்கள்—

"அத்யமே தரணம் வா ஸாகரஸ்ய மரணம் வா என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி அர்த்தமருளிச்செய்கிறார் இத்தை முடித்தல் இத்யாதி. * சாபமாநய * இத்யாதியைக் கடாக்ஷித்து இப்படி யோஜித்தது.

என்றெழுதிவைத்திருக்கிறார்கள், நாலாயிர திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் பூருவாசாரியர்கள் ஸ்ரீராமாயண ச்லோகங்களை ஆங்காங்கு உதாஹரித்து எவ்விதமாக அர்த்தஞ் செய்கிறார்களோ அவ்விதமாகவே ஸ்ரீராமாயண வ்யாக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யாதாவாகிய ஸ்ரீ கோவிந்தராஜர் தாம் வியாக்கியானமெழுதிவருகிற வழக்கத்தின்படி இந்த ச்லோகத்தையும் மேற்குறித்த நம்பிள்ளையீட்டில் அரும்பதவுரையைநம்பி அவ்விதமாகவே அந்வயித்து வியாக்யானித்துவிட்டார். வேறு விதமாக வியாக்கியானித்தால் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியை அவமதித்தோமாவோம் என்று நினைத்துவிட்டார்.

இனி, ஈட்டின் அரும்பதவுரைகாரர் எழுதியிருப்பதற்கு என்ன கதி சொல்லக்கூடும்? "இத்தை முடித்தல் கடத்தல் செய்யுமதுக்கு மேற்பட இல்லை" என்கிற ஈட்டுப்பங்க்திக்கு வேறு எவ்விதமாகப் பொருள் சொல்லக்கூடும் ? என்று சோஷிப்பவர்களுக்கு இனி ஸமாதான முரைக்கப்படுகிறது.—ஸம்ப்ரதாயத்தில் சில தமிழ்ச்சொற்களின் உச்சாரணம் நெடுநாளாகவே மாறுபட்டிருப்பதை அனைவருமறிவர். கன்று, குன்று இத்யாதி பதங்களை கன்னு குன்னு என்றும், காற்று தோற்று இத்யாதிபதங்களை காத்து தோத்து என்றும் இப்படி மாறுபாடாக வ்யவஹரித்துவருகிறோம். [இது நன்றா? தீதா? என்கிற விசாரம் தனிப்பட்டது; அவ்விசாரம் இப்போது அப்ரஸக்தம்.]

முற்காலத்தில் ஓலை ஸ்ரீகோசங்கள் எழுதிவந்தவர்கள், ஒருவர் ஏடுபார்த்துச் சொல்லவும் மற்றொருவர் எழுதவும் ஆக இப்படியே பெரும்பாலும் எழுதி வந்தவர்கள். முன் உதாஹரித்த ஈட்டுப்பங்க்தி "இற்றை முடிதல் கடத்தல்" என்றிருந்தது. எழுதுமவர்க்கு ஏடுபார்த்துச் சொல்லிவந்தவர் இற்றை என்பதைத் தற்கால உச்சாரணமுறைப்படி இத்தை என்று சொன்னார். எழுதுகிறவரும் "இத்தை முடிதல் கடத்தல்" என்றெழுதிவைத்தார். அதைப்பார்த்து மற்றொருவர் எழுதிக்கொள்ளும்போது 'இத்தை முடிதல்' என்றால் அந்வயிக்கவில்லையேயென்று "இத்தை முடித்தல்" என்று எழுதிவிட்டார். இங்ஙனம் பல ஸ்ரீகோசங்கள் பரவிவிட்டன. அரும்பதவுரைகாரர்க்கு இத்தகைய பாடங்கொண்ட ஸ்ரீகோசம் கிடைத்தமையால் அதற்குத்தக்கபடி அவர் விவரணஞ்செய்துவிட்டார். அதனையே விச்வஸித்து ஸ்ரீகோவிந்தராஜரும் அப்படியே எழுதிவிட்டார். வெகுகாலைக்கு முற்பட்ட ஓலை ஸ்ரீகோசங்களை ஸம்பாதித்துப் பார்த்ததில் இந்த துட்பம் புலனாயிற்று.

இப்போது யாம் எடுத்தெழுதிய பாடத்தில் அர்த்தம் நன்கு பொருந்துவதுந்தவிர, ஈடு முப்பத்தாறாயிரப்படியில் இந்த ச்லோகம் எந்த அம்சத்திற்கு உதாஹரணமாக எடுத்தாளப்பட்டதோ அதற்கும் மிக்க பொருத்தமாக அமைகின்றது. "அத்யமே மரணம் வா" என்ற மூலத்திற்குத்தகுதியான அர்த்தம் 'இற்றை முடிதல் என்பது. இற்றை=இன்றைத்தினம் என்றபடி, இது அத்ய என்பதன் பொருள். முடிதல்—மரணமடைதல். இது 'மே மரணம் வா' என்றதன் பொருள். "யானொட்டியென்னுள்" என்கிற இந்தப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் இந்த ச்லோகத்தை எடுத்து விவரிக்கவேண்டிய காரணமென்ன ? என்று ஆராய்வோம்: மூலத்தில் 'எம்பெருமானை நான் விட்டாலும் அவன் என்னை விடான்' என்றருளிச்செய்யப்புகுந்த ஆழ்வார், "நான் இசைந்து என்னுடைய ஹ்ருதயத்திலே இருக்கவேணும் என்றிலேன்; அவ்வெம்பெருமான்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தானுகவே ப்ரதிக்ஞைபண்ணிக்கொண்டு என்னுள்ளே புகுந்தருளினனுதலால் இப்படி நிர்ஹேதுகமாக அடியேனை விஷயீகரித்த அவன் நான் அகன்றுபோவதை இசைந்திடுவனே?'' என்றருளிச்செய்திருக்கிறார். ஆழ்வார் விஷயத்திலே எம்பெருமான் ப்ரதிஜ்ஞைபண்ணினதாகச்சொல்லப்பட்டிருக்கிறதே, இது எப்படிப்பட்ட ப்ரதிக்ஞை? என்று கேள்வியாக, இதற்கு இராமபிரானுடைய ஓர் பிரதிக்ஞையை எடுத்துக்காட்டினர் நம்பிள்ளை. கடலரசனுடைய ஸ்தானத்தில் ஆழ்வாரும், இராமபிரானுடைய ஸ்தானத்தில் எம்பெருமானுமாகக் கொள்ளவேணும். கொண்டு, "அத்யமே மரணம் வா'' என்கிற ச்லோகத்திற்கு 'ஸமுத்ரத்தை முடிக்கவாவது அதை நான் கடக்கவாவதுவேணும்' என்பதாகப் பொருளுரைத்தால் தார்ஷ்டாந்திகத்தில் 'ஆழ்வாரைக் கொல்லவாவது.........' என்பதாக ப்ரதிஜ்ஞையின் ஆகாரம் கூறவேண்டும். இஃது எங்ஙனே பொருந்தும்?

ஸ்ரீராமாயண ப்ரகரணத்திற்கும் ஈட்டில் உதாஹரித்த ப்ரகரணத்திற்கும் கவிஹ்ருதயத்திற்கும் ச்லோகசைலிக்கும் சிறிதேனும் ஸம்பந்தமின்றியே அரும்பதவுரைகாரரும் ஸ்ரீகோவிந்தராஜரும் எழுதியுள்ளபொருள் ப்ராமாதிகமென்பதையும் ப்ரமாதத்தின் நிமித்தத்தையும் ஈட்டு ஸ்ரீஸூக்தியின் உண்மையான நிலைமையையும் ஈண்டு நன்கு நிரூபித்தாயிற்று,

திருவிருத்தத்தில், 62. "இறையோவிரக்கினும்'' என்கிற பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"இதுதான் [இக்கடல்தான்] சரணமென்றால் இரங்குமதன்றிக்கே அம்புக்கு முகங்காட்டுமதிறே; அது ஆர்த்திக்கு இரங்குமதல்லவே, அம்புக்கு இரங்குமதிறே. தனக்குச் சரணமென்றால் இரங்குமதன்றே, தனக்கு மரணமானல் இரங்குமதிறே'' என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதனால் இஸ்தக்கண்டு சிலர் மயங்கக்கூடும். இங்கு "அத்யமே மரணம் வா'' என்கிற ச்லோகத்தைப்பற்றின ஸ்மரணலேசமும் கிடையாது. "அம்புக்கு முகங்காட்டுமதிறே'' என்கிற ஸ்ரீஸூக்திக்குப்பிறகு "தனக்கு மரணமானலிரங்குமதிறே'' என்கிற ஸ்ரீஸூக்தி இருப்பதனால் பெரியவாச்சான்பிள்ளை தனிச்லோகியில் அருளிச்செய்கிற கணக்கிலே ப்ராஸமாக அருளிச்செய்தவத்தனை. அவ்விடத்து அரும்பதவுரைகாரரும் நம்பிள்ளையீட்டின் அரும்பதவுரையில் வாஸனையினால் எழுதியுள்ளது மேற்கண்ட விபுலவிவரணங்களினால் விடைபெற்றதேயாகும்.

இந்த ஸந்தர்ப்பத்தில் இதற்குப் போலியான மற்றொரு விஷயம் நினைவுக்கு வருகின்றது; அதனையும் ஈண்டுத் தெரிவிக்கின்றேன்; அறிஞர்கள் ஆராய்ந்து பார்க்கவேணும். ஸ்ரீராமாயணத்தில் பாலகாண்டத்தில் இருபத்து மூன்றாவது ஸர்க்கத்தில் இரண்டாவது ச்லோகம் — "கௌஸல்யா ஸுப்ரஜா ராம! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே | உத்திஷ்ட நரசார்தூல! கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம் = கௌஸல்பாஸுப்ரஜா ராம! பூர்வா ஸந்த்பா ப்ரவர்த்ததே,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



உத்திஷ்ட நரசார்த்தூல! கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்.'' என்பது. இதற்கு கோவிந்தராஜீயம் என்கிற ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்தில்,

''விஶ்வாமித்ரோ ராமஸ்ய ........ நித்ராகாலிகஸ்ரீயமவலோக்ய தத்ராஸக்தஸ்ஸந் ஸ்வாபநகாயம் விஸ்ம்ருத்ய, ஈதம் புத்ரம் ப்ரஸூதவதீ கௌஸல்யா கிம்வா தபஶ்சசாரேதி விஸ்மயதே — கௌஸல்யா ஸுப்ரஜா:|| போதநகாலே விஸ்மிதமுகோ முநிராஸீத் ||''

என்கிற வாக்கியங்கள் உள்ளன. இங்கு முடிவில் ''போதநகாலே விஸ்மிதமுகோ முநிராஸீத்'' என்ற வாக்கியம் ஆராய்ச்சிக்கு உரியது. விச்வாமித்ரமுனிவன் இராமபிரானுடைய திருக்கண்வளர்த்தியழகிலே யீடுபட்டு, தான் வந்த காரியத்தை மறந்து 'இப்பிள்ளையைப்பெற்ற கௌஸல்யை என்ன நோன்புநோற்றாள் கொலோ'! என்று ஆச்சரியப்படுவதற்கு ஆரம்பித்துவிட்டார் என்று ரஸோக்தியாக அவதாரிகை வைத்திருக்கிறார்; இதுநன்றே. இதற்குமேல் ''போதநகாலே விஸ்மிதமுகோ முநிராஸீத்'' என்றுள்ள வாக்கியத்திற்கு என்னபொருளென்று பண்டிதர்கள் விமர்சிக்கவேணும்.

முநி:—ரிஷியானவர், போதநகாலே—எழுப்பும்போது, விஸ்மிதமுக:—மிகவும் சிரித்தமுகமுடையவனாக, ஆஸீத்—ஆனான். என்பதாகவே இந்த வாக்கியத்திற்கு அனைவரும் பொருள் சொல்லவேண்டும். இனி இவ்வாக்கியத்திற்கு என்ன தாற்பரியமென்று நோக்கவேணும். இராமபிரானை எழுப்பும்போது விச்வாமித்திரன் சிரித்தானென்று எதற்காகச் சொல்லப்படுகிறது. மூலத்தில் என்னபதமிருக்கிறது? எந்த பதத்திற்கு இது தாற்பரியம்? அஜாகளஸ்தனம் போலேயிருக்கிற இந்த வாக்கியம் எவ்விதத்திலாவது பொருந்துகின்றதாவென்று பல பண்டிதர்களைக் கேட்டாயிற்று; அனைவரும் வானமே நோக்குவர். க்ரந்தலிபியிலோ தேவநாகரலிபியிலோ எந்தலிபியிலச்சிட்ட புத்தகத்திலும் இப்படியே பாடம் காண்கிறது. பலதேசங்களிலிருந்து தருவிக்கப்பட்ட பதினைந்து ஏட்டுப்பிரதிகளை வைத்துக்கொண்டு வெகு நன்றாகச்சோதித்து மத்வவிலாஸ புத்தகசாலையார் வெளியிட்டுள்ள தேவநாகராக்ஷரப் பதிப்பிலும் இப்பாடமே காண்கிறது, ஆனால் அவர்கள் அப்பதிப்பில் இந்த வாக்கியத்தை அப்ராமாணிகமென்று நினைத்தோ அஸங்கதமென்று நினைத்தோ வேறு என்ன நினைத்தோ இந்த வாக்கியத்தின் தலையில் ஒரு குறிப்பு இட்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் கிடைத்த ஓலைப்புத்தகங்களெல்லாவற்றிலும் இத்தகைய பாடமே உள்ளதென்று மாத்திரம் நன்றாக விளங்கிவிட்டது. இனிமேல் அடியேன் எழுதப்புகும் விஷயங்களை வாசியாமலே பண்டிதர்கள்! நீங்கள் உந்தமது புத்தியைச் சிரமப்படுத்திப்பாருங்கள்; ''போதநகாலே விஸ்மிதமுகோ முநிராஸீத்'' என்ற வாக்கியம் எவ்விதத்திலாவது பொருந்துகிறதா? என்று விமர்சிப்பீர்களோ?

.... ... .... ... .... .... .... ...

இனி அடியேன் விஜ்ஞாபிக்கிறேன்; மேற்குறித்த வாக்கியத்தில எழுத்துப்பிழைகள் இரண்டு உள்ளன; ''போஜநகாலே விஸ்ம்ருதமுகோ முநிராஸீத்'' என்று

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருத்திக்கொள்ளவேணும். இப்போது என்ன அர்த்தம் தேறுகின்றதென்பதை விவரிக்கிறேன்.

தனிச்லோகியில் இந்த ச்லோகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை மிகவும் விரிவாக வியாக்கியானமருளிச்செய்யுமிடத்து

"உண்ணப்புக்கு வாயைமறப்பாரைப்போலே விச்வாமித்திரன் தான் வந்த காரியத்தை மறந்து இவனைப்பெற்ற தாயின் வயிற்றுக்குப் பட்டங் கட்டத்தொடங்கினான்"

என்று ரஸமயமாக அருளிச்செய்துள்ளார். தனிச்லோகியிலுள்ள அர்த்த விசேஷங்களைப் பெரும்பாலும் ஸ்ரீ கோவிந்தராஜர் தம்முடைய வியாக்யானத்தில் ஸம்ஸ்க்ருதப்படுத்துவது வழக்கம். அந்த க்ரமத்திலே "உண்ணப்புக்கு வாயைமறப்பாரைப்போலே" என்கிற தனிச்லோகி ஸ்ரீஸூக்தியின் கருத்தை உள்ளடக்கி "போஜநகாலே விஸ்ம்ருதமுகோ முநிராஸீத்" என எழுதிவைத்தார். * அல்பவ்ருத்திரநர்த்தஹேது:* [அரைகுறையறிவு அநர்த்தத்துக்கிடம்] என்ற நியாயத்திற்கு நிதர்சநமானவர்கள் இதனைத்தெரிந்துகொள்ளாமல் "பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே" என்று திருப்பள்ளியெழுச்சி பாடுகிற பிரகரணமாகையாலே போதந காலமாயிருக்க, போஜநகாலமேது? என்றிங்ஙனே மருண்டு வெகு சதுரர்போலத் திருத்தியெழுதிவிட்டார்கள். 'எழுப்பும்போது முனிவன் சிரித்துக்கொண்டே யெழுப்புகின்றான்' என்பதாகவும் அதற்குப் பொருள்செய்து கொண்டார்கள். ஏட்டுப்பிரதிகளில் உள்ளபடியாகவே பிறகு அச்சுப்பிரதிகளிலும் புகுந்திட்டது. ஆனால் ஏட்டுப்பிரதிகளெல்லாவற்றிலுமே இந்தத் தப்புப் பாடம் இல்லை, அடியேன் இப்போது எடுத்துக்காட்டிய உண்மையான பாடம் ஒரு தாளகோசத்திலிருந்துதான் க்ரஹிக்கப்பட்டது. தனிச்லோகியையும் கோவிந்தராஜீயத்தையும் ஒன்றுசேர்த்து ஸேவிக்க நேர்ந்தபோது இது குறிக்கொளலாயிற்று. இங்ஙனம் தவறுதலான பாடங்கள் தொன்றுதொட்டே ஏட்டுப்பிரதிகளிலும் புகுந்துவிட்டன என்பதை விவேகிகள் நெஞ்சிற்கொண்டு பிராக்ருத விஷயத்திலும் தெளிவுபெறுவார்களாக.

[என் தனிநெஞ்சை வஞ்சித்து இத்யாதி.] ஸர்வசக்தனை தன்னாலும் திருத்த வொண்ணாதபடி ஸ்வாதந்திரியத்தில் தலைநின்று அவிதேயமாய்க்கிடந்த எனது நெஞ்சைத் தன்னுடைய சீலாதி குணங்களாலும் வடிவழகாலும் தனக்கு விதேயமாம்படிபண்ணி, அபிமதவிஷயத்தில் அழுக்கு உகப்பாரைப்போலே என்னுடைய ஹேயமான வுடலைப்பற்றி நின்று என் பக்கலிலே விலக்காமை பெற்றவாறே என்னாத்மாவோடும் வந்துகலந்து இதுவே போதுபோக்காகவிருந்து இப்படி நிர்ஹேதுகமாக என்னை விஷயீகரித்தவன், நான் தன்பக்கலில் நின்றும் நெகிழ்ந்துபோவேனென்றால் அவன் இசைய ப்ரஸக்தியுண்டோ? எனக்கு ஞானம் பிறக்கைக்கு க்ருஷிபண்ணி, பிறந்த ஞானம் பலிக்குமளவானகாலத்திலே நான் அகன்றுபோவேனென்றால் அவனோ அகலவொட்டுவது?......(எ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்னைநெகிழ்க்கிலும் என்னுடைநன்னெஞ்சந்
தன்னை * அகல்விக்கத்தானுங்கில்லானினி *
பின்னைநெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை *
முன்னையமரர் முழுமுதலானே. * (அ)

| | | | |
|---|---|---|---|
| பின்னை | நப்பின்னைப்பிராட்டியினுடைய | என்னை நெகிழ்க்கிலும் | (ஒருகால்) என்னைப்பிரிய விட்டாலும் |
| நெடு | பெரிய | | |
| பணை | சுற்றுடைத்தான | என்னுடை | என்னுடைய |
| தோள் | தோள்களோடே அணையப் பெற்றதனாலுண்டான | நல் நெஞ்சம் தன்னை | நல்ல நெஞ்சை |
| மகிழ் பீடு உடை | ஆனந்தப் பெருமையை உடையவனும் | அகல்விக்க | (தன்னிடத்தினின்றும்) பிரிக்க |
| முன்னை அமரர் | பூருவர்களான நித்யஸூரிகளுக்கு | தானும் | ஸர்வசக்தியுக்தனான தானும் |
| முழுமுதலான் | ஸகலமும் தானேயாயிருக்கப்பெற்றவனுமான எம்பெருமான் | இனி | இனிமேல் |
| | | கில்லான் | ஸமர்த்தனாகமாட்டான். |

* * * — [என்னை நெகிழ்க்கிலும்.] அகடிதகடநாஸமர்த்தனான எம்பெருமான் றன்னாலும் இனியொருநாளும் வேறுபடுத்தவொண்ணாதபடி எனது நெஞ்சு அங்கே ஆழங்காற்பட்டுவிட்டதென்கிறார். இதற்குமுன்புள்ள காலமெல்லாம் நான் அவனைவிட்டு நெகிழ்ந்தவனேயாகிலும் இனி அங்ஙனம் ஒருநாளும் நெகிழ மாட்டேன்; எம்பெருமான் தனது ஸ்வாதந்திரியத்தினாலே ஒருகால் என்னை நெகிழவிட்டாலும் விடக்கூடும்; தன் பக்கலிலேயே ஊன்றிக்கிடக்கின்ற எனது நெஞ்சை ஒருவகையாலும் அப்புறப்படுத்த அவன்றன்னாலுமாகாது.

அவனோ ஸர்வசக்தன்; நினைத்தபடி எதையும்செய்து நிறைவேற்றவல்லவன்; அவனுக்கு ஆகாததும் ஒன்றுண்டோ என்னில்; [தானும் கில்லான்.] அப்படிப் பட்ட அபாரசக்திவாய்ந்த பகவானும் இவ்விஷயத்தில் அஸமர்த்தனேயாவன்.

அங்ஙனம் சொல்லலாமோ? இதுவரையில் உம்மை மாறிமாறிப் பலபிறப் பும் பிறக்கச்செய்யவில்லையா? உமது நெஞ்சை இதர விஷயங்களிலே அகன்று போகச்செய்யவில்லையா எனில்; இதுவரையில் செய்தது உண்மையே, இனி அங்ஙனஞ்செய்ய அவனாலுமாகாது. இவ்வளவு உறுதியாகச் சொல்லுவதற்கு நிதானம் ஏதென்னில்; [பின்னை நெடும்பணைத்தோள் இத்யாதி.] நப்பின்னைப் பிராட்டியைப் புருஷகாரமாகக்கொண்டு பற்றினேனாதலால் இனி ஒருநாளும் அகல்விக்க ப்ரஸக்தியில்லை என்பது பரம தாற்பரியம். நித்யஸூரிகளைவிட்டா லன்றோ என்னைவிடுவது என்பதும் உட்கருத்தாம். .... .... (அ)

அமரர்முழுமுதல் ஆகியவாதியை *
அமரர்க்கமுதீந்த ஆயர்கொழுந்தை *
அமரவழும்பத் துழாவி யென்னாவி *
அமரத்தழுவிற்று இனியகலுமோ. * (கூ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| அமரர் | நித்யஸூரிகளுடைய |
| முழு | ஸ்வரூபம் ஸ்திதி ப்ரவ்ருத்தி ஆகிய எல்லாவற்றிற்கும் |
| முதல் ஆகிய | ஹேதுவாய்க்கொண்டு |
| ஆதியை | பிரதானனானவனும், |
| அமரர்க்கு | (இந்திராதி) தேவர்களுக்கு |
| அமுது | (அவர்கள் விரும்பிய) அம்ருதத்தை |
| ஈந்த | (கடல்கடைந்து எடுத்துக்) கொடுத்தவனும், |
| ஆயர் கொழுந்தை | இடையர்களுக்குத் தலைவனுமான எம்பெருமானை |
| என் ஆவி | எனது ஆத்மாவானது |
| அமர அழும்பத் தழாவி | மிகவும் நெருக்கமாகக் கலசி |
| அமர | இனிமேல் ஒருவராலும் பிரிக்கவொண்ணாதபடி |
| தழுவிற்று | உகந்து கலந்தது ; |
| இனி அகலுமோ | இனிமேல் பிரிய வழி புண்டோ ? |

* * * — [அமரர் முழுமுதல்.] ''என்னுடை நன்னெஞ்சந்தன்னை யகல்விக்கத் தானுங்கில்லான்'' என்று சொல்லவேண்டிய ப்ரஸக்திதானுமில்லையே ; 'எனது நெஞ்சும் அவனுஞ்சேர்ந்து ஒரு திரவியம்' என்னலாம்படி ஒற்றுமைபெற்றுள்ள விதனைப் பிரிக்கும்வகைதான் உண்டோவென்கிறார்.

நித்யஸூரிகளினுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளெல்லாம் தன்னுடைய அதீனமாம்படியிருப்பவனும், நம்போலியரைக் கரணகளேபரங்கள் கொடுத்துப்படைத்தவனும், 'எங்களுக்கு நீ வேண்டா; உப்புச்சாறு போதும்' என்ற தேவர்கட்கும் கடல்கடைந்து அமுதமளித்தவனும், அந்த அம்ருதம் வேண்டா, நீயே வேணும்' என்ற ஆயர்களுக்காக வந்து அவதரித்துத் தன்னைக் கொடுத்தவனுமான எம்பெருமானை என்னுடைய ஆத்மாவானது கிட்டிச் செறிந்து அநுபவித்து ஏகத்ரவ்யமென்னலாம்படி கலந்துவிட்டது; இரண்டு வஸ்துவாக இருந்தாலன்றோ பிரிக்கலாவது ; இனி பிரிக்க விரகில்லையென்றாயிற்று. ... ... .... (கூ)

அகலிலகலும் அணுகிலணுகும் *
புகலுமரியன் பொருவல்லனெம்மான் *
நிகரிலவன்புகழ் பாடியிளைப்பிலம் *
பகலுமிரவும் படிந்துகுடைந்தே. * (கO)

| | |
|---|---|
| அகலில் | (தன்பக்கலில் அற்பபலன்களைப் பெற்றுக்கொண்டுசிலர்) பிரிந்துபோனால் |
| அகலும் | (அவர்கள் விஷயத்தில்) வருத்தத்தோடே பிரிந்திருப்பவனும், |
| அணுகில் | (சிலர் அநந்யப்ரயோஜநராய்) விடமாட்டாதேயிருந்தால் |
| அணுகும் | (அவர்களோடு) ஒரு நீராகக்கலக்குமவனும், |
| புகலும் அரியன் | (ப்ரதிகூலர்க்கு) அணுகவுமொண்ணாதவனும் |
| பொருவு அல்லன் | (அநுகூலர்க்குத்) தடையற்றவனும் |
| எம்மான் | எனக்கு ஸ்வாமியானவனும் |
| நிகரிலவன் | (ஆக இப்படிகளாலே) ஒப்பில்லாதவனுமான ஸர்வேச்வரனுடைய |
| புகழ் | திருப்புகழ்களை |
| பகலும் இரவும் | எப்போதும் |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| படிந்து | உட்புகுந்து | பாடி | பாடி |
| குடைந்து | எங்கும் கலந்து | இளைப்பிலம் | ஓவுதல் உண்டாகிறிலோம். |

* * * — [அகலிலகலும்.] என்னோடுகலந்த எம்பெருமானுடைய திருக்குணங்களை எத்தனைகாலமனுபவித்தாலும் த்ருப்தி பிறப்பதில்லையென்கிறார். [அகலில் அகலும்] எம்பெருமான் எவ்விதத்திலாவது நம்மைத் தன் வலையில் அகப்படுத்திக்கொள்ளும்வழியையே பார்ப்பன்; அவனுடைய உபாயங்களையெல்லாம் பழுதாக்கி நாம் அவனது வலைக்கு அகப்படாமல் அகன்றுபோவதையே விரதமாகக் கொண்டிருப்போமாகில், ஐயோ! நம்முடைய க்ருஷி பலிக்கவில்லையே! என்று கண்ணீர்விட்டழுதுகொண்டே கைவாங்கிநிற்பன் என்றபடி. [அணுகில் அணுகும்] நாம் அவன்பால் காலடி கிட்டச்சென்றால் நம்முடைய அபிநிவேசத்துக்கும் மேலாகவே அபிநிவேசங்கொண்டு அவன் நம்மைச்சூழ்ந்துகொள்வன் என்க. விபீஷணாழ்வான் போல்வார்திறத்திலே இக்குணம் காணத்தக்கது.

[புகலும் அரியன்] நல்ல எண்ணமில்லாதார்க்கு எட்டாதவன் என்றபடி. துரியோதனனும் அர்ஜுனனும் படைத்துணைவேண்டி வந்தபோது அஸாரங்களைப்பெற்று ஒழிந்துபோம்படியன்றோ துரியோதனனுக்கு ஆயிற்று. [பொருவல்லன்] இதற்கு ஆறாயிரப்படி:—"ஸமாச்ரயணோந்முகரா யிருப்பார்க்கு ஒரு தடையின்றியே புக்கு ஆச்ரயிக்கலாம்படி யெளியனாய்" என்பதாம். "ஆச்ரிதர் தன்னைக்கிட்டுமிடத்தில் தடையுடையனல்லன்" என்பர் மற்ற வியாக்கியாதாக்களும். பொரு என்பதற்கு 'தடை' என்னும் பொருள் நேரே கிடைக்காதாயினும் 'லக்ஷித லக்ஷணை' என்னும் முறைமையால் கிடைக்குமென்று திருவுள்ளம். [எம்மான்] ஆக இப்படிப்பட்ட தன்மைகளைக்காட்டி என்னை யீடுபடுத்திக்கொண்டவன் என்றவாறு.

நிகரிலவன் புகழ்பாடி=கீழ்ச்சொன்ன தன்மைகளினால் தனக்கு ஒருவரையும் ஒப்பாகக்கொள்ளப்பெறாத அந்தப் பெருமானுடைய திருக்குணங்களை இரவும் பகலும் பூர்ணாநுபவம்பண்ணினும் ஓய்வுபெறுகின்றிலேன் என்றதாயிற்று.

"எம்பெருமானுடைய ஒப்பில்லாத கல்யாணகுணங்களிலே" என்ற ஆறாயிரப்படிக்குச் சேர "நிகரில வண் புகழ்" எனப்பாடமிருக்கலாமென்பர் சிலர். "நிகரில் அவன்புகழ்" என்று விபாகமாகலாம். .... .... ... (கo)

குடைந்துவண்டுண்ணும் துழாய் முடியானை *
அடைந்ததென்குருகூர்ச் சடகோபன் *
மிடைந்தசொல்தொடை ஆயிரத்திப்பத்து *
உடைந்துநோய்களை ஓடுவிக்குமே. * (கக)

| | | | |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகள் | துழாய் | திருத்துழாய் மாலையை |
| குடைந்து | உட்புகுந்து | முடியானை | திருமுடியிலணிந்த பெருமானை |
| உண்ணும் | மதுவுண்ணப்பெற்ற | | |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| அடைந்த | பணிந்த | ஆயிரத்து | ஆயிரத்தினுள்ளே |
| தென் குருகூர் சடகோபன் | திருநகரியிலவதரித்த ஆழ்வாருடைய | இ பத்து | இந்தத் திருவாய்மொழி |
| மிடைந்த | நெருங்கின | நோய்களை | ப்ராப்தி ப்ரதிபந்தகங்களை |
| சொல் தொடை | சொல்மாலையாகிய— | உடைந்து ஓடுவிக்கும் | உருக்குலைந்து ஓடும்படி செய்திடும். |

* * *—[குடைந்து வண்டுண்ணும்] இத்திருவாய்மொழிதானே இது கற்றவர்களினுடைய ப்ராப்தி ப்ரதிபந்தகங்களை வேரறுக்குமென்று பலன்சொல்லித் தலைக்கட்டுகிறது. மதுவைப் பருகவேணுமென்று இழிந்தவண்டுகளானவை பெருங்கடலிலே யிழிந்தாற்போலே உள்ளேயுள்ளே இடங்கொண்டு புஜிக்கும்படியாக மதுவெள்ளம் நிறைந்த திருத்துழாய்மாலையையணிந்த திருவபிஷேகத்தையுடையனான எம்பெருமானை யடிபணிந்த நம்மாழ்வார் அருளிச்செய்த சொற்செறிவு வாய்ந்த இத்திருவாய்மொழிதானே நோய்களை உடைந்தோடும்படிபண்ணும் என்றதாயிற்று. .... .... ... (கக)

ஏழாந்திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத் திருவாய்மொழிக்கான பாசுரம்.

பிறவியற்று நீள்விசும்பில் பேரின்ப முய்க்கும்
திறமளிக்குஞ் சீலத் திருமால்—அறவினியன்
பற்றுமவர்க் கென்று பகர்மாறன் பாதமே
உற்றதுணை யென்றுளமே யோடு.

### பதவுரை.

| | |
|---|---|
| உள்ளமே | நெஞ்சே! |
| பிறவி அற்று | ஜன்மஸம்பந்தமற்று |
| நீள்விசும்பில் | பரமாகாசமென்கிற பரம பதத்தில் |
| பேர் இன்பம் உய்க்கும் திறம் | பரமாநந்த மநுபவிக்குந் திறத்தை |
| அளிக்கும் சீலம் | அநுக்ரஹிக்கவல்ல ஸ்வ பாவமுடைய |
| திருமால் | எம்பெருமான் |
| பற்றுமவர்க்கு | தன்னைவந்து பணியுமவர் கட்கு |
| அற இனியன் என்று | மிகவும் போக்யனாயிருப்ப னென்று |
| பகர் | அருளிச்செய்த |
| மாறன் | நம்மாழ்வாருடைய |
| பாதமே | திருவடிகளே |
| உற்ற துணை என்று | (நமக்கு) ப்ராப்தமான துணையென்றுகொண்டு |
| ஓடு | விரைந்துசென்று பணி. |

* * *—ஸம்ஸாரஸம்பந்தத்தையறுத்துத் திருநாட்டில் நித்யாநந்தமநுபவிக்கப் பெறுவதான பேற்றையளிக்கவல்ல எம்பெருமானுடைய ஆச்ரயணமானது வருத்தமாக இராமல் மிகவும் இனிதாகவேயிருக்குமென்று ஆச்ரயணத்தின் போக்யதையை யருளிச்செய்த ஆழ்வாருடைய திருவடிகளே நமக்குத் தஞ்சமென்றதாயிற்று. ... ... .... ... (எ)

---

### த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

---

ஶ்லோ|| [illegible]
[illegible] |
[illegible]
[illegible] ||

திருமகள்கொழுநனாய், நாம் விரும்பும் பயன்களுள் எல்லையாயிருப்பவனாய் அவத்யலேசமுமற்றவனான எம்பெருமானிடத்திலிருந்து அற்ப பலன்களைப் பெற்று ஒழிகின்றவர்களை நிந்தித்துப்பேசின ஆழ்வார், அப்பெருமானுடைய போக்யதைக்கு உள்ளீடான குணங்களைப்பேசுகின்ற முகத்தினால் 'அவனடிபணிதல் மிகவும் இனிமைவாய்ந்தது' என்பதை அருளிச்செய்தார் என்றவாறு.

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி முதற்பத்து

## எட்டாந் திருவாய்மொழி — ஓடும்புள்ளேறி.

---

# அவதாரிகை.

ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணத்தை அநுபவித்துப் பேசிவருகின்ற ஆழ்வார், கீழ்த் திருவாய்மொழியில் அவனது இனிமைக்குணமென்கிற பரம போக்யதையை அநுபவித்துப்பேசினர்; இத்திருவாய்மொழியில் அவனது ஆர்ஜவ குணத்தை அநுபவித்துப்பேசுகிறார். ஆர்ஜவமாவது—ருஜுவாயிருக்குந்தன்மை, மனத்திலுள்ளது ஒன்றும், வாயாற் சொல்லுவது வேறொன்றும், காரியத்தில் நடத்துவது பிறிதொன்றுமாயிருக்கை யன்றியே மனமொழி மெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருத்தல் ஆர்ஜவமெனப் படும். இதற்குத் தமிழில் செம்மை என்று பெயர். இக்குணம் இத்திருவாய் மொழியில் அநுபவிக்கப்படுகிறது.

ஸம்ஸாரிகள், நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டிராமல் பல வகைப்பட்டிருத்தலால் அன்னவர்களோடு எம்பெருமான் தான் பரிமாறுமிடத்தில் அவர்கள் போனவழியே தனக்கு வழியாம்படித் தான் அவர்கட்குச் செவ்வியனாய்ப் பரிமாறுகை இங்குச் செம்மை எனப்படுகின்றது. ஒருவன் ஒருவனை நோக்கி 'அப்பா! நீ எவ்வூர்?' என்றால் 'நான் தற்காலமிருப்பது இவ்வூர்' என்று விடையளிப்பதும், 'உன் பெயர் என்ன?' என்றால் 'என் பெயர் உண்டுவளர்ந்தான்' என்று விடையளிப்பதும், 'இவ்விடத்திற்கு எப்போது வந்தாய்?' என்றால் 'நீ பார்த்தபோது வந்தேன்' என்று விடையளிப்பதும் இவ்வாறாகக் கேட்பதற்கெல்லாம் கோணலாகவே விடையளிப்பது கௌடில்ய குணத்தின் காரியமாகும். உள்ளதை உள்ளபடியே சொல்லுகையும் செய்கையும் செம்மைக் குணத்தின் காரியமாகும். சக்ரவர்த்தி திருமகனார் பஞ்சவடியில் எழுந்தருளியிருந்தபோது சூர்ப்பணகை வந்து, ["ஜடீ தாபஸரூபேண ஸபார்ய: சரசாபத்ருக் | ஆகதஸ்த்வமிமம் தேசம் கதம் ராக்ஷஸஸேவிதம், கிமாகமநக்ருத்யம்தே தத்வ மாக்க்யாதுமர்ஹஸி."] ராக்ஷஸர்கள் மிடைந்திருக்கின்ற இவ்விடத்திற்கு நீர் எவ்வாறு வந்தீர்? வந்த காரியமென்ன? என்று கேட்க, அதற்குப் பெருமாள் கோணலான உத்தரம் கூறலாமாயினும் அங்ஙனங் கூறாது 'ஆஸீத் தசரதோ நாம ராஜா' என்று தொடங்கி நேரான மறுமொழி கூறினர்; அவ்விடத்திலே வால்மீகி முனிவன் "ருஜுபுத்திதயா ஸர்வமாக்யாதுமுபசக்ரமே" ருஜுபுத்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஜுதயா ஸர்வமாக்யாது முபசக்ரமே." (இராமபிரான் ருஜுவான புத்தியை யுடையனுதலால் அனைத்தையும் உள்ளபடியே உரைக்கத் தொடங்கினன்) என்கிறான். இதுவாய்த்து ஆர்ஜவகுணம். ஆளவந்தாரும் ஸ்தோத்ரரத்நத்தில் "வசீ வதாந்ய:" என்கிற ச்லோகத்தில் ருஜு: என்ற பதத்தினால் இக்குணத்தைப் பேசியருளினார்.

இத்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய திவ்யைச்வர்யஞ் சொல்லுகிறதாக ஆறாயிரப்படியில் திருக்குருகைப்பிரான்பிள்ளான் அருளிச்செய்திருக்கிறார். பெரியவாச்சான் பிள்ளையும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் அதனைப் பக்ஷாந்தரமாக்கி 'இத்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய ஆர்ஜவகுணஞ் சொல்லுகிறது' என்று அருளிச்செய்துள்ளார்கள். ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் நம்பிள்ளை திருவடிகள் நிஷ்கர்ஷித்தபடியையே ஆதரித்து "நிரூபயதி ருஜுதாம் நீரவர்ணே ஜகாத = நிருபதிம் ருஜுதாம் நீரவர்ணே ஜகாத" என்றும் "ப்ரக்ருதி ருஜுதயா — ப்ரக்ருதி ருஜுதயா" என்றும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியிலும், "ஸௌசீல்யம் ஸ்வாராத்யம் ஸரஸபஜநம் ஸ்வார்ஜவகுணம் — ஸௌசீலம் ஸ்வாராதம் ஸரஸபஜநம் ஸ்வார்ஜவ குணம்" என்று த்ரமிடோபநிஷத் ஸாரத்திலும் ச்லோகமிட்டு இத் திருவாய்மொழிக்கு ஆர்ஜவகுணப்ரதிபாதநமே ப்ரமேயமென்னுமிடத்தை வெளியிட்டருளினார் என்பதும் இங்குக் குறிக்கொள்ளத்தக்கது. இங்கே ஸ்ரீபரகாலஸ்வாமியின் பதினெண்ணாயிரப்படியிலுள்ள சில திவ்ய ஸ்ரீஸூக்திகள் விவேகிகளுக்கு விவேசநீயங்களாம்.

இங்கே ஈடு முப்பத்தாறாயிரப்படி ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"இத் திருவாய்மொழிதான் ஸர்வேச்வரனுடைய ஐச்வர்யத்தைச் சொல்லுகிறது என்பாருமுண்டு: அன்றிக்கே 'ஈச்வரத்வலக்ஷணஞ் சொல்லுகிறது' என்பாருமுண்டு. அன்றிக்கே; கீழே * பாடியிளைப்பிலம் * என்றார்; அப்படியே பாடி அநுபவிக்கிறார் என்பாருமுண்டு. 'ஆர்ஜவகுணஞ் சொல்லுகிறது' என்று பட்டருளிச்செய்யும்படி. பத்தர், முக்தர், நித்யர் என்று சேதநர்க்கு ஒரு த்ரைவித்யமுண்டிறே; த்ரிவித சேதநரோடும் பரிமாறுமிடத்தில் அவர்கள் தன்னினைவிலே வரும்படி பண்ணுகையன்றிக்கே, நீரேறுமேடுகளிலே விரகாலே நீரேற்றுமா போலே தன்னை அவர்களுக்கீடாக அமைத்துப் பரிமாறும் என்னுமவ்வழியாலே இவனுடைய ஆர்ஜவகுணம் சொல்லுகிறார்." என்பன.

ஓடும்புள்ளேறி * சூடுந்தண்டுழாய் *
நீடுநின்றவை * ஆடுமம்மானே. * (க)

| | | | |
|---|---|---|---|
| நீடு நின்ற அவை | நித்யஸூரிகளாயிருக்கின்ற பெரிய திருவடி முதலானோடு | புள் ஏறி | பெரியதிருவடிமேற் கொண்டு |
| | | ஓடும் | (விரைந்து) ஓடுவன்; |
| ஆடும் | கூடிப்பரிமாறுகிற | தண் துழாய் | குளிர்ந்த திருத்துழாய் மாலையை |
| அம்மான் | ஸ்வாமி, | சூடும் | சாத்திக்கொள்வன். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [ஓடும்புள்ளேறி] நித்ய விபூதியிலுள்ளாரோடு செவ்வைக்குணமுடைய னுயப் பரிமாறும்வகை இப்பாட்டிற் சொல்லப்படுகிறது. பரமபதத்திலே செவ் வைக்கேடு சிறிதுமில்லாமையாலே அவர்களோடு எம்பெருமான் செவ்வியனுய்ப் பரிமாறுகிறுன் என்றால் இதற்கு ஒரு பொருளில்லையே; ஸம்ஸாரிகளான நமக் கன்றோ செவ்வைக்கேடு உள்ளது; நம்மோடு பரிமாறுந்திறத்தில் செவ்வியனுய்ப் பரிமாறுகிறுனென்றால் இது பொருந்தும்; செவ்வையே உள்ளதானவிடத்தில் செவ்வியனுய்ப்பரிமாறுகிறுனென்கைக்கு ப்ரஸக்தியில்லையே! என்று சிலர் சங் கிக்கக்கூடும்; கேண்மின்; பரமபதத்திலுள்ளார்க்குச் செவ்வைக்கேடு இல்லையென் பது உண்மையே; அங்குள்ளாரெல்லார்க்கும் விஷயம் பகவத்விஷயமொன்றே யாகிலும் ஒவ்வொருவர் ஒவ்வொருவிதமான பணிவிடையைப் பரிக்ரஹிக்கின்ற மையால் அந்த வ்ருத்தி பேதத்தாலே ருசிபேதமுண்டாகுமே; அவரவர்களது ருசிக்கிடாகவே பரிமாறுகிறுனென்கிறது. பெரிய திருவடிக்குத் தன்னைச்சுமந்து திரிகை அபேக்ஷிதமானால் அவன்மேலேறி ஸஞ்சரிப்பன்; திருத்துழாய் செவ்வி யழியாமல் சூடவேண்டும் நிலையறிந்து அதனைச் சூடிக்கொள்வன்; ஆகவிப்படி சாச்வதமாக அந்த நித்யஸூரிகளோடே ஒரு நீராகக்கலந்து பரிமாறுவனெம் பெருமான் என்றதாயிற்று.

மூன்றாமடியில் அவை என்றது முன்னடிகளிற்சொன்ன புள்ளையும் துழா யையுமாம். நித்யஸூரிகளாய்ப் பரம சேதநர்களாயிருக்கின்ற அவர்களை அவை என்று அஃறிணைப் பெயர்ச்சுட்டாற்சொன்னது வழக்குபற்றிய வழுவமைதி யென்னலாம்.

'அவற்றோடே பரிமாறும்' என்னாதே அவையாடும் என்றது எம்பெரு மானுக்கு அவர்களோடே அணையுமது விடாயர் மடுவிலே புகுந்து குடைந்து ஆடினுப்போலே யிருக்குந்தன்மையைக் காட்டுதற்கென்ப. .... .... (௧)

அம்மானுய்ப்பின்னும் * எம்மாண்புமானுன் *
வெம்மாவாய்கீண்ட * செம்மாகண்ணனே *

அம்மான் ஆய் — ஸ்வாமியாயிருந்து
வெம் — உக்கிரமான
மா — குதிரையின் வடிவாகவந்த கேசி யென்னுமசுரனை
வாய் கீண்ட — வாய் கிழித்தவனும்
செம் மா கண்ணன் — சிவந்துபெரிய திருக்கண் களை யுடையவனுமான ஸ்ரீ க்ருஷ்ணன்
பின்னும் — பின்னையும்
எம்மாண்பும் ஆனுன் — எல்லா அவதார ஸௌசீ தரியமு முடையனுயி னன்.

* * * — [அம்மானுய்] கீழ்ப்பாட்டிற்கூறியபடி ஸ்ரீவைகுண்டத்திலுள்ளாரோடு செவ்வியனுய்ப் பரிமாறுகை மாத்திரமேயல்லாமல் அங்குநின்றும் இங்கிலத் திலே வந்து அவதரித்து விரோதிகளைத் தொலைத்து ஸம்ஸாரிகளுடன் பரிமா றும்படியும் எம்பெருமானுக்குள்ளதென்று இப்பாட்டிற் சொல்லுகிறது.

"அம்மானுய் வெம்மாவாய்கீண்ட செம்மா கண்ணன் பின்னும் எம்மாண்பு மானுன்" என்று அந்வயிப்பது. ஒருநாள் கண்ணபிரானைக் கொல்லுமாறு கம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸனுலேவப்பட்ட கேசி யென்பானேர் அஸுரன் குதிரையினுருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் தூரத்திக்கொண்டு கண்ணன்மீது பாய்ந்துவர, அப்பெருமான் தன் திருக்கையை நன்ருகப் பெருக்கி நீட்டி அதன் வாயிற்கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைபிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினன் என்ற * வெம்மாவாய்கீண்ட வரலாறு இங்கு உணரத்தக்கது.

பின்னும் எம்மாண்புமானுன் = இப்படி க்ருஷ்ணவதாரஞ்செய்தருளினது மாத்திரமன்றியே இன்னமும் எத்தனையோ அவதாரங்கள் செய்து தனது ருஜுத்வத்தை வெளியிட்டுக்கொண்டானென்பது பரமதாற்பரியம். ... (உ)

கண்ணுவானென்றும் * மண்ணேர்விண்ணேர்க்கு *
தண்ணூர்வேங்கட * விண்ணேர்வெற்பனே. * (௩)

| | | | |
|---|---|---|---|
| மண்ணேர் | மண்ணுலகத்தார்க்கும் | வேங்கடம் | திருவேங்கடமென்கிற பெயரையுடைய |
| விண்ணேர்க்கு | விண்ணுலகத்தார்க்கும் | | |
| என்றும் | எப்போதும் | | |
| கண் ஆவான் | கண்ணுயிருப்பன், (யாவனென்னில்) | விண்ணேர் வெற்பன் | நித்யஸூரிகட்கிடமான திருமலையை யுடையவன். |
| தண் ஆர் | குளிர்ச்சி நிறைந்த | | |

* * * — [கண்ணுவான்] இரட்டைப்பிள்ளைபெற்ற தாயான்வள் இருகுழந்தைகட்கும் முலைகொடுக்கப்பாங்காக நடுவே கிடக்குமாபோலே நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்குமொக்க முகந்தருதற்காகத் திருவேங்கடமலையிலே நின்றருளும் நீர்மையை அருளிச்செய்கிருர்.

'கண்ணுவான்' என்பதைப் பெயர்ச்சொல்லாகவுங்கொள்ளலாம், வான்விகுதிபெற்ற வினையெச்சமாகவுங் கொள்ளலாம். பெயர்ச்சொல்லாகக்கொண்டால் 'கண்ணுயிருப்பவன்' என்றபடி. வினையெச்சமாகக்கொண்டால் 'கண்ணுயிருப்பதற்காக' என்றபடி. "வக்ஷுர்தேவாநாமுத மர்த்யாநாம்" என்கிற வேதவாக்கியத்தை மொழிபெயர்ப்பனபோலுள்ளன முதலிரண்டடிகள்.

மேலுள்ளவர்கள் சிறிதுதூரம் பயணமெடுத்துவந்து சேரும்படியாய், கீழுள்ளவர்களும் சிறிதுதூரம்சென்று சேரும்படியாய் 1. "தானேங்கி நிற்கின்முன் தண்ணருவி வேங்கடமே, வானேர்க்கும் மண்ணேர்க்கும் வைப்பு" என்கிறபடியே இருதலையார்க்கும் நிதியாகவுள்ள திருவேங்கடமலையில் ஸந்நிதிபண்ணியிராநின்ருன்.

திருமலையானது மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும் பொதுவான தலமாயிருக்கச்செய்தே இங்கு 'விண்ணேர்வெற்பு' என்றது ஏனென்னில்; ஸம்ஸாரிகளைக் காட்டிலும் நித்யஸூரிகளே பெரும்பான்மையாக அநுபவிப்பவர்களாதல் பற்றி யென்க. "மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்யநின்ருன்" என்பர் திருப்பாணாழ்வாரும். திருமலையிலுள்ள பசு பக்ஷி திர்யக் ஸ்தாவர

1. நான்முகன் திருவந்தாதி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ங்களையுமெல்லாம் நித்யஸூரிகளின் ப்ராதுர்ப்பாவங்களாகவே கருதுவர் பெரியோர். .... .... .... .... .... .... (ங.)

வெற்பையொன்றெடுத்து * ஒற்கமின்றியே *
நிற்குமம்மான்சீர் * கற்பன்வைகலே. * (ச)

| | | | |
|---|---|---|---|
| ஒன்று வெற்பை | (கோவர்த்தன மென்னும்) ஒரு மலையை | அம்மான் | எம்பெருமானுடைய |
| எடுத்து | (குடையாகத்) தூக்கி | சீர் | திருக்குணத்தை |
| ஒற்கம் இன்றியே | இளைப்பில்லாமல் | வைகல் | நாள்தோறும் |
| நிற்கும் | நின்றருளின | கற்பன் | பேசக்கடவேன். |

* * * — [வெற்பை.] அவனுடைய ருஜுத்வகுணத்தை இடைவிடாது பேசியநுபவிக்கப்பெற்றமை தமக்கு நேர்ந்தபடியை யருளிச்செய்கிறார்.

திருவாய்ப்பாடியில் கண்ணபிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்தவேஷங்களைக்கண்டு ஆயர்களனைவரும் 'இவனே நம் குலக்கொழுந்து, இவனது கட்டளைப்படியே நாம் ஒழுகவேண்டும்' என்று அறுதியிட்டிருந்தனர்; அங்ஙனமிருக்கையில் சரத் ருது வந்தது; அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜா த்ரவ்யங்களுமாகிய இவைகளைச் சேகரிப்பதைக் கண்டு க்ருஷ்ணன் 'ஓ பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜைசெய்வதுதகுதி; இக் கோவர்த்தனகிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்றுமில்லை: ஆகையால் நீங்கள் இப்பூசனையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய; கண்ணபிரான் தானே ஒரு தேவதா ரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது கண்ணன் கோவர்த்தனமலையை யெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத்தடுத்து எல்லாவுயிர்களையுங்காத்தருளினன் என்ற வரலாறு இங்கு உணரத்தக்கது.

ஒற்கமின்றியே நிற்கு மென்றவிடத்து, "கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமு மழிந்திலவாடிற்றில, வடிவேறு திருவுகிர்நொந்துமில மணிவண்ணன் மலையுமோர்சம்பிரதம்" என்ற பெரியாழ்வார் திருமொழியும் "க்ஷோணீத்ரம் புஷ்கரஸிந்து ஸப்தராத்ரம் - அம்லாநா வரத! தயாவி வாணயஸ்தே = க்ஷோணீத்ரம் புஷ்பபச் ச ஸப்தராத்ரம், — அம்லாநா வரத! ததாபி பாணயஸ்தே" என்ற வரதராஜஸ்தவமும் ஸ்மரிக்கவுரியன. இந்திரன் மேகங்களை ஏவி மழைபெய்வித்துத் திருவாய்ப்பாடியிலுள்ள சராசரங்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



களைத்துச்கும் பெருத்த தீங்கை உண்டுபண்ணப் புகுந்ததற்குக் கண்ணபிரான் சீற்றமுற்று அவ்விந்திரன் தலையை அறுத்தெறிய வல்லமைபெற்றிருந்தபோதி லும், அப்பிரான் அவன்திறத்து இறையேனுஞ் சீற்றங்கொள்ளாமல் 'நம்மிடத் தில் ஆநுகூல்யமுடைய இந்திரனுக்கு இக்குற்றம் திடீரென்று நேர்ந்துவிட்ட தத்தனை; பெரும்பசியாற் பிறந்த கோபத்தினால் இப்போது இவன் தீங்கிழைக்க ஒருப்பட்டானாயினும் சிறிதுபோது கழிந்தவாறே தானே ஓய்வன்; இவனது உணவைக் கொள்ளைகொண்ட நாம் உயிரையுங் கொள்ளைகொள்ளக்கடவோமல் லோம்' எனப் பேரருள் பாராட்டி அடியாரை மலையெடுத்துக்காத்த ருஜுத்வ குணம் இங்கு "அம்மான் சீர்" என்றதனால் காட்டப்பட்டதாகும். .... (ச)

வைகலும் வெண்ணெய் * கைகலந்துண்டான் *
பொய்கலவாது * என் மெய்கலந்தானே. * (ரு)

| | |
|---|---|
| வைகலும் | எப்போதும் |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| கை கலந்து | கை உள்ளளவும்நீட்டி |
| உண்டான் | (வாரியெடுத்து) அமுது செய்தவன் |
| பொய் கலவாது | மெய்யாகவே |
| என் மெய் | எனது மேனியிலே |
| கலந்தான் | ஒன்றுபடக்கூடினான். |

* * * — [வைகலும்.] நான் எம்பெருமானது திருக்குணத்தையே விரும்புவது போல அவனும் என்னுடைய சரீரத்தையே விரும்புகின்றானென்கிறார், இப் பாட்டில் பின்னடிகளே முக்கியமானவை; அதிற்சொல்லும் விஷயத்திற்கு த்ருஷ்டாந்தம் காட்டுவன முன்னடிகள். திருவாய்ப்பாடியில் வெண்ணெய் அவ னுக்கு எவ்வளவு போக்யமாயிருந்ததோ அவ்வளவு போக்யமாயிருந்தது என் னுடைய சரீரமவனுக்கு என்றவாறு.

பொய்கலவாது = அவாப்தஸமஸ்தகாமனும் அகிலஹேயப்ரத்யநீக கல் யாணைகதாநனுமான ஸர்வேச்வரன் உம்முடைய அழுக்குடம்பிலே கலந்தானெ ன்றால் இது நம்பத்தகுந்ததோவென்று சிலர் ஸந்தேஹிக்கக்கூடுமென்றுகருதி ஸத்யமிட்டுச் சொல்லுகிறார்போலும். .... .... ... ... (ரு)

கலந்தென்னாவி * நலங்கொள்நாதன் *
புலன்கொள்மாணாய் * நிலங்கொண்டானே. * (சு)

| | |
|---|---|
| கலந்து | ஒருநீராகக்கலந்து |
| என் ஆவி | எனது ஆத்மாவினுடைய |
| நலம் | அடிமைத்தனமாகிற நன்மையை |
| கொள் | தனக்காக்கிக்கொண்ட |
| நாதன் | ஸ்வாமியானவன் |
| புலன் கொள் மாண் ஆய் | (கண் முதலிய) இந்திரியங்களைக் கவர்ந்துகொள்கின்ற [மநோஹரமான] வாமந ப்ரம்மசாரி வேஷத்தையுடையவனாய் |
| நிலம் | (மூவடி) நிலத்தை |
| கொண்டான் | பிக்ஷையேற்றுக்கொண்டான். |

* * * — [கலந்தென்னாவி.] என்னைத் தனக்கே அடிமைப்படுத்திக்கொண்டா னென்கிறார். மஹாபலியைத் தன் வசப்படுத்தி, அவன் தன்னதாக அபிமானித்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருந்த பொருளைத் தன்னதாக்கிக்கொண்டது போலவே என்னோடே ஒரு நீராகக் கலந்து என்னுத்மாவைக் கொண்டான் — நான் எனக்குரியேனுயிருக்கிற விருப்பைத் தவிர்த்தான். ... ... ... .... ... .... (௬)

கொண்டானேழ்விடை * உண்டானேழ்வையம் *
தண்டாமஞ்செய்து * என் னெண்தானுனே. * (எ)

| | | | |
|---|---|---|---|
| ஏழ் விடை | ஏழு எருதுகளையும் | தண் தாமம் செய்து | குளிர்ந்த பரமபதத்திற் கொப்பாக என்னைத் திருவுள்ளம்பற்றி |
| கொண்டான் | (நப்பின்னைக்காக) வலி யடக்கினவனும், | | |
| ஏழ் வையம் | ஏழுலகங்களையும் | என் எண் தான் ஆனுன் | நான் எண்ணின எண்ணத் திற்குப் பிரதியாகத் தான் சில எண்ணங்கள் கொண்டான். |
| உண்டான் | (பிரளயங்கொள்ளாதபடி) திருவயிற்றிலே வைத் தவனுமான எம்பெரு மான் | | |

* * * — [கொண்டானேழ்விடை] நப்பின்னைப் பிராட்டியோடு ஸம்ச்லேஷிப்ப தற்காக அதற்கிடையூருயிருந்த ஏழெருதுகளை வலியடக்கினுப்போலே என்னோடு கலவிசெய்ய விரும்பி என்னுடைய பாபம் முதலிய பிரதிபந்தகங்களைப் போக்கி யருளினுனென்பது முதலடியின் கருத்து. பிரளயங்கொள்ளப்புகுந்த பூமண்ட லத்தைத் தனது திருவயிற்றிலே வைத்து ரக்ஷியாவிடில் தனக்குத் தரிக்கவொ ண்ணுமேயிருந்ததுபோல என்னைத் தன்னுள்ளே ஒருநீராக்கிக் கொள்ளாவிடில் தனக்குத்தரிப்பில்லை யென்னலாம்படி யிருந்தானென்பது இரண்டாமடியின் கருத்து. பரமபதத்திற் பண்ணும் விருப்பத்தை என்பக்கலிலே பண்ணினு னென்பது மூன்றுமடியின் கருத்து.

என் எண் தான் ஆனுன் = அவன் விஷயத்திலே நான் எண்ணின எண் ணத்தை அவன் என் விஷயத்தில் எண்ணினுன் என்றபடி. அதாவது — 'பரம பதத்திற்குச் செல்லவேணும், விரஜையாற்றிலே முழுகவேணும்' அங்கே ஸாம கானம்பண்ணி அவனை யநுபவிக்கவேணும், என்றிப்படியெல்லாம் நான் பாரித் துக்கொண்டிருக்க, 'திருக்குருகூர்க்குச் செல்லவேணும், தாம்ரபர்ணியிலே நீராடவேணும், கண்ணிநுண் சிறுத்தாம்பு பாடி ஆழ்வாரை அநுபவிக்கவே ணும்' என்று அவன்முன் பாரித்துக்கொண்டு இங்கேற ஓடிவந்தான் என்றவாறு.

'நான் எண்ணினபடியே எனக்குக் கைபுகுந்துவிட்டான்' என்கிற பொரு ளும் ஈற்றடிக்குக் கொள்ளத்தகும்; ஆனுலும் மேலே விவரித்தபொருளே சீரியது. ... ... .... ... ... .... ... .... (எ)

ஆனுனுயன் * மீனுேடேனமும் *
தாஞனேன்னில் * தானுய சங்கே. * (அ)

| | | | |
|---|---|---|---|
| ஆன் ஆயன் ஆனுன் | பசுமேய்க்கும் இடைய னுனன், | என்னில் | என்னுமிடத்து |
| | | தான் ஆய | தானெடுத்த அவதாரங்கள் |
| மீனுேடு ஏன மும் தான் ஆனுன் | மத்ஸ்யாவதாரமும் வரா ஹாவதாரமும் முதலா ன அவதாரங்களைத் தானே செய்தான், | சங்கே | சங்கமென்னும் கணக்கை யுடையனவே. (அபாரமென்றபடி.) |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [ஆனானாயன்.] என்னை யகப்படுத்திக்கொள்வதற்காகவே எம்பெருமான் பல திருவவதாரங்கள் செய்தான்; அங்ஙனஞ் செய்த அவதாரங்களுக்கு ஓர் எல்லையில்லை யென்கிறார். "என்னில் தானாய சங்கே" என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் அருளிச்செய்வர்; பதவுரையில் காட்டின பொருள் ஒன்று; மற்றொன்று —; என்னில் — என்னிடத்தில், தான் ஆய — தனக்குண்டான, சங்கு — ஸங்கத்தினாலே, (அதாவது) ஆசையினாலே; ஆனாயனானான், மீனோடு ஏனமும் தானானான் என்பதாக. இங்கு ஆறாயிரப்படி காண்மின்— "தன்னுடைய திவ்ய சேஷ்டிதமாத்ரமேயோ எனக்கு போக்யமாகச் செய்தருளிற்று; தன்னுடைய திவ்யாவதாரங்களுமெல்லாம் என்பக்கலுள்ள ஸங்கத்தாலே எனக்கு போக்யமாகச் செய்தருளினானென்கிறார்." என்று.

'ஸம்ஜ்ஞ:' என்னும் வடசொல்லும் சங்கு எனத்திரியும்; ஶங்க: என்னும் வடசொல்லும் சங்கு எனத்திரியும். பதவுரையிற்படி பொருள்கொண்டால், சங்கு என்பது லக்ஷம் கோடி போலே ஒரு மிகப்பெரிய எண்ணுக்குப் பெயர். (அ)

சங்குசக்கரம் * அங்கையில்கொண்டான் *
எங்குந்தானாய * நங்கள்நாதனே. * (கூ)

| | | | |
|---|---|---|---|
| எங்கும் | எவ்விடத்தும் | அம் கையில் | அழகிய திருக்கைகளில் |
| தான் ஆய | (அவதாரமுகத்தாலே) தானே வியாபித்த | சங்கு சக்கரம் | திருவாழி திருச்சங்குகளை |
| நங்கள் நாதன் | எம்பெருமான் | கொண்டான் | தரித்துள்ளான். |

* * *—[சங்கு சக்கரம்.] இப்படி எனக்காக ஸகல யோனிகளிலும் வந்து பிறந்தருளுகிறவன் தனது திருக்கைகளில் அழகிய திருவாழியும் திருச்சங்கும் ஏந்தி அவ்வழகோடுகூட வந்து பிறப்பவனென்கிறார். சிலரை வசப்படுத்திக்கொள்ள நினைத்தவர்கள் கையிலே மருந்தைவைத்துக்கொண்டு திரியுமாபோலே அவதாரங்கள்தோறும் திவ்யாயுதங்களோடே வந்து அவதரிப்பனும். எல்லா அவதாரங்களிலும் திவ்யாயுதங்கள் உண்டோவென்னில்; எங்குமுண்டு; உகவாதார் கண்ணுக்குத் தோற்றாது, உகந்தார் கண்ணுக்குத் தோற்றும்.

இங்கே நம்பிள்ளையீடு;— "ராஜாக்கள் கறுப்புடுத்துப் புறப்பட்டால் அந்தரங்கர் அபேக்ஷித தசையிலே முகங்காட்டுகைக்காகப் பிரியத்திரிவர்கள்; அதுபோலே தோற்றாதேயும் நிற்பர்கள்." என்று. (அதாவது) ராஜாக்கள் நகரசோதனைக்காக ஒருவர்க்குந் தெரியாதபடி நீலவஸ்திர முடுத்துக்கொண்டு இருளோடே யிருளாகத் திரிவர்கள்; அப்போது அந்தரங்கர்களாகவுள்ளவர்களும் கூடவேவந்து திரிவர்கள்; ஆனால் அவர்கள் கூடவே யிருக்கமாட்டார்கள்; கூப்பிட்ட குரலுக்கு ஏனென்று வந்து அணுகி நிற்கும்படியாக எங்கேனும் மறைந்து திரிவர்கள்; அதுபோலே திருவாழி திருச்சங்கு முதலான அந்தரங்கர்களும் எம்பெருமானுடைய எந்த அவதாரத்திலும் மறைந்து உடனிருப்பர்களென்றவாறு.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



"எங்குந் தானுய" என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் கூறுவர் (1) தேவயோநி மனுஷ்யயோநி முதலிய எந்தின்ற யோனிகளிலும் வந்து திருவவதரிக்கின்ற. (2) ஒருவனைப் பிடிக்கவேண்டி ஊரை வளைவாரைப்போலே தம்மை விஷயீகரிப்பதற்காக எங்கும் வியாபித்து ஸர்வாந்தர்யாமியாயிருப்பவன்.

நாதன்ஞாலங்கோள் * பாதனேன்னம்மான் *
ஓதம்போல்கிளர் * வேதநீரனே. * (கo)

| | | | |
|---|---|---|---|
| நாதன் | ஸகலலோகநாதனும் | ஓதம் போல் கிளர் | கடல்போல முழங்குகின்ற |
| ஞாலம் கொள் பாதன் | உலகத்தையெல்லா மளந்து கொண்ட திருவடிகளை யுடையனுமான | வேதம் | வேதங்களால் அறியத்தக்க |
| என் அம்மான் | எம்பெருமான் | நீரன் | நீர்மையையுடையான். |

* * * — [நாதன் ஞாலங்கோள்.] இப்படி எனக்காக எண்ணிறந்த திருவவதாரங்களைப் பண்ணியருளின இவனுடைய ஆச்ரித வாத்ஸல்யத்தைப் பேசவேண்டில், நானோ பேசுவது ? கடலோதங் கிளர்ந்தாப்போலே கிளர்ந்துள்ள வேதங்களே யன்றோ பேசவேண்டுமென்கிறார். எல்லார்க்கும் சேஷியாய், வஸிஷ்ட சண்டாள விபாகமின்றியே எல்லார் தலைகளிலும் திருவடிகளைப் பரப்பினவனான ஸர்வேச்வரன், கடல்போலே கிளர்ந்து ஸ்தோத்திரம் பண்ணுகின்ற வேதங்களாலே பேசப்பட்ட நீர்மையையுடையவன்.

நீர்மையையுடையவன் — நீரன். .... .... ... .... (கo)

நீர்புரைவண்ணன் * சீர்சடகோபன் *
நேர்தலாயிரத்து * ஓர்தலிவையே. * (கக)

| | | | |
|---|---|---|---|
| நீர் புரை வண்ணன் | நீரையொத்த ஸ்வபாவத்தை யுடையவனான ஸர்வேச்வரனுடைய | சடகோபன் | நம்மாழ்வார் |
| | | நேர்தல் இவை | நேர்ந்து அருளிச்செய்த இப்பத்துப் பாட்டும் |
| சீர் | ருஜுத்வமென்னும் குணத்தைக் குறித்து | ஆயிரத்து | ஆயிரத்தினுள் |
| | | ஓர்தல் | ஆராய்ந்து அறியத்தக்கன. |

* * * — [நீர்புரை.] இத்தத் திருவாய்மொழி மற்ற திருவாய்மொழிகளினும் ஆராய்ந்து சொல்லப்பட்டதென்கிறார். 'நீர்புரைவண்ணன்சீர்' என்றதனால் இத் திருவாய்மொழிக்கு ப்ரமேயம் ருஜுத்வகுணம் என்பது பெறப்படும். நீரின் ஸ்வபாவம்போன்ற ஸ்வபாவத்தையுடைய எம்பெருமானுடைய குணம் எனவே ஆர்ஜவகுணம் என்பது எங்ஙனே தெரியலாகும் என்னில்; நீர்வெள்ளத்தை நாம் எப்படியிழுத்தாலும் அப்படியெல்லாம் அது ஓடிவரும்; அதுபோலே எம்பெருமான் யார்க்கும் உடன்பட்டுவருவன் என்க.

நீர்க்கும் எம்பெருமானுக்கும் ஸ்வபாவஸாம்யம் பலபடிகளாலுண்டு;—

1. நீர் பள்ளத்தில்தானே பாயும், மேட்டில் ஏறுவது அருமை. எம்பெருமானும் ஜாதி முதலியவற்றால் குறைந்தாரிடத்தே எளிதாகச் செல்லுவன்; உயர்ந்தோமென்று மார்பு நெறித்திருப்பாரிடத்தே செல்ல விரும்பான்; பாண்டவர்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கட்காகத் தூது எழுந்தருளும்போது, ஞானத்தால் சிறந்தோமென்றிருக்கும் பீஷ்மாசாரியரையும் குலத்தால் சிறந்தோமென்றிருக்கும் த்ரோணாசாரியரையும் செல்வத்தால் சிறந்தோமென்றிருக்கும் துரியோதனனையும் ஒரு பொருளாக மதியாதே இவையெல்லாவற்றாலும் தாழ்ந்தவராகத் தம்மை நினைத்திருந்த ஸ்ரீ விதுரருடைய திருமாளிகையிலே தானாகவே சென்று அமுதுசெய்தருளினனிறே கண்ணபிரான். ஆகவே, பள்ளத்தேயோடிப் பெருங்குழியே தங்குமியல்வு ஒக்கும்.

2. நீர் இல்லாமல் ஒரு காரியமும் ஆகாது; அப்படியே எம்பெருமானின்றி ஒரு காரியமுமாகாது. "லோகோ ஹி பிந்நருசி: — லோகோ பிந்நருசி:" என்கிறபடியே ஒருவன் விரும்பினதை மற்றொருவன் விரும்பாதபடி உலகம்வெவ்வேறு விருப்பத்தையுடையதாயினும் எல்லாரும் நீரைவிரும்பியே யாகவேண்டும்; அது போலவே எம்பெருமானையும்.

3. நீர்க்குக் குளிர்ச்சி இயற்கை; சூடு வந்தேறி. எம்பெருமானுக்கும் தண்ணளி இயற்கையாய்ச் சீற்றம் வந்தேறியாயிருக்கும், "நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம்பிறந்தால்" என்ற முமுக்ஷுப்படி திவ்ய ஸூக்தி காண்க.

4. நீர் சுட்டாலும் அதை ஆற்றுவதற்கு நீரே வேணும்; எம்பெருமான் சீறினாலும் அவன்றானே தெளிவு பெறவேணும். 1. "தருதுயரந்தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை" என்றார் குலசேகரப் பெருமாள்; "நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே மஹேஶ! ஹாதும் தவ பாதபங்கஜம்" என்றார் ஆளவந்தாரும்.

5. நீர் நம் இஷ்டப்படி தேக்கிவைக்கவும் ஓடவிடவும் உரியதாயிருக்கும். எம்பெருமான் படியுமப்படியே;—1. "ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே கோதா" என்கிறபடியே ஆண்டாள் தான் சூடிக் களைந்த மாலையிலே விலங்கிட்டு வைத்துப் புஜிக்க நின்றானெம்பெருமான். பாண்டவர்கட்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூது நடந்தான்.

6. நீரானது மற்ற பண்டங்களைச் சமைப்பதற்குக் கருவியுமாயிருக்கும்; தனிப்படத்தானே குடிக்கத்தக்கதுமாயிருக்கும். எம்பெருமானுக்கும் உபாயத்வம் உபேயத்வம் என்ற இரண்டு ஆகாரங்களுண்டிறே. எம்பெருமானைக்கொண்டு வேறு பலன்களைப்பெற விரும்புவாரும் எம்பெருமான்றன்னையே ஸ்வயம் புருஷார்த்தமாகக் கொள்வாருமுள்ளமை காண்க.

7. அன்னம் முதலானவை தமக்குப் பிரதிநிதிகளை ஸஹிக்கும்; அதாவது, காய் கனி கிழங்கு வேர் பால் முதலியவற்றால் தேஹதாரணம் பண்ணலாம்; நீரானது அப்படி பிரதிநிதி யொன்றையும் ஸஹிக்கமாட்டாது; நீர்க்கு நீரே வே

1. பெருமாள் திருமொழி 5-1.
1. திருப்பாவைத் தனியன், பட்டர் அருளிச்செய்தது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



னும்; அப்படியே எம்பெருமானுக்கும் ப்ரதிநிதிகிடையாது; குணநுஸந்தாநத்தாலும் போதுபோக்கவரிது; "ஒருநாள் காண வாராயே" "அடியேன் தொழவந்தருளே" என்று ப்ரார்த்தித்துப் பெற்றே தீரவேண்டும்.

8. சோறு உண்ணும்போது நீர் இல்லாமல் முடியாது; அப்படி நீர் வேறொன்றை அபேக்ஷிப்பதன்று. எம்பெருமான்படியுமப்படியே; உபாயாந்தரங்களுக்கு எம்பெருமான் வேணும்; எம்பெருமான் இதர நிரபேக்ஷன். "உன்னுலல்லால் யாவராலுமொன்றுங்குறை வேண்டேன்."

9. கொள்ளும் பாத்திரங்களின் தாரதம்யமேயன்றி நீர் தான் குறையநில்லாது; எங்கும் நிரம்பவற்று. எம்பெருமானும் * கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாந் தருங் கோதில்வள்ளல். கொள்வார் குறையேயத்தனை; ஐச்வரியமே போதுமென்பாரும் கைவல்யமே போதுமென்பாருமாகக் குறையக் கொள்வார் குற்றமே.

10. நீர் ஐவகைப்பட்டிருத்தல்போல எம்பெருமானும் ஐவகைப்பட்டிருப்பன்; எங்ஙனே யென்னில்; (1) பூமிக்குள்ளே பதிந்துகிடக்கும்நீர், (2) ஆவரண ஜலம், (3) பாற்கடல்நீர், (4) பெருக்காற்றுநீர், (5) தடாகங்களில் தேங்கும்நீர்—என ஜலம் ஐவகைப்படும்; பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென எம்பெருமானுடைய நிலைமைகளும் ஐவகைப்படும். விடாய்த்தவனுக்கு வேறேரிடம் தேடிப்போகவேண்டாதபடி நிற்கிற விடத்திலேயே உண்டாயிருக்கச்செய்தேயும் கொட்டுங் குந்தாலியுங்கொண்டு கல்லினலல்லது குடிக்கக்கிடையாத பூமிக்குள் பதிந்த நீர்போலேயாய்த்து அந்தர்யாமித்வம்; கண்டு பற்றவேணுமென்று ஆசைப்பட்டவனுக்கு ஹ்ருதயத்திலேயிருக்கச் செய்தேயும் கண்ணுக்கு விஷயமன்றிக்கே அஷ்டாங்கயோகமாகிற யத்நத்தாலே காணவேண்டும்படியானதிறே இது. (2) விடாய்த்தவனுக்கு, அண்டத்துக்கு வெளியே பெருகிக்கிடக்கிற ஆவரண ஜலம்போலேயாயிற்று—கண்டு பற்றவேணுமென்றிருக்கிறவனுக்கு லீலாவிபூதிக்கு அப்பாற் பட்டிருக்கிற பரத்வம். (3) அப்படி அதிதூரஸ்தமன்றியே அண்டத்துக்கு உட்பட்டிருக்கச்செய்தேயும் விடாய்த்தவனுக்குக் கிட்டவரிதான பாற்கடல்போலேயாயிற்று—சென்று காணவரிதாம்படியிருக்கிற வ்யூஹம். (4) ஸமீபஸ்தமாயிருந்தும் தத்காலத்திலிருந்தவர்களுக்கு மாத்திரம் உபயோக யோக்யமாய்ப் பிற்பட்டவனுக்கு அரிதான பெருக்காறுபோலேயாயிற்று—ராமக்ருஷ்ணாதி அவதாரங்களான விபவம். பூமியிலே அவதரித்து ஸஞ்சரித்தும் தத்காலத்திலிருந்தவர்களுக்கே ஆச்ரயணீயமாய்ப் பிற்காலத்திலுள்ளவர்களுக்குக் கிட்டாதபடியா யிருப்பதிறே இது. (5) விடாய்த்தவனுக்கு விடாய் தீரப்பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலேயாயிற்று—கோயில்களிலும் க்ருஹங்களிலும் எங்குமொக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற அர்ச்சாவதாரம்.

11. நீரானது ஸ்வதஃ பரிசுத்தமாயினும் ஆச்ரயவசத்தாலே த்யாஜ்யமும் உபாதேயமுமாகிறது; அப்படியே தேவதாந்தரங்களில் அந்தர்யாமியான எம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பெருமான் த்யாஜ்யனாகவும் கூராராழி வெண்சங்கேந்தின எம்பெருமான் உபாதேயனாகவும் உள்ளமை காண்க.

12. தோண்டத் தோண்டச் சுரக்குமநீர்; எம்பெருமானும் *கொள்ள மாளா வின்பவெள்ளங் கோதில தந்திடும்.

13. நீர் தனக்கொரு ப்ரயோஜனமின்றியே பாரார்த்தமாகவே யிருக்கும்; 1. "ந தெ ரூவம் நவாகாரொ நாயுயாநி நவாஸ்வஉ | தயாவி வுருஷாகாரொ ஹக்தாநாம் க்ஷம் ப்ரகாஶஸெ." 2. "வஶிஜநவஶி ஸஹஜ ஸுஷுணா ந்ாயுயாநி ப்ரவரகுணமணாஸ்வ ஜ்ஞாநஶக்த்யாஉயஸ்தெ | வரஉவஉயாணா ந்ாதுஷெஹஸ்யாதா வரஉ ! ஸகலு ஶெதத்தும்ஸ்ரீ தாயஉம் வகயஉ." என்கிறபடியே எம்பெருமானுடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஆச்ரிதர்க்காகவே யிருக்கும்.

14. நீர் தானே பெய்யவேணுமேயன்றி ஒருவரால் வடிம்பிட்டுப் பெய்விக்க முடியாதது; எம்பெருமான் படியுமிப்படியே; "நாஸஉ வுருஷகாரெண நவாவ்ந்ெந்நஹெதுநா | கெவஉம் ஸ்வெச்சயெவாஹம் வெஂக்ஷெகஞ்சித்கஉாவந" என்றுனிறே,

15. நீர் கடலிலிருந்து காளமேகம்வழியாக வந்தாலன்றி உபஜீவிக்கவுரியதாகாது; எம்பெருமானும் சாஸ்திரங்களிலிருந்து ஆசாரியர் முகமாக வந்தே உபஜீவ்யனாகிறான். "மேகம் பருகின ஸமுத்ராம்புபோலே நூற்கடற்சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே." என்ற ஆசார்யஹ்ருதய ஸூக்தியுங்காண்க.

16. வஸிஷ்டசண்டாள விபாகமின்றியே அனைவரும் ஓர் துறையிலே படிந்து குடைந்தாடலாம்படியிருக்குமநீர்; எம்பெருமானும் "நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!" என்றும் "கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்" என்றும் சொல்லுகிறபடியே பெரியார் சிறியார் என்னும் வாசியற ஒக்க ஆச்ரயிக்கலாம்படி யிருப்பன்.

17. நீர் சிறிது த்வாரம் கிடைத்தாலும் உட்புகுந்துவிடும்; — எம்பெருமானுக்கும் சிறிதுவியாஜமே போரும் "திருமாலிருஞ்சோலைமலை யென்றேனென்னத், திருமால்வந்தென்னெஞ்சுநிறையப்புகுந்தான்."

18. தீர்த்தவிசேஷங்களிலே நீருக்கு மாஹாத்மியம் அதிகம்; எம்பெருமானுக்கும் கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திருப்பதிகளிலே சிறப்புப்பொலியும்.

19. தாபம்மிக்கவர்கள் நீரை முகத்திலே எறட்டுவது, முதுகில் கொட்டுவது உள்ளில் இழிச்சுவது, படிந்து குடைந்தாடுவதுபோல் "வாக்கினால் கருமந்தன்னால் மனத்தினால் சிரத்தை தன்னால், வேட்கைமீதூரவாங்கி" விழுங்குவர்கள் எம்பெருமானையும்.

---

1. ஜிதந்தேஸ்தோத்ரம். 2. வரதராஜஸ்தவம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



20. நீர் வேண்டியவன் துளி நாக்குநனைக்கக் கிடைத்தால் போது மென்பன்;—"கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே" என்பர்.

21. நீரில் சிறியகல்லும் அமிழும்; பெரிய தெப்பமரமும் மிதக்கும்; எம்பெருமான் பக்கலிலும் ப்ரஹ்மாவாய் இழந்துபோதல் இடைச்சியாய்ப் பெற்றுவிடுதல் செய்யக் காணநின்றோம். 1. 'நேரே கடிக்கமலத்துள்ளிருந்துங் காண்கிலான், கண்ணனடிக் கமலந்தன்னையயன்," — 2. "மருவுநின் திருநெற்றியில் சுட்டியசைதர மணிவாயிடை முத்தந்த நுதலும், உன்றன் தாதையைப்போலும் வடிவுகண்டுகொண்டுள்ள முள் குளிர, விரலைச் செஞ்சிறுவாயிடைச் சேர்த்து வெகுளியாய் நின்றுரைக்கு மவ்வுரையும், திருவிலேனொன்றும் பெற்றிலேன் எல்லாம் தேய்வநங்கை யசோதை பெற்றாளே." என்பன அடைவே ப்ரமாணம்;— பகவத்குணங்களில் சிறுமாமனிசர் அமிழ்தலும் ஊன்மல்கிமோடு பருப்பார் வாய்க்கரையில்நிற்றலுங்கொள்க.

இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்கள் காண்க.

"நீர்புரைவண்ணன்சீர்" என்ற இவ்விடத்து ஒன்பதினாயிரப்படியில் — "உபாயஜ்ஞர்க்கு நினைத்தவிடத்திலே கொடு போகலான நீரின் தன்மையையுடையவனுடைய குணத்தை" என்றருளிச்செய்தது காண்க.

இத்திருவாய்மொழியை ஓதுதற்குப் பலன் யாதொன்றுங் கூறப்படாமையினால் இதனை ஓதுதல் தானே ஸ்வயம் ப்ரயோஜனம் என்பது விளங்கும். (கக)

எட்டாந்திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

1. முதல் திருவந்தாதி. 2 பெருமாள் திருமொழி, 7—5.

34

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத் திருவாய்மொழிக்கான பாசுரம்.



ஓடுமனஞ் செய்கையுரை ஒன்றிநில்லாதாருடனே
கூடிநெடுமா லடிமைகொள்ளுநிலை — நாடறிய
ஓர்ந்தவன்றன் செம்மை உரைசெய்த மாறனென
ஏய்ந்துநிற்கும் வாழ்வா மிவை.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| ஓடும் | இதரவிஷயங்களில் விரைந்து ஓடுகின்ற | நாடு அறிய | நாட்டார் அறியுமாறு |
| மனம் | நெஞ்சம் | ஓர்ந்து | ஆராய்ந்து |
| செய்கை | காயமும் | அவன் தன் செம்மை | அப்பெருமானுடைய ருஜுத்வ குணத்தை |
| உரை | வாக்கும் (ஆகிய இவை) | உரைசெய்த | அருளிச்செய்த |
| ஒன்றி நில்லாதாருடனே | ஒருவழிப்பட்டு நிற்கப்பெறாத கோணல்பொருந்திய ஸம்ஸாரிகளோடு | மாறன் என | ஆழ்வார் என்று அநுஸந்தித்தவளவிலே |
| கூடி | சேர்ந்து | வாழ்வு ஆம் இவை | ஸ்வரூபாநுரூபமான வாழ்ச்சிகள் |
| நெடுமால் | ஸர்வேச்வரன் | ஏய்ந்து நிற்கும் | பொருந்தி நிலைநிற்கும். |
| அடிமைகொள்ளும் நிலை | அடிமைகொள்ளுங் குணத்தை | | |

* * * — எம்பெருமானை ஆச்ரயிக்குமவர்கள் மனமொழிமெய்களில் வேறுபாடுடையவர்களாகிச் செவ்வைக் கேடரான ஸம்ஸாரிகளாகையாலே அவர்களோடு பரிமாறுவது எம்பெருமானுக்கு இயலுமோ என்கிற சங்கை நீங்குமாறு, நீர் ஏறாத மேடுகளிலே ஏதையேனுஞ் செய்து நீரேற்றுமாபோலே இவர்களுடைய செவ்வைக்கேடு தானே தனக்குச் செவ்வையாம்படி அவர்களோடே கூடிப்பரிமாறும் ருஜுத்வகுணத்தை இத் திருவாய்மொழி முகத்தாலே வெளியிட்டருளின நம்மாழ்வாரை அநுஸந்திக்கவே நமது வாழ்ச்சி நிலைநிற்குமென்றதாயிற்று.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

---

ஶ்லோ|| கௌடில்யவத்ஸு கரணத்ரிதயேபி ஜந்துஷு
ஸ்வீயமேவ கரணத்ரிதயைகரூப்யம் |
ஸந்தர்ஶ்ய தாநபி ஹரி: ஸ்வவஶீகரோதீ
த்யாஹ ஸாது கருணோ முநிரஷ்டமேஹ ||

மநோவாக்காயங்கள் மூன்றிலும் குடிலத்தன்மை பொருந்தியுள்ள ஸம்ஸாரிகளிடத்தில் எம்பெருமான் தான் ருஜுவாயிருக்குந் தன்மையைக் காட்டி அன்னவர்களையும் வசப்படுத்திக்கொள்ளுகிறானென்னுமிடத்தைப் பரம காருணிகரான நம்மாழ்வார் எட்டாந் திருவாய்மொழியா லருளிச்செய்தாரென்றவாறு. (*)

ஜீயர் திருவடிகளே சரணம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி முதற்பத்து
## ஒன்பதாந் திருவாய்மொழி — இவையுமவையும்.

# அவதாரிகை.

எம்பெருமானிடத்தில் ஸாத்மயபோகப்ரதத்வம் [ஸாத்ம்யபோக ப்ரதத்வம்] என்றொரு குணமுண்டு; அதாவது, அடியார்களுக்குத் தன்னை அநுபவிப்பிக்குமிடத்தில் ஏககாலத்திலேயே பூர்ணாநுபவங் கொடுத்துவிடுகை யன்றியே பொறுக்கப் பொறுக்கச் சிறிது சிறிதாகக் கொடுத்தலாம். அங்ஙனங் கொடாமல் ஓரடியிலேயே பூர்ணாநுபவத்தைத் தந்தருளினால் அது தாங்கமுடியாதே போகும். சிறு குழந்தைகட்கு முதல்தன்னிலேயே சோறும் சாறும் கறியுமிடுவாரில்லையே; பால், கஞ்சி, சோறு என்று வரிசைக்கிரமமாக ஊட்டுகையன்றோ வுள்ளது: அதுபோலவே மாணாக்கர்களுக்கும் சிறு சிறு பாடங்களாகக் கற்பித்துக்கொண்டுபோய்ப் பெரும் பாடங்கள் கற்பிக்கும் முறை காணாநின்றோம். இங்ஙனமே எம்பெருமானும் பொறுக்கப் பொறுக்கப் பரிமாறும்வகையொன்றுண்டு: அஃது இத்திருவாய்மொழியில் விளங்கும்.

ஆசார்யஹ்ருதயத்தில் — "புணர்தோறுமென்னக் கலந்து பிரிந்து ஜ்ஞாந பக்திகளை வளர்த்தது கனங்குழையிடக் காது பெருக்குதலும் மாஸோபவாஸி போஜநப்புறப்பூச்சும் போலே ஆற்ற நல்ல மாபோகச் சிரமமாக" என்றருளிச் செய்த சூர்ணிகை இங்கே அநுஸந்திக்கத்தகும்; (இதன் கருத்தாவது;—) ஆழ்வார் "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனியா முறாமை" என்றபோதே இவர்க்குப் பரிபூர்ணாநுபவம் கொடுத்துவிடலாமாயிருக்க, இவரை இந்நிலத்திலே வைத்துத் தன்னுடைய ஸம்ச்லேஷ விச்லேஷங்களாலே ஜ்ஞாந பக்திகளை வளர்த்தது ஏதுக்காகவென்னில், கனமான காதணியிடுகைக்கு இடமாம்படி நூலிட்டுத் திரியிட்டுக் குதம்பையிட்டுக் காது பெருக்குமாபோலவும், மாஸோபவாஸிகளுக்கு முதலிலே போஜனமிட்டால் பொறாதென்று சோற்றை யரைத்து உடம்பிலே பூசிப் பொரிக்கஞ்சி கொடுத்துப் பொரிக்கூழ் கொடுத்து நாளடைவிலே போஜனம் பொறுப்பிக்குமாபோலவும் 1. "ஆற்றநல்ல வகைகாட்டு மம்மான்" என்று எனக்குப் பொறுக்கப் பொறுக்கத் தன் குணசேஷ்டிதாதிகளைக் காட்டி அவ்வழியாலே என்னை அடிமைகொண்டவனென்னும்படி பகவதநுபவம் கனாக்கண்டறியாத விவர்க்கு, மிகவுஞ் சிறந்ததாய் நித்யஸூரிகள் அநுபவிக்குமதான போகத்தை முதல் முதலிலே கொடுத்தால் ஸாத்மிக்கமாட்டாதென்று கருதி அது ஸாத்மிக்கைக்காக ச்ரமம் செய்வித்தபடி — என்பதாம்.

1. திருவாய்மொழி, 4—5—5.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆக இப்படிப்பட்ட ஸாத்ம்ய போக ப்ரதத்வமென்னுங் குணம் திருவிருத்தந் தொடங்கி, சூழ்விசும்பணிமுகிலளவும் தொடர்ந்துகொண்டே வருவதாயிருக்க, இந்தத் திருவாய்மொழிக்கு விசேஷமென்னென்னில்; மற்ற திருவாய்மொழிகளில் ஸூக்ஷ்மமாகக் கண்டறியவேண்டியதான இக் குணம் இத் திருவாய்மொழியிலே பாசுர வரிசையில் ஸ்பஷ்டமாகவே காணக்கிடைத்தல் விசேஷமென்றுணர்க.

ஆழ்வாருடைய திருமுடியிலே வந்து வீற்றிருக்கவேணுமென நினைத்த எம்பெருமான் முதலடியிலே அது செய்தால், நிதிகண்ட ஜன்ம தரித்ரன்போலே ஸந்தோஷாதிசயம் தாங்கமாட்டாமே தளர்ந்திடுவர்; ஆதலால், சுற்றுப்பக்கத்திலே நின்று, அருகே நின்று, கூட நின்று, ஒக்கலையிலே வந்திருந்து, ஹ்ருதய ப்ரதேசத்திலே வந்திருந்து, தோளிலே வந்திருந்து, நாவிலே வந்து புகுந்து, கண்ணுள்ளே நின்று, நெற்றியிலே நின்று பிறகு உச்சியிலே நின்றான்; ஆக இங்ஙனே பொறுக்கப் பொறுக்கச்செய்த செயலையநுபவித்து ஈடுபடுகிறார் ஆழ்வார் இத்திருவாய்மொழியில். .... ... .... .... (*)

இவையுமவையுமுவையும் இவருமவருமுவரும் *
எவையும்யவரும் தன்னுள்ளே ஆகியுமாக்கியுங்காக்கும் *
அவையுள்தனிமுதலெம்மான் கண்ணபிரானென்னமுதம் *
சுவையன்திருவின்மணாளன் என்னுடைச்சூழலுளானே. * (க)

| | | | |
|---|---|---|---|
| இவையும் | ஸமீபத்திலுள்ள பொருள்களும் | காக்கும் | ரக்ஷித்தும் போருகிறவனும் |
| அவையும் | தூரத்திலுள்ள பொருள்களும் | அவையுள் | அந்த சேதநாசேதநங்களுக்கு அந்தர்யாமியானவனும் |
| உவையும் | நடுத்தரமாகவுள்ள பொருள்களும் | தனி முதல் | ஒப்பற்ற காரணபூதனும் |
| இவரும் | ஸமீபத்திலுள்ள சேதனர்களும் | எம்மான் | அஸ்மத் ஸ்வாமியும் |
| அவரும் | தூரத்திலுள்ள சேதனர்களும் | கண்ணபிரான் | கண்ணனாக அவதரித்து ஸௌலப்யத்தைக் காட்டினவனும் |
| உவரும் | நடுத்தரமாகவுள்ள சேதனர்களும் | என் அமுதம் | எனக்கு அம்ருதம்போல் பரம போக்யனும் |
| யவையும் | ஸகல அசேதனங்களும் | சுவையன் | ரஸிகனும் |
| யவரும் | ஸகல சேதனர்களும் (ப்ரளயகாலத்தில்) | திருவின் மணாளன் | பெரியபிராட்டியார்க்கு மணவாளனுமானபெருமாள் |
| தன்னுள்ளே | தனக்குள்ளே | என்னுடை சூழல் | என்னுடைய சுற்றுப்பக்கத்தில் |
| ஆகியும் | ஆகும்படி வைத்தும் | | |
| ஆக்கியும் | (பிறகு) படைத்தும் | உளான் | தங்கியிராநின்றான். |

* * * — [இவையு மவையும்.] ஜகத்காரணபூதனும் ஸர்வாந்தர்யாமியும் திருமகள் கொழுநனுமான கண்ணபிரான் என்னுடைய சூழலைவிட்டுப் போகமாட்டாதபடியானானென்கிறார். * உயர்வறவுயர்நலமென்கிற முதல் திருவாய்மொழியில் "நாமவன்" என்கிற நாலாம்பாட்டிற் சொன்ன சேதநாசேதநங்கள் இப்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பாட்டில் திரளத் தொகுக்கப்பட்டுள்ளன: அப்பாட்டினுரையில் விரியக்கண்டு கொள்வது. ஆக இப்படிப்பட்ட சேதநாசேதந வர்க்கங்களெல்லாம் ஸம்ஹார ஸமயத்திலே தன்னுள்ளே யரம்படியாயும் ஸ்ருஷ்டி ஸமயத்திலே உண்டாக்கியும், ஸ்ருஷ்டிக்கப்பட்ட வவற்றுக்கு நேரும் ஆபத்துக்களைப் போக்கி அபிமதங்களைக்கொடுத்து ரக்ஷிக்குமவனும் அவற்றினுள்ளே அந்தராத்மாவாய் வேறொரு ஸஹாயத்தையு மபேக்ஷியாத காரணபூமாய் ஸ்வாமியுமாய், கண்ணபிரானன எளிமையைக் காட்டி எனக்குப் பரம போக்யபூதனாய் ரஸிகனான எம்பெருமான் பிராட்டியோடுகூட என்னுடைய சூழலிலே ஆனான்.

சுவையன் திருவின்மணாளன் = சுவையனாகையாலே திருவின் மணாளனான்; திருவின் மணாளனாகையாலே சுவையனானான் என்று யோஜித்து உபந்யஸித்தருள்வர் அழகியமணவாளச்சீயர். ரஸிகனாகையாலே பிராட்டி * அகலகில்லேனிறையு மென்று இணைபிரியா திருக்க ப்ராப்தமாயிற்று; பிராட்டி அணையப் பெற்றதனால்தான் ரஸிகனானான் என்று பரஸ்பர ஸாபேக்ஷத்வம் கூறி யோஜிப்பது மிக அழகியதே. ... .... .... .... .... ... (க)

சூழல்பலபலவல்லான் தொல்லையங்காலத்துலகை *
கேழலொன்றாகியிடந்த கேசவனென்னுடையம்மான் *
வேழமருப்பையொசித்தான் விண்ணவர்க்கெண்ணலரியான் *
ஆழநெடுங்கடல்சேர்ந்தான் அவனென்னருகலிலானே. * (உ)

| பதம் | பொருள் |
|---|---|
| பலபல சூழல் வல்லான் | மிகப்பல அவதாரங்கள் செய்ய வல்லவனும் |
| தொல்லையம் காலத்து | முன்பொரு காலத்திலே |
| உலகை | பூமியை |
| கேழல் ஒன்று ஆகி | ஒப்பற்ற வராஹரூபியாகி |
| இடந்த | குத்தியெடுத்துவந்தவனும் |
| கேசவன் | கேசவனென்னும் திருநாமமுடையவனும் |
| வேழம் | (குவலயாபீட மென்னும்) யானையினுடைய |
| மருப்பை | கொம்புகளை |
| ஒசித்தான் | ஒடித்து அவ்யானையை முடித்தவனும் |
| விண்ணவர்க்கு | தேவர்களுக்கு |
| எண்ணல் அரியான் | நினைத்தற்கும் அருமையானவனும் |
| ஆழம் | ஆழமாகிய |
| நெடு கடல் | நீண்ட ஸமுத்ரத்திலே |
| சேர்ந்தான் | திருக்கண்வளர்ந்தருள்பவனுமான |
| என்னுடைஅம்மான் அவன் | அவ்வெம்பெருமான் |
| என் அருக லிலான் | என்னருகிலுள்ளான். |

* * * — [சூழல் பலபல வல்லான்.] கீழ்ப்பாட்டிற் கூறியபடி பரிஸரத்திலே வந்து இருந்த நிலை ஸாத்மித்தவாறே என்னருகே வந்து நின்றானென்கிறார். சூழல் என்னுஞ் சொல் கீழ்ப்பாட்டில் சுற்றுப் பிரதேசம் என்ற பொருளில் வந்தது; இப்பாட்டில் அதுவே சொல் அவதாரமென்ற பொருளில் வந்தது; சூழ்த்துக்கொள்வதற்காகச் செய்த காரியம் [அதாவது] ஸம்ஸாரிகளை அகப்படுத்திக் கொள்வதற்காகச் செய்தது என்ற காரணத்தினால் இச்சொல் அவதாரத்தைக் குறிக்குமென்க. "எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்றபடி எம்பெரு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மான் எண்ணிறந்த யோனிகளில் திருவவதாரங்கள் செய்தமையால் "சூழல் பல பல வல்லான்" என்றார். நாமும் பல பிறவிகள் பிறக்கிறோமானாலும் கருமங் காரணமாகப் பிறக்கின்றோம்; எம்பெருமான் கருணை காரணமாகப் பிறக்கின்றானதலாலும், நரஸிம்ஹம்போலே சேராச் சேர்த்தியான அவதாரங்களையும் எடுக்கின்றானதலாலும் வல்லான் என்றது.

அப்படி அவன் செய்தருளின அவதாரங்களில் ஓரவதாரத்தை யநுபவிக்கிறார் கேழலொன்றாகி யென்று. ஹிரண்யகசிபுவின் உடன்பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அசுரன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச்சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹா வராஹரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கோட்டினாற் குத்திக் கொன்று, பாதாளலோகத்திற் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற் குத்தி அங்கு நின்று எடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருளினனென்ற வராஹாவதார வரலாறு அறியத்தக்கது. இப்பொழுது நடக்கிற ச்வேத வராஹ கல்பத்துக்கு முந்தின பாத்ம கல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளய ஜலத்தில் மூழ்கியிருந்த பூமியை மேலே யெடுக்க நினைத்து மஹா வராஹரூபியாகிக் கோட்டு நுனியாற் பூமியை எடுத்துவந்தனனென்ற வரலாறும் உண்டு: 1. "பாராருலகம் முதுமுந்நீர்பரந்த காலம் வளைமருப்பில், ஏராருருவத் தேனமாய் எடுத்தவாற்றலம்மான்" என்ற திருமங்கையாழ்வாரருளிச்செயல் காணத்தக்கது. ... ... (உ)

அருகலிலாயபெருஞ்சீர் அமரர்களாதிமுதல்வன் *
கருகியநீலநன்மேனிவண்ணன் செந்தாமரைக்கண்ணன் *
பொருசிறைப்புள்ளுவந்தேறும் பூமகளார்தனிக்கேள்வன் *
ஒருகதியின்சுவைதந்திட்டு ஒழிவிலனென்னோடேனே. * (௩)

| பதம் | பொருள் | பதம் | பொருள் |
|---|---|---|---|
| அருகல் இல் ஆய | ஒருநாளும் குறைபடுதலை உடையதல்லாத | பொரு சிறை புள் | செறிந்த சிறகையுடைய பெரிய திருவடியை |
| பெரு சீர் | சிறந்த திருக்குணங்களை யுடையவனும் | உவந்து ஏறும் | விரும்பி வாஹனமாகக் கொள்பவனும் |
| அமரர்கள் | நித்யஸூரிகளுக்கு | பூமகளார் தனி கேள்வன் | பெரியபிராட்டியார்க்கு ஒப்பற்ற நாதனுமான எம்பெருமான் |
| ஆதி முதல்வன் | தலைவனும் | என்னோடேனே | என்னோடேகூடிநின்று |
| கருகிய நீலம் நல் மேனி வண்ணன் | கறுத்த நீலமணிபோல் விலக்ஷணமான திருமேனி நிறத்தையுடையவனும் | ஒரு கதியின் சுவை தந்திட்டு ஒழிவிலன் | ஒருவழியாலுள்ள இனிமையைத்தந்து தவிருகிறானில்லை. [ஸகலவித அநுபவங்களையும் தருகின்றானென்றபடி.] |
| செம் தாமரை கண்ணன் | செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களை யுடையவனும் | | |

* * * —[அருகலிலாய.] பெரிய திருவடி திருவனந்தாழ்வான் பிராட்டிமார் முதலானோர் ஓரொரு வகைகளாலே தன்னோடு ஸம்ச்லேஷரஸம் பெறுமாபோலல்

1. பெரிய திருமொழி, 8—8—3.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



லாமல், எல்லாவகைகளாலுமுள்ள ஸம்ச்லேஷரஸங்களையும் நான் பெறும்படி எனக்குத் தந்து என்னை ஒருகாலும் விடாதபடி யானுன் எம்பெருமானென்கிறார்.

அருகல் — குறைதல், அது இல்லாத எனவே, நித்யமான என்றபடி. அன்றி, பேடில்லாமையைச் சொல்லிற்றாய் குணங்களத்தனையும் கல்யாணமாயிருக்கின்றன வென்றபடியுமாம். ஹேய ப்ரத்யநீக கல்யாண மஹாகுணங்களையுடையனாய், அந்தக் குணங்களின் அநுபவமே யாத்திரையான நித்யஸூரிகளுக்குத் தலைவனாய், கறுத்து செய்த்து விலக்ஷணமான திருமேனி நிறத்தையுடையனாய், திருவுள்ளத்தினுள்ளேயுள்ள தண்ணளிக்கு ஸூசகமாயிருக்குந் திருக்கண்களையுடையனாய், ஸந்தோஷ மிகுதியினால் பதறுகின்றுள்ள சிறகையுடைய பெரிய திருவடியின்மீது உவந்து ஏறுமவனாய், கமலைகேள்வனான எம்பெருமான் எனக்கு ஏதோ வொருவகையான ரஸாநுபவத்தை மாத்திரம் தந்துவிடாமல் நித்யஸூரிகளெல்லார்க்கும் தனித்தனியே தந்தருளும் அநுபவங்களையெல்லாம் என்னொருவனுக்குத் தந்தருளி வேறு எங்கும் போக்கற்றவனாய் "நித்யவிபூதியை நிர்வஹிப்பதும் இங்கே யிருந்துகொண்டே போலும்" என்னும்படி என்னை ஒரு நொடிப்பொழுதும் விடுகிறானில்லை யென்றாராயிற்று.

அருகலிலாய பெருஞ்சீர் என்பதனால் சொல்லப்பட்ட அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதானமான ஸ்வரூப வைலக்ஷண்யமென்ன, அமரர்களாதிமுதல்வன் என்பதனால் சொல்லப்பட்ட நித்யஸூரி நிர்வாஹகத்வமென்ன, கருகியநீலநன் மேனிவண்ணன் என்பதனால் சொல்லப்பட்ட விலக்ஷண திவ்யமங்கள விக்ரஹ யுக்தத்வமென்ன, செந்தாமரைக்கண்ணன் என்பதனால் சொல்லப்பட்ட புண்டரீகாக்ஷத்வமென்ன, பொருசிறைப்புள்ளுவந்தேறும் என்பதனால் சொல்லப்பட்ட கருடவாஹநத்வமென்ன, பூமகளார்தனிக்கேள்வன் என்பதனால் சொல்லப்பட்ட ச்ரிய:பதித்வமென்ன ஆகிய இந்த அறுசுவையுந் தாரா நின்றானென்று உட்கருத்துணர்க. ... .... ... ... .... .... .... (௩)

உடனமர்காதல்மகளிர்திருமகள் மண்கமளாயர்
மடமகள் * என்றிவர்மூவராளும் உலகமும்மூன்றே *
உடனவையொக்கவிழுங்கி ஆலிலைச்சேர்ந்தவனெம்மான் *
சுடல்மலிமாயப்பெருமான் கண்ணனெனென்னொக்கலையானே. * (௪)

உடன் அமர் காதல் — கூடவே அமர்ந்திருக்கைக்கு விருப்பமுள்ள
மகளிர் — பிராட்டிமார் (யாவரென்னில்)
திரு மகள் — ஸ்ரீமஹாலக்ஷ்மி
மண் மகள் — பூமிப்பிராட்டி
ஆயர் மட மகள் — இடைக்குலத்துப்பெண்ணாகிய நப்பின்னைப்பிராட்டி
என்ற இவர் மூவர் — என்று சொல்லப்பட்ட இம்மூவராவர்;
ஆளும் உலகமும் மூன்றே — தன்னாலாளப்படுகின்ற உலகங்களும் மூன்றேயாயிருக்கும்;
(ஆக இங்ஙனம் வாய்ந்தவனும்)
அவை — அவ்வுலகங்களை
உடன் — விடாமலே
ஒக்க விழுங்கி — ஏககாலத்திலே உண்டு
ஆல் இலை — ஆலிலையில்
சேர்ந்தவன் — கண்வளர்ந்தவனும்
எம்மான் — எனக்கு ஸ்வாமியும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| கடல் மலி மாயம் பெருமான் | கடலிற்காட்டிலும் மிகப் பெரிய மாயச்செயல்களால் பெருமைபெற்றவனுமான |
| கண்ணன் | கண்ணபிரான் |
| என் ஒக்கலையான் | என் இடுப்பிலே வந்தமர்ந்தான். |

* * * — [உடனமர்காதல்.] ஒன்றுமொன்று குறைவில்லாதவனாய் ஸர்வரக்ஷகனான எம்பெருமான் யசோதைப் பிராட்டியின் இடுப்பிலிருக்குமாபோலே என்னிடுப்பிலே வந்திருத்தல் தனக்குப் பெரும் பேறு என நினைத்திராநின்றானென்கிறார். எப்போதும் கூடியேயிருந்தாலொழியத் தரிக்கமாட்டாத பெரிய பிராட்டியாரையும் பூமிப்பிராட்டியாரையும் நப்பின்னைப்பிராட்டியையும் தனக்கு திவ்ய மஹிஷிகளாகவுடையனாய், பூமிமுதலிய ஸகல லோகங்களையும் தனக்கு லீலோபகரணமாகவுடையனாய், ஆபத்து நேருங்காலங்களிலே அவ்வுலகங்களைத் திருவயிற்றிலே வைத்து நோக்கி ஒரு சிறிய ஆலந்தளிரிலே கண்துயின்றருள்பவனாய், கடலிற்காட்டிலும் மிகப் பெரியன என்னலாம்படியான ஆச்சரிய சேஷ்டிதங்களையுடையனான எம்பெருமான் என்னிடுப்பிலே வந்து சேர்ந்தருளினான்.

உலகமும் மூன்றே என்றதில் அழியா வுலகமாகிய பரமபதத்தையுஞ் சேர்த்துப் பொருள்கொள்ளும் பக்ஷத்தில், மேலே "உடனவையொக்கவிழுங்கி" என்றதில் அர்த்தஸ்வபாவத்தாலே பரமபதம் மாத்திரம் கழியுண்ணக்கடவது. பரமபதத்தைச் சேராமலே பாதாளவுலகம் நிலவுலகம் சுவர்க்கவுலகம் என மூவுலகங்களென்னவுமாம்.

கடல் மலி = திருப்பாற்கடலில் சயனித்தருள்கிற என்றுமாம். .... (ச)

ஒக்கலைவைத்துமுலைப்பாலுண்ணென்று தந்திடவாங்கி *
சேக்கஞ்சேகவன்றவள்பால் உயிர்சேகவுண்டபெருமான் *
நக்கபிரானோடு அயனுமிந்திரனும்முதலாக *
ஒக்கவும்தோற்றிய வீசன் மாயனென்நெஞ்சினுளானே. * (ரு)

| | |
|---|---|
| ஒக்கலை வைத்து | இடுப்பிலெடுத்துக்கொண்டு |
| முலைப்பால் உண் என்று | 'முலைப்பாலையுண்பாய்' என்று சொல்லி |
| தந்திட | முலைகொடுக்க |
| வாங்கி | (அம்முலையைச்) கையாற் பிடித்து |
| சேக்கம் | (அந்தப் பூதனையின்) நினைவு |
| சேக | அவளோடே முடியும்படியாக |
| அன்று | அக்காளில் |
| அவள் பால் | அவளது பாலையும் |
| உயிர் | பிராணனையும் |
| சேக | அழிய |
| உண்ட | அமுதுசெய்த |
| பெருமான் | ஸ்வாமியானதும், |
| நக்கபிரானோடு | திகம்பரச்சாமியான ருத்ரனும் |
| அயனும் | பிரமனும் |
| இந்திரனும் | இந்திரனும் |
| முதலாக | முதலாகவுள்ள |
| ஒக்கவும் | எல்லாரையும் |
| தோற்றிய | படைத்த |
| ஈசன் | ஈசனானவனும் |
| மாயன் | ஆச்சரிய குணசேஷ்டிதங்களையுடையனுமான எம்பெருமான் |
| என் நெஞ்சின் உளான் | எனது இதயத்திலுள்ளானான். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [ஒக்கலைவைத்து.] பிரமன் சிவனிந்திரன் முதலானோர்க்கும் ஜநகனான எம்பெருமான் எனது நெஞ்சிலேவந்து புகுந்தானென்கிறார். ஸ்ரீக்ருஷ்ணனைப் பெற்ற தாயான தேவகியினது உடன்பிறந்தவனும் அக்கண்ணபிரானுக்கு மாமனாகிய கம்ஸன், தன்னைக் கொல்லப் பிறந்த தேவகீ புத்திரன் ஒளித்துவளர்தலையறிந்து, அக் குழந்தையை நாடி யுணர்ந்து கொல்லும்பொருட்டுப் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ண சிசுவை யெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக்கொடுத்துக் கொல்ல முயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனன் என்ற வரலாறு அறிக. [ஒக்கலைவைத்து இத்யாதி.] "மகனாகக்கொண்டெடுத்தாள் மாண்பாய கொங்கை, அகனாரவுண்பனென்றுண்டு, மகனைத் தாய் தேறாதவண்ணந் திருத்தினாய்" என்னும்படியே பூதனை யென்னுமரக்கி கண்ணனை யிடுப்பிலே தூக்கிவைத்துக்கொண்டு முலையுண்ணக் கொடுத்தாளென்க.

சேக்கஞ் சேக என்பதற்குப் பலபடியாகப் பொருள்கூறுவர்; சேக்கம் என்று மாணத்திற்குப் பேராய், கண்ணனுக்காக அவள் எண்ணின மரணம் அவளுக்கேயாம்படி என்னுதல்: சேக்கஞ் சேக = மிகவுஞ் சிவப்பாக என்றபடியாய், "கறுப்புஞ்சிவப்பும் † வெகுளிப்பெயரே" என்ற தமிழர்களின் ஸித்தாந்தத்தின்படி சீற்றத்தைச்சொல்கிறதாய், மிகவுங் கோபங்கொண்டு என்றபடியுமாம். திருப்பவளம் மிகச் சிவக்கும்படி [அதரத்தின் பழுப்பு நன்கு தெரியும்படி] சிரித்துக்கொண்டே என்றபடியுமாம்.

அவள்பால் = பால் என்பதை ஏழனுருபாகவுங் கொள்ளலாம். அவளிடத்துள்ள என்றபடி.

நக்நஃ [நக்நஃ] என்ற வடசொல் நக்கன் எனத் திரியும்; அரையில் ஆடையில்லாதவன் என்றபடி. இது சிவபிரானுக்கு வழங்கும் நாமம். அயன் — அஜன்: அகாரவாச்யனான எம்பெருமானிடத்துத் தோன்றினவன் என்ற காரணத்தினால் பிரமனுக்குப் பெயர்.

இப்பாட்டில் நெஞ்சு என்று மார்வைச் சொன்னபடி. .... ... (ரு)

மாயனென்னெஞ்சிலுள்ளான் மற்றும்யவர்க்குமஃதே *
காயமும்சீவனும்தானே காலுமெரியுமவனே *
சேயனணியன்யவர்க்கும் சிந்தைக்கும்கோசரமல்லன் *
தூயன்துயக்கன்மயக்கன் என்னுடைத்தோளிணையானே. * (சு)

† வெகுளி = கோபம்.

35

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| மாயன் | ஆச்சரியனன எம்பெருமான் | அணியன் | (சிலர்க்கு) ஸமீபஸ்தனாய் |
| என் நெஞ்சில் உள்ளான் | எனது நெஞ்சில் இருக்கின்றான்; | யவர்க்கும் | எப்படிப்பட்ட ஞானிகளுக்கும் |
| மற்றும் யவர்க்கும் | வேறு யாருக்கேனும் | சிந்தைக்கும் கோசாம் அல்லன் | மனத்திற்கும் எட்டாதவனாய் |
| அஃதே | அப்படியிருப்பதுண்டோ? (இல்லை;) | தூயன் | பரிசுத்தனாய் |
| காயமும் | உடம்பும் | துயக்கன் மயக்கன் | (அநுக்ரஹபாத்திரமாகாதவர்களுக்கு) ஸந்தேஹரூபமாயும் விபரீதரூபமாயுமிருக்கும் ஞானங்களைப் பிறப்பிப்பவனான எம்பெருமான் |
| சீவனும் | உயிரும் | | |
| தானே | தானேயாய், | | |
| காலும் | காற்றும் | | |
| எரியும் | நெருப்பும் | | |
| அவனே | அவன் தானேயாய், | என்னுடை தோள் இணையான் | எனது இரண்டு தோள்களிலுமுள்ளானான். |
| சேயன் | (சிலர்க்கு) தூரஸ்தனாய், | | |

* * * — [மாயனேன்னெஞ்சிலுள்ளான்] அநுகூலர்க்கு எளியனாய், பிரதிகூலர்க்கு அரியவனான எம்பெருமான் எனது மார்பிலிருந்து தோளிணைக்கு ஏறிவிட்டானென்கிறார். கீழ்ப்பாட்டிற் சொன்னதையே மறுபடியும் "மாயனென்னெஞ்சினுள்ளான்" என்று அநுபாஷணஞ் செய்தது ஈடுபாட்டின் மிகுதியைக் காட்டும். இது என்ன பெரும்பேறு! என்று தலைசீய்த்துச் சொல்லுகிறபடி. [மற்றும் யவர்க்குமஃதே] என்னைத்தவிர வேறு யார்க்காவது இப்படிப்பட்ட பேறு கிடைத்ததுண்டோ? எனக்கே இப்பேறு அஸாதாரணம் என்றவாறு.

காயமும் என்று தொடங்கி மயக்கன் என்னுமளவும் எம்பெருமானுடைய படிகளைப் பேசி யநுபவிக்கிறார். தேவ மநுஷ்யாதி சரீரங்களும் அந்தந்த சரீரங்களிலுள்ள ஆத்மாக்களும் தானிட்டவழக்காம்படியிருக்கப் பெற்றவனாய், வாயு தேஜஸ்ஸு முதலிய பஞ்சபூதங்களும் அப்படியே தானிட்ட வழக்காம்படியிருக்கப் பெற்றவனாய், தம் முயற்சியாலே காண நினைப்பார்க்கு எட்டாதவனாய், நிர்ஹேதுக விஷயீகார பாத்திர பூதர்களுக்குக் கைச்சரக்காக எளியனாயிருப்பவன்.

சேயன் என்றதற்கு விவரணம் "யவர்க்குஞ் சிந்தைக்குங் கோசரமல்லன்" என்பது; அணியன் என்றதற்கு விவரணம் "தூயன்" என்பது. தம் முயற்சியாலே காணவிருப்பார் எத்தனையேனும் மஹான்களாயினும் அவர்களது கண்ணுக்கு மாத்திரமேயன்றியே மநோரதத்திற்கும் விஷயமாகான். [தூயன்] இங்குத் தூய்மையாவது யசோதைப்பிராட்டிபோல்வார்க்குக் கட்டவுமடிக்கவும் எளியனாந்தன்மை.

துயக்கன் மயக்கன் = துயக்கு என்று ஸந்தேஹத்திற்குப் பெயர்; மயக்கு என்று விபரீதஜ்ஞானத்திற்குப் பெயர்; ஸந்தேஹரூப ஜ்ஞானத்திற்கும் விபரீதஜ்ஞானத்திற்கும் விஷயமாயிருப்பவன் என்றபடி. எம்பெருமானார் தரிசனத்தினுள்ளவர்கள் எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை உள்ளது உள்ளபடியாகவும் ஸந்தேஹமில்லாமலும் நன்கு அறிந்துகொண்டிருக்க, இதர பாஹ்ய

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



குத்ருஷ்டி தர்சனங்களிலுள்ளார் பலர் ஸந்தேஹமேபட்டுக்கொண்டும் விபரீதமாகவே யுணர்ந்துகொண்டும் இருக்கின்றார்களன்றோ; இங்ஙனம் சிலரை வாழ்வித்துச் சிலரை ஸம்சய விபர்யய ஞானங்களாலே மாய்ப்பவன் எம்பெருமான் என்றபடி. இங்ஙனஞ்செய்வதும் அவரவர்களது கருமாதீனமாதலால் எம்பெருமானுக்குக் குறையொன்றுமில்லையென்க.

இவ்விடத்து அரும்பதவுரையில் ஓர் ஐதிஹ்யம் எழுதப்பட்டுள்ளது; அது வருமாறு;— முற்காலத்தில், பட்டருடைய காலக்ஷேப கோஷ்டியில் சாஸ்த்ரஜ்ஞனான ஒரு பிராமணன் பலகாலும் வந்து போவதுண்டு; அவனைக் கண்டால் பட்டர் ஆதரவுகாட்டாமல் 'வந்தாயோ, போனாயோ' என்று ஸாமாந்யமாக வியவஹரித்தருளிச்செய்வர். சாஸ்த்ரஜ்ஞானம் முதலியன இல்லாத ஒரு ஸ்ரீவைஷ்ணவரும் வந்து போவதுண்டு; அவரைக்கண்டால் மிகவும் அருள்காட்டி ஆதரித்துக்கொண்டெழுந்தருளியிருப்பர். இவ்விரண்டையும் பலநாளுங் கண்டிருப்பாரொருவர் ஒருநாள் பட்டரைவந்து ஸேவித்து, ஸ்வாமிந்! தேவரீருடைய கோஷ்டிக்குப் பலகாலும் வந்து போகிற சாஸ்திரி மஹாவித்வான், மிகவும் ப்ரஸித்தர்; அவர்வந்தால் ஸாமாந்யமாக வ்யவஹரித்தருளுகிறது; மற்றொரு ஸாது ஸ்ரீவைஷ்ணவர் வரக்கண்டால் மிகவும் பிரதிபத்திபண்ணியருளுகிறது; பஹுமானிக்கவேண்டுமிடத்தில் ஸாமாந்ய வ்யவஹாரமும், உதாஸித்திருக்கவேண்டுமிடத்தில் பஹுமாநாதிசயமும் செய்தருள்வதற்குக் காரணமருளிச்செய்யவேணும்' என்று கைகூப்பி நின்று கேட்க; அதற்கு பட்டர், 'அவர்களிருவரும் எப்போதும்போலே நாளையும் வருவர்களே; அப்போது நீரும் பார்த்திரும்; வாசியை நீரே அறிந்துகொள்வீர்' என்ன, அவரும் அப்படியே பார்த்திருக்க, மறுநாள் காலை அந்த அந்தணன் முதலில் வந்து ஸேவிக்க, பட்டர் அவனை எப்போதும்போலே வினவியருளி 'நீர் ஆரைத்தான் பரதத்வமாக அறுதியிட்டிருப்பது?' என்று கேட்க, அவன் 'சிலப்ரமாணங்கள் ப்ரஹ்மாவைப் பரதத்வமாகப் பேசுகின்றன; சில ப்ரமாணங்கள் ருத்ரனைப் பேசுகின்றன; சில ப்ரமாணங்கள் விஷ்ணுவைப் பேசுகின்றன; ஆகவே ப்ரமாணங்களெல்லாம் இப்படி வியாகுலங்களாயிருக்க, நம்மால் தத்வநிர்ணயம்பண்ணப்போமோ? அவரவர்களுடைய அபிமானத்தின்படியே சொல்லிக்கொள்ளவேண்டியதுதான்' என்று விடையளிக்க, அவனைப் போகவிட்டு, பிறகு அந்த ஸாது ஸ்ரீவைஷ்ணவர் வந்தவாறே அவரை நோக்கி, 'தேவரீர் ஆரைத்தான் பரதத்வமென்றிருப்பது?' என்று பட்டர் கேட்க, 'தேவரீர் ச்ரிய:பதி நாராயணனே பரதத்வமென்றும் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றும் பலகாலும் அருளிச்செய்யுமே, அது தவிர அடியேன் வேறொன்றறியேன்' என்ன, அவரையும் அனுப்பிவிட்டு, கேள்விகேட்ட ஸ்வாமியை நோக்கி 'இருவருடைய வாசியையுங் கண்டீரா? ஆரை பஹுமாநிக்க ப்ராப்தம்?' என்ன, அவரும் விஸ்மயப்பட்டுப்போனார் — என்பதாம். "தூயன் துயக்கன் மயக்கன்" என்றவிடத்திற்கு இது ஏற்ற ஸம்வாதம். ... .... ... .... (கூ

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தோளிணைமேலும்நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் *
தாளிணைமேலும்புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் *
கேளிணையொன்றுமிலாதான் கிளரும்சுடரொளிமூர்த்தி *
நாளணைந்தொன்றுமகலான் என்னுடை நாவினுளானே. * (எ)

| | |
|---|---|
| தோள் இணை மேலும் | இரண்டு திருத்தோள்களி லும் |
| நல் மார்பின் மேலும் | விலக்ஷணமான திருமார் பிலும் |
| சுடர் முடி மேலும் | ஒளிபொருந்திய திருமுடி யிலும் |
| தாள் இணை மேலும் | இரண்டு திருவடிகளிலும் |
| புனைந்த | அணியப்பட்ட |
| தண் அம் துழாய் உடை அம்மான் | குளிர்ந்தழகிய திருத்துழா யையுடைய ஸ்வாமி யாய் |
| கேள் இணை ஒன்றும் இலாதான் | பொருத்தமான உபமான மொன்றுமில்லாதவ னாய் |
| கிளரும் சுடர் ஒளி மூர்த்தி | மேன்மேலுங் கிளர்கின்ற சிறந்த வொளியே வடி வெடுத்தவனான எம் பெருமான் |
| நாள் | நாடோறும் |
| அணைந்து | கிட்டி |
| ஒன்றும் அகலான் | சிறிதும் விலகாதவனாய்க் கொண்டு |
| என்னுடை | என்னுடைய |
| நாவின் உளான் | நாவிலுள்ளவனாக ஆனான். |

* * * — [தோளிணைமேலும்.] உலகில் நாயகியோடு கலவி செய்யவரும் நாயகன் அவள் உகக்குமாறு தன்னை அலங்கரித்துக்கொண்டு வருமாபோலே எம்பெரு மானும் என்னோடு கலக்க விரும்பித் திருத்துழாய் மாலைபாலே மிகவும் அழகு பெறுவித்துக்கொண்டுவந்து எனது நாவிலே கலந்தானென்கிறாரிப்பாட்டில். முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் ஆழ்வார் பலகாலும் தண்ணந்துழாய் தண்ணந்துழாய் யென்றே வாய்வெருவினராதலால் இவராசைதீரத் தண்ணந் துழாய் மாலைகளோடே அழகியனாக வந்து சேர்ந்தானாயிற்று.

அடியார்களைக் கண்டவாறே முந்துற முன்னம் தோள்களாலே அழுந்தக் கட்டியணைப்பனாதலால் முன்னே தோளிணைமேல் திருத்துழாய் சாத்தினான்; தோள்களாலே தழுவி மார்பிலே அணைத்துக்கொள்ள வேண்டுதலால் பிறகு திருமார்புக்குத் திருத்துழாய் சாத்தினான்; இப்படி நம்மை அணைத்துக்கொள் பவன் * கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியனன்றோ?' என்று ஸாம்ராஜ்ய ஸூசகமான திருவபிஷேகத்தின்மீது கண் ஓடுமாதலால், அதன் பிறகு சுடர் முடிமீது சாத்தினான்; அவன் வாரியணைத்துக்கொண்டாலும் திரு வடிகளில் வீழ்ந்திறைஞ்சுவதே நமது ஸ்வரூபமென்று முடிவாகத் திருவடிவாரத் திலே விழவேண்டியிருத்தலால் அதன் பிறகு தாளிணைமேற் புனைந்தான் என்று கொள்க.

அடியார்களைச் சேர்விக்கும் புருஷகாரபூதையான பிராட்டி யிருக்குமிட மாதல்பற்றி 'நன்மார்பு' எனப்பட்டது. முடியென்று சிரஸ்ஸுக்கும் கிரீடத்திற் கும் பெயர்.

இங்கே பட்டருடைய ஒரு ரஸோக்தி காண்மின்; — உலகில் வீராயிருப் பவர்கள் முன்னே ஆயுதத்திற்கு அலங்காரம் செய்புங் கணக்கிலே திவ்யாயுதங்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



களுக்கு உறைவிடமான தோளிணைமேல் முன்னம் புனைந்தான்; ப்ரணயிகளா யிருப்பவர்கள் அபிமத விஷயத்திற்கு அலங்காரஞ் செய்யுங்கணக்கிலே பின்னை மங்கையுறைமார்புக்குப் புனைந்தான்; ஆயுதத்திற்கும் அபிமத விஷயத்திற்கும் இட்டுப் பிறகு தாங்கள் விநியோகங்கொள்ளுமித்தனையாகையாலே தன்முடி மீது சூட்டிக்கொண்டான்; சேஷம் அடியார் கைக்கொள்வாராகையாலே திருவடிகளுக்குச் சாத்தினான் — என்று.

கேள் இணை ஒன்று மிலாதான் = கேள் என்பதைக் கேழ் எனக்கொண்டு, உவமை யென்று பொருள் கொள்ளலாம்; இணை யென்றாலும் உவமை; ஆக, இரண்டுவகையான உவமையுமில்லாதவ னென்றவாறு. தனித்தனியே ஒவ்வொரு அம்சத்திற்கும் ஒப்பில்லை, ஸமுதாயத்திற்கும் ஒப்பில்லை என்றபடி. சந்திரன், மேகம், தாமரை, மலை முதலியவற்றை ஒப்பாகச்சொல்லுகின்றோமே யென்னில்; ஏதேனுமொரு உபமானம் சொல்லித்தீரவேணு மென்பதற்காகச் சொல்லுகிறதத்தனையொழிய, உண்மையில் ஒப்பாவதொன்றில்லை யென்க. "கட்டுரைக்கில்தாமரை நின் கண்பாதங் கை யொவ்வா, சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி யொளி யொவ்வாது, ஒட்டுரைத்திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும், பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதி!" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்வர் மூன்றும் பத்தில். [கேள் என்றே கொண்டு, பொருத்தமான உவமையில்லாதவன் என்று முரைக்கலாம்; கேள் — உறவு; அதாவது பொருத்தம்.] ... .... ... ... ... (எ)

நாவினுள்நின்று மலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம் *
ஆவியுமாக்கையும்தானே அழிப்போடளிப்பவன்தானே *
பூவியல்நால்தடந்தோளன் பொருபடையாழிசங்கேந்தும் *
காவிநன்மேனிக்கமலக்கண்ணன் என்கண்ணினுளானே. * (அ)

| | |
|---|---|
| நாவினுள் நின்று | நாவினிடத்தில் நின்றும் |
| மலரும் | பரவுகின்ற |
| ஞானம் கலைகளுக்கு எல்லாம் | ஜ்ஞானஸாதனமான எல்லாக் கலைகளினுடையவும் |
| ஆவியும் ஆக்கையும் தானே | உயிரான அர்த்தமும் உடம்பான சப்தமும் தானிட்ட வழக்காம்படி யிருப்பவனும் |
| அழிப்போடு அளிப்பவன் தானே | (அவற்றினுடைய) உத்பத்திவிநாசங்களும் தானிட்ட வழக்காம்படியிருப்பவனும் |
| பூ இயல் நால் தட தோளன் | பூமாறுத நான்கு பெரிய திருத்தோள்களை யுடையவனும் |
| | (அத்திருத்தோள்களில்) |
| பொரு படை ஆழி சங்கு ஏந்தும் | போர்செய்கின்ற ஆயுதங்களாகிய திருவாழிதிருச்சங்குகளைத் தரித்திருப்பவனும் |
| காவி நல் மேனி | கருநெய்தல்போன்று அழகிய திருமேனியை யுடையவனும் |
| கமலம் கண்ணன் | செந்தாமரைபோன்ற திருக்கண்களை யுடையனுமாகிய எம்பெருமான் |
| என் கண்ணின் உளான் | (இவ்வழகோடே) என்னுடைய கண்ணுக்குள்ளே யானான். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [நாவினுள்நின்று.] கலைகளெல்லாவற்றாலும் காணவேண்டியவனான எம்பெருமான் ப்ரமாணங்களாலே காணக்கடவதான தன் வடிவை என் கட்புலனுக்கு இலக்காக்கினனென்கிறார். சாஸ்திரங்கள் யாவும் ஞானத்திற்கு ஸாதனமாக அவதரித்தவை யாதலால் ஞானக்கலைகள் எனப்பட்டது. அப்படிப்பட்ட சாஸ்திரங்களெல்லாம் நாவின் நுனியில் மலர்வனவாதலால் "நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகள்" எனப்பட்டது.

ஆவியும் ஆக்கையுந்தானே = ஆவியாவது உயிர்; ஆக்கையாவது உடல். உலகில் ப்ரத்யக்ஷமாகக் காணக்கூடியது உடல்; அதனுள்ளே உறைந்திருப்பது உயிர்; அதுபோலே இங்கு, சப்தம் ஆக்கையாகவும் அர்த்தம் ஆவியாகவும் கொள்ளுதற்குரியது. 'இன்ன சப்தத்திற்கு இன்னது அர்த்தம்' என்று ஸங்கேதம் செய்துவைத்தவன் எம்பெருமானே யாதலால் சப்தார்த்த ஸம்பந்தம் தானிட்ட வழக்காயிருக்கப்பெற்றவனென்றவாறு.

அழிப்போடு அளிப்பவன்தானே = உலகங்களினுடைய உத்பத்தி விநாசங்கள் எம்பெருமானிட்ட வழக்கு என்கிற அர்த்தமன்று இங்கு விவக்ஷிதம்; கீழ்ச்சொன்ன ஞானக்கலைகளைப் பிரவர்த்திப்பிக்கின்றவனும் அவனே, உபஸம்ஹரிக்கின்றவனும் அவனே என்றபடி. இங்கே நம்பிள்ளையீடு:— "மந்தமதிகளான சேதநருடைய ப்ரதிபத்தி தோஷங்களாலும் லேகக தோஷங்களாலும் பாடபேதங்களாலும் இவை உருமாயுமளவிலே ஸம்ஹரித்தும், அபேக்ஷித ஸமயத்திலே ஸ்ருஷ்டித்தும் போருகிறான்தானே. அல்லாத ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைச் சொல்லுகிறதென்பாருமுண்டு."

[பூவியல் இத்யாதி.] புஷ்பஹாஸ ஸுகுமாரனாய், சதுர்ப்புஜனாய், சங்கசக்ர கதாதரனாய், இந்தீவரதளச்யாமனாய்ப் புண்டரீகாக்ஷனாயிருந்தவன் என் கண்ணுக்குள்ளே புகுந்தருளினனாயிற்று. ... ... .... ... (அ)

கமலகண்ணனேன்கண்ணினுள்ளான் காண்பனவன்கண்களாலே *
அமலங்களாகவிழிக்கும் ஐம்புலனுமவன்மூர்த்தி *
கமலத்தயன்நம்பிதன்னைக் கண்ணுதலானொடும்தோற்றி *
அமலத்தெய்வத்தோடுலகமாக்கி என்நேற்றியுளானே. * (௯)

கமலம் கண்ணன் { புண்டரீகாக்ஷன்
என் கண்ணினுள்ளான் { எனது கண்களுக்கு இலக்கானான் ;
காண்பன் { (நானும் அவனைக்) காணுகின்றேன் ;
(இதுவரையில் அவனைக் காணப்பெறாத நான் இப்போது எங்ஙனே காணப் பெற்றேனென்னில் ;)
அவன் அப்பெருமான்
கண்களாலே (தனது) திருக்கண்களாலே

அமலங்கள் ஆக விழிக்கும் { அஜ்ஞானம் முதலிய மலங்கள் தொலையும்படி கடாக்ஷித்தருளினான்; (அதனாலே காணப்பெற்றேனென்க:)
ஐம்புலனும் { மற்றுமுள்ள எல்லா இந்திரியங்களும்
அவன் மூர்த்தி { அப்பெருமானுக்கே விதேயங்களாயின ;
(அவன் யாவனென்னில் :)
கமலத்து நம்பி அயன் தன்னை { தாமரையானும் ஜ்ஞாநாதி பரிபூர்ணனுமிருக்கிற பிரமனையும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| கண் நுதலானொடும் | நெற்றிக்கண்ணனாகிய சிவபிரானையும் | உலகம் | உலகங்களையும் |
| தோற்றி | தோற்றுவித்து (அவர்கள் முதலாக) | ஆக்கி | படைக்குமவன்; (ஆக இப்படிப்பட்ட எம்பெருமான்) |
| அமலம் தெய்வத்தோடு | ஸாத்விகர்களான தேவர்களோடு கூடின | என் நெற்றி உளான் | எனது நெற்றியிலேயானான். |

* * * — [கமலக்கண்ணன்.] பிரமன் முதலாகப் பிபீலிகா பர்யந்தமாக ஸகல ஜகத்தையும் படைத்தருளின கமலக்கண்ணன் என் கண்ணினுள்ளே புகுந்தருளினான்; நானும் அவனை என் கண்களாற் காணப்பெற்றேன்; அவனும் தன்னுடைய குளிர்ந்தழகிய திருக்கண்களாலே என்னுடைய ஸகல தாபங்களும் தீரும்படி என்னைக் குளிர நோக்கியருளா நின்றான்; இப்படியே மற்றுமுள்ள செவி முதலிய கரணங்களாலும் அவனையே அநுபவிக்கப்பெற்றேன்: கண்ணுள்ளே அவன் வந்திருந்த இருப்பு எனக்கு ஸாத்மித்தவாறே பின்னை என் நெற்றியுள் நின்றருளினான் என்றவாறு.

அமலங்களாக விழிக்கும் = இதுவரையில் அவனைக் காண முடியாதபடி தோஷங்கள் நிரம்பிக்கிடந்தன; அவை அவனது கடாக்ஷவீக்ஷணமடியாக மாய்ந்தனவாதலால் இன்று காணப்பெற்றேன் என்று கருத்து.

ஐம்புலனும் அவன்மூர்த்தி = செவி வாய் கண் மூக்கு உடல் என்பன ஐம்புலன்கள்; முதலடியில் காண்பன் என்றமையால் கண் பகவத்விஷயத்திலே ப்ரவணமானமை அங்கே சொல்லப்பட்டதாதலால் மற்ற நான்கு கரணங்களும் அந்தக் கண்போலவே அவ் விஷயத்திலேயே அவகாஹித்தமை சொல்லுதல் இங்கு விவக்ஷிதம். கீழ்நாள்களிலெல்லாம் விஷயாந்தரங்களில் ஊன்றிக்கிடந்த கரணங்கள் யாவும் இன்று அவனிட்ட வழக்காம்படி அவனுக்கு விதேயமாய் அங்கே பணிபோந்தனவென்கை. ... .... ... .... ... (௯)

நெற்றியுள்நின்றென்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள்சூடி *
கற்றைத்துழாய்முடிக்கோலக் கண்ணபிரானைத்தொழுவார் *
ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும் *
மற்றையமரருமெல்லாம் வந்தெனதுச்சியுளானே. * (௧௦)

| | | | |
|---|---|---|---|
| ஒற்றை பிறை அணிந்தானும் | சந்திரசேகரனாகிய சிவபெருமானும் | கற்றை துழாய் முடி கோலம் கண்ணபிரானை | செறிந்த திருத்துழாயாகிற வளையமணிந்த எம்பெருமானை |
| நான்முகனும் | பிரமதேவனும் | | |
| இந்திரனும் | தேவேந்திரனும் | | |
| மற்றை அமரரும் எல்லாம் | மற்றுமுள்ள எல்லாத் தேவர்களும் | தொழுவார் | வணங்காநிற்பர்கள்; |
| வந்து | கிட்டி, | | (அத்தகைய பெருமைவாய்ந்த எம்பெருமான்) |
| நெற்றியுள் நின்று என்னை ஆளும் நிரை மலர் பாதங்கள் சூடி | நெற்றியில் படிந்திருந்து என்னையாள்கின்ற மலரொழுங்கமைந்த திருவடிகளை (த்தங்கள் தலையிலே) சூடிக்கொண்டு | எனது உச்சி உளான் | என் தலையின்மேலேயானான், |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [நெற்றியுள்நின்று.] பிரமன் சிவனிந்திரன் முதலான மஹான்களுங்கூடத் தன்னைப் பெறுதற்கு ஸமயம் எதிர்பார்த்திருப்பாராய்த் தடுமாறும்படி யிருக்கிறவன் தான் என்னைப் பெறுகைக்கு அவஸரம் பார்த்துவந்து என் தலைமீது ஏறிவிட்டானென்கிறார்.

நெற்றியுள்நின்று என்னை யாளும் என்பது நிரைமலர்ப்பாதங்களுக்கு விசேஷணம். என்னுடைய நெற்றியிலே [ஊர்த்துவ புண்ட்ரரூபமாக] இருந்துகொண்டு என்னை ஸ்ரீவைஷ்ணவதிலகனாக ஆக்கிய திருவடிமலர்களைத் தாங்கள் சூடிக்கொண்டு ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும் மற்றை யமரருமெல்லாம் கண்ணபிரானைத் தொழுவார் என்கிறார். இதனால் ஆழ்வார் ஹரிபாதாகாரமான ஊர்த்துவபுண்ட்ரமே சாத்திக்கொண்டிருந்தவர் என்பதும், அதுதானும் ஏகபாதாகாரமன்று, பாதத்வயாகாரம் என்பதும் ஸ்பஷ்டமாகும். .... .... ... ... (௧௦)

உச்சியுள்ளேநிற்கும்தேவதேவற்குக் கண்ணபிராற்கு *
இச்சையுள்செல்லவுணர்த்தி வண்குருகூர்ச்சடகோபன் *
இச்சொன்னவாயிரத்துள் இவையுமோர்பத்தெம்பிராற்கு *
நிச்சலும்விண்ணப்பஞ்செய்ய நீள்கழல்சென்னிபோருமே. * (௧௧)

உச்சி உள்ளே நிற்கும் — (கீழ்ப்பாட்டிற் கூறியபடி) என் தலைமீதிருப்பவனும்
தேவதேவற்கு — தேவாதிதேவனும்
கண்ணபிராற்கு — கண்ணனாகத் திருவவதரித்தவனுமான பெருமானுக்கு
இச்சை உள் செல்ல உணர்த்தி — (தன் பக்கலிலே அவன் பண்ணின) ஆதரத்தைத்தாம் அறிந்தபடியைத் திருவுள்ளத்திலே பட அறிவித்து
வண் குருகூர் சடகோபன் சொன்ன—;
இ ஆயிரத்துள் — இத்திவ்யப்ரபந்தத்தினுள்
இவையும் ஓர் பத்து — இந்த அத்விதீயமான பத்துப்பாசுரங்களையும்
எம் பிராற்கு — எம்பெருமானுக்கு
விண்ணப்பம் செய்ய — (ஒருகால்) விண்ணப்பஞ் செய்யுமளவில்
நீள் கழல் — (உலகமளக்க) நீண்ட (அவனது) திருவடிகளானவை
நிச்சலும் — எப்போதும்
சென்னி — தலையிலே
போரும் — வந்து சேரும்.

* * * — [உச்சியுள்ளேநிற்கும்.] இத்திருவாய்மொழியை எம்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்வார்தலையிலே அப்பெருமானது திருவடிகள் நாடோறும் வந்து சேருமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். கீழே தம்முடைய ஒவ்வொரு அவயவத்திலும் முறையேவந்து சேர்ந்து முடிவாக முடிமீதுவந்துசேர்ந்த பெருமானுக்கு இனி எங்கும் போக்கிடமில்லையென்பது தோன்ற "உச்சியுள்ளே நிற்கும்" என்கிறார். * அமரர் சென்னிப்பூவான எம்பெருமான் என் சென்னிக்கு அப்பால் போக்கிடமில்லையென்று துணிந்து இங்கே படுகாடுகிடக்கின்றானென்கை. என்னுச்சியுள்ளே நிற்கையாலே தான் தேவதேவனாயினனென்பதும் ஆழ்வார்க்கு விவக்ஷிதமென்ப; தேவதேவனாயிருக்கின்ற தான் என்னுச்சியுள்ளே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நிற்பதை ஒரு பேருகக்கருதுகின்ருனே ! இது என்ன சீலம் ! என வியந்தவாறுமாம்.

இத்திருவாய்மொழியில் ஒவ்வொரு பாசுரத்தாலும் எம்பெருமான் தமது ஒவ்வொரு அவயவத்திலே வந்து சேர்ந்தனுகப் பேசியவிது, எம்பெருமாஞக்குத் தம்மிடத்தில் அவ்வளவு ஆவல் இருக்கின்றமையை யறிந்து கூறியபடி என்பதைபுணர்த்துகின்ருர் இச்சையுட் செல்லவுணர்த்தி என்பதனுல்.

"இவையுமோர்பத்து எம்பிராற்கு விண்ணப்பஞ்செய்ய, நீள்கழல் நிச்சலும் சென்னிபொரும்" என்று அந்வயிப்பது. இது கற்பார், தமக்குப் பாங்கான ஸமயத்திலே ஒருகால் விண்ணப்பஞ்செய்யப்பெறில், ஆசாலேசமுடையாரிருந்தவிடத்திலே செல்லவளருந் திருவடிகள் எப்போதும் அவர்களது சென்னிக்கு அணியாமென்றவாறு.

ஆழ்வார்க்குக்கிடைத்த பேறே அவரடியார்க்கும் பேருகுமென்க. (கக.)

ஒன்பதாந்திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:.

ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி நூற்றந்தாதியில் இத் திருவாய்மொழிக்கான பாசுரம்.



இவையறிந்தோர் தம்மளவில் ஈசனுவந்தாற்ற
அவயவங்கள்தோறுமணையுஞ் — சுவையதனைப்
பெற்று, ஆர்வத்தால் மாறன் பேசினசொல்பேச, மால்
பொற்ருள் நஞ்சென்னி பொரும்.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| இவை | கீழ்த்திருவாய்மொழிகளில் அநுபவிக்கப்பட்ட திருக்குணங்களை | உவந்து | திருவுள்ளமுகந்து |
| | | ஆற்ற | பொறுக்கப்பொறுக்க |
| அறிந்தோர்தம் அளவில் | அறிந்தவர்கள் பக்கலில் | அவயவங்கள் தோறும் | (ஒவ்வொரு அவயவமாக) எல்லா அவயவங்களிலும் |
| ஈசன் | எம்பெருமான் | அணையும் | வந்து சேர்ந்ததனுலுண்டான |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| சுவை அதனை | ரஸத்தை |
| பெற்று | அடைந்து |
| ஆர்வத்தால் | (அங்ஙனம் அடைந்த) இனிமையினால் |
| மாறன் | ஆழ்வார் |
| பேசின | அருளிச்செய்த |
| சொல் | (இந்தத் திருவாய்மொழி யாகிற) ஸ்ரீஸூக்தியை |
| பேச | (நாம்) உச்சரிக்க |
| மால் | ஸர்வேச்வரனுடைய |
| பொன்தாள் | அழகிய திருவடிகள் |
| நம் சென்னி | நமது தலைமீது |
| பொரும் | வந்துசேரும். |

* * * — இவை என்றது கீழ் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் அநுபவித்த குணங்களையாம். பரத்வம், பஜநீயத்வம், ஸௌலப்யம், அபராதஸஹத்வம், ஸௌசீல்யம், ஆராதனைக்கெளிமை, பரமபோக்யதை, ருஜுத்வம் என்கிற திருக்குணங்கள் கீழ்த்திருவாய்மொழிகளில் முறையே ஆழ்வாரால் அநுபவிக்கப்பட்டன வாதலால் அக்குணங்களை இவை என்று நிர்த்தேசிக்கிறபடி. அக்குணங்களை அறியுமவர்கள் திறத்திலே எம்பெருமான் ஸந்துஷ்டனாய்ப் பொறுக்கப் பொறுக்க ஸகல அவயவங்களிலும் ஸம்ச்லேஷிப்பன் என்று ஒன்றுண்டே, அப்பேற்றை ஆழ்வார்பெற்று அதனாலுண்டான ஆனந்தம் புறவெள்ளமிட்ட சொல்லாகிய இந்தத்திருவாய்மொழியை ஓதுவாரது சென்னித்திடரில் ஸர்வேச்வரனுடைய திருவடிகள் வந்து சேருமென்றாயிற்று.

இவையறிந்து ஓர்தம்மளவில் எனப்பிரித்து இவற்றையறிந்து ஓர்கின்ற [ஆராய்ச்சி செய்கின்ற] தம்மளவிலே என்று முரைப்பாருளர்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

---

ஶ்லோ|| ஆத்மார்ஜவாநுபவகௌதுகிநோஸ்ய ஶௌரே:
ஆத்மாவலோகரஸவிஸ்மயிகாம் ததாந: |
தேவ்யாதிவச் ச ஸஹிதா ஆத்மோத்தவிருஜாதி
ஆஶிஶ்ரியத்தவயத்தவசே ஶௌரி: ||

(கருத்து.) கீழ்த்திருவாய்மொழியில்; தன்னுடைய ஆர்ஜவமென்னுங் குணத்தையே அநுபவித்துக்கொண்டிருந்த ஆழ்வார்க்கு எம்பெருமான் தன்னை முற்றூட்டாக அநுபவிக்குந்திறத்திலும் அளவுகடந்த அபிநிவேசத்தைத் தந்து, பிராட்டிமார் முதலானாரை அநுபவிக்குமாபோலே ஆழ்வாரையும் அநுபவிப்பானாய் ஸாத்மிக்க ஸாத்மிக்க ஒவ்வோரவயவத்திலும் வந்து சேர்ந்தானென்பதை இவ்வொன்பதாந்திருவாய்மொழியில் ஆழ்வார் அருளிச்செய்தாரென்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி முதற்பத்து

## பத்தாந் திருவாய்மொழி — பொருமாநீள்படை.

# அவதாரிகை.

எம்பெருமானுடைய அநுக்ரஹம் நிர்ஹேதுகம் என்பது இத்திருவாய்மொழியில் அநுபவித்தருளிச்செய்யப்படுகிறது. கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமான் தம்மோடே அவயவங்கள்தோறுங் கலந்த கலவியை அருளிச்செய்த ஆழ்வார் அந்தக் கலவியால் தமக்குப் பிறந்த அளவிலாத ஆனந்தத்தை இத்திருவாய்மொழிமுகத்தால் வெளியிடுகிறார் என்று இங்ஙனே சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பதுண்டு. பட்டர் விசேஷித்து நிர்வஹிப்பாராம்; எங்ஙனேயென்னில்; கீழ்த்திருவாய்மொழியில் "வந்து எனதுச்சியுளானே" என்றும் "உச்சியுள்ளேநிற்கும் தேவதேவற்கு" என்றும் தலைக்கொண்ட அநுபவம் தமக்குக் கிடைத்ததாக ஆழ்வாரருளிச்செய்தார். இனி அவ்வநுபவத்திற்காட்டிலும் ஏற்றமாகச் செய்துகொடுக்கக்கூடிய வேறு அநுபவம் என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. அவ்வநுபவம் இடையறாது தொடர்ந்து செல்லுமாறு செய்துகொடுக்கவேண்டுமத்தனையே யுள்ளது. அது எம்பெருமான் திருவுள்ளத்தைப் பொறுத்தவிஷயம். அது நிற்க. ஆழ்வார் கீழ்த் திருவாய்மொழியில் தமக்குப் பிறந்த பேற்றை ஆராய்ந்துபார்த்து 'இப்போது நமக்குக் கிடைத்த பேறோ மிகவுங் கனத்திருக்கின்றது; இதிற்காட்டிலும் உத்தமமான பேறு வேறொன்றில்லை; இத்தகைய பேறு நமக்கு வந்த வழி என்ன?' என்று விமர்சிக்கத் தொடங்கினார். இப்பேற்றிற்குத் தகுதியாயிருப்பதொரு நன்மை [அதாவது இதற்குத் தக்க ஸாதநாநுஷ்டாநம்] தம்மிடத்தில் ஒன்றுமில்லை யென்பதைத் தெரிந்துகொண்டார்; தம் தலையில் ஏதேனுமிருந்தாலும், அத்வேஷமோ ஆபிமுக்யமோ இருக்குமேயன்றி வேறொன்றிருப்பதாகக் காணவிடமில்லை. அவை ஸாதனமாக நினைக்கவொண்ணாதவை; இத்தலையிலே பரமபக்தியளவும் பிறந்தாலும் நம்மிடத்திலே ஸாதனமாக மதிக்கலாவதொன்றில்லையே; ஒருவன் ஓர் எலுமிச்சம்பழத்தைக் கொடுத்து ராஜ்யத்தைப்பெற்றால் அதற்கு அது விலையாக நினைக்கலாகுமோ? எம்பெருமானடியாக நமக்குக் கிடைக்கும் பேற்றுக்கு இத்தலையில் ஒரு ஸாதனமும் நிரூபிக்க வொண்ணாதே; 1. "வாவாறொன்றில்லையால் வாழ்வுஇனிதால்" என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்யும்படியாயிற்றே. சேதநனை முதலிலே ஸ்ருஷ்டிக்கிறபோது 'இவன் தீயவழியைத்தப்பி நல்வழி போகவேணும்' என்று உபகரணங்களைக் கொடுத்துவிடுகையாலே சேதநன்

1. பெரிய திருவந்தாதி, — 56.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தலையால் பிறந்த நன்மைக்கும் அவனேயன்றோ மூலகாரணமாயிருக்கத் தகுதியுடையான்; புத்தி முதலிய ஸகல பதார்த்தங்களுக்கும் நிர்வாஹகனும் அவனேயாகையாலே அத்வேஷம் முதலாகப் பரமபக்தி யீறாக எல்லா நன்மைகளையும் தானே பிறப்பிப்பான்: ஆகவே இப்படி எம்பெருமான் நிர்ஹேதுகமாகப் பண்ணிக்கொடுத்த பரமோபகாரம் என்னே! என்று உருகி உள்குழைந்து அநுஸந்திப்பதென்று ஒன்றுண்டே; அதுதான் இத்திருவாய்மொழியிற் செல்லுகிறது என்று.

கீழ்த் திருவாய்மொழியில் உந்மஸ்தகமாகப் பிறந்த கலவியின்பத்தை நினைந்து உருகுகிறாரென்பது மற்ற ஆசாரியர்களின் நிர்வாஹத்திற்கும் பட்டர் நிர்வாஹத்துக்கும் ஒக்கும். நிர்ஹேதுகத்வாநுஸந்தானத்தையும் கூட்டி ரஸிப்பிக்கை பட்டர் நிர்வாஹத்திற்குத் தன்னேற்றம். இந்த நிர்வாஹத்தை ஸ்ரீமந் நிகமாந்தமஹாதேசிகனும் ஆதரித்தருளினரென்பது தாத்பர்யரத்நாவளியில் *ஸூஷாவி த்ஸுவரஃவாஜிதூஜி ச்லோகத்தில் "ஃவஹாஜெஜாஷாரஹாவாஸ= அவ்யாஜோதாரபாவாத்" என்றருளிச்செய்ததனால் ஸ்பஷ்டம்.

பொருமாநீள்படை ஆழிசங்கத்தொடு *
திருமாநீள்கழல் ஏழுலகுந்தொழ *
ஒருமாணிக்குறளாகி நிமிர்ந்த * அக்
கருமாணிக்கம் என்கண்ணுளதாகுமே. * (க)

| | |
|---|---|
| பொரு | போர்செய்யவல்ல |
| மா | பெருமைதங்கிய |
| நீள் படை | சிறந்த ஆயுதமாகிய |
| ஆழி சங்கத்தொடு | சங்கு சக்கரங்களோடுகூட |
| திரு மா நீள் கழல் | (தனது) மிக்சிறந்த திருவடிகளை |
| ஏழ் உலகும் தொழ | ஸகலலோகமும் தொழும்படியாக |
| ஒரு மாணி குறள் ஆகி நிமிர்ந்த | ஒப்பற்ற பிரமசாரிவாமனனாய் வளர்ந்தருளின |
| அ கரு மாணிக்கம் | நீலமணிபோன்ற அப்பெருமான் |
| என் கண் உளது ஆகும் | எனது கண்ணுக்கு இலக்காயினன். |

* * * — [பொருமாநீள்படை] இத் திருவாய்மொழியிற் சொல்லுகிற அர்த்தத்திற்கு இப்பாசுரம் ஸங்க்ரஹமென்னலாம். மஹாபலியானவன் 'எம்பெருமான் நம்மிடத்திற்கு அழகிய திருக்கோலங்கொண்டு எழுந்தருளப்போகிறான்' என்று கனவிலும் கருதாதிருக்கையில், அவன் பக்கலில் தானே யாசகனாய்ச் சென்று நின்றாப்போலே எனக்கு நினைவின்றியே யிருக்கத்தானே வந்து தன் வடிவழகை என் கண்ணுக்கு இலக்காக்கினான்! என்று அவனது நிர்ஹேதுக விஷயீகாரத்தைச் சிந்தித்து உருகிப் பேசுகின்றார்.

பொருமாநீள்படையாழிசங்கத்தொடு = "என்னிது மாயம் என்னப்பனறிந்திலன், முன்னைய வண்ணமே கொண்டளவாயென்ன, மன்னு நமுசியை வானிற் சுழற்றிய" என்கிறபடியே, உலகளந்த காலத்தில் தடைசெய்த நமுசிபோல்வார் மீது அடல் காட்டினமை பொரு என்றவிடத்து விவக்ஷிதம். "இடங்கை வலம்புரி நின்றார்ப்ப எரிகான்று அடங்காரொடுங்குவித்ததாழி. விடங்காலுந் தீவா

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பரவணைமேல் தோன்றல் திசையளப்பான், பூவாரடிநிமிர்த்தபோது'' என்ற பூதத்தாழ்வார் பாசுரமுங் காண்க.

இனி, பொரு என்பதற்கு, 'பகைவர்மீது போர் செய்கிற' என்று பொருள் கொள்ளாது, தம்மில் தாம் போர்செய்கிற' என்றும் பொருள் கொள்ளலாம். எம்பெருமானுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்கள் அஸ்தானத்திலும் அச்சத்தை விளைவிப்பனவாதலால், திருவாழியாழ்வான்மீது திருச்சங்காழ்வான் அதிசங்கை கொள்ளுதலும் திருச்சங்காழ்வான்மீது திருவாழியாழ்வான் அதிசங்கை கொள்ளுதலும் ப்ராப்தம். சித்திரகூட மலைக்குவந்து ஸ்ரீராமபிரானைத் தொழ வேணுமென்று பரமபக்தியோடு வருகின்ற பரதாழ்வானை குஹப்பெருமாளும் பரத்வாஜமஹர்ஷியும் இளையபெருமாளும் அதிசங்கித்தது முதலானவை இங்கு நினைக்கத்தக்கன.

ஆக இப்படிப்பட்ட திவ்யாயுதங்களை ஏந்தின அவ்வழகையும் தன் திருவடியையும் அனைவருங்கண்டு தொழும்படியாக விலக்ஷணவாமந ப்ரஹ்மசாரியாய்க்கொண்டு வளர்ந்த அக்கருமாணிக்கம் அவ்வழகோடே என் கண்ணுளதாயிற்று என்றதாயிற்று. .... .... ... (க)

கண்ணுள்ளேநிற்கும் காதன்மையால்தொழில் *
எண்ணிலும்வரும் என்னினிவேண்டுவம் ? *
மண்ணும்நீரும் எரியுநல்வாயுவும் *
விண்ணுமாய்விரியும் எம்பிரானையே. * (உ)

| | | | |
|---|---|---|---|
| மண்ணும் நீரும் எரியும் நல் வாயுவும் விண்ணும் ஆய் | பூமிமுதலிய பஞ்ச பூதங்களையும் சரீரமாகவுடையனுய்க்கொண்டு | கண்ணுள்ளே நிற்கும் | (அவன்) நான் காணும்படியாக இருப்பன் ; |
| விரியும் | ஜகத்தாகப் பரம்புகின்ற | எண்ணிலும் வரும் | ஒன்று இரண்டு என்று எண்ணினுலும் வந்து நிற்பன் ; |
| எம் பிரானை | எம்பெருமானை | என் இனி வேண்டுவம் | இனிமேல் என்னகுறை ? |
| காதன்மையால் தொழில் | பக்தியோடு தொழுதால் | | |

* * * — [கண்ணுள்ளே நிற்கும்] எம்பெருமான் அடியார்களுக்குக் காட்சி தருந்தன்மை எப்படிப்பட்டதென்றல், பரமபக்தியுக்தர்க்கு முகங்காட்டுவதுபோலவே எண்ணிக்கையினுல் தன்னைக் குறிப்பிடுமவர்களுக்கும் முகங்காட்டுந்தன்மையுள்ளதென்று இப்பாட்டில் கூறப்படுகின்றது. [காதன்மையால் தொழில் கண்ணுள்ளே நிற்கும்] காதன்மையாவது பிரிவில் தரிக்கமாட்டாத பக்தி; அத்தகைய பக்தியோடு தொழுதால் அவர்களது கண்வட்டத்துக்கு அப்பால் போகமாட்டாதேயிருப்பன். [எண்ணிலும் வரும்] ஒன்று இரண்டு மூன்று என்று எண்ணிக்கொண்டேபோனல் 'இருபத்தாறு' என்னுமளவில் தன்னைக்குறித்ததாகக் கொண்டுவந்து நிற்பன்; 1.''பொங்கைம்புலனும் பொறியைந்துங் கருமேந்திரியமைம்பூதம், இங்கிவ்வுயிரேய் பிரகிருதிமானங்காரமனங்களே'' என்கிற

1. திருவாய்மொழி 10-7-10

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



படியே இருபத்திநான்கு தத்துவங்களுக்குமேல் இருபத்தைந்தாவது தத்துவம் ஜீவாத்மா, இருபத்தாறாவது தத்துவம் பரமாத்மா என்பது சாஸ்திரஸித்தாந்தமாதலால், ஒருவன் இதனையறியாமல் ஏதோ காரியப்பாடாக ஒன்று முதலாக எண்ணிக்கொண்டுபோந்து இருபத்தாறளவிலே வந்தால் அந்த எண் தன்னைக் குறித்ததாக எம்பெருமான் வந்து நிற்பன் என்கிறவிது—ஏதேனுமொரு வியாஜத்தையிட்டு எம்பெருமான் நம்மைக் கைக்கொள்வதில் மிக்க ஊற்றமுடையவன் என்பதைக்காட்டும். ஸ்ரீவசநபூஷணத்தில் நான்காவது பிரகரணத்தில் "த்ரிபாத் விபூதியிலே பரிபூர்ணாநுபவம் நடவாநிற்க" என்று தொடங்கும் முதல் சூர்ணிகையிலே இவ்வர்த்தம் விரியக்காணத்தக்கது. "எண்ணிலும் வரும்" என்பதற்கு மற்றும் பலபடியும் பொருளுரைப்பர்.

என் இனி வேண்டுவம்= ஸர்வேச்வரனுடைய இயல்வு இதுவானபின்பு ஹிதாம்சத்தில் இனி நமக்கொரு குறையுண்டோ? பரம பக்திக்கும் பரிகணைக்குமொக்க முகங்காட்டுவானானபின்பு இனியென்னகுறை ?

மண்ணும் நீருமெரியு நல்வாயுவும் விண்ணுமாய் விரியுமெம்பிரானைக் காதன்மையால் தொழில்....என்று அந்வயிப்பது. 'எம்பிரானை' என்றதில் இரண்டாம் வேற்றுமையுருபைத்தள்ளி முதல் வேற்றுமையாகவே கொள்ளவுமாம். (௨)

எம்பிரானை எந்தைதந்தைதந்தைக்கும்
தம்பிரானை * தண்டாமரைக்கண்ணனை *
கொம்பராவுநுண்ணேரிடைமார்வனை *
எம்பிரானைத்தொழாய் மடநெஞ்சமே ! * (௩)

| | |
|---|---|
| மட நெஞ்சமே | விதேயமான மனமே! |
| எம் பிரானை | எமக்கு உபகாரகனும் |
| எந்தை தந்தை தந்தைக்கும் தம் பிரானை | (நம்மளவில் நில்லாமல்) நம் குலத்திற்கெல்லாம் நாதனாயிருப்பவனும் |
| தண் தாமரை கண்ணனை | குளிரக்கடாக்ஷிக்கின்ற தாமரைபோன்ற திருக்கண்களையுடையவனும் |
| கொம்பு | வஞ்சிக்கொடியினும் |
| அராவு | ஸர்ப்பத்தினும் |
| நுண் | நுட்பமான |
| நேர் | நேர்த்திபொருந்திய |
| இடை | இடையையுடையவளான பிராட்டியை |
| மார்பனை | மார்பிலே உடையனுமான |
| எம்பிரானை | எம்பெருமானை |
| தொழாய் | வணங்குவாயாக. |

* * * — [எம்பிரானை] எம்பெருமானுக்கு அடியார் திறத்தில் அளவிறந்த நீர்மைக்குக் காரணம் பிராட்டி ஸம்பந்தமேயென்று அதனையநுஸந்தித்து அந்தத் திருமாலைத் தொழாய் நெஞ்சேயென்று திருவுள்ளத்திற்கு உரைக்கிறார். எம்பெருமானுடைய விஷயீகாரம் தம்மொருத்தரோடே பர்யவஸித்துவிடாமல் 1. "கேசவன் தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும் மாசதிரிதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்னுமாபோலே ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் ஏறிப்பாயுந் தன்மையை அநுஸந்தித்த ஆழ்வார் "எம்பிரானை எந்தை தந்தை தந்தைக்கும் தம்பிரானை" என்று அழகாகப்பேச, அப்பாசுரத்தின் போக்யதையைக்

1. திருவாய்மொழி, 2—7—1.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கண்ட எம்பெருமான் 'இப்படி ஏத்துகிறவன் ஆர்?' என்று குளிரக் கடாக்ஷிக்கவே "தண்டாமரைக் கண்ணனை" என்று அக்கடாக்ஷத்திற்கு ஒரு பாசுரமிட்டார்.

குற்றமே வடிவான நம்மீது எப்பெருமான் இவ்வளவு விசேஷ கடாக்ஷஞ் செலுத்தக் காரணமில்லையே! என்ன காரணமென்று ஆராய்ந்துபார்த்து, கடாக்ஷிக்கச் செய்யவல்ல பெரியபிராட்டியார் அருகேயிருக்கின்றாளென்பதுணர்ந்து அதனைப் பேசுகிறார் "கொம்பராவு நுண்ணேரிடை மார்பனை" என்று. மாதர்களின் இடைக்கு வஞ்சிக்கொம்பையும் அரவையும் உவமை கூறுதல் கவி மரபு.

இவ்விடத்து ஈடு முப்பத்தாறாயிரப்படியிலும் இருபத்தினாலாயிரப்படியிலும் "அரவு என்கிற வித்தை அராவு என்று நீட்டிக் கிடக்கிறது; நச்சாரவணை என்னக்கடவதிறே" என்கிற வாக்கியம் காணப்படுகிறது. பெரியாழ்வார் திருமொழியில் (1—3—5.) "வழுவில்கொடையான் வயிச்சிரவணன்" என்ற விடத்திற்கு நாம் உரையிடுமிடத்து எழுதியுள்ள விஷயங்கள் இங்கு நோக்கத்தக்கன. "குறியதன்கீழ் ஆக் குறுகலுமதனோடு, உகரமேற்றலுமியல்புமாந் தூக்கின்" என்ற நன்னூல் சூத்திரத்தின் பொருளை ஆராய்ந்தால் மேற்குறித்த வாக்கியம் ஆசாரியர்களருளிச்செய்ததாயிருக்கத் தகுதியில்லை யென்றும், காலக்ஷேபபரர்களால் ஓலை ஸ்ரீகோசங்களில் டிப்பணியாக எழுதிவைக்கப்பட்டுப் பிறகு வியாக்கியான பங்க்தியாகவே சேர்த்தச்சிடப்பட்டது போலுமென்றும் கருதத்தக்கதாக வுள்ளது என்று பெரியோர்கள் திருவுள்ளம் பற்றுகின்றனர்; மேற்குறித்த சூத்திரமடங்கிய நன்னூல் கிரந்தம் ஆசாரியர்களின் காலத்தில் இல்லாதிருக்கலாமென்றும், அந்தச் சூத்திரத்தினால் உணர்த்தப்படும் பொருள் ஒருசாரார் கொள்கையாயிருக்கலாமென்றும் அபிப்பிராயங்கொண்டு விவாதாஸ்பத வாக்கியம் உள்ளதுதானென்பாருமுளர்.

கொம்பும் அராவும் எஃறு உம்மைத் தொகையாகக் கொள்ளுதலின்றியே கொம்பை அராவுகின்ற நுண்ணேரிடை என்றுரைத்தலுமொன்று. வஞ்சிக்கொம்பை வென்ற என்பது தாற்பரியம். .... .... .... (௩)

> நெஞ்சமே! நல்லைநல்லை உன்னைப்பெற்றால்
> என்செய்யோம்? * இனி யென்னகுறைவினம்? *
> மைந்தனை மலராள்மணவாளனை *
> துஞ்சும்போதும்விடாது தொடர்கண்டாய். * (௪)

நெஞ்சமே — மனமே!
நல்லை நல்லை — {நீ மிகவும் நன்மையையுடையை;
உன்னை பெற்றால் — {உன்னை உதவியாகப் பெற்றால்
என் செய்யோம் — {எதைத்தான் செய்துமுடிக்கமாட்டோம்;
(எதையுஞ்செய்து முடிக்கலாம்)
இனி என்ன குறைவினம் — {இனி என்ன குறையையுடையோம்?
மைந்தனை — {நித்யயௌவன முடையவனும்
மலராள் மணவாளனை — {திருமகள் நாதனுமான எம்பெருமானை
துஞ்சும் போதும் — {நான் அகன்று மறந்த போதும்
விடாது தொடர் — {நீ விடாமல் தொடர்ந்து நில்;
(கண்டாய்—முன்னிலையசை)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [நெஞ்சமே நல்லைநல்லை.] "எம்பிரானைத் தொழாய் மடநெஞ்சமே!" என்று கீழே தாஞ்சொன்னவாறே மேல்விழுந்து தொழுத நெஞ்சைக் கொண்டாடி, என்றைக்காவது நான் நைச்யாநுஸந்தானம் பண்ணிப் பிரியப் பார்த்த விடத்திலும் நீ எம்பிரானை விடாமலே தொடரவேணுமென்று அந்த நெஞ்சை யிரக்கிறார். சொன்ன காரியத்தையுடனே செய்த நன்மக்களைத் தாய் தந்தையர் மடியிலே வைத்துக் கொண்டாடுதல்போல இவரும் தமக்குப் பரமவிதேயமான நெஞ்சை நல்லைநல்லை யென்று கொண்டாடுகிறார். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— "நல்லைநல்லையென்கிற வீப்ஸைக்குக் கருத்து என்னென்னில்; இவர்தாம் அவன் பக்கல் தூதுவிடுமாபோலே தனக்கு இவர் தூதுவிடவேண்டும்படி இவர் தம்மைவிட்டு அவன் பக்கலிலே நிற்கவல்ல நெஞ்சாகையாலே; 'என்னெஞ்சினாரைக் கண்டாலென்னைச் சொல்லியவரிடை நீரின்னஞ் செல்லீரோ' என்னும்படி முந்துற்ற நெஞ்சாகையாலே நல்லைநல்லை யென்கிற மீமிசை."

எம்பெருமான் பக்கலில் நாரை கொக்கு கிளி பூவை முதலியவற்றைத் தூதுவிடுதல் போலவே, அவனிடத்துச் சென்ற தமது நெஞ்சைக் குறித்தும் 1. "அன்னஞ் செல்வீரும் வண்டானஞ்செல்வீருந் தொழுதிரந்தேன்" என்று சில பறவைகளை யாசித்துத் தூதுவிட வேண்டும்படி யிருத்தலால் இத்தகைய வைலக்ஷண்யந் தோற்றுமாறு நல்லைநல்லை என்றிரட்டித்துக் கூறப்பட்டதென்றவாறு.

உன்னைப்பெற்றால் என் செய்யோம் = நீ என்னோடு ஒத்திருந்த பின்பு எனக்குச் செய்ய முடியாததுண்டோ? பேறு தருகைக்கு எம்பெருமானுண்டு; விலக்காமைக்கு நீயுண்டு; இனிச்செய்ய முடியாததுண்டோ? என்று சொன்னவாறே, சிறிது ஆராய்ந்து பார்த்தார்; "உன்னைப்பெற்றாலென்செய்யோம்" என்று சொல்லுவதற்கே ப்ரஸக்தியில்லையே; ஸாத்யமான அம்சம் ஏதாவது இருந்தாலன்றோ அங்ஙனஞ் சொல்லவேண்டும்; நெஞ்சு அநுகூலித்திருப்பது தானே பற்றாசாக எம்பெருமான் எல்லாஞ்செய்து முடிப்பானாதலால் இனியொரு குறையுமில்லை யென்றுணர்ந்து அதனை வெளியிடுகிறார் இனியேன்ன குறைவினம் என்று.

குறைவினம் = குறையுடையோம். இனிமேல் நெஞ்சுக்கு என்ன காரியமென்ன, ஒன்று விதிக்கிறார் பின்னடிகளில்; நான் அவனைக் கிட்டினவாறே "வளவேழுலகின்முதலாய" என்கிற திருவாய்மொழியிற்படியே நைச்யாநுஸந்தானம் பண்ணி அகலப் பார்ப்பதொன்றுண்டு; அப்போது அவனை நீ விடாதே கிடாய் என்கிறார்.

துஞ்சும்போதும் = துஞ்சுதலாவது உறங்குதல்; இச் சொல் விநாசபரியாயமாகவே பெரும்பாலும் பிரயோகிக்கப்படும்; ஆழ்வார் தமக்கு விநாசமாக நினைப்பது பகவத் விச்லேஷத்தையே யாதலாலும், நிர்ஹேதுக விஷயீகார ஸக்தனாகிய பகவான் இனித் தான் அகலமாட்டானாகையாலும், நைச்யாநுஸந்தானம் பண்ணித் தாமே அகலத் தேடுவாராதலாலும் அந்த ஸமயத்திலும் நெஞ்சு அவனை விடாது தொடரவேணு மென்பதே இங்கு விவக்ஷிதமென்க. .... ... (௪)

1. திருவிருத்தம் - 30.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கண்டாயேநெஞ்சே! கருமங்கள்வாய்க்கின்று * ஓர்
எண்டானுமின்றியே வந்தியலுமாறு *
உண்டானை உலகேழுமோர்மூவடி
கொண்டானை * கண்டுகொண்டனைநீயுமே. * (ரு)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே!, | உலகு ஏழும் | ஏழு லோகங்களையும் |
| கருமங்கள் வாய்க்கின்று | காரியங்கள் பலிக்குமிடத்தில் | உண்டானை | (ப்ரளயத்தில்) விழுங்கினவனும் |
| ஓர் எண் தானும் இன்றியே | (நம்முடைய) நினைவு ஒன்றுமேயில்லாமல் | ஓர் மூ அடி கொண்டானை | (மற்றொருகால் அவ்வுலகங்களை) மூன்றடிகளாலே அளந்துகொண்டவனுமான பெருமானை |
| வந்து இயலும் ஆறு | பலித்துவருகிறபடியை | | |
| கண்டாயே | பார்த்தாயோ? (எங்ஙனே யெனின்) | நீயும் கண்டு கொண்டனை | நீயும் காணப்பெற்றாயன்றோ? |

* * * — [கண்டாயே நெஞ்சே.] இத்திருவாய்மொழியை நிர்ஹேதுக விஷயீகாரபரமாக பட்டர் நிர்வஹித்ததற்கு இப் பாசுரமே நிதானமாயிருக்கும். கீழ் இரண்டாம் பாட்டில் "எண்ணிலும் வரும்" என்று ப்ரஸ்துதமான எண் தானுமில்லாமல் அவனே மேல்விழுந்து விஷயீகரித்தபடியை நெஞ்சுக்கு மூதலிக்கிறார்.

நெஞ்சமே! ஜ்ஞான ப்ரஸரத்வாரமான வுனக்கு நான் சொல்லவேண்டுமோ? நான் சொன்னபடியே பலன் கைபுகுந்தமை கண்டாயே; காரியம் பலிக்கத் தொடங்கிவிட்டால் அசிந்திதமாகவே பலித்துத் தீருமென்று உலகஞ் சொல்லுகிறபடியே பலித்துவிட்டதுகாண் என்றார்; அப்படி என்ன பலித்துவிட்டது? என்ன; பின்னடிகளாலே அதனை நிரூபிக்கிறார். ப்ரளயங்கொண்ட ஜகத்துக்கு 'அவன் நம்மை வயிற்றிலேவைத்து நோக்கியருள்வான்' என்னும் நினைவு உண்டோ? அவன் ஒருமாணிக்குறளாகி நிமிர்ந்து உலகங்களை அளக்கிறபோது 'நம் தலையிலே திருவடிகளை வைக்கப்புகாநின்றான்' என்னும் நினைவுண்டோ? அப்படி நீயும் நினையாதிருக்க அவனைக் காணப்பெற்றாயே! வேறு என்ன வுதாஹரணம் வேண்டும்? ... ... .... .... (ரு)

நீயும்நானும் இந்நேர்நிற்கில் * மேல்மற்றோர்
நோயுஞ்சார்கொடான் நெஞ்சமேசொன்னேன் *
தாயுந்தந்தையுமாய் இவ்வுலகினில் *
வாயுமீசன் மணிவண்ணனெந்தையே. * (சு)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | மனமே!, | மணி வண்ணன் | நீலமணிவண்ணனும் |
| நீயும் நானும் | நீயும்நானுமாக | எந்தை | எமக்கு ஸ்வாமியுமாகிய |
| இ நேர் நிற்கின் | இந்த நிலையிலே நின்றால் | ஈசன் | ஸர்வேச்வரன் |
| மேல் | இனிமேல், | மற்று ஓர் நோயும் சார் கொடான் | வேறொரு துன்பமும் அணுகவொட்டான்; |
| இ உலகினில் | இவ்வுலகத்தில் | | |
| தாயும் தந்தையும் ஆய் | மாதாவும் பிதாவுமாகி | | |
| வாயும் | அவதரித்துள்ளவனும் | சொன்னேன் | இது உண்மையாகச் சொன்னேன். |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [நீயும் நானும்.] "விடாது தொடர்கண்டாய்" என்ற ஆழ்வாரை நோக்கி நெஞ்சானது, நான் விடாது தொடர்கிறேன், அவன் விட்டால் செய்வதென்? என்ன; நைச்சியாநுஸந்தானம்பண்ணி நாம் அகலாதொழியில் நம்மையொருநாளும் அவன் விடானென்கிறார்.

தாயைப்போல் ப்ரியமே நடத்துபவனும் தந்தையைப்போல் ஹிதமே நடத்துபவனும் இந்த லோகத்தி லவதரித்து வந்து தன்னுடைய நிருபாதிக ஸ்வாமித்வமே யடியாகத் தன்னுடைய நீலரத்னம்போலே யிருக்கிற வடிவை எனக்கு உபகரித்து அவ்வழியாலே என்னை யடிமைகொண்ட ஸ்வாமியானவன், நெஞ்சே! எனக்குக் கரணமாயிருக்கின்ற நீயும் உன்னைக் கரணமாகவுடைய நானும் இப்போதுள்ள நிலையிலேயே நிலைநின்றிருப்போமாயின் மேலுள்ள காலமெல்லாம் ஸ்வாநுபவமொழிய மற்றும் நோயாயிருப்பதொன்றையும் சேரக்கொடான்; இப்பரமார்த்தத்தை யுனக்குச் சொன்னேன் என்கிறார். .... (௬)

எந்தையேயென்றும் எம்பெருமானென்றும் *
சிந்தையுள்வைப்பன் சொல்லுவன்பாவியேன் *
எந்தையெம்பெருமானென்று வானவர்
சிந்தையுள்வைத்து * சொல்லும்செல்வனையே. (௭)

| | | | |
|---|---|---|---|
| வானவர் | நித்யஸூரிகள் | எந்தையே என்றும் | எந்தையே! என்றும் |
| எந்தை எம்பெருமான் என்று | 'எந்தையே! எம்பெருமானே!' என்று | எம்பெருமான் என்றும் | எம்பெருமானே என்றும் |
| சிந்தையுள் வைத்து | மனத்தினால் சிந்தித்து | சிந்தையள் வைப்பன் | மனத்தில் வைப்பேன்; |
| சொல்லும் | வாயினால் தோத்திரஞ் செய்யப்பெற்ற | சொல்லுவன் | வாயினாலுஞ் சொல்லுவேன், |
| செல்வனை | ஸ்ரீமானாகிய எம்பெருமானை | | |
| பாவியேன் | பாவியாகிய நான் | | |

* * * — [எந்தையேயென்றும்.] "நாஶ்லீலம் கீர்த்தயேத் = ந அச்லீலம் கீர்த்தயேத்" என்று வேதபுருஷன் சொன்னான்; அச்லீலமான விஷயத்தை வாயினாற் சொல்லக்கூடாது என்றபடி. நைச்சியாநுஸந்தானம் பண்ணி அவனை விட்டுப் பிரிதல் என்கிற அச்லீலத்தை இவர் தாமே ¶ ப்ரஸ்தாவித்தமையால் அப்படியே வந்து புகுந்தது; அயோக்யன் என்று அகலுகிறாரிப்பாட்டில். அவனுடைய மேன்மையையும் தம்முடைய தாழ்வையும் பார்த்து * அயர்வறுமமரர்கள் தங்கள் சிந்தையுள்ளே வைக்கவும் தங்கள் வாயாலே துதிக்கவும் வாய்ந்த பெருமானை என் சிந்தையிலும் என் வாக்கிலுங் கொண்டு கெடுத்தேனித்தனை; என்ன பாவியோ நான் என்று தம்மைத் தாமே வெறுத்துக்கொள்ளுகிறார். (௭)

செல்வநாரணனென்ற சொல்கேட்டலும் *
மல்கும்கண்பனி நாவேன்மாயமே *
அல்லுநன்பகலும் இடைவீடின்றி *
நல்கி யென்னைவிடான் நம்பி நம்பியே. (௮)

¶ நான்காம் பாட்டில் "அஞ்சும்போதும்" என்றதனால்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



செல்வம் நாரணன் என்ற சொல் } ஸ்ரீமந்நாராயணன் என்கிற வார்த்தையை
கேட்டலும் — கேட்டவளவிலே
கண் — கண்களானவை
பனி மல்கும் — நீர் ததும்புகின்றன,
நாடுவன் { (எங்குற்றாய் எம்பெருமான்! என்று அவனைத்) தேடாநின்றேன் ;
மாயமே — இது ஆச்சரியமே ;
நம்பி { எல்லாவற்றாலும் நிறைந்த அப்பெருமான்
நல் அல்லும் பகலும் } நல்ல இரவும் பகலும்
இடை வீடு இன்றி } இடைவிடாமல்
நல்கி — கிருபை பண்ணி
நம்பி { என்மேல் விருப்பங் கொண்டு
என்னை விடான்—என்னை விடாதிருக்கிறான்.

* * * — [செல்வநாரணன்.] விலக்ஷணர்கள் தாமே ஈடுபடுதற்குரித்தான பகவத் விஷயத்தில் தாம் ஈடுபடுவது தகாதென்று உறுதிகொண்ட ஆழ்வார், பகவத் விஷயம் நடையாடாததோரிடத்திலே கிடக்கவேணுமென்று போய் ஒரு குட்டிச்சுவரிலே முட்டாக்கிட்டுக் கொண்டு கிடந்தாராம்; அங்கே பெருஞ்சுமை யெடுத்துப்போகிற ஒரு வழிப்போக்கன் சுமை கனத்ததனால் அதனைக் கீழே தள்ளுவான் 'ஸ்ரீமந்நாராயணா!' என்று சொல்லிக்கொண்டே தள்ளினனாக, அச் சொல் செவிப்பட்ட மாத்திரத்திலே தம்முடைய கரணங்கள் மீண்டும் பகவத்விஷயத்தில் ப்ரவணமானபடியைக் கண்டு வியக்கிறார், ஆழ்வாருகில் ப்ராஹ்மசாரி நாராயணன் பேர் சொல்லுவாரிலராதலால் வழிப்போக்கனும் ஸ்ரீமந்நாராயணவென்றே சொன்னனாயிற்று. அச் சொல் காதிற்பட்ட மாத்திரத்திலே கண்கள் பரவசமாய்ப் பனிமல்க, நெஞ்சும் எங்குற்றாயெம்பெருமானென்று தேடப்புகுந்தது; இப்படி நான் அவனை விட்டொழியவேணுமென்று ஸங்கல்பித்தாலும் விடமாட்டாதபடி யாவதற்குக் காரணமேதென்னில்; அவன் என்னை விடமாட்டாமையே என்கிறார்.

[அல்லும் நன்பகலும்.] நல் என்ற அடைமொழி அல்லிலும் பகலிலும் அந்வயிக்கக்கடவது.

தம்முடைய விருப்பமில்லாதிருக்கச் செய்தேயும் தம்முடைய கரணங்களுக்கு பகவதநுபவமே யாத்ரையாம்படி அவன் மேல்விழுகிற காலமாதலால் நல்ல இரவும் நல்ல பகலுமென்கிறார். ... .... ... ... (அ)

நம்பியைத் தென்குறுங்குடிநின்ற * அச்
செம்பொனேதிகழும் திருமூர்த்தியை *
உம்பர்வானவர் ஆதியஞ்சோதியை *
எம்பிரானை யென்சொல்லிமறப்பனோ ? * (கூ)

நம்பியை { கல்யாணகுண பரிபூர்ணனும்
தென் குறுங்குடி நின்ற } திருக்குறுங்குடியிலே நிற்பவனும்
அ செம்பொனே திகழும் திருமூர்த்தியை } அழகிய செம்பொன் போலவே பிரகாசிக்கின்ற திருமேனியையுடையவனும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| உம்பர் வானவர் | மேலான நித்ய ஸூரிக ளுக்கு | எம் பிரானை | எம்பெருமானை |
| ஆதி | காரணபூதனும் | என் சொல்லி | என்னவென்று |
| அம் சோதியை | அழகிய ஒளியுருவனுமா கிய | மறப்பன் | மறப்பேன். |

* * * — [நம்பியை.] அவன் விடாதிருந்தாலிருக்கட்டும்; நீர் அவனை மறந்து ஸம்ஸாரிகளைப் போலே * உண்டியே உடையே உகந்தோடித் திரியமாட்டீரோ வென்ன, நான் எதையிட்டு அவனை மறப்பது? மறக்கும்வகை தெரியவில்லையே யென்கிறார்.

நம்பியைத் தென்குறுங்குடிநின்ற = பரமபதத்திலும் எம்பெருமான் ஸகல குணங்களும் நிரப்பப்பெற்றவனாயினும் அங்கு எம்பெருமானிற் குறைந்தாரில் லாமையாலே வாத்ஸல்யம் ஸௌசீல்யம் முதலிய எண்ணில் பல்குணங்கள் உப யோகப்படாமே கிடந்து இந்நிலத்தில் அர்ச்சாவதாரங்களில் இருட்டறையில் விளக்குப்போலே பிரகாசிப்பன வாதலால், பரிபூர்ணன் என்னும் பொருளை யுடைய நம்பி என்னுஞ் சொல் அர்ச்சாவதாரத்திலே அமையக்கிடக்கின்ற தென்க.

அச் செம்பொன் = பத்துப் பாட்டுள் பெரும்பாணாற்றுப் படையில் "அவ் வாய் வளர்பிறை" என்பதற்கு "அழகிய இடத்தையுடைய வளரும் பிறை" என்றும், நெடு நல்வாடையில் "அவ்விதழவிழ்பதம்" என்பதற்கு "அழகிய இதழ்கள் விரியுஞ் செவ்வி" என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரையெழுதிப் போந்தமை கொண்டு இங்கு "அச் செம்பொன்" என்பதற்கு "அழகிய செம் பொன்" என்று பதவுரை கூறப்பட்டது. இனி, அகாரத்தைச் சுட்டாகக் கொண்டு உரைத்தலுமாம்.

அயர்வறுமமரர்களோடேகூடத் திருக்குறுங்குடியிலே நின்றருளித் தன் னுடைய ஒப்பற்ற வடிவழகைக் காட்டி என்னைத் தோற்பித்துத் தன் பக்கலிலே விழவிட்டுக்கொண்டான்; இனி எங்ஙனே அவனை நான் மறக்கும்படி? பூர்த்தி யில்லாதவனென்று மறக்கவோ? ஸமீபஸ்தனல்லன் என்று மறக்கவோ? வடி வழகில்லையென்று மறக்கவோ? மேன்மையில்லையென்று மறக்கவோ? எனக்கு உபகாரஞ் செய்பவனல்லன் என்று மறக்கவோ? எதையிட்டு மறப்பேனென் கிறார்.

குறுங்குடி = இது பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று. குறுகியவனான வாமனனது க்ஷேத்ரமாதலால் இத் தலத்திற்குக் குறுங்குடி யென்று பெயர் வந்ததென்பர். இத்தலத்திலுள்ள எம்பெருமான்களுள் ஒரு எம்பெருமான் ஸ்ரீபாஷ்யகாரர் பக்கலிலே திருமண்காப்பு சாத்திக்கொண்டு வேதாந்தார்த்தமுங்கேட்டு சிஷ்யனாய் 'நாமும் நம்மிராமாநுசனையுடையோம்' என்கையாலே அப்பெருமாளுக்கு வைஷ்ணவநம்பி யென்று திருநாமம். ஆனது பற்றியே 'வைஷ்ணவ வாமந க்ஷேத்ரம்' என்றும் இத்தலம் வழங்கப்படும். நம்மாழ்வார் திருவவதாரத்திற்குக் காரணமாயிருந்தவரும் இத்தலத்து நம்பியே,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



செம்பொனேதிகழுந் திருமூர்த்தி = எம்பெருமானுடைய வடிவு காளமேக நிபச்யாமமென்று வருணிக்கப்படாநிற்க, 'செம்பொனே திகழுந் திருமூர்த்தி' என்று இங்குச் சொன்னது தேஜஸ்ஸின் மிகுதியைப் பற்றவென்க. "கநகமரகதாஞ்ஜநத்ரவாணாம் மதநஸமுத்தித ஸாரமௌநோத்தம் | ஜயதி கிமபி ரூபமஸ்ய தேஜ: = கநகமரதகாஞ்ஜநத்ரவாணும் மதநஸமுத்தித ஸாரமௌநோத்தம், ஜயதி கிமபி ரூபமஸ்ய தேஜ:" என்ற ஸுந்தரபாஹுஸ்தவ ஸூக்தியும், "த்ருதகநகஜகிரிபரிமிலதுததிப்ரசலிதலஹரிவதஹமஹிமிகயா | ஸ்நபயதி ஜகதிம பபஹாதி தம: பணிசயமரதக மணிகிரணகண: = த்ருதகநகஜகிரிபரிமிலதுததிப்ரசலிதலஹரிவதஹமஹிமிகயா, ஸ்நபயதி ஜகதிம பபஹாதி தம: பணிசயமரதக மணிகிரணகண:" என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்தியும் காணத்தக்கன. (௯)

மறப்பும்ஞானமும் நானொன்றுணர்ந்திலன் *
மறக்குமென்று செந்தாமரைக்கண்ணொடு *
மறப்பறவென்னுள்ளே மன்னினான்தன்னை *
மறப்பனோ வினி யானென்மணியையே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| மறப்பும் ஞானமும் ஒன்று | மறத்தலும், அறிதலுமாகிய ஒன்றையும் | மறப்பு அற | மறப்புக்கு அவகாசமில்லாதபடி |
| நான் உணர்ந்திலன் | நான் அறியேன்; (இப்படியிருக்க) | என் உள்ளே | எனது நெஞ்சினுள்ளே |
| | | மன்னினான் தன்னை | நிலைபெற்றிருந்தவனை |
| மறக்கும் என்று | இவன் நம்மை மறந்துவிடுவன் என்று நினைத்து | என் மணியை | எனது நீலரத்னமாகிய எம்பெருமானை |
| செம் தாமரை கண்ணொடு | செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களோடு | இனி யான் மறப்பனோ | இனி நான் மறப்பேனோ? (ஒருநாளும் மறவேன்.) |

* * * — [மறப்பும் ஞானமும்.] வருந்தியாகிலும் அவன் பக்கலில் நின்றும் நெஞ்சை மீட்டு அவனை மறந்திருந்தாலோவென்ன, தன்னை நான் மறவாமைக்காகத் தன்னுடைய அழகிய திருக்கண்களோடேகூட என்னுள்ளே புகுந்து எனக்கு மிகவுமெளியனாய்க்கொண்டு 'இனிப் பேரேன்' என்றிருந்தருளினனாதலால் அவனை நான் மறக்கவிரகில்லையே யென்கிறார்.

மறப்பும் ஞானமும் நானொன்று உணர்ந்திலன் = மறப்பென்றும் ஞானமென்றும் ஒன்றுமறிந்திலேன்நான். நான் ஒரு சேதநனாயிருந்து, நினைத்தது என் அதீனமாயிருந்தாலன்றோ மறப்பும் என்னதீனமாவது; அசித்கல்பனாயன்றோ நானிருந்தது. இப்படிப்பட்ட நான் நினைந்தேனாகவும் நினைவையும் என் தலையிலே யேறிட்டு 'பிறந்த ஞானத்திற்கு இடைவீடு வரவொண்ணாது' என்றுபார்த்து அழகிய திருக்கண்களாலே குளிர நோக்கிக்கொண்டு தன்னைப் பற்றி யெனக்குவரும் மறப்புப்போம்படி என்னுள்ளத்தினுள்ளே நித்யவாஸம் பண்ணுகிறவனை எங்ஙனே மறப்பேன்?

ஈற்றடிக்கு ஈடுகாண்மின்—; "பெருவிலையனாரத்னம் கைபுகுந்தால் அத்தைமுடிந்து அநுபவியாதே உதறுவர்களோ;" .... ... (௧௦)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மணியைவானவர்கண்ணனைத் தன்னதோ
ரணியை * தென்குருகூர்ச்சடகோபன் * சொல்
பணிசெயாயிரத்துள் இவைபத்துடன் *
தணிவிலர்கற்பரேல் கல்விவாயுமே. (கக)

| | | | |
|---|---|---|---|
| மணியை | நீலமணிபோன்றவனும் | ஆயிரத்துள் | ஆயிரத்தினுள் |
| வானவர் கண்ணனை | நித்ய ஸூரிநாதனும் | இவை பத்து | இப்பத்துப் பாட்டையும் |
| தன்னது ஓர் அணியை | தனக்குத்தானே ஓராபரணமா யிருப்பவனுமான பெருமானைக் குறித்து | உடன் | கருத்துடன் |
| | | தணிவு இலர் | த்ருப்தி பெறுதவர்களாய் |
| தென் குருகூர் சடகோபன்—; | | கற்பர் எல் | கற்பாராயின் [அவர்களுக்கு) |
| சொல் பணி செய் | வாசிக கைங்கரியஞ்செய்த | கல்வி வாயும் | ஞானம் நிரம்பும். |

* * * — [மணியை] இப்பதிகத்தைக் கற்பவர்கள் ஒப்புயர்வற்ற புருஷார்த்தமான பகவத் கைங்கரியத்தைப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது.

மணியை=மணிக்கும் எம்பெருமானுக்கும் ஒப்புமை பலபடிகளாலே சொல்லத் தகுதியுண்டு. மணியாவது ரத்னம்; அது தன்னைப் பெற்றவர்களையும் பெற விருப்பமுடையாரையும் இரவும் பகலும் கண்ணுறங்கவொட்டாது; எம்பெருமான் படியுமப்படியே; "கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதலே" என்கிறபடியே காண்பதற்குமுன்பு முமுக்ஷுக்களையுறங்கவொட்டான்; கண்டபின்பும் * ஸதாபச்யந்தியாகையாலே நித்யமுக்தர்களை உறங்கவொட்டான்.

ரத்னம் எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் தலைப்பில் முடிந்து ஆளலாம்படியிருக்கும்; எம்பெருமானும் பரத்வத்தை மறைத்து ஸௌலப்யத்தைக் காட்டுவனிறே.

ரத்னம், கடல் மலை முதலிய இடங்களில் உள்ளது; எம்பெருமானும் திருப்பாற்கடல் திருமலை முதலான இடங்களில், "மலைமேல் நிற்பாய் கடல் சேர்ப்பாய்." என்கிறபடியே.யுளன்.

ரத்னமானது தன்னையுடையவனை மார்பு நெறிக்கப்பண்ணும்;எம்பெருமானுமப்படியே; "எனக்காரும் நிகரில்லையே" "மாறுளதோவிம்மண்ணின்மிசையே" "எனக்கென்னினி வேண்டுவதே" "இல்லையெனக் கெதிரில்லையெனக் கெதிரில்லையெனக்கெதிரே" என்று செருக்கிப் பேசுவர்களிறே எம்பெருமானையுடையார்.

ரத்னமானது தன்னைக் கைக்கொண்டவனை உலகமெல்லாம் அநுவர்த்திக்கும்படிபண்ணும்; எம்பெருமானுமப்படியே; ஜைத்ரேயஃவரிவரூரணிவஆாவிவாஷ்வ=மைத்ரேயஃ பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்ய ச" இத்யாதிகள் காண்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ரத்னமானது இடையில் ஒருபுருஷனைக்கொண்டே வாங்கப்படும்; எம்பெருமானுமப்படியே; புருஷாகாரமின்றிப் பெறமுடியாதிறே எம்பெருமானை; "வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம்பணிந்து" இத்யாதி.

ரத்னமானது சிலசில ஆச்ரயங்களில் அதிகமான மதிப்புப் பெறும்; எம்பெருமானுமப்படியே, ஆழ்வார்கள் திருவாக்கில் புகுந்து புறப்பட்ட திருப்பதிகளிலேயிறே எம்பெருமானுக்கு மதிப்பு அதிகம்.

ரத்னம் ஒளியைவிட்டு இராது; எம்பெருமானும் பிராட்டியைவிட்டு இரான்; "தெவதெவ தெவதெஹெயம் மநுஷ்யெவச மாநுஷீ = தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ" இத்யாதிகள் காண்க.

ரத்னமானது ஒளியால் மேன்மைபெறும்; எம்பெருமானும் பிராட்டியால் ஏற்றமுடையான்; "ஸ்ரீயஃபதிவொ தெவதுஷஸ்ரூதெ" என்றான் வேதபுருஷன். இராவணன் மாரீசனிடம் வந்து 'இராமனை அடர்க்க நீ துணைநிற்க வேணும்' என்று இரக்க, "அப்ரமெயஂஹி தத்தெஜொ யஸ்ய ஸா ஜநகாத்மஜா = அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்றன்றோ விடைகூறினது; 'ஸீதாபிராட்டியைக் கைப்பிடித்தவனன்றோ இராமபிரான்; அவனை அடர்க்கலாகுமோ?' என்றான்.

ரத்னமானது தன்னையிழந்தவனைக் கதறிக்கதறியழப்பண்ணும்; எம்பெருமானுமப்படியே; ஸ்ரீராமரத்னத்தை யிழந்த பரதாழ்வான் ஸபையிற் புரண்டு கதறியழுதமை ஸ்ரீராமாயணப்ரஸித்தம். 'பழுதே பலபகலும் போயின' வென்று கதறியழுவர் விவேகமுடையார்; 1. "இன்பத்தையிழந்த பாவியேனென தாவி நில்லாதே" 2. "எழில்கொள் நின்திருக் கண்ணிணை நோக்கந் தன்னையுமிழந்தேனிழந்தேனே" 3. "உன்னைக்காண்பான் நானலப்பாய் ஆகாயத்தை நோக்கியழுவன்" என்றபடி யெல்லாம் கதறுவர்கள்—இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்கள் கண்டுகொள்க.

வானவர்கண்ணனை=கீழ் 'மணியை' என்பதனாற்சொன்ன எளிமைக்கு எதிர்த்தட்டான மேன்மை இதனாற் சொல்லப்படுகிறது. பரத்வத்தைக்கண்டு அஞ்சுமவர்கட்கு ஸௌலப்யத்தை மூதலிப்பதும், ஸௌலப்யத்தை நோக்கி அநாதரிக்க நினைப்பார்க்குப் பரத்வத்தை நிரூபணம்பண்ணித் தெளிவு பெறுவிப்பதுமேயன்றோ ஆழ்வார்களுக்குப் பணி.

தன்னதோரணியை=தனக்குத்தானே ஆபரணமாயிருப்பவன். பெருமாள் ஆபரணங்கள் அணிந்துகொள்வது அவ்வாபரணங்களுக்கு அழகு கொடுக்கைக்காகவேயல்லது அவற்றால் தான் அழகுபெறுவதற்கன்றே. "ஆபரணத்துக்கு அழகுகொடுக்கும் பெருமாள்!" என்று அழகியமணவாளனுக்குக் கட்டியம். "கிஂநு ஸ்வயஂ ஸ்வாத்மவிபூஷணஂ பவந் அஸாவலங்காரு இதீரிதொ ஜநைஃ = கிம் நு ஸ்வயம் ஸ்வாத்மவிபூஷணம் பவந் அஸாவலங்கார இதீரிதோ ஜநை:" என்ற ஸுந்தரபாஹுஸ்தவமுங் காண்க.

---

1. பெருமாள் திருமொழி. 2. பெருமாள் திருமொழி. 3. திருவாய்மொழி 5—8—4.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயமாக நம்மாழ்வார் வாக்கினாலே அடிமை செய்ததாகிய ஆயிரத்தினுள் இத்திருவாய்மொழியைக் கருத்துடன் கற்பவர்கட்கு ஞானபலம் கைகூடும் என்றதாயிற்று.

கல்வி வாயும் என்பதற்கு இரண்டுவகையாகப் பொருளுரைப்பர்; ஞானமுண்டாகுமென்பது ஒரு பொருள்; ஞானம் ஸபலமாகுமென்பது மற்றொரு பொருள். "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிறபடியே ஞானமானது பகவத்விஷயத்தைப்பற்றினதாகவே யிருக்குமாதலால் அது ஸபலமாகையாவது கைங்கர்ய பர்யந்தமாகை. .... .... (கக)

முதற்பத்து முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:.

## திருவாய்மொழி முதற்பத்தின் ஸாரமான கருத்து.

பரத்பரனான எம்பெருமான் தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலே ஆழ்வார்க்கு அஜ்ஞானத்தைப்போக்கி, பக்தியாக வடிவெடுத்த ஞானத்தைக் கொடுத்து, இன்னமுமிவர் நம்மை மறந்துபோய்விடக்கூடுமென்றெண்ணி அங்ஙனம் மறவாமைக்காக இடைவிடாதே தம்முடைய ஹ்ருதயத்திலே நிரந்தரவாஸம் பண்ண, அத்தாலே நிஷ்களங்கமான தத்வஜ்ஞானத்தை யுடையரான ஆழ்வார் அவனுடைய திருக்கல்யாண குணங்களைத் தமது திருவுள்ளத்தோடே அநுபவித்து, அவ்விஷயம் தனியிருந்து அநுபவிக்கவொண்ணாமையாலே ஸம்ஸாரிகளையுங் கூட்டிக்கொண்டு பெருந்திரளாயிருந்து அநுபவிக்க விரும்பி அவர்களைப் பார்த்து த்யாஜ்யமான ஸம்ஸாரத்தின் தோஷத்தையும் உபாதேயமான பகவத்விஷயத்தின் குணத்தையும் அவ்வெம்பெருமானை பஜிக்கவேண்டிய ப்ரகாரத்தையும் பஜநத்திற்குப் பற்றுக்கோடான திருமந்திரத்தையுமுபதேசித்து, பஜநீயனான அவனுடைய ஸௌலப்யகுணமென்ன, அபராதங்களைப் பொறுக்குந் தன்மையென்ன, நீசர்களோடுங் கலந்து பரிமாறும் சீலகுணமென்ன, எளிதாக ஆராதிக்கக்கூடியவனாயிருக்குந் தன்மையென்ன, ஆச்ரயணம் போக்யமாயிருக்கப்பெற்ற தன்மையென்ன, கோணலே வடிவெடுத்த ஸம்ஸாரிகளோடும் செவ்வியனாய்ப் பரிமாறுகையாகிற ருஜுத்வகுணமென்ன, தன்னுடைய போகங்களைப் பொறுக்கப் பொறுக்க அடைவே கொடுத்தருளுந் தன்மையென்ன, பரமபக்திபரிகணைகளுக்கு ஒக்க முகங்காட்டுகையாகிற ஸாம்யமென்ன ஆகிற இக்குணங்களை ஒவ்வொரு திருவாய்மொழியாலும் நிரூபணஞ் செய்யாநின்றுகொண்டு அவ்வழியாலே பஜநத்தினுடைய ஸௌகர்ய போக்யதைகளையும், பஜிக்கவே ஸகல பலன்களும் கைகூடுமென்பதையும் பஜிக்கத் தொடங்கும்போதே பஜநவிரோதிகளெல்லாம் தொலைந்தொழியு மென்பதையும் அறிவித்து, ஆனபின்பு ஸ்ரீகீதையில் அவனருளிச்செய்த பக்திமார்க்கத்திலே நின்று தேவதாந்தரங்கள் பக்கலில்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பாரதவசங்கையைத் தவிர்த்து அவன் விஷயமான ஞானத்தைக்கொண்டு அவன் பக்கலிலே அநந்யப்ரயோஜந பக்தியைப் பண்ணுங்கோளென்று, தமக்கு அவன் மயர்வறமதிநலமருளினப்போலே தாமும் இந்த ஸம்ஸாரிகளுக்கு அஜ்ஞாந நிவ்ருத்தி பூர்வகமாக ஜ்ஞானபக்திகளை உபதேசத்தாலே உண்டாக்கி பஜநத்திலே மூட்டுகிறார் முதற்பத்தினால்.

— இதற்கு ஆசார்யஹ்ருதய சூர்ணிகை வருமாறு —

"பரபரனாய்நின்ற வளவேழ் வைப்பாமவன் அவையுளும்பர்வானவரதிபதி மயர்வறமன்னி மனம்வைக்கத் திருத்தி மறக்குமென்று நல்கிவிடாதே மன்ன, அயர்ப்பிலனறுத்தேன் என்சொல்லி மறப்பனோ வென்னும்படி தத்வஜ்ஞானவர் சுடரடியெம்பிரானை விடாதுகண்டாய் நீயும் நானுமென்கிற ஸஹ்ருதயாநுபவம் ஸம்ஸாரிகளுக்குமாம்படி வீடுமினென்று த்யாஜ்யோபாதேய தோஷகுண பரித்யாக ஸமர்ப்பண க்ரமத்தை ஸாலம்பநமந்த்ரமாக உபதேசித்து எளிதாகவவதரித்துப் பிழைகளை ஸஹித்துப் புரையறக்கலந்து அல்ப ஸந்துஷ்டனாய் அம்ருதமே ஔஷதமாக்கி நீர் புரையத் தன்னை நியமித்து போகத்தை ஸாத்மிப்பித்து பக்திகணைகளுக்கு ஒக்கவருமவனுடைய ஸேவைக்கு எளிமையுமினிமையுமுண்டு, தொழுதால் அரும்பயனாய தரும், உத்யோகத்தே வினைகளும் மாளும், அவனுரைத்த மார்க்கத்தேநின்று இருபசை மலமறவுணர்வுகொண்டு நலஞ்செய்வதென்று தாம் மயர்வற மதிநலமருளி பஜநத்திலே சேர்க்கிறார் முதற்பத்தில்." ... ... .... .... ... (*)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யார்த்த தீபிகையுடன் கூடிய திருவாய்மொழியில்
முதற்பத்து முற்றிற்று.





CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



## திருவாய்மொழி நூற்றந்தாதி.

பொருமாழி சங்குடையோன் பூதலத்தே வந்து
தருமாறே ரேதுவறத் தன்னைத் — திரமாகப்
பார்த்துரைசெய் மாறன் பதம்பணிக வென்சென்னி
வாழ்த்திடுகே வென்னுடைய வாய்.

### பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| பொரும் | (பகைவர்மீது) போர் புரியாநிற்கிற | திரம் ஆக | ஸ்திரமாக |
| ஆழி | திருவாழியையும் | பார்த்து | ஸாக்ஷாத்கரித்து |
| சங்கு | சங்கையும் | உரை செய் | அருளிச்செய்த |
| உடையோன் | (திருக்கையில்) உடைய எம்பெருமான் | மாறன் | ஆழ்வாருடைய |
| பூதலத்தே வந்து | இப்பூமியில் வந்தவதரித்து | பதம் | திருவடிகளை |
| ஓர் ஏது அற | ஒரு ஹேதுவுமில்லாமல் (நிர்ஹேதுகமாக) | என் சென்னி | என் தலை |
| தன்னை தரும் ஆறு | (அடியார்க்குத்) தன்னை (அநுபவிக்க)த் தருகிற படியை | பணிக | வணங்குக; |
| | | என்னுடைய வாய் | எனது வாக்கானது |
| | | வாழ்த்திடுக | (அத்திருவடிகளுக்கே) மங்களாசாஸனஞ் செய்க. |

இத்திருவாய்மொழியில் எம்பெருமான் வந்து ஸர்வாங்க ஸம்ச்லேஷம் செய்தருளினபடியை அநுஸந்தித்த ஆழ்வார் 'இப்பேற்றுக்குத்தகுதியாக நம்மால் செய்யக்கூடிய உபாயாம்சம் உண்டோ?' என்று ஆராய்ந்துபார்த்தவளவில் ஒரு ஸாதநமுமின்றியே நிர்ஹேதுகமாக விசேஷகடாக்ஷஞ் செய்தருள்வதே எம்பெருமானுடைய இயல்பு என்பதைக் கண்டறிந்து அவ்விஷயத்தைப் *பொருமா நீள்படை யென்னுந் திருவாய்மொழியிலருளிச்செய்தாரென்றதாயிற்று. ... .... ... (கo)

---

### த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ச்லோ॥ ஊத்தம் ஶ்ரிய:பதிக்ருதஸ்வஸமஸ்தஸ்வைஹ
ஸம்ஶ்லேஷலக்ஷணஹவஸ்ய ஸாதநஸ்ய ।
ஹேத்வாதிகம் ஸ்வமணநேவிவ தத்வஸாதா:
நிர்ஹேதுகத்வமவதஷ்டமுநே ஶதாரி: ॥

(கருத்து) இத்திருவாய்மொழியிற் கூறியபடி எம்பெருமான் பெறுப்பேறுகச் செய்தருளின ஸர்வாவயவ ஸம்ச்லேஷம் நிர்ஹேதுகமென்பதை இப்பத்தாந் திருவாய்மொழியில் நம்மாழ்வாருளிச்செய்தார். பக்திக்குப் போலப் பரிகணங்களுக்கும் எம்பெருமான் முகங்காட்டுமவனாதலால் அவனது அநுக்ரஹம் நிர்ஹேதுகமென்பது திண்ணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# முதற்பத்தின் அடிவரவு.



1. உயர் மன விலன் நாம் அவரவர் நின்றனர்
திட சுரரறி யுளன் பரந்த கர வீடு.
2. விடுமின் மின் நீரில்ல தற்ற பற்று,
அடங் குள்ள மொடுங்க எண்பெரு சேர் பத்து.
3. பத்துடை யெளிவரு மனமவுடை யாருமோர்
பிணக்கற வுணர்ந்துணர் தொன்றெனை நாளுநின்
வலத்தனன் துயக்கறு அமரர்க ளஞ்சிறை.
4. அஞ்சிறை யென்செய்ய விதியினு லென்னீர்மை
நல்கி யருளாத என்பிழை நீயலே
நாடாத வுடலாழி யளவியன் வளவேழ்.
5. வளவேழ் நினைந்து மாயோனி தானோர்
மானேய் வினையே னடியே னுண்டாய்
மாயோம் சார்ந்த மாலே பரிவது.
6. பரிவது மதுவா ரீடு மணங்கென
கொள்கை யமுதம் நீள்கடல் கழிமின்
தரும கடிவார் மாதவன் பிறவி.
7. பிறவி வைப்பா மாயர் மயர்வற
விடுவேனோ பிரான் யானெட்டி யென்னை
அமர ரகலில் குடைந்துவண் டோடும்.
8. ஓடு மம்மானாய் கண்ணாவான் வெற்பை
வைகலுங் கலந்து கொண்டா ஞானன்
சங்கு நாதன் நீர்புரை யிவையும்.
9. இவையுஞ் சூழ லருகலி லுடனமர்
ஒக்கலை மாயனென் றோளிணை நாவினுள்
கமல நெற்றியு ளுச்சியுள் பொருமா.
10. பொருமா கண்ணுள் எம்பிரானை நெஞ்சமே
கண்டாயே நீயு மெந்தையே செல்வன்
நம்பியை மறப்பும் மணியை வாயும்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் அருளிச்செய்த

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளீ.



[பெருமாள்கோயில் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்
இயற்றிய உரையுடன் கூடியது.]



𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌃 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌕𑍇𑌸𑌰𑍀 |
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑍋 𑌮𑍇 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌸𑌦𑌾 𑌹𑍃𑌦𑌿 ||



𑌸𑌾𑌰𑌸𑍍𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑌾𑌨𑌾𑌂 𑌶𑌠𑌰𑌿𑌪𑍁𑌫𑌣𑌿𑌤𑌿𑌶𑍍𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌸𑍀𑌮𑌾
𑌮𑌾𑌯𑌾𑌮𑌾𑌯𑌾𑌮𑌿𑌨𑍀𑌭𑌿𑌃 𑌸𑍍𑌵𑌗𑍁𑌣𑌵𑌿𑌤𑌤𑌿𑌭𑌿𑌰𑍍𑌬𑌨𑍍𑌧𑌯𑌨𑍍𑌤𑍀𑌂 𑌧𑌯𑌨𑍍𑌤𑍀 |
𑌪𑌾𑌰𑌂 𑌪𑌾𑌰𑌮𑍍𑌪𑌰𑍀𑌤𑍋 𑌭𑌵𑌜𑌲𑌧𑌿𑌭𑌵𑌨𑍍𑌮𑌜𑍍𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 𑌜𑌨𑌾𑌨𑌾𑌂
𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌯𑍇𑌣𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌨𑌿𑌯𑌤𑌰𑌸𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌨𑌂 𑌨𑍀𑌯𑌤𑌾𑌂 𑌨𑌃 ||

(உரை.) [சடரிபுபணிதி: ஸாரஸ்வதாநாம் ஸார:.] நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியானது ஸகல வாக்குக்களுள்ளும் ஸாரமானது. ஸாரக்ராஹிகளாகவுள்ளவர்கள் திருவாய்மொழியையே பரிக்ரஹிக்கவேணு மென்றவாறு. [சாந்தி சுந்தாந்த ஸீமா.] சாந்தி ரஸத்திற்கு அந்த:புரஸ்தானம் நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தி யென்றபடி பக்திரஸமே சாந்திரஸமெனப்படும். திருவாய்மொழியில் நவரஸங்களும் நிரம்பியிருந்தாலும் பக்திரஸமே ப்ரதானமென்க. அந்த ரஸம் திருவாய்மொழியில்தான் ஒப்புயர்வற்று விளங்குகின்றதென்றும் வேறு நூல்களில் இங்ஙனே தலைகாட்டமாட்டாதென்றும் விளங்குதற்காக "சுத்தாந்த ஸீமா" எனப்பட்டது. திருவாய்மொழி இன்னமும் எப்படிப்பட்டதென்றால், [ஆயாமிநீபி: ஸ்வகுணவிததிபி: பந்தயந்தீம் மாயாம் தபந்தீ.] பரவிச் செல்லுகின்ற ரஜஸ்தமோகுண விஸ்தாரங்களினால் எல்லாரையுங் கட்டுப்படுத்துகின்ற ப்ராக்ருதியைப் பானம்பண்ணவல்லது (அதாவது) போக்கடிக்கக்கூடியது. திருவாய்மொழியை ஓதுமவர்கள் சுத்தஸாத்விகர்களாய் ரஜஸ்தமோகுண தூரஸ்தர்களாய் அப்ராக்ருதப்ராயர்களாய் விளங்குவர்க ளென்றபடி. (𑌧𑌯𑌨𑍍𑌤𑍀 = '𑌧𑍇𑌟𑍍 𑌪𑌾𑌨𑍇' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌤𑍋𑌃 𑌶𑌤𑍃𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌃.) திருவாய்மொழி இன்னமும் எப்படிப்பட்டதென்னில், [பாரம்பரீத: பவஜலதிபவந்மஜ்ஜநாநாம் ஜநாநாம் பாரம்.] இடைவீடின்றி அநாதிகாலமாக ஸம்ஸாரக்கடலில் மூழ்கிக்கொண்டிருக்கின்ற ஜனங்களுக்குக் கரையாகவுள்ளது. திருவாய்மொழியை ஓதாதவர்கள் பிறவிக் கடலில் நின்று ஒருநாளுங் கரையேறாதே கிடந்து துவள்வர்களென்றபடி, "ஆக

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த திருவாய்மொழியானது, [ப்ரத்யக் ப்ரதிநியதர மாஸந்நிதாநம் நிதாநம் ந: ப்ரத்யக்ஷயேத்.] ஆழ்வாருடைய ஸம்ப்ரதாயத்திலே நிஷ்டரான நமக்கு ஸ்வயம்ப்ரகாசனுப் பிராட்டியோடு பிரிவில்லாதவனுன எம்பெருமானுகிற நிதியை ஸாக்ஷாத்கரிப்பிக்கக்கடவது. * வைத்தமாநிதியாம் மதுசூதனன் திருவாய்மொழியில் எழுத்துத்தோறும் பொதிந்து கிடக்கின்றானென்பதும், திருவாய்மொழி யோதாதவர்களுக்கு இந்த மஹாநிதி துர்லபமென்பதும் இதனுல் ஸூசிதம். .... .... .... .... .... (க)

ப்ரஜ்ஞாக்²யே மந்த²ஶைலே ப்ரதி²தகு³ணருசிம் நேத்ரவத் ஸம்ப்ர [தா³யம்

தத்தல்லப்³தி⁴ப்ரஸக்தைரநுபதி⁴ விபு³தை⁴ரர்தி²தோ வேங்கடேஶ: |

த்⁴ருத்வம் கல்பாந்தயூநா ஶ்ருதிஜலதி⁴நிஷ்க்ருஷ்டஸிந்து⁴ம் விமத்²ய

க்³ரத்²நாதி ஸ்ரக்³த⁴ராயாம் ஹரிரஸமது⁴ரம் ரத்நஜாதம் ||

இது சிலேடையாக அருளிச்செய்யப்படுவது. திருவேங்கடமலைக்கு இறைவனுன எம்பெருமான் விபுதர்களாகிய தேவர்களாலே வேண்டப்பெற்றுத் திருப்பாற்கடலைக் கடைந்து அதில் ஸாரமான அமுதத்தை அவர்களுக்கு அளித்ததுபோல, வேங்கடேசரென்று திருநாமம்பூண்ட வேதாந்தாசாரியராகிய நாமும் விபுதர்களான பண்டிதர்களாலே பிரார்த்திக்கப்பட்டுத் திருவாய்மொழியாகிற திருப்பாற்கடலைக் கடைந்து அவ்வாயிரம் பாசுரங்களிலுமுள்ள ஸாரார்த்தங்களாகிற ரத்னங்களை ஸர்வாநுபாவ்யமாகச் செய்யாநின்றேமென்கிறார்.

எம்பெருமான் கடலைக்கடைவதற்கு மந்தர பர்வதம் மத்தாக இருந்து வாஸுகி கடைகயிறாகவிருந்தது. இங்கு ஸ்ரீதேசிகன் தம்முடைய விலக்ஷணமான ஞானத்தை மத்தாகக்கொண்டார். ப்ரஸித்தகுண சோபையையுடைத்தான ஸம்பிரதாயத்தைக் கடைகயிறாகக் கொண்டார். “வடிவுடைவானோர் தலைவனே” என்கிறபடியே ஆலிலை, திருப்பாற்கடல் முதலான ப்ரஸித்த ஸ்தலங்களோடொக்கத் திருவாய்மொழியும் ப்ரளயகாலந்தன்னிலும் யுவாவாயிருக்கிற எம்பெருமானுக்கு உறைவிடமாதலால் அவனுக்குத் திருப்பாற்கடலும் ஒரு படுக்கைப்பற்று, திருவாய்மொழியும் ஒரு படுக்கைப்பற்று. “நமாம்யஹம் த்ராவிட வேதஸாகரம்” என்றதும் காண்க. கடலில் பலபல அலைகள் மோதுமாபோலே திருவாய்மொழிக்கடலிலும் ஆயிரம் பாசுரங்களாகிற அலைகள் மோதுகின்றன. கடலலைகள்தோறும் ரத்னங்கள் கொழிக்கப்பெறும்; இப்பாசுரவலைகளில் பரமபோக்யமான அர்த்த ரத்னங்கள் ததும்பும். அப்படிப்பட்ட அர்த்த ரத்னங்கள் பகவத்குணரஸிகர்களுடைய ஹ்ருதயத்திலே தாரணீயங்களாகுமாறு அவற்றை ஸ்ரீதேசிகன் தாம் ஒரு ஹாராவளியாகக் கோத்தருளுகிறார். [நேத்ரவத்] நேத்ரமென்று இங்குக் கடைகயிற்றுக்குப் பெயர். ... ... (உ)

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஆடவர்களிற் சிறந்தவராக அவதரித்துள்ள ஆழ்வார் பெண்மைதோற்றப் பல பாசுரங்கள் அருளிச்செய்தபடி எங்ஙனே? ச்ருங்காரரஸ ப்ரக்ரியையில் பெரும்பாலும் பாசுரங்கள் அமைந்தபடி எங்ஙனே? கலவியும் பிரிவுமாகச் சொல்லுகிறவற்றுக்குக் கருத்தென்ன? பறவைகளைத் தூதுவிடுவதாகச் சொல்லப்படுகிறதற்குத் தாற்பரியமென்ன? என்கிற இந்த நான்கு விஷயங்களுக்கும் ஸமாதான மருளிச்செய்கிறார் இந்த ச்லோகத்தில். “[illegible] | யாஃ ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ்தாஃ வும்ஹாவம் உநஸா யயுஃ ||” என்று ஸ்ரீ மஹாபாரதத்திற் கூறியபடியே, த்ரௌபதி நீராடும்போது அவளுடைய அவயவ சோபையைக் கண்ட ஸஜாதியைகளான ஸ்த்ரீகள் மனத்தில் புருஷபாவனையைப் பெற்றுவிட்டார்களென்றது போல ஆழ்வாரும் புருஷோத்தமனான எம்பெருமான் திறத்திலே ஸ்த்ரீபாவனையை யடைந்தது பொருந்தும்; நாயகன் திறத்தில் நாயகி எங்ஙனம் பாதந்திரப்பட்டவளோ அங்ஙனம் பகவத்விஷயத்திலே தாம் ஸர்வாத்மநா பாரதந்திரியம் வஹித்தவர் என்பதைக் காட்டுவதில் மாத்திரம் நோக்காக ஸ்த்ரீபாவனை பேணப்பட்டதென்க. பக்திரஸமே ச்ருங்காரரஸ ஸமாதியில் வடிவெடுத்தது; லௌகிகர்களையும் ஒருவாறு ஆவர்ஜநம் செய்வதற்காக இங்ஙனே ஆயிற்று. [கடுத்தின்னுதாரைக் கட்டிபூசித் தின்பிப்பதுபோல.] ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் ஆழ்வார்க்கு மாறி மாறி நடக்கும். மாநஸ ஸாக்ஷாத்கார வைசத்யமே ஸம்ச்லேஷமெனப்படும். அப்போது பாஹ்ய ஸம்ச்லேஷாபேக்ஷையுண்டாகி அது கிடையாமையினாலான வருத்தத்தினால் அந்த ஸாக்ஷாத்காரம் சுருங்கும், அதுவே இவர்க்கு விரஹம். அந்த நிலைமையில் வடகர்களான ஆசார்யர்களே கொக்கு நாரை அன்னம் கிளி பூவை முதலான பறவைகளாகத் தூதுவிடப்படுகின்றனர். .... ... (ரு)

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ||

ஸம்ஸ்க்ருதபாஷை தவிர இதர பாஷைகளாலே ஞாநம்பண்ணுதல் அந்தணர்கட்கு நிஷித்தமாயிருக்க, த்ராவிடபாஷை ரூபமான திருவாய்மொழியை அனைவர்க்கும் உபாதேயமாகச் சொல்லத்தகுமோ? என்றும், ச்ருதிகளும் ஸ்ம்ருதிகளும் இதிஹாஸ புராணங்களுமிருக்க இவ்வருளிச்செயலுக்கு உபயோக

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மென்ன? என்றும் தோன்றக்கூடிய சங்கைகளைப் பரிஹரித்தருளுகிறார் இதில். 'ஹாஷாமாநம் நமாதவ்யு" என்கிற விலக்கு பகவத்விஷயந்தவிர மற்ற விஷயங்களுக்குத் தான் என்று ஸித்தாந்தமாதலால் த்ராவிட பாஷையாலே பகவத் ஸ்தோத்ரம் கூடும். அன்றியும், அரசனைப்போலே எம்பெருமானை உகப்பிக்கவேணுமென்று சாஸ்த்ரங்கள் சொல்லுகையாலே அவரவர்களுக்குத் தெரிந்த பாஷையினால் ராஜாவைத் துதித்து உகப்பித்தல்போல எம்பெருமானையும் எந்த பாஷையினாலும் துதித்து உகப்பித்தல் ஏற்கும். இவ்வளவேயன்றியே தமிழ்ப் பாஷையானது அகஸ்திய மஹரிஷியினுடைய ஸ்வைரபாஷையாகையினாலே ஆர்ஷம் என்னும் ஏற்றத்தையுடையதுமாம். ஆகவே இது ஸகல வைதிக பரிக்ருஹீதமாயிற்று. [ஹ-ஒிகாஹெஜயொமு] "அத்ரி ஜமதக்நி பங்க்திரதவஸுநந்தஸூநுவானவனுடைய யுகவர்ண க்ரமாவதாரமோ" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்திப்படியே கொண்டருளின திருக்கோலத்திற்குத் தகுதியான பாஷை என்றபடி. வேதங்களுக்கு உபப்ரும்ஹணமாக மஹர்ஷிகள் இயற்றிய இதிஹாஸ புராணங்களைக்கொண்டு நாம் யாதொரு உபயோகமடைகின்றோமோ அந்த வுபயோகமே திருவாய்மொழியினாலுமுள்ளது; ஆனால் அந்தப் புராணாதிகள் ராஜஸங்களென்றும் தாமஸங்களென்றும் த்யாஜ்யங்களாகவுமாகின்றன; இங்கு அப்படியில்லை. ஸத்வகுணத்திற்கு எல்லை நிலமான ஆழ்வாரருளிச்செய்ததாகையாலே கேவலம் ஸாத்விகமாயிருக்கின்ற இத்திருவாய்மொழியாகிற த்ராவிட ப்ரஹ்ம ஸம்ஹிதையானது வேதோபப்ருஹ்மணங்களில் தலைமைபெற்றதாகும். ... ... ... (ச)

ஆதௌ ஶாரீரகார்த²க்ரமமிஹ விஶத³ம் விம்ஶதிர்யுக்தி ஸாக்³ரா
ஸங்க்ஷேபோऽஸௌ விஸ்தரம் ப்ரத²யதி ப³ஹுதா ஶாகா²வாசோவ
[ஹுஹு |
ஸ்ருஷ்டீதானந்தவேஶம் ஸகலருசிரதம் ஸாமஶாகா²ஸஹஸ்ரம்
ஸம்ரக்ஷ்யம் ஸாஹித்யோபேயபக்ஷ்யவி ஶதகைஹஸ்தாப்யவஸ்ர
[ஶதகைஸ்ஸ ||

இச்ச்லோகத்தில் திருவாய்மொழியானது வேதங்களுக்குச் சிறந்த உபப்ரும்ஹணம் [வியாக்கியானம்] எனப்பட்டது. அவ்வளவே யன்றியே வேத துல்யமாயுமிருக்குமென்கிறது இதில். * உயர்வறவுயர்நலந்தொடங்கி இருபத்தொரு பாசுரங்கள் வேதாந்த சாஸ்த்ரார்த்த க்ரமத்தைத் தெளிவாக வெளியிடுகின்றன. [இவ்விஷயம் ஐககண்ட்ய க்ரந்தத்திலே பரக்கக் காணத்தக்கது.] இத்தகைத்தான ஸம்க்ஷேபத்தை நோக்குமிடத்து இருபத்தொரு சாகைகளாக ஓதப்படுகிற ருக்வேதம் திருவாய்மொழியில் ப்ரதான பாகமாக வடிவெடுத்ததென்னலாம். இது 'ஆயிரம்' என்று வ்யபதேசிக்கப்படுகையாலே சாகாஸஹஸ்ராத்மகமான ஸாமவேதம் இங்ஙனே வடிவெடுத்ததென்னலாம். இத்திருவாய்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

மொழியில் நூறு தசகங்கள் உள்ளன ; கண்ணிநுண் சிறுத்தாம்பும் இதற்கு சேஷபூதமேயாதலால் அதையுங்கூட்டி நூற்றொரு தசகமாகக்கொண்டால் ஏகஶதஶாகமான யஜுர்வேதம் இங்ஙனே வடிவெடுத்ததென்னலாம். சாந்தி ரஸ ப்ரதாநமான இத்திருவாய்மொழிக்கு மற்ற எட்டு ரஸங்களும் உறுப்பாயிருத்தலால் நவஶாகமான அதர்வணவேதம் இங்ஙனே நவரஸத்தொகுதியாக வடிவெடுத்ததென்னலாம். இவ்வகைகளாலே இது ஸகல வேதஸமம் என்றவாறு.

[ஸாஹித்யைக்யை: ஶதகை:] திருவாய்மொழியில் பதிகங்கள் நூறாதலால் அந்த வொருநூறும் அவற்றின் பொருளெல்லாஞ்சேர்ந்து ஒன்றுமாக நூற்றொன்று, என்று கணக்கிடுவாருமுண்டு. ஒவ்வொரு பதிகத்திலும் பலச்ருதி பாசுரமாகிய திருநாமப்பாட்டுகளையெல்லாஞ் சேர்த்து ஒன்றாகக் கணக்கிடுவாருமுளர். ... .... .... .... (ரு)

प्राप्ये सेवानुगुण्यात् प्रथममिह शतकेऽबोध्युपायं
[उपेयोपायं
उक्तप्राप्यं द्वितीये उचितनियमवत्स्वेन(?) हेतुतादिष्टेन
प्राप्त्यैकोपायभावः प्रकटितजगदीशात्मना तृतीये
ऽनन्यप्राप्यत्वमुक्तं सहितवशतदैश्वर्यनन्यप्राप्यायः ||

இனி இத்திருவாய்மொழிக்கு ப்ரதாந லக்ஷ்யங்களான அர்த்தங்கள் இன்னவையெனப்படுகிறது. முதற்பத்திலே எம்பெருமானுடைய உபாயத்வமும், இரண்டாம்பத்திலே உபேயத்வமும் பேசப்பட்டன. ஸேவ்யத்வாநுகுணமாக உபாயத்வம் சொல்லப்பட்டது, போக்யதா விஸ்தாரண பூர்வகமாக உபேயத்வம் சொல்லப்பட்டது என்று அறியக்கடவது. இந்த உபாயத்வ—உபேயத்வங்களிரண்டும் திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டனுக்கேயென்றார் மூன்றாம் பத்தில். எம்பெருமானைத்தவிர்த்து வேறொரு உபேயவஸ்து தமக்கில்லையென்பதை நாலாம்பத்தில் வெளியிட்டார். ஐந்தாவது முதலாக மேலுள்ள பத்துக்களில் அவன் தவிரவேறு உபாயம் தமக்கில்லையென்பதைப் பரக்க வெளியிட்டருளினார். .... .... .... .... (சு)

देवः श्रीमान् स्वसिद्धेः करणमिति वदन्नेकयोगं सहायं
सेव्यत्वादीन् उपायाङ्गान्(?) व्यञ्जयन्निह शतकेष्वक्षि तत्त्वाद
[न्यायाङ्गान् |
तेनैकैकस्वकार्यप्रविशदकरणेष्वायतस्ते तथाऽत्र
तत्र न्यायाद्गुणानामनन्यविषयतां तत्स्वक्षयः स्वस्वकीयः ||

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருவாய்மொழியாயிரத்திற்கும் ஒரே ஒரு அர்த்தமே ப்ரமேயம் என்றும், பத்து பத்துக்கும் பத்து அர்த்தம் ப்ரமேயம் என்றும், நூறு தசகங்களுக்கும் நூறு அர்த்தம் ப்ரமேயம் என்றும், ஆயிரம் பாசுரங்களுக்கும் ஆயிரம் அர்த்தம் ப்ரமேயம் என்றும் நிர்வஹிக்கிற புடைகளுமுண்டாதலால் இந்த நிர்வாஹ ப்ரக்ரியையிலே அமைந்ததாகுமிந்த ச்லோகம். ஸ்ரீமந்நாராயணன் ஸ்வப்ராப்தியில் வேறு உபாயங்களை ஸஹியாதபடி தானே உபாயமாவன் என்கிற இவ்வர்த்தம் ஆயிரத்திற்கும் ப்ரதாந ப்ரமேயம். (அடுத்த ச்லோகத்தில் விவரிக்கப்படுகிற) ஸேவ்யத்வம் முதலிய பத்து அர்த்த விசேஷங்கள் பத்து பத்துக்களுக்கும் ப்ரமேயமாயிருந்துகொண்டு கீழ்ச்சொன்ன ப்ரதாந ப்ரமேயத்தை நன்கு நிலைநாட்டுகின்றன. பரத்வம், பஜநீயத்வம், ஸௌலப்யம், அபராத ஸஹத்வம், ஸௌசீல்யம், ஸ்வாராத்யத்வம், பரமபோக்யத்வம், ஆர்ஜவம், ஸாத்ம்யபோக ப்ரதத்வம், நிர்ஹேதுகாநுக்ரஹகாரித்வம் - என்றிப்படி ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் ஒவ்வொருகுணம் ப்ரமேயமாய் நூறு திருவாய்மொழிக்கும் ப்ரமேயமாகத் தேறுகின்ற நூறு திருக்குணங்களும் ஸேவ்யத்வம் முதலிய மூல குணங்களை நிலைநாட்டுகின்றன. ஒவ்வொரு பாசுரத்தினாலும் ஒவ்வொரு அர்த்தம் பிரதிபாதிக்கப்பட்டு வருகிற முறையிலே ஆயிரம் பாசுரங்களாலும் பிரதிபாதிக்கப்படுகின்ற ஆயிரம் அர்த்தங்களானவை கீழ்ச்சொன்ன ப்ரத்யேக குணங்களாகிய பரத்வாதிகள் நூற்றையும் நிலைநாட்டுகின்றன என்றதாயிற்று. ஆக இதனால் சொல்லிற்று என்னென்னில்; திருவாய்மொழிக்கு ஆயிரம் அர்த்தம் ப்ரதிபாத்யம் என்றும் சொல்லலாம்; நூறு அர்த்தம் ப்ரதிபாத்யமென்றும் சொல்லலாம்; பத்து அர்த்தம் ப்ரதிபாத்யமென்றும் சொல்லலாம்; ஒரே அர்த்தம் ப்ரதிபாத்யமென்றும் சொல்லலாம்; ஒன்றே பத்தாக விரிந்து, அந்தப்பத்தே நூறாக விரிந்து அந்த நூறே ஆயிரமாக விரிகின்றது என்றதாயிற்று.

ஸேவ்யத்வாத் ஸமஸ்தாஸ்ரிதபஜநதயா ஸ்ரீமத் ஸௌலப்யஸௌசீல்யாயிகத்வாத்
ப்ரேமஸ்வாராத்யபோகாத் ஸ்வ்ருஜுகபரகமாதிஸாநுக்ரஹாத் |
ஸத்ஸ்வரீசநாப்ரத்யேகாத் நிர்ஹேதுகாயிகதாநுக்ரஹாத் ஸ்வாபாவம்
ஸாஹாய்யோத்யுஸ்துவிலெ: ஸ்வயமிஹ கரணம் ஸ்ரீபதிம் ப்ரத்யவாதீ|| (அ)

திருவாய்மொழியாயிரம் பாசுரங்களுக்கும் ப்ரமேயமாகிய ஆயிரம் அர்த்தங்களானவை மேலே ஒவ்வொரு வஞ்சூதத்தாலும் சொல்லப்படப்போகிற படியாலும், ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் ப்ரமேயமான நூறு அர்த்தங்களும் அப்படியே மேலே தொகுத்துக் காட்டப்படப்போகிறபடியாலும் ஒவ்வொரு சதகத்திற்கும் ப்ரமேயமான பத்து அர்த்தங்களே முக்கியமாக இங்குக் காட்ட வேண்டியவை என்று திருவுள்ளம்பற்றின தேசிகன் அந்தப் பத்து அர்த்தங்களையும் இதில் நிரூபித்தருளுகிறார். ஆயிரத்திற்கும் ப்ரமேயமான ஒரு அர்த்தமும் கூடவே நிரூபிதமாகிறது. "ஸ்வயமிஹ கரணம் ஸ்ரீபதிம்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஹ்ருத்யவாசி = ஸ்வஸித்தே: ஸ்வயமிஹ கரணம் ஸ்ரீதர: ப்ரத்யபாதி" என்ற கடைசி வாக்யத்தினல் சொல்லப்படுகின்ற அர்த்தமே ஆயிரத்திற்கும் ப்ரமேயம். அதாவது — எம்பெருமான் ஸ்வப்ராப்தியில் ஸ்வயமேவ உபாயபூதன் என்பதாம். இதுதான் கீழ்ச்லோகத்தின் தொடக்கத்தில் "தேவ: ஸ்ரீமாந் ஸ்வஸித்தே: கரணமிதி வதந் ஏகமர்த்தம் ஸஹஸ்ரே = தேவ: ஸ்ரீமாந் ஸ்வஸித்தே: கரணமிதி வதந் ஏகமர்த்தம் ஸஹஸ்ரே" என்றதனாலும் சொல்லப்பட்டது.

இனி ஒவ்வொரு சதகத்திற்கும் ப்ரமேயங்களான அர்த்தங்களாவன:— 1. ஸேவ்யத்வம். 2. போக்யத்வம். 3. சுபாச்ரய திவ்யமங்களவிக்ரஹசாலித்வம். 4. ஸர்வபோக்யாதிகத்வம். 5. புருஷார்த்த தது பாய ஹேதுத்வம்; 6. ப்ரபத்தி ஸுலபத்வம். 7. ஆச்ரிதாநிஷ்டநிவர்த்தகத்வம். 8. ஆச்ரிதச்சந்தாநுவர்த்தித்வம். 9. நிருபாதிகஸௌஹ்ருத்த்வம். 10. ஸத்பதவீஸஹாயத்வம்.

[இவை சிறிது விவரிக்கப்படுகின்றன.] 1. எம்பெருமானே தொழத்தகுந்தவன் என்கிற அர்த்தத்திலே முழுநோக்கு முதற்பத்துக்கு. 2. எம்பெருமான் பரமபோக்யன் என்கிற அர்த்தத்திலே முழுநோக்கு இரண்டாம்பத்துக்கு. 3. எம்பெருமான் விலக்ஷணமான திவ்யமங்கள விக்ரஹம் படைத்தவன் என்பதைத் தெரிவிப்பதிலே முழுநோக்கு மூன்றாம்பத்துக்கு. 4. உலகத்தில் போக்ய பதார்த்தங்கள் எவ்வளவுண்டோ, அவ்வளவினும் மேம்பட்ட அளவற்ற போக்யதையை யுடையவன் எம்பெருமான் என்றுணர்த்துவதிலே முழுநோக்கு நாலாம்பத்துக்கு. 5. பரம புருஷார்த்தத்தையும் அதற்குறுப்பான உபாயத்தையும் எம்பெருமான் தானே கொடுப்பவனென்பதிலே முழுநோக்கு ஐந்தாம்பத்துக்கு. 6. தன்னையடைக்கலம் புகுகிறவர்களுக்கு மிகவுமெளிய னெம்பெருமானென்பதிலே முழுநோக்கு ஆறாம்பத்துக்கு. 7. அடியார்களது துன்பங்களைத் தீர்க்குந் தன்மையன் எம்பெருமான் என்பதிலே முழுநோக்கு ஏழாம்பத்துக்கு. 8. அடியார்களுடைய அபிப்பிராயத்தைப் பின் செல்பவன் எம்பெருமான் என்று நிரூபிப்பதிலே முழுநோக்கு எட்டாம்பத்துக்கு. 9. ஒருவிதமான காரணத்தைப் பற்றியல்லாமல் ஸ்வயமாகவே ஸௌஹார்த்தமுடையவனெம்பெருமான் என்று காட்டுவதிலே முழுநோக்கு ஒன்பதாம்பத்துக்கு. 10. தாளடைந்தோர் தங்கட்குத் தானே வழித்துணையாமவன் எம்பெருமான் என்று காட்டுவதிலே முழுநோக்கு பத்தாம்பத்துக்கு என்றதாயிற்று. ஆக இப்படிப்பட்ட பத்து விஷயங்களுஞ் சேர்ந்து 'எம்பெருமானைப் பெறுதற்கு எம்பெருமானே உபாயம்' என்கிற ஒரு ப்ரதாந ப்ரதிதந்த்ரத்தை நிலைநாட்டி நின்றனவாம். .... .... (அ)

ஸ்ருஷ்டே மாயாஸஹஸ்ரம் ப்ரகடயதி நமாம்ஷ்டோத்தமம் ப்ரதீக்ஷ்ய:
ஹ்ருத்யைகம் வா த்ரு மாயா: ஹ்ருஷிதவிநமந்நா: ஸ்வஷ்டயோக்ஷயாஸ:|
தத்ராஸம்கீர்ணம் தத்தத்ஸகம் மண ஸதஸ்ராவநள வித்யாந்த்தாநு
வேதம்வ்யாவநாஸா நமணிதமணிதாம் ஸ்ஸூணாநுபூர்ணீஸ:||

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருவாய்மொழியில் பத்து சதகங்களுக்கும் நோக்காகிய பத்து அர்த்தங்களையும் கீழ்ச்லோகத்தில் அருளிச்செய்தாராய் நின்றார். இனிமேல் ஆறுபெருஷத்தாலே ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் ப்ரமேயமான பரத்வம் முதலிய நூறு குணங்களையும், ஒவ்வொரு பாசுரத்திற்கும் ப்ரமேயமான ஆயிரம் குணங்களையும் நிரூபிக்கிறோமென்று ப்ரதிஜ்ஞைபண்ணி யருளுகிறார். முநீந்த்ரஃ — முனிவர் தலைவரான ஆழ்வார், காதாஸஹஸ்ரம் — ஆயிரம் பாசுரங்களையும், முரமதநகுணஸ்தோமகர்ப்பம் - எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை உட்கொண்டனவாக, ப்ரூதே — அருளிச்செய்திருக்கிறார். திருவாய்மொழி ஒவ்வொரு பாசுரத்திலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணம் அடக்கிவைத்துப் பேசப்பட்டிருக்கின்றதென்றவாறு.

[ப்ரத்யேகம் இத்யாதி.] அப்படியே நாமும் அந்தப் பாசுரங்களைத் தனித் தனி பகவத்குண ப்ரசுரங்களாகவே நன்றாய்க் காண்கின்றோமென்றபடி.

[தத்ராஸங்கீர்ணேத்யாதி.] அந்தத் திருக்குணங்களையே இனிமேல் [ஒவ்வொரு வஹுஸூக்தத்தாலும்] சொல்லப்போகிறோம். அக் குணங்கள் எப்படிப் பட்டவையென்னில்; [அகணித குணிதாந்] ஒரு கணக்கிலே நிற்காமல் பெருகிக் கொண்டே போமவை. இன்னமும் எப்படிப்பட்டவை யென்னில்; [அஸங்கீர்ண தத்தத் தசகஞணசதஸ்தாபநௌசித்யயுக்தாந்] புநருக்தியின்றியே ஒவ்வொரு திருவாய்மொழியினாலும் பிரதிபாதிக்கப்படுகிற பரத்வம் முதலான நூறு குணங்களையும் ஸ்தாபிப்பதற்குத் தகுதியானவை. இன்னமும் எப்படிப்பட்டவை யென்னில்; [ஐதம்பர்யாவருத்தாந்] இந்தப் பாசுரத்திற்கு இந்தக் குணமே முக்கிய நோக்கானது என்று நிர்ப்பந்தமுடையவை. ஆக இப்படிப்பட்ட [தனித் தனிப் பாசுரங்களின் ப்ரமேயங்களான] திருக்குணங்களை இனிமேல் பேசப் போகிறோமென்றாராயிற்று. ... .... .... ... (௯)

[illegible]
[illegible] |
[illegible]
[illegible] ஸஹ்ருதயைர் தாரணீயா || (௧௦)

இங்ஙனே திருவாய்மொழியின் ஸகலார்த்தங்களையும் வெளியிடுதற்காகத் தாம் அருளிச்செய்கிற இந்தத் தாத்பர்ய ரத்நாவளீ க்ரந்தத்தை ஸாத்விகர்களெல்லாரும் கண்டபாடம் செய்து தரித்துக்கொள்வது நன்று என்கிறார்.

இந்த க்ரந்தம் எவர்களால் தரிக்கப்படவேணுமோ அவர்களை விசேஷிக்கிறார் * இச்சாஸாரத்ய * என்று தொடங்கி * சுத்தாந்தாசாரசுத்தைஃ * என்னுமளவால். தன்னையே அரணாகக்கொண்ட பாண்டவர்களுக்கு ஸ்வேச்சையாலே தூதனும் ஸாரதியுமாயிருந்து அதனாலே ஆச்ரித பாரதந்த்ரியமாகிற குணத்

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தை அனைவரும் விச்வஸிக்கும்படி வெளியிட்டருளின கண்ணபிரான் அருளிச்செய்த கீதையின் முடிவிலுள்ள சரமச்லோகத்தில் ஸித்தித்ததாயும், ஜநககுல ஸுந்தரியான பிராட்டியாலே "ஸமெரஷூ ஸங்கூஷூ கூநவா ஸுங்காம வரவஷாடீநி: । ஊ நயெஷீ காகூஒஷூ: தத்தவஸ ஸஷ்ூஸம் ஹவெஷ = சரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்த்தந: - மாம் நயேத் யதி காகுத்ஸ்த: தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்." என்ற சொல் முகத்தாலே நடத்திக்காட்டப்பட்டதாயுமிருக்கிற ஐநமெநாவாயஸ்வரூபமான ஆசாரத்தினால் தூயரான பரமைகாந்திகள் இந்த ரத்நாவளியைத் தரிக்கக் கடவர்களென்றபடி. [அநககுண க்ரந்திபந்தாநுபத்தா] குணசப்தம் இங்கு ச்லிஷ்டம்; பகவத்குணத்திற்கும் நூலுக்கும் வாசகம். உலகத்தில் ரத்நாவளியானது நூல் சேர்க்கையையுடைத்தாயிருப்பதுபோலே இந்த ரத்நாவளீ க்ரந்தம் பகவத்குணச் சேர்க்கையையுடையதென்கை. [அகிலபய உத்தாரணீ] "அபயம் ஹொடஸயம் மதொ ஹவதி" என்று உபநிஷத்தில் ஓதப்பட்ட பேறு த்ரமிடோபநிஷத்தின் பேறுதலால் அதன் அர்த்த விசேஷங்களை நிரூபிக்கின்ற இந்த க்ரந்தமும் ஸகல பய நிவர்த்தகமென்னக் குறையில்லை. [தத்தாத்ருக் இத்யாதி.] 'தாம்ரபர்ணியின் தீரத்தில் விசேஷ பகவத் பக்தர்கள் அவதரிக்கப் போகிறார்கள்' என்றும், 'தாம்ரபர்ணியின் தீர்த்தத்தைப் பருகுமவர்களுக்கு விசேஷ வைபவமுண்டு' என்றும் மஹர்ஷிகளால் புகழப்பட்ட பெருமையவாய்ந்ததான பொருநை யாற்றின் கரையிலே திருவவதரித்தவரான நம்மாழ்வாராலே ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதாய் ஸர்வ முமுக்ஷுக்களுக்கும் ஹிதமான திருவாய்மொழியின் தாத்பர்யத்தைப் பேசப்பிறந்த இந்த ரத்நாவளீ க்ரந்தம் பரமைகாந்திகளால் ஹ்ருதயத்திலே தரிக்கத்தக்கதென்றதாயிற்று.

...

ஆக இந்தப் பத்து ச்லோகங்களும் அவதாரிகா ரூபமாக அருளிச் செய்யப்பட்டவை. இனிமேல் ஒவ்வொரு ச்லோகத்தாலும் ஒவ்வொரு திருவாய்மொழியின் ஸாரத்தைத் தொகுத்தருளுகிறார். பெரும்பாலும் வனுஜூஷமாகவும் தூதீயாஷமாகவும் மற்றும் ஊதரவிஸஷஷமாகவும் அருளிச்செய்யப்படுகிற ஒவ்வொரு பதமும் அடைவே ஒவ்வொரு பாசுரத்தின் முக்கியமான திருக்குணத்தைக் காட்டுவதென்று கொள்க. இரண்டு மூன்று பாசுரங்களின் ப்ரமேயத்தை ஒரே பதத்தினால் சுருக்கி யருளிச்செய்வதுமுண்டு. .... (௧௦)

நிஷீமொஷூஷூணகூவாடிவிதாஸ தயாஉநஷுரீஷாஷுகூவாக
ஷூயா தூாமெஷஸதூாஷூதிய தநிவிடா வெஹவாவெஷாதூவநூாக।
தூஷஷஸூஷாதூஹாவாக ஸஷஸஷவமதெஷூவபதகெவஷுவ ஏதெஃ
வஸூநு யொமீ வாஸ தத்துகஉுநதா வதூஸாடிாதூவி தூடி॥ (௧௧)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* உயர்வறவுயர்நலமென்று தொடங்குகிற முதல் திருவாய்மொழியின் பாசுரங்களின் பொருளை ஸங்க்ரஹித்தருளிச்செய்வது இந்த ச்லோகம். [நிஸ்ஸீமோத்யத் குணத்வாத்] எல்லையில்லாத உயர்த்திபொருந்திய திருக்குணங்களை யுடையவன் என்றது முதற்பாட்டில். 2. [அமிதரஸதயா] நிரவதிக ஆநந்தஸ்வரூபன். 3. [அநந்தலீலாஸ்பதத்வாத்] "நிலனிடைவிசும்பிடையுருவினனருவினன்" என்கையாலே எங்குமுள்ள சேதநாசேதநங்களை விபூதியாகக்கொண்டு லீலைபுரியுமவன். (4-5-6.) [ஸ்வாயத்தாசேஷஸத்தாஸ்திதியதநபிதாவைபவாத்] * நாமவனிவன் * அவரவர்தமதமது * நின்றனரிருந்தனர் * என்கிற மூன்று பாசுரங்களின் அர்த்தமும் இந்த ஒரு பதத்தினால் ஸங்க்ருஹீதம். ஸமஸ்த வஸ்து ஸ்வரூபத்தையும் தன்னதீனமாகவுடையவன்; ஸகல தேவதைகளுக்கும் தானே அந்தர்யாமியாய் ஆராத்யனாய் ஸகல பலன்களையும் அளிப்பவனாகையாலே ஸகல ஜநரக்ஷணத்தையும் தன்னதீனமாகவுடையவன்; சேதநாசேதநரூப ஸமஸ்தவஸ்து ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் தன் ஸங்கல்பாதீனமாக வுடையவன். 7. [வைச்வரூப்யாத்.] "திடவிசும்பெரிவளி" என்கிற பாட்டின் பொருள்; — உலகுக்கும் ஈச்வரனுக்கும் ஐக்யஞ் சொல்லுகிற குத்ருஷ்டிபக்ஷம் அஸங்கதமென்று தோன்றும்படி, தான் சரீரியாய் ஜகத்தை சரீரமாகவுடையவன். 8. [த்ர்யக்ஷப்ரஹ்மாத்மபாவாத்] "அரனயனென வுலகழித்தமைத்துளனே" என்றதன் பொருள்; இந்த ஜகத்துக்கு நிர்வாஹகர்களோவென்று சங்கிக்கக்கூடியவர்களான ப்ரஹ்மருத்ரர்களுக்கும் அந்தராத்மாவாயிருந்து கார்ய நிர்வாஹகன். 9. [ஸதஸதவகதேः] * உளனெனிலுளன் * 'ஈச்வரன் இல்லை' என்று சூந்யவாதிகளால் சொல்லி முடிக்கவொண்ணாதபடி அவஸ்தாபேதத்தாலே ஸதஸச்சப்தவாச்யனாய் அறியப்படுமவன். 10. [ஸர்வதத்வேஷு பூர்த்தேः] * பரந்ததண்பரவையுள் * ஸகல வஸ்துக்களிலும் ஸ்வரூபேண எங்குமொக்க வியாபித்து நிற்பவன். [பரம்பச்யந் யோகீ] ஆக இவ்வகைகளாலே எம்பெருமானை ஸர்வஸ்மாத்பரனென்று ஸாக்ஷாத்கரியாநின்ற ஆழ்வார். [ஆத்ம சித்தம் தத்பதகமலகதேள அங்வசாத்.] தம்முடைய திருவுள்ளத்தைக்குறித்து * துயரறுசுடரடி தொழுதெழென்மனனே * என்று கட்டளையிட்டாரென்றபடி. ஆக இந்த ச்லோகத்தால் ஒவ்வொரு பாசுரத்தின் ஸாரார்த்தத்தையும் தசகத்தின் ஸாரார்த்தத்தையும் அருளிச்செய்தாராயிற்று.

ஸ்வாமித்வாத் ஸுஸ்திரத்வாத் நிகிலநிருபதி [illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥ கஉ

1. [ஸ்வாமித்வாத்] * உம்முயிர்வீடுடையான். * எல்லார்க்கும் ஸ்வாமி. 2. [ஸுஸ்திரத்வாத்] * மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள் * என்று ப்ராக்ருதவஸ்துக்கள் அஸ்திரங்களென்றும் ஆத்மாக்கள் ஸ்திரங்களென்றும் அருளிச்செய்கையாலே பரமாத்மா மிகவும் ஸ்திரனென்றதாகும். 3. [நிகிலநிருபதி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்வாத்மவித் க்ராஹ்யபாவாத்] * கீர்நடந்தென்றிவை * அஹங்கார மமகாரங்க ளால் விடுபட்டுத் தங்கள் ஸ்வரூபத்தை யுணர்ந்துகொண்டவர்களாலே உணரக் கூடியவன். 4. [தாத்ருக் ஸர்வாநுகூல்யாத்] * எல்லையிலந்நலம் * அவன் அவனே வர்க்கும் மிகவும் அநுகூலனாயிருப்பவன். 5. [ச்யவநவதிதர ப்ராப்யவைஷம்ய வத்த்வாத்] * உற்றதுவீடுயிர் செற்றது மன்னுறில் * கைவல்ய புருஷார்த்தத் திற்காட்டிலும் விலக்ஷணமான ஸ்வப்ராப்தி ரூபபுருஷார்த்தத்தை யுடையவன். ஆவநவத்துக்களான ஹூவஙுக்களிற்காட்டிலும் இதரமான (அதாவது) சாச்வதமான யாதொரு ப்ராப்யமுண்டு கைவல்யமோக்ஷம், அதிற்காட்டிலும் வைலக்ஷண்யமுடையது பகவத் ப்ராப்தி என்று உணர்க. “ஹொமா ஐசெ வியிஸிவாஜிவஉஞ கிஞ” என்று ஆழ்வானருளிச்செய்த ப்ராப்யங்களெல் லாம் ஆவநவத்துக்கள்; தெஹூ: ஐதாரங யதாவரூ - கஷாவி ஆவந ரஹிதம் ஸாஜ்ஞதிகம் கைவஜூஓஷகஷ-வம் ஹூவஜூ; தடிவெக்ஷ யா வெஷஜூவாறு — விலக்ஷணஃ ஐதியாவஜ.

6. [ஸர்வத்ர அபக்ஷபாதாத்] * மூற்றவும் நின்றனன் * எல்லாரையும் ஒரு நிகராக அபிமானிப்பவன். 7. [சுபவிபவதயா] * அடக்கெழில் சம்பத்தடங்க * சிறந்த இரண்டு விபூதிகளையுடையவன். 8. [மாநஸாத்யர்ச்யபாவாத்] * உள்ள முரைசெயல் * தன்னை ஆராதிக்க மனமொழிமெய்கள் போதுமானவன். 9. [ஸங்கோச உந்மோசகத்வாத்] * ஒடுங்கவுமெல்லாம்விடும் * அவித்யை முதலி யன எல்லாவற்றையும் விடுவிப்பவன். 10. [ஜகதயநதயா] * வண்புகழ்நாரணன் * உலகங்களுக்கெல்லாம் ஆதாரமாயும் ஆதேயமாயுமிருப்பவன். ஆக இப்படிப் பட்ட தன்மைகளையுடையனாயிருக்கையாலே [ஸர்வயோக்யம் உபாதிசத்] எம் பெருமானை எல்லார்க்கும் பஜநீயனாக இரண்டாம் திருவாய்மொழியிலே உப தேசித்தாராழ்வார் என்றவாறு. ... ... (கஉ)

ஸாஸாஹ்யகாங ஷூஹதெஹ்ரயிகதரஙூணாநஜ திவாவதாராங
ஸவெஷூவாஸக்திமதுாநதஸஙூஜதயா ஷூரஜைவாயவூடிகாங |
வூாதாவிவூாஜிவிஹூாங ஷூரஙூவிவிதரணாதுவகாஜாருய காங
ஸஷூாஜெஃஷூமஜாநாங வூஹிதவஃதயாஉநஜவஸஎஜைஹூஸாஹ ||

(பத்துடையடியவர்க்கு) இந்தத் திருவாய்மொழியிலே எம்பெருமானுடைய ஸௌலப்யகுணம் சொல்லப்படுகிறது. 1. [ஸ்வபக்தைஃ பந்தார்ஹத்வாத்] * வெண்ணெய் களவினிலுரவிடையாப்புண்டு * பக்தர்களுக்குத் தான் கட்டவு மடிக்கவு மெளியனாயிருப்பவன். 2. [அதிகதரகுணாநந்த திவ்யாவதாராத்] * நிலை வரம்பில பலபிறப்பாய் * சிறந்த திருக்குணங்களையுடையனாய்ப் பலபடி பிறப்ப வன். 3. [ஸர்வேஷாம் ஆஸக்திமத்த்வாத்] * அமைவுடையமரரும் யாவையும் யாவருந் தானும் அமைவுடைநாரணன் * சிறியார்பெரியாரென்று வாசிபாரா மல் எல்லார்க்கும் ஆத்மாவாய் நிற்பவன். 4. [நதஸுலபதமதயா] * யாருமோர்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நிலைமையனென அறிவெளிய வெம்பெருமான் * மாஞானிகளுக்கும் அறியக் கூடாத நிலைமையிலே அடியவர்களால் அறியக்கூடியவனாயிருப்பவன். 5. [ஸ்வப்ரபோதப்ரதத்வாத்] * அவனுடை யுணர்வு கொண்டுணர்ந்தே * கீதாசாஸ்த்ர முகத்தாலே தன்விஷயமான அறிவைத் தருமவன். 6. [ச்யாத அபிக்க்யாதி சிஹ்நாத்] * உணர்ந்துணர்ந்து இத்யாதி * தேவதாந்தரங்களில் நின்றும் தன்னைப் பிரித்துக்காட்டவல்ல ப்ரஸித்தமான நாராயணத் திருநாமத்தையுடையவன். 7. [ஸ்வருசி விதரணாத்] * இருபசையறுத்து அவனிடை நலஞ்செய்வது * தன் பக்கலில் பக்தியையளிப்பவன். 8. [ஸர்வகாலாச்ரயத்வாத்] * மாறுமோரிடத்திலும் வணக்கொடுமாள்வது வலமே * எந்தக்காலத்திலும் தன்னை வணங்க வேண்டும்படியிருப்பவன். 9. [சர்வாதேஃ ஸ்வாங்கதாநாத்] * வலத்தனன் திரிபுரமெரித்தவன் * சிவன் முதலானோர்க்குத் தன் திருமேனியில் கூறுகொடுத்திருப்பவன். 10. [ப்ரஹித பததயா] * பெருநிலங்கடந்த நல்லடிப்போது * திரிவிக்கிரமனாய் எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்தவன். ஆக இத்தன்மைகளாலே [அநந்த ஸௌலப்யம் ஆஹ] எம்பெருமானுடைய ஸௌலப்யகுணத்தை மூன்றாந்திருவாய்மொழியில் ஆழ்வாரருளிச்செய்தாரென்றதாயிற்று. :.... (கங)

த்ராணே பத்தத்வஜத்வாச் சுபநயநதயா ஸ்வார்த்தலாபே(அ)ர்த்திபாவாத்
திவ்யமேகஸ்வபாவாஜ் ஜகதுபஜநநஸ்தாபநாதிப்ரியத்வாத் |
காருண்யாபூர்ணயோகாத் அநுகதமஹிஷீஸங்கியெஸம்பத்திவ்யாத்
நாநாபாவைஸ் ஸ்வரக்ஷாவஹிததயா க்ஷாந்திமாஹ க்ருஷ்ண:||

(அஞ்சிறையமடநாராய்) இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய க்ஷமாகுணம் [அதாவது, அபராத ஸஹத்வம்] கூறப்படுகிறது.

1. த்ராணே பத்தத்வஜத்வாத் * வெஞ்சிறைப்புள்ளுயர்த்தாற்கு * ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதில் கொடிகட்டிக்கொண்டிருப்பவன்.

2. சுபநயநதயா. * செய்யதாமரைக்கண் பெருமானார். * அழகிய திருக்கண்களையுடையவன்,

3. ஸ்வார்த்தலாபே அர்த்திபாவாத். * குறள்மாணாயுலகிரந்தகள்வற்கு * தன்னுடைமை பெறுதற்குத் தான் இரப்பாளனானவன்.

4. திவ்யமேகஸ்வபாவாத். * என்னீலமுகில்வண்ணர்க்கு * மழைமுகில் போல்சிறத்தன்.

5. ஜகதுபஜநநஸ்தாபநாதிப்ரியத்வாத். * நல்கித்தான் காத்தளிக்கும்பொழிலேழும் * உலகங்களை ஸ்ருஷ்டிப்பதிலும் ஸம்ரக்ஷிப்பதிலும் மிக்க விருப்பமுடையவன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



6. காருண்யாப்தத்வயோகாத். * அருளாழியம்மான் * க்ருபாகுணத்தி னால் எல்லார்க்கும் ஆப்தனாயிருக்குமவன்.

7. அநுகத மஹிஷீஸந்நிதே: * திருமாலார்க்கு * பெரியபிராட்டியாரு டைய சேர்த்தி இடையறாதிருப்பவன்.

8. ஸங்கதைர்க்க்யாத். * நெமோலார்க்கு * அடியார் திறத்து நெடிய வியா மோஹமுடையவன்.

9. நாநாபந்தை: * நாரணன் தன் * "மாதா பிதா ப்ராதா நிவாஸ ஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயண: " "எம்பிரானெந்தையென்னுடைச் சுற்றமெனக்கரசென்னுடைவாணாள்" என்கிறபடியே நாராயணனென்றால் ஸகலவித ஸம்பந்தமுடையவன் என்றபடி.

10. ஸ்வரக்ஷாவஹிததமதயா * கடலாழி நீர்தோற்றி அதனுள்ளே கண் வளரும் * தன்னுடையவர்களின் ரக்ஷணத்திலே மிகவும் ஜாகரூகன். ஆக இத் தன்மைகளினால் [க்ஷாம்யதி இதி க்ருஷ்ணம் ஆஹ] அடியவர்களின் அபராதங் களை க்ஷமிப்பவனாக எம்பெருமானை ஆழ்வார் கூறினாரென்றதாயிற்று. * என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு * என்பதிலே நோக்கு. .... (கச)

ஸஸ்த்ரீகஸ்வாந் ஸுவாசஸ்ஸுசரிதஸுபகாந் க்ருஷ்ணஸாரூப்யவ [ஸௌம்யாந்
ஸ்வாஹாரோதாரஶீலாந் தநுக்ருதமஹவல்லக்ஷணோ பாவ்ய [முக்தாந் ।
ஸாக்ருஷ்டஸ்வப்ரவ்ருத்தீநபி மதபிமதாந் ஸந்தஸம்யோகியோக்யாந்
ஆவாயாந்க்ருஷ்ணரூபாவவ்ருணுத முநிஸ்ஸந்தேயவீடிமுதநீதாந் ॥

* அஞ்சிறையமடநாராய் * என்கிற திருவாய்மொழியில் பறவைகளைத் தூதுவிடுவதற்கு ஸ்வாபதேசார்த்த முரைப்பது இந்த ச்லோகம். எம்பெருமான் பக்கலிற் சென்று புருஷகாரம் செய்தருளவேணுமென்று ஆசாரியர்களைப் பிரார்த் திப்பதே இங்கு விவக்ஷிதமென்கிறார். (1) ஸஸ்த்ரீகஸ்வாந் - சேவலோடு கூடியிருக் கும் நாரைபோலே எம்பெருமானோடு இணைபிரியாதிருக்கு மாசார்யர்கள். 2. ஸுவாச: — இனிய குரலையுடைய குயில்போலே நல்ல ஸூக்திகளைப்பயிலும் ஆசார்யர்கள். 3. ஸுசரித ஸுபகாந் — அழகிய நடையுடைய அன்னம்போலே நன்னடத்தையுடையார். 4. க்ருஷண ஸாரூப்ய ஸௌம்யாந் — க்ருஷ்ணவர்ண முடையவை அன்றில்கள்; க்ருஷ்ணனைப்போல் ஆச்ரித ஸுலபர்களென்கை. 5. ஸ்வாஹாரோதாரசீலாந் — குட்டிகளுக்கு உணவுதேடித் தருகின்ற குருகுகள் போலே சிஷ்யர்களுக்கு சாஸ்த்ரார்த்தங்களையும் பகவதநுபவங்களையும் கொடுப் பவர்கள். 6. தநுக்ருத பகவத் லக்ஷ்மண: — சில வரிகளை உடம்பிற்கொண்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



டுள்ள வண்டுகள்போலே எம்பெருமானுடைய லக்ஷணங்களான சங்கு சக்கரம் முதலியவற்றைத் தரிப்பவர்கள். 7. பால்யகுப்தாந் — இளங்கிளிபோலே தங்களுடைய பெருமையைக் காட்டிக்கொள்ளாமல் "பால்யேந திஷ்டாஸேத்" என்கிற உபநிஷத்தின்படியே நீறுபூத்த நெருப்புப்போலே யிருக்குமவர்கள். 8. சாத்ரஸ்வச்சந்தவ்ருத்தீந் — பராதீநவ்ருத்திகளான பூவைகள்போலே சிஷ்யர்களால் காக்கப்படுமவர்கள். 9. அபிகதசிசிராந் — குளிர்ச்சிபொருந்திய வாடைக்காற்றுபோலே அடியார்திறத்தில் குளிர்ந்த [இரக்கம் பூண்ட] சிந்தையுடையார். 10. அந்தரங்கோக்தி யோக்யாந் — அந்தரங்கமாயிருக்கிற நெஞ்சுபோலே அந்தரங்கமான சொல்லுக்கு உரியவர்கள். ஆக இப்படிப்பட்ட ஆசாரியர்கள் தூதர்களாக வரிக்கப்பட்டார்களென்று கண்டுகொள்வது.

க்ஷுத்ராஹ்வாநாபிமுக்யாந்நிஜமஹிமதிரஸ்காரகார்யப்ரியத்வாத்
ஸர்வத்ராங்க்ரிப்ரதாநாத்ஸவிதசயநத: ஸ்வாங்க்ரிஸக்தைகர
[ஸ்யாத் |
கோபாத்யாப்தேரசேஷேக்ஷண விஷயதயா பக்தவஸ்துப்ரஸக்தே:
ச்லிஷ்யந்நாசவ்யபோஹாத்தத்ஹிதசமநாத் ப்ராஹ நாயம் ஸௌசீல்யம் ||

* வளவேழுலகு * இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய ஸௌசீல்யம் சொல்லப்பட்டதென்கிறார்.

1. க்ஷுத்ராஹ்வாநாபிமுக்யாத். களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா வென்பன் * கள்ளன் திம்பன் என்கிற நீசப்பெயர்களைச் சொல்லில் முகங்கொடுப்பவன். 2. நிஜமஹிம திரஸ்காரகார்ச்சா ப்ரியத்வாத். * இமையோர்பலரும் முனிவரும் வணங்கினால் உன்பெருமை மாசூணாதோ * தனது பெருமை மழுங்கும்படி செய்கிற ஆராதனத்திலும் உகப்புடையான். 3. ஸர்வத்ராபி அங்க்ரிதாநாத். திசைகளெல்லாந் திருவடியால் தாயோன் * குணகுண நிரூபணம் பண்ணாதே எல்லார் தலையிலும் திருவடியை வைப்பவன். 4. ஸவிதசயநத:. * தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுட்கண்வளரும் * ஆர்த்தர்களின் கூக்குரல் ஸமீபத்தில் கேட்கும்படி திருப்பாற்கடலில் பள்ளிகொள்பவன். 5. ஸ்வாங்க்ரிஸக்தைகரஸ்யாத் * உன்தேனைமலரும் திருப்பாதஞ் சேருமாறு நீயருளாய் * தன் திருவடிகளில் பற்றுடையார் பக்கலில் தானும் பற்றுடையான். 6. கோபாத்யாப்தே:. * மனைசேராயர்குலமுதலே * இடக்கை வலக்கையறியாத இடையர்களோடுங் கலந்து பழகுமவன். 7. அசேஷேக்ஷணவிஷயதயா. * அடியேன் காண்பானலற்றுவன் * நீசனான நானுமுட்பட எல்லாருங் காணக்கூடியவன். 8. பக்தவஸ்து ப்ரஸக்தே:. * உண்டாய் வெண்ணெய் * ஆச்ரிதருகந்த பொருளென்று வெண்ணெய் முதலியவற்றை உகப்பவன். 9. ச்லிஷ்யந்நாசவ்யபோஹாத். * அம்மாமூர்த்தியைச்சார்ந்துமாயோம் * தன்னையடிபணிந்தவர்கள் மாயாதபடி நோக்குமவன். 10. தத்ஹிதசமநாத். * சார்ந்தவிருவல்வினைகளுஞ் சரித்து * அடியார்களுக்கு அநிஷ்டங்களான புண்ய பாப ரூப கருமங்களைத்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தோலைத்தருள்பவன். ஆக இத்தன்மைகளாலே எம்பெருமான் ஸுசீலனென்பது ஐந்தாந் திருவாய்மொழியில் அருளிச்செய்யப்பட்டதென்றவாறு. ... (கசு)

அக்ரீதைரர்ச்யபாவாதநியதவிவிதாப்யர்ச்சநாதல்பதுஷ்டே: ப்ரஹ்வாவர்ஜ்யஸ்வபாவாத் ஸ்வவிஷயநியதேஷ்வாதராத் ஸ்வாதுபூம்நா |
பாதாஸக்தப்ரஸத்தேஸ் ஸக்ருதுபஸதநே மோக்ஷணாத் தர்மஸௌஹித்யாத்
க்ஷிப்ரக்ஷிப்தாஹிதத்வாத் ஸுகரபஜநதாம் ஸாயவஸ்யாஹ ஷஷ்டே || (கஎ)

* பரிவதிலீசனை * இத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆராதனைக்கு எளியவன் என்பது சொல்லப்படுகிறதென்கிறார்.

1. அக்ரீதைஃ அர்ச்ச்யபாவாத். * புரிவதுவும் புகைபூவே * காசுகொடுத்து வாங்கவேண்டாமல் ஸுலபவஸ்துக்களாலே ஆராதிக்கக்கூடியவன். 2. அநியத விவிதாப்யர்ச்சநாத். * எதுவேதென்பணியென்னாததுவே ஆட்செய்யுமீடே * அதிகாரிநியமாதிகளில்லாதபடி பல்வகை யாராதனைகளையுமுடையவன் 3. அல்பதுஷ்டே:. * ஈடுமெடுப்புமிலீசன் * நாம் செய்கிறது அற்பமானாலும் இது யோக்யம் இது அயோக்யம் என்று பாராதே அதுகொண்டு உகக்குமவன். 4. ப்ரஹ்வாவர்ஜ்யேசபாவாத்: * வணங்கி வழிபடுமீசன் * ப்ரஹ்வர்களாலே ஆவர்ஜநீயனான ஈச்வரன்; வணங்குமவர்கட்கு விதேயனாயிருக்குமவனென்கை. 5. ஸ்வவிஷயநியதேஷு ஆதராத். * உள்கலந்தார்க்கு ஓரமுதே * இதர விஷயங்களைப்பற்றாமல் தன்னையே பற்றுவதென்கிற நியமமுடையாரிடத்து அன்புடையான். 6. ஸ்வாதுபூம்நா. * அமுதிலுமாற்றவினியன் * இனிதென்று ப்ரஸித்தமான அமுதத்திற்காட்டிலும் மிக வினியன். 7. பாதாஸக்தப்ரஸத்தே:. * தாள்கள் தலையில் வணங்கி நாட்கடலைக் கழிமினே. * தன்னடிவணங்கினார்திறத்து ப்ரஸந்நனாயிருப்பவன். 8. ஸக்ருதுபஸதநே மோக்ஷணாத். * அவனைத்தொழுதால் ....அழிவின்றி யாக்கந்தருமே * ஒருகால் தொழுதாலும் அந்தமில் பேரின்பமளிப்பவன். 9. தர்மஸௌஹித்யாத். * தருமவரும்பயனாய * தருமங்களின் பரமபலனாயிருப்பவன். 10. க்ஷிப்ரக்ஷிப்தாஹிதத்வாத். * கடிவார்தீயவினைகள் நொடியாருமளவைக்கண் * விரைவில் விரோதி நிரஸநசீலன். ஆக இத்தன்மைகளாலே எம்பெருமான் எளிதாக ஆராதிக்கக்கூடியவ னென்பதை ஆறாந் திருவாய்மொழியி லருளிச்செய்தாரென்றாயிற்று. 'ஸ்வாதுபூம்நா' ஜதாவி வாம்:.

ஸத்வோத்தாக்ஷேபஹேதோரவதரணதநோர் நிர்த்ருதோஹோமாஸ்ய தஸ்ய த்ரா
ஹேதுஜ்ஞீதஸ்ய ப்ரவஹநவகுணதேஹாஸ்யஜஸ்ரம் நாநாஹேதோ: || மே
த்யாமாகாங்க்ஷா நிரோதாஸ் ஸ்ரீ த்வஹ்ருதயவத்யக்கார நித்யாக்ஷஸஸ்ய
ஸ்வாதுஸ்பர்ஷ ஸ்யாமாயஸூர்யஹாரயஸ்வஸம்ஷ்வநம் ஸ்வாசுவோசஸ் || (கஅ)

* பிறவித்துயரற * இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய ஆச்ரயணம் போக(ஹோம)ரூபமாயிருக்குமென்கிறதென்கிறார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



1. ஸத்சித்த ஆகர்ஷஹேதோ:. * மறவியையின்றி மனத்துவைப்பாரே * ஸத்துக்கள் மறக்கவொண்ணுதபடி அவர்களது நெஞ்சைக் கவர்ந்தருள்பவன். 2. அகசமநநிதே:. * வல்வினைத்துப்பாம்புலனைந்தும்துஞ்சக் கொடானவன் * ஆச்ரிதர்களது பாபங்களைப் போக்கவல்ல நிதியாயுள்ளவன். "வைப்பாம்" என்றதை நோக்கி நிதியென்றது. 3. நித்யபோக்யாம்ருதஸ்ய. * தூயவமுதைப்பருகிப் பருகி * இடைவிடாது அநுபவிக்கத்தக்க அம்ருதமாயிருப்பவன். 4. த்யாகே ஹேதூஜ்ஜிதஸ்ய. * என்சொல்லியான்விடுவேனோ * தன்னை விடுவதற்கு ஹேது வில்லாதவன். 5. ப்ரவஹதுபக்ருதே:. * பிரானையே * ப்ரவாஹரூபேண சென்று கொண்டிருக்கிற உபகாரபரம்பரைகளைச் செய்பவன். 6. துஸ்த்யஜஸ்வாநுபூதே:. * மாயவன் என்னுளிரானெனில் பின்னையானொட்டுவேனோ * விடுவேனென்றும் விட்டவொண்ணுதபடியான அநுபவத்தை யுடையவன். 7. த்யாகஆகாங்க்ஷா நிரோத்து: * ஒட்டுமோவினியென்னை நெகிழ்க்கவே * விடவேணுமென்கிற இச்சையையே தடைசெய்பவன். [illegible]. ச்ரிதஹ்ருதயப்ருதக்காரநித்யாக்ஷமஸ்ய * என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந்தன்னை யகல்விக்கத் தானுங்கில்லான் * அடியாருடைய மனத்தைத் தன் பக்கலில் நின்றும் விடுவிக்கமாட்டாதவன். 9. ஸ்வாத்மச்லிஷ்டஸ்ய. * அமரத்தழுவிற்றினியகலுமோ * ஒருவராலும் பிரிக்கவொண்ணுதபடி தம்மோடே கலந்துநிற்பவன். 10. காயத்ச்ரமஹர்யசஸ: * நிக்ரிலவன்புகழ்பாடியிளைப்பிலம் * தன்னைத்துதிப்பாருடைய ஆயாஸத்தைப் போக்கவல்ல திருப்புகழ் படைத்தவன். (இந்தப் பத்துப்பதங்களும் ஷஷ்டீவிபக்திகள்.)

ஆக இத்தன்மைகளையுடையனான எம்பெருமானுடைய பஜநம் பரமபோக்யமென்று ஏழாந் திருவாய்மொழியில் ஆழ்வார் அருளிச்செய்தாரென்றதாயிற்று.

[illegible] ||

* ஓடும்புள்ளேறி * இத் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய ஸௌசீல்யகுணம் பேசப்பட்டதென்கிறார்.

1. ஸபரீணும் ஸ்வைரஸேவ்யே. * ஓடும்புள்ளேறி * பெரிய திருவடி முதலான நித்யஸூரிகளுக்கு யதேஷ்டஸேவ்யன். 2. ஸ்வபமவதரதி. * பின்னும் எம்மாண்புமானான் * தானே பல அவதாரங்களைச் செய்தருள்பவன். 3. க்ஷுத்ர திவ்ய ஏகநேத்ரே. * கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு * க்ஷுத்ரர்களான மண்ணோர்க்கும் திவ்யர்களான விண்ணோர்க்கும் கண்ணாயிருப்பவன். 4. கோபாத்பர்த்தம் த்ருத அத்ரௌ. * வெற்பைபொன்றெடுத்து ஒற்கமின்றியே நிற்குமம்மான் * கோபாலர்களுக்காகக் கோவர்த்தனமலையை யெடுத்துத் தாங்கினவன். 5. ச்ரிததநுரஸிகே * பொய்கலவாது என் மெய்கலந்தானே * அடியாருடைய உடலில் ஆசையுடையான். 6. வாமநீபூரவத்நுச்சேப. * புலன்கொள்வா

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ணாய் * வாமனவடிவுகொண்டதனால் ஸ்ப்ருஹணீயனானவன். 7. ஸச்சித்தாநங்ய வ்ருத்தேள. * என்னெண் தானானே * ஸத்துக்களது எண்ணமே தனது எண்ணமாயிருக்குமவன் 8, விபவஸமதநேள * ஆனானாயன் மீனோடேனமும் * தன்னுடைய விபவங்களுக்கு எல்லையில்லாதாப்போலே தன் விக்ரஹங்களுக்கும் எல்லையில்லாதவன். 9 ஸ்வாயுதாரூடஹஸ்தே * சங்கு சக்கரம் அங்கையில் கொண்டான் * நல்ல திவ்யாயுதங்கள் ஏறப்பெற்ற திருக்கையை யுடையவன். 10. நீசோச்சக்ராஹ்யபாதே * ஞாலங்கொள்பாதன் * உலகளந்தகாலத்துச் சிறியார் பெரியாரென்னும் வாசி பாராதே அனைவர்க்கும் க்ராஹ்யமாகக்கொடுத்த திருவடிகளையுடையவன்.

ஆக இத்தன்மைகள்வாய்ந்த நீர்புரைவண்ணனான எம்பெருமானிடத்தில் ஆர்ஜவகுணத்தை எட்டாந் திருவாய்மொழியில் ஆழ்வாரருளிச்செய்தாரென்க.

பர்யங்கேऽங்கே ச த்ருஷ்டம் ஸவிரஹவிதுரம் டிம்பவத் பார்ச்வலீநம்
சித்தே க்லுப்தப்ரவேசம் புஜசிகரகதம் தாலுஸிம்ஹாஸநஸ்தம் |
சக்ஷுர்மத்யே நிவிஷ்டம் ஸ்திதமளிகதடே மஸ்தகே தஸ்திவாம்ஸம்
ப்ரத்யாஹாரோக்தரீத்யா விஹரந்நநுபவாஹாஜெ ஸாத்ம்யஹேதோ:
[சடாரி: || (௨௦)

* இவையுமவையும் * இத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆழ்வாருடைய ஒவ்வொரு அவயவத்திலும் வரிசையாகச் சேர்ந்தபடியைச் சொல்லுகிற முகத்தினால் அடியார்க்கு ஸாத்மிக்க ஸாத்மிக்க நன்மை பயக்குமவனென்பது சொல்லப்பட்டதென்கிறார்.

1. பர்யங்கேத்ருஷ்டம். * என்னுடைச்சூழலுளானே * ஆழ்வாருடைய சுற்றுப்பக்கத்தில் தென்பட்டவன். 2. அத்கேசத்ருஷ்டம். * அவனென்னருகலிலானே * ஸமீபத்தில் தென்பட்டவன். 3. ஸ்வவிரஹவிதுரம். * ஒழிவிலனென்னோடுடனே * விட்டுப்பிரியமாட்டாதவன். 4. டிம்பவத் பார்ச்வலீநம். * கண்ணனென்னொக்கலையானே * குழந்தைபோலே இடுப்பில்வந்து சேர்ந்தவன். 5. சித்தேக்லுப்தப்ரவேசம் * மாயனென்னெஞ்சினுளானே * நெஞ்சினுள் புகுந்தவன். 6. புஜசிகரகதம். * என்னுடைத்தோளிணையானே. * தோளிணைமேலேறி நிற்பவன். 7. தாலுஸிம்ஹாஸநஸ்தம். * என்னுடை நாவினுளானே. * நாவாகிற சிங்காசனத்தில் வீற்றிருப்பவன். 8. சக்ஷுர்மத்யே நிவிஷ்டம். * கமலக்கண்ணனென் கண்ணினுளானே * கண்ணிடையே யிருப்பவன். 9. அளிகதடேஸ்திதம். * என்னெற்றியுளானே * நெற்றியிலே நிற்பவன். 10. மஸ்தகேதஸ்திவாம்ஸம். * எனதுச்சியுளானே * சென்னிமேல் வந்து சேர்ந்தவன்.

ஆகவிப்படி க்ரமேண ஒவ்வோரவயவந்தன்னிலும் வந்து சேர்ந்த எம்பெருமானை ஒன்பதாந் திருவாய்மொழியில் ஆழ்வார் அநுபவித்தாரென்றதாயிற்று. .... .... ... .... ... . (௨௦)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



[illegible] (உக)

* பொருமாநீள்படை * இத் திருவாய்மொழியில் எம்பெருமான் அடியார்களுக்குத் தன்னையே தந்தருளுமியல்வினனென்பது அருளிச்செய்யப்படுகிறதென்கிறார்.

1. விஷ்வக் விக்ராந்தித்ருச்யம். * ஒருமாணிக்குறளாகி நிமிர்ந்த * 2. விகணநஸ்பலபம். * எண்ணிலும் வரும். * ஒன்று இரண்டு மூன்று என்றெண்ணுகையில் இருபத்தாறு என்றவாறே இருபத்தாறுவது தத்துவமாகிய தன்னைச் சொன்னதாக வந்து நிற்பவன். 3. வ்யகதபூர்வோபகாரம். * எம்பிரானை யெந்தைதந்தை தந்தைக்கும் தம்பிரானை * நெடுங்காலமாக மஹோபகாரங்கள் செய்தருள்பவன். 4. ஸ்வாந்தஸ்ய ஐகாக்ர்யஹேதும் * நெஞ்சமே! மலராள் மணவாளனைத் துஞ்சும்போதும் விடாது தொடர்கண்டாய் * மனம் எப்போதும் விடாது தொடரும்படியிருப்பவன். 5. ஸ்வயம் உதயஜுஷம். * ஓர் எண்தானுமின்றியே வந்து இயலுமாறு * ஒரு ஹேதுவின்றியே தானே தோன்றி நிற்பவன். 6. பந்தமாத்ரோபயாதம். * தாயும் தநதையுமாய் இவ்வுலகினில் வாயுமீசன் * தந்தை தாயர்களைப்போலே ஸம்பந்தமாத்திரத்தாலேவந்து உதவிபுரிகின்றவன். 7. சிந்தாஸ்துத்யாதிலக்ஷ்யம். * சிந்தையுள் வைப்பன் சொலலுவன் பாவியேன்—வானவர் சிந்தையுள்வைத்துச் சொல்லுஞ் செல்வனையே * சிந்திப்பதற்கும் இலக்காகவுள்ளவன். 8. நதஜநஸததச்லேஷிணம். * இடைவீடின்றி நல்கி யென்னை விடான் * அடியாரை ஒரு நொடிப்பொழுதும் விடாது அணைந்துநிற்பவன். 9. தர்சித அர்ச்சம். * நம்பியைத் தென்குறுங்குடிநின்ற * திருக்குறுங்குடி முதலான திருப்பதிகளிலே அர்ச்சாரூபியாக எழுந்தருளியிருக்கும் நிலையைக் காட்டுமவன். 10. ஸ்ம்ருத்யை சித்தே பிஷந்தம். * மறப்பற வென்னுள்ளே மன்னினான் தன்னை * எப்போதும் ஸ்மரிக்கத் திரவேண்டும்படி நெஞ்சுதன்னிலேயே விளங்கிக்கொண்டிருப்பவன்.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை நிர்ஹேதுக உதாரனென்று பத்தாந் திருவாய்மொழியில் ஆழ்வாரருளிச்செய்தாரெனறாயிற்று. ... (உக)

[illegible]

முதற்பத்தின் தேர்ந்த பொருள் இந்த ச்லோகத்தினால் வெளியிடப்படுகிறது. 1. எல்லாரைக்காட்டிலும் மேற்பட்டவனுதலாலும் 2. உத்க்ருஷ்டர் அபக்ருஷ்டர் என்று பாராமல் எல்லார்திறத்தும் ஸமனாகவே யிருப்பவனுதலாலும் 3. பக்தர்களுக்குச் சாலவும் எளியனுதலாலும் 4. குற்றங்களையெல்லாம் க்ஷமித்தருள்பவனுதலாலும் 5. நீசர்களோடும் புரையறக்கலந்து பரிமாறுகின்ற வனுதலாலும் 6. எளியபொருள்களைக்கொண்டு ஆராதிக்கக்கூடியவனுயிருப்ப வனுதலாலும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

தாலும், 7. பரமபோக்யமான ஆச்ரயணத்தையுடையவனாயிருப்பவனுதலாலும், 8. இயற்கையாகவே ருஜுத்வமென்னுங் குணமுடையனுதலாலும், 9. பொறுக்கப் பொறுக்க க்ரமேண போகங்களைத் தந்தருள்பவனுதலாலும், 10. நிர்ஹேதுக க்ருபாவிசிஷ்டனுகையாலும் எம்பெருமானை ஸேவ்யனுக முதற்பத்திற் சொல்லித் தலைக்கட்டினுராழ்வார் என்றதாயிற்று..... ... (௨௨)



## ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகன் திருவாய்மலர்ந்தருளிய

# த்ரமிடோபநிஷத்ஸாரம்.

𑌸𑍇𑌵𑌾𑌯𑍋𑌗𑍍𑌯𑍋𑌽𑌤𑌿𑌭𑍋𑌗𑍍𑌯𑌃 𑌶𑍁𑌭𑌸𑍁𑌭𑌗𑌤𑌨𑍁𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍋𑌗𑍍𑌯𑌾𑌤𑌿-
𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍍𑌤𑌦𑍍𑌧𑍇𑌤𑍁𑌦𑌾𑌤𑌾 𑌪𑍍𑌰𑌪𑌦𑌨𑌸𑍁𑌲𑌭𑍋𑌽𑌨𑌿𑌷𑍍𑌟𑌵𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌶𑍀𑌲𑌃 | [𑌶𑌾𑌯𑍀
𑌭𑌕𑍍𑌤𑌚𑍍𑌛𑌨𑍍𑌦𑌾𑌨𑍁𑌵𑌰𑍍𑌤𑍀 𑌨𑌿𑌰𑍁𑌪𑌧𑌿𑌕𑌸𑍁𑌹𑍃𑌤𑍍 𑌸𑌤𑍍𑌪𑌦𑌵𑍍𑌯𑌾𑌂𑌸𑌹𑌾𑌯𑌃
[illegible] ||

கவிதார்க்கிக ஸிம்ஹமாய் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரான தூப்புல்பிள்ளை, திருவாய்மொழியின் ஒவ்வொரு தசகத்தின் ஸாரார்த்தங்களை ஸங்க்ரஹித்து நூற்றுச்சொச்சம் ச்லோகரத்நங்கள்கொண்ட த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியை அருளிச்செய்ததுபோல, ஒவ்வொரு சதகத்தின் தாத்பர்ய ஸாரத்தை ஸங்க்ரஹித்து த்ரமிடோபநிஷத்ஸாரமென்றும் ஒரு திவ்யக்ரந்தமிட்டருளினுர். அதில் இந்த முதல் ச்லோகத்தினுல், திருவாய்மொழியின் ஒவ்வொரு சதகத்திலும் விளங்காநின்ற பகவத்குணங்களை வெளியிட்டருளுகிருர்.

1. ஸேவாயோக்ய:. ஸேவ்யத்வமென்பது முதற்பத்தின் ப்ரமேயமான குணம், — 2. அதிபோக்ய:. பரமபோக்யத்வம் இரண்டாம்பத்தின் —. 3. சுபஸுபகதநு:. சுபாச்ரய திவ்யமங்களவிக்ரஹ விசிஷ்டனென்பது. 4. ஸர்வ போக்யாதிசாயீ. போக்யங்களான ஸகல புருஷார்த்தங்களிற்காட்டிலும் மேம்பட்டவனென்பது.—5. ச்ரேயஸ்தத்தேதுதாதா. உபேயமான புருஷார்த்தத்தையும் அதற்குறுப்பான உபாயத்தையும் தந்தருள்பவனென்பது. — 6. ப்ரபதநஸுலப:, ப்ரபத்திக்கு எளியவனென்பது. — 7. அநிஷ்டவித்வம்ஸசீல:. அநிஷ்டங்களைத் தொலைத்தருளுமியல்வினனென்பது. — 8. பக்தச்சந்தாநுவர்த்தீ. அடியாருடைய க்ருத்தைப் பின்சென்று நடப்பவனென்பது. — 9. நிருபதிகஸுஹ்ருத். ஒரு உபாதியாலுமன்றிக்கே இயற்கையாகவே அருள்புரியுமவனென்பது. — 10. ஸத்பதவ்யாம்ஸஹாய:. * நலமந்தமில்லதோர்நாட்டின்வழிக்குத் துணையாமவனென்பது பத்தாம்பத்தில்.

ஆக இப்படிப்பட்ட திருக்குணங்களையுடையவனான எம்பெருமான் ஸர்வாதிகாரமான உபநிஷத்தாகிய திருவாய்மொழியில் பிரதிபாதிக்கப்பட்டானென்றாயிற்று. ... ... ... .... .... ... ... (௧)

[illegible]
[illegible] |
[illegible]
[illegible] || (௨)

உபாயமும் உபேயமும் தானேயாக எம்பெருமான் திருவாய்மொழியி னால் ப்ரதிபாதிக்கப்படுபவன். முதற்பத்தில் ஸேவ்யத்வம் சொன்னது உபாயத்வம் சொன்னபடியாதலாலும் இரண்டாம்பத்தில் போக்யத்வம் சொன்னது உபேயத்வம் சொன்னபடியாதலாலும் இவ்விரண்டுக்கும் திவ்யமங்கள விக்ரஹ யோகம் சொல்லவேண்டுதல் உபயுக்தமாகையாலே அது மூன்றாம்பத்தில் சொல்லப்பட்டு மேல் நாலாம்பத்தானது எம்பெருமானைத் தவிர்த்து வேறு உபேயம் கிடையாதென்றும் ஐச்வர்யம் முதலானவை விஷங்கலந்த மதுவோடு ஒத்தவையாதலால் ப்ராப்யங்களாகமாட்டாவென்றும் தெரிவிக்கும் முகத்தாலே உபாயத்வத்தை நன்கு நிலைநாட்டுவதாகி, ஐந்து தொடங்கிப் பத்துவரையிலு முள்ள ஆறுபத்துக்கள் உபாயத்வத்தை ஸ்திரப்படுத்துவனவாம் என்றாயிற்று.

பரம் நிர்வேஷ்ஜ்யம் ஸாம்யஹ்ருத்ஸமாயவ்ருஸஹநம்
ஸாமீப்யம் ஸ்வாராத்யம் ஸஹஜநம் ஸ்வாஜ்யவஹணம் |
ஸாக்ஷாத்ஸ்வாந்தஜ்ஞவ்ருத்தநவவிப்ராணநவரம்
ஸ்வீக்ருதம் நிர்யாயது ஸ்வநிர்யபஜநாவாச்யஸதகே || (௫)

முதற்பத்தில் பத்துத் திருவாய்மொழிகளாலும் ஸேவ்யத்வமென்கிற குணம் கூறப்படுவதாக ஏற்கனவே தெரிவிக்கப்பட்டிருப்பதால் அதற்கு ஸ்தாபகங்களாக ஒவ்வொரு திருவாய்மொழியினாலும் கூறப்படுகிற குணம் இன்னதின்னதென்று ஸங்க்ரஹிப்பதாகுமிந்த ச்லோகம். 1. எம்பெருமான் ஸர்வஸ்மாத்பரன். 2. எல்லார்திறத்தும் ஸமனாயிருப்பவன். 3. பத்துடையடியவர்க்கு எளியவன் 4. அடியார்களின் பிழைகளைப் பொறுப்பவன். 5. தன் மேன்மைபாராதே சிறியாரோடும் ஒருநீராகக்கலந்து பரிமாறுகிறவன். 6. நமது கைக்கு எட்டின பொருள்களைக்கொண்டும் எளிதாக ஆராதிக்கக்கூடியவன். 7. அமுதமருந்துவதுபோலே ஸரஸமான ஆச்ரயணத்தையுடையவன். 8. செவ்வைக்கேடரான ஸம்ஸாரிகளோடும் செவ்வியனாய்க் கலக்கைக்கீடான ஆர்ஜவகுணமுடையவன். 9. பொறுக்கப்பொறுக்க மேன்மேலும் அநுபவங்களை க்ரமேண தந்தருள்பவன். 10. ஒரு காரணத்தையிட்டு அருள்செய்வதாகிற அவமில்லாத நூநத்தைச் செய்பவன். — ஆக இப்படிப்பட்ட பத்து குணங்கள் பொருந்தியவனாக எம்பெருமானை யநுஸந்தித்துப் பேசினார் முதற்பத்தில் என்றதாயிற்று.

ஶிகாஹ்ராம் ஹ்ருஷ்டாம்வ்ருத்யா ஸ்வநிர்யமைநீதிஷ்டவாஷிதா
யத்வத்வ்யஷ்டாங்க்ரீர்மீமாம்ஸா ஸ்ருதிபிர்வரதஸ்கந்தவ்ருணோத |
தத்வத்யமாஹி ஸ்வநிர்யகவிம்ஶாஹிநீஹாநக:
க்ருதீஸாரக்ராஹம் வ்ருதரஷிஹ ஸம்க்ரஹ்ருக்ஷவயா || (௬)

வேதாந்தப்பொருள்களை வெளியிடவந்த ப்ரஹ்மஸூத்ரமும் திருவாய்மொழியும் [illegible] திவாதநத்திலே நோக்குடையன; அது தன்னிலும் முதலிரண்டு திருவாய்மொழிகளுக்கு விஷய ப்ரஹ்மஸூத்ரத்தோடே ஐககண்டியம் ஆசார்யர்களால் நிர்வஹிக்கப்படுவதாதலால் அதைக்காட்டுகிறாரிதில். [த்வி அஷ்ட அங்க்ரி:] ஈரெட்டு பதினாறாய், பதினாறு பாதங்களையுடைத்தான [அந்த்யா மீமாம்ஸா] உத்தர மீமாம்ஸையென்கிற ப்ரஹ்மஸூத்ரமானது என்றபடி. ஒவ்வொரு அத்யாயத்திற்கும் நான்கு பாதமாக நான்கு அத்யாயங்களையுடையதிறே அது. [தூதிகமதிஸ்தபுடிதா] ஒவ்வொரு அதிகரணத்திலும் ஒவ்வொரு

ந்யாயத்தை சிக்ஷித்திருப்பதால் மிதமதிகளால் அறியவொண்ணாத ந்யாயங்கள் நிரம்பியது என்று அந்த உத்தரமீமாம்ஸைக்கு விசேஷணம். அப்படிப்பட்ட அது [யத் ச்ருதி சிகரதத்வம் த்விகாப்பாம் வ்யவ்ருணுத] இரண்டிரண்டான அத்யாயங்களினால் யாதொரு வேதாந்தார்த்தத்தை விவரித்ததோ, [தத்] அதை. [இஹ ஆதௌ அதிகவிம்சாபி: காதாபி: க்ருபயாஸாரக்ராஹம் ஸங்க்ருஹ்ய க்ருதீமுநி: ந: இஹவ்யதரத்] இந்தத் திருவாய்மொழியாகிற திவ்யப்ரபந்தத்தில் முதலில் இருபத்துச் சொச்சம் பாசுரங்களினால் ஸாரஸங்க்ரஹமாக ஸங்க்ரஹித்து ஆழ்வார் நமக்கு அருள்புரிந்தார்.

"காரணத்வ ஸ்வாயத்த்வ உபாயத்வ உபேயதா" என்று நான்கு அர்த்தங்கள் ப்ரஹ்மஸூத்ரத்தின் நான்கு அத்யாயங்களுக்கும் ப்ரமேயம். ப்ரஹ்மமே ஜகத்காரணமென்பது முதலத்யாயத்தில். அப்படிச் சொல்லுவதில் பிறரால் ஏற்படும் விரோதங்களைப் பரிஹரித்து அதனை நிலைநாட்டுவது இரண்டாமத்யாயத்தில். ஈச்வரனே உபாயபூதன் என்பது மூன்றுமத்யாயத்தில். உபேயமும் அவனேயென்பது நான்காமத்யாயத்தில் என்று நிஷ்கர்ஷிக்கப்பட்டுளது. இவ்வர்த்தங்கள் முதலிரண்டு திருவாய்மொழிகளில் விசதம். . (௪)

பரத்வாதீந் த்ருஷ்ட்வா பரிசரணஹேதூந் குணகணாந்
ப்ராஹுஸ் ஸேவ்யத்வம் ப்ரதமசதகே வீக்ஷ்ய வரதம் |
ததேவ ஸ்வாதுத்வப்ரியதமதயா போக்யம் அவஸிதோ
பரேணாத்வம் தஸ்ய ப்ரதமவரணீயம் ப்ரதயதி ॥ (௫)

"பரம் நிர்தோஷத்வாத்" என்று தொடங்கிக் கீழ் மூன்று ச்லோகத்தில் ஸாதித்தபடியே தேறிநின்ற ஸர்வஸ்மாத் பரத்வம் முதலான பத்து குணங்களாலும் எம்பெருமான் ஸேவ்யனென்பதை முதற்பத்து முழுவதாலும் மூதலித்து, ஸேவ்யனாகையாலே உபயபூதனான அவனே உபேயனுமாயிருப்பனென்றுகொண்டு தமக்குப் பரமபோக்யனான அவனை ஆழ்வார் அநுபவிக்க இழிந்தவராய் அவனுடைய பரமபோக்யதையை மேற்பத்தில் வெளியிட்டருளுகிறாரென்று இதனால் இரண்டாம் பத்துக்கு ஸங்கதி அருளிச்செய்தாராயிற்று.

இந்த ச்லோகத்தில் * ப்ரதமசதகே வீக்ஷ்ய வரதம் * என்கையாலே ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்வல பாரிஜாதமான பேரருளாளப் பெருமாளுடைய அநுபவம் ஆழ்வார்க்கு முதற்பத்திலே நிகழ்ந்ததாய் ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகன் திருவுள்ளம் பற்றுவதாகப் பெரியோர் பணிக்கும்படி இதைப்பற்றின விவரணம் அடியேனுடைய ஸ்ரீஹஸ்திசைல விஜய க்ரந்தத்திலே காணத்தக்கது. (௫)

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி முதற்பத்து முற்றிற்று.



Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.



# திருவாய்மொழி முதற்பத்துச் செய்யுளகராதி.







CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

செய்யுளகராதி முற்றிற்று.

---

திருவாய்மொழி முதற்பத்திலுள்ள பல முக்கியச் சொற்களுக்கும் சொற்றொடர்கட்கும்

## அகராதி.





Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.





CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.





CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.





முதல்பத்து

சொற்றொடர் அகராதி முற்றிற்று.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:.

திருவாய்மொழி முதற்பத்தின்

# பொருளட்டவணை.





## உரையிலுள்ள சில முக்கிய விஷயங்கள்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.







CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



ப்ரபந்நஜநகூடஸ்தரான

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி.

[ இரண்டாம் ஸம்புடம். ]

(இரண்டு - மூன்று பத்துக்கள்.)



பெருமாள்கோயில்

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியரால்

எல்லார் தமக்கும் இன்பம் பயக்குமாறு எளிய நடையில் தெளிய எழுதப்பட்ட

திவ்யார்த்த தீபிகையுடன்;



சென்னை:

"ஹாடன் அண்டு கம்பெனியில்" அச்சிடப்பட்டது.

1935

யுவஷு வைகாசித் திருவிசாகம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:.

# காஞ்சீபுரம் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார் ஸ்வாமி அருளிச்செய்தவை.



## நாலாயிர திவ்ய ப்ரபந்த உரைகள்.

வடமொழி தென்மொழிப்புலவர்களால் நாடெங்கும் புகழப்பெற்ற "திவ்யார்த்த தீபிகை" என்னும் உரையுடன் கூடியவை.

| | ரூ. | அ. |
|---|---|---|
| திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் | 3 | 0 |
| திருப்பாவை | 1 | 4 |
| நாச்சியார் திருமொழி | 1 | 12 |
| பெருமாள் திருமொழி | 1 | 8 |
| திருச்சந்த விருத்தம் | 1 | 8 |
| திருமாலை, திருச்சந்த விருத்தம், அமலனுதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு | 1 | 4 |
| பெரிய திருமொழி— முதல் ஸம்புடம் (1,2 பத்துக்கள்) | 3 | 0 |
| ஷி இரண்டாவது „ (3, 4, 5 „ ) | 3 | 0 |
| ஷி மூன்றாவது „ (6, 7, 8 „ ) | 3 | 8 |
| ஷி நான்காவது „ (9 பத்து முதல் திருநெடுந்தாண்டகம் முடிய | 5 | 0 |
| திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் தனி | 1 | 8 |
| இயற்பா—முதல் ஸம்புடம் (முதல் 4 திருவந்தாதிகள்) | 4 | 8 |
| „ 2-வது „ (திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி) | 4 | 0 |
| திருவிருத்தவுரை (தனி) | 1 | 0 |
| „ 3-வது „ திருவெழுகூற்றிருக்கை, திருமடல்கள், ராமாநுஜநூற்றந்தாதி | 3 | 0 |
| ராமாநுஜ நூற்றந்தாதி உரை-தனிப்புஸ்தகம் | 1 | 0 |
| மூவாயிரம் 10 ஸம்புடமும் ஒரே தடவையில் வாங்கினுல் | 30 | 0 |

## ஸ்தோத்ரபாட வியாக்யானங்கள்.

(தமிழ் எழுத்தும் க்ரந்த எழுத்தும் கலந்த மணிப்ரவாள நடை.)

| | | |
|---|---|---|
| முகுந்தமாலை (மிகவும் தெள்ளிய உரை) | 0 | 6 |
| ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்நம் (அமுதப்பெருக்கு உரை) | 1 | 0 |
| ஸுதர்சந சதகம் (எளிய நடையில் உரை) | 1 | 0 |
| ஸ்ரீரங்கராஜஸ்தவம் (அத்புதமான வியாக்யானம்) | 2 | 8 |
| வரதராஜஸ்தவம் ஸ்ரீஸ்தவம் விரிவுரை (தெலுங்கு லிபி) | 2 | 0 |
| அதிமாநுஷஸ்தவம் ஷி | 0 | 10 |

ஸ்ரீ வைகுண்டஸ்தவம், ஸுந்தரபாஹுஸ்தவம், ஸுதர்சன சதகம், கத்யத்ரயம் இவற்றின் உரை மாதஸஞ்சிகையாக வெளியாகிறது. (தெலுங்கு லிபி)

## ஸத்ஸம்ப்ரதாயார்த்தச் சிறு நூல்கள்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| சேஷாவதாரச் சிறப்பு | 0 | 2 |
| நமஸ்கார தத்வ விஜயத்வஜம் | 0 | 6 |
| ப்ரணவாதிகார தத்வம் | 0 | 4 |
| ஸ்தோத்ர வியாக்யான சோதகம் | 0 | 4 |
| வாத்ஸல்யார்த்த விவரணம் | 0 | 3 |
| சேட்லூரார் மாயமயக்கம் | 0 | 2 |
| விதவா வபந வித்வம்ஸநம் | 0 | 4 |
| பாதுகா ஸஹஸ்ராவதார தத்வம் (சுத்த ஸம்ஸ்க்ருத பாஷையில் தமிழ் மொழி பெயர்ப்புச் சுருக்கத்துடன்) | 0 | 4 |
| உபதேசரஸாயன ஸாரம் (கும்பகோண தூர்வாதி சர்வ பங்கம்) | 0 | 4 |
| ரக்ஷாவிலோசநபாவ ப்ரகாசிகா | 0 | 6 |

## சரித்திர நூல்கள்.

| | | |
|---|---|---|
| கூரத்தாழ்வான் வைபவம் | 0 | 4 |
| ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா வைபவம் ஸம்ஸ்க்ருத காவ்ய ரூபம், தமிழ் உரையுடன் } ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமி ஸூக்தி | 0 | 8 |
| ஸத் ஸம்ப்ரதாயப்படி— அண்ணா வைபவ விளக்கம் | 0 | 4 |
| பகவத் கதாம்ருதம்—நாலாயிர திவ்ய ப்ரபந்தங்களி லடங்கியுள்ள இதிஹாஸ புராண கதைகளின் விவரணம் | 0 | 12 |
| வாதிபீகர விஜயம் | 0 | 4 |
| ஸத்யநாராயணஸ்த்ரம் | 0 | 4 |
| சென்னை உபந்யாஸ விசேஷங்கள் | 0 | 1 |

## ரஹஸ்யார்த்த நூல்கள்.

| | | |
|---|---|---|
| ஸ்ரீவசன பூஷண ஸாரம் | 1 | 0 |

ஆசார்ய ஹ்ருதய ஸாரம் (மாத ஸஞ்சிகையாக வெளியாகின்றது)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்

## அண்ணங்கராசாரியர்

இயற்றிய

திவ்யார்த்த தீபிகை யுரையோடுகூடிய

# திருவாய்மொழி.



## இரண்டாம்பத்து — முதல் திருவாய்மொழி,
## வாயுந்திரையுகளும்.



## அவதாரிகை.



நம்மாழ்வார் எம்பெருமானை அநுபவிப்பது மிகவும் விலக்ஷணமாயிருக்கும். கீழ் முதற்பத்தில் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணத்தைப் பேசி அநுபவித்தார்; அவனுடைய பரத்துவத்தைப் பேசினார் முதற் பதிகத்தில்; அவன் பஜிக்கத்தகுந்தவனென்றார் இரண்டாம் பதிகத்தில்; அவன் அடியவர்கட்கு எளியவன் என்றார் மூன்றாம் பதிகத்தில்; அவன் அடியவர்களது பிழைகளைப் பொறுக்குந்தன்மையனென்றார் நான்காம் பதிகத்தில்; பராத்பரனான தான் நம்போல்வாருடைய அற்பத்தனத்தைச் சிறிதுங் கணிசியாது தன்னைத் தாழவிட்டுக்கொண்டு நம்மோடு புரையறக் கலந்து பழகும் சீலகுணமுடையனென்றார் ஐந்தாம் பதிகத்தில்; நாம் இட்டதுகொண்டு த்ருப்தியடைபவனென்றார் ஆறாம் பதிகத்தில்; ஆச்ரயணத்தில் ஸாரஸ்யமுடையனென்றார் ஏழாம் பதிகத்தில்; மனமொழிமெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருத்தலாகிற ஆர்ஜவகுணமுடையனென்றார் எட்டாம் பதிகத்தில்; அடியார்களுக்குத் தன்னை அநுபவிப்பிக்குமிடத்தில் ஏககாலத்திலேயே பூர்ணாநுபவங்கொடுத்துவிடுகையன்றியே பொறுக்கப் பொறுக்கச் சிறிது சிறிதாகக் கொடுக்குந்தன்மையனென்றார் ஒன்பதாம் பதிகத்தில். நிர்ஹேதுகமாகப் பரமோபகாரஞ்செய்தருள்பவனென்றார் பத்தாம்பதிகத்தில்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆகவிப்படி பகவத்குணநுபவத்தில் ஆழங்காற்பட்ட ஆழ்வார் இத் திருவாய்மொழியில் தம்முடைய பகவத்விஷயாவகாஹநம் லோகவிலக்ஷணமென்பதைக் காட்டுகிறார். ஸம்ஸாரிகள் உலகத்திலுள்ளாரெல்லாரையும் தங்களைப் போலவே உண்டியே உடையே உகந்தோடுபவர்களாக நினைத்தல்போல ஆழ்வாரும் உலகிலுள்ள ஸகல பதார்த்தங்களும் தம்மைப்போலவே எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் நோவுபடுகின்றனவாகக் கொண்டு, — நாரை அன்றில் கடல் காற்று சந்திரன் முதலிய பதார்த்தங்களை நோக்கி அவற்றுக்குண்டான சில தன்மைகளை இயற்கையாகக் கருதாது பகவத் விச்லேஷ வ்யஸநத்தினாலுண்டானவையாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தாம் அநுசோகிக்கிறார்.

இவ்வாழ்வார் பெரிய திருவந்தாதியின் முடிவில் "கார்கலந்த மேனியான் கைகலந்த வாழியான், பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான் சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ்துயரை, என்னினைந்து போக்குவரிப் போது" என்றொரு அற்புதமான பாசுரமருளிச்செய்து, உலகத்தில் எல்லாரும் பகவத்குணநுபவம் பண்ணியே போதுபோக்கவேணுமென்றார். பகவத்குணங்களை அநுஸந்தித்தால் பாவங்களெல்லாம் தொலையுமென்று ஸாமாந்யமாகப் பலரும் சொல்லுவதுண்டு; அங்ஙனம் பாவங்களைத் தொலைத்துக்கொள்வதற்காக பகவத்குணநுபவம் செய்யாவிடில் செய்யவேண்டா; பகவத்குணநுஸந்தான முகத்தினால் பாவங்களைத் தொலைத்துக்கொள்ளாதொழியில் ஒழிக; ஒவ்வொருவனும் போதைப்போக்கியாகவேண்டுமே; வேறு எந்தக் காரியஞ்செய்தால் போதுபோகும்! பகவத்குணநுபவத்தாலன்றி வேறொன்றாலும் போதுபோக்க முடியாதாகையாலே காலக்ஷேபார்த்தமாகவாவது ஒவ்வொருவனும் பகவத்குணநுபவம் பண்ணியே யாகவேணுமென்றார்: இப்படி ஏன் சொல்லவேண்டும்? உலகத்தில் ஒவ்வொருவனும் பகவத்குணநுபவம் பண்ணியோ போதுபோக்குகிறான்? இல்லை; சூதாடிப் போதுபோக்குவார் சிலரும், சதுரங்கம் பொருது போதுபோக்குவார் சிலரும், உண்டியே உடையே உகந்தோடிப் போதுபோக்குவார் சிலருமாய் இங்ஙனம் பலவகைகளாலே போதுபோக்குவாரைக் காணாநின்றோமே; குணநுபவத்தாலே போதுபோக்குவாராக ஒருவரையுங் கண்டிலோமே; ஆழ்வாரொருவரே யன்றோ அப்படி யுள்ளவர்; இப்படியிருக்க "என்னினைந்து போக்குவர் இப்போது" என்று இவர் எங்ஙனஞ் சொல்லலாமென்னில், உலகத்தில் தம்முடைய ஸ்வபாவத்தையே பிறர்க்கும் ஸ்வபாவமாக நினைத்துக்கொள்ளுதலுண்டாதலால் ஆழ்வாரும் தம்முடைய போதுபோக்கையே பிறர்க்கும் போதுபோக்காகக் கருதுகின்றனரென்ன வேணும். பரமைகாந்திகளாய்ப் பரம வைதிகர்களான அந்தணர்கள் இரவிலே சயனிக்கும்போது தம் மனைவியரை விளித்து 'அடீ! சொம்பிலே ஜலம் வைக்கவேண்டா; கவிழ்த்து வைத்திடு' என்று சொல்லுவர்களாம்; இப்படிச் சொல்லுவதன் கருத்து யாது? இரவிலே கள்ளன் வந்தால் சொம்பைக் கொள்ளைகொள்ள நினைத்து அதனருகே வந்து அதை யெடுக்கப் பார்க்கும்போது கையலம்பாமல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சொம்பைத் தொடலாகாதென்று தீர்த்தம் தேடுவானும்; தீர்த்தம் கிடைத்தால் கையை அலம்பிக்கொண்டு சொம்பை எடுத்துப்போய்விடுவனும்; தீர்த்தம் கிடையாவிடில், அசுத்தமான கையாலே சொம்பை யெப்படி யெடுப்பதென்று ஆசாரங்கொண்டாடி வெறுமனே போய்விடுவனும்; இதற்காகவே 'சொம்பில் ஜலமின்றிக் கவிழ்த்துவை' என்று புராதன வைதிகர்கள் திட்டம் செய்வர்களாம்: தங்களுடைய ஆசாரமே கள்ளர்க்கும் உள்ளதாக அவர்கள் நினைப்பதுபோல் ஆழ்வாரும் பகவத்குணாநுபவத்தாலன்றி மற்றெதனாலும் தமக்குப் போது போக்க அரிதாயிருக்கு மியல்வையே எல்லார்க்கும் உளதாக நினைத்து "என்னினைந்து போக்குவர் இப்போது" என்றார்; அவ்வண்ணமே இங்கும் நாரை முதலியவற்றையும் தம்மியல்வினவாக வெண்ணி ஒவ்வொன்றையும் நோக்கி 'நீயும் என்னைப்போலே பகவத்விஷயத்தில் ஆசைவைத்து விருப்பத்தின்படி கிடைக்கப்பெறாமையினாலே நோவுபட்டாயோ?' என்று பேசுகிறபடியாய்ச் செல்லுகின்றது இத் திருவாய்மொழி.

அடியவர்களை இங்ஙனம் பிச்சேறப் பண்ணுமவன் எம்பெருமானென்று இதனால் அவனுடைய ‡ உந்மாதாவஹத்வமென்கிற குணம் சொல்லப்பட்டதாகும்.

ஸ்ரீபாகவத தசமஸ்கந்தத்தில் தொண்ணூறுமத்யாயத்தில் பதினைந்தாவது ச்லோகம் முதலாகக் காணப்படுகின்ற சில ச்லோகங்களின் ரீதியும் இப்பதிகத்தின் ரீதியும் பெரும்பாலும் ஒற்றுமைப்பட்டிருத்தலைக் காணலாம். இத் திருவாய்மொழியின் சாயையாகவே அந்த ச்லோகங்கள் பிறகு சில மஹான்களால் சேர்க்கப்பட்டனவென்று கூறுவாருமுளர்; உலகேத்துமாழியானே உண்மை யுணர்வான். .... .... ... *

வாயுந்திரையுகளும் கானல்மடநாராய் *
ஆயுமமருலகும் துஞ்சிலும்நீதுஞ்சாயால் *
நோயும்பயலைமையும் மீதூரவெம்மேபோல் *
நீயும்திருமாலால் நெஞ்சங்கோட்பட்டாயே * (க)

| | |
|---|---|
| வாயும் | மேன்மேலுங் கிட்டுகின்ற |
| திரை | அலைகள் |
| உகளும் | தாவுமிடமான |
| கானல் | { கடற்கரையிலுள்ள சோலையிலுள்ள |
| மடம் | இளமை தங்கிய |
| நாராய் | நாரையே!, |
| ஆயும் | (நமது) தாயும் |
| அமர் உலகும் | தேவலோகமும் |
| துஞ்சிலும் | உறங்கினாலும் |
| நீ துஞ்சாய் | நீ உறங்குகிறாயில்லை; |
| ஆல் | ஆதலால் |
| நோயும் | மனவருத்தமும் |
| பயலைமையும் | { (அதன்காரியமான) பசலைநிறமும் |
| மீதூர | மேலிட்டுவர |
| எம்மே போல் | எங்களைப்போல |
| நீயும் | நீயும் |
| திருமாலால் | { திருமகள் கொழுநனான எம்பெருமானாலே |
| நெஞ்சம் கோள் பட்டாயே | { நெஞ்சு பறித்துக்கொள்ளப்பட்டாயோ? |

‡ உந்மாதாவஹத்வம் — சித்தவிப்ரமத்தை விளைக்குந்தன்மை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * *—[வாயுந்திரையுகளும்.] பிரிந்தவர்கள் இரங்குவது நெய்தல் நிலத்திலாதலால் ஆழ்வார் இப்போது கடற்கரைச் சோலையிலிருப்பதாகக் கொள்க. ஆங்கு உணவுக்காக ஊக்கங்கொண்டிருக்கின்ற ஒரு நாரை கண்ணுக்குப்புலப்பட, அதனுடம்பில் இயற்கையாகவுள்ள வெண்மையைக்கண்டு அதுவும் தம்மைப்போலவே பிரிவாற்றாமையினால் விவர்ணப்பட்டிருக்கின்றதாகக்கொண்டு, நாராய்! ஐயோ! நீயும் நானகப்பட்ட விஷயத்திலே அகப்பட்டு இப்படியானாயோ? என்பதாகச் செல்லுகிறது இப்பாசுரம்.

வாயுந் திரை உகளும் = இதை நாரைக்கு விசேஷணமாகக்கொள்வாருமுளர், கானலுக்கு விசேஷணமாகக்கொள்வாருமுளர். மேன்மேலும் எறிகின்ற அலையிலே அழுக்கி நடக்கின்ற நாரையே! என்னவுமாம்; திரைகள் உகளப் பெற்ற கானலிலே [கழியிலே] வர்த்திக்கின்ற நாரையே! என்னவுமாம்.

என்னைப்பெற்ற தாயும், உறங்காமையே வடிவான தேவலோகமும் உறங்கினாலும் நீ உறங்குவதில்லையே!; இதற்குக் காரணமறிகின்றிலேன்; இப்படி நீ இருப்பதைக்காணுமிடத்து இதற்கொரு சிறந்த காரணமிருத்தல் வேண்டும்; உள்ளேயுருகிநைந்து அதன்காரியமாகப் பயலை நிறமும் மேலே ஸ்பஷ்டமாகத் தெரியும்படியிருந்து நான் நோவு படுவது பகவத்விஷயத்தி லீடுபட்டதனாலே; இப்படிப்பட்ட நோவை நீயும் உற்றிருப்பதாகக் காண்கின்றபடியால் என்னைப் போலவே நீயும் திருமாலால் நெஞ்சு கொள்ளை கொள்ளப் பெற்றாய்போலும் என்றதாயிற்று.

ஆழ்வார் பெண்ணிலைமை யெய்திப்பேசுகிற பதிகம் இது என்பது இரண்டாமடியின் முதற்பதத்தினால் விளங்கும். என் தாய் உறங்கினாலும் நீ உறங்குவதில்லை யென்றதனால், பராங்குசநாயகியாகிய இத்தலைமகளின் தாய்க்கு உறக்கமேயில்லை யென்பது வெளியாம். மகளின் உறக்கமின்மை கண்டு வருந்தித் தாயும் உறங்காளென்க. தம்முடைய கண்களுக்குத் துஞ்சுதலில்லாமையை ஆழ்வார் இவ்வழியால் வெளியிட்டது ஒரு சமத்காரம்.

இங்கே நம்பிள்ளை யீடுகாண்மின்;—"இவளைப்பெற்ற தாய்க்கு உறக்கமின்றிக்கே யொழிவானேன்னென்னில்; முன்பெல்லாம் 'இவளுக்கு ஸத்ருசனாயிருப்பானொருவனைப் பெற்றுக்கொடுத்தோமாக வல்லோமே' என்று கண்ணுறங்காது; பின்பு நாயகனைப்பிரிந்து இவள் நோவுபடுகிறபடியைக்கண்டு அத்தாலே கண்ணுறங்காது."

நோயும் பயலைமையும் = நோய் கண்ணுக்குத் தெரியாதது; பயலைமை கண்ணுக்குத் தெரிவது. [பயலைமையைப்பற்றின விவரணம், கீழ் முதற்பத்தில் நான்காந் திருப்பதிகத்தில் நாலாவது பாசுரத்தின் தீபிகையில் விரித்துரைக்கப் பட்டுளது, காண்க.]

மீதூர = விஷமேறினாற்போலே உடம்பிலே வியாபிக்க என்றபடி. இப்படிப்பட்ட நாரையின் நிலைமையைக்கண்ட ஆழ்வார் "நீயுந் திருமாலால் நெஞ்சங் கோட்பட்டாயே" என்று பகவத்விஷய ப்ராவண்யமடியாகத்தான் உனக்கு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இந்த நிலைமை உண்டாயிருக்கவேணுமென்று கூறுதற்குக் காரணம் அவதாரிகையிற் காண்க.

ஆசார்யஹ்ருதயத்தில் "அச்சேத்யமென்னுமது ஈரும் வேம் ஈரியாயுலர்த்தவேன்னப்பட" இத்யாதி சூர்ணிகையில் "காற்றுங் கழியுங்கட்டி யழக்கொண்ட பெருங்காதலுக்குப் பத்திமை நூல் வரம்பில்லையே" என்றருளிச்செய்தது நோக்கத்தக்கது. இதனால் ஆழ்வாருடைய ப்ரேமம் ஒரு நூல் வரம்புக்கு அடங்காதது என்று ஸ்தாபிக்கப்பட்டது. ... ... ... (க)

கோட்பட்டசிந்தையையாய்க் கூர்வாயவன்றிலே *
சேட்பட்டயாமங்கள் சேராதிரங்குதியால் *
ஆட்பட்டவெம்மேபோல் நீயுமரவணையான் *
தாட்பட்டதண்டுழாய்த்தாமம் காமுற்றுயே * (உ)

| | |
|---|---|
| கோள் பட்ட | அபஹரிக்கப்பட்ட |
| சிந்தையை ஆய் | நெஞ்சையுடையையாகி |
| கூர் வாய | (அதனால்) தழதழத்த குரலையுடைய |
| அன்றிலே | அன்றில் பறவையே!, |
| சேண் பட்ட | நெடிதான |
| யாமங்கள் | சாமங்கள்தோறும் |
| சோாத | படுக்கையிற் சோாமல் |
| இரங்குதி | வருந்துகின்றாய்; |
| ஆல் | ஆதலால் |
| ஆள்பட்ட | அடிமைப்பட்ட |
| எம்மே போல் | எங்களைப்போலவே |
| நீயும் | (பிரிவாற்றுமை தோற்றவிருக்கிற) நீயும் |
| அரவு அணையான் | சேஷசாயியான எம்பெருமானது |
| தாள் | திருவடிகளிலே |
| பட்ட | ஸம்பந்தம்பெற்ற |
| தண் | குளிர்ந்த |
| துழாய் தாமம் | திருத்துழாய்மாலையை |
| காமுற்றுயே | ஆசைப்பட்டாயோ? |

* * * — [கோட்பட்ட] அன்றில் என்பது ஒரு பறவை; க்ரௌஞ்சமென்னவும் படும். அது பெரும்பாலும் பனைமரத்தில் வாழும்; அது எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாது நிற்கும். கணப்பொழுது ஒன்றை ஒன்றுவிட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறுமல் ஒன்றை ஒன்று இரண்டு மூன்றுதரம் கத்திக்கூவி அதன் பின்பும் தன் துணையைக் கூடாவிடின் உடனே இறந்துபடும். ஆணும் பெண்ணுமான அந்த அன்றிற்பறவை இணைபிரியாமல் நெருங்கி ஒன்ருேடொன்று வாயலகைக் கோத்துக்கொண்டு உறங்கும்பொழுது அவ்வுறக்கத்திலே வாயலகு தன்னில் நெகிழ்ந்தவளவிலே துயிலுணர்ந்து அப்பிரிவைப் பொறுமல் மெலிந்து பெருந்தொனியாகக் கத்துகிற மிக இரங்கத்தக்க சிறுகுரல் ஆழ்வாரது திருச்செவியிலே விழுந்ததாக, அதுவும் பகவத்விஷயத்தி லீடுபட்டுப் பிரிவாற்றுமையினால் கத்துகின்றதெனக் கொண்டு, ஐயோ! நீயும் என்னைப்போலே * ஆழியானென்னு மாழமோழையில் அகப்பட்டாயே! என்கிறது இப்பாசுரம்.

தழதழத்த குரலையுடைத்தான அன்றிற்பறவையே! நெஞ்சுபறியுண்டு நெடும்போதாக வருந்திக்கிடக்கின்றாயே!; அடிமைப்பட்ட என்னைப்போலே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பிரிவாற்றாமை தோற்றவிருக்கிற நீயும் அரவணைமேற் பள்ளிகொண்ட முகில் வண்ணனுடைய செவ்வித்துழாய் மாலையை ஆசைப்பட்டு இப்பாடுபடுகிறாயோ? என்றாளாயிற்று. பகவத் விஷயத்தி லீடுபட்டார்க் கல்லது இப்படிப்பட்ட வருத்தமுண்டாகாதென்று ஆழ்வார் நினைவு போலும்.

கோட்பட்ட — கொள்ளப்பட்ட என்ற படி. தன்வச மன்றியே யொழிந்த படி. சிந்தையை = முன்னிலை. சேட்பட்ட=சேண்—நீட்சி. தாமம்—தாமா என்னும் வடசொல்விகாரம். சாமம் உற்றாய்+காமுற்றாய்; சிதைவு.

ஸ்ரீ பாகவதத்தில் (10—90—15) "குரரி! விலபஸி த்வம் வீத நித்ரா ந ஶேஷே ஸ்வபிதி ஜகதி ராத்ர்யாமீஶ்வரோ குப்தபோதஃ| வயமிவ ஸகி! கச்சித் காடநிர்விண்ணசேதா: நளிநநயநஹாஸோதார லீலேக்ஷணேந = குரரி! விலபஸி த்வம் வீதநித்ரா ந சேஷே ஸ்வபதி ஜகதி ராத்ர்யாமீச்வரக்ரஸ்தபோதே, வயமிவ ஸகி! கச்சித் காடநிர்விண்ண சேதா: நளிநநயநஹாஸோ தார லீலேக்ஷணேந." என்றச்லோகம் பெரும்பாலும் இப்பாட்டின் கருத்திற்கு இணங்கும். ... ... .... (உ)

காமுற்றகையறவோடு எல்லே ! இராப்பகல் *
நீமுற்றக்கண்துயிலாய் நெஞ்சுருகியேங்குதியால் *
தீமுற்றத்தென்னிலங்கை ஊட்டினான்தாள்நயந்த *
யாமுற்றதுற்றாயோ ? வாழிகனைகடலே * (௩)

| | |
|---|---|
| எல்லே! கனை கடலே!—; | |
| காமுற்ற கை அறவோடு | விரும்பின பொருள் கை கூடப்பெறாத இழவினால் |
| நீ | நீ |
| இரா பகல் முற்ற | இரவும் பகலுமாகிய எப்போதும் |
| கண் துயிலாய் | கண்ணுறங்காதாகி |
| நெஞ்சு | உள்ளிடமும் |
| உருகி | நீராகி |
| ஏங்குதி | ஏங்குகின்றாய்; |
| ஆல் | ஆதலால் |
| தென் இலங்கை | தென்னிலங்காபுரி முழுவதும் |
| தீ ஊட்டினான் | நெருப்புக்கு உணவாக்கின பெருமானுடைய |
| தாள் | திருவடிகளை |
| நயந்த | ஆசைப்பட்ட |
| யாம் | நாங்கள் |
| உற்றது | அடைந்த வருத்தத்தை |
| உற்றாயோ | நீயும் அடைந்தாயோ ? |
| வாழி | (நீ மனத்துன்பம் தீர்ந்து) வாழ்வாயாக. |

* * * — [காமுற்றகையறவோடு.] கடல் பெருமுழக்கஞ் செய்வதும் அலையேறுவது வடிவதுமாயிருப்பதும் அதற்கு இயல்பாயிருக்க, அதனை யறியாதே அதுவும் தம்மைப்போலே எம்பெருமான் திருவடிகளில் நசைவைத்து விரும்பின படியே லபிக்கப் பெறாமையினாலே தன் காம்பீரியமெல்லாமிழந்து கரையிலே வருவது கரையேறமாட்டாதே உள்ளே விழுவதாய் எழுத்துஞ் சொல்லும் பொருளும் தெரியாதபடி கத்துகின்றதாகக்கொண்டு, ஐயோ! நீயும் ராமபிரானது திருக்குணங்களில் அகப்பட்டு நான் படும்பாடு பட்டாயோ என்கிறதாய்ச் செல்லுகிறது இப்பாசுரம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கையறவு = கைப்படாமையினுலுண்டாகும் வருத்தத்திற்குக் 'கையறவு' என்று பெயர்; காமுற்ற கையறவோடு = ஆசைப்பட்ட பொருள் கிடைக்கப் பெருமையினுலுண்டான வருத்தம். உண்மையில், கடல் யாதொன்றையும் காமுற்றது மில்லை, அது கைப்படாமற்போனது மில்லை, வருத்த முண்டானது மில்லை; இப்படியிருக்கவும் ஆழ்வார் தமக்குள்ளதெல்லாம் அதற்கு முண்டு போலேயென நினைத்து அருளிச்செய்தவாறு.

இராப்பகல் முற்ற நீ கண் துயிலாய் = உறங்குவதற்கென்று ஏற்பட்டது இரவு; விழித்துக்கொண்டிருப்பதற்கென்று ஏற்பட்டது பகல்; இந்தவாசியைக் கடலே! உன்னிடத்துக் கண்டிலோம் என்கிறுள். கடல் அலை யெறிந்துகொண் டிருப்பது விழித்தல்; அலை ஓய்ந்துகிடப்பது உறங்குதல் எனக்கொள்க. நேஞ்சுருகி ஏங்குதி=உலகில் தொண்டை நன்ருயிருக்கப்பெற்றவர்கள் ஏதேனும் வாய்விட்டுச்சொன்னுல் எழுத்துஞ் சொல்லும் ஸ்பஷ்டமாகத் தெரியும்படி யிருக் கும்; தொண்டை கட்டிப்போனவர்கள் எது சொன்னுலும் இன்னதென்று தெரி யாமல் வெறும் ஒலி வடிவமாகவே யிருக்கும்; கடலின் ஓசை அத்தகைத்தா யிருத்தலால் இதற்கு நெஞ்சு உருகிப்போயிற்றென்றும் அப்படிப் போனதற்குக் காரணம் பகவத்விஷயாவகாஹனமே யென்றும் ஆழ்வார் நினைத்தபடி.

[தீமுற்ற இத்தியாதி.] ஸீதை யென்பவளும் நம்மைப்போலே ஒரு பெண் பிள்ளையாயிருக்க அவளுக்காகமாத்திரம் * உண்ணுது உறங்காது ஒலிகடலை யூடறுத்துப் படாத பாடுகளும்பட்டு ஆனைத்தொழில் செய்தவர் நம்மைப்பற்றி ஒரு சிந்தனையுஞ் சிந்திக்கின்றிலரே! என்று நான் அந்த இராமபிரானிடத்து ஈடுபட்டிருக்குமாபோலே நீயும் ஈடுபட்டு வருந்தினுயோ?

வாழி = இந்த நிலைமை நீங்கி நீ சுகமாக வாழப்பெறுவாயாக என்று மங்களாசாஸனஞ் செய்கிறபடி. ... ... ... ... (௩)

கடலும்மலையும் விசும்புந்துழாய்எம்போல் *
சுடர்கொளிராப்பகல் துஞ்சாயால்தண்வாடாய்! *
அடல்கொள்படையாழி!அம்மானைக்காண்பான்நீ *
உலகம்நோயுற்ருயோ? ஊழிதோறூழியே. (௪)

| | |
|---|---|
| தண் வாடாய் | குளிர்ந்த காற்றே! |
| கடலும் | ஸமுத்திரத்தையும் |
| மலையும் | மலையையும் |
| விசும்பும் | ஆகாசத்தையும் |
| துழாய் | தடவிக்கொண்டு |
| எம் போல் | எம்மைப்போல, |
| சுடர் கொள் இரா பகல் | சந்திர ஸூரியர்களாகிற இரு சுடர்களையும் (தம் மிடத்தி முறையே) கொண்ட இரவிலும் பகலிலும் |
| துஞ்சாய் | நீ கண்ணுறங்குகின்றிலை; |
| ஆல் | ஆதலால் |
| அடல் கொள் | வலிமை கொண்ட |
| படை ஆழி | திருவாழிப் படையுடைய |
| அம்மானை | எம்பெருமானை |
| காண்பான் | காணுதற்பொருட்டு |
| நீ | நீ |
| ஊழி ஊழி தோறு | நெடுநாளாக |
| உடலம் நோய் உற்ருயோ | உடம்பு நோவு கொண்டாயோ? |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [கடலும்மலையும்.] காற்றனது எங்கும் பரவிய தத்துவம்; அது ஒரு நொடிப்பொழுதும் ஓரிடத்தில் நிலை நின்றிராது; "ஸதாகதிஸ்ஸா ஸ்ஸதாகதிஃ" என்ற நிகண்டின்படி ஸதாகதியென்று பெயர்பெற்றதாதலால் எப்போதும் உலாவிக்கொண்டேயிருக்கும்; உடம்பிலே புழுதியை ஏறிட்டுக்கொண்டு வடிவு தெரியாதபடியிருக்கும்; குளிர்ச்சி யுடைத்தாயுமிருக்கும்; ஆக இத்தனையும் அதற்கு இயல்வாயிருக்க, அதனை அறியகில்லாதே அதுவும் தம்மைப்போலவே பகவத்விஷயத்தில் ஆசைவைத்து விருப்பம் நிறைவேறப் பெறுமையினாலே இருந்தவிடத்தில் இருக்கமாட்டாதே மடலூருவாரைப்போலே உடம்பிலே புழுதியை ஏறிட்டுக்கொண்டு வடிவு தெரியாதபடியாய் ஸந்நிபாத ஜ்வரமுற்றுக் குளிர்ந்திருப்பதாகக்கொண்டு, வாடையே! நீயும் நான்பட்டது பட்டாயன்றோ என்கிறாள்.

எம்போல் கடலும் மலையும் விசும்பும் துழாய் = (துழாய் என்றது துழாவி என்றபடி.) பகவத்விஷயத்தில் அவகாஹித்தவர்கள் அப்பெருமானைக் காண வேண்டி நின்றவா நில்லாதே, எங்குப்போய்த் தேடினால் எம்பெருமான் கிடைப்பனென்று, திருப்பாற்கடலில் சென்று தேடலாமா? திருமலையிற் சென்று நாடலாமா? பரமபதத்திற்கே போய்ப் பார்க்கலாமா என்று இங்ஙனே பலவிடமும் துழாவுவர்கள்; "வெள்ளை வெள்ளத்தின்மே லொருபாம்பை மெத்தையாக விரித்ததன் மேலே, கள்ளநித்திரைகொள்கின்ற மார்க்கங் காணலாங் கொலென்றாசையினாலே" என்று திருப்பாற்கடலில் சென்று தேடப்பாரித்தார் பெரியாழ்வார்; "நானவனைக் காரார்திருமேனி காணுமளவும்போய், சீரார் திரு வேங்கடமே திருக்கோவலூரே......ஊராயவெல்லாமொழியாமே நானவனை,.... பெருந்தெருவே ஊராரிகழிலு மூராதொழியேன் நான்" என்று எங்குந்திரிய ஒருப்பட்டார் திருமங்கையாழ்வார்; இங்ஙனே கடலும் மலையும் விசும்பும் துழாவித் திரிகின்றவர்கள் நாங்கள் சிலரே என்றிருந்தேன்; காற்றே! நீயும் எங்களைப்போலவே எங்குந் திரிகின்றாய்; இரவு பகல் கண்ணுறங்காதேயிராநின்றாய்; ஆதலால், கையுந் திருவாழியுமான ஸர்வேச்வரனை நீயும் காண ஆசைப்பட்டு அதனால் இப்பாடு படுகிறாய்போலும்.

வாடாய் = வாடை என்பதன் ஈறுதிரிந்த விளி. துஞ்சாய் — எதிர்மறை வினைமுற்று. காண்பான்—ஆன்விகுதிபெற்ற வினையெச்சம்; காண என்றபடி.(ச)

ஊழிதோறூழி உலகுக்குநீர்கொண்டு *
தோழியரும்யாமும்போல் நீராய்நெகிழ்கின்ற *
வாழியவானமே! நீயும்மதுசூதன் *
பாழிமையில்பட்டு அவன்கண்பாசத்தால் நைவாயே? (ரு)

| | | | |
|---|---|---|---|
| உலகுக்கு நீர் கொண்டு | உலகுக்கெல்லாம் ஆரும்படி நீரை முகந்துகொண்டு | நீர் ஆய் | நீர்வடிவமாய் |
| | | நெகிழ்கின்ற | விழுகின்ற |
| ஊழி ஊழி தோறு | காலமுள்ளவளவும் | வானமே | மேகமே! |
| | | நீயும் | நீயும் |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| தோழியரும் யாமும் போல் | (எமது) தோழிமார்களும் நாங்களும்போல | அவன் கண் பாசத்தால் | அவனிடத்து விருப்பத்தினால் |
| | | நைவாயே | அழிகின்றனையோ ? |
| மதுசூதன் பாழிமையில் பட்டு | எம்பெருமானது பெருமிடுக்கிலே அகப்பட்டு | வாழிய | (இந்தத் துன்பம் தீர்ந்து) வாழ்வாயாக. |

* * * — [ஊழிதோறூழி.] நீராய் இற்று விழுகின்ற மேகத்தைக்கண்டு, நீயும் என்னைப்போலே எம்பெருமானுடைய குணசேஷ்டிதம் முதலியவற்றில் அகப்பட்டு நோவுபடுகிறாய்போலுமென்று சோகித்துச் சொல்லுகிற பாசுரம் இது. மேகம் நீர்சொரிவதைக் கண்ணீர்விட்டு அழுகிறபடியாகவெண்ணிச் சொல்லுகிறாள்.

"உலகுக்கு நீர்கொண்டு" என்பதற்குச் சிலர் பொருள் பிரமிப்பர்கள் — 'உலகுக்கெல்லாம் உதவுகைக்காக நீரைக்கொண்டு' என்று பொருள் எண்ணுவர்கள்; அர்த்தப்பொருள் பிரகரணத்திற்குச் சேராது; உலகமெல்லாம் வெள்ளமிட வேண்டும்படியான நீரைச் சொரிந்துகொண்டு' என்றே பொருள்கொள்ளவேணும்; இங்ஙனமே பூருவாசாரியர்களெல்லாரும் வியாக்கியானித்தருளினர். உலகுக்கு உதவுதற்காக நீரை யெடுத்துக்கொண்டென்றால் இது மேகத்தின் இயற்கையாதலால் ஆழ்வார் அவ்வியற்கையைத் தாம் அறிந்துகொண்டாரென்று சொல்லிவிட்டால் "நீயும் மதுசூதன்பாழிமைபிற்பட்டு அவன் கண் பாசத்தால் நைவாயே" என்கிற வார்த்தைக்கு ப்ரஸக்தியே இல்லையாய்விடுமென்க.

தோழியரும் யாமும் போல் = தோழியும் தானும் உலகம் வெள்ளங் கோக்கும்படியாகக் கண்ணீர்விட்டு அழுதுகொண்டிருக்குந்தன்மை இதனால் காட்டப்படும்.

வானமே ! வாழிய = உலகுக்கு உதவிசெய்வதற்கென்று ஏற்பட்டிருக்கிற நீ இத்துயர் நீங்கி வாழ்ந்திடுகவென்று மங்களாசாஸநம் பண்ணுகிறாள். வானமென்று இங்கு ஆகாசத்தைச் சொல்லுவதாகவும் ஒரு நிர்வாஹமுண்டு; மிக நுண்ணிதான ஆகாசம் நீரைமுகந்துகொண்டு சிதறியுருகி நீராய் விழுகின்றதென்று நினைத்துச் சொல்லுகிறாளென்றுகொள்க.

மதுசூதன் பாழிமையில்பட்டு = மது என்னும் அசுரனைக் கொன்றவன் மதுசூதன். மதுவைச் சொன்னது அவனோடு கூடவேயிருந்த கைடபனையுஞ் சொன்னபடி. மதுகைடபர்களை முடித்த வரலாறு பலவிதமாகச் சொல்லப்படுவதுண்டு; அவற்றுள் ஒருவிதம் வருமாறு:— பிரமதேவனது தினப்பிரளயத்தில் இவ்வுலகமெல்லாம் பெருங்கடலினால் எங்கும் நீர்மயமாயிருந்தபொழுது அவ்வெள்ளத்தில் திருமால் அரவணையில் அமர்ந்திருக்கையில் அத்திருமாலினிடத்து ரஜஸ்தமோ குணங்களின் வடிவமாகத் தோன்றி "எம்மை நீ கொல்லுக என்று தம்வாயாற் சொல்லிய பின்னரே தம்மைப் பிறர் கொல்லலாகும்" என்று வரம் பெற்ற மதுகைடபரிருவரும் அப்பிரளயநீரைக் குழப்பிக்கொண்டு போராரவாரத்துடன் சென்று பிரமதேவனைக்கண்டு அவனிடத்தினின்று வேதங்களையெல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

லாம் பறித்துக்கொண்டு அப்பிரளய வெள்ளத்தில் மறைந்தனராக, அப்போது தான் செய்யவேண்டுவது இன்னதெனத் தேறாது திகைப்புக்கொண்ட அப்பிரமன் பின்னர்ச் சிறிது தெளிந்து திருமாலைத் துதித்துத் தனக்கு நேர்ந்த ஆபத்தை முறையிட, அக்கடவுள் ஹயக்ரீவாவதாரஞ்செய்து அக்கடலிற்புக்கு இனியதோர் இசையைப்பாட, அவ்வினிய கீதத்தைக்கேட்ட அவ்வசுரர்கள் அவ் வேதங்களை ஓரிடத்து வைத்திட்டு அவ் வொலிவந்த வழியைப்பிடித்துச் செல்லுமளவில் திருமால் அவ்வேதங்களுள்ளவிடத்திற் சென்று அவற்றைக் கொணர்ந்து பிரமனுக்குத் தந்தருள, அப்போது ஒருவரையுங் காணாதவராய் வேதங்களும் எடுத்துக்கொண்டு போகப்பட்டதையுணர்ந்த அவ்வசுரர்கள் மிகச் சினந்து அரவணையில் அறிதுயிலமரும் பரம்பொருளைக் கிட்டிப் போர்செய்யத் தொடங்கவே, திருமாலுக்கும் அவ்வசுரர்கட்கும் வெற்றி தோல்விகளின்றி நெடுங்காலம் பெரும்போர் நிகழ்ந்ததாக, முடிவில் திருமாலை நோக்கி அவர்கள் 'உனது ஆற்றலுக்கு உவந்தோம், வேண்டும்வரம் பெற்றுக்கொள்' என்ன, அக்கடவுள் 'யான் உங்களைக் கொல்லவேணும், இதுவே யான் வேண்டும் வரம்' என்று சொல்ல; அவர்களும் அதற்கு இணங்குகையில், திருமாலும் 'உங்கட்கு வேண்டும் வரங் கொண்மின்' என்ன, 'ஒருவரும் இறவாதவிடத்தில் நாங்கள் இறக்க வேண்டும்' என்று அவர்கள் வேண்ட, திருமாலும் அங்ஙனமே வரமளித்துத் தனது திருத்துடையைக் கொண்டு அவர்களை இறுக்கிக் கொன்றிட்டனன் என்பதாம்.

கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் அழகருடைய திருத்துடைகளை வருணிக்குங்கால் "பிஷ்டதுஷ்ட மதுகைடபகீடௌ = பிஷ்ட துஷ்ட மதுகைடபகீடௌ" என்றும், பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருத்துடைகளை வருணிக்குங்கால் "மதமிவ மதுகைடபஸ்ய ...பரிபூய ஸர்வகுர்வோ: கிமபி மஹி ரங்ககுஞ்ஜரோர்வோ: ? = மதமிவ மதுகைடபஸ்ய ...... பரிபூய ஸர்வகுர்வோ: கிமபி மஹி ரங்ககுஞ்ஜரோர்வோ: ?" என்றும் அருளிச்செய்திருக்கையாலே மதுகைடபர்கள் திருமாலின் திருத்துடையில் இறுகி முடிந்தனரென்பது தெற்றெனவிளங்கும். பேயாழ்வார் மூன்றாந் திருவந்தாதியில் "காய்ந்திருளைமாற்றிக் கதிரிலருமாமணிகள், ஏய்ந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப — வாய்ந்த மதுகைடபரும் வயிறுருகிமாண்டார்" என்று — அரவணையில் துயில்கொள்ளு மெம்பெருமானோடு போர்புரிவதாக மதுகைடபர்கள் கிட்டவந்த மாத்திரத்திலே திருவனந்தாழ்வானுடைய உஷ்ணமான மூச்சுக்காற்று வீசினவளவிலே அவ்வசுரர்கள் வயிறுருகி மாண்டொழிந்தனராக அருளிச்செய்வது இதிஹாஸ புராணங்கள் பலவகைப்பட்டிருத்தலால் அங்ஙனேயும் ஒரு புடையுண்டுபோலே. 1. "மேருகிரியவுணனுடல் மிடல்கெடுத்தாயென்பர் அது, உன் கூருகிரேயறிந்ததல்லால் கோவே! நீ அறியாயால்" என்று பிள்ளைப்பெருமாளையங்கார் பேசினது போலே, உண்மையில் திருத்துடைகளால் இறுக்கிக் கொல்லப்பட்ட அவ்

1. திருவரங்கக்கலம்பகம். 1.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வசுரர்களை ஆதிசேஷனுடைய வெவ்வுயிர்ப்பினால் வயிறு நொண்டனராகச் சொல்வதும் பொருந்தியதேயாம்: அதிசயோக்தியில் ஒருவகை யென்க. ஆக இப்படிப்பட்ட மதுகைடப மாரணமாகிற மிடுக்கில் ஈடுபட்டு என்னைப்போலே ஜீவிக்கவும்மாட்டாதே முடியவும்மாட்டாதே நோவுபடுகிறாயோ? என்றாளாயிற்று.

இப் பாசுரத்திற்குப் பிரதிச்சந்தமாக "മേഘ ശ്രീമന്‍! ത്വമസി ദയിതോ യാദവേന്ദ്രസ്യ നൂനം ശ്രീവത്സാങ്കം വയമിവ ഭവാന്‍ ധ്യായതി പ്രേമബദ്ധഃ | അത്യുത്കണ്ഠാശബലഹൃദയോऽസ്മദ്വിധോ ബാഷ്പധാരാഃ സ്മൃത്വാ സ്മൃത്വാ വിസൃജസി മുഹുഃ ദുഃഖദസ്തത്പ്രസംഗഃ = மேக ஸ்ரீமந்! த்வமஸி தயிதோ யாதவேந்த்ரஸ்ய ஸூநும் ஸ்ரீவத்ஸாங்கம் வயமிவ பவாந் த்யாயதி ப்ரேமபத்த: - அத்யுத்கண்டாசபலஹ்ருதயோஸ்மத்விதோ பாஷ்பதாரா: ஸ்ம்ருத்வா ஸ்ம்ருத்வா விஸ்ருஜஸி புந: து:க்கதஸ் தத்ப்ரஸங்க:" என்று ஸ்ரீபாகவதத்திலுள்ள [10-90-20] ச்லோகம் இங்கு நினைக்கத்தக்கது. .... ... .... .... .... (ரு)

நைவாயவெம்மேபோல் நாள்மதியே! நீயிந்நாள் *
மைவானிருளகற்றாய் மாழாந்துதேம்புதியால் *
ஐவாயரவணைமேல் ஆழிப்பெருமானார் *
மெய்வாசகம்கேட்டு உன்மெய்ந்நீர்மைதோற்றாயே? (சு)

| | |
|---|---|
| நாள் மதியே | நிரம்பின சந்திரனே! |
| நைவு ஆய | நைந்துபோவதையே இயற்கையாகவுடைய |
| எம்மே போல் | எங்களைப்போல |
| நீ | (ஒளியுருவாகிய) நீயும் |
| இ நாள் | இக்காலத்திலே |
| மை வான் | கரிய ஆகாயத்திலுள்ள |
| இருள் | இருளை |
| அகற்றாய் | நீக்குகின்றிலையாகி |
| மாழாந்து | மயங்கி |
| தேம்புதி | குறைபடுகின்றாய்; |
| ஆல் | ஆதலால் |
| ஐ வாய் | ஐந்து முகங்களையுடைய |
| அரவு அணை மேல் | சேஷ சயனத்தின் மீது உள்ள |
| ஆழி பெருமானார் | சக்கரபாணியான எம்பெருமானது |
| மெய் வாசகம் கேட்டு | உண்மையான வார்த்தையைக்கேட்டு |
| உன் மெய் நீர்மை | உனது வடிவின் குணமாகிய ஒளியை |
| தோற்றாயே | இழந்தாய் போலும்!. |

* * * — [நைவாயவெம்மேபோல்] கலாமாத்திரமாய்த் தேய்ந்து தோன்றின இளம்பிறைச்சந்திரனைக்கண்டு அந்தோ! உன்வடிவில் எழிலெல்லாம் இழந்தாயே!, நீயும் அப்பெருமானுடைய பொய்யுரையிலே நம்பிக்கைகொண்டு நான் பட்டபாடு படுகின்றாய்போலும்! என்கிறாள். நாள் மதியே! என்பதற்கு, 'முன்பு பூர்ணனாயிருந்த சந்திரனே!' என்கிற பொருளும், 'இளம்பிறையே!' என்கிற பொருளும் பொருந்தும். முதற்பொருளில் நாள்சென்றமதி என்றபடி; இரண்டாம் பொருளில் நாட்பூ என்னுமாபோலே.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நைவாய எம்மேபோல்='நைவாய' என்பதை 'நை வாய' என்றும், 'நைவு ஆய' என்றும் பிரிக்கலாம்; நை என்பது முதனிலைத் தொழிற்பெயராய் நைதலை [அதாவது சைதில்யத்தை]ச் சொல்லும். வாய் என்றது இடமென்றபடி; எனவே சைதில்யத்திற்குப் பிறப்பிடமாகவுள்ள எங்களைப்போலே என்ற தாயிற்று. அன்றியே 'நைவு ஆய; என்று பிரித்தால் சைதில்யமே ஒருவடி வெடுத்துவந்தாற்போலே யிருக்கின்ற எங்களைப்போலே என்றதாகும்.

இந்நாள் மைவானிருள் அகற்றுய்=சந்திரனே! நேற்றுவரையில் நீ உதித்த வுடனே இருள் சிதறியோடுதலைக்கண்டிருந்தோம்; இன்று அங்ஙனம் காண் கின்றிலோம்; நீ ஒளிமழுங்கிக் குறையுற்றிராநின்றாய். இப்படி நீயும் எம்மைப் போலே மேனிமெலிந்தமைக்கு என்ன காரணம்? சேஷசாயியான சக்கரபாணிப் பெருமானுடைய பொய்யுரையில் நசைவைத்து இப்படியானாய்போலும் என்கிறாள்.

'ஐவாயரவணைமேல்' என்றவிடத்து, "பாவியேன்தோன்றிப் பாம்பணையார்க் கும் தன் பாம்புபோல், நாவுமிரண்டுளவாயிற்று நாணிலியேனுக்கே" என்ற நாச்சியார் திருமொழிப்பாசுரம் நினைக்கத்தக்கது. "ஒன்றேயுரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவான்" என்றும் "அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசந = அந்ருதம் நோக்தபூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசந" என்றும், "ராமோ த்விர் நாபிபாஷதே = ராமோ த்விர் நாபிபாஷதே" என்றுமுள்ள வசனங்களை நம்பி நான் கெட்டதுபோலே நீயுங் கெட்டாயோ? என்கிறாள். அவர் இயற்கையாக ஸத்யமே சொல்லுகிறவராயினும் இரட்டை நாக்குப்படைத்த பாம்பரசனோடே ஸஹவாஸத்தினால் தாமும் இருநாக்குப் படைத்தாரென்று காட்ட "ஐவாயரவணைமேல் பெருமானார்" எனப்பட்டது.

ஆழிப்பெருமானார்=இங்கே நம்பிள்ளையீடு காண்மின்;—"அல்லாத பரிகர மோதான் நன்றாயிருக்கிறது! தாம் பகலை இரவாக்க நினைக்கில் அதுக்குப்பெரு நிலைநிற்கும் பரிகரம்." என்று.

மஹாபாரதயுத்தத்தில் பதின்மூன்றாநாளிலே அர்ஜுநபுத்ரனான அபிமந்யு வைத் துரியோதனனது உடன்பிறந்தவள் கணவனான ஸைந்தவன் கொன்றுவிட, அங்ஙனம் தன் மகனைக்கொன்ற அந்த ஜயத்ரதனை மற்றைநாள் ஸூர்யாஸ்த மனத்திற்குள் தான் கொல்லாவிடில் தீக்குதித்து உயிர்விடுவதாக அர்ஜுநன் சப தஞ்செய்ய, அதனையறிந்த பகைவர்கள் பதினான்காநாட் பகல்முழுவதும் ஜயத் ரதனை வெளிப்படுத்தாமல் ஸேனையின்நடுவே நில்வறையில் மறைத்துவைத் திருக்க, அர்ஜுநனது சபதம் பொய்த்துவிடுமேயென்று சிந்தித்த கண்ணபிரான் ஸூர்யனை அஸ்தமிப்பதற்குச் சிலநாழிகை முன்னமே தன் சக்கரப்படையினால் மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருளடைந்ததனால் அர்ஜுநன் அக்நிப் பிரவேசஞ்செய்யத்தொடங்க, அதனைக் களிப்போடு காணுதற்குத் துரியோத னுதியருடனே ஜயத்ரதன் வந்து எதிர்நிற்க, அச்சமயத்தில் கண்ணன் திரு வாழியை வாங்கிடவே பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனைத் தலை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



துணித்தனனென்றகதை இங்கு நினைக்கத்தக்கது. எம்பெருமானுக்கு ஆச்ரித பக்ஷபாதம் அளவற்றது என்பதை நிரூபித்தற்குக் கொள்ளப்படுகின்ற இந்த வரலாறு, ஆற்றாமை தலையெடுத்துச் சொல்லும்போதைக்கும் ஒருவாறு உதவுகின்றது.

மெய்வாசகங்கேட்டு—விபரீதலக்ஷணையினால் பொய்வாசகமென்றபடி. பொய்வாசகமென்றே சொல்லிவிடலாமானாலும், 'எம்பெருமானுடைய பொய் நாட்டாருடைய பொய்போன்றதன்று, இது விலக்ஷணம்' என்று காட்டுதற்காக மெய்வாசகமெனப்பட்டதென்பர். எம்பெருமான் இப்போது உபேக்ஷித்தமையாலே அவனுடைய மெய்யுரையும் பொய்யுரையாகக்கொள்ளலாயிற்று. இந்த ப்ரகரணத்தில் "ராமாவதாரத்தில் மெய்யும் க்ருஷ்ணாவதாரத்தில் பொய்யுமிறே ஆச்ரிதர்க்குத்தஞ்சம்" என்ற நம்பிள்ளையீட்டு ஸ்ரீஸூக்தியின்சுவை ரஸிக்கத்தக்கது .... ... .... (சு)

தோற்றோம்மடநெஞ்சம் எம்பெருமான்நாரணற்கு * எம்
ஆற்றாமைசொல்லி அழுவோமைநீநடுவே *
வேற்றோர்வகையில் கொடிதாய்எனையூழி *
மாற்றாண்மைநிற்றியோ? வாழிகனையிருளே! (எ)

| | | | |
|---|---|---|---|
| கனம் இருளே | கனத்திருக்கின்ற இருளே! | வேற்றோர் வகையின் | பகைவர்கள் நலிகிற வகையைக்காட்டிலும் |
| எம் பெருமான் | எமக்குஸ்வாமியான | கொடிது ஆய் | கொடுமையாகி |
| நாரணற்கு | நாராயணனுக்கு | எனை ஊழி | காலமுள்ளவளவும் |
| மடம் நெஞ்சம் தோற்றோம் | விதேயமான நெஞ்சைப் பறிகொடுத்தோமாகி | மாற்றாண்மை | பகைத்தன்மையை ஆளுகையில் |
| எம் ஆற்றாமை சொல்லி அழுவோமை | எங்கள் ஆற்றாமையை வாய்விட்டுச் சொல்லி அழுகின்ற எங்களை | நிற்றியோ | நிற்கிறாயோ? |
| நீ | நீ | வாழி | இந்நிலைமை நீங்கி வாழ்வாயாக. |
| நடுவே | நடுவில்நுழைந்து | | |

* * * — [தோற்றோம் மடநெஞ்சம்.] ஒருவரையொருவர் காணவொண்ணாதபடி மூடின இருளைக்குறித்து 'இருளே! எம்பெருமானைப்பிரிந்து நோவுபட்டிருக்கிறவென்னை நீயும் இப்படி ஹிம்ஸிப்பாயோ? என்று பொடிந்து பேசுகின்றாள். முதற்பாட்டிற் சொன்ன நாரையென்ன, இரண்டாம்பாட்டிற் சொன்ன அன்றிற்பறவையென்ன, மூன்றாம்பாட்டிற் சொன்ன கடலென்ன, நான்காம்பாட்டிற் சொன்ன வாடையென்ன, ஐந்தாம்பாட்டிற் சொன்ன வானமென்ன, கீழ்ப்பாட்டிற் சொன்ன இளம்பிறைச் சந்திரனென்ன ஆகிய இவையெல்லாம் தம்மோடு துல்ய யோகக்ஷேமங்களாயிருக்கின்றனவென்று கருதிய ஆழ்வார் அவற்றையெல்லாங் கூட்டிக்கொண்டு, இங்ஙனம் சேதனப்பொருள்களோடு அசேதனப் பொருள்களோடு வாசியற நாங்களெல்லாரும் பகவத்விஷயத்தில் ஈடுபட்டு நெஞ்சிழந்து எங்கள் ஆற்றாமையைச்சொல்லிக் கதறியழுதுகொண்டிருக்க, இருளே! நீயும் எங்களைப்போலே (எங்கள் திரளிலே சேர்ந்து) கதறியழவேண்டியிருக்க, அதுசெய்யாததுமல்லாமல் பகைவரைக்காட்டிலுங் கொடி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தாக நின்று எங்களை நீ ஹிம்ஸிக்கின்றாயே! இப்படியும் ஒரு கொடுமையுண்டோ? நீ இக்கொடுமைநீங்கி வாழ்க என்கிறாள்.

ஆக இங்ஙனே கூறப்பட்ட அர்த்தம் கீழ்ப்பாட்டுக்களோடும் மேற்பாட்டுக்களோடும் பொருந்தாமல் ஒரு சப்தஸ்வாரஸ்யத்தைப்பற்றியதா யிருக்கின்றது. இது எம்பெருமானாருடைய நிர்வாஹமாகும். கீழ்மேற்பாட்டுக்களோடு பொருந்தவும் பொருள்கொள்ளலாம்;— இருளுக்கு மழுங்கியிருத்தல் ஸ்வபாவமாயிருக்கச்செய்தேயும் அது ஸ்வபாவமென்றிராமல் எம்பெருமானைப் பிரிந்தாற்றாமையினாலே ஒளியும் மழுங்கி வாய்திறந்து கதறவும்மாட்டாதே யிருக்கின்றதாகக் கொண்டு, ஏற்கனவே நோவுபட்டிருக்கிற வெங்களை உன்னுடைய துக்கத்தையுங் காட்டி இன்னமும் நோவுபடுத்துகிறாயே!, சத்துருக்கள் நலியும் நலிவும் ஸுகமென்னும்படி கொடியையாய்க்கொண்டு எத்தனைகாலம் நலியக்கடவை! ஐயோ! உனக்குத் துயரம் நீங்குக என்கிறாள் என்னவுமாம்

கனவிருளே என்றும், கனையிருளே யென்றும் பாடபேதம், வு௩ என்னும் வடசொல் விகாரம். கனை என்று வினைப்பகுதியுமாம். ... .... (எ)

இருளின்திணிவண்ணம் மாநீர்க்கழியே! போய் *
மருளுற்றிராப்பகல் துஞ்சிலும்நீதுஞ்சாயால் *
உருளும்சகடம் உதைத்தபெருமானார் *
அருளின்பெருநசையால் ஆழாந்துநொந்தாயே? (அ)

| | | | |
|---|---|---|---|
| இருளின் | இருட்டினுடைய | ஆல் | ஆதலால். |
| திணி | செறிந்த | உருளும் சகடம் உதைத்த | உருளுகின்ற சகடத்தைத் திருவடிகளா லுதைத் தொழித்த |
| வண்ணம் | நிறத்தையுடைய | பெருமானார் | எம்பெருமானுடைய |
| மா | பெரிய | அருளின் | க்ருபாகுணத்திலுண்டான |
| நீர் கழியே | நீருள்ள கழியே! | பெரு நசையால் | பேராசையினால் |
| போய் | மிகவும் | ஆழாந்து | ஆழ்ந்து |
| மருள் உற்று | மருட்சியடைந்து, | நொந்தாயே | நோவுபட்டாயோ? |
| இரா பகல் | இரவும் பகலும் | | |
| துஞ்சிலும் | முடிந்தாலும் | | |
| நீ துஞ்சாய் | நீ ஓய்கின்றாயில்லை; | | |

* * * — [இருளின் திணிவண்ணம்.] இருளின் செறிவாலே நீருக்கும் தரைக்கும் வாசியறியாதே ஒரு கழியிலே சென்றிழிந்தாள்; கழிதான் இரைத்துக்கொண்டு ஓடாநிற்குமாகையாலே அது தன்னைப்போலவே பகவத்விஷயத்திலீடுபட்டாலே உறக்கமற்றுக் கதறுகின்றதாகக் கொண்டு, ஐயோ! சகடாஸுரபங்கம் பண்ணின பெருமானுடைய செயலிலே நீயும் அகப்பட்டாயோ வென்கிறாள்.

நந்தகோப க்ருஹத்தில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப்போனாள்; கம்ஸனால் ஏவப்பட்ட அசுரனொருவன் அச் சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீ க்ருஷ்ண சிசுவின்மேலே விழுந்து கொல்ல முயன்றதை அறிந்த அப்பகவான்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பாலுக்கு அழுகிற பாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கியுதைத்ததனால் அச் சகடு திருப்பப்பட்டுக் கீழே விழுந்து அசுரனுட்பட அழிந்ததென்ற வரலாறு அறிக. .... ... ... .... (அ)

நோந்தாராக்காதல்நோய் மெல்லாவியுள்ளுலர்த்த *
நந்தாவிளக்கமே ! நீயுமளியத்தாய் *
சேந்தாமரைத்தடங்கண் செங்கனிவாயெம்பெருமான் *
அந்தாமத்தண்டுழாய் ஆசையால் வேவாயே ? (கூ)

| | | | |
|---|---|---|---|
| நந்தா விளக்கமே | அழிவில்லாத விளக்கே! | செம் கனி வாய் | சிவந்த கோவைக்கனிபோன்ற வாயையுமுடைய |
| அளியத்தாய் | இரங்கத்தகுதியுடைய | எம் பெருமான் | எம்பெருமானது |
| நீயும் | நீயும், | அம் தண் துழாய் தாமம் | அழகிய குளிர்ந்த திருத்துழாய்மாலையின் மீதுள்ள |
| நொந்து ஆரா காதல் நோய் | நோவுபட்டு மாளாத ஆசை நோயானது | | |
| மெல் ஆவி | மெல்லிய பிராணனையும் | ஆசையால் | விருப்பத்தினால் |
| உள் உலர்த்த | உள்ளே உலர்த்த, | | |
| செம் தாமரை தட கண் | சிவந்த தாமரைமலர்போன்ற பெரிய கண்களையும் | வேவாயே | வேகின்றாயோ? |

* * * — [நோந்தாராக்காதல்.] ஆற்றாமையாலே தன் மாளிகையிலே புகுந்து அங்கு எரிகிற விளக்கைக்கண்டு அதன் வெப்பத்தைப் பார்த்து 'உடம்பில் கை வைக்கவொண்ணாதபடி விரஹஜ்வரம் பற்றி யெரியாநின்றது' என்று கொண்டு நீயும் என்னைப்போலே பகவத் விரஹத்தாலே வெதும்புகிறாயோ வென்கிறாள்.

நொந்து ஆராக் காதல் நோய் = உலகத்திலுள்ள வியாதிகளுக்கெல்லாம் நோவுபடுத்துகைக்கு ஒருநாள்வரையிலே முடிவு உண்டு; ப்ரேம வ்யாதி அப்படிப்பட்டதன்று; நோவுபடுத்ினது போருமென்று ஒருநாளும் தணியுமதன்று என்றவாறு. இப்படிப்பட்ட காதல் நோயானது, தொட்டார்மேலே தோஷமாம்படி ம்ருதுவாயிருக்கிற நற்சீவனைக் குருத்துவற்றாக வுலர்த்தும்படியாக என்பது முதலடியின் கருத்து. இது "ஆசையால் வேவாயே" என்றதனோடு அந்வயிக்கும். முதலடியிற் சொல்லுகிற அம்சம் விளக்குக்கும் ஆழ்வார்க்கும் பொது. நொந்தாராக்காதல்நோய் தமக்கு இருப்பது போலவே விளக்குக்குமிருப்பதாகவும், தாம் மெல்லாவியுள்ளுலர்த்தப் பெற்றிருப்பதுபோல விளக்கும் இருப்பதாகவும் ஆழ்வாருடைய நினைவு.

நந்தாவிளக்கமே ! என்றவிடத்து "ஜ்வாலாபேதாநுமாநமிருந்து பார்க்கிறாளன்றே" என்பது நம்பிள்ளையீடு. இதன் கருத்து யாதெனில்; ஸ்ரீபாஷ்யத்தில், அநுமாநத்தினால் ப்ரத்யக்ஷம் பாதிக்கப்படுவதும் சிலவிடங்களிலுண்டு என்று நிரூபிக்கப்புகுந்த ஸ்ரீபாஷ்யகாரர் ஜ்வாலாபேதாநுமாநம் காட்டியிருக்கின்றார். அதாவது — எரிகிற விளக்கின் ஜ்வாலையை நாம் பார்க்கும்போது ஒரே ஜ்வாலையென்பதாகவே பார்க்கிறோம்; ஆகவே ப்ரத்யக்ஷத்தினால் ஜ்வாலைக்யம் க்ரஹிக்கப்படுகிறது; உண்மையில் ஜ்வாலைக்யம் கிடையாது; ஜ்வாலாபேதமேயுள்ளது;



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அந்த ஜ்வாலாபேதம் அநுமாநவேத்யம்; உயூக்ஷணவஸவராவதிஹீ ஜாஜா வூதிக்ஷணஉூததிவிநாஶவதீ; வதூவயவ விநாஶிகூஜஸ; வூயஉ வஉ க்ஷணஜாஜாவஸ." என்பது அநுமாநசரீரம். ஆக இவ்வநு மாநத்தினால் ஜ்வாலாபேதம் க்ரஹிக்கப்பட்டால் ஒவ்வொரு க்ஷணத்திலும் புதிய புதிய விளக்கு உண்டாகிறது என்றதாகத் தேறிநிற்கும்; இங்ஙனே தேறிவிட்டால் நந்தாவிளக்கமே! என்று சொல்வதற்கில்லை; அழியாத ஓரே ஜ்வாலையாக இருந்தாலன்றோ நந்தாவிளக்கென்னலாம். ஆழ்வாரோ நந்தாவிளக் கமே யென்றார்; ப்ரத்யக்ஷ ஸித்தமான வஸ்துவையேகொண்டு அருளிச்செய் கிறாரென்று உபபத்தி.

அளியத்தாய் = ஐயோவென்று இரங்கவேண்டும்படி யிராநின்றாயென்றபடி; காட்டுக்குக் கண்காட்டியான வுனக்குப் பாரார்த்தமான வுடம்பிலே இப்படி நோவுவருவதே! என்று நோக்கு சொல்லுகிறபடி.

[செந்தாமரை யித்யாதி,] செந்தாமரைபோன்ற தடங்கண்களாலே குளி ரக் கடாக்ஷித்து, கொவ்வைக்கனிபோன்ற திருவதரம் துடிப்ப இன்சொல் சொல்லுமவனை எம்பெருமானுடைய அழகிய திருத்துழாய்மாலை பெறவேணு மென்னுமாசையாலே நீயும் என்னைப்போலே.வேவாநின்றாயோ? .... (௯)

வேவாராவேட்கைநோய் மெல்லாவியுள்ளுலர்த்த *
ஓவாதிராப்பகல் உன்பாலேவீழ்த்தொழிந்தாய் *
மாவாய்பிளந்து மருதிடைபோய்மண்ணளந்த *
மூவாமுதல்வா! இனியெம்மைச்சோரேலே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| மா வாய் பிளந்து | குதிரைவடிவாகவந்த கேசி யென்னுமசுரனுடைய வாயைப்பிளந்தவனும் | வேட்கை நோய் | ஆசை நோயானது |
| | | மெல் ஆவி | மெல்லிய ஆத்மாவை |
| | | உள் உலர்த்த | குருத்துவற்றாக வற்று விக்க |
| மருது இடை போய் | இரட்டை மருதமரங்களி ன் நடுவே தவழ்ந்து செ ன்று அவற்றை முறித் துத்தள்ளினவனும் | இராப் பகல் | இரவும் பகலும் |
| | | ஓவாது | இடைவிடாமல் |
| | | உன்பாலே | உன்னிடத்திலேயே |
| மண் அளந்த | (த்ரிவிக்ரமனாய்) பூமி யை அளந்துகொண்ட வனுமான | வீழ்த்து | ஈடுபடுத்தி |
| | | ஒழிந்தாய் | உபேக்ஷித்துவிட்டாய்; (போனதுபோகட்டும்;) |
| மூவா முதல்வா | அழியாமுதல்வனே!, | இனி | இனிமேல் |
| வேவு ஆரா | எவ்வளவு வேகச்செய்தும் த்ருப்தியடையாத | எம்மை | எம்மை |
| | | சோரேல் | கைவிடவேண்டா. |

* * * — [வேவாரா வேட்கைநோய்.] இப்படி அளவுகடந்த ஆர்த்தியோடே துடிக்கிற ஆழ்வாரைக் குளிரநோக்கி ஒருவாறு சுகப்படுத்தவந்து நெருங்கிய எம்பெருமானைக்குறித்து, பிரானே! சிலநாள் நலிந்துவிடுவதன்றியே மேன்மே லும் மிகவும் நலிகின்ற விரஹவ்யஸநமானது ஏற்கனவே மெலிந்துபோன ஆத் மாவை மிகவும் நோவுபடுத்த இரவும்பகலும் இடைவிடாதே உன்னுடைய குண

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சேஷ்டிதங்களையே நினைந்து நைந்து உள்கரைந்து உருகும்படியாகச்செய்திட்டாய்; இவ்வளவுசெய்த நீ இனி ஒருகாலமும் என்னைக் கைவிடாதே கொள்ள வேணும் என்று பிரார்த்திப்பதாய்ச் செல்லுகிறது இப்பாசுரம்.

ஒருநாள் கம்ஸனாலேவப்பட்ட கேசியென்பானோர் அசுரன் குதிரையினுருவத்தோடு ஆயர்கள் அஞ்சிநடுங்கும்படி கனைத்துத் தூரத்திக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப்பெருக்கி நீட்டி அதன்வாயிற்கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைபிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினனென்ற வரலாறு மாவாய் பிளந்து என்றவிடத்து அறியத்தக்கது.

குழந்தைப்பருவமுள்ள கண்ணன் துன்பப்படுகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை க்ருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமர [யமளார்ஜுந]த்தின்நடுவே எழுந்தருளிய பொழுது அவ்வுரல் குறுக்காய்நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்துவிழுந்தவளவில் முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேரபுத்ரர் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர். [இந்தக்குபேரபுத்திரர்கள் முன் ஒருகாலத்தில் பல அப்ஸரஸ்ஸ்திரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்துகொண்டிருக்கையில் நாரதமுனிவர் அங்கு எழுந்தருள, மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடையுடுத்துநீங்க, இந்த மைந்தர்மாத்திரம் மதுபானமயக்கத்தால் வஸ்த்ரமில்லாமலேயிருக்க, நாரதர்கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வேண்டிக்கொண்டதற்கு இரங்கி நெடுங்காலஞ்சென்றபின்பு திருமால் உங்களையடையுஞ்சமயத்தில் இவ்வடிவமொழிந்து முன்னையவடிவம்பெற்று மீள்வீர்' என்று சாபவிடை கூறிப் போயினர். இங்ஙனம் சாபத்தினால் மரங்களான இவற்றில் கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அசுரர்களும் ஆவேசித்துக்கிடந்தனர்.] என்ற வரலாறு மருதிடைபோய் என்றவிடத்திற்கு அறியத்தக்கது. மண்ணளந்தவரலாறு [த்ரிவிக்ரமாவதாரசரிதம்] ப்ரஸித்தம். .... ... (கo)

சோராதவெப்பொருட்கும் ஆதியாஞ்சோதிக்கே *
ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன் *
ஓராயிரம்சொன்ன அவற்றுளிவைபத்தும் *
சோரார்விடார்கண்டீர் வைகுந்தம்திண்ணெனவே. (கக)

| | | | |
|---|---|---|---|
| சோராத | ஒன்றுங்குறையாத | ஆராத காதல் | அடங்காத ஆசையையுடையான |
| எப் பொருட்கும் | எல்லாப்பொருள்களுக்கும் | குருகூர் சடகோபன் | ஆழ்வார் |
| ஆதி ஆம் | காரணபூதனாகப்பெற்ற | ஓர் ஆயிரம் | ஓராயிரமாக |
| சோதிக்கே | ஒளியுருவனான எம்பெருமானுக்கே | | |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| சொன்ன அவற்றுள் | அருளிச்செய்த பாசுரங்களுக்குள்ளே | வைகுந்தம் | பரமபதத்தை |
| இவை பத்தும் | இந்தப்பத்துப் பாசுரங்களையும் | திண்ணனவே | திடமாகவே |
| சோரார் | மறவாதவர்கள் | விடார் | விடாமல் நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள். |

(கண்டீர்—முன்னிலையசை.)

* * * — [சோராதவெப்பொருட்கும்] இப்படி எம்பெருமானைப் பிரிந்த துயரத்தினால் முடியப்புகுகிற தம்மை உய்வித்தற்பொருட்டு வந்து ஸம்ச்லேஷித்தருளின எம்பெருமானைக்கண்டு தாம் உஜ்ஜீவித்து, தம்முடைய உஜ்ஜீவனத்தாலே எம்பெருமானுடைய ஸர்வேச்வரத்வம் ஒளிபெற்ற படியைக்கண்டு சாலவுமுவந்து அவனுடைய ஸர்வேச்வரத்வத்தை நெஞ்சார அநுபவித்து, இப்படி ஸர்வேச்வரனயிருந்த எம்பெருமான் பக்கலுள்ள ஆசையாலே சொன்ன இத்திருவாய்மொழியை நியதமாக அநுஸந்திக்குமவர்கள் ஒருநாளும் எம்பெருமானைப் பிரியார்கள், இது திண்ணம் என்று இப்பதிகம் கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

"சோராத வெப்பொருட்கு மாதியாஞ்சோதிக்கே" என்றது எம்பெருமானுக்கு இயற்கையாகவுள்ளபடியைச் சொன்னதன்று; இப்பதிகத்தை ஆழ்வார் அருளிச்செய்தபின்பு நேர்ந்த தன்மையைச் சொன்னபடி. நம்பிள்ளையீடு காண்மின் ;—"இவ்வளவிலேவந்து இவரோடேகலந்து இவரை யுளராக்குகையாலே ஒன்றொழியாதபடி ஸகல பதார்த்தங்களும் ஈச்வரனுமாய் இவரோடே வந்து கலந்து அத்தாலே உஜ்ஜ்வலனுமாயிருந்தான்; இவர்க்குவந்து முகங்காட்டுவதற்கு முன்பு ஸர்வேச்வரத்வமும் அழிந்ததுபோலேகிடந்தது; இவரொருத்தரையும் சோரக்கொடுக்கவே ஸர்வேச்வரத்வம் அழியுமிறே. இவரிழவுதீர வந்து முகங்காட்டினபின்பு எல்லாப்பொருட்கும் நிர்வாஹகனானன்."

வெறுங்குருகூர்ச் சடகோபராயிருந்த ஆழ்வார் * ஆராத காதற்குருகூர்ச் சடகோபரானர் இத்திருவாய்மொழியிலென்க. காதலையிட்டே நிரூபிக்கத் தகுந்தவரானர். .... .... .... .... (கக)

அடிவரவு:—வாயுங் கோள் காமுற்ற கடலூழி கை தோற்றேம், இருள் கொந்து வேவாராச் சோராத திண்ணன். .... .... ....

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து முதல் திருவாய்மொழி உரை முற்றிற்று.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகனருளிச்செய்த

### த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில்

### இத்திருவாய்மொழிக்கான ச்லோகம்.



நித்ராச்சேதகத்வாத் அரதிஜநநதோऽஜஸ்ரஸம்க்ஷேபகத்வாத்
அந்வேஷ்டும் ப்ரேரகத்வாத் விலயவிதரணாத் கார்ச்யதைந்யாதி
[க்ருத்த்வாத் |
சித்தாக்ஷேபாத் விஸம்ஜ்ஞீகரணத உபஸம்சோஷணாவர்ஜநாப்யாம்
த்ருஷ்டாஸ்வாதஸ்ய சௌரே: க்ஷணவிரஹதசாது:ஸஹத்வம் ஜகாத ||

[நித்ராச்சேதகத்வாத்] முதற்பாட்டில் "மடநாராய்! ஆயுமமருலகும் துஞ்சிலும் நீதுஞ்சாயால்-எம்மேபோல்" இத்யாதியினுல் உறக்கங்கெடுத்தமை சொல்லப்பட்டது. [அரதிஜநநத:] இரண்டாம்பாட்டில் "எம்மேபோல்...கூர்வாயவன்றிலே! சேட்பட்ட யாமங்கள் சேராது இரங்குதியால்" என்று ஒருகாலும் தரிப்புருதபடி சைதில்யத்தை யுண்டாக்கினமை சொல்லப்பட்டது. [அஜஸ்ரஸம்க்ஷேபகத்வாத்] 3. "நீ முற்றக்கண் துயிலாய் நெஞ்சுருகி ஏங்குதியால்" என்று ஸர்வகாலத்திலும் க்ஷேபத்தையுண்டாக்குந்தன்மை சொல்லப்பட்டது. [அந்வேஷ்டும் ப்ரேரகத்வாத்] 4. "கடலும் மலையும் விசும்புந்துழாய் எம்போல்" என்று கடல்மலை விசும்பு முதலான எல்லாவிடத்திலும் தன்னைத் தேடும்படி செய்யுந்தன்மை சொல்லிற்று. [விலய விதரணாத்] 5. "தோழியரும் யாமும் போல்நீராய் நெகிழ்கின்ற" என்று முடியும்படியான நிலைமையை விளக்குந்தன்மை சொல்லிற்று. [கார்ச்யதைந்யாதி க்ருத்த்வாத்] 6. "நாண்மதியே! நீ யின்னாள்...மாழாந்து தேம்புதியால்" என்று க்ருசித்துப்போதல் தைந்யமடைதல் முதலான தன்மைகளைப்பண்ணுகின்றமை சொல்லிற்று. [சித்தாக்ஷேபாத்] 7. "நீதாற்றேம்மடநெஞ்ச மெம்பெருமான் நாரணற்கு" என்று மநஸ்ஸைக் கொண்டுபோது போக்கவொண்ணுதபடி அதை அபஹரிக்குந்தன்மை சொல்லிற்று. [விஸம்ஜ்ஞீகரணத:] 8. "மாநீர்க்கழியே! போய் மருளுற்றிராப்பகல் துஞ்சிலும் நீதுஞ்சாயால்" என்று ஒன்றுந்தெரியாதபடி மதிமயக்கத்தை உண்டாக்குந்தன்மை சொல்லிற்று.

[உபஸம்சோஷண ஆவர்ஜநாப்யாம்] 9. "காதல்நோய் மெல்லாவியுள்ளுலர்த்த" என்று நற்சீவனைக் குறுத்துவற்றாக வுலர்த்துந்தன்மையும், 10. "மாவாய் பிளந்து மருதிடைபோய் மண்ணளந்த" என்று மறந்து பிழைக்கவொண்ணுதபடி விரோதி நிரஸநாதி வசீகரண சேஷ்டிதங்களையுடையனு யிருக்குந்தன்மையும் சொல்லிற்று. ஆக இத்தனை விஷயங்களையும் தெரிவிக்கின்ற இத்திருவாய்மொழியினுல் ஆழ்வார் என்ன சொன்னாரென்னில்; [த்ருஷ்டாஸ்வாதஸ்ய சௌரே: க்ஷணவிரஹதசாதுஸ்ஸஹத்வம் ஜகாத] பரமபோக்யனான எம்பெருமானுடைய விரஹம் ஒரு நொடிப்பொழுதும் ஆற்றக்கூடியதன்று என்று அருளிச்செய்தாராயிற்று.

தூப்புல்பிள்ளை பொன்னடிகள் போற்றி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

வாயுந் திருமால் மறையநிற்க், ஆற்றாமை
போய்விஞ்சி மிக்க புலம்புதலாய் — ஆய
அறியா தவற்றோ டணைந்தழுத மாறன்
செறிவாரை நோக்குந் திணிந்து.

| | | | |
|---|---|---|---|
| வாயும் | (அடியார் அநுபவிக்கலாம் படி) கிட்டுகையையே ஸ்வபாவமாகவுடைய | ஆய அறியாத வற்றோடு | (அசேதனங்களாகையாலே தம்முடைய துக்கத்தை) ஆராய அறியாதவற்றை |
| திருமால் | ச்ரிய:பதியான எம்பெருமான் | அணைந்து | கட்டிக்கொண்டு |
| மறைய நிற்க | (கண்ணுக்குப் புலப்படாமல் பிரிந்து) மறைந்திருக்க (அதனாலே) | அழுத | (அவற்றை ஸமதுக்கிகளாகக்கொண்டு) அழுத |
| | | மாறன் | ஆழ்வார் |
| ஆற்றாமை போய் விஞ்சி | சோகம் அதிகரித்து | செறிவாரை | தம்மைவந்து பணியுமவர்களை |
| மிக்க புலம்புதல் ஆய் | மிகவும் அழும்படியான நிலைமை நேர்ந்து | திணிந்து நோக்கும் | திடமாகக் கடாக்ஷித்தருள்வர். |

* * * — மேன்மை நீர்மை வடிவழகு ஆகிய மூன்றும் குறைவின்றியே உண்டாய், அவதாரத்தில் பிற்பட்டவர்களு மிழக்கவேண்டாதபடி முகங்கொடுத்துக்கொண்டு, நிற்கிற ஸ்தலமான அர்ச்சாவதார நிலங்களுட் சிறந்ததான திருக்குறுங்குடியிலே ‡ அநுபவிக்க ஆசைப்பட்டுக் கிடையாமையாலே கண்ணுஞ் சுழலைபிட்டு, நாரை அன்றில் கடல் வாடை வானம் மதி இருள் கழி விளக்கு முதலான உலகப்பொருள்களும் தம்மைப்போலே பகவத் விரஹத்தாலே நோவுபடுகிறனவாகக்கொண்டு அவற்றுக்குமாகத் தாம் நோவுபட்டுச் செல்லுகிறபடியைப் பேசினது * வாயுந்திரையுகளு மென்கிற திருவாய்மொழி. இங்ஙனம் விலக்ஷணமான நிலைமையயடைந்த நம்மாழ்வார் அடியார்களை பகவத் விச்லேஷம் நேராதபடி பரிபூர்ண கடாக்ஷஞ் செய்தருள்வரென்றதாயிற்று.

---

### த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

வஹ்ஷ்ணவாஂஷூ பரமதக்ஷவைக்கஹீகமாவிக்ஷ
தஸ்வாஹூவஸம்மரதாஷிவ்லாஷ்குறாஹவிஹ: ।
ஸவத்ததவீ வூவஹேஷவீக்ஷவவ ஹாவாது
க்ஷூஹ விதீயஸ்தகஸஃ ஷஜாஹிஷாவீ ॥

(கருத்து.) ஆழ்வார், கீழே எம்பெருமானுடைய திருக்குணங்களை அநுபவித்ததனால் அவனுடைய திருமேனியோடே அணையப்பெறவேணுமென்று பாரித்து அது கிடைக்கப்பெறுமையாலே வருத்தமுற்று, நாரை அன்றில் முதலிய ஸகல பதார்த்தங்களும் தம்மைப்போலவே பகவத்விஷய விரஹத்தாலே க்லேசப்படுகிறனவாகக்கொண்டு பேசினர் இத் திருவாய்மொழியிலென்க. .... (*)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

‡ "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற" என்ற பாசுரம் காண்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து — இரண்டாம் திருவாய்மொழி,

## திண்ணன்வீடு.

## அவதாரிகை.



கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு உண்டான நிலைமை லோகவிலக்ஷணமாக விருந்தது. பேச்சுக்கு நிலமல்லாத ஆற்றாமையிலே இருந்தார். ஆற்றாமை கரைபுரண்டதாகுங்காலத்திலே எம்பெருமான் வந்து முகங்காட்டி ஆச்வஸிப்பித்தல் முறைமையாதலால் அவன் அங்ஙனமே வந்து முகங்காட்டினன்; உடனே அந்த ஆற்றாமை போனவிடந் தெரியாமே போயிற்று. உடனே தேறுதலடைந்த ஆழ்வார், எம்பெருமானுடைய பரத்வம் ஸௌலப்யம் என்கிற இரண்டு குணங்களிலே ஸௌலப்யமானது பேசப்பேச உருகப்பண்ணுமதாதலால், 'இப்போதுதான் சிறிது தேறுதலடைந்த நாம் அந்த ஸௌலப்ய குணத்தைப்பேசி நெஞ்சழியவொண்ணாது; * நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே * என்கிறபடியல்லாமல் தரித்துநின்று பேசலாம்படியான பரத்வத்தைப்பற்றிப் பேசுவோம்' என்றெண்ணி அதனைப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில்.

* உயர்வறவுயர்நலம் என்கிற முதல் திருவாய்மொழியிலும் பரத்வம் பேசப்பட்டிருந்தாலும் இங்குப் பேசுகிறபடியில் வைலக்ஷண்யமுண்டு. அங்கு ஸ்வாநுபவரூபமாகவே சென்றது; இங்கு உபதேசரூபமாகவு முள்ளது. அங்கு அந்வயமுகத்தால் அருளிச்செய்யப்பட்டது; இங்கு அந்வய வ்யதிரேகங்களிரண்டினாலும் அருளிச் செய்யப்படுகிறது. [எம்பெருமானே பரத்வமுடையவன் என்று சொல்லுதல் அந்வயமுகத்தாலே சொல்லுதல். எம்பெருமானைத் தவிர்த்து மற்றையோர்க்குப் பரத்வம் அஸம்பாவிதமென்று நிரூபித்தல் வ்யதிரேகமுகத்தாலே சொல்லுதல்.] அங்குப் பெரும்பாலும் உபநிஷத்துக்களை அடியொற்றி அருளிச்செய்தார்; இங்கு இதிஹாஸ புராண ப்ரக்ரியையாலே அருளிச்செய்கிறார், அங்குப் பரத்வத்திலே பரத்வமருளிச்செய்தார்; இங்கு அவதாரத்தில் பரத்வமருளிச்செய்கிறார் என்று இங்ஙனே பல வாசிகள் காண்க.

ஒரு குணத்தையே பலகாலும் அநுபவித்தாலும் தெகுட்டும் விஷயமன்றே. "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதோறும், அப்பொழுதைக்கப் பொழுது என்னாராவமுதமே" என்றன்றோ ஆழ்வார்தாமருளிச்செய்வது. எம்பெருமானுடைய திவ்ய சேஷ்டிதங்களோ திவ்ய அவயவங்களோ திவ்யாத்மஸ்வரூபமோ திவ்ய குணங்களோ ஒருகால் அநுபவிக்கப்பட்டாயிற்றேயென்று

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



புநருக்தி தோஷ சங்கையினால் மறுபடியும் பேசப்படாதொழியில் இவ்விஷயம் அவிலக்ஷணம் என்றதாகுமத்தனை: விலக்ஷண விஷயங்களை ப்ரகாரபேதமிருந்தோ இல்லாமலோ எத்தனை தடவை பேசினாலும் புநருக்தி தோஷமாகாதென்பது ஞாபகமிருக்கத்தக்கது.

இங்கே நம்பிள்ளை யீடு காண்மின்;—

"ஒருகாற் சொன்னோம் என்று கைவாங்கி யிருக்கவல்லரல்லர் இவர்; ஒருகாற் சொல்லிற்றென்று கைவாங்கலாம் விஷயமன்று அது. இனித்தான் பகவத்விஷயத்தில் புநருக்தி தோஷாயவாகாது. ஒரு குணத்தையே எக்காலமும் அநுபவிக்கவல்லா ரொருவர் இவர்; ஒரு குணந்தன்னையே 'இதுக்கு முன்பு அநுபவிப்பித்தது இக்குணம்' என்று தோற்றுதபடி க்ஷணந்தோறும் புதுமை பிறப்பித்து அநுபவிப்பிக்கவல்லா னொருவன் அவன்." இத்யாதி.

பேசினதையே மற்றொருகால் மீண்டும் பேசுமிடங்களெங்கும் ஒவ்வொரு வாசியிருப்பதுபோலவே இத் திருவாய்மொழிக்கும் * உயர்வறவுயர்நலத்திற் காட்டில் நெடுவாசியுண்டென்பது குறிக்கொள்ளத்தக்கது. ... ... *

திண்ணன்வீடு முதல்முழுதுமாய் *
எண்ணின்மீதியன் எம்பெருமான் *
மண்ணும்விண்ணுமெல்லாம் உடனுண்ட * நம்
கண்ணன்கண்ணல்லது இல்லையோர்கண்ணே (க)

| | | | |
|---|---|---|---|
| திண் | திண்மையையுடைய | உடன் உண்ட | ஒருங்கே அமுதுசெய்தவனை |
| நன் | நல்ல | நம் கண்ணன் | நமது கண்ணபிரானே |
| வீடு முதல் | மோக்ஷம் முதலாக | கண் | (உலகுக்கு) இறைவன்; |
| முழுதும் ஆய் | எல்லாவற்றையும் அளிப்பவனாய் | அல்லது | அல்லாமல் |
| எண்ணின் மீதியன் | நினைவுக்கு அப்பாற்பட்டவனாய் | ஓர் கண் | வேறொரு தலைவன் |
| எம் பெருமான் | எமக்கு ஸ்வாமியாய் | இல்லை | இல்லை. |
| மண்ணும் விண்ணும் எல்லாம் | பூமியும் ஆகாசமுமாகிய முழுவதையும் | | |

* * * — [திண்ணன்வீடு.] கண்ணபிரானே உலகுக்கெல்லாம் நிர்வாஹகனென்கிறார். மோக்ஷம் முதலிய ஸகல புருஷார்த்தங்களையும் அளித்தருள்பவனாய், எண்ணிறந்த திருக்குணங்களையுடையனாய், அக் குணங்களைக்காட்டி என்னை யீடுபடுத்திக்கொண்டவனாய், பிரளயாபத்து வந்தபோது பூமி முதலான ஸகல லோகங்களையும் ஒருசேரத் திருவயிற்றிலேவைத்து நோக்குபவனான நமது கண்ணபிரானே உலகுக்கெல்லாம் கண்ணாயிருப்பவன்.

திண்ணன் என்றவிடத்து மகரனகாப்போலியாய், திண்ணம் என்றபடியாகக் கொண்டால், இப்போது சொல்லுகிற விஷயம் அசைக்க முடியாதது என்ற

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வாறும்- 'திண் நல் வீடு' என்று கொண்டு திடமாயும் விலக்ஷணமாயு மிருக்கிற மோக்ஷமென்றதாகவுங் கொள்ளலாம். ஒரு நாளுமழியாத பரமபதம் முதலிய ஸ்கல லோகங்களையும் தன் விபூதியாகவுடையவன் என்றும் பொருளாகலாம்.

எண்ணின் மீதியன் என்றால் எண்ணுக்கு மீறியுள்ளவன் என்றபடி. குணங்களாலோ விபூதிகளாலோ எண்ணை மீறினவனென்றபடியாய் வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூபரூபகுண விபூதிகளுடைமை சொல்லிற்றாகுமென்க.

" மண்ணும்விண்ணுமெல்லாமுடன்காத்த " என்னாதே உண்ட என்றது, அவற்றின் ரக்ஷணமானது தனக்கு உணவுபோலே பரம போக்யமென்பதைத் காட்டுதற்காம். பிரளயகாலத்தில் எம்பெருமான் * மண்ணொடும் விண்ணொடும் வானவரும் தானவரும் மற்றுமெல்லாமுண்ணாத பெருவெள்ள முண்ணாமல் தான் விழுங்கி உய்யக்கொள்ளுகிறானென்பது நூற்கொள்கை. எல்லாரையும் திருவயிற்றிலேவைத்துக் காத்தருளினவன் நிர்வாஹகனாயிருக்கத் தகுதியுண்டே யன்றி, அவனது திருவயிற்றினுள்ளே கிடந்து ரக்ஷணம் பெற்று வெளிவந்த சிறுதெய்வங்களுக்கு நிர்வாஹகத்வம் அஸம்பாவிதம் என்று இப்பாசுரத்தினால் காட்டப்பட்டதாயிற்று.

கண் என்றது "சக்ஷுஷ்ச தேவானாமுத மர்த்யாநாம்" என்ற சுருதியின் சாயையாலேயென்க.

> ஏ பாவம் ! பரமே ! ஏழுலகும் *
> ஈபாவம்செய்து அருளாலளிப்பாரார் ? *
> மாபாவம்விட அரற்குப்பிச்சைபெய் *
> கோபாலகோளரி ஏறன்றியே. (உ)

| | |
|---|---|
| மா பாவம் விட | மிகப்பெரிதான (பிரமஹத்தி) பாபமானதுவிட்டு நீங்கும்படி |
| அரற்கு | சிவபிரானுக்கு |
| பிச்சை பெய் | பிக்ஷையிட்ட |
| கோபாலன் | கோபாலனென்கிற |
| கோள் அரி ஏறு அன்றி | வலிமைதங்கிய ஆண்சிங்கமல்லது (வேறொருவர்) |
| ஏழ் உலகும் | ஏழுலகங்களையும் |
| ஈ பாவம் செய்து | பாவம் தொலைந்தாக்ச் செய்து |
| அருளால் | க்ருபையினாலே |
| அளிப்பார் ஆர் | காப்பவருண்டோ ? |
| ஏ பாவம் | ஐயோ ! |
| பரமே | எம்பெருமானது ஏற்றத்தைச்சொல்லிமுடித்தல் நம்மாலாகுமோ ? |

* * * — [ஏபாவம் பரமே.] "நங்கண்ணன் கண்ணல்லதில்லையோர்கண்ணே" என்றருளிச்செய்த ஆழ்வாரை நோக்கிச் சிலர் 'இப்படிச் சொல்லலாமோ ? பிரமன் சிவன் முதலானோரும் ஈச்வரர்கள் என்று காட்டுகின்ற பிரமாணங்கள் இல்லையோ ?' என்ன; அவர்களது சரித்திரங்களை ஆராய்ந்துபார்த்தால் அவர்கள் ஈச்வரர்களாகத் தகுதியில்லை; ஆபத்துவந்த காலத்திலே அவர்களைக் காத்தருளினவனாக ப்ரஸித்திபெற்ற எம்பெருமானே ஈச்வரன் என்று நிலைநாட்டுகிறாரிதில் * வேதாபஹார குருபாதக * இத்யாதி ஸ்தோத்ரரத்ந ஸ்ரீஸூக்திக்கு இப்பாசுரம் மூலம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தொடங்கும்போதே ஏபாவம்! என்றது ஆழ்வாருடைய மிக்க துக்கத்தைக்காட்டும். மாணிக்கத்திற்கும் களிமண்ணுக்குமுள்ள வாசியை ஒருவன் எடுத்துரைக்கவேண்டுமோ? அவரவர்களே அநாயாஸமாகத் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயத்தையும் நான் எடுத்துக் கூறவேண்டும்படியாவதே! என்று வருத்தங்காட்டுகிறபடி. 𑌭𑌰𑌃 என்ற வடசொல் பரமெனத் திரிந்தது. எம்பெருமானை அநுபவிப்பதற்கென்று பிறந்த எனக்கு மூடர்களைத் தேற்றவேண்டுவதும் ஒரு சுமையாக வந்து நிற்கின்றதே! என்ற வருத்தத்தைப் பரமே! என்றதனால் காட்டுகிறபடி. "பகவத்குணாநுபவம் பண்ணுகையொழிய இது நமக்கு 𑌭𑌰மாவதே!" என்பது ஈடு.

அருளால் ஏழுலகும் ஈபாவஞ்செய்து அளிப்பார் ஆர்? = 𑌯𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌲𑍍𑌪𑌨𑌿𑌯𑍁𑌤𑌾𑌨𑍁𑌭𑌵𑍇𑌽𑌪𑍍𑌯𑌨𑌾𑌶𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌕𑌿𑌲𑍍𑌬𑌿𑌷𑌂 𑌸𑍃𑌜𑌤𑌿 𑌜𑌨𑍍𑌤𑍁𑌰𑌿𑌹 𑌕𑍍𑌷𑌣𑌾𑌰𑍍𑌧𑍇 - யத் ப்ரஹ்மகல்பநியுதாநுபவேபி அநாச்யம் தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே" [ஸ்ரீவைகுண்டஸ்தவம்] என்று ஆழ்வான் அருளிச்செய்தபடி அனேக கல்ப காலங்கள் அநுபவித்துத் தொலைக்கவேண்டிய பாவங்களை அரைநொடிப்பொழுதில் செய்கின்ற உலகங்களின் பாவங்களை அருளாலே அழியச்செய்பவர் எம்பெருமானைத் தவிர வேறு யாவர்? என்றபடி. பாவங்களை அழியச்செய்கையாவது பாவங்கள் பலன் கொடுக்கவொண்ணாதபடி ஸங்கல்பித்தலேயாகும். ஈபாவஞ்செய்து = பாவம் ஈயச்செய்து என்றவாறு. ஈதல் - அழிதல்.

உலகங்களின் பாவங்களை அழியச்செய்கிறானென்பது கிடக்கட்டும்; உலகுக்குத் தலைவனாக அபிமானிக்கப்படுகிற சிவபிரானுடைய பாவமொன்றைத் தொலைத்த கதை சொல்லுகின்றேன் கேண்மினென்கிறார் மூன்றாமடியில். ஒரு காலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது சிரமொன்றைக்கிள்ளியெடுத்துவிட அக் கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொள்ளுதலும் அவன் 'இதற்கு என் செய்வது' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப் பிச்சையெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பல தலங்களிலுஞ்சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக் கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தையடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது என்ற வரலாறு அறியத்தக்கது. .... ... .... ... .... .... ... ... (௨)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஏறனைப்பூவனைப் பூமகள்தன்னை *
வேறின்றிவிண்தொழத் தன்னுள்வைத்து *
மேல்தன்னைமீதிட நிமிர்ந்துமண்கொண்ட *
மால்தனில்மிக்குமோர் தேவுமுளதே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| ஏறனை | ரிஷபவாஹனனான ருத்ரனையும் | மேல் தன்னை | மேலுலகத்தை |
| பூவனை | தாமரைப்பூவைப் பிறப்பிடமாகவுடையவனான பிரமனையும் | மீதிட | மேலிடும்படி |
| பூ மகள் தன்னை | அலர்மேல் மங்கையான ஸ்ரீ மஹாலக்ஷ்மியையும் | நிமிர்ந்து | வளர்ந்து |
| வேறு இன்றி | வேற்றுமையில்லாமல் | மண் | பூமியை |
| தன் உள் | தனது திருமேனியில் | கொண்ட | அளந்து கொண்டவனுபுமாகின்ற |
| விண் தொழ | விண்ணுளார் தொழும்படி | மால் தனில் மிக்கும் | ஸர்வேச்வரனுக்கு மேற்படவும் |
| வைத்து | இடங்கொடுத்து வைத்தவனும், | ஓர் தேவும் உளதே | ஒரு தெய்வமுமுண்டோ ? |

* * * — [ஏறனைப் பூவனை.] அயர்வறுமமரர்கள் தன்னுடைய சீலகுணத்தைக் கண்டு தொழுகைக்காக ஸர்வேச்வரியான பெரிய பிராட்டியாரோடொக்கப் பிரமன் முதலானார்க்கும் தன்னை ஆச்ரயமாகக் கொடுத்துக்கொண்டிருக்கையாலும், ஸகல லோகங்களும் திருவடிகளினுள்ளே யடங்கும்படி அளந்தருளுகையாலும் இவனே ஸர்வேச்வரன், வேறில்லை யென்கிறார்.

இதில் முன்னடிகளிற் கூறப்படுகின்ற விஷயத்தைப்பற்றி முதற்பத்தில் "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" என்ற பாட்டினுரையில் (பக்கம் 131 ல்) விரிவாகக் கூறப்பட்டுளது; அங்குக் கண்டுகொள்க.

ஏறு - இடபம்; அதனையுடையவன் ஏறன். பூவை(ப்பிறப்பிடமாக) உடையவன் பூவன். விண் தொழ = விண்ணவர்கள் இந்த சீலகுணத்தி லீடுபட்டுத் தன்னைத் தொழ என்றபடி. 'விண்தொழவைத்து' என இயையும். ... (ரு)

தேவுமெப்பொருளும்படைக்க *
பூவில் நான்முகனைப்படைத்த *
தேவன் எம்பெருமானுக்கல்லால் *
பூவும் பூசனையும்தகுமே ? (சு)

| | | | |
|---|---|---|---|
| தேவும் | தேவர்களையும் | தேவன் | பரதெய்வமாகிய |
| எப் பொருளும் | மற்றெல்லாப் பொருள்களையும் | எம்பெருமானுக்கு அல்லால் | எமது ஸ்வாமிக்கேயன்றி (வேறுசிலர்க்கு) |
| படைக்க | ஸ்ருஷ்டிக்க | | |
| பூவில் | (திருநாபிக்) கமலத்திலே | பூவும் | புஷ்பங்களும் |
| நான்முகனை | பிரமனை | பூசனையும் | திருவாராதனமும் |
| படைத்த | உண்டாக்கின | தகுமே | தகுமோ? (தகாது) |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [தேவுமெப்பொருளும்] பூ அணிதற்கு ஈடான ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களும், பூஜையிடுதற்கிடான முதன்மையும் எம்பெருமானுக்கன்றி வேறு சிலர்க்கு இல்லாமையாலே அவனே ஸர்வேச்வரனென்கிறார்.

"எது ஜகத்காரணபூதமோ அதுவே பரப்ரஹ்மம்" என்று வேதாந்தங்கள் அறுதியிடுகையாலே அப்படிப்பட்ட ஜகத்காரணத்வம் எம்பெருமானுக்கே உள்ளது என்பதை முன்னடிகளில் மூதலிக்கிறார். பூவும் பூசனையும் தகுமே = 'குழலழகர் என்று ப்ரஸித்திபெற்ற எம்பெருமானுக்குப் பூத் தகுமே யன்றிச் சடைமுடியானுக்கு தகாது; முழுமுதற் கடவுளுக்குப் பூசனை தகுமேயன்றிக் கார்யபூதனுக்குத் தகாது.

எம்பார் உள்ளங்கை கொணர்ந்த நாயனாராகிக் காளஹஸ்தியிலே சிவபூஜாநிஷ்டராய் நாடோறும் பூப்பறித்துவாரா நிற்கையில் அவரைத் திருத்திப் பணிகொள்ளக் கருதிய பெரியதிருமலைநம்பி அவர் பூப்பறிக்கச் செல்லுமிடத்தே சிஷ்யவர்க்கங்களைக் கூட்டிக்கொண்டு இப் பாசுரத்தின் விசேஷார்த்தங்களை அழகாக உபந்யஸித்தருள, எம்பார் பூப்பறித்துக்கொண்டே இதனைச் செவியேற்று பூவும்பூசனையுந்தகுமே என்றதற்கு) 'தகாது தகாது' என்று தாம் விடைகூறிக் கொண்டே பூக்குடலையை விட்டெறிந்து திருமலைநம்பி ஸ்ரீபாதத்திலே வந்து சேர்ந்தார் என்ற இதிஹாஸம் இங்கு உணரவுரியது. .... ... (௪)

தகும்சீர்த்தன் தனிமுதலினுள்ளே *
மிகுந்தேவும் எப்பொருளும்படைக்க *
தகுங் கோலத்தாமரைக்கண்ணனெம்மான் *
மிகுஞ்சோதி மேலறிவார்யவரே. (௫)

| | | | |
|---|---|---|---|
| தகும் | (ஸ்ருஷ்டி முதலியவற்றுக்குத்) தகுதியான | எப்பொருளும் | (மனிசர் முதலிய) மற்றெல்லாப் பொருள்களையும் |
| சீர் | (சிறந்த ஞானம் முதலிய) குணங்களையுடையனை | படைக்க | படைப்பதற்கு |
| தன் | தன்னுடைய | தகும் | தகுதி பொருந்தியவனும் |
| தனி | ஒப்பற்ற | கோலம் தாமரை கண்ணன் | அழகிய புண்டரீகாக்ஷனுமாகிய |
| முதலினுள்ளே | உலககாரணமான ஸங்கல்பத்திற்குள்ளே | எம்மான் | எம்பெருமானைவிட |
| மிகும் | மிகுந்த | மிகும் சோதி | மிகுந்த ஒளிபொருந்திய |
| தேவும் | (பிரமன் முதலிய) தேவர்களையும் | மேல் | மேலானபொருளை |
| | | அறிவார் யவர் | அறிபவர் யாவர் ? |

* * * — [தகுஞ்சீர்.] எம்பெருமானுக்குப் பரத்வஸ்தாபகங்களானவற்றுக்குள்ளே புண்டரீகாக்ஷத்வமும் ஒன்றாதலால் அதனை இங்கு அருளிச்செய்கிறார். ஆளவந்தாரும் ஸ்தோத்ரரத்நத்தில் ஸ்ரீமந்நாராயணனுடைய பரத்வத்தை நிரூபிக்கும் பிரகரணத்திலே "கஃ வுண்டரீகநயந: புருஷோத்தம: க: ॥ க: புண்டரீகநயந: புருஷோத்தம: க:" என்றருளிச்செய்ததுங் காண்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தனக்குத் தகுதியான ஜ்ஞாநசக்தி முதலிய திருக்குணங்களையுடையனுய்த் தன்னுடைய ஸங்கல்ப மாத்திரத்தினுலே எப்படிப்பட்ட தேவர்களையும் படைக்க இவனே தகுதியுடையானென்று கோட்சொல்லித் தருகின்ற தண்டாமரைக் கண்களையுடையனுய் அவ்வழகாலே என்னை அடிமைகொண்டருளின எம்பெருமானே பரதத்துவம்; இவன் தவிர வேறு சில ஈச்வரர்கள் உண்டென்பதற்கு ப்ரமாணமில்லை என்றாராயிற்று. ... .... ... ... ... (ரு)

யவரும்யாவையும் எல்லாப்பொருளும் *
கவர்வின்றித் தன்னுளொடுங்கநின்ற *
பவர்கொள் ஞானவெள்ளச்சுடர்மூர்த்தி *
அவரெம்மாழியம் பள்ளியாரே, (சு)

| | | | |
|---|---|---|---|
| யவரும் | சேதநர்கள் யாவரும் | ஞானம் வெள்ளம் | ஞானமிகுதியை |
| யாவையும் | அசேதனங்கள் யாவையும் | சுடர் | தனக்குக்காந்தியாகவுடைய |
| எல்லாப் பொருளும் | ஆகிய எல்லாப்பொருள்களும் | மூர்த்தி | ஸ்வாமியுமான |
| கவர்வு இன்றி | நெருக்கமின்றியே | அவர் | அந்த ஸர்வேச்வரன் |
| தன்னுள் | தனது திருவயிற்றினுள்ளே | எம் | எமது அநுபவத்திற்குரிய |
| ஒடுங்க நின்ற | அடங்கும்படி நின்றவனும் | அம் | அழகிய |
| பவர் கொள் | பரப்பைக்கொண்ட | ஆழி பள்ளியார் | ப்ரளயார்ணவசயன ராவர். |

* * * — [யவரும் யாவையும்.] சேதநாசேதநாத்மகமான ஸகல பதார்த்தங்களையும் தன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்கையாலே அவனே ஈச்வரனென்கிறார். யவரும் என்று உயர்திணையாகச் சொல்லுகையாலே சேதநப்பொருள்களடங்கலும் அர்த்தம். யாவையும் என்று அஃறிணையாகச் சொல்லுகையாலே அசேதநப் பொருள்களடங்கலும் அர்த்தம். மீண்டும் 'எல்லாப்பொருளும்' என்றது பிரளயகாலத்தில் திருவயிற்றினுட்புகாது நின்ற பொருள் அணுவளவும் இல்லையென்பதைத் திடமாகவுரைத்தற்காம். கவர்வு இன்றி = பரஸ்பரம் ஹிம்ஸை ஏற்படாதபடி என்றவாறு. ஒருவரையொருவர் நெருக்காதபடி விசாலமாகத் திருவயிறு இடங்கொடுத்ததென்க.

"தன்னுள் ஒடுங்கநின்ற" என்பதற்கு இரண்டுவகையாகப் பொருள்கொள்வர்; திருவயிற்றினுள்ளே என்பது ஒரு பொருள். தன் ஸங்கல்பத்திலே என்பது மற்றொருபொருள். ஸகல சராசரங்களும் எம்பெருமானுடைய ஸங்கல்பத்திலே ஒடுங்கி நிற்கின்றன வென்றபடி.

பவர்கொள் ஞானவெள்ளச் சுடர்மூர்த்தி = இத்தனை விசாலமான உலகங்களையெல்லாம் ரக்ஷிப்பதற்குப் போதுமான பரப்பையுடைய ஜ்ஞாந ப்ரவாஹம் நிரம்பியவனுய், 'இப்படி ரக்ஷிக்கப்பெற்றது தன்பேறு' என்று தோற்றும்படியிருக்கிற சுடரேவடிவெடுத்த திவ்யமங்களவிக்ரஹத்தை யுடையனானவன்.

ஆழியம்பள்ளியார் = திருப்பாற்கடலிற் கிடந்த கிடையைச் சொல்லவுமாம்; ப்ரளயார்ணவத்திலே ஆபத்ஸகனுய்க் கண்வளர்ந்தபடியைச் சொல்லவுமாம். ... ... ... ... .... ... (சு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பள்ளியாலிலை ஏழுலகும்கொள்ளும் *
வள்ளல் வல்வயிற்றுப்பெருமான் *
உள்ளுளாரறிவார் ? அவன்தன் *
கள்ளமாய மனக்கருத்தே. (எ)

| | | | |
|---|---|---|---|
| பள்ளி | படுக்கை | அவன் தன் | அந்த ஸ்ரீமந்நாராயணனுடைய |
| ஆல் இலை | ஆலந்தளிராக | கள்ளம் | ஒருவராலுமறியக்கூடாததான |
| ஏழ் உலகும் | ஏழுலகங்களையும் | மாயம் | ஆச்சரியமான |
| கொள்ளும் | கொள்ளக்கடவதான | மனம் கருத்து | திருவுள்ளக் கருத்தை |
| வள்ளல் | பேரிடமுடைய | உள்ளுள் | மனத்தினுள் |
| வல் | உறுதியான | அறிவார் ஆர் | அறியவல்லவர் யாவர் ? |
| வயிறு | திருவயிற்றையுடையனான | | |
| பெருமான் | பெரியோனாகிய | | |

* * * — [பள்ளியாலிலை.] ஸகல லோகங்களுக்கும் ஆபத்திலே இடங்கொடுக்கையாகிற சிறந்த ஔதார்யத்தை யுடையனாய், ஸகல லோகத்தையும் வைத்துக்கொண்டு ஒரு சிறிய ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளும்படியான அகடிதகடனா ஸாமர்த்தியத்தையுடையனான ஸர்வேச்வரனுடைய திவ்ய சேஷ்டிதங்களை ஆரறியவல்லார்? என்னும் முகத்தாலே, இப்படிப்பட்ட அகடிதகடனா ஸமர்த்தனுக்கே ஸர்வேச்வரத்வம் தகும் என்கிறார். ... ... (எ)

கருத்தில்தேவும் எல்லாப்பொருளும் *
வருத்தித்த மாயப்பிரானையன்றி * ஆரே
திருத்தித் திண்ணிலைமூவுலகும் * தம்முள்
இருத்திக் காக்குமியல்வினரே. (அ)

| | | | |
|---|---|---|---|
| கருத்தின் | தனது ஸங்கல்பத்தினாலே | மூ உலகும் | மூவுலகங்களையும் |
| தேவும் | தேவர்களையும் | திண் நிலை | உறுதியான நிலைமையையுடையனவாக |
| எல்லாப் பொருளும் | மற்றெல்லாப்பொருள்களையும் | திருத்தி | அமைத்து |
| வருத்தித்த | வ்ருத்திசெய்த [உண்டாக்கின] | தம் உள் | தம் நினைவுக்குள்ளே |
| மாயம் | ஆச்சரியமான சக்தி முதலியவற்றையுடைய | இருத்தி | வைத்து |
| பிரானை அன்றி | எம்பிரானைத்தவிர்த்து | காக்கும் | காப்பாற்றுவதையே |
| | | இயல்வினர் | இயற்கையாகவுடையவர் |
| | | ஆர் | எவர் ? |

* * * — [கருத்தில் தேவும்.] ஸ்ருஷ்டி கார்யத்தையும் ஸம்ரக்ஷண கார்யத்தையும் ஸ்வாதீநமாகவுடையவனாகையாலே இவனுக்கே ஈச்வரத்வம் பொருந்துமென்கிறார். தனது ஸங்கல்பத்திலே தேவஜாதி முதலான ஸகல பதார்த்தங்களையும் உண்டாக்கின ஆச்சர்யபூதனான ஸர்வேச்வரனையன்றி, மூன்று லோகங்களையும் நிலைபெறுமாறு திருத்தித் தன் ஸங்கல்பத்திலே வைத்துக்கொண்டு காக்கும் ஸ்வபாவமுடையவர் வேறு யாரேனுமுளரோ? இல்லையென்றபடி. இதனால்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



'ஸ்ருஷ்டிக்குப் பிரமன் கடவன், ரக்ஷணத்திற்கு மாத்திரமே எம்பெருமான் கடவன்' என்பது கிடையாது; எல்லாம் எம்பெருமானதீனமே' என்றதாம். (அ)

காக்குமியல்வினன் கண்ணபெருமான் *
சேர்க்கைசெய்து தன்னுந்தியுள்ளே *
வாய்த்ததிசைமுகன் இந்திரன்வானவர் *
ஆக்கினான் தெய்வவுலகுகளே. (௯)

| | | | |
|---|---|---|---|
| காக்கும் இயல் வினன் | ரக்ஷிப்பதையே தொழிலாகவுடைய | வாய்த்த | ஸ்ருஷ்டி கார்யத்திற்கு யோக்யனான |
| கண்ண பெருமான் | ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மா | திசைமுகன் இந்திரன் | நான்முகனையும் இந்திரனையும் |
| சேர்க்கை செய்து | (ஸம்ஹாரஸமயத்திலே எல்லாம் தன்னிடத்துச்) சேரும்படி செய்து | வானவர் | மற்றுமுள்ள தேவர்களையும் |
| தன் உந்தி உள்ளே | தனது திருநாபிக்குள்ளே, | தெய்வ உலகுகள் | (அவர்களுக்கு இருப்பிடமான) திவ்யலோகங்களையும் |
| | | ஆக்கினான் | உண்டாக்கினான். |

* * * — [காக்குமியல்வினன்.] ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் இவனிட்ட வழக்காகைடாலும் இவனே யீச்வரனென்கிறார். "ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே | ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித் தம்விநா புருஷோத்தமம்" = ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே - ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித் தம்விநா புருஷோத்தமம்" என்கிறபடியே அநிஷ்டங்களைப்போக்கி இஷ்டங்களைத் தருகையாகிற ரக்ஷணத்தை ஸ்வபாவமாகவுடையனாய், அந்த ரக்ஷணத்தைச் செய்வதற்காகவே கண்ணபிரானாய்வந்து பிறந்தவன்.

சேர்க்கை செய்து = கடைசியில் லயம் சொல்லும்போது "ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே | ஆபஸ்தேஜஸி லீயந்தே" என்று சொல்லிக்கொண்டுபோய் "அவ்யக்தமக்ஷரே லீயதே அக்ஷரம் தமஸி லீயதே | தம: பரே தேவ ஏகீபவதி." என்று தன் பக்கலிலே சேருவதாக ஓதிக்கிடக்கையாலே அதைச் சொன்னபடி.

ஸம்ஹாரமானவாறே மீண்டும் ஸ்ருஷ்டியாதலால் அதைச் சொல்லுகிறது தன்னுந்தியுள்ளே என்று தொடங்கி. .... ... ... .... (௯)

கள்வாயெம்மையும் ஏழுலகும் * நின்
னுள்ளேதோற்றிய இறைவயென்று *
வெள்ளேறன்நான்முகன் இந்திரன்வானவர் *
புள்ளூர்த்திகழல் பணிந்தேத்துவரே. (க௦)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

| | |
|---|---|
| வெள் ஏறன் | வெளுத்த எருதை வாஹனமாகவுடைய சிவபிரானும் |
| நான்முகன் | பிரமனும் |
| இந்திரன் | இந்திரனும் |
| வானவர் | மற்றுமுள்ள தேவர்களும் (ஒன்றுகூடி) |
| கள்வா | "கள்வனே ! |
| எம்மையும் | எங்களையும் |
| ஏழ் உலகும் | ஏழுலகங்களையும் |
| நின் உள்ளே | உனது ஸங்கல்பத்தினுள்ளே |
| தோற்றிய | தோன்றுவித்த |
| இறைவ | ஸ்வாமியே !" |
| என்று | என்றுசொல்லி |
| புள் ஊர்தி | சருடவாகனனாகிய ஸர்வேச்வரனுடைய |
| கழல் | திருவடிகளை |
| பணிந்து | வணங்கி |
| ஏத்துவர் | துதிப்பர். |

* * * — [கள்வா வெம்மையும்.] எவர்களை நீங்கள் தெய்வமாகக் கருதுகின்றீர்களோ அவர்களும் எம்பெருமானையே பணிந்து துதிக்கின்றார்களாதலால் அவர்களது இசைவினாலும் எம்பெருமானுக்கே பரத்வமுண்டென்று எளிதில் அறியலாமே யென்கிறார்.

"உன் ஈச்வரத்வத்தை மறைத்துக்கொண்டு எங்களுக்குத் தெரியாதபடி வந்து நிற்கிற கள்வனே !, எங்களையும் எங்களுக்கிடமான லோகங்களையும் ஸங்கல்பமாத்ரத்தாலே தோன்றுவித்த ஸ்வாமியே !" என்றிங்ஙனம் துதிக்கின்றார்களாம் கருடவாஹனனான பெருமானைச் சிவன் பிரமனிந்திரன் முதலானோர்.

கள்வா = பிறர் அறியாதபடி காரியஞ்செய்பவனைக் கள்வனென்பது: எம்பெருமானும் * இராமடமூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போருமவனாகையாலே கள்வனெனப்படுகிறான். பிள்ளைப்பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதியில் பேசும் பாசுரமொன்று காண்மின்;— "பண்டேயுன்தொண்டாம் பழவுயிரை யென்னதென்று, கொண்டேனைக் கள்வனென்று கூறாதே — மண்டலத்தோர், புள்வாய்பிளந்த புயலே ! உனைக்கச்சிக்கள்வாவென்றோதுவதுஎன்கண்டு?" என்றும். (அதாவது) ஒருவர்க்கு உரிய பொருளைத் தன்னதாகக்கொள்வது கள்ளமெனப்படும். ஆகவே, அநாதியாகவுனக்கே உரியதாய்க்கிடந்தவுயிரை நான் என்னுடையதென்று கொண்டிருக்கிறேனாதலால் என்னைக் கள்வனென்று சொல்லத்தகும். உலகத்திலுள்ள பொருள்கள் யாவும் நின்னுடையனவாதலால் வெண்ணெய் கொள்ளுதல் முதலிய தொழில்களைச்செய்யினும் உன்னைக் கள்வனென்று கூறுதல்தகாது; இவ்வாறிருக்க, உலகத்தார் இத்தன்மையை ஆய்ந்து அறியாமலே என்னை யானே திருடிக்கொண்ட பெருந்திருடனாகிய என்னைக் கள்வனென்னாமல் ஸர்வஸ்வாமியான உன்னைக் கள்வனென்கின்றனரே, இஃதுஎன்ன பேதைமை! என்று சமத்காரந்தோன்றக் கூறியவாறு. இது நிற்க: பிறர்பொருளைக் கவர்வதுபோலவே தனது தன்மையை மறைத்துக்கொண்டிருப்பதும் கள்வமாதலால் அதையிட்டு இங்குக் கள்வா ! என்றது. தேவர்கள் எம்பெருமான் பக்கலிலே வந்து வரங்கொள்ளும்போது 'நீர் எங்களிடத்திலேவந்து வரங்கேட்பதாகவுங்காட்டி எங்களைப் பெருமைப்படுத்தவேணும்' என்றும் வரங்கேட்பர்களாம்; எம்பெருமான் அதற்கு இணங்கி 'ருக்மிணிப்பிராட்டிக்கு ஒரு பிள்ளைவேணும்.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்று சிவபிரானிடத்தே வரங்கேட்பனும்; அப்போது, 'அந்தோ! தான் பாரத்பராயிருக்கிற நிலைமையை மறைத்துக்கொண்டு இப்படி வரங்கேட்கிருனே! இது என்ன கள்வமோ!' என்றீடுபட்டுக் கள்வா! என்று 'விளிப்பதுண்டே; அதைச் சொல்லுகிறதிங்கு. இவ்விடத்தில் அநுஸந்திக்கவேண்டிய ப்ரமாணங்கள்:— * ஸநூ்ம் ஷெவரி வரம் ஷெவ | ஹூவிஜா ஸவஹுஜஞூஷு | உதெதூா ஹூசவா ஹவாநெவ ஊஊராயய கெூரவ ||¦ஊம் வஹஹூ ஷெவெஸ வரம் உதெதூா ஹூஹாண வ | யெநாஹம் ஸவஹுஷெவாநாஂ வஜூாஜூ வஜூதமொ ஹவடி || * [இங்கு ஹவம் என்றது ஹவெயடி என்றபடி.] இதற்கு எம்பெருமானுடைய மறுமொழி வருமாறு:— (வாஹபுராணத்தில் ருத்ரகீதையில்) * ஷெவகாயஹூவதாரெஷு உநுஷூசுவஊவெயிவாநு| ஃவாரஷெவாராயயிஷூாஹி ஹர! சுவம் வரஷொஹவ || *

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்:— "தன் ஸ்வாதந்த்ர்யத்தை மறைத்துப் பாதந்த்ரனாய் நிற்கையிறே களவாகிறது. கைலாஸயாத்ரையிலே * நமொ வஷாய கணாூய நஊ கடகடாயவ = நமோ கண்டாய கர்ணாய நமஃ கடகடாய ச * என்று ஸ்தோத்ரம் பண்ணினபடியைக் கேட்ட ஒரு ப்ராஹ்மணன் 'இதுக்கு முன்பு ஒருவரை ஸ்தோத்ரம் பண்ணியறியாத வாயாகையாலே மீன்துடிக்கிறபடிபாராய்' என்ருன். 'நாத்தழும்ப நான்முகனுமீசனுமாய் முறையாலேத்த' என்கிறபடியே ஸ்தோத்ரம்பண்ணி நாத்தழும்புபட்டுக் கிடக்கிறதன்றே."

இவன் தாழநின்ற நிலையும் ஸ்தோத்ரம்பண்ணினபடியும் களவு என்பதை நிரூபிக்கிறது எம்மையுமேழுலகும் நின்னுள்ளேதோற்றிய இறைவ! என்பது. (க0)

ஏத்தவேழுலகுங்கொண்ட கோலக்
கூத்தனை * குருகூர்ச்சடகோபன்சொல் *
வாய்த்த வாயிரத்துள்ளிவைபத்துடன் *
ஏத்தவல்லவர்க்கு இல்லையோரூனமே. (கக)

| | | | |
|---|---|---|---|
| ஏத்த | (அனைவரும்) துதிக்க | ஆயிரத்துள் | ஆயிரத்தில் |
| ஏழ் உலகும் கொண்ட | எல்லா வுலகங்களையு மளந்து கொண்ட | இவை பத்து | இப்பத்துப் பாசுரங்களையும் |
| கோலம் கூத்தனை | அழகிய கூத்தனை எம் பெருமானைக்குறித்து | உடன் | அர்த்தத்தோடு (கற்று) |
| குருகூர் சடகோபன் சொல் | ஆழ்வார் அருளிச்செய்த | ஏத்த வல்லவர்க்கு | ஸ்துதிருபமாகச் சொல்ல வல்லவர்கட்கு |
| வாய்த்த | உலகுக்கு மஹாபாக்யமாகக் கிடைத்த | ஓர் ஊனம் இல்லை | ஒருகுறையுமில்லையாகும். |

* * * — [ஏத்தவேழுலகும்.] இத்திருவாய்மொழியைக் கருத்துடனே கற்று வல்லார்க்கு, 'எம்பெருமான் ஈச்வரனல்லன்' என்று புத்திபண்ணுதல், 'இதா



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தேவதைகள் ஈச்வரர்கள்' என்று புத்தி பண்ணுதல் ஆகிற அவத்யமொன்றும் உண்டாகமாட்டாதென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். எம்பெருமானுடைய பரத்வத்தை நிரூபிக்கக் கீழே பாசுரந்தோறும் ப்ரதிபாதிக்கப்பட்ட விஷயங்களுள் உலகமளந்த சரிதை யொன்றேபோதும் என்பது தோன்ற நிகமத்தில் அதனை யெடுத்துக்காட்டுகின்றார். ஸ்ரீ விஷ்ணுதர்மத்தில் மாங்கள்யஸ்தவத்தில் — "ஸங்கைஸ் ஸுராணாம் திவி பூதலஸ்தைஸ் ததா மநுஷ்யைர் ககநே ச கேசரை: | ஸ்துத: க்ரமாந் ய: ப்ரசகார ஸர்வதா மமாஸ்து மாங்கல்யவிவ்ருத்தயே ஹரி: = ஸங்கைஸ் ஸுராணாம் திவி பூதலஸ்தைஃ ததா மநுஷ்யைர் ககநே ச கேசரைஃ, ஸ்துதஃ க்ரமாந் யஃ ப்ரசகார ஸர்வதா மமாஸ்து மாங்கல்யவிவ்ருத்தயே ஹரிஃ." என்றதைத் திருவுள்ளம்பற்றி ஏத்தவேழுலகுங்கொண்ட என்றார்.

வாய்த்தவாயிரம் = பராத்பரனான எம்பெருமான் நமக்கு வாய்த்தது ஒரு அதிசயமன்று; அவனது பெருமைகளை வாயாரப்பேச இத்திவ்யப்ரபந்தம் வாய்த்ததுதான் மிக்க அதிசயம் என்று ஆழ்வார் தமக்கே ஆச்சரியமாயிருக்கிறபடி. ... .... .... (கக)

அடிவரவு:— திண்ணனேபாவம் ஏறனைத்தேவும், தகுஞ்சீர்யவரும் பள்ளிபால் கருத்தில், காக்குங்கள்வா ஏத்தவேழனம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

இரண்டாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

## த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் இத்திருவாய்மொழிக்கான ச்லோகம்.



பூர்ணைச்வர்யாவதாரம் பவதுரிதஹரம் வாமநத்வே மஹாந்தம்
நாபீபத்மோத்தவிச்வம் ததநுகுணத்ருசம் கல்பதல்பீக்ருதாப்திம் |
ஸுப்தம் ந்யக்ரோதபத்ரே ஜகதவநதியம் ரக்ஷணாயாவதீர்ணம்
ருத்ராதிஸ்துத்யலீலம் வ்யவ்ருணுத முநிருத்துங்கபாவேந நாதம் ||

* திண்ணன்வீடு * இந்தத்திருவாய்மொழியில், எம்பெருமான் மநுஷ்ய ஸஜாதீயனாய் அவதரித்திருக்கச்செய்தேயும் பரத்வத்திற் குறையாமேயிருப்பன் என்பதை ஆழ்வார் தெளிவித்தருளினாரென்கிறார். 1. பூர்ணைச்வர்யாவதாரம் * மண்ணும் விண்ணுமெல்லாமுடனுண்ட நங்கண்ணன். * பூர்ணமான ஐச்வர்யத்தோடே க்ருஷ்ணனாய்வந்து அவதரித்தவன். 2. பவதுரிதஹரம். * மாபாவம்விட அரற்குப் பிச்சைபெய். * ஹரனென்று சிவபிரானுக்குப்பெயர்; அவனுடைய ப்ரஹ்மஹத்யாபாதகத்தைத் தீர்த்தருளினவன். 3. வாமநத்வே மஹாந்தம். * மேல்தன்னை மீதிட நிமிர்ந்து மண்கொண்ட. * முந்துற மாணிக்குறளுருவாயிருந்து பின்பு திரிவிக்கிரமனாய் வளர்ந்தவன். 4. நாபீபத்மோத்த விச்வம். * தேவுமெப்பொருளும் படைக்கப் பூவில் நான்முகனைப்படைத்த தேவன். * நாபிக்கமலத்திலே (ஸத்வாரகமாக) ஸகலத்தையும் படைத்தவன். 5. ததநுகுணத்ருசம். * தகுஞ்சோதித்தாமரைக்கண்ணன். * அதற்குத் தகுதியான தண்டாமரைக்கண்களையுடையவன். 6. கல்பதல்பீக்ருத அப்திம். * அவர் எம்மாழியம் பள்ளியாரே. * பிரளயகாலத்தில் அர்ணவத்தைப் படுக்கையாகக்கொண்டவர். 7. ந்யக்ரோதபத்ரே ஸுப்தம். * பள்ளியாலிலே. * அப்போது ஆலந்தளிரிற்கண்வளர்ந்தவன். 8. ஜகதவநதியம். * மூவுலகும் தம்முளிருத்திக்காக்கும். * மூவுலகங்களையுங் காப்பதையே எப்போதும் சிந்தை செய்பவன். 9. ரக்ஷணாய அவதீர்ணம். * காக்குமியல்வினன் கண்ணபெருமான். * ரக்ஷணார்த்தமாகவே கண்ணபிரானாய்வந்து திருவவதரித்தவன். 10. ருத்ராதிஸ்துத்யலீலம். * வெள்ளேறன் நான்முகன் இந்திரன். * சிவபிரான் முதலானவர்களாலே துதிக்கப்படுகின்ற (வரபாசகம்முதலான) திருவிளையாடல்களையுடையவன். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை [லலித உத்துங்கபாவேந நாதம் வ்யவ்ருணுத.] லலிதபாவமாவது தாழ இழிந்திருக்கை; அவ்விருப்பிலேயே உத்துங்கபாவமாவது பரத்வம். அது இருக்கிறபடியாலே இவனே நாதனென்று ஆழ்வார் அருளிச்செய்தாரென்றதாயிற்று. ... .... (*)

தூப்புல்பிள்ளை பொன்னடிகள் போற்றி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

திண்ணிதா மாறன் திருமால் பரத்துவத்தை
நண்ணி யவதாரத்தே நன்குரைத்த — வண்ணமறிந்து
அற்ருர்கள் யாவர் அவரடிக்கே யாங்கவர்பால்
உற்ருரை மேலிடாதுன்.

| | | | |
|---|---|---|---|
| மாறன் | நம்மாழ்வார் | அறிந்து | தெரிந்துகொண்டு |
| திருமால் பரத்துவத்தை | எம்பெருமானுடைய பரத்வத்தை | அவர் அடிக்கே | அவ்வாழ்வார் திருவடியிலேயே |
| அவதாரத்தே நண்ணி | அவதாரத்தில் அநுபவித்து | அற்ருர்கள் யாவர் | ஈடுபட்டிருப்பார் யாவரோ, |
| திண்ணிது ஆ | திடமாகவும் | அவர்பால் உற்ருரை | அவர்களிடத்தில் பணிந்திருப்பவர்களை |
| நன்கு | நன்ருகவும் | ஊன் | தேஹஸம்பந்தம் |
| உரைத்த | அருளிச்செய்த | மேலிடாது | சேராது. |
| வண்ணம் | ரீதியை | | |

* * * — திண்ணன்வீட்டில் ஆழ்வாருளிச்செய்த பகவத் பரத்வத்தை அறிந்துகொண்டு ஈடுபட்டிருப்பவர்களுடைய ஸம்பந்த ஸம்பந்திகளும் வாழ்ப்பெறுவர் என்கிறது. "திண்ணிதாம் மாறன்" என்று பிரித்து மாறனுக்கு விசேஷணமாக்கியுரைத்தார் பிள்ளைலோகஞ்சீயர். பரத்வே பரத்வவிஷயமான உயர்வற வுயர்நலத்திற் காட்டில் இத்திருவாய்மொழிக்குண்டான வாசி விளங்குதற்கு 'அவதாரத்தேநண்ணி' என்ருர். ஆங்கு—அசை. "அவரடிக்கே அற்ருர்கள் யாவர்" என்று கொண்டுகூட்டுப் பொருள்கோள். ... (கஉ)

---

### த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஸம்ஶ்லிஷ்ய ப்ரீதசேதா நாத்ருஷ்ட: ப்ரஸம்மாச
தந்த்ருஶ்யத்வஜநநஸ்ய ஸௌஹார்த்தசக்ய: |
ஸௌஹார்த்யாதிதாசோபி ஸந்த்ஷ்யாஹாவெ
வளாராணிகோக்திநயதஸ்ஸம்ஜிஸஶிதீயெ ||

(கருத்து.) கீழ்த்திருவாய்மொழியில் பிரிவாற்ருமையினுல் தளர்ந்த ஆழ்வாருக்கு எம்பெருமானேடு கலவிநேர்ந்து துயர்தீர்ந்து ஸந்தோஷமுண்டாக, ப்ராஸங்கிகமாய் எம்பெருமானுடைய பரத்துவம் இத்திருவாய்மொழியில் அந்வய வ்யதிரேக முகத்தாலும் அவதார விஷயமாகவும் புராணப்ரக்ரியையாலும் அருளிச்செய்யலாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து — மூன்றுந் திருவாய்மொழி,

## ஊனில்வாழுயிரே.

## அவதாரிகை.



இந்த மூன்றாந் திருவாய்மொழியானது இரண்டாந்திருவாய்மொழியாக இருந்திருக்கவேண்டும். முதல் திருவாய்மொழியில் [வாயுந்திரையுகளில்] பட்ட ஆர்த்தி தீர எம்பெருமான் வந்து ஸேவைஸாதித்து ஸம்ச்லேஷ ரஸாநுபவத்தை யும் கொடுத்தருள, அந்த ஆனந்தத்தைத்தெரிவிப்பதான இந்தத்திருவாய் மொழி முன்னமே அமைந்திருக்கவேண்டியதாயினும், எம்பெருமானுடைய பரத்வாநுபவம் இடையில் ப்ராஸங்கிகமாக ப்ராப்தமாயிற்று. இப்படிப்பட்ட பரத்பரனன்றோ நம்மோடு இங்ஙனே கலந்தருளினானென்று முந்துறப் பாத் வும் அநுஸந்தான விஷயமானபடியாலே அது சொல்லிற்றாயிற்று கீழ்த்திருவாய் மொழியில். அது பேசியானவாறே * வாயுந்திரையுகளில் ஆர்த்திதீரவந்து ஸம்ச்லேஷித்ததனாலுண்டான இன்பம் இத்திருவாய்மொழியில் அருளிச் செய்யப்படுகிறது.

இந்தப் பேரின்பத்தை யநுபவிப்பதற்கு உசாத்துணையாவார் இந்நிலத்தில் ஆரேனுமுளரோ? என்று பார்க்கையில் * உண்டியே உடையே உகந்தோடுமிம் மண்டலத்திலே அப்படிப்பட்டாரொருவருங் கிடையாமையாலே எம்பெருமானை நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகளின் திரளிலே போய்ப்புகுந்து அவர் களோடு ஒரு கோவையாக அநுபவிக்கப்பெறுவது என்றைக்கோ என்கிற குறையோடே இத்திருவாய்மொழி தலைக்கட்டுகின்றது. .... ... (*)

ஊனில்வாழுயிரே ! நல்லைபோவுன்னைப்பெற்று *
வானுளார்பெருமான் மதுசூதனென்னம்மான் *
தானும்யானுமெல்லாம் தன்னுள்ளேகலந்தொழிந்தோம் *
தேனும்பாலும்நெய்யும் கன்னலுமமுதுமொத்தே. (க)

| | |
|---|---|
| ஊனில் | மாம்ஸருபமான சரீரத்தில் |
| வாழ் | வாழ்கின்ற |
| உயிரே | நெஞ்சமே ! |
| நல்லை போ | நீ நல்லவன்காண்; (ஏனென்றால்) |
| உன்னை பெற்று | உன்னை ஸ்வாதீனமாகப் பெற்றதனால், |
| வான் உளார் பெருமான் | நித்யஸூரிகட்குத் தலைவனும் |
| மதுசூதன் | மதுவென்னு மசுரனைக் கொன்றவனும் |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| என் அம்மான் தானும் | எம்பெருமானாகிய அவனும் | பாலும் | பாலும் பாலும் |
| | | நெய்யும் | நெய்யும் நெய்யும் |
| யானும் | (அவனுக்கு அடிமைப் பட்ட) நானும் | கன்னலும் | அக்காரமும் அக்காரமும் |
| | | அமுதும் | அம்ருதமும் அம்ருதமும் |
| தன் உள்ளே | தனக்குள்ளே | ஒத்து | ஒன்றுசேர்ந்தாற்போன்று |
| எல்லாம் | எல்லா இனிமையுமாம்படி | கலந்தொழிந்தோம் | கலந்துவிட்டோம். |
| தேனும் | தேனும் தேனும் | | |

* * * — [ஊனில்வாழுயிரே.] ஸர்வேச்வரனைக் கொண்டாடப்பிறந்த ஆழ்வார் தம் திருவுள்ளத்தைக் கொண்டாடுகிறாரிப்பாட்டில். ஏனென்னில்; கைங்கரியச் செல்வத்திற்கு இட்டுப்பிறந்துவைத்து நெடுநாளாக இழந்துகிடந்த நமக்கு இந் நெஞ்சினாலன்றோ இன்று பேறுவாய்த்தது என்ற உவப்பினால். ராஜ்யத்தை இழந்துகிடந்த வொருராஜகுமாரனை ஒருவன் ராஜ்யத்திலே புகுவித்தால் 'இவனாலேயன்றோ நாம் இப்பேறுபெற்றது' என்று அவனைக் கொண்டாடுவர்களன்றோ, அதுபோல.

ஊனில் வாழ் உயிரே!= 'வாழ்' என்னுஞ்சொல் ஸந்தோஷத்தோடுகூடின இருப்பையுஞ்சொல்லும்; ஸாதாரணமான இருப்பையுஞ்சொல்லும். அவ்விருவகைப்பொருளும் இங்கு உரைக்கத்தகும். சரீரத்தில் இருக்கின்ற நெஞ்சே! (அன்றி) தேஹந்தவிரவேறொன்று கிடையாதென்றுகொண்டு அதிலேயே களித்து வர்த்திக்கிற நெஞ்சே!. (அன்றியே) பாழும் பிரகிருதியில் இருந்துவைத்தே பகவத்குணங்களையே தாரமாகக்கொண்டு வாழ்கிற நெஞ்சே!.

உயிர் என்று நெஞ்சைச் சொல்லலாமோவென்னில், இங்கே ஈடுகாண்மின். "மநஸ்ஸை உயிர் என்பானென் என்னில்; ஆத்மாவுக்கு தர்மபூதஜ்ஞாநம் நித்யமாயிருக்கச்செய்தே * மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ: * என்று பந்தமோக்ஷங்களுக்கு ஹேது மநஸ்ஸு என்கிற ப்ராதாந்யத்தைப்பற்ற உயிரே! என்று ஆத்மாவை ஸம்போதிக்குமாபோலே ஸம்போதிக்கிறார்"- என்று. இத்தால் ஔபசாரிக ப்ரயோகமென்று காட்டினபடி.

நல்லை போ= வடமொழியில் ஹோ என்கிற விளிக்குறிப்பிடைச்சொல் போ எனத்திரிந்தது என்னலாம். எதிர்மறைபிலக்கணையால், போ என்றது வா வென்றபடியாய் 'நெஞ்சே! வா' என்றதாகவுமாம். முழுச்சொல்லாய் மிகவும் நல்லை என்றதாகவுமாகலாம். வார்த்தைப்பாடு என்னவுமாம். நல்லை—'நல்லன்' என்பதன் முன்னிலை. நெஞ்சைக்கொண்டாடுவதற்கான காரணத்தை உன்னைப் பெற்று என்று தொடங்கி அருளிச்செய்கிறார். எம்பெருமான் அநாதியாகவேயுள்ளன்; அவனுடைய ஸம்பந்தமும் அப்படியே அநாதி; அவன் நம்மைக் கைப்பற்றவேணுமென்று தட்டித்திரிவதும் நெடுநாளாகவே உண்டு; இவ்வளவுமிருந்தும் நெஞ்சே! நீ இசைந்துவாராத குறையொன்றினாலன்றோ நெடுங்காலமாக இழந்திருந்தது; இன்று நீ ஆபிமுக்யம்பண்ணப்பெற்றதனாலன்றோ இப்பேறுபெற்றது என்று கொண்டாடுகின்றனென்கிறார். தாம்பெற்ற பேற்றை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மூன்றடிகளால் அருளிச்செய்கிறார். நித்யஸூரிகளுக்கும் அவ்வருகானவன் ஸம்ஸாரிகளில் கடைகெட்டவனான என்னோடே கலந்த கலவியை என்ன பாசுரமிட்டுச் சொல்லுவேன்? அவனும் நானுமான சேர்த்தியிலே எல்லா ரஸங்களும் பிறக்கும்படி கலந்தோம் என்கிறார்.

தேனும் பாலு மித்யாதி ஈற்றடியில் இரண்டுவகையான நிர்வாஹமுண்டு; தேனும் தேனும் கலந்தாற்போலவும் பாலும் பாலும் கலந்தாற்போலவும் நெய்யும் நெய்யும் கலந்தாற்போலவும் கன்னலும் கன்னலும் கலந்தாற்போலவும் அமுதுமமுதும் கலந்தாற்போலவும் என்றுகொண்டு ஏக ஜாதீயத்ரவ்யங்கள் பரஸ்பரம் கலந்தாற்போலே என்று முன்புள்ள முதலிகளின் நிர்வாஹம். எம்பெருமானார் நிர்வஹிக்கும்படியாவது—தேன் பால் நெய் கன்னல் அமுது ஆகிய இவற்றைச் சொன்னது மற்றுமுள்ள ரஸவத்பதார்த்தங்களனைத்தையுஞ் சொன்னபடியாய், அவனும் நானுமான கலவிக்குள்ளே எல்லா ரஸங்களுமாம்படி கலந்தோமென்று. .... .... .... (க)

ஒத்தார்மிக்காரை இலையாயமாமாயா! *
ஒத்தாயெப்பொருட்குமுயிராய் * என்னைப்பெற்ற
அத்தாயாய்த்தந்தையாய் அறியாதனவறிவித்த *
அத்தா! நீசெய்தன அடியேனறியேனே. (உ)

| | | | |
|---|---|---|---|
| ஒத்தார் மிக்கார் | ஸமானமானவர்களையும் மேற்பட்டவர்களையும் | என்னை பெற்ற | என்னையுண்டாக்கின |
| இலை ஆய | உடையனல்லாத | அ தாய் ஆய் | அந்தத் தாயாகியும் |
| மா மாயா | பெரிய ஆச்சரியகுணங்களையுடையவனே! | தந்தை ஆய் | பிதாவாகியும் |
| எப் பொருட்கும் | எல்லாப் பொருள்களுக்கும் | அறியாதன அறிவித்த அத்தா | ஆசார்யனாகியும் உபகாரகனானவனே |
| ஒத்தாய் | ஒப்பாக அவதரித்தவனே! | நீ செய்தன | நீ செய்த உபகாரங்களை |
| (எப்பொருட்கும்) உயிர் ஆய் | எல்லார்க்கும் பிராணபூதனாய் | அடியேன் அறியேன் | அடியேன் அளவிட்டறியகில்லேன். |

* * * — [ஒத்தார்மிக்காரை] கீழ்ப்பாட்டில் நெஞ்சைக் கொண்டாடினார்; சிறிது ஆராய்ந்து பார்த்தவாறே அந்த நெஞ்சை இசைவித்ததும் ஸர்வேச்வரனேயாதலால் அந்த எம்பெருமானையன்றோ கொண்டாடவேணுமென்று அது செய்கிறாரிப்பாட்டில். எம்பெருமானாருடைய காலக்ஷேபகோஷ்டியிலே இப்பாசுரம் வந்தவளவிலே 'இவ்வாத்மாவுக்கு முதல் குரு யார்? என்று விசாரமுண்டாக; 'ஆசார்யன்' என்று சிலர் சொன்னார்கள். மற்றுஞ்சிலர் 'ஆசார்யனுடைய ஸ்ரீ பாதத்திலே கொண்டுசேர்த்த ஸ்ரீவைஷ்ணவன் முதல் குரு' என்றார்கள். முடிவாக எம்பார் அருளிச்செய்ததாவது—* "இசைவித்தென்னையுன் தாளிணைக்கீழ் இருத்துமம்மானே * என்றருளிச்செய்கையாலே அகவாயிலே இருந்து இசைவித்த ஸர்வேச்வரனே முதல்குரு; ஆசார்யன் அழைத்தாலும் ஒரு ஸ்ரீவைஷ்ணவன் அழைத்தாலும் இவன் மாட்டேனென்று சொல்லிவிட்டால் செய்யலாவதில்லை; அப்படிச்சொல்லாமல் இசைவித்தது ஸர்வேச்வரனுடைய க்ருத்யமிறே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்பது திருவுள்ளம். "நிஹீநம் தத்ராபி ஹ்யுசவிருநிசப்ராணநிர்வாணஃ" (ரஹஸ்யத்ரயஸாரே) என்ற வேதாந்த தேசிகனுடைய திவ்யஸூக்தியும் இவ்வர்த்தத்தை நோக்கியுள்ளது.

"ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே" "நிஸ்ஸமாப்யதிகஸ்யாஸ்ய யம் தேவமேவ நிஷீ ஸாஸ்தீ" இத்யாதிப்படியே, எம்பெருமானுக்குத் தன்னேடொத்தவர்களுமில்லை, மேம்பட்டாருமில்லை—என்பது முதலடி. அப்படியிருந்துவைத்தும் இதர ஸஜாதீயனுய் வந்து அவதரித்தபடியால் எப்பொருட்கும் ஒத்தாய் என்கிறுர். ப்ரஹ்மருத்ரர்களிடையே விஷ்ணுவாய்த்தோன்றினது, இந்திரனுக்குத் தம்பியாய்ப்பிறந்தது, ராமக்ருஷ்ணுத்யவதாரங்கள் பண்ணினது, திர்யக்ஜாதிகளோடொக்க மீனுமாமையுமேனமுமானது ஆக இவற்றையெல்லாங்கொண்டு "எப்பொருட்கு மொத்தாய்" எனப்பட்டது.

'எப்பொருட்கும்' என்றது நடுநிலைத்தீபகமாய் முன்னும்பின்னும் அந்வயிக்கும்; 'எப்பொருட்கும் உயிராய்' என்க. நாம் நமக்குப் பார்க்கும் ஹிதத்தையும் அவனே பார்க்குமவன் என்பதுபற்றி உயிராய் என்றது.

'மாத்ருதேவோ பவ | பித்ருதேவோ பவ | ஆசார்யதேவோ பவ" என்று உபநிஷத்து ஓதிய கட்டளையிலே மாதாவும் பிதாவும் ஆசார்யனுமெல்லாம் அவனே யென்கிறது மூன்றுமடி. எம்பெருமானைத் தாயும் தந்தையுமாகச் சொல்லுகிற வாசகங்கள் பெரும்பாலும் எங்குமுண்டாறுலும் "அறியாதனவறிவித்த அத்தா" என்று ஆசார்யத்வஞ் சொல்லுகிறது இப்பாசுரத்திற்கு விசேஷம். எம்பெருமானே! நீ செய்தவுபகாரம் ஒன்றிரண்டாகில் நானறியலாம்; அவை அளவற்றனவாதலால் நீயே அறிந்தாலறியுமித்தனை, என்னுலறியப்போகாது என்றுராயிற்று. .... ... (உ)

அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்புசெய்வித்து *
அறியாமாமாயத்தடியேனை வைத்தாயால் *
அறியாமைக்குறளாய் நிலம்மாவலிமூவடியென்று *
அறியாமைவஞ்சித்தாய் எனதாவியுள்கலந்தே. (௩)

| | | | |
|---|---|---|---|
| அறியாமை | (தனது உண்மையைப் பிறர்) அறியாதபடி | அறியா மா மாயத்து அடியேனை | அறியாமையை விளைப்பதான ஸம்ஸாரத்திலாழ்ந்துகிடந்த என்னை |
| குறள் ஆய் | வாமனமூர்த்தியாகி | அறியா காலத்துள்ளே | தொண்டுபடுதற்கு அறியாத அந்தக்காலத்திலேயே |
| மாவலி | 'மகாபலியே! | | |
| மூ அடி நிலம் என்று | மூன்றடி நிலம் (வேணும்) என்று சொல்லி | அடிமைக் கண் | தொண்டுசெய்யுந் தொழிலிலே |
| அறியாமை | (கபடகுணத்தைப் பிறர்) அறியாதபடி | அன்பு | ஆவலை |
| வஞ்சித்தாய் | வஞ்சித்து நிலத்தைக் கவர்ந்தவனே! | செய்வித்து வைத்தாய் | உண்டாக்கிவைத்தாய்; |
| எனது ஆவி உள் கலந்து | எனது நெஞ்சினுள்ளே சேர்ந்து | ஆல் | ஆச்சரியம். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — [அறியாக்காலத்துள்ளே.] தம்விஷயத்தில் எம்பெருமான் செய்தருளின நன்மைகளைப் பேசுகிறாரிதில். இப் பாட்டின் முன்னடிகளை அந்வயிப்பதில் அபிப்ராயபேதமுண்டு; பாட்டு உள்ளபடியே அந்வயித்து (அதாவது) அறிவுநடையாடாத காலத்திலேயே எனக்குக் கைங்கர்ய ருசியைப் பிறப்பித்து (அதை மேன்மேலும் வளர்த்துக்கொண்டு போவதற்கு வழியில்லாதபடி) அறிவைத் தொலைப்பதான மாமாயத்திலே [ஸம்ஸாரத்திலே] பின்னையும் வைத்துக்கெடுத்தாய் என்று இழவுதோற்றச் சொல்லுகிறதாகத் திருமாலையாண்டான் உடையவர்க்கு அருளிச்செய்தார். இதை உடையவர் கேட்டு, கீழ்ப்பாசுரங்களும் மேற்பாசுரங்களும் உகவை தலையெடுத்துச் செல்லாநிற்க இடையே இப்பாட்டு அப்ரீதி தோற்றச் சொல்லுமது சேராது; ஆகவே வேறுவகையாக அந்வயித்துப் பொருள்கொள்வது பாங்கு: 'அறியாமாமாயத்து' என்பதை 'வைத்தாய்' என்பதோடு கூட்டாமல் 'அடியேனை' என்பதோடு கூட்டுக. அறியாமாமாயத்தடியேனை அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்துவைத்தாய் = அறிவு கேட்டை விளைக்குமதான ப்ரக்ருதியிலே மங்கிக்கிடந்தவென்னை அறிவுநடையாடாத இளமையிலேயே அடிமையில் அன்புடையேனும்படி செய்துவைத்தாய் என்று அர்த்தம். ஆகவே இதுவும் ப்ரீதிதோற்ற உபகாரத்தையே சொன்னபடி என்று நிர்வஹித்தருளினர்.

முன்னடிகளிற் கூறிய விஷயத்திற்குப் பின்னடிகளிற் கூறும் விஷயம் த்ருஷ்டாந்தம்; மஹாபலியை மயக்கி வசிகரித்ததுபோலவே என்னையும், எனக்குத் தெரியாதபடி என்னுள்ளே கலந்து வசப்படுத்திக்கொண்டாய் என்கை.

நிலம் மாவலி மூவடியென்று = இதை அநந்வித பாஷணமாக வியாக்கியானங்களில் திருவுள்ளம் பற்றுகிறார்கள்; அது மிகவும் ரஸமானது. எம்பெருமான் ஒருநாளும் யாசகத்தொழில் செய்தறியாதவனாதலால் உதாரனிடத்திலே சென்று இன்னவிதமாகப் பேசவேணுமென்பதறியாமல், 'மாவலியே மூவடி நிலம் தா' என்று அந்வயத்தோடே கூடினதாகச் சொல்லவறியாமல், நிலம் மாவலி மூவடி என்று இப்படியே சொன்னானென்க. ... .... (ரு)

எனதாவியுள்கலந்த பெருநல்லுதவிக்கைம்மாறு *
எனதாவிதந்தொழிந்தேன் இனிமீள்வதென்பதுண்டே? *
எனதாவியாவியும்நீ பொழிலேழுமுண்டவெந்தாய்! *
எனதாவியார்? யானார்? தந்தநீகொண்டாக்கினையே. (சு)

பொழில் எழும் உண்ட } (பிரளயத்தில்) ஏழுலகங்களையும் வயிற்றில் வைத்து நோக்கின
எந்தாய் எம்பெருமானே!
எனது ஆவி உள் கலந்த } என் ஆத்மாவுக்குள்ளே நீ ஒருதன்மையராய்க் கலக்கப்பெற்ற
பெரு நல் உதவி } நல்ல மஹோபகாரத்திற்கு
கைம்மாறு ப்ரதியுபகாரமாக
எனது ஆவி என் ஆத்மாவை
தந்தொழிந்தேன் } உனக்கு அர்ப்பணஞ் செய்துவிட்டேன்;
இனி இனிமேல்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

| | | | |
|---|---|---|---|
| மீள்வது என் பது உண்டே | கொடுத்ததை மீட்டுப் பெற்றுக்கொள்வதென்பது உண்டோ? இல்லை | எனது ஆவி யார் | என்ஆத்மா யார் ? |
| எனது ஆவியும் | எனது ஆத்மாவுக்கும் | யான் ஆர் | நான் யாவன் ? |
| ஆவி | ஆத்மாவாயிருப்பவன் | தந்த நீ | படைத்துக்கொடுத்த நீ தானே |
| நீ | நீ (ஆதலால்) | கொண்டாக்கினை | கவர்ந்துகொண்டவனுனாய். |

* * * — [எனதாவியுள்கலந்த] உலகத்தில் ஒருவர் ஒரு உபகாரஞ்செய்தால் உபகாரம் பெற்றவர் பிரதியுபகாரஞ் செய்வதென்று ஒரு முறைமையுண்டாதலால் அதன்படியே ஆழ்வாரும் எம்பெருமானுக்குக் கைம்மாறுசெய்யக்கருதி ஆத்ம ஸமர்ப்பணமாகிற கைம்மாறு செய்ததாக முந்துறக்கூறி, உடனே ஆராய்ந்து பார்த்து, ஆத்மவஸ்து நம்முடையதாகில்லன்றோ நாம் கொடுத்ததாக ஆகும்; நாமும் நம்முடைமையுமெல்லாம் அவனுடைய சரக்காகவேயிருக்கும்போது நாம் கொடுத்ததாகக்கூறுவது பிசகு என்று அநுதபித்து 'உன்வஸ்துவை நீயே கைப்பற்றிக்கொண்டாயத்தனையல்லது நான் ஸமர்ப்பித்ததாகச் சொல்லுவது உசிதமன்று' என்று தலைக்கட்டுகிறார்.

இப்பாசுரத்தின் ஆறுயிரப்படி யருளிச்செயல் பரமபோக்யம்; அது வருமாறு:—"இப்படி எம்பெருமானோடு கலந்த கலவியாலுள்ள நிரவதிகப்ரீதியாலே அறிவழிந்து 'இவ்வாத்மா தம்முடையதன்று' என்று நிரூபிக்கமாட்டாதாராய், அவன் தம்மோடுகலந்த இப்பெருநல்லுதவிக்குக் கைம்மாறாகத் தம்முடைய ஆத்மாவை அவனுக்கு மீளாவடிமையாகக்கொடுத்து, பின்னையும் தம்முடைய ஸ்வரூபத்தை உள்ளபடி விவேகித்து, தருகிற நான் ஆர்! தரப்புகுகிற இவ்வாத்மா ஆர்!, பண்டேயுனக்கு சேஷமாயிருக்கிற இவ்வாத்மாவை நீ கொண்டருளினாயத்தனையிறே யென்கிறார்" என்பதாம்.

இந்த ஒரு பாசுரத்தின் கருத்தை ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்நத்தில் "வபுராதிஷு யோபி கோபிவா" (52) "மம நாத யதஸ்தி" (53) என்ற இரண்டு ச்லோகங்களினாலே அநுஸந்தித்தருளினார். முதலில் அஹம் அத்யைவ மயா ஸமர்ப்பிதஃ என்று ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினதாக அருளிச்செய்தார். அதைத் தாமே மறுபடியும் ஆராய்ந்தார்; 'ஐயோ! என்ன சொன்னோம் என்ன சொன்னோம்' என்று நடுங்கி அதற்கு அநுதபிக்கின்றமைதோன்ற "ஐஐ நாயு! யஃஷி யொஷூஹம் ஸகலும் தஜி தபெவெவ ஊயவ | நியதஸ்ஷிதி ப்ரவுஜஸீஃ உயவா கிம்நு ஸஊவ-யாமி தெ = மம நாத! யதஸ்தி யோஸ்ம்யஹம் ஸகலம் தத்தி தவைவ மாதவ!, நியதஸ்வமிதி ப்ரபுத்ததீஃ அதவா கிம் நு ஸமர்ப்பயாமி தே?" என்று அடுத்தச்லோக மருளிச்செய்தார். "மயா அஹம் ஸமர்ப்பிதஃ" என்று சொன்னேனே; இப்படிச்சொல்லுவதற்கு எனக்கு என்ன அதிகாரமுள்ளது? நான் என்கிற ஒரு வஸ்துவும் என்னுடையது என்கிற ஒரு வஸ்துவும் ஸ்வதந்த்ரமாகவுண்டோ? யானே நீ என்னுடைமையும் நீயே" என்றபடி எல்லாம் ஏற்கனவே உன்னுடையதாகவேயிருக்கும்போது, இந்த ஆத்மவஸ்து உனக்கு இல்லாததுபோலவும் இப்போதுதான் புதிதாக என்

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஞல் ஸமர்ப்பிக்கப்படுவதுபோலவும் பேசிவிட்டேனே பாவியேன்; ஸமர்ப்பிப்பதற்கு நானார்? ஸமர்ப்பிக்க என்னிடம் என்ன இருக்கிறது? அதிலும் உனக்கு ஸமர்ப்பிக்க என்ன இருக்கிறது? இவ்விஷயங்களை ஆராயாமல்தானே அவிவேகியாய்ச் சொல்லிவிட்டேனே! என்று அநுதாபங்காட்டி அருளிச்செய்தார். அது ஆழ்வார் காட்டினவழியேயாம்.

பண்ணின ஆத்மஸமர்ப்பணத்தைப்பற்றி அநுதாபப்படுவதாகச் சொல்லலாமோ? அப்படியானல், அநுதாபயோக்யங்களான பாபங்களைப்போலே ஆத்மஸமர்ப்பணமும் ஒரு பாபந்தானேயாகும். அது செய்யக்கூடாத காரியம் என்று ஏற்பட்டுவிடாதா? என்கிற கேள்வி பிறக்கும். இதற்குப் பூருவர்கள் அருளிச்செய்கிற ஸமாதானம் யாதெனில்; ஆத்மஸமர்ப்பணம் பண்ணுகையும் பண்ணினதற்காகப்பிறகு அநுதாபங்காட்டுகையும் ஆக இரண்டும் இவ்விபூதியில் மாறிமாறி நடந்தேதீரும் என்கிறார்கள். "ஸம்ஸாரபீதியால் ஸமர்ப்பிக்கையும் ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநத்தால் அநுசயிக்கையுமிரண்டும் யாவதாத்மபாவி நடக்கக்கடவது" என்பது பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி.

செய்த ஆத்மஸமர்ப்பணத்திற்கு அநுதாபப்பட்டால் அந்த ஆத்மஸமர்ப்பணம் தவறானகாரியம் என்று ஏற்பட்டுவிடாதோ என்றே கலங்குமவர்கட்குச் சொல்லுகிறோம்;—"ஒட்டுரைத் திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும், பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதி" (திருவாய்மொழி 3-1-2.) என்று பரஞ்சோதியான எம்பெருமானுக்கு உலகத்திலுள்ள நச்வரமான தாமரை, மேகம், காயாம்பூ முதலியவற்றை ஒப்பாகச் சொல்லுதல் இழிவு என்கிறாழ்வார்; இஃது உண்மையா அன்று? உண்மையாகில் "கொண்டல் வண்ணா!—கடல்வண்ணா!—காயாம்பூவண்ணங்கொண்டாய்!" என்று பலகாலும் ஆழ்வார்கள் கதறுகின்றார்களே; இது என்ன?

"மாகுணு வான்கோலத்தமரர் கோன்வழிப்பட்டால், மாகுணுவுனபாத மலர்ச்சோதிமழுங்காதே" என்று பிரமன் சிவனிந்திரன்முதலான தெய்வங்கள் எம்பெருமானைத் துதிப்பதானது அவனுக்கு நிறக்கேடு என்கிறாழ்வார்; இஃது உண்மைதானே. இவ்வாழ்வார் தாமே பெரியதிருவந்தாதியில் "இருநால்வர் ஈரைந்தின்மேலொருவர், எட்டோடொரு நால்வர் ஓரிருவரல்லால், திருமாற்குயாமார் வணக்கமார்" என்று, அந்தத் தெய்வங்கள் தாம் எம்பெருமானைப் போற்றுதற்கு உரியார் என்கிறாரே, இஃது என்ன? அத்திருவந்தாதியில் தானே "புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம்" என்று எம்பெருமானை நாம் புகழ்வதானது பழிப்பதேயாம் என்று சொல்லிக்கொண்டே பலவாறாகப் புகழ்கின்றாரே, இஃது என்ன?

ஆளவந்தார் தாமும் ஸ்தோத்ரரத்நத்தில் முப்பத்திரண்டாவது ச்லோகம் முதல் நாற்பத்தாறும் ச்லோகமளவும் பதினான்கு ச்லோகங்களாலே பகவானு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



டைய நித்யகைங்கர்யத்தைப் பரமபுருஷார்த்தமாக ப்ரார்த்தித்துத் தாமே (47) *திகசுசிமவிநீதம்* என்கிற ச்லோகத்தால், கீழ் அப்படி ப்ரார்த்தித்ததற்கு மஹத்தான அநுதாபத்தை ஆவிஷ்கரித்திருக்கின்றாரே; அஃது என்னவென்று ஆராயவேண்டாவோ? கைங்கர்ய ப்ரார்த்தனைகூடும் என்று நிஷ்கர்ஷமா? கூடாது என்று நிஷ்கர்ஷமா?

ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் தாமும் சரணாகதி தீபிகை யென்னும் தீப ப்ரகாச ஸ்தோத்ரத்தில் (41) "இத்தம் த்வதேகசரணைரநகைரவாப்யே த்வத்கிங்கரத்வவிபவே ஸ்ப்ருஹயாऽபராத்யந் = இத்தம் த்வதேக சரணைரநகைரவாப்யே த்வத்கிங்கரத்வவிபவே ஸ்ப்ருஹயா அபராத்யந்" என்று— பகவத்கைங்கர்யத்தை ஆசைப்படுவது மஹாபராதம் என்று வாய்விட்டருளிச் செய்கிறார். கைங்கர்ய ப்ரார்த்தனை அபராத கோடியில் அந்வயித்ததாகில் "நித்யகிங்கரஃ பவாநி" என்கிற ப்ரார்த்தனை எங்ஙனேகூடும்? தப்பான காரிய மென்று நிர்ணயிக்கப்பட்டபின் அதனை புத்திபூர்வகமாகச் செய்யலாமோ? ஸகல சாஸ்த்ர தத்வஜ்ஞான தாம் "ஸ்ப்ருஹயா அபராத்யந்" என்றதற்கு முன்னும் பின்னும் பலகால் கைங்கர்ய ஸ்ப்ருஹைபண்ணிப்போந்தது எங்ஙனே?

கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "யா கம்ஸஸத்மநி ந்ருபக்ஷய நிர்வஹணோக்தா ஸா நிர்ஜிதத்ரிஜகதஸ்தவ நைவ கீர்த்தி:" என்று — கம்ஸன் முதலிய அரசர்களாகிற புழுக்களைத் தொலைத்தானென்று சொல்லி எம்பெருமானை ஏத்துவதானது மூவுலகத்தையும் வென்றிருக்கிற அவனுக்குப் புகழ்ச்சியேயன்று என்று சொல்லிவைத்து அப்படிப்பட்ட சரித்திரங்களையே சொல்லிப் புகழ்கின்றாரே, இஃது என்ன? இவை ஒன்றுக்கொன்று அபவாதமாகுமோ? இவையெல்லாம் பரஸ்பர விருத்தம்போல் தோற்றினாலும் உண்மையில் விருத்தமன்றே. இரண்டபடிகளும் சொல்லித்தீரவேண்டியவை யத்தனையிறே. அதுபோலே ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகையும் பின்பு அதற்கு அநுதபிக்கையும் ஆகிற இரண்டும் சாஸ்த்ரார்த்தம் என்று அறுதியிட்டபின் விளையுங்குற்ற மென்கொல்?

இவ்வளவு நிரூபணமின்றியே இப் பாசுரத்தின் பதினெண்ணாயிரப்படியில் பரகாலஸ்வாமி — "இப்படி ஸாக்ஷாத்க்ருதாத்மஸ்வரூபத்துக்கு ஸ்வாதந்த்ர்யநிஷேதபரமான இப்பாட்டின் ஈட்டில் 'ஸ்வாத்மீயத்தில் ஸமர்ப்பிக்கவும் வேணும் — ஸமர்ப்பணத்தைப்பண்ணி அநுசயிக்கிறார்' என்னும்படியான உக்திகள் ஆத்மஸ்வரூபவிரோதமும் ஸ்வாதீநாத்மப்ரஸ்யவிரோதமுமாகையால் அநாதரணீயம்" என்று ஸஹஸா எழுதியுள்ளவை நம்பிள்ளை திருவுள்ளத்தை நன்கு உணரப்பெறுமையினாலாகிய விதயோக்திகளாகையாலே விவேகிகளுக்கு அநாதரணீயங்களாகக் கடவன. ... ... ... ... .... ... (௩)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இனியார்ஞானங்களால் எடுக்கலெழாதவெந்தாய் *
கனிவார்வீட்டின்பமே ! என்கடல்படாவமுதே ! *
தனியேன்வாழ்முதலே ! பொழிலேழுமேனமொன்றாய் *
நுனியார்கோட்டில்வைத்தாய் ! உனபாதம்சேர்ந்தேனே. (ரு)

| | |
|---|---|
| யார் | எப்படிப்பட்டவர்களுடையவும் |
| ஞானங்களால் | ஞானவிசேஷங்களாலும் |
| எடுக்கல் எழாத | க்ரஹிக்கப்பார்த்தாலும் க்ரஹிக்கமுடியாத |
| எந்தாய் | எம்பெருமானே !, |
| கனிவார் | (உன்பக்கலில்) மனங்கனிந்தவர்களுக்கு |
| வீடு இன்பமே | மோக்ஷானந்தமே வடிவெடுத்தாற்போலிருப்பவனே ! |
| கடல் படா | உப்புக்கடலிலுண்டாகாத |
| என் அமுதே | எனக்குப் போக்யமான அம்ருதமே ! |
| தனியேன் | அத்விதீயபக்தனான என்னுடைய |
| வாழ் | வாழ்ச்சிக்கு |
| முதலே | முதற்காரணமே ! |
| பொழில் ஏழும் | ஏழுலகங்களையும் |
| ஏனம் ஒன்று ஆய் | ஒப்பற்ற வராஹரூபியாகி |
| நுனி ஆர் | கூர்மைமிகுந்த |
| கோட்டில் | கோரப்பல்லிலே |
| வைத்தாய் | வைத்தெடுத்தவனே ! |
| இனி | இதுமுதலாக |
| உன பாதம் | உனது திருவடிகளை |
| சேர்ந்தேனே | அடியேன் பிரியாதிருப்பவனே. |

* * * — [இனியார் ஞானங்களால்.] பிரளய வெள்ளத்திலே மூழ்குகின்ற ஜகத்தை யெடுத்தருளினாற்போலே ஸம்ஸாரஸாகரத்திலே மூழ்கிக்கிடக்கிற என்னை உன் திருவடிகளில் உறவையறிவித்து எடுத்தருளுகையாலே இனியுன் திருவடிகளைப் பெற்றேனென்று மகிழ்ச்சிதோற்றப்பேசுகிறார்.

பாசுரத்தின் தொடக்கத்திலுள்ள இனி என்பதற்கு இறுதியிலுள்ள வினைமுற்றோடே அந்வயம்; இனிச் சேர்ந்தேனேயென்க. ஆர் ஞானங்களால் எடுக்கலெழாத எந்தாய் = எப்படிப்பட்ட சிறந்த ஞானிகளுடைய ஞான விசேஷங்களாலும் தம்முயற்சியாலே அறியப் பார்க்குமிடத்தில் பேர்க்கப் போகாதிருக்கிற என்னுயனே ! என்கிறார். இந்த வாக்கியத்தில் உம்மைத்தொகை கொள்ள வேணும். ஆர் ஞானங்களாலும் என்க. எடுக்கலெழாத என்றவிடத்து, ஞானத்தினால் அறியக்கூடாதவன் என்கிற பொருள்போலவே 'தூக்கியெடுக்கவும் முடியாதவன்' என்கிற பொருளும் விவக்ஷிதம். இது அவதார சரித்திரங்களிற் காணத்தகும்.

கனிவார் வீட்டின்பமே ! = இதற்கு மூன்றுவகையாகப் பொருள்கொள்ளலாம். வீட்டின்பமென்றது மோக்ஷஸுகமென்றபடியாய், உன் விஷயத்திலே உள்கனிந்து பரிபக்வர்களா யிருப்பார்க்கு மோக்ஷானந்த துல்யனாயிருப்பவனே !. (அன்றியே) வீடு இன்பம் = வீடுகளிலே வந்து சேர்ந்து இன்பம் பயக்குமவன்; க்ருஷ்ணாவதாரம் முதலியவற்றில் நந்தகோபர் முதலானாருடைய க்ருஹங்களிலே வந்து "தொல்லையின்பத்திறுதி கண்டாளே" என்னும்படி செய்பவன். (அன்றியே) வீட்டின்பமென்று அவரவர்களது க்ருஹங்களிலே அர்ச்சையாக அமைந்து இன்பம் தரும்படியைச் சொல்லவுமாம். "வீட்டின்ப வின்பப்பாக்களில் த்ரவ்யபாஷா நிரூபணஸமம் இன்பமாரியிலாராய்ச்சி" என்ற ஆசார்ய ஹ்ருதயகாரர்க்கு இவ்வர்த்தம் விவக்ஷிதமே.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்கடல்படாவமுதே ! = கடலில் தோன்றின அமுதம் ப்ராக்ருதமாயும் ப்ரயத்நஸித்தமாயு மிருப்பதுபோலன்றியே அப்ராக்ருதமாய் நிர்ஹேதுக க்ருபா ப்ராப்தமாயிருக்குந்தன்மை சொல்லுகிறது. [தனியேன்வாழ் முதலே !] ஆழ்வார் தம்முடைய வாழ்ச்சிக்குத் தம்மிடத்தில் ஒரு ஸுக்ருதம் காணுமல் எம்பெருமானே மூலஸுக்ருதமென்கிறார். "வரவாறென்றில்லை வெறிதே யென்று அறுதியிட்டபின் வாழ்முதலென்கிற ஸுக்ருதமொழியக் கற்பிக்கலாவதில்லை" என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியுங்காண்க.

பொழிலேழுமேனமொன்றாய்க் கோட்டில்வைத்த வரலாறு:— ஹிரண்ய கசிபுவின் உடன் பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அசுரன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹா வராஹரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கோட்டினாற்குத்தி அங்குநின்று எடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருளினனென்பதாம். இப்பொழுது நடக்கிற ச்வேத வராஹ கல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை மேலேயெடுக்க நினைத்து மஹாவராஹரூபியாகிக் கோட்டுநுனியாற் பூமியை யெடுத்துவைத்தன னென்ற வரலாறுமுண்டு: "பாராருலகம் முதுமுந்நீர்பரந்த காலம் வளைமருப்பில், ஏராருருவத்தேனமாய் எடுத்தவாற்றலம்மான்" என்ற திருமங்கையாழ்வாரருளிச்செயல் காண்க. ... .... .... (ரு)

சேர்ந்தார்தீவினைகட்கு அருநஞ்சைத்திண்மதியை *
தீர்ந்தார்தம்மனத்துப் பிரியாதவருயிரை *
சோர்ந்தேபோகல்கோடாச்சுடரை அரக்கியைமூக்கு
ஈர்ந்தாயை * அடியேனடைந்தேன் முதல்முன்னமே. (சு)

| | |
|---|---|
| சேர்ந்தார் | பக்தர்களினுடைய |
| தீ வினைகட்கு | கொடிய பாவங்களுக்கு |
| அரு நஞ்சை | ஆற்றவரிதான விஷமாயிருப்பவனும் |
| திண் மதியை | திடமான அத்யவஸாயத்தை அளித்தருள்பவனும் |
| தீர்ந்தார் தம் மனத்து பிரியாது | தனக்கே அற்றுத் தீர்ந்தவர்களான பரமைகாந்திகளின் மனத்தைவிட்டுப் பிரியாமல் |
| அவர் உயிரை | அவர்களுக்கு உயிராயிருப்பவனும் |
| சோர்ந்து போகல் கொடா | தன்னைப்பிரிந்து விஷயங்களில் போகக்கொடாத |
| சுடரை | ஒளியுருவாகவுள்ளவனும் |
| அரக்கியை | ராக்ஷஸியான சூர்ப்பணகையின் |
| மூக்கு | மூக்கை |
| ஈர்ந்தாயை | அறுத்தவனுமாகிய வுன்னை |
| அடியேன் | நான் |
| முதல் முன்னமே | அநாதிகாலமாகவே |
| அடைந்தேன் | சேர்ப்பெற்றவன். |

* * * — [சேர்ந்தார்தீவினை.] நான் எம்பெருமானைப்பெற்றது இன்றைக்கோ? இவ்வாத்மாவுள்ளபோதே பிடித்து எம்பெருமானைப் பெற்றவனல்லேனோ என்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கிறுர். நெடுநாளாகப் பிரிந்திருந்த பிரிவின் வருத்தம். ஒன்றும் தெரியாதபடி எம்பெருமான் தன்னோடே கலந்ததனாலுண்டான களிப்பு இங்ஙனே பேசுவிக்கின்றது காண்மின்.

சேர்ந்தார் தீவினைகட்கு அருநஞ்சை = அடியார்களின் பாவங்களை முடிப்பவன் என்றபடி. சாஸ்த்ரங்களில் பாவங்களைப்பற்றி இரண்டுவகையாகச் சொல்லியிருக்கிறது; * நாஹுக்தம் க்ஷீயதெ கஊ கலுகொடிஶதெரவி = நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிசதைரபி * என்று பலனை அனுபவித்தே பாவங்களைத் தொலைக்கவேண்டுமென்பது ஒருவகை. * தவெஸ்வாதூா வஷ விதூம் விஜிசவா ந கஊணா லிவ்தெ வாவகெஊந * என்றும் * ஸவம் விஜி வாவம் கஊ நஷ்லிஷ்தெ * என்றும் * ஸவம் ஹாவஸ் ஸவெஊ வாவூாநஃ வூதூயனெ * என்றும் ப்ரஹ்மவித்துக்குப் பாப ஸம்பந்தம் அறவேயொழிந்துபோமென்பது மற்றொருவகை. எம்பெருமானை அடிபணியாதவர்கள் முதல்வகைக்கு இலக்கு; அடிபணியுமவர்கள் இரண்டாவது வகைக்கு இலக்கு என்பது ஸ்ரீபாஷ்யஸித்தாந்தம். * தஷயிமஃ உதூரவூவஊவ யொரஶ்லெஷ விநாஶஎ தஊவஷெஶாகு * என்ற ப்ரஹ்மஸூத்ரத்தில் இது காணத்தக்கது. இவ்வர்த்தம் விளங்குமாறு இங்கு சேர்ந்தார் தீவினைகட்கு எனப்பட்டது.

திண்மதியை = த்ருடமான அத்யவஸாயத்தை அளிப்பவன் என்று பொருள்; திருநெடுந்தாண்டகத்தில் முதற்பாட்டில் வேதநான்காய் என்றதற்கு நால்வேதங்களையும் கொடுப்பவன் என்று பொருளாவதுபோல இங்கும் திண்மதியை யென்பதற்குத் திண்மதியைக்கொடுப்பவன் என்று பொருளாகக் குறையில்லையென்றுணர்க. இங்கே ஒரு இதிஹாஸமருளிச்செய்வர்;—முன்பு அம்பரீஷன் எம்பெருமானை நோக்கித் தவம்புரியாநிற்கையில் அவனுடைய அத்யவஸாயத்தைப் பரீக்ஷிக்கும்பொருட்டு எம்பெருமான் இந்திரன் வேடம்பூண்டு எதிரேவந்து நின்று 'வேண்டும்வரத்தைக் கேட்டுப்பெற்றுக்கொள்' என்று சொல்ல; அதுகேட்ட அம்பரீஷன் 'இந்திரனே! நான் உன்னை ஆராதிக்குமவனல்லேன்; என்னுடைய ஸமாதி பங்கம்பண்ணாதே போகமாட்டாயோ? உன்னைக் கும்பிடுகிறேன், போ'' என்றானும். த்ருடாத்யவஸாயம் இப்படியிருக்குமென்று காட்டினபடி.

தீர்ந்தார் தம்மனத்துப்பிரியாது அவருயிரைச் சோர்ந்தேபோகல் கொடாச்சுடரை = எம்பெருமான் தன்னையே உபாயமும் உபேயமுமாகப் பற்றியிருப்பவர்கள் தீர்ந்தார் எனப்படுவர்; அன்னவர்களினுடைய மனத்திலே எப்போதும் ஸந்நிதிபண்ணியிருந்து அவர்களது உயிரை குணானுபவம் முதலியவற்றால் தரிப்பிக்குமவன் என்றபடி.

அரக்கியை மூக்கீர்ந்த வரலாறு:—இராவணனுடைய தங்கையாகிய சூர்ப்பணகை தண்டகாரணியத்தில் குடியேறி அங்குள்ள வநவாஸிகளை வருத்திக்கொண்டு உல்லாஸமாகத் திரிந்துகொண்டிருக்கையில் ஸ்ரீராமலக்ஷ்மணர் ஸீதையோடு கோதாவரிக்கரையில் பஞ்சவடியாச்ரமத்தில் வஸித்துவருகிறபொழுது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஒருநாள் இராமபிரானது திருமேனியழகைக்கண்டு பெருங்காதல்கொண்டு அழகியவடிவமெடுத்து அருகில்வந்து தன்னைக்கூடும்படி பலவாறுவேண்டவும், அதற்கு அப்பெருமான் உடன்படாது பலகூறி மறுத்திட்டதனால் மிக வருந்தி மீண்டு 'ஒப்புயர்வில்லாத ஸௌந்தரியமுடைய மனைவி உடனிருத்தலால் அவளுள்ளவளவும் என்னை இவன் விரும்பான்; அவளை வஞ்சனையால் எடுத்துப்போய் மறைத்துவைத்துவிட்டால் நான் இவனுடன் கூடிவாழக்கூடும்' என்றெண்ணி மறுநாளுதயத்தில்வந்து இராமன் காலைக்கடன்கழிப்பதற்குத் தடாகம் நோக்கிச்சென்ற ஸமயம்பார்த்துச் சீதையைப்பிடிக்கத் தொடர்கையில், அப்பிராட்டிக்குக்காவலாக அருகிற்சோலையிலிருந்த லக்ஷ்மணன் கண்டு விரைந்துவந்து இவளது கூந்தலை ஒருகையாற்பற்றிக்கொண்டு மற்றொருகையால் உடைவாளையெடுத்து அதனால் இவளது மூக்கையுங் காதையும் அறுத்துத் தூரத்திவிட்டானென்பதாம். இச்செயல்செய்தது இளையபெருமாளாயினும் இதனைப்பெருமாள் செயலாகவே ஆழ்வார் அருளிச்செய்வர்கள். "சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு அவளார்க்கவரிந்தானைப்பாடிப்பற" என்றும் "தங்கையை மூக்குந் தமையனைத் தலையுந் தடிந்தவென்தாசரதி" என்றும் பெரியாழ்வாருளிச்செய்தார். "மலைபோலுருவத்தொரிராக்கதிமூக்கு அரிந்திட்டவன் காண்மின் இன்றுஆய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவன்" என்றார் திருமங்கையாழ்வார். இங்ஙனே சொல்லலாமோவென்னில்; இளையபெருமாளைச் சொல்லுமிடத்து வான்மீகி முனிவர் "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:—ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:' என்றார்., (அதாவது) லக்ஷ்மணனை ஸ்ரீராமபிரானது வலக்கையாகக் கூறினர். ஆதலால் சூர்ப்பணகாபங்கத்தைப் பெருமாளது செயலாகக்கூறுவது பொருந்துமென்க. தன் கையாலேபிறே தண்டித்தது. அன்றியும், ப்ரயோஜ்யகர்த்தா, ப்ரயோஜககர்த்தா என்ற இருவகைக்கர்த்தாக்களுள் ஸ்ரீராமன் ப்ரயோஜக கர்த்தாவாதலால் இதுபற்றியும் சொல்லிற்றென்ப.

அடியேன் முதல் முன்னமே அடைந்தேன்=ஒரு மாணிக்கம் சேற்றிலழுந்தி மழுங்கிக்கிடக்க, அதனைப் பரிஷ்கரித்தால் இயற்கையாகவுள்ள ஒளி விளங்குவது தவிர, புதிதாக வொளி உண்டாவதன்றே; அதுபோலவே ஆத்மாவுக்கும் "திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்" என்றபடி பகவத்ஸம்பந்தம் ஸ்வதஸ்ஸித்தமாதலால் இங்ஙனே சொல்லக் குறையில்லையென்க.

ஆத்மாவுக்கு அசித்ஸம்பந்தம் அநாதியா? பகவத்ஸம்பந்தம் அநாதியா? என்று விகல்பிக்கலாம்படியிருக்கும். ஆனாலும் பகவத்ஸம்பந்தந்தான் அநாதியென்பது துணிபு. இவ்விஷயம் ஆசார்யஹ்ருதயத்தில் — "ஏதந்நிமித்தம் முன்னமே முதல்முன்னமேயான அவித்யநாநாதிஸம்பந்தங்கள். இவை இட்டமும் வேட்டுவேளானும்போலே ஒண்பொருள் பொருளல்லாதவையென்றுதே நானிலாத யானுமுளனுவனென்கிற ஸாம்யம் பெறத் தின்றுதி அந்தமும் வாழ்வுமாகிற ஹாநிஸத்தைகளை உண்டாக்கும். ஒன்றுகூடினதாய் பற்றறுக்க மீண்டொழிகையாலே பழவடியேனென்னுமென்றுமே ஒழிக்கவொழியாதது." என்ற சூர்ணிகைகளில் விசதமாகும். .... .... .... (சு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



முன்னல்யாழ்பயில்நூல் நரம்பின்முதிர்சுவையே *
பன்னலார்பயிலும்பரனே ! பவித்திரனே *
கன்னலே ! அமுதே ! கார்முகிலே ! என்கண்ணா ! *
நின்னலாலிலேன்காண் என்னைநீகுறிக்கொள்ளே. (எ)

| | |
|---|---|
| முன் | அநாதியாய் |
| நல் | விலக்ஷணமாய் |
| யாழ் பயில் | வீணையைப்பற்றி அப்யஸிக்கப்படுவதான |
| நூல் | ஸங்கீத சாஸ்த்ரத்தின் படியேயான |
| நரம்பில் | தந்திக்கம்பியிலே வருடப்பட்டு |
| முதிர் | முதிர்ந்த |
| சுவையே | சுவைபோன்றவனே! [பரமபோக்யனே!] |
| பல் நல்லார் | பல விலக்ஷணர்கள் |
| பயிலும் | நித்யாநுபவம் பண்ணப்பெற்ற |
| பரனே | பரமபுருஷனே ! |
| பவித்திரனே | பரிசுத்தனே ! |
| கன்னலே | கரும்பின் சாறுபோன்றவனே ! |
| அமுதே | அமிருதம்போன்றவனே ! |
| கார் முகிலே | காளமேகத்திருவுருவனே! |
| என் கண்ணா | எனக்கு நித்யாநுபவத்திற்குரிய கண்ணபிரானே! |
| நின் அலால் | உன்னையன்றி |
| இலேன் காண் | (வேறொருவனைத் தஞ்சமாக) உடையேனல்லேன் காண் ; |
| என்னை | இப்படிப்பட்ட என்னை |
| நீ குறிக்கொள் | நீயே திருவுள்ளத்தில் கொண்டருளவேணும் |

* * *—[முன்னல் யாழ்பயில்நூல்.] கீழ்ப்பாட்டில் "அடியேனடைந்தேன் முதல் முன்னமே" என்றார் ; அதனால் தம்முடைய நித்ய ஸம்ச்லேஷத்தைத் தெரிவித்துக்கொண்ட ஆழ்வார் இக்கலவிக்கு விச்சேதம் பிறந்தால் என் செய்வது ? என்று சங்கித்து, அப்படி ஒருகால் விச்லேஷம் பிறக்குமாகில் தரிக்கமாட்டேனென்று திருவுள்ளத்திலே கொண்டருளவேணுமென்று இப்பாட்டிலருளிச்செய்கிறார். 'தரிக்கமுடியாமைக்குக் காரணம் எம்பெருமானுடைய பரமபோக்யதை முதலானவை' என்பதைக் காட்டிக்கொண்டு மூன்றடிகளில் பகவத்ஸம்போதநங்களை அமைத்தருளுகிறார்.

முன்னல்யாழ்பயில்நூல் நரம்பின் முதிர்சுவையே ! என்ற விளி—எம்பெருமானுடைய பரமபோக்யதை எல்லாரையும் ஈடுபடுத்துமது என்று காட்டுதற்காக. "𑌪𑌶𑍁𑌰𑍍𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌶𑌿𑌶𑍁𑌰𑍍𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌗𑌾𑌨𑌰𑌸𑌂 𑌫𑌣𑍀= பசுர் வேத்தி சிசுர் வேத்தி வேத்தி காநரஸம் பணீ" என்றபடி பசுக்களையும் சிசுக்களையும் ஸர்ப்பங்களையும் பரவசமாக்கவல்ல ஸங்கீதரஸம் யாதொன்றுண்டு, அதுவே எம்பெருமானாக இங்குச்சொன்னது அதுபோல் இவன் ஸகலர்க்கும் பரமபோக்யன் என்றபடி. முன் என்பதும் நல் என்பதும் நூலுக்கு விசேஷணம். வீணாகாநவிஷயமான சாஸ்த்ரம் அநாதியாயும் விலக்ஷணமாயுமுள்ளது என்றவாறு. அப்படிப்பட்ட சாஸ்த்ரப்படி ஏற்பட்டதாயும், தந்திக்கம்பியில் கிளர்ந்ததாயுமிருக்கிற முதிர்ந்த கீதரஸம்போலே இனிமையே வடிவெடுத்தவனே ! என்றபடி.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பன்னலார்பயிலும் பரனே!=“தெள்ளியார்பலர் கைதொழுந்தேவனார்” என்கிறபடியே பகவத்குணாநுபவத்தில் நிலவர்களான கணக்கிறந்த நித்யஸூரிகள் இடைவீடின்றி நித்யாநுபவம் பண்ணினாலும் அநுபவித்த அம்ஶம் சிறிதாய் அநுபவிக்கவேண்டிய அம்ஶமே பெரிதாயிருக்கப்பெற்றவனே! என்றபடி. பல் நலார் என்று முமுக்ஷுக்களைச் சொல்லிற்றாகவுமாம். நல்லார் என்பது நலார் என்று தொக்கிக்கிடக்கிறது.

பவித்திரனே!=நித்யஸம்ஸாரிகளான நாமும் நித்யமுக்தர்களின் திரளிலே புகலாம்படி நம்மை நிஷ்கல்மஷராக்குந் தன்மையனே! என்றபடி. கன்னலே அமுதே!=கன்னல்போலவும் அம்ருதம்போலவும் இனியனானவனே!. கார் முகிலே!=காளமேகம்போல் ஔதார்யமே வடிவெடுத்தவனே! என் கண்ணா!=கண்ணனைப்போல் என் விஷயத்தில் பரமஸுலபனாயிருப்பவனே!.

நின் அலால் இலேன்=உன்னைவிட்டுப்பிரிந்து [ஒருநொடிப்பொழுதும் ஜீவிக்கமாட்டேன். உன்னையன்றி வேறொருவரை ரக்ஷகராகக் கொள்ளமாட்டேன் என்னவுமாம். என்னை நீ குறிக்கொள்=இப்படிப்பட்டவனாக என்னைத் திருவுள்ளம்பற்றவேணுமென்றவாறு. என்னைக் கடாக்ஷித்தருளவேணுமென்றுமாம். .... .... ... (எ)

குறிக்கொள்ஞானங்களால் எனையூழிசெய்தவமும் *
கிறிக்கொண்டிப்பிறப்பே சிலநாளிலெய்தினன்யான் *
உறிக்கொண்டவெண்ணெய்பால் ஒளித்துண்ணுமம்மான்பின் *
நெறிக்கொண்டநெஞ்சனாய்ப் பிறவித்துயர்கடிந்தே. (அ)

| | |
|---|---|
| உறி கொண்ட | உறிகளிலே சேமித்து வைத்த |
| வெண்ணெய் பால் | வெண்ணெயையும் பாலையும் |
| ஒளித்து உண்ணும் | மறைந்திருந்து அமுது செய்த |
| அம்மான் பின் | எம்பெருமான் பின்னே |
| நெறிக் கொண்ட | அவன் போனவழியே போகிற |
| நெஞ்சன் ஆய் | மனத்தையுடையேனாய் |
| பிறவி துயர் | ஸம்ஸாரத்தொல்லைகளை |
| கடிந்து | நிராகரித்து, |
| குறிக்கொள் ஞானங்களால் | யமநியமாதிகளாலே கொள்ளப்படுவதான ஞான விசேஷங்களாலே [உபாஸநாதிகளாலே] |
| எனை ஊழி செய் | அநேக கல்பகாலங்களில் செய்யப்படவேண்டியதான |
| தவமும் | பக்தியோகமாகிற தவத்தின்பயனை |
| கிறிக் கொண்டு | [பகவத் க்ருபையாகிற] உபாயத்தைக்கொண்டு |
| இப் பிறப்பே சில நாளில் | இந்தப்பிறவியில்தானே சிலநாட்களில் |
| யான் | அகிஞ்சனனாகிய அடியேன் |
| எய்தினன் | அடைந்தேன். |

* * * —[குறிக்கொள்ஞானங்களால்.] நெடுங்காலம் வருந்தி ஸாதிக்கவேண்டிய புருஷார்த்தத்தை இந்த ஜன்மந்தன்னிலே அற்பகாலத்தில் எளிதாகப்பெற்றேனென்று பகவத் கடாக்ஷத்தின் பெருமையைப்பேசுகிறார். வேதநமென்றும் த்யானமென்றும் உபாஸநமென்றும் பக்திக்குஉள்ள அவஸ்தாபேதங்களை ஞானங்களால் என்ற பன்மையால் காட்டுகின்றார். அவை யமம் நியமம் முத

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



லானவற்றில் ஊன்றியிருந்து ஸம்பாதிக்கவேண்டியவை யாதலால் குறிக்கோள் எனப்பட்டது. 'வெகு ஜாக்ரத்தையுடன் ஸம்பாதிக்கவேண்டிய' என்று பொருள்.

எனையூழி செய்தவமும்=இங்குத் தவமென்றது தவத்தின் பலனைச் சொன்ன படி. எத்தனையோ கல்பகாலங்கள்கூடி ச்ரவணம் மநநம் முதலியன செய்கை யாகிற தபஸ்ஸின் பலனை ஒரு பெருமுயற்சியின்றியே இப்பிறப்பிலேயே சில நாளிற் சென்றுவிட்டேன்.

எங்ஙனம் பெற்றுவிட்டீரென்ன, கிறிக்கொண்டு என்கிறார். கிறி யென் பதற்கு உபாயமென்று பொருள். எம்பெருமானே இங்கு உபாயபதத்தினால் விவக்ஷிக்கப்பட்டானென்றுணர்க. இவ்வாழ்வார் தாமே திருவிருத்தத்தில் தொண்ணூற்றோராம்பாட்டில் எம்பெருமானைப் பெருங்கிறியான் என்று பணித் திருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

எம்பெருமானாலே பெற்றேனென்கிறீரே; அதற்குப் பொருளென்ன? அப்பெருமான் விஷயமாக பக்தியோகம் முதலியவற்றைச் செய்து பெற்றீரோ? என்ன; இல்லை யில்லை; அவன் கண்ணனாய்த் திருவவதரித்திருந்தகாலத்தில் திருவாய்ப்பாடியில் ஆயர்மனைகளில் உறிகளிலே சேமித்துவைத்திருந்த வெண்ணெயையும் பாலையும் களவுவழியாலே அமுதுசெய்தானென்கிற இச் சரிதையை அநுஸந்தித்தேன்; அவ்வளவாலேயே இது பெற்றேன் காண்மின் — என்றாராகி றார் பின்னடிகளால். .... .... .... (அ)

கடிவார்தண்ணந்துழாய்க் கண்ணன்விண்ணவர்பெருமான் *
படிவானமிறந்த பரமன் பவித்திரன்சீர் *
செடியார்நோய்கள்கெடப் படிந்துகுடைந்தாடி *
அடியேன்வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே. (௯)

| | | | |
|---|---|---|---|
| கடி வார் | பரிமளம் மிக்க | சீர் | திருக்குணங்களிலே |
| தண் அம் துழாய் | குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையையுடையனான | செடி ஆர் நோய்கள் கெட | தூறுநெருங்கினாற்போலே நெருங்கி யிருக்கின்ற ஸம்ஸார வியாதிகள் தொலையும்படி |
| கண்ணன் | ஸ்ரீ க்ருஷ்ணனாய் | படிந்து | கிட்டி |
| விண்ணவர் பெருமான் | நித்யஸூரிகளுக்குத் தலைவனாய் | குடைந்து ஆடி | அவகாஹித்து |
| வான் | பரமபதத்திலும் | அடியேன் | தாஸனாகிய நான் |
| படி இறந்த | ஒத்தார் இல்லாதவனான | வாய் மடுத்து பருகி | வாயாரப்பருகி |
| பரமன் | பரமபுருஷனாய் | களித்தேன் | களிக்கப்பெற்றேன். |
| பவித்திரன் | பரிசுத்தனான எம்பெருமானுடைய | | |

* * * — [கடிவார்தண்ணந்துழாய்.] பரமபதத்திலே ப்ராப்தமாகக்கூடிய பக வத் குணாநுபவத்தை நான் இந்நிலத்திலேயே பெற்றேனென்று களித்துப்பேசு கிறாரிதில். பரிமளம் மிக்க (அல்லது, தேன்வெள்ளமிடாநின்ற) குளிர்ந்த திருத் துழாய் மாலையை யணிந்துள்ளவனாய், இவ்வலங்காரத்தாலே பெரியதிருவடி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருவநந்தாழ்வான் முதலான நித்யஸூரிகளை ஆட்படுத்திக்கொண்டவனும், அங்குள்ள அந்த நித்யஸூரிகளும் தன்படிக்கு ஒப்பாகப் பெறுதவனும், மிகவும் அபரிசுத்தர்களான நம்போலியரையும் பரிசுத்தர்களாக ஆக்கவல்ல பரமபவித்திரனும் இராநின்ற எம்பெருமானுடைய திருக்கல்யாணகுணங்களிலே நான் பரிபூர்ணமாக அவகாஹித்தேன்; அடி காணவொண்ணுதபடி தூறுமண்டிக்கிடக்கிற ஸகல பாபங்களும் தொலையும்படியான பாக்கியமும் பெற்றேன்; ஆக இத்தகைய பரமாநந்தம் பெற்றேனென்றாராயிற்று.

கடி—பரிமளமும் தேனும். வார்தல்—மிகுதியாக இருத்தலும் பெருகுதலுமாம்.

வானம் படி இறந்த—வானமென்று பரமபதத்திற்கும் மேகத்திற்கும் பெயராதலால், பரமபதத்திலும் தனக்கு ஒப்பில்லாதவன் என்றும், மேகத்தையும் தனக்கு ஒப்பாகப் பெறுதவன் என்றும் பொருள்கொள்ளலாம்.

பவித்திரன்—பவித்ரம் என்ற வட சொல்திரிபு. .... .... (௯)

களிப்பும்கவர்வுமற்றுப் பிறப்புப்பிணிமூப்பிறப்பற்று *
ஒளிக்கொண்டசோதியமாய் உடன்கூடுவதென்றுகொலோ *
துளிக்கின்றவானிந்நிலம் சுடராழிசங்கேந்தி *
அளிக்கின்றமாயப்பிரான் அடியார்கள்குழாங்களையே. (௧0)

| | | | |
|---|---|---|---|
| களிப்பும் | அல்ப ஸந்தோஷமும் | வான் | ஆகாசத்தையும் |
| கவர்வும் | மனக்கவலையும் | இ நிலம் | இந்தப் பூமியையும் |
| அற்று | ஒழிந்து | சுடர் | ஒளிமிக்க |
| பிறப்பு | ஜன்மமும் | ஆழி சங்கு | திருவாழி திருச்சங்குகளை |
| பிணி | வியாதிகளும் | ஏந்தி | தாங்கி |
| மூப்பு | கிழத்தனமும் | அளிக்கின்ற | ரக்ஷித்தருள்கின்ற |
| இறப்பு | மாணமும் | மாயன் பிரான் | ஆச்சரிய சேஷ்டிதனான பரமபுருஷனுடைய |
| அற்று | ஒழிந்து | அடியார்கள் | பக்தர்களினுடைய |
| ஒளிக்கொண்ட சோதியம் ஆய் | ஞானம் முதலிய ஒளிகளுக்கு ஒளியைத்தருவதான ஒளிபுருவையுடையோமாய், | குழாங்களை | கூட்டங்களை |
| துளிக்கின்ற | மழைபொழிகின்ற | உடன் கூடுவது | சேர்ந்து அநுபவிக்கப் பெறுவது |
| | | என்று கொல் | என்றைக்கோ? |

* * * — [களிப்புங் கவர்வுமற்று.] கீழ்ப்பாட்டில் "அடியேன் வாய்மடுத்துப் பருகிக் களித்தேனே" என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! பரிபூர்ணமான பேறு பெற்றுவிட்டீரன்றோ? இனியொரு குறையில்லையே; இனியுமக்கு நான் செய்யவேண்டியது ஒன்றுமில்லையே' என்ன; அதற்கு ஆழ்வார், 'பெருமானே! இவ்விபூதியில் நான் இப்போது ப்ரஹ்மானந்தம் அநுபவிக்கிறேனென்பதில் ஸந்தேஹமில்லை; ஆனாலும் விஷயாந்தரங்களின் நடுவே என்னை வைத்திருக்கின்றாயாதலால் இவ்வானந்தம் இங்கே நித்தியமாய்ச்செல்லாதாகையாலே ஒரு அப்ராக்ருத தேச விசேஷத்திலே சென்று அங்கு அடியார்களின்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கோஷ்டியிலே அந்வயிக்க வேண்டிய தொன்றுண்டு; அது எப்போது ப்ராப்த மாகுமோ? என்கிறார்.

தமக்கு நிவர்த்திக்கவேண்டியவற்றை முதலடியில் அருளிச்செய்கிறார். களிப்பு கவர்வு பிறப்பு பிணி மூப்பு இறப்பு ஆகிய இவை அற்றுப்போகவேணு மென்கிறார். களிப்பாவது இந்நிலத்தில் ஏதேனும் அல்ப வஸ்துக்கள் நமது கையில் கிடைக்கும்போது அதனாலுண்டாகும் அற்ப மகிழ்ச்சி. கவர்வாவது — கையில் கிடைத்த அந்த அல்ப வஸ்துக்கள் நஷ்டமாய்விட்டால் அதனாலுண் டாகும் மனக்கவலை. ஆகிய இவை யிரண்டும் இந்தப் பாழும் சரீரமுள்ளவரை யில் இடையறாது அநுவர்த்திக்கு மாதலால் சரீர ஸம்பந்தமும் தொலையவேணு மென்கிறார்.

பிறப்புத் தொலையவேணுமென்று ஒன்றைச் சொன்னால் போதுமே; பிணி மூப்பு முதலியவற்றைத் தனியே சொல்லவேணுமோ வென்னில்; அவற்றில் ஆழ்வார் தமக்குள்ள ஜிஹாஸையை வ்யக்தமாகக் காட்டினவாறென்க.

ஒளிக்கொண்ட சோதியம்ஆய் = ரஜோகுணமும் தமோகுணமும் கலசின இந்த உடம்புபோலல்லாமல் சுத்த ஸத்வமயமாய் அளவுகடந்த தேஜோரூப மான சரீரத்தையுடையோமாகி என்றபடி. "சோதியுமாய்" என்று பலரும் பதிப்பித்திருப்பதும் ஓதிவருவதும் பிழை. சோதியம் என்னவேணும்.

"உடன்கூடுவதென்றுகொலோ" என்ற விதற்குப் பாட்டின் இறுதியிலே அந்வயம். "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவது என்றுகொலோ" என்று இயைக்க. யாருடைய அடியார்களென்னில் மாயப்பிரானுடைய அடியார்கள்; அவன் எப்படிப்பட்டவனென்னில், துளிக்கின்றவான் இந்நிலம் சுடராழி சங் கேந்தி அளிக்கின்றவன். — மழை பெய்யுமிடமான ஆகாசத்தையும், பெய்த மழையினால் பயனளிக்குமதான இந்நிலத்தையும் ரக்ஷித்தருள்பவ னென்கை.

சுடராழி சங்கேந்தி = திருவாழி திருச்சங்குகள் பரமபதத்தில் ஆபரண மாய்க் காட்சிதரும்; இந்நிலத்தில் ஆயுதமாயிருந்து காரியஞ்செய்யும் என்ப.(கo)

குழாங்கொள்பேரரக்கன் குலம்வீயமுனிந்தவனை *
குழாங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்தெரிந்துரைத்த *
குழாங்கொளாயிரத்துள் இவைபத்துமுடன்பாடி *
குழாங்களாயடியீருடன் கூடிநின்றாடுமினே. (கக)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| அடியீர் | பக்தர்களே! |
| குழாம் கொள் | கூட்டங்கூட்டமான சேனைகளைக்கொண்ட |
| பேர் | மிக்க பெருமைபொருந்திய |
| அரக்கன் | ராக்ஷஸ ராஜனாகிய இராவணனுடைய |
| குலம் | குடும்பம் |
| வீய | தொலையும்படி |
| முனிந்தவனை | சீறியருளின பெருமாள் விஷயமாக |
| குழாம் கொள் தென் குருகூர் | (ஸ்ரீவைஷ்ணவ) கோஷ்டிகளை யுடைத்தான திருநகரிக்குத் தலைவரான |
| சடகோபன் | ஆழ்வார் |
| தெரிந்து | ஆராய்ந்து |
| உரைத்த | அருளிச்செய்த |
| குழாம் கொள் ஆயிரத்துள் | பாசுரங்களின் கூட்டம் நிரம்பிய இவ்வாயிரத்தினுள் |
| இவை பத்தும் | இப்பத்துப்பாட்டையும் |
| உடன் | பொருளுடனே |
| பாடி | பாடி |
| குழாங்கள் ஆய் | பெரிய கோஷ்டியாய் |
| உடன் கூடி நின்று | ஒருமிக்கக் கலந்திருந்து |
| ஆடுமின் | கூத்தாடுங்கள். |

* * * — [குழாங்கொள்பேரரக்கன்.] ஒவ்வொரு பதிகத்திலும் ஈற்றுப் பாசுரத்தில் பயனுரைத்து வருகின்ற ஆழ்வார் இப் பதிகத்திற்குப் பயன் கூறாது, இத் திருவாய்மொழி, பாகவதர் பெருந்திரளாக இருந்து அநுபவிக்கத்தக்கது என்று சொல்லித் தலைக்கட்டுகின்றார். இதற்கொரு பலன் எதிர்பார்க்கவேண்டா; பெரிய கோஷ்டியாக இருந்து இதனை அநுபவிப்பதுதானே ஸ்வயம் ப்ரயோஜனம் என்று தெரிவித்தவாறு. அன்றியே, இத் திருவாய்மொழியைக் கற்கப் பெறில் என்னைப்போலே தனியேயிருந்து துவளாமல் பாகவதகோஷ்டிகளுடன் கூடி அநுபவிக்கும்படியான பெரும்பேறு பெறுவீர்கள் என்று இதனை இத் திருவாய்மொழி கற்கையின் பயனாகவே அருளிச் செய்தாரென்றுங் கொள்ளலாம். ஆடுமின் என்றது ஆடப்பெறுவீர்களாக என்றபடி.

குழாங்கோள் பேரரக்கன் குலம்வீய முனிந்தவனை = கூட்டங் கூட்டமாகக் கூடி நலிந்துகொண்டிருந்த இராவணனை வேரோடுங் களைந்தொழித்த இராமபிரானைக் குறித்து என்றபடி. "आकर्णपूर्णैरिषुभिर्जीवलोकं दुरासदैः । करिष्ये मैथिलीहेतोरपिशाचमराक्षसम्॥ = ஆகர்ணபூர்ணைரிஷுபிர் ஜீவலோகம் துராஸதை:, கரிஷ்யே மைதிலீஹேதோ: அபிசாசமராக்ஷஸம்." என்று ஆரண்யகாண்டத்தில் சோதிவாய்திறந்து அருளிச்செய்தபடியே செய்து தலைக்கட்டினபடி.

குழாங்கோள் தென்குருகூர்ச்சடகோபன் = ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹங்கள் சூழப்பெற்ற ஆழ்வார் என்றபடி. இங்கே நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி காண்மின்;— "ஜநஸ்தானம் அடியறுப்புண்ட பின்பு தண்டகாரண்யம் குடியேறினாப்போலே * வாயுந்திரையுகளுக்குத் தப்பின ஆழ்வாரைக் காணவேணுமென்று ஸ்ரீவைஷ்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ணவவ்யூஹமடையத் திரண்டதாயிற்று." — ஒழே "வாயுந்திரையுகளும்" என்ற திருவாய்மொழி யருளிச்செய்யும்போது ஆழ்வார்க்கு இருந்த நிலைமையை நோக்குங்கால் 'இனி இவரை இவ்விபூதி இழந்ததேயாகும்' என்றே அனைவரும் நினைக்கும்படி யாயிற்றும்; ஸம்ஸாரிகள் பண்ணின பாக்கியத்தாலே அத் திரு வாய்மொழிக்கு ஆழ்வார் தப்பிப் பிழைத்தார்; அன்னவரை ஸேவிக்கவேணு மென்று பலபல பாகவதர்கள் திரண்டுவந்து சேர்ந்திருந்தார்களாம்; அவ் விருப்பைச் சொல்லுகிறது "குழாங்கொள் தென்குருகூர்ச் சடகோபன்" என்று. அங்ஙனே திரண்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் ஜீவனம் போரும்படி அரு ளிச்செய்த ஸ்ரீஸூக்தி இவை யாகையாலே குழாங்கோளாயிரம் எனப்பட்டது. ஆயிரத்தினுள் இப்பத்துப் பாட்டையும் அடியீர்! குழாங்களாய் உடன்கூடி நின்று ஆடுமின் என்று அந்வயம்.

இவ்விடத்தே நம்பிள்ளை அருளிச்செய்ததொரு திவ்ய ஸ்ரீஸூக்தி ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஹ்ருதயத்திலே எப்போதும் குடிகொண்டிருக்கத்தக்கது; அதாவது —

"அவன் பக்கலிலே நிக்ஷிப்தபரரா யிருக்கிற நீங்கள் நால்வரிருவர் இங்கிருக்கும் நாலுநாளும் த்யாஜ்யமான அர்த்தகாமங்களைப்பற்றிச் சீறு பாறென்னாதே நம் பெரிய குழாத்திலே போய்ப்புகுமளவும் ஒருமிடறாய் அநுபவிக்கப் பாருங்கோள்." — என்பதாம்.

மூன்றுந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

## த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில்
## இத்திருவாய்மொழிக்கான ச்லோகம்.



𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍁𑌪𑌕𑍃𑌤𑌿𑌭𑌿𑌰𑍍𑌦𑌾𑌸𑍍𑌯𑌸𑌾𑌰𑌸𑍍𑌯
[𑌹𑍇𑌤𑍁𑌂
𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌰𑍍𑌹𑌕𑍃𑌤𑍍𑌯𑌂 𑌭𑌜𑌦𑌮𑍃𑌤𑌰𑌸𑌂 𑌭𑌕𑍍𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑍈𑌕𑌭𑍋𑌗𑍍𑌯𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌾𑌪𑍂𑌰𑌣𑌾𑌰𑍍𑌹𑌂 𑌸𑌪𑌦𑌿 𑌬𑌹𑍁𑌮𑌹𑌤𑍍𑌸𑍈𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌭𑍀𑌷𑍍𑌟𑌂
𑌸𑌰𑍍𑌵𑍈𑌸𑍍𑌸𑍍𑌵𑍈𑌸𑍍𑌸𑌮𑍇𑌤𑌂 𑌪𑌰𑌵𑌿𑌭𑌵𑌨𑌵𑌾𑌶𑍍𑌲𑍇𑌷𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌭𑌿𑌲𑌾𑌷𑌮𑍍 ॥

1. சித்ராஸ்வாதாநுபூதிம் = முதற்பாட்டில் "தேனும் பாலும் நெய்யும் கன்னலு மமுதுமொத்தே" என்றபடி மதுரபதார்த்தங்கள் பலவும் ஒன்றுசேர்த்து அருந்தப்பட்டால் எவ்வளவு இனிதாயிருக்குமோ அவ்வளவு இனிதாயிருக்கின்ற ஸ்வாநுபவத்தை யுடையவன் என்றவாறு.

2. உபக்ருதிபி: ப்ரியம் = "என்னைப்பெற்றவத்தாயாய்த் தந்தையா யறியாதன வறிவித்த அத்தா" என்றபடி தந்தையும் தாயும் ஆசாரியனும் செய்யு முபகாரங்களைத் தானே செய்து அதனல் அடியவர்க்கு அன்பனுக வுள்ளவன்.

3. தாஸ்யஸாரஸ்யஹேதும் = தாஸ்யமாவது அடிமை; அது ஸரஸமாக உண்டாவதற்கு ஹேதுவாயிருந்தவன்; "அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து வைத்தாய்" என்றதைக் குறிக்கொண்டபடி.

4. ஸ்வாத்மந்யாஸார்ஹக்ருத்யம் = "எனதாவியுள் கலந்த பெருநல்லுதவிக் கைம்மாறு எனதாவி தந்தொழிந்தேன்" என்றபடி ஆத்ம ஸமர்ப்பணம் செய்கைக்குறுப்பாக ஆத்மாவினுள்ளே கலந்திருந்த மஹோபகாரகன்.

5. பஜத் அம்ருதரஸம் = "என் கடற்படாவமுதே" என்றபடி அடியவர்க்கு விலக்ஷணமானதோர் அம்ருதமாயிருப்பவன்.

6. பக்தசித்தைகபோக்யம் = "தீர்ந்தார் தம்மனத்துப் பிரியாது" என்றபடி அடியவர்களது உள்ளத்தைவிட்டுப் பிரியாதிருந்து அவர்கட்குப் பரம போக்யனுயிருப்பவன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



7. ஸர்வாக்ஷப்ரீணநார்ஹம் = "முன்னல்யாழ்பயில்" என்கிற பாசுரத்திற் சொல்லுகிறபடியே ஸகலமான இந்திரியங்களையும் த்ருப்தி செய்விப்பதற்கு உரியவன். (அக்ஷமென்று இந்திரியத்திற்குப் பெயர்.)

8. ஸபதி பஹுபலஸ்நேஹம் = "குறிக்கொள் ஞானங்களால்" என்கிற பாசுரத்திற் சொல்லுகிறபடியே நெடுங்காலம் நின்று செய்யவேண்டிய தபஸ்ஸு த்யானம் ஸமாதி இவற்றின் பயனான பக்தியைத் தனக்கன்பரிடத்திலே சடக்கென உண்டாக்குமவன்.

9. ஆஸ்வாத்யசீலம் = "பரமன் பவித்திரன்சீர் - படிந்துகுடைந்தாடி அடியேன் வாய்மடுத்துப் பருகிக்களித்தேன்" என்றபடி மிகவும் போக்யமாக அநுபவிக்கக்கூடிய திருக்கல்யாணகுணங்களை யுடையவன்.

10. ஸப்யைஸ் ஸாத்யைஸ்ஸமேதம் = "மாயப்பிரானடியார்கள் குழாங்களை" என்றபடி நித்ய முக்தர்களோடே ஒரு ஸபையாகக் கூடியிருப்பவன். — ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை மூன்றாந் திருவாய்மொழியில் பரமபோக்யதையே வடிவுடையவனாக அநுபவித்தார் என்றதாயிற்று. ... ... (*)

தூப்புல்பிள்ளை தூமொழிவாழி.

---

ஸ்ரீ:.

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஊனமறவேவந்து உள்கலந்த மாலினிமை
யானது, அனுபவித்தற்காந்துணையா — வானில்
அடியார் குழாங்கூட ஆசையுற்ற மாறன்
அடியாருடன் நெஞ்சே யாடு.

### பதவுரை.

| | |
|---|---|
| நெஞ்சே | மனமே !; |
| ஊனம் அற வந்து | குறையற வந்து |
| உள் கலந்த | அந்தரங்கமாகக் கலந்த |
| மால் | ஸர்வேச்வரனுடைய |
| இனிமை ஆனது | கலவியின்பத்தை |
| அனுபவித்தற்கு | அனுபவிப்பதற்கு |
| ஆம் துணை ஆ | அநுகூலமான ஸஹவாஸம் அபேக்ஷிதமாக, |
| வானில் | பரமபதத்திலுள்ள |
| அடியார் | அடியவர்களான நித்ய முக்தர்களினுடைய |
| குழாம் | கோஷ்டியிலே |
| கூட | அந்வயிக்க |
| ஆசை உற்ற | குதூஹலங்கொண்ட |
| மாறன் | நம்மாழ்வாருடைய |
| அடியாருடன் | பக்தர்களோடே கூடி |
| ஆடு | அநுபவிக்கப்பார். |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * — இத் திருவாய்மொழியில், ஆழ்வார் தம்மோடே ஏகதத்துவமென்னும்படி எம்பெருமான் ஸம்ச்லேஷிக்க, அதனால் பரமானந்தம் பொலியநின்ற ஆழ்வார் அந்த எம்பெருமானது பரம போக்யதையைத் தனியே அநுபவித்து த்ருப்திபெறமாட்டாமல் உசாத்துணைவேண்டிப் பரமபதத்தில் நித்ய முக்தர்களினுடைய திரளோடே அந்வயிக்கப் பெறவேணுமென்று ஆசைகொண்டார்; அன்னவரது பக்தர்களுடனே நெஞ்சே! நீ கூடிக் களிப்பாயாக — என்றுராயிற்று. ... ... ... ... ... (கக)

ஜீயர் திருவடிகளே சரணம்.



## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

[illegible]
[illegible] |
[illegible]
[illegible] ||

(கருத்து.) நம்மாழ்வாரானவர், செந்தாமரைக் கண்ணனாகிய எம்பெருமானுடைய ஸகல ரஸமயமான சேர்த்தியாகிற இன்பவமுதக்கடலிலே ஆழமூழ்கி, அப்படிப்பட்ட ஆனந்தாநுபவத்திற்கு நிலவர்களான நித்யமுக்தர்களோடே எனக்குச் சேர்த்தி எப்போது நேரிடுமென்று மூன்றாந் திருவாய்மொழியில் பாரித்தார்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



இரண்டாம்பத்து
மூன்றாந் திருவாய்மொழி முற்றிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து — நான்காந் திருவாய்மொழி,

## ஆடியாடி.

---

# அவதாரிகை.

கீழ்த் திருவாய்மொழியில் "பரமன் பவித்திரன் சீர் — அடியேன் வாய் மடுத்துப் பருகிக்களித்தேனே" என்று ஆழ்வார்தாம் பரமானந்தமடைந்ததாக அருளிச்செய்து, அந்த குணாநுபவம் பாகவதர்களோடேகூடிப் பெரிய கோஷ்டியாக இருந்து செய்யவேண்டியதாகையாலே அப்படிப்பட்ட அதிகாரிகள் இந்நிலத்தில் விசேஷமாகக் கிடையாமையாலே திருநாட்டிலே நித்யஸூரிகளின் திரளிலே சென்று புகுந்து அநுபவிக்கவேணுமென்று பாரித்து அந்தப் பாரிப்பைக் களிப்புங் கவர்வுமற்று என்ற பாசுரத்திலே காட்டினார்.

நினைத்தபோதே அந்த நித்யஸூரிகளின் திரளிலேபோய்ச்சேர்ந்து அநுபவிக்கப்பெறுமையினாலே மிகவும் வருத்தமடைந்தார். அந்த வருத்தத்தைத் தம்முடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானுக்கு அறிவிக்கிற வகையாக இத்திருவாய்மொழியை அருளிச்செய்கிறார்.

ஆழ்வார் இப்போது தாமான தன்மையையிழந்த நாயகிஸமாதியிலே நிற்கிறார். பராங்குச நாயகியான இவளுடைய நிலைமையைத் தாய்மார் முதலான அன்பர்கள் பேசுகிற பேச்சாக இத்திருவாய்மொழி அமைந்திருக்கின்றது.

நாயகிஸமாதியாலே அருளிச்செய்த திருவாய்மொழிகள் கீழே இரண்டு சென்றன — அஞ்சிறையமடநாராய் என்பதும் வாயுந்திரையுகளும் என்பதும். அவையிரண்டும் நாயகிதானே பேசினபேச்சாக இருக்கின்றன. அஞ்சிறைய மடநாராயில் தானே தூதுவிட்டாள்; வாயுந்திரையுகளில்—கண்ணுற்கண்ட பொருள்களெல்லாம் எம்பெருமானைப் பெறாமையினாலே நோவுபடுகின்றனவாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தான் நோவுபட்டாள். இத்திருவாய்மொழியிலோவென்னில் அங்ஙனம் தன் வாயினால் பேசமாட்டாதபடி வேற்றுவாயாலே பேசக்காண்கையாலே ஆற்றாமை கரைபுரண்டமை விளங்குகின்றது.

'ஸ்ரீராமக்ருஷ்ணாதி அவதாரங்களைப்பண்ணி எல்லாருடைய ஆர்த்தியையும் போக்குவதையே இயல்வாகவுடையீராயிருந்த நீர் உம்மிடத்திலே பெரும் பித்துக்கொண்டிருக்கின்ற இப்பெண்பிள்ளை இப்படி நோவுபடுமாறு பார்த்திருத்தல் தகுதியோ? இவள் திறத்திலே நீர் செய்ய நினைத்திருப்பது என்ன?' என்று எம்பெருமானை நோக்கித் தாய் கேட்கிற பாசுரமாக இத்திருவாய்மொழியுள்ளது. தாய்ப்பேச்சாக இருந்தாலும் பேசுகிறவர் ஆழ்வாரேயன்றோ; அவர்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஏன் இப்படிப்பேசவேண்டும்? என்று கேட்கலாகாது. வேணுமென்று ஆழ்வார் இங்ஙனே பேசுகின்றாரல்லர். அவருடைய அளவுகடந்த ஆற்றாமை உள்ளிருந்து வெளியே பொசியும்போது இவ்வகையான பாசுரங்களாக வடிவு கொண்டதத்தனை. காவிரியாறு பெருவெள்ளமாகப் பெருகி வரும்போது வெள்ளத்தின் மிகுதியினால் இடையிடையே உடைந்து வேறு சில வாய்க்கால் வழியாகவும் பெருகுவதுண்டு; அவையும் திருக்காவேரித் தீர்த்தமாகவேயிருக்கச்செய்தேயும் முடிகொண்டான் முதலான வேறு சில பெயர்களைப்பெற்று வழங்கா நிற்கக்காண்கிறோம். அதுபோலவே எல்லாம் ஆழ்வார் பாசுரமாகவேயிருக்கச்செய்தேயும் தாய்பாசுரம், தோழிபாசுரம் என்னும் வேற்றுமைகள் விளைகின்றன.

நாயகிஸமாதியாலே பேசின [மேற்காட்டிய] இரண்டு திருவாய்மொழிகளைப்போல அல்லாமல் இத்திருவாய்மொழி வேற்றுவாயாலே பேசுவதாக விலக்ஷணமாய் அமைந்தபடியாலே ஆற்றாமையிலும் வாசிகாணத்தக்கதாகும். * அஞ்சிறைய மடநாராய் பேசும்போது இருந்த ஆர்த்தி எப்படிப்பட்டது? வாயுந்திரையுகளும் பேசும்போது இருந்த ஆர்த்தி எப்படிப்பட்டது? இப்போது இத்திருவாய்மொழி பேசுகையிலுள்ள ஆர்த்தி எப்படிப்பட்டது? என்று ஆராய்வோம்.

ஒருவன் ஒருநாள் ஒருவெள்ளிக்கட்டியை இழந்துவிடுகிறான்; அப்போது ஒரு ஆர்த்தியுணடு: அவனே மற்றொருநாள் ஒரு பொன்கட்டியை இழந்துவிடுகிறான்; அப்போது உண்டாகிற ஆர்த்தி முன்னிலும் விஞ்சியதாகும். அவன்றானே மற்றொருநாள் ஒரு சிறந்த ரத்னஹாரத்தை இழந்துவிடுவானாயின் அப்போது உண்டாகிற ஆர்த்தி அறவிஞ்சியதாயிருக்கும்: இழக்கப்படுகிற பொருளுக்குத் தக்கவாறு ஆர்த்தியின தன்மை இருக்குமென்று இதனால் தேறுகின்றது இவ்வகையாலே ஆழ்வார் திறத்துப்பார்க்கும்போது அஞ்சிறைய மடநாராயில ஓடின ஆர்த்தயிற்காட்டிலும் வாயுந்திரையுகளில் ஆர்த்தி கனத்ததென்றும் அதிற்காட்டிலும் இப்போதைய ஆர்த்தி மிகக கனத்ததென்றும் நிலையிடலாகும். இதற்குறுப்பாக, ஒவ்வொன்றிலும் (முன்னே) ஆழ்வார் ஆசைப்பட்ட பொருள் என்ன? என்று பார்த்து அவற்றின் வாசிகளை அறுதியிடவேணும். * அஞ்சிறையமடநாரைக்கு முன்னே "பெருநிலங்கடந்த நல்லடிப்போது அயர்ப்பிலன லற்றுவன் தழுவுவன் வணங்குவனமர்ந்தே" என்று உலகளந்த சேவடியைத் தழுவியநுபவிக்க ஆசைப்பட்டமை காண்கையாலே அங்கு அது பெறாமையாலுண்டான வருத்தம் என்று தெரிகின்றது. * வாயுந்திரையுகளுக்குமுன்னே "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற" என்று அர்ச்சாவதாரத்திலே அநுபவிக்க ஆசைப்பட்டமை காண்கையாலே அங்கு அது பெறாமையாலுண்டான வருத்தம் என்று தெரிகின்றது. விபவாவதாரத்திற்காட்டிலும் அர்ச்சாவதாரம் சீரியதாகையாலே அவ்விடத்து அநுபவம் பெறாமையினாலுண்டான வருத்தமும் மேற்பட்டதாகவேயிருக்கும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இனி, இத்திருவாய்மொழிக்கு முன் ஆழ்வார் ஆசைப்பட்டது என்ன? என்று பார்ப்போம். "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவது என்றுகொலோ" என்கிற பாசுரமிருக்கையாலே பாகவதகோஷ்டியோடே கூடிக்களிக்கும் பேற்றை ஆசைப்பட்டாரென்று விளங்குகிறது. கீழே இவர் ஆசைப்பட்டனவாகக் காட்டப்பட்ட இரண்டு அபேக்ஷைகளுக்கு மிகவும் மேற்பட்டதன்றோ இது. விபவாவதார அநுபவ அபேக்ஷையிற்காட்டிலும் சிறந்தது அர்ச்சாவதாராநுபவ அபேக்ஷை; அதிற்காட்டிலும் மிகச்சிறந்தது பாகவதகோஷ்டியிலே கூடியநுபவிக்க அபேக்ஷிப்பது. ஆகவே இங்ஙனம் மிகச்சிறந்தான அபேக்ஷை கைகூடப்பெறாமையினாலுண்டான ஆற்றாமையும் இதற்குத்தக்கவாறு கனத்திருக்குமன்றோ; அப்படிப்பட்ட ஆற்றாமை பேசுவிக்கிற திருவாய்மொழியாயிற்று இது.

பாகவதர்களோடே கூடிக்குலாவி அநுபவித்தல் அபேக்ஷிதமாகி அது கிடைக்கப்பெறாமையிலுண்டான வருத்தத்தினால் பேசுகிற திருவாய்மொழி இது வென்னில், அவர்களைச் சொல்லிக்கூப்பிடவேண்டியதன்றோ ப்ராப்தம்; அப்படியில்லையே; பாசுரந்தோறும் அவனைச்சொல்லிக் கூப்பிடுகிறபடியாகவன்றோ இருக்கிறது; இது வென்? என்னில்; எங்கேனுமொரு காட்டிலே ரத்னங்கள் பறியுண்டாலும் நாட்டிலே அரசன் வாசலிலே அவன்பேரைச்சொல்லி முறையிடுவதன்றோவுள்ளது. பாகவத ஸஹவாஸத்திற்கும் வடுகன் அவனுகையாலே அவனைச்சொல்லிக் கூப்பிடுதல்கூடும். .... .... (*)

ஆடியாடி அகங்கரைந்து * இசை
பாடிப்பாடிக்கண்ணீர்மல்கி * எங்கும்
நாடிநாடி நரசிங்காவென்று *
வாடிவாடும் இவ்வாணுதலே. (க)

| | | | |
|---|---|---|---|
| இவ்வாள் நுதல் | ஒளிபொருந்திய நெற்றியையுடையளான இப் பராங்குச நாயகி | எங்கும் | எவ்விடத்திலும் |
| ஆடி ஆடி | பலகாலும் ஆடி | நாடி நாடி | அவன் வரவைப்பலகாலும் ஆராய்ந்து பார்த்து |
| அகம் கரைந்து | மனமுருகி | நரசிங்கா என்று | நரசிங்கமூர்த்தியே! என்று கதறி |
| இசை பாடி பாடி | பகவத் கீர்த்தனங்களைப் பலகாலும்பாடி | வாடி வாடும் | (அவன் வாராமை யாலே) மிகவும் வாடுகின்றாள். |
| கண் நீர் மல்கி | கண்களில் நீர் நிரம்பப் பெற்று | | |

* * * — [ஆடியாடி.] ப்ரஹ்லாதாழ்வான் அபேக்ஷித்த ஸமயத்திலே நரசிங்கமாய்வந்து தோன்றி உதவியருளின பெருமான் அந்தோ! எனக்கு உதவுகின்றிலனே யென்று பெண்பிள்ளை வருந்துவதாகத் திருத்தாய் சொல்லுகிறாள். ஆடியாடி யென்றது பெண்பிள்ளையின் சேஷ்டைகளைச் சொன்னபடி. * எம்மானைச் சொல்லிப்பாடி யெழுந்தும் பறந்தும் துள்ளுகிற சேஷ்டைகள் உண்டே; அவற்றைச் சொன்னபடி. நெஞ்சு நீர்ப்பண்டமாக உருகினபடி சொல்லுகிறது அகங்கரைந்து என்று. அப்படி நெஞ்சு நீர்ப்பண்டமாக உருகாநிற்கச் செய்தேயும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆற்றாமையாலே கூப்பிடுகிற கூப்பீடு அழகியதொரு இசையாகத் தலைக்கட்டி யிருக்கையாலே இசைபாடிப்பாடி என்றது.

ஆற்றாமையாலே துடித்த துடிப்பு ஆடியாடி எனப்பட்டது; அவ்வாற்றாமை யோடேயே கூப்பிட்ட கூப்பீடு இசைபாடிப்பாடி எனப்பட்டது. "அகங் கரைந்து" என்று சொன்னபடி உருகின மனத்தத்துவமானது இசையாய் வழிந்ததுபோக சேஷித்துநின்ற அம்சம் கண்ணீராய் வழிந்தோடுகையாலே கண்ணீர் மல்கி எனப்பட்டது. அசோகவனத்தில் சிம்சுபா வ்ருக்ஷத்தில் நின்றும் கீழே இறங்கிப் பிராட்டியைக்கண்ட திருவடி "கிமர்த்தம் தவ நேத்ராப்யாம் வாரி ஸ்ரவதி சோகஜம் ? = கிமர்த்தம் தவ நேத்ராப்யாம் வாரி ஸ்ரவதி சோகஜம் ?" [ஏதுக்கு உம்முடைய திருக்கண்களினின்று சோகக்கண்ணீர் பெருகுகின்றது ?] என்று கேட்டாப்போலே கேட்கவேண்டும்படி கண்ணீர் பெருகா நின்றதாயிற்று.

எங்கும் நாடி நாடி = திக்குக்கள்தோறும் கண்களைச் சுழலவிட்டுப் பார்த்த படியே யிருக்கிறாளாயிற்று. எம்பெருமான் ஆபத்திலே வந்து உதவத் தவற மாட்டானாகையாலே திடீரென்ற ஓடிவந்தே தீருவன் என்று நிச்சயித்துச் சுற்றிலும் பார்த்தபடியே யிருக்கிறாள். "எங்கும் நாடி நாடி" என்கிறவிதனை பட்டர் உபந்யஸிக்கும்போது 'பராங்குசநாயகி தன் சேலையையும் உதறியுதறிப் பார்க்கிறாள் காணும்' என்று அருளிச்செய்வராம். கீழே ஆழ்வார் தாமே "கடல் மலிமாயப்பெருமான் கண்ணனென்னொக்கலையானே" என்றருளிச்செய் திருக்கையாலே அதனை யடியொற்றிய ரஸோக்தியாமிது.

நரசிங்காவென்று வாடிவாடும் = ப்ரஹ்லாதாழ்வானுக்குத் தான் உதவ வேணும், மற்றையோர்க்கு உதவலாகாது என்று ஏதேனும் ஸங்கல்பமுண்டோ வென்று சொல்லி வாடுகின்றாள். அவன் எனக்கு வந்து உதவவேணுமென்று திருவுள்ளங்கொண்டால் ஒரு தூணிலோ துரும்பிலோ தோன்றியும் உதவலாமே; அவனுக்கு அசக்யமான தொன்றில்லையே ! என்று சொல்லி வாடுகின்றாளென்னவுமாம்.

வாடிவாடும் என்கையாலே, முடியும்படியான நிலைமை நேர்ந்தவளவிலும் நப்பாசையினால் உயிரை ஒருவாறு தரித்துவைத்துக்கொண்டிருக்கின்றமை தோற்றுவிக்கப்பட்டது. "ஏஷ ஹ்யேவாநந்தயாதி" என்று வேதமோதினபடியே, எம்பெருமானருள் இவளுக்குக் கிடைத்த தீரு மென்பது திருமுகமண்டலத்தில் நிழலிட்டுத் தோற்றுகிற தென்கைக்காக இவ் வாணுதல் எனப்பட்டது.

வாணுதல் — அன்மொழித்தொகை. .... ... .... (க)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வாணுதலிம்மடவரல் * உம்மைக்
காணுமாசையுள்நைகின்றாள் * விறல்
வாணனாயிரம் தோள்துணித்தீர் ! * உம்மைக்
காண நீரிரக்கமிலீரே. (உ)

| | | | |
|---|---|---|---|
| வாள் நுதல் | ஒளிமிக்க நெற்றியை யுடைய | விறல் | வலிமையையுடைய |
| இ மடவரல் | (பராங்குசநாயகி யென்னும்) இம்மடந்தை | வாணன் | பாணாஸுரனுடைய |
| உம்மை | (அழகிற்சிறந்த) உம்மை | ஆயிரம் தோள் | ஆயிரம் புஜங்களையும் |
| காணும் ஆசையுள் | காணவேணுமென்ற ஆசையிலகப்பட்டு | துணித்தீர் | அறுத்தொழித்தவரே ! |
| நைகின்றாள் | சிதிலையாகின்றாள் ; | உம்மை காண | (இவள்) உம்மைக்காணுமாறு |
| | | நீர் இரக்கம் இலீர் | நீர் தயை செய்யாமலிருக்கின்றீர். |

* * * — [வாணுதல்.] வாணனுடைய ஆயிரந்தோள்களையுந் துணித்து உஷைக்கும் அநிருத்தாழ்வானுக்கும் அத்தனைகாரியஞ் செய்தருளின நீர் இப்பெண்பிள்ளை திறத்தில் இரங்காதிருப்பது என்னேவென்கிறாள்.

மீண்டும் வாணுதல் என்றது — இவளுடைய நெற்றியழகைக் கண்டால் ஒருநொடிப்பொழுதாகிலும் இவளைவிட்டுப் பிரிந்திருக்கலாம்படி யிருக்கிறதோ? பெற்ற தாயான எனக்கே ஆகர்ஷகமாயிருக்கின்ற இவ்வவயவ சோபை உனக்கு அநாதரவிஷயமானது எங்ஙனேயோ என்று சொல்லுகிறபடி.

மடவரல்—மடம் என்னும் குணத்தின் வருகையையுடையவள் என்றபடி. நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்ற நான்கு குணங்கள் பெண்டிர்க்கு இன்றியமையாதவை. இவற்றுள் ஒன்றைச் சொல்லுவது மற்றவற்றிற்கும் உபலக்ஷணமாகும். மடம் என்னுங் குணத்தைப் பலபடியாக விவரிப்பதுண்டு. இங்கு, 'பிரிந்து கலக்கப்பொறாத ஸௌகுமார்யமே மடம்' என்று ஆசார்யர்களின் திருவுள்ளம்.

உம்மை என்றது மிக்க கருத்தோடு கூடியது. இவளை நீர் மறந்தாலும் உம்மை நீர் மறக்கலாமோ? உம்முடைய அழகு உமக்குத் தெரியாதோ? நம்மைப் பிரிந்தவர்கள் பிழையார்கள் என்று நீர் அறியமாட்டீரோ? என்கை.

உம்மைக்காணுமாசையுள் நைகின்றாள் — நீர் இவளைக்காண ஆசைப்பட வேண்டியது ப்ராப்தமாயிருக்க விபரீதமானபடி என்னே ! உடைமையைக்காண உடையவனன்றோ ஆசைப்படவேண்டும்; உடையவனைக்காண உடைமை ஆசைப்படும்படியாயிற்றே !. "வாடிவாடும்" என்று சொன்ன நிலைபோய் "நைகின்றாள்" என்னவேண்டும்படியான நிலைமை வந்துவிட்டதுகாண். 1. "உம்மைக்காணுமாசையென்னுங்கடலில்வீழ்ந்து இங்கு அயர்த்தோம்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தை யுட்கொண்டு நோக்கினால் ஆசை யென்பது ஒரு கடலாகச் சொல்லத்தக்கதாதலால், கடலிலே வீழ்ந்து துடியாநின்றாள் என்பதாகக் கொள்ளலாம்.

1. பெரிய திருமொழி. 4—9—3.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அவளுடைய ஆசை பெரிதாயிருக்கலாம்; இருந்தாலென்ன ? ப்ரதிபந்தகங்கள் கனத்திருக்கையாலே அவை நீங்கினாலன்றோ நாம் காட்சி தரலாம்—என்று எம்பெருமான் திருவுள்ளம்பற்றி யிருப்பதாகக்கொண்டு, வாணனுடைய தோள் வனத்தைத் துணித்த வுமக்கு இவளுடைய ப்ராப்தி ப்ரதிபந்தகங்களைத் தொலைப்பது ஒரு அருமையான காரியமோ என்பாள் விறல்வாணனாயிரந்தோள் துணித்தீர் என்கிறாள்.

வாணன் தோள்துணித்த வரலாறு:—

பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரன் ஒரு காலத்தில் சிவபிரானது நடனத்தைக்கண்டு அதற்குத் தனது இரண்டுகைகளால் மத்தளந்தட்ட, சிவபெருமான் அருள்கூர்ந்து அவனுக்கு ஆயிரங் கைகளையும் நெருப்பு மதிளையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகை வாசலிற் காவல்செய் திருத்தல் முதலிய வரங்களையுந் தந்தருளினன்; அந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒரு நாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய்த் தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு, அவனைப் பெறுதற்கு உபாயம் செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தஃபுரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளாலறிந்த அந்த பாணாஸுரன் தன் சேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாற் பொருது நாகாஸ்த்ரத்தினாற் கட்டிப் போட்டிருக்க த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரத மாமுனிவனால் இவ்வரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான், பெரிய திருவடியை நினைத்தருளி, உடனே வந்துநின்ற அக்கருடாழ்வானது தோளின்மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூட பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் ஸமீபத்திற் காவல் செய்து கொண்டிருந்த சிவபிரானது ப்ரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளு முள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ் செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தையுண்டாக்கி இதன் சக்தியினாலே அதனைத்துறத்திவிட்ட பின்பு, சிவபிரானது அநுசாரகையாற் பாணாசுரனது கோட்டையைச் சூழ்ந்துக்கொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் த்வம்ஸம்பண்ணி, பாணாஸுரனோடு போர்செய்யத்தொடங்க அவனுக்கு பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலிய பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒன்றுஞ் செய்யாமற்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படி செய்து, ஸுப்ரஹ்மண்ய னையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஓறுத்து ஓட்டி, பின்னர், அனேகமா யிரஞ் சூரியர்க்குச் சமனான ஸுதர்சநாழ்வானை யெடுத்துப் பிரயோகித்து அப் பாணனது ஆயிரந்தோள்களையும் தாரை தாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதாக விருக்கையில் பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்தாழ்வானுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, கண்ணபிரான் திருவுள்ளமுகந்து த்வாரகைக்கு மீண் டெழுந்தருளினன் என்ற வரலாறு அறியத்தக்கது. ... ... (௨)

இரக்கமனத்தோடு எரியணை *
அரக்குமெழுகுமொக்குமிவள் *
இரக்கமெழீர் இதற்கென்செய்கேன் ? *
அரக்கனிலங்கை செற்றீருக்கே. (௩)

| | | | |
|---|---|---|---|
| இரக்கம் மனத்தோடு | நெகிழ்ச்சியையுடைய நெஞ்சோடு (கூடிய) | அரக்கன் | இராவணனுடைய |
| இவள் | இப்பெண்பிள்ளை | இலங்கை | லங்காபுரியை |
| எரி அணை | நெருப்போடு ஸம்பந்தப் பட்ட | செற்றீருக்கு | (ஒரு பிராட்டிக்காக) த்வம்ஸம் செய்தருளின உமக்கு |
| அரக்கும் | (வன்மையான) அரக்கையும் | இதற்கு | இவள் திறத்திலுண்டான உபேக்ஷைக்கு |
| மெழுகும் | மெழுகையும் | | |
| ஒக்கும் | ஒத்திருக்கின்றாள் ; | | |
| இரக்கம் எழீர் | (இவள் திறத்து) இரக்கம் உண்டாகப்பெறுகின்றி லீர் ; | என் செய்கேன் | என்ன பரிஹாரம் பண்ணுவேன் ? |

* * * — [இரக்கமனத்தோடு.] பிரானே ! நீர் ஜனகராஜன் திருமகள் திறத்திலே செய்த செயல்களை வால்மீகிபோல்வார் ஸ்ரீராமாயணாதிகளாக எழுதிவைத்த மையாலன்றோ இப்பெண்பிள்ளை துடியாநின்றாள்; ஒரு பிராட்டிக்கு அத்தனை பாடுபட்டுக் காரியஞ்செய்தவர் நம்மை இப்படித் துடிக்கவிட்டிருக்கிறாரே, இது நீதியோ என்று கதறுநின்றாள் — என்கிறாள் திருத்தாய். இன்று இவளை இப்படிக் கைவிட நினைத்த நீர், அன்று ,* உண்ணுதுறங்காது ஒலிகடலையூட றுத்து அத்தனை செயல்கள் செய்தது எதுக்கு ? என்கிறாள் என்னவுமாம்.

இரக்கமே வடிவெடுத்தாற்போலிருக்கின்ற நெஞ்சையுடையவிவள் நெருப் போடே சேர்ந்த அரக்கும் மெழுகும்போலே உருகாநின்றாள். இவளுடைய நிலையோ இது; நீரோ இரக்கமென்பது சிறிதுமில்லாம லிருக்கிறீர். உம்மைப் போலே இவளும் இரக்கமற்றவளாக இருக்கும்படி செய்துவிட்டால் இடையில் நான் துடிக்கவேண்டியதில்லை; இவளோ இரக்கமனத்தள்; நீரோ இரக்கமெழீர்; இதற்கு என்ன செய்வேன் ? உம்முடைய இரக்கந்தவிர வேறொன்றால் போக்க்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கூடியதாக இல்லையே இவளுடைய வருத்தம். வேறு எதைச்செய்வேன் நான்? 'நாம் யாருக்கும் யாதொரு காரியமும் செய்வதில்லை' என்று நீர் சொல்லுவதற்கும் இடமில்லாதபடி ஒரு பிராட்டிக்காக இலங்கையைப் பாழ்படுத்திவைத்தீரே! பக்ஷபாதச் செயல் செய்யாதே கொள்ளும் — என்கிறாள்: ... (௩)

இலங்கைசெற்றவனே! என்னும் * பின்னும்
வலங்கொள்புள்ளுயர்த்தாய்! என்னும் * உள்ளம்
மலங்க வெவ்வுயிர்க்கும் * கண்ணீர்மிகக்
கலங்கிக் கைதொழும்நின்றிவளே. (௪)

| | | | |
|---|---|---|---|
| இவள் | இப்பராங்குசநாயகி, | உள்ளம் மலங்க | மனம் சுழலும்படி |
| இலங்கை செற்றவனே என்னும் | (என்னோடொத்த ஒருத்திக்காக) லங்காபுரியை யழித்தவனே! என்கிறாள்; | வெவ்வுயிர்க்கும் | உஷ்ணமாக மூச்சுவிடுகின்றாள்; |
| | | கண் நீர் | கண்ணீரானது |
| | | மிக | அதிகமாக |
| பின்னும் | அதற்குமேலும் | கலங்கி | (அதனால்) அறிவுகலங்கப்பெற்று |
| வலம் கொள் புள் உயர்த்தாய் என்னும் | வலிமைமிக்க கருடனைக் கொடியாகக் கொண்டவனே! என்கிறாள்; | நின்று | ஸ்தம்பித்துநின்று |
| | | கை தொழும் | அஞ்ஜலிபண்ணுகின்றாள். |

* * * — [இலங்கை.] மகளே! பதறாதே; எம்பெருமான் ப்ரணயிநிகளுக்குக் காரியம் செய்வது தவறமாட்டார்; ஜநகராஜன் திருமகளுக்காகக் காரியஞ் செய்தருளினரென்பது வாஸ்தவமே. அப்பிராட்டி எத்தனை மாதம் தனிச்சிறையிருந்து துவண்டாள் தெரியுமோ? பத்துமாதம் பொறுத்தன்றோ அவளுக்கும் காட்சிதந்தது; ப்ராப்திகாலம் வரவேண்டாவோ? அவளுக்குப்போலே உனக்கும் ஒருநாளிலே காட்சிதரத் தடையிராது; "ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்தந꞉ | மாம் நயேத் யதி காகுத்ஸ்த꞉ தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத் = சரைஸ் து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்த்தந꞉, மாம் நயேத் யதி காகுத்ஸ்த꞉ தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்." என்று அப்பிராட்டி ஆறியிருந்ததுபோலவே நீயும் ஆறியிருப்பதே தகுதி; அவன் இலங்கை செற்றவன் என்பதையே நீ சொல்லிக்கொண்டிரு — என்று நான் (என்மகளைத்) தேற்றினேன்; அவளும் அப்படியே "இலங்கை செற்றவனே!" என்றே சொல்லிக்கொண்டு ஒருவாறு தரித்திருந்தவள் மீண்டும் கதறத் தொடங்கிவிட்டாளென்கிறாள் திருத்தாய்.

இலங்கை செற்றவனே! என்னும் = என்னைப்போலே ஒரு பெண்பெண்டாட்டிக்கு உதவினவனல்லையோ நீ; அவனைப் பிரிந்து "நைவ தம்ஶாந் ந மஶகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந் | ராகவோபநயேத் காத்ராத் த்வத்கதேநாந்தராத்மநா = நைவ தம்சாந் ந மசகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந், ராகவோபநயேத் காத்ராத் த்வத்கதேநாந்தராத்மநா." என்னும்படியிருந்தவனல்லையோ நீ; "ஹா ராம ஹா ராமாநுஜ க்வாஸி ஹா ஶுபாங்கி = மதுராலாபா கிமாஹ மம பாமிநீ?" என்று ஒரு குரங்கை உட்காரவைத்துக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கொண்டு வாய்வெருவினவனல்லையோ நீ என்று ஸ்ரீராமகுணங்களைப் பலபடியாக எடுத்துரையாநின்றாள்.

பின்னும் வலங்கொள் புள்ளுயர்த்தாயென்னும் = நினைத்தபோதே அடியாரிருந்த விடத்தே கொண்டுவந்து சேர்க்கவல்ல பெரிய திருவடியை ஊர்தியாக வுடையவனல்லையோ நீ என்னாநின்றாள். கொண்டுவருகைக்கு ஸாமக்ரியுண்டாயிருக்கச்செய்தேயும் வரக்காணாமையாலே நெஞ்சு கலங்கி நெடுமூச்செறியாநின்றாள்; கண்ணீரைத் தாரைதாரையாகப் பெருகவிடா நின்றாள்; கலங்கினளாய்த் தொழுவதுஞ் செய்யாநின்றாள். இவள்படியோ இது; உன்படியோ உபேக்ஷை; என்செய்வேனென்றாளாயிற்று.

கலங்கிக் கைதொழும் என்றவிடத்து, "தேறும் கலங்கியென்றும் தேறியும் தேறாதும் ஸ்வரூபங்குலையாது" என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியும் அதன் வியாக்கியானமும் நோக்கத்தக்கன. .... ... .... (ச)

இவளிராப்பகல் வாய்வெரீஇ * தன
குவளையொண்கண்ணநீர்கொண்டாள் * வண்டு
திவளும் தண்ணந்துழாய்கொடீர் * என
தவளவண்ணர் தகவுகளே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| இவள் | இப் பெண்பிள்ளை | திவளும் | படிகின்ற |
| இரா பகல் | இரவும் பகலும் | தண் அம் துழாய் | குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையை |
| வாய் வெரீஇ | வாய்பிதற்றி | கொடீர் | தருகின்றீரில்லை; |
| தன | தன்னுடைய | தவளம் வண்ணர் | பரிசுத்தாத்மாவான தேவரீருடைய |
| குவளை ஒண் கண் | நெய்தல் மலர்போன்றழகிய கண்களில் | தகவுகள் | கிருபை முதலிய குணங்கள் |
| நீர் கொண்டாள் | நீரையுடையளானாள்; | என | என்னே!. |
| வண்டு | வண்டுகள் | | |

* * * — [இவளிராப்பகல்.] பெண்பிள்ளையின் தயநீயதசையைச் சொல்லி, இந்த நிலைமையிலும் நீர் இவள் திறத்து இரங்குகின்றிலீரே! உம்முடைய தயை எங்கே போயிற்று? என்கிறாள். இரவும் பகலும் இவள்விஷயமாக நீர் வாய்வெருவவேண்டியது போய் உம் விஷயமாக இவள் வாய்வெருவ வேண்டும்படியாயிற்றே! "அநித்ராஸ் ஸததம் ராமஸ் ஸுப்தோபி ச நரோத்தம:| ஸீதேதி மதுராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபுத்யதே = அநித்ராஸ் ஸததம் ராமஸ் ஸுப்தோபி ச நரோத்தம:, ஸீதேதி மதுராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபுத்யதே." என்று சொன்ன திருவடியின் வார்த்தையைக்கொண்டு அறியலாமே நீர் வாய்வெருவினபடி. அப்படிப்பட்ட வாய்வெருவுதல்கள் இப்போது இவள் பணியாயிற்றே!. அவ்வளவேயோ? ஆனந்தக் கண்ணநீர்பெருக வேண்டிய கண்கள் சோகக் கண்ணீர் பெருகநின்றனவே!. இவள் ஏதேனும் அதிகமாக ஆசைப்பட்டதுண்டோ? விரஹஜ்வரத்தாலே வாடின இவள் மார்விலுள்ள மாலையைவாங்கி, உம்முடைய மார்விலுள்ள செவ்விமாறாத மாலைக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கொடுத்தால் போதுமே; வண்டுபண்ணின தவமும் இவள் பண்ணவில்லைபோலும்; ஒரு வண்டாகப் பிறக்கப்பெற்றிலேனே யென்று துவளாநின்றாள்காணும்; இவள் அலமாப்புத்தீர இத்தனை திருத்துழாய் ப்ரஸாதமும் கொடுக்கின்றீரில்லையே.

என தவளவண்ணர்தகவுகளே! = என்ன என்பது என என்று தொகுத்தலாகவுள்ளது. 'தவல' என்னும் வடசொல் தவளமென்றுளது. சுத்த ஸ்வபாவரான உம்முடைய தயவு என்னே! என்கிறாள். உம்முடைய ஸ்வபாவம் நிஷ்கல்மஷமன்றோ; இப்படி இரக்கமற்றவராக நீர் இருக்கிற வழக்கமில்லையே; உம்முடைய இரக்கம் எங்கே போயிற்று? என்கிறாள்.

தவளவண்ணர் என்றதைப் பரிஹாஸோக்தியாகவைத்து 'உம்மைப்போலே நாலு சிஷ்டர்கள் இருந்துவிட்டால் பெண்கள் நன்றாகக் குடிவாழ்வர்கள்!' என்று பட்டர் பணிக்கும்படி.

கோவை:—எதிர்மறை முன்னிலைப்பன்மை வினைமுற்று. .... (௫)

தகவுடையவனே! என்னும் * பின்னும்
மிகவிரும்பும்பிரானேன்னும் * எனது
அகவுயிர்க்குஅமுதே! என்னும் * உள்ளம்
உகவுருகிநின்றுள்ளுளே. (௬)

| | | | |
|---|---|---|---|
| உள்ளம் | தன் நெஞ்சு | மிக விரும்பும் | மிகவும் குதூஹலங்கொள்ளாநின்றாள்; |
| உக | அழியுமாறு | பிரான் என்னும் | உபகாரகனே! என்று சொல்லுகின்றாள்; |
| உருகி | நீர்ப்பண்டமாகி | எனது அகம் உயிர்க்கு அமுதே என்னும் | 'எனது உள்ளுயிர்க்கு அம்ருதமே!' என்கின்றாள். |
| உள்ளுளே நின்று | தன்னில் தான்நின்று | | |
| தகவு உடையவனே என்னும் | தயவு குறைவற்றவனே என்கிறாள்; | | |
| பின்னும் | மேலும் | | |

* * * — [தகவுடையவனே,] கீழ்ப்பாட்டில் "என தவளவண்ணர் தகவுகளே" என்று எம்பெருமானுடைய தயவில் குறையிருப்பதாகத் தாய் சொன்னவார்த்தையைக் கேட்ட மகள் அந்த வார்த்தையைப் பொறாமல் 'என் கொழுநனுக்குத் தயவில்லையென்று சொல்லலாமோ? கடலில் நீர்வற்றிப்போயிற்று என்பாருமுண்டோ? நம்முடைய பாவமென்று நம்மை நொந்துகொள்ளலாமே யல்லது அவருக்குக் கருணையில்லையென்று வாய்திறக்கலாமோ?' என்று சொன்னாளாக அதை அநுவதிக்கிறாள் திருத்தாய்.

தகவு உடையவனேயென்னும் = ஏ என்பதை விளியாகவுங்கொள்ளலாம், [பிரிநிலையாகக் கொண்டு] ஸாவதாரணமாகவுங் கொள்ளலாம். அசோகவனத்திற் பிராட்டி "ஹ்யாதஃ ப்ராஜ்ஞஃ க்ருதஜ்ஞஸ்ச ஸாநுக்ரோஶஶ்ச ராகவஃ | ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோஶஃ = க்யாதஃ ப்ராஜ்ஞஃ க்ருதஜ்ஞச் ச ஸாநுக்ரோசச் ச ராகவஃ, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோசஃ" [தயவில்லாதவ

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ணுன்] என்று சொல்லி உடனே "ஶங்கே ஹா மத்பாக்யஸம்க்ஷயாத் = சங்கே மத்பாக்ய ஸம்க்ஷயாத்" என்ருள். பெருமாளுக்கு ஒருநாளும் தயவு இல்லாமற் போகாது; என்னுடைய தௌர்ப்பாக்யத்தினுல் இங்ஙனம் சங்கிக்கவேண்டிய தாகிறதத்தனை என்ருள். "மமைவ து³ஷ்க்ருதம் கிஞ்சித் மஹத³ஸ்தி ந ஸம்ஶய: = மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹதஸ்தி ந ஸம்சய:" என்றும் சொன்ளுள். இந்த வார்த்தையில் கிஞ்சித் என்றும் மஹத் என்றும் உள்ளது. 'கிஞ்சித்' என்ருல் சிறிது என்று பொருள்; 'மஹத்' என்ருல் பெரிது என்று பொருள். பிராட்டி தான் அசோகவனத்திற் கிடந்து துடிப்பதற்கு ஹேது சிறிதாயும் பெரிதாயுமுள்ள இரண்டு துஷ்க்ருதங்கள் என்று அறுதியிட்டாள். எது சிறிது? எது பெரிது? என்று ஆராயவேணும். காட்டுக்குப் புறப்படும்போது கூட வர வேண்டாவென்று மறுத்த பெருமாள் விஷயத்திலே "ராமஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்" என்று பதற்றமாகப் பேசினது சிறிதான துஷ்க்ருதம்; பெருமாள் மாயமான் பின்னே எழுந்தருளினபோது மாரீசனது கள்ளக் கூக்குரல் கேட்டு இளையபெருமாளைப் போகச்சொன்னபோது அவர் புறப்படாதே யிருக்க அவர் விஷயமாகக் கடுஞ்சொற்கள் சொன்னது பெரிதான துஷ்க்ருதம்; பகவதபசாரத்திற் காட்டிலும் பாகவதாபசாரம் மிகக்கொடிதன்றே. ஆக, பகவதபசார பாகவதாபசாரங்களின் பலனுக நான் கஷ்டங்களை அநுபவிக்கிறேனே யல்லது பெருமாளுடைய கருணையிலே ஒரு குறை கூறமுடியுமோ என்று பிராட்டி சொன்னாப்போலவே இப் பராங்குசநாயகியும் அநுஸந்தித்தமை முதலடியிலே நுட்பமாக விளங்கும்.

பின்னும் மிகவிரும்பும் = தன்னுடைய பாபமே வலிதென்று நினைக்கச் செய்தேயும் 'ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந" என்று சொல்லுகிற அவன்படியை நினைத்து, நம்முடைய பாவங்களை ஒரு பொருளாக மதியாதே நிர்ஹேதுகமாக ஓடிவந்து விஷயீகரிக்குமவனல்லனே என்று கொண்டு ஆசையைப் பெருக்கா நின்றுளென்றபடி. அவன் தயாளுதான் என்று அறுதியிட்டுவிட்டால் விருப்பம் வளரச்சொல்லவேண்டாவே.

பிரான் என்னும் = அடியார்க்கு உபகாரஞ்செய்வதையே தொழிலாக வுடையவனல்லனே வென்கிருள். 'மிகவிரும்பும் பிரான்' என்று ஒரே வாக்கிய மாக்கி, விரும்புமென்பதைப் பிரானுக்கு அடைமொழியாக்கி உரைப்பர் வாதி கேஸரிஸ்வாமி.

எனது அகவுயிர்க்கு அமுதே! என்னும் = என்னுடைய வுயிரை அழியாமல் நோக்குகின்ற அம்ருதமன்றே அவன் என்று சொல்லுகின்ருள்.

உள்ளம் உக உருகிநின்று என்று ஏதோ சொல்ல ஆரம்பித்த திருத்தாய் அதைச் சொல்லமாட்டாதே உள்ளுளே என்று முடிக்கிருள்; வாசாமகோசரம் என்றபடி. 'உள்ளம் உள்ளுளே மிகவுருகிநின்று' என்று மூன்றும அந்வயித்து முதல் மூன்றடிகளையும் பின்னை கூட்டி யுரைப்பதுமுண்டு. இப்பாட்டிற்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சொன்ன வார்த்தைகளெல்லாம் நெஞ்சுருகிச் சொன்ன வார்த்தைகளென்ற வாறு. ... .... .... ... ... .... ... .... (௬)

உள்ளுளாவி உலர்ந்துலர்ந்து * என
வள்ளலே! கண்ணனே! என்னும் * பின்னும்
வெள்ளநீர்க்கிடந்தாயென்னும் * என
கள்வி தான்பட்ட வஞ்சனையே (௭)

| | | | |
|---|---|---|---|
| என கள்வி | என்னிடத்திலுங்கூட உண்மையை மறைப்பவளான இப்பெண்பிள்ளை | என வள்ளலே | 'என்னுடைய பெருங்கொடையாளனே! |
| | | கண்ணனே | க்ருஷ்ணனே!' |
| தான் பட்ட | தான் அகப்படும்படி அவன் செய்த | என்னும் | என்கின்றாள்; |
| | | பின்னும் | அதற்குமேலே |
| வஞ்சனை | வஞ்சகம் (பலித்தபடி என்னென்னில்) | வெள்ளம் நீர் | (திருப்பாற்) கடலிலே |
| உள்ளுள் ஆவி | உள்ளுயிரானது | கிடந்தாய் | கண்வளர்ந்தருளினவனே! |
| உலர்ந்து உலர்ந்து | மிகவுமுலர்ந்து | என்னும் | என்கின்றாள். |

* * * — [உள்ளுளாவி.] தன் மகளுடைய வருத்தங்களையும், அவன் தன் குணங்களாலே இவளை வஞ்சித்தபடியையும் தாய் சொல்லுகின்றாள். [உள்ளுளாவி உலர்ந்துலர்ந்து] பகவத்கீதையிலே ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிச் சொல்லும்போது "அச்சேத்யோயமதாஹ்யோயம் அக்லேத்யோ(அ)சோஷ்ய ஏவ ச = அச்சேத்யோயமதாஹ்யோயம் அக்லேத்யஃ அசோஷ்ய ஏவ ச," என்று சொல்லப்பட்டுளது. அசோஷ்யஃ — உலர்த்தமுடியாதது — என்று சொன்னதும் பழுதாயிற்று; ஆர்த்ரமான மநஸ்ஸுக்கு தாரகமான ஆத்மா சருகாயிற்று. அந்த நிலைமையிலும் விடாயர் கற்பூரநிகரம் வாயிலிடுமாபோலே எனவள்ளலே! கண்ணனே! என்கிறாள் — அவனுடைய ஔதார்யத்தையும் ஸௌலப்யத்தையுஞ் சொல்லிக் கத்துகிறாளென்க.

பின்னும் வெள்ளநீர்க் கிடந்தாய் என்னும் = ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் "அந்தகாரே(அ)திதீவ்ரே ச நாரஸிம்ஹம் அநுஸ்மரேத் | தத்யகிலதுஃகாநி தாபார்த்தோ ஜலசாயிநம் = அந்தகாரே அதிதீவ்ரே ச நாஸிம்ஹமநுஸ்மரேத், தத்யகிலதுஃகாநி தாபார்த்தோ ஜலசாயிநம்'' என்று சொல்லப்பட்டுளது. திணுங்கின இருளிலே நாஸிம்ஹ மூர்த்தியை நினைக்கவேணுமென்றும், தாபம் மிக்கிருக்குங்காலத்து க்ஷீரார்ணவசாயியான எம்பெருமானை நினைக்கவேணுமென்றும் சொல்லியிருக்கையாலே வெள்ளநீர்க்கிடந்த பெருமானைப் பேசாநின்றாள்.

என கள்வி தான்பட்ட வஞ்சனையே = தன்னுடைய நெஞ்சிலுள்ளது பிறரறியாதபடி மறைத்துக்கொண்டிருக்கு மியல்வுடைய இவள் இப்போது படும்பாடு என்னே! என்கிறாள். தன்னுடைய மருமங்களைப் பிறரறியாமல் மறைத்துக்கொள்பவளென்ற பொருளில் இங்குக் கள்வி எனப்பட்டது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வஞ்சனே=பிராட்டி திருவடியிடத்தில் "ஊர்த்⁴வம் மாஸாந்ந ஜீவிஷ்யே = ஊர்த்வம் மாஸாந்ந ஜீவிஷ்யே" [ஒரு மாதத்திற்குமேல் நான் பிழைத்திருக்க மாட்டேன்] என்று சொல்லியனுப்பினுள்; அதைக்கேட்ட பெருமாள் "நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம் = நஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்" [குவளையங் கண்ணியான பிராட்டியைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் தரித்திருக்க என்னால் முடியவில்லையே] என்ருர்; இங்கே அஸிதேக்ஷணாம் என்று அடைமொழி கொடுத்துச் சொன்னமையாலே பிராட்டியின் கண்ணழகிலே பெருமாள் தோற்றவர் என்பது பெறப்படும். ஆகவே அவர் தோற்கவேண்டியது ப்ராப்தமாயிருக்க இப்போது இவள் தோற்றிருப்பது ஏதோ வஞ்சனையாக நடந்தகாரியமே யன்றி ருஜுவாக நடந்தபடியன்று என்கிருள். இங்கே நம்பிள்ளை யீட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்:— § "அளவு படைக்குப் பெரும்படை தோற்பது வஞ்சநத்தாலேயிறே; பகலை இரவாக்கியும் ஆயுதமெடேனென்று எடுத்தும் செய்த செயல்போலே இவளை வஞ்சித்தீரித்தனை." என்பதாம். ... .... .... ... .... ... (எ)

வஞ்சனே ! என்னும் கைதொழும் * தன
நெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும் * விறல்
கஞ்சனை வஞ்சனைசெய்தீர் * உம்மைத்
தஞ்சமென்று இவள்பட்டனவே. (அ)

| | | | |
|---|---|---|---|
| வஞ்சனே என்னும் | எனக்குத் தெரியாமலே என்னை அடிமைப்படுத்திக்கொண்டவனே ! என்கிருள் ; | விறல் கஞ்சனை | மிடுக்கனுன கம்ஸனை |
| கை தொழும் | (அந்த நன்றிக்குத் தோற்றுக்) கைகூப்புகின்ருள் ; | வஞ்சனை செய்தீர் | கொன்ருெழித்த பெருமானே ! |
| தன நெஞ்சம் வேவ | தனது நெஞ்சு வேகும்படியாக | உம்மை | உம்மை |
| நெடிது உயிர்க்கும் | பெருமூச்செறிகின்ருள் ; | தஞ்சம் என்று | புகலாகப்பற்றி |
| | | இவள் பட்டனவே | இவள் பட்டபாடு என்னே !. |

* * * — [வஞ்சனேயேன்னும்.] உம்மை ஆச்ரயமாகப் பற்றியிருக்குமிவள் பிரதிகூலர் பட்டபாட்டைப் படுவது தகுதியோ? என்கிருள். கீழே "எனகள்விதான் பட்ட வஞ்சனையே" என்று தாய்சொன்ன வார்த்தையைக் கேட்டுப் பொருத மகள் அவனுடைய வஞ்சனையை நற்றமாகக் கொள்ளவேண்டியிருக்கக் குற்றமாகக் கொள்ளலாமோ என்ற கருத்தினுல் தன் வாயாலே வஞ்சனே ! என்றுசொல்லித் தொழுகின்ருளாம். என்னை மடிமாங்காயிட்டுப் பிடித்து வசப்படுத்திக்கொண்ட பிரானுயிற்றே என்று உபகாரஸ்ம்ருதிபண்ணி, அந்த உபகாரத்திற்குத் தோற்று அஞ்ஜலிபண்ணுகின்ருளென்க. முன்னமே உலர்ந்திருக்கிற

§ அல்பமான சேனையும் ஆயுதமுமுடையவனிடத்தில் பெருப்பெருத்த சேனைகளும் ஆயுதங்களுமுடையவன் தோற்ருனென்ருல் அந்த்தோல்வி வஞ்சகவழியினுலா யிருக்குமென்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நெஞ்சம் விரஹாக்நியாலே வேம்படி நெடுமூச்செறியாநின்ருள். மிடுக்கையுடைய கம்ஸன் நினைத்த நினைவு அவனோடே போம்படிபண்ணி அவனை முடித்தீர்; உம்மைத் தோற்பிக்க நினைத்தவர்களை நீர் தோற்பிக்கின்றவராயிருந்தீர்; பிரதிகூலர்களிடத்திலே வெற்றிபெறுவதும் அநுகூலர்களிடத்திலே தோல்விபெறுவதும் உமக்கு ப்ராப்தமாயிருக்க இரண்டிடத்திலும் வெற்றி உம்முடையதாகவேயிருக்கத்தகுமோ ? உம்மையே தஞ்சமாகப் பற்றினவிவள் இப்பாடு படலாமோ? என்கிருள்.

இவள்பட்டனவே = இவள் படும்பாடுகளைச் சொல்லப்புகுந்தால் ஒரு மஹாபாரதத்திற்காகும் போதும். ஸம்ஸாரிகளைப்போலே உண்டியே உடையே உகந்தோடித் திரியும்படியாக வைத்தீரல்லீர்; நித்யமுக்தர்களைப்போலே நித்யாநுபவம்பண்ண வைத்தீருமல்லீர்; எங்களைப்போலே “ தத்தஸ்ய ஸத்ருசம் பவேத் = தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்” என்று ஸ்வரூபாநுஸந்தானம்பண்ணி ஆறியிருக்கவைத்தீருமல்லீர்; கம்ஸனைப்போலே முடியச்செய்தீருமல்லீர்; என் வழிவாராதே உம்மையே தஞ்சமாகப்பற்றின விவளை எத்தனைபடுத்தவேணும்.!

பட்டபோது எழுபோதறியாள் * விரை
மட்டலர் தண்டுழாயென்னும் * சுடர்
வட்டவாய் நுதிநேமியீர் ! * நும
திட்டமென்கொல் இவ்வேழைக்கே. (கூ)

சுடர் — ஒளிபொருந்திய
வட்டம் வாய் — வட்டமான வாயையும்
நுதி — கூர்மையையுமுடைய
நேமியீர் — திருவாழியையுடையவரே! (இப்பெண்பிள்ளை)
பட்டபோது — ஸூர்யாஸ்தமன காலத்தையும்
எழு போது — ஸூர்யோதய காலத்தையும்
அறியாள் — அறிகின்ருளில்லை ;
விரை மட்டு அலர் — பரிமளமும் தேனும் பரவின
தண் துழாய் என்னும் — குளிர்ந்த திருத்துழாய் என்று வாய்வெருவுகின்ருள் ;
இ ஏழைக்கு — இப்படிப்பட்ட ஏழைத்திறத்திலே
நுமது இட்டம் என் கொல் — உம்முடைய இஷ்டம் என்ன? [நீர் என்ன செய்ய நினைத்திருக்கிறீர்?]

* * * — [பட்டபோது.] உம்மைப் பிரிந்ததுமுதல் இடைவிடாது நோவுபடுகின்ற இவ்வேழையின் விஷயத்திலே நீர் செய்ய நினைத்திருப்பது என்ன ? என்று எம்பெருமானைக் கேட்கிருள்.

பட்டபோது எழுபோது அறியாள் = ஸூர்யன் அஸ்தமிப்பது உதிப்பது யாதொன்றுமறியாள். “ நக்தம் த்யுதித ஆதித்யே நக்தம் அஸ்தமிதே ரவௌ = நக்தந்த்யுதித ஆதித்யே நக்தந்தி அஸ்தமிதே ரவௌ” என்று சொல்லுகிறபடியே ஸம்ஸாரிகள் ஸூர்யோதயகாலத்தையும் ஸூர்யாஸ்தமயகாலத்தையும் தெரிந்துகொண்டு களிக்கின்ருர்கள்; உதயமானவாறே யதேஷ்டமாகத் திரிந்து வேண்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



டிய பொருள்களை ஆர்ஜிக்கலாமென்று களிக்கிறார்கள்; அஸ்தமித்தவாறே ஆர்ஜித்த பொருள்களைக்கொண்டு யதேஷ்டமாக விஷயபோகங்கள் செய்யலாமென்று களிக்கிறார்கள்; இப்பெண்பிள்ளையோவென்னில் உதயாஸ்தமயங்களில் வ்யுத்பத்தியே யில்லாதவளா யிருக்கின்றாள். சைதந்யமற்றவளோவென்னில், அல்லள்; 'விரைமட்டலர்தண்டுழாய்' என்று ஓவாதே உரையாநின்றாள்; பரிமளமும் தேனும் நிறைந்த திருத்துழாய் விஷயமான வார்த்தையாகவே யிருக்கின்றாள். என்று திருத்தாயார் சொல்லக்கேட்ட எம்பெருமான் 'அவள்படி அதுவாகில் என்னை என்செய்யச் சொல்லுகிறாய்?' என்று உபேக்ஷை தோற்ற விருக்க, [சுடர்வட்டவாய் இத்யாதி.] சுடரையும் வட்டமான வாயையும் கூர்மையையுமுடைய திருவாழியை நீர் ஏந்திபிருப்பது எதற்காக? 1. "எப்போதுங் கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்" என்றன்றோ அடியார்கள் அநுஸந்தித்திருப்பது. 2 "வாதூஹுண தாக்ஷாயாம் விளூஷஸஹந்நிவ | ஸதா வஞாயம்யீம் ஸிஹூஸ ஸ ந: ஸ்ரீரங்கநாயக: = பாதுப்ராண தாக்ஷாயாம் விளம்பமஸஹந்நிவ, ஸதா பஞ்சாயுதீம் பிப்ரத் ஸ ந: ஸ்ரீரங்கநாயக:." என்றும் பேசிக்கொண்டிருப்பர்களே. அத்திருவாயுதத்தைக்கொண்டு அநுகூலரை வாழ்விக்கவும்வல்லீர், பிரதிகூலரை அழியச்செய்யவும்வல்லீர்; இவள் திறத்து நீர் செய்யநினைத்திருப்பது எதுவோ வென்கிறாள்.

இஷ்டம் என்னும் வடசொல் இட்டமென்று திரிந்து கிடக்கிறது. நுமதிட்டமென்கொல் என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி:— "ராவண ஹிரண்யாதிகளைப் போலே முடிக்க நினைக்கிறீரோ, நித்யஸூரிகளைப்போலே கையுந் திருவாழியுமான வழகை அநுபவிப்பிக்கிறீரோ, தன்னையும் மறந்து உம்மையும் மறந்து ஸம்ஸாரிகளைப்போலே உண்டுடுத்துத் திரியவைக்கிறீரோ, இவள் பேற்றில் நீர் நினைத்திருக்கிறதென் ?" என்பதாம்.

ஏழை என்னுஞ்சொல் அறிவில்லாமையைப்பற்றி வந்தது இங்கு. இச்சொல்லுக்கு இப்பொருள் எங்ஙனே கிடைக்குமென்னில், "நுண்ணுணர்வின்மை வறுமை அஃதுடைமை, பண்ணப்பணைத்த பெருஞ்செல்வம்" என்பவாதலால் கிடைக்குமென்க. ஸ்வஸ்வரூப யாதாத்மிய ஜ்ஞானத்தாலே ஆறியிருக்கமாட்டாதவள் என்று தாற்பரியம். ... ... .... ... (கூ)

ஏழைபேதை இராப்பகல் * தன
கேழில் ஒண்கண்ணநீர்கொண்டாள் * கிளர்
வாழ்வைவேவ இலங்கைசெற்றீர் * இவள்
மாழைநோக்கு ஒன்றும்வாட்டேன்மினே. (க௦)

| | | | |
|---|---|---|---|
| கிளர் | விஞ்சின | ஏழை பேதை | ஏழையும் பேதையுமான இவள் |
| வாழ்வை | (இராவணனது) செல்வம் | | |
| வேவ | நீறாகும்படி | இரா பகல் | இரவும் பகலும் |
| இலங்கை | லங்காபுரியை | | |
| செற்றீர் | அழித்தவரே ! | தன | தன்னுடைய |

1. பெரிய திருவந்தாதி. 87. 2. ஸ்ரீரங்கராஜஸ்தவம். 1—11.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| சேழ் இல் ஒண் கண்ண | ஒப்பற்ற அழகியகண்களில் | மாழை நோக்கு ஒன்றும் | இளநோக்கு ஒன்றையுமாவது |
| நீர் கொண்டாள் இவள் | நீரைக்கொண்டாள்; இவளுடைய | வாட்டேன்மின் | வாடச்செய்யாமல் தளிர்ப்பிக்கவேணும். |

* * * — [ஏழை பேதை.] இப்பெண்பிள்ளை திறத்திலே பெரும்பாலும் எல்லாம் ஒடுங்கிப்போயிற்று; இவளுடைய நோக்கு ஒன்றுதான் சேஷித்துக்கிடக்கிறது; அஃதொன்றுமாவது குலையாதபடி நீர் நோக்கிக்கொள்ளவேணுமென்று பிரார்த்திக்கின்றாள். ஏழை — ஸுலபமான வஸ்துக்களிற்போலே துர்லபமான வஸ்துக்களிலும் ஆசைவைக்குமவள் என்றபடி. பேதை — 'இது நமக்கு துர்லபம்' என்றறிந்தாலும் ஆசையைவிடமாட்டாத இளம்பருவமுடையவ ளென்கை. ஆக இப்படிப்பட்ட இவள் இரவும் பகலும் கண்ணும் கண்ணீருமாக இருக்கின்றாள். [தாமரையிலே முத்துப்பட்டாற்போலே இக் கண்ணும் கண்ணீருமாயிருக்கிற விருப்பைக் காட்டிலெறித்த நிலாவாக்காமல் நீர் ஓடிவந்து காணவேண்டாவோ? "ஆஹ்லாதஶீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவாந் | ஸதா பரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ் ஸர்வதேஹிபி: = ஆஹ்லாத ஶீத நேத்ராம்பு: புலகீக்ருத காத்ரவாந், ஸதா பரகுணாவிஷ்ட: த்ரஷ்டவ்யஸ் ஸர்வதேஹிபி:" என்றபடி கண்கொண்டு காணவேண்டிய இருப்பன்றோ இது. இந்த நிலைமை உண்டாவதற்கன்றோ நீர் க்ருஷி பண்ணிற்று; பண்ணின க்ருஷி பலித்தவளவிலே வந்து அநுபவியாதே உபேக்ஷையாயிருக்கலாமோ? என்பது உள்ளுறை.]

அவளிடம் நாம் வந்து கலப்பதற்கு ப்ரதிபந்தகங்கள் கனக்கவுண்டே என்கிறீரேல், இராவணனிலும் வலியரோ இவளுடைய விரோதிவர்க்கம்? அவனுடைய ஐச்வர்யமெல்லாம் நீறும்படி இலங்கையைப் பாழாக்கினீர்; ஒன்றை அழிக்க நினைத்தால் கிழங்குகூட மிருந்திராதபடி அழிக்குமவராயிருக்கின்றீர்; அப்படியே இவளையும் அழிக்க நினைத்துவிட்டீரோ? எவ்வளவு அழித்தாலும் இவளுடைய கண்ணழகை மாத்திரமாவது குலையாமே நோக்கியருளவேணுமென்கிறாள். உயிர்போகாதபடி நோக்கிக்கொள்ளவேணுமென்கை.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி:— "இவள்தானே முடிந்து போகிறாள், நாங்கள்தானே யிழக்கிறோம், ஜீவிக்கவிருக்கிற நீர் வேணுமாகில் உம்முடைய ஜீவனத்தை நோக்கிக்கொள்ளப் பாரும்" என்பதாம். — 1. "வண்டார்பூமாமலர்மங்கை மணநோக்க முண்டானே" என்று பிராட்டியின் நோக்கமே எம்பெருமானுக்கு உணவாகச் சொல்லப்பட்டிருப்பதால் "உம்முடைய ஜீவனத்தை நோக்கிக் கொள்ளப்பாரும்" என்று நம்பிள்ளை யருளிச்செய்தது இன்சுவைமிக்க பொருள்.

வாட்டமில்புகழ் வாமனனை * இசை
கூட்டி வண்சடகோபன்சொல் * அமை
பாட்டோராயிரத்திப்பத்தால் * அடி
சூட்டலாகும் அந்தாமமே. (கக)

1. பெரிய திருமொழி. 8-10-1.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| வாட்டம் இல் புகழ் | வாட்டமற்ற புகழுடையனை |
| வாமனனை | வாமனனைக்குறித்து |
| வண் சடகோபன் | உதாரரான ஆழ்வார் |
| இசை கூட்டி | இசையோடே சேர்த்து |
| சொல் | அருளிச்செய்த |
| அமை | இலக்கணமமைந்த |
| பாட்டு ஓர் ஆயிரத்து | ஓராயிரம் பாசுரங்களுள் |
| இ பத்தால் | இப்பதிகத்தினால் |
| அடி | (அந்த வாமனமூர்த்தியின்) திருவடிகளில் |
| அம் தாமம் | அழகிய புஷ்பங்களை |
| சூட்டல் ஆகும் | ஸமர்ப்பிக்கும் படியான பேறு உண்டாகும். |

* * * — [வாட்டமில்புகழ்.] இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. ஆழ்வார்பட்ட க்லேசமொன்றும் படாதே எம்பெருமான் திருவடிகளிலே நித்யகைங்கர்யம்பண்ணப் பெறலாமென்கிறது. [வாட்டமில்புகழ் வாமனனை] முதற் பாட்டிலே "வாடிவாடுமிவ்வாணுதலே" என்று பராங்குச நாயகி வாட்டமடைந்ததாகச் சொல்லிற்று. அவள் வாடினது எம்பெருமானுடைய புகழ் வாடினதாகும். இது வாட்டம் தீர்ந்ததென்றால் ஆழ்வாருடைய வாட்டம் தீர்ந்ததென்பது சொல்லாமலே விளங்கும். கீழே "இவள் மாழை நோக்கொன்றும் வாட்டேன்மினே" என்று தாய் சொன்னவாறே 'இதோ புறப் பட்டோம்' என்று லஜ்ஜையோடே வந்து தோற்றினாள்; தோற்றவே வாட்டமில் புகழ்வாமனனாயினான். இதனால், இத்திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு உண்டாயிருந்த அவஸாதம் ஒருவாறு எம்பெருமானால் தீர்க்கப்பட்டது என்பது விளங்கும். இங்கு வாமனன் என்றது தன்பொருளை விடமாட்டாதவன் என்பதைக் காட்டுதற்காக. தான் யாசகனாகியும் தன்னுடைமையைப் பெறுபவனாகையாலே பிறர் யாசிக்கவும் விட்டுக்கொடுப்பனோ என்றபடி. இப்படிப்பட்ட பெருமான் விஷயமாக வண்குருகூர்ச்சடகோபன் இசையோடே புணர்த்துப் பேசின ஆயிரத்தினுள்ளே இப்பத்துப்பாட்டினால் செவ்விமாலையைக்கொண்டு அவன் திருவடிகளிலே நித்ய கைங்கர்யம்பண்ணப் பெறலாமென்றதாயிற்று. இப்பத்தும் வல்லார்க்கு இது பலன் என்றவாறு.

தாமம்—தாமா என்னும் வடசொல் விகாரம்; மாலையென்று பொருள். (கக)

நான்காந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

## த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் இத்திருவாய்மொழிக்கான ச்லோகம்.



𑌪𑍍𑌰𑌹𑍍𑌲𑌾𑌦𑌾𑌰𑍍𑌥𑍇 𑌨𑍃𑌸𑌿𑌂𑌹𑌂 𑌕𑍍𑌷𑌪𑌿𑌤𑌵𑌿𑌪𑌦𑍁𑌷𑌾𑌵𑌲𑍍𑌲𑌭𑌂 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌲𑌙𑍍𑌕𑌂
𑌕𑍍𑌷𑍍𑌵𑍇𑌲𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌿𑌕𑍇𑌤𑍁𑌂 𑌶𑍍𑌰𑌮𑌹𑌰𑌤𑍁𑌲𑌸𑍀𑌮𑌾𑌲𑌿𑌨𑌂 𑌧𑍈𑌰𑍍𑌯
[𑌹𑍇𑌤𑍁𑌂 |
𑌤𑍍𑌰𑌾𑌣𑍇 𑌤𑌤𑍍𑌤𑌾𑌵𑌧𑌾𑌨𑌂 𑌸𑍍𑌵𑌰𑌿𑌪𑍁𑌹𑌤𑌿𑌕𑍃𑌤𑌾𑌶𑍍𑌵𑌾𑌸𑌨𑌂 𑌦𑍀𑌪𑍍𑌤𑌹𑍇𑌤𑌿𑌂
𑌸𑌤𑍍𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌾𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌾𑌰𑌂 𑌵𑍍𑌯𑌸𑌨𑌨𑌿𑌰𑌸𑌨𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌂 𑌜𑌗𑌾𑌦 ||

1. ப்ரஹ்லாதார்த்தே ந்ருஸிம்ஹம் — * நாடிநாடி நரசிங்காவென்று * சிறுக்கனான ப்ரஹ்லாதாழ்வானுக்காக நரஸிம்ஹமூர்த்தியாகத் தோன்றினவன்.

2. க்ஷபிதவிபதுஷாவல்லபம் — * விறல்வாணனுயிரந்தோள் துணித்தீர். * வாணாசுரனுடைய மகளான உஷைக்கு வல்லபனான அநிருத்தாழ்வானுடைய ஆபத்தைப் போக்கினவன்.

3. க்ஷிப்தலங்கம் — * அரக்கனிலங்கை செற்றீருக்கே * இராவணனுடைய இலங்கையைப் பாழாக்கினவன்.

4. க்ஷ்வேளப்ரத்யர்த்திகேதும் — * வலங்கொள்புள்ளுயர்த்தாயென்னும். * விஷ விரோதியான பெரியதிருவடியைக் கொடியாகவுடையவன்.

5. ச்ரமஹர துலஸீமாலிநம் — * வண்டுதிவளுந் தண்ணந்துழாய். * விடாய்தீர்க்கவல்ல திருத்துழாய்மாலையை யணிந்துள்ளவன்.

6. தைர்யஹேதும் — * பின்னும் மிகவிரும்பும் பிரானென்னும். * நம்மை யொருகாலும் கைவிடமாட்டானென்று தைர்யத்தோடிருப்பதற்குஉறுப்பானவன்

7. த்ராணே தத்தாவதாநம் — * வெள்ளநீர்க்கிடந்தாயென்னும். * காக்குமியல்வினனாய்த் திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்தருள்பவன்.

8. ஸ்வரிபுஹதிக்ருதாச்வாஸநம் — * விறற்கஞ்சனை வஞ்சனைசெய்தீர். * தன்னைக் கொல்ல நினைத்த கம்ஸனைக் கொன்றொழித்து இப்படியே ஆச்ரித விரோதிகளைப் போக்கவல்லவன் என்று அடியவர்க்கு ஆச்வாஸஜநகனுமவன்.

9. தீப்தஹேதிம் — * சுடர்வட்டவாய்நுதிநேமியீர். * தேசுபொலிந்த திருவாழி முதலிய திவ்யாயுதங்களைத் திருக்கையிலேந்தியவன்.

10. ஸத்ப்ரேக்ஷாரக்ஷிதாரம் — * இவள் மாழைநோக்கொன்றும் வாட்டேன்மினே. * அடியாருடைய நோக்குக் குலையாமே ரக்ஷித்தருள்பவன்.

11. வ்யஸநநிரஸநவ்யக்தகீர்த்திம் — * வாட்டமில்புகழ். * அடியாருடைய வாட்டத்தைத் தீர்த்துத் தான் வாட்டந் தீர்ந்தானாகி அதனால் விளங்கிய புகழ் பெற்றவன். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை [ஜகாத] ஆழ்வார் இத்திருவாய்மொழியிலே பேசினாரென்கை.

தூப்புற்பிள்ளை பொன்னடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.



ஸ்ரீ:.

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஆடிமகிழ் வானில் அடியார்குழாங்களுடன்
கூடியின்பமெய்தாக் குறையதனுல் — வாடிமிக
அன்புற்றார் தம்நிலைமை ஆய்ந்துரைக்க மோகித்துத்
துன்புற்றான் மாறனந்தோ.

## பதவுரை.

| பதம் | பொருள் |
|---|---|
| மாறன் | ஆழ்வார். |
| ஆடி மகிழ் வானில் | (நிரந்தர பகவதநுபவத்தாலே) கூத்தாடிக்களிக்குமிடமான பரமபதத்தில் |
| அடியார் குழாங்களுடன் | (நித்யமுக்தர்களாகிற) அடியார்களின் திரளோடே |
| கூடி | கலந்து |
| இன்பம் எய்தா குறை அதனுல் | ஆனந்திக்கப்பெறாத குறையினுலே |
| மிக வாடி | மிகவும் வாட்டமடைந்து, |
| தம் நிலைமை | (அப்படிப்பட்ட) தமது நிலைமையை |
| அன்பு உற்றார் | அன்பர்களான ஸ்ரீமதுரகவி போல்வார் |
| ஆய்ந்து உரைக்க | ஆராய்ந்து சொல்லும்படியாக [அதாவது, தம் வாயாற் சொல்லுகிறபாசுரமன்றியே வேற்று வாயாற் சொல்லுகிற பாசுரமாம்படியாக] |
| மோகித்து | மோஹமடைந்து |
| துன்புற்றான் | துக்கித்தார்; |
| அந்தோ | ஐயோ!. |

கீழ்த்திருவாய்மொழியில் "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதென்றுகொலோ" என்று பாரித்த ஆழ்வார் அவ்வண்ணமாகவே பரமபதத்தில் நித்யமுக்தர் திரளிலே சென்று சேர்ந்து அனுபவிக்கப்பெறாத குறையினுலே மோஹமடைந்தார்; அந்த மோஹம் எப்படிப்பட்டதென்னில். தம்வாயாலே பாசுரம் பேசவொண்ணுமே தாய்ப் பாசுரமாக வேற்றுவாயாலே பேசலாம்படியாயிற்று. அப்படிப்பட்ட வ்யஸநம் இத்திருவாய்மொழியிலே நிகழ்ந்தது—என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ததாயியாஸிதாசேஷ ஸங்கதிர்தாதிஷு:
ஸ்வேஹமோஹ: பரைரேவ நயயாவிவேயய |
ஸ்ரதேயநிர்வேதநவாக்ஷணாயயுநஞ்ச
ஷஷ்டியாம் தயா ஸநிஸமாநுஹதீம் வதஸ்யேஷு ||

(கருத்து.) அடியார்கள் குழாங்களை உடன்கூடப்பெறுவதைப் பிரார்த்தித்து அது கிடைக்கப் பெறுமையினுலே ஆர்த்தரான ஆழ்வார், தம்முடைய ஆர்த்தியின் நிவேதநமும், அதை நீக்கியருளவேணுமென்கிற பிரார்த்தனையும் தம் வாயினுலன்றிக்கே அன்பர் வாயினுல் செய்யவேண்டும்படியாக மிகுந்த மோஹத்தை யடைந்தார் நான்காந் திருவாய்மொழியில் என்றவாறு.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து — ஐந்தாந் திருவாய்மொழி,
# அந்தாமத்தன்பு.

---

## அவதாரிகை.

கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார்க்குண்டான துயரம் முதலையின் வாயிலே யகப்பட்டுத் துடித்த கஜேந்திராழ்வானுடைய துயரத்தோடு ஒப்பிடலாயிருந்தது. அந்த கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே!' என்று கதறினபோது அக் கூக்குரல் கேட்டவளவிலே "அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தம் அஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதி சாகுலாந்த:புரம் | அவாஹநபரிஷ்க்ரியம் பதகராஜமாரோஹத: கரிப்ரவரப்ரும்ஹிதே பகவதஸ் த்வராயை நம: = அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தம் அஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதி சாகுலாந்த:புரம், அவாஹநபரிஷ்க்ரியம் பதகராஜமாரோஹத: கரிப்ரவரப்ரும்ஹிதே பகவதஸ் த்வராயை நம:." [ஸ்ரீரங்கராஜஸ்தவம்.] என்னும்படியாகக் கனவேகத்தோடே மடுவின்கரையிலே \$ அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து காட்சிதந்து! தானும் மகிழ்ந்து அவனையும் மகிழ்வித்தவாறுபோல, ஆழ்வாருடையவும் "வலங்கொள் புள்ளுயர்த்தாய்" என்ற கூக்குரலைக் கேட்டவுடனே 'அந்தோ! நாம் ஜகத்தை நிர்வஹித்தபடி வெகு அழகியதாச்சுது! நாம் ஆரானோம்!' என்று நொந்து, தன்னுடைய ஸ்வரூப ரூபகுணங்கள் அலங்காரம் திவ்யாயுதங்கள் சேர்ந்த சேர்த்தி இவை யெல்லாவற்றோடும் வந்து கலவிதந்து அதனாலே அவன் பரமஸந்துஷ்டனாய் க்ருதக்ருத்யனா யிருக்கிற விருப்பை ஆழ்வார் அநுபவித்து அவ்வநுபவத்தினாலுண்டான மகிழ்ச்சியின் மிகுதியினால் இத்திருவாய்மொழியில், தாம்பெற்றபேற்றைப் பேசி யநுபவிக்கிறார். .... .... .... ... .... .... (*)

அந்தாமத்தன்புசெய்து என்னாவிசேரம்மானுக்கு *
அந்தாமவாண்முடிசங்கு ஆழிநூலாரமுள *
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் *
செந்தாமரையடிகள் செம்பொன் திருவுடம்பே. (க)

---

\$ அரைகுலையத் தலைகுலைய — அரையிலுடுத்தின திருப்பரிவட்டம் அவிழவும் தலைமுடி அவிழவும் என்றபடி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| என் ஆவி | என் ஆத்மாவிலே |
| அம் தாமத்து அன்பு செய்து | பரமபதத்திற் பண்ணும் விருப்பத்தைப்பண்ணி |
| சேர் | வந்து பொருந்தின |
| அம்மானுக்கு | எம்பெருமானுக்கு. |
| அம் தாமம் | அழகிய மாலையையணிந்த |
| வாள் | ஒளியுள்ள |
| முடி | திருவபிஷேகமும் |
| சங்கு ஆழி | சங்கு சக்ரங்களும் |
| நூல் | பூணூலும் |
| ஆரம் | ஹாரமும் |
| உள | உள்ளன; |
| கண் | திருக்கண்கள் |
| செம் தாமரை தடம் | செந்தாமரைத் தடாகம் போன்றுள; |
| செம் கனி வாய் | சிவந்துகனிந்த திருவதரம் |
| செம் கமலம் | செந்தாமரையாகவே யிராநின்றது; |
| அடிகள் | திருவடிகளும் |
| செம் தாமரை | செந்தாமரை மலராகவே யிராநின்றன ; |
| திரு உடம்பு | திருமேனி |
| செம் பொன் | செம்பொன்னு யிராநின்றது. |

* * * — [அந்தாமத்தன்பு.] தாம் மனோரதித்தபடியே தன் பரிகரங்களோடே கூடவந்து தம்மோடே கலக்கையாலே எம்பெருமானுக்குப் பிறந்த புகரைப் பேசுகிறார். இவர்தாம் கீழ்த் திருவாய்மொழியில் "ஒளிக்கொண்ட சோதியமாய் அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதென்றுகொலோ" என்று திருநாட்டிலே சென்று அங்கு நித்யமுக்தர்களின் திரளிலே இருந்து அநுபவிக்கப்பெறுவதைப் பாரித்தாராகிலும் அஸ்மதாதிகளின் உஜ்ஜீவநத்திற்காக எம்பெருமான் ஆழ்வாரை இந்நிலத்திலே இன்னஞ் சில நாளைக்கு வைத்திருக்கத் திருவுள்ளம் பற்றினனுகையாலே சடக்கென அது செய்யாதே அவ்வநுபவத்தை ஒருவாறு இந்நிலத்திலேயே காட்டி ஆச்வஸிப்பிக்கின்றானென்றுணர்க.

பரமபதத்திலுள்ளாரெல்லார் திறத்திலும் பண்ணும் ஆதரத்தை என்பக்கலிலே பண்ணி என்னோடேவந்து கலந்த பெருமானுக்கு அழகிய மாலையும் ஒளி பொருந்திய திருவபிஷேகமும் திருவாழி திருச்சங்குகளும் யஜ்ஞோபவீதமும் திவ்யஹாரமும் உள்ளன; திருக்கண்களோ சிவந்த தாமரைத் தடாகமாயிராநின்றன; சிவந்து கனிந்த திருவதரமும் தாமரையா யிராநின்றது; திருவடிகளும் செந்தாமரையாகவே யிராநின்றன; திருவுடம்போ செம்பொன்னுயிராநின்றது. என்னோடு கலந்த பின்பு அவனுடைய திருமேனியிற் பிறந்த புகர் இங்ஙனே யிராநின்றது.

அந்தாமத்து = யாஉ என்னும் வடசொல் இங்குத் தாமமெனத் திரிந்தது. ஸ்தாநம் என்று பொருள். ஆகு பெயரால் பரமபத ஸ்தாநத்திலுள்ளவர்களான நித்ய முக்தர்களைச் சொல்லுகிறது. அவர்களிடத்துப் பண்ணும் அன்பை என்னிடத்தே பண்ணினனென்கிறது. இரண்டாமடியில் அந்தாமம் என்றவிடத்து ஓாஉ என்ற வடசொல் திரிந்தது. யாஉ என்ற வடசொல்லே திரிந்ததாகவுங் கொள்ளலாம்; அப்போது ஒளி என்று பொருள். அச்சொல் வடநூல் நிகண்டுகளில் பலபொருளுடையது. 'வாள்முடி' என்றும் 'வாழ்முடி' என்றும் பாடபேதமுண்டு. இரண்டாமடி முழுவதும் நித்யஸூரிகளைச் சொல்லியிருப்பதால், அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதென்றுகொலோ என்று இவர் ஆசைப்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பட்டபடியே நித்யஸூரிகளோடே வந்து கலந்தான் என்று ஆளவந்தாரருளிச் செய்தாராகத் திருமாலையாண்டான் பணித்தாராம். எம்பெருமானாரருளிச் செய்வதாவது — ஆழ்வாரோடு வந்து கலப்பதற்கு முன்பு அவனோடொக்க இந்த திவ்யபூஷண திவ்யாயுதங்களும் ஒளிமழுங்கி அஸத்கல்பமாயிருந்தன; இவரோடு கலந்தபின்பு உஜ்ஜ்வலமாய் ஸத்தை பெற்றன; அது சொல்லப்படுகிறது இங்கு — என்றும்.

இப்பாட்டுக்கு மற்றொருவகையான நிர்வாஹமுமுண்டு; சுனுராஜிதூவிஷை யில் சொன்ன ஹிரண்மய விக்ரஹயோகத்தையும் புண்டரீகாக்ஷத்வம் முதலிய அவயவ சோபையையும் கிரீட மகுடாதி ஆபரண சோபையையும் யூதஸம்வ சுகூசுவத்தையுஞ் சொல்லி இப்படி ஆதித்யமண்டலத்திலே திகழுமவன் "ஸயஷாயம்புருஷெ|யஷாஸாவாதித்யெ|ஸஏகஃ" என்கிறபடியே அழகிய ஆதித்யமண்டலத்தில் பண்ணும் விருப்பத்தை என்னெஞ்சிலே பண்ணிப்புகுந்து மிகவும் உஜ்ஜ்வலனாயிராநின்றான் — என்பதாம். .... (க)

திருவுடம்புவான்சுடர் சேந்தாமரைகண்கைகமலம் *
திருவிடமேமார்வம் அயனிடமேகோப்பூழ் *
ஒருவிடமுமேந்தைபெருமாற்கு அரனேயோ ! *
ஒருவிடமோன்றின்றி என்னுள்கலந்தானுக்கே. (உ)

| | | | |
|---|---|---|---|
| ஒருவு இடம் ஒன்று இன்றி | நீங்கின இடம் ஒன்றுமில்லாதபடி [ஸகல அவயவங்களிலும்] | கை | திருக்கைகள் |
| | | கமலம் | தாமரைமலரே; |
| | | மார்வம் | திருமார்பு |
| என்னுள் கலந்தானுக்கு | என்னோடு சேர்ந்தவனை | திரு இடமே | பிராட்டிக்கு இருப்பிடமாயிற்று; |
| எந்தை பெருமாற்கு | என் குலநாதனுக்கு | கொப்பூழ் | திருநாபி |
| திரு உடம்பு | திருமேனி | அயன் இடமே | பிரமனுக்கு உறைவிடமாயிற்று; |
| வான் சுடர் | திவ்யமான ஒளியை உடைத்தாயிராநின்றது; | ஒருவு இடமும் | நீங்கின இடமும் |
| கண் | திருக்கண் | அரனே | ருத்ரனுடையதே; |
| செம் தாமரை | செந்தாமரை மலர்களாயிராநின்றன; | ஓ | ஆச்சரியம். |

*** — [திருவுடம்பு.] பிராட்டி முதலானவர்களும் தன் பக்கலில் ஓரோ இடங்களைப்பற்றி ஸத்தைபெற்றாராம்படி யிருக்கிற எம்பெருமான் ஸகல அவயவங்களாலும் என்னோடே ஸம்ச்லேஷித்து அத்தாலே ஒளிமல்கப்பெற்றானென்கிறார் இதில்.

ஒருவிடமொன்றின்றி என்னுள் கலந்தானுக்கு மார்வம் திருவிடம்; கொப்பூழ் அயனிடம்; ஒருவிடமும் அரன்; (இப்படிப்பட்ட எந்தை பெருமாற்கு (என்னுள்கலந்தவனுலே) திருவுடம்பு வான்சுடர்; கண் செந்தாமரை; கை கமலம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இப்பாசுரத்தை அநுபவிக்கும்போது நஞ்சீயர் மிகவும் ஈடுபட்டு அருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு: அதாவது—எம்பெருமானுக்கு விக்ரஹமில்லை விபூதியில்லை என்கிறவர்கள் முன்பே ஆப்ததமரான ஆழ்வார் திருவுடம்பு வான்சுடர் என்பதே! ஈச்வரனுக்கு விக்ரஹமில்லை குணமில்லை என்கிறவர்கள் பண்ணி வையாத பாவமில்லை; அவர்களை அநுவர்த்தித்து அதுகேட்டுக்கொண்டிராதபடி பெருமாள் நமக்குப் பண்ணின உபகாரம் போலே வேறொரு உபகாரமுமில்லை—என்றும்.

எம்பெருமான் வந்ததும் ஆழ்வாரோடே தன் திருமேனியை அணைத்து நின்றானாகையாலே அந்த ஸ்பர்சஸுகம் கொண்டாடித் "திருவுடம்பு வான்சுடர்" என்கிறாரென்ப. உடனே குளிரக்கடாக்ஷித்தருளினனாகையாலே "செந்தாமரை கண்" என்றார். கண்ணழகைக்கண்டு பரத்வங்கொண்டாடி இப்பரம புருஷனெங்கே! நாம் எங்கே! என்று நைச்சியம் பாவித்து இருந்தவளவிலே கையாலே பிடித்திழுத்தானாதலால் "கை கமலம்" என்கிறார்.

இவன் கேட்பாரில்லாதவனாய் நம்மிடம் வந்தானல்லன்; பிராட்டி முதலானவர்களும் இவனுடைய திருமேனியில் ஏகதேசங்களைப்பற்றி ஸத்தை பெறுமவர்களாக இருக்கின்றார்களென்பதை இரண்டு மூன்றாமடிகளாலருளிச்செய்கிறார். தாமரைப்பூவில் பிறந்த பிராட்டியும் அதைவிட்டு இவன் திருமார்பைப் பற்றிக்கொண்டு 'அகலகில்லேனிறையும்' என்று கிடக்கின்றாள்; பதினான்குலகம் படைக்கும் பிரமனே திருநாபிக்கமலத்தை விடேனென்றிருக்கிறான்; நீங்கினவிடமோ ருத்ரனுடையதாயிராநின்றது.

ஒருவிடமும் = ஒருவுதல் நீங்குதலாய் நீங்கினவிட மென்றபடி. தாமஸ தேவதையின் இருப்பிடத்தைச் சொல்லுகையாலே அநாதரம் தோற்ற 'நீங்கின விடம்' என்கிறார் என்பர். ... ... ... (உ)

என்னுள்கலந்தவன் செங்கனிவாய்செங்கமலம்*
மின்னும்சுடர்மலைக்குக் கண்பாதம்கைகமலம்*
மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள*
தன்னுள்கலவாதது எப்பொருளும்தானில்லையே. (3)

| | |
|---|---|
| என்னுள் கலந்தவன் | என்னுள்ளேகலந்தவனாகி |
| மின்னும் | விளங்குகின்ற |
| சுடர் மலைக்கு | ஒளிபொருந்திய மலை போன்ற பெருமானுக்கு |
| செம் கனி வாய் | சிவந்து கனிந்த திருவாய் |
| செம் கமலம் | செந்தாமரை மலர் போன்றது; |
| கண் பாதம் கை | திருக்கண்களும் திருவடிகளும் திருக்கைகளும் |
| கமலம் | செந்தாமரை மலரே; |
| மன்னு முழு ஏழ் உலகும் | நிலைபெற்ற ஸகல லோகங்களும் |
| வயிற்றின் உள | (அவனது) திருவயிற்றிலடங்கி யுள்ளன; |
| தன்னுள் | அவன்றனக்குள்ளே |
| கலவாதது | சேராதது |
| எப்பொருளும் தான் இல்லை | யாதொருபொருளுமேயில்லை. |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



** [என்னுள் கலந்தவன்] பிராட்டி பிரமன் சிவன் முதலானோர் மாத்திர மன்றியே ஸகலலோகங்களும் தன்னைப் பற்றி ஸத்தை பெறும்படி யிருக்கிற எம்பெருமான், இவ்வுலகங்களெல்லாம் தன்னை யொழிந்தால் படும்பாட்டைத் தான் என்னைப் பிரிந்து பட்டு என்னோடே கலக்கையாலே மிகவும் புஷ்கலனானன் என்கிறாரிதில்.

எம்பெருமானுக்கு இப்போது 'என்னுள் கலந்தவன்' என்று ஒரு திருநாமம் கிடைத்தது போலும். * அஞ்சிறைய மடநாரையில் "அருளாததீர்" என்று திருநாமஞ் சாத்தினார்; இப்போது 'என்னுள்கலந்தவன்' என்று திருநாமஞ் சாத்துகிறார். நாராயணன் வாஸுதேவன் என்கிறாப் போலே இதுவும் ஒரு திருநாமங் காண்மின்.

என்னுள்ளே கலந்தவனாய் அத்தாலே விளங்கின சுடரையுடைய மலை போன்றுள்ளவனான பெருமானுக்கு, செங்கனிவாய் செங்கமலம், கண் பாதம் கை கமலம். இப்போது எம்பெருமானுடைய திவ்யாவயவங்கள் புகர் பெற்ற படியை எத்தனை தடவை வருணித்தாலும் ஆழ்வாருக்கு த்ருப்தி பிறக்கிறதில்லை.

மன்னு முழுவேழுலகும் வயிற்றினுள — ப்ரவாஹநித்யங்களான ஸகல சேதநாசேதநங்களும் தன் ஸங்கல்பத்தைப் பற்றி நிலைநிற்கின்றன. [தன்னுள் கலவாதது எப்பொருளுந் தானில்லையே] தன்னுடைய திருவுள்ளத்தை ஆச்ரயமாகக்கொள்ளாத வஸ்து நாஸ்தி சப்தத்திற்கு அர்த்தமாகவுள்ளதத்தனை. அவை இவனைப்பற்றாதபோது ஸத்தையின்றிக்கே யிருப்பதுபோல, இவனும் என்னோடு கலவாதபோது ஸத்தை யிழந்தவனாயிரா நின்றானென்கையிலே நோக்கு. (௫)

எப்பொருளும்தானாய் மரதகக்குன்றமொக்கும்*
அப்பொழுதைத்தாமரைப்பூக் கண்பாதம்கைகமலம்*
எப்பொழுதும்நாள்திங்கள் ஆண்டூழியூழிதொறும்*
அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே. (4)

| | |
|---|---|
| எப் பொழுதும் | எல்லா க்ஷணமும் |
| என் நாள் | எல்லா நாட்களும் |
| எத் திங்கள் | எல்லா மாதங்களும் |
| எவ்வாண்டு | எல்லா வருஷங்களும் |
| எவ்வூழி யூழி தொறும் | கற்பங்கள் தோறும் (அநுபவித்தாலும்) |
| அப்பொழுதைக்கு அப்பொழுது | அந்தந்தக் காலங்களிலே |
| என் ஆரா அமுதம் | எனக்குத் தெகுட்டாத அம்ருதமாயிருக்கு மெம்பெருமான் |
| எப் பொருளும் தான் ஆய் | எல்லாப் பொருள்களும் தனக்குள்ளே அடங்கப் பெற்றவனாய் |
| மரதகம் குன்றம் ஒக்கும் | மரதகமலையை யொத்திருப்பன்; |
| கண் | (அவனது) திருக்கண்களும் |
| அப் பொழுது தாமரை பூ | அப்போதலர்ந்த தாமரை மலர் போன்றவை |
| பாதம் | திருவடிகளும் |
| அப் பொழுது கமலம் | அப்போதலர்ந்த தாமரையே; |
| கை | திருக்கைகளும் (அவ்வண்ணமே.) |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * [எப்பொருளுந்தானாய்] என்னோடே கலந்த எம்பெருமான் யாவஜ்ஜீவம் அநுபவித்தாலும் க்ஷணந்தோறும் புதியனாய்ப் பரம போக்யனாயிரா நின்றானே யென்று உள் குழைகின்றாரிதில். இப்பாசுரத்திற்கு நம்பிள்ளையீட்டில் இட்டருளின அவதாரிகை பரம போக்யம்;

"நீர் ஒருகால் சொன்னத்தை ஒன்பதின்கால் சொல்லி இங்ஙனே கிடந்து படுகிறதென்னென்ன, நான் அது தவிருகிறேன்; நீங்கள் அவ் விஷயம் ஒருகாலிருந்தபடியே எப்போது மிருக்கும்படி பண்ணவல்லி கோளோ வென்கிறார்."

என்பது அந்த ஸ்ரீஸூக்தி. "செந்தாமரை கண் கை கமலம்" என்றும் "செங்கனி வாய் செங்கமலம்" என்றும் "கண் பாதம் கை கமலம்" என்றும் திருப்பித்திருப்பிப் புநருக்தி பண்ணிக்கொண்டிருக்கிறீரே, இது வென்ன? என்று சிலர் கேட்க, நான் அநுபவிக்கிற விஷயம் நித்யாபூர்வமாகையாலே அவ்வநுபவ பரீவாஹமாக நான் சொல்லுகிற சொற்களும் ரஸிகர்களுக்கு நித்யாபூர்வமாகவே யிருக்கும், புநருக்தியாகத் தோன்றாது என்று ஆழ்வார் ஸமாதாநம் பண்ணுகிறாரென்பது உள்ளுறை.

எல்லாப் பொருள்களும் தானிட்டவழக்காம்படி யிருக்கிறவன் என்னோடே வந்து கலந்து மிகவும் ஒளிபெற்றானைகையாலும் திருவளர்த்தியினாலும் என்னை விட்டுப்போகாதே நிற்கையாலும் ஒரு மரதகமலையோ என்னலாம்படி யிரா நின்றான். அவனது திருக்கண்களும் திருவடிகளும் அப்போதலர்ந்த செந்தாமரைப் பூப்போன்றன; கைகளும் கமலம். ஸர்வகாலமும் எனக்கு அபூர்வ வஸ்துபோலே புதியனாயிராநின்றானே யன்றித் தெகுட்டுகின்றானில்லை; இப்படியும் ஒரு போக்யதையே! என்று ஈடுபடுகிறாராயிற்று. (சு)

ஆராவமுதமாய் அல்லாவியுள்கலந்த*
காரார்கருமுகில்போல் என்னம்மான்கண்ணனுக்கு*
நேராவாய் செம்பவளம் கண்பாதம்கைகமலம்*
பேரார நீண்முடிநாண் பின்னுமிழைபலவே. (5)

| | |
|---|---|
| ஆரா அமுதம் ஆய் | தெகுட்டாத அமிருதமாகி |
| அல் ஆவி உள் | ஒருபொருளல்லாத எனது நெஞ்சினுள்ளே |
| கலந்த | கூடி நின்றவனாயும் |
| கார் ஆர் கரு முகில் போல் | கார்காலத்திற் பொருந்திய காலமேகம் போன்றவனாயும் |
| என் அம்மான் | எனக்கு நாதனாயுமிருக்கிற |
| கண்ணனுக்கு | ஸ்ரீக்ருஷ்ணனுக்கு |
| செம் பவளம் | சிவந்த பவழங்கள் |
| வாய் நேரா | அதரத்திற்கு ஒப்பாக மாட்டா; |
| கமலம் | தாமரைப் பூ |
| கண் பாதம் கை | திருக்கண் திருவடி திருக்கைகளுக்கு |
| நேரா | ஒப்பாகமாட்டாது; |
| பேர் ஆரம் | பெரிய ஹாரங்களும் |
| நீள் முடி | உயர்ந்த திருவபிஷேகமும் |
| நாண் | திரு அரைநாணும் |
| பின்னும் இழை | மற்றுமுள்ள திருவாபரணங்களும் |
| பல | அனேகங்கள். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * [ஆராவமுதமாய்] எம்பெருமான் என்னோடு கலந்ததனால் பெற்ற அழகுக்கு உபமான மில்லையென்கிறார். இதுவரையில் தாமரையை உபமானமாகச் சொல்லிக்கொண்டு வந்தார்; உட்புகுந்து ஆராய்ந்தவாறே உபமானமாகப் போந்ததில்லை; சீ! என்று தள்ளிப்பேசுகிறார். பரம போக்யனாயிருந்து வைத்து மிகவும் நீசனான என்னோடே கலப்பதுஞ் செய்து அத்தாலே கார்காலத்தில் ஆர்ந்த கருமுகில்போலே விளக்கம் பெற்றவனான எம்பெருமானுக்கு, செம்பவளமானது திருவாயோடு ஒப்பாகமாட்டாது; கமலமானது கண்பாதம் கைகளோடு ஒப்பாகமாட்டாது. அன்றியும், திருமார்பில் அணிந்திருந்த ஹாரமும், தானே உபயவிபூதிக்கும் நிர்வாஹகனென்பது தோன்றத் திருமுடியிலணிந்திருந்த திருவபிஷேகமும் திருவரைநாணும் முதலான திருவாபரணங்கள் அநுபவித்துப் போமித்தனையல்லது என்னாற் சொல்லித் தலைக்கட்டப் போகா. (ரு)

பலபலவேயாபரணம் பேரும்பலபலவே*
பலபலவேசோதி வடிவு பண்பெண்ணில்*
பலபலகண்டுண்டு கேட்டுற்றுமோந்தினபம்*
பலபலவேஞானமும் பாம்பணைமேலாற்கேயோ! (6)

பாம்பு அணை மேலாற்கு — ஆதிசேஷனைப் பள்ளியாகக் கொண்டிருக்கும் பெருமானுக்கு
பண்பு எண்ணில் — (என்னோடு கலவியாலுண்டான) அழகை நிரூபித்துப் பார்க்குமிடத்து,
ஆபரணம் — திருவாபரணங்கள்
பல பல — மிகப் பலவாயிருக்கும்;
சோதி வடிவு — ஒளியுருவான திருமேனி
பல பல — மிகப் பலவாயிருக்கும்;
கண்டு உண்டு கேட்டு உற்று மோந்து இன்பம் — பார்த்தும் உண்டும் கேட்டும் ஸ்பர்சித்தும் மோந்தும் (உண்டாகிற) சுகங்களும்
பல பல — மிகப் பலபலவாயிருக்கும்;
ஞானமும் — ஞானங்களும்
பல பல — மிக மிகவாம்.

* * [பலபலவே.] ஆழ்வார். தம்மோடே எம்பெருமான் கலக்கும்போது ஒரு வடிவோடே கலந்து த்ருப்திபெற மாட்டாதே பலவடிவுகள் கொண்டு கலந்து அநுபவிக்கும்படியை அருளிச்செய்கிறார்.

பாம்பணைமேலாற்கு என்றது திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக் கொண்டாப்போலே என்னோடு கலந்த பெருமானுக்கு என்றபடி. பண்பு எண்ணில்— அவனுடைய ஸ்வபாவங்களை ஆராய்ந்துபார்த்தால், ஆபரணம் பலபல = "செங்கமலக்கழலில் சிற்றிதழ்போல் விரலில் சேர்திகழாழிகளும் கிண்கிணியும் அரையில்தங்கிய பொன்வடமும் தாளநன்மாதுளையின் பூவொடு பொன்மணியும் மோதிரமுங் கிறியும் மங்கல வைம்படையுந் தோள்வளையும் குழையும் மகரமும் வாளிகளும் சுட்டியும்" ,,கிரீடமகுடசூடாவதம்ஸமகரகுண்டல

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஜை வெயகஹார கெயஹர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப ஹாராவஹார
பலஹார வீதாம்பர காஞ்சீ குணநூபுரா ஸ்வாஸ்ருவரிசித திவ்யபூஷண"
என்கிறபடியே திருவாபரணங்கள் எண்ணிறந்தவை.

பேரும் பலபலவே = அவனுடைய திருக்குணங்களுக்கும் திருவவதாரங்களுக்கும் திவ்ய சேஷ்டிதங்களுக்கும் வாசகங்களான திருநாமங்களும் பலபல வாயிருக்கும். அநுபவிக்குங் காலத்தில் நாமக்ரஹணத்திற்கு இழிந்தவிட மெல்லாம் துறையாகும். சிலப்பேர்கள் வீரப்பேர்கள் என்று அநேகமாயிருக்குமே.

பலபலவே சோதிவடிவு = இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி :— "ஸௌபரியைப் போலே அனேகம்வடிவு கொண்டாயிற்று இவரை யநுபவிக்கிறது: முக்தன் தன்னையநுபவிக்கும்போது படிமா போலே தான் என்னை யநுபவிக்கப் பலவடிவு கொள்ளா நின்றான்" என்பதாம்.—ஸௌபரியின் வரலாறு வருமாறு:—இந்த மாமுனிவன் நீர் நிலையிலிருந்து கொண்டு தவம்புரியா நின்றவளவில் அங்கு மீன்களெல்லாம் கூடிக்களித்து விளையாடாநின்றமையைக் கண்ணுற்று 'நாமும் இப்படி குடும்பவாழ்க்கையிற் கூடிநின்று சிற்றின்பம் நுகர்ந்து களிக்க வேணும்' என்று ஆவல் கொண்டு மாந்தாதா என்னும் அரசனுக்குப் பல பெண்கள் இருப்பதாக உணர்ந்து அவனிடஞ் சென்று தனக்குக் கன்னிகாதானம் செய்யுமாறு வேண்ட, அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையுங் கண்டு இசையகில்லாமல் 'பெண் கொடுக்கமுடியாதென்று நம் வாயாற் சொன்னால் முனிவர் முனிந்து சபித்துவிடக்கூடும்; பெண்களிருக்குமிடத்திற்கு இவரை அனுப்புவோம்; இவரைக் கண்டு பெண்காமுற்றாளாகில் விவாஹம் செய்து கொள்ளட்டும்; இல்லையாகில் அவர்களை மறுத்துவிடட்டும்; நம் தலையில் பழி வேண்டா' என்றெண்ணி முனிவரைப் பெண்களிருக்குமிட மனுப்ப, முனிவர் அங்குச் செல்லும் போதே தமது தவவலிமையால் திவ்யஸௌந்தரமான ரூபத்தை ஏன்று கொண்டு போய் அவர்கள் முன்னே நின்றவளவில் அங்கிருந்த ஐம்பது பெண்களும் 'நானே இவரை மணந்து கொள்வேன், நானே இவரை மணந்து கொள்வேன்' என்று போட்டி போட்டுக்கொண்டு மேல்விழுந்தவாறே, முனிவர் அத்தனை பெண்களையும் மணந்து கொள்ள விரும்பித் தமது தவவலிமையால் ஐம்பதுவடிவ மெடுத்து அப்பெண்களனைவரையும் விவாஹஞ் செய்துகொண்டு மகிழ்ந்திருந் தாரென்பதாம்.

கண்டுண்டு கேட்டுற்று மோந்தின்பம் பலபல = கண்டின்பம், உண்டின்பம், கேட்டின்பம், உற்றின்பம், மோந்தின்பம் பலபல என்று அந்வயித்துக்கொள்க. கண்டுகளிக்கப் பெறுவதான ரூபமும், உண்டுகளிக்கப் பெறுவதான ரஸமும், கேட்டுக்களிக்கப்பெறுவதான சப்தமும், தொட்டுக்களிக்கப்பெறுவதான ஸ்பர்சமும், மோந்து களிக்கப்பெறுவதான மணமும் பலபல என்றபடி. எம்பெருமான் நித்யாநந்தரூபத்தனாயிருக்கச் செய்தேயும் ஆழ்வாரையநுபவிக்குங் காலத்தில் அவனுடைய பஞ்சேந்திரியங்களும் த்ருப்திபெற்றவிதம் பலவகைப்பட்டது என்றவாறு.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஞானமும் பலபலவே = நித்யஸர்வஜ்ஞனாயிருக்கச் செய்தேயும் ஆழ்வாரை யநுபவிக்குங் காலத்திலே புதிய புதிய பலவகை ஞானங்களைக் கொள்ளாநின்றா னென்றபடி. "தாம் தம் பெருமையறியார்" என்றும் "தனக்கும் தன் தன்மை யறிவரியான்" என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமான் தன்னுடைய பெருமைகளைப்பற்றின உணர்வு இல்லாதவனாயிருந்து ஆழ்வாரோடு கலந்தபின் அவற்றை நன்கு உணரப்பெற்றானும்; அதைச்சொல்லுகிறது என்று கொள்ளலாம்.(௬)

பாம்பணைமேல்பாற்கடலுள் பள்ளியமர்ந்ததுவும்*
காம்பணைதோள்பின்னைக்காய் ஏறுடனேழ்செற்றதுவும்*
தேம்பணையசோலை மராமரமேழெய்ததுவும்*
பூம்பிணையதண்டுழாய்ப் பொன்முடியம்போரேறே. (7)

| | |
|---|---|
| பால் கடலுள் | திருப்பாற்கடலிலே |
| பாம்பு அணை மேல் | சேஷசயனத்தின் மீது |
| பள்ளி அமர்ந்ததுவும் | கண்வளர்தல் பொருந்தினதும், |
| காம்பு அணை தோள் பின்னைக்கு ஆய் | மூங்கில்போன்ற தோள்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக |
| ஏழ் ஏறு | ஏழு ரிஷபங்களை |
| உடன் | ஏககாலத்தில் |
| செற்றதுவும் | தொலைத்ததும், |
| தேன் பணைய சோலை | தேனையும் கிளைகளையுமுடைய சோலையாகத் தழைத்த |
| ஏழ் மராமரம் | ஸப்த ஸாலவ்ருக்ஷங்களையும் |
| எய்ததுவும் | துளைபடுத்தினதும், |
| பூ பிணைய | அழகிய தொடுத்தலையுடைத்தான |
| தண் | குளிர்ந்த, |
| துழாய் | திருத்துழாய் மாலையணிந்த |
| பொன் | பொன்மயமான |
| முடி | திருவபிஷேகத்தையுடையவனாயும் |
| அம் | அழகியவனாயும் |
| போர் ஏறு | போர்க்குரிய இடபம போன்றவனு மான எம்பெருமான் (செய்த செயல்களாம்.) |

* * [பாம்பணைமேல்.] எம்பெருமான் சில திவ்விய சேஷ்டிதங்களைத் தமக்குக் காட்டியருளக்கண்டு அநுபவித்துப் பேசுகிறார். பாற்கடலுள் பாம்பணைமேல் பள்ளியமர்ந்ததுவும் = வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை மெத்தையாகவிரித்து அதன்மேலே கள்ளநித்திரை கொள்கின்றதும் எங்கள் பெருமானே.

பின்னைக்கா ஏறுடனேழ் செற்றது—யசோதைப்பிராட்டிக்கு உடன்பிறந்தவனான கும்பனென்னும் இடையர்தலைவனதுமகளும், நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவர்க்குமடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்து கொண்டனன் என்பது வரலாறு. எம்பெருமானால் முன் யுகத்தில் கொலையுண்ட காலநேமி யென்னும் அஸுரனுடைய புத்திரர்கள் ஏழு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வர் கறுக்கொண்டு கண்ணபிரானை வதஞ்செய்யக்கோலி இந்த ஏழுகாளைகளாகப் பிறந்தார்களென்று ஹரிவம்சம் கூறும்.

மராமரமேழெய்தது : — ஸுக்ரீவன் இராமபிரானால் அபயப்ரதானஞ் செய்யப்பெற்றபின்பும் மனம் தெளியாமல் வாலியின் பேராற்றலைப்பற்றிப் பல வாறு சொல்லி, வாலி மராமரங்களைத் துளைத்ததையும் துந்துபியின் உடலெலும்பை ஒரு யோஜனை தூரம்தூக்கியெறிந்ததையும் குறித்துப்பாராட்டிக்கூறி, இவ்வாறு பேராற்றலமைந்தவனை வெல்வது ஸாத்தியமாகுமோ? என்று சொல்ல, அதுகேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு விச்வாஸம் இல்லையாயின் இப்போது என்ன செய்யவேண்டுவது? என்ன, ஸுக்ரீவன் 'இராமபிரான் நீறுபூத்தநெருப்புப்போல் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும்போது ஸந்தேஹமுண்டாகின்றது; ஏழுமராமரங்களையும் துளைத்து இந்தத்துந்துபியின் எலும்பையும் இருநூறு விரற்கடைதூரம் தூக்கியெறிந்தால் எனக்கு நம்பிக்கையுண்டாகும்' என்று சொல்ல, ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாக்குமாறு அவனது வார்த்தைக்கு இயைந்து இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது காற்கட்டைவிரலினால் இலேசாய்த்தூக்கிப் பத்து யோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட ஸுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத்தூக்கியெறிந்தான், இப்போது உலர்ந்துபோன இதனைத்தூக்கியெறிதல் ஒரு சிறப்பன்று' என்றுகூற, பின்பு இராமபிரான் ஒருபாணத்தை ஏழுமராமரங்களின்மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச்சென்று மீண்டு அம்பறாத்தூணியை யடைந்தது. மராமரம்-ஆச்சாமரம் எனப்படும். (எ.)

பொன்முடியம்போரேற்றை எம்மானை நால்தடந்தோள்*
தன்முடிவொன்றில்லாத தண்டுழாய்மாலையனை*
என்முடிவுகாணாதே என்னுள்கலந்தானை*
சொல்முடிவுகாணேன் நான் சொல்லுவதென்சொல்லீரே. (8)

| பதம் | பொருள் |
|---|---|
| பொன் முடி | பொன்மயமான திருமுடியை யுடையனாய் |
| அம் போர் ஏற்றை | அழகிய போரேறு போன்றவனாய் |
| எம்மானை | எனக்கு நாதனாய் |
| நால் தட தோள் | நான்கு பெரிய திருத்தோள்களையுடையனாய் |
| தன் முடிவு ஒன்று இல்லாத | தன் பெருமைக்கு முடிவு ஒன்றுமில்லாதவனாய் |
| தண் துழாய் மாலையனை | குளிர்ந்த திருத்துழாய் மாலையை யுடையவனாய் |
| என் முடிவு காணாதே | எனது தாழ்வைக் கணிசியாமல் |
| என் உள் கலந்தானை | என்னோடு கலவிசெய்தவனுமான பெருமானை |
| நான் சொல் முடிவு காணேன் | நான் சொல்லி முடிக்கும் வகையறிகின்றிலேன்; |
| என் சொல்லுவது | என்னவென்று சொல்லலாம்! |
| சொல்லீர் | நீங்களே சொல்லுங்கள். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * [பொன்முடியம் போரேற்றை.] எம்பெருமான் பராத்பரனாயிருந்து வைத்து என்னுடைய நைச்சியத்தைக் கணிசியாதே என்னோடே வந்து கலந்த பெருங்குணத்தை நான் பேசவல்லேனல்லே னென்கிறார். அவனுடைய பராத்பரத்வத்தை முன்னடிகளில் அருளிச்செய்கிறார். உபயவிபூதிக்கும் தானே நாதன் என்பது விளங்கத் திருவபிஷேக மணிந்தவனாய், மிகவும் செருக்கை யுடைய ஏறு போலே மேனாணித்திருப்பவனாய், தன்னுடைய குணசேஷ்டிதங் களாலே என்னையடிமை கொண்டவனாய், அழகிய திருத்தோள்கள் நாலையு முடையனாய், ஸர்வேச்வரத்வஸூசகமாய்ப் பரமபோக்யமான திருத்துழாய் மாலை யை யணிந்தவனாய், என்னுடைய எல்லையான தாழ்ச்சியைப்பாராதே என்னுள்ளே கலந்தவனான பெருமானை நான் ஒருபடி அநுபவிப்பது தவிர, பாசுரமிட்டுச் சொல்லும் பரிசு அறிகிலேன். விஷயாந்தரங்களை யநுபவித்து அவ்வநுபவத் திற்குப் பாசுரமிட்டுச் சொல்லுகின்ற உங்களைப்போலே இவ்விஷயத்தில் நான் ஒரு பாசுரமிட்டுச் சொல்ல மாட்டுகிறிலேன் என்றவாறு.

என்முடிவு காணாதே = கீழ் ஆடியாடியில் நான்முடிந்து போவதாயிருக்க, அதனை ஸஹிக்கமாட்டாமல் என்றும் பொருள்கூறுவர். (அ.)

சொல்லீரென்னம்மானை என்னாவியாவிதனை*
எல்லையில்சீர் என்கருமாணிக்கச்சுடரை*
நல்லவமுதம் பெறற்கரியவீடுமாய்*
அல்லிமலர்விரையொத்து ஆணல்லன்பெண்ணல்லனே. (9)

| | |
|---|---|
| என் அம்மானை | எனக்கு ஸ்வாமியாய் |
| என் ஆவி ஆவி தனை | என் ஆத்மாவுக்கு ஆத்மாவாயிருப்பவனாய் |
| எல்லை இல் சீர் | எல்லையற்ற குணங்களை யுடைய |
| என் கரு மாணிக்கம் சுடரை | எனது நீலரத்னம் போன்ற வொளியுருவை யுடையனான பெருமானை |
| சொல்லீர் | சொல்லுங்கள். |
| நல்ல அமுதம் | நல்ல அம்ருதமாய் |
| பெறற்கு அரிய வீடும் ஆய் | எளிதாகப் பெறுவதற்கு முடியாத மோக்ஷஸிலத்திற்கும் தலைவனாய் |
| அல்லி மலர் விரை ஒத்து | தாமரைப் பூவிலுள்ள பரிமளம்போல் பரமபோக்யனாய் |
| ஆண் அல்லன் பெண் அல்லன் | ஆணுருவ மல்லாதவனாய்ப் பெண்ணுருவமு மல்லாதவனாயிருக்கின்றனவன். |

* * [சொல்லீர்.] கீழ்ப்பாட்டில் "சொல்முடிவு காணேன்நான் சொல்லுவதென் சொல்லீரே" என்று தமக்கு எம்பெருமானைப்பேச முடியாமையாலே பேசவுந் தவிர்ந்த ஆழ்வார் பின்னையும் தம்முடைய நப்பாசையினால் ஸம்ஸாரிகளை யுமழைத்து என்னுயனான ஸர்வேச்வரனை எல்லாருங் கூடியாகிலும் ஒருபடி சொல்லுவோமே! என்கிறார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்அம்மானைச் சொல்லீர் = அர்பவிஷயங்களை யநுபவித்து அவற்றைப் பரக்கப் பேசித்திரிகிறஸம்ஸாரிகளே! எம்பெருமானைப்பற்றிச்சிறிது சொல்லுங்கோள் என்கிறார். ஸ்ரீவைஷ்ணவர்களை விளித்துச் சொல்லுகிறதாகவுங் கொள்ளலாம்.

என்ஆவிஆவிதனை = (இதுமுதல் எம்பெருமானுக்கு விசேஷணங்கள்.) என்உயிர்க்கும் உயிராயிருப்பவன் என்றபடி. அதாவது—சரீரத்தினுள்ளே ஆத்மா அந்தர்யாமியாயிருந்துகொண்டு அதனை எப்படி ஆள்கின்றனோ அப்படி அந்த ஆத்மாவினுள்ளும் அந்தர்யாமியாயிருந்துகொண்டு அவனையும் ஆள்பவன் பரமாத்மா என்றபடி.

எல்லையில்சீர் என்கருமாணிக்கச்சுடரை = அளவிறந்த திருக்கல்யாண குணங்களையும் நீலமணிபோன்று குளிர்ந்தவடிவழகையும் நான் அநுபவிக்கும்படி அருள்புரிந்தவன் என்கை. நல்லவமுதம் = பரமபோக்யன் என்றபடி. சரீரத்தை மாத்திரம் நோக்குகின்ற அம்ருதம்போலல்லாமல் ஆத்மாவையும் நோக்குகின்ற அம்ருதம் என்க.

பெறற்கு அரிய வீடேஆய் = பக்தியற்றவர்களுக்குப் பெறலாகா தமோக்ஷத்தை யளிப்பவன் என்று கருத்து. மோக்ஷதானத்திற்கு நிர்வாஹகன் என்னவுமாம். அல்லிமலர் விரையொத்து—தாமரைப்பூவின் பரிமளம்போல் போக்யன் என்றபடி. ஆணல்லன் பெண்ணல்லன்—புருஷனுகையாலே ஸ்த்ரீகளிற் காட்டில் வேறுபட்டிருக்கிறாப்போலே புருஷோத்தமனுகையாலே புருஷர்களிற் காட்டிலும் வேறுபட்டவன் என்றபடி. நாட்டிற்காண்கிற ஆணின் படியு மல்லன், பெண்ணின் படியு மல்லன். (கூ)

ஆணல்லன் பெண்ணல்லன் அல்லாவலியுமல்லன்*
காணலுமாகான் உளனல்லனில்லையல்லன்*
பேணுங்கால்பேணும் உருவாகு மல்லனுமாம்*
கோணைபெரிதுடைத்து எம்பெம்மானைக்கூறுதலே. 10

| | |
|---|---|
| எம்பெம்மானை கூறுதல் | எம்பெருமானைப் பற்றிச் சொல்லுவதானது |
| கோணைபெரிது உடைத்து | மிகவும் ப்ரயாஸமுடையதாயிருக்கிறது; (ஏனென்னில், அப்பெருமான்) |
| ஆண் அல்லன் | ஆணுமல்லன், |
| பெண் அல்லன் | பெண்ணுமல்லன், |
| அல்லா அலியும் அல்லன் | இவ்விரண்டுமெல்லாத நபும்ஸகனுமல்லன்; |
| காணலும் ஆகான் | கண்ணால் பார்க்கவும் முடியாதவன்; |
| உளன் அல்லன் | உள்ளவனல்லன்; |
| இல்லை அல்லன் | இல்லாதவனுமல்லன்; |
| பேணுங்கால் | (அடியார்) விரும்பின காலத்து |
| பேணும் உரு ஆகும் | அவர்கள் விரும்பின வடிவை யுடையனுவன்; |
| அல்லனும் ஆம் | அப்படி யல்லாதவனுயுமிருப்பன்; |

(ஆதலால் என்க.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * [ஆணல்லன்.] எம்பெருமானைப் பேசித்தலைக்கட்டுவது மிகவும் ஆயாஸம் என்கிறார் ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன் — ஸகலவஸ்து விலக்ஷணன் என்றபடி. „நைநம்வாசா ஸ்த்ரியம்ப்ருவந் நைநமஸ்த்ரீ ப்ருவந் ப்ருவந். ப்ருமாம்ஸம் நப்ருவந்நேநம் வதந்வததி கச்சந॥ ஈசஸ்திவஹா." என்று ருக்வேத ஆரண்யகத்தில் ஓதப்பட்டுள்ளது. அதைபடி பொற்றி இந்தப்பாசுரம். இப்பாசுரத்தை பட்டர் இங்ஙனம் உபந்யஸித்துக் கொண்டிருக்கையில் கேட்டிருந்த ஒரு தமிழன் 'உலகத்திலுள்ள பொருள்கள் ஸ்த்ரீலிங்க பும்லிங்க நபும்ஸக லிங்கங்களிற் சேர்ந்தல்லது இருக்கமாட்டாவே; எம்பெருமான் இந்த மூன்றுபடியிலும் சேர்ந்திலன் என்றால் சூந்யம் என்று சொன்னபடியாகுமே; பரப்ரஹ்மம் சூந்யம் என்றோ ஆழ்வாரருளிச் செய்வது?' என்று கேட்டானும். அதற்கு உத்தரமாக பட்டர் அருளிச் செய்தது:—பரப்ரஹ்மம் சூந்யவஸ்து என்று சொல்வது ஆழ்வார்க்கு விலக்ஷிதமாகில் "ஸாமாந்யே நபும்ஸகம்" என்றபடி * ஆணல்ல பெண்ணல்ல அல்லாவலியுமல்ல * என்று ஆழ்வார் அருளிச் செய்திருப்பர். அங்ஙனன்றியே அல்லன் அல்லன் அல்லன் என்றே (ஆண்பாலுக்குரிய அன்விகுதியையிட்டு) அருளிச் செய்திருக்கையாலே 'எம்பெருமான் ஸாமாந்ய புருஷனல்லன், புருஷோத்தமன்' என்று தெரிவிக்கப் பட்டதாகாதோ? என்று. இதைக் கேட்டு அவன் மிகவு முகந்தான்.

காணலுமாகான் = ஆண்பெண் அலிஎன்கிற இவற்றைக்காணும் ப்ரமாணங்களினால் காணக்கூடாதவன் என்க. „நசக்ஷுஷா பச்யதி கச்சநைநம்" „ந மாம்ஸசக்ஷுரபிவீக்ஷதே தம்" என்றும் "என்றேனும் கட்கண்ணாற் காணாத வவ்வுரு" என்றும் சொல்லுகிறபடியே மாம்ஸக்கண்ணாற் காணமுடியாதவனென்றவாறு.

உளனல்லன் இல்லையல்லன் = நாஸ்திகர்களுக்கு நாஸ்தி யென்னலாம்படி யிருப்பவன், ஆஸ்திகர்களுக்கு அஸ்தி யென்னலாம்படி யிருப்பவன் என்றபடி. பேணுங்காற் பேணுமுருவாகும் — "தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே" என்கிறபடியே அவரவர்கள் விரும்புகிறபடி வடிவு கொள்பவன் என்கை. தேவகி முதலானவர்கள் தன்னை ஆச்ரயித்தால் அவர்களுகந்தபடியே அவர்கட்குப் பிள்ளையாய்ப் பிறப்பவன் என்னவுமாம். பேணுங்கால்—ப்ரார்த்திக்குமிடத்து, பேணுமுருவாகும்—மறைத்துக்கொள்ள வேண்டும்படியான உருவத்தோடு வந்து பிறப்பவன் என்றனு மொன்று.

அல்லனுமாம் = பிறந்தவிடந்தன்னிலே விமுகரான கம்ஸ சிசுபாலாதிகளுக்குக் கிட்டவொண்ணாதவன். (ஆக இப்படிப்பட்ட) எம்பெருமானைக் கூறுதல் கோனை பெரிதுடைத்து — எம்பெருமானைத் துதிப்பது ச்ரமஸாத்யம்—ஒருவிதமாகவும் சொல்வதற்கில்லை என்றபடி. கோனை — மிறுக்கு; ஆயாஸம். (கo.)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கூறுதலொன்றுராக் குடக்கூத்தவம்மானை*
கூறுதலேமேவிக் குருகூர்ச்சடகோபன்*
கூறினவந்தாதி ஓராயிரத்துளிப்பத்தும்*
கூறுதல்வல்லாருளரேல் கூடுவர்வைகுந்தமே. (11)

| | |
|---|---|
| ஒன்று கூறுதல் ஆரா | ஒரு குணத்தைச் சொல்லுதலும் முடியாத |
| குடக் கூத்த அம்மானை | குடக்கூத்தாடின கண்ணபிரானைப்பற்றி |
| கூறுதல் மேவி | சொல்லுவதில் ஆசை கொண்டு |
| குருகூர் சடகோபன் கூறின—; | |
| அந்தாதி | அந்தாதித்தொடையான |
| ஓர் ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரத்தினுள்ளே |
| இ பத்தும் | இத்திருவாய்மொழியை |
| கூறுதல் வல்லார் | ஓத வல்லவர்கள் |
| உளர் ஏல் | உண்டாகில் (அவர்) |
| வைகுந்தம் கூடுவர் | பரமபதம் சேரப் பெறுவர். |

* * [கூறுதல்.] இத்திருவாய்மொழியைக் கற்பார் இதிற் சொன்னபடியே எம்பெருமானைப் பரிபூர்ணமாகத் திருநாட்டிலே நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. ஒரு குணத்தைப் பேசப்புகுந்தாலும் பேசித்தலைக்கட்ட முடியாமல் „யதோவாசோ நிவர்த்தந்தே" என்று மீள வேண்டும்படியானவனாய், குடக்கூத்து முதலான திவ்ய சேஷ்டிதங்களினால் பரம ஸௌலப்யத்தைக்காட்டி ஆட்படுத்திக்கொள்ள வல்லவனான எம்பெருமானைப் பேசப்புகுந்து ஆழ்வார் அருளிச்செய்த அந்தாதித் தொடையான இவ்வாயிரத்துள் இத்திருவாய் மொழியை ஓதவேணுமென்னும் விருப்பமுடையாருண்டாகில் அவர் வைகுந்தமே கூடுவர் என்றதாயிற்று.

இங்கே ஈட்டு ஸ்ரீ ஸூக்தி காண்மின்;—" அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்று கொலோவென்று ஆசைப்பட்டுப் பெறாதே * ஆடியாடியாய் வ்யஸநப்படாதே இப்பாசுர மாத்திரத்தைச் சொல்லவே நான் பிரார்த்தித்த பேறு பெறுவர்கள்: பித்ருதநம் கிடந்தால் புத்ரன் அழித்து ஜீவிக்குமத்தனையிறே. ஆழ்வார்பட்ட வ்யஸநம் படவேண்டா. இது கற்றார்க்கு இவர் பேற்றிலே அந்வயம்." என்பதாம்.

வல்லாருளரேல் என்கையாலே இவ்விருள்தரு மாஞாலத்திலே இதில் ருசியுடையார் துர்லபர் என்பது பெறப்படும். (கக.)

ஐந்தாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

———

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



## த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளீ.

𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑌾 𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌕𑌾𑌨𑍍𑌤𑌿𑌂 𑌸𑍁𑌘𑌟𑌿𑌤𑌦𑌯𑌿𑌤𑌂 𑌵𑌿𑌸𑍍𑌫𑍁𑌰𑌤𑍍𑌤𑍁𑌙𑍍𑌗𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌂
𑌪𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑍁𑌨𑍍𑌮𑍇𑌷𑌾𑌦𑌿𑌭𑍋𑌗𑍍𑌯𑌂 𑌨𑌵𑌘𑌨𑌸𑌰𑌸𑌂 𑌨𑍈𑌕𑌭𑍂𑌷𑌾𑌤𑌿𑌰𑍁𑌚𑍍𑌯𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌖𑍍𑌯𑌾𑌤𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌲𑍀𑌲𑌂 𑌦𑍁𑌰𑌭𑌿𑌲𑌪𑌰𑌸𑌂 𑌸𑌦𑍍𑌗𑍁𑌣𑌾𑌮𑍋𑌦𑌹𑍃𑌦𑍍𑌯𑌂
𑌵𑌿𑌶𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌚𑌿𑌤𑍍𑌰𑌂 𑌵𑍍𑌰𑌜𑌯𑍁𑌵𑌤𑌿𑌗𑌣𑌖𑍍𑌯𑌾𑌤𑌰𑍀𑌤𑍍𑌯𑌾𑌨𑍍𑌵𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤 ॥

1. ஸ்வப்ராப்த்யா ஸித்தகாந்திம்— * அந்தாமத்தன்பு செய்து என்னுவி சேரம்மானுக்கு * ஆழ்வார் தம்மோடே கலக்கப் பெறுகையாலே உஜ்ஜ்வலனுனபடி.

2. ஸுகடிததயிதம் — * திருவிடமே மார்வம் * ஆழ்வாரோடே கலந்த பிறகுதான் பிராட்டியோடே சேர்ந்தானுயிருக்கிறபடி.

3. விஸ்புரத்துங்க மூர்த்திம் — * மின்னுஞ் சுடர்மலைக்கு * தேசு பொலிந்த மலை போலுயர்ந்த திருமேனியையுடையவன்.

4. ப்ரீத்யுந்மேஷாதி போக்யம் — * அப்பொழுதைக்கப்பொழுதென்னுரா வமுதமே * உவப்பின் மிகுதியாலே க்ஷணந்தோறும் அபூர்வ வஸ்துபோல் பரம போக்யன்.

5. நவகநஸரஸம் — * காரார் கருமுகில்போலென்னம்மான். * நீர் கொண் டெழுந்த காளமேகம்போலே க்ருபாரஸத்தைப்பொழியுமவன்.

6: நைகபூஷாதிருச்யம் — * பலபலவே யாபரணம் பேரும் பல பலவே* பல திருவாபரணங்கள் முதலியவற்ருல் ஸ்ப்ருஹணீயன்.

7. ப்ரக்யாதப்ரீதிலீலம் — * பாம்பணைமேல் பாற்கடலுள் * திருப்பாற்கட லில் சேஷசயனத்தின்மீது பள்ளிகொண்டது, நப்பின்னைபிராட்டிக்காக ஏழுகாளை களைச் செருக்கடக்கினது, வாலி வதத்திற்கு அங்கமாக மராமரமேழெய்தது முதலானஸுப்ரஸித்த ப்ரேம லீலைகளையுடையவன்.

8. துரபிலபரஸம் — * என்னுள் கலந்தானைச் சொல் முடிவு காணேன் நான் * வாசாமகோசரமான ஆச்ரித ப்ரேமமுடையவன்.

9. ஸத்குணமோதஹ்ருத்யம் — * எல்லையில் சீர் என்கருமாணிக்கம்...... அல்லிமலர் விரையொத்து * சிறந்த திருக்குணங்களாலும் திவ்ய பரிமளத்தாலும் மனோஹரன்.

10. விச்வவ்யாவ்ருத்தசித்ரம் — * ஆணல்லன், பெண்ணல்லன், அல்லா அலியுமல்லன். * உலகிற்காணும் பொருள்களைப் போலல்லாதவனுய் அற்புதமாய் இருப்பவன். — ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை [வ்ரஜயுவதிகணக்யாதரீத்யா அந்வபுங்க்த] இந்த ஐந்தாவது திருவாய்மொழியிலே ஆழ்வார் 'தம்மோடே வந்து ஸம்ச்லேஷிக்கையாலே திவ்யாயுத திவ்யாபரணங்களெல்லாம் புதுக்கணிக்கப் பெற் ருன்' என்றுகந்து ஆயர்குலத்திலே வந்துபிறந்து தங்களோடே சேருகையாலே நிறம் பெற்ற குண விக்ரஹாதிகளையுடைய கண்ணபிரானை ஆய்ச்சிகள் அநுபவித் தாற்போலே அநுபவித்தார். நிகமனப்பாசுரத்தில் "குடக்கூத்தவம்மானைக் கூறுதலேமேவி" என்று ஆழ்வாருளிச்செய்ததை அடியொற்றி வ்ரஜயுவதீத்யாதி அருளிச் செய்யப்பட்டது.

தூப்புல்பிள்ளை பொன்னடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

அந்தாமத் தன்பால் அடியார்களோ டிறைவன்
வந்தாரத் தான்கலந்த வண்மையினால்—சந்தாபந்
தீர்ந்த சடகோபன் திருவடிக்கே நெஞ்சமே
வாய்ந்தவன்பை நாடோறும் வை.

### பதவுரை.

| | |
|---|---|
| நெஞ்சமே | மனமே! |
| அம் தாமத்து அன்பால் | ஸ்ரீ வைகுண்டத்திற் பண்ணும் விருப்பத்தோடே |
| அடியார்களோடு வந்து | (அஸ்த்ர பூஷணாதிகளாயுள்ள) நித்ய ஸூரிகளோடு கூடிப் (பரமபதத்தினின்றும்) வந்து |
| இறைவன் தான் | எம்பெருமான் |

| | |
|---|---|
| ஆர கலந்த வண்மையினால் | பரிபூர்ண ஸம்ச்லேஷம் தந்த ஔதார்யத்தினால் |
| சந்தாபம்தீர்ந்த | தாபம் நீங்கப்பெற்ற |
| சடகோபன் | ஆழ்வாருடைய |
| திரு அடிக்கே | திருவடிகளிலேயே |
| வாய்ந்த அன்பை | பொருத்தமான பக்தியை |
| நாள் தோறும் வை | எப்போதும் செலுத்துவாயாக. |

திருநாட்டிலுள்ள நித்யஸூரிகளோடே கூடி அநுபவிக்கவேணுமென்று பாரித்த ஆழ்வாருடைய மனோரதத்தை ஒருவாறு தீர்க்கநினைத்த எம்பெருமான் பரமபதத்தில் தனக்குள்ள விருப்பத்தை ஆழ்வார் பக்கலிலே பண்ணி, திவ்யாபரண திவ்யாயுதங்களாகிற நித்யஸூரிகளோடே தானே இந்நிலத்தில் திருநகரியேற எழுந்தருளி ஸம்ச்லேஷ ரஸம் தந்தருளினபடியாலே வருத்தம் தீரப்பெற்ற ஆழ்வாருடைய திருவடிகளிலேயே பக்தி பண்ணுமாறு திருவுள்ளத்திற்கு உரைத்தாராயிற்று. (௫௫)

ஜீயர் திருவடிகளே சரணம்.

### த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥

மிக விளங்குகின்ற மரகதக்குன்ற மொக்கு மெம்பெருமான் நித்யஸூரிகளோடு கூடினவனாய் வந்தருளி ஆழ்வாருடைய ஆர்த்தியைப் போக்கினவனாய் ஆழ்வாரோடே ஸம்ச்லேஷித்து, திருக்கண் திருக்கை திருவடி முதலிய அவயவங்கள் அப்போதலர்ந்த செந்தாமரை மலர்போல் விளங்கப் பெற்றவனாயினான் என்கிற விஷயத்தை இந்த ஐந்தாந் திருவாய் மொழியில் ஆழ்வார் அருளிச்செய்து மகிழ்ந்தார் என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து—ஆறாந் திருவாய்மொழி,
# வைகுந்தா மணிவண்ணனே.

## அவதாரிகை.

ஆடியாடி யென்னுந் திருவாய்மொழியில் ஆழ்வார்பட்ட ஆர்த்தியெல்லாம் தீர எம்பெருமான்வந்து ஸம்ச்லேஷித்தமை கீழ்த்திருவாய்மொழியில் சொல்லிற்று. அந்த ஸம்ச்லேஷத்தினால் எம்பெருமான் அளவுகடந்த த்ருப்தியை யடைந்தவனாய் 'இவ்வாழ்வார்க்கு என்னவுதவி செய்வேன் நான்!, இவர்க்கு என்ன கொடுப்பேன்!' என்று தடுமாறி நிற்பவனாய், இவ்வாழ்வார் நைச்யாநுஸந்தானம் பண்ணி 'இப் பரமபுருஷனையா நாம் அணுகுவது? நம்மால் இவனுக்கு நிறக்கேடு உண்டாகுமே! அஃது உண்டாகலாமோ? நாம் இவனைவிட்டு ஒதுங்கி நிற்பதே நன்று' என்று நினைத்து ஒருகால் அகன்று போய்விடுவாராயின் அலப்யலாபமான இதனை நாம் இழந்துவிடுவோமே! இவ்வாழ்வார்க்கும் நமக்கு முண்டான இக்கலவி நித்யமாயிருக்க வேணுமே' என்று அதிசங்கை கொண்டிருக்கையில், அதைத் தெரிந்துகொண்ட ஆழ்வார் 'பிரானே! நீ இங்ஙனம் அதிசங்கை கொள்ள வேண்டா; உன்னை நான் பிடித்தபிடி ஸாமாந்யமன்று; இனி ஒருநாளும் உன்னை நான் விடமாட்டேனாப்படி திடமாகப் பற்றிக்கொண்டேன் காண்' என்றுகூறி எம்பெருமானைத் தேற்றுகிறார் இத்திருவாய் மொழியில். ()

வைகுந்தா! மணிவண்ணனே என்பொல்லாத்திருக்குறளா! என்னுள்மன்னி *
வைகும் வைகல்தோறும் அமுதாய வானேறே!
செய்குந்தாவருந்தீமை யுன்னடியார்க்குத்தீர்த்து அசுரர்க்குத்தீமைகள்
செய்குந்தா! * உன்னைநான் பிடித்தேன்கோள் சிக்கெனவே. (க)

| | |
|---|---|
| வைகுந்தா | பரமபத நாதனே! |
| மணி வண்ணனே | நீலமணி போன்ற வடிவை யுடையவனே! |
| என் | என்னுடைய அனுபவத்திற்கு உரிய |
| பொல்லா திருகுறளா | அழகிய வாமன மூர்த்தியே! |
| என் உள் | என் மனத்தில் |
| மன்னி வைகும் | நிலைபெற்றுத் தங்கியிருப்பவனும் |
| வைகல்தோறும் | ஒவ்வொரு க்ஷணத்திலும் |
| அமுது ஆய | அம்ருதமாயிருப்பவனுமான |
| வான் ஏறே | நித்யஸூரி நாதனே!, |
| செய் | செய்யப்பட்டு |
| குந்தா | குறைபடாத |
| அரு தீமை | போக்குதற்கரிய பாவங்களை |
| உன் அடியார்க்கு தீர்த்து | உன் தொண்டர்கட்குப் போக்கி |
| அசுரர்க்கு | ஆஸுரப்ரக்ருதிகளுக்கு |
| தீமைகள் | அந்தத் தீமைகளை |
| செய் | உண்டாக்குகின்ற |
| குந்தா | பரிசுத்தனே! |
| உன்னை | இப்படிப்பட்ட வுன்னை |
| நான் | அடியேன் |
| சிக்கென | உறுதியாக |
| பிடித்தேன் | பிடித்துக்கொண்டவன் (என்று) |
| கோள் | திருவுள்ளம் பற்ற வேணும். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * [வைகுந்தா.] கீழ்த்திருவாய் மொழியில் இவர் கூறின பாசுரங்களில் “அல்லாவி யுள்கலந்த” என்றும் “என்முடிவு காணாதே யென்னுள் கலந்தானை” என்றும் பேசினார். அல்லாவி என்றதும் என்முடிவு காணாதே என்றதும் தம்முடைய நைச்சியத்தைக் காட்டினபடியாதலால், அந்த நைச்யாநுஸந்தானம் முற்றி இவர் நம்மை விட்டுவிடுவரோ? என்று எம்பெருமானுக்கு அதிசங்கை பிறக்க அதனை அகற்றிக்கொண்டு உன்னை நான் சிக்கனப் பிடித்தேன் என்கிறார்.

வைகுந்தா! என்பதனால் பரத்வத்தையும், மணிவண்ணனே! என்பதனால் ஸௌலப்யத்தையும் தெரிவிக்கிறார். மணியாவது சிறந்த ரத்னம்; அஃது எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் கைக்குள்ளே அடக்கியாளலாம்படியிருக்குமா போலே எம்பெருமானும் அடியவர்கையில் அடங்கியவன் என்பதைக் காட்டிற்றாகும். உன்னுடைய பெருமைகளையெல்லாம் மறந்து எனக்குக் கையாளாக ஆயினையே! என்று ஆழ்வார் வியந்து கூறுகிறபடி.

மஹாபலியின் யஜ்ஞபூமியிற் சென்றபோது பரமஸுந்தரமான வடிவைப் பரிக்ரஹித்து அவ்வடிவழகினாலும் மனோஹரங்களான வார்த்தைகளாலும் அந்த மாவலியை மயக்கினாப்போலே தம்மையும் மயக்கினானென்பது தோன்ற “என் பொல்லாத் திருக்குறளா” என்கிறார். எம்பெருமானைப்பற்றிச் சொல்லுமிடத்து பொல்லா என்று சொல்லலாமோ வென்னில்; த்ருஷ்டி தோஷம் வாராமைக்காகக் குழந்தைகளின் முகத்திலே கரிபூசுமாபோலே ஆழ்வாரும் ‘அழகிய’ என்று சொல்ல வேண்டிய ஸ்தானத்தில் இது சொல்லுகிறாரென்ப; விபரீத லக்ஷணை யென்று கொள்வது. அன்றியே, பொல்லா—தீதற்ற என்றலு மொன்று.

“திருக்குறளா வென்னுள் மன்னி” என்ற சொற்சேர்த்தி யழகினால் தொனிக்கும் அர்த்தத்தை நம்பிள்ளை அருளிச் செய்கிறபடி பாரீர்—“இந்த்ரன் ராஜ்யலாபம் பெற்றுப்போனான்; மஹாபலி ஔதார்யலாபம் பெற்றுப்போனான்; அவ்வடிவழகு(க்கு) ஊற்றிருந்தது இவர் நெஞ்சிலேயாயிற்று” என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. ஸ்ரீவாமநமூர்த்தியாய்த் திருவவதரித்து யாசகத்தொழில் செய்த காலத்திலே இந்திரன்தான் ஸாம்ராஜ்யம் பெற்றுக் களித்துப்போனானாகையாலே அவனும் அந்த வாமன வடிவழகை நெஞ்சிற்கொள்ள அவகாசம் பெற்றிலன்; மஹாபலி இழவோடே போனானாகையாலே அவனும் வடிவழகிலே யீடுபடப் பெற்றிலன்; சுக்கிரன் நமுசிபோல்வார் கண்ணிழந்தும் வானிற் சுழற்றப்பெற்றும் அல்லலோடே சென்றார்களாதலால் அவர்களும் இவ்வடிவழகை யநுபவிக்க இழந்தார்கள்; அக்குறைகளெல்லாந் தீர, ஆழ்வார்தாம் அவ்வழகை அப்படியே தம் திருவுள்ளத்தில் ஊன்றவைத்துக் கொண்டாரென்றவாறு.

வைகும் வைகல்தோறும் அமுதாய வானேறே! = க்ஷணந்தோறும் எனக்கு அபூர்வமான அம்ருதம்போலே பரம போக்யனாயிருப்பவனே!, உன்னுடைய போக்யதையை நித்யஸூரிகளுக்கு அநுபவிப்பிக்குமாபோலே அடியேனுக்கும் அநுபவிப்பித்தருள்பவனே! என்றபடி. வைகு மென்பதை வைகலினுங்கூட்டலாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



[செய்குந்தா வருந்தீமை இத்யாதி.] "செய், குந்தா, அருந்தீமை" என்றும் செய்கும், தாவருந் தீமை என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம்: முந்தினவகையில், செய்—செய்யப்பட்டு, குந்தா—தப்பாமல் பயன்தரக்கூடிய, அரு—ஸ்வப்ரயத்நத்தாலே போக்கிக்கொள்ளமுடியாத, தீமைகளைத் தொலைத்து என்று பொருள் காண்க. பிந்தினவகையில்செய்கும்—செய்யப்பட்டனவும், தாவரு—(பலன் அனுபவியாமல்) தப்பமுடியாதனவுமான பாவங்களைத் தொலைத்து என்று பொருள் காண்க. சொற்பிரிவில் சிறிது வாசியேயன்றி, கருத்தில் வாசியில்லை.

"𑌅𑌵𑌶𑍍𑌯𑌮𑌨𑍁𑌭𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌕𑍃𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌮𑍍 = அவச்யமநு போக்தவ்யம் க்ருதம் கர்ம சுபாசுபம்" என்றும் "𑌨𑌾𑌭𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑍍𑌷𑍀𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌕𑌲𑍍𑌪𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑍈𑌰𑌪𑌿 = நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடி சதைரபி" என்றும் சொல்லுகிறபடியே பல்லூழியூழி காலம்வரையிற் பலாநுபவம் பண்ணியே தொலைக்கவேண்டிய பாவங்களை பக்தர்கள் விஷயத்தில் க்ருபாமாத்திரத்தினாலே தொலைத்தருளி, ஆஸுரப்ரக்ருதிகளான தீயவர்திறத்திலே அவற்றின் பலனான நிக்ரஹத்தைச் செய்தருள்பவனே! என்றபடி. [முதற்பத்தில் "நாளுநின்றடு நமபழமையங் கொடுவினையுடனே மாளும்" (1—3—8) என்ற பாசுரத்தின் உரையிலே சாரீரகமீமாம்ஸையின் நிர்ணயத்தை யெடுத்து விரிய வுரைத்திருக்கின்றோம்; அஃது இவ்விடத்திற்கும் அறியவுரியது; அங்கே கண்டுகொள்க.]

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"கடக்கவரிதான தீமைகளை உன்பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருப்பார்க்கு வாராதபடி பரிஹரித்து ஆஸுரப்ரக்ருதிகளின்மேலே பொகடும்படியான சுத்தியை யுடையவனே!. முன் ப்ராதிகூல்யம் பண்ணினவர்கள் அநுகூலித்து நாலடி வரநின்றவாறே பின்னை அவர்கள் சத்ருக்கள்மேலே பொகடுமாயிற்று.—'𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌃 𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌮𑍍—த்விஷந்த: பாபக்ருத்யாம்' என்கிறபடியே. கடலுக்குத் தொடுத்த அம்பை, அவன் முகங்காட்டினவாறே மருகாந்தாரத்தில் அஸுரர்கள்மேலே விட்டாப்போலே. அங்ஙன் ஒரு போக்கடி கண்டிலனாகில் '𑌉𑌰𑌸𑌾 𑌧𑌾𑌰𑌯𑌾𑌮𑌾𑌸 𑌪𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸𑌂𑌛𑌾𑌦𑍍𑌯 𑌮𑌾𑌧𑌵𑌃—உரஸா தாரயாமாஸ பார்த்தம் ஸஞ்சாத்ய மாதவ:' என்று பகதத்தன் விட்ட சக்தியை அர்ஜுநனைத் தள்ளித் தன் அந்த:புரத்திலே ஏற்றுப் போலே தான் ஏறிட்டுக்கொண்டு அநுபவித்தல் செய்யுமித்தனை." என்று.

குந்தா! = இதற்கு மூவகையாகப் பொருள் கொள்ளலாம்: 1. குந்தமென்று குருந்தமலரின் பூவைச் சொன்னபடியாய், அது வெண்ணிறத்ததாதலால் அதுபோல் நிஷ்கல்மஷமான ஸ்வபாவ முடையவனே!. 2. "𑌕𑍁𑌮𑍁𑌦𑌃 𑌕𑍁𑌨𑍍𑌦𑌰𑌃 𑌕𑍁𑌨𑍍𑌦𑌃—குமுத: குந்தர: குந்த:" என்று ஸஹஸ்ரநாமமாதலால் இங்குக் குந்தனென்று ஒரு திருநாமஞ் சொன்னபடியாகலாம். அத்திருநாமத்திற்கு சங்கராசார்யர் உரைத்த பொருள்:—குந்த மலர்போல அழகான அங்கமுடையவர்; ஸ்படிகம்போலத் தெளிவாயிருப்பவரென்கை. பரசுராமாவதாரத்தில் பூமியைக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கச்யபருக்கு யாக தக்ஷிணையாகக் கொடுத்தவர்; பூமியை க்ஷத்ரியர்களில்லாமற் கண்டித்தவர்.—இத் திருநாமத்திற்கு ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த அர்த்த மாவது—ஞானம் வைராக்யம் முதலிய முற்படிகள் ஏறினவர்களுக்குப் பரபக்தி பரஜ்ஞானம் பரமபக்திகளாகிய மேற்படிகளைக் கொடுப்பவர்; அழிக்கப்பட்ட பாவம் திரும்பி யணுகாமலிருக்கும்படி போக்குகிறவர் என்பதாம்.

3. வடமொழியில் குந்தமென்று ஒரு ஆயுத விசேஷத்திற்கு [ஈட்டிக் கு]ப் பெயராதலால் அதனை யுடையவரே! என்னவுமாம். ஷோடசாயுதங்களில் குந்தமும் பகவானுக்கு ஒரு ஆயுதமாகும். (இப்பொருள் பன்னீராயிரப்படி யுரையிற் காண்பது.)

உன்னை நான் சிக்கனப்பிடித்தேன்—என்னை நீ விட்டாலும் உன்னை நான் விடமுடியாதபடி பற்றிக்கொண்டேன். ... ... ... (க)

சிக்கெனச்சிறிதோரிடமும் புறப்படாத்தன்னுள்ளே * உலகுகள்
ஒக்கவேவிழுங்கிப் புகுந்தான்புகுந்ததற்பின் *
மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்த் துளக்கற்றமுதமாய் * எங்கும்
பக்கநோக்கறியான் என்பைந்தாமரைக்கண்ணனே. (உ)

| | |
|---|---|
| சிறிது ஓர் இடமும் | மிக அற்பமான இடமும் |
| புறப்படா | வெளிப்பட்டிராமல் [எல்லாம் உள்ளே யடங்கும்படி] |
| உலகுகள் | உலகங்களை |
| தன் உள் | தனக்குள்ளே |
| ஒக்க | சமமாக |
| விழுங்கி | அமுது செய்து (அந்தத் திருக்கோலத்துடனே) |
| சிக்கன | உறுதியாக |
| புகுந்தான் | என்னுள் பிரவேசித் தான்; |
| புகுந்ததன்பின் | பிரவேசித்தபின் |
| மிக்க | மிகுந்த |
| ஞானம் வெள்ளம் | ஞானப்பிரவாஹமாகிற |
| சுடர் | ஒளியுள்ள |
| விளக்கு ஆய் | தீபமாகி |
| துளக்கு அற்று | (நான் ஒருகால் விட்டு விடுவேனோ என்கிற) ஸந்தேஹம் தீர்ந்து |
| அமுதம் ஆய் | அம்ருதமாகி |
| என் | எனக்கு விதேயனான |
| பைந் தாமரை கண்ணன் | அழகிய தாமரைமலர் போன்ற திருக்கண்களை யுடைய பெருமான் |
| எங்கும் | எவ்விடத்திலும் |
| பக்கம் நோக்கு அறியான் | திரும்பிப்பார்ப்பது மின் றியே யிராநின்றான். |

* * * [சிக்கனச்சிறிது] எம்பெருமான் ஆழ்வார் தம்மோடே கலந்து மிக்க ஒளி பெற்றானைக் கொண்டு வேறு போக்கிட மற்றுத் தம் பக்கலிலேயே படுகாடு கிடக்கிறபடியைப் பேசுகிறார்.

"உலகுக ளொக்கவே விழுங்கிப் புகுந்தான்" என்ற சொல் நயத்தை நோக்கி ஆறாயிரப்படியில் பிள்ளானருளிச் செய்கிறார்—"ஜகத் ஸ்ருஷ்ட்யாதி அந்ய பரதையைப் போக்கிக்கொண்டு என்னுள்ளே புகுந்தான்" என்று. அதை



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அடியொற்றி ஈடு முப்பத்தாறுயிரத்திலும்—“ நாம் ஆழ்வாரை யநுபவிக்கும் போது செருப்புவைத்துத் திருவடி தொழப்புக்காப்போலே யாகவொண்ணாது என்று பார்த்து ஜகத்ரக்ஷணத்துக்கு வேண்டும் ஸம்விதாநமெல்லாம் பண்ணி அநந்யபரனாய் அநுபவித்து, போகமாட்டாதே யிருந்தான்; ராஜாக்கள் அந்தஃபுரத்திலே புகுவது நாட்டுக்கணக்கு அற்றபின்பிறே” என்றருளிச் செய்தார். பாசுரத்தில், உலகுகளை விழுங்கினது மாத்திரமே சொல்லப்பட்டிருந்தாலும் ஜகத்ரக்ஷணார்த்தமாக எம்பெருமான் செய்யும் ஸகல காரியங்களுக்கும் அது உபலக்ஷணமாக இங்குக் கொள்ளத்தக்கது. உலகுக்குச் செய்யவேண்டிய காரியங்களை யெல்லாம் ஒருவாறு செய்து முடித்துக்கொண்டு க்ருதக்ருத்யனாய் ஆழ்வாரை யநுபவிக்கப் புகுந்தானாம்.

அங்ஙனம் புகுந்தபின்பு எம்பெருமானுக்குண்டான வைலக்ஷண்யம் பின்னடிகளிற் கூறப்படுகின்றது. அவன்தான் இயற்கையிலே ஸர்வஜ்ஞனாயிருக்கச் செய்தேயும் ஆழ்வாரோடு கலப்பதற்கு முன்பு அந்த ஸர்வஜ்ஞத்வம் சிறிது சுருங்கியிருந்து பிறகு விரிந்ததுபோலும். பெரிய பிராட்டியார் வந்து திருமுலைத்தடத்தாலே நெருக்கி யணைத்தாலும் புரிந்து பார்க்கவறியாதபடி இங்கே அத்யந்தம் ஆழங்காற்பட்டான்.

எங்கும் பக்கநோக்கறியான் என்ற விடத்து ஈட்டில் ஒரு ஐதிஹ்ய ஸம்வாதம் காட்டப்படுகிறது. அதாவது—மணக்கால்நம்பி ஆளவந்தாரை விசேஷகடாக்ஷம் செய்தருளின பின்பு ஒருநாள் “ குருகை காவலப்பனிடத்திலே யோகரஹஸ்ய முண்டு” என்று ஆளவந்தார்க்குச்சொல்ல, அவரும் அப்பன் ஸ்ரீபாதத்திலே சென்று அதைப் பெறவேணுமென்று விரும்பி அவரெழுந்தருளியிருக்குமிடமான கங்கைகொண்ட சோழபுரத்தேறச் செல்ல, அப்பனும் அங்கே ஒரு குட்டிச்சுவரிலே யோகநிரதராய் எழுந்தருளியிருக்க, அப்போது அவர்க்கு ஸமாதிபங்கம் பண்ணவொண்ணாதென்றெண்ணிய ஆளவந்தார் அந்தச் சுவர்க்கு இப்பால் நிற்க, யோகநிஷ்டரான அப்பனும் திரும்பிப்பார்த்து ‘இங்குச் சொட்டைக் குலத்தார் ஆரேனும் வந்தாருண்டோ?’ என்று கேட்க, உடனே ஆளவந்தார், அடியேன் என்று எதிரே சென்று தண்டன் ஸமர்ப்பித்து, ‘அடியேன் இங்கு விடைகொண்டது தேவரீருக்குத் தெரியாதபடி பின்னே நிற்க, தேவரீர் அறிந்தது எங்ஙனே?’ என்று கேட்க, அதற்குக் குருகை காவலப்பனருளிச்செய்த வார்த்தை—எம்பெருமானும் நானுமாக அநுபவித்துக் கொண்டிருந்தால் பெரிய பிராட்டியார் திருமுலைத்தடத்தாலே நெருக்கி யணைத்தாலும் அவளது முகத்தையுங்கூடப் பாராத ஸர்வேச்வரன் என் கழுத்தை யமுக்கி நாலு மூன்று தரம் நீரிருந்த பக்கமாக எட்டிப்பார்த்தான்; அப்படி அவன் பார்க்கும்போது சொட்டைக்குலத்திலே சிலர் வந்திருக்கவேணும் என்றிருந்தேன்காணும் என்றார். ஸ்ரீமந்நாத முனிகளின் குலம் சொட்டைக்குல மெனப்படும். ஆழ்வார் பக்கலில் எம்பெருமான் பண்ணியிருந்த விசேஷ கடாக்ஷம் அவர்க்குப்பிறகு ஸ்ரீமந்நாத முனிகளின் திருவம்சத்தில் பெருகத் தொடங்கிற்றென்பது இங்கு அறியத்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தக்கது. "எங்கும் பக்க நோக்கறியான்" என்ற விடத்திற்கு இது மிகப் பொருத்தமான ஸம்வாதம். ... .... ... (உ)

தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவும் தலைமகனை * துழாய்விரைப்
பூமருவுகண்ணி யெம்பிரானைப்பொன்மலையை *
நாமருவிநன்கேத்தியுள்ளிவணங்கி நாம்மகிழ்ந்தாட * நாவலர்
பாமருவிநிற்கத்தந்த பான்மையேவள்ளலே ! (௩)

| | |
|---|---|
| தாமரை கண்ணனை | தாமரைமலர் போன்ற திருக்கண்களை யுடையவனும் |
| விண்ணோர் பரவும் | நித்யஸூரிகள் புகழ்கின்ற |
| தலைமகனை | ஸ்வாமியும் |
| விரை பூ மருவு | பரிமளமுள்ள புஷ்பங்கள் பொருந்திய |
| துழாய் கண்ணி | திருத்துழாய் மாலையையணிந்த |
| எம்பிரானை | எம்பெருமானும் |
| பொன் மலையை | பொன்மலைபோன்று உயர்ந்து விளங்குபவனுமான திருமாலை |
| நாம் மருவி | யாம் அடைந்து |
| நன்கு ஏத்தி | நன்றாகத் துதித்து |
| உள்ளி | சிந்தித்து |
| வணங்கி | நமஸ்கரித்து (இப்படி மூன்று கரணங்களாலு முண்டான அநுபவத்தாலே) |
| நாம் மகிழ்ந்து ஆட | நாம் ஸந்தோஷத்தோடே நர்த்தனம் பண்ணும்படியாகவும் |
| நா அலர் பா மருவி நிற்க | நாக்கில் அலர்கின்ற பாசுரங்களிலே பொருந்தி நிற்கும்படியாகவும் |
| தந்த | உபகாரம் செய்தருளின |
| வள்ளல் பான்மை ஏ | உதாரகுணம் என்னே ]. |

* * * [தாமரைக் கண்ணனை.] நித்ய ஸூரிகளுக்குப்போலே எனக்குத் தன்னுடைய ஸௌந்தரியம் முதலானவற்றை வருணிப்பதற்குப் பாங்கான வாக்கை அளித்தருளினனெம்பெருமான்; அவனுடைய வள்ளல்தனம் இருக்கும்படி என்னே ! என்று விஸ்மயப்படுகிறார்.

"தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவுந் தலைமகனை" என்ற சொற் சேர்த்தியினால் கிடைக்கும் ரஸப்பொருளை நம்பிள்ளை காட்டுகிறார்—"ஒருகால் திருக்கண்களாலே குளிர நோக்கினால் அதிலே தோற்று ஜ்வரஸந்நிபதிதரைப்போலே அடைவுகெட ஏத்தாநிற்பர்களாயிற்று நித்யஸூரிகள் என்று. நித்யஸூரிகளைத் தன்னுடைய கண்ணழகிலே தோற்பித்து அதைப்பற்றியே அவர்கள் வாய் வெருவிக்கொண்டிருக்குமாறு செய்வதுபோல அடியேன் திறத்திலும் செய்தருளினனென்பது குறிப்பு.

[துழாய் விரை யித்யாதி.] பூவும் பரிமளமும் மாறாதேயிருக்கும் திருத்துழாய் மாலையாலே அலங்கரிக்கப்பட்ட தன்னுடைய வடிவழகை எனக்கு நிர்ஹேதுகமாகக் காட்டித்தந்தவனென்றவாறு. [பொன்மலையை] ஆழ்வாரை விட்டுப் பெயர்ந்து போகமாட்டாமல் ஸ்தாவரப்ரதிஷ்டையாக எம்பெருமானிருக்கிற விருப்புக்குப் பொன்மலை உவமை யென்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



[நாம் மருவி யித்பாதி.] நித்பஸூரிகள் துதிக்கவேண்டிய விஷயத்தை அயோக்யனான நானும் நன்கு பொருந்தித் துதிக்கும்படியாகச் சில பாசுரங்களைப் பாடுந்திறமையை எனக்குத் தந்தருளின ஔதார்யம் என்னே! என்றதாயிற்று. மூன்றாமடியில் நாம் என்கிற சொல் இரண்டு தடவை வந்தது தம்முடைய தகுதியின்மையைச் சுட்டிக் காட்டுதற்காம். ... .... ... (௩)

வள்ளலே! மதுசூதனா! என்மரதகமலையே! * உனைநினைந்து
எள்கல்தந்தவெந்தாய்! உன்னையெங்ஙனம் விடுகேன்? *
வெள்ளமேபுரைநின்புகழ்குடைந்தாடிப்பாடிக் களித்துகந்துகந்து *
உள்ளநோய்களெல்லாந்துரந்து உய்ந்துபோந்திருந்தே. (௪)

| | |
|---|---|
| வள்ளலே | உதாரனே! |
| மது சூதனா | மதுஸூதனனே! |
| என் மரகதம் மலையே | என்னுடைய அநுபவத்திற்குரிய மரகதமலை போன்றவனே! |
| உனை நினைந்து | உன்னை யநுஸந்தித்து |
| எள்கல் | ஈடுபட்டிருக்கும்படியான தன்மையை |
| தந்த | உண்டாக்கின |
| எந்தாய் | ஸ்வாமியே!, |
| வெள்ளமே புரை | கடல் போன்ற |
| நின் புகழ் | உன்னுடைய திருக்குணங்களில் |
| குடைந்து | மூழ்கி |
| ஆடி பாடி | ஆடியும் பாடியும் |
| களித்து | செருக்குக் கொண்டு |
| உகந்து உகந்து | மிகவும் மகிழ்ந்து |
| உள்ள நோய்கள் எல்லாம் துரந்து | உண்டான துன்பங்களெல்லாம் தொலையப் பெற்று |
| உய்ந்து | உஜ்ஜீவித்து |
| போந்து இருந்து | (உன்னைக்) கிட்டினவனாயிருந்துவைத்து |
| உன்னை எங்ஙனம் விடுகேன் | உன்னை எப்படி விட்டுடுவேன்?. |

* * * [வள்ளலே.] கீழ்ப்பாட்டில் நாம் நாம் என்று ஒரு தடவைக்கு இரு தடவையாகச் சொன்னது ஆழ்வார் தம்முடைய நைச்சியத்தை யெடுத்துக்காட்டினபடியாதலால், நைச்சியாநுஸந்தானம் பண்ணப் புகுந்தவிவர் நம்மை யொருகால் விட்டுவிடுவரோ? என்று எம்பெருமான் அதிசங்கை கொள்ள, உன் வடிவழகை நிர்ஹேதுகமாக நீயே யென்னை அநுபவிப்பிக்க அநுபவித்து அதனாலே சிதிலனா யிருக்கின்ற நான் உன்னைவிட ப்ரஸக்தியுண்டோ வென்கிறார். உலகத்தில் தானஞ் செய்கிறவர்களெல்லாரும் வள்ளல் என்று சொல்லப்படார்கள்; ஒரு வித வுபகாரமும் செய்யாதவர்களிடத்துக் கைம்மாறு கருதாமல் உபகாரம் செய்பவர்களே வள்ளல் எனப்படுவார்கள். இங்கு அப்படியே எம்பெருமான் நிர்ஹேதுகமாகத் தம்மை விஷயீகரித்தமை தோன்ற வள்ளல்! என்கிறார். எம்பெருமான், தன்னை ஸர்வஸ்வதானமாகக் கொடுத்தாலும் பெற்றுக்கொள்ள வொண்ணாதபடி தடையாக நிற்கக்கூடிய பிரதிபந்தகங்களையும் தானே போக்கித்தந்தானென்ற கருத்துப்பட மதுசூதனா என்கிறார். "நீ உன்னைத் தருமிடத்தில் நான் ஸ்வீகரியாதபடி பண்ணும் விரோதிகளை, மதுவாகிற அஸுரனை நிரஸித்தாப்போலே நிரஸித்தவனே" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



எம்பெருமான் தமக்கு உபகரித்தருளினது அவன்றன்னுடைய அற்புதமான வடிவழகு என்பது தோன்ற என் மரதகமலையே! என்கிருர். பச்சைமா மலைபோன்ற திருமேனியை எனக்கு அநுபவிக்கத் தந்தருளினவனே! என்றபடி.

உனை நினைந்து எள்கல்தந்த எந்தாய் = இதற்கு இரண்டுவகையாகப் பொருள் கூறுவர்; எள்கல் என்பதற்கு இகழ்ச்சியும் ஈடுபாடும் பொருளாகும்; இகழ்ச்சியாகப் பொருள்கொண்டால், உன்னைச் சிந்தித்து விஷயாந்தரங்களை நான் இகழ்ந்துவிடும்படி பண்ணினவனே! என்றதாம்; ஈடுபாடாகப் பொருள் கொண்டால், உன்னை யநுஸந்தித்து, "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" [பெரிய திருவந்தாதி-34] என்கிறபடியே ஆழ்ந்து ஈடுபடும்படி பண்ணித்தந்தவனே! என்றதாம்.

உன்னை எங்ஙனம் விடுவேன் = உன் பக்கலில் எந்த விஷயத்திற் குறை கண்டு உன்னை விடுவேன்? ஔதார்யம், விரோதிநிரஸநசீலத்வம், வடிவழகிற் சிறப்பு முதலிய எல்லாவற்ருலும் குறையற்றிருக்கிற வுன்னை எப்படி விடுவேன்?

பின்னடிகளில் தம்முடைய நிலைமையின் வைலக்ஷண்யத்தை விவரித்துரைக்கின்ருர்; கடல்போன்ற வுன்னுடைய திருக்கல்யாண குணங்களை ஓரிடமொழியாமே எங்கும்புக்கு அவகாஹித்து அதனாலுண்டான மகிழ்ச்சி மிகுதியினுல் ஆடிப்பாடிக்களித்து க்ஷணந்தோறும் ப்ரீதி பெருகிவர, அயோக்யதாநுஸந்தாநத்தாலும் விச்லேஷத்தாலும் வந்த வ்யஸநங்களெல்லாவற்றையும் போக்கி உஜ்ஜீவித்து உன் திருவடிவாரத்திலே வந்து சேர்ந்திருக்கின்ற யான் உன்னையெங்ஙனம் விடுகேன்? என்று அந்வயிப்பது. ... ... (ச)

உய்ந்துபோந்தென்னுலப்பிலாத வெந்தீவினைகளைநாசஞ்செய்து * உனது
அந்தமிலடிமையடைந்தேன் விடுவேனே? *
ஐந்துபைந்தலையாடரவணைமேவிப் பாற்கடல்யோகநித்திரை *
சிந்தைசெய்தவெந்தாய்! உன்னைச்சிந்தைசெய்துசெய்தே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| பால் கடல் | திருப்பாற்கடலிலே | எந்தாய் | என் ஸ்வாமியே!, |
| ஐந்து | ஐந்தாகிய | உன்னை | உன்னை |
| பை தலை | படங்களோடுகூடிய சிரங்களை யுடையவனுய் | சிந்தை செய்து செய்து | நிரந்தரமாகச் சிந்தித்து |
| ஆடு | ஆடுகின்ற | உய்ந்து போந்து | உஜ்ஜீவனம் பெற்று |
| அரவு | ஆதிசேஷனுகிற | உலப்பு இலாத | முடிவில்லாத |
| அணை | சயனத்தின்மீது | வெம் | கொடிய |
| யோகநித்திரை | யோகநித்ரையிலே | என் தீ வினைகளை | எனது பாவங்களை |
| மேவி | பொருந்தி | | |
| சிந்தை செய்த | லோகரக்ஷண சிந்தனை பண்ணின | நாசம் செய்து | தொலைத்து |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| உனது | உன்னுடைய | அடைந்தேன் | அடைந்தவனான நான் |
| அந்தம் இல் | முடிவில்லாத | | |
| அடிமை | கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை | விடுவேனோ | இனிவிட்டு நீங்குவேனோ? |

* * * [உய்ந்து போந்து.] நித்ய கைங்கர்யத்திலே ஊன்றியிருக்குமடியேன் உன்னை விடுவதற்கு ப்ரஸக்திலேசமுமில்லையென்று மீளவும் வற்புறுத்திப் பேசுகிறார்.

உய்ந்து போந்து என்றது ஸ்வரூபலாபம் பெற்றமை சொன்னபடி. இதற்கு முன்னே "அஸந்நேவ ஸ பவதி—அஸந்நேவ ஸ பவதி" என்னும்படி கிடந்த நான் இப்போது சேதநகோடியிற் புகுந்தேனென்றபடி. அஸத்தான நிலைமை தவிர்ந்து ஸத்தான நிலைமை யடைந்தவாறே பாவங்களெல்லாம் தொலையப் பெறுகையாலே என் உலப்பில்லாத வெந்தீவினைகளை நாசஞ்செய்து என்கிறார். உலப்பு—முடிவு; எத்தனை காலமனுபவித்தாலும் முடிவு பெறமாட்டாத கொடுவினைகளெல்லாம் தொலையப் பெற்று என்றவாறு. உனது அந்தமில் அடிமை யடைந்தேன் விடுவேனோ? = ஆத்மா வுள்ளவரையில் கைங்கரியம் செய்வது தவிர வேறு விதமான போதுபோக்கைக் கொள்வதில்லை யென்று திண்ணிய வுறுதி கொண்ட நான் எவ்விதத்திலும் உன்னை விடுவதற்கு ப்ரஸக்தியில்லை யென்றபடி. அந்தம் இல் அடிமை = ஆத்மஸ்வரூபத்திற்கு அந்தம் இல்லாமையாலே ஸ்வரூபாநுபந்தியான கைங்கரியத்திற்கும் அந்தமில்லை யென்க.

அடிமையின் சுவையை யறிந்த திருவனந்தாழ்வான் உன்னை விடாதது போலவே நானும் விடமாட்டே னென்ற கருத்துப்படப் பின்னடிகள் அருளிச்செய்கிறார். பெருவெள்ளம் பெருகப்புகுந்தால் பல வாய்க்கால்கள் உண்டாவது போல, பகவதநுபவத்தால் வந்த ஆனந்த மிகுதிக்குப் போக்கு வீடாகப் பல தலைகளையுடையனாய், மதுபானத்தினால் மதித்தவர்கள்போல் ஆடாநிற்பவனாய், மென்மை குளிர்ச்சி நறுநாற்றம் முதலிய நலங்களை யுடையனான திருவனந்தாழ்வான்மேலே திருப்பாற் கடலிலே 'ஸகல ப்ராணிகளும் துயர்தீர்ந்து உய்யும் வகை என்னோ!' என்ற யோக நித்ரையிலே யிராநின்ற எம்பெருமானே! எங்களைப் பற்றி நீ நினைத்திருப்பதுபோல உன்னைப்பற்றி நான் இடைவிடாது நினைத்திருப்பவனாதலால் ஒரு நொடிப்பொழுதும் உன்னைவிட ப்ரஸக்தி யில்லைகாண் என்றாராயிற்று. ... ... ... ... (ரு)

உன்னைச்சிந்தைசெய்துசெய்து உன்னெடுமாமொழியிசைபாடியாடி * என்
முன்னைத்தீவினைகள் முழுவேரரிந்தனன்யான் *
உன்னைச்சிந்தையினாலிகழ்ந்த இரணியனகல்மார்வங் கீண்ட * என்
முன்னைக்கோளரியே! முடியாததென்னெனக்கே? (சு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| உன்னை | உன்னை |
| சிந்தையினால் | நெஞ்சாலே |
| இகழ்ந்த | அநாதரித்த |
| இரணியன் | ஹிரண்யகசிபுவினுடைய |
| அகல் மார்வம் கீண்ட | அகன்ற மார்பைக் கிழித்தவனும் |
| என் | எனக்கு அநுபவிக்க வுரியவனும் |
| முன்னை | அநாதி வித்தனுமான |
| கோள் அரியே | மிடுக்குடைய நரசிங்க மூர்த்தியே! |
| உன்னை சிந்தை செய்து செய்து | உன்னை இடையறாது சிந்தித்து |
| நெடு | உயர்ந்த |
| உன்மாமொழி | உன்னைப்பற்றின திரு வாய் மொழியை |
| இசை பாடி | இசையுடனே பாடி |
| ஆடி | (ஆனந்தத்திற்குப் போக்கு வீடாக) ஆடி |
| என் முன்னை தீ வினைகள் | எனது தொல்லைப் பாவங்களை |
| யான் | நான் |
| முழு வேர் அரிந்தனன் | முழுதும் வேரோடு அறுத்தொழித்தேன்; |
| எனக்கு | அடியேனுக்கு |
| முடியாதது என் | (இனி) அஸாத்யமான துண்டோ? |

* * * [உன்னைச் சிந்தை செய்து செய்து] ஆழ்வாரே! உமக்கு நான் இனிச் செய்யவேண்டுவதென்ன? என்று எம்பெருமான் கேட்க, நான் பெறாததுண்டோ? எல்லாம் பெற்றேனே; இனிச் செய்யவேண்டுவதொன்றுமில்லை காண் என்கிறார். ஆச்ரிதன் ப்ரதிஜ்ஞை பண்ணின ஸமயத்திலே வந்து தோன்றுமியல்வினனாக நீயிருக்கும்போது எனக்கு என்ன குறை யென்கிறார். ஆபத்துக்கு உதவுமவனாய் ப்ராப்த சேஷியாய்ப் பரம போக்யனாயிருக்கின்ற வுன்னை அநவரதமும் ஹ்ருதயத்திலே பாவனை பண்ணி, உன்னுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளுக்கு வாசகமான இத்திருவாய்மொழியை இசையோடே பாடி, அப்பாட்டுக்கு ஈடான அபிநயம் தோற்றும்படி ஆடி, இப்படி மனமொழி மெய்கள் மூன்றினாலு முண்டான போகத்தாலே என்னுடைய அநாதி பாபங்களை ஒன்றொழியாமல் வேரோடே அறுத்தொழித்தேன் என்பது முன்னடிகளின் கருத்து.

ப்ரஹ்லாதாழ்வானுக்காக நரஸிம்ஹாவதாரம் செய்தருளினபடியைப் பின்னடிகளிற் பேசுகிறார். சிந்தையினாலிகழ்ந்த என்ற விடத்து ஒரு விசேஷார்த்தமுண்டு: ஒருவன் எம்பெருமானைத் துதி செய்கிறான், ஒருவன் நிந்தனை செய்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள்; துதி செய்பவன் நாபியிலிருந்தெழுந்த அன்போடே துதி செய்கிறானா? கபடமாக மேலெழத் துதி செய்கிறானா என்று ஆராய்ந்து பார்ப்பதில் எம்பெருமான் ப்ரவர்த்திப்பதில்லை; பக்தனென்று கைக்கொள்வதற்கு, 'ஸஹ்ருதயமாகவோ அஹ்ருதயமாகவோ துதிசெய்பவனிவன்' என்று சிறிது வியாஜம் கிடைத்தாலும் போதும். நிந்தனை செய்பவனிடத்திலோ வென்னில், இவனுக்குப் பகை உள்ளூற இருக்கின்றதா என்பதை ஆராய்ந்து பார்த்து அப்படியிருப்பதாகத் தெரிந்தாலொழியத் தண்டிப்பதில்லை. ஆகவே தான் இரணியனை நெஞ்சு தொட்டுப் பிளந்து உள்ளிலும் ஆராய்ந்து பார்த்தானாம். பகவத் விஷயத்தில் அவனுக்கு இருந்த பகை மேலெழ்வன்று; உள்ளூறவேயிருந்ததாம். அது தெரிந்தபின்பே அவனைத் தண்டிக்கலானார். இது தோன்ற,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சிந்தையினால் என்று ஆழ்வார் விசேஷித்து அருளிச் செய்தாரென்க. எம்பெருமானுக்கு அநுக்ரஹத்திலேயே அதிக நோக்கு என்பது இதனால் பெறப்படும். ()

முடியாததேன்னேனக்கேலினி முழுவேழுலகுமுண்டான் * உகந்துவந்து
அடியேனுள்புகுந்தான் அகல்வானு மல்லனினி *
செடியார்நோய்களெல்லாம்துரந்து எமர்கீழ்மேலெழுபிறப்பும் *
விடியாவெந்நரகத்து என்றும்சேர்தல்மாறினரே. (எ)

| | |
|---|---|
| முழு எழ் உலகும் உண்டான் | எழுலகங்களையும் முற்ற அமுது செய்து (பிரளயங் கொள்ளாதபடி காத்தருளின) பெருமான் |
| உகந்து | விரும்பி |
| அடியேன் உள் வந்து புகுந்தான் | அடியேனுள்ளத்தில் வந்து புகுந்தான்; |
| இனி அகல்வானும் அல்லன் | இனிமேல் (அப்பெருமான்) அகன்றுபோகவும் மாட்டான்; |
| கீழ் மேல் எழு பிறப்பும் | கீழும் மேலும் எழ் பிறப்புக்களிலும் |
| எமர் | எம்மவர்கள் |
| செடி ஆர் நோய்கள் எல்லாம் துரந்து | பெருங்காடாகப் பரம்பின நோய்களெல்லாம் தொலையப் பெற்று |
| என்றும் | ஒருநாளும் |
| விடியா | ஓய்வில்லாத |
| வெம் நரகத்து | கொடிய ஸம்ஸார நரகத்தில் |
| சேர்தல் மாறினர் | சேராமலிருக்கும்படி பெற்றார்கள்; |
| இனி | இப்படியான பின்பு |
| எனக்கு | எனக்கு |
| முடியாதது என் | எல்லாம் ஸித்தமே. |

* * * [முடியாததேன்.] கீழ்ப்பாட்டில் "முடியாததென் எனக்கே!" என்றார்; எல்லாம் பெற்றுவிட்டீரோ? என்று அன்பர் கேட்க, என்னிடத்து எம்பெருமான் பண்ணின விசேஷ கடாக்ஷத்தாலே என்னோடு ஸம்பந்தி ஸம்பந்திகளானவர்களுங்கூட உஜ்ஜீவிக்கப் பெற்றார்களே! இன்னமும் நான் பெறவேண்டியது என்ன இருக்கிறது என்கிறார்.

பிரளய காலத்தில் இந்த ஜகத்தை யெல்லாம் தன் திருவயிற்றிலே வைத்துக் கொண்டவன், ஜகத்துக்குத் தன்னை யொழியச் செல்லாதாப்போலே என்னை யொழியத் தனக்குச் செல்லாமை தோன்ற மிக்க அபிநிவேசத்தோடே என்னுள்ளே வந்து புகுந்தான், ஒருநீராகக் கலந்தான். அந்த ஜகத்து ப்ரளயங் கழிந்தவாறே அகன்று போயிற்றே; இங்கு அப்படியன்று; இனி அகல்வானுமல்லனிவன். இதனால் எனக்குண்டான பேறு பனைநிழல்போலே என்னொருவனளவிலே விச்ரமித்துப் போவதன்று; [கீழ்மேல் எழுபிறப்பும் எமர் செடியார் நோய்களெல்லாம் துரந்து விடியா வெந்நரகத்து என்றும் சேர்தல் மாறினர்.] எம்பெருமானுக்கு என்பக்கல் அபிநிவேசம் என்னொருத்தனளவில் பர்யவஸியாமல் என்னோடு ஸம்பந்தித்தவர்கள் மீதும் வெள்ளங் கோத்தது என்கிறார்.

விடியா வெந்நரக மென்கிறது ஸம்ஸாரத்தை. அந்த நரகம் ஒரு நாள் வரையிலே விடியும்; இது விடியாத வெந்நரகம். .... ... (எ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மாறிமாறிப்பலபிறப்பும்பிறந்து அடியையடைந்துள்ளம்தேறி *
ஈறிலின்பத்திருவெள்ளம் யான்மூழ்கினன் *
பாறிப்பாறியசுரர்தம் பல்குழாங்கள்நீறெழ * பாய்பறவையொன்
றேறிவீற்றிருந்தாய்! உன்னையென்னுள் நீக்கேலெந்தாய். (அ)

| | |
|---|---|
| பல பிறப்பும் | பல பிறவிகளிலும் |
| மாறி மாறி பிறந்து | பலகாலும் பிறந்து (இப்படிச் செல்லுகிற ஜன்ம பரம்பரைகளிலே இன்று) |
| அடியை அடைந்து | உன் திருவடிகளைக் கிட்டி |
| உள்ளம் தேறி | மனம் தெளிந்து |
| ஈறு இல் | முடிவில்லாத |
| இன்பத்து இரு வெள்ளம் | ஆனந்தப் பெரு வெள்ளத்திலே |
| யான் மூழ்கினன் | நான் ஆழ்ந்துவிட்டேன்; |
| அசுரர் தம் | அஸுரர்களினுடைய |
| பல் குழாங்கள் | பல கூட்டங்கள் |
| பாறி பாறி | அடியோடு அழிந்து |
| நீறு எழ | நீறாகும்படி |
| பாய் பறவை ஒன்று ஏறி வீற்றிருந்தாய் | பாய்கின்ற பெரிய திருவடியை வாஹனமாகக்கொண்டு எழுந்தருளியிருப்பவனே! |
| எந்தாய் | என் தந்தையே! |
| உன்னை | உன்னை |
| என்னுள் | என்னிடத்தில் நின்று |
| நீக்கேல் | பிரியச் செய்யாதிருக்க வேணும். |

* * * [மாறி மாறி.] பிரானே! உன்னுடைய நிர்ஹேதுகமான அநுக்ரஹத்தாலே பெற்ற இந்த நன்மை இனியொருநாளும் இடையறுதொழிய வேணும்; இதுவே யெனக்கு வேண்டுவது என்று எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றார். கடலிலே கிடந்ததொரு துரும்பானது அலைமேலலையாகத் தள்ளவந்து கரைசேருமாபோலே அடியேனும் பிறப்பதுமிறப்பதுமாய் மாறிமாறிப் பிறந்து வந்துகொண்டே திருவடிகளிலே கிட்டிக்கொண்டு நிற்கக்கண்டே னித்தனை. இங்ஙனே திருவடிகளிற் கிட்டினவாறே 'இனி நாம் வாழ்ந்தோமாவோம்' என்று ஒருவாறு நெஞ்சு தேறுதலடைந்தேன்; அந்தத் தேறுதலுண்டானவாறே பெரிய ஆனந்தக் கடலிலே ஆழ மூழ்கினவனானேன்; என்னோடே இப்படி வந்துகலந்த நீ ஒருநாளும் இனிப் பிரியாதிருக்க வேணும்; பலவகைப்பட்ட அசுரக்குழாங்கள் நீறாகும்படியாகப் பாய்கின்ற பெரிய திருவடியை நியதமாக அடிமைகொண்டிருக்குமாபோலே அடியேனையும் ஆத்மாவுள்ளதனையும் ஆட்கொண்டருள வேணுமென்று அபேக்ஷித்தாராயிற்று. ... ... ... (அ)

எந்தாய்! தண்திருவேங்கடத்துள்நின்றாய்! இலங்கைசெற்றாய்! ✤ மராமரம்
பைந்தாளேழுருவ ஒருவாளிகோத்தவில்லா! ✤
கொந்தார்தண்ணந்துழாயினாயமுதே! உன்னையென்னுள்ளேகுழைத்தவெம்
மைந்தா! ✤ வானேறே! இனியெங்குப்போகின்றதே? (கூ)



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| எந்தாய் | ஸ்வாமியே! |
| தண் திரு வேங்கடத்துள் நின்ருய் | குளிர்ந்த திருவேங்கட மலையிலே நிற்பவனே! |
| இலங்கை செற்ருய் | லங்காபுரியை அழித்தவனே! |
| மராமரம் | மராமரங்களினுடைய |
| பை தாள் ஏழ் | பருத்த அடிகள் ஏழும் |
| உருவ | உருவும்படி |
| ஒரு வாளி கோத்த வில்லா | ஒரு அம்பைத் தொடுத்த வில்லை யுடையவனே! |
| கொந்து ஆர் தண் அம் துழாயினுய் | கொத்துக்கள் நிறைந்து குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையணிந்துள்ளவனே! |
| எம் அமுதே | எமக்கு அமுதமானவனே! |
| உன்னை என்னுள்ளே குழைத்த மைந்தா | என்னேடு ஒரு நீராகக் கலந்த மைந்தனே! |
| வான் ஏறே | நித்யஸூரி நாதனே! |
| இனி எங்கு போகின்றது | இனி என்னைத் தவிர உனக்கு வேறு போக்கிட முண்டோ? |

* • * [எந்தாய் தண்.] முதலிலே உன்னை யறியாதிருந்த வெனக்கு உன்னையும் உன்னுடைய போக்கியதையையுமறிவித்து, உன்னைவிட்டகன்று உயிராற்றமாட்டாதபடியான நிலைமையை விளைவித்த நீ இனி என்னை விட்டுப் பிரிந்துபோவது தகுதியோவென்கிருர். என்னை அடிமைகொண்டருளுகைக்காகப் பரமயோக்யமான திருவேங்கட மலையிலே நின்றருளினவனே!, அஹங்காரமே வடிவெடுத்த இராவணனைத் தொலைத்தாப்போலே என்னுடைய அஹங்கார மமகாரங்களையும் போக்கியருளினவனே!, வாலிவதத்திற்குப் பூர்வாங்கமாக மராமரமேழையும் எய்து ஸுக்ரீவனை விச்வஸிப்பித்தாப்போல எனக்கும் அரியனசெய்து விச்வாஸத்தையுண்டாக்கினவனே; தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும்புனைந்த தண்ணந்துழாயுடையம்மானே! என்னமுதமே!, என்னேடே கலக்கிறபோது ஒரு நீராகக் கலந்துவிட்டு இனி அகல்வது எங்ஙனேயோ? உனக்குப் போக்கிடந்தானுண்டோ? ... ... (௯)

போகின்றகாலங்கள் போயகாலங்கள் போகுகாலங்கள் ✤ தாய்தந்தையுயிராகின்ருய்! உன்னை நானடைந்தேன் விடுவேனே? ✤
பாகின்றதொல்புகழ்மூவுலகுக்கும் நாதனே! பரமா! ✤ தண்வேங்கடம் மேகின்ருய்! தண்டுழாய் விரைநாறு கண்ணியனே! (௧0)

| | |
|---|---|
| போகின்ற காலங்கள் | நிகழ் காலங்கள் |
| போய காலங்கள் | இறந்த காலங்கள் |
| போகு காலங்கள் | எதிர் காலங்கள் (ஆகிய இவற்றில்) |
| தாய் தந்தை உயிர் ஆகின்ருய் | தாயும் தந்தையும் உயிருமாயிருப்பவனே! |
| பாகின்ற | பரவுகின்ற |
| தொல் புகழ் | நித்யமான கீர்த்தியை யுடையனுய் |
| மூ உலகுக்கும் நாதனே | மூன்று லோகங்களுக்கும் நாதனுயிருப்பவனே! |
| பரமா | ஸர்வோத்க்ருஷ்டனே! |
| தண் வேங்கடம் மேகின்ருய் | குளிர்ந்த திருவேங்கட மலையை விரும்பியிருப்பவனே! |
| தண் விரை நாறு | குளிர்ந்து பரிமளம் வீசப்பெற்ற |
| துழாய் கண்ணியனே | திருத்துழாய் மாலையை யுடையவனே! |

உன்னை நான் அடைந்தேன் விடுவேனே?

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Fouhdation,Kolkata. Digitization: eGangotri.



* * * [போகின்ற காலங்கள்] ஆழ்வாரே! என்னைநீர் வளைத்துப்பேசுவது கிடக்கட்டும்; நீர் அயோக்யதாநுஸந்தானம்பண்ணி என்னைவிட்டகன்று போய்விடுவீரோ! என்று நான் கவலைகொண்டிரா நிற்கையில் நீர் இங்ஙனே பேசக்கடவீரோ? நான் உம்மைவிட்டு எங்கும்போகப் போகிறதில்லை; நீர் என்னைவிட்டுப் போகாதிருப்பீரா? சொல்லும் என்று எம்பெருமான் திருவுள்ளமாக, முக்காலத்திலும் எல்லாப்படியாலும் எனக்கு உபகாரம் செய்தருளின வுன்னைப்பெற்றுவைத்து இனிநான் அகன்று போவதற்கு என்னப்ரஸக்தி யென்று உறுதியாகக்கூறி முடிக்கின்றார். முதலடியில் மூன்று காலங்களையுமெடுத்திருக்கின்றார்; இறந்தகாலத்திலும் நிகழ்காலத்திலும் எம்பெருமான் செய்யும் நன்மையைத் தெரிந்துகொண்டு பேசமுடியும்; எதிர்காலத்தில் இனி அவன் செய்யப்போகிற நன்மையை இவர் எங்ஙனே தெரிந்து கொண்டாரென்று சிலர் சங்கிக்கக்கூடும்: எந்தக்காலத்திலும் எம்பெருமானல்லது வேறொருவன் ரக்ஷகனல்லன் என்கிற சாஸ்த்ரப்ரஸித்தியைக் கொண்டு கூறக்குறையில்லையென்க. இறந்தகாலமும் நிகழ்காலமும் ஒருகாலத்திலே எதிர்காலமாக இருந்தவைதானே; ஆதலாலும் சொல்லக் குறையில்லை யென்ப. ... ... ... ... (க0)

கண்ணித்தண்ணந்துழாய்முடிக் கமலத்தடம் பெருங்கண்ணனை ✤ புகழ்
நண்ணித்தென்குருகூர்ச் சடகோபன் மாறன்சொன்ன ✤
எண்ணில்சோர்விலந்தாதி ஆயிரத்துள்ளிவையுமோர்பத்திசையொடும் ✤
பண்ணிற்பாடவல்லாரவர் கேசவன் தமரே. (கக)

| | |
|---|---|
| தண் அம் துழாய் கண்ணி முடி | குளிர்ந்தழகிய திருத்துழாய் மாலையணிந்த முடியையும் |
| கமலம் தடம் பெரு கண்ணனை | தாமரை போன்று விசாலமான நீண்ட திருக்கண்களையுமுடைய பெருமானுடைய |
| புகழ் நண்ணி | திருக்குணங்களை யநுபவித்து |
| தென் குருகூர் சடகோபன் மாறன் சொன்ன—; | |
| எண்ணில் சோர்வு இல் | அநுஸந்தானத்தில் சோர்வு இல்லாத |
| அந்தாதி | அந்தாதித்தொடையான |
| ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து | ஆயிரத்தினுள்ளே இப்பத்துப் பாட்டையும் |
| இசையொடும் | இசையோடுகூட |
| பண்ணில் பாட வல்லார் அவர் | பண்ணில் அமைத்துப் பாட வல்லவர்கள் |
| கேசவன் தமர் | எம்பெருமானடியாராகப் பெறுவர். |

* * * [கண்ணித்தண்ணந்துழாய்.] இப்பதிகத்தை இனிதாக அநுஸந்திக்குமவர்கள் பாகவதர் என்றபேர்க்கு உரியராவர் என்று இதுகற்றார்க்குப் பயனுரைத்துத்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தலைக்கட்டுகின்றார். தம்மோடே கலக்கையாலே எம்பெருமானுக்குப் பிறந்த செவ்வியைச் சொல்லுகிறது முதலடி புகழ்நண்ணி = புகழ் என்பது திருக்கல்யாண குணங்களெல்லாவற்றிற்கும் பொதுச் சொல்லாயினும், தம்பக்கலில் அவன்பண்ணின அபிநிவேசமாகிற விசேஷகுணத்தை இங்குக்குறிக்கின்றதென்னலாம். (கக)

ஆறாந்திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

வைகுந்தன் வந்து கலந்ததற்பின் வாழ்மாறன்
செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து—நைகின்ற
தன்மைதனைக் கண்டுன்னைத் தான்விடே னென்றுரைக்க
வன்மை யடைந்தான் கேசவன்.

| | | | |
|---|---|---|---|
| வைகுந்தன் | பரமபத நாதனான எம்பெருமான் | சிந்தித்து | (எம்பெருமான்) விசார மடைந்து |
| வந்து கலந்த தற்பின் | வந்து (தம்முடன்) கலந்த பிறகு | நைகின்ற தன் மைதனை கண்டு | சிதிலனாகிறபடியைப் பார்த்து |
| வாழ் | ஸத்தை பெற்ற | உன்னை விடேன் என்று உரைக்க | 'உன்னை நான் விட மாட்டேன் (ஆதலால் கவலைப்படவேண்டா)' என்று தெரிவிக்க |
| மாறன் | ஆழ்வார் | | |
| செய்கின்ற | செய்கிற | | |
| நைச்சியத்தை | நைச்யாநுஸந்தானத்தைக் குறித்து | கேசவன் | எம்பெருமான் |
| | | வன்மை அடைந்தான் | (கவலை நீங்கி) நிலைபெற்று நின்றான். |

* * * ஆடியாடி யென்கிற திருவாய் மொழியிலே பட்ட வ்யஸநம் தீர அந்தாமத்தன்பில் எம்பெருமான் வந்து ஸம்ச்லேஷிக்க அதனால் துயர் தீர்ந்து வாழ்ந்த ஆழ்வார் "அல்லாவி" என்றும் "என் முடிவு காணாதே" என்றும் நைச்யாநுஸந்தாநப்ரஸக்தி பண்ண, அது கண்ட எம்பெருமான் 'இவர் நம்மைவிட்டு அகன்றுபோவர்போலிருக்கிறதே!' என்று அதிசங்கை கொள்ள, அஃதறிந்த ஆழ்வார் 'பிரானே!' உன்னை யொருநாளும் விடமாட்டேன்' என்று உறுதியாகக் கூற அது கேட்டு எம்பெருமான் கவலை தீர்ந்தானானான் என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



## த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளீ.

ஸ்வாஸ்வாதவ்யாபகத்வாத் ஶ்ரிதநியதத்ருஶே நைகபோகப்ரதாநாத்
த்யாகாநர்ஹப்ரகாஶாத் ஸ்திரபரிசரணஸ்தாபநாத் பாபபங்காத் ।
துஸ்ஸாதார்த்தஸ்வஸித்தேர் விரஹபயக்ருதே துர்விபேதாத்மயோகாத்
நித்யாநேகோபகாராத் ஸ்வவிரஹசகிதம் வைரூக்ஷதாச்சௌரிரார்க்ஷீத் ॥

1. ஸ்வாஸ்வாதக்யாபகத்வாத்— *வைகல்தோறும் அமுதாயவானேறே.* (எம்பெருமான்) தன்னுடைய பரமபோக்யதையைக் காட்டிக்கொடுத்தானென்கிறது.

2. ச்ரித நியதத்ருசே:— *எங்கும் பக்க நோக்கறியான்.* ஆச்ரிதரானதம்மை விட்டு வேறோரிடத்திற் கண்வையாதவ னென்றது.

3. நைக போகப்ரதாநாத்— *நாமருவி நன் கேத்தியுள்ளிவணங்கி நாமகிழ்ந் தாட* துதித்தல் சிந்தித்தல் வணங்குதல் களித்துக் கூத்தாடுதல் முதலிய பல் வகை யநுபவங்களைக் கொடுத்தருளினனென்கிறது.

4. த்யாகாநர்ஹப்ரகாசாத்— *என்மரதகமலையே — உன்னை யென்மனம் விடு கேன்* விட்டுப் பிரியவொண்ணாதபடி மிகவழகிய மரகதக்குன்றுபோலே பரமபோக்யனாக ப்ரகாசித்தானென்கிறது.

5. ஸ்திரபரிசரணஸ்தாபநாத்— *உனது அந்தமிலடிமை யடைந்தேன்* யாவஜ்ஜீவமுள்ளதான அடிமையிலே நிலைநிறுத்தினனென்கிறது.

6. பாப பங்காத்— *முன்னைத்தீவினைகள் முழுவேரரிந்தனன்யான்* பாவங்களை வாஸனையோடே போக்கினனென்கிறது.

7. துஸ்ஸாதார்த்தஸ்ய ஸித்தே:—*முடியாததென் எனக்கேலினி* தம்மோடு பரம்பராஸம்பந்தம் பெற்றவர்களும் உத்தீர்ணராம்படி அரியபெரிய காரியம் ஸித்தித்தமை சொன்னபடி.

8. விரஹ பயக்ருதே:—*உன்னை யென்னுள்நீக்கேலெந்தாய்* 'இவன் நம்மை விட்டுப்பிரிந்து போய்விடுவானோ' என்கிற அச்சத்தை விளைத்தமை சொன்னபடி.

9. துர்விபேதாத்ம யோகாத்— *உன்னை யென்னுள்ளே குழைத்த எம் மைந்தா* ஆத்மாவோடே பிரிக்கவொண்ணாதபடி ஒருநீராகக் கலந்தமை சொன்னபடி.

10. நித்யாநேகோபகாராத்— *போகின்ற காலங்கள் இத்யாதி* மூன்று காலங்களிலும் தாய்தந்தையர்பண்ணும் உபகாரங்களை யெல்லாம் பண்ணிக் கொடுப்பானென்றது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆக இத்தகைய காரணங்களையிட்டு [அம்போருஹாக்ஷம் ஸ்வவிரஹசகிதம் ப்ரைக்ஷத] (நிகமனப்பாசுரத்தில்) "கமலத்தடம் பெருங்கண்ணன்" என்னப்பட்ட எம்பெருமானை இத்திருவாய் மொழியில் 'ஆழ்வார் நம்மை ஒருகால்விட்டு நீங்கி விடுவரோ' என்ற அதிசங்கையுடையனாகக் கண்டு பேசினாரென்றதாயிற்று.

தூப்புல்பிள்ளை பொன்னடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

नीचं च मामयमिहेति स्वसक्त्या
जातां हरेः स्वविरहाशङ्कनेतिशङ्काम् ।
शेषी निरस्य कृतसम्मदभास्सुधीः
श्रुत्वाऽयिष्वपि तदाद्यदशाह्यनश्च ॥

(கருத்து). கீத் திருவாய் மொழியில் "மிக நீசனுகிய என்னோடும் எம்பெருமான் ஸம்ச்லேஷித்தானே!" என்று ஆழ்வார் அருளிச்செய்ததனால் இங்ஙனே நைச்யாநுஸந்தானஞ் செய்தவிவர் ஒருகால் நம்மைவிட்டுப் பிரிந்திடுவரோ வென்று எம்பெருமானுக்கு உண்டான அதிசங்கையை, 'ஒருநாளும் உன்னைவிடேன்' என்கிற உறுதி மொழியினால் போக்கி, தம்மோடு பரம்பரா ஸம்பந்திகளுக்கும் ஸத்கதி யுண்டாகப் பெற்றபடியையுங்கூறி ஆழ்வார் மகிழ்வுற்றார் ஆறுந்திருவாய் மொழியிலே யென்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆறுந் திருவாய்மொழி
உரை முற்றிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து—ஏழாந் திருவாய்மொழி,

## கேசவன்தமர்.

---

அவதாரிகை :— கீழ்த் திருவாய்மொழியில் "எமர் கீழ்மேலெழுபிறப்பும் விடியாவெந்நரகத்து என்றுஞ் சேர்தல் மாறினர்" என்று—எம்பெருமான் தம்மிடத்து வைத்த காதல் முன்னும் பின்னும் வெள்ளங்கோத்தபடியைச் சிறிதளவாக ப்ரஸ்தாவித்தார்; அந்த மஹோபகாரத்தைப் பெருக்கப் பேசவேணுமென்று ஆழ்வார்க்கு அபிநிவேச முண்டாயிற்று. அஃது இத்திருவாய்மொழிக்கு முக்கியமான ப்ரமேயமாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களில் இது வொரு மிகச் சிறந்த குணம்: அதாவது—ஒருவனை விஷயீகரிக்கத் திருவுள்ளம் பற்றினால் அந்த விஷயீகாரம் அவ்வொருத்தனளவிலே நில்லாமல் அவனோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்றாரளவிலும் கொந்தளிக்குமது.

இவ்விஷயத்திற்குச் சார்பாக நம்பிள்ளை "𑌮𑌰𑌣𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑌿 𑌵𑍈𑌰𑌾𑌣𑌿 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌨𑌃 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌮𑍍 । 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑌾𑌮𑌸𑍍𑌯 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑍋 𑌮𑌮𑌾𑌪𑍍𑌯𑍇𑌷 𑌯𑌥𑌾 𑌤𑌵 ॥ மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம், க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ" என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தை யெடுத்துப் பரம ரஸமாக வியாக்கியானித் தருளியுள்ளார். இராவணன் மாண்டபின்பு இந்த மஹா பாபிக்கு நான் உத்தரக்ரியை பண்ண மாட்டேனென்று ஒரு நிலைநின்ற விபீஷணாழ்வானை நோக்கிப் பெருமாளருளிச் செய்த ச்லோகமிது. இதற்குப் பிறர் கூறும் பொருள் எங்ஙனே யென்னில்; உலகத்தில் ஒருவனிடத்து ஒருவனுக்குப் பகை மரண பர்யந்தமேயாதலால் இந்த இராவணன் மாண்டொழிந்த பின்பும் இவனிடத்து நாம் பகை வைப்பது ஏதுக்கு? இவனை வதை செய்வதும் பிராட்டியைக் கைக்கொள்வதுமே நமக்குப் பிரயோஜனமாதலால் அது நிறைவேறப்பெற்ற பின்பும் இவன்மீது நாம் பகை பாராட்டலாகுமோ? பகையை மறந்து இனி இவனுக்குச் செய்யவேண்டியதைச் செய்—என்று பெருமாள் கூறுவதாக.

இப்பொருள் சிறிதும் பொருந்தாதென்றும் இராமபிரானுடைய திருவுள்ளத்திற்கு ஒவ்வாதென்றும் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றி வேறு வகையாக வியாக்கியானித்தருளினர். இதுவரையில் பெருமாள்மீது இராவணன் பகை பாராட்டியிருந்தானே யல்லது இராவணன்மீது பெருமாள் சிறிதும் பகைபாராட்டியிருந்ததில்லை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



“விபீஷணோ வா ஸுக்ரீவ ! யதி வா ராவண: ஸ்வயம்—விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவணஸ் ஸ்வயம்” என்றருளிச்செய்த பெருமாளுடைய திருவுள்ளத்திற்கு இணங்கவல்ல பொருளன்றோ பணிக்கவேணும். அதை நம்பிள்ளையல்லது வேறொருவர் பணிக்க முடியுமோ? இங்கு நம்பிள்ளை ஸ்ரீ ஸூக்திகள் அமுதமயமேயாதலால் அவை அப்படியே காட்டப்படுகின்றன :—

“[மரணாந்தாநி வைராணி.] ரிஷிகளின் குடியிருப்பை யழித்து மைதிலியைப் பிரித்து, நம் உயிர் நிலையிலே நலிந்தாப்போலே ஸ்ரீ ஜடாயு மஹாராஜரை நலிந்து இவையெல்லாம் செய்யமாட்டானே இவனினி.

[நிர்வ்ருத்தம் ந: ப்ரயோஜநம்.] இவன் ஜீவிக்கிற நாளிலே நாம் செய்யும் நன்மை இவன் விலக்காதொழிவது காணவெண்ணியிருந்தோம்; அது அந்நாளில் பெற்றிலோம் : நாம் தேடியிருந்தது முந்துற முன்னம் ஸித்திக்கப் பெற்றோமிறே.

[க்ரியதாம் அஸ்ய ஸம்ஸ்கார:] இவன் நாம் செய்யும் நன்மை விலக்காதானவளவு பிறந்தவின்றும் இழக்கவேணுமோ? வேண்டுவன செய்யப்பாரும்.

[மமாபி ஏஷ யதா தவ.] நீர் இருய்த்திருந்தீராகில் குடல் துடக்குடையாரிலே ஒருவன் செய்யுமித்தனையன்றோ; நாம் இவனுக்கு வேண்டுவன செய்ய நீர் பின்னைக் கடச்கவில்லீர் என்றாரிறே.”

இந்த திவ்ய ஸூக்திகளின் தாத்பர்ய ஸாரமாவது—விபீஷண ! இவ்விராவணன் ஜீவித்திருக்கும் நாளிலேயே இவனுக்குச் சில நன்மைகள் நான் செய்யக் கருதியிருந்தேன் ; அவை ஈடேறுதபடிக்கு இவன் பல வகையான த்வேஷ காரியங்களை இயற்றி வந்தானாதலால் நம்முடைய மனோரதம் நிறைவேற வழியில்லையாகிறதே யென்று வருத்தப்பட்டே நான் காலங்கழிக்க நேர்ந்தது. இப்போது இவன் மரண மடைந்து விட்டானாதலால் இனி ஒருவிதமான த்வேஷகாரியமும் இவன் பண்ண ப்ரஸக்தியில்லையே. நாம் இவனுக்குச் செய்ய நினைத்த நன்மைகளுக்கு இவன் ஆபிமுக்கியம் பண்ணாதொழிந்தாலும் இவற்றைத் தடை செய்ய மாட்டாத நிலைமைக்கு இப்போது வந்திட்டானன்றோ, சேதநர்களிடத்தில் இவ்வளவுதானே நான் எதிர்பார்த்திருப்பது. அதுவோ கைபுகுந்து விட்டது. இவனுடைய உயிருக்கு நன்மைசெய்ய நினைத்திருந்தபடி செய்ய இழந்த குறைதீர இவனுடலுக்காவது சில நன்மைகளைச் செய்யாய்; நீ செய்யப் பின்வாங்கினையாகில் இதோ நான் செய்யக் காத்திருக்கிறேன்; நீ எப்படி எனக்கு ஆப்தனோ அப்படி இவனும் எனக்கு ஆப்தன்தானே—என்பதாம். ஸ்ரீவிபீஷணாழ்வானிடத்தில் பெருமாள் வைத்திருந்த ஆதரம் அவனோடு தேஹஸம்பந்தமுள்ள ராவணனிடத்திலும் ஏறிப்பாய்ந்த தென்கைக்காக இது கொள்ளப் பட்டதென்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



எம்பெருமான் யாரிடத்து அருள் செய்தாலும் அவ்வருளை அவர்களிடத்திலேயே நிறுத்திவிடாமல் அவர்களோடு ஸம்பந்தஸம்பந்தம் பெற்றவர்கள் பக்கலிலும் பெருகச் செய்யுமியல்வினன் என்பதற்குப் பல உதாரணங்களுண்டு.

இத்திருவாய்மொழியில் இவ்விஷயம் முக்கியமாகப் பேசப்படுகிறது. அன்றியும் இத்திருவாய்மொழியில மற்றொரு விசேஷமுமுண்டு; அதாவது— கேசவன் முதலாகத் தாமோதரனளவாக வுள்ள துவாதச நாமங்களும் பாட்டுத்தோறும் வரிசைக்கிரமமாகத் தொடுக்கப்பட்டிருக்கின்றன வென்பதாம். ஆனது பற்றியே இப்பதிகம் மாத்திரம் மற்றைப் பதிகங்கள்போல் பதினொரு பாசுரங்கள் கொண்டதன்றியே பதின்மூன்று பாசுரங்கள் கொண்டதாயிருக்கின்றது. *

கேசவன்தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும் *
மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வுவாய்க்கின்றவா *
ஈசனென்கருமாணிக்கமென்செங்கோலக்கண்ணன் விண்ணோர்
நாயகன் * எம்பிரானெம்மான் நாராயணனாலே. (க)

| | |
|---|---|
| ஈசன் | எல்லார்க்கும் ஸ்வாமியாய் |
| என் | என்னுடைய அநுபவத்திற்கு உரிய |
| கரு மாணிக்கம் | கரியமாணிக்கம் போன்ற வடிவையுடையனாய் |
| என் செம் கோலம் கண்ணன் | சிவந்து அழகிய திருக்கண்களை நான் அநுபவிக்கும்படி செய்தவனாய் |
| விண்ணோர் நாயகன் | நித்யஸூரிநாதனாய் |
| எம்பிரான் | எமக்கு உபகாரகனாய் |
| எம்மான் | எமது பெரியோனாகிய |
| நாராயணனாலே | நாராயணனாலே, |
| எமர் | என்னைச் சேர்ந்தவர்கள் |
| கீழ் மேல் ஏழ் எழு பிறப்பும் | கீழும்மேலுமுள்ள எழேழ் பிறப்புக்களிலும் |
| கேசவன் தமர் | பகவத் பக்தராகப் பெற்றார்கள்; |
| இது | இப்படிப்பட்ட |
| மா சதிர் | பெரிய சிறப்பை |
| பெற்று | அடைந்து |
| நம்முடை வாழ்வுவாய்க்கின்றஆ | நமது வாழ்ச்சி வளருகிறபடி என்னே!; |

* * * [கேசவன்தமர்] பின்னடிகளை முந்துற அந்வயித்துக்கொண்டு முன்னடிகளைப் பிறகு அந்வயித்துக் கொள்க. ஸர்வேச்வரனாய், அழகு நிறைந்த திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டனாய், நித்யஸூரி நாதனாய் எனக்கு ஸ்வாமியாயிருக்கின்ற நாராயணனாலே, என்னோடு ஏதேனுமொருபடி ஸம்பந்தமுடையாரெல்லாரும் கேசவன்தமர் என்னும்படியான சிறப்புப் பெற்றார்கள்; அதனாலே நம்முடைய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ விலக்ஷணமாகவுள்ளது என்கிறார்.

தமர்—அடியார்கள் என்றபடி: கேசவன் என்ற திருநாமத்திற்கு மூன்று வகையாகப் பொருள்கூறுவர்; 1. சிறந்த மயிர்முடியை யுடையவன். 2. கேசி யென்னும் அசுரனை (ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில்) வதஞ் செய்தவன். 3. பிரமனுக்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கும் சிவபிரானுக்கும் நியாமகன்—என்பன மூன்று அர்த்தங்கள். இப்பொருள்களைத் தெரிந்துகொண்டு எம்பெருமான் பக்கலில் அன்பு பூண்டிருக்குமவர்கள் கேசவன்தமர் என்னலாம். விஷய மொன்றையு மறியாமற்போனாலும் கேசவனென்கிற திருநாமம் பெற்ற பகவானே நமக்குத் தலைவன் என்று கொண்டிருக்குமவர்களும் கேசவன்தமர் என்னத்தகுவர். எமர் கீழ்மேலே ழெழுபிறப்பும் கேசவன் தமரானார்கள். ஏழேழுபிறப்பும் என்றது—ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களில் „கூலூ தாரயதெ தாத ஸவ்தஸவ்தச ஸவ்தச—குலம் தாரயதே தாத ஸப்த ஸப்த ச ஸப்த ச." என்று சொல்லியிருப்பதை அடியொற்றியதாம். "ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்" என்கிறார் பெரியாழ்வாரும்.

மாசதிர்இதுபெற்று = இதிற்காட்டிலும் பெரிய சதிர் வேறு உண்டோ? எம்பெருமானுடைய திருவருள் இங்ஙனே பெருகிற்றென்றால் இதைவிட வேறு மாசதிர் ஏது? நம்முடைய முயற்சியாலே வரும் சதிர் அற்பம்; எம்பெருமானுடைய க்ருஷியாலே விளையும் சதிர் மாசதிர்.

நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா ! = நம்முடை வாழ்வென்று ஸ்ரீவைஷ்ணவ ஸம்பத்தைச் சொல்லுகிறது. தம்மோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்றவர்களும் வாழ்ச்சி பெறுவதைத் தம்முடைய வாழ்வாக நினைப்பதே ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமாகும். ஊற்றுமாறாமல் இந்த வாழ்ச்சி மேன்மேலும் வளர்ந்து செல்லுகிறபடி என்னே! என்று ஆச்சரியப்படுகிறார்.

இப்படி விஷயீகரித்த எம்பெருமானைப் பின்னிரண்டடிகளில் வருணிக்கிறார். ஸர்வேச்வரனாயும், கண்ணழகாலே என்னை யீடுபடுத்தித் தன்வடிவழகை மூற்றாட்டாக அநுபவிக்கக் கொடுத்தவனாயும், நித்யஸூரிகளைத் தோற்பிக்குமாபோலே வடிவழகாலே என்னையும் தோற்பித்து விஷயீகரித்த மஹோபகாரகனாயுமிருக்கின்ற நாராயணனாலே இப்படிப்பட்ட சதிர்வாழ்ச்சி யுண்டாயிற்று என்றாராயிற்று. ... ... ... ... (க)

நாரணன்முழுவேழுலகுக்குஂநாதன் வேதமயன் *
காரணம்கிரிசை கருமமிவைமுதல்வனேந்தை *
சீரணங்கமரர்பிறர்பலரும் தொழுதேத்தநின்று *
வாரணத்தைமருப்போசித்தபிரான் என்மாதவனே. (உ)

நாரணன் — நாராயணனும்
முழு ஏழ் உலகுக்கும் நாதன் — எல்லாவுலகங்களுக்கும் ஸ்வாமியும்
வேதமயன் — வேதஸ்வரூபியும்

காரணம் கிரிசை கருமம் இவை முதல்வன் — காரணப் பொருள்கள் காரியப் பொருள்கள் பிரயோஜனங்கள் ஆகிய இவற்றுக்கு நிர்வாஹகனும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

| | | | |
|---|---|---|---|
| சீர் அணங்கு அமரர் | சீர்மை பொருந்திய திவ்யர்களான நித்யஸூரிகளாலும் | மருப்பு | கொம்பை |
| | | ஒசித்த | முறித்த |
| பிறர் பலரும் | மற்றும் பலபேர்களாலும் | பிரான் | உபகாரகனும் |
| தொழுது ஏத்த நின்று | வணங்கித் துதிக்கப்பட்டு | என் மாதவன் | எனக்கு உரியவனுமான திருமால் |
| வாரணத்தை | (கம்ஸனது) யானையினுடைய | எந்தை | என்னை யடிமை கொண்டவன். |

+ + + [நாரணன்.] கீழ்ப்பாட்டில் நாராயணத் திருநாமம் ப்ரஸ்துதமாகவே அதனுடைய அர்த்தாநுபவம் பண்ணுவதாக இப்பாசுரம் அமைகின்றது. இங்குத் தொடக்கத்தில் நாரணன் என்றது—நாராயண பதத்திற்குப் பொருள் யாதெனில் என்றபடி. முழுவேழுலகுக்கும் நாதன் என்றது நாராயண நாமத்தின் திரண்ட பொருள் சொன்னபடி. நார சப்தத்தாலே உலகத்திலுள்ள ஸகல சேதநா சேதநப் பொருள்களும் சொல்லப்படுகின்றன. அவற்றுக்கெல்லாம் [அயநம்] தான் இருப்பிடமாக வுள்ளவன் என்று ஸர்வஸ்மாத் பரத்வஞ் சொன்னபடி.

இப்படிப்பட்ட நாராயண னொருவனுளன் என்பதில் பிரமாணம் ஏதென்ன, வேதமயன் என்கிறது. "நாராயண பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:। நாராயண பரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர:॥" இத்யாதி வேதவாக்யங்களினால் ஸர்வஸ்வாமியாக ஓதப்படுகிறவனென்க. வேதமயன் என்றவாறே "நாராயண ஏவேதம் ஸர்வம்। யத்பூதம் யச்ச பவ்யம்॥" இத்யாதிகளான வேதவாக்கியங்களையும் திருவுள்ளம் பற்றி அவற்றின் பொருளை விவரிக்கிற வகையில் காரணம் கிரிசை கருமமிவை முதல்வனெந்தை என்றருளிச் செய்கிறார். எல்லாப் பொருள்களும் தானேயா யிருக்கின்றானென்று ஓதுகின்ற உபநிஷத்துக்களின் கருத்து இதுதான் என்று காட்டுகிறபடி. காரணம் என்பதனால், உலகில் ஒன்றுக்குக் காரணமாகத் தென்படுகின்ற பொருள்கள் யாவும் கொள்ளத்தகும். கிரிசை என்பதனால் அக்காரணப் பொருள்களினால் படைக்கப்படுகின்ற காரியப் பொருள்கள் யாவும் கொள்ளத்தகும். கருமம் என்பதனால், என்ன காரியத்திற்காக இப்பொருள் ஏற்பட்டதென்று விசாரிக்குமளவில் கூறப்படுகின்ற பலன் கொள்ளத்தகும். 'பானை என்ன காரியத்திற்காக?' என்று கேட்டால் 'தண்ணீர் கொண்டுவருதற்காக' என்று சொல்லுவோமன்றோ; அதுவே இங்குக் கருமம் என்பதனால் விவக்ஷிதம். ஆக, இவையெல்லாம் ஈச்வரனிட்ட வழக்கு என்றவாறு. கிரிசை கருமம் என்பதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் கொள்ளலாம்; ஒரு காரணப் பொருளிலிருந்து ஒரு காரியப் பொருள் பிறப்பதற்கு ஹேதுவாக இடையில் செய்யப்படுகின்ற காரியம் எதுவோ அது கிரிசை என்றும்; அதனால் பிறக்கும் காரியப் பொருள் கருமமென்றும் கொள்க.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நாராயணத் திருநாமத்திற்கு இரண்டு வகையாக வ்யுத்பத்தி யுண்டு; நாரங்களுக்கு அயநம் என்பது ஒன்று; நாரங்களை அயநமாக வுடையவன் என்பது மற்றொன்று. இவ்விருவகை வ்யுத்பத்திகளாலும் பரத்வமும் ஸௌலப்யமும் பலிக்குமென்று முமுக்ஷுப்படி முதலியவற்றில் ஆசாரியர்கள் நிரூபித்தருளினார்கள். இங்கு ஆழ்வார் ஸௌலப்யம் பலிக்கக் கடவதான யோஜனையையும் திருவுள்ளத்திற் கொண்டு க்ருஷ்ணாவதாரத்தை நினைத்து அதிற் செய்தவொரு செய்தியைப் பின்னடிகளிற் பேசுகின்றார். அவதாரங்களும் அவதார சேஷ்டிதங்களுமெல்லாம் நாராயண நாமத்தின் பொருளே யாகுமன்றோ.

வாரணத்தை மருப்பொசித்த வரலாறு:—தநுர்யாக மென்கிற வியாஜம் வைத்துக் கம்ஸனால வரவழைக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ண பலராமர்கள் கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில் அவ்விடத்துத் தன்னைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீட மென்னும் மதயானை கோபித்துவர, அவ்யாதவவீரர் அதனை யெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை யெடுப்பதுபோல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக் கொண்டு அவற்றால் அடித்து அவ்யானையை உயிர் தொலைத்துவிட்டு உள்ளே போயினரென்பதாம். அக்காலத்தில் தேவர்கள் மஹர்ஷிகள் முதலாயினோர் அந்தச் சிறுச்சேவகத்திற்கு ஈடுபட்டு வணங்கித் துதி செய்தனரென்கிறது மூன்றாமடி.

'சீரணங்கு' என்பதை அமரர்க்கு விசேஷணமாகக் கொள்ளாமல் தனிப்பட்ட விசேஷ்யமாகக் கொள்வதுமுண்டு. தெய்வமகளான பிராட்டியைச் சொன்னபடி. பிராட்டியும் அமரரும் பிறர் பலரும் தொழுதேத்த நின்று என்றபடி. "சூருமணங்கும் தெய்வப்பெண்ணே" என்பது நிகண்டு. அணங்கு என்றது அமரர்க்கு விசேடணமாமிடத்து 'தெய்வத்தன்மை வாய்ந்த' என்று பொருள்படும்.

வாரணம்—வட சொல். மருப்பு—யானைத்தந்தம். ... (உ)

மாதவனென்றதேகோண்டு என்னையினியிப்பால்பட்டது *
யாதவங்களும்சேர்கோடேனென்று என்னுள்புகுந்திருந்து *
தீதவம்கெடுக்குமமுதம் செந்தாமரைக்கட்குன்றம் *
கோதவமிலென்கன்னற்கட்டி யெம்மானேன்கோவிந்தனே. (௩)

| | |
|---|---|
| எமமான் என் கோவிந்தன் | எனக்காகக் கண்ணனாயவதரித்த எம்பெருமான் |
| மாதவன் என்றதே கொண்டு | 'மாதவன்' என்று நான் வாயினாற் சொன்னவளவையே கொண்டு |
| என்னை | என் விஷயத்தில் |
| இனி இப்பால் பட்டது | இனிமேலுள்ள காலமெல்லாம் |
| அவங்கள் யாதும் | ஒருவிதமான குறையும் |
| சேர்கொடேன் என்று | சேரவொட்டேன் என்று ஸங்கல்பித்துக் கொண்டு |
| என் உள் புகுந்து இருந்து | என்னுள்ளே பிரவேசித்திருந்து |
| தீது அவம் | பலவகைப் பாவங்களையும் |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| கெடுக்கும் | போக்கியருள்கின்ற | குன்றம் | குன்றம்போல் நிலைபெயராமலிருந்து |
| அமுதம் | பரமபோக்யனாய் | கோது அவம் இல் என் கன்னல் கட்டி | கோதும் அவமுமில்லாத கன்னல் கட்டிபோலே எனக்கு இனியனாயிருக்கின்றான். |
| செம் தாமரை கண் | செந்தாமரைபோன்ற திருக்கண்களை யுடையனாய் | | |

* * * [மாதவனேன்றதே.] எம்பெருமான் என்னிடத்தில் இவ்வளவு கனத்த விஷயீகாரஞ் செய்வதற்கு அடியாக நான் செய்த ஸாதநாநுஷ்டானம் பெரிதாக வொன்றுமில்லை; மாதவன் என்று வெறுமனே வாயாற் சொன்னவளவையே கொண்டு என்னுடைய தீமைகளெல்லாவற்றையும் போக்கி ஆட்கொண்டானென்கிறார். எம்பெருமானுக்குப் பல திருநாமங்களிருந்தாலும் பிராட்டி ஸம்பந்தத்தை முன்னிட்டிருக்கின்ற திருநாமத்தில் அவனுக்கும் ஒரு ப்ரீதியுண்டு; "ஜாமாதா த³யிதஸ் தவேதி ப⁴வதீஸம்ப³ந்த⁴த்³ருஷ்ட்யா ஹரிம் பஶ்யேம—ஜாமாதா தயிதஸ் தவேதி பவதீஸம்பந்தத்ருஷ்ட்யா ஹரிம் பச்யேம" என்று பட்டரும் ஸ்ரீகுணரத்ந கோசத்திலருளிச் செய்கிறார். ஜநக சக்ரவர்த்தியின் ஜாமாதா என்றும், பிராட்டிக்குக் கொழுநன் என்றும் உம்முடைய ஸம்பந்தத்தையிட்டே நாங்கள் எம்பெருமானை உகக்கக்கடவோமென்று பெரிய பிராட்டியாரை நோக்கி யருளிச்செய்த ச்லோகம் அது. எம்பெருமானுக்குண்டான அதிசயங்களெல்லாம் பிராட்டியடியாகவே உண்டாவதாக ச்ருதீதிஹாஸ புராணங்களால் நன்கு விளங்கும். "ஶ்ரியாதே⁴வா தே³வத்வமஶ்நுதே" என்கிறான் வேதபுருஷன். "அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா—அப்ரமேயம் ஹி தத்தேஜோ ய்ஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்று மாரீசன் சொன்னதாக வான்மீகி முனிவர் கூறுகின்றார். இவற்றையெல்லாம் திருவுள்ளம்பற்றி பட்டர் "ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் ப⁴க³வத இத³ம் சந்த்³ரவத³நே! த்வதா³ஶ்லேஷோத்கர்ஷாத் ப⁴வதி க²லு நிஷ்கர்ஷஸமயே—ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத இதம் சந்த்ரவதநே! த்வதாச்லேஷோத்கர்ஷாத் பவதி கலு நிஷ்கர்ஷஸமயே" என்றும் "தவ ஸ்பர்ஶாதீஶம் ஸ்ப்ருஶதி கமலே! மங்க³லபத³ம்—தவ ஸ்ப்ர்சாதீசம் ஸ்ப்ருசதி கமலே! மங்களபதம்" என்றும் அருளிச் செய்தார். ஆகவிப்படி எம்பெருமான்தனக்கும் மிக்க பெருமை பயக்குமதான ஸ்ரீஸம்பந்தத்தைக் காட்டுகிற திருநாமத்தில் அப்பெருமானுக்கும் ஆதராதிசயம் இருக்க ப்ராப்தமாகையாலே மாதவன் என்கிற உக்தி மாத்திரத்தையே கொண்டு அவன் அளவுகடந்த அநுக்ரஹத்தைச் செய்தானென்பது உசிதமேயாகும். மா—பிராட்டிக்கு, தவன்—நாயகன் என்றபடி.

வாசி யறியாமல் பல பெயர்களையும் வாயாற் சொல்லிவருமடைவிலே மாதவனென்கிற ஒரு உக்தியும் என் வாக்கில் வந்துவிட்டது; இதையே அவன் பெரிய ஸாதநமாகக் கொண்டான்போலும். இவ்விடத்தில்... "மாதவன் மலை நீர் நிழலென்று ஏறிடுமேது ஸ்ராவ்யத்ருஷ்டி, ஸுந்ருதம், ஸுபா⁴ஷித⁴ம்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸுவிஹிதம், ஸுவிஸத்ருஶம், ஸஜ்ஜநஹேது" என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணிகையின் வியாக்கியான முணரத்தக்கது.

யாதவங்களும் என்றவிடத்து, 'யா, தவங்களும்' 'யாது அவங்களும்' என்று இருவகையாகவும் பிரித்துப் பொருள் கூறுவர். "உன்னை யாதொரு தபஸ்ஸிலும் புக்குக்லேசிக்கவிடே னென்று" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. காய க்லேசகரமான வியாபாரம் தவமெனப்படும்; ஊன்வாட வுண்ணாது உயிர்காவ லிட்டு உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து, தான் வாடவாடத் தவஞ்செய்ய வேண்டா" என்று திருமங்கையாழ்வார் சேதநர்கட்கு உபதேசிப்பதுபோலே எம்பெருமான் ஆழ்வார்க்கு உபதேசிப்பன்போலும். "காயிலை தின்றும் கானி லுறைந்தும் கதிதேடித், தீயிடைநின்றும் பூவலம்வந்தும் திரிவீர்காள்!, தாயினு மன்பன் பூமகள் நண்பன் தடநாகப், பாயன் முகுந்தன் கோயிலரங்கம் பணிவீரே" என்றார் திருவரங்கக் கலம்பகத்தில் பிள்ளைப்பெருமாளையங்காரும்.

யாது அவங்களும் என்று பிரித்தால், அவம் என்பது ஸுவம் என்ற வட சொல்லின் விகாரமாகக் கொள்ளத்தக்கது. அவத்யம் என்ற வடசொல் ஈறு கெட்டு அவமென்று கிடக்கிறது என்பாருமுளர். நரக ஹேதுவான அவித்யை முதலான கெடுதல் யாதொன்றும் என்றபடி. 'நான் அயோக்யன்' என்று நைச் யாநுஸந்தாநம் பண்ணி அகன்றுபோதல், உபாயாந்தரப் படுகுழியில் வீழ்ந்து ஒழிந்துபோதல் முதலிய ஒரு தீமையும் நேராதபடி நோக்கிக்கொள்ளுகிறேன் ஆழ்வீர்! என்று பிரதிஜ்ஞை பண்ணி உட்புகுந்திருந்தபடி.

தீது அவம் கெடுக்கும் = புத்தி பூர்வகமாகச் செய்த பாவங்களை ஒன்றுக்கு அர்த்தமாகவும், தெரியாமல் நேர்ந்துவிட்ட பாவங்களை மற்றொன்றுக்கு அர்த்த மாகவுங் கொள்க. பகவத்ப்ராப்திக்குப் பிரதிபந்தகமான கருமங்களெல்லாவற் றையும் தொலைத்தமை சொன்னவாறு. அன்றியே, தீது அவம் என்பதற்கு, ப்ராயச்சித்தங்களாலே போக்கக்கூடிய பாவங்களையும், பிராயச்சித்தமே யில்லாத பாவங்களையும் அர்த்தமாகக் கூறுவதுமுண்டு. "கோக்நே சைவ ஸுராபே ச சோரே பக்நவ்ரதே ததா। நிஷ்க்ருதிர் விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி:=கோக்நே சைவ ஸுராபே ச சோரே பக்நவ்ரதே ததா, நிஷ் க்ருதிர் விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி:" என்ற ஸ்ரீராமாயணச்லோ கம் இங்கு உணரத்தக்கது. "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற திருக்குறளுங் காண்க.

"தீதவம் கெடுக்குமமுதம்" என்ற சொற்போக்கால், அவனுடைய போக் யதையை நான் அநுபவித்த மாத்திரத்திலே எனது பாவங்களெல்லாம் தொலைந் தன என்கிறாரென விளங்கும். "செந்தாமரைக் கட்குன்றம்" என்றவிடத் திற்கு நம்பிள்ளை அருளிச் செய்யும் அர்த்த விசேஷம் அற்புதமானது :—"இத் தலையில் தீதும் அவமும் போக்கினனாயிருக்கையன்றிக்கே தனக்குண்டாய்க்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கழிந்தது என்று தோற்றும்படியாயிற்று வடிவிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யம். *ஹூவ ரெஷு உநுஷூணாம் ஹு௰ம் ஹவதி உுவிதஃ* என்றிருக்கு மவனிறே" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி.

கோது அவம் இல் கன்னல்கட்டி = உலகில் கன்னலுக்கு இருவகையான தோஷங்கள் ஸம்பாவிதம்; இதரவஸ்து ஸம்பந்தத்தினால் விளையும் தோஷம் ஒன்று; பாகத்தில் கெடுதலினால் விளையும் தோஷம் மற்றொன்று. இவ்விரு வகைக் குற்றமுமற்ற கன்னலை த்ருஷ்டாந்தமாகச் சொன்னதனால் எம்பெருமானுக்கும் இருவகைக் குற்றமில்லாமை இங்கு விவக்ஷிதம். எதிர்த்தலையில் ஒரு உபாயத்தை யெதிர்பார்த்துக் காரியஞ் செய்வதும் எதிர்த்தலையின் பேறாகச் செய்வதுமாகிய குற்றமற்றவன் என்க. தன்பேறாகக் காரியஞ் செய்யுமவனென்கை. இங்கு எம்மான் என்றது வேறொரு வஸ்துவில் நான் போக்யதாபுத்தி பண்ணாதபடிக்குத் தன் பரமபோக்யதையைக் காட்டி என்னைத் தோற்பித்தவனென்றவாறு. என் கோவிந்தன் = க்ருஷ்ணாவதாரஞ் செய்தருளினதும் ஆழ்வார் தம்மை அகப்படுத்திக் கொள்ளுகைக்கு என்றிருக்கிறார் போலும். ... (௩)

கோவிந்தன்குடக்கூத்தன் கோவலனேன்றென்றேகுனித்து *
தேவும்தன்னையும் பாடியாடத்திருத்தி * என்னைக்கொண்டேன்
பாவந்தன்னையும்பாறக்கைத்து எமரேழேழுபிறப்பும் *
மேவும்தன்மையமாக்கினான் வல்லனெம்பிரான்விட்டுவே. (௪)

| | |
|---|---|
| வல்லன் | ஸர்வசக்தனும் |
| எம்பிரான் | எமக்கு உபகாரங்கள் செய்பவனுமான |
| விட்டு | விஷ்ணுபகவான் (எமக்குச் செய்தது யாதெனில்) |
| கோவிந்தன் குடக்கூத்தன் கோவலன் என்று என்றே குனித்து | கோவிந்தன் என்றும் குடக்கூத்தாடுபவன் என்றும் கோபாலன் என்றும் இத்தகைய திருநாமங்களையே சொல்லிக் கூத்தாடி |
| தேவும் | பரத்வத்தையும் |
| தன்னையும் | தானான தன்மையாகிய ஸௌலப்யத்தையும் |
| பாடி | புகழ்ந்துபாடி |
| ஆட | திரியும்படி |
| திருத்தி | கடாக்ஷித்து |
| என்னை | அடியேனை |
| கொண்டு | ஆட்படுத்திக்கொண்டு |
| என் பாவம் தன்னையும் | எனது பாவங்களையும் |
| பாற கைத்து | ஓடவடித்து |
| எமர் ஏழ் எழு பிறப்பும் | எம்மைச் சேர்ந்தவர்கள் ஏழேழ்பிறப்பும் |
| மேவும் தன்மையம் ஆக்கினான் | (தன்னை) அடையும்படியான தன்மையையுடையோமாம்படி செய்தான். |

* * * [கோவிந்தன்.] என்னை மாத்திரமன்றியே என்னோடு ஸம்பந்த ஸம்பந்தமுடையாரையுங்கூட என்னைப்போலே யாக்கின எம்பெருமானுடைய ஸாமர்த்தியம் என்னே! என்று வியந்து பேசும் பாசுரமிது. ஸௌலப்ய குணத்திற்கு ஏகாந்தமான திருநாமங்களை இடைவிடாது சொல்லி உவகை தலைமண்டை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கொண்டு கூத்தாடி அந்த ஸௌலப்யத்திற்கு அடியான பரத்வத்தையும் தனக்கு அஸாதாரண ஸ்வபாவமான நீர்மையையும் பாடித் திரியும்படி, இரும்பைப் பொன்னாக்குவாரைப்போலே என்னை நித்யஸூரி யென்னலாம்படி திருத்தித் தன்னுடையவனாகக் கைக்கொண்டு, தன்னுடைய அங்கீகாரத்திற்கு விரோதியா யிருந்த என்னுடைய பாபங்களையும் ஓடிப்போம்படி துரத்தி என்னோடு ஸம்பந்த முள்ளவர்கள் ஏழேழு ஜன்மமும் தன்னை ப்ராபிக்குந் தன்மையை யுடையோ மாம்படி பண்ணினான்! இப்படியும் ஒருவல்லமை யுண்டாவதே! என்றதா யிற்று. வல்லனெம்பிரானென்பதை முடிவிலேயே அந்வயிக்கவுமாம்.

கோவிந்தன் = இந்தத் திருநாமம் ஸஹஸ்ரநாமத்தில் இரண்டிடத்தில் படிக்கப்பட்டுள்ளது; அங்கு பட்டருடைய பாஷ்யம் வருமாறு :—மோ (கோ) என்று வாக்குக்குப்பெயராதலால் துதிகளைப்பெற்றவர் என்க. தேவர்கள் செய்யும் துதிகளாகிய வாக்குக்களைப் பெறுகிறவர். மோ என்று பூமிக்கும் பெயராதலால் பூமியைத் திரும்பவும் அடைந்தவர். 'குஹைக்குள் போய்க் காணமற்போன பூமியை நான் கண்டெடுத்தேன்; அதனால் நான் கோவிந்தனென்று சொல்லப் படுகிறேன்' என்று ஸ்ரீமஹாபாரத சாந்திபர்வத்திலுள்ளது.—வேதாந்த வாக்குக் களினால் அறியப்படுகிறவர் அல்லது அடையப்படுகிறவர் என்பது சங்கரபாஷ்யம். பசுக்களை அடைந்தவன் என்பது ப்ரஸித்தமான அர்த்தம். கோவர்த்தனோத் தரணத்திற்குப் பிறகு தேவேந்திரன் வந்து கோவிந்தாபிஷேகம் செய்தனன் என்பது முணர்க. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி :—"ஸ்ரீவைகுண்டத்தில் இல்லாத தொரு ஸம்பத்திறே இது: மோஸம்ருத்தியாலுண்டான ஐச்வர்ய முள்ளது இங்கே யிறே," என்பதாம்.

குடக்கூத்தன் = அந்தணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகங்கள் பண்ணு மாபோலே இடையர் செல்வம் மிக்கால் செருக்குக்குப் போக்குவீடாக ஆடுவ தொரு ஆட்டமாம் குடக்கூத்து. தலையிலே அடுக்குக் குடமிருக்க இருதோள் களிலும் அங்ஙனே அடுக்குக்குடமிருக்க இவைசிறிதும் சலியாதபடி இரண்டு கைகளாலும் குடங்களை மாறிமாறி யெறிந்து ஆடுங்கூத்து இது.

கோவலன்—கோபாலனென்பதன் விகாரம். கோ—பசுக்களை மேய்ப் பதில், வலன்—வல்லன் என்றும் சிலர் கூறுவர். 'கோ அலன்' என்று பிரித்து, ஆச்ரிதபரதந்திரன் என்று சொல்லுவாருமுளர்; கோ என்று அரசனுக்குப் பெயராய் ஸ்வதந்திரனென்றபடி; கோ அல்லாதவன்-பரதந்திரன்.

தேவும் தன்னையும் = தேவு என்றது தேவத்வமாய் பரத்வத்தைச் சொன்னபடி. தன்னை என்று ஆச்ரித பாரதந்திரியமாகிற ஸௌலப்யத்தைச் சொன்னபடி. இச்சொல் அப்பொருளை எங்ஙனே சொல்லுமென்னில்; எம் பெருமானுக்கு ஸௌலப்யமே தானானதன்மை என்று அறுதியிட்டிருக்குமவ ருடைய வாக்காதலால் இதுவே பொருளாகும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆழ்வானும் வரதராஜஸ்தவத்தில் „அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர: பராதீநம் த்வாம் து ப்ரணதபரதந்த்ரம் மநுமஹே— அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர: பராதீநம் த்வாம் து ப்ரணத பரதந்த்ரம் மநுமஹே " என்றருளிச் செய்தார். ஸ்ரீபரதாழ்வானோடுகூட சித்திர கூடஞ் சென்ற வஸிஷ்ட பகவான் ஸ்ரீராமபிரானை நோக்கி " ஸ்வாத்மாநம் நாதிவர்தேதா:—ஆத்மாநம் நாதிவர்த்தேதா:" என்றான். ' தன்னை மீறாதே ' என்பது சப்தார்த்தம். இங்கே ஆத்மாநம் என்பதற்கு ' உயிர்நிலையான பரதாழ்வானை ' என்று சிலர் பொருள் கூறுவதுண்டு ; அப்படியல்லாமல் பட்டர் அருளிச் செய்வதாவது—ஆத்மாந மென்றது தானானதன்மையை யென்றபடி : தானான தன்மையாவது ஆச்ரிதபாரதந்திரியம் ; அதனை இழக்கவேண்டா என்பதாக.

தன்மையம் = தன்மையன் என்பது ஒருமை ; அதன் பன்மை இது. தன்மைப்பன்மைக் குறிப்பு வினைமுற்று. விட்டு—விஷ்ணு. ... ... (௪)

விட்டிலங்குசெஞ்சோதித் தாமரைபாதம்கைகள்கண்கள் *
விட்டிலங்குகருஞ்சுடர் மலையேதிருவுடம்பு *
விட்டிலங்குமதியம்சீர் சங்குசக்கரம்பரிதி *
விட்டிலங்குமுடியம்மான் மதுசூதனன்தனக்கே. (௫)

| | |
|---|---|
| விட்டு இலங்கு முடி அம்மான் | நன்றாக விளங்குகின்ற திருவபிஷேகத்தை யுடைய ஸ்வாமியான |
| மது சூதனன் தனக்கு | மதுவைக்கொன்ற பெருமானுக்கு |
| பாதம் கைகள் கண்கள் | திருவடிகளும் திருக்கைகளும் திருக்கண்களும் |
| விட்டு இலங்கு செம் சோதி தாமரை | விரிந்து விளங்குகின்ற சிவந்த சுடரையுடைய தாமரைப்பூக்களேயாம்; |

| | |
|---|---|
| திரு உடம்பு | திருமேனியோவென்றால், |
| விட்டு இலங்கு கரு சுடர் மலையே | நன்கு விளங்குகின்ற நீலவர்ணப்ரபையை யுடைய மலைபோன்றது; |
| சீர் சங்கு | சிறந்த சங்கானது |
| விட்டு இலங்கு மதியம் | மிகவிளங்குகின்ற சந்திரனைப் போன்றது; |
| சக்கரம் | திருவாழி |
| பரிதி | ஸூர்யனைப்போன்றது; |

* * * [விட்டிலங்கு]. தம்மையும் தம்முடைய ஸம்பந்த ஸம்பந்திகளையும் எம்பெருமான் வைஷ்ணவராக்கினது தன் வடிவத்தைக் காட்டி யென்கிறார்.

திருமாலைபாண்டான் பக்கலில் எம்பெருமானார் திருவாய்மொழி கேட்டருளுங்காலத்தில் பாசுரந்தோறும் எம்பெருமானார் விலக்ஷணமாக ஒவ்வொரு அர்த்த விசேஷம் தாம் சொல்லி ' இப்படியிருக்கலாமோ ?' என்பராம் ; ஆண்டான் அதுகேட்டு ' இது விச்வாமித்ர ஸ்ருஷ்டியாயிருக்கிறது ; ஆளவந்தாரருளிச்செய்ய நான் கேட்டதில்லை ' என்று ஸாதிப்பாராம். இப்பாசுரம் வருகையில்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



எம்பெருமானார் ஒன்றும் ஸாதியாமல் இருக்கக்கண்ட ஆண்டான் 'இப்பாட்டில் விச்வாமித்ர ஸ்ருஷ்டி ஒன்றுமில்லைபோலும்!' என்று புன்முறுவலோடே கேட்டு விட்டாராம். எம்பெருமான் தன்னுடைய திருமேனிபழகைக் காட்டி ஆழ்வாரைத் தனக்காக்கிக் கொண்டமையை இப்பாட்டில் சொல்லுவதாக ஆளவந்தாரருளிச் செய்தபடி. உடையவரும் இப்படியே அருளிச் செய்துவந்தார்; பட்டர் அருளிச் செய்யும்போது 'ஆழ்வாரையும் ஆழ்வாருடைய ஸம்பந்திகளையும் விஷயீகரித்து அத்தாலே எம்பெருமானது திருமேனியிற் பிறந்த புகரைச் சொல்லுகிறது' என்பராம். எம்பெருமானுடைய வடிவழகைக் காரண கோடியிலே நிறுத்தி ஆளவந்தாருடைய நிர்வாஹம். அதைக் கார்ய கோடியிலே நிறுத்தி பட்டருடைய நிர்வாஹமென்று வாசிகாண்க.

> பன்னீராயிரப்படி யுரையில்-"இப்பாட்டில் முதலடியில் விட்டு வென்று திருநாமமாகப் பிரித்து, விட்டிலங்கு முடிபம்மானென்று நாலாமடியோடே அந்வயித்துக் கிடக்கிறது; அல்லாதபோது, திருநாமம் முதலாக எழுகிற பாட்டுக்களின் மர்யாதை குலையும்."

என்கிற வாக்கியங்கள் காணப்படுகின்றன. இதற்குப் பெரியோர்கள் அருளிச் செய்வதாவது—பாட்டின் தொடக்கத்திலுள்ள விட்டு என்பதை 'விஷ்ணு' என்கிற பதத்தின் விகாரமாகவே கொள்ளவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. கேசவாதி நாமங்கள் பாசுரந்தோறும் வரவேணுமென்கிற இவ்வளவு நியமமே யுள்ளது. இப்பாட்டில் மதுசூதன னென்கிற திருநாமம் வந்துவிட்டது கீழ்ப் பாட்டில்வந்த விஷ்ணுநாமம் இப்பாட்டிலும் வரவேணுமென்கிற நியதியில்லை. அப்படி நியதிகொண்டாலும் பாட்டின் ஆதியில் விட்டு என்றிருப்பதால் அது அர்த்தசக்தியால் விஷ்ணுபோதகமாகாவிடினும் சப்தசக்தியால் விஷ்ணுப்ரத்யபிஜ்ஞாபகமாகக் குறையில்லை. திருவெழுகூற்றிருக்கையில் இருமலர், நால்வாய், இருநீர், ஆறுபோதி என்றிவை முதலான பதங்கள் அர்த்தசக்தியாலன்றிக்கே சப்த சக்தியால்மாத்திரம் எண்களைக் குறிப்பிடுகின்றமை இதற்கு நிதர்சநமாகக் கொள்ளத்தகும். ஆகவே, ஈடு முப்பத்தாறாயிரப்படியி லருளிச் செய்கிறபடி பாக்ஷிகநிர்வாஹமே பொருந்தும் என்று. ஒன்பதினாயிரப்படியிலும் இருபத்தினாலாயிரப்படியிலும் விட்டு என்கிற சொல் நான்கடிகளிலும் ஸமரூபமாகவே கொள்ளப்பட்டிருக்கின்றமையும் அறியத்தக்கது.

மிகவிளங்காநின்ற திருவபிஷேகத்தை யணிந்துள்ள எம்பெருமானுக்குப் பாதங்களும் கைகளும் கண்களும் அழகிய தாமரைகளே யாம்; திருமேனியோ நீலாஞ்சநாத்ரியேயாம்; சங்குசக்கரங்கள் சந்த்ர ஸூர்யர்கள்—என்று திவ்யாவயவ சோபையையும் திவ்யாயுத சோபையையும் அநுபவித்துப் பேசினாராயிற்று.

வடமொழியில் பரிதி என்னுஞ்சொல் ஸூர்யனைச் சுற்றியிருக்கின்ற பரிவேஷத்திற்கு [ஊர்கோளுக்கு]ப் பெயர்; அச்சொல்லே தமிழில் இலக்கணையால் ஸூர்யனை யுணர்த்திநிற்கும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மதுஸூதனனென்ற திருநாமத்திற்கு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ஸ்ரீசங்கராசாரியஸ்வாமிகள்—“[மதுஸூதந:] மது என்னும் அஸுரனைக் கொன்றவர். திருமாலினுடைய காதின் குறும்பியிலிருந்து முண்டான மது வென்னும் பெயரையுடைய அஸுரனை அவர் ப்ரஹ்மாவின் நன்மைக்காகக் கொன்றார். அதனால் தேவர்களும் தானவர்களும் மநுஷ்யர்களும் ரிஷிகளும் அவரை மதுஸூதநரென்று சொல்லுகிறார்களென்று ஸ்ரீமஹாபாரதத்திற் கூறப்பட்டுளது” என்றார். பட்டருடைய பாஷ்யத்தில்—மது வென்னுமஸுரனை ஸம்ஹரித்தவரென்கிற பொருள்தவிர, நித்யஸூரிகளின் மதுக்களென்னும் புலன்கள் தம்மிடத்தில் இடையூறில்லாமல் சேர்ந்திருக்கும்படி ஆகர்ஷிப்பவர்-என்கிற பொருளும் அருளிச் செய்யப்பட்டுளது.

மதுவைச் சொன்னவிட மெங்கும் கைடபாஸுரனையும் கொள்ளவேணும்; அவ்விருவரும் கூடியே உலகுக்குத் தீங்கிழைத்துத் திருமாலால் முடிக்கப்பட்டனர். இவர்கள் முடிந்தவரலாறு பலவிதமாகச் சொல்லப்படுவதுண்டு: அவற்றுள் ஒருவிதம் வருமாறு:—பிரமதேவனது தினப்பிரளயத்தில் இவ்வுலகமெல்லாம் பெருங்கடலினால் எங்கும நீர்மயமாயிருந்த பொழுது அவ்வெள்ளத்தில் திருமால் அரவணையில் அமர்ந்திருக்கையில் அத்திருமாலினிடத்து நின்று ரஜஸ் தமோ குணங்களின் வடிவமாகத்தோன்றி ‘எம்மை நீ கொல்லுக என்று தம் வாயாற் சொல்லிய பின்னரே தம்மைப்பிறர் கொல்லலாகும்’ என்று வரம்பெற்ற இவ்வசுரரிருவரும் அப்பிரளயநீரைக் குழப்பிக்கொண்டு பேராரவாரத்துடன் சென்று பிரமதேவனைக் கண்டு அவனிடத்து நின்று வேதங்களையெல்லாம் பறித்துக்கொண்டு அப்பிரளய வெள்ளத்தில் மறைந்தனராக, அப்போது தான் செய்ய வேண்டுவது இன்னதெனத் தோறாது திகைப்புக்கொண்ட அப்பிரமன் பின்னர்ச் சிறிது தெளிந்து திருமாலைத் துதித்துத் தனக்கு நேர்ந்த ஆபத்தை முறையிட, அக்கடவுள் ஹயக்ரீவாவதாரஞ் செய்து அக்கடலிற் புக்கு இனியதோர் இசையைப்பாட, அவ்வினிய கீதத்தைக்கேட்ட அவ்வசுரர்கள் அவ்வேதங்களை ஓரிடத்து வைத்திட்டு அவ்வொலிவந்த வழியைப் பிடித்துச் செல்லுமளவில் திருமால் அவ்வேதங்களுள்ளவிடத்திற் சென்று அவற்றைக் கொணர்ந்து பிரமனுக்குத் தந்தருள அப்போது ஒருவரையுங்காணாதவராய் வேதங்களும் எடுத்துக் கொண்டு போகப்பட்டதை யுணர்ந்த அவ்வசுரர்கள் மிகச்சினந்து அரவணையில் அறிதுயிலமரும் பரம்பொருளைக் கிட்டிப் போர்செய்யத் தொடங்கவே திருமாலுக்கும் அவ்வசுரர்க்கும் வெற்றி தோல்விகளின்றி நெடுங்காலம் பெரும்போர் நிகழ்ந்ததாக, முடிவில் திருமாலை நோக்கி அவர்கள் ‘உனது ஆற்றலுக்கு உவந்தோம்; வேண்டும் வரம் பெற்றுக்கொள்’ என்ன; அக்கடவுள் ‘யான் உங்களைக் கொல்லவேணும்’ என்று வரம் வேண்ட, அவர்களும் அதற்கு இணங்குகையில், திருமாலும் உங்கட்கு வேண்டும் வரங் கொண்மின் என்ன; ‘ஒருவரும் இறவாத விடத்தில் நாங்கள் இறக்கவேண்டும்’ என்று அவர்கள் வேண்ட, திருமாலும் அங்ஙனமே வரமளித்துத் தனது திருத்துடையைக் கொண்டு அவர்களை இறுக்கிக் கொன்றிட்டனன் என்பதாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் அழகருடைய திருத்துடைகளை வருணிக்குங்கால் "விஷ்வக்ஷு ஐயேகெடுஹகீடுள—பிஷ்டதுஷ்ட மதுகைடபகீடௌ" என்றும், பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருத்துடைகளை வருணிக்குங்கால் "ஊஊவ ஐயேகெடுஹஸ்ரு...... கிஊவஜீஊஹி ஸஂஹகஊஜிஜோவெ—மதமிவ மதுகைடபஸ்ய......கிமுபமிமீமஹி ரங்ககுஞ்ஜரோர்வோ:" என்றும் அருளிச் செய்திருக்கையாலே மதுகைடபர்கள் திருமாலின் திருத்துடையில் இறுகிமுடிந்தன ரென்பது தெற்றென விளங்கும். அரவணையில் துயில்கொள்ளும் எம்பெருமானோடு போர்புரிவதாக மதுகைடபர்கள் கிட்டவந்த மாத்திரத்திலே திருவனந்தாழ்வானுடைய உஷ்ணமான மூச்சுக்காற்று வீசினவளவிலே அவ்வசுரர்கள் வயிறுருகி மாண்டொழிந்தனர் என்பதாகப் பேயாழ்வார் மூன்றுந்திருவந்தாதியில் "காய்ந்திருளை மாற்றிக் கதிரிலகு மாமணிகள், ஏய்ந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப, வாய்ந்த மதுகைடபரும் வயிறுருகி மாண்டார், அது கேடவர்க்கிறுதிபாங்கு, (66) என்ற பாசுரத்திலருளிச் செய்கிறார். இதிஹாஸ புராணங்கள் பலவகைப்பட்டிருத்தலால் இங்ஙனேயும் ஒருவிதமுண்டு போலும். "பேருகிரியவுணனுடல் மிடல் கெடுத்தாயென்பர் அது, உன் கூருகிரேபறிந்ததல்லால் கோவேயீயறியாயால்" (திருவரங்கக் கலம்பகம்) என்றாற்போலே, உண்மையில் திருத்துடைகளால் இறுக்கிக் கொல்லப்பட்ட அவ்வசுரர்களை ஆதிசேஷனுடைய வெவ்வுயிர்ப்பினால் வயிறுருகி மாண்டனராகச் சொன்னாரென்றுங் கொள்ளலாம்: அதிசயோக்தி ப்ரபேதங்கள். (ரு)

மதுசூதனையன்றிமற்றிலேனென்று எத்தாலும்கருமமின்றி *
துதிசூழ்ந்தபாடல்கள்பாடியாட நின்றூழியூழிதோறும் *
எதிர்சூழல்புக்கெனைத்தோர்பிறப்பும் எனக்கேயருள்கள்செய்ய *
விதிசூழ்ந்ததாலெனக்கேலம்மான் திரிவிக்கிரமனையே. (சு)

| | |
|---|---|
| மதுசூதனை அன்றி | மதுவை முடித்த எம்பெருமானைத்தவிர |
| மற்று இலேன் என்று | வேறொரு பற்றுடையேனல்லேன் என்று அநுஸந்தித்து |
| எத்தாலும் | எந்தவஸ்துவினாலும் |
| கருமம் இன்றி | ஒருகாரியமில்லாமல் [அநந்யப்ரயோஜநமாக] |
| துதி | ஸ்தோத்ரரூபத்தாலே |
| சூழ்ந்த | அவனது திருக்குணங்களை வளைந்த |
| பாடல்கள் | பாசுரங்களை |
| நின்று பாடி ஆடி | நிலைநின்று பாடியாடும்படி |
| ஊழி ஊழி தோறும் | ஸதாகாலமும் |
| எனைத்து ஓர் பிறப்பும் | (நான் பிறந்த) எல்லாப் பிறவிகள் தோறும் |
| எதிர் | எனக்கெதிரே |
| சூழல் புக்கு | சூழ்ச்சியோடே அவதரித்து |
| எனக்கே | என்பொருட்டே |
| அருள்கள் செய்ய | க்ருபைபண்ணுதற்கு |
| எனக்கு ஏல் | எனக்கென்னவே |
| அம்மான் திரிவிக்கிரமனை விதி சூழ்ந்தது | ஸ்வாமியான த்ரிவிக்ரமனை விதிசூழ்ந்து கொண்டது. |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * [மதுசூதனையன்றி.] எம்பெருமான் பக்கலிலே நான் ஊன்றுகைக்காக அவன்முன் நெடுங்காலம் க்ருஷி பண்ணினதுண்டு; அதுவும் பரமக்ருபையாலே யென்கிறார். எம்பெருமானைத் தவிர வேறு எந்த உபேயமும் உபாயமும் எனக்கு வேண்டாவென்று தள்ளி அவனையே துதித்துப்பாடி யாடும்படியாக என்னைத் திருத்திப் பணிகொள்ளும் பொருட்டு, நான் பிறக்கும் பிறவிதோறும் தானும் எதிரேவந்து பிறந்து எனக்கு வலை போடும்படியாக எம்பெருமானை ஒரு பரம க்ருபை ஆக்ரமித்துக் கொண்டது என்கிறார்.

மற்றிலேன் என்பதனால் தமக்கு வேறு ப்ராப்யம் இல்லையென்பது சொல்லப்படுகிறது. எத்தாலுங் கருமமின்றி என்பதனால் வேறு உபாயம் இல்லை யென்பது சொல்லப்படுகிறது என்று அழகிய மணவாளச்சீயர் அருளிச் செய்யக் கேட்டிருக்கை.

“அநாதிகாலந் தொடங்கி இன்றளவும்வர நான் பிறந்த பிறவிகள்தோறும் என்னை வசீகரிக்கைக்கிடான வடிவுகளைக் கொண்டுவந்து பிறந்தருளி என்னை வசீகரித்து” என்பது ஆறுயிரப்படி திவ்யஸூக்தி. இதிலே சிலர் சங்கிப்பதுண்டு; ஒரு சேதநனை எம்பெருமான் வசப்படுத்திக்கொள்ளத் திருவுள்ளம்பற்றினால் அதற்காக அவன் பல திருவவதாரங்கள் செய்யவேணுமோ? அவன்தானே வாரிப்பிடியாகப் பிடித்துக்கொள்ளுமளவில் தடுப்பாரில்லையே. அப்படியிருக்க, இவர் தம்மை வசீகரிக்க அவன் பல பிறப்புக்கள் பிறந்தருளினதாகச் சொல்லுகிறவிது என் கொல்? என்று.—இதற்குப் பெரியோர் பணிப்பதாவது—எம்பெருமான் கேட்பாரற்ற ஸ்வதந்திரனே யாகிலும் ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாக ஒரு வ்யாஜமாத்திரமாவது இத்தலையிற் கொண்டே ஸ்வீகரிப்பதாக ஒரு வரம்பு இட்டுக்கொண்டிருக்கிறான்; இதுவரையில் இவ்வாழ்வார் பல யோனிகளிற் பிறந்தவிடத்து அப்பெருமானுக்கு இவரை வசீகரிக்கைக்கு உறுப்பான அல்ப வ்யாஜமுங் கிடைக்கவில்லை யென்பதையும், இந்தப் பிறவியில்தான் இவரைக் கைக்கொள்வதற்கு ஸ்வல்பவ்யாஜம் அவனுக்குக் கிடைத்தது என்பதையும் தெரிவிப்பதாகுமிந்தப் பாசுரம்—என்று. எம்பெருமானுடைய க்ருபாகாஷ்டையைப் பேசுவதிலாவது, ஆழ்வார் தம்முடைய நைச்யகாஷ்டையைப் பேசுவதிலாவது இப்பாசுரத்திற்கு முக்கிய நோக்கு என்பர்.

ஸ்ரீவசந பூஷணத்தில்—

“ஆகையால் இவன் விமுகனான தசையிலுங்கூட உஜ்ஜீவிக்கைக்கு க்ருஷி பண்ணின ஈச்வரனை யநுஸந்தித்தால் எப்போதும் நிர்ப்பரனாயே யிருக்குமித்தனை.

“எதிர்சூழல் புக்கு.”

ஒருவனைப்பிடிக்க நினைத்து ஊரை வளைவாரைப் போலே வ்யாப்தியும்.

ஸ்ருஷ்ட்யவதாராதிகளைப் போலே ஸ்வார்த்தமாக வென்றிறே ஜ்ஞாநாதிகர் அநுஸந்திப்பது.”

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்றுள்ள ஸ்ரீஸூக்திகளும் மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களும் இங்கு அநுஸந்திக்க வுரியன.

தம்மை விஷயீகரித்தல்லது எம்பெருமானை யிருக்கவொட்டாமையால் அவனுடைய க்ருபையை விதி என்றார். .... .... (சு)

திரிவிக்கிரமன்செந்தாமரைக்கண் எம்மானென்செங்கனிவாய் *
உருவில்பொலிந்த வெள்ளைப்பளிங்குநிறத்தனன் * என்றென்றுள்ளிப்
பரவிப்பணிந்து பல்லூழியூழிநின்பாதபங்கயமே *
மருவித்தொழும்மனமேதந்தாய் வல்லைகாணென்வாமனனே. (எ)

| | |
|---|---|
| என் வாமனனே | எனக்காக வாமனாவதார மெடுத்த பகவானே! |
| திரிவிக்கிரமன் என்று | மூவடியாலே உலகங்களை யெல்லாமளந்தவன் என்றும் |
| செம் தாமரை கண் எம்மான் என்று | செந்தாமரை போன்ற கண்களையுடைய ஸ்வாமி யென்றும் |
| என் செம் கனி வாய் உருவில் பொலிந்த வெள்ளை பளிங்கு நிறத்தனன் என்று | எனக்கு போக்யமாய்ச் சிவந்து கனிந்த அதரத்தினுடைய அழகு பொலிந்த சுத்த ஸ்படிக வர்ணமான திருமுத்துக்களையுடையவன் என்றும் |
| உள்ளி | அநுஸந்தித்து |
| பரவி | துதித்து |
| பணிந்து | வணங்கி |
| பல் ஊழி ஊழி | நெடுங்காலம் |
| நின் பாத பங்கயமே | உனது பாதாரவிந்தங்களிலேயே |
| மருவி தொழும் மனம் | பொருந்தி அடிமை செய்தற்குறுப்பான மனத்தை |
| தந்தாய் | கொடுத்தருளினாய்; |
| வல்லை காண் | நீ ஸமர்த்தனன்றோ ? |

* * * [திரிவிக்கிரமன்] எம்பெருமானே! உன்னுடைய குணாநுஸந்தாந பூர்வகமாக உன்னைத் துதித்துவணங்கி யநுபவிக்கு மிவ்வளவையே பிரயோஜனமாகக் கொண்டிருக்கும்படியான மனத்தை எனக்குத் தந்தருளினாய்: உன்னுடைய ஸாமர்த்தியமே ஸாமர்த்தியம்! என்று கொண்டாடுகிறார்.

மூன்றடியாலே ஸகல லோகங்களையும் தன் காற்கீழே யிட்டுக்கொண்டவனே! என்றும், கடாக்ஷவீக்ஷணத்தாலே என்னைத் தன் திருவடிக்கீழ் இட்டுக்கொண்டவனே! என்றும், சிவந்து கனிந்த திருவதரத்திலே பரபாகசோபையுடன் விளங்காநின்ற திருமுத்துக்களின் அழகைக்காட்டி என்னை யீடுபடுத்திக் கொண்டவனே! என்றும் இங்ஙனே பலகால் நினைத்தும் வாய்வந்தபடி பேசியும் குணபரவசனாய் வணங்கியும் இப்படி உள்ளதனை நாளையும் அநந்யப்ரயோஜநனாய்க் கொண்டு உன் திருவடிகளிலே அடிமை செய்யும்படியான மநஸ்ஸைத் தந்தாய்; வல்லைகாண் எம்பிரானே! வல்லைகாண்; ஒருவர்க்குஞ் செய்யமுடியாத காரியமன்றோ நீ செய்தது! என்று கொண்டாடிப் பேசினாராயிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மருவித்தொழும் மனமே தந்தாய் என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி பரம போக்யமானது; "பழைய நெஞ்சைத் திருத்தினவளவன்றிக்கே கருவுகலத்திலே யொரு நெஞ்சைத்தந்தாய். * ஷிவ்யாஷஷாஷி போலே, 'பழைய நெஞ்சு இது' என்று ப்ரத்யபிஜ்ஞை பண்ணவொண்ணாதபடி யிராநின்றது' என்பதாம் — கருவுகலமாவது ஸந்நிதிகளில் திருவாபரணம் முதலிய சிறந்த வஸ்துக்கள் சேமித்து வைக்குமிடம்: அதிலிருந்து ஒரு மநஸ்ஸை யெடுத்து ஆழ்வார்க்கு எம்பெருமான் நற்கொடையாகக் கொடுத்தானாம். ... .... (எ)

வாமனனென்மரதகவண்ணன் தாமரைக்கண்ணினன்
காமனைப்பயந்தாய் * என்றென்றுன்கழல் பாடியேபணிந்து *
தூமனத்தனனாய்ப் பிறவித்துழதிநீங்க * என்னைத்
தீமனங்கெடுத்தாய் உனக்கென்செய்கேனென்சிரீதரனே. (அ)

| பதம் | பொருள் |
|---|---|
| என் சிரீதரனே | எனது திருமாலே!, |
| வாமனன் என்று | வாமனமூர்த்தியே யென்று சொல்லியும் |
| என் மரதகம் வண்ணன் என்று | மரதகம்போன்ற வொளியையுடைய எம்பெருமானேயென்று சொல்லியும் |
| தாமரைக் கண்ணினன் என்று | புண்டரீகாக்ஷனே யென்று சொல்லியும் |
| காமனை பயந்தாய் என்று | மன்மதனை மகனாகப் பெற்றவனே யென்று சொல்லியும் |
| உன் கழல் | உன் திருவடிகளில் |
| பாடி பணிந்து | பாடிவணங்கி |
| தூ மனத்தனன் ஆய் | பரிசுத்தமான மனத்தை யுடையேனாய் |
| பிறவி துழதி நீங்க | பிறவித்துயரம் தீரும் படியாக |
| என்னை தீ மனம் கெடுத்தாய் | என்னைத் தீயமனம் அற்றவனாக ஆக்கினாய்; |
| உனக்கு | இப்பெருநன்றி செய்தவுனக்கு |
| என் செய்கேன் | என்னகைம்மாறு செய்வேன்?' |

* * * [வாமனன்] தம் விஷயத்தில் எம்பெருமான் பண்ணின மஹோபகாரத்திற்கு இன்னது கைம்மாறு செய்வதென்று தெரியாமல் தடுமாறுகின்றமையைத் தெரிவிக்கும் பாசுரமிது. அவன் செய்த உபகாரம் யாதெனில், தன்னை யநுபவிப்பதற்கு உறுப்பாகாமலிருந்த நெஞ்சை மாற்றிப் பதஞ்செய்வித்த விதுவே மஹோபகார மென்கிறார்.

முன்பெல்லாம் திருநாமஞ் சொல்லுவதென்றால் வேப்பங்கஷாயம் குடிப்பதுபோல் வெறுத்துக்கிடந்த நான் இப்போது ஒரு நொடிப்பொழுதும் இடைவீடின்றி வாமனனே! என் மரதகவண்ணனே! புண்டரீகாக்ஷனே! காமன்தன் தந்தையே! என்றிப்படிப் பலபல திருநாமங்களையே சொல்லி உன் திருவடிகளைப் பாடியே பணிந்து ப்ரயோஜநாந்தரங்களை விரும்பாத சுத்தமான ஹ்ருதயத்தை யுடையேனாய் இனி யொருநாளும் ஸம்ஸாரபந்தம் நேராதபடியாகப் பழைய தீய மனம் கெட்டுப்போம்படி பண்ணி யருளினாயே!, இங்ஙனே பண்ணின வுபகாரத்தின் கனத்தைப் பார்த்தாலோ ஏதேனுமொரு கைம்மாறு செய்தல்லது தரிக்க

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மாட்டுகின்றிலேன்; என்ன கைம்மாறு செய்வதென்று மறிகின்றிலேன்; திருமகள் கொழுநனும் அவாப்த ஸமஸ்தகாமனுமிருக்கின்ற வுனக்கு க்ஷுத்ரனான நான் செய்யத்தக்க தொன்றுமில்லையே! என்றாராயிற்று.

முதலடியிலுள்ள பதங்களெல்லாம் அண்மை விளிகள். ருக்மிணிப்பிராட்டியினிடத்து மன்மதனுடைய அம்சமாகப் பிறந்த ப்ரத்யும்நனுக்குக் கண்ணபிரான் தந்தையாதலால் காமனைப் பயந்தாய்! என்றது.

துழதி—அலமாப்பு, ஆயாஸம்.

"என்னைத் தீமனங் கெடுத்தாய்" என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்: — "அம்ருதத்தையும் விஷத்தையும் ஒக்க விரும்புவாரைப் போலே உன்னையுமுகந்து க்ஷுத்ர விஷயங்களையுமுகக்கும் பொல்லாத நெஞ்சைத் தவிர்த்தாய்." ... ... ... (அ)

சிரீதரன்செய்யதாமரைக்கண்ணன் என்றென்றிராப்பகல்வாய்
வெரீஇ * அலமந்துகண்கள்நீர்மல்கி வெவ்வுயிர்த்துயிர்த்து *
மரீஇயதீவினைமாளவின்பம்வளர வைகல்வைகல்
இரீஇ * உன்னையென்னுள்வைத்தனை யென்னிருடீகேசனே. (கூ)

| | |
|---|---|
| என் இருடீகேசனே | எம்பெருமானான ஹ்ருஷீகேசனே! |
| சிரீதரன் என்று | ஸ்ரீதரனே! என்றும் |
| செய்ய தாமரை கண்ணன் என்று | செந்தாமரைக் கண்ணனே! என்றும் |
| இரா பகல் | இரவும் பகலும் |
| வாய் வெரீஇ | வாய் பிதற்றி |
| அலமந்து | சுழன்று |
| கண்கள் நீர் மல்கி | கண்களில் நீர் ததும்பப் பெற்று |
| வெவ் உயிர்த்து உயிர்த்து | வெப்பமாக நெடுமூச் செறிந்து, |
| மரீஇய தீ வினை மாள | சேர்ந்திருக்கின்ற பாவங்கள் தொலையும்படியாகவும் |
| இன்பம் வளர | ஆனந்தம் பெருகும்படியாகவும் |
| வைகல் வைகல் | க்ஷணந்தோறும் |
| உன்னை | உன்னை |
| என் உள் | என் நெஞ்சினுள்ளே |
| இரீஇ வைத்தனை | இருத்திவைத்தாய்; (இப்படியும் ஒரு உபகாரமுண்டோ!.) |

* * * [சிரீதரன்.] கீழ் * ஆடியாடி யென்கிற நான்காந் திருவாய்மொழியில் நான்பட்ட துயரமெல்லாம் தொலைந்து மகிழ்ந்தேனும்படி என்னுள்ளே வந்து பேராதபடி புகுந்தருளி என்னுடைய இந்திரியங்களை அடக்கி ஆண்டனையே! என்று உகக்கிறார். இப்பாசுரத்தைப் பூருவர்கள் நிர்வஹிக்கிறபடி ஒருவகை; பட்டர் நிர்வஹிப்பது ஒருவகை. மூன்றமடியில் "மரீஇய தீவினைமாள" என்றிருப்பதை முன்னிரண்டடிகளோடு ஸம்பந்தப்பட்டதாகக் கொள்ளாமல் உரைத்தார்களாம் பூருவர்கள்; அதாவது—என்னிடத்தில் மருவியிருந்த தீவினைகளெல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



லாம் மாளும்படி நீ அநுக்ரஹம் செய்ததனாலே ஸ்ரீதரன் செய்யதாமரைக் கண்ணன் என்றென்று இரவும்பகலும் வாய் வெருவிக்கொண்டு கண்ணீர் சொரிவதும் பெருமூச்சுவிடுவதுமா யிருந்துகொண்டு இப்படிப்பட்ட பக்திப்பேரின்பம் க்ஷணந்தோறும் வளர்ந்து செல்லும்படியாக உன்னை யென்னுள் வைத்தனை என்பதாக முன்னோர்கள் நிர்வஹிக்கும்படி. இதனால், முன்னிரண்டடிகளிற் கூறப்பட்டுள்ள விஷயம் ஆழ்வார்க்கு இந்தப்பாசுரம் பேசும் ஸமயத்திலிருப்பதாக நிர்வஹிக்கின்றமை விளங்கும். வாய் வெருவுவதும் அலமருவதும் கண்ணீர்மல்கப் பெறுவதும் வெவ்வுயிர்க் கொள்வதுமாகிய இவை இன்பமாகக் கூடுமோவென்னில், ஆழ்வார் பக்தி பரவசராகையாலே இந்த நிலைமை இவர்க்கு தேஹயாத்ரா சேஷமாய் நித்தியமாக இருக்கக்கூடியதாகையாலே இவை இன்பமாகக் குறையில்லை யென்பதும் பூருவர்களின் திருவுள்ளம். ஆக, முன்னடிகளிற் கூறப்பட்ட விஷயம் 'தீவினைமாள' என்பதிலேயல்லாமல் இன்பம் வளர வென்பதிலே அந்வயிப்பதாகப் பூருவர்கள் நிர்வஹித்தார்களென்றதாயிற்று.

இனி, பட்டருடைய நிர்வாஹமெங்ஙனே யென்னில்; முன்னடிகளிற் சொல்லப்பட்டிருக்கின்ற வாய்வெருவுதல் முதலியவை ஆழ்வார்க்கு இப்போதுள்ளவை யல்ல. வாய் வெருவியும் அலமந்தும் கண்ணீர் மல்கியும் வெவ்வுயிர்த்துயிர்த்தும் இருந்த விச்லேஷவ்யஸநம் மாளவும் இன்பம் வளரவும் உன்னை யென்னுள் வைத்தனை யென்பதாக. தீவினை யென்றது பிரிவாற்றாமையைச் சொன்னபடி. காயெ-ªகாரணொவசார மென்க. *ஆடியாடியிலிருந்த பிரிவாற்றாமை முன்னடிகளில் சொற்போக்கினால் நன்கு தெரிகின்றது. அங்கு "இவளிராப்பகல் வாய்வெரீஇ" என்றது; இங்கு "என்றென்றிராப்பகல் வாய்வெரீஇ" என்கிறது. அங்கு "எங்கும் நாடிநாடி" என்றது; இங்கு "அலமந்து" என்கிறது. அங்கு "தனகுவளையொண்கண்ணநீர் கொண்டாள்" என்றது; இங்கு "கண்கள் நீர்மல்கி" என்கிறது. அங்கு "உள்ளம்மலங்க வெவ்வுயிர்க்கும்" என்றது; இங்கு "வெவ்வுயிர்த்துயிர்த்து" என்கிறது. ஆகவிப்படி மருவிய தீவினைமாள—என்று அந்வயித்துப் பொருளுரைப்பர் பட்டர்.

இப்பாட்டில் அடிதோறும் முதற்சொற்களில் இசை நோக்கிய அளபெடை. ஹ்ருஷீகேசன் என்னும் வடசொல் இருடீகேசனெனத் திரியும். ஹ்ருஷீகமென்று இந்திரியங்களுக்குப் பெயர்; அவற்றுக்கு ஈசன்—நியாமகன் என்றபடி. ... .... ... (கூ)

இருடீகேசனெம்பிரான் இலங்கையரக்கர்குலம் *
முருடுதீர்த்தபிரான் எம்மானமரர்பெம்மானென்றென்று *
தெருடியாகில்நெஞ்சேவணங்கு திண்ணமறியறிந்து *
மருடியேலும்விடேல்கண்டாய் நம்பிபற்பநாபனையே. (ய)



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| நெஞ்சே | மனமே! |
| தெருடி ஆகில் | நீ அறிவுடையை யாகில், |
| இருடீகேசன் என்று | ஹ்ருஷீகேசனே யென்றும் |
| எம்பிரான் என்று | எம்பிரானே யென்றும் |
| இலங்கை அரக்கர் குலம் முருடு தீர்த்த பிரான் என்று | இலங்கையிலிருந்த ராக்ஷஸ குலத்திற்கு முருடான ராவணனைத் தொலைத்தபிரானே யென்றும் |
| எம்மான் என்று | எம்பெருமானே யென்றும் |
| அமரர் பெம் மான் என்று | நித்யஸூரி நாதனே யென்றும் சொல்லி |
| வணங்கு | அவனை வணங்கு; |
| திண்ணம் அறி | இதைத் திடமாக அறிவாயாக; |
| அறிந்து | அறிந்தபின் |
| மருடி ஏலும் | (மீண்டும்) கலங்குவா யாகிலும் |
| நம்பி பற்ப நாபனை | குணபரிபூர்ணனை பத்மநாபனை |
| விடேல் கண்டாய் | விடாதே கொள். |

* * * [இருடீகேசன்.] இங்ஙனம் மஹோபகாரகனை எம்பெருமானை ஒரு நாளும் விடலாகாதென்று நெஞ்சுக்கு உரைக்கும் முகத்தால் தம்முடைய அத்யவஸாயத்தை வெளியிடுகிறார்.—இராவணன் பத்துத்தலையையுடையனாய்க் கடல் சூழ்ந்த இலங்காபுரியிலே அரசனாய் வஸித்துவந்தது போல, ஐந்து ஜ்ஞானேந்திரியங்கள் ஐந்து கர்மேந்திரியங்களாகிற பத்துத் தலைகளையுடைத்தாகி ஸம்ஸாரக் கடல் சூழ்ந்த சரீரபுரத்திலே ஸ்வதந்திர ப்ரபுவாய் இருக்கின்றது மனம்: அப்படிப்பட்ட மனத்தைத் திருத்தினதும் ராவணஸம்ஹாரம் செய்ததும் இரண்டு மொக்குமென்கிற கருத்தை ஒன்றரையடிகளாற் காட்டுகின்றார். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின் :—"இவருடைய இந்த்ரிய வச்யதையைத் தவிர்த்தது— லங்கையில் ராக்ஷஸஜாதியில் விபீஷணாதிகளை வைத்து முரடரான ராவணாதிகளை நிரஸித்தாப்போலே யாயிற்று." என்பதாம்.

எம்மான் அமரர் பெம்மான் = இந்திரியங்களினுடைய இதா விஷயப்ராவண்யத்தைத் தவிர்த்த மாத்திரமேயல்லாமல், நித்யஸூரிகளுக்குத் தன்னையநுபவிக்கக் கொடுக்குமாபோலே எனக்குத் தன்னையநுபவிக்கத் தந்தருளினவன் என்று கருத்து.

என்றென்று = இதற்கு 'வணங்கு' என்பதனோடே அந்வயம். நெஞ்சமே! எம்பெருமான் நமக்குச் செய்தருளின உபகாரபரம்பரைகளைப் பலபடியாலும் அநுஸந்தானஞ் செய்துகொண்டே அவனை வணங்கு என்றபடி.

தெருடியாகில் வணங்கு என்கிறார்—சைதந்யத்திற்குப் பலன் எம்பெருமானை வணங்குதலேயாமென்று காட்டுதற்கு. 'தெருள்' என்னும் வினைப்பகுதியின்மேல், தி என்ற நிகழ்கால முன்னிலை யொருமை விகுதியேறி, தெருடி யென்றாயிற்று.

நான் சொல்லும் வார்த்தையை ஸாமாந்யமாக நினையாமல் விசேஷித்துக் குறிக்கொள்ள வேணுமென்பார் திண்ணமறி என்கிறார். அறி என்றபின் அறிந்து

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்று மீண்டும் ஒரு வினையெச்சம் வேணுமோ வென்னில்; அதன் உட்கருத்தை நம்பிள்ளை காட்டுகிறார்—

"அறிகைதானே போரும் ப்ரயோஜநம்; அதுக்குமேலே"

என்ற ஸ்ரீஸூக்தியால். நான் சொல்லும் வார்த்தையை நீ குறிக்கொள்வதே பரமப்ரயோஜநங் காண் என்று காட்டுதற்கே மீண்டும் அறிந்து என்றது.

மருடியேலும் விடேல்கண்டாய் = 'மருடி' என்கிற சொல்லின் வடிவமும் 'தெருடி' என்றது போலவே. 'மருளுதி' என்றபடி. அயோக்யதாநுஸந்தாநம் பண்ணி அறிவு கலங்குமளவிலும் எம்பெருமானை விடாமலிருக்கப்பார் என்று திருவுள்ளத்திற்கு உபதேசித்தாராயிற்று.

நம்பி பற்பநாபனையே என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி பரமபோக்யம்;— "கெடுவாய்! இவ்விஷயத்தைவிட்டுப் புறம்பேபோய் மண்ணைமுக்கவோ? அவன் குண பூர்த்தியிருந்தபடி கண்டாயே, வடிவழகிருந்தபடி கண்டாயே, முன்பு நமக்கு உபகரித்தபடி கண்டாயே." .... ... (கo)

பற்பநாபனுயர்வறவுயரும் பெருந்திறலோன் *
எற்பரனென்னையாக்கிக்கொண்டு எனக்கேதன்னைத்தந்த
கற்பகம் * என்னமுதம்கார்முகில்போலும் வேங்கடநல்
வெற்பன் * விசும்போர்பிரான் எந்தைதாமோதரனே. (கக)

| பதம் | பொருள் |
| --- | --- |
| பற்பநாபன் | (உலகமெல்லாம் தோன்றுவதற்குக் காரணமான) தாமரையைத் திருநாபியிலுடையவனும் |
| உயர்வு அற உயரும் பெருந்திறலோன் | வேறு எங்கும் உயர்த்தியில்லை யென்னும்படி உயர்ந்த அபார சக்தியையுடையவனும் |
| என் பரன் | என்னிடத்து ஊற்றமுடையவனும் |
| என்னை ஆக்கிக்கொண்டு எனக்கே தன்னை தந்த கற்பகம் | என்னை யுண்டாக்கி அங்கீகரித்து எனக்கே அஸாதாரணமாம்படி தன்னைத் தந்த கல்பவ்ருக்ஷப்ராயனும் |
| என் அமுதம் | எனக்குப் பரமபோக்யனும் |
| கார் முகில் போலும் | காளமேகம் போன்றவனும் |
| வேங்கடம் நல் வெற்பன் | திருவேங்கடமென்கிற நல்ல திருமலையை இருப்பிடமாக வுடையவனும் |
| விசும்போர் பிரான் | நித்யஸூரிகளுக்குத் தலைவனும் |
| தாமோதரன் | ஆச்ரித விதேயனுமான எம்பெருமான் |
| எந்தை | எனக்கு ஸ்வாமி. |

* * * [பற்பநாபன்.] மிகவும் விலக்ஷணனாய் மிகவும் எளியனாய் என்னையடிமைகொண்ட எம்பெருமான் என்னைத்தவிர வேறொன்றையும் அறியாதபடியானான்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்கிறார். ஸகல ஜகத்தும் உத்பத்திபாவதற்குக் காரணமான திருநாபிக்கமலத்தை யுடையவனும், பேசப்புகுந்தால் அளவிட்டுப் பேசமுடியாத ஸௌசீல்யவீர்யம் முதலிய திருக்குணங்களை யுடையனும், இவ்வளவு மேன்மைகிடக்க என்பக்கலிலே ஊற்றமுடையனும், எனக்குத் தன்னை ஸர்வஸ்வதானம் பண்ணினபடியாலே எனக்குக் கல்பவ்ருக்ஷ மென்னலாம்படி யிருப்பவனும், யாசகனுகிய என்னையும் உத்பத்திபண்ணித் தந்தருளினமையாலே கல்பவ்ருக்ஷத்திற் காட்டிலும் சிறப்புப் பெற்றவனும், எனக்குப் பரமபோக்யனும், கொடுத்தோமென்று நினையாதே கொடுக்கும் மேகத்தின் ஔதார்யம்போன்ற ஔதார்யத்தையுடைய திருவேங்கடமலையில் வாழ்பவனும், நித்யஸூரிகளுக்குத் தலைவனுயிருந்துவைத்து அன்பரான இடையர்க்குமிடைச்சிகட்கும் கட்டவுமடிக்கவுமாம்படி வந்து அவதரித்து அச்செயலாலே என்னையாட்படுத்திக் கொண்டானுனன் என்றதாயிற்று.

கற்பகத்திற்காட்டில் எம்பெருமானுக்குள்ளவாசி—யாசகனையும் தானே யுண்டாக்குகையும் அவனைத் தானே ஸ்வீகரிக்கையும் அவன் விரும்பினதைக் கொடுக்கையன்றியே தன்னையே கொடுக்கையும் தானே போக்யமாகையும்.

"கார்முகில் போலும்" என்ற அடைமொழி வேங்கட மலைக்குமாகலாம் மலையப்பனுக்குமாகலாம். .... .... ... (கக)

தாமோதரனைத்தனிமுதல்வனை ஞாலமுண்டவனை *
ஆமோதரமறிய ஒருவர்க்கென்றேதொழுமவர்கள் *
தாமோதரனுருவாகிய சிவற்கும்திசைமுகற்கும் *
ஆமோதரமறிய எம்மானையென்னுழிவண்ணனையே. (கஉ)

| | |
|---|---|
| தாமோதரனை | தாமோதரனென்கிற திருநாமமுடையவனும் |
| தனி முதல்வனை | ஒப்பற்ற ஸகல ஜகத் காரண பூதனும் |
| ஞாலம் உண்டவனை | (பிரளயகாலத்தில்) உலகங்களைத் திருவயிற்றிலே வைத்து நோக்கினவனுமான எம்பெருமானை |
| தாம் அறிய | பகுத்து அறிவதற்கு |
| ஒருவர்க்கு ஆமோ என்று | ஒருவராலும் ஸாத்யமாகாதென்று துணிந்து |
| தொழுமவர்கள் | வணங்குகின்றவர்களான |
| தாமோதரன் உரு ஆகிய சிவற்கும் திசைமுகற்கும் | எம்பெருமானுக்கு அவயவ பூதர்களான சிவனுக்கும் பிரமனுக்கும் |
| என் ஆழி வண்ணனை எம்மானை | கடல்வண்ணனை எம்பெருமானை |
| தாம் அறிய ஆமோ | அளவிட்டு அறிதல் கூடுமோ ?. |

* * * [தாமோதரனை] தம் விஷயத்தில் எம்பெருமான் பண்ணின உபகாரம் மாஞானிகளாலும் அளவிட வொண்ணுதது என்கிறார். அவனுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இலக்காயிருக்கின்ற தம்மைப்போன்றவர்கள் அவனைக் காணக்கூடுமேயல்லது 'நம்முயற்சியாலே யறிவோம்' என்றிருப்பார்க்கு அறியலாகாது என்கிறாராகவுமாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அடியவர்கட்குப் பரதந்திரனும் ஸகல ஜகத்துக்களுக்கும் முதற்காரணமானவனும் பிரளயாபத்திலே பேருதவி புரிகின்றவனுமானவனை அளவிட்டறிய ஆராலாவது ஆகுமோவென்று சொல்லிக்கொண்டு தொழுமவர்களாய் அந்த தாமோதரனுக்குச் சரீரபூதர்களான சிவனுக்கும் பிரமனுக்கும்—கடுகிலே கடலையடக்குமாபோலே என்பக்கலிலே தன் குணக்கடலை வைத்து என்னை யடிமை கொண்ட ஸ்வாமியை அளவிட்டு அறிப்போமோ? என்றாராயிற்று. உலகப் பொதுவாக அவன் செய்யுமுபகாரங்களை ஒருபடி யறிந்தாலும் என்பக்கலில் அவன் பண்ணின விசேஷோபகாரம் அறியவரிது என்றவாறு. ... (கல)

வண்ணமாமணிச்சோதியை அமரர்தலைமகனை *
கண்ணனைநெடுமாலைத் தென்குருகூர்ச்சடகோபன் *
பண்ணியதமிழ்மாலை ஆயிரத்துள்ளிவைபன்னிரண்டும் *
பண்ணில்பன்னிருநாமப்பாட்டு அண்ணல்தாளணைவிக்குமே. (கக)

| | |
|---|---|
| வண்ணம் மா மணி சோதியை | நல்ல நிறமுடைய நீல மணியின் ஒளியை யுடையனாய் |
| அமரர் தலைமகனை | நித்யஸூரி நிர்வாஹகனாய் |
| கண்ணனை | ஸ்ரீக்ருஷ்ணனாகத் திருவவதரித்தவனாய் |
| நெடு மாலை | (ஆச்ரிதர் பக்கலில்) அளவுகடந்து செல்லுகின்ற வ்யாமோஹத்தை யுடையவனான எம்பெருமானைக் குறித்து |
| தென் குருகூர் சடகோபன் | ஆழ்வார் |
| பண்ணிய | அருளிச் செய்த |
| தமிழ் மாலை ஆயிரத்துள் | தமிழ்மாலையாகிய இவ்வாயிரத்தினுள்ளும் |
| பண்ணில் பன்னிரு நாமம் பாட்டு இவை பன்னிரண்டும் | பண்ணோடு கூடின த்வாதசநாம கர்ப்பிதமான இப் பன்னிரண்டு பாசுரங்களும் |
| அண்ணல் | ஸர்வேச்வரனுடைய |
| தாள் | திருவடிகளை |
| அணைவிக்கும் | சேர்ப்பிக்கும். |

* * * [வண்ணமாமணி.] இத்திருவாய்மொழி வல்லார் எம்பெருமானைப் பெறுவாரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். அழகிய நீலமணிநிறத்தனாய், இவ்வழகு நித்யஸூரிகளுக்கும் எல்லைகாணவொண்ணாதபடி பெரியவனாய் அடியார்களைத் தானே அநுபவிக்குமவனாய் அதற்கு அடியான அபாரவ்யாமோஹத்தை யுடையனான எம்பெருமான் விஷயமாக ஆழ்வாரருளிச்செய்த ஆயிரத்தினுள் பண்ணிலே புணர்க்கப்பட்டதாய் த்வாதச நாமங்களைப்பற்றி வருகிற பாட்டான இவைபன்னிரண்டும் எம்பெருமான் திருவடிகளோடே சேர்த்துவிடும். இத்திருவாய்மொழியோடுண்டான ஸம்பந்தந்தானே கேசவன்தமராக்கிவிடும் என்றவாறு. ... ... ... (கஉ)

ஏழாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.



# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

ஸர்வாதி꞉ ஸர்வநாத-த்ரிபுவநஜநநீவல்லப꞉ ஸ்வாஶ்ரிதார்தீ
விஶ்வவ்யாப்த்யாதிதீப்தோ விமதநிரஸந꞉ ஸ்வாங்க்ரிஸத்பக்திதாயீ ।
விஶ்வாப்த்யை வாமநாங்க꞉ ஸ்வவிபவரஸத꞉ ஸ்வாந்தநிர்வாஹயோக்ய꞉
ஸ்வாயத்தேஹோ பந்நோக்தா ஸ்வஜநஹிததயா ஸாத்ம்யபோகாதிரூடே ॥

1. ஸர்வ ஆதி :—* கேசவன்தமர். * கேசவனென்ற திருநாமத்தில் நோக்காக இந்த விசேஷணம். ப்ரஹ்மருத்ரர்களுக்கும் நிர்வாஹகனென்பது இத்திருநாமத்தின் அர்த்தங்களுள் ஒன்று. அதை இங்கு விவக்ஷிக்கிறார்.

2. ஸர்வநாத :—* நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன். *

3. த்ரிபுவந ஜநநீவல்லப :—* மாதவனென்றதே கொண்டு. * மூவுலகுக்கும் தாயான பெரிய பிராட்டியார்க்குக் கொழுநன்.

4. ஸ்வாச்ரிதார்த்தி:—* எமரேழெழுபிறப்பும் மேவுந்தன்மையமாக்கினான். * ஆச்ரிதர்கள் எல்லையில்லாதபடி உண்டாக வேணுமென்று ஆசம்ஸிக்குமவன்.

5. விஷ்வக்வ்யாப்த்யா அதிதீப்த :—* விட்டிலங்கு செஞ்சோதி. * விஷ்ணுவாயும் மிகவிளங்குமவனாயு மிருப்பவன்.

6. விமதநிரஸந :—* மதுசூதனையன்றி மற்றிலேன். * மது என்கிற விரோதியைக் கொன்றொழித்தாப்போலே ஆழ்வாருடைய விரோதிகளை முடித்தவன்.

7. ஸ்வ அங்க்ரி ஸத்பக்திதாயீ:—* நின் பாதபங்கயமே மருவித்தொழும் மனமே தந்தாய். * தன் திருவடிகள் விஷயமான சிறந்த பக்தியை ஆச்ரிதர்களுக்குக் கொடுக்குமவன்.

8. விச்வாப்த்யை வாமநாங்க :—* வாமனனென் மரதகவண்ணன். * மாவலியாலே கொள்ளை கொள்ளப்பட்ட உலகங்களை யெல்லாம் மீட்கும் பொருட்டு வாமநாவதாரஞ் செய்தருளினவன்.

9. ஸ்வவிபவரஸத :—* சிரீதரன் செய்ய தாமரைக் கண்ணன் என்றென்றிராப்பகல் * தன்னுடைய ஸ்ரீதரத்வ புண்டரீகாக்ஷத்வாதி விபவங்களை இடைவிடாது அநுஸந்திக்குமாறு ருசியைப் பிறப்பித்தவன்.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



10. ஸ்வாந்த நிர்வாஹ யோக்ய :—* இருடீகேச னெம்பிரான் * ஹ்ருஷீ கேசனுகையாலே மநஸ்ஸைத் தன் திருவடிகளில் நின்றும் பேராதபடி நிர்வஹிக்க வல்லவன்.

11. ஸ்வார்த்த ஈஹ :—* எற்பரன்.* தம்மிடத்து விருப்பமுடையான்.

12. பந்தமோக்தா :—* தாமோதரனை * தான் கட்டுண்டிருந்த சரித்தி ரத்தை அநுஸந்திக்குமவர்களுடைய ஸம்ஸார பந்தங்களை யறுப்பதற்காகத் தாமோதரனானவன். ஆக இப்படிப்பட்ட எம்பெருமான் [ஸ்வஜந ஹிததயா த்வாதசாக்யாபி : ஊசே] ஆச்ரிதருடைய ஸ்ப்பந்தி ஸம்பந்திகளுக்கும் ஹித னென்று பன்னிரு நாமப்பாட்டான இத்திருவாய்மொழியினால் பேசப்பட்டான்.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.



## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

𑌤𑍇 𑌕𑍇𑌶𑌵𑌾𑌭𑌿𑌮𑌤𑌤𑌾𑌮𑌹𑌜𑌨𑍍𑌤 𑌸𑌪𑍍𑌤<br>
𑌯𑍇 𑌸𑌂𑌸𑌕𑍍𑌤𑌾 𑌇𑌤𑌿 𑌵𑌦𑌨𑍍𑌦𑌯𑌿𑌤𑌵𑌤𑌾𑌂 𑌸𑌃 ।<br>
𑌤𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌗𑍁𑌣𑌚𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑌵𑌾𑌚𑌿𑌨𑌾𑌮-<br>
𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌗𑍁𑌣𑌵𑌤𑍋 𑌗𑍁𑌣𑌜𑍍𑌞𑌃 ॥

(கருத்து.) ஏழாவது திருவாய்மொழியில் நம்மாழ்வார் — என்னைச் சேர்ந்தவர்களெல்லாரும் கேசவனுடைய அபிமாநத்தைப் பெற்றவர்களாக ஆனார் களென்று அருளிச்செய்யா நிற்பவராய் அப்பெருமானுடைய ஸ்வரூப குண சேஷ்டிதங்களைச் சொல்லுகின்ற பன்னிரு நாமங்களைக்கொண்ட பாசுரங்களினாற் பேசி மகிழ்ந்தாரென்கை.

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

கேசவனு லென்தமர்கள் கீழ்மே லெழுபிறப்பும்
தேசடைந்தா ரென்று சிறந்துரைத்த—வீசுபுகழ்
மாறன் மலரடியே மன்னுயிர்க்கெல்லா முய்கைக்கு
ஆறென்று நெஞ்சே யணை.

| | |
|---|---|
| நெஞ்சே | மனமே!, |
| கேசவனால் | ‘எம்பெருமானாலே |
| என் தமர்கள் | என்னைச் சேர்ந்தவர்களான |
| கீழ் மேல் எழு பிறப்பும் | கீழும் மேலுமுண்டான ஸம்பந்தி ஸம்பந்திகள் வரையிலும் |
| தேசு அடைந்தார் என்று | வீறு பெற்றார்கள்’ என்று |
| சிறந்து உரைத்த | நன்றாக அருளிச் செய்தவரும் |
| வீசு புகழ் | எங்கும் பரவிய புகழை யுடையருமான |
| மாறன் | ஆழ்வாருடைய |
| மலர் அடியே | திருவடித்தாமரைகளே |
| மன் உயிர்க்கு எல்லாம் | நிலைநின்ற ஆத்மாக்களுக்கெல்லாம் |
| உய்கைக்கு ஆறு என்று | உஜ்ஜீவநோபாயமென்றுகொண்டு |
| அணை | (அத்திருவடிகளை) ஆச்ரயிப்பாயாக,. |

இருபத்தொரு தலைமுறை யளவாகவுள்ள என்னைச் சேர்ந்தவர்கள் யாவரும் எம்பெருமானாலே விஷயீகரிக்கப் பெற்று வீறு பெற்றார்களாயினர் என்று நன்கு அருளிச்செய்த ஆழ்வாருடைய திருவடிகளே யாவர்க்கும் உய்வுபாயம் என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்:

ஏழாந் திருவாய்மொழி
முற்றிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து—எட்டாந்திருவாய்மொழி

## அணைவதரவணைமேல்.



அவதாரிகை:—எம்பெருமானுக்குத் தம்பக்கலில் உண்டான வ்யாமோஹம் தம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகளளவிலும் ஏறிப்பாய்ந்து அனைவரையும் விஷயீகரித்தபடியைக் கீழ்த்திருவாய்மொழியில் அருளிச் செய்தார். அவ்வளவிலும் எம்பெருமான் பர்யாப்தி பெறாமல், நித்ய முக்தர்களுடையதான ஐச்வர்யத்தையும் தமக்கும் தம்மைச் சேர்ந்தவர்கட்கும் தருவதாக அவன் முயற்சிகொண்டிருக்குமிருப்பை ஆழ்வார் கண்டு மிகவுமுகந்து 'நம்மோடுண்டான ஸம்பந்தமே ஹேதுவாக எம்பெருமான் இப்படி விஷயீகரிப்பவனாயிருக்கும்போது ஸம்ஸாரிகள் இழக்கலாமோ? அவர்களுக்கும் நம்மோடே ஒரு ஸம்பந்தத்தை யுண்டாக்கி அவனுடைய விஷயீகாரத்திற்குஇலக்காக்குவோம்' என்று பார்த்து அந்த ஸம்ஸாரிகளுக்கு உபதேசம் செய்தருள இழிகிறார் இத்திருவாய்மொழியில்.

எம்பெருமானுடைய ஸர்வேச்வரத்வத்தை இதில் உபதேசிக்கிறதாகச் சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பர்கள். அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தை உபதேசிக்கிறதாக பட்டர் அருளிச் செய்யும்படி. இந்த நிர்வாஹ பேதத்தில் விசேஷமான வ்யத்யாஸம் யாதொன்றுமில்லை; ஸர்வேச்வரனாயிருந்தால்தான் மோக்ஷப்ரதனாக முடியும்; மோக்ஷப்ரதனுக்கே ஸர்வேச்வரத்வம் கூடும்: ஆதலால் இவையிரண்டும் ஒன்றையொன்று விட்டிராவாகையால் எங்ஙனே நிர்வஹித்தாலும் குறையில்லை. ஆனாலும் "திண்ணன் வீடு" என்கிற திருவாய்மொழியில் ஸர்வேச்வரத்வம் பிரதிபாதிக்கப்பட்டபடியால் இத்திருவாய்மொழியில பிரதிபாதிக்கப்படுவது மோக்ஷப்ரதத்வமாயிருக்கவடுக்கும்—என்று போலும் பட்டர் திருவுள்ளம். "புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே" என்றும் "வீடுமுதலாம்" என்றும் "நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகளில் அதிக நோக்காக பட்டர் நிர்வஹிக்கும்படியென்று கொள்க.

பரோபதேசத்தில் நோக்கான இத்திருவாய்மொழியில் பத்தாம் பாட்டில் "கண்ணனை நான் கண்டேனே" என்றருளிச் செய்திருப்பதை நோக்கி ப்ரவேசத்தில் நம்பிள்ளை பணிக்கும் ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"ஸம்ஸாரிகளையும் சத்ருசபோகிகளாம்படி பண்ணவேணும் என்று பார்த்து அவர்களைக் குறித்து ஹிதமருளிச் செய்ய, அதுகேட்ட பின்பும் அவர்கள் பழையபடியில் நின்றும் குலையாதே மால்யவான் தொடக்கமானார் ராவணனுக்குச் சொன்ன ஹிதம்போலேயாய் அவர்கள் இத்தை அநாதரித்திருக்க, 'நாம் நம்முடைய அநுபவத்தை விட்டு இவர்களோடே துவக்குண்கிற விதுக்கு ப்ரயோஜநமென்?' என்று உப



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தேசத்திற் கைபொழிந்து, வழிபறிக்கும் நிலத்தில் தம் கைப்பொருள் கொண்டு தப்பினர் ஹ்ருஷ்டராமாப்போலே 'நாம் முந்துறமுன்னம் இவர்களைப்போலே ஆகாதொழியப் பெற்றோமிறே' என்று கொண்டு ஸ்வலாபத்தை யநுஸந்தித்து இனியராகிறார்" என்று.

ஆகவே, பரோபதேசமும் ஸ்வாத்ம ஸந்தோஷமும் இத்திருவாய்மொழியின் ப்ரமேய மென்றுணர்க. ... ... ... ... (*)

அணைவதரவணைமேல் பூம்பாவையாகம்
புணர்வது * இருவரவர்முதலும்தானே *
இணைவனுமெப்பொருட்கும் வீடுமுதலாம் *
புணைவன் பிறவிக்கடல்நீந்துவார்க்கே. (க)

| | |
|---|---|
| அரவு அணை மேல் | ஆதிசேஷ சயனத்தின் மீது |
| அணைவது | சேர்வது ; |
| பூ பாவை ஆகம் புணர்வது | பெரிய பிராட்டியின் திருமேனியைக்கூடுவது; (ஆகிய இவை நித்ய விபூதியில் எம்பெருமானுடைய காரியங்கள்) |
| அவர் இருவர் | ப்ரவித்தர்களான பிரமன் ருத்ரன் என்கிற இருவர்க்கும் |
| முதலும் தானே | முதல்வனும் அப்பெருமான் தானேயாயிருப்பன் ; (அவதார முகத்தாலே) |
| எப் பொருட்கும் | எல்லாப் பொருளுக்கும் |
| இணைவன் ஆம் | ஸஜாதீயனாயிருப்பன் ; |
| வீடு முதல் ஆம் | மோக்ஷத்தை யளிப்பவனுமவனே ; |
| பிறவி கடல் | ஸம்ஸார ஸமுத்ரத்தை |
| நீந்துவார்க்கு | நீந்திக் கரையேற விரும்புமவர்கட்கு |
| புணைவன் | தெப்பமாயிருப்பவனுமவனே. |

* * * [அணைவது.] இப்பதிகத்தில் கூறப்படும் பொருள் இப்பாசுரத்தில் சுருங்கவருளிச் செய்யப்படுகிறது. முதலடி நித்ய விபூத்யைச்வர்யத்தைக் காட்டுகின்றது. சேஷசயனத்தின்மீது பள்ளிகொள்ளுதலும் பெரிய பிராட்டியின்-திருமார்போடே அணையப் பெறுதலும் அவ்விபூதியிலைச்வர்யத்திற்கு எல்லையென்க. மற்ற மூன்றடிகளால் இவ்வுலகத்தார்க்கு அவன் செய்யும் செயல்திறம் சொல்லுகிறது. லீலாவிபூதியை நிர்வஹிக்கும் விஷயத்தில் காரணேச்வரராக ப்ரஸித்தர்களான பிரமன் சிவன் என்பவர்களின் உத்பத்தி ஸ்திதி முதலியவற்றுக்கும் தானே முதல்வனாய், ரக்ஷ்யமான ஜகத்திலுள்ள ஸமஸ்த பதார்த்தங்களுக்கும் அவதாரமுகத்தாலே ஸஜாதீயனாயிருப்பவனாய், ரக்ஷணத்திற்கு மேலெல்லையான மோக்ஷ ப்ரதானத்திற்கும் கடவனாய், ஸர்வமுக்திப்ரஸங்கம் வாராமைக்காக ஸம்ஸாரக்கடலை நீந்திக் கரையேற வேண்டுவார்க்குத் தெப்பமாயிருப்பவன் எம்பெருமான் என்றதாயிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின் ;—"அவ்விபூதியைச் சொல்லுகிற விடத்திலே அணைவது, புணர்வது என்கையாலே அது ஹோமஹுமி [போகபூமி] யாய் நித்யமாயிருக்குமென்னுமிடமும், இங்கு முதல் என்கையாலே இவ்விபூதி யில் கார்ய காரணபாவத்தால் வந்த ஸம்பந்தமும் இதுதான் ஆவது அழிவதா மென்னுமிடமும் சொல்லுகிறது. இத்தால் ப்ரஹ்மருத்ரர்கள் ஸம்ஸார பத்தர்க ளென்னுமிடமும் ஈச்வரனே மோக்ஷப்ரதனாகவல்லானென்னுமிடமும் சொல்லு கிறார்."

எப்போருட்கும் இணைவனும் = தேவமநுஷ்யாதி ஸகல யோநிகளிலும் ஸஜா தீயனாய்வந்து அவதரிப்பவனென்றபடி. "ब्रह्मेशमध्यगणना गणनार्कपङ्क्तौ इन्द्रानुजत्वमदितेस्तनयत्वयोगात् । इक्ष्वाकुवंशयदुवंशजनिश्च हन्त श्लाघ्यान्यमून्यनुपमस्य परस्य धाम्नः ॥ = ப்ரஹ்மேசமத்யகணநா கணநார்க்கபங்க்தௌ இந்த்ராநுஜத்வமதிதேஸ் தநயத்வ யோகாத், இக்ஷ்வாகுவம்சயதுவம்சஜநிச் ச ஹந்த ச்லாக்யாந்யமூந்யநுபமஸ்ய பரஸ்ய தாம்ந:" என்று ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் அருளிச் செய்த படியே ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே வந்தவதரிப்பது, உபேந்திரனாவது, தசரத வஸுதேவர்களுக்குப் புத்திரனாவது, மத்ஸ்ய கூர்மவராஹாதி யோநிகளிலே பிறப் பது ஆக இவற்றாலே இதர ஸஜாதீயனாம்படியைச் சொன்னவாறு.

இங்ஙனே தாழவிட்டுப் பிறக்கிறது எதற்காகவென்னில், வீடு முதலாம்— மோக்ஷமளிப்பதற்காக வென்றபடி. அவதரித்த விடங்களிலே பக்ஷிக்கும் பிசா சுக்கும் மோக்ஷம் கொடுப்பதாகக் காணாநின்றோமன்றோ. அவன் வந்து அவத ரிப்பது மோக்ஷ மளிப்பதற்காகவாகில் பின்னை யெல்லாரும் முக்தராக வேண் டாவோ வென்ன, பிறவிக்கடல் நீந்துவார்க்குப் புணைவன் என்கிறார்.

'ஸம்ஸாரமென்பது ஒரு பெருங்கடல், அஃது எங்களால் கடக்கப் போகாது ; வல்லவனான நீயே கடத்தித் தரவேணும்' என்று வேண்டுவார்க்குக் காரியம் செய்பவனென்கை

புணைவன்—ப்ரதிபூ [ஜாமீன்தாரன்] என்றும் பொருள் கூறுவர் ; "போயி னால் பின்னையித்திசைக்கென்றும் புணைக்கோடேக்கிலும் போகவொட்டாரே" என்ற பெரியாழ்வார் பிரயோகமுங் காண்க. ... ... (க)

நீந்தும்துயர்ப்பிறவி உட்படமற்றெவ்வெவையும் *
நீந்தும்துயரில்லா வீடுமுதலாம் *
பூந்தண்புனல்பொய்கை யானையிடர்கடிந்த *
பூந்தண்டுழாயென் தனிநாயகன்புணர்ப்பே. (உ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| பூ தண் புனல் பொய்கை | அழகிய குளிர்ந்த நீரை யுடைய தடாகத்தில் |
| யானை | கஜேந்திராழ்வானுடைய |
| இடர் | ஆர்த்தியை |
| கடிந்த | தொலைத்தருளினவனும் |
| பூ தண் துழாய் | அழகிய குளிர்ந்த திருத் துழாய் மாலையை யுடையவனுமான |
| என் தனி நாயகன் | எம்பெருமானுடைய |
| புணர்ப்பு | ஸம்பந்தமானது, |
| நீந்தும் | கடத்தற்கு அரிதான |
| துயர் | துன்பத்திற்கு ஹேது வான |
| பிறவி உட்பட | பிறப்பு முதலாக |
| மற்று | மேலுமுள்ள |
| எவ்வெவையும் நீந்தும் | எப்படிப்பட்ட துன்பங்களையும் கடத்தும்; (அன்றியும்) |
| துயர் இல்லா வீடு முதல் ஆம் | துயர் சிறிதுமில்லாத மோக்ஷத்திற்கும் ஹேது வாகும். |

* * * [நீந்தும் துயர்.] கீழ்ப்பாட்டில் 'வீடுமுதலாம்' என்றதை விவரிக்கிறதா யிருக்கின்றது இப்பாசுரம். எம்பெருமான் வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை, அவனோடுண்டான ஸம்பந்தமே போரும் மோக்ஷமளிப்பதற்கு—என்கிறார்.

"நீந்தும் துயர்ப்பிறவியுட்பட மற்றெவ்வெவையும் நீந்தும்" என்னுமளவும் ஒரு வாக்கியமாக்கி "துயரில்லா வீடுமுதலாம்" என்று மற்றொரு வாக்கியமாக்கி யுரைப்பதும், அன்றியே, இரண்டடிகளுஞ் சேர்ந்து ஒரே வாக்கியமாகி 'நீந்தும் துயர்ப் பிறவியுட்பட மற்றெவ்வெவையும் நீந்தும் துயரில்லா' என்னுமளவும் வீட்டுக்கு விசேஷணமாக்கி யுரைப்பதும் ஆக இருவழிகளுமுண்டு. முதல் யோஜனையில்—

| | |
|---|---|
| நீந்தும் துயர்ப்பிறவி யுட்பட மற்றெவ்வெவையும் நீந்தும்— | போக்கிக்கொள்ள முடியாத துக்கத்தை விளைக்கின்ற பிறப்பு முதலான ஜராமரணாதிகளெல்லாவற்றையும் (பகவத் ஸம்பந்தம்) போக்கடிக்கும்; |
| துயர் இல்லா வீடுமுதல் ஆம்— | துக்க லேசமுமில்லாத முக்தியையும் அளிக்கும் என்றபடி. |

இரண்டாவது யோஜனையில்—அபாரமான துபரங்களை விளைப்பதான பிறவிமுதலாக மற்றும் அபாரமான ஜராமரணாதிகளான எவ்வகைப்பட்ட துக்கமும் ஸ்பர்சியாத மோக்ஷானந்தத்திற்கு ஹேதுவாம் என்றபடி.

அது எது என்ன, பகவத் ஸம்பந்தம் என்கிறது பின்னடிகளில்- கஜேந்திராழ்வானைக் காத்தருளினவனும், அப்படியே பக்தர்களனைவரையும் காத்தருள்வதாகத் தனிமாலை யிட்டுக்கொண்டு அத்விதீய நாயகனாக விளங்குபவனுமான எம்பெருமானோடுண்டான ஸம்பந்தம் இவை செய்யும் என்க. அவன் திருவடிகளில் ஸம்பந்தம் துக்கநிவ்ருத்தியையும் பண்ணிக் கொடுத்துப் பரமாநந்தத்தையும் பெறுவிக்கு மென்றதாயிற்று.

நீந்தும் என்றதற்குக் 'கடக்கவரிதான' என்னும் பொருள் எங்ஙனே கிடைக்குமென்னில், நீந்திக்கொண்டேயிருக்க வேணுமேயன்றிக் கரையேற இய

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



லாதென்று தாற்பரிய முகமாகக் காட்டினபடி யென்ப. இரண்டாமடியிலுள்ள நீந்தும் என்பது வினைமுற்ருகக் கொள்ளப்படுகிற நிர்வாஹத்தில் நீத்தும் என்ற வல்லொற்று மெல்லொற்ருயிருக்கிறபடி யென்பர் ... .... (உ).

புணர்க்குமயனும் அழிக்குமரனும் *
புணர்த்ததன்னுந்தியோடு ஆகத்துமன்னி *
புணர்த்ததிருவாகித் தன்மார்வில்தான்சேர் *
புணர்ப்பன்பெரும்புணர்ப்பு எங்கும்புலனே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| தன் புணர்த்த | தன்னைப் படைத்த | புணர்த்த | சேர்த்துக் கொள்ளப் பட்ட |
| உந்தியோடு | திருநாபியோடேகூட | திரு ஆகி | பிராட்டியை யுடைய னாய் |
| ஆகத்து | திருமேனியி லொரு பக்கத்திலும் | தான் சேர் | தானே தனக்குத் தகுதியான |
| மன்னி | பொருந்தியிருந்து | புணர்ப்பன் | செய்லை யுடையனான அப்பெருமானது |
| புணர்க்கும் | லோக ஸ்ருஷ்டியைப் பண்ணுகிற | பெரு புணர்ப்பு | பெரிய வியாபாரம் |
| அயன் ஆம் | பிரமனும் தானேயா யிருப்பன்; | எங்கும் | எவ்விடத்தும் |
| அழிக்கும் அரன் ஆம் | ஸம்ஹரிக்கிற ருத்ரனும் தானேயாயிருப்பன்; | புலன் | ப்ரத்யக்ஷ யோக்யமே. |
| தன் மார்வில் | தனது திருமார்பிலே | | |

* * * [புணர்க்கும்.] முதற்பாட்டில் "இருவரவர் முதலுந்தானே" என்றதை விவரித்துக்கொண்டு அப்பெருமானுடைய ஐச்வர்ய ஸூசகமான சேஷ்டிதங்கள் எங்கும் ப்ரஸித்தமாகவே யுள்ளன வென்கிருர். "தன் புணர்த்தவுந்தியோடு ஆகத்துமன்னிப் புணர்க்குமயனும், அழிக்கும் அரனும்" என்று முன்னடிகளை அந்வயித்துக் கொள்க. பிரமன் எம்பெருமானது திருநாபியில் தோன்றினது மாத்திரமேயல்லாமல் "சிவனொடு பிரமன் வண்திருமடந்தை சேர்திருவாகம்" என்றும், "ஏறாளுமிறையோனும் திசைமுகனுந் திருமகளும், கூறாளுந் திருவுடம்பன்" என்றுஞ் சொல்லுகிறபடியே திருமேனியோடுங் கூறுடையனானது பற்றித் "தன் புணர்த்தவுந்தியோடு ஆகத்துமன்னி" எனப்பட்டது. ஸ்ருஷ்டி கர்த்தாவாக ப்ரஸித்தனான பிரமனுக்கும், ஸம்ஹார கர்த்தாவாக ப்ரஸித்தனான ருத்ரனுக்கும் தானே அந்தர்யாமியா யிருந்துகொண்டு அவ்வக்காரியங்களை நடத்திப் போருமவனென்றபடி.

[தன் மார்வில் புணர்த்த திருவாகித் தான்சேர் புணர்ப்பன் பெரும் புணர்ப்பு-எங்கும் புலன்] லக்ஷ்மீபதித்வமும் ஐச்வர்ய லக்ஷணமாகையாலே அது மூன்றுமடியில் சொல்லிற்று. தான்சேர் புணர்ப்பன் என்றதற்கு இருவகைப் பொருள் கூறுவர்; ஸ்ருஷ்டிக்காக ஏகார்ணவத்திலே சாய்ந்தருளினவன் என்றும், தனக்குத் தகுதியான சேஷ்டிதங்களை யுடையவன் என்றும். புணரி என்று

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கடலுக்குப் பேருண்டாதலால் புணர்ப்பு என்பதையும் கடலுக்குப் பேராகக் கொண்டு முதற்பொருள் கூறியிருக்கலாமென்று சில பெரியோர் கருதுவர்.

பெரும் புணர்ப்பு எங்கும் புலனே = பிரமன் முதலானார்க்கு இட்ட காரியங்களை அவர்கள் வழியாலே தானே நடத்தியும், தன்தலையில் வைத்துக்கொண்ட காரியங்களையும் தானே நடத்தியும் போருகையாலே அவனுடைய ஆனைத் தொழில்கள் எங்குங் காணலாயிருக்கு மென்க. ... ... (௩)

புலனைந்துமேயும் பொறியைந்துநீங்கி *
நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர் *
அலமந்துவீய அசுரரைச்சேற்றான் *
பலமுந்துசீரில் படிமினோவாதே. (௪)

| | | | |
|---|---|---|---|
| புலன் ஐந்து | சப்தாதி விஷயங்கள் ஐந்திலும் | அசுரரை | அசுரர்களை |
| மேயும் | மேய்கின்ற | அலமந்து வீய செற்றான் | நுடல் குழம்பிச் சாகும் படி கொன்ற பெருமானுடைய |
| பொறி ஐந்தும் | பஞ்சேந்திரியங்களின் வசத்தில் நின்றும் | | |
| நீங்கி | விலகி | பலம் முந்து சீரில் | பலனே முந்தியிருக்கின்ற திருக்குணங்களில் |
| நலம் அந்தம் இல்லது ஓர் நாடு புகுவீர் | ஆனந்தம் அளவிறந்திருப்பதான திருநாட்டிலே போய்ப்புக வேண்டியிருப்பவர்களே!, | ஓவாதே | அநவரதம் |
| | | படிமின் | அவகாஹியுங்கள். |

* * * [புலனைந்துமேயும்.] அற்பமான விஷய ஸுகங்களைவிட்டு அற்புத இன்பமயமான மோக்ஷ புருஷார்த்தத்தைப் பெற்றுக் களிப்புறவேண்டியிருப்பீர்! எம்பெருமானுடைய திருக்குணங்களிலே இடைவிடாது அவகாஹித்துப் போருங்கோள் என்கிறார். ஐந்து இந்திரியங்களும் ஐந்து விஷயாந்தரங்களிற் பட்டிமேய்வது இயல்பு. கண் ரூபங்களைக்காண்பதும், காது ஒலிகளைக் கேட்பதும், நாக்கு உணவுகளைச் சுவைப்பதும், மூக்கு மணங்களை மோந்து பார்த்தலும், உடல் உடல்களைத் தீண்டுதலும் ஆக இப்படிப்பட்ட காரியங்கள் இந்திரியங்களுக்கு ஏர்பட்டவை. இவை "ஜிஹ்வே! கீர்த்தய கேசவம் முராரிம்" என்ற முகுந்தமாலை ச்லோகத்திற் சொல்லியபடியே நிகழுமாயின் குறை யொன்றுமில்லை; விபரீதமாக நிகழ்வதே உலகவியற்கையாதலின் அந்த நிகழ்ச்சியை மறுக்கக் கூறுகின்றார் முதலடியில்.

நலமந்த மில்லதோர்நாடு புகுவீர்! = இவ்வுலகம் துன்பங்களுக்கு அந்தமில்லாமலிருக்கப் பெற்றிருப்பதுபோல அவ்வுலகம் இன்பங்களுக்கு அந்தமில்லாதிருக்கப் பெற்றது. துக்கங்கள் தொலைந்தொழிவதே மோக்ஷமென்று கூறும் புறமதத்தவர்களைப் போலன்றியே மஹாநந்த ப்ராப்தியே மோக்ஷமென்று கூறுகின்ற பரம வைதிகர்களில் ஆழ்வார் தலைவராதலால் 'நலமந்த மில்லதோர்நாடு'

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்ருர். அதனைப் புக விரும்பியிருப்பவர்களே!—என்று விளித்து அவர்கட்குக் காரியம் விதிக்கிருர் பின்னடிகளில்.

உங்களுடைய விரோதிகளை அவன் நிச்சேஷமாகப் போக்கவல்லவன் என்பது சுட்டி 'அலமந்து வீயவசுரரைச் செற்ருன்' என்கிருர். அஸுரவர்க்கங்கள் தடுமாறி முடியும்படி அவற்றைத் தொலைத்தாப்போலே உங்கள் விரோதிவர்க்கங்களை முடிப்பவனை அப்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களிலே ஈடுபடுங்கோள் என்றபடி. [பலம் முந்து சீர்] சில காரியங்கள் முதலிலே மிக வருத்தமாய் முடிவிலே இன்பமாயிருக்கும்; பகவத் குணாநுபவம் அப்படிப்பட்டதன்று. ஸாரஸ்யத்தாலே ஆரம்ப தசையே பிடித்துப் பலனாகவே யிருக்குமென்பது கருத்து. ... ... ... ... ... (ச)

ஓவாத்துயர்ப்பிறவி உட்படமற்றெவ்வேவையும் *
மூவாத்தனிமுதலாய் மூவுலகும்காவலோன் *
மாவாகியாமையாய் மீனுகிமானிடமாம் *
தேவாதிதேவபெருமான் என்தீர்த்தனே. (ரு)

| | |
|---|---|
| ஓவா துயர் | இடைவிடாத துக்கத்தை விளைக்கிற |
| பிறவி உள்பட | ஜன்மம் முதலாக |
| மற்று எவ்வெவையும் | மற்றுமுள்ளவை யெல்லாவற்றுக்கும் [அதாவது-ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதிகளுக்கென்றபடி] |
| மூவா | ஒருநாளும் கைவாங்காத |
| தனி முதல் ஆய் | அஸஹாய காரண பூதனாய்க் கொண்டு |
| மூ உலகும் | மூன்று லோகங்களையும் |
| கா வலோன் | ரக்ஷிக்க வல்லவனாய் |
| தேவ ஆதி தேவர் பெருமான் | தேவர்களுக்கும் ஆதி தேவர்களான நித்ய ஸூரிகளுக்கும் அதிபதியாய் |
| என் தீர்த்தன் | என்னைப் பரிசுத்தனாக்க வல்லனான பெருமான் |
| மா ஆகி | ஹயக்ரீவனாக அவதரித்தும் |
| ஆமை ஆய் | கூர்மமாக அவதரித்தும் |
| மீன் ஆகி | மத்ஸ்யமாக அவதரித்தும் |
| மானிடம் ஆம் | (ராமக்ருஷ்ணாதி ரூபேண) மநுஷ்யனாகவும் அவதரிக்குமவன். |

* * * [ஓவாத்துயர்.] முதற்பாட்டில் "இணைவனு மெப்பொருட்கும்" என்றது இப்பாசுரத்தினால் விவரிக்கப்படுகிறது. ஹயக்ரீவ மத்ஸ்ய கூர்ம ராமக்ருஷ்ணாதி ரூபத்தாலே திருவவதாரங்கள் பண்ணி மூவுலகங்களையுங் காத்தருள்பவனென்கிறது.

ஓவாத்துயர்ப் பிறவியுட்பட மற்றெவ்வேவையும் மூவாத்தனிமுதலாய் = இடையறாத துயரத்தை விளைக்கின்ற பிறப்பைத்தருதலாகிற ஸ்ருஷ்டியென்ன, மற்றும் ஸம்ரக்ஷணம் ஸம்ஹாரம் முதலான செயல்களென்ன ஆகிய எல்லாவற்றிற்கும் ஒருநாளும் சோம்பிக் கைவாங்காத அத்விதீய காரணபூதன் என்றபடி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இவ்விடத்து ஈடு முப்பத்தாறுயிரப்படியில் ஜெவகஷூஆஷாஜி நிவாஸ ந மாக ஒருபிழை புகுந்து அது அரும்பத வுரைகாரராலும் ஆதரிக்கப்பட்டுவிட்ட தென்பதை நிரூபித்துக் காட்டுகிறோம். இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்தி எங்ஙனே காண் கின்ற தென்னில்;

"ஜந்மம் தொடக்கமாக மற்றுமுண்டான வைந்துக்கும்; அவற்றையுடைத் தான பதார்த்தங்களுக்கும்......அத்விதீய காரணமாய்."

என்று காண்கிறது. அடையவளைந்தானரும்பதவுரையிலும் மற்றோரரும்பத வுரையிலும்—"ஐந்துக்கும் என்றது அஸ்தி பரிணமதே விவர்த்ததே அபக்ஷீயதே நச்யதி என்கிற ஐந்து விகாரங்களுக்கு மென்றபடி" என்று விவரணமும் செய்யப் பட்டிருக்கிறது. உண்மையில் ஐந்துக்கும் என்கிற சொல் ஈட்டில் கிடையாது, பொருந்தவும் பொருந்தாது. வடக்குத் திருவீதிப்பிள்ளை அருளிச் செய்திருந்த ஸ்ரீஸூக்தி "ஜந்மந் தொடக்கமாக மற்று முண்டானவற்றுக்கும்" என்பதே.

ஓலை ஸ்ரீகோசங்கள் எழுதுகிறவர்கள் 'அவற்றுக்கு' என்பதை அவைத் துக்கு' என்றே பெரும்பாலும் எழுதுவர்கள். பலர் உச்சரிக்கும்போதும் 'அவைத்துக்கு' என்று ஐகாரம் நன்கு தெரியும்படியே உச்சரித்து வருவதை யுங் காண்கிறோம். ஆசார்ய ஹ்ருதயத்தை வியாக்கியானத்துடன் முதன்முத லாகத் தெலுங்குலிபியில் பதிப்பித்தவர்களும் பிறகு அதையே தமிழ்லிபியில் பதிப்பித்தவர்களும் 'அவற்றுக்கு' என வருமிடங்களில் (அவைத்துக்கு) என்றே அச்சிட்டிருப்பதை யாவரும் எடுத்துக்காணலாம். அதில் முதல் ப்ரகரணத்தில் 4, 6, 8 ஆம் சூர்ணிகைகள் "இவற்றுக்கு" என்றே தொடங்குபவை. அவ் விடங்களிலெல்லாம் மேற்குறித்த இரண்டு பதிப்புக்களிலும் மூலத்திலும் வியாக் கியானத்திலும் இவைத்துக்கு என்றே அச்சிட்டிருப்பதைக் கட்கூடாகக் காண லாம் இலக்கண இலக்கியப் பயிற்சி சிறிதுமில்லாதவர்கள் அச்சிடுவிக்கும் புத்த கங்களிலும், எழுதியிருக்கும் ஓலை ஸ்ரீகோசங்களிலும் மிகமிகவே இங்ஙனமே யிருப்பதை அபாரமாகக் காணலாம். முதல் வேற்றுமையில் இவை, அவை என்று ஐகாரம் காண்பதால் மற்ற வேற்றுமைகளிலும் அந்த ஐகாரம் இருந்தே தீரவேணுமென்று இப்படி அந்த பரம்பரையாக க்ரஹித்து "இவைத்தால், அவைத்தால், இவைத்துக்கு; அவைத்துக்கு" என்றே எழுதுவதும் உச்சரிப் பதும் ஒரு வழக்கமாக வந்துவிட்டது. அந்தோ! அதனாலுண்டான அநர்த்தம் பெரிதுமுண்டு.

அதே ஆசார்ய ஹ்ருதயத்தில் மூன்றும் பிரகரணத்தில் "தமருகந்த வடி வோமுக்கே யென்னும் பின்னானர் வணங்குமிடத்திலே எல்லாம் பூர்ணம்" என்கிற ஒன்பதாவது சூர்ணிகையின் வியாக்கியானத்திலே—

"அர்ச்சாவதாரத்திலே முற்பட்ட ஐந்திலுள்ளவையுங் காணலாமாகையாலே"

என்று தெலுங்குலிபி தமிழ்லிபிப் பதிப்புகளிரண்டிலு முள்ளது. இங்கு 'முற் பட்ட ஐந்து' எவை? என்று கேட்டால் உத்தரம் துர்லபம். பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களாகிற ஐந்திலுள்ளும் அர்ச்சாவதாரமே சிறந்த

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தென்று ஸ்தாபிக்கவந்த இவ்விடத்தில் அர்ச்சாவதாரம் தவிர மற்ற நான்கில் உள்ளவையும் இங்குக்காணலாம் என்று அருளிச்செய்கிற ஸந்தர்ப்பத்தில் "முற்பட்ட வைந்திலுள்ளவையும் அர்ச்சாவதாரத்திலே காணலாம்" என்கிற ஸ்ரீஸூக்திபிருக்கச் சிறிதும் தகுதியில்லை. ஆனால் இங்கு ஸ்ரீஸூக்தி யுண்மை எங்ஙனே யெனின் ;

முற்பட்டவற்றிலுள்ளவையும் என்று ஆசிரியர் அருளிச் செய்திருந்தார். (கீழே விரிவாக நாம் நிரூபித்தபடி-) பிறகு அதை எழுதினவர்கள் "முற்பட்ட வைத்திலுள்ளவையும்" என்றெழுதினார்கள். அதிலிருந்து (த்) என்பது (ந்) ஆக மாறிற்று. தகரநகரங்களுக்கு அதிக வேற்றுமை யில்லையே. இந்த மாறுபாடு அச்சில் அன்று ; ஓலைஸ்ரீ கோசங்களிலேயே எப்போதோ மாறுபட ஆரம்பித்து விட்டது. இந்த நம் நிரூபணத்தில் யாருக்காவது விப்ரதிபத்தி யுண்டாக ப்ரஸக்தியுண்டோ? "முற்பட்ட வைந்தில்" என்று இங்கே யிருக்கத்தகா தென்பதையும், அப்படி யிருப்பதானது நாம் விவரித்தவிதமாக வந்து புகுந்த பிழையே,யென்பதையும் யாவரும் இசைந்தே தீருவர்கள். ஆனால், ஓலை-அச்சு ஸ்ரீ கோசங்களைப் பூர்வாசார்ய ஸ்வஹஸ்த லிகிதமாகவே கொண்டு 'அவற்றில் பிழை யென்றால் வாய் வெந்துபோம்' என்று ஸாதிக்கின்ற பரமைகாந்திகளையும் நாம் பெரும்பாலுங் காண்கிறோம். இப்படிப்பட்ட விடங்களில் அவர்கள் காலக்ஷேபம் ஸாதிக்கும்போது 'இது பொருந்தவில்லையே' என்று விவேகிகளான சிஷ்யர்கள் கேட்டுவிட்டால் அப்போது அவர்களுக்குண்டாகும் சீறுபாறு வாசாமகோசரம். 'பூர்வாசார்யர்களைவிட நீ மஹாவ்பாபகனோ?' என்று வெகுளியோடே தலைக் கட்டி நிற்பர்கள். எதற்கு எது உத்தரம்!. அப்படிப்பட்டவர்களை நோக்கி நாம் எதுவும் பணிக்கின்றிலோம். ஸாரக்ராஹிகளான ரஸிகர்கட்கே போக்யமாகு மென்று எதுவும் நாம். நிரூபிப்பது.

மேற்குறித்த ஆசார்ய ஹ்ருதயப்பிழை புகுந்த விதமாகவே இந்தத் திருவாய்மொழிப் பாசுரத்தின் ஈட்டிலும்—"ஜந்மம் தொடக்கமாக மற்று முண்டான வற்றுக்கும்" என்று அருளிச் செய்யப்பட்டிருந்த ஸ்ரீஸூக்தி 'மற்றுமுண்டான வைத்துக்கும்' என்று முதலில் திரிந்து, பிறகு 'மற்றுமுண்டான வைந்துக்கும்' என்று திரிந்திட்டது. ஆசார்ய ஹ்ருதயத்தில் நிரூபித்துக் காட்டிய திரிபு உண்மையேயாயினும், இங்கு ஏதுக்கு அப்படிச் சொல்லவேண்டும்? இங்கு அரும் பதவுரைகாரர் விவரணம் காட்டியிருக்கிறபடியே ஐந்துக்கும் என்றிருப்பதில் அவத்ய மொன்றுமில்லையே! என்று கூறுவார்க்கு இனி விடையளிப்போம்.

"ஓவாத்துயர்ப் பிறவியுட்பட மற்றெவ்வெவையும்" என்றவிதனால் என்ன விவக்ஷிதம் என்பதை ஆராய வேண்டும். பன்னீராயிரப்படியில் "அவிச்சிந்நமான து:க்கத்தைத்தருவதான ஜந்ம ஸம்பந்தரூபமான ஸ்ருஷ்டியகப்பட மற்ற ஸ்திதி ஸம்ஹாராதிகளான எல்லா வ்யாபாரங்களுக்கும் ஸஹாயாந்தர நிரபேக்ஷகாரண பூதனைக் கொண்டு" என்றுள்ளது. இருபத்தினாலாயிரப்படியில் பெரியவாச் சான்பிள்ளை—"ஜந்மம் தொடக்கமாக மற்றுமுண்டான ஸ்திதி ஸம்ஹாராதி



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸர்வத்துக்கும் மூவாத்தனிமுதலாய்" என்றருளிச் செய்துள்ளார். ஒன்பதினாயிரப்படியில் "ஜந்மமகப்பட மற்று மெல்லாவற்றுக்கும் காரணமாய்" என்று ஈட்டின் படியாகவே உள்ளது. மற்ற இரண்டு வியாக்கியானங்களையும் பாசுரத்தின் போக்கையும் நோக்கினால் "ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணபூதன்" என்பதே இங்கு விவக்ஷிதம் என்று நிஸ்ஸந்தேஹமாக விளங்கும். மூலத்திலுள்ள பிறவி என்ற சொல் ஸ்ரீபாஷ்ய மங்கள ச்லோகத்தில் ஜந்ம பதம்போலே ஜந்மாத்யுபலக்ஷகமான ஸ்ருஷ்டியைச் சொல்லுகிற தென்னுமிடத்தைப் பெரியவாச்சான் பிள்ளையும் வாதிகேஸரியும் கண்ணாடிபோல் காட்டியருளினர். மூலத்தில் 'உட்பட' என்னுஞ் சொல் வடமொழியில் ஆதிபதம் போலேயாதலால் இங்கு ஆதிபதக் ராஹ்யம் எவை? என்று கேள்வியாக, ஸ்ருஷ்டிஸஹபடிதங்களான ஸ்திதி ஸம்ஹாராதிகள் என்று ஆசாரியர்கள் காட்டியருளினர்கள். அரும்பத வுரைகாரர் எழுதியுள்ளபடி அஸ்தி பரிணமதே இத்யாதிகளான ஐந்து விகாரங்களை இங்கு விவக்ஷிப்பதற்கு என்ன ப்ரஸக்தியுளது? அந்த விகாரங்களுக்கெல்லாம் எம்பெருமான் காரணபூதன் என்று சொல்லுகை ஒருபொருளோ?

இவ்விடத்தில் இருபத்தினாலாயிரப்படி பன்னீராயிரப்படிகளின் வழி வேறுதான்; ஈட்டுக்காரர் அந்தவழியிற் செல்லாமல் வேறொருவழியிற் செல்லுகின்றார்; ஆகவே இவருடைய நோக்கத்திற்கிணங்க "மற்று முண்டான ஐந்துக்கும்" என்கிற ஸ்ரீஸூக்தி இருக்கலாமே—என்று சிலர் ஸமர்த்திக்க முற்படுவாருமுளர். அப்படிச் சொல்வதற்கு இங்கு இடமில்லை யென்பதை மீண்டும் ஸமயம் நேரும்போது விவரித்துரைப்போம்.

இதே திருவாய்மொழியில் * நீந்தும் துயர்ப்பிறவி * என்கிற இரண்டாம் பாட்டில் "பிறவியுட்பட மற்றெவ்வெவையும் நீந்தும்" என்று மூலமிருக்கையாலே அவ்விடத்திற்குப் பொருந்த "ஜநநம் தொடக்கமாக மற்றுமுண்டான அபக்ஷயவிநாசாதிகளையும் கடத்தும்" என்று ஈட்டில் அருளிச் செய்துள்ளார். அவ்விடத்து மூலத்திற்கு அந்த அர்த்தம் அழகாகச் சேரும். இவ்விடத்து மூலத்திற்கு அப்பொருள் ஒருபடியாலும் சேராதே. ஆதலால் "ஜந்மம் தொடக்கமாக மற்றுமுண்டானவற்றுக்கும்" என்று ஆசிரியர் அருளிச் செய்திருந்த ஸ்ரீஸூக்தியே முந்துற நாம் உபபாதித்தபடியே "மற்றுமுண்டான வைத்துக்கும்" என்று முதலில் விகாரப்பட்டுப் பிறகு மற்றுமுண்டான வைந்துக்கும் என விகாரப்பட்டதென்று நண்ணிதினுணர்க.

"மற்றுமுண்டானவற்றுக்கும்" என்றதற்பின் "அவற்றை யுடைத்தான பதார்த்தங்களுக்கும்" என்கிற ஒரு வாக்யம் (ஈட்டில்) உள்ளதே, அதற்கு யாது பொருளென்னில், 'எம்பெருமான் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு மாத்திரமே நிர்வாஹகனல்லன், அவற்றுக்குக் கர்மீபூதங்களான ஸகல பதார்த்தங்களுக்கும் நிர்வாஹகன் என்பதும் இங்கு அறியத்தக்கது என்றபடி. மூலத்தில் 'மற்றெவையும்' என்னாதே எவ்வெவையும் என்று இரட்டித்துக்கூறியதற்காக.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இப்பொருள் அருளிச் செய்யலாயிற்று. [ஸூக்ஷேவத: ஹாவாதிதாதிக உதுயெயடி.]

இங்கு ஸர்வாத்மநா அஸம்பத்தமான 'ஐந்துக்கும்' என்கிற ஒருபதத்தை உள்ளதாகவே வைத்துக்கொண்டு மதா நுமதிக ந்யாயத்தாலே மேலெழுந்த வாரியாகவே காலக்ஷேபம் ஸாதித்துப் போரும் ஸ்வாமிகளுக்கு இந்த நிரூபணம் மிகவும் சீற்றத்திற்கே ஹேதுவாகுமாயினும் "உதஷ்தெ ஜது கொவி வஸா நயஉ-ா காஷெஹாயம் நிரவயிவி-வுலுாவ வுயீ" என்று பவபூதிமஹாகவி சொன்ன கட்டளையிலே நின்று நிரூபித்தோமாகக் கொள்க.

மூவாத்தனிமுதலாய் = கீழ்ச்சொன்ன ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதிகளை நடத்துமிடத்து வேறொரு உபகரணத்தை வேண்டாத நிரபேக்ஷ நிர்வாஹகன் என்றபடி. மூவா என்பதை முதலடியோடுங் கூட்டிப் பொருள் கொள்ளலாம். இரண்டாமடியோடுங் கூட்டிப் பொருள் கொள்ளலாம் என்று நம்பிள்ளை திருவுள்ளம். முதலடியோடு கூட்டுகிற பக்ஷத்தில், மூவாத எவ்வெவற்றுக்கும் தனி முதல் என்றபடியாய் ப்ரவாஹநித்யங்களான ஸகல வஸ்துக்களுக்கும் தனி முதல்வன் என்றபடி: இரண்டாவது பக்ஷத்தில் மூவா என்றவிது தனி முதலுக்கு விசேஷணமாகிறது; ஒருநாளும் கை வாங்காத தனி முதல்வனென்றபடி. கை வாங்குவதற்கு ப்ரஸக்தி யுண்டோவென்னில்; இங்கே ஈடு முப்பத்தாறாயிரப்படி காண்மின்;—" தான் தன் பக்கலிலே வழிபட வேணுமென்று நினைத்து உபகரணங்களைக் கொடுத்துவிட, கொடுத்த உபகரணங்களைக் கொண்டு வழி கெட நடவா நின்றால் 'இப்போது இங்ஙனே போயிற்றதாகில் க்ரமத்திலே நம் பக்கலிலே ருசியைப் பிறப்பித்து மீட்டுக்கொள்ளுகிறோம்' என்று அநுமதி தானத்தைப் பண்ணி உதாஸீநனா யிருக்கும்; இப்படி தன்னினைவைத் தப்பிப்போரச் செய்தேயும், கர்ஷகனா யிருக்குமவன் ஒருகால் பதர்த்ததிறே யென்று சோம்பிக் கை வாங்காதே மேலே மேலே கோலுமாப்போலே 'ஒரு காலல்லா வொரு காலாகிலுமாகிறது' என்று ஸ்ருஷ்டியா நிற்கும். * சோம்பாது இப்பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா * என்னக் கடவதிறே."

இப்படி எம்பெருமான் ஸ்ருஷ்டித்து ரக்ஷிப்பது கீழும் மேலும் நடுவுமுள்ள—அல்லது, க்ருதகம் அக்ருதகம் க்ருதாக்ருதகம் என்கிற மூவுலகையுமென்கிறார் மூவுலகுங் காவலோன் என்று. இப்படி ரக்ஷிப்பது தன் மேன்மை குலையாமே யிருந்தன்று; அவதார முகத்தாலே யென்கிறார் பின்னடிகளில். ... ... ... (௫)

தீர்த்தனுலகளந்த சேவடிமேல்பூந்தாமம் *
சேர்த்தியவையே சிவன்முடிமேல்தான்கண்டு *
பார்த்தன்தெளிந்தொழிந்த பைந்துழாயான்பெருமை *
பேர்த்துமொருவரால் பேசக்கிடந்ததே ? (௬)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| தீர்த்தன் | பரம பவித்திரனான கண்ணபிரானுடைய |
| உலகு அளந்த சே அடி மேல் | உலகமளந்த திருவடிகளிலே |
| பூ தாமம் | புஷ்பமாலையை |
| பார்த்தன் | அர்ஜுனன் |
| சேர்த்தி | ஸமர்ப்பித்து |
| அவையே | அப்பூமாலையையே |
| சிவன் முடி மேல் | சிவபிரானுடைய தலைமேல் |
| தான் கண்டு | தானே பார்த்து |
| தெளிந்து ஒழிந்த | நன்றாகத் தெளியப் பெற்ற |
| பைந்துழாயான் பெருமை | பைந்துழாய் மாலையனான பெருமானுடைய பெருமை |
| பேர்த்தும் ஒருவரால் | மற்ற பேர்களாலே |
| பேச கிடந்ததே | பேசவேண்டும்படியிரா நின்றதோ ? |

* * * [தீர்த்தனுலகளந்த] "தேவாதி தேவபெருமான்" என்று கீழ்ப் பாட்டில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட பெருமேன்மை பண்டே அர்ஜுனன் நிரூபித்து நிர்ணயித்த விஷயமாதலால் மிகப்ரஸித்தமானவதில் மற்றையோருடைய ஆராய்ச்சி வேணுமோ வென்கிறார்.

மஹாபாரத யுத்தத்தில் அர்ஜுனனுக்குப் பாசுபதாஸ்திரம் வேண்டியிருந்தது; சிவபிரானை ஆராதித்து அதனைப் பெறவேணுமென்று அவன் முயற்சி செய்யப் போகையில், இவனுக்கு இத்தனை பரிச்ரமம் ஏதுக்கு என்று கருணை கொண்ட கண்ணபிரான் அவ்வர்ஜுனனை நோக்கி 'ருத்ரனிடத்தில் நீ செய்ய நினைத்திருக்கிற ஆராதனையை என் காலிலே செய்து அபேக்ஷிதம் பெறுவாயாக' என்று கட்டளையிட்டுத் தனது முழந்தாளைக் காட்ட, அங்கேயவன் சில புஷ்பங்களையிட்டு அர்ச்சிக்க, அற்றை யிரவு கனவிலே உருத்திரக் கடவுள் அந்த புஷ்பங்களைத் தனது தலையிலே அணிந்துகொண்டு வந்து காட்சி தந்து அஸ்த்ரப்ரதானம் பண்ணினதாகச் சொல்லப்படுகிற கதை இங்கு உணரத்தக்கது.

ருத்ரன் எம்பெருமானுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை முடிமேல் தரித்து சிவனாயினன் என்பதையும் இங்கு ஜ்ஞாபிக்க வேண்டி "தீர்த்தனுலகளந்த சேவடி" என்றார். "குறை கொண்டு நான்முகன் குண்டிகை நீர்ப்பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக் — கறைகொண்ட கண்டத்தான் சென்னி மேலேறக் கழுவினான், அண்டத்தான் சேவடியை யாங்கு" என்ற திருமழிசைப் பிரான் பாசுரம் இங்கு நோக்கத்தக்கதாகும். ... ... (சு)

கிடந்திருந்துநின்றளந்து கேழலாய்க்கீழ்புக்
கிடந்திடும் * தன்னுள்கரக்குமுமிழும் *
தடம்பெருந்தோளாரத்தழுவும் பாரேன்னும்
மடந்தையை * மால்செய்கின்றமால் ஆர்காண்பாரே. (எ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| கிடந்து | (கடற்கரையில் வழி வேண்டிக்) கிடந்து |
| இருந்து | (சித்திரகூட கிரியில்) இருந்தும் |
| நின்று | (ராவணனை முடித்தபிறகு இலங்கை வாசலில் வீர ஸ்ரீயோடே) நின்றும், |
| அளந்து | த்ரிவிக்ரமாவதாரஞ் செய்தும், |
| கேழல்ஆய் | வராஹ ரூபியாகி |
| கீழ் புக்கு | ப்ரளய வெள்ளத்தின் கீழே புகுந்து |
| இடந்திடும் | அண்ட கடாஹத்தினின்றும் பூமியை ஒட்டுவிடுவித்தெடுத்தும் (ஆக இப்படிப்பட்ட காரியங்களைச் செய்பவனாய்) |
| தன்னுள் | தனக்குள்ளே |
| கரக்கும் | (மூவுலகையும்) மறைத்துவைப்பவனாய் |
| உமிழும் | பிறகு வெளிப்படுத்துபவனாய் |
| தட பெரு தோள் ஆர தழுவும் | மிகப் பெரிய திருத்தோள்கள் நிரம்பும்படி தழுவிக்கொள்பவனாய் (ஆக இப்படிகளாலே) |
| பார் என்னும் மடந்தையை | பூமிப்பிராட்டி திறத்திலே |
| மால் | ஸர்வேச்வரன் |
| செய்கின்ற | படுகிற |
| மால் | வ்யாமோஹத்தை |
| ஆர் காண்பார் | அறியவல்லாரார் ? |

* * * [கிடந்திருந்து] இவ்விபூதி எம்பெருமானுக்கே அஸாதாரணமென்னுமிடத்திற்குத் தனித்தனியே உபபத்திகள் பலபல வுளவென்கிறார். கிடந்திருந்து நின்று = இதற்கு இரண்டு படியாக நிர்வாஹம் செய்தருள்வர்கள் ; திருப்பார்கடலிலே தெய்வக் குழாங்கள் கை தொழக் கிடக்குங் கிடையையும், பரமபதத்திலே வீற்றிருக்குமிருப்பையும், திருமலையிலே நிலையார நிற்கும் நிலையையும் அநுஸந்திக்கிறாரென்னுதல். கடலரசனை வழி வேண்டிக் கடற்கரையிலே சாய்ந்த படியையும், மஹர்ஷிகளின் ஆச்ரமத்திலே சென்று இருந்த படியையும், வாலியைக் கொன்று (அல்லது இராவணனைக் கொன்று) நின்ற நிலையையும் அநுஸந்திக்கிறாரென்னுதல். முந்தின நிர்வாஹத்திற்குப் பரத்வ ப்ரகாசநத்தில் நோக்கு ; பிந்தின நிர்வாஹத்திற்கு ஸௌலப்ய ப்ரகாசனத்தில் நோக்கு. ஸௌலப்யமான நிலைமையிலும் பரத்வம் பொலியக் குறையில்லை யென்பதை நம்பிள்ளை மூதலிக்கிறபடி பாரீர் !;—§ "அவர்களுடைய ஸ்த்ரீகள் பக்கலிலே கேட்குமித்தனையிறே இவனுடைய பரத்வம் ; * தஉஸ: வாஜொயாதா ஶம்வசகுமஉாயாஶ: *. என்னுதல், * தஉவஹ்ஜெயஶ * என்னுதல் செய்யா நிற்பர்களிறே."

" அன்றியே, புளிங்குடிக் கிடந்து வர குணமங்கை யிருந்து வைகுந்தத்துள் நின்று * என்கிறபடியே அர்ச்சாவதாரஸ்தலத்திலே கிடந்து மிருந்தும் நின்றும் " என்ற ஒன்பதினாயிரமுங் காண்க.

அளந்து சேழலாய் என்று தொடங்கி இப் பூமிப்பிராட்டி யிடத்து எம்பெருமான் மால் கொண்டு செய்த செயல்கள் பலவுங் கூறப்படுகின்றன.

இடந்திடும், கரக்கும், உமிழும், தழுவும் என்பனவற்றை வினை முற்றாகவுங் கொள்ளப் பொருந்தும் .... .... .... (எ)

[§ 'அவர்களுடைய' என்றது ராவண வாலிகளுடைய என்றபடி.]

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



காண்பாராரெம்மீசன் கண்ணனையென்காணுமாறு *
ஊண்பேசில் எல்லாவுலகுமோர்துற்றாற்றா *
சேண்பாலவீடோ உயிரோமற்றெப்பொருட்கும் *
ஏண்பாலுஞ்சோரான் பரந்துளனுமெங்குமே. (அ)

| | |
|---|---|
| எம் ஈசன் | எமக்கு ஸ்வாமியான |
| கண்ணனை | ஸ்ரீக்ருஷ்ணனை |
| காண்பார் ஆர் | அறியவல்லார் யார்? |
| காணும் ஆறு என் | அறியும் விதந்தான் யாது? (அவனுக்கு) |
| ஊண் பேசில் | உணவு இன்னதென்று சொல்லப் புகுந்தால் |
| எல்லா உலகும் | எல்லா வுலகங்களும் |
| ஓர் துற்று | ஒரு கபளத்திற்கும் |
| ஆற்றா | போதாது; |
| வீடோ | (அவனுக்கு) வீடாயிருக் குமிடமோ |
| சேண்பால | எல்லா வுலகங்களுக்கும் மேற்பட்டு வெகுதூரத் திலுள்ளது; |
| மற்று எப் பொருட்கும் | (அவனே) (தன்னை யொழிந்த) எவ் வகைப் பொருட்கும் |
| உயிர் | அந்தர்யாமி; |
| ஏண்பாலும் | எண்ணப்பட்டஓரிடமும் |
| சோரான் | விடாதவனாய் |
| எங்கும் | எல்லா விடங்களிலும் |
| பரந்து | வியாபித்து |
| உளன் ஆம் | இருப்பவனுவன். |

* * [காண்பாரார்] எம்பெருமானது அற்புதத் தொழில்கள் எப்படிப் பட்டவர்கட்கும் எல்லை காண முடியா வென்கிறார். ஸர்வேச்வரனு யிருந்து வைத்துக் கண்ணனாய் வந்தவதரித்து எனக்குக் கையாளானவனை அவன் தானே காட்ட நான் கண்டாப்போலே காண்பார்க்குக் காணலாமேயல்லது ஸ்வப்ர யத்நத்தாலே காணப் புகுவார்க்கு ஒருநாளும் காணமுடியா தென்கிறது.

"எம்மீசன் கண்ணனைக் காண்பாரார்" என்று சொல்லி வைத்து மீண்டும் "என் காணுமாறு" என்றதற்குக் கருத்து என்னென்னில்; காணக் கூடிய வல்லமை பெற்ற மஹான்கள் உண்டானாலும் அவர்கள் காணுமளவாக இல்லையே பகவத் விஷயத்தின் பெருமை என்றவாறு. "அளவுடையார் சிலர் காண விழிந் தார்களென்ன விஷயத்தைப் பரிச்சேதிக்கப் போகாதே" என்ற ஈடு காண்க.

ஏன் பரிச்சேதிக்கப் போகாதென்ன, அதற்கு நிரூபகம் மேல் மூன் றடிகள். அவனுடைய ஊணாகிற ஒரு செயலைச் சொல்லப் பார்க்கில் ஸகல லோகங்களும் அவனுடைய ஒரு க்ராஸத்திற்குப் போராது. திருவரங்கக் கலம் பகத்தில் "அண்டமெலாமுண்டை யென்பரறியாதார் ஆங்கவை நீ, உண்ட ருளுங் காலத்தில் ஒரு துற்றுக் காற்றாவால்" என்றது இப் பாசுரத்தையுட் கொண்டென்க.

பின்னடிகட்குப் பொருள் கொள்ளுந் திறத்துப் பன்னீராயிரப்படியின் வழி வேறு, மற்ற படிகளின் வழி வேறு. சேண்பால என்றதைக் குறிப்பு வினை முற்றாகக் கொண்டார் வாதி கேஸரி; வீட்டுக்கு அடை மொழியாகக் கொண் டனர் மற்றுள்ள ஆசிரியர்கள், மேலுள்ள பதங்களின் பொருளிலும் வாசியுண்டு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



"உயர்த்தியையே ஸ்வாபவமாக வுடைத்தான பரமபதமென்ன, முக்தாத்மஸ்வரூபமென்ன, மற்றுமுண்டான தேவாதிகளென்ன—ஆக எல்லாப் பதார்த்தங்களுக்கும் வ்யாபகன்" என்க.

'என்பாலும்' என்றதை நீட்டல் விகாரமாகக் கொண்டு, எண்டிசையும் என்றுரைத்தலு மொன்று. .... ... ... (அ)

எங்குமுளன்கண்ணனென்ற மகனைக்காய்ந்து *
இங்கில்லையாலென்று இரணியன்தூண்புடைப்ப *
அங்கப்பொழுதே அவன்வீயத்தோன்றிய * என்
சிங்கப்பிரான்பெருமை ஆராயும்சீர்மைத்தே. (கூ)

| | |
|---|---|
| கண்ணன் எங்கும் உளன் என்ற | எம்பெருமான் எங்குமிருக்கிறானென்று சொன்ன |
| மகனை | புத்திரனை (ப்ரஹ்லாதனை) |
| இரணியன் | (பிதாவான) ஹிரண்யாசுரன் |
| காய்ந்து | கோபித்து |
| இங்கு இல்லை என்று | இவ்விடத்தில் இல்லை கிடாய் என்று |
| தூண் புடைப்ப | தூணை அறைய, |
| அங்கு | அந்தத் தூணிலே |
| அப்பொழுதே | அந்த க்ஷணத்திலேயே |
| அவன் வீய | அவ்விரணியன் முடியும்படி |
| தோன்றிய | ஆவிர்ப்பவித்த |
| என் சிங்கப் பிரான் | நரஸிம்ஹ மூர்த்தியான எம்பிரானுடைய |
| பெருமை | மேன்மை |
| ஆராயும் சீர்மைத்தே | ஆராய்தற்குரிய தன்மையதோ? |

* * * [எங்குமுளன்] கீழ்ப்பாட்டில் "எண்பாலுஞ் சோரான் பரந்துளனுமெங்குமே" என்றதில் சிலர் சங்கை கொண்டார்களாக, அவர்களை நோக்கிக் கூறுகின்றார்—எம்பெருமானுடைய வ்யாபகத்வத்திலே விப்ரதிபத்தியுடையார் இரணியன்பட்ட பாடுபடுவர்கள்; ஆகையாலே கெடுவீகாள்! அவன் பட்ட பாடு படாதே கிடிகோள்—என்கிறார்.

இரணியனுகிறான்—தேவர் மனிதர் முதலிய எவ்வுயிர்களாலும் பகலிலும் இரவிலும் வானத்திலும் பூமியிலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் தனக்கு மரணமுண்டாகாதபடி வரம் பெற்றவன். இவன் தேவர் முதலிய யாவர்க்கும் பல பல கொடுமைகளைப் புரிந்து அனைவரும் தன்னையே கடவுளாக வணங்கும் படி செய்து வருகையில், அவன் மகனான ப்ரஹ்லாதாழ்வான் இளமை தொடங்கி மஹாவிஷ்ணு பக்தனாய்த் தந்தையின் கட்டளைப்படி முதலில் அவன் பெயரைச் சொல்லிக் கல்வி கற்காமல் நாராயண நாமம் சொல்லிவரவே கடுங் கோபங்கொண்ட இரணியன் ப்ரஹ்லாதனைத் தன் வழிப்படுத்துவதற்குப் பல வாறு முயன்றபின் அங்ஙனம் வழிபடாத அவனைக் கொல்வதற்கு என்ன வுபாயஞ் செய்தும் அவன் பகவானுடைய அநுக்ரஹ பலத்தினால் ஒரு க்ஷேமமின்றியிருக்க, ஒருநாள் சாயங்காலத்திலே அந்த ஹிரண்யன் தன் புத்திரனை நோக்கி, "நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கேயுளன்? காட்டு' என்ன

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



' தூணிலுமுளன், துரும்பிலுமுளன், எங்குமுளன் " என்று அக்குமாரன் உறுதியாய்ச் சொல்ல, உடனே இரணியன் " இங்கு உளனோ ?' என்று சொல்லி எதிரில் நின்ற தூணைப் புடைக்க, உடனே அதிலிருந்து திருமால் மனுஷ்ய ரூபமும் சிங்கவடிவுங் கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாசற்படியில் தன் மடிமீது வைத்துக்கொண்டு தன் திருக்கையில் நகங்களால் அவன் மார்பைப் பிளந்து அழித்திட்டு ப்ரஹ்லாதனுக்கு அருள் செய்தானென்பது பிரஸித்தம்.

வேறேயொரு தூணிலிருந்து நரசிங்கமூர்த்தி தோன்றினால், முன்னமே ஒரு நரசிங்கத்தை உள்ளே வைத்து நாட்டிய தூண் அது என்று சொல்லிவிடக் கூடுமாகையாலே, அந்த வார்த்தைக்கு இடமில்லாதபடி அந்த இரணியன் தானே தனது உயரம் பருமனுக்குப் பொருந்தப் பார்த்து அளந்து நாட்டிய அவன் வாசல் தூணிலிருந்தே திருமால் நரசிங்கமாய்த் தோன்றினனென்பதும், வேறு யாரேனும் கையால் தட்ட அத் தட்டியவிடத்திலிருந்து தோன்றினால் ' அவர் தம் கையில் நரசிங்கத்தை அடக்கிக்கொண்டு வந்து தூணிலே பாய்ச்சினர் ' என்று சொல்லிவிடக் கூடுமாகையாலே, அந்த வார்த்தைக்கு அவகாசமில்லாதபடி அவ்விரணியன் தானே தன் கையால் தட்டினவளவில் திருமால் தோன்றினனென்பதும்,—அவன் ஓரிடத்தில் தட்ட மற்றோரிடத்திலிருந்து நரசிங்கம் தோன்றினால் 'எங்குமுளன்' என்று ப்ரஹ்லாதன் செய்த பிரதிஜ்ஞை தவறி 'நீ சொல்லுகிறவன் இங்கில்லை' என்று இரணியன் செய்த பிரதிஜ்ஞை நிலைநிற்குமாகையாலே அதற்கு இடமில்லாதபடி அவன் தட்டின இடத்திலிருந்தே திருமால் தோன்றினனென்பதும்,—அவன் தட்டினபிறகு சிறிதுபோது கழித்து நரசிங்கம் தோன்றினால் ' நான் தட்டினபொழுது திருமால் அங்கில்லை " என்று அவன் சொல்லி, திருமால் எங்கும் எப்பொழுதும் எல்லாப் பொருள்களினும் உள்ளும் புறமும் வியாபித்திருக்கிற உண்மை நிலையை மறுக்கக் கூடுமாகையாலே, அதற்கு இடமறும்படி கர்ப்பம், கருமுதிர்தல், ப்ரஸவித்தல் முதலியனவும் குழந்தையாய் ஜனித்தல் பிறகு நாளடைவில் வளர்தல் என்பனவுமில்லாமல் அவ்வெதிரியினும் பருத்து வளர்ந்த வடிவையுடையவனாய் அப்பொழுதே தோன்றினனென்பதும்—அங்ஙன் தோன்றியவிடத்தும் ஹிரண்யன் ஜயசீலனாகவும் நரஸிம்ஹன் பராஜிதனாகவும் நேர்ந்தால் 'எங்குமுளன்' என்ற உண்மை நிலைத்தாலும் பரத்வம் ஸித்தியாமற் போய்விடுதல் பற்றி அதைவிடத் தோன்றாமலிருப்பதே நலமென்னும்படி யிருக்குமாதலால் அங்ஙனமாகாதபடி அக்கொடியவனைத் தவறாது அழித்தனனென்பதும்,—தேவர், மனிதர், விலங்குகள், தாவரம் என்னும் நால்வகைப் பிறப்புக்களிலுள்ளவர்றில் ஒவ்வொன்றினாலும் தனித்தனி சாகாதபடியும், ப்ரஹ்மஸ்ருஷ்டிக்கு உட்பட்ட எந்த பிராணியினாலும் சாகாதபடியும் அவன் ப்ரஹ்மருத்ராதிகளிடத்திற் பெற்ற வரம் பழுது படாமைக்காக நரங்கலந்த சிங்கமாய் ப்ரஹ்மஸ்ருஷ்டியினுட்படாமல் தன்னைத் தானே தோற்றுவித்துக்கொண்டு தோன்றினனென்பதும்,—அஸ்த்ரசஸ்த்ரங்களொன்றினாலும் சாகாதபடியும் ஈரமுள்ளதனாலும் ஈரமில்லாததினாலும் இறவாதபடியும் பெற்ற வரம் வீண் போகாமே நகங்களினால் கீண்டு கொன்றனனென்பதும்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பகலிலுமிரவிலுஞ் சாகாதபடி பெற்றவரம் பொய்ப்படாதபடி அப்பகலிரவுகளின் ஸந்தியாகிய மாலைப்பொழுதிலே கொன்றனனென்பதும், — பூமியிலும் வானத்திலும் சாகாதபடி பெற்றவரம் மெய்பாகும்படி தன் மடிமீது வைத்துக் கொன்றனனென்பதும்,—வீட்டின் அகத்திலும் புறத்திலும் இறவாதிருக்கும்படி பெற்ற வரத்திற்கு விரோதமின்றி வாசற்படிமீது வைத்துக் கொன்றானென்பதும் இவை போன்ற பல விசேஷங்கள் இவ்வவதாரத்திலே அருமையாக நோக்கத்தக்க விஷயங்களாம். "சுராசுரர், முனிவர், நரர், கையில், பாரில், சுடர்வானில், பகலிரவில், உள்புறம்பில், பெரு படையில் தான் சாகாவிரண்யன்றன்னைப் பிரகலாதன் தர்க்கித்துண்டென்ற தூணில், நரஹரியாய்ப் பொழுதுபுகு நேரந்தன்னில் நாடியுதித்துயர் வாசற்படி மீதேறி, இரணியனைத் தொடைமிசைவைத் துகிரிலுலே இருபிளவாக்கினை யரியே எம்பிரானே" என்றார் பின்னோரும். .... (௯)

சீர்மைகொள்வீடு சுவர்க்கநரகீறு*
ஈர்மைகொள்தேவர் நடுவாமற்றெப்பொருட்கும் *
வேர்முதலாய் வித்தாய்ப் பரந்துதனிநின்ற *
கார்முகில்போல்வண்ணன் என்கண்ணனைநான்கண்டேனே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| சீர்மை கொள் | மேன்மை பொருந்திய | பரந்து | எங்கும் வியாபித்து |
| வீடு | மோக்ஷமும் | | |
| சுவர்க்கம் | ஸ்வாக்கமும் | தனி நின்ற | பரம விலக்ஷணனு யிருக்கின்ற |
| நரகு | நரகமும் | | |
| ஈறு ஆ | மேலெல்லையாக | கார் முகில் போல் வண்ணன் | காளமேக நிறத்தனான |
| ஈர்மை கொள் தேவர் நடு ஆ | ஈர நெஞ்சுடையரான தேவர்கள் நடுவாக | | |
| மற்று எப்பொருட்கும் | மற்றெல்லாப் பொருள்களுக்கும் | என் கண்ணனை | எம்பெருமானை |
| வேர் ஆய் முதல் ஆய் வித்து ஆய் | மூவகைக் காரணமும் தானேயாய் | நான்கண்டேன் | நான் அநுபவிக்கப் பெற்றேன். |

* * * [சீர்மை கோள்.] ஸம்ஸாரிகள் எம்பெருமானை மறந்து எப்படி யாவது தொலைபட்டும்; அவர்களில் ஒருத்தனான நானும் அவர்களைப் போலே பாழ்பட்டொழியாமே ஒருவாறு உஜ்ஜீவிக்கப் பெற்றேனே! என்று தமக்கு நேர்ந்த லாபத்தைக் குறித்துக் களித்துப் பேசுகிறார்.

ஸ்வர்க்கம் மோக்ஷம் முதலிய ஸகல புருஷார்த்தங்களுக்கும், நரகம் முதலிய அபுருஷார்த்தங்களுக்கும், இவற்றுக்கு போக்தாக்களான தேவாதி ஸ்தாவராந்தமான ஸகலாத்மவர்க்கத்துக்கும் தாரகனாய்க் காரணபூதனாய் நியாமகனாய், தன்னுடைய வ்யாவ்ருத்தி தோற்றும்படி ஸ்ரீ வைகுண்டத்திலே கார்காலத்துக் கார்முகில் போலே யிருக்கிற அழகிய திருமேனியை யுடையவனாயிருந்து வைத்து



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீக்ருஷ்ணனாய் வந்தவதரித்து எனக்குக் கையாளானவனை முந்துறமுன்னம் நான் கண்டு அநுபவிக்கப் பெற்றேனே ! என்று தம் பேற்றுக்குத் தாம் உவந்து பேசினராயிற்று.

ஈர்மைகோள் தேவர் = ஈர்மை யென்பது ஈரம்; மனவிரக்கம்; தம்மை வணங்கி வழி படுகின்ற சேதநர்கட்குப் பலனளிப்பதற்கிடான கருணை வாய்ந்தவர்கள் என்றபடி. இனி, ஈர்மை என்றது இரண்டு என்ற படியாய், கர்மபாவனையும் ப்ரஹ்மபாவனையுமாகிற இரண்டு பாவனையையுமுடையவர்களென்னவுமாம். இது வாதிகேஸரியின் நிர்வாஹம்.

வேர், முதல் வித்து என்ற மூன்று சொற்களும் காரண வாசகங்களே; ஸஹகாரிகாரணம் நிமித்தகாரணம் உபாதாநகாரணம் என்கிற மூவகைக் காரணங்களும் தானேயாய் என்றவாறு ... ... .... ... (கo)

கண்டலங்கள்செய்ய கருமேனியம்மானை *
வண்டலம்பும்சோலை வழுதிவளநாடன் *
பண்டலையில்சொன்னதமிழ் ஆயிரத்திப்பத்தும்வல்லார் *
விண்டலையில்வீற்றிருந்தாள்வர் எம்மாவீடே. (கக)

கண் தலங்கள் செய்ய } திருக்கண்கள் சிவந்திருக்கப் பெற்றவனாய்
கரு மேனி } கரிய திருமேனியையுடையனை
அம்மானை ஸ்வாமி விஷயமாக,
வண்டு அலம் பும் சோலை வளம் வழுதி நாடன் } வண்டுகள் ஒலிக்கின்ற சோலைவளம் பொருந்திய திருவழுதி நாட்டுக்குத் தலைவரான ஆழ்வார்
பண் தலையில் சொன்ன } தலைமையாகிய பண்களில் அமைத்துச் சொன்ன
தமிழ் ஆயிரத்து இப்பத்தும் வல்லார்—;
விண் தலையில் பரமபதத்தில்
வீற்றிருந்து வஸிக்கப்பெற்று
எம்மா வீடு } அறப் பெரிய ப்ரஹ்மானந்தத்தை
ஆள்வர் அநுபவிக்கப் பெறுவர்.

* * * [கண்டலங்கள்.] பரந்து சிவந்திருந்துள்ள திருக்கண்களையும் அவற்றுக்குப் பரபாகமாகக் கறுத்த திருமேனியையுமுடைய எம்பெருமானைக் குறித்து ஆழ்வார் பண்ணின் மேலே அருளிச் செய்தவாயிரத்துள் இப்பதிகத்தை ஓதவல்லவர்கள் திருநாட்டிலே வீற்றிருந்து நித்யானந்தமனுபவிக்கப் பெறுவார்களென்று இத் திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டிற்றாயிற்று. ... ... ... ... ... (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

———

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளீ.

𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌕𑌾𑌰𑍋𑌪𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌜𑌨𑌿𑌪𑌰𑌿𑌹𑌰𑌣𑌾𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍃𑌷𑍍𑌟𑍍𑌯𑌾𑌦𑌿𑌶𑌕𑍍𑌤𑍇𑌃
𑌨𑌿𑌃𑌸𑍀𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌦𑍇𑌶𑌾𑌨𑍍𑌵𑌯𑌤 𑌉𑌪𑌜𑌨𑌿𑌰𑌕𑍍𑌷𑌣𑌾𑌯𑌾𑌵𑌤𑌾𑌰𑌾𑌤𑍍 ।
𑌸𑍌𑌪𑍍𑌰𑌖𑍍𑌯𑌾𑌤𑌾𑌨𑍁𑌭𑌾𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌵𑌿𑌹𑌰𑌣𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑍈𑌚𑌿𑌤𑍍𑌰𑍍𑌯𑌵𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍
𑌭𑌕𑍍𑌤𑍈𑌰𑍍𑌦𑍍𑌰𑌾𑌗𑍍𑌦𑍃𑌶𑍍𑌯𑌭𑌾𑌵𑌾𑌦𑌿𑌤𑌿 𑌵𑌿𑌭𑍁𑌰𑍁𑌦𑌿𑌤𑌸𑍍𑌤𑌚𑍍𑌛𑌤𑍀𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑍇 ॥

1. ப்ராப்ய ஆகார உபபத்த்யா. * அணைவதரவணைமேல் பூம்பாவை யாகம் புணர்வது.* எம்பெருமானே ப்ராப்யன் என்பதற்கீடான உபபத்திகள் அமைந்திருக்கும்படி முதற்பாட்டில் வ்யக்தம்.

2. ஜநிபரிஹரணாத். * நீந்துந் துயர்ப்பிறவியுட்பட மற்றெவ்வெவையும் நீந்தும்.* ஜன்மம் முதலான எல்லாவற்றையும் போக்குமவன்.

3. விச்வஸ்ருஷ்ட்யாதி சக்தே: * புணர்க்குமயனும் அழிக்குமரனும்.* பிரமனுக்கும் ருத்ரனுக்கும் அந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ணுமவன்.

4. நிஸ்ஸீமாநந்த தேசாந்வயத:. * நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்.* எல்லையில்லாத ஆனந்தம் மிக்க பரமபதத்திலே புகுவிக்க வல்லவன்.

5. ரக்ஷணார்த்தாவதாராத். * மாவாகி யாமையாய் மீனாகி மானிடமாம்.* உலகங்களை யளித்தற்பொருட்டு ஹயக்ரீவ கூர்ம மத்ஸ்ய ராமக்ருஷ்ணாதி ரூபியாய் அவதரிக்குமவன்.

6. ஸுப்ரக்யாதாநுபாவாத். * தீர்த்தனுலகளந்த..............பார்த்தன் தெளிந்தொழிந்த.* தன் திருவடிகளிலே அர்ஜுனனிட்ட பூக்களை அவன் சிவபிரான் முடிமேற்கண்டு தெளிவு பெறும்படியாக மிகவும் ப்ரஸித்தமான பெருமையை யுடையவன்.

7. விவிதவிஹரணாத். * கிடந்திருந்து நின்றளந்து கேழலாய்* பல வகைப்பட்ட விஹார சேஷ்டிதங்களைப் பண்ணுமவன்.

8. வ்யாப்திவைசித்ர்யவத்த்வாத். * எண்பாலுஞ் சோரான் பரந்துளனுமெங்குமே.* ஒரு குறைவின்றியே எங்கும் வியாபித்திருப்பவன்.

9. பக்தை: த்ராக் த்ருச்யபாவாத். * இரணியன் தூண்புடைப்ப அங்கப்பொழுதே அவன் வீயத்தோன்றிய.* அன்பர் நினைத்தவிடத்தே அப்பொழுதே தோன்றிக் காட்சி தருமவன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



10. அகிலபலக்ருதே:. * சீர்மைகொள் வீடு சுவர்க்க மித்யாதி.* மோக்ஷம் ஸ்வர்க்கம் முதலிய ஸகல பலன்களையும் அளிக்குமவன்.—ஆக இப்படிப்பட்ட தன்மைகளைக் கொண்டு [முக்தி ஸௌக்யம் முகுந்தே உபஜகௌ] முகுந்தனே மோக்ஷ ஸுகப்ரதன் என்னுமிடத்தை "அணைவதரவணைமேல்" என்கிற திருவாய்மொழியில் ஆழ்வார் உபதேசித்தருளினாராயிற்று. ... (*)

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஆப்தாஶ்ரிதேஷ்வபி ஹரே: ப்ரியதாமவேக்ஷ்ய
ஸர்வாத்மந: ஸ்வஜநயந்நநிரீக்ஷிதேந ।
மோக்ஷப்ரதத்வமுபதிஶ்ய ததாஹிதம் ஸ்வாந்
லாபாச் ஸ்வலாபமதிகம் பஹுமந்யதே ஸ: ॥

(கருத்து) எட்டாவதான இந்தத் திருவாய்மொழியில் ஆழ்வார் செய்தது என்னென்னில்; தம்மோடு ஸம்பந்தமுடையாரிடத்திலும் எம்பெருமான் அன்பு பாராட்டியிருக்கும் நிலைமையைக் கண்ட ஆழ்வார் எல்லா ஆத்ம வர்க்கங்களையும் ஸ்வஜநமாகக் கடாக்ஷித்து அவர்களை நோக்கி எம்பெருமானுடைய மோக்ஷப்ரதத்வத்தை உபதேசித்தவிடத்திலும் அவர்கள் திருந்திவரக் காணாமையாலே, 'இந்த ஸம்ஸாரிகள் எக்கேடாவது கெட்டும்; இவ்விருள்தருமா ஞாலத்திலே நானொருவன் வாழப்பெற்றேனே!' என்று கொண்டு தம்முடைய பேற்றுக்குத் தாம் ஆனந்தித்துத் தலைக்கட்டினார் என்பதாம். ... (*)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



## திருவாய்மொழி நூற்றந்தாதி.

அணைந்தவர்கள் தம்முடனே யாயனருட்காளாம்
குணந்தனையே கொண்டுலகைக்கூட்ட—இணங்கிமிக
மாசிலுபதேசம்செய் மாறன் மலரடியே
வீசுபுகழெம்மா வீடு

| | |
|---|---|
| தம்முடனே அணைந்தவர்கள் | தம்மோடு ஸம்பந்தஸம்பந்தம் பெற்றவர்களுங் கூட |
| ஆயன் அருட்கு | எம்பெருமானுடைய திருவருளுக்கு |
| ஆள் ஆம் | இலக்காகும்படியான |
| குணம் தனையே கொண்டு | குணத்தையே பற்றாசாகக்கொண்டு |
| உலகை | ஸம்ஸாரி லோகத்தை |
| கூட்ட | எம்பெருமானோடுசேர்க்க |
| மிக இணங்கி | மிகவும் பொருந்தி |
| மாசு இல் உபதேசம் செய் | குறறமற்ற உபதேசத்தைச் செய்தருளின |
| மாறன் | ஆழ்வாருடைய |
| மலர் அடியே | பாதாரவிந்தமே |
| வீசு புகழ் | எங்கும் பரவிய புகழையுடையதாய் |
| எம் மா வீடு | எல்லாப்படியாலும் மேன்மையுடையதான மோக்ஷம். |

ஆழ்வார், தம்முடைய ஸம்பந்த ஸம்பந்திகளும் எம்பெருமானுடைய விஷயீகாரத்திற்கு இலக்காகி உஜ்ஜீவிக்கப் பெறுகிறபடியைக்கண்டு, எல்லா ஸம்ஸாரிகளையும் நம்மோடே சேர்த்துக் கொள்வோமென்று ஆசைப்பட்டவராய் அந்த ஸம்ஸாரிகளுக்கு நல்ல உபதேசங்களைச் செய்தருளினர் இத்திருவாய்மொழியில். அவருடைய திருவடிகளின் கீழ் வாழ்வதே நமக்கு மோக்ஷ புருஷார்த்தம் ; அன்றி, வேறு கிடையாது என்றாராயிற்று. ... (*)

ஜீயர் திருவடிகளே சரணம்.

எட்டாந் திருவாய்மொழி
உரை முற்றிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து—ஒன்பதாந் திருவாய்மொழி

## எம்மாவீட்டுத் திறமும்.

அவதாரிகை :—புருஷார்த்த நிஷ்கர்ஷம் பண்ணுகிற திருவாய்மொழியா யிது. அதாவது கீழ்த் திருவாய்மொழியில் "நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்" இத்யாதிகளாலே ஆழ்வார் திருநாட்டைப்பற்றி ப்ரஸ்தாவஞ் செய்தது கண்ட எம்பெருமான் 'இவர்க்கு மோக்ஷத்திலே ருசியாகில் அதை இவர்க்குக்கொடுத்து விடுவோமே'என்று திருவுள்ளம்பற்றி 'ஆழ்வீர்! நீர் அபேக்ஷிக்கிற மோக்ஷத் தைக் கொள்ளும்'என்று அருளிச் செய்ய, அதுகண்ட ஆழ்வார், 'எம்பெருமான் இங்ஙனே சொல்லிக் கொடுக்கிற மோக்ஷம் நமக்கு ஏதுக்கு? நம்முடைய அபே க்ஷிதத்தை நிறைவேற்ற வேணுமென்கிற திருவுள்ளத்தோடே அவன் தந்தருளும் மோக்ஷம் நமக்குப் புருஷார்த்தமாகுமோ? அவன்றன்னுடைய ருசிக்கீடாகக் கொடுத்தருளினால் அது பாங்கேயல்லது நம்முடைய ருசிக்காகக் கொடுக்குமது நமக்கு நரகத்தோ டொக்குமத்தனை'என்று திருவுள்ளம்பற்றி, 'பிரானே! நான் முக்தனாகி எல்லையிலின்பம் அநுபவிக்கவுமாம்; கைவல்யாநுபவத்தைப் பெறவு மாம்; ஆத்ம விநாசமே யாகவுமாம்; நரகாநுபவம் பண்ணவுமாம்; இவற்றில் எனக்கு ஒரு நிர்ப்பந்த மில்லை; உன்னுடைய ருசிக்கீடாக வருமதாகில் இவை யித்தனையும் வரவுமாம்; எனக்காக வருமதாகில் மோக்ஷமும் வேண்டா; ஆன பின்பு தேவரீருடைய ருசிக்கு ஏற்றது எதுவோ அதுவே எனக்கு ப்ராப்யமாம் படி பண்ணி யருளவேணும் என்கிறாராயிற்று.

"எம்பார் இத்திருவாய்மொழி அருளிச் செய்யப்புக்கால் இருந்தவர்களை யார் என்று கேட்டுக் கதவுகளையும் அடைப்பித்து குஹ்யமாகவாம் அருளிச் செய்வது" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி யறிக. இத்திருவாய்மொழியின் ப்ரமேயத் திற்கு அதிகாரிகள் துர்லபர் என்று காட்டினபடி. ... ... (*)

எம்மாவீட்டுத்திறமும்செப்பம் * நின்
செம்மாபாதபற்புத்தலைசேர்த் தொல்லை *
கைம்மாதுன்பம் கடிந்தபிரானே *
அம்மா! அடியேன் வேண்டுவதீதே. (க)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| கைம்மா துன் பம் கடிந்த பிரானே | கஜேந்தி ராழ்வானுடைய இடரைத் தீர்த்த பிரபுவே! |
| நின் | தேவரீருடைய |
| செம் | சிவந்த |
| மா | மேன்மைதங்கிய |
| பாத பற்பு | பாத பத்மங்களை |
| தலை | என் தலையிலே |
| ஒல்லை | சீக்கிரமாக |
| சேர்த்து | சேர்க்கப்பெற்ருல் |
| எ மா வீடு திறமும் | மிகவும் விலக்ஷணமான மோக்ஷத்தைப்பற்றின பேச்சையும் |
| செப்பம் | ப்ரஸ்தாவிக்கமாட்டோம்; |
| அம்மா | ஸ்வாமியே! |
| அடியேன் வேண்டுவது | நான் ப்ரார்த்திப்பது |
| ஈதே | இதுதான். (நின் செம்மாபாத பற்புத்தலை சேர்க்கவேணுமென்பதே யென்றபடி.) |

* * * பிரானே! உன் திருவடிகளை என் தலைமீது வைக்குமித்தனையே வேண்டுவது; எவ்வகையாலும் விலக்ஷணமான மோக்ஷத்திலும் எனக்கு விருப்பமில்லையென்கிருர். பாசுரந் தொடங்கும்போதே எம்மாவீட்டுத்திறமும் செப்பம் என்கிருர்—தம்முடைய அத்யவஸாயத்தின் உறைப்பை உபக்ரமத்திலேயே நன்கு காட்டுகிறபடி. 'எம்முடைய' என்னும் பொருளதான எம் என்கிற சொல் அன்று முன்னேயிருப்பது. 'எப்படிப்பட்ட' என்னும் பொருளதான சுட்டு அது என்றுணர்க. எல்லாப்படியாலும் விலக்ஷணமான மோக்ஷத்தைக் கொடுத்தாலும் வேண்டா என்றபடி.

செப்பம் என்றது தன்மைப்பன்மை யெதிர்மறை வினைமுற்று; செப்போம் என்றவாறு. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி—"ஒரு தமிழன் 'எம்மாவீட்டு விகல்பமும் செவ்வியவாம்' என்றான்; அந்த பக்ஷத்திலே வீட்டு விகல்பமாவது ஸாலோக்ய ஸாரூப்ய ஸாமீப்ய ஸாயுஜ்ய மென்கிறவை; செவ்வியவாகையாவது ஸாலோக்யாதிகளெல்லாம் இம்மோக்ஷத்திலே யுண்டாகை." என்றுள்ளது. இதுவொரு நிர்வாஹம். திருப்பாவையில் "செப்பமுடையாய்" என்றும், திருவாய்மொழியிலேயே ஏழாம்பத்தில் "செப்பமே செய்து" என்றும் உள்ளவிடங்களிலே செப்பம் என்பது பெயர்ச்சொல்லாக வுள்ளதன்றோ; அப்படியே இங்கும் இருப்பதாகக் கொண்டு இந்த நிர்வாஹம். இப்போது, செப்பம் என்பதற்கு 'நன்ருகவுள்ளது' என்று கருத்துத் தேறும். நின் செம்மா பாதபற்பை என் தலைமேல் சேர்த்தால் நான்கு விதமான மோக்ஷ ஸாம்ராஜ்யங்களும் இதிலேயே அடங்கிவிட்டனவாகும் என்பது தேர்ந்த கருத்து.

கைம்மா துன்பம் கடிந்த வரலாறு:—இந்திரத்யும்னனென்ற அரசன் மிகுந்த விஷ்ணுபக்தி யுக்தனாய் ஒருநாள் விஷ்ணுபூஜை செய்கையில் அகஸ்திய மாமுனிவன் அவனிட மெழுந்தருள, அப்பொழுது அவ்வரசன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப்பூஜிப்பதிற் செலுத்தியிருந்ததனால் அவ்விருடியின் வருகையை அறிந்திடாளுய் அவனுக்கு உபசாரமொன்றும் செய்யாதிருக்க, அம்முனிவன், தன்னை அரசன் அலக்ஷியஞ் செய்தானென்று மாருகக் கருதிக்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கோபித்து, 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக் கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் காட்டில் ஒரு யானையாகத் தோன்றினனாயி னும் முன்செய்த விஷ்ணு பூஜையின் வைபவத்தினால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரை மலர்களைக் கொண்டு திருமாலை அர்ச்சித்துவருகை யில், ஒருநாள் பெரியதொரு தாமரைத் தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூப்பறிக் கப் போய் இறங்கியபொழுது, அங்கே முன்பு நீர்நிலையில் நின்று தவஞ்செய்து கொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப் பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரிய முதலையாய்க்கிடந்த ஹூஹூ என்னும் கந்தருவன் அவ்யானையின் காலைக் கௌவிக் கொள்ள அதனை விடுவித் துக் கொள்ள முடியாமல் கஜேந்திரன் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் பெரிய திருவடியின்மீதேறி அங்கு எழுந்தருளித் தனது சக்கரப்படையைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன்வாயி னின்று விடுவித்து இறுதியில் அதற்கு முக்தியை அருளினன் என்பதாம்.

பாதபற்பு—பாதபத்மம். 'பத்மம்' என்னும் வட சொல் பற்பு எனத் திரிந்தது. ... ... ... ... ... (க)

ஈதேயானுன்னைக் கொள்வதெஞ்ஞான்றும் * என்
மைதோய்சோதி மணிவண்ணவெந்தாய் *
எய்தாநின்கழல் யானெய்த * ஞானக்
கைதா காலக்கழிவுசெய்யேலே. (உ)

| | | | |
|---|---|---|---|
| என் | எனது அநுபவத்திற்கு உரிய | ஈதே | இஃதொன்றேயாகும்; (அது யாதெனில்;) |
| மை தோய் சோதி மணி வண்ணம் எந்தாய் | கருமைபடிந்த ஒளியை யுடைய மாணிக்கம் போன்ற வடிவழகுள்ள ஸ்வாமியே! | எய்தா | பெறுதற்கரிதான |
| யான் | நான் | நின் கழல் | தேவரீருடைய திருவடிகளை |
| எஞ்ஞான்றும் | என்றைக்கும் | யான் எய்த | நான் அடையும்படியாக |
| உன்னை | தேவரீரிடத்தில் | ஞானம் கை | ஞானமாகிய கையை |
| கொள்வது | பிரார்த்திப்பது | தா | தந்தருளவேணும்; |
| | | காலம் கழிவு செய்யேல் | காலதாமதம் செய்ய வேண்டா. |

* * * எம்பெருமான் திருவடிகள் தம் தலைமேல்வந்து பொருந்தவேணு மென்று கீழ்ப்பாட்டில் வேண்டினார்; ஞானக்கை தந்தருள வேணுமென்று விரும்புகிறாரிப்பாட்டில்.

"அம்மாவடியேன் வேண்டுவதீதே" என்று நிஷ்கர்ஷமாகக் கீழ்ப்பாட்டில் சொன்னவர் மீண்டும் "ஈதே யானுன்னைக் கொள்வது" என்னவேணுமோ? மறு படியும் ஈதே என்பானேன்? என்னில்; ஒரு வஸ்துவை விரும்பின வொருவரையே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பலகால் கேள்விகேட்டால் தடுமாறிப்போவதுமுண்டு; அது வேண்டா, மற்றொன்று வேண்டும் என்று சொல்லிவிடுவதுமுண்டு; இவ்வாழ்வார் அப்படி நிலை மாறுகிறவரோ என்று பரீக்ஷிப்பதற்காக எம்பெருமான் 'ஆழ்வீர்!' இதுவும் இன்ன மெதுவும் வேணும்?' என்றாலும்; வேறு எதுவும் வேண்டா; ஈதொன்றே வேணும்—என்றாராயிற்று. "ஈதே கொள்வதெஞ்ஞான்றும்" என்பதே போதுமாயிருக்க, யான் உன்னை என்ற பதங்கள் எதுக்கு என்னில்; என்னுடைய ஸ்வரூபத்திற்கும் உன்னுடைய ஸ்வரூபத்திற்கும் தகுதியாக இதுவே கொள்ளக்கடவ தென்கை. ஸ்வாமியான வுன்பக்கல் சேஷபூதனான நான் கொள்ளுமது இதுவே.

நம்முடைய ஸ்வாமித்வமும் உம்முடைய சேஷத்வமும் கிடக்கச் செய்தே யன்றோ நெடுநாள் இழந்துபோந்தது; ஆனபின்பு நமக்கு அதிசங்கை யுண்டாகின்றது; எத்தனை நாள்வரையில் நீர் இங்ஙனே [ஈதே யானுன்னைக் கொள்வது என்று] சொல்லுவீர்? என்று எம்பெருமான் கேட்க; எஞ்ஞான்றும் என்கிறார். ஆத்மதத்துவ முள்ளவரையிலும் இதுவே எனக்கு வார்த்தை யென்றவாறு. இதிலே நிலைநிற்கும்படி உம்மை சிக்ஷை பண்ணிவைத்தது யார்? என்று கேட்க; தேவரீருடைய வடிவழகே இங்ஙனம் சிக்ஷை பண்ணித்தந்தது என்கிறார் என் மைதோய் சோதிமணிவண்ண வெந்தாய்! என்பதனால்.

உமக்கு நான் செய்யவேண்டுவது எதுவென்ன; எய்தாநின்கழல்யானெய்த ஞானக்கை தா என்கிறார். தம்முயற்சியால் ஒருவர்க்குமணுக வொண்ணாதவுன் திருவடிகளை 'உன்னாலே பேறு' என்றிருக்கிற நான் அணுகும்படி பண்ண வேணும்.

ஞானக்கை தா என்றவிடத்தில் ஈடு—"எம்பார்க்கு ஆண்டானருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்று. இதன் விவரணம் வருமாறு:— முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரான வொரு ஸ்ரீவைஷ்ணவர் கோயிலிலே வந்து எம்பார் ஸந்நிதியிலே கைங்கரியம் பண்ணிக் கொண்டிருந்தார். அப்போது ஒருநாள் சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்கவிருக்கையில் இந்த ஸ்ரீவைஷ்ணவரும் தமக்கும் ஸாதிக்கும்படி வேண்டினார்; அப்போது எம்பார் 'உமக்கு விசேஷ ஸம்பந்தமுண்டோ?' என்று அவரைக் கேட்க, 'தேவரீருடைய ஸம்பந்தமே ஸம்பந்தம்' என்று அவர் விண்ணப்பஞ்செய்ய அவ்வளவிலே எம்பார் 'இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதத்தவர்' என்றறியாதே இவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பண்ணி இவரைக்கொண்டு கைங்கரியங்களுங் கொண்டெழுந்தருளி யிராநிற்கையில் ஆண்டானும் திரும்பிக் கோயிலிலே யெழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீவைஷ்ணவர் ஆண்டானைவந்து ஸேவிக்க, ஆண்டானும் முன்புபோலே இவரைக்கொண்டு வேண்டும் கைங்கரியங்களைக்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

கொள்ள, அப்போது எம்பாருமறிந்து ஆண்டான் பக்கலிலே யெழுந்தருளி 'கனக்க அபசாரப்பட்டேன்' என்றருளிச் செய்ய, இவருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தை யறிந்து அப்போது ஆண்டானருளிச் செய்தவார்த்தை—'ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால் எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே; அப்படியேயாகிறது' என்றும். இங்குக் கைகொடுப்பதாவது ஞானமளிப்பது. இதற்காகவே இந்த ஸம்வாதம் இங்குக் காட்டப்பட்டது. ஸம்ஸாரஸாகரத்தில் அழுந்தினவர்களுக்கு இரண்டு ஆசாரியர்களாகவிருந்து ஞானக்கை கொடுப்பது நன்றுதானே என்பது முதலியாண்டானுடைய திருவுள்ளம். .... .... (உ).

செய்யேல்தீவினையென்று அருள்செய்யும் * என்
கையார்சக்கரக் கண்ணபிரானே *
ஐயார்கண்டமடைக்கிலும் நின்கழல்
எய்யாதேத்த * அருள்செய்யெனக்கே. (ரு)

| | |
|---|---|
| தீவினை செய்யேல் என்று | 'கெட்ட காரியங்களைச் செய்யாதே' என்று |
| அருள் செய்யும் | (என்திறத்தில்) கிருபை செய்தருளின |
| கை ஆர் சக்கரம் | திருக்கையில் பொருந்தின திருவாழியையுடைய |
| என் கண்ணபிரானே!— | |

| | |
|---|---|
| ஐயார் கண்டம் அடைக்கிலும் | கோழைவந்து கழுத்தையடைக்கும்படியான துர்த்தசை நேர்ந்தாலும் |
| நின் கழல் | தேவரீருடைய திருவடியை |
| எய்யாது | இளைப்பின்றி |
| ஏத்த | துதிக்கும்படியாக |
| எனக்கு அருள் செய் | என்னளவில் கிருபை பண்ணவேணும். |

* * * உத்க்ரமண தசையான துர்க்கதியிலும் நான் இளையாதே உன் திருவடிகளை ஏத்தும்படி பண்ணியருள வேணுமென்கிறார்.—கையும் திருவாழியுமாயிருக்கிற இருப்பைக்காட்டி என்னை ஈடுபடுத்திக் கொண்ட பெருமானே! நான் உம்மிடத்து துக்க நிவ்ருத்தியை விரும்புகின்றேனல்லேன்; நெஞ்சிலே கோழை கட்டிப்போய்த் தடுமாறும்படியான நிலைமை நேர்ந்தாலும் நேருக; அப்போதும் உன் திருவடிகளில் பத்தி குலையாமே துதிக்கும்படி செய்தருளினாற்போதும் என்றாயிற்று. இங்கு "துர்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத: । யதி நாஶம் ந விந்தேத தாவதாஸ்மி க்ருதீ ஸதா=துர்க்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத:। யதி நாசம் ந விந்தேத தாவதாஸ்மி க்ருதீ ஸதா." என்ற ஜிதந்தாச்லோகம் அநுஸந்திக்க வுரியது. எம்பெருமானே! எனக்கு எப்படிப்பட்ட துர்க்கதி நேர்ந்தகாலத்தும் சிந்தனைமாத்திரம் உன்னைவிட்டு அகலாதிருக்குமாயின் அவ்வளவே நான் உய்யப் போதுமானது—என்பது மேற்குறித்த ச்லோகத்தின் கருத்து.

ஐயார் = ஐ என்று கோழைக்குப் பெயர்; ஆர்விகுதி இழிவுப்பொருளது;: 'கோழைப் பையலார்' என்பது நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி. ... ... (ங).

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.
CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



எனக்கேயாட்செய் எக்காலத்துமேன்று* என்
மனக்கேவந்து இடைவீடின்றிமன்னி*
தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே*
எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பே. (ச)

| | |
|---|---|
| எக்காலத்தும் | 'எக்காலத்திலும் |
| எனக்கே ஆள் செய் என்று | 'எனக்கே அடிமை செய்யக் கடவாய்' என்று சொல்லி |
| என் மனக்கே வந்து | எனது மனத்திலேயே எழுந்தருளி |
| இடை வீடு இன்றி | இடைவிடாமல் |
| மன்னி | நிலைபெற்றிருந்து |
| தனக்கே ஆக | தனக்கே உரியேனும் படி |
| எனை | என்னை |
| கொள்ளும் ஈதே | அங்கீகரித்தருளு மிதுவே |
| எனக்கே | என் ஸ்வரூபத்திற்குத் தகுதியாக |
| கண்ணனை | எம்பெருமானிடத்து |
| யான் கொள் | நான் விரும்புகின்ற |
| சிறப்பு. | சிறந்த பிரயோஜனம் |

* * இத்திருவாய் மொழிக்கு உயிரான பாசுரம் இது. எல்லாப்படியாலும் அத்தலைக்கே உரித்தாயிருக்கும்படியான அத்யந்த பாரதந்திரியத்தை ப்ரயோஜனமாக நிஷ்கர்ஷிக்கிறாரிதில். இப்பாசுரத்திற்கு அவதாரிகை அருளிச் செய்யாநின்ற நம்பிள்ளை—"எம்மாவீட்டி லெம்மாவீடாய் வைஷ்ணவ ஸர்வஸ்வமுமாய் உபநிஷத்குஹ்யமுமாய் ஸர்வேச்வரன் பக்கலிலே அபேக்ஷித்துப் பெறுமதாய் இவ்வாத்மாவுக்கு வகுத்ததான பாரதந்த்ரியத்தை அவன் பக்கலிலே அபேக்ஷிக்கிறார்" என்கிறார். இதில் எம்மாவீட்டி லெம்மாவீடு என்றது அற்புதமான வொரு ஸ்ரீஸூக்தியாகும். திருவாய்மொழியாயிரத்தினுள்ளே எம்மாவீடு என்கிற இப்பதிகம் மிகச் சிறந்தது என்று ஆசார்ய கோஷ்டியில் ப்ரஸித்தியாதலால், எம்மா வீடு என்கிற பதத்திற்கு நிரூடலக்ஷணையால் ஸாரம் என்று பொருள் கொண்டு, ஸாரத்திலும் பரமஸாரம் என்கிற விவக்ஷையாலே எம்மாவீட்டி லெம்மாவீடாய் என்றார் என்றுணர்க.

ஆட்செய், எனக்கு ஆட்செய், எனக்கே ஆட்செய், எக்காலத்தும் எனக்கே ஆட்செய்—என்று பிரித்துரைத்துப் பேரின்சுவைப்படுத்துக. என்னை நியமித்துக்கொண்டு என்னெஞ்சினுள்ளேயே வந்து படுகாடு கிடக்கவேணும்; நிலாத்தென்றல் சந்தனம் தண்ணீர் முதலிய பொருள்கள்போலத் தனக்கேயாக என்னைக் கொள்ளவேணும்; இவ்வளவே நான் விரும்பும் புருஷார்த்தம் என்றாராயிற்று.

'மயர்வற மதிநலமருளப் பெற்றவர்கள் தனக்கேயாக வெனைக் கொள்ளுமீதே யென்று பிரார்த்திப்பானேன்? திருவுள்ளமானபடி செய்கிறான் என்றிருக்கையன்றோ அழகியது' என்று பிள்ளைதிருநறையூரரையர் எம்பாரைக் கேட்க, அதற்கு அவர் அருளிச்செய்த விடை—'நீர் கேட்பது வாஸ்தவமே; ப்ராப்ய

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ருசி இங்ஙனே பிரார்த்திக்கப் பண்ணுகிறது' என்று. எம்பெருமானுடைய திரு மார்பிலே இடைவிடாது எழுந்தருளியிருக்கின்ற பிராட்டி வாளா இருக்க லாமே; அப்படியிராமே 'அகலகில்லேனிறையும், அகலகில்லேனிறையும்'என்று வாய்க்கொருமுறை சொல்லிக்கொண்டேயிருக்கிறாளே, அது ஏன்?. அது விஷயஸ்வபாவம் படுத்துகிறபாடு என்னில், இது ப்ராப்யருசி படுத்துகிறபாடு என்று கொள்ளீர் என்று மருளிச்செய்தார்.

மனக்கு=அத்துச் சாரியை பெருமல் வந்தது. "மாடக்குச் சித்திரமும்" என்றதுங்காண்க. "மனக்கின்பம் படமேவும்" என்று ஒன்பதாம் பத்திலுமருளிச் செய்தார்.

சிறப்பு—முக்தி, செல்வம், நன்றி. ... ... (௪)

சிறப்பில்வீடு சுவர்க்கநரகம் *
இறப்பிலெய்துக எய்தற்க * யானும்
பிறப்பில் பல்பிறவிப்பெருமானை *
மறப்போன்றின்றி என்றும்மகிழ்வேனே. (௫)

| | | | |
|---|---|---|---|
| இறப்பில் | மரணமான பிறகு | பல் பிறவி | அநுக்ரஹ மடியாகப்) பல பிறவி பிறக்கின்றவனுமான |
| சிறப்பில் வீடு | சிறப்புடன்கூடிய மோக்ஷத்தையோ | பெருமானை | ஸ்வாமியை |
| சுவர்க்கம் | ஸ்வர்க்கத்தையோ | மறப்பு ஒன்று இன்றி | சிறிதும் மறவாமல் |
| நரகம் | நரகத்தையோ | என்றும் | எக்காலத்திலும் (சிந்தித்து) |
| எய்துக | அடைவேனாக; | யானும் மகிழ் வேன் | (நீசனான) நானும் களிப்புறுவேன். |
| எய்தற்க | அடையாதொழிவேனாக; | | |
| பிறப்பு இல் | (நம்மைப்போலே கரும மடியாகப் பிறவாதவனும் | | |

* * * தேஹமே ஆத்மாவாக இருக்கட்டும்; அன்றி தேஹத்திற்காட்டில் வேறுபட்டிருப்பானொருவன் ஆத்மாவாக இருக்கட்டும்; ஸ்வர்க்கம் நரகம் முதலானவற்றில் எதுகிடைத்தாலும் கிடைக்கட்டும்; இவற்றிலெல்லாம் எனக்கொரு நிர்ப்பந்தமில்லை; பின்னை எதில் நிர்ப்பந்தமென்னில்; தேவரீர் கருமங்காரணமான பிறப்பு இல்லாதவராயிருந்துவைத்து ஆச்ரித ரக்ஷணார்த்தமாகப் பல பிறவிகளிலும் பிறந்தருள்பவராயிராநின்றீரே; அந்த அவதாரங்களையும் ஸகல திவ்ய சேஷ்டிதங்களையும் ஸகல கல்யாண குணங்களையும் மறவாதே என்றும் அநுபவிக்கப் பெறுவேனாகவேணும்; ஈதொன்றிலேயே எனக்கு நிர்ப்பந்தம் என்கிறார்.

சிறப்பில் வீடு='சிறப்பு இல்லாத வீடு' என்று பொருளன்று; "ஆனந்தமாகிற நன்மையிலேயான மோக்ஷம்" என்பது பன்னீராயிரம். எய்தற்க—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



'மகிழ்வேனே-' என்றது அநுபவிப்பே னென்றபடி: "மகிழ்ச்சி யென்றும் அநுபவ மென்றும் பர்யாயம்" என்பர் நம்பிள்ளை. ... ... (ரு)

மகிழ்கொள்தெய்வம் உலோகமலோகம் *
மகிழ்கொள்சோதி மலர்ந்தவம்மானே *
மகிழ்கொள்சிந்தை சொல்செய்கைகொண்டு * என்றும்
மகிழ்வுற்று உன்னைவணங்கவாராயே. (கூ)

| | |
|---|---|
| மகிழ் கொள் | மகிழ்ச்சியைக் கொண்ட |
| தெய்வம் | தேவவர்க்கமும் |
| உலோகம் | ஞான வொளியை யுடைய மானிடவர்க்கமும் |
| அலோகம் | ஞான வொளியில்லாத விலங்கு தாவரம் என்பவையும் |
| மகிழ் கொள் சோதி | உலகுக்கு மகிழ்ச்சியைத் தருகின்ற சோதிப் பொருள்களான சந்திர ஸூரியர்களும் |
| மலர்ந்த | (தன்னிடத்தில்நின்றும்) உண்டாகப்பெற்ற |
| அம்மானே | ஸர்வேச்வரனே |
| மகிழ் கொள் சிந்தை | அன்பு கொண்ட நினைவையும் |
| சொல் | சொல்லையும் |
| செய்கை | செயலையும் |
| கொண்டு | ஏற்றுக்கொண்டு |
| என்றும் | எக்காலத்திலும் |
| மகிழ்வுற்று | மகிழ்ச்சியுடன் |
| உன்னை வணங்க | உன்னை வணங்கும்படி |
| வாராய் | (என்னெதிரே) எழுந்தருளவேணும். |

* * * இப்பாசுரத்திற்கு இரண்டுவகையாக அவதாரிகை கூறுவர்;—தேவர் மனிதர் முதலிய பதார்த்தங்களைப் படைத்ததுபோலே என்னையும் உன்னையநுபவிப்பேனும்படி பண்ணவேணு மென்கிறார்; அன்றியே; தேவாதி பதார்த்தங்களுக்கு ஒவ்வொரு ஸ்வபாவம் நியதமாம்படி பண்ணினப்போலே எனக்கு உன்னையநுபவிக்குமது நியதஸ்வபாவமாம்படி பண்ணியருள வேணுமென்கிறார். (தாற்பரியமாகத் தேறுவது ஒன்றே.) முன்னிரண்டடிகளிலுள்ள பகவத்ஸம்போதநம் ஸாபிப்ராயம். ஆனந்தமே வடிவான தேவவர்க்கமென்ன, ஞான வொளியோடுகூடிய மநுஷ்யவர்க்கமென்ன, அஃதில்லாத திர்யக் ஸ்தாவரவர்க்க மென்ன, தேஜஸ்விகளான சந்த்ரஸூர்யாதி சுடர்ப்பொருள்களென்ன ஆகிய இவற்றை யெல்லாம் படைத்தவனே! என்று சொல்லி விளித்ததானது பின்னடிகளிற் சொல்லப்படுகிற பொருளுக்கு உபஷ்டம்பகமாகும்: இப்படியெல்லாம் விசித்ர ஸ்ருஷ்டிகளைப் பண்ணவல்லனீ, என்னுடைய ஹ்ருதயம் உன்னையநுபவித்து மகிழ்ச்சியை யுடையதாம்படி பண்ணவேணும்; என்னுடைய வாக்குவ்யவஹாரமும் அப்படியேயாகப் பண்ணவேணும்; என்னுடைய வியாபாரமும் உகப்போடு செய்யும் கைங்கரியமாக வேணும், என்று மிப்படி நானுன்னை யநுபவிக்குமாறு வந்தருளவேணும்—என்றாராயிற்று.

உலோகம் அலோகம் என்கிற பதங்களுக்குப் பொருளுரைப்பதில் அபிப்ராய பேதமுண்டு: (உலோகம் என்றது லோகம் என்றபடி.) லோக மென்றது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வட சொல்; லோக்யதே இதி லோகஃ—காணப்படுகிற வஸ்து என்றபடி. கண் முதலிய உறுப்புக்களால் காணப்படுவன அசேதனப் பொருள்களாகையால் உலோகமென்று அசித்வஸ்துவாசகம். அலோகம்—நலோக்யத இதி அலோகஃ. முற்சொன்ன அசித்வஸ்துவை க்ரஹிக்கவல்ல உறுப்புக்களால் க்ரஹிக்கப்படாதே சாஸ்தர மொன்றினலேயே க்ரஹிக்கப்படுமது, ஆத்மவஸ்து என்றபடி இங்ஙனே பொருள் கொள்வர் இருபத்தினலாயிரத்திலும் முப்பத்தாறுயிரத்திலும். பன்னீராயிரப்படி யுரைகாரர், "உலோகம்—ஜ்ஞாநப்ரகாச யுக்தமான மநுஷ்யவர்க்கம்; அலோகம்—ப்ரகாச ரஹிதமான திர்யக்ஸ்தாவரங்கள். உலோகமலோகமென்று சேதநாசேதநங்களாகவுமாம்." என்றார். ... (சு)

வாராய் உன்திருப்பாதமலர்க்கீழ் *
பேராதேயான்வந்து அடையும்படி
தாராதாய்! * உன்னையென்னுள் வைப்பிலென்றும்
ஆராதாய்! * எனக்கென்றுமேக்காலே. (எ)

| | | | |
|---|---|---|---|
| உன் | உன்னுடைய | உன்னை என்னுள் என்றும் வைப்பில் | உன்னை என்னுள்ளே எந்நாளும் வைத்து அநுபவித்தாலும் |
| திரு பாதம் மலர் கீழ் | திருவடித்தாமரைகளின் கீழ் | ஆராதாய் | தெவிட்டாதவனே! |
| பேராதே | விலகாமல் | எனக்கு | என் கண்ணெதிரே |
| யான் வந்து அடையும்படி | நான் வந்து சேரும்படியாக | என்றும் எக்கால் | எப்போதும் |
| தாராதாய் | அருள் புரியாதவனே! | வாராய் | வந்தருள வேணும். |

* * * வாராய் என்றபோதே வரக்காணுமையாலே வருந்தி, பின்னையும் அபிநிவேசத்தின் மிகுதியாலே, நான் சடக்கென வுன்னைக்கிட்டும்படி வாராயென்கிறார்· "உன் திருப்பாதமலர்க்கிழ்ப் பேராதே யான்வந்து அடையும்படி தாராதாய்!" என்று எம்பெருமானை விளிக்கிறார்; நாராயணு! மாதவா! என்னுமாபோலே எம்பெருமானுக்கு இங்ஙனே ஒரு திருநாமம்போலும். * அஞ்சிறை மட நாராயில் "அருளாத நீர்" என்றதுபோலே. தேவரீருடைய அளவுகடந்த போக்யதையை யெனக்குக் காட்டிவைத்து தேவரீரை எனக்கு அநுபவிக்கத் தந்தருளாமலிருப்பது தகுதியோ? என்று கேட்பது விளியின் கருத்து. தந்தருளத் திருவுள்ளமில்லையாயின் நெஞ்சிலே பிரகாசித்துக் கொண்டிருக்குமிருப்பையாவது தவிர்த்துக் கொள்ளலாமே; அப்படியில்லாமே அகவாய் பெரியதிருநாளாய்ச் செல்லாநின்றதே யென்கிறார் உன்னை யென்னுள்வைப்பில் என்று மாராதாய்! என்று. ... ... ... (எ)

எக்காலத்தெந்தையாய் என்னுள்மன்னில் * மற்று
எக்காலத்திலும் யாதொன்றும்வேண்டேன் *
மிக்கார்வேதவிமலர் விழுங்கும் * என்
அக்காரக்கனியே! உன்னையானே. (அ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| மிக்கார் | சிறந்தவர்களான | என் உள் | எனது நெஞ்சிலே |
| வேதம் விமலர் | வேதம் வல்ல பரமை காந்திகள் | மன்னில் | பொருந்தியெழுந்தருளியிருக்கப்பெறில் |
| விழுங்கும் | (அன்பு மிகுதியினால்) விழுங்கும்படியாகவுள்ள | மற்று யாது ஒன்றும் | வேறொரு பிரயோஜனத்தையும் |
| என் அக்காரக் கனியே | அக்காரக் கனிபோன்ற எம்பெருமானே! | உன்னை | உன்னிடத்தில் |
| எக்காலத்து | எப்போதும் | எக்காலத்திலும் | ஒருநாளும் |
| எந்தை ஆய் | எனக்கு ஸ்வாமியாகி | யான் வேண்டேன் | நான் விரும்பவே மாட்டேன். |

* * * எம்பெருமானோடு ஒரு க்ஷணகாலமாவது இப்போது சேரப் பெறுவனாயின் அதுபோதும்; மறுபடியும் சேரவேணுமென்கிற விருப்பங்கூட எனக்கு உண்டாகாது என்கிறார்; இதனால தம்முடைய அபிநிவேசத்தின் மிகுதிகாட்டியவாறு. இப்பாட்டுக்கு இவ்வகையாகக் கருத்துக்கொள்ளுதல் ஆளவந்தாருடைய நிர்வாஹம். "மற்றெக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்" என்று மூலமுள்ளது. யாதொன்றும் என்பதில் இந்த ஸம்ச்லேஷத்தையும் சேர்த்து, இதையும் மறுபடி பெறுகாலும் வேண்டேனென்பதாக ஆளவந்தார் நிர்வஹித்தாராம். இதை எம்பெருமானர் கேட்டருளி, பொருள் அழகியதே; ஆனாலும் இவ்வாழ்வாருடைய பிரக்ருதிக்குச் சேரப் பொருள்கூறுதல் பாங்காதலால் வேறுவகை கூறலாம்: பெறிலும் பெறுதொழியிலும் சிறுகக் கோலமாட்டார் இவர்; ஆகவே 'எக்காலத்திலும் மற்று யாதொன்றும் வேண்டேன்'—இந்த ஸம்ச்லேஷம் தவிர வேறொன்றையும் நான் வேண்டமாட்டேன்' என்று பொருள் கொள்ளுதல் பாங்கு என்றருளிச் செய்தாராம்.

ஸந்நிபாதஜ்வரத்திலே யிருந்தவர்கள் 'ஒருகால் நாக்கு நனைக்கத் துளி தண்ணீர் கிடைத்தால்போதும்' என்பர்கள்; அதுபோல ஆழ்வார் சொல்லுகிறாராக ஆளவந்தாருடைய நிர்வாஹத்தின் போக்கு.

அக்காரக் கனி = அக்காரமாவது வெல்லக்கட்டி; அதற்கு ஒரு கனியுண்டோவென்னில்; வெல்லக்கட்டியையே உபாதானமாகக் கொண்டு ஒரு வ்ருக்ஷம் முளைத்து அதில் பழம்பழுத்தால் அது எவ்வளவு இனிப்பாயிருக்குமோ அவ்வளவு போக்யதை மிக்கவன் என்றவாறு. அக்காரம் போலவும் கனி போலவும் போக்யபூதனே! என்று உம்மைத் தொகையாக வைத்தும் பொருள் கூறுவர். ... ... ... ... ... (அ)

யானேயென்னை அறியகிலாதே *
யானேயென்தனதே என்றிருந்தேன் *
யானேநீ என்னுடைமையும்நீயே *
வானேயேத்தும் எம்வானவரேறே. (கூ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | | |
|---|---|---|---|---|
| வானே ஏத்தும் | விண்ணுலகம் முழுவதும் துதிக்குமாறு உள்ள | | (இப்போது அவைதவிர்ந்து நான் அநுஸந்திக்கும் வகை யாதெனில்;) | |
| எம் வானவர் ஏறே | நித்யஸூரிகாதனை எம்பெருமானே! | | | |
| யானே | நான்தானே | யானே நீ | யான் நீயே யென்ன லாம்படி வேற்றுமை யற்றிருப்பேன்; | |
| என்னை | என்னை | | | |
| அறிய கிலாதே | அறியமாட்டாமல் | | | |
| யானே என் தனதே என்று இருந்தேன் | அஹங்காரமமகாரங்கள் கொண்டிருந்தேன்; | என் உடைமையும் நீயே | எனது உடைமைகளும் நீயிட்ட வழக்காயிருக்கும். (என்பதே) | |

* * * தேவரீருக்கும் எனக்கும் ஸம்பந்தம் அநாதிஸித்தமாகவேயிருந்தும் அந்தோ! நெடுநாளாக அதனை மறந்து அஹங்காரமமகாரங்களால் பாழாய்ப் போனேனே! என்று இழந்தநாளைக்கு அநுதபிக்கிறார். பாசுரம் தொடங்கும் போதே யானே என்கிறார்; என்னாலே நான் கெட்டேன் என்கிறார். எம்பெருமான் என்னை வாரிப்பிடியாகப் பிடித்துக்கொள்ள எதிர் சூழல்புக்குத் திரியாநிற்க, நானே கிடீர் விநாசத்தைச் சூழ்த்துக்கொண்டேனென்கிறார். [என்னையறிய கிலாதே] ராஜகுமாரன் வேடன் கையிலே அகப்பட்டுத் தன் உண்மைத்தன்மையை மறந்து வேடர் புதல்வனென்றே தன்னை நினைத்திருக்குமாபோலே நானும் ஸம்ஸாரஸாகர மத்யத்திலகப்பட்டு "திருமாலே நானு முனக்குப் பழவடியேன்" என்கிற நிஜஸ்வரூபத்தை மறந்தே னென்கிறார்.

"நீர்நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து இறை சேர்மின்" என்று இப்போது சிலநாளாக ஸம்ஸாரிகளுக்கு உபதேசமும் செய்வேனும்படி திருந்தியிருக்கின்ற நான் அநாதிகாலம் அஹங்காரமமகாரங்களினால் மாய்ந்து போனேனே யென்கிறார் யானே யென்றனதே யென்றிருந்தேன் என்பதனால்.

'ஒழிந்தகாலம் ஒழியட்டும்; இப்போது எப்படியிருக்கிறீர்? சொல்லும்' என்று எம்பெருமான் கேட்க; யானே நீ யென்னுடைமையும் நீயே யென்கிறார். இதனால் அத்வைதம் சொல்லுகிறதன்று: நான் உனக்கு அடிமைப்பட்டவன்; எனக்கென்று தனியே ஒருபொருள் கிடையாது என்றபடி. .... (கூ.)

ஏறேலேழும்வென்று ஏர்கொளிலங்கையை *
நீறேசெய்த நெடுஞ்சுடர்ச்சோதி *
தேறேலென்னை உன்பொன்னடிச்சேர்த்தொல்லை *
வேறேபோக எஞ்ஞான்றும்விடலே. (க0)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| ஏறு ஏழும் | ஏழு காளைகளையும் |
| வென்று | வலி யடக்கினவனும், |
| ஏர் கொள் இலங்கையை | அழகு நிரம்பிய லங்காபுரியை |
| நீறு செய்த | நீறுக்கினவனுமுள்ள |
| நெடு சுடர் சோதி | மஹா தேஜஸ்வியான பெருமானே! |
| என்னை தேறேல் | என்னை நம்பவேண்டா; |
| உன் பொன் அடி | உன்னுடைய திருவடிகளிலே |
| ஒல்லை | விரைவாக |
| சேர்த்து | (என்னைச்) சேர்த்துக் கொண்டு |
| வேறே போக | விஷயாந்தரங்களில் போகும்படி |
| எஞ்ஞான்றும் | ஒருநாளும் |
| விடல் | விடாதே. |

* * * கீழ்ப்பாட்டில் ஆழ்வார் தாம் கீழ்நாட்களில் இருந்த இருப்பைக்கூறி இழவுக்கு மிகவும் அநுதபித்து, இப்போது நல்லபடியாக இருக்கிற இருப்பையும் பேசினார்; அது கேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! இழந்தநாளைக்கு அநுதபிக்கின்ற உமக்குஇனி இழவுநேர ப்ரஸக்தியில்லையே; ஆகவே வாழ்ந்துவிட்டீரன்றே? இனி நான் செய்யவேண்டுவது ஒன்றுமில்லையே' என்றருளிச்செய்ய, பிரானே! அப்படி ஸாதிக்கலாமோ? என்னை வைத்திருக்குமிடம் எது வென்று ஆராய வேண்டாவோ? இந்நிலத்திலே இருக்கின்ற என்னுடைய சித்தஸ்திதியை நம்பலாகுமோ? என்னைத் திருவடிவாரத்தில் சேர்த்துக்கொண்டாலொழிய நான் நிர்ப்பரனாயிருக்க முடியாது - என்கிற கருத்தை இப்பாசுரத்தில் வெளியிடுகிறார்.

உன்னோடு அணைய ஆசைப்பட்டவர்களின் பிரதிபந்தகங்களைப் போக்குதல் உனக்கு அருமையன்று என்று காட்டவேண்டி இரண்டு சரிதைகளை யெடுத்துப் பேசுகிறார். ஏழேறு வென்ற வரலாறு:— க்ருஷ்ணாவதாரத்தில் எம்பெருமான் தன்மீது மிக்க காதல் கொண்டிருந்த நப்பின்னை யென்பவளை விவாஹம் செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி, ஒருவர்க்கு மடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழெருதுகளையும் ஏழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கித் தழுவினன் என்பதாம். (ஏழுதிருவுருக்கொள்ளவில்லை யென்பதும் சில புராணங்களின் கொள்கை.) ஏறு ஏல் ஏழும் என்ற விடத்து ஏல் அசை. ஏறு என்பதற்கு ஏல் என்பதை அடைமொழியாக்கி ஏன்று கொண்ட ஏறு என்றலுமொன்று. இது வாதிகேஸரியின் நிர்வாஹம். ஏன்று கொண்ட என்றது எதிரிட்டுவந்த என்றபடி.

தேறேல் என்னை = இப்போது நான் "யானேநீ யென்னுடைமையும் நீயே" என்றிருப்பதுபோலவே முற்றிலும் இருப்பேனென்று நம்பாதே என்ற குறிப்பு.

தேறேன் என்றும் ஒருபாடமுண்டென்பர்; அப்போது, தெளிவில்லாமலிருக்கின்ற வென்னை என்றும், (உன்னை விட்டுப்பிரிந்து) தரித்திருக்கமாட்டாத வென்னை என்றும் பொருளென்ப.

எஞ்ஞான்றும் வேறே போகவிடல்—உன் திருவடிகளின் நிழல்போலவும் ரேகைபோலவும் ஆக்கிவைக்கவேணுமென்றவாறு. விடல்-எதிர்மறை வினைமுற்று.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



விடலில்சக்கரத்து அண்ணலைமேவல் *
விடலில்வண்குருகூர்ச் சடகோபன்சொல் *
கெடலிலாயிரத்துள் இவைபத்தும் *
கெடலில்வீடுசெய்யும் கிளர்வார்க்கே. (க௧)

| | |
|---|---|
| விடல் இல் | விடுதலில்லாத |
| சக்கரத்து | திருவாழியையுடைய |
| அண்ணலை | எம்பெருமானை |
| மேவல் விடல் இல் | பொருந்துவது ஒருபோதும் விடாமலிருக்கப் பெற்ற |
| வண் குருகூர் சடகோபன்—; | |
| சொல் | அருளிச் செய்த |
| கெடல் இல் | அழிவற்ற [நித்யமான] |
| ஆயிரத்துள் | ஆயிரம் பாடலுள்ளும் |
| இவை பத்தும் | இப்பதிகம் |
| கிளர்வார்க்கு | தன்னை ஓதுமவர்களுக்கு |
| கெடல் இல் வீடு செய்யும் | கெடுதல் ஒன்றுமில்லாத மோக்ஷானந்தத்தைப் பண்ணிக் கொடுக்கும். |

* * * இத்திருவாய்மொழியை ஓதவே இதுதானே புருஷார்த்தத்தைப் பெறுவிக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். கீழ்ப்பாட்டில் "என்னை என்ஞான்றும் விடல்" என்று வேண்டின ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! நாம் விட்டுவிடுவோமோ என்கிற அதிசங்கை உமக்கு ஏன் உண்டாயிற்று? நாம் உப்போல்வாரைக் கைவிடுவதற்கா கையில் சக்கரப்படை தரித்திருப்பது? 'எப்போதும் கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்' என்று அடியிலே நீர்தாமும் சொல்லியிருக்கிறீரே!' என்று கையில் திருவாழியாழ்வானைக் காட்டினான்; கண்டு "விடலில் சக்கரத்தண்ணலை மேவல்விடலில் வண்குருகூர்ச் சடகோபன்" என்கிறார்.

இவைபத்தும் என்பது எழுவாய். இத்திருவாய்மொழிதானே மோக்ஷமளிக்கும் என்கிறார். இப்பதிகமே மோக்ஷோபாயமென்றால் இது பொருந்துமோ? உபாயத்வமென்பது எம்பெருமானொருவனுக்கே உரியதென்று நாற்கொள்கையல்லவா? என்று சிலர் சங்கிப்பர்கள். இப்பதிகமே மோக்ஷமளிக்குமென்றால் இது ஸாக்ஷாத்தாக உபாயம் என்று சொன்னபடியன்று. இப்பதிகத்தை அநுஸந்திக்கவே எம்பெருமான் திருவுள்ளத்தில் மிக்க உவப்பு உண்டாகி அதனால் அவன் மோக்ஷமளிக்கலாகும் என்று தெரிவித்தபடி. புருஷகாரக்ருத்யம் பண்ணி எம்பெருமானை உகப்பித்து அவன் வழியாகப்பேறுபெறுவிக்கின்ற பிராட்டி விஷயமாக "வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே" என்றருளிச்செய்திருப்பதும் இவ்வழியாலே பொருந்தும். இனி இதன் விரிவை நம்முடைய ஸதாசார்ய ஸூக்திரக்ஷா என்கிற நூலிற் காண்க. (க௧)

ஒன்பதாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

## த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளீ.

𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑍇𑌯𑌸𑍍𑌵𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍋𑌗𑌂 𑌶𑍁𑌭𑌮𑌤𑌿𑌕𑌰𑌣𑌂 𑌸𑍍𑌤𑍋𑌤𑍍𑌰𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌹𑍇𑌤𑍁𑌂
𑌸𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑍀𑌕𑌾𑌰𑍋𑌪𑌕𑌾𑌰𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑌸𑌶𑌮𑌿𑌤𑌾𑌨𑍍𑌯𑌾𑌦𑌰𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌵𑌶𑍍𑌯𑌂 ।
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍌 𑌕𑌾𑌲𑌾𑌕𑍍𑌷𑌮𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌦𑌮𑌮𑍃𑌤𑌰𑌸𑌧𑍍𑌯𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌰𑍍𑌪𑌣𑌾𑌰𑍍𑌹𑌂
𑌦𑍇𑌵𑍍𑌯𑌾 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌂 𑌤𑌦𑌵𑌨𑌿𑌚𑌰𑌣𑌂 𑌵𑌕𑍍𑌤𑌿 𑌵𑌾𑌣𑍀 𑌶𑌠𑌾𑌰𑍇𑌃 ॥

1. ச்ரத்தேயஸ்வாங்க்ரி யோகம்.— * நின் செம்மாபாதபற்புத் தலைசேர்த் தொல்லை. * தன் திருவடிகளின் சேர்த்தியை ப்ரார்த்திக்கவேண்டியிருப்பவன்.

2. சுபமதிகரதம்.— * ஞானக் கை தா. * தன் திருவடிகளை யடைவதற்கீடான ஞானமாகிற கையைக் கொடுக்குமவன்.

3. ஸ்தோத்ர ஸாமர்த்ய ஹேதும்.— * நின்கழல் எய்யாது ஏத்த வருள் செய்யெனக்கே. * தன்னையே எக்காலத்திலும் துதிக்குமாறு ஸாமர்த்தியத்தை யளிப்பவன்.

4. ஸ்வார்த்தீகாரோபகாரம்— * தனக்கேயாக எனைக்கொள்ளு மீதே. * தனக்காக்கிக் கொள்ளுதலாகிற உபகாரத்தைச் செய்தருள்பவன்.

5. ஸ்ம்ருதிரஸசமிதாந்யாதரம்.— * மறப்பொன்றின்றி யென்றும் மகிழ்வேன். * தன் திறத்தில் ஸ்மரணத்தினால் இதர விஷயங்களில் விருப்பத்தைப் போக்கியருள்பவன்.

6. ப்ரீதிவச்யம்.— * என்றும் மகிழ்வுற்று உன்னை வணங்கவாராய். * தன் திறத்தில் அன்புடையார்க்கு வசப்பட்டிருப்பவன்.

7. ப்ராப்தௌ காலாக்ஷமத்வப்ரதம்— * வாராய் உன் திருப்பாதமலர்க்கீழ் பேராதேயான் வந்தடையும்படி * தன்னையடைவதில் விளம்பம் பொறுத்திருக்க வொண்ணாதபடி செய்பவனென்று கருத்து.

8. அம்ருதரஸத்யாநம்— * வேதவிமலர்விழுங்கும் என்னக்காரக்கனி. * அம்ருதரஸமயமான த்யானத்திற்கு இலக்காகுமவன் என்றவாறு.

9. ஆத்ம அர்ப்பணார்ஹம்— * யானே நீ என்னுடைமையும் நீயே. * ஆத்மாத்மீய பரங்களை ஸமர்ப்பிப்பதற்கு உரியன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



10. வைமுக்யாத் வாரயந்தம்.— * "என்னையுன் பொன்னடிச் சேர்த்தொல்லை, வேறேபோக எஞ்ஞான்றும் விடலே." ஆச்ரிதர்கள் ஒருகாலும் விமுகராய்ப் போகாதபடி அவர்களை ஆதரிக்குமவன்.

11. சக்ரபாணிம் —. * விடலில் சக்கரத்தண்ணல். * கையுந் திருவாழியுமாக இருக்குமவன். ஆக இப்படிப்பட்ட எப்பெருமானை ஆழ்வார் ஒன்பதாந் திருவாய்மொழியில் [வ்ருதபரிசரணம் ஜகாத] கைங்கரியத்திற்கு உத்தேச்யனாக அருளிச்செய்தார். ... ... ... (*)

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

மோக்ஷாத³ரம் ஸ்வஸ்ய ஸமீக்ஷ்ய ஸம்யக்
மோக்ஷம் ப்ரதா³தும் ஸத்³ருʼக்ஷம் ப்ரவ்ருʼத்தே ।
தத்பத³ஸ்ய வஶகிங்கரதைகதாநம்
மோக்ஷவ்யவஸ்தா²ம் நவமே நிரணாயி தேந ॥

(கருத்து) ஆழ்வார்க்கு மோக்ஷத்தில் விருப்பமிருக்கிறபடியைக் கண்டறிந்த எம்பெருமான் இவருடைய விருப்பத்தை நிறைவேற்றுவோமென்றெண்ணிப் பரமபுருஷார்த்தமான அந்த மோக்ஷத்தைத் தந்தருள முயன்றிருக்குமளவில், ஆழ்வார் அப்பெருமானது திருவடித்தாமரைகளை விட்டுப் பிரியாதிருப்பதுவே தமக்கு அபிமதமான மோக்ஷமென்பதை ஒன்பதாந் திருவாய்மொழியில் அறுதியிட்டாரென்கிறது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



# திருவாய்மொழி நூற்றந்தாதி.

எம்மாவீடும் வேண்டா என்றனக்குன் தாளிணையே
அம்மா அமையுமென வாய்ந்துரைத்த—நம்முடைய
வாழ்முதலாம் மாறன் மலர்த்தா ளிணைசூடிக்
கீழ்மையற்று நெஞ்சே கிளர்.

| | |
|---|---|
| அம்மா | 'எம்பெருமானே!, |
| எம் மா வீடும் வேண்டா | எப்படிப்பட்ட சிறந்த மோக்ஷமும் வேண்டா; |
| என் தனக்கு | அடியேனுக்கு |
| உன் தாள் இணையே | உன்னுடைய உபய பாதங்களே |
| அமையும் | போதும்' |
| என | என்று |
| ஆய்ந்து உரைத்த | ஆராய்ந்து அருளிச் செய்தவரும் |

| | |
|---|---|
| நம்முடைய வாழ்முதல் ஆம் | நம்முடைய வாழ்ச்சிக்குக் காரணபூதருமான ஆழ்வாருடைய |
| மலர் தாள் இணை | உபய பாதாரவிந்தங்களை |
| சூடி | சிரஸா வஹித்து |
| கீழ்மை அற்று | அதம புருஷார்த்தங்களில் விருப்பமற்று |
| நெஞ்சே | மனமே! |
| கிளர் | மேன்மேலும் மகிழ்வாயாக. |

* * * எம்பெருமானே! உன்னுடைய திருவடித் தாமரைகள் எப்போதும் என்னுடைய சென்னியை விட்டுப் போராதபடி யிருக்கப்பெறுமாகில் அதுவே யெனக்குப் பரம புருஷார்த்தம். வேறு எப்படிப்பட்ட மோக்ஷமும் எனக்கு வேண்டா என்று நிஷ்கர்ஷித்து அருளிச் செய்தவரும், நம்முடைய உஜ்ஜீவனத்திற்காகவே திருவவதரித்தவருமான ஆழ்வாருடைய திருவடிகளே நமக்குத் தஞ்சம்; அந்தத் திருவடிகளின்கீழ் நாம் வாழப்பெறுவோமாகில் நமக்கு யாதொரு குறையுமிராது என்றதாயிற்று. ... ... .... (கக)

ஜீயர் திருவடிகளே சரணம்.




CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாம்பத்து — பத்தாந் திருவாய்மொழி

## கிளரொளியிளமை.

அவதாரிகை :—கீழ்த்திருவாய்மொழியில் நிஷ்கர்ஷிக்கப்பட்ட பேற்றைப் பெறுதற்குத் திருமாலிருஞ் சோலைமலையை ஆச்ரயிக்கிறார் என்று எம்பெருமானார்க்கு முன்புள்ள முதலிகள் அருளிச் செய்யும்படி : எம்பெருமானார் அதை இன்னமும் இனிமைப்படுத்தி யருளிச்செய்வர். அதாவது — கீழ்த்திருவாய்மொழியில் 'ஒல்லை, ஒல்லை' என்றும் 'காலக்கழிவு செய்யேல்' என்றும் பகவத் கைங்கர்யத்திலே தமக்குண்டான பதற்றத்தை ஆழ்வார் வெளியிட, அதுகண்ட எம்பெருமான் 'ஆழ்வார் இப்படிப் பதறுவது இந்த ஶரீரத்தோடேயே கைங்கர்யம் செய்யவேணுமென்கிற விருப்பத்தாலேபோலும்' என்றெண்ணி, இவர்க்கு நாம் நினைத்தபடி பரிமாறுகைக்கு ஏகாந்தமான ஸ்தலம் ஏதோவென்று இந்நிலவுலகத்தில் கடாக்ஷித்துவருகையில் * வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலையைக் கண்டு இது சாலவும் பாங்கான இடமாயிராநின்றது என்று திருவுள்ளம் பற்றி அங்கே ஸந்நிதி பண்ணியருளி, 'ஆழ்வீர் ! நாம் உமக்கு முகந்தருகைக்காக வந்துநின்றோம் ; நீர் இங்கேவந்து நினைத்தபடியெல்லாம் பரிமாறி யநுபவிக்கலாம்' என்று தெற்குத்திருமலையிலே தானிருக்கிறபடியைக் காட்டிக் கொடுக்க, ஆழ்வாரும் அதை அநுஸந்தித்து 'எம்பெருமான் நமக்கு உபேயனானல் அவன் எழுந்தருளியிருக்குமிடமும் நமக்கு உபேயந்தானே ; ஆகவே, திருமலையோடு அதனோடு சேர்ந்ததொரு மலையோடு திருப்பதியோடு போம்வழியோடு, போவோமென்கிற அத்யவஸாயத்தோடு வாசியற எல்லாம் நமக்கு ப்ராப்யமே' என்று கொண்டு அநுபவித்து இனியராகிறார்—என்பதாக.

கிளரொளியிளமை கெடுவதன்முன்னம் *
வளரொளிமாயோன் மருவியகோயில் *
வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை *
தளர்விலராகிச் சார்வதுசதிரே. (க)

| | | | |
|---|---|---|---|
| கிளர் ஒளி | மேன்மேலுங் கொழுந்துவிட்டுக் கிளர்கின்ற ஞானவொளியையுடைய | கெடுவதன் முன்னம் | அழிவதற்குள்ளே, |
| இளமை | இளம்பிராயம் | வளர் ஒளி | குன்றாத தேஜஸ்ஸை யுடையனான |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| மாயோன் | எம்பெருமான் |
| மருவிய | நித்யஸந்நிதானம் பண்ணியிருக்கிற |
| கோயில் | ஆலயமாய், |
| வளர் இள பொழில் சூழ் | வளர்கின்ற இளஞ்சோலைகளால் சூழப்பட்டதான |
| மாலிருஞ் சோலை | திருமாலிருஞ் சோலை மலையை |
| தளர்வு இலர் ஆகி | தளர்ச்சியில்லாதவராகி |
| சார்வதே | அடைவதுதான் |
| சதிர் | ஸ்வரூபாநுரூபம். |

* * * திருமாலிருஞ் சோலைமலையைச் சென்று சேர்வதே இவ்வாத்மாவுக்குப் பரம புருஷார்த்த மென்கிறார். "தஸ்மாத் வால்யே விவேகாத்மா யதேத ஶ்ரேயஸே ஸதா— தஸ்மாத் பால்யே விவேகாத்மா யதேத ச்ரேயஸே ஸதா." என்று—நன்மைகளைப் பெறுதற்கு இளம் பிராயத்திலேயே முயலவேண்டுமென்று சாஸ்த்ரங்கள் சொல்லுகையாலே இளமை கெடுவதற்கு முன்னமே நன்மையை ஸம்பாதித்துக்கொள்ளப் பாருங்களென்கிறார். "வாள்களாகி நாள்கள் செல்ல நோய்மைகுன்றி மூப்பெய்திமாளும் நாள்" என்று திருமழிசைப்பிரான் அருளிச் செய்கிறபடி அந்தகாலம் வந்துவிட்டால் திருமலையை நினைக்கவும் நேராதாதலால், கிளரொளி யிளமை கெடுவதன்முன்னம் திருமாலிருஞ் சோலையைச் சார்வது சதிர் என்கிறார்.

புத்தி கொழுந்துவிட்டுச் செல்லுவது இளம் பிராயத்திலேயாதலால் கிளரொளி யிளமை எனப்பட்டது. விஷயாந்தர ப்ராவண்யம் விளைவதற்கு முன்னே என்றவாறு.

வளரொளி மாயோன் = எம்பெருமானுடைய ஒளி மழுங்குதலும் வளர்தலுமின்றியே எப்போதும் ஒரு படிப்பட்டே யிருக்குமன்றோ; இங்கு வளரொளி என்றது ஏன்? வளர்தல் உண்டானால் குறைதலும் ஒரு காலத்தில் உண்டாகித் தீருமே என்று சிலர் சங்கிப்பர். அது வேண்டா; எம்பெருமான் * ஸதா ஏகரூப ரூபன் என்பதில் தட்டில்லை. அப்படிப்பட்ட எம்பெருமான் திருமலையிலே நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கு மிருப்பிலே அந்த திவ்ய தேசத்தின் வாய்ப்பினால் ஒளி மேன்மேலும் வளரப் பெறுகின்றானென்று சொல்லுகிறவிது திருமலைக்கு அதிசயோக்தி யென்பர்.

வளரிளம்பொழில் சூழ்மாலிருஞ்சோலை யென்பதைக் கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் அப்படியே மொழிபெயர்த்தருளியிருக்கின்றார்—"வயிவஷு வாநுஷஷணஜணிதம் வநாவநூ—வர்த்திஷ்ணுபாலத்ருமஷண்டமண்டிதம் வநாசலம்." என்று. திருமாலிருஞ்சோலை—நூற்றெட்டுத் திருப்பதிகளுள் பாண்டிநாட்டுத் திருப்பதி பதினெட்டில் ஒன்றும், வநகிரி என்று வட மொழியிற் கூறப்படுவதும், "கோயில் திருமலை பெருமாள் கோயில் அழகர் திருமலை" என்று சிறப்பாக எடுத்துக் கூறப்படுகிற நான்கு திருப்பதிகளுள் ஒன்றும், "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ் சோலை யென்னும் பொருப்பிடம் மாயனுக் கென்பர் நல்லோர்" என்றபடி ஆன்றோர் கொண்டாடப் பெற்ற மஹிமையுடை

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

யதுமானதொரு திவ்ய தேசம், “ஆயிரம் பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே” என்றபடி மிகப் பெரிய பல சோலைகளையுடைய மலையாதலால் ‘மாலிருஞ்சோலைமலை’ என்று திருநாமமாயிற்று. மால்—பெருமை; இருமை—பெருமை. இவ்விரண்டும் தொடர்ந்து ஒரு பொருட் பன்மொழியாய் நின்றன. மால் என்று உயர்ச்சியாய், இருமை என்று பரப்பைச் சொல்லிற்றாய், உயர்ந்துபரந்த சோலைகளையுடைய மலை யென்றலு முண்டு. ... ... ... (க)

சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியாது *
அதிர்குரல்சங்கத்து அழகர்தம்கோயில் *
மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை *
பதியதுவேத்தி எழுவதுபயனே. (உ)

| | |
|---|---|
| சதிர் | அழகு பொருந்திய |
| இள மடவார் | இளம் பருவத்துப் பெண்களிடத்து |
| தாழ்ச்சியை | ஆழங்காற்படுவதை |
| மதியாது | ஒரு பொருளாக நினையாமல், |
| அதிர் குரல் சங்கத்து | முழங்குகின்ற ஓசையையுடைய சங்கு ஒலிக்கப் பெற்ற |
| அழகர் தம் கோயில் | அழகருடைய ஆலயமாய், |
| மதி தவழ் குடுமி | சந்திரன் உலாவப்பெற்ற சிகரத்தை யுடைத்தான |
| மாலிருஞ்சோலை;—(என்கிற) | |
| பதி அது | அந்தத் திருப்பதியை |
| ஏத்தி | துதித்து |
| எழுவதே | உய்வதே |
| பயன் | புருஷார்த்தம். |

* * * நமக்கு ப்ராப்யபூதன் எம்பெருமான் எனினும், அவனோடு ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ ஸம்பந்தமுடைய பொருள்களையும் ப்ராப்யங்களாகவே கொள்வதுண்டு. மோக்ஷத்திற்கு எம்பெருமானொருவனே உபாயம் என்று ஸித்தாந்தமாயிருக்கச் செய்தேயும், ஸ்ரீவைஷ்ணவர்கள் ஆசாரியர்கள் பிராட்டி முதலானோரிடத்திலும், தேசவாஸம் திருநாம ஸங்கீர்த்தநம் முதலான செயல்களிடத்திலும் உபாயத்வ வ்யவஹாரம் பண்ணுகிறப்போலே, திருமலை முதலானவற்றிலும் உபேயத்வ வ்யவஹாரம் பண்ணக் குறையில்லை; ஆதலால் எம்பெருமானைவிட்டு அவனுடைய திருப்பதியாகிய திருமலையே உபேயம் என்று இத்திருவாய்மொழியில் ஆழ்வார் அருளிச் செய்வது கூடுமென்க.

சதிரிள மடவார் தாழ்ச்சியை என்றதற்கு இருவகையாகப் பொருள், மடவார்கள் உங்களிடத்தில் செய்கிற தாழ்ச்சியை என்றும், மடவார் திறத்தில் நீங்கள் செய்கிற தாழ்ச்சியை என்றும் கொள்க. தாழ்ச்சியாவது தாழ்வான செயல்கள். அதிர்குரல் சங்கத்து என்பது அழகர்க்கு விசேஷணமாகவே ஸகல வியாக்கியானங்களிலுமுள்ளது. ஆனால், ஸுந்தரபாஹுஸ்தவத்தில் ஆழ்வான் “ஹிஜுரிதவஸத்வநொகஸுவிஸ்ரும்ஸவருஸம்ஸவரவம் — வநமரிழு” என்று அருளிச் செய்திருப்பதை நோக்குங்கால், ‘அதிர்குரல் சங்கத்து’ என்பது அழகர் கோயிலுக்கு விசேஷணமாகக் கொள்ளப்பட்டதாகத் தோன்றுகிறது.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.
CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சங்கின் ஒலி அதிர்கின்ற திருமலை என்றபடி. மேற்குறித்த ஆழ்வான் ஸ்ரீஸூக்தியை வநகிரிக்கு விசேஷணமாக்காமல் அதற்குப்பிறகு உள்ள ஹரிம் என்பதற்கே விசேஷணமாக்கிவிடலா மென்பாருமுளர்.

மதிதவழ்குடுமி என்றதையும் ஆழ்வான் அந்த ச்லோகத்திலேயே "ஶஶ ய்ஶரிம்வணாஶூஶிவழ—சசதரரிங்கணச்சிகம்" என்று மொழி பெயர்த்திருக்கின்றமை காண்க.

மாலிருஞ் சோலைப்பதி = மாலிருஞ் சோலையாகிற பதி என்றும், மாலிருஞ் சோலையிலுள்ள பகவங்மந்திரம் என்றும் கொள்ளலாம். ... ... (உ)

பயனல்லசெய்து பயனில்லைநெஞ்சே *
புயல்மழைவண்ணர் புரிந்துறைகோயில் *
மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை *
அயல்மலையடைவது அதுகருமமே. (ரு)

| பதம் | பொருள் |
|---|---|
| நெஞ்சே | மனமே!, |
| புயல் மழை வண்ணர் | வர்ஷாகாலத்து மேகம் போன்ற திருநிறத்தை யுடைய பெருமான் |
| புரிந்து | விரும்பி |
| உறை | நித்யவாஸம் செய்கிற |
| கோயில் | ஸந்நிதியாய், |
| மயல் மிகு பொழில் சூழ் | (கண்டவர்களை) மயக்குகிற சக்திமிகுந்த சோலைகளால் சூழப்பட்ட |
| மாலிருஞ் சோலை | திருமாலிருஞ் சோலையினுடைய |
| அயல் | அருகிலுள்ள |
| மலை | மலையை |
| அடைவது அது | அடைவதும் |
| கருமமே | உத்தேச்யந்தான்; |
| பயன் அல்ல செய்து | நிஷ்பலமான காரியங்களைச் செய்வதனால் |
| பயன் இல்லை | லாபமில்லை. |

* * * திருமலையைத் தொழவேணுமென்பதுகூட அவசியமன்று; திருமலையோடு ஸம்பந்தமுள்ள [அதன் அருகிலுள்ளதான] ஒரு மலையைத் தொழுதாலும் போதும் என்கிறது இப்பாட்டு.

பரமபதத்திலிருக்கிற இருப்பையும் மற்றுமுள்ள அவதாரங்களையும் சிந்திப்பதனால் பயனொன்று மில்லையென்பது முதலடியின் உட்கருத்து. பயனல்ல என்பது இரண்டாம் வேற்றுமைத் தொகை. நிஷ்ப்பலமானவற்றை என்றபடி. சுவர்க்கம் முதலிய பன்களை விரும்பி அவற்றிற்கு ஸாதகமாகச் சில யஜ்ஞபாகங்களைச் செய்துகொண்டு போதுபோக்குவது நிஷ்ப்பலமாதலால் அது வேண்டா என்கிறது முதலடியால்-என்னவுமாம்.

புயல்மழைவண்ணர் = கார்காலத்துக் காளமேகம்போலே தன் வடிவழகை ஸர்வஸ்வதானஞ் செய்து கொண்டு எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற ஸந்நிதியையும், அதற்கு ஆச்ரயமாயிருக்கிற திருமலையையும்விட்டு, அம்மலையோடு ஸம்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



புந்தத்தையே நிருபகமாகக் கொண்டிருக்கிற பக்கத்து மலையை அடையப் பெற்றாலும் போதுமே நமக்கு என்றாராயிற்று.

மயல்மிகுபொழில்சூழ் என்றதை ஆழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் " [illegible]—திமிரநிபப்ரஸூத தருஷண்டமயம் ப்ரமதம்" என மொழிபெயர்த்தருளினர். ... ... (௩)

கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே *
பெருமலையெடுத்தான் பீடுறைகோயில் *
வருமழைதவழும் மாலிருஞ்சோலை *
திருமலையதுவே அடைவதுதிறமே. (௪)

| | |
|---|---|
| கருமம் | கருமங்களாகிற |
| வன் பாசம் | வலிய பாசங்களை |
| கழித்து | கழற்றி |
| உழன்று | அடிமை செய்து திரிந்து |
| உய்யவே | உஜ்ஜீவிக்கும்பொருட்டே |
| பெரு மலை எடுத்தான் பீடு உறை | கோவர்த்தநோத்தரணம் செய்தருளினவனான எம்பெருமான் தனது பெருமை யெல்லாம் விளங்க நித்யவாஸம் பண்ணுமிடமான |

| | |
|---|---|
| கோயில் | ஸந்நிதியாய், |
| வரு மழை தவழும் | மழை பெய்யவருகிற மேகங்கள் தவழ்கின்ற |
| மாலிருஞ் சோலை திருமலை அதுவே—; | |
| அடைவது | சேர்வது |
| திறம் | உசிதம். |

* * * ஒருவர்க்கும் எளிதில் கழித்துக்கொள்ள முடியாத கரும பந்தங்களைக் கழிப்பதற்கும், அவை கழிந்து அடிமை செய்து வாழுகைக்குமாகவே எம்பெருமான் ஸந்நிதி பண்ணியிருக்கிற திருமலையை யடைவதே தகுதியென்கிறார். முதலடியில் உய்ய என்கிற வினையெச்சம் (இரண்டாமடியில்) உறை என்ற வினையைக் கொண்டு முடியும்.

பெருமலை யெடுத்த வரலாறு :—திருவாய்ப்பாடியில் ஆயர்கள் வழக்கப்படி இந்திர பூஜைக்கென்று சமைத்த சோறு முதலியவற்றை யடங்கலும் கண்ணபிரான் அவ்விந்திரனுக்கு இடவொட்டாமல் கோவர்த்தனமலைக்கு இடுவித்துப் பின்பு தானே ஒரு தேவதாரூபங் கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்துவிட, பிறகு இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங்களை ஏவி எழுநாள் விடாமழை பெய்விக்க, கண்ணபிரான் அக் கோவர்த்தன கிரியைக் குடையாகத் தூக்கிக் கோக்களையும் கோவலரையும் காத்தருளினனென்பதாம்.

பீடுறை=பீடு தோற்ற உறையுமிடம்; பீடுடனே உறையுமிடம் என விரிக்க: பீடு—பெருமேன்மை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வருமழைதவழும் = இங்கு 'மழைதவழும்' என்பதே போதுமாயிருக்க, வரு என்று அடைமொழி கொடுத்த ஸ்வாரஸ்யத்தை நம்பிள்ளை காட்டியருளு கிறார் காண்மின்—"ஊருக்கு இரண்டாயிற்று மழை; நின்றவிடத்திலே நின்று வர்ஷிப்பதொரு மேகமும், போவது வருவதாயிருப்பதொரு மேகமும்" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. ... ... ... ... (ச)

திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது *
அறமுயலாழிப் படையவன்கோயில் *
மறுவில்வண்சுனைசூழ் மாலிருஞ்சோலை *
புறமலைசாரப் போவதுகிறியே. (ரு)

| | |
|---|---|
| திறம் உடை | பலவகைப்பட்ட |
| வலத்தால் | வலிமையைக் கொண்டு |
| தீ வினை | பாவங்களை |
| பெருக்காது | மிகையாகச் செய்யாமல், |
| அறம் முயல் ஆழி படைய வன் கோயில் | ஆச்ரித ரக்ஷண தருமத்திலே முயல்கின்ற திருவாழியை ஆயுதமாக வுடைய பெருமானது கோயிலாய், |
| மறு இல் | அழுக்கற்ற |
| வண் சுனை சூழ் | வளமான சுனைகளால் சூழப்பட்ட |
| மாலிருஞ் சோலை | திருமாலிருஞ் சோலையினுடைய |
| புறம் மலை | பக்கத்திலுள்ள தொரு மலையை |
| சார | கிட்டுமாறு |
| போவது | போவதானது |
| கிறி | நல்ல உபாயம். |

* * * கீழ் மூன்றும் பாட்டில் "மாலிருஞ்சோலை யயன்மலை யடைவது அது கருமமே" என்று திருமலையோடு ஸம்பந்தமுடைய பிறிதொரு மலையை யடைந்தாலும் போதுமென்றார்; அடைய வேணுமென்கிற அவ்வளவும் வேண்டா; அந்தப் புறமலைதன்னை யடைய வேணுமென்று எண்ணங்கொண்டு யாத்திரை புறப்படுவதுதானே போது மென்கிறாரிதில்.—நமக்குள்ள தேஹ பலத்தைக் கொண்டு மேன்மேலும் பாவங்களைக் கூடுபூரித்துக்கொள்வது தகுதியன்று; திருமலை யாத்திரையிலே அந்த தேஹபலத்தை உபயோகப்படுத்துவது நன்று என்பது இப்பாட்டின் முழுநோக்கு.

அறமுயலாழிப்படையவன் = அறம் முயல் என்றும், அற முயல் என்றும் பிரிக்கலாம். அறமாவது தருமம். எம்பெருமானுடைய தருமமாவது சரணாகத ரக்ஷணமே யென்பது ஸ்ரீராமாயணாதிகளில் ப்ரஸித்தம்: "விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞ: சரணாகதவத்ஸல:" இத்யாதிகள் காண்க. "பாது ப்ரணத ரக்ஷாயாம் விலம்ப மஸ்ஹந்நிவ-ஸதா பஞ்சாயுதீம் பிப்ரத் ஸ ந: ஸ்ரீரங்கநாயக:" என்ற பட்டர் ஸ்ரீஸூக்தி இங்கு அநுஸந்திக்க வுரியது. அற என்று பிரிக்கும்போது மிகவும் என்றபடி. ஆச்ரித ரக்ஷணத்தில் என்பது இப்போது அர்த்தாத் ஸித்தமாகவேணும்.

மறுவில்வண்சுனைசூழ் = பாசி சேறு முதலிய களங்கமில்லாத சுனைகள் என்றபடி. கிறி—சிறந்த வுபாயம். .... .... .... (ரு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சிறியேனநினைமின் கீழ்மைசெய்யாதே *
உறியமர்வெண்ணெய் உண்டவன்கோயில் *
மறியோடுபிணைசேர் மாலிருஞ்சோலை *
நெறிபடவதுவே நினைவதுநலமே. (௬)

| | |
|---|---|
| கீழ்மை செய்யாதே | இழிவான செயல்களைச் செய்யாமல் |
| சிறி என | (இப்போது நான் சொல்லுகிறதை) நல்ல வுபாயமென்று |
| நினைமின் | நினையுங்கோள் : |
| | (அது யாதெனில்) |
| உறி அமர் | உறிகளிலே அமைத்து வைத்த |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| உண்டவன் | அமுது செய்த கண்ணபிரானுடைய |
| கோயில் | ஆலயமாய் |
| மறியொடு பிணை சேர் | தம் குட்டிகளோடுகூட மான் பேடைகள் சேர்ந்து வாழப்பெற்ற |
| மாலிருஞ் சோலை | திருமலையினுடைய |
| நெறி | வழியிலே |
| பட | செல்லவேணுமென்கிற |
| அதுவே | அந்த நினைவு ஒன்றையே |
| நினைவது | நினைப்பது |
| நலம் | நல்லது. |

* * * திருமலைக்குப் போகிற மார்க்கமுண்டே, அதனைச் சிந்திப்பது தானும் போதுமென்கிறார். ஸ்ரீக்ருஷ்ணனாகத் திருவவதரித்துத் தன்னுடைய ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணாதிசயங்களைக் காட்டியருளின பெருமான்தானே பிற்பட்டவர்களும் இழவாமைக்காக இப்போது திருமலையில் நித்யஸந்நிதி பண்ணியிராநின்றானென்பது இரண்டாமடியின் கருத்து.

விஷயாந்தர ப்ராவண்யத்திலே நெஞ்சைச் செலுத்தாமல் திருமாலிருஞ்சோலை யாத்திரை வழியிலே நெஞ்சைச் செலுத்துங்கோள் என்றாராயிற்று.

திருமலைக்கு மறியோடு பிணைசேர் என்ற அடைமொழி கொடுத்தது ஸாபிப்ராயம்; அங்குக் குட்டியுந் தாயும் பிரியாதிருத்தல்போல, நாமும் * தாயுந் தந்தையுமாயிவ்வுலகினில் வாயுமீசனைப் பிரியாதிருத்தல் நன்று என்று காட்டியவாறு.

ஈற்றடியில் நெறிபட என்பதை ஒரு முழுச் சொல்லாகக் கொண்டு 'நன்றாக' என்றும் கொள்வர்: திருமாலிருஞ் சோலையை நன்றாகச் சிந்திப்பது நலம் என்றவாறு. ... ... ... ... (௬)

நலமெனநினைமின் நரகழுந்தாதே *
நிலமுனமிடந்தான் நீடுறைகோயில் *
மலமறுமதிசேர் மாலிருஞ்சோலை *
வலமுறையெய்தி மருவுதல்வலமே. (எ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| பதம் | பொருள் |
|---|---|
| நரகு அழுந்தாதே | நரகத்தில் அழுந்த நினையாமல் |
| நலம் என நினைமின் | (இவ்வுபதேசத்தை) நன்மை யென்று நெஞ்சிற் கொள்ளுங்கள் ; (அதாவது) |
| முனம் | முற்காலத்தில் |
| நிலம் | பூமியை |
| இடந்தான் | வராஹ ரூபியாகி இடந்தெடுத்துவந்த பெருமான் |
| நீடு உறை கோயில் | நித்யவாஸம் பண்ணுகிற ஸந்நிதியாய், |
| மலம் அறு மதி சேர் | களங்கமற்ற சந்திரன் சேருமிடமான |
| மாலிருஞ் சோலை | திருமலையை |
| வலம் முறை எய்தி | அநுகூலமான முறையிலே கிட்டி |
| மருவுதலே | பொருந்துவதே |
| வலம் | உறுதியானது. |

* * * இதில் "நரகழுந்தாதே" என்றது திருமாலிருஞ் சோலையை ஸேவிக்காவிடில் நரகலோகம் வந்துவிடும் எனப் பொருள்படுவதன்று. இராமபிரான் காட்டுக்குப் புறப்படும்போது தன்னையும் உடனழைத்துச் செல்லவேணுமென்று பிரார்த்திக்கின்ற இளைய பெருமாள் "யஸ்த்வயாஸஹ ஸஸ்வர்கோ நிரயோ யஸ்த்வயா விநா—யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயா விநா" என்றார். எம்பெருமானோடு கூடியிருப்பது சுவர்க்கம் ; அவனைப் பிரிந்திருப்பது நரகம் என்பது பக்தர்களின் ஸித்தாந்தமாதலால் இங்கு நரகழுந்தாதே யென்றது எம்பெருமானைப் பிரிந்திருக்கையன்றிக்கே என்றபடி.

நிலமிடந்த வரலாறு :—ஹிரண்யகசிபுவின் உடன்பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னும் கொடிய அஸுரராஜன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹா வராஹரூபமாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக்கண்டு பொருது கொன்று பாதாள லோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினுற்குத்தி அங்குநின்று எடுத்துக் கொண்டுவந்து பழையபடி விரித்தருளினனென்பதாம்.

மலமறுமதிசேர் என்றதற்கு இரண்டு வகையான நிர்வாஹ முண்டு : * மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை யாகையாலே திருமலை சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கைபாலே சந்திரன் போகும்போது சிகரங்களிலே தேய்ப்புண்டு சாணையிலிட்டாற்போலே களங்கமற்றிருக்கும்படியைச் சொல்லுகிறதென்று ஒரு நிர்வாஹம். (மதி—சந்திரன்.) இனி, வடமொழியாகக் கொண்டால் மதியென்று புத்திக்குப் பெயர் ; நிர்மலமான புத்தியை (பக்தர்கட்கு)ச் சேர்விக்கின்ற திருமலை என்பது பிள்ளானுடைய நிர்வாஹம். புத்திக்கு மலமாவது—ஸந்தேஹம், ப்ரமம், மறப்பு முதலியனவாம். திருமலையைத் தொழுவார்க்கு மயர்வற்ற மதியுண்டாகு மென்றபடி.

மலமறுமதிசேர் என்பதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் கூறலாம் : ஆழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில்—" யதீயஸிகராகதாம் ஸஸிகலாம்து

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஶாகாம்ருகா நிரீக்ஷ்ய ஹரஶேகரீபவநஶங்கயா ததஃ। ஸ்ப்ருஶந்தி நஹி தேவதாந்தரஸமாஶ்ரிதேதி வ்யக்தம்=யதீயசிகராகதாம் சசிகலாம் து சாகாம்ருகா: நிரீக்ஷ்ய ஹரசேகரீபவநம் ஆம்ருசந்தஸ் தத:, ஸ்ப்ருசந்தி ந ஹி தேவதாந்தரஸமாச்ரிதேதி ஸ்புடம்” என்கிறார். திருமலையினுச்சியில் உள்ள குரங்குகள் அங்கே சந்திரன் கையால் எட்டிப்பிடிக்கக் கூடியவனாக இருந்தும் அவன் ருத்ரசிரஸ் ஸம்பந்தமாகிற தோஷம் படைத்தவனென்பது பற்றி அவனைத் தொடுவது மில்லையென்று ஒரு அதிசயோக்தி கூறினாராகிறார். அப்படிப் பட்ட தோஷத்தைச் சந்திரன் போக்கிக் கொள்வதற்காக வந்து சேருமிடமான திருமலை—என்னலாம்.

வலமுறையெய்தி=“ அநுகூலமான முறையிலே கிட்டி ” என்பது ஈடு. ‘ முறை வலம் எய்தி ’ என மாற்றி, “ சேஷசேஷிபாவமாகிற முறைப்பாடுள்ள ஆநுகூல்யத்தைப் பெற்று ” என்றுரைத்தார் வாதிகேஸரி.

வலம்—பலம் என்ற வடசொல் திரிபு; வரம் என்ற வடசொல் திரிபு என்னவுமாம். ... ... ... ... (எ)

வலஞ்செய்துவைகல் வலங்கழியாதே *
வலஞ்செய்யும் ஆயமாயவன்கோயில் *
வலஞ்செய்யும்வானோர் மாலிருஞ்சோலை *
வலஞ்செய்துநாளும் மருவுதல்வழக்கே. (அ)

| | | | |
|---|---|---|---|
| வலம் செய்து | (கரணங்களுக்கு)வலிமை புண்டாக்கிக் கொண்டு | வானோர் வலம் செய்யும் | நித்யஸூரிகளும் வந்து பிரதக்ஷிணம் செய்யுமிடமான |
| வைகல் | எப்போதும் | மாலிருஞ் சோலை | திருமலை விஷயத்தில் |
| வலம் கழியாதே | அந்த வலிமையை வீணாகப் பாழ்படுத்தாமல்,— | வலம் செய்து | பிரதக்ஷிணம் முதலிய அநுகூல வ்ருத்திகளைச் செய்து |
| வலம் செய்யும் | (நமக்கு) நன்மையையே செய்தருளாநின்ற | நாளும் | நாடோறும் |
| ஆயன் | கோபாலகிருஷ்ணனான | மருவுதல் | பொருந்தியிருப்பது |
| மாயவன் | மாயவனுடைய | வழக்கு | யுக்தம். |
| கோயில் | கோயிலாகி | | |

* * * திருமலையை நித்யம் பிரதக்ஷிணஞ் செய்வது தகுதியென்கிறார். கண்டவற்றையும் தின்று தேஹத்திற்கு வலிமையை ஸம்பாதித்துக் கொண்டிருக்கிற ஜனங்களே! அந்த வலிமையை ஸ்வரூபத்திற்குத் தகாத விஷயங்களிலே செலுத்திப் பாழ்படுத்தாமல் திருமலையைப் பிரதக்ஷிணஞ் செய்வதாகிற நற்செயலிலே உபயோகித்து வாழுங்கோளென்கிறார்.

ஆயன் + மாயவன், ஆயமாயவன். “ சில விகாரமாமுயர் திணை ” என்பது நன்னூல். எம்பெருமானுக்கு வலஞ்செய்யும் என்று அடைமொழி கொடுத்தது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



"ய ஜூத்ஷாவஹநூஃ" என்கிற சுருதியை அடிபொற்றியதாகும். தன்னையுங் கொடுத்துத் தன்னை யநுபவிக்கைக் கீடான வலிமையையுங் கொடுப்பவன் எம் பெருமான் என்றுணர்க. இதற்கு வேறு வகையாகவும் பொருள் கூறுவர் ;— "திருச்சித்ரகூட பரிஸரத்திலே பிராட்டியையுங்கூடக் கையைப் பிடித்துக் கொண்டு உலாவினப்போலே, பிராட்டி கையைப் பிடித்துக்கொண்டு அழகர் ஆதரத்தோடே ஸஞ்சரிக்கிற தேசம்" என்பது நம்பிள்ளை யீடு. "அழகர் பிராட்டிமாரோடேகூட வலஞ்செய்கிற" என்றார் பெரியவாச்சான்பிள்ளையும். இப்பொருளில், ஆயமாயவன் வலஞ் செய்யுங் கோயில் என்று அந்வயிப்பது.

வலஞ்செய்யும் வானோர்=பெருமாள் காட்டுக் கெழுந்தருளுகிற போது திருவயோத்தியி லுள்ளாரடங்கலும் பின் தொடர்ந்தாப்போலே பராத்பரன் இங்கே யெழுந்தருள, நித்ய முக்தர்களுங் கூடவந்து வலஞ் செய்வர்களாயிற்று.

ஈற்றடியில் ஒரு ஐதிஹ்ய மருளிச் செய்வர் ; "பிள்ளை திருநறையூரரைய ரும் பட்டரும் ப்ரதக்ஷிணம் பண்ணுகிறப் பின்னே ஸேவித்துக் கொண்டு போனேன் ; அல்லாதார் கடுங்குதிரைபோலே வாராநிற்க, இவர்கள் திருக்கோபு ரங்களையும் திருமாளிகைகளையும் கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்துக் கொண்டு வந்தார்களென்று நஞ்சீயரருளிச் செய்வர்." என்று.—"விஷ்ணோராய தநம் நித்யம் ஸாயம் ப்ராதர் தினே தினே। ப்ரதக்ஷிணத்வயம் குர்யாத் அச்வமேதபலம் லபேத்"=விஷ்ணோராயதநம் நித்யம் ஸாயம்ப்ராதர் தினே தினே— ப்ரதக்ஷிணத்வயம் குர்யாத் அச்வமேதபலம் பவேத்." என்று சாஸ்த்ரங்களிற் சொல்லியுள்ளது. எம்பெருமான் ஸந்நிதியை நாடோறும் காலைமாலை வலஞ் செய்தால் அபரிமிதமான பலன் கிடைக்குமென்று, வலஞ் செய்வதானது உபாய கோடியில் பேசப்பட்டிருக்கிறது. உபாயாந்தரங்களில் அந்வயம் பொறுத ப்ரபந் நர்கள் ப்ரதக்ஷிணஞ் செய்யலாகுமோ ? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த ஐதிஹ்ய முள்ளது. உபாஸகர்கட்கு உபாயமானவிதுவே விலக்ஷணர்களுக்கு ஸ்வயம் ப்ரயோஜநமா யிருக்குமென்று காட்டியவாறு. வழக்கு—நியாயம். (அ)

வழக்கெனநினைமின் வல்வினைமூழ்காது *
அழக்கொடியட்டான் அமர்பெருங்கோயில் *
மழக்களிற்றினம்சேர் மாலிருஞ்சோலை *
தொழக்கருதுவதே துணிவதுசூதே. (கூ)

| | |
|---|---|
| வல் வினை | கொடிய பாவங்களிலே |
| மூழ்காது | அழுந்தாமல் |
| வழக்கு என நினைமின் | (இவ்வுபதேசத்தை) நியாயமென்று கொள்ளுங்கள் ; |
| அழம் கொடி | பேய்ச்சியாகிற பெண்ணை [பூதனையை] |
| அட்டான் | முடித்தருளின பெருமான் |
| அமர் | எழுந்தருளியிருக்கிற |
| பெரு கோயில் | பெரிய ஸந்நிதியாய், |
| மழ களிறு இனம் சேர் | இளமைதங்கிய யானைக் கூட்டங்கள் சேருகிற |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| மாலிருஞ்சோலை | திருமலையை | துணிவதே | திடமான அத்யவஸாயங் கொள்வதே |
| தொழ கருதுவது | வணங்கவேணுமென்று எண்ணுவதில் | சூது | சிறந்த வுபாயம். |

* * * திருமலையைத் தொழவேணுமென்கிற திண்ணிய அத்யவஸாயங் கொள்ளு மத்தனையே போதுமென்கிறார். அழக் கோடியட்டான்=அழமென்று பேய்க்குப் பெயர். கொடி யென்பது மாதர்க்கு உவமையாகு பெயர். பெண்ணுருவங் கொண்டுவந்த பேய் என்றபடி. திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் ஒளித்து வளர்கின்ற கண்ணபிரானைக் கொல்லும் பொருட்டுக் கம்ஸனால் ஏவப் பட்ட அசுரர்களில் ஒருத்தியான பூதனை யென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுரு வத்தோடு இரவில் திருவாய்ப்பாடிக்குவந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த ஸ்ரீக்ருஷ்ண சிசுவை யெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப் பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவள் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனன் என்ற பூதநாஸம்ஹார வரலாறு இங்கு உணரத்தக்கது. (அழம் என்று பிணமாய், அத்தாலே பேய் என்றபடி என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியும் காண்க.)

மழக்களிற்றினஞ்சேர் என்றவிடத்து ஒரு ரஸோக்தி அருளிச் செய்வர் நம்பிள்ளை ;— "லக்ஷ்மணோபேதமாயிருப்பதொரு ஆனை நின்றவிடத்தே ஆயிர மானைகள் வந்து சேராநிற்கும். அங்கு நிற்கிறதோ சோலைமழகளிறு." என்று. திருமங்கையாழ்வார் அழகரை "சோலைமழகளிறே!" என விளித்தார். தென்னு னாய்! என்று தெற்குத் திருமலையில் நிற்கிற யானையே! என்றும் விளித்தார் ; அப்படிப்பட்ட யானையினருகே மழக்களிற்றினம் சேர்வது வியப்பன்று என்று காட்டியவாறு. ... ... ... ... (கூ)

சூதென்றுகளவும் சூதும்செய்யாதே *
வேதமுன்விரித்தான் விரும்பியகோயில் *
மாதுறுமயில்சேர் மாலிருஞ்சோலை *
போதவிழ்மலையே புகுவதுபொருளே. (கo)

| | | | |
|---|---|---|---|
| சூது என்று | உபாயமென்றெண்ணி | விரித்தான் | (கீதை முதலியவற்றால்) விவரித்தருளின பெருமான் |
| களவும் | களவையும் | | |
| சூதும் | சூதையும் | விரும்பிய | விரும்பி யெழுந்தருளியிருக்குமிடமான |
| செய்யாதே | செய்ய நினைக்காமல்,— | கோயில் | கோயிலாய் |
| முன் | முற்காலத்தில் | மாது உறு மயில் சேர் | பேடையோடு கூடின ஆண் மயில்கள் சேர்ந்து வாழப்பெற்ற |
| வேதம் | வேதங்களை | | |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| மாலிருஞ் சோலை | மாலிருஞ்சோலை யென்கிற | புகுவதே | சென்று சேர்வதே |
| போது அவிழ் மலை | புஷ்பங்கள் விகஸிக்கிற திருமலையில் | பொருள் | புருஷார்த்தம். |

* * * முதலடிக்கு இரண்டுவகையான அர்த்த நிர்வாஹமுண்டு ;—அற நூற்களில் சூதும் களவும் கூடாதென்று நிஷேதித்திருக்கையாலே அதனையடியொற்றி ஆழ்வாரும் அருளிச் செய்கிறார் ; சூது களவு முதலிய தீய செயல்களாலே வீண் போது போக்காமல் திருமலையிலே சென்று புகுங்கோள்—என்பதாக ஒரு நிர்வாஹம்.

இனி, களவாவது—"கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா"—கிம் தேந ந் க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றும் "பண்டேயுன் தொண்டாம் பழவுயிரை யென்னதென்று கொண்டேனைக் கள்வ னென்று கூறாதே" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானுக்கு சேஷப்பட்ட தான ஆத்ம வஸ்துவைத் தன்னதென்றிருக்கை. அதாவது—விவேகியாயிருப்பா னொருவன் 'ஈச்வர சேஷமான ஆத்மாவுண்டு, ஸர்வ சேஷியான ஈச்வரனுண்டு, புண்யபாப வகுப்பு உண்டு, பரலோக முண்டு' என்றிப்படி நூற் பொருள்களை யெடுத்துரைத்தால மாயச் சொற்களாலே 'இவை யொன்று மில்லை' என்று அவன்தானே கையெழுத்திடும்படி அவனை மயக்கி மிக்க நாஸ்திகனுக்கித் தன் வகுப்பில் இணக்கிக் கொள்ளுகை. ஆகிய இவ்விரண்டையும் செய்து கெட்டுப் போகாமல்.........என்பது மற்றொரு நிர்வாஹம். இதை நிர்வாஹ பேதமாகக் கொள்ளாமல் ஸ்வாபதேசப் பொருளாகவும் கொள்ளலாம்

வேதம் முன் விரித்தான்=வேதம் உரைத்தவனும் தானே, வேதம் விரித் தவனும் தானே. கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று வேதங்களை யுரைத்தான் ; தேர்த்தட்டிலே அழகிய திருக்கோலத்தோடிருந்து கீதோபநிஷந்முகத்தாலே வேதங்களை விரித்தானென்க. கீதை யென்பது வேதங்களுக்கு வியாக்கியானம் போன்றது என்றவாறு.

விரும்பிய கோயில் = உபதேசத்தால் திருந்தாதவர்களை வடிவழகைக் காட்டி ஆட்படுத்திக் கொள்ளுதற்கு எழுந்தருளி யிருக்குமிட மென்க.

மாதுறுமயில்=மாது என்பது 'மாதர்' என்பதன் சிதைவாய், பேடை யைச் சொல்லும். மாது என்று ஸௌகுமாரத் தன்மைக்கும் பெயர். அழகிய மயில்கள் என்றுமாம். ... ... ... ... (க0)

பொருளென்றிவ்வுலகம் படைத்தவன்புகழ்மேல் *
மருளில்வண்குருகூர் வண்சடகோபன் *
தெருள்கொள்ளச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்து *
அருளுடையவன்தாள் அணைவிக்கும்முடித்தே. (கக)



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| பொருள் என்று | (ஒருநாளாகிலும்) பிரயோஜனப்படுமென்று கருதி |
| இ உலகம் | இவ்வுலகங்களை |
| படைத்தவன் | ஸ்ருஷ்டித்த பெருமானுடைய |
| புகழ் மேல் | திருக்கல்யாண குணங்களில் |
| மருள் இல் | அஜ்ஞான மில்லாத |
| வண் குருகூர் வண் சடகோபன்—; | |

| | |
|---|---|
| தெருள் கொள்ள | (சேதநர்க்குத்) தெளிந்த ஞானமுண்டாகுமாறு |
| சொன்ன | அருளிச் செய்த |
| ஓர் ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரங்களுள் |
| இ பத்து | இப்பதிகம் |
| முடித்து | ஸம்ஸார பந்தத்தைப் போக்கி |
| அருள் உடையவன் தாள் | பரமதயாளுவான எம்பெருமானது திருவடிகளில் |
| அணைவிக்கும் | சேர்விக்கும். |

* * * இத்திருவாய்மொழி கற்பார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. இப்பதிகந்தானே ஸம்ஸார பந்தத்தை யறுத்துப் பரமகாருணிகனான எம்பெருமானது திருவடிகளிலே கொண்டு சேர்க்குமென்று பயனுரைத்தவாறு. இப்பதிகத்தை அநுஸந்திப்பவர்களை எம்பெருமான் திருவுள்ளமுவந்து கைக்கொள்வன் என்பது தேர்ந்த கருத்து. இஃதறியாமல் சிலர் இந்த அசேதநமான பத்துப் பாசுரம் எங்ஙனே மோக்ஷோபாயமாகும்? என்று ஆக்ஷேபிப்பர்கள். இது உபசார வழக்கு என்றுணர்க.

பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் = எம்பெருமான் ஜகத் ஸ்ருஷ்டி பண்ணுவதாவது இறகொடிந்த பறவைபோலே கரணகளேபரங்களை இழந்திருந்த ஆன்மாக்களுக்கு அவற்றைக் கொடுக்கை. அப்படி எத்தனை தடவை ஸ்ருஷ்டித்தாலும் பயன்படா தொழிந்தாலும், என்றேனு மொருநாள் பயன்படுமென்று கருதி மேன்மேலும் ஸ்ருஷ்டிகளைச் செய்து போருவன் என்கிறது. "சோம்பாது இப்பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா!" என்றார் பெரிய திருவந்தாதியிலும்.

புகழ்மேல் மருள்இல் = எம்பெருமானது திருக்கல்யாண குணங்களில் ஸந்தேஹம், விபர்யயம், மறப்பு முதலானவை யில்லாதவர் என்றபடி. * மயர்வற மதிநல மருளப் பெற்றவராதலால் இங்ஙனஞ் சொல்லத்தகு மென்க. ... (கக)

பத்தாந் திருவாய்மொழி உரை முற்றுப் பெற்றது.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

———

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:.

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளீ.

தீப்தாஶ்சர்யஸ்வபாவம் முகரிதஜலஜம் வர்ஷுகாம்போதவர்ணம்
ஶைலச்சத்ராவகுப்தாஶ்ரிதமதிவிலஸத்தேதிமாபீதகவ்யம் ।
ஸம்ரம்போத்க்ஷிப்தபூமிம் ப்ரணமதநுகுணம் பூதநாசேதநாந்தம்
பூர்வாசார்யம் ஶ்ருதீநாம் ஸுபகஸவிதகிரிஸ்தாநதோ நிர்விவேஶ ॥

1. தீப்த ஆச்சர்யஸ்வபாவம். * வளரொளி மாயோன். * தீப்தனுயும் ஆச்சர்யஸ்வபாவனுயு மிருப்பவன் என்றபடி. (விசேஷணேபயபத கர்மதாரய ஸமாஸம்.)

2. முகரித ஜலஜம். * அதிர்குரல் சங்கத்தழகர். * ஜலஜமென்று சங்குக்குப் பெயர்; முகரித—முழங்காநிற்கிற, ஜலஜம்—சங்கையுடையவன்.

3. வர்ஷுக அம்போத வர்ணம். * புயல்மழைவண்ணர். * கார்காலத்துக் காளமேக நிறத்தன்.

4. சைலச்சத்ர அவகுப்த ஆச்ரிதம். * பெருமலையெடுத்தான். * கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்துநின்று அடியார்களைக் காத்தருளினவன்.

5. அதிவிலஸத் ஹேதிம். * அறமுயலாழிப்படையவன். * மிகவும் விளங்காநின்ற (திருவாழியாழ்வானுகிற) திவ்யாயுதத்தையுடையவன்.

6. ஆபீத கவ்யம் * உறியமர் வெண்ணெயுண்டவன். * திருவாய்ப்பாடியில் வெண்ணெய் முதலானவற்றை அமுது செய்தவன்.

7. ஸம்ரம்ப உத்க்ஷிப்த பூமிம். * நிலமுனமிடந்தான். * வராஹரூபியாய்ப் பூமியை இடந்தெடுத்தவன். (ஸம்ரம்பமாவது—பரபரப்பு.)

8. ப்ரணமத் அநுகுணம். * வலஞ்செய்யுமாயன் மாயவன். * ஆச்ரிதர்களுக்கு வேண்டிய ஆநுகூல்யங்களை விளைவிப்பவன்.

9. பூதநா சேதநாந்தம். * அழக்கொடியட்டான். * பூதனையினுயிரை முடித்தவன்.

10. பூர்வாசார்யம் ச்ருதீநாம். * வேதமுன்விரித்தான். * வேதங்களுக்கெல்லாம் முதன்மையான ப்ரவர்த்தகன். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை [சுபஸவிதகிரிஸ்தாநத:] அழகியதாயும் ஸமீபஸ்தமாயுமிருக்கிற திருமாலிருஞ்சோலைமலையில் எழுந்தருளியிருப்பினுல் [நிர்விவேச] ஆழ்வார் அநுபவித்து ஆனந்தித்தாரென்றபடி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

𑌉𑌦𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌵𑌸𑌹𑍍𑌯𑌕𑍍𑌷𑌣𑌵𑌿𑌰𑌹𑌤𑌯𑌾 𑌽𑌨𑌨𑍍𑌯𑌭𑍋𑌗𑍍𑌯𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌤𑍍
𑌸𑌾𑌪𑌤𑍍𑌯𑌶𑍍𑌲𑌾𑌘𑍍𑌯𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌵𑍍𑌯𑌸𑌨𑌹𑌰𑌤𑌯𑌾 𑌶𑍍𑌲𑌾𑌘𑍍𑌯𑌸𑌂𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌮𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ।
𑌸𑍌𑌶𑍀𑌲𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌾𑌮𑍍𑌯𑌦𑌾𑌨𑌾𑌨𑍍𑌨𑌿𑌜𑌸𑌾𑌹𑌚𑌰𑌦𑌾𑌨𑌾𑌤𑍍𑌸𑌾𑌧𑍍𑌵𑍀𑌸𑌾𑌰𑌸𑌾𑌧𑌨𑌾𑌤𑍍
𑌮𑍋𑌕𑍍𑌷𑌦𑌾𑌨𑌾𑌦𑍍𑌦𑍇𑌶𑌾𑌤𑍍𑌵𑌾𑌸𑍍𑌤𑌹𑌨𑌿𑌲𑌯𑌤𑌯𑌾𑌵𑌾𑌦𑍀𑌦𑍍𑌧𑌰𑌿𑌂 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍇 ॥

இரண்டாம்பத்தில் பத்துத் திருவாய்மொழிகளினுடையவும் ப்ரமேயங்களை ஸங்க்ரஹித்தருளிச் செய்வது இந்த ச்லோகம். க்ஷணகால விச்லேஷமும் பொறுக்க முடியாதவன் என்பதைக் காட்டுவது வாயுந்திரையுகள். மநுஷ்ய ஸஜாதீயனுய் அவதரித்திருக்கச் செய்தே பரத்வமும் பொலிய நிற்பவனென்றது திண்ணன் வீடு. மதுர பதார்த்தங்களெல்லா மொன்று சேர்ந்தாற்போன்ற இனிமையையுடையவனென்றது ஊனில்வாழுயிர், ஆச்ரிதர்களின் துயர் தீர்க்குந் தன்மையை விளக்கியது ஆடியாடி. ஆச்ரிதரோடே ஸம்ச்லேஷித்து அத்தாலே மிகவும் ப்ரீதனானமை காட்டினது அந்தாமத்தன்பு. 'ஆச்ரிதர்கள் நம்மைவிட்டு விட்டால் என் செய்வது' என்று எம்பெருமானுக்கும் ஒரு அதிசங்கை யுண்டானமையைத் தெரிவித்தது வைகுந்தாமணிவண்ணன். ஆச்ரிதருடைய ஸம்பந்தி ஸம்பந்திகளேயும் ரக்ஷிக்குமவனென்றது கேசவன்தமர். மோக்ஷமளிப்பவனென்றது அணைவதரவணை. கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தியென்றது எம்மாவீடு. அழகிய திருப்பதியை யுடையனென்றது கிளரொளி. ஆக இத்திருவாய்மொழிகள் பத்தினாலும் தெரிவிக்கப்பட்ட பத்துத் திருக்குணங்களினாலும் எம்பெருமானுடைய பரமபோக்யதை சொல்லிற்று. இது இரண்டாம்பத்தின் திரண்ட பொருள் என்றுராயிற்று. ... ... ... (*)

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸாரம்.

𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍇 𑌤𑍍𑌵𑍀𑌶𑌃𑌕𑍍𑌷𑌣𑌵𑌿𑌰𑌹𑌦𑍁𑌃𑌖𑌂 𑌮𑌧𑍁𑌰𑌿𑌤𑌂
𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌾𑌶𑍍𑌲𑌿𑌷𑍍𑌟𑌂 𑌵𑍍𑌯𑌸𑌨𑌶𑌮𑌨𑌂 𑌶𑍍𑌲𑌾𑌘𑍍𑌯𑌮𑌦𑌿𑌤𑌮𑍍 ।
𑌸𑍌𑌶𑍀𑌲𑍍𑌯𑍌𑌦𑌾𑌰𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌜𑌨𑌸𑌾𑌹𑌚𑌰𑍍𑌯𑌂 𑌶𑍁𑌚𑌿𑌰𑌸𑌂
𑌸𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑍇𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌂 𑌸𑌹𑌮𑌧𑌿𑌵𑌿𑌯𑌦𑍍𑌦𑍇𑌶𑌂 𑌨𑌿𑌰𑌵𑌿𑌶𑌤𑍍 ॥

மேலே "உத்வ்ருத—இத்யப்ருத" என்கிற த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளீ ச்லோகத்தில், இரண்டாம்பத்தின் ஒவ்வொரு திருவாய்மொழிகளுக்கும் ப்ரமேயமாக அருளிச் செய்யப்பட்ட திருக்குணமே இந்த ச்லோகத்திலும் சப்த பேதத்தாலும் வ்ருத்த பேதத்தாலும் விபக்தி பேதத்தாலும் அருளிச் செய்யப்பட்டது. ஆதலால் இதற்குத் தனியே உரையிட வேண்டாவெனவிருக்கிறோம்.

---

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.
CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



உபாயஸ்யைவாஸ்ய ப்ரத²மஶதகேநோதி³தம்
ததா² ப்ராப்யத்வம் ச த்³விதீயஶதகேநோதி³தம் ।
அயம் தத்³வாஸாதா⁴ரணதநுவிஶிஷ்டஸ்ய ரமணஸ்
த்ருதீயே விஶ்வம் ஶாகா²ஸ்வப்யேவம் கத²யதி ॥

மேல் மூன்றும் பத்துக்கும் கீழிரண்டு பத்துக்களுக்கும் ஸங்கதி யருளிச் செய்வது இந்த ச்லோகம். எம்பெருமானே உபாய பூதன் என்று நிலைநாட்டுதற் குறுப்பான ஸேவ்யத்வம் முதற்பத்தில் அருளிச் செய்யப்பட்டது. அவனே உபேயன் என்று நிலைநாட்டுதற் குறுப்பான போக்யத்வம் இரண்டாம்பத்தில் அருளிச் செய்யப்பட்டது. ஆக இந்த உபாயத்வ உபேயத்வங்களிரண்டும் அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டனுக்கே கூடுமென்று கொண்டு அந்த எம்பெருமான் சுபாச்ரய திவ்ய மங்கள விக்ரஹ விசிஷ்டனென்பதை மேல் மூன்றும் பத்தினால் ஆழ்வார் அருளிச் செய்யப்புகுகிறார் என்றதாயிற்று.

ஸேவ்யத்வாத் உபாய:, போக்யத்வாத் உபேய:, என்பது முதலிரண்டு பத்துக்களின் தாத்பரியம் என்றதாகக் கொள்க. ... ... (*)

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஸ்வாந்நிஜாபி⁴மதஸ்தஸ்மிந்நேவ ஹரி: ப்ரதா³தும்
ஶ்ரீஶைலவாஸம் அநக⁴ஹ்ருதீயத்³வேஷ்டே ।
ப்ராப்யம் தமேவ ச தத³ந்வயிநம் ச ஸர்வம்
ப்ராவீகஶத் த³ஶமே த³ஶகே முநீந்த்³ர: ॥

(கருத்து,) கீழ்த் திருவாய்மொழியில் தாம் விரும்பின புருஷார்த்தத்தை எம்பெருமான் இவ்விபூதியிலேயே தமக்குக் கொடுத்தருளத் திருவுள்ளம் பற்றித் திருமாலிருஞ் சோலையில் ஸந்நிதி பண்ணியிருப்பதாகக் கண்டு அந்த எம்பெருமானையும் அவனோடு ஸம்பந்தமுள்ள ஸகலத்தையும் ப்ராப்யமாகப் பத்தாவது திருவாய்மொழியில் ஆழ்வார் வெளியிட்டருளினாரென்கை.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

கிளரொளிசேர் கீழுரைத்த பேறு கிடைக்க
வளரொளிமால் சோலை மலைக்கே—தளர்வறவே
நெஞ்சைவைத்துச் சேருமெனும் நீடுபுகழ் மாறன்தாள்
முன் செலுத்துவோமெம் முடி.

| | |
|---|---|
| கிளர் ஒளி சேர் | அதிசயமான மேன்மை பொருந்தியதும் |
| கீழ் உரைத்த | கீழ்த்திருவாய்மொழியில் சொல்லப்பட்டதுமான |
| பேறு | புருஷார்த்தம் |
| கிடைக்க | கிடைப்பதற்காக, |
| வளர் ஒளி | மேன்மேலும் வளர்ந்து வருகின்ற ஒளியை யுடையதான |
| மால் சோலை மலைக்கே | திருமாலிருஞ் சோலை மலைக்கே |
| தளர்வு அறவே | தளர்ச்சியில்லாமல் [திடமாக] |
| நெஞ்சை வைத்து | மநஸ்ஸை வைத்து |
| சேரும் எனும் | போய்ச் சேருங்கள் என்று உபதேசித்த |
| நீடு புகழ் மாறன் | மஹா யசஸ்வியான ஆழ்வாருடைய |
| தாள் முன் | திருவடிகளின் முன்பே |
| எம் முடி | எமது தலையை |
| செலுத்துவோம் | ஸமர்ப்பிப்போமாக. |

* * * எம்மாவீடென்கிற கீழ்த்திருவாய்மொழியில் நிஷ்கர்ஷிக்கப்பட்ட கைங்கரியமாகிற பரம புருஷார்த்தம் கிடைக்கவேணுமென்கிற நசையுடையீர்! அதற்காக வேறொரு தேச விசேஷம் தேடிப்போகவேண்டா; இந்நிலத்திலேயே பரம விலக்ஷணமான திருமாலிருஞ் சோலைமலையிலே எல்லா அடிமைகளுங் கொள்வானாக அப் பெருமானெழுந்தருளி நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கிறனாகையாலே அத்திருமலையில்தானே சென்று சேர்ந்து அநுபவிக்கப் பாருங்கோள்—என்று உபதேசித்தருளின ஆழ்வாருடைய திருவடிகளுக்கே நமது தலையை அந்த வுபதேசத்திற்குக் கைம்மாறாக அர்ப்பணம் செய்வோமென்றாயிற்று. ... (உ௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள் கோயில் ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்ஸ்வாமி அருளிச்செய்த
திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில்
இரண்டாம்பத்து முற்றிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

## திருவாய்மொழி இரண்டாம்பத்துச் செய்யுளகராதி.



Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.
CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.







CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

.Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

# இரண்டாம்பத்தின் அடிவரவு.

1. வாயுங் கோள் காமுற்ற கடலூழி கை தோற்றேம், இருள் சொரிந்து வேவாராச் சோராத திண்ணன்.

2. திண்ணனேபாவ மேறனைத் தேவும், தகுஞ்சீர் யவரும் பள்ளிபால் கருத்தில், காக்குங் கள்வா எத்தவே ழுனில்,

3. ஊனி லொத்தார்மிக் கறிபா வெனதாவி, இனியார் சேர்ந்தார் முன்னல் குறிக்கொள், கடிவார் களிப்பும் குழாங்கொளாடி.

4. ஆடி வானுத விரக்க மிலங்கை, இவளிராத் தகவுடை உள்ளுளாவி வஞ்சனே, பட்டபோ தேழை வாட்டமி லந்தாமம்.

5. அந்தாமத் திருவுடம் பென்னு ளெப்பொருளும், ஆரா பலபல பாம்பணை பொன்முடி, சொல்லீ ரானல்லன் கூறுதல் வைகுந்தா.

6. வைகுந்த சிக்கெனத் தாமரை வள்ளலே, உய்ந்துபோந் துன்னை முடியாததென் மாறு, எந்தாய் போகின்ற கண்ணிக் கேசவன்.

7. கேசவன் நாரணன் மாதவன் கோவிந்தன், விட்டிலங்கு மதுசூ திரிவி வாமனன், சிரீருடீ பற்ப தாமோத வண்ணமணை.

8. அணைவது நீந்தும் புணர்க்கும் புலனைந்தும், ஓவாத் தீர்த்தன் கிடந்திருந்துகாண்பாரார் எங்குஞ் சீர்மைகொள் கண்டல மெம்மா.

9. எம்மாவீ டீதேபான் செய்யே லெனக்கே, சிறப்பில் மகிழ்கொள் வாராய் எக்கால, யானே பேறேல் விடலில் கிளரொளி.

10. கிளரொளி சதிரிள பபனல்ல கருமவன், திறமுடை கிறிபென நலமென வலஞ்செய்து, வழக்கெனச் சூதென்று பொருள் முடிச்சோதி.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ப்ரபந்நஜநகூடஸ்தரான

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி.

[மூன்றாம் பத்து — நான்காம் பத்து.]

---

பெருமாள்கோயில்

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியரால்

எல்லார்தமக்கும் இன்பம்பயக்குமாறு எளியநடையில் தெளிய எழுதப்பட்ட

திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.

———(o)———

தாதுஸ்ரீ திருவாடிப்பூரம்.

1936.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

## காஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய நூல்கள்

திருப்பல்லாண்டு உரை
பெரியாழ்வார் திருமொழி உரை
திருப்பாவை உரை
நாச்சியார் திருமொழி உரை
பெருமாள் திருமொழி உரை
திருச்சந்தவிருத்தம் உரை
திருமாலை உரை
திருப்பள்ளியெழுச்சி உரை
அமலனாதிபிரான் உரை
கண்ணி நுண்சிறுத்தாம்பு உரை
பெரிய திருமொழி உரை
திருக்குறுந்தாண்டகம் உரை
திருநெடுந்தாண்டகம் உரை
நான்கு திருவந்தாதிகளின் உரை
திருவிருத்தம் உரை
திருவாசிரியம் உரை
பெரிய திருவந்தாதி உரை
திருவெழுகூற்றிருக்கை உரை
சிறிய திருமடல் உரை
பெரிய திருமடல் உரை
இராமாநுச நூற்றந்தாதி உரை
திருவாய்மொழி உரை
திருவாய்மொழி நூற்றந்தாதி உரை
த்ரமிடோபநிஷத் ஸங்கதி உரை
த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி உரை
த்ரமிடோபநிஷத் ஸாரம் உரை
ஆயிரம் பாசுரங்களுக்கு ஸம்ஸ்க்ருத ச்லோக-தண்டக-மொழிபெயர்ப்பு
நித்யாநு ஸந்தான வுரை.
முகுந்தமாலை வியாக்கியானம்
ஸ்தோத்ர ரத்நம் ஷ
ஸுதர்சந சதகம் ஷ
ஸ்ரீரங்கராஜஸ்தவம் ஷ
வரதராஜஸ்தவம் விரிவுரை
ஸ்ரீஸ்தவம் விரிவுரை
அதிமாநுஸ்தவம் விரிவுரை
ஸ்ரீவைகுண்டஸ்தவம் விரிவுரை
ஸுந்தரபாஹுஸ்தவம் விரிவுரை
கத்யத்ரயம் விரிவுரை
ஸ்ரீகுணரத்நகோசம் விரிவுரை
வரவரமுநிசதகம் விரிவுரை
வைராக்யபஞ்சகம் விரிவுரை
தேசிகமங்களம் விரிவுரை
சேஷாவதாரச் சிறப்பு

நமஸ்காரதத்வம்-ஷ விஜயத்வஜம்
ப்ரணவாதிகார தத்வம்.
ஸ்தோத்ரவ்யாக்யாந சோதநம்
வாத்ஸல்யார்த்த விவரணம்
சேட்லூரர் மாயமயக்கம்
விதவாவபந வித்வம்ஸநம்
பாதுகா ஸஹஸ்ராவதார தத்வம்
வாத்ஸல்ய விஜயத்வஜம்
பரதுங்கதுக்கித்வ பரமார்த்தரக்ஷா
வ்யாமோஹப்ரசமௌஷதம்
திருப்புட்குழிஸ்வாமி வைபவம்
அத்யமேச்லோகார்த்த தத்வம்
உபதேச ரஸாயனம்-ஷ ஸாரம்
கூரத்தாழ்வான் வைபவம்
அண்ணாவைபவச்சுருக்கம்
ஸத்ஸம்ப்ரதாயப்படி
பகவத் கதையமுதம்
வாதிபீகரவிஜயம்
ஸத்யநாராயணஸூத்ரம்
ஸத்யநாராயணஸூத்ர ஸத்யப்ரதாபம்
பிழைதிருத்தப் பேரின்பம்
ஸ்ரீவசனபூஷண ஸாரம்
ஆசார்யஹ்ருதய ஸாரம்
திவ்யப்ரபந்த வைபவவிவேக:
உபந்யாஸ ரத்நமாலா
தர்க்க சாஸ்த்ர ஸர்வஸ்வம்
ரஸிக புதரஞ்சனம்
காஞ்சி ஹஸ்திகிரி வைபவம்
பரிபந்திபஞ்சபங்கீ
ரக்ஷாவிலோசந பாவ ப்ரகாசிகா
யாத்ரா ஸ்தோத்ராம்ருதம்
ஸ்ரீராமாயண தண்டகம்
பிள்ளையந்தாதி உரை
வேதாத்யயந ஸர்வஸ்வம்
சாஸ்த்ரஜ்ஞாந சாணபலகம்
பரமார்த்த பரித்ராணம்.
அம்ருத லஹரீ
ஜகத்குருஸ்துதி ரத்நம் 6.
ஹயக்ரீவ சதகம், கருடவிம்சதி கோபால பஞ்சசத் முதலிய ஸ்தோத்ரங்கள் 24.
உபாக்யாந ரத்நமாலா 16.
பாலபோத ரஸாயநம்.
அத்யமே ச்லோகார்த்த தத்வப்ரதிஷ்டா
சாரீரக ஸர்வஸ்வம்.

கிடைக்குமிடம் :—P. R. ஆராவமுதய்யங்கார்,
44, நாராயண முதலிவீதி; ஜி. டி. மதராஸ்,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவாய்மொழி—மூன்றும்பத்து.

## முதல் திருவாய்மொழி—முடிச்சோதியாய்.

அவதாரிகை :—கீழ்த் திருவாய்மொழியைத் தலைக்கட்டுமிடத்தில் ஆழ்வார் "பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் புகழ்மேல் மருளில் வண்குருகூர் வண் சடகோபன்" என்று தம்மைப்பற்றிச் சொல்லிக்கொண்டார்; அதாவது—எம்பெருமான் விஷயத்தில் தமக்கு அஜ்ஞானம் ஒன்றுமில்லை யென்பதாகச் சொல்லிக் கொண்டார். இப்போது பாசுரம் தொடங்கும்போதே தமக்கு ஒரு அஜ்ஞானம் உள்ளதென்று காட்டுகிறுர்.

அஜ்ஞானம் நான்கு வகைப்படும் ;—ஒரு வஸ்துவைப்பற்றி அடியோடு தெரிந்து கொள்ளாமையும், நிச்சயமாகத் தெரிந்து கொள்ளாமல் ஸந்தேஹமாகத் தெரிந்து கொள்ளுதலும், விபரீதமாகவே நிச்சயித்துத் தெரிந்து கொள்ளுதலும், உள்ளபடி தெரிந்து கொண்டதை மறந்து போதலும்—ஆக நால்வகைப்பட்ட அஜ்ஞானங்களுள் ஸந்தேஹரூபமான அஜ்ஞானம் தமக்குள தென்பதை இங்குக் காட்டிக் கொள்ளுகிறுராழ்வார்.

கீழே தமக்கு மருள் இல்லையென்று சொல்லிவிட்டு இப்போது மருள் உள்ளதாகச் சொல்வது பொருந்துமோ எனின் ; நம் போல்வார்க்குக் கருமம் காரணமாக வுண்டாகின்ற மருள் ஆழ்வார் தமக்கு இல்லை என்றதத்தனை யொழிய, விஷய வைலக்ஷண்யத்தினுல் வருகிற அஜ்ஞானமும் இல்லையென்றதன்று. எம்பெருமானுடைய வடிவழகிலே யீடுபட்டு 'பிரானே! உனது முகச்சோதியே முடிச்சோதியாய் மலர்ந்ததுவோ? திருவடியின் சோதியே நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?' என்று கேட்பதற்குறுப்பான ஸந்தேஹம் ஆழ்வார்க்கு விளைந்ததென்றுல் இந்த அஜ்ஞானம் புருஷார்த்த கோடியில் சேருவதாகுமன்றே. "ஜ்ஞாந விபாக கார்யமான அஜ்ஞானத்தாலே வருமவை யெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியும் காண்க.

நம்முடைய அஜ்ஞானம்போலன்றிக்கே இப்படி மிகவும் விலக்ஷணமான அஜ்ஞானம் ஆழ்வார்களுக்கு உண்டாவதே அவர்களுடைய சிறப்புக்குங் காரணமாக நிற்கும். விலக்ஷண விஷயத்திலே கலக்கங்கொள்ளாதே தெளிந்தே நிற்பார்களாகில் அவர்களுக்கொரு ஏற்ற மில்லையாகுமே.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கீழ்த் திருவாய்மொழியில் திருமாலிருஞ் சோலைமலையை அனுபவித்த ஆழ்வார் அந்தத் திருமலையில் ஏகதேச மென்னலாம்படியாய், கற்பகத்தரு கப்புங்கிளையுமாகப் பணைத்துப் பூத்தாற்போலே நிற்பவரான அழகருடைய வடிவழகை யநுபவித்து, வேதங்களும் வைதிகர்களும் ப்ரஹ்மருத்ராதி தேவர்களுங் கூட நிலையிட மாட்டாதபடி இருக்கிற விருப்பை அநுஸந்தித்து இனியராகிறார் இத்திருவாய்மொழியில். ... ... ... ... (*)

முடிச்சோதியாய் உனதுமுகச்சோதிமலர்ந்ததுவோ? *
அடிச்சோதிநீநின்ற தாமரையாயலர்ந்ததுவோ? *
படிச்சோதியாடையொடும் பல்கலனாய் * நின்பைம்பொன்
கடிச்சோதிகலந்ததுவோ? திருமாலே! கட்டுரையே. (க)

| | |
|---|---|
| திரு மாலே | ச்ரிய:பதியான எம்பெருமானே!, |
| உனது முகம் சோதி | உன்னுடைய திருமுக மண்டலத்தின் ஜ்யோதிஸ்ஸானது (உயர்முகமாக வளர்ந்து) |
| முடி சோதி ஆய் | திருவபிஷேக ஜ்யோதிஸ்ஸாய் |
| மலர்ந்ததுவோ | விகஸிதமாயிற்றோ? |
| அடி சோதி | திருவடிகளின் காந்தியானது |
| நீ நின்ற தாமரை ஆய் அலர்ந்ததுவோ | நீ யெழுந்தருளியிருக்கும் ஆஸன பத்மமாய்ப் பரவியதோ? |
| நின் பைம் பொன் கடி சோதி | உனது விசாலமாயும் ஸ்ப்ருஹணீயமாயு மிருக்கின்ற திருவரையின் காந்தியானது |
| படி சோதி ஆடையொடும் பல் கலன் ஆய் | இயற்கையான சோதியையுடைய பீதாம்பரமென்ன பலவகைப் பட்ட ஆபரணங்களென்ன ஆகிய இவையாய் |
| கலந்ததுவோ | வியாபித்ததோ? |
| கட்டுரை | தெரியவருளிச் செய்ய வேணும். |

* * * [முடிச்சோதியாய்.] திருமாலிருஞ்சோலை யழகருடைய திவ்ய அவயவங்களுக்கும் திவ்ய பூஷணங்களுக்கு முண்டான மிக்க பொருத்தத்தைக் கண்டு உள் குழைந்து பேசுகிறார். இவ்வடிவழகைக் கண்டவளவிலே தமக்கொரு ஸந்தேஹம் விளைந்தபடியை விண்ணப்பஞ் செய்து, பிரானே! இந்த ஸந்தேஹந்தீர மறுமாற்றமருளிச் செய்யவேணுமென்று அபேக்ஷிக்கிறார்.

உனதுமுகச்சோதி முடிச்சோதியாய் மலர்ந்ததுவோ? = திருமுக மண்டலத்தின் காந்திஸமூஹம் மேல்முகமாகக் கிளர்ந்து கிரீட ஜ்யோதிஸ்ஸாக ஆயிற்றோ? என்பது கேள்வி. உண்மையில் திருமுக மண்டலத்திற்குமேல் திருவபிஷேக மென்று தனியே இல்லை; திருமுகச் சோதிதான் மேலே படர்ந்து திருமுடியாகத் தோற்றுகிறது என்கை இங்கு ஆழ்வார்க்கு விவக்ஷிதம். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் இப்பாசுரத்தின் முதலடியை ஒரு சிறுச்லோகமாக அருளிச் செய்தார்; அதாவது—கிரீடசூடாரத்நராஜி ராதிராஜ்யஜல்பிகா। முகேந்துகாந்திருந்முகம் தரங்கிதேவ ரங்கிண:= கிரீடசூடாரத்நராஜி: ஆதிராஜ்ய ஜல்பிகா, முகேந்துகாந்திருந்முகம் தரங்கிதேவ ரங்கிண:" என்பதாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திருமுடியில் நின்றும் திருவடியிலே கண்வைத்தார்; அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ? என்கிறார். ஆஸனபத்மமென்று கீழே தனியே ஒன்று இல்லை; கீழ் நோக்கிக் கிளர்ந்த திருவடியின் தேஜ:புஞ்ஜமே ஆஸநபத்மமாகத் தென்படுகின்றது என்கை இங்கு விவக்ஷிதம்.

அர்ச்சாவதாரங்களில எம்பெருமானுடைய திருவடிகளுக்கு ஆதாரமாக ஒரு பத்மபீடம் அமைந்துளது; அதுவே ஆஸந பத்மமெனப்படுகிறது. மேல் நாலாம் பத்தில் “தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமானை” என்றருளிச் செய்திருப்பதும் இங்கு அநுஸந்தேயம். ஆழ்வான் ஸுந்தரபாஹு ஸ்தவத்திலருளிச் செய்த “ஸளஜய–ஜாஉ–வ ஸுமஸுரஸவூவாஜெஹ: ஸுதெஹி ஸுஜாஹுஜஸ வஉாரவிஜெ। சுஂஜொஜஸஂஹவஸிஂஹணஉஹஜெஷாஂ தஜெ வஸாஜிதஜெ ஶிரஸா ஜிஹதி–ஸௌந்தர்ய மார்த்தவ ஸுகந்த ரஸப்ரவாஹை: ஏதேஹி ஸுந்தரபுஜஸ்ய பதாரவிந்தே, அம்போஜடம்ப பரிரம்பணமப்யஜைஷ்டாம் தத்வை பராஜிதமிமே ஶிரஸா பிபர்த்தி.” என்ற ச்லோகமும் நோக்கத்தக்கது.

[படிச்சோதியாடையொடும்இத்யாதி.] இங்கு இரண்டுவகையான நிர்வாஹமுண்டு; படிச்சோதி(யானது)பல்கலனுக் கலந்ததுவோ? நின்பைம் பொற்கடிச்சோதி ஆடையாய்க் கலந்ததுவோ? என்று இரண்டு கேள்வியாகவைத்து ஒரு நிர்வாஹம். அன்றியே, நின் பைம் பொற்கடிச்சோதி(யானது) படிச்சோதியாடையாயும் பல்கலனாயும் கலந்ததுவோ? என்று ஒரு கேள்வியாகவே வைத்து மற்றொரு நிர்வாஹம். முதல் நிர்வாஹத்தில், படிச்சோதி யென்பது எழுவாயாக நிற்கும்; இரண்டாவது நிர்வாஹத்தில் அது ஆடைக்கு விசேஷணமாக நிற்கும். தேவரீர் தனியே திருவாபரணங்களும் பீதாம்பரமும் சாத்திக் கொண்டிருக்கவில்லை; திருமேனி யொளியும் கடிப்ரதேசத்தின் ஒளியும் பரவித் திருவாபரணங்களாயும் திவ்ய பீதாம்பரமாயும் புலப்படுகின்றவத்தனை—என்ற உத்ப்ரேக்ஷை பின்னடிகட்குத் தேர்ந்த பொருள். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் “கடீகாஞ்சி ஸஂவாஜிவாதுய– நீவீருஸஹூதுகாஂவீகஜொவாஙுஜெவூ—கடீகாந்தி ஸம்வாதி சாதுர்ய நீவீலஸத்ரத்நகாஞ்சீ கலாபாநுலேபம்” என்றருளிச் செய்தது இப்பின்னடிகளைத் தழுவியே யென்க.

இப்பாட்டில் ஆழ்வார் தமது திருவுள்ளத்தில் தோன்றின ஸம்சயங்களை விண்ணப்பம் செய்தார்; ஸம்சயங்கள் இரண்டு கோடிகளை யுடையனவாயிருக்குமாதலால் ஒவ்வொரு வாக்யத்தையும் திருப்பியும் யோஜித்துக் கொள்ளவேணும். உனது முடிச்சோதி முகச்சோதியாய் மலர்ந்ததுவோ என்பதாகவும் ஆக்கவேணும். இங்ஙனமே மற்ற அடிகளிலுங் கொள்க. இத்தால் பலித்தது என்னென்னில்; ஒவ்வோரழகில் ஈடுபடுங்காலத்தில் அஃதொன்றே சிறந்ததாய்த் தோன்றி நிற்குந்தன்மை தெரித்தவாறு. கடி—வடசொல். இடுப்பு. ... (க)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கட்டுரைக்கில்தாமரை நின்கண்பாதம்கையொவ்வா *
சுட்டுரைத்தநன்பொன் உன்திருமேனியொளியொவ்வாது *
ஒட்டுரைத்திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம்பெரும்பாலும் *
பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமால்பரஞ்சோதி! (உ)

| | |
|---|---|
| பரம் சோதி | பரஞ்சோதி யுருவனே!, |
| கட்டுரைக்கில் | சொல்லப் புகுந்தால் |
| நின் கண் பாதம் கை | உனது திருக்கண் திருவடி திருக்கைகளுக்கு |
| தாமரை | தாமரைப்பூ |
| ஒவ்வா | உவமையாகப் போராது; |
| சுட்டு உரைத்த நன் பொன் | நெருப்பிலிட்டுச் சுட்டு உரை கல்லில் உரைக்கப் படும் மாற்றுயர்ந்த பொன்னானது |
| உன் திருமேனி ஒளி ஒவ்வாது | உனது திவ்யமங்கள விக்ரஹ காந்திக்கு ஒப்பாகமாட்டாது; |
| இ உலகு | இவ்வுலகிலுள்ளோர் |
| ஒட்டு உரைத்து | த்ருஷ்டாந்தம் சொல்லி |
| உன்னை புகழ்வு எல்லாம் | உன்னைத் துதிப்பதெல்லாம் |
| பெரும்பாலும் | மிகவும் |
| பட்டுரை ஆய் | நிரர்த்தக சப்தமாகி |
| புற்கென்றே காட்டும் | அவத்யாவஹமாகவே தலைக்கட்டும். |

* * * [கட்டுரைக்கில்] அழகருடைய வடிவழகுக்கு ஒப்பாகப் போருவன இல்லாமையாலே, அவ்வழகைப்பற்றி உலகத்தார் சொல்லும் துதிமொழிகள் நிறக்கேடாகவே தலைக்கட்டுமென்கிறார்,

கட்டுரைக்கில்—வருணிக்கப் புகுந்தால் என்றபடி. அழகை நெஞ்சினாலும் கண்களாலும் ஆர அநுபவிக்க வேண்டுமேயொழிய, உபமானமிட்டு வாய் கொண்டு பேசுவது கூடாது என்பது இதில் தொனிக்கும். திருக்கண் திருவடி திருக்கை முதலிய அவயவங்களுக்குத் தாமரையை உவமையாகக் கவிகள் பேசுகின்றார்களெனினும் இது சிறிதும் பொருந்தாத த்ருஷ்டாந்தமே என்பது முதலடியின் கருத்து. இங்கு, „ஸுநீவவஜெ்ரஸஜ்வம் கூணொஜஜுறு நவொாஙஸஜ்கோரணஸ்ய வஸ்ருதாடி। ஸுநாவஜஷவம்நா கமோநிஜமஸ்நம் வநாஸ்ரீநாயஸ்ய விஸாஜுயொஜஷெ்ரமொ: ॥" என்ற ஸுந்தர பாஹுஸ்தவ ச்லோகம் அநுஸந்தேயம். இப்பாசுரத்தை யுட்கொண்டதே அது.

சுட்டுரைத்த நன்பொன் உன்திருமேனியொளி ஒவ்வாது=தேவரீருடைய அப்ராக்ருதமான திருமேனியின் ஸமுதாய சோபைக்கு, சுட்டுரைத்த நல்ல பொன்னை ஒப்பாகச் சொல்லுதலும் பொருந்தாது என்றபடி. நீலமேக ச்யாமளனான எம்பெருமானுக்குப் பொன்னை உவமை கூறுதற்கு ப்ரஸக்தியே யில்லாதிருக்க, அப்ரஸக்தப்ரதிஷேதம் இங்கு எதுக்குப் பண்ணுகிறது என்று சிலர் நினைக்கக்கூடும்; "பொன்னிவர்மேனி" என்றும் "கணபுரத்துப் பொன்மலைபோல் நின்றவன்தன்" என்றும் சொல்லுகிற கணக்கிலே அழகருடைய திருமேனி பொன்னிறமாகவே விளங்குதலால் ப்ரஸக்த ப்ரதிஷேதமே இங்குப் பண்ணுகிறது என்க. „ஷஸாஷிதாஸம் ஸவெஷா

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



𑌅𑌣𑍀𑌯𑌾𑌂𑌸 𑌅𑌣𑍀𑌯𑌸𑌾𑌮𑍍 । 𑌰𑍁𑌕𑍍𑌮𑌾𑌭𑌂 𑌸𑍍𑌵𑌪𑍍𑌨𑌧𑍀𑌗𑌮𑍍𑌯𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌪𑌰𑌮𑍍 ॥" "𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇" இத்யாதி ப்ரமாணங்களைக் கொண்டும் நிர்வஹிப்பர். ஹிரண்யவர்ணையான பிராட்டியின் சேர்க்கையாலுண்டான நிழலீட்டாலே எம்பெருமானும் ஹிரண்மயனாகத் தோற்றுவனென்ப.

எம்பெருமானுடைய திருமேனி நிறத்திற்கும் அவயவ சோபைகளுக்கும் பொருத்தமான உவமானங்கள் உலகில் இல்லாதிருக்கச் செய்தேயும் அவரவர்கள் சிற்சில உவமைகளைக் கூறிப்புகழ்வதானது, ஏதோ நெஞ்சிற்பட்டதைச் சொன்னவளவாய் அவத்யமாகத் தலைக்கட்டுமதொழிய வேறில்லை என்பன பின்னடிகள்.

"புற்கென்றே காட்டுமால்" என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—

"இவன் ப்ரதிபந்நத்தைச் சொன்னாய், விஷயத்தில் ஸ்பர்சியாதேயிருக்குமாகில் அங்குத்தைக்குப் புன்மையே காட்டும்படி என்னென்னில்; ரத்நமறியாதானொருவன் 'குருவிந்தக் கல்லோடு ஒக்குமிது' என்றால், அவ்வளவாகவிறே இவனுக்கு இதில் ப்ரதிபத்தி; அவ்வழியாலே அதுக்கு அவத்யமாமிறே; அப்படியே இவன் பண்ணும் ஸ்தோத்ரம் இங்குத்தைக்கு அவத்யமாயே தலைக்கட்டும்." என்பனவாம்.

பரஞ்சோதி! என்ற விளி இப்பாட்டிற் சொன்ன அர்த்தத்தை நிலைநாட்டுதற்காம். தாமரை முதலியவற்றை உவமையாகக் கூறுதல் தகாதென்று தெரிந்தும் இவ்வாழ்வார்தாமும் பிறரும் பலவிடங்களில் தாமரை முதலியவற்றையே உவமை கூறுதல் ஏன்? என்னில்; என்செய்வது! வாளா இருக்க முடியவில்லை; எம்பெருமானை வருணித்தே போதுபோக்க வேண்டியிருக்கிறது. வருணிப்பதென்று வாயெடுத்தால் தாமரை முதலியவற்றைப் பேசியே யாகவேண்டி வருகிறது. பேசுவதும் அநுதபிப்பதும், அநுதபிப்பதும் பேசுவதுமாயே காலங்கழிக்கலாகிறது. ஆத்ம ஸமர்ப்பண விஷயம்போலே இதுவுமொன்றென்க. ... (உ)

பரஞ்சோதிநீபரமாய் நின்னிகழ்ந்துபின் * மற்றோர்
பரஞ்சோதியின்மையின் படியோவிநிகழ்கின்ற *
பரஞ்சோதிநின்னுள்ளே படருலகம்படைத்த * எம்
பரஞ்சோதி! கோவிந்தா! பண்புரைக்கமாட்டேனே. (ங)

| | |
|---|---|
| பரம் சோதி | பரஞ்சோதியான பெருமானே! |
| நீ பரம் ஆய் | நீயே ஸர்வோத்க்ருஷ்டனாயிருக்க |
| நின் இகழ்ந்து பின் | உன்னைத்தவிர |
| மற்று ஓர் பரம் சோதி இன்மையின் | வேறொரு பரஞ்சுடர் இல்லாமையாலே |
| படி ஓவி நிகழ்கின்ற | உபமான மில்லாதபடியிருக்கின்ற |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| பரம் சோதி நின்னுள்ளே | 'பரம் ஜ்யோதிஸ்' என்று உபநிஷத்துக்களில் ஓதப்பட்டுள்ள உன்னுடைய ஸங்கல்பத்துக்குள்ளே | கோவிந்தா | நீர்மைக்கு எல்லையில்லாதவனே! |
| படர் உலகம் படைத்த | விசாலமான வுலகங்களைப் படைத்த | பண்பு | உனது ஸ்வரூப ஸ்வபாவங்களை |
| எம் பரம் சோதி | எம்பரஞ்சுடருடம்பனே! | உரைக்க மாட்டேன் | வருணிக்க சக்தனல்லேன். |

* * * [பரஞ்சோதி நீ பரமாய்.] ஆழ்வீர்! உலகர் ஒட்டுரைத்துப் பேசுவதெல்லாம் எனக்கு நிறக்கேடாக முடிகின்றதேயன்றிப் புகழ்ச்சியாக ஆகின்றதில்லை யென்கிறீர்; மயர்வற மதிநலமருளப் பெற்ற நீர் அழகாகப் பேசலாமன்றோ; எனக்கு நிறக்கேடாகாதபடிக்கு நீர் பேசலாமே என்ன; என்னுலுமாகாதென்கிறார்.

உலகில், வடிவழகிலோ செல்வத்திலோ சிறிது ஏற்றமுடைய ஒருவனைக் கண்டால், 'அப்பா! உன்னைப்போன்ற தேஜஸ்வி ஒருவனில்லை; உன்னைப் போன்ற செல்வன் எங்குமில்லை' என்று புகழ்வது உலக வியற்கையாக வுள்ளது; அப்படியல்லாமல் 'எந்த வுலகத்திலும் எந்த வ்யக்தியிடத்திலும் இப்படிப்பட்ட தேஜஸ்ஸு இல்லை' என்று திண்ணமாய்ச் சொல்லும்படியாகத் தேஜ: பூர்த்தியுள்ளது தேவரீர் பக்கலிலே யாகையாலே ஒப்புயர்வற்ற பரஞ்சோதியா யிருக்கின்றீர்; உலகங்களை யெல்லாம் ஸங்கல்ப ஏகதேசத்திலே ஸ்ருஷ்டித்து, அப்படி ஸ்ருஷ்டிக்கப்பட்ட லோகத்தினுடைய ஸ்வபாவம் தேவரீர்க்குத் தட்டாதபடி நிற்கிற தேஜோநிதியே! கோவிந்தனென நீர்மைக்கு எல்லை காணவொண்ணாதபடி யிருக்கிற பரம ஸுலபனே! எந்தக் குணந்தான் என்னுற் சொல்லலாகும்? மேன்மைக்கு எல்லை கண்டாலும் நீர்மை தரை காணவொண்ணாமேயிராநின்றதே! எதுவும் அநுபவித்துப்போமித்தனை யொழிய, பாவியேன் வாய் கொண்டு பேச நிலமாக இல்லையே! என்று தவிக்கிறார்.

இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"* நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச் சொல் * என்று நெஞ்சால் நினைக்க வொண்ணாதது சொல்லத்தானே போகாதிறே." ... ... ... (ரு)

> மாட்டாதேயாகிலும் இம்மலர்தலைமாஞாலம் * நின்
> மாட்டாயமலர்புரையும் திருவுருவம்மனம்வைக்க *
> மாட்டாதபலசமய மதிகொடுத்தாய் * மலர்த்துழாய்
> மாட்டேநீமனம்வைத்தாய் மாஞாலம்வருந்தாதே? (சு)

| | | | |
|---|---|---|---|
| மலர் தலை | திருநாபிக்கமலத்தைத் தலையிடமாகக் கொண்டு தோன்றிய | நின் மாடு ஆய | உன்னுடைய ஸ்வரூபத்தைப் பற்றியதான |
| இம் மா ஞாலம் | இப்பெரிய வுலகமானது | மலர் புரையும் திரு உருவம் | பூப்போலழகிய திவ்ய மங்கள விக்ரஹத்திலே |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| மனம் வைக்க மாட்டாதே ஆகிலும் | ஈடுபட முடியாதபடி யிருக்கச் செய்தேயும் |
| | (அதற்குமேலே) |
| மாட்டாத பல சமயம் மதி கொடுத்தாய் | தெளிவுக்குக் காரணமாகமாட்டாத பல வகைப்பட்ட பாஹ்ய குத்ருஷ்டிமத ப்ரசாரமும் பண்ணிவைத்து மோஹ ஜநகனுமாஞய்; (அவ்வளவுமல்லாமல்) |
| மலர் துழாய் மாட்டேநீமனம் வைத்தாய் | (இவ்வுலகத்தைத் திருத்திப் பணி கொள்ளும் வழியில் நோக்கம் செலுத்தாமல்) திருத்துழாய் மலர் முதலிய ஸ்வகீய போக்ய வஸ்துக்களின் அநுபவத்திலேயே நீ ஊன்றி யிருக்கின்ருய்; |
| மா ஞாலம் வருந்தாதே | (இப்படியாகில்) பெரிய இவ்வுலகம் இழந்தே போகாதோ ?. |

* * * [மாட்டாதேயாகிலும்.] "கோவிந்தா! பண்புரைக்க மாட்டேனே" என்ருர் கீழ்ப்பாட்டில். அது, புத்தி பூர்வகமாகச் சொல்லமாட்டாமையைத் தெரிவித்தபடி. அழகருடைய அழகு தானே பேசுவிக்கப் பேசுகிருரிதில்,—இம்மலர்தலை மாஞாலம் நின்மாட்டாய மலர்புரையும் திருவுருவம் மனம் வைக்க மாட்டாதேயாகிலும், மாட்டாத பலசமய மதி கொடுத்தாய்—என்கிற வரையில் ஒரு வாக்கியம். இவ்வுலகமானது இயற்கையாகவே தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹத்தில் நெஞ்சைச் செலுத்தமாட்டாதது; அதற்குமேலே தேவரீரும் அறிவைக் கெடுக்கவல்ல பல மதாந்தரங்களையும் பிரவர்த்தனம் செய்துவைத்தீர் என்றபடி. ஒன்ருேடொன்று சேராத பலபல அவைதிகமதங்களை தேவரீர் உலகில் பிரவர்த்திப்பித்ததனுல் ஏற்கனவே பகவத் விஷயத்தில் ருசியற்ற ஜனங்கள் பின்னையும் இதர விஷயங்களில் மண்டி மாண்டுபோவதற்கு வழி செய்ததாயிற்று என்றவாறு.

மலர்த்துழாய் மாட்டே நீ மனம் வைத்தாய் = கெட்டுப்போகிற ஜனங்களை மீட்பதிலேயாவது தேவரீருடைய திருவுள்ளம் ஊற்றமுற்றிருந்தால் குறையில்லையாகும்; பாழும் ஜனங்களைத் தேவரீர் கவனியாமல், திருமேனியிலுள்ள திருத்துழாய் மாலை முதலிய போக்ய வஸ்துக்களிலே தேவரீர் ப்ராவண்யம் கொண்டிராநின்றது. இப்படியாகில், மாஞாலம் வருந்தாதே ? = உலகமெல்லாம் தேவரீரை இழந்து போகவேண்டியதுதானே, விபரீத மதங்களை உலகில் பரவச்செய்யாதிருந்தால் அவ்வளவாக ஜனங்கள் கெட்டுப்போக ப்ரஸக்தியிராது; "வணங்குந் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபலவாக்கி அவையவைதோறு அணங்கும் பலபலவாக்கி" என்னும்படியாகப் பலசமய பேதங்களையுண்டாக்கி வைத்தீர்; அதனுல் ஜனங்கள் பலவகையாகப் பாழ்பட நேர்ந்தது; பாழ்பட்டாலும் திருத்தும் வழியிலே தேவரீர் ஊக்கங் கொண்டிருந்தாலாவது நன்ருகும்; அதுவுமில்லாமே ஸ்வபோக்யதையை யநுபவிப்பதிலேயே தேவரீர் ப்ரவணராயிருக்கையாலே இவ்வுலகம் இழந்தே போகவேண்டியதாயிற்றே! என வருந்திக் கூறியவாறு.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அழகருடைய வடிவழகிலீடுபட்டுப் பேசப்புகுந்த ஆழ்வார் திடீரென்று இவ்விஷயத்தை இங்கு ஏதுக்கு அருளிச் செய்கிறாரென்று சங்கை பிறக்கக்கூடும். கேண்மின் ; அழகருடைய பரம போக்யதையானது எம்பெருமான் றன்னையும் அஸ்தமிதாங்ய ஹாவனுக்கி யீடுபடுத்திக் கொள்ளுமது என்பதைத் தெரிவிக்கவே இப்பாசுரம் வந்ததென்க. மலர்த்துழாய் என்றது திவ்யபூஷண திவ்யாயுதாதி ஸகல போக்ய வஸ்துக்களுக்கும் உபலக்ஷணமென்றுணர்க.

மலர்த்துழாய் மாட்டே ’நீத்பாதிக்கு வேறொரு வகையாகவும் பொருள் கூறலாம் ; [மாஞாலம் வருந்தாது]—இவ்வுலகம் கஷ்டப்படாதபடிக்கு, [மலர்த் துழாய் மாட்டே நீ மனம் வைத்தாய்] ஒரு திருத்துழாயளவிலே நீ விருப்பங் கொண்டாய் என்க. ஸகல ஜனங்களும் எளிதான வொரு திருத்துழாய் கொண்டு நம்மை ஆராதித்து உய்வு பெறட்டுமென்று திருவுள்ளம்பற்றினாய் என்றபடி. இது ரங்கராமாநுஜஸ்வாமி பணித்தபடி.

மலர் தலை மாஞாலம்—விசாலமான இடங்களையுடைய பெரிய பூமண்டலத்திலுள்ள ஜனங்கள் என்றபடி. திருநாபிக் கமலத்தைத் தலையாக [பிறப்பிடமாக]வுடைய மாஞாலம் என்னவுமாம். இரண்டாமடியில், மட்டு என்பதை ‘மாட்டு’ என நீட்டிக்கிடப்பதாகக் கொண்டு, மதுஸ்யந்தியான மலர்போன்ற திருவுருவம் என்றும் பொருள் கொள்வர். ... ... (௬)

வருந்தாதவருந்தவத்த மலர்கதிரின்சுடருடம்பாய் *
வருந்தாதஞானமாய் வரம்பின்றிமுழுதியன்றாய் *
வருங்காலம்நிகழ்காலம் கழிகாலமாயுலகை *
ஒருங்காகவளிப்பாய்! சீர் எங்குலக்கவோதுவனே? (௭)

| | |
|---|---|
| வருந்தாத | ப்ரயத்ந ஸாத்யமல்லாத [ஸ்வாபாவிகமான] |
| அரும் தவத்த | அருமையான தவத்தின் பலனாக வந்ததோ என்னலாம்படியான |
| மலர் கதிரின் | பரம்பின கிரணங்களையுடைய |
| சுடர் உடம்பு ஆய் | தேஜோமய திவ்யமங்கள விக்ரஹயுக்தனாய் |
| வருந்தாத ஞானம் ஆய் | ஸ்வாபாவிக ஜ்ஞான யுக்தனாய் |
| வரம்பு இன்றி | எல்லை யில்லாதபடி |
| முழுது இயன்றாய் | எங்கும் வியாபித்திருப்பவனே! |
| வரும் காலம் நிகழ்காலம் கழிகாலம் ஆய் | எதிர்காலம் நிகழ்காலம் இறந்தகால மென்கிற மூன்று காலங்களுக்கும் நிர்வாஹகனாய் |
| உலகை | உலகங்களை |
| ஒருங்கு ஆக | ஒருபடிப்பட |
| அளிப்பாய் | ரக்ஷிக்குமவனே! |
| சீர் | (உன்னுடைய) திருக்குணங்களை |
| எங்கு | எங்கே |
| உலக்க | முடிய |
| ஓதுவன் | சொல்லுவேன் ? |

* * * [வருந்தாத.] காட்டாரிழவு பற்றிய கீழ்ப்பாட்டு ப்ரஸங்காத் ப்ரஸ்துதமத்தனை ; மூன்றாம் பாட்டோடு இப்பாட்டுக்கு நேரே ஸங்கதி காண்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



"கோவிந்தா! பண்புரைக்க மாட்டேனே" என்று சொல்லுவானேன்? நீர் ஸகல விலக்ஷணராகையாலே நம்மை நீர் பேசமாட்டீரோ் வென்று எம்பெருமான் திருவுள்ளமாக, எம்பெருமானே! என்னை நீ விலக்ஷணனுக்கி வைத்தாலும் உன் சுடர்ப்பொலிவை ஓர் எல்லையிலே நிறுத்திவைத்தாயில்லையே; எங்ஙனே நான் பேசுவது? என்கிறார்.

வருந்தாத அருந்தவத்த மலர்கதிரின் சுடருடம்பாய் = எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹம் எப்படிப்பட்டதென்றால் [வருந்தாத] ஒரு ப்ரயத்நத்தினால் ஸித்தமன்றிக்கே ஸ்வஸங்கல்ப மாத்ரத்தினால் பரிக்ருஹீதம். இன்னமும் எப்படிப்பட்டதென்னில், [அருந்தவத்த] பக்த ஜனங்களின் தவப்பயனே என்னலாம்படியிருக்கும். இன்னமும் எப்படிப்பட்டதென்னில், [மலர்கதிரின்] எங்கும் பரந்த வொளியை யுடையது. ஆக இப்படிப்பட்ட திருமேனியையுடைமை முதலடியால் சொல்லப்பட்டது. "வருந்தாத ஞானமாய்" என்றது, நம்மைப் போல் ப்ரயாஸப்பட்டு ஞானம் ஸம்பாதிக்க வேண்டாதே "ஸ்வாபாவிகீ ஜ்ஞாந பலக்ரியாச" என்கிறபடியே எம்பெருமான் இயற்கையாகவே விசாலமான ஞானம் படைத்தவனென்றவாறு.

[வரம்பின்றி இத்யாதி.] ஸர்வவ்யாபகனாய் முக்காலங்களிலும் உலகங்களை ஒருபடிப்பட ரக்ஷித்தருளுமவனே! உன்னுடைய ஸ்வரூப விளக்கமென்ன ஞான விளக்கமென்ன, உன்னுடைய ஸர்வவ்யாபகத்வமென்ன, ஸர்வரக்ஷகத்வமென்ன ஆகிய இவற்றாலுண்டான சிறப்பை ஏதோ ஏகதேசம் சொல்லுவேனத் தனையல்லது முடியச்சொல்லுவது எங்ஙனே? என்றாராயிற்று. உலக்க—முடிய.()

ஓதுவாரோத்தெல்லாம் எவ்வுலகத்தெவ்வெவையும் *
சாதுவாய்நின்புகழின் தகையல்லால்பிறிதில்லை *
போதுவாழ்புனந்துழாய் முடியினாய்! பூவின்மேல் *
மாதுவாழ்மார்பினாய்! என்சொல்லியான்வாழ்த்துவனே? (சூ)

| | |
|---|---|
| ஓதுவார் ஓத்து எல்லாம் | அத்யயனம் செய்கிறவர்களை யிட்டு நிரூபிக்கப் படுகின்ற ஸகல வேதங்களும் |
| எவ்வுலகத்து எவ்எவையும் | மற்றும் பல வுலகங்களிலு முண்டான பலவகைப்பட்ட சாஸ்த்ரங்களும் |
| சாது ஆய் | (பொய் கலவாமல்) உள்ளபடியே சொல்லுகின்றனவாகி |
| நின் புகழின் தகை அல்லால் | உன்னுடைய குண கீர்த்தனத்தில் தத்பரங்கள் என்கிற இவ்வளவல்லாமல் |
| பிறிது இல்லை | வேறில்லை; [ஒன்றையும் பூர்த்தியாகச் சொல்வன வல்ல என்றபடி-] |
| போது வாழ் | பூக்கள் விளங்கப் பெற்ற |
| புனம் | நல்ல நிலத்திலுண்டான |
| துழாய் முடியினாய் | திருத்துழாய் மாலையை திருமுடியிலணிந்துள்ளவனே! |
| பூவின் மேல் மாது வாழ் மார்பினாய் | தாமரைப்பூவில் தோன்றிய பெரிய பிராட்டியார் வாழுமிடமான திருமார்பை யுடையவனே! |
| என் சொல்லி | எத்தைச் சொல்லி |
| யான் வாழ்த்துவன் | நான் துதிப்பேன்?. |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * [ஓதுவார்.] எம்பெருமானைத் துதிக்க அவதரித்த வேதங்களும் பகவத்குண கீர்த்தனத்தில் அந்வயம் பெற்றவத்தனையே யொழிய வேறில்லை; ஆக, வேதங்களின் கதியே அதுவாகும்போது, நான் பேசித்தலைக்கட்டுவ தென்று ஒன்றுண்டோ என்கிறார். [ஓதுவாரோத்து] ஒத்து என்று வேதத்திற்குப் பெயர்; ஓதுவார்களை யிட்டு நிரூபிக்கப்படுவன வேதங்கள்; (எங்ஙனே யென்னில்;) ஆதர்வணம், தைத்திரீயம், காண்வம் என்று வ்யபதேசங்கள் விளைந்திருப்பதானது [illegible] மாகும். ஆசார்ய ஹ்ருதயத்தில்—"ஓதுவாரோத்தாகையாலே ஆதர்வணாதிகள் போலே இதுவும் பேர் பெற்றது" என்றவிடமும் அவ்விடத்து வியாக்கியான ஸ்ரீஸூக்தியும் காணத்தக்கன.

எவ்வுலகத்து எவ்வெவையும் = ப்ரமாண பூதங்களான சாஸ்த்ரங்கள் இந்நிலவுலகத்தில் இருப்பதுபோல் மற்றும் பல வுலகங்களிலுமுண்டே; ஸ்வர்க்க லோகத்திலும் ப்ரஹ்ம லோகத்திலும் ஆங்காங்குள்ளாருடைய ஞான வளவுக்குத் தக்கபடியே பிரமாணங்கள் பரந்திருக்கும். ஸ்ரீராமாயண மென்கிற ஒரு க்ரந்தத்தை யெடுத்துக் கொள்வோம்: இது இவ்வுலகில் ஸங்க்ரஹப்படியாயும் ப்ரஹ்மலோகத்தில் விஸ்தாரப்படியாயு மிருப்பது ப்ரஸித்தம், இங்ஙனமே மற்றுங்காண்க. ஆக இப்படிப்பட்ட ச்ருதீதிஹாஸ புராணாதிகள் யாவும் [சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை] உன்னுடைய புகழை வருணிப்பதில் ஸம்பந்தப்பட்டிருக்கின்றன என்பதுதவிர வேறில்லை; ஒரு குணத்தையும் முற்றமுடியச் சொன்னபாடில்லை என்றவாறு. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"உன்னுடைய கல்யாணகுண விஷயமான வித்தனை போக்கிப் புறம்பு போயிற்றில்லை; விஷயந்தன்னை எங்கு மொக்க விளாக்குலை கொண்டதுமில்லை."

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்—"𑌆𑌮𑍍𑌨𑌾𑌯𑌾𑌨𑌾𑌮𑌸𑍀𑌮𑍍𑌨𑌾𑌮𑌪𑌿 𑌹𑌰𑌿 𑌵𑌿𑌭𑌵𑍇 𑌵𑌰𑍍𑌷𑌬𑌿𑌨𑍍𑌦𑍋𑌰𑌿𑌵𑌾𑌬𑍍𑌧𑍌 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌲𑌾𑌭𑍋 𑌨 𑌤𑍁 𑌕𑌬𑌲𑌨𑌤𑌾:—ஆம்நாயாநாம் அஸீம்நாமபி ஹரிவிபவே வர்ஷபிந்தோரிவாப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாபோ ந து கபலநதா:" என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம் (இதன் கருத்தாவது—) மேகமானது மற்ற விடங்களில் மழை பெய்வதுபோல் கடலிலும் பெய்கிறது; அந்த மழைத்துளியினால் கடலுக்குச் சிறிதும் ஆதிக்ய முண்டாவதில்லை; பின்னை என்னென்னில்; மண்ணிலே மழை பெய்தால் அந்த மழைத்துளியானது ஸ்வஸ்வரூபங் கெட்டு மண்ணாய்ப் போகிறது; அதுவே கடலிற் பெய்தால் அப்படி உரு மாறாதே ஸ்வரூப லாபத்துடனே கிடக்கிறது. அதுபோல, எல்லா வாக்குக்களும் பகவத்வைபவம் தவிர மற்ற விஷயங்களில் சென்றால் ஸ்வரூபம் குலைந்து கெடும்: பகவத்வைபவத்தைப் பேசப்புகுந்தால் ஸ்வரூபம் நிறம் பெற்றிருக்கும் என்கிற இவ்வளவேயன்றி, பகவத்வைபவத்தைக் கபளீகரிக்கை வேதங்களுக்கும் அஸாத்யம் என்றவாறு.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



[போதுவாழ் இத்யாதி.] திருத்துழாய்மாலை முதலியவற்றாலுண்டான அழகைப்பற்றியோ, திருமார்பிலே பிராட்டி திகழ்வதனாலுண்டான அழகைப் பற்றியோ யாதும் யான் பேசத் திறமையுடையேனல்லேன் என்றபடி. ... (சு)

வாழ்த்துவார்பலராக நின்னுள்ளேநான்முகனை *
மூழ்த்தநீருலகெல்லாம் படையென்றுமுதல்படைத்தாய்! *
கேழ்த்தசீரரன்முதலாக் கிளர்தெய்வமாய்க்கிளர்ந்து *
சூழ்த்தமரர்துதித்தால் உன்தோல்புகழ்மாசூணதோ? (எ)

| | | | |
|---|---|---|---|
| வாழ்த்துவார் பலர் ஆக | துதிப்பவர்கள் பலருண்டாவதற்காக, | அரன் முதலா | சிவன் முதலான |
| மூழ்த்த நீர் உலகுஎல்லாம் படை என்று | 'காரண ஜலமான ஏகார்ணவத்துக்குள்ளே லோகங்களை யெல்லாம் உண்டாக்குவாயாக' என்று சொல்லி | அமரர் | தேவர்கள் |
| நின்னுள்ளே | உன்னுடைய ஸங்கல்பத்திலே | கிளர் தெய்வம் ஆய் கிளர்ந்து | மிகுந்த சக்தியையுடைய தெய்வங்களாகத் தோன்றி |
| நான்முகனை | பிரமனை | சூழ்த்து | ஒவ்வொருவிஷயங்களைப் பற்றிக் கொண்டு |
| முதல் படைத்தாய் | முந்துற ஸ்ருஷ்டித்தவனே! | துதித்தால் | தோத்திரம் பண்ணினால் |
| கேழ்த்த சீர் | சிறந்த (ஞானமுதலிய) குணங்களையுடைய | உன் | உன்னுடைய |
| | | தொல் புகழ் | நித்ய ஸித்தமான கீர்த்தி |
| | | மாசூணதோ | அவத்யம் பெற்றதாகாதோ?. |

* * * [வாழ்த்துவார்.] ஞானத்திற் சிறந்த பலபேர்கள் திரண்டு ஏத்தினாலும் அதுவும் பகவத் குணங்களுக்குத் திரஸ்காரமாகவே தலைக்கட்டு மென்கிறார். ["வாழ்த்துவார் பலராக"] இதில் ஆக என்பதை வினை யெச்சமாகக் கொண்டு, 'உன்னைத் துதிப்பவர்கள் பலர் உண்டாவதற்காக' என்று பொருளுரைப்பர் பலர்; பட்டர் அங்ஙனன்றியே ஆக என்றவிதனை வியங்கோள் வினைமுற்றாகக் கொண்டு "வாழ்த்துகின்றவர்கள் பலபேர்கள் இருக்கட்டுமே" என்று பொருளுரைப்பராம். எத்தனை பேர்கள் திரண்டு வாழ்த்தினால்தா னென்ன? வேதங்களிற் காட்டிலும் ஏற்றமாகத் துதிக்கவல்லார் யாருமிலரே? என்பது பட்டர் நிர்வாஹத்தின் கருத்து.

[நின்னுள்ளே யித்யாதி.] பெருமானே! உன்னாலே ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிரமனாலே ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்களா உன்னுடைய திருக்குணங்களை வருணிப்பதற்கு உரியார்? ,, [illegible]—சங்கராத் ஜ்ஞாநமந்விச்சேத்." என்றபடி சிவபிரான் ஞானத்திற் சிறந்தவனேயாயினும் அவனுமுட்பட மற்றும் பல அமரர்களும் திரண்டு ஏத்தினாலும் அவத்யமேயாகு மென்றாராயிற்று.

சூழ்த்து—ஒவ்வொருவர் ஒவ்வொரு குணத்தை வருணிப்பதாக வைத்துக் கொண்டு என்றும், திரள்திரளாகக் கூடி என்றும் பொருள்படும். ... (எ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மாசூணுச்சுடருடம்பாய் மலராதகுவியாது *
மாசூணுஞானமாய் முழுதுமாய்முழுதியன்றாய் *
மாசூணுவான்கோலத்து அமரர்கோன்வழிப்பட்டால் *
மாசூணுவுனபாத மலர்ச்சோதிமழுங்காதே? (அ)

| | |
|---|---|
| மாசு உணு | அவத்யம் சிறிது மில்லாமல் |
| சுடர் | சோதிமயமான |
| உடம்பு ஆய் | திருமேனியை யுடைய னாய் |
| மலராது குவியாது | ஸங்கோச விகாஸங்க ளற்று |
| மாசு உணு | (ஸம்சயம் விபரீதம் முதலான) அவத்ய மில்லாத |
| ஞானம் ஆய் | ஞானத்தை யுடையையாய் |
| முழுதும் ஆய் | ஸகல பதார்த்தங்களுக் கும் நிர்வாஹகனாய் |
| முழுது இயன்றாய் | அவை யெல்லாம் உன் பக்கலிலே வர்த்திக்கும் படி அவற்றுக்கு ஆச்ரய மானவனே! |
| மாசு உணு வான் கோலத்து அமரர்கோன் | குற்றமற்ற அப்ராக்ருத மான ஜ்ஞாநாதி பூஷ ணங்களை யுடையனாய் தேவர்களுக்குக் கோமா னாகிய பிரமன் |
| வழிப்பட்டால் | (உன்னைத்) தோத்திரம். பண்ணினால் |
| மாசு உணு உன பாதம் மலர் சோதி | குற்றமற்ற உனது பாதாரவிந்தத்தின் தேஜஸ்ஸானது |
| மழுங்காதே | குறையுற்றதாகாதோ? |

* * * [மாசூணுச்சுடர்] கீழ்ப்பாட்டில் சொல்லப்படாத அர்த்தம் இப்பாட் டில் என்ன சொல்லப்படுகிற தென்று விமர்சிக்கவேணும். அரன் முதலான அமரர்கள் ஏத்தினாலும் அவத்யம் என்றது கீழ்ப்பாட்டில்; அமரர்கோன் ஏத்து வதும் அவத்யம் என்கிறது இப்பாட்டில். அமரர்கோனென்று இந்திரனுக்குப் பெயராகப் பலரும் நினைக்கக்கூடும். சிவபிரானைச் சொன்னபிறகு அவனிலும் கீழ்ப்பட்டவனான இந்திரனை யெடுத்துரைக்க ப்ரஸக்தி யில்லாமையாலே இந்திர னென்கிற பொருள் ஏலாது. அமரர்களனைவர்க்கும் நான்முகன் கோனாதலால் அந்த நான்முகனை இங்கு விவக்ஷிப்பதாக நிர்வஹிப்பாருண்டு: கீழ்ப்பாட்டில் "அரன்முதலா" என்றிருப்பதனாலே நான்முகனும் அவ்விடத்திலேயே ஸங்க்ர ஹிக்கப்பட்டவனாகக் கூடுமென்று திருவுள்ளம்பற்றிய பட்டர் இங்கு அமரர் கோன் என்பதற்கு விலக்ஷணனாய் உத்ப்ரேக்ஷாஸித்தனான ஒரு பிரமனைப் பொருளாகப் பணிப்பராம். ப்ரஸித்தனான பிரமன், ப்ரஹ்ம பாவனை கர்ம பாவனை என்ற இரண்டு பாவனைகளையு முடையனாயிருப்பன்; இப்படியல்லாமல் ப்ரஹ்ம பாவனை யொன்றையே யுடையனான வொரு பிரமன் இருப்பதாக வைத் துக் கொள்வோம்; அவன் ஏத்தினாலும் அவத்யமேயாகும் என்கிறார் இப்பாட் டால்—என்பது பட்டருடைய திருவுள்ளம்.

[மாசூணுச்சுடருடம்பாய்] எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹம் எப்போதும் எவ்விதத்தினும் மாசு ஏறப்பெறுவதில்லை யென்க. ஸ்ரீராமக்ருஷ்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஞதி அவதாரங்களில் பரிக்ரஹிக்கப்பட்ட திருமேனிகளில் மாசு ஏறினதுபோல் தோற்றினும் அது அபிநயமாத்திரமே யென்ப: மநுஷ்ய ஸஜாதீயமாகக் கொண்ட திருமேனியாகையாலே மநுஷ்ய சரீர தர்மமான மாசு ஏறப் பெறுவது குற்றமன்று. அப்படியே அர்ச்சாவதாரங்களில் பரிக்ரஹிக்கப்படுகிற திரு மேனிகளில் திருமஞ்சனம் ஸமர்ப்பிக்கப் பெறுத காலங்களில் தென்படுகின்ற மாசும் ஆக்ஷேபிக்க வுரியதன்று.

"மலராது குவியாது" என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி :—

"*அரும்பினையலரை என்னும்படியாயிருக்கும்; 'யூவாகூமார:' என்கிறபடியே ஏககாலத்திலே இரண்டவஸ்தையும் சொல்லலாயிருக்கை." என்றுள்ளது. இத்தால், யௌவநமும் கௌமாரமும் எம்பெருமானிடத்தில் குடி கொண்டிருப்பதாகக் கூறினமை விளங்கும். நம்பிள்ளை உதாஹரித்த பெரிய திருமொழிப் பாசுரத்தில் அரும்பு என்றது கௌமார நிலைமையைக் கூறினபடி; அலர் என்றது யௌவன நிலையைக் கூறினபடி என்றும் கூறுவர். இங்கு உதா ஹரிக்கப்பட்ட யுவாகுமார: என்ற பிரமாணம் ருக்வேதத்தில் (அஷ்ட. 2-8-25) அத்யயநம் பண்ணப்பட்டு வரும் வாக்கியம். வைதிக பதபாடத்தில் "யுவா அகுமார:" என்று பதவிபாக முள்ளது. தேசிகன் பரமபத ஸோபானத்தில் ஒன்பதாவது பர்வத்தின் தொடக்கத்தில் "அகுமாரயுவாவாய்." என்றும், பாது காஸஹஸ்ரத்தில் *1."அகுமாரயுந:— அகுமாரயூந:" என்றும் (இங்ஙனமே யாதவாப்யுதயாதிகளிலும்) அருளிச் செய்யக் காண்கிறோம். வைதிக பதபாடம் பிரபலமாக வுள்ளது. இவற்றை யெல்லாமடியொற்றி யுவா அகுமார: என்றே கொள்ளத்தகும். நம்பிள்ளை திருவுள்ளமும் இதனில் வேறுபட்டதன்று. நநு, இங்ஙனே பதவிபாகமாயின் 'கௌமாரமின்றியே யௌவனமாத்திரமே யுள்ள வன்' என்று பொருளாகுமே; நம்பிள்ளை திருவுள்ளம் அப்படியில்லையே என்று சங்கிக்கவேண்டா; அகுமார: என்பதற்கு ஈஷத்குமார: [ஸ்வல்பம் கௌமார முள்ளவன்] என்று பொருள்: "ததாஹ்யஸ்யஹாவஸ்ய தஞ்ஞஸ்வம் தஞ்ஞ தா। அப்ராஸஸ்யம் விரோஸ்ய நஞ்யஷ்டே ப்ரகீர்த்திதா:" என்பர் வையாகரணர். குமார பருவம் கழியத்தக்கதாய் யௌவன பருவம் வந்து குடி புகத்தக்கதான நடுப்பருவத்தைச்சொன்னவாறு. இனி, (யூவாகூமார:) என் றெடுத்த பிரமாணத்தில் யுவா குமார: என்றே பதவிபாகம் விவக்ஷிதமென்னில், அந்தப் பிரமாணம் ருக்வேதத்திலுள்ளதன்றியே வேறிடத்ததாயிருத்தல் வேண் டும். இவ்விஷயத்தில் ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் பரிசீலனை செலுத்துக. (ரு)

மழுங்காதவைந்நுதிய சக்கரநல்வலத்தையாய் *
தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்துதோன்றினையே *
மழுங்காதஞானமே படையாகமலருலகில் *
தொழும்பாயார்க்களித்தால் உன்சுடர்ச்சோதிமறையாதே? (கூ)

* 1. பாதுகபத்ததி—17.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| தொழும் காதல் | தொழவேணுமென்கிற காதலையுடைய |
| களிறு | கஜேந்திராழ்வானை |
| அளிப்பான் | காப்பதற்காக, |
| மழுங்காத வைநுதிய சக்கரம் நல் வலத்தையாய் | மழுங்குதலில்லாத கூர்மை பொருந்திய வாயையுடைய சக்கரப் படையை அழகிய வலத் திருக்கையிலுடையையாய் |
| புள் ஊர்ந்து | பெரிய திருவடியை வாஹனமாகக் கொண்டு |
| தோன்றினை | (மடுவின் கரையிலே) வந்து தோன்றினாய்; (இஃது ஒக்கும்;) (இப்படியல்லாமல்) |
| மழுங்காத ஞானமேபடை ஆக | அமோகமான ஸங்கல்ப ரூப ஜ்ஞானமே கருவியாக |
| மலர் உலகில் | விசாலமான வுலகத்திலே |
| தொழும்பு ஆயார்க்கு | அடியவர்கட்கு |
| அளித்தால் | உதவினால் |
| உன் | உன்னுடைய |
| சுடர் சோதி | சிறந்த தேஜஸ்ஸு |
| மறையாதே | குன்றி விடாதோ? |

* * * [மழுங்காத.] எம்பெருமானது ஸௌலப்யாதிசயத்திலீடுபட்டுப் பேசுகிற பாசுரமிது. எம்பெருமானுடைய திருவவதாரங்களுக்கு மூன்றுவகையான பிரயோஜனங்கள் பேசப்பட்டுள்ளன: "𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌯 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌚 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌮𑍍। 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿 𑌯𑍁𑌗𑍇 𑌯𑍁𑌗𑍇 =பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே." என்று சிஷ்டர்களைக் காத்தல், துஷ்டர்களைத் தொலைத்தல், அற நெறியைத் தாபித்தல் என மூவகைப்பட்ட காரியங்களுக்காக எம்பெருமான் அப்போதைக்கப்போது திருவவதாரங்கள் செய்தருள்வதாகச் சொல்லப்பட்டது. இங்ஙனம் மூவகையாகச் சொல்லப்பட்டுள்ள பிரயோஜனங்களை ஆராய்ந்து பார்க்குமளவில் மூன்றுஞ் சேர்ந்து ஒரே பிரயோஜனமாகத் தேறும்; "பரித்ராணாய ஸாதூநாம்" என்பதனாற் சொல்லப்பட்ட ஸாதுஜந ஸம்ரக்ஷணமாகிற காரியம் துஷ்ட நிக்ரஹத்தையும் தர்மஸம்ஸ்தாபநத்தையும் உறுப்பாகக் கொண்டதாதலால் ஸாதுபரித்ராண மென்பதொன்றே அவதார ப்ரயோஜந மென்றதாகும். ஸாதுக்களை ஸம்ரக்ஷிக்க வேண்டில் அதற்காக எம்பெருமான் அவதாரம் செய்ய வேணுமோ? ஸகலஜகத் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை யெல்லாம் ஸங்கல்ப லவலேசத்தாலே நிர்வஹித்துப் போருகின்ற பரம சக்தியுக்தனான எம்பெருமான் அந்த ஸங்கல்பத்தைக் கொண்டே ஸாது பரித்ராணமும் செய்தருளக் கூடாமை யில்லையே; "மஹர்ஷிகள் வாழ்க; ராவணாதிகள் மாள்க." என்று பரமபதத்தில் வீற்றிருந்தபடியே ஸங்கல்பிக்குமளவால் தலைக்கட்டமாட்டாத காரியமில்லையே; அப்படியிருக்க, ஏதுக்கு நாட்டில் பிறந்து படாதன படவேணும்? என்று பலர் சங்கிப்பதுண்டு: அந்த சங்கைக்குப் பரிஹாரமாக இராநின்றது இப்பாசுரம்.

ஸாதுக்களை ரக்ஷிப்பதாவது என்ன? என்று ஆராயவேணும்: அவர்களது அநிஷ்டங்களைத் தவிர்த்து இஷ்டங்களைக் குறையறக் கொடுத்தருள்வது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தானே அவர்களை ரக்ஷிப்பதாவது. ஸங்கல்பத்தாலே அநிஷ்ட நிவ்ருத்தியைச செய்து முடிக்கக் கூடுமோனாலும் இஷ்ட ப்ராபணம் ஸங்கல்ப மாத்ர ஸாத்ய மாகாது; ஏனென்னில்; எம்பெருமானை நேரில் ஸேவிக்கப் பெறவேணுமென் றும், அவனைத் தழுவிமுழுசிப் பரிமாற வேணுமென்றும், குதூஹலங் கொண்ட அடியார்களின் இஷ்டத்தை எங்ஙனே ஸங்கல்பத்தினால் தலைக்கட்ட முடியும்? நேரில் எழுந்தருளி ஸேவை ஸாதித்தேயாக வேண்டுமன்றோ.

இவ்விஷயம் ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய ஒரு வார்த்தையினால் நன்கு விளங்கும்: முதலையின் வாயிலகப்பட்டுத் துடித்து 'ஆதிமூலமே!' என்று கதறின அவன், அக்கூக்குரல் கேட்டு அரை குலையத் தலைகுலைய மடுவின் கரையிலே வந்துநின்ற எம்பெருமானை நோக்கி "நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந!, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ." என்றான். [என்றேனு மொருநாள் அழிந்தே போகக் கூடியதான இந்த வுடலைப் பாதுகாத்துக் கொள்வதற்காக நான் கரைந்தே னில்லை; எம்பெருமானே! உன்னை நேரில் ஸேவித்து உன்றன் பொன்னடிகளில் இத்தாமரை மலர்களைப் பணிமாறுவதற்க்கவே கரைந்தேன் என்றான்.] இப் படிப்பட்ட பக்த சிகாமணிகளின் ஆசையை ஸங்கல்பத்தினால் தலைக்கட்டுதல் எங்ஙனே ஸாத்யமாகும்? ஒருநாளுமாகாது. இவ்விஷயம் இப்பாசுரத்தில் அருளிச் செய்யப்படுகிறது.

"மழுங்காத வைநுதிய சக்கரநல்வலத்தையாய்!" என்ற விளியின் கருத் தாவது—பரமபதத்திலிருந்து கொண்டே திருவாழியாழ்வானை ஏவி முதலையை முடித்திடவல்ல ஆற்றல் உனக்கு உண்டு என்று காட்டுவதாகும். அப்படியிருந் தும் புள்ளூர்ந்துவந்து பொய்கைக்கரையின்கண் காட்சி தந்தது எதற்காக வென்ன, அக்காரணம் இரண்டாமடியிற் கூறப்படுகிறது. களிற்றுக்குத் தொழுங் காதல் என்ற அடைமொழி கவனிக்கத்தக்கது. கஜேந்திராழ்வான் தொழவேணு மென்று கொண்ட காதலை நிறைவேற்றுதற் பொருட்டே புள்ளூர்ந்து தோன் றினை என்றவாறு.

அவதரித்தே செய்யத்தக்க காரியம் ஸங்கல்பத்தினால் செய்யப்போகாது என்பது பின்னடிகளிற் பேசப்பட்டது. [மலருலகில் தொழும்பாயார்க்கு மழுங் காத ஞானமே படையாக அளித்தால், உன் சுடர்ச்சோதி மறையாதே?] மழுங் காத ஞானமென்று பகவத் ஸங்கல்பத்தைச் சொல்லுகிறது. இருந்தவிடத்தே யிருந்து ஸங்கல்பத்தைக்கொண்டே ரக்ஷிக்கப்பார்க்கில் 'அடியார்க்காக ஓடிவந்து உதவுமவன்' என்கிற ப்ரஸித்தியாலுண்டாகும் தேசு மறைந்தொழியுமன்றோ?

திருவரங்கம் பெரிய கோயிலில் பெரிய திருவத்யயநோத்ஸவத்தில் இப் பாட்டை ஸேவியாநின்ற அரையர் "உன் சுடர்ச்சோதி மறையாதே" என்ற

3

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வளவிலே கோஷ்டியிலிருந்த சிற்றாட் கொண்டா னென்கிற ஸ்வாமி 'மறையும் மறையும்' என்றாராம்.

தொழும்பு—அடிமை; ஆயார்க்கு—ஆனார்க்கு; அடிமையானவர்களுக்கு என்றவாறு. ... ... ... (௯)

மறையாயநால்வேதத்துள்நின்ற மலர்ச்சுடரே *
முறையாலிவ்வுலகெல்லாம் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தாய் *
பிறையேறுசடையானும் நான்முகனுமிந்திரனும் *
இறையாதலறிந்தேத்த வீற்றிருத்தலிதுவியப்பே (௧௦)

| | | | |
|---|---|---|---|
| மறை ஆய | மறை பொருள்களை யுடையவையான | உமிழ்ந்து | (பிறகு) வெளிப்படுத்தி |
| நால் வேதத்துள் நின்ற | நான்கு வேதங்களுக்கும் உள்ளுறை பொருளாய் நின்ற | அளந்தாய் | (வாமன மூர்த்தியாய்) அளந்து கொண்ட பெருமானே!, |
| மலர் சுடரே | விகாஸத்தையுடைய சோதிவடிவானவனே! | பிறை ஏறு சடையானும் | சந்திரகலை தங்கிய சடையை யுடையனான சிவபிரானும் |
| முறையால் | முறைப்படி | நான்முகனும் | நான்முகக்கடவுளும் |
| இ உலகு எல்லாம் | இவ்வுலகங்களை யெல்லாம் | இந்திரனும் | தேவேந்திரனும் |
| படைத்து | ஸ்ருஷ்டித்து | இறை ஆதல் அறிந்து ஏத்த | நீயே ஸர்வஸ்வாமி யென்னுமிடத்தை யுணர்ந்து துதிக்குமாறு |
| இடந்து | (பிரளயத்திலே புக்கு) இடந்தெடுத்து | வீற்றிருத்தல் இது | எழுந்தருளியிருக்கு மிருப்பு |
| உண்டு | (மஹாப்ரளயத்திலே) திருவயிற்றிலே வைத்து நோக்கி | வியப்பே | ஆச்சரியமோ? |

* * * [மறையாய] பிரமன் முதலானாரும் உன் சேஷித்வத்தை யறிந்து ஆச்ரயிக்குமாறு நீ யிருக்குமிருப்பு ஆச்சரியமோ வென்கிறார். "மறையினுள் நின்ற" என்றாவது "நால்வேதத்துள் நின்ற" என்றாவது சொன்னால் போதுமே; 'மறையாய நால்வேதம்' எனபானேன்? என்னில்; கேண்மின்; வேதம் என்றும் மறை என்றும் பர்யாயம் எனினும் அர்த்தசக்தியில் வாசியுண்டு; வேதம் என்றால் விளங்கக்காட்டுவது என்று பொருள்; மறை என்றால் மறைத்துக் காட்டுவது என்று பொருள். ஆஸ்திகராயிருப்பார்க்குத் தன் அர்த்தங்களை வெளியிட்டுக் காட்டுதலால் வேதம்; பாஹ்யராய் நாஸ்திகரா யிருப்பார்க்கு மறைத்தலால் மறை; ஆகவே, மறையாய நால்வேத மென்றது தகுதியே. "துஷ்ப்ரக்ருதிகளுக்கு மறையாய் ஸத்ப்ரக்ருதிகளுக்கு வேதமாயிருக்கும்" என்றார் பெரிய வாச்சான்பிள்ளையும்.

முறையால்—உலகுக்கெல்லாம் ஸ்வாமியான முறைமையினால்; (அல்லது) பர்யாயந்தோறும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பின்னடிகட்கு ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் ;—" ஒருவன் ஒரு குழமணனைப்பண்ணி அதின் கழுத்திலே காக்கைப் பொன்னைத் தொற்றி, அதின் தலையிலே காலைவைத்து 'இது என்னை வணங்கிற்று' என்று இறுமாந்திருக்குமாபோலே 'நன்மைப்புனல் பண்ணி நான்முகனைப் பண்ணி' என்கிறபடியே உன்னாலே மணையப்பட்ட ப்ரஹ்மாவும் அவனாலே ஸ்ருஷ்டரானவிவர்களும் உன்னை யேத்த அத்தாலே இறுமாந்திருந்தாயென்றால் இது உனக்கு ஏற்றமோ ? ஹாஸ்யமாய்த் தலைக்கட்டு மத்தனையன்றோ."

வியப்பே—வியப்பன்று என்றபடி. ... ... (கo)

வியப்பாயவியப்பில்லா மெய்ஞ்ஞானவேதியனை *
சயப்புகழார்பலர்வாழும் தடங்குருகூர்ச்சடகோபன் *
துயக்கின்றித்தொழுதுரைத்த ஆயிரத்துளிப்பத்தும் *
உயக்கொண்டுபிறப்பறுக்கும் ஒலிமுந்நீர்ஞாலத்தே (கக

| | |
|---|---|
| வியப்பு ஆய | (அந்யத்ர) ஆச்சர்யகரமானவை |
| வியப்பு இல்லா | (தன்னிடத்து) ஆச்சர்யகரமாகப் பெருதவனும் |
| மெய் ஞானம் வேதியனை | மெய்யுணர்வுக்கிடமான வேதங்களால் பேசப்படுபவனுமான பெருமானை, |
| சயம் புகழார் பலர் வாழும் | ஜயசீலமான புகழையுடைய பல நல்லார் நவிலுமிடமான |
| தடம் குருகூர் | பெரிய திருநகரிக்குத் தலைவரான |
| சடகோபன் | ஆழ்வார் |
| தொழுது | ஸேவித்து |
| துயக்கு இன்றி | அவத்ய மொன்றுமின்றியே |
| உரைத்த | அருளிச் செய்த |
| ஆயிரத்துள் | ஆயிரத்தினுள்ளே |
| இ பத்தும் | இத்திருவாய்மொழி |
| ஒலி முந்நீர் ஞாலத்து | ஒலிமிக்க் கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் |
| உய கொண்டு | (உள்ள ஸம்ஸாரிகளை) உஜ்ஜீவனப்படுத்தி |
| பிறப்பு அறுக்கும் | ஸம்ஸார ஸம்பந்த மற்றவர்களாக்கும். |

* * * [வியப்பாய] இத்திருவாய்மொழிக்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார்.

வியப்பாய வியப்பில்லா=வேறோரிடத்திலே கண்டால் ஆச்சரியப்படத்தக்கவை யெல்லாம் இங்கே கண்டால் 'இது என்ன ஆச்சரியம்' என்று உபேக்ஷிக்கும்படியாயிருக்கு மென்க. உலகத்தில் ஒருவன் ஒருவனுக்கு நாலு பசுக்கள் கொடுத்தானென்றால் அது ஆச்சரியப்படத்தக்கதாயிருக்கும் ; பெருமாள் ஒருவனுக்குப் பதினாயிரம் பசுக்கள் கொடுத்தாரென்றாலும் ஆச்சரியப்படுதற்கு விஷயமில்லையே. ஸ்ரீராமாயண—அயோத்யா காண்டத்தில் முப்பத்திரண்டாம் ஸர்க்கத்திற் கூறப்பட்டுள்ள த்ரிஜட வ்ருத்தாந்தம் இங்கு ஸ்மரிக்கத்தகும்.

மெய்ஞ்ஞான வேதியனை=உள்ளது உள்ளபடியே ப்ரதிபாதிக்குமதான வேதத்தினால் போற்றப்படுபவன் என்க. சயப்புகழார்=ஜயம் என்ற வடசொல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சய மெனத் திரிந்தது; ஸம்ஸாரத்தை வென்று அதனால் புகழ்பெற்றவர்கள் [விரக்தர்கள்] பலர் வாழுமிடமாம் திருக்குருகூர்.

துயக்கு இன்றித் தொழுது உரைத்த ஆயிரம்—எந்த அர்த்தத்திலும் ஸந்தேஹ வுணர்ச்சியும் விபரீத வுணர்ச்சியு மின்றிக்கே ஸகலார்த்தங்களையும் ப்ரத்யக்ஷீகரித்துப் பேசின ஆயிரம். அதில் இப்பதிகம் கடல்சூழ்ந்த மண்ணுல கில் அஸத்கல்பராக வுள்ளவர்களை உஜ்ஜீவிப்பித்து ஸம்ஸாரஸம்பந்த மற்றவர்க ளாக்கும் என்றாயிற்று.

உபக்கொண்டு—உய்யக்கொண்டு. ... ... (கக)

அடிவரவு:—முடி கட்டுரைக்கில் பரஞ்சோதி மாட்டா, வருந்தா ஓதுவார் வாழ்த்துவார் மாகுணு, மழுங்கா மறைபா வியப்பா முந்நீர்.

முதல் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

முடியார் திருமலையில் மூண்டுநின்ற மாறன்
அடிவாரந் தன்னி லழகர்—வடிவழகைப்
பற்றி முடியு மடியும் படிகலனும்
முற்று மனுபவித்தான் முன்.

| | | | |
|---|---|---|---|
| முடி ஆர் | கொடுமுடிகள் நிறைந்த | முடியும் | கிரீடமும் |
| திருமலையில் | திருமாலிருஞ்சோலை மலையில் | அடியும் | சிலம்பும் |
| மூண்டு நின்ற | மண்டியனுபவித்த | படி கலனும் | திருமேனியிலுள்ள மற்ற ஆபரணங்களு மாகிய |
| மாறன் | ஆழ்வார், | | |
| அடிவாரம் தன்னில் | திருத்தாழ்வரையிலே | முற்றும் | முழுமையும் |
| அழகர் | அழகருடைய | முன் | முற்காலத்தில் |
| வடிவு அழகை பற்றி | திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தைப்பற்றி | அநுபவித் தான் | அநுபவித்துப் பேசினார். |

* * * கிளரொளியிளமை யென்கிற கீழ்த்திருவாய்மொழியினால் திருமாலிருஞ் சோலைமலையில் ஈடுபாடு கொண்டிருந்த ஆழ்வார், அத் திருமலையின் அடி வாரத்திலே எழுந்தருளியுள்ள அழகருடைய வடிவழகிலே ஊன்றி திவ்யாவயவ திவ்ய பூஷணங்களை நன்கு அனுபவித்து ஆழ்வாருளிச் செய்த திருவாய்மொழி இது என்றதாயிற்று. ... ... ... (*)

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

ஸம்ஶ்லிஷ்டாகல்பமநுபமஸுஷமம் வக்தி நிஸ்ஸீமதீப்தம்
ஸ்வாந்தஸ்வாதுஸ்வதேஹம் ஸுபஜநபதம் மண்டிதாங்கம் மஹிஷ்யா ।
ஸ்தோத்ராதிக்ராந்தகீர்த்திம் மலிநிமரஹிதௌஜ்ஜ்வல்யமிஷ்டௌபவாஹ்யம்
வீதாஶ்சர்யம் த்ரிணேத்ரப்ரப்ருதிஸுரநுதிம் சித்ரஸௌந்தர்யவித்தம் ॥

1. அங்கை : ஸம்ஶ்லிஷ்டாகல்பம். * முடிச்சோதியாய்.* தனது திவ்யாவயவங்களே திவ்யாபரணங்களாகப் பொருந்தப் பெற்றவன் என்கை.

2. அநுபமஸுஷமம். * கட்டுரைக்கில்தாமரை * உவமைக்குத்தகாத திவ்ய ஶோபையை யுடையவன்

3. நிஸ்ஸீமதீப்தம். * பரஞ்சோதிநீபரமாய்.* எல்லையில்லாதபடி ஜ்வலித்துக் கொண்டிருப்பவன். (தீப்திம் என்பதும் பாடம்; அப்போது, பஹுவ்ரீஹியாகும்.)

4. ஸ்வாந்தஸ்வாதுஸ்வதேஹம். * மலர்த்துழாய்மாட்டே நீமனம்வைத்தாய்.* தன் திருவுள்ளத்தையும் ஈடுபடுத்தவல்ல திருத்துழாயை யணிந்த திருமேனியை யுடையவன்.

5. ஸுபஜநபதம். * வருந்தாதவருந்தவத்த.* எளிதாக பஜிக்கக் கூடியவன்.

6. மண்டிதாங்கம் மஹிஷ்யா. * பூவின்மேல் மாதுவாழ்மார்பினய்.* ஸ்ரீமஹாலக்ஷ்மியினல் அலங்கரிக்கப்பட்ட திருமார்பை யுடையவன்.

7. ஸ்தோத்ராதிக்ராந்தகீர்த்திம். * சூழ்த்தமரர் துதித்தால் உன் தொல்புகழ்மாசூணதே * யார் துதித்தாலும் நிரக்கேடாம்படியான புகழையுடையவன்.

8 மலிநிமரஹிதௌஜ்ஜ்வல்யம். * மாசூணச் சுடருடம்பாய்.* அழுக்கற்ற விளக்கம் பொலிந்த திருமேனியை யுடையவன்.

9. இஷ்டௌபவாஹ்யம். * புள்ளூர்ந்து தோன்றினையே.* பெரிய திருவடியாகிற இஷ்ட வாஹனத்தை யுடையவன்.

10. வீதாச்சர்யத்ரிணேத்ரப்ரப்ருதிஸுரநதிம். * பிறையேறு சடையானும் நான்முகனும் இந்திரனும் மற்றொழிந்த தேவரும் போய்.* முக்கண்ணன் நான்முகன் ஆயிரங்கண்ணன் முதலான அமரர் புகழ நிற்பது வியக்கத்தகாதபடி யுள்ளவன்.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை முடிச்சோதியாய் என்கிற திருவாய்மொழியில் ஆழ்வார் [சித்ரஸௌந்தர்யவித்தம் வக்தி] அற்புதமான அழகு நிரம்பியவனாக அருளிச் செய்தார்.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.



## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஆத்யே த்ருதீயஶதகஸ்ய வநாத்ரிநாத:
ஸ்வாதிஶௌந்தர்யவாஹநாபிரவபு: ।
ப்ரஹ்மாதிவாங்மவிஷயம் ச மஹாநுபாவம்
ஸஞ்ஜயத்யுதயஶஸ்ஸஞ்ஜிதஸம்ஸஸ ॥

(கருத்து.) மூன்றும்பத்தின் முதல் திருவாய்மொழியில் ஆழ்வார் திருமாலிருஞ்சோலை யழகருடைய பாதாதிகேசாந்தமான அழகையும் திருவாபரண ஸௌந்தரியத்தையும், பிரமன் முதலானுருடைய துதிக்கும் எட்டாத பெருமேன்மையையும் பேசியருளினர் என்றதாயிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

—••❖••—

## மூன்றும்பத்து—இரண்டாந்திருவாய்மொழி,
## முந்நீர்ஞாலம்படைத்த.

———(०)———

அவதாரிகை :—மிக்க தாஹங்கொண்டவன், நல்ல தீர்த்தம் ஸமீபித்திருக்கச் செய்தே வாய் மூடிக்கிடந்தால் துடிக்குமாபோலே, ஆழ்வாரும், தமக்குப் பரமபோக்யமான விஷயம் ஸமீபித்ததாய்த் தமக்கு ஆசையும் மிக்கிருக்கச் செய்தே, விஷயத்தின் பெருமையாலே அது தம்மால் அநுபவிக்க அஸாத்யமாகவே, 'ப்ரக்ருதி ஸம்பந்தம் காரணமாக நம்முடைய கரணங்கள் ஸங்குசிதங்களாயிருக்கையாலன்றோ பகவத் விஷயத்தை நாம் பரிபூர்ணமாக அநுபவிக்க முடியாமல் துவள்கிறோம்' என்று கொண்டு வருத்தமுற்றவராய், எம்பெருமான் விசாலமான திருவுள்ளங்கொண்டு செய்தருளின கரணகளேபர ப்ரதானமும், ஜகத்தில் அப்பெருமான் பண்ணின பலபல திருவவதாரங்களும் என்னளவில் பயன்பட வில்லையே!; நான் ப்ரக்ருதி ஸம்பந்தம் கழிந்து எம்பெருமானைப் பெற்று முற்றூட்டாக அநுபவித்து ஆனந்திக்க அவகாசமில்லை யாகிறதே!' என்று நினைந்து நைந்து உள் கரைந்துருகியிருக்க, அவ்வளவிலே எம்பெருமான், அவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களும் இழக்க வேண்டாதபடி தான் திருவேங்கட மலையில் நின்றருளினபடியைக் காட்டி ஆழ்வாரை ஒருவாறு ஸமாதா

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



னப்படுத்தத் திருவுள்ளங் கொண்டு, 'ஆழ்வீர்! நீர் ஏன் துவள்கின்றீர்? நம்மைப் பூர்ணமாக அநுபவிக்க முடியாமைக்குக் காரணம் கரணஸங்கோசமென்று நீர் நினைக்கின்றீர் போலும்; அங்ஙனம் நினைக்கவேண்டா; கரணஸங்கோசமில்லாதவர்களான அமரர்களும் நம்மை அநுபவிக்குமிடத்து, அவர்களும் உம்மைப்போலவே யன்றோ துவள்வது; விஷயம் அளவிட முடியாததாகையாலே பரிபூர்ணாநுபவம் செய்ய முடியவில்லையே யென்கிற தளர்ச்சி உம்மோடு அமரர்களோடு வாசியற அனைவர்க்கும் பொதுவானதே காணும்; அதுபற்றி நீர் தளர வேண்டா; நீர் நினைத்தபடியெல்லாம் நம்மோடு பரிமாறலாம்படி நாம் வடக்குத் திருமலையிலே நின்றநிலையில் கிட்டி யநுபவித்து மகிழ்வீர்' என்ன; ஆழ்வாரும் ஒருவாறு ஸமாதான மடைந்தவராய் இனிமையோடே தலைக்கட்டுகிறார். (பத்தாம்பாட்டில் இனிமை காணத்தக்கது.)

பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கையில் பகவத்விஷய காலக்ஷேபம் நடவாநிற்க, இத்திருவாய்மொழி வந்தவாறே சீராமப்பிள்ளை கேட்டார்;—ஆழ்வார் இப்போது பரமபதாநுபவத்தை ஆசைப்பட்டிருந்தாராகில் அது ஒரு தேச விசேஷத்திலே சென்று அநுபவிக்க வேண்டியதாகையாலே இங்குக் கிடைக்கவில்லையே! என்று துடிக்கலாம்; இப்போதோ இவர்க்குப் பரமபதாநுபவம் விவக்ஷிதமாக இல்லை; ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் அநுபவிக்க ஆசை கொண்டிருந்தாலும் அவை ஒரு காலவிசேஷத்திலே கழிந்துவிட்டனவே! என்றுவது துடிக்கலாம்; இப்போது அவதாரங்களில் அநுபவாபேக்ஷை சென்றதாக இல்லாமையாலே அந்தத் துடிப்புக்கும் அவகாசமில்லை; கீழே நடந்த திருவாய்மொழியோ * முடிச்சோதியாய் * என்பது; அழகர் திருமலையிலே அனுபவிக்க இழிந்தவரிவர் என்பது அதனால் ஸ்பஷ்டமாகின்றது: அர்ச்சாவதாரத்திலுண்டான அநுபவாபேக்ஷை தலைக்கட்டாமற் போகக் காரணமில்லையே; மேன்மேலும் மனோரதப்படி அனுபவிக்கலாமே; இழந்து நோவு படுகைக்குக் காரண மென்கொல்?—என்று.

அதற்கு பட்டர் அருளிச் செய்த ஸமாதானம்:—ஆழ்வார் அநுபவிக்க ஆசைப்பட்ட விடம் பரமபதமானாலென்ன? வ்யூஹமானாலென்ன? விபவாவதாரமானாலென்ன? அர்ச்சாவதாரமானாலென்ன? அதுபற்றி ஒரு வாசியில்லை. தர்மியின் ஐக்யத்தாலே விஷயம் எங்கும் ஒருபடிப்படப் பூர்ணமாகவே யுள்ளது. அர்ச்சாவதாரங்களை நாமெல்லாரும் அனுபவிப்பது போலன்றே ஆழ்வார் அனுபவிப்பது. அங்கும் விஷயத்தைப் பூர்ணமாக அனுபவிக்க ஆசைப்பட்டார்; அது அஸாத்யமானமையாலே தளர்ந்தார்—என்று.

முந்நீர்ஞாலம்படைத்த எம்முகில்வண்ணனே *
அந்நாள்நீதந்த ஆக்கையின்வழியுழல்வேன் *
வெந்நாள்நோய்வீய வினைகளைவேரறப்பாய்ந்து *
எந்நாள்யானுன்னை யினிவந்துகூடுவேனே. (க)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

| | | | |
|---|---|---|---|
| முந்நீர் ஞாலம் படைத்த | கடல் சூழ்ந்த இவ்வுலகை ஸ்ருஷ்டித்தவனும் | வெம் நாள் | (உணர்ச்சி யுண்டான பின்பு) பரிதாபமயமான நாளிலே |
| எம் முகில் வண்ணனே | மேகத்தின் தன்மை போன்ற தன்மையையுடையவனுமான எம் பெருமானே! | நோய் வீய | வியாதிகள் தீரும்படி |
| | | வினைகளை | கரும பந்தங்களை |
| அந் நாள் | அந்த ஸ்ருஷ்டி ஸமயத்தில் | வேர் அற பாய்ந்து | வேர்ப்பற்றோடே அறுத்துத் தொலைக்கப் பெற்று |
| நீ தந்த | நீ கொடுத்தருளின | யான் | அடியேன் |
| ஆக்கையின் | சரீரத்தினுடைய | உன்னை | (மஹோபகாரகனான) உன்னை |
| வழி | வழியிலேயே | | |
| உழல்வேன் | நடந்து கெட்டுத் திரிகின்றேன்; | இனி எந்நாள் வந்து கூடுவன். | அடையப் பெறுவது இனி என்றைக்கோ? |

* * * [முந்நீர்ஞாலம்.] உன்னை யடிபணிந்து உய்வதற்காக நீ தந்தருளின சரீரத்தைக் கொண்டு உன்னைப் பணியாமல் அவ்வுடலின் வழியே யொழுகி அநர்த்தப்பட்டேன்; நான் உன்னை என்று ஸேவிக்கப் பெறுவது என்று ஆர்த்தராய்க் கூப்பிடுகிறார்.

முந்நீர் = ஆற்று நீர், ஊற்று நீர், வேற்று நீர் [மழை நீர்] என்னும் மூன்று வகை நீரை யுடையது எனப் பண்புத் தொகையன்மொழியாகிய காரணப் பெயரென்பது பழைய கொள்கை. இதனை மறுத்துக் கூறுகின்றார் அடியார்க்கு நல்லார்; ஆற்று நீரென்பது மழைநீரே யாகையாலும், இவ்விரண்டு மில்லாத போது ஊற்றுநீரு மில்லையாகையாலும் இவற்றை முந்நீரென்று சொல்வது பொருந்தாதென்று சொல்லி வேறு பொருள் கூறுகின்றார்; அதாவது—முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பதாம். முச்செய்கையாவது—மண்ணைப் படைத்தலும் மண்ணை யழித்தலும் மண்ணைக் காத்தலுமாம். நீரினின்று நிலம் பிறந்ததென வேதமோதுதலால் படைத்தலும், நீரின்றி உலகம் பிழையாதாதலால் காத்தலும், இறுதியில் நீரினால் மூடப்பட்டு உலகம் அழிதலால் அழித்தலும். ஆக முத்தொழில்களும் கடலுக்கு உரியனவாம். நச்சினார்க்கினியர் கருத்தும் இதுவே. நம்பூர்வாசாரியர்கள் மூன்றுவகை நீரையுடையதென்னும் பொருளையே ஆதரிப்பர். இவ்விடத்து ஈட்டிலும் இப்பொருளே யுள்ளது. முந்நீர் என றன்னகரமாகப் பாடமோதிப் பழைய நீர் என்றுரைத்திருப்பது முண்டு. ஆதியிற் கடவுள் நீரையே படைத்தாரென்று நூல்கள் கூறும். „ ஃவவனவ ஸஸஜா—ஷௌ—அப ஏவ ஸஸர்ஜாதௌ." என்கிற மநுஸ்மிருதிப்ரமாணமும் இங்கு ஈட்டில் உபாத்தம்.

எம்முகில் வண்ணனே! = எம்பெருமான் உலகங்களைப் படைத்ததெல்லாம் ஆழ்வார் தமக்காகவே யென்று கொண்டிருக்கின்றமை எம் என்பதனால் தொனிக்கும். முகிலுக்கும் எம்பெருமானுக்கும் ஸாம்யம் நிறத்தினால் மாத்திர

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ன்று; தன்மைகள் பலவற்றுளு முண்டு: சில தன்மைகளை இங்குக் குறிப்பிடு வோம்;—

1. பெய்யவேண்டு மிடத்தளவுஞ்சென்று பெய்யும் மேகம்; எம்பெருமானும் "வந்தருளியென் னெஞ்சிடங்கொண்ட வானவர் கொழுந்து" என்றும் "வஹ்நிஸ்ஸமஹிஜாவெவவ—பத்ப்யாம் அபிகமாச்சைவ." என்றுஞ் சொல்லுகிற படியே ஆங்காங்குச் சென்றருளி அநுக்ரஹிப்பன்.

2. மின்னலுள்ள காலம் நீர் நிரம்பியிருக்கும் மேகம்; எம்பெருமானும் மின்னல்போன்ற பிராட்டியோடு கூடியிருக்குங் காலத்திலே க்ருபாரஸம் விஞ்சப் பெற்றிருப்பன். "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்ற முமுக்ஷுப்படி திவ்ய ஸூக்தியுங் காண்க.

3. மொண்ட இடத்திலும் பெய்யும் மேகம்; தனக்கு உபதேசித்தவர்களுக்கும் உபதேசிக்குமவன் எம்பெருமான்: வஸிஷ்டாதிகளுக்கும் ஜ்ஞானப்ரதானம் பண்ணினனிறே ஸ்ரீராமபிரான். சித்திரகூடத்திலே வஸிஷ்டன் பெருமாள் பக்கலில் சில தர்ம ஸூக்ஷ்மங்கள் கேட்கப் பெற்றானாயிற்று. "ஸொஹம் தெ விதுராவாய-ஃ தவெவவ வாஸ்தவ। ஊ க்ஷம் வச நம் கூவ-ஷு நாதி வதெ-ஷஸ்தாம்ஹதிழ" [ஸ்ரீராமா! உன்றன் தந்தைக்கும் நான் ஆசாரியனுகையாலே என் சொல்வழியே நீ நடக்கக்கடவை; மீறி நடக்கலாகாது.] என்று செருக்கிக் கிளர்ந்த வஸிஷ்டனையும் வாய் மூடுவித்தார் பெருமாள் சில தரும மருமங்களைச் சொல்லி.

4. பெய்யப்பெறாத காலத்திலே வறக்கும் மேகம். எம்பெருமானும் த்ரௌபதிக்கு ஆபத்திலே அருகேயிருந்து உதவப்பெறாத குறைக்காக "ஊணம் வ்ருவ்ருஷிவ ஜெஹ்ருஊயாந்நாவஸவ-ஷ்தி" [பரிபவப்பட்டுக் கதறின பாஞ்சாலிக்கு நான் அப்போது தூரஸ்தனாயிருந்த துயரம் கடன் வளர்ந்த துயரம்போல் எனது நெஞ்சைவிட்டு நீங்கலது] என்று நெஞ்சுலர்ந்து பேசினனிறே.

5. இன்ன காலத்திலே மேகம் பெய்யுமென்று அறுதியிடவல்லார் ஆருமில்லை: பெய்யவேண்டிய காலத்தில் பெய்யாதொழியவும், பெய்வதற்கு ஸம்பாவனை யில்லாத காலத்தில் அசிந்திதமாக வந்து பெய்யவுங் கடவது மேகம். எம்பெருமான் படியுமப்படியே; "வந்தாய் போலே வாராதாய் வாராதாய் போல் வருவானே" என்றது காண்க. த்ரௌபதிக்கு ஆபத்திலே வந்து முகங்காட்டாதொழிந்தான். அபேக்ஷாநிரபேக்ஷமாகத் * தாவியன்றுலக மெல்லாம் தலைவிளாக் கொண்டான்.

6. 'வனத்திடரை ஏரியாக வெட்டியாயிற்று; நீ மழை பெய்தாக வேணும்' என்று நிர்ப்பந்தித்து விளைப்பிட வொண்ணாதது மேகம்; எம்பெரு



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மான்படியும் இங்ஙனேயாம்; * பெண்ணுலாஞ் சடையினானும் பிரமனும் (உன்னைக்) காண்பான் எண்ணிலா வூழியூழித் தவஞ் செய்தார் வெள்கிநிற்ப, விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கு அன்றருளை யீந்தவனிறே.

7. ஜலஸ்தல விபாகமின்றியே பெய்யும் மேகம். எம்பெருமானும் நீசர் உத்தமர் என்னும் வாசியின்றியே அருள் பொழிவன். [ஶ்வபாய கீஶாய ராக்ஷஸாய.] "வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன் மகன் அவன் தம்பி ஆனை அரவம் பறையாளன் பெற்ற மைந்தன்". (ஆசார்ய ஹ்ருதயம்.) என்னும்படியிறே பகவத் விஷயீகாரம் பெற்றவர்களிருப்பது.

8. "கர்ஜதி ஶரதி ந வர்ஷதி வர்ஷதி வர்ஷாஸு நிஸ்ஸ்வநோ மேக: = கர்ஜதி சரதி ந வர்ஷதி வர்ஷாதி வர்ஷாஸு நிஸ்ஸ்வநோ மேக:." [மேகம் சரத்காலத்தில் வேறுமனே கர்ஜித்துப் போய்விடும், மழை பெய்யாது; பெய்யுங் காலத்தில் அடம்பரமறப் பெய்யும்.] எம்பெருமான் குசேலனுக்கு அருள் செய்தபடி இங்ஙனேயிறே.

9 விராடபர்வ காலக்ஷேபத்திற்கு வரும் மேகம்; பகவத்விஷய காலக்ஷேபங்களிலே வந்துநிற்பன் எம்பெருமான்: ஸ்ரீசைலேசதயாபாத்ர மென்று வந்தானிறே ஸ்ரீரங்கநாதன் பெரிய ஜீயர் கோஷ்டியிலே.

10. சுக்திகளிற் பெய்து முத்தாக்கும் மேகம்;—அடியார்க்கு இன்ப மாரியாகிய எம்பெருமானுடைய கடாக்ஷ தாரையும் ஆழ்வாராசார்யர்களிடத்தே ப்ரவஹித்து மிக்க பயன் விளைக்குமிறே.

11. "விண்ணில மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்" இத்யாதிப் படியே தூதுவிடப்படும் மேகம்; எம்பெருமான்றானும் * இன்னார் தூதனென நின்றான்; * கோதை வேலைவர்க்காய் மண்ணகலங் கூறிடுவான் தூதனாய் மன்னவனால் சொல்லுண்டான்.

12. "த்வயி வர்ஷதி பர்ஜந்ய ஸர்வே பல்லவிதா த்ருமா:। அஸ்மாகமர்க்கவ்ருக்ஷாணாம் பூர்வபத்ரேஷு ஸம்ஶய: = த்வயி வர்ஷதி பர்ஜந்ய! ஸர்வே பல்லவிதா த்ருமா:, அஸ்மாகமர்க்கவ்ருக்ஷாணாம் பூர்வபத்ரேஷு ஸம்ஶய:." [மழை பெய்ய எல்லா மரங்களும் தளிர்க்கும்; எருக்கிலை போல்வன வீழ்ந்தொழியும்.] ஆகவே, மழை சிலர்க்குத் தீங்கு; சிலர்க்கு நன்மை. எம்பெருமான்படியு மப்படியே. "கஞ்சன்நாள்கவர் கருமுகி லெந்தாய்!" "தாயர்மகிழ ஒன்னார் தளர." "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்" இத்யாதி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



13. "எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள், மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்" என்கிறபடியே பயிர்கள் வேறுபுகலற்று எதிர்பார்க்கப் பெற்றிருக்கும் மேகம். "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று அநந்யகதிகளால் ப்ரதீக்ஷிக்கப்படுவன் எம்பெருமான்.

14. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத், துப்பாயதூஉம் மழை" (திருக்குறள்) என்கிறபடியே அன்னத்தின் அபிவிருத்திக்கு ஹேதுவாகையாலே போகஸாதநமாயும், விடாய்தீரப் பருகப்படுகையாலே ஸ்வயம் போக்யமாயுமிருக்கும் மேகம்; "உவாயொவெயசெவ தஜிஹ தவ தசவ—உபாயோ பேயத்வே ததிஹ தவ தத்வம்" என்கிறபடியே ப்ராபகனும் ப்ராப்யனுமிறே எம்பெருமானிருப்பது.

15. எத்தனை கண்ணநீர் விழவிட்டாலும் விருப்பமில்லாதவன்று வாளாகிடக்கும் மேகம்; பரதாழ்வான் "ஊவிஶ ஊவிவெவஊாய—ஶிரஊாயாவிதொ ஜயா। ஹாதுஶிஷூஊ ஊஸஊ ஷாஊாடு கது—ஊஹ—ஊவி = ஏபிச் ச ஸசிவைஸ் ஸார்த்தம் சிரஸா யாசிதோ மயா, ப்ராதுச் சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரஸாதம் கர்த்துமர்ஹஸி" என்று பலருடனே சித்ரகூட பரிஸரத்திலே போந்து கண்ணநீரை விழவிட்டு வேண்டின விடத்தும் "ஊகாஊ ஊநவாவெஂவ" என்று மநோரதம் தலைக்கட்டப் பெறுமலே மீண்டானிறே.

இங்ஙனே மற்றும்பல உவமைப் பொருத்தங்களும் கண்டுகொள்க.

அந்நாள் நீதந்த ஆக்கையின் வழியுழல்வேன் = கரணகளேபரங்களையிழந்து இறகொடிந்த பக்ஷிபோலே கிடந்த காலத்து, உன்னை யடிபணிந்து உஜ்ஜீவிக்கைக் குறுப்பாக நீ கொடுத்தருளின தேஹத்தைக் கொண்டு வாழகில்லாமல், தேஹம் செல்கிற வழியே நானும் செல்பவனுனேன்; நீ எண்ணின எண்ணம் மாறுபாடாகப் பலித்ததுகாண் என்றவாறு.

பின்னடிகளின் கருத்து :—உன்னைப் பிரிந்து தரிக்ககில்லாமல் செல்லுகிற நாளில், பிரிந்து நோவுபடுகைக்கீடான பாவங்களை வேரறுத்து உன்னடி சேர்ந்து உய்வது என்றைக்கோ? ... ... ... (க)

வன்மாவையமளந்த எம்வாமனா * நின்
பன்மாமாயப்பல்பிறவியில் படிகின்றயான் *
தொன்மாவல்வினைத் தொடர்களைமுதலரிந்து *
நின்மாதாள்சேர்ந்து நிற்பதெஞ்ஞான்றுகொலோ. (உ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| வல் | வலிமைதங்கிய |
| மா | பெரிய |
| வையம் | பூமியை |
| அளந்த | (மஹாபலியிடத்தில் பிக்ஷை பெற்று) அளந்து கொண்ட |
| எம் வாமனா | எமது வாமன மூர்த்தியே ! |
| நின் பல் மா மாயம் | உனது திருவிளையாடலுக்குக் கருவியான, குண வேற்றுமையாலும் காரிய வேற்றுமையாலும் பலவகைப்பட்ட பெரிய மாயையாகிய பிரகிருதி மூலமான |
| பல் பிறவியில் | தேவர் முதலிய பலவகைப் பிறப்பில் |
| படிகின்ற | பொருந்தி வாழ்கின்ற |
| யான் | நான்; |
| தொல் | பழமையான |
| மா | பெரிய |
| வல் | உறுதியான |
| வினை | பாவங்களினுடைய |
| தொடர்களை | அநுபந்தங்களை |
| முதல் அரிந்து | வேரோடே அறுத்து |
| நின் | (ப்ராப்யனான) உன்னுடைய |
| மா தாள் | சிறந்த திருவடிகளை |
| சேர்ந்து | அடைந்து |
| நிற்பது | நிலை பெற்றிருப்பது |
| எஞ்ஞான்று சொல் | என்றைக்கோ ? |

* * * [வன்மாவையமளந்த] ஜலஸ்தல விபாகமில்லாமல் எல்லார் தலைமேலும் நீ திருவடிகளை வைத்தருளின காலத்தையும் தப்பின நான் இனி உன் திருவடிகளில் வந்து சேர்வது என்றைக்கோ வென்கிறார். இங்கே ஈட்டின் அவதாரிகை பரமபோக்யம். அதாவது—" உம்முடைய உடம்பு கொண்டு நாமிருந்தவிடத்தே வந்துகிட்ட மாட்டிற்றிலீராகில், நம்முடம்பைக் கொண்டு நீரிருந்தவிடத்தே வந்து கிட்டினோமே; வாமந வேஷத்தைக் கொண்டு மஹாபலி முன்னே வந்து நின்றோமே; அங்கே கிட்ட மாட்டிற்றிலீரோ வென்ன அதுக்கும் தப்பினேனென்கிறார்" என்று.

மிகக் கடினமான பூமிப்பரப்பை யெல்லாம் மெல்லிய திருவடிகளாலே அளந்து, அந்தச் செயலாலே என்னை யீடுபடுத்திக் கொண்ட வாமன மூர்த்தியே! யாவரையும் மயக்க நீ வைத்த மூலப்ரக்ருதியிலே தேவ மநுஷ்யாதி ரூபத்தாலே பலவகைப்பட்ட பிறப்புக்களில் சிக்கிக்கொண்டே கிடக்கிற நான், ஸர்வேச்வரனான உன்னாலும் அறுக்க முடியாதபடியான பாபத் தொடர்ச்சிகளை முதலிலே யறுத்து உன்னுடைய திருவடிகளைச்சேர்ந்து நான் நிலை பெறுவது என்றைக்கோ என்றாராயிற்று.

இப்பாசுரத்தின் இனிமையே வடிவெடுத்த ஆறுயிரப்படி காண்மின் ;— " இப்படி நீதந்த உபகரணத்தைக் கொண்டு பின்னையும் நான் ஸம்ஸார ஸமுத்ரத்திலே போய்விழுமளவில் என்னை யெடுத்தருளுகைக்காக இங்கே புகுந்தருளினாய்; பின்னையும் உனக்கெட்டாததொரு படி நான் அந்த ஸம்ஸாரமாகிற கடலினுள்ளே போய் அழுந்தா நின்றேன். இப்படி இக்கடலிலே யழுந்துகைக்கு ஹேதுவாய் அநாதிஸித்தமாய் மஹாபலவத்தாயிருந்த என்னுடைய பாப பரம்பரைகளை முதலரிந்து உன்னுடைய நிரவதிக போக்யமான திருவடிகளை நான் சேர்ந்து பின்னையொரு காலமும் பிரியாதே நிற்பது என்றோ வென்கிறார்." (உ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கொல்லாமாக்கோல் கொலைசெய்துபாரதப்போர் *
எல்லாச்சேனையும் இருநிலத்தவித்தவெந்தாய் ! *
பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலறு *
சொல்லாயானுன்னைச் சார்வதோர்சூழ்ச்சியே. (௫)

| | | | |
|---|---|---|---|
| கொல்லா | கொல்லுகைக்குக் கருவி யல்லாமல் | பொல்லா | துன்பங்களுக்குக் காரணமான |
| மா | குதிரையை நடத்துவ தான | ஆக்கையின் | சரீரத்தினுடைய |
| கோல் | சாட்டையே கருவியாக | புணர்வினை | சம்பந்தத்தை |
| கொலை செய்து | (எதிரிகளை) முடித்து | அறுக்கல் அறு | அறுக்க எண்ணினாலும் அது அறபடாது; |
| பாரதம் போர் | பாரத யுத்தத்தில் | யான் | (இதிலே அகப்பட்ட) நான் |
| எல்லாச் சேனையும் | (பூமிக்குச் சுமையா யிருந்த) எல்லாப் படைகளையும் | உன்னை | (ஸர்வ சக்தனான) உன்னை |
| இரு நிலத்து | இப்பெரிய பூமியில் | சார்வது | கிட்டுவதாகிய |
| அவித்த | தொலைத்த | ஓர் சூழ்ச்சி | ஒருபாயத்தை |
| எந்தாய் | ஸ்வாமியே!, | சொல்லாய் | சொல்லியருள். |

* * * [கொல்லாமாக்கோல்.] ஸ்ரீவாமன மூர்த்தியான காலத்தில் தப்பினவர்களையும் விஷயீகரிப்பதற்காக ஸ்ரீக்ருஷ்ணனாய் வந்து அவதரித்த காலத்திலும் தப்பினே னென்கிறார்.

பாரதப்போரில் பஞ்ச பாண்டவர்களே எதிரிகளை முடித்தார்கள் என்று அவிவேகிகள் நினைப்பர்கள்; அவர்களை வியாஜ மாத்திரமாக வைத்துக் கொண்டு கண்ணபிரானே பூமியின் பாரங்களைத் தொலைத்தருளினன் என்பது உண்மை: அப்போது கண்ணபிரானது திருக்கையில் ஒரு கோல் இருந்தது; அதுதான் துரியோதனுதிபரைக் கொலை செய்யக் கருவியாயிருந்தது. அதனை ஆழ்வார் இங்குக் "கொல்லாமாக் கோல்" என்கிறார். கொல்லுகைக்குக் கருவியாக அல்லாமல் குதிரையை நடத்தக்கடவதான முடகோலாலே கொலை செய்ததாக அருளிச் செய்கின்றார். இங்கு உணரவேண்டிய விஷயமாவது :—கண்ணபிரான் பள்ளிகொண்டிருக்கும்போது துரியோதனனும் அர்ஜுநனுமாகப் படைத்துணை வேண்டிவந்தார்கள். துரியோதனன் தான் மஹா ப்ரபுவாகையாலே திருமுடிப் பக்கத்திலே யிருந்தான். அர்ஜுநன் திருவடிவாரத்திலே யிருந்தான். கண்ணபிரான் பள்ளியுணர்ந்து எழுந்தவுடனே திருவடிவாரத்தில் அர்ஜுநனை முந்துறமுன்னம் கடாக்ஷிக்கும்படியாயிற்று. பிறகு துரியோதனனையும் பார்த்தான். இருவரையும் குசலப்ரச்நம் பண்ணிவிட்டு 'நீங்கள் இங்கு வந்த காரியம் என்ன ?' என்று கேட்கையில், துரியோதனன் 'நான் முன்னே வந்தேன்; என் காரியமே முக்கியமாகச் செய்ய வேணும்' என்ன; அது கேட்ட கண்ணபிரான் 'நீ முன்னம் வந்திருக்கலாம்; ஆனாலும் நான் முன்னம் பார்த்தது

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அர்ஜுநனையே ; அது கிடக்கட்டும் : உங்களுடைய அபேக்ஷிதம் இன்னதென்று சொல்லிக்கொள்ளுங்கள்'' என்ன ; 'இப்போது நடக்கப்போகிற யுத்தத்திற்குத் துணை செய்ய வேண்டும்' என்று இருவரும் அபேக்ஷிக்க ; முந்துறமுன்னம் இவ்விடம் வந்தானென்கிற காரணம் பற்றித் துரியோதனனுக்கும், முந்துற முன்னம் காணப்பட்டானென்கிற காரணம் பற்றி அர்ஜுனனனுக்கும் ஆக இருவர்க்கும் நான் உதவி செய்யக் கடமைப்பட்டிருக்கின்றேனென்று தெரிவித்து, "நவகோடி நாராயணர்களை ஒருவன் கொள்ளுவது, என்னை யொருவன் கொள்ளுவது ; அந்த நாராயணர்கள் நல்ல வல்லமையுடன் போர் புரியக் கூடியவர்கள்; நான் ஒரு காரியமும் செய்ய மாட்டேன்" என்று கண்ணபிரான் சொல்ல, 'ஒரு காரியமும் செய்யமாட்டே னென்கிற கண்ணனைக் காட்டிலும் மிக வல்லவர்களான நாராயணர்களே நமக்கு இருக்கத்தகும்' என்றெண்ணிய துரியோதனன் அவர்களை வேண்டினான் ; ஒரு காரியமுஞ் செய்யாவிடினும் கண்ணபிரானுடைய பக்ஷபாதமே நமக்குப் பாங்கு என்றெண்ணிய அர்ஜுநன் கண்ணனை வேண்டினன். பிறகு பீஷ்மர் முதலானார் துரியோதனனது மூடத் தனத்திற்கு மிகவும் மனம் நொந்து "மூர்க்கா! இப்படியுஞ் செய்வாயோ? இனி அநுதபித்துப் பயனில்லை ; கண்ணனிடம் கடுக ஓடிச் சென்று நீ ஆயுத மெடுத்துக் காரியம் செய்யாமல் வெறுமனே யிருக்க வேணுமென்று உறுதி பெற்றுக்கொள்" என்று சொல்லியனுப்ப, அவனும் ஓடிவந்து அங்ஙனமே வேண்டி உறுதிபெற்றுக் கொண்டானாதலால் கண்ணபிரானது கையிலிருந்த கோல் எதிரிகளின் கொலைக்கு உபகரணமன்றியே குதிரையை நடத்துகிற கோலாகவே யிருந்ததென்று இங்கு ஆழ்வார் அருளிச் செய்தாராயிற்று.

எல்லாச்சேனையும் அவித்த = "சத்ரு ஸேனையோடு பாண்டவ ஸேனையோடு வாசியற பூபாரமான ஸமஸ்த ஸேனையையும் நசிப்பித்த" என்பது பன்னீராயிரப்படி. ஈட்டு ஸ்ரீஸூக்தி:—"துர்வர்க்க மடையத் திரண்டதிறே உபய ஸேனையிலும். இங்கே நாலைந்து பேரும் அங்கே ஒன்றிரண்டு பேரு மொழிய முடித்துப் பொகட்டானாயிற்று." (இங்கே நாலைந்து பேரென்றது தர்ம புத்ராதிகளை ; அங்கே ஒன்றிரண்டு பேரென்றது அச்வத்தாம க்ருபாசார்ய க்ருத வர்மாக்களை.)

பொல்லாவாக்கையின் புணர்வினை அறுக்கல் அறு = 'புணர்வினை' என்றதை முழுச் சொல்லாகக் கொள்வது முண்டு, புணர்-வினை என்று இரண்டு சொல்லாகக் கொள்வதுமுண்டு. முழுச்சொல்லாகக் கொள்ளுமளவில், [புணர்வு இன் ஐ] என்று கொள்க. இன் - சாரியை ; ஐ - இரண்டனுருபு. புணர்வை என்றபடி : சரீர ஸம்பந்தத்தை என்றதாயிற்று. 'அறுக்கலறு' என்றதற்கிணங்கப் 'புணர்வு' என்று முதல் வேற்றுமையாகவே யிருக்க வுரியது. இரண்டாம் வேற்றுமையாகச் சொன்னது வார்த்தைப் பாடு. இனி, புணர் - வினை என்று பிரிக்குமளவில் 'ஒன்றோடொன்று பிணைந்திருக்கிற பாபங்கள்' என்றவாறு. சரீரத்திற்கு மூலமான பாபங்களைச் சொன்னபடி.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அறுக்கல்அறு = இராவணன் தலைபோலே முளையாநிற்கும்.

யானுன்னைச் சார்வதோர்சூழ்ச்சி சொல்லாய் = சிறையிலே கிடப்பாரைப் போலே ப்ரக்ருதியோடே பிணையுண்டிருக்கிற நான், ஒரு தேச விசேஷத்திலே நித்யஸூரிகள் அநுபவிக்கவிருக்கிற வுன்னைக்கிட்டி வாழ்வதற்குறுப்பான ஒரு உபாயமருளிச் செய்யவேணும். "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: — அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:" என்று சொல்லி சரக்கையாலே நடவியருள வேணுமென்கை. ... (ரு)

சூழ்ச்சிஞானச் சுடரொளியாகி * என்றும்
ஏழ்ச்சிக்கேடின்றி யெங்கணும்நிறைந்தவெந்தாய் *
தாழ்ச்சிமற்றெங்கும்தவிர்ந்து நின்தாளிணைக்கீழ்
வாழ்ச்சி * யான்சேரும் வகையருளாய்வந்தே. (சு)

| | | | |
|---|---|---|---|
| சூழ்ச்சி | (எல்லாவற்றையும்) சூழ்த்துக் கொள்ளுகிற | மற்று எங்கும் | உன்னைத்தவிர எந்த விஷயத்திலும் |
| சுடர் ஒளி | மிகவும் விலக்ஷணமான | தாழ்ச்சி தவிர்ந்து | கால் தாழ்ந்திருப்பதை விட்டு |
| ஞானம் ஆகி | ஞானத்தை யுடையையாய் | நின் தாள் இணை கீழ் | உனது உபய பாதங்களின் கீழே |
| என்றும் | எக்காலத்திலும் | வாழ்ச்சி | வாழ்ந்திருக்குமிருப்பை |
| ஏழ்ச்சி கேடு இன்றி | விகாஸமும் ஸங்கோசமுமில்லாமல் | யான் சேரும் வகை | யான் அடையும் விதத்தை |
| எங்கணும் | எவ்விடத்திலும் | வந்து | (என்கண் முன்னே) வந்து தோன்றி |
| நிறைந்த | வியாபித்திருக்கின்ற | அருளாய் | அருளிச் செய்யவேணும். |
| எந்தாய் | எமது ஸ்வாமியே !, | | |

* * * [சூழ்ச்சிஞானம்] பெருமானே! அவதாரங்களுக்குத் தப்பினேன் என்பது மாத்திரமேயோ? எல்லாரையும் ரக்ஷிக்கைக்காக நீ ஸர்வ வ்யாபியாயிருக்கிற இருப்பும் எனக்குக் கார்யகரமாக வில்லையே, நான் உன்னைப் பெறும் வழி நீயே பார்த்தருள வேணுமென்கிறார். ஸமஸ்த சேதநரையும் உன் பக்கலிலே சூழ்த்துக் கொள்ளவற்றான அத்யந்த விலக்ஷண ஜ்ஞானத்தை யுடையையாய், ஸங்கோச விகாஸங்க ளொன்றுமின்றியே என்றைக்கும் எவ்விடத்தும் வியாபித்து என்னை அடிமை கொள்வதற்காக விருக்கிறவனே! உன் திருவடிகளொழியப் புறம்புண்டான விஷயங்களில் நசை யெல்லாமற்று உன்றன் பொன்னடிகளில் பரம போக்யமான கைங்கரியத்தை நான் பெறும்படி இன்னுமோர் திருவவதாரம் பண்ணியாகிலும் செய்தருளவேணும் என்கிறார்.

சூழ்ச்சி ஞானச் சுடரொளியாகி என்றது ஸாபிப்ராயம்; எல்லாரையும் சூழ்த்துக் கொள்ளவற்றான உன்னுடைய திவ்ய ஜ்ஞானமும் என்னைச் சூழ்த்துக் கொள்ளமாட்டா தொழிந்ததே! என்றபடி. என்றும் ஏழ்ச்சிக் கேடின்றி யெங்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கணும் நிறைந்த வேந்தாய்! என்றதும் ஸாபிப்ராயம்; எல்லா விடத்திலு முண்டான எல்லாவற்றிலும் பூர்ணமாக வியாபித்திருந்தும் என்னை அகப்படுத் திக் கொள்ளமாட்டா தொழிந்தாயே! என்றபடி. ... ... (ச)

வந்தாய்போலே வந்துமென்மனத்தினை நீ *
சிந்தாமல்செய்யாய் இதுவேயிதுவாகில் *
கொந்தார்காயாவின் கொழுமலர்த்திருநிறத்த
வேந்தாய் * யானுன்னை யெங்குவந்தணுகிற்பனே. (ரு)

| | |
|---|---|
| வந்தாய் போலே வந்தும் | (ப்ரஹ்லாதன் கஜேந்திரன் முதலானார்க்கு) வந்து தோன்றினாப் போலே வந்தாகிலும் |
| என் மனத்தினை | எனது நெஞ்சை |
| சிந்தாமல் | சிதிலமாகாதபடி |
| நீ செய்யாய் | நீ செய்வதில்லை; |
| இதுவே | உதவி செய்யாமை யாகிற இதுவே |
| இது ஆகில் | இப்படியே நீடித்திருக்கு மாகில், |
| கொந்து ஆர் காயாவின் கொழு மலர் திரு நிறத்த எந்தாய் | கொத்துக்கள் நிறைந்த காயாவினுடைய செழுமைதங்கிய பூவின் நிறம்போன்ற நிறத்தை யுடைய ஸ்வாமியே! |
| யான் | (இப்படிப்பட்ட அழகை அநுபவித்தே தரிக்க வல்ல) அடியேன் |
| உன்னை | உன்னை |
| எங்கு | எவ்விடத்து |
| வந்து அணுகிற்பன் | வந்து கிட்டவல்லேன், |

* * * [வந்தாய்போலே.] கீழ்ப்பாட்டில் "நின்தாளிணைக்கீழ் வாழ்ச்சி யான் சேரும் வகையருளாய் வந்தே" என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! வந்தருளவேணும் வந்தருளவேணு மென்னாநின்றீர்; ஒருகால் வந்து (இராமனாய்) பதினோராயிரமாண்டு இருந்தோம்; மற்றொருகால் வந்து (க்ருஷ்ணனாய்) நூற்றாண்டிருந்தோம். இன்னமும் வருவதென்றால் அது ப்ரயாஸமாயிருக்கிறது காணும் என்ன; அதுகேட்ட ஆழ்வார், 'பிரானே! அவ்வவதாரங்கள்போலே எனக்காகவும் வந்து சிலநாளிருந்து ஸேவை ஸாதிக்கத் திருவுள்ளமானால் அழகிது; அது செய்யத் திருவுள்ளமில்லையாகில் ஆனைக்குத் தோற்றினாப்போலேயும் ப்ரஹ்லாதனுக்குத் தோற்றினாப்போலேயும் எனக்கு மொருகால் தோற்றியருளியாகிலும் உதவவேணு மென்கிறார்.

வந்தாய்போலே வந்தும் என்றது ப்ரஹ்லாத கஜேந்த்ராதிகளுக்கு வந்தாப் போலேயாகிலும் வந்து என்றபடி. ஆனைக்கு அருள் செய்ததுபோலே எனக்கும் அருள் செய்து என் ஆர்த்தியைப் பரிஹரிக்கின்றிலை; இப்படி உதவாமையாகிற விதுவே நித்யமாய்ச் செல்லுமாகில், நான் என்னுடைய முயற்சியினால் உன்னை வந்து சேருகை யென்று ஒரு பொருளுண்டோ? இனி உன்னுடைய வடிவழகைக் காணப்பெறாதே இழந்து போமித்தனையன்றோ! என்றாராயிற்று. (ரு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கிற்பன்கில்லேன் என்றிலன்முனநாளால் *
அற்பசாரங்களவை சுவைத்தகன்றேழிந்தேன் *
பற்பல்லாயிரம் உயிர்செய்தபரமா * நின்
நற்பொற்சோதித்தாள் நணுகுவதென்ஞான்றே. (௬)

முனம் நாளால் — முற்காலமெல்லாம்
கிற்பன் என்றிலன் — நன்மைகளைச் செய்ய வல்லேனென்கிற இசைவும்கொண்டிலேன்;
கில்லேன் என்றிலன் — தீமைகளைச்செய்யமாட்டேனென்கிற தவிர்தலும் கொண்டிலேன்; (ஸுக்ருதங்களைச் செய்யாதவனும்துஷ்க்ருதங்களையே செய்பவனும்)
அற்பம் சாரங்கள் அவை — க்ஷுத்ர விஷயங்களையே
சுவைத்து — அநுபவித்து
அகன்று ஒழிந்தேன் — உன்னைவிட்டு நீங்கிக் கிடந்தேன்.
பல் பல் ஆயிரம் உயிர் — எண்ணிறந்த ஜீவராசிகளை
செய்த — நினைத்தபடி உண்டாக்கவல்ல
பரமா — ஸமர்த்தனே!
நின் — உன்னுடைய
நல் பொன் சோதி தாள் — விலக்ஷணமாய் அழகிய ஒளியுருவான திருவடிகளை
நணுகுவது — நான் கிட்டுவது
என்ஞான்று — என்றைக்கு?

* * * [கிற்பன்கில்லேன்] பிரானே! இதற்கு முன்புள்ள காலமெல்லாம் உன் திருவடிகளைச் சேருகைக்கு உறுப்பாயிருப்பதொரு ஸுக்ருதத்தை செய்ததுமில்லை, துஷ்க்ருதங்கள் தவிர்ந்ததுமில்லை; எதையும் தோன்றினபடிச் செய்து திரிந்தேன்; இப்படிச் செய்து திரிந்து மிகவும் அற்பமான விஷய ரஸங்களைப் புஜித்து உன் திருவடிகளுக்குப் புறம்பாகியே அகன்றொழிந்தேன். அனந்தகோடி ஜீவராசிகளுக்குக் கரணகளேபரப்ரதானம் பண்ணி நடத்திப் போருகின்றவுனக்கு என்னை யொருவனையும் உன் திருவடிகளுக்கு உரியேனும்படி பண்ணியருளுகை அரிதான காரியமோ? அங்ஙனே திருவுள்ளம் பற்றியருளலாகாதோ? இந்த மஹாபாக்யம் என்றைக்கு நேருமோ என்கிறார்.

கிற்பன்கில்லேன் என்றிலன் = கிற்பன் என்றிலன், கில்லேன் என்றிலன் என்று அந்வயிப்பது. பெரியோர்கள் சில காரியங்களைச் செய்யவேண்டும்படியாக விதிப்பர்கள்; சில காரியங்களைச் செய்யவேண்டாவென்று மறுப்பர்கள். செய் என்று விதிக்கும் காரியங்களை 'அப்படிச்செய்கிறேன்' என்று சொல்லுவதும், செய்யவேண்டாவென்று மறுக்கும் காரியங்களை 'செய்வதில்லை' என்பதும் சாஸ்த்ர வச்யர்களுக்குக் கடமையாகும். இந்தக் கடமையை நான் தவறிவிட்டேனென்கிறார் இங்கு முதலடியில். த்வம் மே என்று எம்பெருமான் சொன்னால் ஆமாம் என்று நான் இசைந்திருந்ததுமில்லை, 'அஹம் மே' என்று சொல்லாமலிருந்ததுமில்லை என்றபடி. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;— "ஆழ்வீர்! பகவத் விஷயத்தில் வந்தால் இச்சைக்கு மேற்பட ஓர் ஆயாஸமின்றிக்கே, பேற்றில் வந்தால் அபுநராவ்ருத்திலக்ஷணமோக்ஷமாயிருக்கும்; அதுக்கீடாக ஒன்றைச் செய்யவல்லீரே? என்றால், ஓம், அப்படி செய்கிறேன் என்றிலன். 'இதந



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



விஷய ப்ராவண்யமாகிறது - ஆயாஸம் கனத்துப் பேற்றில் ஒன்று இன்றிக்கேயிருக்கும், அத்தைத் தவிர வல்லீரே? என்றால், ஓம், தவிருகிறேன் என்றிலன்.''—என்று.

கிற்பன்—செய்ய கிற்பன்; கில்லேன்—செய்ய கில்லேன். ஸுக்ருதத்தைச் செய்ய கிற்பன் என்னவேணும்; துஷ்க்ருதத்தைச் செய்யகில்லேன் என்னவேணும்; இரண்டுமில்லை - என்றவிதனால், அக்ருத்யகரணமும், க்ருத்ய அகரணமும் தம்மிடத்தில் பூர்த்தியாக வுண்டென்று காட்டினபடி. இவ்விடத்தில், ''கிற்பன் கீழ்நாள்களென்கையாலே ஸாதநத்ரய பூர்வாப்யாஸஜமல்ல'' என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையின் பொருளும் உணரத்தக்கது.

அற்பசாரங்களவை சுவைத்து அகன்றொழிந்தேன்—பெருமானே! உன் திறத்தில் ஈடுபட வொட்டாமல் தடை செய்வதற்கு நீ காட்டிவைத்தவை அபாரமாகவுண்டே; அவற்றில் ரஸபாகம் சிறிதுமில்லை; முள்ளிப்பூவில் ரஸம்போலே அற்பம் இருக்கலாம்; அப்படிப்பட்ட விஷயங்கள் ஒன்றல்ல இரண்டல்ல; பலபலவுள்ளன; அவற்றிலே கால் தாழ்ந்து * அலம் புரிந்த நெடுந்தடக்கைக்கும் எட்டாமே அகன்று போனேன் அநாதிகாலமாக - என்கிறார். இங்கே நம்பிள்ளையீட்டில்—''தன் நாவில் பசை கொடுத்து புஜிக்க வேண்டும்படியிருக்கிற விஷயங்கள் தோறும் கால்தாழ்ந்து'' என்றுள்ளது. ஒருநாய் ஒரு சுஷ்கமான எலும்பைப்பற்றிக்கொண்டு வெகுநேரம் கடித்துப்பார்த்தது; அதில் யாதொரு பசையுமில்லை; ஆனால் அதிகமாகக் கடித்ததனால் தன் பல்லிலிருந்தே ரத்தம் பெருகத் தொடங்கிற்று. அந்த ரத்தத்தைப் பருகி அந்த நாய் இன்புற்றதாம். ஆயினும் அது இந்த மருமத்தைத் தெரிந்துகொள்ள மாட்டிற்றில்லை; எலும்பிலிருந்தே ஏதோ ரஸம் பெற்று புஜித்ததாக நினைத்துவிட்டது. இஃது இங்கு நினைக்கத்தக்கது. இதைத் திருவுள்ளத்திற்கொண்டே ''தன் நாவில் பசை கொடுத்து புஜிக்க வேண்டும்படி யிருக்கிற'' என்றருளிச் செய்தார்போலும்.

பற்பல்லாயிரமுயிர் செய்த பரமா!—இப்போது இந்த விளிக்குக் கருத்து என்னென்னில்; புதிது புதிதாக விலக்ஷண ஸ்ருஷ்டிகளைச் செய்யவல்ல வுனக்கு, என்னுடைய அயோக்யதையை மாற்றி யோக்யதையை யுண்டாக்குதல் அரிதோ? என்று காட்டுகிறபடி. உன்னுடைய பரம போக்யமான திருவடியை நான் விரைவில் கிட்டுமாறு செய்தருளாய் என்கிற ப்ரார்த்தனை ஈற்றடிக்கு உள்ளுறை.

''சக்திமானான நீ கிட்டுவிக்குமதொழிய, என்னைப் பார்த்தால் கிட்ட விரகில்லை யென்று கருத்து'' என்பது பன்னீராயிரம். .... .... (சு)

எஞ்ஞான்றுநாமிருந்திருந்து இரங்கிநெஞ்சே *
மெய்ஞ்ஞானமின்றி வினையியல்பிறப்பழுந்தி *
எஞ்ஞான்றுமெங்கும் ஒழிவறநிறைந்துநின்ற *
மெய்ஞ்ஞானச்சோதிக் கண்ணனைமேவுதுமே. (எ)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| நெஞ்சே! | மனமே |
| இருந்து இருந்து | நிரந்தரமாக |
| இரங்கி | வருந்தி |
| மெய் ஞானம் இன்றி | யதார்த்த ஞானமில்லாமையாலே |
| வினை இயல் பிறப்பு | பாபங்களின் பலனுக நேர்ந்த ஜன்மங்களிலே |
| அழுந்தி | ஆழங்காற்பட்டு |
| நாம் | (இதுவேயாத்திரையாக இருக்கின்ற) நாம், |
| எஞ்ஞான்றும் எங்கும் ஒழிவு அற நிறைந்து நின்ற | எல்லாக் காலத்திலும் எல்லாப் பொருள்களிலும் ஒன்றும் விடாமே பரிபூர்ணமாக வியாபித்து நிலைபெற்றிருக்கின்றவனும் |
| மெய் ஞானம் சோதி | விசதமான ஜ்ஞானப்ரபையையுடையவனுமான |
| கண்ணனை | ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவை |
| எஞ்ஞான்று மேவுதும் | என்றைக்குக் கிட்டக்கடவோம். |

* * * [எஞ்ஞான்றுநாம்.] கீழ்ப்பாட்டில் "நின்றபொற் சோதித்தாள்" என்று திருவடியின் பரம போக்யதையின் ப்ரஸ்தாவம் வரவே அந்தத் திருவடி விஷயத்தில் நெஞ்சுக்கு ஒரு பதற்றம் உண்டாயிற்று; அதுகண்ட ஆழ்வார் நெஞ்சை நோக்கி, 'கெடுவாய்! உனது நிலைமையை ஆராயாது நல்லதை யாசைப்பட்டால் அது உனக்குக் கிடைக்குமோ?' என்கிறார்.

"எஞ்ஞான்று நாம்" என்றவிடத்து, 'எஞ்ஞான்று' என்றும் பிரிக்கலாம் 'எஞ்ஞான்றும்' என்றும் பிரிக்கலாம். பூருவாசாரியர்களுக்கு இரண்டுவகையும் உடன்பாடே. 'எஞ்ஞான்று' என்று பிரித்தால் 'மேவுதும்' என்ற வினைமுற்றோடே அந்வயிக்கும். எஞ்ஞான்று மேவுதும்- என்றைக்கு அடைவோம்? என்றைக்கும் அடைய வழியில்லையென்பது குறிப்பு. 'எஞ்ஞான்றும் என்று கொண்டால் பக்கத்திலேயே அதற்கு அந்வயமாகும். எப்போது மிரங்கி என்றவாறு. இப்பக்ஷத்தில் 'மேவுதுமே' என்றவிடத்து ஏகாரம் எதிர்மறையாய் மேவமாட்டோமென்றவாறுப. இதனை வடநூலார் காகுஸ்வரஸஹாயம் மென்பர்.

நல்ல ஞானமின்றிக்கே அஜ்ஞானவிசேஷங்களையும் துஷ்கர்மவிசேஷங்களையும் பிறப்பிக்கின்ற ஸம்ஸாரத்திலே அழுந்திக் கிடக்கிற நாம், நெஞ்சே! காலமுள்ளதனையும் ஓயாமல் துக்கப்பட்டுக்கிடப்பது தவிர, ஸர்வஜ்ஞனாய் ஸர்வவ்யாபகனான பெருமானைக் கிட்டி மகிழ்வதற்கு ப்ரஸக்தியுண்டோ? என்றாராயிற்று.. .... .... .... .... .... (எ)

மேவுதுன்பவினைகளை விடுத்துமிலேன் *
ஓவுதலின்றி உன்கழல்வணங்கிற்றிலேன் *
பாவுதொல்சீர்க்கண்ணா என்பரஞ்சுடரே *
கூவுகின்றேன்காண்பான் எங்கெய்தக்கூவுவனே. (அ)

| | |
|---|---|
| துன்பம் மேவு | பலவகைத் துயரங்களை விளைக்கவல்ல |
| வினைகளை | பாவங்களை |
| விடுத்தும் இலேன் | (தவம் முதலியவற்றால்) போக்கடித்துக் கொண்டேனுமில்லை; |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| ஓவுதல் இன்றி | இடையறாமல் | என் | எனது விருப்பத்திற்குரிய |
| உன் கழல் | உனது திருவடிகளை | பாஞ்சுடரே | மேலான ஒளியுருவனே! |
| வணங்கிற்றிலேன் | பணிவதும் செய்திலேன்; | காண்பான் | (உன்னைக்) காணும் பொருட்டு |
| பாவு | எங்கும் பரவிய | கூவுகின்றேன் | கூப்பிடுகின்றேன்; |
| தொல் | இயற்கையான | எங்கு எய்த கூவுவன் | எங்கே கிட்டுவதாகக் கூப்பிடுவேன்!. |
| சீர் | திருக்குணங்களையுடைய | | |
| கண்ணா | கண்ணபிரானே! | | |

* * * [மேவுதுன்பவினைகளை.] எம்பெருமானே! உன்னைப் பெறுகைக்கு நான் ஏதேனும் ஸாதநாநுஷ்டாநம் பண்ணியிருந்தேனாகில் அந்தப் பற்றுசுதன்னை வைத்துக் கொண்டாவது 'ஏன் நமக்கு இன்னமும் இரங்கியருளவில்லை?' என்று நான் கரைந்து கூப்பிடலாம்; நானோ ஒரு ஸாதநாநுஷ்டாநமும் பண்ணாதவன்; அப்படியிருந்தும், ஸாதநங்களை நிறைய அநுஷ்டித்துப் பலன் கைபுகப் பெறாதவன் கிடந்து துடிக்குமாபோலே நானும் துடித்துக் கதறுகின்றேனே! இது என்ன! என்று தமக்குத்தாமே விஸ்மயப்பட்டுக்கொள்ளுகிறார்.

மேவுதுன்பவினைகளை விடுத்துமிலேன்=நாம் செய்கிற தீவினைகளை நல்வினைகளினால் போக்கிகொள்ளவேணுமென்பது நூற்கொள்கை: "புண்யேந பாபமபநுததி" என்று உபநிஷத்துக் கூறியுள்ளது. நானோ பாவங்களை மாத்திரஞ் செய்தேனேயன்றி அவற்றைப் போக்கவல்ல நற்கிரிசையொன்றுஞ் செய்திலேன். எள்ளில் எண்ணெய்போலவும் கட்டையில் நெருப்புப்போலவும் இவ்வாத்மாவோடு பிரிக்க முடியாதபடி பொருந்தியிருப்பனவும் பல பல துன்பங்களை விளைப்பனவுமான பாபங்களை விஹிதகர்மாநுஷ்டானத்தாலே போக்கிக்கொண்டேனில்லை.

ஓவுதலின்றி உன்கழல் வணங்கிற்றிலேன்= உன் திருவடிகளை நிரந்தரமாக பஜிப்பதும் செய்திலேன் என்கிறார். முதலடியினாலேயே இவ்வர்த்தம் ஏற்பட்டுவிட்டாலும் ஆழ்வார் தம் ஆர்த்தியின் கனத்தினால் விவரித்துக் கூறுகிறாரென்று கொள்க. இங்கு ஓவுதலின்றி என்பதை மத்யமதீபமாகக் கொண்டு முதலடியோடும் இரண்டாமடியோடுங் கூட்டி நிர்வஹிப்பர் எம்பார்; இப்போது, ஓவுதலின்றி என்பதற்கு ஓய்வு இல்லாமையினாலே என்று பொருள். எனக்குள்ள அவகாசமெல்லாம் தீவினைகளைச் செய்வதற்கே சரிப்பட்டுப்போயின; ஒரு நல்வினை செய்யவும் அவகாசம் கிடைக்கவில்லை; ஆதலால்—என்றபடி. "கண்ணாலப் பெண்டாட்டிக்கு உண்ண அவஸரமில்லை என்னுமாபோலே இந்த்ரியங்களுக்கு இரையிட்டுத் திரிந்தேனித்தனை; எனக்கு ஒன்றும் ஹிதம் பார்த்திலேன்" என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்தி பரம போக்யம்.

பாவு தோல் சீர்க்கண்ணா!—நான் அயோக்யனாயிருந்தாலும் உனது திருக்குணங்களை நினைக்குங்கால் மேல் விழுந்தாகிலும் புஜிக்கவேண்டும்படியிராநின்றதே!, விடமுடியவில்லையே! என்செய்வேன்! என்கிற ஆர்த்தி சொல்வடிவத்தி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



லே தோன்றுமாறு காண்க. பாவுதல்—பரவுதல்; பக்தர்களின் கோஷ்டிகளில் மாத்திரமன்று; சத்ருக்களின் கோஷ்டிகளிலும் பரவிய புகழ்படைத்தவனென்பர். .... .... .... .... (அ)

கூவிக்கூவிக் கோடுவினைத்தூற்றுள்நின்று *
பாவியேன்பலகாலம் வழிதிகைத்தலமருகின்றேன் *
மேவியன்றுநிரைகாத்தவன் உலகமெல்லாம் *
தாவியவம்மானை எங்கினித்தலைப்பெய்வனே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கொடு வினை | கொடியபாவங்களுக்குப் பிறப்பிடமாகிய | மேவி | திருவுள்ளமுவந்து |
| தூற்றுள் நின்று | (நுழைந்தால் வெளிப்பட முடியாத) புதர் போன்ற ஸம்ஸாரத்தில் அகப்பட்டு நின்று | ஆ நிரை | பசுக்கூட்டங்களை |
| | | காத்தவன் | ரக்ஷித்தவனும், |
| | | உலகம் எல்லாம் தாவிய | (த்ரிவிக்ரமனாய்) உலகங்களையெல்லாம் அளந்தவனுமாகிய |
| பல காலம் | அனேக காலம் | அம்மானை | ஸ்வாமியை |
| வழி திகைத்து | வழி தெரியாமல் சுழன்று | இனி | இனி |
| | | கூவி கூவி | பலகாலும் கூப்பிட்டு |
| அலமருகின்றேன் | வருந்திக் கிடக்கின்ற | எங்கு | எங்கே |
| பாவியேன் | மஹாபாபியான நான், | தலைப்பெய்வன் | கிட்டுவேன்? |
| அன்று | முன்பொருகால் | | |

* * * [கூவிக் கூவி.] ஸ்ரீக்ருஷ்ணனையும் ஸ்ரீவாமநனையும் அவதரித்து உலகுக்குப் பண்ணின அநுக்ரஹத்திற்குத் தப்பின நான் இனி யுன்னைப் பெறுதற்கு வழியுண்டோவென்று க்லேசந்தோற்றப் பேசுகிறார். பிரானே! நான் இருக்குமிடமோ ஸம்ஸாரம்; இதுவோ தூறுமண்டிக்கிடக்கிறது; இங்கிருந்து கிளம்ப வழியில்லை; இருந்தவிடத்தில் நின்றும் பலகாலும் கூப்பிடாநின்றேன். நீ ஆபத்துக்கு உதவுபவனல்லையாகில் நான் இவ்வளவு கூப்பீடுசெய்யமாட்டேன்; திருவாய்ப்பாடியில் பசுக்களெல்லாம் பெருமழையில் நோவுபட்டகாலத்தில் ஒன்றின்மேல் ஒரு துளி விழாதபடி ஒருமலையைத் தூக்கியெடுத்து ரக்ஷித்தாய்; அங்ஙனம் ஒரு ஊர்க்கு உதவினமாத்திரமன்றிக்கே எங்குமொக்க எல்லார் தலைகளிலும் திருவடியை வைத்தருளினாய்; அன்று நான் எந்த மூலையிலே கிடந்தேனோ? அப்படி ஸர்வஸ்வதாநம் பண்ணின காலத்திலும் தப்பின நான் இனி எங்கே கிட்டப்புகுகிறேன்? அஸாத்யமான விஷயத்தில் நாம் நசை பண்ணுவது வீண் என்று தெரிந்தும் வாளா இருக்கமாட்டிற்றிலேன்; கூப்பீடே போதுபோக்காகவிருக்கின்றேன் என்றாராயிற்று.

"கொடுவினைத் தூற்றுள் நின்று" என்ற விடத்திற்கு ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— "கூப்பீடுகேட்டு இரங்கியெடுப்பதாக ஈச்வரன் கை நீட்டினால், நீட்டின கை வாங்கவொண்ணாத நிலத்திலே யிருந்தாயிற்றுக் கூப்பிடுவது."

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பாவியேன் என்ற விடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை:— "ஸ்ரீஜநகராஜன் திருமகள் ஸ்ரீவால்மீகி பகவானுச்ரம பரிஸரத்திலே கூப்பிட்டாப்போலே, சிலர் ஐயோவென்னக் கூப்பிடுகிறேனோ?." .... .... (கூ).

தலைப்பெய்காலம் நமன்றமர்பாசம்விட்டால் *
அலைப்பூணுண்ணும் அவ்வல்லலெல்லாமகல *
கலைப்பல்ஞானத்து என்கண்ணனைக்கண்டுகொண்டு *
நிலைப்பெற்றேன்னெஞ்சம் பெற்றதுநீடுயிரே. (சo).

| | |
|---|---|
| நமன் தமர் | யமபடர்கள் |
| தலைப்பெய் காலம் | வந்து கிட்டுங்காலம் |
| பாசம் விட்டால் | காலபாசத்தை வீசினால் |
| அலைப்பூண் உண்ணும் | (அப்போது) அலைச்சல் படுகையாகிற |
| அ அல்லல் எல்லாம் அகல | அந்தத் துயரமெல்லாம் நீங்க, |
| பல் கலை ஞானத்து என் கண்ணனை | பலவகைப்பட்ட சாஸ்த்ரங்களாலே அறியத்தக்க எனது கண்ணபிரானை |
| கண்டுகொண்டு | காணப்பெற்று |
| என் நெஞ்சம் | எனது மனமானது |
| நிலை பெற்று | நிலைநிற்கப்பெற்று |
| உயிர் | ஆத்மாவும் |
| நீடு பெற்றது | நித்யத்வத்தைப் பெற்றதாயிற்று. |

* * * [தலைப்பெய்காலம்.] கீழ்ப்பாட்டில் ஆழ்வார்க்கு ஓடின நிலைமையைக்கண்ட எம்பெருமான் 'இவரை நாம் ஒருவாறு ஸமாதானப் படுத்தாவிடில் இவர் முடிந்தே விடுவர்போலும்' என்றெண்ணித் தான் வடக்குத் திருமலையில் நிற்கும்படியைக் காட்டியருள, ஆழ்வாரும் கண்டு தரித்து, அந்தத் தரிப்பை இப்பாசுரத்தில் வெளியிடுகிறார். இப்பாட்டில் முன்னடிகட்கு இரண்டுவகையான நிர்வாஹம்.;- இவ்வுயிர்விட்டு நீங்குங்காலத்தில் யமபடர்கள் வந்து கிட்டிப் பாசத்தை வீசினால் அப்போது உண்டாகும் துயரம் பொறுக்க வொண்ணாததாயிருக்கும்; அந்தத் துயரம் நமக்கு நேர வொண்ணாதபடி எம்பெருமான் தன் காட்சியைத் தந்தருளினபடியாலே தரிப்புப் பெறலாயிற்று—என்பது ஒரு நிர்வாஹம். மற்றொரு நிர்வாஹமாவது—இங்கு யமதூதர்களால் நேரும் நலிவைச் சொன்னது—அந்தத் துயரத்தோடு ஒத்ததான பகவத்விச்லேஷ வ்யஸநத்தைச் சொன்னவாறு; அது தொலையும்படி எம்பெருமானை ஸேவிக்கப்பெற்றேனென்கிறார் என்பதாம்.

ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;- "அத்தோடு ஸஜாதீயமான அல்லல் என்று எம்பார் அருளிச்செய்வது. (அதாவது) அவ்வோபாதி க்லேசம் போருமாயிற்று பகவத் விச்லேஷத்தால் வருமது இவர்க்கு. அன்றிக்கே, பகவத் அலாபமேயான பின்பு யமவச்யதையும் வந்ததேயன்றோவென்று அந்த யமவச்யதை போம்படியாக என்று ஆண்டான் நிர்வஹிக்கும்படி."

அலைப்பு ஊண்— துக்காநுபவம். "அவ்வல்லலெல்லாம்" என்றவிடத்து எல்லாமென்பதனால் விவக்ஷிதத்தை ஆறாயிரப்படியில் பிள்ளான் காட்டியருளுகிறார்—"அவனுடைய ஸர்வேச்வரத்வத்துக்கு வைகல்யம் வருகிறது என்றுள்ள

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மஹாபயமும்'' என்று. ''கிம் து த்வத³க்³ரே ஶரணாக³தாநாம் பராப⁴வோ நாத² ந தேநுரூப:- கிம் து த்வதக்ரே சரணாகதாநாம் பராபவோ நாத ந தேநுரூப:-'' என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி இங்கு நினைக்கத்தகும்.

கலைப்பல் ஞானத்து— பல கலைகளாலும் அறியப்படுபவன் என்றபடி.. ஈற்றடியை, ''என்னெஞ்சம் நிலைபெற்று உயிர் நீடுபெற்றது'' என்று அன்வயித்துக் கொள்க. பெற்று என்றது எச்சத்திரிபு; நிலைபெற என்றபடி. .... (க0)

உயிர்களெல்லா வுலகமுமுடையவனை *
குயில்கொள்சோலைத் தென்குருகூர்ச்சடகோபன் *
செயிரில்சொல்லிசைமாலை ஆயிரத்துளிப்பத்தும் *
உயிரின்மேலாக்கை ஊனிடையோழிவிக்குமே. (கக)

| | | | |
|---|---|---|---|
| எல்லா உயிர்கள் | ஸகல ஜீவராசிகளையும் | செயிர் இல் | குற்றமற்ற |
| எல்லா உலகமும் | எல்லா உலகங்களையும் | சொல் | சொற்களையுடைத்தாய் |
| உடையவனை | உடைமையாகக்கொண்டுள்ள எம்பெருமானைக் குறித்து | இசை | இசையோடுங் கூடின |
| | | மாலை | தொடையையுடைய |
| | | ஆயிரத்துள் | ஆயிரத்திலும் |
| | | இ பத்தும் | இப் பத்துப்பாட்டும் |
| | | உயிரின் மேல் | ஆத்மாவின்மேல் வந்தேறியான |
| குயில் கொள் சோலை தென் குருகூர் சடகோபன் | குயில்களையுடைய சோலைகள் சூழ்ந்த அழகிய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வாருளிய | ஊன் இடை | மாம்ஸமயமான |
| | | ஆக்கை | சரீரத்தை |
| | | ஒழிவிக்கும் | போக்குவிக்கும். |

* * * [உயிர்கள்] இத்திருவாய்மொழி கற்பார், தம்மைப்போலே நோவுபடாதே ஸம்ஸார விமோசனம் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார்.

''உயிர்களெல்லா வுலகமுமுடையவனை'' என்று இப்போது சொல்லுவதானது எம்பெருமானுக்கு நித்யஸித்தமாகவுள்ளபடியைச் சொல்லுகிறதன்று; ஆழ்வாரைத் தரிக்கச் செய்ததனால் எம்பெருமானுக்கு விலக்ஷணமானவொரு புகர் உண்டாயிற்று; அதாவது, இப்போதுதான் அவன் எல்லாவுலகையும் எல்லாவுயிரையும் உடையவனாய் ஆகப்பெற்றதுபோல் விளக்கமுற்றான்; அவ்விளக்கத்தை நோக்கி ஆழ்வார் அருளிச்செய்கிறபடி.

இங்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்கிறார் காண்மின்;—''இவர் தரித்தவாறே அவன் எல்லாவுயிர்களையும் எல்லா லோகங்களையும் உடையவனானான்; ஸர்வரக்ஷகனுக்கு ரக்ஷ்யத்திலே ஒன்று குறையிலும் ரக்ஷகத்வம் குறைபட்டதாமிறே.''

குயில்கொள் சோலை = இதுவரையில் ஆழ்வார் உருவிக்கிடந்தமையால் அங்குள்ள சோலையிற் குயில்களும் உருவிக்கிடந்தன; இவர் தரித்தவாறே, திருநகரியும் தரித்து அங்குண்டான சோலைகளும் தரித்து அவற்றிலுள்ள குயில்களும் அழகாகக் கூவத் தொடங்கினவென்க.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



செயிர்—குற்றம்; சொற்குற்றம் பொருட்குற்றம் முதலியன இல்லாத என்றபடி. இப்பத்துப் பாசுரமே ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்குமென்றது—எம்பெருமான் திருவுள்ளத்தில் உகப்பையுண்டுபண்ணி அவ்வழியாலே ஸமீஹித ஸித்தியைப் பெறுவிக்குமென்றபடி. .... .... (கக)

இரண்டாந்திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஸங்கோசிதஸ்வகரணஸ்வஹரிம் யதேஷ்டம்
ஸம்ஜேநவா ஹஜிதி விஜ்ஞதிஸ்தாரிஃ|
ஆஶ்வாஸிதஸ்ஸ ஹரிணா ஸ்வமஹத்வமேவ
ஹேதும் ஸ்வஶக்திரிதி தத்ரயிதம்விதீயே ||

(கருத்து.) 'எம்பெருமானை நாம் யதேஷ்டமாக அநுபவிக்க முடியாமலிருப்பதற்குக் காரணம் நம்முடைய கரணஸங்கோசம்' என்று நினைத்து மிகவும் தளர்ச்சியடைந்த ஆழ்வார் எம்பெருமானால் ஆச்வாஸப்படுத்தப்பட்டார்; 'ஆழ்வீர்! நம்மைப் பரிபூர்ணமாக அநுபவிக்க முடியாமைக்குக் காரணம் நமது பெருமையின் அளவிடமுடியாமையேயல்லது உமது கரணஸங்கோசமன்று காணும்' என்று தெரிவித்து எம்பெருமான் ஆச்வஸிப்பித்தானென்க. இரண்டாந் திருவாய்மொழியில் இவ்விஷயம் அருளிச்செய்யப்பட்டது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.



## த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

𑌸𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌾 𑌚 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌹𑍃𑌤𑌧𑌰𑌣𑌿𑌭𑌰𑍋𑌨𑌨𑍍𑌯𑌭𑍋𑌗𑍍𑌯𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑍍𑌮𑌃
𑌚𑌿𑌨𑍍𑌤𑍋𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑍀𑌲𑌰𑍂𑌪𑍋 𑌨𑌿𑌰𑌵𑌧𑌿𑌰𑌸𑌦𑌸𑍍𑌵𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌃 ।
𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑍍𑌯𑌸𑍍𑌵𑌪𑌾𑌦𑍋 𑌨𑌿𑌖𑌿𑌲𑌵𑌸𑍁𑌮𑌤𑍀𑌗𑍋𑌪𑌨𑌸𑍍𑌵𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃
𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌪𑍍𑌰𑌤𑍀𑌤𑍍𑌯𑌾 𑌯𑌮𑌪𑌰𑌵𑌶𑌤𑌾𑌂 𑌮𑍁𑌷𑍍𑌣𑌨𑍍 𑌲𑍋𑌕𑍈𑌕𑌨𑌾𑌥𑌃 ॥

1. லோகாந் ஸ்ரஷ்டா. * முந்நீர்ஞாலம் படைத்த * உலகங்களை யெல்லாம் படைத்தவன்.

2: லோகாந் க்ராந்தா ச. * வன்மாவையமளந்த. * உலகங்களை யெல்லா மளந்தவன்.

3. ஹ்ருததரணிபர:- * கொல்லாமாக்கோல் கொலை செய்து * பாரதப் போரில் எல்லாச் சேனையையும் தொலைத்துப் பூமி பாரத்தை அபஹரித்தவன்.

4. அநந்யபோக்ய அங்க்ரியுக்ம:- * சூழ்ச்சிமற்றெங்குந் தவிர்ந்து நின் தாளிணைக்கீழ் வாழ்ச்சி யான் சேருபவகை. * அந்யபரரன்றிக்கே பக்தரானவர்களுக்கு போக்யமான திருவடியிணைகளையுடையவன்.

5; சிந்தோத்யந்நீலரூப:- * கொந்தார் காயாவின் கொழுமலர்த்திரு நிறத்த வெந்தாய்!- என் மனத்தினை நீ சிந்தாமல் செய்யாய். * காயாம்பூப்போன்ற திருநிறத்தைச் சிந்தையிலே பிரகாசிக்கச் செய்பவன்.

6. நிரவதிரஸதஸ்வாங்க்ரி: * நின் நற்பொற்சோதித்தாள் நணுகுவதென்ஞான்றே. * தன் திருவடிகளைப் பெறுவது எப்போது என்று ஆவலுடன் விரும்பும்படியான ப்ரேமத்தை விளைக்கின்ற திருவடிகளையுடையவன்.

7. அத்யக்ஷமூர்த்தி:- * எஞ்ஞான்று மெங்குமொழிவற நிறைந்துநின்ற மெய்ஞ்ஞானச் சோதிக்கண்ணன். * எப்போதும் எங்கும் வியாபித்துநின்று நிர்வாஹம் செய்பவன். (அன்றிக்கே) யோகிகளுக்கு எங்கும் ப்ரத்யக்ஷிக்கலாம்படியான மூர்த்தியையுடையவன்.

8. நித்யோபாஸ்ய ஸ்வபாத:- * ஓவுதலின்றி யுன்கழல் வணங்கிற்றிலேன் என்று குறைபடவேண்டும்படி எப்போதும் ஸேவ்யமான திருவடிகளையுடையவன்.

9. நிகில வஸுமதீ கோபநஸ்வாங்க்ரிவ்ருத்தி:- * உலகமெல்லாம் தாவிய வம்மானை * உலகங்களையெல்லாம் திருவடிகளாலளந்து ரக்ஷித்தருளுமவன்.

10. மூர்த்தி ப்ரதீத்யா யமபரவசதாம் முஷ்ணந். * நமன்தமர்பாசம் விட்டால். * தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவை ஸாதிப்பித்து அதனால் யமபாரவச்யத்தைப் போக்குமவன்.

11. லோகைகநாத:- * உயிர்களெல்லாவுலகமுமுடையவன். * இப்படிப்பட்ட எம்பெருமான் [ப்ரைகூஷி] இரண்டாந் திருவாய்மொழியில் ஆழ்வாரால் அநுபவிக்கப்பட்டானென்றபடி.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



## திருவாய்மொழி நூற்றந்தாதி.

முன்ன மழகரெழில் மூழ்குங் குருகையர்கோன்
இன்னவள வென்ன வெனக்கரிதாய்த்து—என்னக்
கரணக் குறையின் கலக்கத்தைக் கண்ணன்
ஒருமைப் படுத்தா னொழித்து.

பதவுரை.

| | |
|---|---|
| முன்னம் | இதற்குமுந்திய திருவாய்மொழியில் |
| அழகர் | திருமாலிருஞ் சோலையழகருடைய |
| எழில் | வடிவழகிலே |
| மூழ்கும் | ஆழங்காற்பட்ட |
| குருகையர் கோன் | ஆழ்வார் |
| இன்ன அளவு என்ன எனக்கு அரிது ஆய்த்து என்ன | 'இது இவ்வளவென்று பரிச்சேதிக்க என்னால் முடியவில்லையே!' என்று தளர்ச்சியடைய, |
| கண்ணன் | எம்பெருமான் |
| கரணம் குறையின கலக்கத்தை | (ஆழ்வார்க்குக்) கரணஸங்கோச நிபந்தனமென்று உண்டான கலக்கத்தை |
| ஒழித்து | போக்கி |
| ஒருமைப்படுத்தான் | ஆச்வஸிப்பித்தான். |

*** முடிச்சோதியாய் என்கிற கீழ்த்திருவாய்மொழியில் திருமாலிருஞ்சோலையழகருடைய வடிவழகில் ஆழங்காற்பட்ட ஆழ்வார் 'அந்தோ! இவ்வழகு முதலியவற்றை நாம் பரிபூர்த்தியாக அநுபவிக்க முடியவில்லையே, இதற்கு என்ன காரணமிருக்கும்; நம்முடைய கரணக்ராமங்கள் ஸங்குசிதங்களாயிருக்கையாலே அதுகாரணமாகவன்றோ பூர்ணாநுபவம்செய்ய முடியவில்லை; அந்த கரண ஸங்கோசம் இல்லாதிருக்கின்ற நித்ய முக்தர்களிலே ஒருவனாக நானிருந்தால் பரிபூர்ணாநுபவம் பண்ணலாமே' என்று அலமந்திருக்க, அதுகண்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! நம்மைப் பரிபூர்ணாநுபவஞ் செய்ய முடியாமைக்குக் காரணம் கரணஸங்கோசமன்று காணும்; அஸங்குசிதமான கரணங்களையுடையவர்கள் தாமும் நம்மைப் பரிபூர்ணாநுபவம் செய்வது அருமையே; விஷயம் மஹத்தாகையாலே பூர்ணாநுபவம் செய்யப்போகிறதில்லையேயொழிய வேறு காரணமன்று' என்று தெரிவித்து ஆழ்வாரைத் தேற்றுவித்தபடியை இவ்விரண்டாந் திருவாய்மொழி சொல்லிற்றுகிறது என்று அருளிச்செய்தாராயிற்று.

ஆழ்வார் இங்ஙனே கலங்கினதாகவும் அதற்கு எம்பெருமான் இப்படி ஸமாதானம் பண்ணினதாகவும் மூலத்தில் ஒரு பாசுரத்திலும் காணக்கிடைக்கவில்லையே; அப்படியிருக்க இப்படியருளிச்செய்வது எதுகொண்டு? என்று சிலர் சங்கிக்கக்கூடும். நுட்பமாக இதனைக் கண்டறியவேணும். கீழ்த்திருவாய்மொழியில் அழகருடைய வடிவழகிலீடுபட்டுப் பேசத்தொடங்கிய ஆழ்வார் எத்தனை பாசுரங்களும் அப்படியே பேசிக்கொண்டு போதுபோக்கலாமன்றோ; அதைவிட்டு, மிக்க ஆர்த்தியுடன் இந்தத்திருவாய்மொழி ஆரம்பமாகியிருக்கிறது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



திடீரென்று ஆர்த்திக்கு யாதுகாரணம் என்று ஆராய்ந்தால் ஒருகாரணம் கண்டு பிடித்தாகவேண்டும். அதையே நம் ஆசாரியர்கள் கண்டுபிடித்துப்பேசினார்கள். பத்தாம் பாட்டில் "நிலைப்பெற்று என்னெஞ்சம் பெற்றதுநீடுயிரே" என்றிருப்ப தனால் ஒருவாறு ஆழ்வார் ஸமாதான மடைந்ததாக ஏற்படுகிறது. எம்பெரு மான் என்ன தெரிவித்து ஸமாதானப்படுத்தினான் என்று ஆராய்ந்து அதனையும் ஆசாரியர்களே கண்டுபிடித்து வெளியிட்டருளினார்கள் என்றுணர்க. * * (22)

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து — மூன்றாந் திருவாய்மொழி — ஒழிவில்காலம்.

# அவதாரிகை..



எம்பெருமானே! உன்னை யநுபவிப்பதற்கு இடையூறான பிரகிருதியைப் போக்கித் தரவேணுமென்று கீழ்த்திருவாய்மொழியில் பிரார்த்தித்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! நம்மோடுபரிமாறுவதற்கு அந்தப்பிரகிருதி உமக்கு இடையூறன்றுகாணும்; அநுகூலமேயாகும். இந்த ப்ரகிருதியோடே கூட உம்மை அடிமைகொள்ள வேணுமென்று விரும்பியன்றோ நாம் திருமலை யிலே நிற்கிறது; நீர் இங்கேறப் போந்து அடிமைசெய்து வாழலாமே' என்று தான் திருவேங்கடமலையில் நின்றருளுகிறபடியைக் காட்டியருளக்கண்டு ஸமாதா னமடைந்தவராய் அத்திருமலையப்பன் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட வடிமை களுஞ் செய்ய வேணுமென்று பாரிக்கிறார் இத்திருவாய்மொழியில். .... (*)



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஒழிவில்காலமெல்லாம் உடனாய்மன்னி *
வழுவிலாவடிமை செய்யவேண்டும்நாம் *
தெழிகுரலருவித் திருவேங்கடத்து *
எழில்கொள்சோதி எந்தைதந்தைதந்தைக்கே. * (க)

| | | | |
|---|---|---|---|
| தெழி குரல் அருவி | கம்பீரமான ஓசையையுடைய அருவிகள் பொருந்தின | நாம் | அடியோம் |
| திரு வேங்கடத்து | திருவேங்கடமலையில் | ஒழிவு இல் | ஓய்வில்லாத |
| எழில் கொள் | நிறம்பெற்ற | காலம் எல்லாம் | காலம் முழுவதும் |
| சோதி | தேஜஸ்ஸையுடைய | உடன் ஆய் | கூடவேயிருந்து |
| எந்தை தந்தை தந்தைக்கு | எமது குலநாதனை பெருமானுக்கு, | மன்னி | ஸகல அவஸ்தைகளிலும் பிரியாதுநின்று |
| | | வழு இலா | குற்றமற்ற |
| | | அடிமை | கைங்கரியங்களை |
| | | செய்ய வேண்டும் | பண்ணக்கடவோம். |

* * * [.ஒழிவில்] திருவேங்கட முடையானுக்கு எல்லாவடிமைகளும் செய்யப் பெறவேணுமென்று மநோரதிக்கிறார். பின்னடிகளை முன்னே அந்வயித்துக் கொண்டு பிறகு முன்னடிகளை அந்வயித்துக்கொள்வது.

“காலமெல்லாம் அடிமை செய்யவேண்டும்” என்றாலே போதுமாயிருக்க, ஒழிவில் காலமெல்லாம் என்று விசேஷித்துக் கூறினதற்குச் சில ஆசாரியர்கள் ஒரு விசேஷார்த்தம் கூறுவர்களாம்; அதாவது—இனிமேல்வரும் காலங்களில் மாத்திரம் கைங்கரியம் செய்யவிரும்புகிறாரல்லர்; கீழ்க்கழிந்த காலங்களிலும் கைங்கரியம் செய்யவிரும்புகிறார் என்று. கழிந்துபோனகாலத்தை மீட்கமுடியாததலால் இந்த அர்த்தம் எங்ஙனேபொருந்துமெனில்; கீழ்க்கழிந்த காலத்திலும் கைங்கரியம் செய்ய வேணுமென்று பாரிக்கிறாராகச் சொல்லுகிறவிதற்குக் கருத்து யாதெனில்; ‘அந்தோ! கீழே வெகுகாலம் வீணாகக் கழிந்து விட்டதே! என்கிற இழவு நெஞ்சிற்படாதபடி அதனைமறந்து ஆனந்தமயமாகக் கைங்கரியம் பண்ணப் பாரிக்கிறா ரென்பதுவேயாம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— “ஒழிவில் காலமெல்லாமென்று கீழேகழிந்த காலத்தையுங் கூட்டி அடிமைசெய்யப்பாரிக்கிறாரென்று இங்ஙனே அதிப்ரஸங்கம் சொல்லுவாருமுண்டு; அதாகிறது, கீழ்க்கழிந்த காலத்தை மீட்கையென்று ஒரு பொருளில்லையிறே........ கீழ்க்கழிந்த காலத்திலிழவு நெஞ்சிற்படாதபடி மறப்பிக்கையேயிறேயுள்ளது.” என்று. அஸ்மதாசார்யரான அழகியமணவாளச்சீயர் ஒரு கோடைத்திருநாளிலே பேரருளாளன் திருமுற்றத்திலே இப்பாசுரத்தைப் பரக்கஉபந்யஸித்தருளா நிற்கையில் ஈட்டிலுள்ளபடியே அருளிச்செய்துவிட்டு மற்றொருபடியாகவும் அருளிச் செய்யக் கேட்டதுண்டு. (அதாவது) “மாதவத்தோன்புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை, ஓதுவித்ததக்கணையா உருவுருவே கொடுத்தான்” என்றும், “பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும், இறைப்பொழுதில் கொணர்ந்துகொடுத்து” என்றும் சொல்லுகிறபடியே என்றைக்கோ இறந்தொழிந்த உயிர்களையும் மீட்டுக்கொணர்ந்து கொடுக்கவல்லமை வாய்ந்த எம்பெருமான் திருவுள்ளம் பற்றினால் கழிந்தகாலத்தையும் மீட்டுக் காட்டிக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கொடுக்க சக்தனுகையாலே அந்த அதீதகாலங்களிலே கைங்கரியம் செய்யப் பாரிப்பதும் ஒருபடி பொருந்தலாம் என்று. இது ரஸோக்தியாக அருளிச் செய்தபடி.

உடனாய் என்பது ஸகல தேசங்களிலும் விடாதே தொடர்ந்து அடிமை செய்யவேணுமென்கிற பாரிப்பைக்காட்டுகிறது. இங்குச் சிலர் சங்கிப்பதாவது—திருவேங்கட முடையானுக்கன்றோ இங்கு அடிமை செய்யப்பாரிப்பது; அப்பெருமான் நியதமாக ஒரு தேசவிசேஷத்திலேயே எழுந்தருளியிருப்பதனால் 'ஸகலதேசங்களிலும் விடாதே' என்று இங்குச் சொல்வதற்கு ப்ரஸக்தியில்லையே என்று. இதற்கு ஸமாதானமாவது—புறப்பாடு கண்டருளிப்பலவிடங்களுக்கும் எழுந்தருள்வதுண்டாகையாலே அவ்விடமொன்றும் தப்பாமே எங்கும் அடிமை செய்யப்பாரித்தலில் குறையில்லையென்க. (ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில்) "ஸ்ரீ ரங்கராஜ கரநம்ரித சாகிகாப்யः லக்ஷ்ம்யா ஸ்வஹஸ்தகலிதச்ரவணுவதம் ஸம்" என்கிற ச்லோகத்திற்படியே பரோக்ஷமான புறப்பாடுகளுமுண்டே அர்ச்சாவதாரப் பெருமானுக்கு; அப்போதும் விடாதே தொடர்ந்து அடிமைசெய்ய விரும்புவதும் இங்கு விவக்ஷிதம். மன்னி என்பதனால் பெருமாளும் பிராட்டியுமாய்த் திரையை வளைத்துக்கொண்டிருந்தாலும் அப்போதும் படிக்கம் குத்து விளக்கு முதலியனபோலே நின்று அந்தரங்கமான அடிமைகளைச்செய்ய வேணுமென்ற விருப்பம்விளங்கும்.

முதலடிக்கு ஒரு ஐதிஹ்யமருளிச்செய்கிறார்; "ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் இத்திருவாய்மொழிபாடப்புக்கால் 'ஒழிவில் காலமெல்லாம், காலமெல்லாம், காலமெல்லாம்' என்று இங்ஙனே நெடும்போதெல்லாம் பாடி, மேல் போகமாட்டாதே அவ்வளவிலே தலைக்கட்டிப் போவராம்" என்று. இதனால், அரையர் ஆழ்வாருடைய நிலைமையை அப்படியேயடைந்து கைங்கரியத்தில் தமக்குள்ள ஈடுபாட்டைக்காட்டினரென்பது பெறப்படும்.

வழுவிலாவடிமை = வழுவாவது விச்சேதம்: ஒரு கைங்கரியத்திலும் விச்சேதம் கூடாது என்றபடி. எம்பெருமான் திறத்தில் ஈடுபட்டவர்கள் எத்தனைபேருண்டோ, அத்தனைபேரும் தனித்தனியே செய்கிற கைங்கரியங்களையெல்லாம் தாமொருவரே செய்ய மனோரதிக்கிறபடி. ஸ்ரீவசநபூஷணத்தி லருளிச்செய்யப்பட்ட இளையபெருமாளது கைங்கரிய ஸாம்ராஜ்யம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. "வழுவிலாவடிமை" யென்றதற்கு மற்றொருவகையாகவும் பொருள்கூறலாம்; ஸ்வபோக்யதாபுத்தி கலசியிருக்கை கைங்கரியத்திற்கு வழு; அஃதில்லாமை சொன்னபடி. "கைங்கரியத்தில் களையறுக்கிறது" இத்யாதி முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியும் அவ்விடத்து மணவாளமாமுனிகள் வியாக்கியானமும் காணத்தக்கன. "மற்றைநங்காமங்கள்மாற்று" என்றதும் காண்க.

செய்யவேண்டும்நாம் = கைங்கரியம் செய்வதிற்காட்டிலும், செய்யவேணுமென்கிறபாரிப்பு நிலைநின்றிருந்தாலும் போதும் என்கிற சாஸ்திரார்த்தம் தெரிவிக்கப்படுகிறது. எம்பெருமானார் ஸ்ரீவைகுண்டகத்யத்தில்—"கைங்கரியத்தில்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆசையை வளர்த்திக் கொண்டு போரவேணும்'' என்றகருத்துப்பட அருளிச்செய் திருப்பதுங்காண்க.

தேழிகுரலருவி="கைங்கரியருசியுடையீர்! அடிமைசெய்ய வாருங்கோள்'' என்று அழைக்கின்றதுபோலும் திருமலையருவி. திருமலையில் ஸம்பந்தமுள்ள தெல்லாம் ஆழ்வார்க்குப் பரமோத்தேச்யமாகையாலே அருவியையும் வருணிக் கிறார். திருமங்கையாழ்வார் அஹோபிலக்ஷேத்திரத்தை அனுபவிக்கும்போது "சிலைக்கைவேடர் தெழிப்பு அறாதசிங்கவேள்குன்றமே'' என்கிறார்; க்ஷேத்ரயாத்திரை போகிறவர்களை வழி பறிக்கிற வேடருடைய ஆரவாரமும் உத்தேச்யமாகா நின்றதென்றால் இந்தத்திருஅருவியின் ஓசை உத்தேச்யமாகச் சொல்ல வேணுமோ?

பரமபதம் திருப்பாற்கடல் முதலானவிடங்களிலே எம்பெருமான் எழுந்தருளியிருப்பது மீனுக்குத் தண்ணீர் வார்த்தாப்போலேயிருக்கையாலே எம்பெருமானுடைய சோதி அவ்விடங்களில் குன்றியேகிடக்கும்; திருமலை அங்ஙனன்றியே இடக்கை வலக்கையறியாதார்க்கும் எளிதாக முகங்காட்டுமிடமாகையாலே "திருவேங்கடத் தெழில்கோள்சோதி'' என்கிறார். இங்குசுட்டு ஸ்ரீஸூக்தி பரமபோக்யமப்; அதாவது—

"[வேங்கடத் தெழில்கொள்சோதி] * வானோர் சோதியையும் * நீலாழிச் சோதியையும் வ்யாவர்த்திக்கிறது: வானோர்சோதி பகல்விளக்குப்பட்டிருக்கும். நீலாழிச்சோதி கடல்கொண்டுகிடக்கும். வேங்கடத் தெழில்கொள்சோதி குன்றத்திட்ட விளக்காயிருக்கும். *திருவேங்கடம் மேயவிளக்கிறே.''

எம்பெருமானார் இத்திருவாய்மொழி அருளிச்செய்யும்போது அந்தக் கால க்ஷேபகோஷ்டியில் நூற்றுக்கணக்காக எழுந்தருளியிருந்த சிஷ்யர்களை நோக்கி, "ஆழ்வார் பாரித்த குறைதீரத் திருவேங்கடமுடையான் பரிஸரத்திலேயிருந்து நித்திய கைங்கரியம் பண்ண விருப்பமுடையார் ஆரேனுமுண்டோ?'' என்று வினவியருள, குளிரருவிவேங்கடமாகையாலே எல்லாரும் குளிர்க்கு அஞ்சி விடைகூறாதிருக்க, அனந்தாழ்வான் எழுந்து 'அடியேனுக்கு நியமித்தருளவேணும்' என்றார்; அது கேட்டு உகந்த எம்பெருமானார் 'நீரொருவரே ஆண்பிள்ளை' என்று போரப்பொலியக் கொண்டாடித் தழுவியருளி விடைகொடுத்தருளினர்; அதுமுதலாக அனந்தாண்பிள்ளை என்று அவர்க்கு ப்ரஸித்தியாயிற்று என்ற இதிஹாஸம் இங்கு அறியத்தக்கது.

கூரத்தாழ்வான் பெரும்பாலும் இப்பாசுரத்தின் பொருளையே திருவுள்ளத்திற்கொண்டு வரதராஜஸ்தவத்தில்—"[grantha text] = அசேஷ தேசாகிலகாலயோகிநீஷு அஹம் த்வவஸ்தா ஸ்வகிலாஸ்வநந்யதீ:, அசேஷதாஸ்யைகரதிஸ் ததாசரந் கரீச! வர்த்தேய ஸதா த்வதந்திகே.'' என்கிற ச்லோகத்தை யருளிச்செய்தார். ஆழ்வார்க்குத் திருவேங்கடமாமலையில் சென்ற பாரிப்பு ஆழ்வானுக்குத் திருவத்திமாமலையிற் சென்றதாய்த்து? .... .... .... .... .... (க)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



எந்தைதந்தைதந்தை தந்தைதந்தைக்கும்
முந்தை * வானவர் வானவர்கோனொடும் *
சிந்துபூமகிழும் திருவேங்கடத்து *
அந்தமில்புகழ்க் காரேழிலண்ணலே. (உ)

| | | | |
|---|---|---|---|
| வானவர் | நித்யஸூரிகள் | அந்தம் இல் புகழ் | முடிவில்லாத புகழையுடையவனும் |
| வானவர் கோனொடும் | தங்களில் தலைவரான ஸேனைமுதலியாரோடுகூட | கார் எழில் | நீலநிறத்தழகுடையனுமான |
| சிந்து | தூவின | அண்ணல் | எம்பெருமான் |
| பூ | புஷ்பங்கள் | எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை | எம்குலநாதன். |
| மகிழும் | செவ்வி குன்றாதிருக்கப்பெற்ற | | |
| திருவேங்கடத்து | திருமலையில் | | |

* * * [எந்தை தந்தை தந்தை.] திருநாட்டிலே சென்று எம்பெருமானுக்கு அடிமை செய்வதன்றோ எல்லார்க்கும் ஸ்வரூபம்; அப்படியிருக்க, நீர் இந்நிலத்தில் திருமலையிலே அடிமைசெய்ய விரும்புவது என்? என்ன; திருநாட்டிலுள்ள நித்தியமுக்தர்களுங்கூட இத்திருமலையிலேவந்து அடிமைசெய்யக் காண்கையாலே நானும் இங்கே அடிமைசெய்யக் குறையென்? என்கிறார்.

எம்பெருமானுடைய ஸர்வேச்வரத்வத்தை ஆழ்வார் வாயாரப்பேசுகிறார் எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை என்று. இங்கே நம் ஆசாரியர்கள் அருளிச்செய்யும் அழகியவார்த்தை ஒன்றுண்டு; ஆழ்வார் ஜீவாத்மலக்ஷணமான சேஷத்வத்தை நிரூபிக்கும்போது "அடியாரடியார் தம்மடியார் தமக்கடியாரடியார்" என்று மிகவும் கீழே இறக்கிக்கொண்டுவருவது போலவே, பரமாத்மலக்ஷணமான சேஷித்வத்தை நிரூபிக்கும்போதும் "எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை" என்று மேலேமேலே ஏற்றிப்பேசுகிறாரென்று.

வானவர் என்றுதொடங்கி அங்குள்ளாரும் இங்கே போந்து அடிமை செய்யும்படியை அருளிச்செய்கிறார். எம்பெருமானிடத்தில் மேன்மை நீர்மை என்கிற இரண்டுவகையான குணங்களும் உள்ளன; மேன்மை காண்பது பரமபதத்திலே; நீர்மைகாண்பது இந்நிலத்திலே. மேன்மையைக் காட்டிலும் நீர்மையே சிறந்ததாகையாலே அதனைக்காண அங்குள்ளாரும் இங்கேவருகிறார்களாயிற்று. * கானமும் வானரமுமான விவற்றுக்கு முகங்கொடுத்துக் கொண்டு நிற்கிற ஸௌசீல்ய குணத்தையநுஸந்தித்து ஈடுபட்டவர்களாய் ஸ்ரீஸேனாபதியாழ்வான் தொடக்கமான நித்தியஸூரிகள் திருவேங்கடமுடையானை ஸேவிக்கவிரும்பி திவ்யபுஷ்பங்களை யெடுத்துக்கொண்டு இங்கேவருகிறார்கள்; அப்புஷ்பங்களைத் திருமலையப்பனுடைய பாதாரவிந்தங்களில் யதாக்ரமமாக ஸமர்ப்பிக்க சக்தராகாதபடி சீலகுணத்திலே உருகி நிற்கிறார்களாதலால் அவர்களது கைகளிலிருந்து புஷ்பங்கள் அவசமாகவே சிந்துகின்றனவாம்; அப்படிச்சிந்தின புஷ்பங்கள் செவ்விகுன்றாமல் விகாஸமும் பரிமளமும் மல்கி விளங்குகின்றனவாம் திருமலையின் நிலமிதியாலே. அப்படிப்பட்ட திருமலையில் அந்தமில்புகழ்பெற்றுவிளங்காநின்றான் எம்பெருமான்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அந்தமில் புகழ். என்றவிடத்து ஈடு காண்மின்;—"ஸ்ரீவைகுண்டத்தில் புகழுக்கு அந்தமுண்டுபோலே; அப்ராக்ருதமான விக்ரஹத்தோடே அவ்வடிவை யநுபவிக்கப்பாங்கான கரணங்களையுடையராய்க்கொண்டு கிட்டினார்க்கு அநுபவயோக்யனாயிருக்கையாலே புகழ் ஸாவதியாயிருக்கும் அங்கு; இங்கு ஆளியும் கோளரியும் பொன்மணியும் முத்தமும் பூமரமுமானவற்றுக்குத் தன்னைக் கொடுத்துக்கொண்டு நிற்கையாலே புகழுக்கு அந்தமில்லையிறே." .... (உ)

அண்ணல்மாயன் அணிகொள்செந்தாமரைக்
கண்ணன் * செங்கனிவாய்க் கருமாணிக்கம் *
தெண்ணிறைச்சுனைநீர்த் திருவேங்கடத்து *
எண்ணில்தொல்புகழ் வானவரீசனே. (௩)

அணி கொள் — அழகுபொருந்திய
செம் தாமரை கண்ணன் — செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களை யுடையவனும்
செம் கனி வாய் — சிவந்த கனிபோன்ற அதரத்தையுடையவனும்
கரு மாணிக்கம் — நீலரத்னம்போல் திருமேனி விளக்கத்தை யுடையவனும்
தெள் நிறை சுனை நீர் — தெளிவையும் நிறைவையுமுடைய சுனைநீர் பொருந்திய
திரு வேங்கடத்து — திருமலையில்
எண் இல் தொல் புகழ் — எண்ணிறந்த நித்திய கல்யாண குணங்களை யுடையவனும்
வானவர் ஈசன் — நித்தியஸூரிகட்குத் தலைவனுமான எம்பெருமான்
அண்ணல் — நமக்குஸ்வாமியும்
மாயன் — ஆச்சரிய சேஷ்டிதங்களையுடையனுமானவன்.

* * * [அண்ணல்மாயன்,] ஆழ்வீர்! திருமலையில் அடிமைசெய்யவேணுமென்று நீர் பாரிக்கின்றீர்; இஃது உமக்கு வாய்க்குமோ வென்ன; எண்ணிறந்த நித்ய ஸித்தபுருஷர்களெல்லார்க்கும் தன்னை அநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கிறானொரு பரமோபகாரகனல்லனோ அவன்; அன்னவன் நமக்கும் தன்னைத்தந்தருளுமென்கிறார்.

[எம்பெருமான் ஸ்வாநுபவத்தை நமக்குத் தந்தருள்வன் என்பது இப்பாசுரத்தில் கூறப்பட்டிருக்கவில்லையே என்னவேண்டா; எண்ணில் தொல்புகழ் வானவரீசனே என்ற ஈற்றடியில் இக்கருத்து உறைந்துநிற்கும். நமக்குத் தந்தருளாதொழிந்தானாகில் தொல்புகழுடைமை தேறுமோ என்றவாறு.]

அண்ணல் என்றதற்குப் பொருளருளிச் செய்யாநின்ற நம்பிள்ளை "குறிஞ்சி நிலத்தில்தலைமகனென்னுதல், ஸர்வஸ்வாமி யென்னுதல்" என்றருளிச் செய்துள்ளார். அண்ணலென்கிறசொல் பொதுவாக ஸ்வாமியைச் சொல்லக் கடவதென்றும், சிறப்பாகக் குறிஞ்சி நிலத்தலைமகனைச் சொல்லக்கடவதென்றும் தமிழர் கூறுவர். இரண்டுவகையான பொருளும் அவ்விடத்திற்கு ஒக்கும். மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலமென்க. தொல்காப்பியத்தில் பொருளதிகாரத்தில் இருபதாவது ஸூத்திரத்தின் உரையில், அண்ணல் என்பதற்கு முல்லை நிலத்தலைவன் என்ற பொருளும் கூறப்பட்டுளது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மாயன் = ஆச்சரியமான வடிவழகு முதலியவற்றை யுடையவன் என்றபடி. அவற்றில் ஒன்றை யெடுத்துரைக்கிறார் அணிகொள் செந்தாமரைக் கண்ணன் என்று. "இக் கண்ணழகுடையவனுக்கு வேறொரு அலங்காரம் வேண்டா" என்னும்படி யிருப்பதாய், தனக்குத் தானே ஆபரணமாய், விகாஸம் செவ்வி குளிர்த்தி நறுமணங்களினால் தாமரையை ஒருவகைக்கு ஒப்பாகக் கொள்ளுமதான கண்ணழகை யுடையவன் என்க. அடியார்களை முற்றுற முன்னம் திருக்கண்களாலே கடாக்ஷித்து, பிறகு சோதிவாய்திறந்து வார்த்தை சொல்லுவாராதலால், திருக்கண்ணுக்கு அடுத்தபடியாகச் செங்கனிவாயை அநுபவிக்கிறார். * அபிமத ஜநதர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுர மந்தஹாஸ விலாஸந்தன்னை அநுபவித்து அருளிச்செய்கிற வார்த்தை இது.

செங்கனிவாய் என்றதன் வியாக்கியானத்தில் (ஈட்டில்) "முறுவலாலே யாயிற்று இவரை யெழுதிக்கொண்டது" என்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுதலால் "அணிகொள் செந்தாமரைக்கண், என் செங்கனிவாய்" என்று பாடம் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றியதாகுமென்று அழகியமணவாளச்சீயர் (அஸ்மதாசார்யர்) அருளிச்செய்யக் கேட்டிருக்கை. என் என்றோ எம் என்றோ வருகிற விடங்களில் இங்ஙனம் வியாக்கியானிப்பது வழக்கமாதலால் இந்த ஊஹம் உரியதே.

கருமாணிக்கம்=இதனால் திருமேனியை நினைக்கிறது; உவமையாகு பெயர்.

தெண்ணிறைச்சுனைநீர் = இங்குப் பன்னீராயிரப்படி யுரைகாரரொருவர் மாத்திரம் "தெண்ணிறச் சுனைநீர்" என்று பாடங்கொண்டு 'தெளிந்த நிறத்தை யுடைய' என்று பொருள் பணிக்கின்றார்; மற்ற வியாக்கியானங்களில் நிறை என்ற பாடமே கொள்ளப்பட்டது. இப் பாடத்தில் "நிறைசுனை" என இயல்வாகவேண்டியிருக்க "நிறைச்சுனை" என்று சகர மிரட்டித்தது எங்ஙனே யென்னில்; நிறை என்பதை வினைப்பகுதியாகக் கொள்ளாமல் முதனிலைத் தொழிற் பெயராகக்கொண்டு 'நிறைதலையுடைய' என்று பொருள்கொள்ளுமளவில் வல்லொற்று மிகுதல் பொருந்துமென்ப. .... .... (௩)

ஈசன்வானவர்க்கென்பன் என்றால் * அது
தேசமோ திருவேங்கடத்தானுக்கு ?
நீசனேன் நிறைவொன்றுமிலேன் * என்கண்
பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே. (௪)

| | |
|---|---|
| வானவர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| ஈசன் | தலைவன் |
| என்பன் | என்று சொல்லுவேன்; |
| என்றால் | இப்படிச்சொன்னால் |

| | |
|---|---|
| நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன் என் கண் | கடைகெட்டவனும் குணபூர்த்தியற்றவனுமான என் விஷயத்தில் |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| பாசம் வைத்த | ஆசாபாசத்தை வைத் தருளிய | திரு வேங்கடத்தானுக்கு | திருவேங்கடமுடையானுக்கு |
| பரம் சுடர் சோதிக்கு | நிரவதிக ஜ்யோதிர்மய திவ்யமங்கள விக்ரஹயுக்தனான | அது தேசமோ | நான் சொன்னவது ஒரு பெருமையோ? |

* * * [ஈசன்வானவர்க்கு.] "எண்ணில் தொல்புகழ்வானவரீசன்" என்றார் கீழ்ப்பாட்டில்; அதனால், நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுபவிக்கக் கொடுத்தானென்பதை ஓரேற்றமாக அருளிச்செய்தார்; மிகவும் நீசனான என்பக்கலிலே பாசம்வைத்திருக்குமப் பெருமானுக்கு அது ஓர் ஏற்றமோ என்கிறாரிப்பாட்டில்.

'வானவர்க்கு ஈசன்' என்று சொல்லுகிறவிது திருவேங்கடத்தானுக்குத் தேசமோ வென்கிறார். * கானமும் வானரமும் வேடுமானவிவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிறவன் நித்யஸூரிகட்கு முகங்கொடுக்கிறானென்பது எங்ஙனே ஏற்றமாகும்? * அயர்வறுமமரர்களதிபதியென்கை ஸ்ரீவைகுண்டநாதனுக்கு ஏற்றமாகுமத்தனை யல்லது திருவேங்கடமுடையானுக்கு ஏற்றமாகாது காணும்.

அஃது ஏற்றமன்றாகில், பின்னை எதைத் திருவேங்கடமுடையானுக்கு ஏற்றமாக நீர் நினைக்கின்றீர்? என்ன; அதற்கு விடையளிக்கின்றார்போலும் பின்னடிகளால். "அமர்யாத: க்ஷுத்ர: சலமதிரஸூயாப்ரஸவபூ: க்ருதக்நோ துர்மாநீ ஸ்மரபரவசோ வஞ்சநபர:, ந்ருசம்ஸ: பாபிஷ்ட:" இத்யாதிப் புடைகளிலே ஆளவந்தார்போல்வார் அருளிச்செய்கிற கணக்கிலே மிகவும் நிஹீநனான என் திறத்தில் ஆசாபாசம் வைத்து அதனால் புகர்படைத்திருக்கின்ற எம்பெருமானை வானவரீசனென்பது என்ன பெருமை! என்றாராயிற்று.

என்கண்பாசம்வைத்த என்பதற்கு வேறுவகையாகவும் பொருளுரைப்பர்; தன் விஷயமான பாசத்தை என் பக்கலிலே [எனக்கு] உண்டாக்கின என்று.

சோதியாகி எல்லாவுலகும்தொழும் *
ஆதிமூர்த்தியென்றால் அளவாகுமோ? *
வேதியர் முழுவேதத்தமுதத்தை *
தீதில்சீர்த் திருவேங்கடத்தானையே. (கு).

| | | | |
|---|---|---|---|
| வேதியர் முழு வேதத்து அமுதத்தை | வைதிகர்களால் ஓதப்படுகிற ஸகல வேதங்களிலும் பரமபோக்யனாக ப்ரதிபாதிக்கப்படுபவனும் | தீது இல் சீர் | தீது ஒன்றுமில்லாத திருக்குணங்களையுடையனுமான |
| | | திரு வேங்கடத்தானை | திருமலையப்பனைக் குறித்து, |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| சோதி ஆகி | சோதிமயமான திரு மேனியையுடையனுய் | மூர்த்தி என்றால் | ஸர்வேச்வரன் (இவன்) என்று நான் சொன்னால் (அது) |
| எல்லா உலகும் தொழும் | உலகத்தவர்களெல்லாராலும் தொழப்படுபவனுய் | அளவு ஆகுமோ | ஒரு பெருமை யாகுமோ ? |
| ஆதி | ஸகலஜகத்காரணபூதனுன | | |

* * * [சோதியாகி.] ஈசனான எனக்குத் தன்னைத் தந்தவனுக்கு நித்யஸூரி நிர்வாஹகத்வம் ஓரேற்றமோ வென்றார் கீழ்ப்பாட்டில்; என்னிலும் தாழ்ந்தவர்களைத் தேடிப் பெறமாட்டாதே யிருக்கிறவனுக்கு, எனக்குத் தன்னைத் தந்தானென்கிற விதுதான் ஓர் ஏற்றமோவென்கிறாரிப்பாட்டில்.

"எல்லாவுலகுந் தொழும் ஆதிமூர்த்தி" என்று இவர் கீழே சொல்லியிருந்தாலன்றோ இப்போது * எல்லாவுலகுந்தொழுமாதிமூர்த்தி யென்றாலளவாகுமோ? * என்று சொல்லலாம்; கீழ்ப்பாட்டில் அப்படியொன்றுஞ் சொல்லியிருக்கவில்லையே; மூன்றும் பாட்டில் "வானவரீசனே" என்று சொல்லியிருந்ததனால் நான்காம் பாட்டில் "ஈசன்வானவர்க்கென்பனென்றால் அதுதேசமோ?" என்று சொன்னது பொருந்திற்று; இங்கு அங்ஙனம் பொருத்தமில்லையே! என்கிற சங்கைக்கு நம்பிள்ளை அருளிச்செய்கிற பரிஹாரத்தின் அழகைக் காண்மின்; — "கீழே * நீசனேன் நிறைவொன்றுமிலேன் என்றாரே தம்மை; — தாழ்வுக்குத் தம்மை எல்லாரினுமவ்வருகாகச் சொன்னாரே; தாம் தொழுதபோதே எல்லா லோகங்களும் விழுக்காட்டாலே (ஈயூ-ராகு) தொழுததாயிற்று. 'எல்லாவற்றுக்கும் மேல்படி அமிழ்ந்தது' என்றால், கீழ்ப்படி அமிழ்ந்தது என்று சொல்லவேண்டாவிறே." என்பவை ஈட்டு ஸ்ரீஸூக்திகள். இதனால் தேறினது என்னவென்றால், "நீசனேன் நிறைவொன்றுமிலேன் என்கண் பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே" என்று கீழ்ப்பாட்டில் கூறியதில் * எல்லாவுலகுந் தொழுமென்கிற அர்த்தம் ஸித்தமாகவேயுள்ளது என்று காட்டினபடி. ஒரு கலாசாலையில் மிகவும் மூடனான வொருவன் பரீக்ஷை தேறிவிட்டானென்றால் மற்றையோர்கள் தேறினார்களென்பது எப்படி ஸித்தமோ அப்படியே ஆழ்வார்தாம் தொழுதமை சொன்னவளவில் எல்லாவுலகுந் தொழுதமை சொன்னபடியேயாகுமென்க. என் கண் பாசம் வைத்தது ஓரேற்றமோ? என்றபடியாயிற்று முன்னடிகளால்.

இது ஏற்றமன்று என்றுசொல்லலாம்படி இப்போது ஆழ்வார் அருளிச்செய்கிற குணோத்கர்ஷம் ஏதென்னில்; தீதில் சீர்த்திருவேங்கடத்தான் என்ற சொல்லின் ஆழ்பொருளைக் காணவேண்டும். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி—எல்லாவுலகுந்தொழும் என்றதிற்காட்டில் தீதில்சீர் என்றவிடத்தி லேற்றம் என்னென்னில்; என்னை விஷயீகரித்தானென்றவிது ஓரேற்றமோ? என்னில் தாழ்ந்தாரைத் தேடிக் கிடையாமையாலே பட்டினிவிட்டு 'கூஶயா யதிவாராஜ' என்கிறபடியே அவஸர ப்ரதீக்ஷனாயிருக்கிறவனுக்கு.? * நீசனேன் நிறைவொன்றுமிலேனென்ற

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இவருடைய குற்றத்தை குணமாகக்கொண்டு ஸ்வீகரித்து, இவருக் கவ்வருகு குற்றமுடையாரைத் தேடிக் கிடையாமலே நிற்கிறனாயிற்று.'' என்பதாம்.

தீதில்சீர் என்ற விசேஷண ஸ்வாரஸ்யத்தை ஆழ்ந்து அறிந்து நம்பிள்ளை யருளிச் செய்துள்ள அர்த்த விசேஷம் மிகவும் ரஸிக்கத்தக்கது. சீர்க்குத் தீதில்லாமை எப்போது தேறுமென்னில் * நீசனேன் நிறைவொன்று மிலேனென்று சொல்லுகிற இவரைக் காட்டிலும் மிகவும் நீசனான ஒரு வ்யக்தியைத் தேடிப்பிடித்தால் தான் தேறும்; உண்மையில் அப்படிப்பட்ட வ்யக்தி உலகத்தில் கிடையாமையாலே எம்பெருமானுக்குக் கிடைக்கவில்லை; கிடைக்காவிடினும், என்றைக்காவது அப்படிப்பட்டவொரு வ்யக்தி கிடைக்காமற் போகுமா என்கிற நசையினால் திருமலையில் வீற்றிருத்தலும் சயனித்தலு மின்றிக்கே நின்று கொண்டே [கடிநேஷண ஜாமஜூக்ஷை]களைக் காட்டுகிறானும் திருவேங்கடமுடையான். அதை ஆழ்வார் அநுஸந்தித்து இப்பாசுரம் அருளிச் செய்கிறார் கிடீர்.

வேதியர் முழுவேதத்தமுதத்தை = வேதியர்களென்று வேதமோதுகிறவர்களைச் சொல்லுகிறது. அத்யயநம் செய்பவர்களையிட்டு நிரூபிக்கப்படுவன வேதங்கள். (எங்ஙனே யென்னில்;) ஆதர்வணம் தைத்திரீயம், காண்வம் என்று வ்யபதேசங்கள் விளைந்திருப்பதானது [ஸ்யெஶ்ரீதூஶெவவியுஹுயாணூ]மாகும். ஆசார்யஹ்ருதயத்தில் ''ஒருவாரோத்தாகையாலே ஆதர்வணாதிகள் போலே இதுவும் பேர்பெற்றது'' என்றவிடமும் அவ்விடத்து வியாக்யான ஸ்ரீஸூக்தியும் காணத்தக்கன. ஆக, வேதியர்களையிட்டு நிரூபிக்கப்படுவனவான ஸகல வேதங்களிலும் பரமபோக்யபூதனாயிருக்கின்ற எம்பெருமான் வேதாதிகார மற்றவர்களுக்கும் எளியனாய்த் திருமலையில் ஸேவை ஸாதிக்கின்றானென்றாராயிற்று.

வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும் *
தாங்கள்தங்கட்கு நல்லனவேசெய்வார் *
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாங்கடமை * அதுசுமந்தார்கட்கே. (௬)

| | |
|---|---|
| வேங்கடத்து | திருமலையிலே |
| உறைவார்க்கு | நித்யவாஸஞ்செய்தருளுகிற பெருமானுக்கு |
| நம எனல் ஆம் கடமை அது | நம: என்று சொல்லுவத்தாகிற அந்தக் கடமையை |
| சுமந்தார்கட்கு | வஹிக்கின்றவர்களுக்கு |
| கடங்கள் | அநுபவித்தே தீர்க்கவேண்டிய (பூர்வக்ருத) பாபங்களும் |
| மேல் வினை | (ப்ரக்ருதிவாஸனையாலே) இனிவிளையக்கூடிய பாவங்களும் (ஆகிய) |
| முற்றவும் | ஸகலபாபங்களும் |
| வேம் | வெந்துபோயின் வென்னும்படி அழிந்துவிடும்; |
| | (இப்படி பாவங்கள் தொலையவே). |
| தாங்கள் | அடியவர்களான தாங்கள் |
| தங்கட்கு நல்லனவே | தங்கள்ஸ்வரூபத்திற்குத் தகுதியானவற்றையே [கைங்கரியங்களையே]. |
| செய்வார் | செய்யப்பெறுவர்கள். |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * [வேங்கடங்கள்.] இப்பதிகத்தில் முதற்பாட்டில் கைங்கர்யம் ப்ரஸ்தாவிக்கப்பட்டது; (அதன்மேல் நான்கு பாசுரங்கள் ப்ராஸங்கிகங்கள்.) முதற்பாட்டோடு இப்பாட்டிற்கு ஸங்கதி கொள்ளலாம். ப்ரதிபந்தகங்களான கருமங்கள் பலகிடக்க அடிமை செய்வது எங்ஙனே ஸாத்யம்? என்று சங்கைபிறக்க, அடிமைசெய்வோமென்று இசையவே அவைதானே தொலையுமென்கிறுரிப்பாட்டில்.

கடம் — கடன்; மகரனகரப்போலி. கடன்கள் வேம் = ப்ராமணன்பிறக்கும் போதே மூன்றுவகையான கடன்களோடு பிறக்கிருனென்று வேதம் ஓதுகின்றது. யஜுர்வேதத்தில் ஆருவது காண்டத்தில் மூன்ருவது ப்ரச்நத்தில்— ''ஜாயமாநோ வை ப்ராஹ்மணஸ்த்ரிபி: ருணவா ஜாயதே, ப்ரஹ்மசர்யேண ருஷிப்யோ யஜ்ஞேந தேவேப்ய: ப்ரஜயா பித்ருப்ய:, ஏஷ வா அந்ருணோ ய: புத்ரீ யஜ்வா ப்ரஹ்மசாரிவாஸீ'' என்றுள்ளது. ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் கடன்பட்டவனுகியே ஜனிக்கின்ருனென்றும், வேதாத்யயனம் முதலியவற்ருல் ரிஷிகளின் கடனையும், யஜ்ஞங்களால் தேவர்களின் கடனையும், ஸந்தான ஸமுத்பாதநத்தினுல் பித்ருக்களின் கடனையும் தீர்ப்பதென்றும் இதில் கூறப்பட்டுளது. இம் மூவகைக் கடன்களையும் தீர்க்காமல் மோக்ஷத்தில் ருசிவைத்தால் அது கிடைக்காதென்றும் நரகமே பலிக்குமென்றும் மநு ஸ்மிருதியில் சொல்லப்பட்டுள்ளது; ''ருணாநி த்ரீண்யபாக்ருத்ய மநோ மோக்ஷே நிவேசயேத், அநபாக்ருத்ய மோக்ஷம் து ஸேவமாநோ வ்ரஜத்யத: = ருணாநி த்ரீண்யபாக்ருத்ய மநோ மோக்ஷே நிவேசயேத், அநபாக்ருத்ய, மோக்ஷம் து ஸேவமாநோ வ்ரஜத்யத:.'' என்பது மநு மஹர்ஷியின் வசனம். இதன் பொருள்:— மூன்று கடன்களையும் தீர்த்துவிட்டு, பிறகு மனத்தை மோக்ஷத்தில் ஊன்றவைக்கவேணும், கடன்களைத் தீர்க்காமல் மோக்ஷத்தை விரும்பினுலோ அதோகதியையே அடைந்திடுவான் — என்பதாம். வேங்கடத்துறைவார்க்கு நம: என்று சொல்லிவிட்டால் அம்மூன்று கடன்களும் தீர்க்கப்பட்டனவாகவே ஆய்விடும் என்கிருர்.

மெய்ம்மேல் வினைமுற்றவும் என்றவிடத்திலும் வேம் என்கிற வினைமுற்று அந்வயிக்கும். சரீர ஸம்பந்தமடியாக நேருகின்ற பாவங்களத்தனையும் தொலைந்துபோம் என்றபடி. மெய்—சரீரம். இனி, மெய் என்பதைத் தனியே பிரித்து, மேல்வினை முற்றவும் வேம், (இது) மெய் - ஸத்யம் என்றுரைத்தலுமாம். கடங்கள் என்பதனுல் வேதத்திற் கூறப்பட்ட மூவகைக் கடன்களைக் கொள்ளாமல், பாவங்கள் என்றே பொருள்கொள்ளுதலும் நன்று. பாவங்களானவை பூர்வாகங்களென்றும் உத்தராகங்களென்றும் இருவகைப்படும். எம்பெருமானைப் பற்றுதற்கு முன்பு புத்திபூர்வகமாகப் பண்ணும் பாவங்கள் பூர்வாகங்களாம். பிறகு ப்ரக்ருதி பாரவச்யத்தாலே ப்ராமாதிகமாக நேரும் பாவங்கள் உத்தராகங்களாம். இங்கு, கடங்கள் என்றது பூர்வாகங்களைச் சொல்லும்; மேல்வினை என்று உத்தராகங்களை ஸ்பஷ்டமாகவே சொல்லும். இவை யிரண்டும் வேம் என்கிறவிதனுல், சாரீரக மீமாம்ஸையில் நான்காமத்யாயத்தில் முதல்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote.Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பாதத்தில் "தடியிமஃ உதாரவுஷயொஷஃ ஷவியொஸஷ்லேஷவிநாஸௌ தத்வ்யபதெ ஸாத்" என்கிற ஸூத்ரத்தின் பொருள் பேசப்பட்டதாகும்.

மெய் = "வேதநூல் ஓதுகின்றதுண்மையல்லதில்லை மற்றுரைக்கிலே" என்றார் திருமழிசைப்பிரான். வேதம் சொல்லுவதடங்கலும் ஸத்யமாயிருக்கு மத்தனையல்லது அல்பமும் பொய் கலசாது. சாந்தோக்ய உபநிஷத்தில் வைச் வாநரவித்யையில் "தத்யதெஷீகதூலமக்னௌ ப்ரோதம் ப்ரதூயெதைவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாநஃ ப்ரதூயந்தே." என்று சொல்லியிருப்பது பழுதுபடாதென்றவாறு.

எத்தனையோ ஜன்மங்களில் ஸஞ்சிதங்களாய் மலைமலையாகக் குவிந்துகிடக் கும் பாவங்கள் நம்முடைய ஸ்வல்ப ஆநுகூல்யத்தில் தொலைந்திடுமோ என்று சிலர் சங்கித்தார்களாம்; அவர்களுக்கு, பட்டர் ரஸோக்திகளுடன் ஒரு இதி ஹாஸ மெடுத்துரைத்தாராம்: இராமபிரான் கடலரசனை நோக்கி மூன்று நாள் தரைக்கிடை கிடந்து தைந்யம் காட்டிநின்றார்; அவ்வளவில் கடலரசன் முகங் காட்டாதொழியவே சிறிச் சிவந்து அக் கடல்மீது அம்பு தொடுத்துநின்றார், அதுகண்டு கடலரசன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து விநயம்தோற்ற நின்றவாறே "'உனக்காக அம்பு தொடுத்தேன்' என்றுரைக்க வெட்கப்பட்டு, 'உன் விரோதி களைச் சொல்லு, அவர்கள்மீது இவ்வம்பைச் செலுத்துகிறேன்' என்றுசொல்லி, அப்படியே அவன் தனது விரோதிகளிருக்குமிடம் குறிப்பிட அங்கே அவ்வம் பைச் செலுத்தி உபகாரஞ் செய்தாரென்று ஸ்ரீராமாயணத்திற் காண்கிறோம். [பட்டர் இவ்விடத்தை உபந்யாஸஞ் செய்கிறபோது த்ருஷ்டாந்தமாகச் சொன்ன ஒரு சிறு கதை யுண்டு; அதாவது — தலையில் மயிரின்றி யிருப்பா னொருவன் நெற்களத்திற்கு ப்ரபுவாய் அங்கு இருந்தபோது, சதுரனை ஒரு யாசகன் அங்கேவந்து அவனை நோக்கி 'நீர் குழலைப் பேணாமல் இங்ஙனே காரி யஞ் செய்கிறீரே, இப்படியுஞ் செய்யலாமோ? குழற் கற்றை தும்பும் தூசுமாக ஆய்விடுகிறதே!' என்று அநுதபிப்பான்போலப் புகழ்ந்து பேசினான். அது கேட்டு உவந்து அவன் 'எதற்காகவந்தீர்!' என்று வந்தவனை வினவ, அவனும் 'விசேஷமொன்றுமில்லை; மஹாப்ரபுவைக் கண்டு போகவந்தேன்' என்ன, 'ஆனால் ஒரு நெற்கோட்டையைக் கொண்டுபோம்' என்று எடுத்துக்கொடுத் தனுப்பினான்; அவன் அதனைக் கொண்டுபோம்போது எதிரே ஒருவன் வந்து 'இது எங்கே பெற்றது?' என்று வினவ, அதற்கு அவன் 'அதோ அந்த நெற் களத்தில் மொட்டைத்தலையனிருக்கிறானே, அவன் தந்தான்' என்று விடைகூறி னன். அதுகேட்ட வழிப்போக்கன் உடனே களத்தண்டை வந்து அந்த ப்ரபு வை நோக்கி 'இன்னான் உம்மை வைது போகின்றானே' என்று கோள்சொன் னான். அது கேட்டதும் அவன் 'அடா! என் நெல்லையுங்கொண்டு என்னையும் வைது போகிறாயா?' என்று சினந்து, முன்புதந்த நெற்கோட்டையைப் பறித் துக்கொள்ளக் கருதி அவனைத் தொடர்ந்தோடினன். அவன் அவ்வாறு ஓடிவரு வதைத் திரும்பிப்பார்த்த இந்த சதுரயாசகன் அவன் அருகில்வந்த வளவிலே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



'ஐயோ, குழல்கள் அலைய அலைய ஓடிவருகின்றீரே'! என்று மீண்டும் புகழ்ந் தான். அதுகேட்டதும், அந்த நெல்லுடையான் மிகவும் மகிழ்ச்சி கொண்டு 'ஒன்றுமில்லை, இன்னம் ஒரு நெற்கோட்டை கொண்டுபோகச் சொல்லவந்தேன்' என்று சொல்லி அவனைத் திருப்பியழைத்துக் கொண்டுபோய் மீண்டும் ஒரு நெற்கோட்டை கொடுத்தனுப்பினான் என்பதாம். இதனால், உலகிற் பேதையர்க ளான மனிதர்கள் தங்கட்குச் சிறிதும் பொருந்தாத விஷயங்களைப் பிறர் தங் கள் மேலேறிட்டுச் சொல்லித் துதித்தாலும் அவை தமக்குத் தகுதியல்லன வென்றெண்ணி நாணங்கொள்ளாமல் அத்துதி மொழியை மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு மனமுவந்து, அவ்வாறு துதித்தவர்க்கு மிகுதியாகப் பொருள் வழங்குவர் என்பது தெரிவிக்கப் பட்டது. எம்பெருமானுக்கு ஸ்தவ்யன் என் றும,ஸ்தவப்ரியன் என்றும் (ஸஹஸ்ரநாமத்தில்) இரண்டு திருநாமங்களுள. ஸ்த வ்யः— ஸ்தோத்ரஞ் செய்ய உரியவர்; எந்தக்குணங்களையிட்டு எப்படிப் புகழ்ந் தாலும் அவை பொய்யாகாமல் பொருத்தமாகவே யிருக்கப் பெற்றவர் என்ற படி. ஸ்தவப்ரியः— யாராலும் எந்தப்பாஷையாலும் எவ்வகையாலும் செய்யப் படும் ஸ்தோத்ரங்களைச் சொற்பிழை பொருட்பிழை யிருந்தாலும் குணங்களைச் சொல்வதாக எண்ணி அன்புடன் அங்கீகரிப்பவர் என்றபடி. (இது பட்டர்பாஷ் யத்திலுள்ள அர்த்த விவரணம்.) ஆகவே, அற்ப மனிதர்களிடத்திற்போல எம் பெருமானிடத்தில் நாம் ஏலாதவற்றையிட்டுப் புகழவேண்டுவதில்லை; நம்முடைய வாக்கில் ஸ்வல்பம் புகழுரை வந்த மாத்திரத்திலே எம்பெருமான் பரமத்ரு ப்தியடைந்து நம் அபராதங்களை யெல்லாம் பொறுத்தருளிப் பல நன்மைகளைச் செய்தருள்க்கூடு மென்பதில் ஸந்தேகமில்லை. ஆனதால், "வேம்கடங்கள், மேல் வினை முற்றவும் —(இது) மெய்" என்றருளியது மிகப் பொருந்து மென்க.

பாவங்கள் தொலைவதற்காகச் செய்யவேண்டிய காரியம் கனத்திருக்கு மோவென்ன, அப்படியொன்றுமில்லை யென்கிறார் தங்கட்கு என்று தொடங்கி. தாங்கள் தங்களுக்கு நன்றான கைங்கரியத்தைப்பண்ண வமையும்; விரோதிதன் னடையே விலகும் என்பது கருத்து. அவரவர்கள் தத்தம் மனத்திற்குத் தோன் றியபடியே செய்ய வமையும் என்று இவ்விதமாக இரண்டாமடிக்குப் பொருள் கொள்ளலாகாது; வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்' என்கிற அதிகாரியைக் குறித்துச் சொல்லுகையாலே. தாங்கள்—விஷயாந்தரங்களில் விரக்தராய்க்கைங் கரிய ருசியுடையரா யிருக்குமவர்கள். தங்கட்கு—இப்படிப்பட்ட ருசியுடையரா யிருக்கிற தங்களுக்கு. நல்லனவே செய்வார்—தங்கள் ஸ்வரூபத்தோடு சேர்ந்த கைங்கரியத்தையே பண்ணுவார். செய்வார் என்கிறவிதனை வினைமுற்றாகக்கொள் ளாமல் வினையாலணையும் பெயராகக் கொண்டு 'தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்பவர்களாயும், வேங்கடத்துறைவாற்கு நம வென்னலாங்கடமையது சுமந் தவர்களாயு மிருக்கின்ற ஸத்துக்களுக்கு கடன்களும் மேல்வினை முற்றவும் வேம்' என்றும் அந்வயிக்கலாம். செய்வார் என்பதை வினைமுற்றாகவே கொண்டால், இப்பாசுரத்தை இரண்டு வாக்யார்த்தமாகக் கொள்ளவேணும். வேங்கடத் துறைவாற்கு என்று தொடங்கி, பின்னடிகளையும் முதலடிகளையும் அந்வயி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



த்து ஒரு வாக்யார்த்தமாக முடித்திட்டு, 'தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்' என்பதை இரண்டாவது வாக்யார்த்தமாக அந்வயிப்பது:

"நமோ வென்னல்" என்கிறபாடம் பெரியோர் வழங்குமதன்று. 'நம வென்னல்' என்றே கொள்க. "இராமாநுசாய நமவென்று" என்ற ஆர்த்திப் பிரபந்த ஸ்ரீஸூக்தியும் காணத்தக்கது. என்னலாங்கடமையது — என்கிற ஸௌலபமான வுபாயத்தை என்றபடி. சுமந்தார்கட்கு என்றது எம்பெருமானுடைய அபிப்பிராயத்தாலாம். பக்தர்களின் வாக்கில் நமः என்கிற ஒருசிறிய சொல்வந்தாலும் இதை மலையாக நினைப்பனும் எம்பெருமான். ஆனதுபற்றியே பட்டரும் ஸ்ரீகுணரத்ந கோசத்தில் "ஸக்ருதேவஹி ஜந்துஷிஹரம் வஹதே" என்றார். இங்கு ஹரம் (பரம்) வஹதே என்றது குறிக்கொள்ளத்தக்கது. இங்கு "ஹவிஷ்டாம் தே நம உக்திம் விதேம" என்கிற வேதவாக்கியத்தைப் பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் எடுத்துக் காட்டினர். "நம உக்திம் தே ஹவிஷ்டாம் விதேம" என்கிற அந்வயத்தில்நோக்கு; நமःஎன்கிற சொல்மாத்திரத்தை [ஸுஶ்ரீரக்ஷமவானாகிய] உனக்கு மிகவும் கனத்ததாகச் செய்யக்கடவோம் என்று பொருள். இப்படி அந்வயிப்பது பிசகு என்றும், 'ஹவிஷ்டமான நம உக்தியை' என்றே அந்வயிக்க வேணுமென்றும் இதர ஸம்ப்ரதாயஸ்தர்கள் சொல்லுவார்கள், அவர்களுடைய ஸம்பிரதாயத்திற்குத் தலைவரான ஸாக்ஷாத் ஸ்வாமி இயற்றிய வியாக்யானத்திலும் (இப்பாசுரத்தினுரையில்) "ஹவிஷ்டாம் தே நம உக்திம்விதேம என்கிறபடியே ஈச்வரபுத்தியாலே இத்தைச் சுமையாகச் சொல்லுகிறார்" என்றெழுதியிருப்பது நோக்கத்தக்கது. .... (சு)

சுமந்துமாமலர் நீர்சுடர்தூபங்கொண்டு *
அமர்ந்துவானவர் வானவர்கோனொடும் *
நமன்றெழும் திருவேங்கடம்நங்கட்கு *
சமன்கொள்வீடுதரும் தடங்குன்றமே. (எ)

| | |
|---|---|
| மா | சிறந்த |
| மலர் | புஷ்பங்களையும் |
| நீர் | தீர்த்தத்தையும் |
| சுடர் | தீபத்தையும் |
| தூபம் | தூபத்தையும் |
| சுமந்து கொண்டு | ஏந்திக்கொண்டு |
| வானவர் | தேவர்கள் |
| வானவர் கோனொடும் | தங்கள் தலைவனோடு கூட |
| அமர்ந்து நமன்று | அநந்யப்ரயோஜனராய் வணங்கி |
| எழும் | உஜ்ஜீவிக்குமிடமான |
| திருவேங்கடம் | திருவேங்கடமென்கிற |
| தடம் குன்றமே | பெரியதிருமலையே |
| நங்கட்கு | நமக்கு |
| சமன் கொள் வீடு | பரமஸாம்யாபத்திரூபமான மோக்ஷத்தை |
| தரும் | அளிக்கும். |

* * * [சுமந்துமாமலர்.] நமக்கு அபேக்ஷிதமான அடிமைகளெல்லாம் பெறுதற்குத் திருவேங்கடமுடையானை ஆச்ரயிக்க வேண்டுவதில்லை, திருமலையின் ஆச்ரயணமே போதுமென்கிறார். வானவர் வானவர்கோனொடும் மாமலர் நீர்சுடர் தூபம் சுமந்து கொண்டு அமர்ந்து நமன்று எழும் திருவேங்கடம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தடம் குன்றம் நங்கட்குச் சமன்கொள்வீடுதரும் — என்று அந்வயக்ரமம். மா என்பது மலர்க்கு மாத்திரம் விசேஷணமன்று, நீர்சுடர் தூபங்கட்கும்விசேஷணம். புஷ்பம் தீர்த்தம் தீபம்தூபம் ஆகிய இவை மிகச்சிறந்தவஸ்துக்களாகத் தேடி ஸம்பாதிக்கப்படவேண்டு மென்கிறதன்று; பக்தியின் கனத்தாலேயாகுஞ் சிறப்பு விவக்ஷிதம். சுமந்து என்றதும் அதுபற்றியே யென்க. இவ்விடத்தில் ஒரு இதிஹாஸம் அருளிச்செய்கிருர். அதாவது—ஸ்ரீஜகந்நாதத்தி லெம்பெருமான் செண்பகப்பூவை உகந்துசாத்திக் கொள்வது வழக்கமாயிருந்ததனுல் சில ராஜகுமாரர்கள் எம்பெருமானுக்குச் செண்பகப்பூ ஸம்பாதித்து ஸமர்ப்பிக்க வேணுமென்று கடைவீதியேறச் சென்றனர்; அங்குப் பூவெல்லாம் விற்றுப்போய் ஒரே ஒரு பூமாத்திரம் மிகுந்திருந்தது. விலை கொடுத்து வாங்கவந்த ராஜகுமாரர்கள் செல்வச்செருக்குடைய வர்களாதலால் ஒவ்வொருவரும் இப்பூவை நாமேபெற்றுப்போய்ஸமர்ப்பிக்க வேணுமென்ற ஆவல்கொண்டவராகி மேன்மேலும்விலையை ஏற்றிக் கொண்டேவந்தார்கள்; கடைசியாக அளவற்ற விலைகொடுத்து ஒரு ராஜபுத்திரன் அதைவாங்கிப் பெருமாளுக்குச் சாத்த அன்றிரா அவனுடைய கனவிலே எம்பெருமான் காட்சி தந்து ‘நீ இட்டபூ எனக்குக் கனத்துச் சுமக்கவொண்ணுததாயிருக்கிறது’ என்றருளிச் செய்தான் என்பதாம். இதனுல், எம்பெருமானுக்கு அன்புடன் எதையிட்டாலும் அது அவனுக்கு அலப்யலாபமா யிருக்குமென்பது போதரும்.

வானவர் வானவர் கோனேடும் = நித்யஸூரிகளையும், ஸ்ரீஸேநாபதியாழ்வானையும் சொல்லிற்றுகவுமாய். தேவர்களையும் நாமுகனையும் சொல்லிற்றுகவுமாம். அமர்ந்து என்றது அநந்யப்ரயோஜநத்வத்தின் அமைதியைச் சொன்னபடி. தேவதைகளுக்கு ப்ரயோஜநாந்தர பரத்வம் ப்ரஸித்தமாயிற்றே; அவர்களுக்கு அநந்யப்ரயோஜநத்வம் பொருந்துமோ என்கிற சங்கையை நம்பிள்ளைதாமே பரிஹரிக்கிருர் — “ப்ரஹ்மாதிகளைச் சொல்லிற்றுனபோது, அவர்கள் ப்ரயோஜநாந்தரபரரே யாகிலும் அவர்களையும் அநந்யப்ரயோஜநராக்குமாயிற்று இது தன்னின் ஸ்வபாவம்’ என்று. நமன்று — நமஃ என்று சொல்லி என்றபடி. “*துயரறுசுடரடி தொழுதெழு என்கிற தம்வாஸநை அவர்களுக்கு முண்டென்றிருக்கிருர்” என்பது ஈடு.

சமன்கோள்வீடு என்பதற்கு இரண்டுவகையாக நிர்வாஹமுண்டு. “நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்யமுபைதி” என்று உபநிஷத்திற் சொல்லுகிறபடியே எம்பெருமானேடு ஸாம்யாபத்திரூபமான மோக்ஷமென்பது ஒரு நிர்வாஹம். ஸ்வஸ்வரூபத்திற்கு ஸமமாக [அநுரூபமாக] இருப்பதைக் கொண்டிருக்கிற மோக்ஷம் - கைங்கரியரூபமான மோக்ஷம்—என்பது மற்றெரு நிர்வாஹம். சமன்—சமம்; மகரனகரப்போலி. சமமென்றது ஸமமென்றபடியாய் ஸாம்ய மென்றதாகும். திருமலை எம்பெருமானுக்கு எப்படி சேஷப்பட்டிருக்கிறதோ அப்படியே நாமும் சேஷப்பட்டிருக்கும்படியாகச் செய்து கொடுக்கு மென்பதும் ஒரு நிர்வாஹம். ஸ்வசேஷத்வ ஸமாந சேஷத்வத்தைத் தருமென்றதாயிற்று.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன் *
அன்றுஞாலம் அளந்தபிரான் * பரன்
சென்றுசேர் திருவேங்கடமாமலை *
ஒன்றுமேதொழ நம்வினையோயுமே. (அ)

| | |
|---|---|
| குன்றம் ஏந்தி | (கோவர்த்தன) மலையைக் குடையாகத் தாங்கிநின்று |
| குளிர் மழை | குளிர்ந்த பெருமழையை |
| காத்தவன் | தடுத்தவனும் |
| அன்று | முன்பொருகாலத்தில் |
| ஞாலம் அளந்த பிரான் | உலகங்களை யளந்த பிரபுவுமாகிய |
| பரன் | எம்பெருமான் |
| சென்று சேர் | வந்து சேர்ந்தவிடமான |
| திருவேங்கடம் மா மலை ஒன்றுமே | திருமலை யொன்றை மாத்திரமே |
| தொழ | தொழப்பெறில் |
| நம் வினை | நமதுவினைகள்யாவும் |
| ஓயும் | தொலைந்திடும். |

* * * [குன்றமேந்தி] எம்பெருமானுக்கும் பரமப்ராப்யமான திருமலைதான் நமக்கும் பரமப்ராப்யம்; அது நமக்கு ஒரு பலனையளிக்க வேணுமென்பதில்லை; ஒரு பலனையும் தாரா தொழியினும் அதுவே நமக்கு ப்ராப்யமாகக் கடவது — என்கிறார்.

குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன் = திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்களெல்லாரும் கண்ணபிரானுடைய அற்புத சரிதைகளைக்கண்டு இவனே நம் குலக்கொழுந்து, இவன் சொற்படி நடப்பதே நமது கடமை' என்று நிச்சயித்திருந்தார்கள். இருக்கையில் சரத்காலம் வந்தது; அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் இந்திரனுக்குப் பூசைசெய்யப் பலபல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜைப்பொருள்களையும் அமைப்பதைக்கண்டு கண்ணபிரான் 'ஓ பெரியோர்களே! இவை எதுக்காக? என்றான்- அதற்கு அவர்கள் 'அப்பா! தேவேந்திரனுடைய அநுக்ரஹத்தினால் காலங்களில் தகுதியாக மழைபெய்து அதனால் பசுக்களும் நாமும் சுகமே வாழ்கின்றோம்; இனி எப்போதும் அந்த இந்திரன் நம்மை இப்படியே ரக்ஷிக்க வேணு மென்கைக்காக அவனுக்கு வருஷத்திற் கொருமுறை பொங்கலிடுவதுண்டு; அதற்காக இவையெல்லாம் சேர்த்து வைத்தோம்' என்றனர். கண்ணன் அது கேட்டு 'நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கின்றோமோ அதற்கன்றோ பூஜை செய்யவேணும்; இக் கோவர்த்தன மலையன்றோ பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பிரயோஜன முண்டு? இதை யெல்லாம் நீங்கள் இந்தமலைக்கே பலியிடுங்கள்' என்ன; இடையர்கள் அப்படியே செய்யத் துணிந்து மலைக்கே பலியிட்டவளவில், கண்ணபிரான் தான் அம்மலையில் ஆவேசித்து அவற்றை யெல்லாம் தானே அமுது செய்திட்டான். பின்பு பூஜையிழந்த இந்திரன் சீற்ற முற்றுத் தன் பரிஜனங்களான மேகங்களை யழைத்து 'இடைக்குலத்துக்குப் பெருந்தீங்கு விளையும்படி விடாமழை பெய்யுங்கள்' என்று சொல்லிக் கட்டளையிடவே அம் மேகங்கள் அப்படியே வந்து ஏழுநாள் விடா மழை பெய்ய இடையரும் பசுக்க

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ளுமெல்லாம் கதறிக் கண்ணனையே சரணமடைய, கண்ணபிரான் அபயமளித்து மலையைப் பிடுங்கிக் குடையாகத் தூக்கித் தாங்கிக் கோகுலத்தைச் சேர்ந்த ஸகல பிராணிகளையும் அதன்கீழ் அழைத்துக் கொண்டு சிறிதும் அபாயமின்றிக் காப் பாற்றியருளினன் என்ற வரலாறு இங்கு உணரத்தக்கது. (ஏழுநாள் இடை விடாது கல்மாரி பெய்தும் யாருக்கும் எவ்விதபாதையும் நேரிடாமையைக் கண்ட இந்திரன் பராத்பரனை ஸ்ரீக்ருஷ்ணனுடைய மஹிமைக்குவியந்து கீழிற ங்கிவந்து பணிந்து அபராத க்ஷாமணம் பண்ணிக்கொண்டு கோவிந்தாபிஷேக மும் நடத்தி விட்டுப்போய்ச் சேர்ந்தானென்பது முணர்க.)

விபவாவதாரத்தோடு அர்ச்சாவதாரத்தோடு வாசியற எஞ்ஞான்றும் மலை யே ரக்ஷகமென்று சாடேக்தியாக இங்கு அருளிச்செய்வர்கள்.

அன்று ஞாலமளந்தபிரான்—ஒரு ஊர்க்கு உதவினமை கீழே சொல்லிற்று; உலகுக் கெல்லாம் உதவினமை இதனுல் சொல்லுகிறது. *தாவியன்றுலக மெல் லாம் தலைவிளாக் கொண்ட த்ரிவிக்ரமாவதார சரிதம் ப்ரஸித்தம்.

இப்படிப்பட்ட பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை பொன்றுமே தொழ நம் வினை ஓயும். உள்ளே எழுந்தருளி யிருக்கிறவன் தானும் வேண்டா, திருமலையாழ்வாரே போதும் என்கை. .... .... .... (அ)

ஒயும்மூப்புப் பிறப்பிறப்புப்பிணி *
வீயுமாறுசெய்வான் திருவேங்கடத்
தாயன் * நாள்மலராம் அடித்தாமரை *
வாயுள்ளும்மனத்துள்ளும் வைப்பார்கட்கே. (கூ)

| | |
|---|---|
| திரு வேங்கடத்து ஆயன் | திருமலையில் வாழ்கிற ஸ்ரீகிருஷ்ணன் |
| தாமரை நாள் மலர் ஆம் | அப்போதலர்ந்தசெந்தாமரைப்பூப்போன்ற |
| அடி | திருவடிகளை |
| வாய் உள்ளும் | வாக்கினுள்ளும் |
| மனத்துள்ளும் | நெஞ்சினுள்ளும் |
| வைப்பார்கட்கு | வைத்துக்கொள்பவர்களுக்கு |
| ஓயும் மூப்பு | ஓய்வைவிளைக்கின்ற கிழத்தனமென்ன |
| பிறப்பு | பிறவியென்ன |
| இறப்பு | மரணமென்ன |
| பிணி | வியாதியென்ன (ஆகிய இவை) |
| வீயும் ஆறு | தொலையும் வகை |
| செய்வான் | செய்தருள்வன். |

* * *—*[ஓயு மூப்பு.] திருமலையென்றே நம் வினை ஓய்வதற்குப் போதுமென்ருர் கீழ்; அந்தத் திருமலைதானும் பூர்த்தியாக வேணுமென்பதில்லை, அதில் ஏகதேச மேபோது மென்கிருரிப்பாட்டில். (இங்கு ஏகதேச மெகிறன் வார்த்தையினுல் நினைக்கிறது திருமலையப்பனை. திருமலையில் ஸம்பந்தத்தைப் பற்றியாயிற்று ஸ்ரீநிவாஸனும் உத்தேச்யனுவது. திருமங்கையாழ்வார் "வடமாமலையுச்சியை" என்று ஸ்ரீநிவாஸனைத் திருமலையின் ஏகதேசமாகவே கூறினர்.)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்தாயன் நாண்மலரா மடித்தாமரை வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கு மூப்புப் பிறப்பு இறப்பு ஓயும்- என்றும்அந்வயிப்பது. வியாதி முதலிய கருமபலன்களைத்தொலைத்தருள்வதற்காகத் திருமலையிலே எழுந்தருளி நிற்கிற பெருமானுடைய, 'நாட் பூமலர்ந்தது' என்னலாம்படி ஸுகுமாரமான திருவடித் தாமரைகளை நெஞ்சினால் நினைத்து வாயினால் துதிக்கு மவர்களுக்கு ஜன்ம ஜராமரணாதிகள் ஓயும் என்கை.

ஓயும் என்பதை வினைமுற்றாகக் கொள்ளாமல் 'ஓயும் மூப்பு—ஓய்வை விளைவிக்கின்ற மூப்பு' என்று மூப்புக்கு அடைமொழியாக்கி யுரைப்பர் பன்னீராயிரவுரைகாரர். திருவேங்கடத் தாயனானவன் (தனது) நாண்மலராமடித் தாமரையை வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கு, ஓயுமூப்புப் பிறப்பிறப்புப் பிணிகளை வீயுமாறு செய்வான் — என்கிற அந்வயக்ரமம் இவர்க்கு விவக்ஷிதம்.

இப்பாசுரத்தின் ஆறாயிரப்படி:- "திருவேங்கடமுடையானன்றோ ப்ராப்யம், திருமலையே ப்ராப்யமென்று சொல்லுவா னென்னென்னில், திருவேங்கடமுடையானுடைய ப்ராப்யத்வமும் திருமலையோடுள்ள ஸம்பந்தத்தாலே வந்ததாதலால் திருமலையே ப்ராப்ய மென்கிறார்" என்பதாம். நம் ஆசிரியர்கள் பாசுரங்களில் மிகவும் ஆழ்ந்து பொருள் கண்டுபிடிக்கும் சதிர் வாசாமாகோசரம்.

வைத்தநாள்வரை எல்லைகுறுகிச்சென்று *
எய்த்திளைப்பதன்முன்னம் அடைமினோ *
பைத்தபாம்பணையான் திருவேங்கடம் *
மொய்த்தசோலை மொய்பூந்தடந்தாழ்வரே. (௧௦)

| | (பாகவதர்களே !) |
|---|---|
| வைத்த | (உங்களுக்குச்) சங்கற்பித்துவைத்த |
| நாள் | ஆயுட்காலத்தினுடைய |
| வரை | அளவான |
| எல்லை | எல்லையானது |
| குறுகி | அணுகி |
| எய்த்து இளைப்பதன் முன்னம் | (அதனால் நீங்கள்) மிகவும் தளர்ச்சியுடையவதற்கு முன்னே, |
| சென்று | (திருமலையை நோக்கிச் சென்று) |
| பைத்த பாம்பு அணையான் | படமெடுத்த ஆதிசேஷனைப்படுக்கையாகக்கொண்ட பெருமானது |
| திருவேங்கடம் | (அத்) திருமலையில் |
| மொய்த்த சோலை | நெருங்கினசோலைகளும் |
| மொய் பூ தடம் | நெருங்கின புஷ்கரிணிகளுமுள்ள |
| தாழ்வர் | திருத்தாழ்வரையை |
| அடைமின் | அடையுங்கள். |

*** [வைத்தநாள்வரை.] பரம போக்யமான திருமலையையே பரம ப்ராப்யமாகப் பற்றுங்களென்று பிறர்க்கு உபதேசிக்கிறார். எம்பெருமான் சேதநர்களுக்குக் கரணகளேபரங்களைக் கொடுத்து ஆயுளையும் அருளுகிறான்; இவை எதற்காகவென்னில், திருமலை முதலான திருப்பதிகளிலே சென்று வழிபாடு செய்வதற்காகவேயன்றி வேறொரு காரியத்திற்காகவன்று. ஆயினும், உலகர்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



உடலில் வலிவுள்ள காலங்களில் விஷயாந்தரங்களிலே மண்டிக்கிடந்து, திவ்ய தேச வழிபாடுகளைப்பற்றிப் போகப்போகப் பார்த்துக்கொள்வோம் என்று பதற்றமற்று ஆறியிருந்து விடுகிறார்கள்; பார்த்துக்கொண்டிருக்கும்போதே பல வகைகளிலும் தளர்ச்சிவந்து சேர்கின்றது; அப்போது திவ்யதேச வழிபாட்டை நெஞ்சிலும் நினைக்க ப்ரஸக்தியில்லையாகிறது. அங்ஙனம் ஆகாமே திருமலையைப் பணிமின் என்றாராயிற்று.

எம்பெருமானுக்குப் பரமபோக்யமான சயனமாகத் திருவனந்தாழ்வான் இருக்கவும் அவனையும் விட்டுத் திருமலையில் வாஸம் மிகவும் ருசித்தது என்பதை மூன்றாமடி காட்டும். கீழ் முதற்பாட்டில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட கைங்கர்யத்தைச் செய்யுமவர்கள் ஆயாஸமின்றிக்கே மிகவும் இனிதாகச் செய்வதற்குப் பாங்கான விடம் திருமலை என்பதைக்காட்டும் ஈற்றடி. .... .... (கο)

தாள்பரப்பி மண்தாவியவீசனை *
நீள்பொழில் குருகூர்ச்சடகோபன்சொல் *
கேழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர் *
வாழ்வர்வாழ்வெய்தி ஞாலம்புகழவே. (கக)

| | | | |
|---|---|---|---|
| தாள் பரப்பி | திருவடியைவிரித்து | கேழ் இல் | ஒப்பற்றதான |
| மண் தாவிய | பூமியெல்லாம் அளந்து கொண்ட | ஆயிரத்து | ஆயிரத்தில் |
| ஈசனை | எம்பெருமானைக்குறித்து | இப் பத்தும் | இத்திருவாய்மொழியை |
| | | வல்லவர் | ஓதவல்லவர்கள் |
| நீள் பொழில் | உயர்ந்த சோலைகளையுடைய | ஞாலம் புகழ | உலகம் யாவும் கொண்டாடும்படி |
| குருகூர் | திருக்குருகூரில்(அவதரித்த) | வாழ்வு எய்தி | வாழ்ச்சி பெற்று |
| சடகோபன் | ஆழ்வார் | | (அந்த வாழ்ச்சி ஒருநாளும் குன்றாமே) |
| சொல் | அருளிச்செய்த | வாழ்வர் | விளங்குவர். |

* * * [தாள்பரப்பி.] இத் திருவாய்மொழியை ஓதவல்லவர்கள் உலகமெல்லாங் கொண்டாடும்படியான வாழ்ச்சியைப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகின்றார்.

இப்பதிகம் திருவேங்கடமுடையானைக் கவிபாடினதாயிருக்க "தாள்பரப்பி மண்தாவியவீசனை" என்றது என்னென்னில்; எல்லாரையும் திருவடிகளின் கீழேயிட்டுக்கொள்ளுகைக்காக நிற்கிற நிலையாலும், * கானமும் வானரமுமான வற்றுக்கும் முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிறபடியாலும் திருவேங்கடமுடையானை உலகளந்தபெருமானாகச் சொல்லப் பொருத்தமுண்டென்பர் ஆசிரியர்கள்.

[வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம்புகழவே.] 'ஞாலம்புகழ வாழ்வர்' என்றுவது, 'ஞாலம்புகழ வாழ்வெய்துவர்' என்றாவது அருளிச்செய்தால் போதுமே; 'வாழ்வெய்தி வாழ்வர்' என்றவிது புநருக்தியாகவுள்ளதேயென்று சிலர் சங்கிக்கக்கூடும்: பெறுகிற வாழ்வு இவ்வாத்மாவுள்ளதனையுமாகும் என்று காட்டுகிற

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தாகையாலே புநருக்தியில்லை: கைங்கர்ய ஸாம்ராஜ்யமாகிற வாழ்வைப்பெற்று எந்நாளும் அந்த வாழ்வுடனே யிருக்கப் பெறுவர்கள் என்றவாறு. "ஞாலம் வாழ்வெய்திப் புகழ வாழ்வர்" என்று அந்வயித்துப் பொருள்கொள்வதுமுண்டு; அப்போது சங்கைக்கு உதயமேயில்லை. .... .... (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

மூன்றாந் திருவாய்மொழி முற்றிற்று.



## திருவாய்மொழி நூற்றந்தாதி.

ஒழிவிலாக் கால முடனாகி மன்னி
வழுவிலா வாட்செய்ய மாலுக்கு — எழுசிகர
வேங்கடத்துப் பாரித்த மிக்கநலஞ் சேர்மாறன்
பூங்கழலை நெஞ்சே புகழ்.

பதவுரை.

| | |
|---|---|
| ஒழிவு இலா காலம் | ஸதாகாலமும் |
| உடன் ஆகி மன்னி | கூடவேபிரியாதபொருந்தியிருந்து |
| மாலுக்கு | ஸர்வேச்வரனுக்கு |
| வழு இலா | வழுவின்றிக்கே |
| ஆள் செய்ய | அடிமை செய்யுமாறு |
| எழு சிகரம் வேங்கடத்து பாரித்த | ஓங்கின சிகரங்களையுடைய திருமலையிலே மனோரதித்த |
| மிக்க நலம் சேர் மாறன் | மஹாகுண சாலியான ஆழ்வாருடைய |
| பூ கழலை | பொலிவுற்ற திருவடிகளை |
| நெஞ்சே | மனமே ! |
| புகழ் | போற்றுவாயாக. |

* * * * ஒழிவில்காலமெல்லா மென்கிற திருவாய்மொழியில் திருமலையிலப்பனுக்கு அநவரதம் அத்தாணிச் சேவகம் செய்யவேணுமென்று மிக்க மனோரதம் கொண்ட சிறந்த நற்குணங்கள் நிரம்பிய ஆழ்வாரது திருவடித்தாமரைகளைத் துதிக்குமாறு நெஞ்சுக்கு உரைத்தாராயிற்று. .... .... (உரு)

ஜீயர் திருவடிகளே சரணம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



## த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.



𑌸𑍍𑌥𑌾𑌨𑍋𑌤𑍍𑌕𑌰𑍍𑌷𑌾𑌤𑍍 𑌸𑍁𑌦𑍀𑌪𑍍𑌤𑌂 𑌶𑍍𑌰𑌮𑌹𑌰𑌵𑌪𑍁𑌷𑌂 𑌸𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌪𑌰𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌭𑍂𑌷𑌂
𑌤𑍇𑌜𑌿𑌷𑍍𑌠𑌂 𑌨𑍀𑌚𑌯𑍋𑌗𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌣𑌮𑌿𑌤𑌭𑍁𑌵𑌨𑌂 𑌪𑌾𑌵𑌨𑌂 𑌸𑌂𑌨𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑌂𑌹𑌃𑌪𑍍𑌰𑌶𑌮𑌨𑌵𑌿𑌷𑌯𑌂 𑌬𑌨𑍍𑌧𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌿𑌵𑌾𑌸𑌂
𑌹𑍇𑌤𑍁𑌂 𑌶𑍍𑌰𑍀𑌵𑍍𑌯𑌾𑌹𑌿𑌯𑌾𑌨𑌕𑍍𑌷𑍇𑌮𑌸𑌂𑌹𑌵𑌹𑌤𑌿𑌂 𑌶𑍍𑌰𑍀𑌤𑌾𑌪𑌰𑌾𑌹𑌿𑌷𑍍𑌠𑌵𑍃𑌷𑌾𑌦𑍍𑌰𑌿𑌂 ॥

1. ஸ்தாநோத்கர்ஷாத் ஸுதீப்தம். * திருவேங்கடத்து எழில் கொள் சோதி. * திருமலையின் நிலமிதியாலே மிக்க மேம்பாடு பெற்றவன்.

2. ச்ரமஹரவபுஷம். * காரெழிலண்ணலே. * கண்டாருடைய விடாயைப் போக்கவல்லவனுய்க் காளமேகம்போன்ற வடிவுபடைத்தவன்.

3. ஸ்வாங்கபர்யாப்தபூஷம். * அணிகொள் செந்தாமரைக்கண்ணன் செங்கனிவாய்க் கருமாணிக்கம். * தனது திவ்யாவயவங்களையே போதுமான திருவாபரணங்களாகவுடையவன்.

4. நீசயோகாத் தேஜிஷ்டம். * நீசனேன் நிறைவொன்றுமிலேன் என் கண்பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதி. * தண்ணியனுனவனேடே கலந்து பழகுவதனுல் ஒளிமிக்கவன்.

5. ப்ரணமிதபுவநம். * எல்லாவுலகுந்தொழுமாதிமூர்த்தி. * தொழுவித்துக்கொள்ளப்பட்ட ஸகலலோகங்களையுமுடையவன்.

6. ஸந்நதாநாம் பாவநம். வேங்கடங்கள் இத்யாதி. * வணங்கினவர்களை க்ஷீணபாபராக்கிப் பரிசுத்தப்படுத்துமவன்.

7. ப்ராப்த்யர்ஹஸ்தாநம். * திருவேங்கடம் நங்கட்குச்சமன்கொள்வீடு தரும். * பரமஸாம்யாபத்திரூபமான ப்ராப்தியைத் தருதற்கு அர்ஹமான இருப்பிடத்தையுடையவன்.

8. அம்ஹ:ப்ரசமநவிஷயம். * திருவேங்கடமாமலையொன்றுமே தொழ நம்வினையோயுமே. * ப்ராப்தி விரோதிகளான பாவங்களைப் போக்கவல்லதான இருப்பிடத்தையுடையவன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



9. பந்தவிச்சேதிபாதம். * ஒபு மூப்பு இத்யாதி. * ஸம்ஸாரபந்தத்தை யறுத்தொழிக்கவல்ல திருவடிகளையுடையவன்.

10, சக்ராபியாகக்ஷமசுபவஸதிம். * எய்த்திளைப்பதன்முன்னமடைமினோ. * விரைந்துசென்று அடையத்தக்கதான அழகிய வாஸஸ்தானத்தையுடையவன்.

11. லம்பித அர்ச்சாபிமுக்க்யம். * தாள்பரப்பி மண்தாவியவீசனை. * எல்லார் தலைகளிலும் ஒருங்கே திருவடியைவைத்த அந்த ஸௌலப்யம் தோன்றத் திருமலையில் வாழ்கையாலே ஆராதனத்திற்கு எளியன்.— ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை * ஒழிவில்காலத்தில் ஆழ்வார் பஜித்தார் என்றதாயிற்று.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.



## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஸர்வத்ர ஸர்வஸமயே ஸகலாஸ்வவஸ்தா<br>
ஸ்வஸ்யப்ரபுபணிவிதௌ ஸ்ப்ருஹயாநுநீத: ।<br>
ஶ்ரீவேங்கடாத்ரிநிலயஸ்ய பரஸ்ய பும்ஸ:<br>
நிஸ்ஸீமஶீலகுணவைபவமாஹ த்ருதீயே ॥

(கருத்து.) மூன்றாந் திருவாய்மொழியில் ஆழ்வார் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸகலவிதமான அடிமைகளையும் செய்யவிருப்பங்கொண்டவராகி (அந்த விருப்பத்தோடுகூடத்) திருவேங்கடமுடையானது எல்லைகடந்த சீலகுணத்தையும் வெளியிட்டருளினரென்கை.

ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி மூன்றும்பத்து.

# நான்காந்திருவாய்மொழி-புகழுநல்லொருவன்.

—(0)—

அவதாரிகை:— கீழ்த்திருவாய்மொழியில் "ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டுநாம்" என்று எம்பெருமானுக்கு ஸர்வ தேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸகலவிதமான கைங்கர்யங்களையும் செய்யப்பெறவேணுமென்று மநோரதங்கொண்ட ஆழ்வாருடைய பாரிப்பைக் கண்ட எம்பெருமான் ஆழ்வார்க்குத்தான் அவர் விருப்பத்தின்படியே செய்வதற்கு அநுகூலமாக எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்து எங்கும் நிற்கின்ற நிலையைக் காட்டிக் கொடுத்தான். அதுகண்ட ஆழ்வார், பெருங்காற்றில் விழ்ந்த பழங்களைப் பொறுக்கியெடுத்துக்கொள்ளக் கருதுமவர்கள் 'அந்தப் பழத்தை எடுப்போமா? இந்தப்பழத்தையெடுப்போமா?' என்று அலமந்து கிடப்பதுபோல, அத்தைச் சொல்லுவேனே? இத்தைச் சொல்லுவேனே? என்று அலமந்து, எங்கும் எல்லாவகைப்பொருளாயும் தோன்றுகின்ற அப்பெருமானுக்கு வாசிகமான கைங்கர்யத்தைச் செய்ய நினைத்து 'ஸகலகல்யாண குணங்களுக்கும் கடலான அவ்வெம்பெருமானுடைய தன்மையை யான் என்னவென்று சொல்லுவேன்?' என்று நிர்வேதத்துடனே அவனது ஸர்வாத்மத்வத்தைப்பேசுகிறார் இத்திருவாய்மொழியில்.

எம்பெருமானுக்குள்ள திருநாமங்களில் அநந்தன் என்பதும் ஒரு திருநாமம். 'அந்தமில்லாதவன்' என்பது அதன் பொருள். அந்தமாவது பரிச்சேதம். உலகில் ஒவ்வொரு வஸ்துவுக்கும் மூன்று வகையான பரிச்சேதங்கள் உண்டு; அவை—தேச பரிச்சேதம், கால பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் எனப்படும். உலகில் காணப்படும் பொருள்கள் யாவும் இம்மூன்று வகைப்பட்ட பரிச்சேதங்களையுடையனவாகவேயிருக்கும். எந்தப்பொருளை யெடுத்துக்கொண்டாலும் 'இது இன்ன இடத்திலுள்ளது, மற்றோரிடத்தில் இல்லை' என்றும், 'இது இன்ன காலத்திலுள்ளது, மற்றொருகாலத்திலில்லை' என்றும், 'இது இன்ன வஸ்துவாகவுள்ளது, மற்றொரு வஸ்துவாக இல்லை' என்றும் சொல்லக்கூடியதாகவே யிருக்குமாதலால் (எம்பெருமான் தவிர) ஸகல பதார்த்தங்களும் த்ரிவித பரிச்சேத ஸஹிதங்களாகவே யிருக்கும்; எம்பெருமானொருவனே த்ரிவித பரிச்சேதரஹிதனாயிருப்பன். எங்குமுள்ளவனும் எப்போதுமுள்ளவனும் எல்லாப்பொருள்க



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ளும் தானுபுள்ளவனாய் இருக்கையாலே இது பற்றியே அனந்தன் என்னப்படுகின்றான். இவற்றுள் ஒன்றான வஸ்துபரிச்சேத ராஹித்யம் நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு மிகவும் உள்ளீடாயிருப்பது. ஏனென்னில்; சரீராத்ம பாவத்தைக்கொண்டே இந்த வஸ்துபரிச்சேதராஹித்யத்தை நிர்வஹிக்கவேண்டும். சரீரங்களைச்சொல்லும்படியான சப்தங்கள் சரீரியளவும் செல்லக்கடவனவாதலால், எம்பெருமான் எல்லாப்பொருள்களுக்கும் அந்தர்யாமியாதலால் எந்த வஸ்துவைச்சொல்லுகிற சப்தமும் எம்பெருமானளவுஞ்சென்று பர்யவஸிக்குமென்பது வேதாந்த ஸித்தாந்தம். இதனை ஆழ்வார் முந்துறமுன்னமே "உடன்மிசை உயிரெனக்கரந்தெங்கும் பரந்துளன்" என்று சுருக்கமாகக் காட்டியருளினர். அது தன்னையே இத்திருவாய்மொழியில் விஸ்தரித்து அருளிச்செய்கிறார் என்றுணர்க. .... .... ... ... .... .... *

புகழுநல்லொருவனென்கோ பொருவில்சீர்ப்பூமியென்கோ*
திகழுந்தண்பரவையென்கோ தீயென்கோவாயுவென்கோ*
நிகழுமாகாசமென்கோ நீள்சுடரிரண்டுமென்கோ*
இகழ்விலிவ்வனைத்துமென்கோ கண்ணனைக்கூவுமாறே. (க)

| | | | |
|---|---|---|---|
| கண்ணனை | (உலகத்து எல்லாப் பொருள்களையும் தனக்குச் சரீரமாகவுடைய) எம்பெருமானை | தீ என்கோ | அக்நியென்பேனோ? |
| புகழும் | (வேதங்கள் இதிஹாஸ புராணங்கள் முதலியவற்றால்) புகழ்ந்து கூறப்பெற்ற | வாயு என்கோ | காற்று என்பேனோ? |
| நல் | விலக்ஷணமான குணங்கள் முதலியவற்றையுடைய | நிகழும் ஆகாசம் என்கோ | எங்குமுள்ளதான ஆகாசமென்பேனோ? |
| ஒருவன் | ஒப்பற்றவன் | நீள் சுடர் இரண்டும் என்கோ | மிக்க வொளியையுடைய (ஸூர்யன் சந்திரன்) என்ற இரண்டு சுடர்களுமென்பேனோ? |
| என்கோ | என்று சொல்வேனோ? | இகழ்வு இல் | இகழப்படுதலில்லாத [வேண்டும் பொருள்களாகக் கைக்கொள்ளுதற்கு உரிய] |
| பொருவு இல் சீர் | ஒப்பில்லாத சிறப்புக்களையுடைய | இவ் அனைத்தும் என்கோ | இவையெல்லாப் பொருள்களுமென்பேனோ? |
| பூமி என்கோ | பூமியென்று சொல்வேனோ? | கூவும் ஆறு ஏ | (எம்பெருமானைச்) சொல்லியழைக்கும் விதம் (என்னே) [யான் இன்னதென்று உணரேன் என்றபடி]. |
| திகழும் | விளங்குகிற | | |
| தண் | குளிர்ச்சியான | | |
| பரவை என்கோ | நீர்நிலையென்று சொல்வேனோ? | | |

* * * [புகழுநல்லொருவன்.] எம்பெருமான் ப்ரபஞ்சஸ்ருஷ்டிக்குக் காரணமான பஞ்சமஹாபூதங்களையும், அந்தப்பூதங்களினால் இயன்ற பொருள்களையும் தனக்குச்சரீரமாகக் கொண்டு விலக்ஷணமான குணங்களோடு ஆழ்வார்க்கு

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸேவைதந்தருளியதனால், அத்தகைய நிலைமையை ஸேவிக்கப்பெற்ற ஆழ்வார் அப்பெருமானை இப்படிப்பட்ட தன்மையையுடையவனென்று கூறுதற்கு இயலாமல் திகைத்து நிற்கின்றார். "கண்ணனைக் கூவுமாறே" என்று, முடிக்குஞ் சொல் இன்றி விட்டிருக்கிறார்; அதனை வருவித்து உரைத்துக்கொள்க. விதமென்றபொருளையுணர்த்துகின்ற ஆறு என்ற சொல் வருமிடங்களில் முடிக்குஞ் சொல் கூறப்படாது எஞ்சிநிற்பதை இலக்கியங்களிற் காணலாம்: இது இசையெச்சம்.

புகழும் நல்லொருவன் = வேதம் முதலியவற்றால் புகழப்பெற்றும், சேதநாசேதனங்களைக்காட்டிலும் பரமவிலக்ஷணனாகியும் தோன்றும் ஒப்பற்ற எம்பெருமான் என்றபடி. என்கோ என்பதை என்கு ஓ என்று பிரிக்க. 'என்' என்னும் பகுதியினடியாய்ப்பிறந்த தன்மையொருமை எதிர்காலவினைமுற்று 'என்கு' என்பது. இதில் 'கு' விகுதி காலத்தையும் இடத்தையும் காட்டும். [நன்னூல்-பதவியலில் பதினெட்டாவது சூத்திரமும் வினையியலில் பன்னிரண்டாவது சூத்திரமும் காண்க]. என்கோ என்பவற்றிலுள்ள ஓகாரங்கள் ஸந்தேஹப்பொருளில் வந்தவை.

ப்ருதிவி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்கிற பஞ்சபூதங்களையும் இப்பாட்டில் உத்பத்திக்ரமமாகக் கூறாமல் மஹாப்ரளய காலத்தில் லயிக்கும் முறைப்படி கூறியுள்ளார். "தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாசஸ்ஸம்பூத:। ஆகாசாத்வாயு:।" இத்யாதி உபநிஷத்வாக்யங்களினால் உத்பத்திக்ரமம் அறியத்தக்கது. "ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே। ஆபஸ்தேஜஸி லீயந்தே." இத்யாதி உபநிஷத் வாக்யங்களினால் அவற்றின் லயக்ரமம் அறியத்தக்கது. பொறுமை முதலிய குணங்களையுடைய பூமியாகவும், அந்தப் பூமியைக்கொண்டு காரியங்கொள்ளும்போது அதனுடைய கடினத்தன்மையை நெகிழ்த்துக் கொள்ளுதற்கு உரிய ஜலமாகவும், அந்த ஜலம் நிறைந்து நெகிழ்ச்சி மிகுந்தால் அந்த நெகிழ்ச்சியை நீக்கி வலிக்கப் பண்ணித்தரும் அக்நியாகவும், அந்த அக்நி மிகவும் உறைதலால் அதனைத் தணித்தற்கு உரிய காற்றாகவும், இந்த நான்கு பூதங்களும் தங்குவதற்கு இடத்தைத் தருகின்ற ஆகாசமாகவும் இவ்வாறு லோக ஸ்ருஷ்டிக்குங் காரணமான இந்த ஐம்பெரும் பூதங்களையும் எம்பெருமான் தனக்குச் சரீரமாகக் கொண்டு நிற்கும் வகையை முதலிற் கூறினர்—"பொருவில்சீர்ப்பூமியென்கோ" என்று தொடங்கி "ஆகாசமென்கோ" என்னுமளவாக.

"நீள்சுடரிரண்டுமென்கோ" என்று ஸூர்ய சந்திரர்களைக் கூறியது—பஞ்சபூதங்களினாலாகிய மற்றை உலகத்துப் பொருள்கட்கெல்லாம் உபலக்ஷணம். இங்குக் கூறிய பூமி முதலிய பொருள்கள் யாவும் நாட்டிலுள்ளார்க்குத் தோன்றுவதுபோல் வெறும் பொருள்மாத்திரமாகத் தோன்றாது எம்பெருமான் வடிவமாகவே இவ்வாழ்வார்க்குத் தோன்றுகின்றதனால் ஒன்றையும் ஹேயமாகக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

கொள்ளாமல் ததீயஸ்வாகாரத்தாலே அதனைத்தையும் உபாதேயமாகவே ஆழ்வார் கொண்டார் என்பது "இகழ்வு இல் இவ்வனைத்து மென்கோ" என்பதனுல் பெறப் படும். ஆசார்யஹ்ருதயத்தில் (இரண்டாம் பிரகரணத்தின் முடிவான சூர்ணை யில்) "ஸ்வீய மென்னில் விட்டகலவும் ததீய மென்னில் இகழ்வு அறவும்" என்றரு ளிச்செய்திருப்பது இங்கு நினைக்கத்தக்கது.

"பத்ப்யாம் பூமி:" என்ற புருஷஸூக்தத்தின்படி பூமியானது எம்பெரு மானது திருவடிகளில் தோன்றிய சிறப்பையுடையதும், பொறுமை முதலியவற் றையுடையது மாதலால் "பொருவில் சீர்ப் பூமி" என்றும், ஜலமானது பூமியின் வன்மையை நெகிழ்த்தித்தரும் தன்மையையுடையதாதலால் "திகழும் பரவை" என்றும், ஆகாசமானது மற்ற நான்கு பூதங்களும் தன்பக்கல் ஒடுங்குமளவும் தான் அழியாது நிற்றலாலும், மற்றைப் பூதங்கட்கு முன்னே தோன்றி அவைதன்னிடத்துத் தங்கும்படி தான் இடங்கொடுத்தலாலும் "திகழும் ஆகா சம்" என்றும் கூறினர் என்றும் விசேஷார்த்த மருளிச்செய்வர். ... (க)

கூவுமாறறியமாட்டேன் குன்றங்களனைத்துமென்கோ*
மேவுசீர்மாரியென்கோ விளங்குதாரகைகளென்கோ*
நாவியல்கலைகளென்கோ ஞானநல்லாவியென்கோ*
பாவுசீர்க்கண்ணனெம்மான் பங்கயக்கண்ணனையே. (உ)

| | |
|---|---|
| பாவு சீர் கண்ணன் | பரம்பின திருக்கல்யாண குணங்களையுடைய க்ருஷ்ணனென்ற திருநாமமுடையவனும் |
| பங்கயம் கண்ணன் | செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடையவனும் |
| எம்மானை | எமது தலைவனுமாகிய எம்பெருமானை |
| குன்றங்கள் அனைத்தும் என்கோ | மலைகள் எல்லாமும் என்று சொல்வேனோ? |
| மேவு சீர் மாரி என்கோ | (கண்டார்) விரும்பும்படியான சிறப்பையுடைய மழையென்பேனோ? |
| விளங்கு தாரகைகள் என்கோ | பிரகாசிக்கின்ற நக்ஷத்திரங்களென்பேனோ? |
| நா இயல் கலைகள் என்கோ | நாவினுல் முயற்சியோடு உச்சரிக்கப்படுகின்ற கல்விகளென்பேனோ? |
| ஞானம் நல் ஆவி என்கோ | அர்த்த ஞானத்திற்குக் காரணமான நல்ல சப்தங்கள் என்பேனோ? |
| கூவும் ஆறு | (எம்பெருமானைச்) சொல்லும் விதத்தை |
| அறிய மாட்டேன் | அறிகின்றேனில்லை. |

* * * [கூவுமாறு.] கீழ்ப்பாசுரத்திற் கூறிய பஞ்சபூதங்களின் காரியப்பொரு ளாக எம்பெருமானை இந்தப்பாசுரத்தில் ஆழ்வார் அநுபவிக்கிறார். குன்றங்கள் முதலியவை எம்பெருமான் வடிவமாகவே ஆழ்வார்க்குத் தோற்றுதலால் "பங்க யக் கண்ணன்" என்றதனோடு "குன்றங்களனைத்தும்" என்பன முதலியவற்றோடு வாசியில்லாமல் இவர் ஈடுபடுகின்றனரென்க. குன்றம்—பூமிதத்துவத்தின் காரி யம். "பூமியினுடைய காடிந்யம் ஓரிடத்திலே திரண்டாற்போலேயாய்ப் பூமிக்கு

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆகாரமாயிருக்கிற பர்வதங்களென்பேனோ?" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. மாரி—ஜலதத்துவத்தின் காரியம். உலகமும் அதற்கு உறுதியாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய சிறப்பையும், வடிவழகினுலுங் குளிர்ச்சியினுலும் கண்டாரெல்லாராலும் விரும்பப்படுந்தன்மையையும், எம்பெருமானது திருமேனிக்குப் போலியாகும் மேம்பாட்டையும் பெற்றிருத்தலால் "மேவுசீர் மாரி" என்றார். தாரகைகள் — அக்நிதத்துவத்தின்காரியம். ஒளியுள்ள பொருள்களெல்லாம் அக்நிதத்துவத்தின் காரியமென்பது நூல்துணிபு. கலைகள்—வாயுதத்வத்தின் காரியம். சப்தங்கள் ஆகாசத்தின் குணமெனப்படுமாயினும் அவை செவிப்புலனாகுந்தன்மை வாயுவின் உதவியினாலேயே ஆகவேண்டியிருத்தலால் கலைகள் வாயுவின் காரியமாகும். உயிரின் முயற்சியினால் தோன்றும் வாயுவே முயற்சியின் வேறுபாட்டால் வெவ்வேறெழுத்துக்களாக நாவினால் உச்சரிக்கப்பட, அவ்வெழுத்துகள் பதங்களாகவும் அந்தப் பதங்கள் வாக்கியங்களாகவும் அவ்வாக்கியங்கள் சாஸ்த்ரங்களாகவும் என இவ்வாறு நாவினால் தோன்றுகின்ற எழுத்துக்களே சாஸ்த்ரங்களாகின்றனவாதலால் 'நாவியல் கலைகள்' எனப்பட்டது. ஞான நல்லாவி—ஆகாசதத்துவத்தின் காரியம். ஞானமாவது பொருள்களை உள்ளபடி அறிதல்; ஆவி என்னும் உயிரின் பெயர் ஆகுபெயராய் உடலைக் குறித்து நிற்கும். ஆகவே 'ஞான நல்லாவி' என்பதற்கு 'அறிவுக்கு உடலான ஓசைவிசேஷங்கள்' என்று பொருள் கொள்ளவேண்டியதாயிற்று. உடலுக்குள் உயிர் தங்கி நிற்றல் போலச் சப்தங்களில் அர்த்த ஞானம் தங்கி நிற்றலால் ஞானத்துக்குச் சப்தங்கள் உடலாகும். "பல்வகைத் தாதுவினுயிர்க்கு உடல் போல், பல சொல்லால் பொருட்கு இடனாக...செய்வன செய்யுள்" என்றது இங்குக்காணத்தக்கது.

"ஆவியென்று லக்ஷணையாலே சரீரத்தைச் சொல்லுகிறது. ஞானத்துக்கு சரீரமென்று ஜ்ஞாநஸாதநமான சப்தத்தைச் சொல்லுகிறது" என்ற பன்னீராயிரப்படி காண்க.

ஆழ்வார் மயர்வற மதிநலமருளப்பெற்று எல்லாப்பொருள்களையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல நன்றாக உணர்ந்திருந்தும் "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றபடி தாம் பக்தியினால் பரவசப்பட்டிருத்தலால் எம்பெருமானது தன்மையைப்பேச இயலாமல் "கூவுமாறு அறியமாட்டேன்" என்கிறார். இனி, எம்பெருமானது விபூதிகள் இவ்வளவென்று ஓரளவுபட்டிராமையால் அவற்றை முற்றவும் சொல்லமாட்டாது இங்ஙனம் கூறுகின்றாரெனினும் அமையும். .... .... ... .... ... .... .... .... (உ)

பங்கயக்கண்ணனென்கோ பவளச்செவ்வாயனென்கோ*
அங்கதிரடியனென்கோ அஞ்சனவண்ணனென்கோ*
செங்கதிர்முடியனென்கோ திருமறுமார்வனென்கோ*
சங்குசக்கரத்தனென்கோ சாதிமாணிக்கத்தையே. (௩)



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| சாதி மாணிக்கத்தை | நல்ல சாதியான [ஆகரத்தில் தோன்றிய] கருமாணிக்கம் போல விளங்குகின்ற திருமேனியையுடைய திருமாலை |
| பங்கயம் கண்ணன் என்கோ | செந்தாமரைக் கண்ணனென்பேனோ? |
| பவளம் செம் வாயன் என்கோ | பவளம்போலச் சிவந்த வாயையுடையவன் என்பேனோ? |
| அம் கதிர் அடியன் என்கோ | அழகையும் ஒளியையுமுடைய திருவடிகளையுடையவனென்பேனோ? |
| அஞ்சனம் வண்ணன் என்கோ | மைபோலுங் கருநிறத்தையுடையவனென்பேனோ? |
| செம் கதிர் முடியன் என்கோ | சிவந்த ஒளியையுடைய கிரீடத்தையுடையனென்பேனோ? |
| திரு மறு மார்வன் என்கோ | பிராட்டியையும் ஸ்ரீவத்ஸமென்னும் மறுவையுமுடைய திருமார்பையுடையவனென்பேனோ? |
| சங்கு சக்கரத்தன் என்கோ | சங்க சக்கரங்களையுடையனென்பேனோ? |

* * * [பங்கயக்கண்ணன்] எம்பெருமான் ப்ரபஞ்ச சரீரனாயிருக்கும்படியை முதலிரண்டு பாசுரங்களிற் கூறிய ஆழ்வார், இந்தப் பாசுரத்தில் தனக்கு உரிய திருமேனியோடு ஸேவைஸாதிக்கின்ற அப்பெருமானை அநுபவிக்கிறார். இவ்வாறு அநுபவித்துக் கூறியதற்குக்காரணம்—எம்பெருமான் ஜகத்தை சரீரமாகக் கொண்டுநிற்கும் நிலையும் தனக்கு உரிய திருமேனியைக் கைக்கொண்டு நிற்கும் நிலையும், இவ்விரண்டும் ஆழ்வார்க்கு ஒத்திருக்கையாமென்க.

ஆழ்வார், தம்மைக் கடாக்ஷித்துத் தம்மோடு முதலுறவு பண்ணின திருக்கண்களின் அழகிலீடுபட்டு முதலில் "பங்கயக் கண்ணன்" என்றார். அந்தக்கண்ணோக்குக்குத் தப்பினாலும் தப்பவொண்ணாத புன்முறுவலையுடைய வாயழகிலீடுபட்டுப் 'பவளச் செவ்வாயன்' என்றார். அந்த நோக்கத்திலும் புன்சிரிப்பிலும் ஈடுபட்டவர் தோற்றுவிழும் நிலமாகிய திருவடிகளிலீடுபட்டு "அங்கதிரடியன்" என்றார். அத்திருவடிகளில் வீழ்ந்தவர் அநுபவிக்கின்ற வடிவழகிலீடுபட்டு "அஞ்சனவண்ணன்" என்றார். அவ்வாறு அநுபவிக்கும் வடிவழகையுடையவன் ஈடும் எடுப்புமில்லாத ஈசன் என்பதை விளக்குகின்ற திருமுடியினழகிலீடுபட்டுச் "செங்கதிர்முடியன்" என்றார். திருமுடியினால் விளங்குகின்ற ஸ்வாமித்வத்தைக் கண்டு 'இப்பெரியோனை நாம் எவ்வாறு நெருங்குவது' என்று கருதிப் பின் வாங்காதபடி எப்போதும் அப்பெருமானது திருமார்பிலேயிருந்து புருஷகாரஞ்செய்யும் தாயான பிராட்டியின் ஸம்பந்தத்தைக் கருதித் "திருமறுமார்வன்" என்றார். பெருமானும் பிராட்டியுமான இச்சேர்த்திக்கு என்ன தீங்கு வருகிறதோவென்று பொங்கும் பரிவினால் பாபசங்கை கொள்ளுகின்ற அடியார்களுடைய அச்சத்தைத் தவிர்ப்பனவான திவ்யாயுதங்களைக் கருதி 'சங்கு சக்கரத்தன்' என்றார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



“[சாதிமாணிக்கத்தை.] போலியன்றிக்கே ஆகரத்திலே பிறந்து நன்றான மாணிக்கம்போலே நிர்த்தோஷமாய் ஸ்வதஸ்ஸித்தமான வடிவழகுடையவனை” என்பது ஈடுமுப்பத்தாறாயிரம்.

மறு—ஸ்ரீவத்ஸமென்கிற மயிர்ச்சுழி. .... .... .... .... (ங)

சாதிமாணிக்கமென்கோ சவிகொள்பொன்முத்தமென்கோ*
சாதிநல்வயிரமென்கோ தவிவில்சீர்விளக்கமென்கோ*
ஆதியஞ்சோதியென்கோ ஆதியம்புருடனென்கோ*
ஆதுமில்காலத்தெந்தை அச்சுதனமலனையே. (ச)

| | | | |
|---|---|---|---|
| ஆதும் இல் காலத்து | (என்னிடத்து) யாதொரு உபாயமுமில்லாத காலத்திலே | சாதி நல் வயிரம் என்கோ | சாதியில் தோன்றிய சிறந்த வஜ்ரரத்ன மென்பேனோ? |
| எந்தை | என்தந்தைபோலப் பாதுகாக்க ஒருப்பட்டவனும் | தவிவு இல் சீர் விளக்கம் என்கோ | அழிதலில்லாத ஒளியையுடைய விளக்கு என்பேனோ? |
| அச்சுதன் | (பின்பு ஒருகாலும் என்னை அந்த நிலையினின்று) நழுவவிடாதவனும் | ஆதி | எல்லாப்பொருள் கட்கும் முந்தியிருப்பதாய் |
| அமலனை | (அங்ஙனம் பாதுகாத்தலைத்) தன்பேறாகக் கொள்பவனுமான எம்பெருமானை | அம் | அழகியதான |
| | | சோதி என்கோ | தேஜோமயமான திருமேனியையுடையவனென்பேனோ? |
| சாதி மாணிக்கம் என்கோ | ————; | ஆதி | தலைவனாகிய |
| சவி கொள் பொன் என்கோ | ஒளியையுடைய பொன் என்பேனோ? | அம் | (ஆனந்தம் முதலிய குணங்களால்) இனியவனான |
| சவி கொள் முத்தம் என்கோ | நீரோட்டமுள்ள முத்து என்பேனோ? | புருடன் என்கோ | பரமபுருஷன் என்பேனோ? |

* * * [சாதிமாணிக்கம்.] ஒருவன் எம்பெருமானை நினைப்பதற்கு எனக்கு ஒருபாயம் சொல்லவேணும் என்று ஒருபெரியோரைக்கேட்க, அதற்கு அவர் ‘நான் உனக்கு அது சொல்லுகிறேன், நீ எனக்கு அவனை மறப்பதற்கு ஒருபாயம் சொல்லவல்லையோ?’ என்றாராம். அதற்குக் கருத்து—உலகத்துப் பொருள்கள் யாவும் பெயரையும் உருவத்தையும் பெற்று வழங்கப்பெறுவது எம்பெருமான் அவ்வப்பொருள்களில் பிரவேசித்து நிற்பதனாலேயாதலால், ஏதேனும் ஒரு பதார்த்தம் தோற்றும்போதும் ஞானிகட்கு அவனை முன்னிட்டுக்கொண்டே தோற்றுமென்பது. இவ்வாறு எல்லாப்பொருள்களும் எப்பெருமானது ஸம்பந்தத்தைப் பெற்றிருந்தாலும் “யத்யத்விபூதிமத்ஸத்த்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவவா। தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ஸஸம்பவம்॥” [உலகத்திலே சிறந்து தோன்றும் பொருள்கள் யாவும் எனது தேஜஸ்ஸின் அம்சத்தினாலுண்டானவை]

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



என்று கீதையில் கண்ணபிரான் பாராட்டிக் கூறியிருத்தலால் சிறந்தமாணிக்கம் முதலியவைகளில் அவ்வெம்பெருமானது அம்சம்மிக்கிருக்குமென்பது கருதி ஆழ்வார் இந்தப்பாசுரத்தில் எம்பெருமானை மாணிக்கம்முதலிய சிறந்தபொருள் களாகப் பாராட்டியநுபவிக்கின்றாரென்க. ஆதியஞ்சோதி யென்பது முதல் எம்பெருமானை நேரே சொல்லுகின்றது.

மாணிக்கம்—நவமணிகளுள் ஒன்று. (நவமணிகளாவன—கோமேதகம் நீலம் பவளம் புட்பராசம் மரதகம் மாணிக்கம் முத்து வைடூரியம் வைரம் என்பன.) சாதிமாணிக்கம் என்றது—சிறந்த ஆகாத்திற் பிறந்ததும் குற்றமற்றதும் இயற் கையழகையுடையதும் பெருவிலையதுமான மாணிக்கம் என்றபடி. [சவிகொள் பொன்முத்தம் என்கோ] சவிகொள் பொன் என்கோ, சவிகொள் முத்தம் என் கோ என்று கூட்டுக. சவி: என்னும் வடசொல் சவி யென்றாயிற்று. பொன் னுக்குச் சவி உயர்ந்த மாற்று. முத்தத்திற்குச் சவி நீரோட்டம்.

ஆதியஞ்சோதி என்பதற்கு—காரியப்பொருள்கட்கெல்லாம் தான் முந்திய தாய், என்றும் ஒருபடிப்பட்டதாய், ஸூர்யன் முதலிய சுடர்களெல்லாவற்றினும் விஞ்சிய ஒளியையுடையதான பரமபதம் என்றும் பொருள் கூறலாம். [அம் புருடன்.] புருஷனுக்கு அழகாவது—உலகத்து உயிர்களைப்போலக் கருமவசத்தி னல் தோன்றி க்ஷணிகமாக நிற்கும் ஆனந்தம் முதலிய குணங்களையுடையவனு காமல் இயற்கையாகவே எப்போதும் இருப்பனவான ஆனந்தம் முதலிய குணங் களுடையவனுதல்.

["ஆதுமில்காலத்து எந்தை அச்சுத னமலனையே.] எனக்குத் தன்னைப்பெறு கைக்கு முதலொன்றுமில்லாத காலத்திலே தான் எந்தையான முறையை எனக்கு அறிவித்து, பின்பு ஒருகாலமும் நழுவவிடாதே ரக்ஷித்து என்பக்கலிலே ஒரு ப்ரயோஜனங்கொண்டன்றிக்கே நிர்ஹேதுகமாகத் தன் பேறாக ரக்ஷித்த வனை" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. இனி, ஆதும் இல் காலத்து—எல்லாம் அழி யும் ப்ரளயகாலத்திலே, எந்தை—எமது தந்தைபோல்பவனும், அச்சுதன்— (எல்லாப்பொருள்களையும்) நழுவவிடாது (தன்பக்கல் ஏறிட்டுக்கொண்டு) பாது காப்பவனும், அமலனை—(அவை தன்னிடத்திலிருந்தாலும் அவற்றின்) குற்றம் தன்னிடத்துச் சேரப்பெறாதவனை எம்பெருமானை என்றும் பொருளுரைப்பர். ஆசார்யஹ்ருதயத்தில்—"உறக்கம் தலைக்கொண்டபின்னை" இத்யாதியான (சகூ) சூர்ணையில் "ஆதுமில்காலத்தெந்தையான" என்றவிடத்திற்கு வியாக்யானம் செய்தருளாநின்ற மணவாளமாமுனிகளும் இங்ஙனே பொருளருளிச் செய் துள்ளார். .... .... .... .... .... ... ... ... (ச)

அச்சுதனமலனென்கோ அடியவர்வினைகெடுக்கும்*
நச்சுமாமருந்தமென்கோ நலங்கடலமுதமென்கோ*
அச்சுவைக்கட்டியென்கோ அறுசுவையடிசிலென்கோ*
நெய்ச்சுவைத்தேறலென்கோகனி யென்கோபாலென்கேனே. (ரு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| (எம்பெருமானை) | |
| அச்சுதன் என்கோ | அச்சுதன் என்பேனோ? |
| அமலன் என்கோ | அகில ஹேய ப்ரத்யநீகன் என்பேனோ? |
| அடியவர் | தன்னடியார்களது |
| வினை | புண்ணியபாப மென்கிற இரு வினைகளையும் |
| கெடுக்கும் | போக்குவதும் |
| நச்சு | (இனிமைபற்றி) விரும்பப்படுவதுமான |
| மா மருந்தம் என்கோ | சிறந்த ஔஷதமென்பேனோ? |
| நலம் கடல் அமுதம் என்கோ | நல்லபாற்கடலில் தோன்றிய அம்ருதமென்பேனோ? |
| அ சுவை கட்டி என்கோ | அந்த அம்ருதத்தின் உருசியையுடைய கருப்புக் கட்டி யென்பேனோ? |
| அறு சுவை அடிசில் என்கோ | அறுவகைச் சுவையும் நிரம்பிய உணவு என்பேனோ? |
| நெய் சுவை தேறல் என்கோ | நெய்போலுஞ் சுவையையுடைய தேன் என்பேனோ? |
| கனி என்கோ | பழமென்பேனோ? |
| பால் என்கேனோ | பால் என்பேனோ? |

* * * [அச்சுதனமலனென்கோ] எம்பெருமான் ரஸம் நிறைந்த பண்டங்களாக இருக்குந்தன்மையை ஆழ்வார் இப்பாட்டில் பாராட்டிக் கூறுகின்றார். "ரஸோவை ஸ:! ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீபவதி" என்ற உபநிஷத்து இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

புண்ணியமும் பாவமும் பிறப்பிற்கே ஹேதுவாகி உயிரைப் பந்தப்படுத்துவதில் பொன் விலங்கும் இரும்பு விலங்கும் போலத் தம்முள் ஒத்திருக்கின்றமையால் அவ்விருவகைவினையும் அடங்க "வினைகெடுக்கும்" என்று பொதுப்படக் கூறினர். எம்பெருமான் பரமபதத்தில் இருந்தானேயாகிலும் அடியவர் இடர்ப்பட்டமாத்திரத்தில் அரைகுலையத் தலைகுலைய ஆனைக்கு அருள்செய்தாற்போல ஓடிவந்து அவர்கள் துன்பத்தைப்போக்குவானென்ற கருத்தும் அடியவர் வினை கெடுக்கும் என்ற விடத்தில் தோன்றும். உடற்பிணியைத்தீர்க்கும் மருந்தினும் உயிர்ப்பிணியாகிய வினையைத் தீர்க்கும் வேறுபாடு விளங்க 'வினைகெடுக்கும் மருந்தம்' என்றார். கைப்பு முதலிய அருசியையுடைய மருந்தினும் வேறுபாடு விளங்க 'நச்சுமருந்தம்' என்றார். மாமருந்தம் என்றது—காற்றுப்பட்ட மாத்திரத்தில் நோய்தீர்க்கவல்லதாய், ஏகமூலிகையாய், ஒருமுறையில்தானே பிணியைப்போக்கவல்லதாய், அபத்தியஞ்செய்தாலும் தீமையை உண்டாக்காததான மஹௌஷதம் என்றபடி. எம்பெருமான் பரம்பரையாகத் தன்னடியாரடியார் முதலியோர்க்கு அடியவரானாரையும் பாதுகாத்தலும், தன்னையடைந்தார் எதைவேண்டினாலும் தானேயளிப்பவனாதலும், தன்னை ஒருகால் சரணமடைந்தார்க்கும் அபயமளிப்பவனாதலும், தன்னடியவர் அபுத்தி பூர்வமாகச் செய்யும் பாவங்களையெல்லாம் க்ஷமிப்பவனாதலும் காண்க. மாமருந்தம் என்றவிடத்திற்கு வியாக்கியானமருளிச்செய்யுமிடத்து (ஈட்டில்) — "மேல்காற்றிலே காட்ட நோய்தீருமாயிருக்கை" என்றுளது. உலகில் வியாதிகளுக்கெல்லாம்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மேல் காற்றுப்பட்டால் அபிவ்ருத்தியாகுமென்பர்; அதற்கு எதிர்த்தட்டாயிருக்கும் இந்த மாமருந்து என்ற கருத்தும் உரைத்தக்கது.

நலங்கடலமுதம் என்ற விடத்தில், கடல் என்பதை அமுதத்திற்கு இயற்கையடைமொழியாக்கி, கடலைக்கடையாமலே கிடைத்த சிறப்பையுடைய அமிருதம் என்று விசேஷப்பொருளுரைப்பர்.

அறுசுவை—கைப்பு தித்திப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கார்ப்பு என்பவை. "நெய்ச்சுவைத்தேறல்" என்னுமிடத்தில், நெய்—மிருதியான, சுவை—சுவையையுடைய, தேறல் என்றும், சுவை என்பதை நெய் தேறல் என்ற இரண்டற்கும் அடைமொழியாக்கி, சுவையையுடைய நெய் யென்கோ? சுவையையுடைய தேறல் என்கோ? என்றும், நெய்ப்பையும் சுவையையுமுடைய தேறல் என்றும் பொருளுரைப்பர்.

நச்சுமருந்தம்—வினைத்தொகை. மருந்தம் என்பதில், அம்—சாரியை. (ரு)

பாலென்கோ நான்குவேதப்பயனென்கோ* சமயநீதி
நூலென்கோ நுடங்குகேள்வியிசையென்கோ* இவற்றுள்நல்ல
மேலென்கோ வினையின்மிக்கபயனென்கோ* கண்ணனென்கோ
மாலென்கோமாயனென்கோ வானவராதியையே. (சு)

| | |
|---|---|
| வானவர் ஆதியை | தேவாதி தேவனான எம்பெருமானை |
| பால் என்கோ | பால் என்பேனோ? |
| பயன் நான்கு வேதம் என்கோ | (பிரமாணங்களுக்குள்) சிறந்ததான நால் வேதங்களென்பேனோ? |
| சமயம் | வைதிக மதத்தைத் தெரிவிக்கின்ற |
| நீதி | முறைமையையுடைய |
| நூல் என்கோ | (இதிஹாஸ புராணங்களாகிற) சாஸ்திரங்கள் என்பேனோ? |
| நுடங்கு | (கேட்டவர்களை) ஈடுபடுத்துகின்ற |
| கேள்வி | (செவியிற்) கேட்டலையுடைய |
| இசை என்கோ | ஸங்கீதமென்பேனோ? |
| இவற்றுள் | கீழ்ச்சொன்ன வேதம் முதலிய எல்லாவற்றினும் |
| நல்ல | சிறந்த |
| மேல் என்கோ | மேன்மையுடையது என்பேனோ? |
| வினையின் | (செய்கின்ற) முயற்சியைக் காட்டிலும் |
| மிக்க | மிகப் பலமடங்கு மேம்பட்டுவிளைகின்ற |
| பயன் என்கோ | பலன் என்பேனோ? |
| கண்ணன் என்கோ | (உனக்கு நான இருக்கிறேன், நீ அஞ்சவேண்டா என்று சரமச்லோகத்தினால் அபயமளித்த) ஸ்ரீக்ருஷ்ணன் என்பேனோ? |
| மால் என்கோ | அடியவர் திறத்து வியாமோஹமுடையவனென்பேனோ? |
| மாயன் என்கோ | ஆச்சரியமான குண சேஷ்டிதங்களையுடையவனென்பேனோ? |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * *—[பாலென்கோ] வேதம் முதலிடவான இயலும் இசையுமாயுள்ள சப்த ராசிகளை எம்பெருமான் தனக்கு விசேஷணமாகப் பெற்றிருக்கின்றபடியைக் கூறுகின்றாரிப்பாட்டில். வேத முதலியன தன்னையுணர்த்த, தான் அவற்றால் உணரப்படுபவனாதலால் எம்பெருமானுக்கு வேதம் முதலியன விசேஷணமாகும். கீழ்ப்பாசுரத்திற் கூறிய எம்பெருமானது இனிமை பின்னும் தோன்றியதனால் பாலென்கோ என்றார். "தன்னையென்கோ" என்பதுமுதல் எம்பெருமானது தானான தன்மையையுணர்த்தும்.

"நான்கு வேதப் பயனென்கோ" என்பதை 'பயன் நான்கு வேதமென்கோ' என்று கூட்டிப் பொருள்கொள்ள வேணுமென்று ஆசிரியர்களின் கொள்கை: வேதம் முழுவதும் எம்பெருமானது ஆராதனத்தின் தன்மையையும், ஆராதிக்கப்படுகின்ற அந்த எம்பெருமானது தன்மையையுமே உணர்த்துவதாகி வேறொன்றையுணர்த்தாமையால், வேதத்தின் பயன் [ஸாரமான பொருள்] எம்பெருமான்—என்று கூறுதற்கு இடமில்லை. ஆகையால், பயனாகிய நான்கு வேதம் என்று கூட்டி, பிரமாணங்களுக்குள் சிறந்ததான நான்கு வேதங்களாலும் பிரதிபாதிக்கப்படுபவன் என்று பொருள் கொள்வது உசிதம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—

"[நான்கு வேதப்பயனென்கோ.] நாலுவகைப்பட்ட ப்ரமாணஜாதத்தில் ஸாரபூதமான வேதமாகிற ப்ரயோஜனமென்பேனோ? வேதத்திலே வேறேயும் ஓர் அம்சம் ஒருவனை ப்ரதிபாதிக்கிலிறே நான்கு வேதத்தில் பயனென்கோ என்ன வேண்டுவது; அங்ஙனன்றியே, வேதந்தான் ஆராதந ஸ்வரூபம் சொல்லுமிடமும் ஆராத்யஸ்வரூபம் சொல்லுமிடமுமாய்க் கட்டடங்க இவனையே சொல்லுகையாலே வேதத்தில் நாலுமூலைக்கும் ப்ரயோஜநமல்லாத விடமில்லை; *வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:* என்றானிறே."—என்பது. பிரமாணங்களுள் வேதம் ஸாரமென்பதற்குக் காரணம்—நித்யமாய் அபௌருஷேயமாய் [எழுதாக் கிளவியாய்], பிரமித்தல் முதலியகுற்றங்கட்கு இடமில்லாது நிற்றலாலென்க. இனி, முதலடியில் நான்கு வேதம் என்பதனை மத்திம தீபமாக்கி, நான்கு வேதம் பாலென்கோ—நான்கு வேதங்களிலுமுள்ள சாகைமுதலிய பிரிவுகள் என்பேனோ? நான்கு வேதம் பயன் என்கோ—நான்கு வேதங்களினாலும் தேர்ந்து அறியப்படும் பொருள் என்பேனோ? என்று உரைப்பாருமுளர்.

வேதப்பொருளில் ஸந்தேஹம் தோன்றிய விடங்களில் பொருளை நிர்ணயிப்பதற்கு உபப்ருஹ்மணமாய் [வேதப்பொருளைப் போஷிப்பதாய்] நிற்றலால் இதிஹாஸபுராணங்கள் சமயநீதி நூல் எனப்பட்டன. இனி, சமயம்—கொள்கையை நாட்டுவதற்குரிய, நீதி—நியாயங்களை விளக்குவதான, நூல்—மீமாம்ஸா சாஸ்த்ரம் என்றும் உரைப்பர். எல்லாம் சொல்லவேணுமென்று தொடங்கிய ஆழ்வார் பக்திபாரவச்யத்தினால் மேலே செல்லமாட்டாமையால் 'இவற்றுள்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



நல்ல மேலென்கோ' என்று கூறியொழிந்தார். "இவற்றுள் நல்ல மேலென்கோ" என்பதற்கு—கீழ்க்கூறிய வேதம் முதலியவற்றுக்குள் தோன்றும் சிறந்த போக்கியதை யென்பேனோ? என்று பொருள் கூறுவாருமுளர். கலநெல்லை விதைத்து நூறாயிரங்கலமாக விளைத்துக் கொள்வாரைப்போலே அற்ப முயற்சியினால் பெரும்பயனைக் கொடுத்தற்கு உரியவன் என்பார் "வினையின் மிக்க பயன்" என்றார்; எம்பெருமான் 'மனப்பூர்வமான அன்பு இல்லாமல் போலியன்போடு என்னையடைந்தாரையும் நான் ஒருபோதும் கைவிடேன்' என்றுகூறுபவனாதலால் அப்பிரானை இவ்வாறு கூறுதல் ஏற்கும். எம்பெருமான் பிரமன்முதலிய எல்லாத் தேவர்கட்கும் தான் தலைவனாக இருந்தும் அடியவர்க்கு எளியவனாகித் தூது போதல் ஸாரத்யஞ் செய்தல் முதலிய இழிதொழில்கள் செய்ததுபற்றி மாயன் என்றார். ... ... ... .... ... .... .... .... (௬)

வானவராதியென்கோ வானவர்தெய்வமென்கோ*
வானவர்போகமென்கோ வானவர்முற்றுமென்கோ*
ஊனமில்செல்வமென்கோ ஊனமில்சுவர்க்கமென்கோ*
ஊனமில்மோக்கமென்கோ ஒளிமணிவண்ணனையே. (எ)

| | | | |
|---|---|---|---|
| ஒளி மணி வண்ணனை | பிரகாசமுள்ள மாணிக்கம்போன்ற வடிவையுடைய பெருமானை | வானவர் | அந்த வானவர்கட்கு |
| வானவர் ஆதி என்கோ | நித்யஸூரிகட்குத் தலைவன் என்பேனோ? | முற்றும் என்கோ | (இதுவரையிற் கூறப்படாத) எல்லாமும் என்பேனோ? |
| வானவர் தெய்வம் என்கோ? | அந்த நித்தியஸூரிகளால் கதியென்று பற்றப்படும் தெய்வமென்பேனோ? | ஊனம் இல் | என்றும் அழிதல் இல்லாத |
| | | செல்வம் என்கோ | செல்வமென்பேனோ? |
| வானவர் போகம் என்கோ | அந்த நித்யஸூரிகளால் அனுபவிக்கப்படுகின்ற பொருள் என்பேனோ? | ஊனம் இல் சுவர்க்கம் என்கோ | ஒருநாளும் நசிக்காத ஸ்வர்க்கபோகமென்பேனோ? |
| | | ஊனம் இல் மோக்கம் என்கோ | விலக்ஷணமான மோக்ஷமென்பேனோ? |

* * * [வானவராதி.] எம்பெருமான் ஐச்வர்யம் முதலிய புருஷார்த்தங்களையுடையவனென்பதை இப்பாட்டிலருளிச்செய்கிறார். "வானவர் தெய்வம், வானவர் போகம், வானவர் முற்றும்" என்று வருவதனால் 'வானவராதி' என்பதற்கு—கீழ்ச்செய்யுளிற்போல ப்ரஹ்மாதி தேவர்கட்குத் தலைவன் என்று பொருள் கொள்ளாது நித்யஸூரிகட்குத் தலைவன் என்று பொருள் உரைக்கப்பட்டது. எம்பெருமான் ப்ரஹ்மாதி தேவர்களைப் படைத்தல் முதலியன செய்வதன்றி "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்" என்றபடி எல்லாமுமாக இருப்பது நித்யஸூரிகட்கே யென்க. வானவர் போகமென்கோ என்பதற்கு அவ்வானவர்கட்கு ஆராதனையினாலுண்டாகிய பயனான

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பேரின்பம் என்பேனோ? என்றும், வானவர் முற்றுமென்கோ என்பதற்கு—அவ் வானவர்கட்கு ஸகலவகையான ரக்ஷணமும் என்பேனோ? என்றும் உரைக்க லாம்.

ஊனமில் செல்வம்—சிலநாள்நின்று வற்றுவதல்லாமல் எந்நாளும் அழியாத ஸம்பத்து. ஊனமில் சுவர்க்கம்—சிலநாளிருந்து புண்ணியப்பயனொழிந்தபிறகு தள்ளும்படியானதல்லாமல் கல்பகாலம்வரையில் அழிவின்றி வாழும் சுவர்க்கம். ஆத்மாவைய நுபவித்தல் மாத்திரத்தையுடைய கைவல்யமென்னும் மோக்ஷத்தி னும் வேறுபாடு விளங்க, பரமாத்மாவான எம்பெருமானை யநுபவித்தலையுடைய பரமபுருஷார்த்தமாகிற மோக்ஷத்தை 'ஊனமில் மோக்கம்' என்றார். .... (எ)

ஒளிமணிவண்ணனென்கோ ஒருவனென்றேத்தநின்ற*
நளிர்மதிச்சடையனென்கோ நான்முகக்கடவுளென்கோ*
அளிமகிழ்ந்துலகமெல்லாம் படைத்தவையேத்தநின்ற*
களிமலர்த்துளவனெம்மான் கண்ணனைமாயனையே. (அ)

| | |
|---|---|
| அளி மகிழ்ந்து | உயிர்களைப் பாதுகாத்தலைவிரும்பி |
| உலகம் எல்லாம் | எல்லா உலகங்களையும் |
| படைத்து | ஸ்ருஷ்டித்து |
| அவை | அவ்வுலகங்களெல்லாம் |
| ஏத்த நின்ற | (தன்னைத்) துதிக்கும்படி நிற்கின்ற |
| களி மலர் துளவன் | தேனையும் பூவையுமுடைய திருத்துழாய்மாலையையணிந்தவனும் |
| எம்மான் | எமக்குத் தலைவனும் |
| மாயனை | மாயங்களையுடையவனுமாகிய |
| கண்ணனை | கண்ணபிரானை |

| | |
|---|---|
| ஒளி மணி வண்ணன் என்கோ | பிரகாசமுள்ள மாணிக்கம் போன்ற வடிவையுடையவனென்பேனோ? |
| ஒருவன் என்று | ஒப்பற்ற கடவுள் என்று |
| ஏத்த நின்ற | (தன்னுடைய அடியவர் யாவரும்) துதிக்கும்படி நின்ற |
| நளிர் மதி சடையன் என்கோ | குளிர்ந்த பிறைச்சந்திரனைத் தனது சடைமுடியிலேயுடைய ருத்திரன் என்பேனோ? |
| நான்முகன் கடவுள் என்கோ | பிரமதேவனென்பேனோ? |

* * * [ஒளிமணிவண்ணன்.] இந்தவுலகில் பிரதானரான சிவனையும் பிரமனை யும் எம்பெருமான் தான் உடைமையாகப் பெற்றிருத்தலை ஆழ்வார் இந்தப்பாசுரத் தில் அருளிச்செய்கிறார். வடிவழகில் மிக்க ஈடுபாட்டினால் "ஒளிமணிவண்ண னென்கோ" என்று பின்னும் கூறினர். "ஒருவனென்றேத்த நின்ற நளிர்மதிச் சடையனென்கோ" என்றவிடத்திற்கு நம்பிள்ளையீடு;— "இவன் ஜகத்துக்கு ப்ரதாநனென்று அவிவேகிகள் ஏத்தும்படியாய்க் குளிர்ந்த மதியையும் சடையை யுமுடைய ருத்ரனென்பேனோ" என்று.

மஹாப்ரளயத்தில் ஆத்மவர்க்கங்கள் யாவும் உருமாய்ந்து மூலப்ரக்ருதியிலே லயித்துக்கிடக்க, எம்பெருமான் 'இவ்வுயிர்கள் நம்மையறிந்து ஈடேறவேணும்' என்று தனது திருவுள்ளத்திலெழுந்த பெருங்கருணையால் தன்னையடைவதற்குத்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கருவியாகக் கைகால் முதலிய உறுப்புக்களோடு அவ்வுயிர்களைப் படைத்தானென்பது நூல் துணிபாதலால் "அளிமகிழ்ந்து உலகமெல்லாம் படைத்து" என்றார். ஏத்த என்று மேல்வருவதனால், 'உலகமெல்லாம்' என்பது உலகத்து உயிர்வர்க்கங்களையே காட்டும். எம்மான் என்பதற்கு—என்னைத் தேவதாந்தரங்களுக்கு ஆட்படவொட்டாது தன்னிடத்தே அடியவனும்படி செய்தவன் என்று கருத்துக் கொள்ளலாம். மாயன்—வெண்ணெய் களவாடுதல் முதலிய ஆச்சரியமான தொழில்களையுடையவன் என்று உரைப்பர்.

தளிர்மதிச்சடையன் என்பதில் அடங்கிய கதை:—சந்திரன் தக்ஷமுனிவரது புத்திரிகளாகிய அச்விநி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் மணஞ்செய்துகொண்டு அவர்களுள் ரோஹிணி யென்பவளிடத்தில் மிகவும் காதல் கூர்ந்து அவளுடனே எப்போதும் கூடிவாழ்ந்திருக்க, மற்றை மகளிரின் வருத்தத்தை நோக்கி முனிவன் அவனை 'க்ஷயமடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தால் சந்திரன் பதினைந்து கலைகளுங் குறைந்து மற்றைக் கலையொன்றையும் இழப்பதன் முன்னர் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்கூர்ந்து அவ்வொற்றைக் கலையைத் தன் தலையிலணிந்து மீண்டுங் கலைகள் வளர்ந்து வரும்படி அநுக்ரஹித்தான் என்பதாம்: திருப்பாற்கடல் கடைகையில் அதில் நின்று உண்டான பலபொருள்களுடனே விஷமும் பிறைச்சந்திரனும் தோன்ற, திருமால் அவற்றுள் விஷத்தைச் சிவபிரானுக்குக் கொடுத்து உண்ணச் சொல்லி அதனால் அப்பிரானுக்கு வெப்பமுண்டாகாமல் தணிந்திருத்தற் பொருட்டு உடனே சந்திரனையுங் கொடுக்க, அதனை அப்பெருமான் சிரமேற் கொண்டவன் என்றும் வரலாறு கூறப்படும்.

'ஏத்தநின்ற சடையன்' என்றும், 'படைத்து ஏத்த நின்ற தாளவன்' என்றும் அந்வயிக்கும். .... .... .... .... .... .... (அ)

கண்ணனைமாயன்றன்னைக் கடல்கடைந்தமுதங்கொண்ட*
அண்ணலையச்சுதனை அனந்தனையனந்தன்தன்மேல்*
நண்ணிநன்குறைகின்றானை ஞாலமுண்டுமிழ்ந்தமாலை*
எண்ணுமாறறியமாட்டேன் யாவையும்யவருந்தானே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கண்ணனை | (அடியார்க்கு எளியனாய்) க்ருஷ்ணனாகத் திருவவதரித்தவனும் | அண்ணலை | பெருமையையுடையவனும் |
| மாயன் தன்னை | ஆச்சரியமான குணஞ் செயல்களையுடையவனும் | அச்சுதனை | (தன்னையடைந்தவரை) ஒருபோதும் நழுவவிடாதவனும் |
| கடல் கடைந்து | பாற்கடலைக் கடைந்து | அனந்தனை | அளவிட முடியாத ஸ்வரூபரூபகுணவிபூதிகளையுடையவனும் |
| அமுதம் கொண்ட | அமிருதத்தையெடுத்து (த் தேவர்கட்கு) க் கொடுத்த | அனந்தன் தன்மேல் நண்ணி | திருவனந்தாழ்வான் [மீது] பொருந்தி |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| நன்கு உறைகின்றனை | நன்றாகக் கண்வளர்ந்தருள்பவனும் |
| ஞாலம் | பிரபஞ்சத்தை |
| உண்டு | (பிரளயகாலத்தில்) வயிற்றில் வைத்துப் பாதுகாத்து |
| உமிழ்ந்த | (அந்தப் பிரளயம் நீங்கியவுடனே) வெளிப்படுத்திய |
| மாலை | வாத்ஸல்ய முடையவனும்மான திருமாலை |
| என்னும் ஆறு | (இத்தன்மைய னென்று) நிலைத்துக் கூறும் வகையை |
| அறிய மாட்டேன் | அறிகின்றேனில்லை; |
| யாவையும் | எல்லாவகைப்பட்ட அசேதனப் பொருள்களும் |
| யவரும் | எல்லாவகைப்பட்ட சேதனப்பொருள்களும் |
| தானே | அந்த எம்பெருமான் தானேயாவன். |

* * * [கண்ணனை மாயன் தன்னை.] எம்பெருமானுடைய விபூதிகளைத் தனித்தனியே சொல்லிமுடித்தல் முடியாத காரியம்; சுருக்கமாகச் சொல்லில், சேதனப்பொருள்களும் அசேதனப் பொருள்களுமாகிய எல்லாமும் அவனுடைய விபூதிகளேயாம்—என்கிறது இப்பாசுரம்.

பகவத்கீதையில் தனது விபூதிகளை அர்ஜுனனுக்குப் பரக்கச் சொல்லிவந்த ஸ்ரீக்ருஷ்ணபகவான் "நாந்தோஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப" [எனது விபூதிகளின் பரப்புக்கு ஓரெல்லையில்லை] என்று கூறியதுபோல, இவ்வாழ்வாரும் கீழே எம்பெருமானது விபூதிகளிற் சிலவற்றைக் கூறிவந்து "என்னுமாறு அறியமாட்டேன்" என்று இங்குக் கூறுகின்றாரென்க. "கடல் கடைந்து அமுதங்கொண்ட அண்ணல்" என்றதனால் தனது திருவடிகளை விரும்பியடைந்தார்க்குஅன்றி வேறுபயனை வேண்டினார்க்கும் தன்னுடம்பு நோவவும் அவர்கள் வேண்டியபடி நன்மைபுரிபவன் எம்பெருமான்—என்பது பெறப்படும்.

நன்கு உறைகின்றானை = நாச்சிமார் எழுப்பவொண்ணாதபடி கண்வளர்ந்தருளுகிறவனை என்றுரைப்பர். அண்ணல்—பெருமை; அதனையுடையவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர். அனந்தன் என்ற திருநாமம் எம்பெருமானுக்கு வழங்குதல்போலவே ஆதிசேஷனுக்கும் வழங்கும். எம்பெருமானை அனந்தனென்றற்குக் காரணம் இப்பதிகத்தின் அவதாரிகையில் விரித்துரைக்கப்பட்டது காண்க. ஆதிசேஷனை அனந்தனென்பது அடிமைத்தன்மையில் எல்லை நிலையிலிருப்பவன் [எம்பெருமானுக்கு அடிமை செய்வதில் யாவரினும் விஞ்சிநிற்பவன்] என்பது பற்றியென்க.

யாவையும் என்றதனால் அசேதனப்பொருள்களையும், யவரும் என்றதனால் சேதனப்பொருள்களையும் குறித்தார். உம்மைகள்—முற்றுப் பொருளன. விசேஷணம் விசேஷ்யம் என்ற இரண்டிடத்திலும் வேற்றுமையுருபை விரிப்பது வடமொழி நடை.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கடல்கடைந்து அமுதங்கொண்ட வரலாறு:—முன்னொருகாலத்தில் இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்திற் சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி, அவளால் ஒரு பூமாலை பிரசாதிக்கப்பெற்ற ஒரு வித்யாதரமகள் மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன்கை வீணையில் தரித்துக்கொண்டு பிரமலோக வழியாய் மீண்டு வருகையில், துர்வாசமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள். அதன் பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவதயானையின்மேற் பவனி வந்துகொண்டிருந்த இந்திரனைக் கண்டு அவனுக்கு அப்பூமாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல்வைத்தவளவில் அம்மதவிலங்கு அதனைத் துதிக்கையாற் பிடித்து இழுத்துக் கீழெறிந்து காலால்மிதித்துத் துவைத்தது. அது கண்ட முனிவன் கடுங்கோபங்கொண்டு இந்திரனை நோக்கி 'இவ்வாறு செல்வச் செருக்குற்ற நினது ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்துகிடக்கடவன' என்று சபிக்க, உடனே தேவர் செல்வம்யாவும் ஒழிந்தன. ஒழியவே, அசுரர் வந்து பொருது அமரரை வெல்வாராயினர். பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக்கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு, மந்தரமலையை மத்தாக நாட்டி வாசுகி என்னும் மகா நாகத்தைக் கடைகயிறாகப்பூட்டித் திருப்பாற்கடலைக்கடைந்து அமிருதத்தை எடுத்துத் தேவர்கட்குக்கொடுத்தனனென்பதாம்.

பிரமன் முதலிய ஸகலதேவர்களுமுட்பட யாவும் அழிந்துபோகின்ற யுகாந்தகாலத்திலே ஸ்ரீமஹாவிஷ்ணு அண்டங்களையெல்லாம் தன் திருவயிற்றில் வைத்து அடக்கிக்கொண்டு சிறுகுழந்தைவடிவமாகி ஆதிசேஷனது அம்சமானதொரு ஆலிலையின்மீது பள்ளிகொண்டு யோகநித்திரைசெய்து அந்தப்பிரளயம் நீங்கினவாறே அவைகளை முன்போலவே வெளிநாடுகாண உமிழ்வனென்பது ஞாலமுண்டுமிழ்ந்த வரலாறு.

யவரும் என்றவிடத்து 'எவரும்' என்பதே சுத்தபாடமென்று சிலர் போராடுவர்; இதைப்பற்றி "உயர்வறவுயர்நலமுடையவன் யவனவன்" என்றவிடத்து யாமுரைத்தது காண்க. .... ... .... ... .... .... ... (௯)

யாவையும்யவருந்தானாய் அவரவர்சமயந்தோறும்*
தோய்விலன்புலனைந்துக்கும் சொலப்படானுணர்வின்மூர்த்தி*
ஆவிசேருயிரினுள்ளால் ஆதமோர்பற்றிலாத*
பாவனையதனைக்கூடில் அவனையுங்கூடலாமே. (௰)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



உணர்வின் மூர்த்தி } ஞானஸ்வரூபமாக இருக்கின்ற எம்பெருமான்

யாவையும் } எல்லா அசேதனப் பொருள்களும்

யவரும் } எல்லாச் சேதனர்களும்

தான் ஆய் — தானேயாகியும்

[சேதநாசேதநங்களில் அந்தராத்மாவாகத்தான் பிரவேசித்திருந்தும்]

அவர் அவர் சமயம் தோறும் } அந்தந்தச் சேதனர்கட்கு உரியனவான (சுகம் துக்கம் முதலிய நிலைமைகளில்

தோய்வு இலன் } (அவர்களைப் போலத் தனக்கு) யாதொரு கலப்பும் இல்லாதவன்;

புலன் ஐந்துக்கும் சொலப்படான் } பஞ்சேந்திரியங்களின் அறிவுக்கும் விஷயமாகச் சொல்லப்படாதவன்; [ஐம்புலன்களாலும் அறியப்படாதவனென்றபடி.]

(ஆத்மாக்களுக்கு உள்ளேயிருந்தும் அவைகளுடைய சுகதுக்கங்கள் எம்பெருமானைச் சேரமாட்டா என்றது எவ்வாறு பொருந்துமெனின்.)

ஆவி சேர் உயிரின் உள் } உடம்பைப் பொருந்திய ஆத்மாவினுடைய ஸ்வரூபத்திலே

ஆதும் } (சரீரத்தைச்சார்ந்த இளமை முதலிய தன்மைகள்) எதிலும்

ஓர் பற்று இலாத } ஒரு ஸம்பந்தமும் இல்லையென்கிற

பாவனை — எண்ணமானது

அதனை கூடில் } அந்த ஆத்மாவுக்குத் தகுமென்று தோன்றிறல்

அவனையும் } அந்த எம்பெருமானுக்கும்

(சேதநர்களின் சுகதுக்கங்கள் சிறிதும் சேரா என்கிற இதுவும்).

கூடல் ஆம் — தகும்.

* * * [யாவையும்யவருந்.] உடலுக்கு உள்ளேயிருக்கிற உயிர்கட்கு அந்த உடலைச்சார்ந்த இளமை நரை திரை முதலிய வேறுபாடுகள் தட்டுவதில்லையென்ற எண்ணம் மனத்திற்படுமாயின், எம்பெருமான் சேதநா சேதனங்களோடு கலந்திருந்தாலும் அவற்றின் சுகம் துக்கம் முதலிய நிலைமைகள் அவ்வெம்பெருமானுக்குத் தட்டாவென்பதும் நன்கு விளங்குமென்பது இப்பாசுரத்தின் தாற்பரியமாகும். ஆத்மாக்களுக்கு உடம்பைச்சேர்ந்த இளைப்பு பருமை முதலியன கூடாவிட்டாலும் அவ்வுடம்பைச்சார்ந்த சுகதுக்கங்கள் தோன்றுவதுபோல, ஸர்வேச்வரன் சேதநாசேதநங்களில் அந்தராத்மாவாய் நிற்கும்போது அசேதநங்களின் பரிணாமம் கூடாவிட்டாலும் ஆத்மாக்களின் சுகதுக்கங்கள் முதலியவை கூடவேண்டாவோ வென்னில்;—குற்றவாளியும் சிறைகாணவந்த ராஜகுமாரனும் ஆகிய இருவரும் சிறைச்சாலையில் இருந்தனரேயாயினும் குற்றவாளி மாத்திரம் வருந்திநிற்க, அச்சிறையிலிருத்தலாலாகிற வருத்தம் அரச குமாரனுக்கு நிகழாதவாறுபோல, ஆத்மாவும் பரமாத்மாவும் உடலிற் புக்கிருந்தனரேயாயினும் ஆத்மா கருமத்தினால் கட்டுப்பட்டுச் சுகதுக்கங்களையநுபவித்து நிற்க எம்பெருமான் தன்னிச்சையினாலே புக்கிருப்பதனால் அந்தச் சுகதுக்கங்களையநுபவியாமல் நிற்பனென்க.

"யாவையும் யவருந்தானும்" என்று வந்ததனால் "அவரவர் சமயந்தோறும்" என்றவிடத்தில் "அவையவை சமயந்தோறும்" என்றும் உபலக்ஷணத்தினால்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

கொள்க. அவரவரென்று அடுக்கு சேதநருடைய பன்மையைப்பற்ற. சமயம்—உரியனவாக ஏற்பட்டுள்ள முறைமை. அவரவர் சமயம்—சேதநர்களின் சுகதுக்கங்கள்; அவையவைசமயம்—அசேதநங்களின் இளைப்பு பருத்தல் முதலிய பரிணமங்கள். புலன்—புலம்; சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்து இந்திரியவுணர்ச்சிகள்: இச்சொல் இங்கு இலக்கணையால் மெய்வாய் கண் மூக்குச் செவியென்னும் பஞ்சேந்திரியங்களையுணர்த்திற்று. 'புலனைந்துக்கும் சொலப்படான்' என்றவிடத்தில், சொல்லுதல்—அறிதலாய், ஐம்பொறிகளால் அறியமுடியாதவனென்று பொருளுரைப்பினுமாம். ஐந்துக்கு—உருபு மயக்கம்.

பின்னிரண்டடிகட்கு—, ஆவி—உயிரை, சேர்—அடைந்துள்ள, உயிரினுள்—பரமாத்மாவினிடத்தில், ஆதும் ஓர்பற்று இலாதபாவனையதனை—புறம்பே வேறொன்றிலும் சிறிதும் செல்லாத [இடையறாமல் அப்பிரானிடத்தே செல்லுகின்ற] பக்தியை, கூடில்—அடைந்தால், அவனையும் கூடல் ஆம்—அப்பரமாத்மாவையுங் கூடலாம். என்பதாகவுரைப்பாருமுளர்; உபாயாந்தரங்களிலுண்டான பற்றுமுழுவதும் விடுதலாகிற ப்ரபத்தியை மேற்கொண்டால் அப்பரமபுருஷனையுங்கூடலாமென்பதாக உரைப்பாருமுளர்; வேறுபொருள் எதிலும் பற்று இல்லாதபாவனையை [அந்திமஸ்மிருதியை]க் கூடினால் அவனைக்கூடலாமென்றும் உரைப்பாருளர். எம்பெருமானார் இப்பொருள்களையெல்லாம் தள்ளினர்; இந்தப் பதிகத்தில் எம்பெருமான் சேதநாசேதநங்களில் அந்தராத்மாவாய் நிற்கின்ற தன்மையைக் கூறுவதனால் அதற்கு ஏற்ப, எம்பெருமான் வியாபித்திருக்கிற சேதநாசேதநங்களில் தோஷங்கள் அவ்வெம்பெருமானுக்குத் தட்டமாட்டாவென்பதைக் கூறவேண்டுவது முக்கியமாதலால் முந்தின பொருளே சிறப்புடையதென்பது எம்பெருமானார் திருவுள்ளமாம்.

உள்ளால்=ஆல்—அசை. பாவநா என்ற வடசொல் பாவனையெனத் திரிந்தது. 'பாவனையதனை' என்றதில் அது—பகுதிப்பொருள்விகுதி. ... (௧0)

கூடிவண்டறையுந்தண்டார்க் கொண்டல்போல்வண்ணன்தன்னை ✲
மாடலர்பொழிற்குருகூர் வண்சடகோபன்சொன்ன ✲
பாடலோராயிரத்துள் இவையுமோருபத்தும்வல்லார் ✲
வீடிலபோகமெய்தி விரும்புவரமரர்மொய்த்தே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகள் | மாடு | சுற்றுப்பக்கங்களில் |
| கூடி | மொய்த்து | அலர் | மலர்ந்த |
| அறையும் | (மதுபானத்தினாலுண்டான களிப்பினால்) ரீங்காரஞ்செய்கின்ற | பொழில் | சோலைகளையுடைய |
| தண் தார் | குளிர்ந்த மாலையையுடைய | குருகூர் | திருக்குருகூரிலவதரித்த |
| கொண்டல் போல் வண்ணன் தன்னை | காளமேகச்யாமளனைக்குறித்து, | வண் | ஔதார்யத்தையுடைய |
| | | சடகோபன் | நம்மாழ்வார் |
| | | சொன்ன | பாடியருளிய |

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.
CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| பாடல் ஓர் ஆயிரத்துள் | ஒப்பற்ற ஆயிரம் பாசுரங்களுள் |
| இவை ஒரு பத்தும் | இந்தப்பத்துப் பாசுரங்களையும் |
| வல்லார் | அறியவல்லவர் |
| வீடு இல போகம் எய்தி | இடைவிடுதலில்லாத [நிரந்தரமான] பகவதநுபவத்தைப்பெற்று |
| அமரர் | நித்யஸூரிகளால் |
| மொய்த்து | நெருங்கி |
| விரும்புவர் | விரும்பப்படுவர். |

* * * [கூடிவண்டறையும்.] இந்தப்பத்துப்பாசுரங்களையும் ஓதினவர்கள் இடைவிடில்லாத பகவதனுபவத்தை [நித்யகைங்கர்யத்தை]ப் பெற்று நித்யஸூரிகளால் விரும்பப்படுவர்கள் என்று பயனுரைத்துத்தலைக்கட்டினாராயிற்று. மஹா. ஜ்ஞாநவான்களான நித்யஸூரிகள் "இருள்தருமா ஞாலமான இந்தப் பிரபஞ்சத்திற் பிறந்தும் நம்மைப்போன்று நன் ஞானத்தைப் பெற்று எம்பெருமானை இவ்வாழ்வார் அநுபவிக்கின்றனரே!" என்று நம்மாழ்வாரிடத்துத் தாம் கொண்ட பேரன்பினால், ஆழ்வாருளிச் செய்த இப்பத்துப் பாசுரங்களையும் ஓதினவர்களிடத்திலும் ப்ரீதி கொண்டு ஸர்வேச்வரனையும் விட்டு இவர்களை நெருங்கி ஆதரிப்பர்களென்க.

ஆழ்வார்தாம் இந்த லீலாவிபூதியை எம்பெருமானுடைய ஸ்வரூபமாக எண்ணி ஈடுபட்டதனோடு நில்லாமல் அதனை யாவரும் அநுஸந்திக்கும்படி செந்தமிழ்ப்பாடலினால் பாடியருளித் தந்த மஹோபகாரகராதலால் வண்சடகோபன் என்றார்.

வீடுஇலபோகம்= விடு—'விடு' என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். இல—இன்மையினடியாப் பிறந்த எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம். போகம் என்னும் வடசொல் போகமெனத்திரிந்தது. விரும்புவர் என்ற பயனிலைக்கு வல்லார் என்பது செயப்படுபொருள். அமரர் வல்லாரை விரும்புவர் என்றபடியாகும். ... ... .... .... .... .... ... (கக)

நான்காந்திருவாய்மொழி உரை முற்றிற்று.



ஆழ்வார் திருவடிகளே சரணம்,



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

# த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

பூதைஸ் தத்கார்யபூதைஸ் ஸ்வநிஜவபுஷா தீப்திமத்பி: பதார்த்தை:
பத்யாஸ்வாதோபபந்நை: ச்ருதிமுகஸகலாசேஷசப்தப்ரபஞ்சை:
நாநாகாரை: புமர்த்தைர் ஜகததிபதிபிஸ் சேதநாசேதநௌகைர்
ஜுஷ்டம் தோஷைரஜுஷ்டம் நிரவதிகதயா ஸம்ப்ரதுஷ்டாவ துஷ்ட:॥

[நாலாவது பாதத்தின் முதலிலுள்ள ஜுஷ்டம் என்பது ஒவ்வொரு த்ருதீயாந்தவிசேஷணங்களோடும் அந்வயிக்கும். பூதை: ஜுஷ்டம், தத்கார்யபூதை: ஜுஷ்டம், ஸ்வநிஜவபுஷாஜுஷ்டம் என்றிங்ஙனே கண்டுகொள்க.]

1. பூதைஃஜுஷ்டம். * பொருவில்சீர்ப்பூமியென்கோ.* பூமிமுதலிய பஞ்சபூதங்களோடும் கூடியிருந்துள்ளவன். (சரீரசரீரிபாவத்தில் நோக்கு.)

2. தத்கார்யபூதை:. * குன்றங்களனைத்துமென்கோ. * பூமி முதலிய பூதங்களின் காரியங்களான பர்வதம் முதலியவற்றோடு கூடியிருந்துள்ளவன்.

3. ஸ்வநிஜவபுஷா. *பங்கயக்கண்ணனென்கோ. * அழகிய திவ்யமங்கள விக்ரஹத்தோடுகூடியவன்.

4. தீப்திமத்பி: பதார்த்தை:. * சாதிமாணிக்கமென்கோ. *மாசற்ற மாணிக்கம் பொன் முத்து முதலியவற்றோடு கூடியுள்ளவன்.

5. பத்யாஸ்வாதோபபந்நை:. * நச்சுமாமருந்தமென்கோ. * ஹிதங்களாயும் மதுரங்களாயுமிருக்கிற மஹௌஷதம் அமுதம் முதலியவற்றோடு கூடியுள்ளவன். [முதல்பாதத்தின் முடிவிலுள்ள (பதார்த்தை:) என்பது காகாக்ஷிந்யாயத்தாலே இங்கும் அந்வயிக்கும்.]

6. ச்ருதிமுகஸகலாசேஷ சப்தப்ரபஞ்சை:. * நான்குவேதப்பயனென்கோ * ச்ருதிஸ்ம்ருதி இதிஹாஸ புராணம் முதலியவற்றோடும் கூடியுள்ளவன்.

7. நாநாகாரை: புமர்த்தை:. * ஊனமில் செல்வமென்கோ * பலவகைப்பட்ட ஐச்வர்ய த்ரிவர்க்கமோக்ஷபுருஷார்த்தங்களோடு கூடியுள்ளவன்.

8. ஜகததிபதிபி:. * ஒருவனென்றேத்தநின்ற நளிர்மதிச்சடையனித்யாதி.* உலகில் பிரதானரான சிவன் பிரமன் முதலானோரோடு கூடியுள்ளவன்.

9. சேதநஅசேதநௌகை: ஜுஷ்டம். * யாவையும் யவருந்தானே. * சேதநாசேதநஸமூஹங்களோடும் கூடியுள்ளவன்.

10. தோஷை: அதுஷ்டம். *அவரவர் சமயந்தோறும் தோய்விலன்* சேதநாசேதநபதார்த்தங்களிலுள்ள தோஷங்களின் பற்று இல்லாதவன்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை ஸகலஜகதாகாரனுகப் பெருமகிழ்ச்சியோடு ஆழ்வார் அநுபவித்தருளினுர் நான்காந்திருவாய் மொழியில்.... .... .... .... (*)

## த்ரமிடோபநிஷத்ஸங்கதி.

ஸவ-ும் ஜமத்ஸவலொக்ய விஹொஶரீரம்
தவாசிநஶ்ச ஸகலாநவி ஶப்தராஶீந்।
தாநு ஹூதஹளதிகஉ-வாநு கயயநு வஷாயஹாநு
தாவஸ்ூம் அகார வஅவெஸவ உ-நிஶ்தூவெஷ॥

(கருத்து) ஆழ்வார் இந்த நான்காந்திருவாய் மொழியில், ஸகல ஜகத்தையும் எம்பெருமானுடைய வடிவமாகவே கண்டும், உலகத்திலுள்ள அவ்வோ பதார்த்தங்களைச் சொல்லக்கடவ ஸகல சப்தராசிகளையும் எம்பெருமானுக்கு வாசகங்களாகவே கண்டும், பஞ்ச பூதங்களென்ன அவற்றின் காரியப் பொருள்களென்ன இவற்றை யெல்லாம் எம்பெருமானுகவே பேசி, இங்ஙனம் பகவத் விஷயத்தில் வாசிகமான அடிமையைச் செய்தருளினுர் என்றதாயிற்று. ... .... (*)

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

புகழொன்றுமால் எப்பொருள்களுந் தானய்
நிகழ்கின்ற நேர்காட்டி நிற்க—மகிழ்மாறன்
எங்கு மடிமைசெய இச்சித்து வாசிகமாய்
அங்கடிமை செய்தான்மொய்ம் பால்.

| | | | |
|---|---|---|---|
| புகழ் ஒன்று மால் | கீர்த்தி பொருந்திய ஸர்வேச்வரன் | அடிமை செய இச்சித்து | தொண்டு செய்ய விரும்பி |
| எப்பொருள்களும் தான் ஆய் நிகழ்கின்ற நேர் காட்டி நிற்க | ஸகலபதார்த்தங்களும் தானேயாய் இருக்கின்றபடியைக் காட்டி நின்றவளவில் | மொய்ம்பால் | *மயர்வறமதிநல மருளப் பெற்ற சீர்மையினுலே |
| மகிழ் மாறன் | (அதனுல்) மகிழ்ச்சி கொண்ட ஆழ்வார் | வாசிகம் ஆய் அடிமை செய்தான் | வாய்மொழியினுலாகிய கைங்கரியத்தைச் செய்தார். |
| எங்கும் | எவ்விடத்தும் | | |

கீழ் *ஒழிவில்காலமெல்லா மென்கிற திருவாய்மொழியில் கைங்கர்ய மநோரதங்கொண்ட ஆழ்வாருடைய பாரிப்புக்குத் தகுதியாக எம்பெருமான் தானே எங்கும் எல்லாப் பொருள்களுமாய் நிற்கின்ற படியை ஆழ்வார்க்கு ஸேவை ஸாதிப்பிக்க, ஆழ்வாரும் எம்பெருமானுடைய விபூதியுள்ள விடங்களிலெல்லாம் காயிக கைங்கரியம் செய்யவிரும்பி, அது செய்யஇயலாமல் எம்பெருமானுடைய ஸர்வாத்மபாவத்தைப் பேசும்முகத்தால் வாசிககைங்கரியத்தை இத்திருவாய்மொழியில் செய்தருளினுர் என்றதாயிற்று. .... ... ... ... (உச)

ஜீயர்திருவடிகளே சரணம்.





CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி—மூன்றாம்பத்து,

## ஐந்தாந்திருவாய்மொழி—மொய்ம்மாம்பூம்பொழில்.

அவதாரிகை :—ஆழ்வார் கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானை மிகவும் அற்புதமாக அநுபவித்தார். அந்த அநுபவத்தினால் அபரிமிதமான ஆனந்தத்தையடைந்தார். திருவுள்ளத்திலுண்டான ஆனந்தம் வடிவிலே தொடை கொண்டது; அதனால் ஆடுவதும் பாடுவதுமாகத் தாம் ஆயினார்; இந்நிலவுலகத்தில் இங்ஙனே பகவத்குணங்களில் ஈடுபட்டுக் களித்துப் பரவச சரீரர்களாக இருப்பவர்கள் எத்தனைபேருண்டு? என்று ஆராயத் தொடங்கினார்; அன்னவர் மிகச் சிறுபான்மையராய், பகவத்குணங்களில் ஈடுபடாதபாவிகளே பெரும்பான்மையராய் இருப்பதைக்கண்டு திருவுள்ளம் மிக நொந்து, ஈடுபாடுடையாரைக் கொண்டாடியும் அஃது இல்லாதாரை நிந்தித்தும் செல்லுகிறார் இத்திருவாய்மொழியில்.

*முந்நீர் ஞாலம்படைத்த வென்கிற திருவாய்மொழியில் அளவுகடந்த துயரத்தையடைந்தார்; *புகழுநல்லொருவனில் அளவுகடந்தகளிப்பையடைந்தார்; ஹர்ஷசோகங்கள் கூடாதென்று சாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்டிருக்கின்றதே; ஸ்ரீபாஷ்யத்தில் பக்திக்கு உறுப்பான விவேகம் முதலிய ஏழை நிரூபித்துவருமிடத்து, "அநவஸாத:, அநுத்தர்ஷ:" என்று முடிவில் இரண்டு சொல்லப்பட்டன; இவற்றுள் அநவஸாதமாவது—துயருற்றிராமை; அநுத்தர்ஷமாவது—ஹர்ஷஹேதுக்களுண்டானாலும் அதிஹர்ஷங்கொள்ளாதொழிகை; என்று விவரிக்கப்பட்டுள்ளதன்றோ; ஆகவே ஹர்ஷசோகங்கள் கூடாதவையாயிருக்க, ஆழ்வார் அவற்றை ஏன் கொள்ளுகிறார் என்று சிலர் சங்கிக்கக்கூடும்; ப்ராக்ருதவிஷயங்களைப் பெற்றதனாலுண்டாகும் களிப்பும், அவற்றை இழப்பதனாலுண்டாகும் கவர்வும் கூடா என்பதே சாஸ்த்ரதாத்பர்யம்; பகவத் குணாநுபவத்தினாலுண்டாகும் ஆனந்தமும் அடங்கமுடியாது; அவ்வநுபவம் மற்றையோர்க்கு இல்லையேயென்று உண்டாகும் க்லேசமும் அடங்கமுடியாது என்க.

எம்பெருமானுடைய குணாநுபவம் விஞ்சினால், நின்றவிடத்தில் நிற்கமுடியாமல் ஆடுவதும் பாடுவதுமான நிலைமை பரவசமாக உண்டாகியேதீரும். முக்தர்களும் திருநாட்டில் "அஹமந்நமஹமந்நமஹமந்நம்! அஹமந்நாதோஹமந்நாதோஹமந்நாத:!" என்று களித்துப்பாடுவர்களென்றது. நாதமுனிவர் முதலானோரும் பகவத்ஸந்நிதியிலே வந்தவாறே ஆடுவது பாடுவதாகாநிற்பர்களென்று சொல்லப்பட்டுளது. இதுவன்றோ நம்முடைய கரசரணாதி அவயவங்களுக்குப் பயன். இப்பயன் பெறாத பாவிகளைப் பழிப்பதும் இது பெற்ற பெரியாரைப் புகழ்வதும் பகவதநுபவத்திலே ஒருவகையாதலால் அவை இத்திருவாய்மொழியிற் செல்லுகின்றன. ... .... .... .... .... ... ... .... *

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



மொய்ம்மாம்பூம்பொழிற்பொய்கை முதலைச்சிறைபட்டுநின்ற*
கைம்மாவுக்கருள்செய்த கார்முகில்போல்வண்ணன்கண்ணன்*
எம்மானைச்சொல்லிப்பாடி யெழுந்தும்பறந்துந்துள்ளாதார்*
தம்மால்கருமமென்சொல்லீர் தண்கடல்வட்டத்துள்ளீரே. (க)

| | | | |
|---|---|---|---|
| தண் கடல் வட்டத்து உள்ளீர் | குளிர்ந்த கடல்சூழ்ந்த பூமண்டலத்திலுள்ளவர்களே!, | கார் முகில் போல் வண்ணன் | காளமேகச்யாமளனை |
| மொய் | நெருங்கின | கண்ணன் எம்மானை | ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவை |
| மா | பெரிய | சொல்லி பாடி | புகழ்ந்துபாடி |
| பூ பொழில் | பூஞ்சோலைகளையுடைய | எழுந்தும் | இருந்தவிடத்திலிராமல் எழுந்தும் |
| பொய்கை | தடாகத்தில் | பறந்தும் | பூமியில் கால் பாவாதபடி அலைந்தும் |
| முதலை | முதலையினால் | | |
| சிறை பட்டு | கவ்வப்பட்டு | துள்ளாதார் தம்மால் | களித்துக்கூத்தாடாதவர்களால் |
| நின்ற | கரையேறமாட்டாது வருந்தி நின்ற | | |
| கை மாவுக்கு | கஜேந்திராழ்வானுக்கு | என் கருமம் | என்ன பயன்? |
| அருள் செய்த | க்ருபைபண்ணின | சொல்லீர் | சொல்லுங்கள். |

* * * [மொய்ம்மாம்பூம்பொழில்.] ஸ்ரீகஜேந்திராழ்வானை ரக்ஷித்தருளின எம்பெருமானுடைய இந்த ஆச்ரித வாத்ஸல்யத்தை அநுஸந்தித்தும் விகாரமடையாதிருப்பாருடைய பிறப்பு வீண் என்கிறார்.

மஹாவிஷ்ணு பக்தனான கஜேந்திரன் அர்ச்சனைக்காகப் பூப்பறிக்க ஒரு பெரிய பொய்கையிற் சென்றிழிந்ததும் அங்கு முதலையின்வாயில் அகப்பட்டு வருந்தியதும், பிறகு 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அங்கு எழுந்தருளித் தனது சக்ராயுதத்தைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன்வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முக்தியளித்ததும் ப்ரஸித்தம்.

கஜேந்திராழ்வான் தானிருக்கின்றவனத்திலே நெடுநாள் மழைபொழியாமையால் தாமரைக்குளங்களெல்லாம் வறண்டமை பற்றி எங்குந் தாமரைமலர் கிடைக்கப்பெறாமல் சிலநாளாக அர்ச்சனை தவிர்ந்து அதனாலாகிய வருத்தத்தினால் உணவுகொள்ளாமற் பட்டினிகிடந்து ஏங்கி மலர்தேடுகின்றபோது தெய்விகமாக ஒரு நறுமணத்தை மோப்பஞ்செய்து அதனையே பிடித்துக்கொண்டு அதுவந்த வழியால் விரைந்து செல்லுகையில் ஒரு மலையின்மீது திவ்யமான ஒரு சோலையையும் அதன் நடுவே ரமணீயமான ஒரு தடாகத்தையுங்கண்டு அதில் நிறைந்திருக்கின்ற தாமரைமலர்களைப் பார்த்ததனால் மிகமகிழ்ந்து அவற்றினிடத்திற் கொண்ட ஆகாதிசயத்தினால் அம்மடுவில் முதலையிருப்பதைப்பாராமலே விரைந்திறங்கி மலர் கொய்வதாயிற்றென்பது விளங்க "மொய்ம்மாம்பூம் பொழிற்பொய்கை முதலைச்சிறைபட்டு நின்ற கைம்மா" என்றார்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அருள்செய்த="பெண்ணுலாஞ்சடையினனும் பிரமனும் முன்னைங்காண்பான் எண்ணிலாவூழியூழித் தவஞ்செய்தார் வெள்கிநிற்ப, விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கு அன்றருளையீந்த" என்று (திருமாலையில்) தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிய பாசுரங்காண்க. ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் "ஶ்ருஜ ஞ்ஞாஷஸ்வ மஹோத்தபரம்ஹிதேந வாதம் வராஹரூபஸ்யஷோவிஅ கா நீஷா= ஆஜக்முஷஸ் தவ கஜோத்தமப்ரும்ஹிதேந பாதம் பராமம்ருசுஷோபி ச கா மநீஷா?" என்றார். அதாவது—கஜேந்திராழ்வானுடைய கூக்குரல் செவிப்பட்டவாறே பதறிப் பொய்கைக்கரைக்கு வந்ததுமன்றி, முதலைவாய்ப்பட்டுப் புண்பட்ட அதன் காலைத் திருக்கைகளினால் தடவி உபசாரங்கள் செய்தபடியும் கூறப்பட்டதாயிற்று; இதுவே கைம்மாவுக்குச்செய்த கனத்த அருள்.

இங்ஙனே எம்பெருமானுடைய பேரருள் பொலிவுபெறும் இந்தச்சரித்திரத்தை அநுஸந்தித்தால் மனமொழிமெய்கள் விகாரப்படாதிருக்கவொண்ணுமோ? எம்மானைச்சொல்லிப்பாடியெழுந்தும் பறந்தும் துள்ளவேண்டும்படியாகுமே; அங்ஙனம் ஆகப்பெறாதவர்கள் இவ்வுலகில் ஜனிப்பதனாலும் இருப்பதனாலும் என்ன பலன் ?.

இங்கே நம்பிள்ளையீடு ;— "பட்டர் இவ்விடத்தை அருளிசெய்யாநிற்கச் செய்தே 'அவன் நூறாயிரஞ் செய்தாலும் விக்ருதராகாமைக்கு நாமேவேணும்; நமக்கொரு ஆபத்து உண்டானால் இருந்த விடத்திலே இருக்கமாட்டாதே விக்ருதனாகைக்கு அவனேவேணும்' என்றருளிச்செய்தார்". என்பதாம். எம்பெருமானைப்போன்ற பரமதயாளு இல்லை; அவனது தயையில் ஈடுபடமாட்டாத நம்மைப்போன்ற வன்னெஞ்சருமில்லை என்றபடி. ... ... (௧)

தண்கடல்வட்டத்துள்ளாரைத் தமக்கிரையாத்தடிந்துண்ணும்*
திண்கழற்காலசுரர்க்குத் தீங்கிழைக்குந்திருமாலை*
பண்கள்தலைக்கொள்ளப்பாடிப் பறந்துங்குனித்துழலாதார்*
மண்கொளுலகிற்பிறப்பார் வல்வினைமோதமலைந்தே. (௨)

| | | | |
|---|---|---|---|
| தண் கடல் வட்டத்து உள்ளாரை | குளிர்ந்த கடல் சூழ்ந்த பூமண்டலத்திலுள்ள ஜனங்களை | பண்கள் தலைக் கொள்ள பாடி | இசை மிகும்படி பாடி |
| | | பறந்தும் | உயரக்கிளம்பியும் |
| தமக்கு இரை ஆ | தங்களுக்கு உணவாக | குனித்து | ஆடியும் |
| தடிந்து உண்ணும் | கொன்று தின்கிறவர்களும் | உழலாதார் | எங்குந்திரியாதவர்கள் |
| திண் கழல் கால் | திண்ணிய வீரக்கழல்களையணிந்த காலையுடையவருமான | மண் கொள் உலகில் | மண்ணுலகத்தில் |
| | | வல் வினை மலைந்து மோத | கொடிய பாவங்கள் மேலிட்டு நலியும்படியாக |
| அசுரர்க்கு | ஆஸுரப்ரக்ருதிகளுக்கு | | |
| தீங்கு இழைக்கும் திருமாலை | அநர்த்தங்களை விளைவிக்கின்ற திருமாலை | பிறப்பார் | பிறப்பர்கள் [நித்திய ஸம்ஸாரிகளாய்க் கிடப்பர்களென்றபடி]. |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



* * * [தண்கடல் வட்டத்து.] ஸகல ஜகத்தினுடையவும் துன்பங்களைப்போக்கிக் காத்தருளுமியல்வினனான திருமாலினது இந்நீர்மையில் ஈடுபடமாட்டாதவர்கள் ஸம்ஸார நிலத்தில் மேன்மேலும் பிறந்து படுவர்களென்கிறாரிப்பாட்டில் கடல்சூழ்ந்த மண்ணுலகிலுள்ளவர்களைக் கொன்று தமக்கு இரையாகத்தின்று திரியும் ஆஸுரப்ரக்ருதிகளுக்கு அநர்த்தங்களை விளைக்கின்ற எம்பெருமான் விஷயமாக இசைகளைப்பாடி நெஞ்சுகனிந்து கூத்தாடிக் களிக்கப்பெறுதவர்கள் ஒரு நாளும் கழிக்கப்போகாத கொடிய பாவங்கள் மேலிட்டுத் துன்புறுத்தும்படி மீண்டுமீண்டும் பிறந்துமிறந்தும் போருவர்களென்றாராயிற்று.

அசுரர்க்கு என்பது அஸுரஜாதியிற் பிறந்தவர்களுக்கு என்றபடியன்று; பகவத்கீதையில் பதினாறுவது அத்தியாயத்தில் "[illegible] த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச." என்று சொல்லப்பட்டிருப்பதுகாண்க. பகவத் பாகவத விஷயங்களில் நன்மைபுரிவாரடங்கலும் தேவப்ரக்ருதிகள் என்றும், தீமைபுரிவாரடங்கலும் ஆஸுரப்ரக்ருதிகளென்றும் கொள்ளக்கடவர்கள்.

தீங்கிழைக்கும் திருமாலே என்றவிடத்து, திரு என்றது குறிக்கொள்ளத்தக்கது; "[illegible] = ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரித ஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யாஜ்ஞாதநிக்ரஹாம்." (யதிராஜஸப்ததி.) என்கிறபடியே நிக்ரஹமென்பதைக் கனவிலுமறியாத பிராட்டியுங்கூட எம்பெருமானோடு சேர்ந்து நிக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றும்படி தீமைகளைச் செய்கின்றனராம் ஆஸுரப்ரக்ருதிகள்.

ஆஸுரப்ரக்ருதிகளைத் தொலைத்து தேவப்ரக்ருதிகளைக் காத்தருளுமெம்பெருமான்திறத்து ஈடுபடாதவர்கள் நித்யஸம்ஸாரிகளாய்த் தொலைந்து போவர்கள் என்றதாயிற்று. .... .... .... ... ... .... ... (உ)

மலையையெடுத்துக்கன்மாரிகாத்துப் பசுநிரைதன்னை *
தொலைவுதவிர்த்தபிரானைச் சொல்லிச்சொல்லிநின்றெட்டோதும் *
தலையினோடாதனந்தட்டத் தடுகுட்டமாய்ப்பறவாதார் *
அலைகொள்நரகத்தழுந்திக் கிடந்துழைக்கின்றவம்பரே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| மலையை | கோவர்த்தன மலையை | சொல்லி சொல்லி | பலகாலுஞ் சொல்லி |
| எடுத்து | குடையாகத் தூக்கி | எப்போதும் | எப்பொழுதும் |
| கல் மாரி | கல் மழையை | நின்று | நிலைநின்று |
| காத்து | தடுத்து | ஆதனத்தோடு தலை தட்ட | தரையிலே தலைபடும்படியாக |
| பசு நிரை தன்னை | பசுக்கூட்டத்தை | தடுகுட்டம் ஆய் | தலைகீழாக |
| தொலைவு தவிர்த்த பிரானை | துன்பந்தவிர்த்த எம்பெருமானை | பறவாதார் | ஸம்ப்ரமியாதவர்கள் |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| அலைகொள் நரகத்து | துக்கப்படுத்துவதையே இயல்வாகவுடைய நரகத்தில் | அழுந்தி கிடந்து உழைக்கின்றவம்பர் | அழுந்தியிருந்து வருந்துகின்ற வீணராவர். |

* * * [மலையையெடுத்து] இடையர்கள் இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பலபல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜைப் பொருள்களையும் அமைப்பதைக்கண்ட கண்ணபிரான் அவற்றை இந்திரனுக்கு இடவொட்டாது தடுத்துக் கோவர்த்தனமலைக்கு இடச்சொல்லி, பிறகு தான் அம்மலையில் ஆவேசித்து அவற்றையெல்லாம் தானே யமுது செய்திட, பின்பு பூஜையிழந்த இந்திரன் சீற்றமுற்று ஏழுநாள் விடாமழை பெய்வித்தபோது அம்மலையையே பிடுங்கிக் குடையாகத்தூக்கித்தாங்கி, கோகுலத்தைச் சேர்ந்த ஸகலப்ராணிகளையும் அதன்கீழ் அழைத்துக்கொண்டு சிறிதும் அபாயமின்றிக் காப்பாற்றியருளின பெருங்குணத்தில் ஈடுபட்டு விக்ருதராகாதவர்கள் நித்திய ஸம்ஸாரிகளாயொழிவர்களென்கிறார்.

"தலையினோடு ஆதனம் தட்டத் தடுகுட்டமாய்" என்றது தலைகீழாகத் தள்ளும்படியைக் கூறியவாறு. "ஆதனத்தோடு தலைதட்ட" என்று உருபு பிரித்துக் கூட்டியுரைப்பர்கள். இங்கு ஆதனமென்று தரையைச் சொன்னபடி. இங்ஙனே ஆடுகிற கூத்து குணலைக் கூத்து என வழங்கப்படும். "கோத்துக் குழைத்துக் குணலமாடித்திரிமினோ" என்ற பெரியாழ்வார் திருமொழியுங் காண்க.

அலைகோள்நரகத்து=அலை என்று நீரில் தோன்றும் அலைக்கும் துக்கத்திற்கும் பெயர். அவ்விருபொருளும் இங்குப்பொருந்தும். "கர்ப்பஜந்மஜராம்ருதிக்லேச கர்மஷடூர்மிக:—கர்ப்பஜந்மஜராம்ருதிக்லேச கர்மஷடூர்மிக:" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியின்படியும் "தம் வீக்ஷ்ய ஸேது மநுகாபி சரீரவந்த: ஸர்வே ஷடூர்மி பஹுலம் ஜலதிம் தரந்தி=தம் வீக்ஷ்ய ஸேது மநுகாபி சரீரவந்த: ஸர்வே ஷடூர்மி பஹுலம் ஜலதிம் தரந்தி." என்கிற தேசிக ஸ்ரீஸூக்தியின்படியும் இந்த ஸம்ஸாரஸாகரம் ஆறுவகையான அலைகள் நிரம்பப்பெற்றதென்றுமிடம் அறியத்தக்கது. இங்கு நரகமென்றது ப்ரத்யக்ஷநரகமாகிய ஸம்ஸாரத்தையே சொன்னபடியாகலாம்.

வம்பர்—புதுமை மாறாதவர்கள்; (அதாவது) நலிகின்ற யமபடர்கட்கு அப்பொழுதைக்கப்பொழுது புதியராகவே யிருப்பவர்களென்கை. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் :—"முன்னாள் நலிந்தால் பிற்றை நாள் வந்து தோற்றினால் 'முன்னாள் நாம் நலிந்தவன்' என்று க்ருபைபண்ணாதே மோரும்பழம் பெற்றாற்போலே 'வாரீரோ! உம்மையன்றோ தேடித்திரிகிறது' என்னும்படியாவர்." (ரு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வம்பவிழ்கோதைபொருட்டா மால்விடையேழுமடர்த்த*
செம்பவளத்திரள்வாயன் சிரீதரன்தொல்புகழ்பாடி*
கும்பிடுநட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலாதார்*
தம்பிறப்பால்பயனென்னே சாதுசனங்களிடையே. (௮)

| | | | |
|---|---|---|---|
| வம்பு அவிழ் கோதை பொருட்டா | நறுமணம் மிக்க பூமாலை யணிந்துள்ள நப்பின்னைக்காக | பாடி | வாயாரப்பாடி |
| மால் விடை ஏழும் அடர்த்த | பெரிய ரிஷபங்களேழையும் வலியடக்கினவனும் | கும்பிடு நட்டம் இட்டு ஆடி | தலைகீழாகக் கூத்தாடி |
| செம் பவளம் திரள் வாயன் | சிவந்த பவளம் போன்று திரண்ட அதரத்தையுடையவனுமான | கோகு உகட்டுண்டு | அடைவுகேடு தலையெடுத்து |
| சிரீதரன் | திருமாலினது | உழலாதார் | ஸம்ப்ரமியாதவர்கள் |
| தொல் புகழ் | நிஜமான புகழை | சாது சனங்கள் இடையே | ஸாத்விக ஜனங்களின் நடுவிலே |
| | | தம் பிறப்பால் | ஜனிப்பதனால் |
| | | என் பயன் | என்ன பயனோ ! |

* * * [வம்பவிழ்கோதை.] கும்பனென்னும் இடையர் தலைவனது மகளும், நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளாஎன்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுரா வேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்து கொண்டனன் என்ற இவ்வரலாற்றை அழகாகப்பாடிக்கொண்டு தலைகீழாகக் கூத்தாடி அடைவுகெட ஆரவாரஞ்செய்து திரியாத பாவிகள் ஸாத்விககோஷ்டிகளின் நடுவே தாங்களும் சிலராய்ப் பிறந்து திரிவது ஏனோ என்று வெறுத்துரைக்கின்றார்.

வம்பவிழ்கோதை—கோதையென்று பூமாலைக்குப் பெயர்; அதனையணிந்துள்ள மயிர்முடிக்கு இலக்கணை. பரிமளம்மிகுந்த அளகபாரத்தையுடைய நப்பின்னையென்று பொருள்படுதலால் அன்மொழித்தொகை.

செம்பவளத்திரள்வாயன்— விரோதி நிரஸநஞ்செய்து திருமணம் புணர்ந்த உவப்பினால் முறுவல்செய்து நின்றநிலை ஆழ்வார்க்கு ப்ரத்யக்ஷஸமமாயிருக்கிறபடி. தொல்புகழ்—அந்த எருதுகளின் வலியையடக்கினது ஈ எறும்பு கொசு முதலியவற்றை நசுக்குவதுபோலே கண்ணபிரானுக்கு ஆயாஸமறச் செய்த செயலாதலால் அதனைத் தொல்புகழென்கிறாரல்லர் ; அப்பெருமானுடைய ஸௌலப்ய ஸௌசீல்யங்களே இங்குத் தொல்புகழாம்.

கோகுஉகட்டுண்டு=கோகு—அடைவுகேடு, (அதாவது) அக்கிரமம்; அது மேலிட்டு; "𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨𑍈𑌵 𑌚 𑌕𑍍𑌰𑌮𑌃—அத்யந்தபக்தியுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவச க்ரம꞉" என்கிறபடியே பக்தியின் மிகுதி சொன்னவாறு. வில்லிபுத்தூரார் பாரதத்தில், விராடபருவம்—நிரைமீட்சிச் சருக்கத்தில்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



(68) "ஏறுகின்ற பேரிராசராசனை யெதிர்தகைந்து, கோகுதட்டிடு தனஞ்சய னிவையிவை கூறுார்" என்ற செய்யுளில் "கோகுதட்டிடு" எனவருதலுங்காண்க.

"பயனொன்னே சாதுசனங்களிடையே" என்றவிடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—

> "திருப்புன்னைக்குக் கீழே ஒருவரிருக்குமிடத்திலே நம்முதலிகள் பத்துப் பேர்கூட நெருங்கிக்கொண்டிருக்கச் செய்தே, க்ராமணிகள் மயிரெழுந்த பிசல்களும் பெரியவடிவுகளும் மேலே சுற்றின இரட்டைகளுமாய் இடையிலே புகுந்து நெருங்குமாபோலே காண்! என்று பிள்ளைப்பிள்ளை" என்பதாம்.

இதன் கருத்தாவது—திருவரங்கம் பெரிய கோயிலில் திருப்புன்னைமரத்தின் கீழே நம்முதலிகள் இருந்து சாஸ்த்ரார்த்த விசாரங்கள் செய்தருளாநிற்பர்கள்; அவற்றைக் கேட்டுக் களிக்கவேணுமென்கிற ஆசையினால், நெருக்கமான அவ்விடத்திலும் பல ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருவர்மேலொருவராக நெருங்கிக்கொண்டு நின்று கேட்பர்களாம்; ஸ்ரீவைஷ்ணவர்கள் எத்தனைபேர்கள் நெருக்கினாலும் வருத்தமில்லை; அந்த நெருக்கத்தைக்கண்டு ஸாமாந்ய ஜனங்களும் அங்குத் தங்களுக்கு ஏதோ லாபம் கிடைப்பதாக மயங்கி, மொசமொசவென்று மயிர்கள் நெருங்கிய தோள்களும் ஸ்தூலதேஹமும் தலைப்பாகையுமாய் அங்கே புகுந்து நெருக்குவது வழக்கமாம்; அது எப்படி அஸஹ்யமோ, அப்படியே ஸாத்விக ஜநங்களிடையே பாபிகள் பிறந்திருப்பதும் அஸஹ்யமென்றதாயிற்று. பிள்ளைப் பிள்ளை யென்பவர் கூரத்தாழ்வான் திருவடிகளில் ஒருவர். ... .... (ச)

> சாதுசனத்தைநலியுங் கஞ்சனைச்சாதிப்பதற்கு*
> ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப்பிறந்த*
> வேதமுதல்வனைப்பாடி வீதிகடோறுந்துள்ளாதார்*
> ஓதியுணர்ந்தவர்முன்னா என்செவிப்பார்மனிசரே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| சாது சனத்தை நலியும் | ஸாத்விகர்களைத் துன்பப்படுத்தின | பாடி | வாயாரப்பாடிக் கொண்டு |
| கஞ்சனை | கம்ஸனை | வீதிகள் தோறும் | எல்லா வீதிகளிலும் |
| சாதிப்பதற்கு | தண்டிக்கும்பொருட்டு | துள்ளாதார் | களித்துத் திரியாதவர்கள் |
| ஆதி அம் சோதி உருவை | நித்தியமாய் அப்ராக்ருத தேஜோரூபமான திருவுருவை | ஓதி உணர்ந்தவர் முன்னா | சாஸ்த்ரங்களை ஓதி நன்கறிந்த மாஞானிகள் முதற்கொண்டு [எப்படிப்பட்ட வித்வான்களாயிருந்தாலும்] |
| அங்கு வைத்து இங்கு பிறந்த | பரமபதத்திலுள்ள படியே ஸ்வீகரித்துக் கொண்டு இந்நிலத்தில் வந்து பிறந்தவனும் | என் சவிப்பார் | (அவர்கள்) ஜபம் செய்வது என்னோ ? |
| வேதம் முதல்வனை | வேதங்களினால் மூலப்பொருளென்று ஓதப்படுபவனுமான எம்பெருமானை | மனிசரே | (அவர்கள்) மநுஷ்ய கோடியிற் சேர்ந்தவர்களோ ? |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



*** [சாதுசனத்தை] அடியார்களின் விரோதிகளைத் தொலைப்பதற்காகத் தன்னுடைய அஸாதாரணவிக்ரஹரூபத்தோடு கூடவே வந்து திருவவதாரம் பண்ணின இருக்குணத்தை அநுஸந்தித்து ஈடுபடாதவர்கள் செய்கிற ஜபஃ் தபம் முதலியனவெல்லாஃ் உபயோகமற்றவை யென்கிறார்.

எஃபெருமான் தன்னளவிலே ஆஸுரப்ரக்ருதிகள் எத்தனை அபசாரப்பட்டாலும் அதனால் சிறிதும் திருவுள்ளம் சிறமாட்டான்; தன்னடியவர்பக்கல் அபசாரப்படுமளவில் அவ்வபராதிகளைப் பங்கப்படுத்தியே தீருவன் என்பது நாற் கொள்கை. "ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறுமையென்று ஜீயரருளிச்செய்வர்" என்று ஸ்ரீவசநபூஷணத்திற் பாசுரம். அதாவது — ஸங்கல்பமாத்திரத்தாலே எல்லாவற்றையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வசக்தியான ஸர்வேச்வரன் தன்னை அழியமாறி இதரஸஜாதீயனாய் அவதரித்துக் கைதொடனாய் நின்றுசெய்த ஹிரண்ய ராவண கம்ஸசிசுபாலாதி நிரஸநரூபமான அதிமாநுஷக்ருத்யங்களெல்லாம் ப்ரஹ்லாதன் மஹரிஷிகள் வஸுதேவதேவகிகள் முதலான பாகவதர்திறத்தில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே என்று நஞ்சீயர் அருளிச்செய்வராம். இவ்வர்த்தமே இப்பாட்டில் "சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு" என்பதனால் தெரிவிக்கப்படுகிறது.

எம்பெருமான் தன்னளவிலே தீரக்கழிய அபராதப் படுமவர்களைப் பற்றி ஒன்றும் கணிசியான்; ஆச்ரிதர்திறத்தில் ஸ்வல்பாபராதம் பண்ணுவானுண்டாகிலும் அவனை அப்போதே தலையறுத்துப் பொகடுவானென்பது இதிஹாஸ புராணப்ரசித்தம். "[ஹரிகிணிஸூராவணெ கிஂ காயஂ ஸீதயா ஃஃ—த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிஂ கார்யம் ஸீதயா மம.]" இராமபிரான்ள முந்தருளியிற்கச் செய்தே இராவணன் கோபுரசிகரத்திலே வந்து தோற்றினவாறே 'ராஜத்துரோகியான இப்பயல் பெருமாள் திருமுன்பே நிற்கையாவதென்'? என்று ஸுக்ரீவ மஹாராஜர் அவன்மேலே பாய்ந்து வென்று வந்தபோது அவரை நோக்கிப் பெருமாள் இங்ஙனே அருளிச் செய்கிறார்;—நீர் மஹாராஜரான தரம்குலைய [உம்மைத் திரஸ்கரித்து] அந்த ராக்ஷஸப்பயல் ஒருவார்த்தை சொன்னானாகில் அல்லது ஒரு சிறிய சேஷ்டை செய்தானாகில் பிறகு ஸீதைதானும் எனக்கு ஏதுக்கு? என்றார். ஆச்ரிதவிஷயத்திலே எம்பெருமானுடைய பக்ஷபாதம் இப்படியன்றோ இருப்பது. தன் உயிர்நிலையான பாகவதர்களுக்கு ஒரு தீங்கு நேர்ந்தால், தனக்குத் தீங்குநேரும்போது பிறக்கும் சீற்றம் அற்பமென்னும்படி சீற்றம் பெருகிச் செல்லும். இதற்கு நிதர்சநம்—தான் ஸமுத்ரராஜனை சரணம்புகச் செய்தேயும் அவன் முகங்காட்டிற்றிலனாக "கோபமாஹாரயத் தீவ்ரம் — கோபமாஹாரயத் தீவ்ரம்" என்னும்படி சீற்றத்தை வரவழைத்துக் கொண்டார் பெருமாள்: பின்பு இராவணனாலே அனுமான்



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கோவுபட்டபோது "[illegible]—ததோ ராமோ மஹாதேஜா: ராவணேந க்ருதவ்ரணா:, த்ருஷ்ட்வா ப்லவக சார்த்தூலம் கோபஸ்ய வசமேயிவாந்." என்னும்படி கோபமிட்ட வழக்கானுர். இங்ஙனேயிறே பாகவத விஷயத்திலே எம்பெருமானுக்குள்ள பரிவின் மிகுதியிருப்பது. இப்பாசுரத்தில் ஆழ்வார் "சாதுசனத்தை நலியும்" என்றதனுல் அந்தப் பரிவுதன்னையே விளக்குகின்றுரென்க. பகவத்கீதையில் நான்காமத்யாயத்தில் அவதாரப்ரயோஜநம் சொல்லுமிடத்து "[illegible]—பரித்ராணாய ஸாதூநாம்" என்று ஸாது பரித்ராணத்வத ப்ரதமப்ரயோஜநமாகப் பகவான் அருளிச்செய்திருக்கையாலே அதற்குச் சேர இப்பாட்டில் முதலடி அமைந்தது என்றுங் கொள்க.

சாதிப்பதற்கு—சாஸிப்பதற்கு என்றபடி; சாஸ என்னும் வடமொழித் தாதுவடியாப்பிறந்த சொல் இது. "தம்மிடையே பொய்யானுல் சாதிப்பார் ஆரினியே" என்ற நாச்சியார் திருமொழிப் பிரயோகமும் இவ்வகையானே அமைந்தது. இவ்விடத்து ஈட்டில் "கம்ஸனை ஸாதிக்கைக்காக" என்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுதலால் 'சாதிப்பதற்கு' என்கிறஇச்சொல் 'ஸாதநம்' என்கிற வட சொல்லடியாகவே பிறந்ததென்று கொள்வதே பொருந்தும். கிராதார்ஜுநீய காவ்யத்தில்(14—17) "[illegible]" என்கிற பிரயோகமும், அவ்விடத்து மல்லிநாத வியாக்கியானத்தில்—"[illegible], ஸாதநம்—வத:, [illegible]" என்றுள்ள நிரூபணமும் காணத்தக்கன, ஆகவே "கம்ஸனை ஸாதிக்கைக்காக" என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்தியை "கம்ஸனை [illegible]க்கைக்காக" என்று சிலர் திருத்துவது அவசியமற்றது என்றதாயிற்று. ஸாதநம் என்பது போலே ஸாதநம் என்கிற ஒரு வட சொல்லுமுண்டு; [illegible] என்றபடி. அந்தச் சொல்லடியாக இங்கு "சாதிப்பதற்கு" என்கிற பிரயோகம் என்றும் கொள்வதற்கு இடமுண்டு; ஈட்டிலுள்ளபடியே நன்கு பொருந்தும்.

ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்து இங்குப்பிறந்த=தன்னுடைய அஸாதாரணமான அப்ராக்ருத சோதிவடிவைப் பரமபதத்திலே வைத்திட்டு ப்ராக்ருத ரூபத்தோடே இங்குவந்து பிறந்த=என்று சிலர் பொருள் கூறுவது செவியிலும் ஏற்கத்தகாதது. அங்குவைத்து என்பது ஒரு சொல்வடிவாம்; அங்குள்ளபடியே கொண்டு என்பது பொருள். கீதையில் (4—6) "[illegible]" =அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாமீச்வரோபி ஸந், ப்ராக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி ஆத்ம மாயயா." என்றவிடத்து பாஷ்யத்தில்— "[illegible]......[illegible]

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸம்வம் தேவஸந்ஷ்ஷாதி ஸஜாதீயஸம்ஸ்தாநம் கஸ்வஷு ஸூத்ஸம்கஷ்ஹேந தேவா திரஸம்வஸ்ஸம்ஸவாமி" என்று எம்பெருமானுர் அருளிய ஸ்ரீஸூக்திகள் குறிக்கொள்ளத்தக்கன. "அங்கிருந்தபடியே வைத்துக்கொண்டு இங்கே வந்து பிறந்த" என்கிற இவ்விடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தியுங் காண்க.

வேதமுதல்வனைப்பாடி="அஜாயமாநோ பஹுதா விஜாயதே" இத்யாதி வேதவாக்கியங்கள் இங்கு விவக்ஷிதம். (ஈட்டுஸ்ரீஸூக்தி:—"இக்ஷ்வாகுவம்சத்திலே யுவநாச்வன் என்பானொருவன் மந்த்ரபூதமான ஜலத்தைப் பாகம் பண்ண அவன் வயிற்றிலே கர்ப்பமுண்டாயிற்றிறே ஒரு சக்தி விசேஷத்தாலே; மிதுனமாய் ஸம்ஸர்க்கித்துப் பிறந்தமையில்லையிறே அங்கு; அப்படியே இங்கும் ஸர்வ சக்தி யோகத்தாலே (மஹத்தில் அந்வயமில்லாமையாகிற) இவ்வர்த்தம் உபபந்நமாகத் தட்டில்லையிறே; இதில் ப்ரமாணம்* அஜாயமாநः* என்ற ச்ருதியிறே; அத்தைச் சொல்லுகிறார் வேதமுதல்வனை யென்று.")

ஓதியுணர்ந்தவர்முன்னு="சாஸ்த்ராப்யாஸயுக்தரான ஜ்ஞாநாதிகர் ஸந்நிதியிலே" என்றார் பன்னீராயிரவுரைகாரர். இங்கு மற்ற வ்யாக்யாதாக்களின் திருவுள்ளம் வேறு; அதாவது—ஓதியுணர்ந்தவர் தொடங்கி என்பது பிள்ளான் நம்பிள்ளை முதலான ஆசாரியர்களின் திருவுள்ளம். வேத முதல்வனைப்பாடி வீதிகள் தோறும் துள்ளாதவர்கள் ஓதியுணர்ந்தவர்களாயிருந்தாலும் அவர்களை யும் விடாது இந்த நிந்தை; அவர்களுக்குத்தான் முந்துற நிந்தை; "விதுஷோ திக்ரமே தண்டபூயஸ்த்வம்" என்று சாஸ்த்ரமாதலால் அவர்களுக்கே முந்துறமுன்னம் நிந்தை எக்படி. "ஓதியுணர்ந்துவைத்து ஜ்ஞாநபலமில்லாமையாலே அவர்கள் நிம்நரில் ப்ரயமாவிகளென்று கருத்து" என்ற ஒன்பதினுயிரப்படியும் காண்க.

என் சவிப்பார்—என்ன ஜபம் பண்ணுவது? பகவத்பக்தியில் சிறந்தவர் கள்போல அபிநயங்கொண்டு மூக்கைப்பிடிப்பதும் கையை மூடிக்கொண்டு மௌந மௌந வென்பதுமாக இருந்தாலும் அதுகண்டு ப்ரமிக்கவேண்டா என்கிறார். ஜபிப்பர் என்பதே சவிப்பர் என்று கிடக்கிறது.

மனிசரே=அவர்கள் மநுஷ்ய கோடியில்தான் சேர்வர்களோ? "மானிடவரல்லரென்று என்மனத்தேவைத்தேனே" என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்திற்கு இதுவே மூலம். (ரு)

மனிசரும்மற்றும்முற்றுமாய் மாயப்பிறவிபிறந்த*
தனியன்பிறப்பிலிதன்னைத் தடங்கடல்சேர்ந்த பிரானை*
கனியைக்கரும்பினின்சாற்றைக் கட்டியைத்தேனையமுதை*
முனிவின்றியேத்திக்குனிப்பார் முழுதுணர்நீர்மையினரே. (சு)

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| மனிசரும் மற்றும் | மநுஷ்ய யோநியாயும் தேவயோநியாயும் | இன் கரும்பின் சாற்றை | மதுரமான கருப்பஞ் சாறுபோன்றவனாய் |
| முற்றும் ஆய் | மற்றுமுள்ள ஸகல யோனியாயும் | கட்டியை | கற்கண்டுபோன்றவனாய் |
| மாயம் பிறவி பிறந்த | ஆச்சரியமான பிறவிக ளில் பிறந்தருளின | தேனை | தேன்போன்றவனாய் |
| தனியன் | ஒப்பற்றவனாய் | அமுதை | அமிருதம் போன்றவனான எம்பெருமானை |
| பிறப்பு இலி தன்னை | கருமமடியான பிறப் பு இல்லாதவனாய் | முனிவு இன்றி | வெறுப்பு இல்லாமல் [மிக்க உவப்புடனே] |
| தடம் கடல் சேர்ந்த பிரானை | விசாலமான திருப்பாற்கடலில் கண்வளர்ந் தருளும் பெருமானாய் | ஏத்தி குனிப்பார் | துதித்து நர்த்தனம் செய்பவர்கள் |
| கனியை | கனிபோன்றவனாய் | முழுது உணர் நீர்மையினார் | ஸர்வஜ்ஞர்களெனக் கொண்டாடத் தக்க வர்கள். |

* * * [மனிசரும்மற்றும்.] மநுஷ்யாதி ரூபேண வந்து திருவவதாரம் பண்ணியருளின எம்பெருமானுடைய பரமபோக்யதையை அநுஸந்தித்துப் பரவசராயிருக்குமவர்கள்தாம் எல்லா அறிவின்பலனும் கைவந்திருக்குமவர்களென்கிறரிப்பாட்டில். மநுஷ்யரும் மற்ற தேவஜாதியும் அல்லாத திர்யக் ஜாதியுமெல்லாமாய்த் தொண்டு ஆச்சர்யமான அவதாரங்களைப் பண்ணி, எல்லாரோடும் ஸஜாதீயனாயிருக்கச் செய்தே மிகவும் விலக்ஷணனான அத்விதீயனாய், அந்த வைலக்ஷண்யத்திற்கு ஹேதுவான கர்மாதீந ஜந்மராஹித்யத்தையுடையனாய், அவதாரார்த்தமாக விசாலமான திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளுமவனாய், கோதற்ற இனிய கருப்பஞ்சாறும் கற்கண்டும் தேனும் அமுதமும்போலே போக்யதை தானே வடிவெடுத்தவனான எம்பெருமானை உகந்து துதித்துக் கூத்தாடுமவர்கள் ஸகலசாஸ்திரங்களின் ஸாரப் பொருள்களையும் அறிந்தவர்களென்று கொண்டாடுதற்குரியர் என்றதாயிற்று.

ஆழ்வானருளிச் செய்த வரதராஜஸ்தவத்தில் "ஸுரநரதிர்யகாதிவிபவேஷு ஸஜாதீயதா ஸஜாதீயதையோஷதித்தா விஹ வைவ்யூஹவி ஹஜந" இத்யாதி ஸ்ரீஸூக்தி இந்தப் பாசுரத்தின் ஒருபகுதியை உட்கொண்டது என்னலாம்.

இரண்டாமடியில் பிறப்பிலிதன்னை என்றிருப்பது முதலடிக்கு விருத்தமாயிருக்கின்றதே! என்று சிலர் சங்கிக்கக்கூடும்; பிறக்கின்றானென்று சொல்லிக் கொண்டே பிறப்பிலியென்கைக்குக் கருத்து யாதெனில்;—நாமெல்லாம் கருமமடியாகப் பிறப்பது போலே பிறவாதவன்—தன்னுடைய அநுக்ரஹமே காரணமாகப் பிறப்பவனேயன்றிக் கருமமடியாகப் பிறவாதவன் என்கை. (அன்றியே) 'எங்கின்ற யோனியுமாய்ப்பிறந்தாய் இமையோர் தலைவா" என்கிறபடியே நமக்காகப் பல பல பிறவிகளெடுத்தும் பரிச்ரமங்கள்பட்டும் நம்மிடத்துள்ள வ்யாமோஹாதிசயத்தினால் 'இவர்களுக்குநாம் ஒன்றுஞ் செய்யவில்லையே, நாம் ஒரு பிறவி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யும் பிறக்கவில்லையே' என்று நினைப்பவனுகையாலே அப்படிப்பட்ட அவன் கருத்தாலே பிறப்பிலி யென்றதாகவுமாம்.

தனியன் என்பதற்கு ஈட்டிலருளிச் செய்யும்பொருள் பரமபோக்யம்; அவ்விடத்து ஸ்ரீஸூக்தி காண்மின்; — "[தனியன்.] இப்படி யவதரித்தால் போமன்று உடுத்த வொலியலேடே யாயிற்று போவது. இவ்வவதார பரம்பரைகளில் ராமாவதாரமொன்றிலும் நாலிரண்டுபேர் கூடப்போனர்களென்று கேட்டோமித்தனை. இவன் நமக்காகப் பிறந்தானென்று நினைக்கைக்கும் ஒருவருமில்லாதிருக்கிறதிறே; பிறந்தானென்று அதுதன்னையே குற்றமாக உபபாதிப்பாரேயிறே யுள்ளது" என்பதாம்.—எத்தனை அவதாரங்களெடுத்தும் என்ன சேஷ்டிதங்கள் செய்தும் தன்பாலீடுபட்டுத் தன்னோடு இணங்குவாரில்லாமே தான் தனியாயே நிற்பவன் என்று தாற்பரிய மருளினாராயிற்று.

தடங்கடல் சேர்ந்தபிரானை யென்பதற்கு ஈடு—"இவர்கள் பிறவியென்னும் பெருங்கடலைப் போக்குகைக்கிறே அவன் கடலிலேவந்து கிடக்கிறது."

முனிவு இன்றி = பகவத் குணங்களைக் கேட்டால் பொறாமைப்படுவார் பலருண்டு; "கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான், பற்றியுரலிடையாப்பு முண்டான் பாவிகாளுங்களுக் கேச்சுக்கொலோ" என்று ஆண்டாளருளிச் செய்கிறபடி சிசுபாலன் பிறந்த லக்னத்திலே பிறவாமல் என்றபடி. 'முனிவின்றி' என்பதற்கு முநித்வமில்லாமல் என்றும் பொருள் பணிப்பர். முநித்வமாவது மநநசீலத்வ பர்யாயமாகையாலே ஒருவகையான அங்க சேஷ்டையும் செய்யாதிருத்தலைச் சொன்னபடியாகும். அது இன்றி என்றது—அங்க சேஷ்டைகளைச் செய்துகொண்டு என்றவாறு. ஜ்ஞாநாதிக்யத்திற்குப் பலன் பகவத் குணங்களிலீடுபட்டு ஸம்ப்ரமிப்பதேயாம் என்பதை முழுதுணர் நீர்மையினாரே என்பதனால் காட்டினர். ஸகல சாஸ்த்ரங்களையும் கற்றவர்களாயிருந்தாலும் பகவத் குணாநுபவத்தில் விகாரமடையா திருந்தார்களாகில் அவர்களே அஜ்ஞர்கள். ஒரு சாஸ்த்ரமும் கற்றிலராயினும் பகவத் குணாநுபவத்தில் மனமொழிமெய்களால் விகாரப்படுவார்களாகில் அவர்களே ஸர்வஜ்ஞர்கள்—என்பது ஆழ்வாருடைய ஸித்தாந்தமென்க. ... ... (சு)

நீர்மையில்நூற்றுவர்வீய ஐவர்க்கருள்செய்துநின்று *
பார்மல்குசேனையவித்த பரஞ்சுடரைநினைந்தாடி *
நீர்மல்குகண்ணினராகி நெஞ்சம்குழைந்துநையாதே *
ஊன்மல்கிமோடுபருப்பார் உத்தமர்கட்கென்செய்வாரே? (எ)

| | | | |
|---|---|---|---|
| நீர்மை இல் | ஈர நெஞ்சு இல்லாதவர்களான | அருள் செய்து நின்று | கிருபை பண்ணி |
| நூற்றுவர் | துரியோதனன் முதலிய நூறுபேரும் | பார் மல்கு சேனை அவித்த | பூபாரமாயிருந்த சேனைகளைத் தொலைத்தருளின |
| வீய | மாளும்படியாக, | பரம் சுடரை | பரஞ்சோதியான பெருமானை |
| ஐவர்க்கு | பஞ்ச பாண்டவர்களுக்கு | | |



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| நினைந்து | தியானம் பண்ணி |
| ஆடி | கூத்தாடி |
| நீர் மல்கு கண்ணினர் ஆகி | ஆனந்தக் கண்ணீர் நிறைந்த கண்களை யுடையவராகி |
| நெஞ்சம் குழைந்து நையாதே | நெஞ்சுருகி நையாமல் |
| ஊன் மல்கி | உடல் தடித்து |
| மோடு பருப்பார் | வயிறு பருப்பவர்கள் |
| உத்தமர்கட்கு | பாகவதோத்தமர்களுக்கு |
| என் செய்வார் | யாது செய்வார்? |

* * * [நீர்மையில்.] அடியவர்களான பாண்டவர்களின் விரோதிகளைப்போக்கின எம்பெருமானுடைய திருக்குணங்களை அநுஸந்தித்து ஈடுபடமாட்டாதவர்கள் *பெற்றதாயர் வயிற்றினைப்பெருநோய் செய்யவே பிறந்தவர்களென்கிறாரிப்பாட்டில். கண்ணபிரான் முந்துறமுன்னம் ஸஞ்ஜயனை யனுப்பிப் பின்பு தான் நேரிற் சென்று பாண்டவர்களையும் கௌரவர்களையும் சேரவிடலாமோ என்று பார்த்தவிடத்து, அந்த நூற்றுவர் ஒருபடியாலும் இசையாதே 'எங்கள் உறவினரும் ஜீவித்து நாங்களும் ஜீவிப்பதென்பதில்லை; அவர்களுக்கு ஒரு குடியிருப்பும் கொடுக்கமாட்டோம்; நாங்கள் பலராசையாலே பூமிப்பரப்படங்கலும் எங்களுக்கே இடம்போருமத்தனை; அவர்களுக்கு க்ருஷ்ணனும் தருமமும் உண்டு; அதற்குப் பலனான ஸ்வர்க்கத்தை அவர்கள் அநுபவிக்கக் கடவர்கள்; நாங்கள் பூமியை ஆள்வோம்' என்று வெட்டொன்று துண்டிரண்டாக வார்த்தை சொல்ல, ஒருபடியாலும் அவர்கள் இசையக் காணாமையாலே இனி இவர்களைத் தொலைப்பது தவிர வேறு வழியில்லையென்றுகொண்டு நூற்றுவர் வீய ஐவர்க்கு அருள்செய்து நின்றான் கண்ணபிரான்; அது இங்கு முதலடியிற் கூறப்பட்டது.

"பந்துக்களும் ஜீவித்து நாங்களும் ஜீவிப்பதென்பது கிடையாது" என்று நூற்றுவர் சொல்லவே அதுவே காரணமாக அவர்கள் நிக்ரஹத்திற்கு இலக்காயினர்; பாண்டவர்களோ வென்னில் "பந்துக்கள் ஜீவித்தாலொழிய நாங்கள் ஜீவிக்கமாட்டோம்" என்று சொன்னவர்களாதலால் அதுவே காரணமாக அவர்கள் அநுக்ரஹத்திற்கு இலக்காயினர் என்றுணர்க.

..பார்மல்கு சேனை அவித்த=பூமிக்கு ஸர்வம்ஸஹா என்று பெயர் இருந்தாலும் புண்யாத்மாக்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும் அவர்களையெல்லாம் தாங்குவது பஞ்சுச் சுருளையைத்தாங்குவது போன்றிருக்கும்; பாபிகளைத்தாங்குவது இரும்பு மூட்டைகளைத் தாங்குவது போன்றிருக்கும் என்று நூல்கள் கூறுதலால் துரியோதனாதியர் பூமிக்குப் பெரும்பொறையாக இருக்கவே அவர்களைத் தொலைத்துப் பூமிக்கு உதவி செய்தமை இங்கு அறியத்தக்கது

[பரஞ்சுடரை] ஆச்ரிதவிரோதிகளைத்தொலைத்ததனால் திருமேனி புகர்பெற்று விளங்கினபடி. அல்லது,* பற்றலர்வீயக் கோல்கையில்கொண்டு பார்த்தன்றன் தேர்முன்னின்றகாலத்து ஸாரத்ய வேஷத்தின் வைலக்ஷண்யத்தில் திருவுள்ளஞ் சென்று பரஞ்சுடரை என்கிறாரென்னவுமாம். முமுக்ஷுப்படியில் சரமச்லோகத்திலுள்ள மாம் என்றபதத்தை வியாக்கியானித்தருளுமிடத்து—"கையுமுழவுகோலும் பிடித்தசிறுவாய்க்கயிறும் ஸேநாதூளி தூஸரிதமான திருக்குழலும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தேருக்குக்கீழேநாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை மாமென்று காட்டுகிறான்" என்றருளிய ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம்.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை நினைப்பதாவது "இவனுடைய ஆச்ரித பாரதந்த்ரியம் இருந்தவாறு என்னே!" என்று நெஞ்சுளுத்துக் கிடப்பதாம். அங்ஙனம் அநுஸந்தித்தவாறே உடல் இருந்தவிடத்தே யிருக்கமாட்டாமல் ஆடும்; கண்களினின்று நீர் வெள்ளமிடும்; நெஞ்சு குழைந்து நையும். இங்ஙனமாகாமே மாம்ஸ பர்வதமென்னும்படி சரீரத்தைப் பருக்கடித்துத் திரியுமவர்கள் அந்த வுடல்கொண்டு லோகோபகாரம் என்ன செய்யப்புகுகிறார்கள்!

உத்தமர்கட்கு என் செய்வாரே ?=எப்போதும் பகவத் குணங்களை அநுஸந்தித்துக்கொண்டு வார்ந்து வடிந்த சரீரங்களையுடைய ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு பகவத்குணாநுபவத்திலே உசாத் துணையாயிருக்கப் போகிறார்களோ? „𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾 𑌮𑌦𑍍𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌣𑌾 𑌬𑍋𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌮𑍍=மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்" என்று கீதையிற் சொன்னபடி ஒருவர்க்கொருவர் உசாவிப் போதுபோக்குவதன்றோ பிறவிக்குப்பயன்; அந்தப்பயனைப் பெறமாட்டாத பாவிகளாவதே! என்று வெறுத்துரைக்கிறபடி. இங்கே நம்பிள்ளையீடு;— "ஜன்மத்துக்குப்ரயோஜநம் வைஷ்ணவர்களுக்கு உறுப்பாமதுவே யென்றிருக்கிறார்; ஈச்வரன் தன்னையும் தன்விபூதியையும் ததீய சேஷமாக்கியிறே வைப்பது" என்பதாம்.

இங்கேஒரு இதிஹாஸமும் அருளிச்செய்யப்படுகிறது. அதாவது— கூரத்தாழ்வானும் பெரியநம்பியும் சோழராஜஸபைக்கு எழுந்தருளி "ஶிவாத்பரதரம் நாஸ்தி" என்றதற்கு "த்ரோணமஸ்தி தத:பரம்" என்று கையெழுத்திட்டபோது பெரியநம்பிக்கு ப்ராணாந்தமான ஆபத்து நேர்ந்தது. அப்போதுசிலர் 'அநாதப்ரேத ஸம்ஸ்காரம் பண்ணப்பெற்றால் மிக்கஸுக்ருதமுண்டு' என்ற கேள்வியறிவினால் பெரியநம்பிக்கு ஸம்ஸ்காரம் செய்து ஸுக்ருதம் பெறலாமென்றெண்ணி அவ்விடத்தேவந்து பார்க்கையில், ஆங்கு ஆழ்வான்எழுந்தருளியிருப்பது கண்டு தங்களுக்கு அங்குக்காரியமொன்று மில்லாமையுணர்ந்து திரும்பிப்போர்கையில், ஒருவரையும் ஒரு குறைசொல்லியறியாத கூரத்தாழ்வான் அவர்களை நோக்கி இங்ஙனே கூறினராம்—"பயல்களே! வைஷ்ணவனுமாய் ஒருவனுமில்லாதா னொருவனைத் தேடி ஸம்ஸ்காரம் பண்ணப் பார்க்கிறீர்களோ நீங்கள்? ஈச்வரனும் ஈச்வரவிபூதியும் வைஷ்ணவனுக்குக் கிஞ்சித்கரிக்கவிருக்க, வைஷ்ணவனுமாய் ஒருவனுமில்லாதானுமா யிருப்பானொருவனை எங்ஙனே தேடிப்பெறுவீர்கள்?" என்றாராம்.

இந்த இதிஹாஸம் இங்கு எதற்காக அருளிச் செய்யப்பட்டதென்னில்; உத்தமர்கட்கு என்செய்வாரே என்ற விடத்திற்கு வியாக்கியான மருளிச்செய்யா நின்ற நம்பிள்ளை "ஈச்வரன் தன்னையும் தன்விபூதியையும் ததீய சேஷமாக்கியிறே வைப்பது" என்றருளிச் செய்தார்; அவ்வர்த்தத்திற்கு ஆப்தஸம்வாதமாக ஆழ்வானுடைய வார்த்தையை உதாஹரிக்கவேண்டி இந்த ஐதிஹ்யத்தையருளிச்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



செய்தாரென்க. "ஈச்வரன் தன்னையும் தன்விபூதியையும் ததீய சேஷமாக்கி வைக்கிறான்" என்கிற இதனையருளிச்செய்யத்தான் மூலத்தில் என்ன ப்ரஸக்தி யுள்ளதெனில்; "ஊன்மல்கி மோடுபெருப்பார் உத்தமர்கட்கு என்செய்வாரே" என்றதில் தொனிக்கும்பொருள் அது: உத்தமர்கட்கு எம்பெருமானே தானும் தன் விபூதியுமாய்க் கிஞ்சித்கரிக்க ஸஜ்ஜனாயிருக்க, சிலபாபிகள் அந்த பாக்ய மிழந்தார்களாவதே! என்ற அநுதாபத்தின்மேல் அது வக்தவ்யமாயிற்று. (எ)

வார்புனலந்தணருவி வடதிருவேங்கடத்தேந்தை *
பேர்பலசொல்லிப்பிதற்றிப் பித்தரேன்றேபிறர்கூற *
ஊர்பலபுக்கும்புகாதும் உலோகர்சிரிக்கநின்றாடி *
ஆர்வம்பெருகிக்குனிப்பார அமரர்தொழப்படுவோரே. (அ)

| பதம் | பொருள் |
|---|---|
| வார் புனல் அம் தண் அருவி | சிறந்த தீர்த்தங்களை யுடையதும் அழகிய குளிர்ந்த அருவிகளை யுடையதுமான |
| வட திரு வேங்கடத்து | வடக்குத் திருமலையில் நிற்கிற |
| எந்தை | எம்பெருமானுடைய |
| பல பேர் | பல திருநாமங்களையும் |
| சொல்லி பிதற்றி | வாய்வந்தபடி சொல்லி |
| பித்தர் என்றே பிறர் கூற | 'அவர்கள் பைத்தியக் காரர்கள்' என்றே பிறர் சொல்லுமாறு |
| ஊர் பல புக்கும் | பல வூர்களிலே புகுந்தும் |
| புகாதும் | அங்குப் புகாமலும் [பலபேர்களுடைய ஸன்னிதானத்திலும் அஸன்னிதானத்திலும் என்றபடி.] |
| உலோகர் சிரிக்க | உலகர்கள் சிரிக்கும்படியாக |
| ஆடி நின்று | நர்த்தனஞ் செய்து கொண்டிருந்து |
| ஆர்வம் பெருகி | ஆசை விஞ்சி |
| குனிப்பார் | கோலாஹலஞ் செய்பவர்கள் |
| அமரர் | நித்யஸூரிகளாலே |
| தொழப் படுவோர் | வணங்கப்படுவோர்கள். |

* * * [வார்புனல்] ஸம்ஸாரபூமியில் இருந்துவைத்து எப்போதும் திருவேங்கடமுடையானுடைய திருக்குணங்களிலீடுபடுமவர்கள் * அயர்வறுமமரர்களிலும் சீரிய ரென்கிறார். இங்குத் திருவேங்கடத்தை யெடுத்தது திவ்யதேசங்களெல்லா வற்றுக்கும் உபலக்ஷணமாகும். "அர்ச்ச்யஸ் ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதிः ப்ரீணீஷே ஹ்ருதயாளுபிஸ் தவ ததச் சீலாஜ் ஜடீயுயதே" = அர்ச்ச்யஸ் ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதிः ப்ரீணீஷே ஹ்ருதயாளுபிஸ் தவ ததச் சீலாஜ் ஜடீயுயதே." (ஸ்ரீரங்கராஜஸ்தவம்.) என்கிறபடியே சீல குணத்திற்கு எல்லை நிலமான அர்ச்சாவதார நிலைமைகளில் ஈடுபட்டு, பித்தரென்றே பலரு மேசும்படியான நிலைமையை யடைந்து ஒவ்வொரு திவ்யதேசத்து எம்பெருமான்களின் திருநாமங்களையும் வாயாரச் சொல்லி ஸம்பிரமித்துக் கூத்தாடுமவர்கள் நித்யாநுபவபரரான நித்யஸூரிகளுக்கும் கௌரவிக்க வுரியர்கள் என்றதாயிற்று.

பேர்பல சொல்லிப்பிதற்றி = புகழுநல் லொருவனென்கிற கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகள் விஷயமாகத் தாம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பேசின பாசுரங்களெல்லாம் வகைவகையாக ஒவ்வொருபக்தர்களின் வாயினும் வெளிவர வேண்டுமென்பது கருத்து.

பித்தரென்றே பிறர்கூற = "பேயரேயெனக்கு யாவரும் யானுமோர் பேயனே" என்ற குலசேகராழ்வார் பாசுரமும், "அத்தா அரியே யென்றுன்னை யழைக்கப், பித்தாவென்று பேசுகின்றார் பிறரென்னை" என்ற திருமங்கை யாழ்வார் பாசுரமும் இங்குக் காணத்தக்கன. "பித்தரென்றே பிறர்கூற" என்று இதை ஒரு விஷயமாக அருளிச் செய்யவேணுமோ வென்னில்; ஸ்ரீவைஷ்ணவர்கள் 'இவன் நம்முடையவன்' என்று அங்கிகரிப்பதிற்காட்டிலும் அவைஷ்ணவரா யிருப்பவர்கள் வசைகூறிக் கைவிடுவதே மிகவும் உத்தேச்யமென்பது பெரியோர்களின் கொள்கை. "வைஷ்ணவர்களுடைய விஷயீகாரத்திலும் அவைஷ்ணவர்கள் இகழுகையே புருஷார்த்தமென்று கருத்து" என்றார் நஞ்சீயரும் ஒன்பதினாயிரப் படியில். ஸ்ரீவிபீஷணாழ்வான் ஸ்ரீராம கோஷ்டியில் தனக்கு விஷயீகாரம் கிடைக்காமற் போனாலும் அரக்கர் திரளில் தனக்குத் திரஸ்காரம் கிடைத்ததே பரம பாக்யம் என்று நினைக்கும்படியா யிருந்தது.

மிளகாழ்வான்விஷயமான ஒரு இதிஹாஸம் இங்கு ஈட்டில் காட்டப் பட்டுள்ளது; அதாவது—அரசன் பலபேர்களுக்கு க்ராமபூமிகள் தானம் செய்வதாக மிளகாழ்வான் கேள்விப்பட்டுத்தாமும் தானம் பெறச் சென்றாராம். உமக்குத் தானம் கொடுப்பதில்லை யென்று அரசன் சொல்ல, அது கேட்ட மிளகாழ்வான் "ப்ரபுவே! எனக்குமாத்திரம் கொடுக்கமுடியாதென்கைக்குக் காரணமென்ன? வேதமோ சாஸ்த்ரமோ எதில் பரீக்ஷை பண்ணினாலும் நான் பரீக்ஷை கொடுக்க ஸஜ்ஜனாயிருக்கிறேன்" என்றாராம். அது கேட்ட அரசன் "உமக்கு அந்த யோக்யதைகள் இல்லையென்று நான் குறைசொல்லவில்லை" என்றானாம். 'ஆகில் ஏன் தானம் செய்யமாட்டேனென்கிறாய்?' என்று மிளகாழ்வான் கேட்க, "நீர் ஸ்ரீவைஷ்ணவராகையாலே உமக்குக் கொடுக்க நான் விரும்புகின்றிலேன்" என்று அரசன் சொல்ல, உடனே மிளகாழ்வான் பரமானந்தமடைந்து கூத்தாடினாராம். வைஷ்ணவத்வம் ஹேதுவாக அந்த அவைஷ்ணவன் கைவிட்டதுதானே தமக்குப் பரமபுருஷார்த்தமா யிருந்ததாகக் கருதினராம்.

ஊர்பலபுக்கும் புகாதும் = 'குனிப்பார்' என்பதிலே இதற்கு அந்வயம். பலமனிதர்களின் எதிரிலும், ஒருவருமில்லாத விடத்திலும் களித்துக் கூத்தாடுமவர்கள் என்றபடி. பலமனிதர்களின் எதிரில் ஆடுவது எதற்காகவென்னில்; அவர்கள் கண்டு சிரிக்கவேணுமாம்; அந்தச் சிரிப்பே தாளமாகக் கூத்தாட வேணுமாம். அவர்கள் சிரிக்கச் சிரிக்க இவர்களுடைய ஸம்ப்ரமந்ருத்தம் மீதூர்ந்து நடைபெறுமென்க. "ஆர்வம் பெருகி" என்பதனாலும் இது ஸூசிதமென்க.

அமரர் தொழப்படுவோர் = அமரர்களால் தொழப்படுவாரென்றபடி; அமரர்களென்றது இங்கு நித்யஸூரிகளை; அவர்களால் தொழப்படுவரென்றது—அவர்களிற்காட்டில் மிகவும் சிறந்தவர்களென்று கூறும் ஸ்தானத்தில் வந்தது. பிரதி

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பந்தகங்கள் பல பல நிறைந்த இவ்வுலகிலிருந்து கொண்டு பகவதநுபவம் செய்யுமவர்கள் ப்ரதிபந்தகம் யாதுமில்லாத நிலத்தில் அநுபவிக்கின்றவர்களிற் காட்டில் சிறந்தவர்களென்பதில் ஸந்தேஹமில்லையன்றோ. "விண்ணுளாரிலுஞ் சீரியரே" என்ற திருவிருத்தமுங் காண்க. ... ... ... ... (௮.)

அமரர்தொழப்படுவானை அனைத்துலகுக்கும்பிரானை *
அமரமனத்தினுள்யோகுபுணர்ந்து அவன்தன்னோடொன்றாக *
அமரத்துணியவல்லார்களொழிய அல்லாதவரெல்லாம் *
அமரநினைந்தெழுந்தாடி அலற்றுவதேகருமமே. (௯)

| | |
|---|---|
| அமரர் | நித்யஸூரிகளினால் |
| தொழப் படுவானை | ஸேவிக்கப்படுகிறவனும் |
| அனைத்து உலகுக்கும் பிரானை | ஸகல லோகங்களுக்கும் சேஷியுமான ஸர்வேச்வரனை |
| மனத்தினுள் அமர | நெஞ்சிலே ஊன்றியிருக்கும்படி |
| யோகு புணர்ந்து | யோகாப்யாஸத்தைப் பண்ணி |
| அவன் தன்னோடு ஒன்றாக அமர | (முக்தி தசையில்) அவனோடு இவ்வாத்ம வஸ்து ஸமானம் என்னும்படியாக |
| துணிய வல்லார்கள் ஒழிய | கருதுமவர்களான கைவல்ய நிஷ்டர்களைத் தவிர |
| அல்லாதவர் எல்லாம் | மற்ற பேர்களெல்லாரும் |
| அமர | அநந்யப்ரயோஜனராய்க் கொண்டு |
| நினைந்து எழுந்து ஆடி | (அவனை) நெஞ்சிலே யநுஸந்தித்து எங்கும் பரந்து கூத்தாடி |
| அலற்றுவதே | (துதிகளை) வாய் பிதற்றுவதே |
| கருமம் | செய்ய வுரியது. |

* * * [அமரர் தொழப்படுவானை] இப்பாசுரத்திற்குப் பொருளுரைக்கும் வகையில் பன்னீராயிரப்படியுரைகாரரான அழகிய மணவாளச்சீயர் தவிர மற்ற வியாக்கியான கர்த்தாக்கள் யாவரும் ஒரு மிடறாயிருப்பர்கள். உரைகாரர்மாத்திரம் வேறுவகையாக உரையிடுகின்றார். அவ்வகையைப் பின்னர் எடுத்துரைப்போம்.

கைவல்யபுருஷார்த்தத்தில் ஊன்றியிருப்பவர்கள் தவிர மற்றையோரெல்லீரும் ப்ரேமபரவசராய் எம்பெருமானுடைய குணாநுபவம் பண்ணிக் களித்துக் கூத்தாடுவதே செய்யத்தக்கது என்கிறாரிப்பாட்டில்—என்கிறவிதுவே திருக்குருகைப் பிரான் பிள்ளான் முதலான ஆசிரியர்களின் திருவுள்ளம்.

ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தி காண்மின்;—"அயர்வறுமமரர்களதிபதியாய் ஸர்வலோகேச்வரனாயிருந்த எம்பெருமானைக் கைவல்யார்த்தமாக ஆச்ரயிக்கும் அந்த க்ஷுத்ரரானவர்களொழிய அல்லாதாரெல்லாம் இப்படி யெம்பெருமானை அநுஸந்தித்து ஸ்வஹ்ருதிமதராம்படியாக அவனை ஆச்ரயியுங்களென்கிறார்" என்பதாம்.

அமரர்களால் தொழப்படுகின்றவனும் ஸகலலோகங்களுக்கும் சேஷியாயுமிருக்கின்ற எம்பெருமானை நெஞ்சிலே ஊன்றியிருக்கும்படி யோகாப்யாஸத்தைக் கனக்கப்பண்ணி, கடைசியில் அவனோடுஸாம்யம் பெறவேணுமென்று ஆத்மமாத்ரத்தையே விரும்பும் ஸாஹஸிகர்களை யொழிய—கைவல்யத்தில் அகப்படாதே,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பகவத்குணங்களுக்குத் தோற்றவர்களெல்லாரும் பகவத்குணங்களை நெஞ்சிலே யுற்றிருக்கும்படி ஸ்வயம் ப்ரயோஜநமாக அநுஸந்தித்துக் கிளர்ந்தாடியலற்றுவதே கர்த்தவ்யம்—என்றாராயிற்று.

"அவன்தன்னோ டொன்றாக அமரத்துணியவல்லார்க ளொழிய" என்ற வளவுக்குப் பொருளுரைப்பதில்தான் அபிப்ராய பேதமுள்ளது. அவன்தன்னோடு ஒன்றாக— அவனோடு ஸாம்யம் பெறும்படியாக; ஆத்மவஸ்து அவனோடொத்த சுத்தியை யுடைத்தாக— என்றபடி.

உரைகாரர் பொருள் கொண்டபடி எங்ஙனே யென்னில்; அவன்தன்னோ டொன்றாக = „நிரஂஜநஃ பரமஂ ஸாம்யமுபைதி" என்று ஓதப்பட்ட பரமஸாம்யாபத்தியைப் பெறும்படி; அமரத்துணியவல்லார்கள்—நிலைநின்ற அத்யவஸாயத்தைப்பண்ணவல்ல பக்திமான்களும், [ஒழிய] அவர்கள் மாத்திரமேயல்லாமல், அல்லாதவரேல்லாம்— மற்றவர்களுங்கூட என்பதாக, ... ... (கூ.)

> கருமமுங்கருமபலனுமாகிய காரணன்தன்னை *
> திருமணிவண்ணனைச்செங்கண்மாலினைத் தேவபிரானை *
> ஒருமைமனத்தினுள்வைத்து உள்ளம்குழைந்தெழுந்தாடி *
> பெருமையும்நாணும்தவிர்ந்து பிதற்றுமின்பேதைமைதீர்ந்தே. (கo)

| | | | |
|---|---|---|---|
| கருமமும் | ஸாதந ரூபமான கர்மங்களும் | ஒருமை | உபாய உபேயங்களில் பேதம் பிறவாதபடி ஒருமைப்பட |
| கரும பலனும் | அக்கருமங்களால் ஸாதிக்கப்படும் பலன்களும் | மனத்தினுள் வைத்து | நெஞ்சிலே வைத்து |
| ஆகிய | தானிட்ட வழக்காம்படி யுள்ள | உள்ளம் குழைந்து | மனமுருகி |
| காரணன் தன்னை | ஜகத்கார்ண பூதனும் | பெருமையும் நாணும் தவிர்ந்து | அஹங்காரமும் வெட்கமும் இன்றிக்கே |
| திரு மணி வண்ணனை | அழகிய மணிபோன்ற வடிவை யுடையவனும் | எழுந்து ஆடி | கிளம்பிக் கூத்தாடி |
| செம் கண் | செந்தாமரைக் கண்களை யுடையனும் | பேதைமை தீர்ந்து | அவிவேகமு மொழிந்து |
| மாலினை | ஆச்ரித வாத்ஸல்யமே வடிவெடுத்தவனும் | பிதற்றுமின் | (அவன் குணங்களை) வாய்வந்தபடி சொல்லுங்கள். |
| தேவபிரானை | தேவர்களுக்குப் பிரானுமான எம்பெருமானை | | |

* * * [கருமமும்.] பகவத்குணங்களைக் கேட்டால் விகாரப்படாமலிருக்கு மிருப்பாகிற அவிவேகத்தைத் தவிர்ந்து எல்லீரும் அவனது திருக்குணங்களை யநுஸந்தித்துப் பரவசராய் லஜ்ஜாபிமானங்களைவிட்டு அவனை ஏத்துங்கோ ளென்கிறார் ப்பாட்டில்.

புண்யபாபரூபமான கருமங்களுக்கும் அவற்றின்பலன்களுக்கும் நியாமகனும் ஸகலஜகத்கார்ணபூதனும் நீலமணிவண்ணனும் புண்டரீகாக்ஷனை எம்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



பெருமானை, ப்ரயோஜநாந்தரருசி கலசாத நெஞ்சையுடையராய்ப் பரமபக்தி யுக்தராய் அஹங்காரம் முதலிய தோஷங்களற்றவராய் விஷயாந்தரப்பற்று அற்றவர்களாய்க் கொண்டு ஏத்துங்கள் என்றாராயிற்று.

கருமமும் கருமபலனுமாகிய = கருமமென்று புண்யபாபரூப கர்மங்களைச் சொன்னபடி. அவை எம்பெருமான் தானேயாயிருக்கையாவது என்னென்னில்; அக்கருமங்களை அனுட்டிப்பவர்கட்கு அந்தர்யாமியாயிருந்து கர்மநிர்வாஹகனாயிருக்கையாம். கருமபலனும் தானேயாயிருக்கையாவது—கருமங்களை அனுட்டித்தாலும் அவை அசேதநக்ரியையாகையாலே தாமே பயனளிக்கமாட்டாமை பற்றிப் பயனளிப்பவன் பரமசேதநனான தானேயாயிருக்கை.

[ஒருமைமனத்தினுள் வைத்து] ஒரு ப்ரயோஜனத்துக்காக வன்றிக்கே நெஞ்சிலேயிருக்கைதானே ப்ரயோஜனமாக நெஞ்சிலேவைத்து—என்று ஈடு. ஒருமை—ஒருபடிப்பட என்றபடி.

பெருமையும்நாணும் தவிர்ந்து = பகவத்குணங்களைக் கேட்டு விகாரப்படுதல் நமக்குத் தகுதியோ என்றிருக்கு மஹங்காரமும், 'பிறரறிய நாம் விகாரமடைவது எங்ஙனே?' என்றிருக்கிற வெட்கமும்தவிர்ந்து என்றபடி. பேதைமை தீர்ந்து = பகவத்குணங்களுக்குத் தோற்று விகாரப்படுவதை ஹேயமாகநினைத்திருக்கையாகிற அவிவேகம் நீங்கியென்றபடி. ... (க0)

தீர்ந்தவடியவர்தம்மைத் திருத்திப்பணிகொள்ளவல்ல *
ஆர்ந்தபுகழச்சுதனை அமரர்பிரானையெம்மானை *
வாய்ந்தவளவயல்சூழ் தண்வளங்குருகூர்ச்சடகோபன் *
நேர்ந்த வோராயிரத்திப்பத்து அருவினைநீறுசெய்யுமே. (கக)

| | |
|---|---|
| தீர்ந்த | தனக்கே அற்றுத்தீர்ந்த |
| அடியவர் தம்மை | பக்தர்களை |
| திருத்தி | விரோதிகள் அற ஸ்வீகரித்து |
| பணி கொள்ள வல்ல | (அவர்கள் மூலமாக) நித்ய கைங்கரியத்தைக் கொள்ள வல்லவனும் |
| ஆர்ந்த புகழ் | நிறைந்த புகழுடையவனும் |
| அச்சுதனை | அச்யுத னென்னும் திருநாமமுடையவனும் |
| அமரர் பிரானை | தேவர்களுக்கு ப்ரபுவுமான |
| எம்மானை | எம்பெருமானை |
| வாய்ந்த | கிட்டின |
| வளம் வயல் சூழ் தண் வளம் குருகூர் சடகோபன்—; | |
| நேர்ந்த | அருளிச் செய்த |
| ஓர் ஆயிரத்து | ஆயிரத்துள் |
| இ பத்து | இத்திருவாய்மொழி |
| அரு வினை | போக்கவரிய பாவங்களை |
| நீறு செய்யும் | பஸ்மமாக்கிவிடும். |

* * * [தீர்ந்தவடியவர்.] இத்திருவாய் மொழிகற்றார்க்கு பகவத்குணாநுஸந்தானத்தினால் ஒரு விகாரம் பிறவாமையாகிற மஹா பாபத்தை இதுதானே போக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. உபாயமும் உபேயமும் அவனே என்கிற திண்ணிய அத்யவஸாய முடையவர்கள் தீர்ந்தவடியவர் எனப்படுவோர்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அவர்களைத் திருத்திப்பணிகொள்ளுகையாவது—விரோதிகளைப் போக்கி அடிமை கொள்ளுகையாம்.

கீதையில் "தேஷாம் ஸததயுக்தாநாம்" என்றவிடத்திற்கு பாஷ்யமருளிச் செய்யாநின்ற எம்பெருமானார்—[ஸததயுக்தாநாம்] எப்போதும் கூடியிருக்க விரும்புகின்றவர்களுக்கு என்று அர்த்தமருளிச் செய்தார்; அது போலவே இங்கும் தீர்ந்தவடியவர்தம்மை என்பதற்கு "தனக்கே அற்றுத்தீரவேணுமென்று ஆசை கொண்டிருக்கின்ற அடியவர்களைத் திருத்தி அடிமை கொள்ளுமவன் என்றுமாம்.

ஆர்ந்தபுகழ் அச்சுதனை = ஆச்ரிதரக்ஷணம் பண்ணித் தான்படைத்தபுகழ் ஒருநாளும் நழுவப்பெறுதவன் என்றபடி. அமரர்பிரானை எம்மானை = தானொருவனுளன் என்று மறியாதவென்னை * அயர்வறுமமரர்களோடொக்க அடிமை கொண்டவனென்றவாறு. அம்மானை என்று பன்னீராயிரப்படியில் பாடம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயமாக ஆழ்வாரருளிச்செய்த ஆயிரத்துள் இப்பதிகம் பகவத்குணநுஸந்தானத்தினால் விக்ருதராகாதபடி பண்ணும் மஹா பாபங்களை நீறுபடுத்து மென்றுராயிற்று. ... ... ... (கக.)

ஐந்தாம் திருவாய்மொழிஉரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

———

ஸ்ரீ:

## த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

𑌗𑍍𑌰𑌾𑌹𑌗𑍍𑌰𑌸𑍍𑌤𑍇𑌭 𑌮𑍋𑌕𑍍𑌷𑍇 𑌸𑍁𑌰𑌰𑌿𑌪𑍁𑌦𑌮𑌨𑍇 𑌗𑍋𑌕𑍁𑌲𑌤𑍍𑌰𑌾𑌣𑌕𑌾𑌰𑍍𑌯𑍇
[illegible] ।
[illegible]
[illegible] ॥

1. க்ராஹக்ரஸ்த இபமோக்ஷே. * முதலைச் சிறைபட்டுநின்ற கைம்மாவுக்கருள்செய்த * முதலையினால் பிடியுண்ட கஜேந்திராழ்வானைக் காத்தருள்வதிலும்.

2. ஸுராரிபுதமநே. * திண்கழற்கால்சுரர்க்குத் தீங்கிழைக்குந்திருமால் * அசுரர்களைத் தொலைப்பதிலும்.

3. கோகுலத்ராணகார்யே. * மலையையெடுத்துக் கன்மாரி காத்துப் பசுநிரை தன்னைத் தொலைவுதவிர்த்த பிரானை * கோகுலத்தைக் காத்தருள்வதாகிற காரியத்திலும்.



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



4. கோதார்த்த உக்ஷஅவமர்த்தே * வம்பவிழ்கோதை பொருட்டாமால் விடையேழுமடர்த்த. * நப்பின்னைப்பிராட்டிக்காகப் பண்ணின வ்ருஷபமர்த்தநத்திலும்; (இங்கே கோதா என்கிறபிரயோகம் எங்ஙனே பொருந்தும்? ஆண்டாளுக்கன்றோ கோதா என்று திருநாமம். ஆண்டாளைப்பற்றின ப்ரஸ்தாவம் இங்குக் கிடையாதே. நப்பின்னைப்பிராட்டிக்கு கோதாஎன்று திருநாமமில்லையே. மூலத்தில் கோதைபொருட்டா என்றிருப்பதனால் தேசிகன் (கோதாயை) என்று ப்ரயோகித்தருளினர் என்று ஸமாதானம் சொல்வது ஏலாது; மூலத்திலுள்ள கோதைஎன்ற சொல்லுக்கும் கோதா என்கிற வடசொல்லுக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லையென்பதை பிராமாணிகர்களான விவேகிகள் உணர்வர்கள். (நீளாயை) என்று அருளிச் செய்திருக்கக்கூடும்; அது (கோதாயை) என்று பாடம் மாறியிருக்கக்கூடும் என்றே மஹான்கள் திருவுள்ளம் பற்றுகின்றார்கள். நப்பின்னைக்கு நீலா என்று திருநாமமிறே.)

5. ஸத்அஹிதமதநே. * சாதுசனத்தை நலியுங்கஞ்சனைச் சாதிப்பதற்கு. * பாகவத விரோதியான கம்ஸனைக் கொன்றொழித்ததிலும்.

6. ஸிந்து பர்யங்கயோகே. * தடங்கடல் சேர்ந்தபிரானை. * திருப்பாற்கடலில் அரவணையில் கண்வளர்ந் தருளினதிலும்.

7. க்ஷோணிபார வ்யபோஹே. * ஐவர்க்கருள் செய்துநின்று பார்மல்கு சேனைவித்த. * பாண்டவ பக்ஷபாதிபாய் நின்று நூற்றுவரைப் போக்கி மண்ணின் பாரம் நீக்கினதிலும்.

8. க்ஷிதிதரவஸதௌ. * வட திருவேங்கடத் தெந்தை. * திருமலையிலே நின்றருளினதிலும்.

9. நிர்ஜர ஆராத்யதாயாம். * அமரர்தொழப் படுவானை. * அமரர்களாலே ஆராதிக்கப் பெறுகையிலும்.

10. விச்வஆரம்பே ச. * காரணன்றன்னை. * ஸ்ருஷ்டிக்குக் கடவனாயிருக்குமதிலும் [illegible] எம்பெருமான் தன்னுடைய திவ்யமங்களவிக்ரஹ காந்தியாலே பக்தர்களை உந்மத்தராக்கும்படியை ஆழ்வார் ஐந்தாந்திருவாய் மொழியிலருளிச் செய்தாரென்றதாயிற்று.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



## த்ரமிடோபநிஷத் ஸங்கதி.

ஸக்தேந தாஸ்யவிதிநா ஸஹஸா ஸ்வஸித்தே
ஹர்ஷப்ரகர்ஷவிவசஃ ஸமபூச்ச ஸஃ।
ஆநந்தஹேதுஷு அவிக்ருதாந் விநிந்த்ய மூடாந்
ஶௌரேர்குணேஷு விக்ருதாந் ப்ரசசம்ஸ ஸத்யஃ॥ 25.

(கருத்து.) புருஷார்த்தங்களில் தலைநின்றதாயும் கீழ்த்திருவாய்மொழியில் செய்யப்பட்டதாயுமிருக்கிற வாசிகமான அடிமையினாலே பரமானந்த பரவசரான ஆழ்வார், ஆனந்த ஹேதுக்களான பகவத்குணங்களாலே சிறிதும் விகாரமடையாத மூர்க்கர்களை நிந்தித்தும், விகாரமடைகின்ற ஸத்துக்களை மிகக் கொண்டாடியும் போந்தார் ஐந்தாந்திருவாய்மொழியில் என்கை.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி நூற்றந்தாதி.

மொய்ம்பாரும் மாலுக்கு முன்னடிமை செய்துவப்பால்
அன்பாலாட் செய்பவரை யாதரித்தும்—அன்பிலா
மூடரை நிந்தித்தும் மொழிந்தருளு மாறன்பால்
தேடரிய பத்திநெஞ்சே செய்

| | |
|---|---|
| மொய்ம்பு ஆரும் மாலுக்கு | மிகுந்த ஆற்றலையுடைய ஸர்வேச்வரனுக்கு |
| முன் அடிமை செய்த உவப்பால் | முன் திருவாய்மொழியில் வாசிகமான கைங்கரியம் பண்ணப்பெற்ற ஸந்தோஷத்தினால், |
| (இதற்கு மொழிந்தருளு மென்பதோடே அந்வயம்.) | |
| அன்பால் ஆள் செய்பவரை ஆதரித்தும் | அன்புடனே அடிமை செய்பவர்களைக் கொண்டாடியும் |
| அன்பு இலா மூடரை நிந்தித்தும் | பக்தியற்ற மூர்க்கர்களைத் தூஷித்தும் |
| மொழிந் தருளும் | அருளிச் செய்த |
| மாறன் பால் | ஆழ்வார் விஷயத்தில் |
| நெஞ்சே | மனமே! |
| தேட அரிய பத்தி | வேறு எங்கும் காண முடியாததான [மிகச் சிறந்ததான] பக்தியை |
| செய் | செய்யக் கடவை. |

* * * புகழுநல்லொருவனென்கோ என்கிற கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானுக்குத் தாம் வாசிகமான கைங்கரியம் செய்யப் பெற்றதனாலுண்டான களிப்பே இந்தத் திருவாய்மொழியாக வடிவெடுத்தது என்னலாம். அந்தக்களிப்பினால் ஆழ்வார் செய்ததாவது— தம்மைப்போலவே எல்லாரும் பகவத்குணங்களில் ஈடுபடவேண்டியது ப்ராப்தமாயிருக்க, அப்படி ஈடுபடாதவர்களை நிந்தித்தார்; ஈடுபடுமவர்களைக் கொண்டாடினார். இப்படிப்பட்ட ஆழ்வார்பக்கலில் பக்தி பண்ணவேணுமென்று தமது திருவுள்ளத்தை நோக்கி அருளிச்செய்தாராயிற்று.

செய்த + உவப்பால் = செய்தவுவப்பால் என்று சந்தியாக வேண்டுவது 'செய்துவப்பால்' என்றானது தொகுத்தல்; "தொகுத்தல் வருஞ் செய்யுள் வேண்டுழி" என்பது நன்னூல். ... ... ... (உரு)

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## திருவாய்மொழி மூன்றாம்பத்து—ஆறாந் திருவாய்மொழி

# செய்ய தாமரைக்கண்ணனாய்.

உரையவதாரிகை. — கீழ்த் திருவாய்மொழியில், எம்பெருமானுடைய குணசேஷ்டிதங்களை நினைந்து கரைந்துருகி நின்றவிடத்தில் நிற்கமாட்டாமே நர்த்தனம் முதலியன செய்து இதுவே போதுபோக்காக இருக்கும் மஹான்களைக் கொண்டாடியும், இந்நிலைக்கு மாறாக இருக்கின்றவர்களை நிந்தித்தும் பேசினார். அங்ஙனம் தம்மால் நிந்திக்கப்பட்ட பாபிகளையும் கைவிடமாட்டாத மிக்க கருணை வாய்ந்தவரன்றோ ஆழ்வார், அக்கருணையினாலே அந்தப் பாபிகளையும் வழிப்படுத்திக்கொள்ள வேணுமென்று திருவுள்ளம்பற்றி, அன்னவர்களுடைய கல்நெஞ்சிலும் நன்கு பதியுமாறு எம்பெருமானுடைய சிறந்த திருக்குணங்களை எடுத்துக்கூற விரும்பிய ஆழ்வார் இத் திருவாய்மொழியில் அப்பெருமானது ஸௌலப்ய குணத்தை யெடுத்துரைக்கின்றார்.

முதற்பத்தில் * பத்துடை யடியவர்க்கெளியவன் என்ற திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஸௌலப்யகுணம் பேசப்பட்டிருந்தாலும் இப்போது இங்குப் பேசும் ஸௌலப்யகுணம் அதனிலும் விலக்ஷணமானது. அங்குச் சொன்னது விபவாவதார ஸௌலப்யம்; இங்குச் சொல்வது அர்ச்சாவதார ஸௌலப்யம். இந்த வாசியை மணவாளமாமுனிகளும் நூற்றந்தாதியில் விளக்கியுள்ளார்; "பத்துடையோர்க்கென்றும் பரனெளியனும் பிறப்பால்" என்றதையும், "செய்யபரத்துவமாய்....இந்நிலத்தில் அர்ச்சாவதார மெளிதென்றான்" என்றதையும் நோக்குக.

பகவத் விஷயத்தில் விமுகரானவர்களுங்கூட அபிமுகர்களாகவேணுமென்னும் நசையினால் உபதேசம் செய்ய வொருப்படுகின்ற ஆழ்வாருடைய கருணையின் திறம் மிகவும் பாராட்ட வுரியது. ஆசார்ய ஹ்ருதயத்தில்—"நண்ணாதார் மெய்யிலூனைசை நிர்வேதத்தோடே ஆஸ்திக்யமாஸ்திக்வாதிகள் விஞ்சின ஷ்ரேணிவாதாஹிவர்ஜந வரிஷ்ட ஸேவாவஸரர்க்கு உளங்கொள் பேசுமளவன் றென்னுமர்த்தத்தை * வம்மின் விரோதமீனச் சொல் எவ்வுயிர்க்குமறியவென்று அடைவுகெட அதபஸ்கர்க்கு உபதேசிக்கிறது ஞாலத்தார் பந்தபுத்தியும் அநர்த்தங்கண்டு ஆற்றாமையும் மிக்க க்ருபையுமிறே. தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடி பணிந்தவர்க்குமே இவையுள்ளது." என்றருளிச்செய்துள்ள சூர்ணிகைகளின் பொருள் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

இப்பதிகத்திற்கு உயிரான பாசுரம் "தஞ்சமாகிய தந்தைதாயோடு" என்பதாம். அர்ச்சாவதார வெளிமையை நிரூபிக்கும் பாசுரம் அதுவேயாம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இங்கே அநுஸந்திக்கவுரிய ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"பரத்வமே தொடங்கி அவதாரங்களிலேவர அவன் குணங்களைச் சொல்லிக்கொண்டு போந்து அர்ச்சாவதார பர்யந்தமான ஸௌலப்ய காஷ்டையை உபதேசிக்கிறார். இப்போது ஸௌலப்யமாகிலுபதேசிக்கப் புகுகிறது, பரத்வமே தொடங்கி உபதேசிக்க வேண்டுவானென்னென்னில்; 'மேன்மையையுடையவன் தாழநின்றான்' என்றாலிறே குணமாவது; தாழ்வு ப்ரக்ருதியானவன் தாழநின்றால் ஸ்வரூபமாமித்தனையிறே. இப்படித் தாழநிற்கிறவன் மேன்மையையுடையவனென்கைக்காகச் சொல்லிற்று. உபாயங்களில் ப்ரபத்திபோலே ஸௌலப்யங்களில் அர்ச்சாவதார ஸௌலப்யம். ஜநநிக்கும் ஸ்த்ரீ ஸாமாந்ய மொத்திருக்கச் செய்தே பண்ணுகிற உபகாரங்களை ப்ரத்யக்ஷிக்கையாலும் சாஸ்த்ரஞ் சொல்லுகையாலுமிறே கௌரவிக்கிறது. அப்படியே ப்ராமாணிகனானவனுக்கு ஆச்ரயணீயஸ்தலம் அர்ச்சாவதார மல்லது இல்லையென்று இவ்வளவான ஸௌலப்ய காஷ்டையை உபதேசிக்கிறார்."

செய்யதாமரைக்கண்ணனாய் உலகேழுமுண்டவவன்கண்டீர் *
வையம்வானம்மனிசர்தெய்வம் மற்றும்மற்றும்மற்றும்முற்றுமாய் *
செய்யசூழ்சுடர்ஞானமாய் வெளிப்பட்டிவைபடைத்தான் * பின்னும்
மொய்கொள்சோதியோடாயினான் ஒருமூவராகியமூர்த்தியே. (க)

| | |
|---|---|
| செய்ய தாமரை கண்ணன் ஆய் | செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களை யுடையனாய் |
| உலகு ஏழும் | ஸகலலோகங்களையும் |
| உண்ட அவன் | (ஒரு சமயத்தில்) திருவயிற்றிலே வைத்து நோக்கினவனாய் |
| வையம் | பூமியும் |
| வானம் | விண்ணுலகங்களும் |
| மனிசர் தெய்வம் | (முறையே அவற்றில் வாழ்கின்ற) மனிதரும் தேவதைகளும் |
| மற்றும் | மற்ற விலங்குகளும் |
| மற்றும் | மற்ற ஸ்தாவரங்களும் |
| மற்றும் | மற்றுள்ள பஞ்ச பூதங்களும் |
| முற்றும் ஆய் | மற்றுமுள்ள ஸகலமும் (காரணதசையில்) தன்னுள்ளே அடங்கப்பெற்றவனாய் |
| செய்ய சூழ் சுடர் ஞானம் ஆய் | சிறந்ததும் வியாபகமும் ஒளிமயமுமான ஸங்கல்பஜ்ஞானத்தை யுடையனாய் |
| வெளிப்பட்டு | ஸ்ருஷ்டியை உத்தேசித்துத் தோற்றி |
| இவை | முன்சொன்ன இவையெல்லாவற்றையும் |
| படைத்தான் | ஸ்ருஷ்டித்தவனாய் |
| பின்னும் | அதற்குமேலும் |
| மொய் கொள் சோதியோடு ஆயினான் | செறிந்த தேஜோமயமான பரமபதத்தை நிலயமாகவுடையனாயிருக்கின்ற எம்பெருமான் |
| ஒரு மூவர் ஆகிய மூர்த்தி கண்டீர் | ப்ரஹ்ம விஷ்ணு சிவரூபியாய் நின்று ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நிர்வஹிப்பவன் காண்மின். |

* * * [செய்யதாமரைக் கண்ணன்.] புண்டரீகாக்ஷத்வம் ஜகத் காரணத்வம் முதலிய குணங்களையுடைய எம்பெருமானே ஆச்ரயணீயனென்கிறார். இரண்டாம் பாட்டில் "பங்கயத்தடங் கண்ணனைப் பரவுமினோ" என்று வினைமுற்று உள்ளது; அதுவே இப்பாட்டிலும் மாநஸமாக அநுஸந்தேயமாய் இரண்டு பாட்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



டுஞ் சேர்ந்து ஏகக்ரியாந்வயி என்பாருமுண்டு; அன்றியே, இப்பாட்டில் வினைமுற்று இல்லையென்று அதனை மேற்பாட்டிலிருந்து வருவித்துக் கொள்ளவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; பகவத்குணங்களில் ஈடுபட்டுப் பேசும்போது வினைமுற்று இல்லாத விடங்களில் ஈடுபாடாகவே கொள்ளுதல் வேண்டும் என்பாருமுண்டு. இந்த ஈடுபாட்டிலிருந்து பரோபதேசம் அர்த்தாத் ஸித்தமாகும்.

இத்திருவாய்மொழி எம்பெருமானுடைய ஸௌலப்யகுணத்தை நிருபணம் செய்யப்பிறந்ததாயினும் முதலில் பரத்வமே பேசப்பட்டு வருகின்றது; பரத்வமுடையவனுடைய ஸௌலப்யமே பாராட்ட வுரியதாகு மென்பதுபற்றி.

சாந்தோக்ய உபநிஷத்தில் "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்றதைத் திருவுள்ளத்திற் கொண்டு "செய்யதாமரைக் கண்ணனாய்" என்கிறார். மேலெடுத்துக்காட்டிய உபநிஷத் வாக்யத்தின் சீரிய பொருளை வேதார்த்த ஸங்க்ரஹத்தில் அருளிச் செய்யாநின்ற எம்பெருமானார் * கம்பீராம்பஸ்ஸமுத்பூத ஸம்ம்ருஷ்டநால ரவிகரவிகஸித புண்டரீகதளாமலாயதேக்ஷணः" என்றருளிச் செய்தார். கப்யாஸம் புண்டரீகம் என்பதற்கு மூன்று வகையாகப் பொருள் கொள்வது ஆசிரியர் உவந்ததாம்.

அதன் விவரணம் வருமாறு:—[கப்யாஸம்.] கம்பிபதீதி கபிः, கபிநா [ஸூர்யேண] அஸ்யதே—விகாஸ்யதே இதிகப்யாஸம். கம் என்று ஜலத்திற்குப் பெயர். அதைப் பானம் பண்ணுகிறவன்—கபிः ஸூர்யன் என்றபடி. அவனாலே மலர்த்தப்படுவது கப்யாஸம்; அப்படிப்பட்ட புண்டரீகம் போன்ற திருக்கண்களை யுடையவன் என்பது ஒரு பொருள். இது எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியில் "ரவிகரவிகஸித" [ரவிகரவிகஸித] என்ற மூன்றாவது விசேஷணத்தினால் காட்டப்பட்ட பொருளென்க.

(இனி இரண்டாவது பொருள்.) முன்னே காட்டிய வ்யுத்பத்தியில் கம்பிபதீதி கபிः (கம் பிபதீதி கபிः) என்கிற வரையில் வ்யுத்பத்தியை அங்ஙனமே கொண்டு "கபௌ ஆஸ்தே இதி கப்யாஸம்" [கபௌ ஆஸ்தே இதி கப்யாஸம்] என்று கொள்வது. இப்போது கபிः என்பதற்கு ஸூர்யன் என்று பொருளில்லை; நாளம் என்பது பொருள்; தாமரையின் நாளமும் ஜலத்தைப் பானம் பண்ணுவதாதலால் அதுவும் கபிः என்னத்தக்கதே; அதுதன்னில் இருப்பது என்ற பொருளில் கப்யாஸம் என்கிறது. அப்படிப்பட்ட புண்டரீகம் போன்ற திருக்கண்களை யுடையவன் என்றதாயிற்று. நாளத்திலிருந்து பறிக்கப்பட்ட புண்டரீகத்திற்காட்டிலும் நாளத்திலேயே உள்ளதான தாமரை மலர்க்கு ஸோபாதிசயம் உள்ளதாதல் அறிக. இப்பொருள் எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியில் "ஸம்ம்ருஷ்டநால" [ஸம்ம்ருஷ்டநாள] என்ற இரண்டாவது விசேஷணத்தினால் காட்டப்பட்டது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



(இனி மூன்றாவது பொருள்.) „கே, ஶ்ரயாஸ்தே" இதிகவ்யாஸம். கே—ஜலத்தில், ப்யாஸ்தே—இருக்கின்றது என்று பொருள். ஜலத்தை விட்டு நீங்கின தாமரைமலர் ஒளிகுன்றத் தொடங்குமாதலால் அங்ஙனன்றியே ஜலத்திலேயே இருக்கின்றதென்று விசேஷிக்கப்பட்டது. இப்படிப்பட்ட புண்டரீகம் போன்ற திருக்கண்களை யுடையவன் என்றதாயிற்று. இது எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியில் „கம்பீராம்பஸ்ஸமுத்பூத" [கம்பீராம்பஸ் ஸமுத்பூத] என்ற முதல் விசேஷணத்தினால் காட்டப்பட்ட பொருளென்க.

இங்ஙனே உபநிஷத்ஸித்தமான திருக்கண்களுடைமை பரத்வத்திற்கு முக்கியமான சான்றாதலால் "செய்யதாமரைக்கண்ணனாய்" என்று பாசுரந் தொடங்கினரென்க.

வடிவழகில் புண்டரீகாக்ஷத்வம் எப்படியோ, அப்படி ஆத்ம குணங்களில் ப்ரளயாபத்ஸகத்வம் சிறந்ததாதலால் அதனை உலகேழுமுண்டவவன் என்றதனால் அநுஸந்திக்கிறார். „அத்தா சராசரக்ரஹணாத்" என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் பொருள் இங்கே உணரத்தக்கது.

[வையம்வானமித்யாதி.] பூமியும் மேலுள்ள லோகங்களும் அவற்றில் வஸிக்கின்ற மநுஷ்யரும் தேவதைகளும் திர்யக்குக்களும் ஸ்தாவரங்களும் மற்றும் பஞ்ச பூதங்களும் மஹதாதி ஸமஷ்டியும் உண்டாம்படி உபாதாநமாய் என்றபடி.

செய்யசூழ் சுடர் ஞானமாய் = ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டிப்பதற்கு உபயுக்தமான பகவத் ஸங்கல்பத்தின் பெருமை இத்தால் கூறப்படுகிறது. வருத்தமின்றிக்கே வியாபியாநின்ற விசததமமான தன்னுடைய ஸங்கல்பரூபஜ்ஞானத்தாலே படைத்தானென்கை.

வெளிப்பட்டு என்பதை எம்பெருமானோடு அந்வயிப்பது முண்டு; இவை என்பதனோடேயே அந்வயிப்பது முண்டு: முந்தினபக்ஷத்தில் வெளிப்பட்டு—ஸ்ருஷ்டிக்கு அபிமுகனாய் நின்று தோற்றி என்றபடி. பிந்தின பக்ஷத்தில், வெளிப்பட்டிவை— வெளிப்பட்ட இவற்றைப் படைத்தானென்கை. ப்ரமாண ப்ரதிபந்தங்களான இவற்றை என்றபடி. தொகுத்தல் விகாரம்.

பின்னும் மொய்கொள் சோதியோடாயினான் = செறிந்த தேஜோமயமான திவ்ய தேசத்திலிருப்பைச் சொல்லுகிறது. பரமபத நிலயன் என்றவாறு. [ஒரு மூவராகிய மூர்த்தி.] பிரமனுக்கும் ருத்ரனுக்கும் அந்தர்யாமியாய் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ணி ஸ்வேநரூபேண பாலனத்தைப் பண்ணும் ஸர்வேச்வரன்; பிரமன் ருத்ரன் இந்திரன் ஆகிய மூவரையும் மூர்த்தியாக வுடையவன் என்னவுமாம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானே ஸர்வ ஸமாச்ரயணீயன் என்று காட்டினாராயிற்று. ... ... ... (க)

---

§ „வஷ்டி பாகுரிரல்லோபமவாப்யோருபஸர்கயோ:" என்ற வியாகரணத்தின்படி (அவி) என்கிற உபஸர்க்கத்தில் முதலெழுத்து லோபித்துள்ளது.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

மூவராகியமூர்த்தியை முதல்மூவர்க்கும்முதல்வன்தன்னை *
சாவமுள்ளனநீக்குவானைத் தடங்கடல்கிடந்தான்தன்னை *
தேவதேவனைத்தென்னிலங்கை யெரியெழச்செற்ற வில்லியை *
பாவநாசனைப் பங்கயத்தடங்கண்ணனைப்பரவுமினோ ! (உ)

| | | | |
|---|---|---|---|
| மூவர் ஆகிய மூர்த்தியை | மூவரும் தானே என்னலாம்படியுள்ளவனாய் | தேவதேவனை | தேவாதி தேவனாய் |
| முதல் மூவர்க்கும் | (நூல்களில் ஆங்காங்கு) முதல்வராகச் சொல்லப்படுகின்ற அந்த இந்திரன் பிரமனீசன் என்ற மூவர்க்கும் | தென் இலங்கை | தென்னிலங்கையில் |
| முதல்வன் தன்னை | காரண பூதனாய் | எரி எழ | அக்னி தலையெடுக்கும்படி |
| சாவம் உள்ளன நீக்குவானை | (அவர்களுக்கு நேரும்) துன்பங்களை யெல்லாம் போக்குபவனாய் | செற்ற | பகைவரை அழித்த |
| தட கடல் | விசாலமான திருப்பாற் கடலில் | வில்லியை | சார்ங்கத்தையுடையவனாய் |
| கிடந்தான் தன்னை | கண்வளர்ந்தருள்பவனாய் | பாவநாசனை | பரம பாவநனாய் |
| | | பங்கயம் தட கண்ணனை | தாமரை போன்று பரந்த திருக்கண்களையுடையவனான எம்பெருமானை |
| | | பரவுமின் | புகழ்ந்து பாடுங்கள். |

*** [மூவராகிய மூர்த்தியை.] கீழ்ப்பாட்டில் நிரூபித்த பரத்வத்தைக் கேட்டவர்கள் 'இப்படிப்பட்ட பராத்பரனானவனை நாங்கள் ஆச்ரயிக்க எங்ஙனே கூடும்?' என்று சங்கிக்க, உப்படிப்பட்டவன்தானே உங்களோடு ஸஜாதீயனாய் சக்ரவர்த்தி திருமகனாய் வந்து அவதரித்தான் என்று அவதார வெளிமையை இப்பாட்டில் உணர்த்துகின்றார்.

"மூவராகிய மூர்த்தியை" என்பது கீழ்ப்பாசுரத்தின் அநுபாஷணம். இது அந்தாதித் தொடைக்குச் சேர அமைந்த அநுபாஷணமென்று கொள்ளவேண்டா; "மூவராகிய மூர்த்தி" என்றதனால் ஸ்வரூபைக்யம் சொல்லுகிறது என்று சிலர் மயங்குதற்கு இடமுண்டாதலால் அந்த மயக்கத்திற்கு இடமறும்படி அருளிச் செய்வதற்காகவே அநுபாஷணம் செய்கிறபடி. "முதல் மூவர்க்கு முதல்வன்தன்னை" என்று அடுத்தபடியாக ஸ்பஷ்டமாயருளிச்செய்கையாலே மூவராகிய என்றவிடத்துள்ள அபேத நிர்த்தேசம் கார்யகாரணபாவ ப்ரயுக்தமென்று தெளியக்கடவது.

முதல் மூவர் = அரி அயன் அரன் என்றமூவர்; அயனுக்கும் அரனுக்கும் முதல்வன் என்றால் ஒக்கும்; அரியையும் சேர்த்து அவனுக்கும் முதல்வன் என்றால் எங்ஙனே பொருந்தும் என்று ஒரு சங்கையுண்டாகும்; இங்கே நம்பிள்ளை அருளிச்செய்கிறார் காண்மின்;—"தான் இவர்களுக்குக் காரணபூதனானவோபாதி தனக்கு அவ்வருகு காரணாந்தரமின்றிக்கே யிருக்குமென்றபடி; * ஸுதேஶ்வரூ என்கிறபடியே."—தனக்கும் தானே காரணபூதனென்றதனால் தனக்கு வேறொரு காரணபூதனில்லை யென்பது பெறப்படும் என்றதாயிற்று.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அன்றியே, "ஸஸூஹாஸஸிவஸெஜூ:" என்ற பிரமாணத்தின்படி இந்திரனைக் கூட்டி மூவர் என்றதாகக் கொண்டால் சங்கைக்கே உதயமில்லை.

சாபமுள்ளன நீக்குவானை = அம்மூவர்க்கும் நேர்ந்த கஷ்டங்களைப் போக்குமவன் என்கை. பிரமன் வேதங்களைப் பறிகொடுத்துத் தவித்துநிற்க அவ்வாபத்தைப் போக்கினதும், சிவன் தகப்பன் தலையைக் கிள்ளியெறிந்த பாவத்தினால் தடுமாறிநிற்க அவ்வாபத்தைப் போக்கினதும், இந்திரன் அஸுர பாதையினால் வருந்திநிற்க அவ்வாபத்தைப் போக்கினதும் இங்கு அநுஸந்தேயம்.

எம்பெருமான் ஆதிகாலத்தில் நான்முகனைப் படைத்து, பிரளயகாலத்தில் மறைந்துகிடந்த வேதங்களைப் பிரகாசப்படுத்தி அவனுக்கு உபதேசித்து அநுக்ரஹிக்க, அப்பிரமன் அந்த வேதங்களைக் கண்ணாகக்கொண்டு விச்வஸ்ருஷ்டியைச் செய்ய ஆரம்பித்தபொழுது பகவானிடத்தினின்று ரஜஸ்தமோ குணங்களின் வடிவமாகத்தோன்றிய மதுகைடபர்களென்னும் இரண்டு அஸுரர்கள் அந்த வேதபுருஷர்களை அபஹரித்துக்கொண்டு கடலினுட்புகுந்து பாதாள லோகத்திற்குப் போய்விட்டார்கள்; வேதங்களைப் பறிகொடுத்த நான்முகன் இன்னது செய்வதென்று தோன்றாது திகைத்து நெடுங்காலம் 'கண்ணிழந்தேன் தனமிழந்தேன்' என்று கதறியழுது பிறகு சிறிது தெளிந்து எம்பெருமானைத் துதிக்க, ஹயக்ரீவ ரூபியாக எழுந்தருளிப் பாதாளத்திற் சென்று மதுகைடபர்களை ஸம்ஹரித்து வேதங்களை மீட்டுக்கொணர்ந்து பிரமனுக்கு அளித்தனன் என்பது முதலான இதிஹாஸங்களினால் பிரமனது கஷ்டத்தைப் போக்கினமை உணரத்தக்கது.

ஒருகாலத்திலே பரமசிவன், தன்னைப்போலவே பிரமனும் ஐந்துதலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குவதற்கு இடமாயிருக்கின்றதென்று நினைத்து அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொள்ளுதலும், அவன் 'இதற்கு என் செய்வது?' என்று கவலைப்பட, தேவர்களும முனிவர்களும் 'இப்பாவந் தொலையப் பிச்சையெடுக்க வேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்குத்தான் இது கையை விட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பல தலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித்திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தை யடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயண மூர்த்தியை யடைந்து வணங்கி இரந்தபோது அப்பெருமான் 'அக்ஷய்யம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையை விட்டகன்றது—என்பதுமுதலான இதிஹாஸங்களினால் சிவபிரானது கஷ்டத்தைப் போக்கினமை உணரத்தக்கது. இந்திரனுடைய கஷ்டங்களைப் போக்கின வரலாறுகள் எண்ணிறந்தவை.

தடங்கடல் கிடந்தான் தன்னை = இன்னமும் இப்படிப்பட்ட ஆபத்துக்கள் யார்க்கேனும் நேர்ந்தால் விரைந்துவந்து காரியஞ்செய்தற்காகக் கடலிலிடங்

15

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



கொண்டாளுயிற்று. அந்தக் கிடையழகிலீடுபட்டுப் பிரமன் முதலிய தேவர்கள் அங்குவந்து துதிக்கின்றமை பற்றித் தேவதேவனை என்ருர்.

தென்னிலங்கை யெரியெழச் செற்ற வில்லியை = அக்நியானது ராவண பயத்தாலே புகமாட்டாமலிருந்த ஊரிலே அந்த அக்நியைத் தான் நினைத்தபடி வியாபரிக்கப் பண்ணவல்ல வில்வலியை யுடையவனென்கை.

பாவநாசனை = கையும் வில்லுமாயிருக்கிற படியைக் கண்டவளவிலே அனைவருடைய பாவமும் தொலையுமென்க. உத்தர ஸ்ரீராமாயணத்தில் அகஸ்த்யர் ஸ்ரீராமபிரானை நோக்கி „ வாவந ஸவ–லொகாநாம் தமெவ ரவு-நஜந— பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந " என்று சொன்னது இங்கு அறியத்தக்கது.

பங்கயத்தடங்கண்ணனைப் பரவுமின் = பாவங்களைத் தொலைப்பவனன்றியே பாவங்களை வளர்ப்பவனானாலும் திருக்கண்ணழகுக்குத் தோற்க வேண்டும்படியன்றோ உலகமெல்லாமிருப்பது; அப்படிப்பட்ட பெருமானைத் துதித்துத் தொழுங்கள் என்றாராயிற்று. ... ... ... (உ)

பரவிவானவரேத்தநின்ற பரமனைப்பரஞ்சோதியை *
குரவைகோத்தகுழகனை மணிவண்ணனைக்குடக்கூத்தனை *
அரவமேறிஅலைகடலமரும் துயில்கொண்டவண்ணலை *
இரவுநன்பகலும்விடாது என்றுமேத்துதல்மனம்வைம்மினே. (௩)

| | |
|---|---|
| வானவர் | தேவர்கள் |
| பரவி ஏத்த நின்ற | வாயாரத் துதிக்கும்படி அமைந்த |
| பரமனை | பராத்பரனாய் |
| பரம் சோதியை | மேலான ஒளியுருவனாய் |
| குரவை கோத்த | (கோபிமார்களோடு) ராஸக்ரீடை செய்த |
| குழகனை | ரஸிகனாய் |
| மணி வண்ணனை | நீலமணிவண்ணனாய் |
| குடக்கூத்தனை | குடக்கூத்தாடினவனாய் |
| அரவம் ஏறி | சேஷசயனத்தின் மீதேறி |

| | |
|---|---|
| அலை கடல் | அலையெறிகின்ற திருப்பாற்கடலில் |
| அமரும் துயில் கொண்ட | பொருத்தமான நித்திரையைக் கொண்டவனான |
| அண்ணலை | பெருமானை |
| நல் இரவும் பகலும் | நல்ல இரவும் பகலும் |
| விடாது | இடையறாமல் |
| என்றும் ஏத்துதல் | எந்நாளும் தோத்திரம் பண்ணுதலில் |
| மனம் வைம்மின் | சிந்தை செலுத்துங்கள். |

* * * [பரவிவானவர்.] கீழ்ப்பாசுரத்தில் ப்ரஸ்தாவித்த இராமபிரானிற்காட்டிலும் எளியனாய்வந்து திருவவதாரம் பண்ணியருளின கண்ணபிரானை ஆச்ரயிக்கப் பாருங்களென்கிறார்.

க்ருஷ்ணாவதாரத்திற்கு ஹேதுவாகத் தேவர்கள் பண்ணின தோத்திரத்தைத் திருவுள்ளம்பற்றிப் பரவி வானவரேத்தநின்ற என்றருளிச் செய்கிறார். பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜனங்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பதுபோல் வருத்தமற்றிருக்கும்; ஒரு துஷ்டனுண்டாகிலும் இரும்பு மூட்டையைத் தாங்குவதுபோல் மிக வருத்தமாம்; ஆதலால் த்வாபரயுகத்தில் இப்பூமியின்கண் பிறந்திருந்த கம்ஸன் சிசுபாலன் முதலிய அசுரர்களின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத் தரித்து மேருமலையினுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையையடைந்து, அச்சபை நடுவில் வீற்றிருக்கும் நான்முகனை வணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ்வஸுரர்களைத் தொலைத்துத் தன்னை ஸுகப்படுத்த வேணுமென வேண்டிக்கொள்ள, அதற்கு நான்முகன் சிறிதுகாலம் யோசித்து 'இது நம்மாலாகாது, ஸர்வஜ்ஞனாய் ஸர்வ சக்தனாய் ஸர்வலோக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு அறிவித்து அவர் மூலமாக இக்காரியத்தை நிறைவேற்றுவிக்கவேணும்' எனக்கருதி அந்தப்பூமியும் பற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமனைத்தொழுது துதித்தனர்; பின்பு திருமால் அருள்புரிந்த சிந்தைகொண்டு அவர்கட்குக் காட்சிதந்து யோக க்ஷேமங்களை விசாரித்து அவர்கள்வந்த வரலாற்றை யுணர்ந்தருளி அவர்கட்கு வாக்கு அளித்தபடியே இந்நிலத்தில் கண்ணபிரானாய் வந்து திருவவதரித்தனனென்றுணர்க.

குரவைகோத்த குழகனை = க்ருஷ்ணாவதாரத்தில் அற்புதமாக நடந்த ராஸக்ரீடையை அநுஸந்திக்கிறபடி. கண்ணபிரான் தன்னிடத்து விருப்பமுற்ற ஆயர் மாதருடைய ஆவலைத் தீர்க்கக்கருதி சரத்காலத்தில் ஓரிரவில் யமுனைக்கரையில் நின்று வேணுநாதஞ் செய்ய, அதனைக் கேட்ட இடைப் பெண்களெல்லாரும் மாமியார் மாமனார் முதலியோரையும் மதியாமல் காவல்கடந்து புறப்பட்டுச் சென்று க்ருஷ்ண கோஷ்டியில் அந்வயிக்க, அன்றிரவு அவர்களுடன் பரம போக்யமாகக் குரவைக் கூத்தாடினன். குரவையாவது — ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாகப் பல வடிவெடுத்து நின்று மண்டலித்தாடும் ராஸக்ரீடை.

குழகன்— . ஒரு நீராகக் கலப்பவன்.

குடக்கூத்தனை = பிராமணர்க்குச் செல்வம் விஞ்சினால் யாகஞ் செய்வதுபோல, இடையர்க்குச்செல்வம் விஞ்சினால் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப் போக்குவீடாக அவர்களாடுவது குடக்கூத்து: தலையிலே அடுக்குக்குடமிருக்க இரு தோள்களிலும் இரு குடங்களிருக்க இரு கையிலும் குடங்களை யேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுகிற கூத்தாக இதனைக் கூறுவர்கள். இதனைப் பதினோராடலி லொன்றென்றும், அறுவகைக் கூத்திலொன்றென்றுங் கூறி, "குடத்தாடல் குன்றெடுத்தோனாட லதனுக், கடைக்குப வைந்துறுப்பாய்ந்து" என்று மேற்கோளுங் காட்டினர் சிலப்பதிகார வுரையில் அடியார்க்கு நல்லார். குடக்கூத்தனை என்ற இவ்விடத்து ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"திருக்குரவையில் அந்வயிதார்க்குயாம் இழக்க வொண்ணாதபடி மன்றிலே தன்னுடைய வடிவழகை முற்றூட்டாக அநுபவிப்பிக்குமவனை."

அரவமேறி யித்யாதி. "ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:। நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்"—ஏஷ

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

நாராயணஃ ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:, நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்." என்கிறபடியே சேஷசயனத்தில் நின்றும் இறங்கிவந்து திருவவதாரம் பண்ணி வியாபாரங்களை முடித்துக்கொண்டு மீண்டும் அந்த சேஷசயனத்திலேறித் துயிலமர்ந்தனனென்பது இங்கு விவக்ஷிதம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை இரவும்பகலும் விடாது துதிக்கப் பாருங்களென்றாயிற்று (ரு)

வைம்மின்நும்மனத்தென்று யானுரைக்கின்றமாயவன்சீர்மையை *
எம்மனோர்களுரைப்பதென்? அதுநிற்கநாள்தோறும் * வானவர்
தம்மையாளுமவனும் நான்முகனும்சடைமுடியண்ணலும் *
செம்மையாலவன்பாதபங்கயம் சிந்தித்தேத்தித்திரிவரே. (சு)

| | | | |
|---|---|---|---|
| நம் மனத்து | 'உங்கள் நெஞ்சிலே | நான்முகனும் | பிரமனும் |
| வைம்மின் என்று | வையுங்கள்' என்று | சடை முடி அண்ணலும் | ஜடாதரக் கடவுளான சிவனும் |
| யான் உரைக்கின்ற | என்னால் சொல்லப்படுகின்ற | செம்மையால் | முறைமை தவறாது |
| மாயவன் | மாயோனுடைய | அவன் | அவ்வெம்பெருமானுடைய |
| சீர்மையை | சீல குணத்தை | | |
| எம்மனோர்கள் | என்னைப் போன்றவர்கள் | பாதபங்கயம் | திருவடித் தாமரைகளை |
| உரைப்பது என் | சொல்லுவது என்னே? | நாள்தோறும் | எப்போதும் |
| அது நிற்க | அது கிடக்க; | சிந்தித்து | சிந்தனை செய்து |
| வானவர் தம்மை ஆளுமவனும் | தேவர்களை ஆள்பவனான இந்திரனும் | ஏத்தி | துதித்து |
| | | திரிவர் | இதுவே காரியமாக இருப்பர். |

* * * [வைம்மின்நும்மனத்து.] மிகவும் அபிமாந யுக்தர்களான பிரமன் சிவன் முதலானாரும் தடையின்றியே வந்து பணியலாம்படி யிருக்கிற எம்பெருமானுடைய சீலாதிசயத்தைப் பேசுகிறார். "சிந்தியுங்கோள்!!" என்று அடிக்கடி நான் சொல்லிக்கொண்டு வருகிற எம்பெருமானுடைய சீலத்தை நான் சொல்லுவது ஒருபுறமிருக்கட்டும்; தங்களையே கடவுளாக மதித்திருக்கின்ற இந்திரன், பிரமன் உருத்திரன் முதலானாருங்கூடத் தங்களுடைய செவ்வைக் கேட்டைவிட்டு ருஜுப்ரக்ருதியுடனே அப்பெருமானுடைய பாதாரவிந்தங்களைப் பணிகின்றார்கள்; அன்னவர்களும் வந்து பணியலாம்படி அவன் தன்னை அமைத்துக் கொடுக்கின்றானென்றால் இது எப்படிப்பட்ட சீலமென்று பாருங்கள்; நானெடுத்துரைக்க வேண்டுவதோ இது! என்கிறார்.

என்று + யான் என்றியான்; "யவ்வரினிய்யாம்" என்பது நன்னூல் விதி. எம்அனோர்கள்—எம்மனையவர்கள்; எம்மைப் போன்றவர்கள் என்றபடி. (சு)

திரியும்காற்றோடகல்விசும்பு திணிந்தமண்கிடந்தகடல் *
எரியும்தீயோடிருசுடர்தெய்வம் மற்றும்மற்றும்முற்றுமாய் *
கரியமேனியன்செய்யதாமரைக்கண்ணன் கண்ணன்விண்ணோரிறை *
சுரியும்பல்கருங்குஞ்சி எங்கள்சுடர்முடியண்ணல்தோற்றமே. (எ)

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| கரிய மேனியன் | ச்யாமளமான வடிவை யுடையனாய் |
| செய்ய தாமரை கண்ணன் | செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களை யுடையனாய் |
| விண்ணோர் இறை | நித்யஸூரி நாதனாய் |
| சுரியும் பல் கரு குஞ்சி | சுருண்டு அலகலகாய்க் கருமையாகிய குழற்கற் றையையுடையனாய் |
| சுடர் முடி | ஒளி பொருந்திய திரு முடியையுடையனாய் |
| எங்கள் அண்ணல் | எமக்கு ஸ்வாமியான |
| கண்ணன் | கண்ணபிரானுடைய |
| தோற்றம் | விளக்கமானது, |
| திரியும் | இடையறாது உலாவு கின்ற |
| காற்றோடு | வாயு வென்ன |
| அகல் | விசாலமான |
| விசும்பு | ஆகாசமென்ன |
| திணிந்த | கடினமான |
| மண் | பூமியென்ன |
| கிடந்த | கரைகடவாமல் கிடந்த |
| கடல் | ஸமுத்ரமென்ன |
| எரியும் | ஜ்வலிக்கிற |
| தீயோடு | அக்னி யென்ன |
| இரு சுடர் | சந்திர ஸூரியர்க ளென்ன |
| தெய்வம் | (மற்றுள்ள) தேவதைக ளென்ன |
| மற்றும் | மற்றுள்ள மானிடர்க ளென்ன |
| மற்றும் | மற்றுள்ள திர்யக் ஸ்தா வரம் முதலியவை களென்ன (ஆகிய) |
| முற்றும் ஆய் | ஸகலஸ்வரூப மாயிருக்கும். |

* * * [திரியுங்காற்றோடு.] எம்பெருமானுடைய விபூதிவிஸ்தாரங்களை அநுப வித்துப்பேசுகிறார். திரியுமென்று தொடங்கி "எரியுந்தீயோடு" என்னுமளவும் பஞ்ச பூதங்கள் பேசப்பட்டன. இப்பஞ்ச பூதங்களும் எம்பெருமானிட்ட வழக்கு. சந்திரன் ஸூர்யன் முதலான தேவர்களும் மனிதர்களும் விலங்குகளும் மற்றுமுள்ள யாவையும் அப்படியே. ஆக முன்னடிகளால் எம்பெருமானுடைய ஜகதாகாரத்வம் சொல்லப்பட்டு, மேல் அஸாதாரண விக்ரஹயுக்தனா யிருக்கு மிருப்பு சொல்லப்படுகிறது.—கரியமேனியன் செய்யதாமரைக்கண்ணன் விண் ணோரிறை சுரியும்பல்கருங்குஞ்சி எங்கள் சுடர்முடியண்ணல் கண்ணன் தோற்றம் —திரியுங்காற்றோடகல்விசும்பு திணிந்தமண்கிடந்த கடல் எரியுந் தீயோடிரு சுடர் தெய்வம் மற்றும் மற்றும் முற்றுமாய் என்று அந்வயக்ரமம். 'முற்றுமாய் என்றது 'முற்றுமாம்' என்றபடி.

ஆறாயிரப்படியை நோக்குமிடத்து, பாசுரமுள்ளபடியே அந்வயக்ரமத் தைப் பிள்ளான் திருவுள்ளம் பற்றினதாகப் புலப்படுகின்றது: அண்ணல் தோற்ற மே—"எம்பெருமானை நான் காணப்பெற்றேன்" என்பது ஆறாயிரம். ... (ரு)

தோற்றக்கேடவையில்லவனுடையான் அவனொருமூர்த்தியாய் *
சீற்றத்தோடருள்பெற்றவனடிக்கீழ்ப் புகநின்றசெங்கண்மால்*
நாற்றத்தோற்றச்சுவையொலி உறலாகிநின்ற * எம்வானவ
ரேற்றையேயன்றி மற்றொருவரையானிலேனெழுமைக்குமே. (சு)

| | |
|---|---|
| தோற்றம் கேடு அவை | ஜன்ன மரணங்களாகிய அவைகள் |
| இல்லவன் | இல்லாதவனும் |
| உடையான் | அவற்றையுடையவனும் |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | |
|---|---|
| அவன் | ப்ரமாண ப்ரஸித்தனும், |
| ஒரு மூர்த்தி ஆய் | ஒப்பற்ற நரசிங்கமூர்த்தி யாய் |
| சிற்றத்தோடு அருள் பெற்றவன் | சீறியிருக்கும் நிலைமையிலேயே கருணைக்கு இலக்கான ப்ரஹ்லாதன் |
| அடி கீழ் புக நின்ற | தன் திருவடிவாரத்தில் கூசாது நிற்கப்பெற்றவனும், |
| செம் கண் மால் | சிவந்த திருக்கண்களையும் ஆச்ரித பக்ஷபாதத்தையுமுடையவனும் |
| நாற்றம் தோற்றம் சுவை ஒலி உறல் ஆகி நின்ற | கந்தம் ரூபம் ரஸம் சப்தம் ஸ்பர்சம் என்கிற பஞ்ச விஷயங்களுமாய் நிற்பவனும் |
| எம் வானவர் ஏற்றையே அன்றி | தேவாதி தேவனுமான எம்பெருமானையே யன்றி |
| எழுமைக்கும் | எல்லாக் காலத்திலும் |
| மற்று ஒருவரை | வேறொருவரை |
| யான் இலேன் | நான் புகலாகவுடையேனல்லேன். |

* * * [தோற்றக்கேடவை.] ஆச்ரித விஷயத்தில் எல்லைகடந்த வாத்ஸல்யமுடைய நரஸிம்ஹ மூர்த்தியையொழிய மற்றொருவரை யானுடையேனல்லேனென்கிறார். தோற்றமாவது உத்பத்தி; கேடாவது விநாசம்; இவையிரண்டும் பகவத்ஸ்வரூபத்திலில்லாமையாலே தோற்றக்கேடவையில்லவன் என்றது. இவை ஸ்வரூபத்திலில்லாவிடினும், * அஜாயமாநோ பஹுதா விஜாயதே * என்றும் * எங்கின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் * என்றும் சொல்லுகிறபடியே ஸ்வேச்சையாலே பரிக்ரஹிக்கும் திருமேனிகளுக்கு உத்பத்தி விநாசங்கள் உள்ளனபோல் தோற்றுகையாலே 'உடையான்' என்றும் சொல்லிற்று. தோற்றக் கேடவையுடையான் என்றபடி. இப்பொருளைவிட, உடையான் என்பதற்கு ஸ்வாமியென்கிற பொருள் சிறக்கும்; இதுவே ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றினதுமாகும். "[உடையான்.] தோற்றக் கேடுள்ள பதார்த்தங்களை யடையத் தனக்கு சேஷமாக வுடையான். நிருபாதிக சேஷி." என்பது ஈடு.

அவனொரு மூர்த்தியாய்— கருமம் காரணமான பிறப்பு இல்லாதவன் அடியார்களுக்காக விக்ரஹ பரிக்ரஹம் செய்பவனாய் என்றபடி.

சீற்றத்தோடு அருள்பெற்றவன் = இது ப்ரஹ்லாதாழ்வானைச் சொன்னபடி; நரஸிம்ஹபகவானுக்கு இரணியன்மேல் அளவு கடந்த சீற்றம் ஒருபுறம் செல்லாநிற்க, ப்ரஹ்லாதாழ்வான் குளிர்ந்த நோக்கத்திற்குப் பாத்திரமாயினன்.—எம்பெருமானாரைச் சிலர் கேட்டார்களாம்; நரசிங்கமூர்த்திக்குச் சீற்றம் அளவுமீறிப்பொங்கிச் செல்லுகையில் சிறுக்கன் எங்ஙனே அணுகிநிற்கவல்லவனாயினன்? என்று. —அதற்கு அவர் அருளிச்செய்த விடை "ஸிம்ஹம் ஆனைமேலே சீறினாலும் குட்டிக்கு முலையுண்ணலாம்படி யிருக்குமிறே" என்றாம். இவ்விடத்திற்குப் பொருத்தமாக "இழவு தரியாத தோர் ஈற்றுப்பிடி யிளஞ்சீயந் தொடர்ந்து முடுகுதலும், குழவியிடைக் காலிட்டெதிர்ந்து பொருங் கோவர்த்தன மென்னுங் கொற்றக்குடையே" என்ற பெரியாழ்வார் திருமொழி நோக்கத்தகும்.

செங்கண்மால்— இரணியன் பக்கல் சீற்றத்தாலும் கண் சிவந்திருக்கும்; ப்ரஹ்லாதாழ்வான் பக்கல் வாத்ஸல்யத்தாலும் சிவந்திருக்கும். மால்="மாலே பெருமை கருமை மையலுமாம்" என்ற நிகண்டின்படி பெருமையும் மையலும்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



இங்குக் கொள்ளத்தகும் : இரணியன் பக்கலில் பெருமை காட்டப்பட்டது; ப்ரஹ்லாதாழ்வான் பக்கலில் மையல் காட்டப்பட்டது. (மையல்—வியாமோஹம் ; அன்பு)

நாற்றத்தோற்றமித்யாதி. சப்தாதி விஷயங்கள் ஸம்ஸாரிகளுக்கு வேறுயிருக்கும்; தமக்கு அவையெல்லாம் எம்பெருமானேயா யிருப்பன் என்கிறது. (சு)

எழுமைக்குமெனதாவிக்கு இன்னமுதத்தினையெனதாருயிர் *
கெழுமியகதிர்ச்சோதியை மணிவண்ணனைக்குடக்கூத்தனை *
விழுமியவமரர்முனிவர்விழுங்கும் கன்னற்கனியினை *
தொழுமின்தூயமனத்தராய் இறையும்நில்லாதுயரங்களே. (எ)

| | |
|---|---|
| எழுமைக்கும் | எல்லா நிலைமைகளிலும் |
| எனது ஆவிக்கு | என் ஆத்மாவுக்கு |
| இன் அமுதத்தினை | இனிய அம்ருதம் போன்றவனும் |
| எனது ஆர் உயிர் | என்னுடைய அருமையான உயிரோடே |
| கெழுமிய | கலந்து நிற்கிற |
| கதிர் சோதியை | பரஞ்சோதியுருவனும் |
| மணி வண்ணனை | நீலமணி நிறத்தனும் |
| குடக் கூத்தனை | குடக்கூத் தாடினவனும் |
| விழுமிய அமரர் | சிறந்த தேவர்களாலும் |
| முனிவர் | முனிவர்களாலும் |
| விழுங்கும் | அநுபவிக்கப்படுகிற |
| கன்னல் கனியினை | கன்னற்கனி போன்றவனுமான எம்பெருமானை |
| தூய மனத்தர் ஆய் | அழுக்கற்ற மனமுடையீர்களாய் |
| தொழுமின் | தொழுங்கள்; (தொழுதால்) |
| துயரங்கள் | துன்பங்களானவை |
| இறையும் | சிறிதேனும் |
| நில்லா | நிற்கமாட்டா. |

* * * [எழுமைக்கும்.] எம்பெருமான் இப்படி ஆச்ரித ஸுலபனுகையாலே அவன் பக்கலில் நீங்கள் பண்ணின துர்லபத்வசங்கையைத் தவிர்ந்து அவனை ஆச்ரயியுங்கள் ; உங்கள் துயரங்கள் தொலைந்துபோம் என்கிறுர்.

[எனதுஆவிக்கு எழுமைக்கும் இன்னமுதத்தினை] பகவத்விஷய ரஸமறியாமல் விஷயாந்தரங்களில் மண்டிக்கிடந்த என்னெஞ்சுக்கு இனிமேலுள்ள காலமெல்லாம் பரம போக்யனுயிருப்பவனை யென்றபடி. எழுமைக்கும் என்றது காலமுள்ளதனையும் என்றவாறு. [எனது ஆருயிர் கெழுமிய கதிர்ச்சோதியை] எம்பெருமானும் ஆழ்வாரோடே கலந்தபின்பே ஒளிமல்கப் பெற்றுனென்க. இங்கே பரமபோக்யமான ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"தாம் கிட்டுகை அத்தலைக்கு நிறக்கேடென்றிருந்தாரிவர்; அது மற்றைப்படியாய், தம்மைச் செறியச் செறிய தீப்தனுயிருந்தான்."

விழுமியவமரர் முனிவர்விழுங்கும் கன்னல்கனியினை = கன்னல்கனியென்று உலகில் ஒரு கனி கிடையாது; ஆழ்வார் எம்பெருமானுடைய விலக்ஷண போக்யதையை நோக்கி இங்ஙனே அபூர்வமாகப் பேசுகிருர். கன்னல் என்பது அக்காரக்கட்டி ; அதைச் செடியின் ஸ்தானத்திலே யாக்கி அதில் பழுத்தபழம் ஒன்று இருக்குமானுல் அது எவ்வளவு போக்யமாயிருக்குமோ அவ்வளவு போக்

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



யன் எம்பெருமான் என்றவாறு. இந்தக் கனியை உண்ணவல்ல அதிகாரிகளும் விலக்ஷணர் என்கிறது "விழுமிய வமரர்முனிவர் விழுங்கும்" என்பதனால்.

தூயமனத்தராய்த் தொழுமின் = 'எம்பெருமான் எளியனோ அரியனோ!, இவனைப் பற்றுவோமோ அல்லது பிரயோஜநாந்தரங்களைக் கொண்டு அகன்று போவோமோ!' என்று இங்ஙனே அலையாமல் நிஷ்களங்கமநஸ்கர்களாய் ஆச்ரயியுங்கள் என்றபடி. ... ... ... ... (எ)

துயரமேதருதுன்பவின்பவினைகளாய் அவையல்லனாய் *
உயரநின்றதோர்சோதியாய் உலகேழும்உண்டுமிழ்ந்தான்தன்னை *
அயரவாங்குநமன்தமர்க்கு அருநஞ்சினைஅச்சுதன்தன்னை *
தயரதற்குமகன்தன்னையன்றிமற்றிலேன் தஞ்சமாகவே. (அ)

| | | | |
|---|---|---|---|
| துயரமே தரு | பரிதாபத்தையே தரக்கடவதான | அயர வாங்கும் | மோஹிக்கும்படி உயிரை அபஹரிக்கின்ற |
| துன்பம் இன்பம் வினைகள்ஆய் | புண்ய பாபரூப கருமங்களுக்கு நியாமகனாய் | நமன் தமர்க்கு | யமபடர்களுக்கு |
| அவை அல்லன் ஆய் | அவற்றுக்குத் தான் வசப்படாதவனாய் | அரு நஞ்சினை | மீட்க முடியாத விஷமாய் |
| உயர நின்றது ஓர் சோதிஆய் | உயர்ந்த நிலமாகிய பரமபதத்தி லெழுந்தருளி யிருக்கின்ற விலக்ஷண தேஜோமய விக்ரஹ யுக்தனாய் | அச்சுதன் தன்னை | (தன்னைப் பணிந்தாரை) நழுவ விடாதவனாய் |
| உலகு ஏழும் | எல்லா வுலகங்களையும் | தயரதற்கு மகன் தன்னை அன்றி | சக்ரவர்த்தி திருமகனான எம்பெருமானை யல்லது |
| உண்டு உமிழ்ந்தான் தன்னை | (பிரளயத்தில்) உண்டு (மீண்டும்) வெளிப்படுத்தி ரக்ஷிப்பவனாய் | மற்று | மற்றொரு தெய்வத்தை |
| | | தஞ்சம் ஆக இலேன் | சரணமாக வுடையேனல்லேன். |

* * * [துயரமே தரு] மற்றுள்ளாரும் தம்முடைய பக்ஷத்தை யறிந்து ருசி பண்ணுகைக்காக 'நான் சக்ரவர்த்தி திருமகனை யல்லது மற்றொருவரை ஆபத்தனமாகப் பற்றியிரேன்' என்று தமது உறுதியை வெளியிடுகிறார்.

தயரமே தரு என்கிற அடைமொழி துன்பவினையிற் போலவே இன்பவினையிலும் அந்வயிக்கும். பாபம் போலவே புண்யமும் துயரம் தரக்கூடியதேயாகும். பாபத்திற்காட்டிலும் புண்ணியம் நன்றாயிருந்ததேயாகிலும் மோக்ஷமார்க்கத்திற்கு இடையூறுசெய்திறத்தில் இரண்டும் ஒக்குமாதலாலும், "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்று உபநிஷத்தும் ஓதுகையாலும் புண்ய பாபங்களிரண்டுமே தொலையக் கடவனவாம். புண்ணியங்களுக்குப் பலனாக ஸ்வர்க்காநுபவம் முதலிய ஆபாஸ புருஷார்த்தங்கள் கிடைக்கும்; பாவங்களுக்குப் பலனாக நரக வேதனைகள் கிடைக்கும்; பரம புருஷார்த்தத்தை விரும்பி நிற்பார்க்கு ஸ்வர்க்க நரகங்களிரண்டும் பரியாயமாதலால் புண்ய பாபங்களிரண்டும் தொலையவேணுமென்று

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



சாஸ்த்ரம் சொல்லிநின்றது என்றுணர்க. இதனை ஸ்ரீதேசிகனும் வரதராஜ பஞ்சாசத்தில் * ஸத்யஸ் த்யஜந்தி * என்ற ச்லோகத்தினால் உரைத்தருளினர். புண்ணியம் பொன்விலங்கு போன்றது; பாவம் இரும்பு விலங்கு போன்றது என்பது இந்த ச்லோகத்தின் தேர்ந்த கருத்து. யதேஷ்டமாக ஸஞ்சரிக்க விரும்புகின்றவர்களை இரும்பு விலங்கினால் கட்டிவைத்தாலென்ன? பொன் விலங்கினால் கட்டிவைத்தாலென்ன? இரண்டும் துக்க ஹேதுவேயாகுமென்ற வாறு.

இவ்விடத்தில் ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—'துன்ப வினையோடு இன்ப வினையோடு வாசியற இரண்டும துக்கத்தையே பண்ணித்தரும்......... பகவச் சேஷத்வ விரோதியாய்க் கொண்டு பந்தகமாகை இரண்டுக்கு மொக்குமிறே; * வுஹணாவுவாவெ வியவுய * என்னக்கடவதிறே."

"துன்பஇன்ப வினைகளாய்" என்கிற ஸாமாநாதிகரண்யம்—துன்பஇன்ப வினைகளைச் செய்விப்பவன் என்ற கருத்திலேயாயிற்று; * வஷவவ வஸாயு கஉல் காரயதி...... வஷவவ சுவஸாயுகஉல் காரயதி * என்ற சுருதியும் காண்க.

அவையல்லனாய் = தான் கர்மவச்ய னல்லன் என்றபடி.

'தயரதன் மகன்தன்னை' என்னாதே "தயரதற்கு மகன்தன்னை" என்றதற்கு நம்பிள்ளை யருளிச்செய்யும் தாத்பர்ய விசேஷமாவது—"ஒருகால் வெற்றிலைச் செருக்கிலே 'ராஜ்யத்தைத் தந்தேன்' என்று, புரிந்து ஸ்த்ரீ பரதந்த்ரனாய் 'நான் தந்திலேன், நீ காடேறப் போ,' என்று, இப்படி சொல்லலாம்படி அவனுக்கு இஷ்ட விநியோகார்ஹனான புத்ரனை." என்பதாம். மகன் என்றது ஸர்வாத்மநா விதேயன் என்ற பொருளிலேயாயிற்று; இப்பொருளை 'தயரதற்கு' என்று ஸ்பஷ்டமாக நிற்கின்ற வேற்றுமையுருபு தெரிவிக்கின்றது என்பது நம்பிள்ளை திருவுள்ளம்.

இங்கு ஈட்டில் சில அருமையான திவ்ய ஸூக்திகள் உள்ளன;—

"எம்பெருமானார் திருவாராதனம் பண்ணிப்போருவதொரு பிள்ளையிறே; இங்ஙனே யிருக்கச்செய்தே ஒருநாள் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் சக்ரவர்த்தி திருமகனை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டுவந்து கொடுத்தாராய், அவரைப் பார்த்து ' * மாமேகம் சரணம் வ்ரஜ என்று தேவையிடாதார் எழுந்தருளினர் ' என்றாராம்.—ஆபி முக்யத்தாலே பெறலாமென்றால் அவ்வாபி முக்யந்தானும் பரமபக்தி யோபாதி அரிதாயிருக்குமிறே இச் சேதநனைப் பார்த்தால். 'இத்தலையில் ஆபி முக்யத்திற்கு மேற்பட வேண்டா' என்று சொல்லுகிறவை யெல்லாம் சரண்யனுடைய நீர்மையைப்பற்றச் சொல்லுகிறது. இவனுக்கு வேண்டுவது சொல்லப்புக்கால் * மஹா விச்வாஸ பூர்வகம் என்ன வேண்டும்படியாயிருக்குமிறே. ஒரு சிறுவை விச்வஸித்து ஆறு மாஸத்துக்கு வேண்டும் சோறும் தண்ணீரும் ஏற்றிக்கொண்டு கடலிலே யிழியாநின்றான்; அவ்வோபாதி விச்வாஸமாகிலும் வேண்டாவோ பகவத் விஷயத்தைப் பற்றுவார்களுக்கு என்றருளிச்செய்வர்."—என்று. (அ)



CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



தஞ்சமாகியதந்தைதாயோடு தானுமாயவையல்லனாய் *
எஞ்சலில்அமரர்குலமுதல் மூவர்தம்முள்ளுமாதியை *
அஞ்சிநீருலகத்துள்ளீர்கள் ! அவனிவனென்றுகூழேன்மின் *
நெஞ்சினால்நினைப்பான்யவன் அவனாகும்நீள்கடல்வண்ணனே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| உலகத்து உள்ளீர்கள் | உலகத்தவர்களே!, | நீர் | நீங்கள் |
| தஞ்சம்ஆகிய | ரக்ஷிக்குந் தன்மை பொருந்திய | அஞ்சி | மேன்மை கண்டு கலங்கி |
| தந்தையொடு | தந்தையும் | அவன் இவன் என்று | எல்லை கடந்த மஹிமை யையுடைய அந்த எம் பெருமான் வேறு, இந்த அர்ச்சாரூபியான எம்பெருமான் வேறு என்று கொண்டு |
| தாய்தானும்ஆய் | தாயுமாய் | | |
| அவை அல்லன் ஆய் | அவ்வளவோடும் நில்லாத ஸகலவித பந்துவுமாய் | கூழேல்மின் | கலங்கியிருக்க வேண்டா; |
| எஞ்சல் இல் | (பகவதநுபவத்தில்) குறைதல் இல்லாத | நெஞ்சினால் | நெஞ்சாலே |
| அமரர் குலம் | நித்யஸூரிகளின் திரளுக்கு | நினைப்பான் யவன் | நினைந்து உகந்தருள் விக்கப்பட்டவன் யவன் |
| முதல் | தலைவனாய் | அவன் | அவனே |
| மூவர் தம் உள்ளும் | மும்மூர்த்திகளுள்ளும் | நீள் கடல் வண்ணன் ஆகும் | விசாலமான கடல் போன்ற நிறத்தை யுடைய ஸர்வேச்வர னவன். |
| ஆதியை | முதல்வனான எம்பெருமானைக்குறித்து | | |

* * * [தஞ்சமாகிய] 'எம்பெருமான் ஸ்ரீவைகுண்டத்திலெழுந்தளியிருக்கு மிருப்பு எங்களுக்கு உபயோகப்படுவதன்று; ராம க்ருஷ்ணாதி அவதாரங்கள் பண்ணின காலத்தில் நாங்கள் அணுகியிருந்து வாழப்பெற்றிலோம் ; ஆனபின்பு எங்ஙனே அவனைக் கண்டு ஆச்ரயிக்கும்படி?' என்று ஸம்ஸாரிகள் வினவுவதாகக் கொண்டு, அவர்களுக்கு உத்தரமுரைக்கிறார்;—நீங்கள் ஏதேனு மொருபடி உகந்தருளப்பண்ணி ஆச்ரயிப்பது; அத்திருமேனியையே அப்ராக்ருத திவ்யஸம் ஸ்தானமாக விரும்பியருளக் குறையில்லை யென்கிறார். இப்பதிகத்திற்கு இப் பாசுரமே உயிராயிருக்கும். இப்பாட்டின் பிரமேயத்திற்கு அவதாரிகை போன்றனவே கீழ்ப்பாசுரங்கள்.

தஞ்சமாகிய தந்தை தாயோடு தானுமாய்= இவ்விடத்து ஈட்டு ஸ்ரீஸூக் திகள் பரமபோக்யங்கள்; அவை வருமாறு.— "புறம்புள்ளார் 'தாய் தமப்பன்' என்றுபேராய், இவனுக்கு ஓரிடர் வந்தவாறே பொகட்டுப் போவர்கள்; இவ னுக்கு ஏதேனுமோரிடர்வந்தாலும் அப்போது முகங்காட்டிரக்ஷிப்பான் இவ னொருவனுமேயாயிற்று. மாதாபிதாக்கள் 'இவன்பிறந்த முஹூர்த்தம்பொல் லாது' என்று நாற்சந்தியிலே வைத்துப் போவாரும் அறவி(ற்று)ட்டு ஜீவிப்பாருமா யிருக்கும். அவர்களைப்போலன்றிக்கே, தங்களை அழியமாறியும் நோக்கும் தாய் தந்தையுமாய்.—இவர்களோடுண்டான பந்தந்தான் கர்மமடியாக வந்ததாகை யாலே அக்கர்மம் க்ஷயிக்க க்ஷயிக்கும் ; இங்ஙனன்றிக்கே * ஹ-ஞுதா நாம் யொவூய: விதா * [பூதாநாம் யோவ்யய: பிதா] * ஸவெ-ஷாஜெவ ஹெ

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



காநாம் பிதா மாதாச மாதவ: * [ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:] என்கிறபடியே ஸத்தாயோகி ஸகலபதார்த்தங்களுக்கும் பிதாவாயிருக்கும்; அதுதன்னிலும் இழவுக்குக் கண்ணநீர்பாய வேண்டாத பிதாவாயிருக்கும்."

எம்பெருமானை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்பது பிள்ளையுலகாசிரியருடைய ப்ரபந்நபரித்ராணம் என்கிற ரஹஸ்ய க்ரந்தத்திலும் பரக்க அருளிச் செய்யப்பட்டுளது; அங்குக் கண்டுகொள்க.

ஆசார்யஹ்ருதயம் இரண்டாவது பிரகரணத்தில் "வித்யை தாயாகப் பெற்று" என்கிற சூர்ணையில் "திருமகள்போலவளர்த்த தஞ்சமாகிய தந்தை" என்றுள்ளவிடத்தில் தஞ்சமாகியதந்தை யென்பதற்கு ஆசார்யன் என்றுபொருள் அருளிச்செய்யப்பட்டுளது; தந்தை, ஆகிய தந்தை, தஞ்சமாகிய தந்தைஎன்று யோஜித்து, தந்தையென்று சரீரோத்பாதகனானபிதாவைச் சொல்லுகிறதென்றும், ஆகியதந்தை யென்று ஆபத்காலங்களிலே கைவிடும் பிதாவைப்போலன்றிக்கே ரக்ஷணத்திலே தீக்ஷிதனாயிருக்கும் எம்பெருமானாகிற பிதாவைச் சொல்லுகிறதென்றும், தஞ்சமாகிய தந்தையென்று—ஸ்வரூபோத்பாதகனாய் ஒருதசையிலும் கைவிடாதே ஹிதைஷியாய், ஸம்ஸாரமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருக்கும் எம்பெருமானாகிற பிதாவைப்போலுமன்றிக்கே உஜ்ஜீவநைகபரனாய்க்கொண்டு மோக்ஷைகஹேதுவாயிருக்கிற ஆசார்யனாகிற பிதாவைச் சொல்லுகிறதென்றும் வியாக்கியானிக்கப்படுகிறது. "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து" என்றும் ,, ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாச் சாஸ்த்ரபாணிநா—ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா" என்றும் சொல்லுகிறபடியே ஆசார்யனாகவும் எம்பெருமான்தானே வந்துபிறந்தருளினனாகலால் இங்கு எம்பெருமானைத் தஞ்சமாகிய தந்தை யென்று ஆசார்யவாசகபதத்தினால் சொல்லுவதிலும் குறையில்லையென்றுணர்க.

தானுமாய்= தந்தையானவன் தாயாகமாட்டான்; தாயானவள் தந்தையாகமாட்டாள்; இவர்களிருவரும் இவன்தானாகமாட்டார்கள்; இவன்தான் இவர்களிருவருமாகமாட்டான்; இவர்களெல்லாமாயிருப்பன் எம்பெருமான் என்கிறது. ,, ஸர்வேஷாம் ஸாக்ஷாந்நாயிகாரணாஹம் ஸர்வமான வஸ்துவரிவெஹ் ஸாஹித்தைத் பற்ற இங்ஙனே அருளிச் செய்யப்பட்டது" என்று அஸ்மதாசார்யர் அருளிச்செய்தபடி. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—
"[தானுமாய்.] மாதாபிதாக்கள் பொகட்டுப்போனவன்றும் 'நான்ஜீவிக்கவேணும், எனக்கு நன்மையுண்டாகவேணும்' என்றிறேதானிருப்பது; இப்படி தனக்கு நன்மைபார்க்கும் தானுமாய்."

அவையல்லனாய்= தந்தைதாய் தான் என்னுமிவ்வளவுமாத்திரமேயல்லாமல் ,,மாதா பிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயண:- மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:." "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையும் அவரே

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



வினி யாவரே" என்கிறபடியே ஸர்வோபகாரகனும் ஸர்வவித பந்துவும் அவனே யென்கிறது. இப்படியிருக்கிறவன் யாவனென்ன, நித்ய ஸூரிகளுக்கு ஜீவநஹேது வானவனென்கிறார் எஞ்சலிலமரர்குலமுதல் என்று.

மூவர்தமுள்ளுமாதியை என்றதற்கு, பிரமன் முதலிய மூன்று மூர்த்திகளிலும் வைத்துக்கொண்டு பிரதானனாக வுள்ளவன் என்றும், 'மூவர் தம்' என்ற விடத்தில் தம் என்பதை தாம் என்பதன் குறுக்கலாகக்கொண்டு, மூவர் தாம்—பிரமன் சிவன் இந்திரனாகிய மூவரும், உள்ளும்—தியானிக்கிற, ஆதி என்றும் பொருள் கொள்ளலாம்.

அஞ்சி = கீழ்ச் சொன்னதெல்லாம் பயப்படுவதற்கு ஹேதுவாயிருக்கும்; ஜகத்துக்கு ஸகலவித பந்துவுமாயிருக்கிறவனை நம்மாலே கிட்டப்போமோ? நித்ய ஸூரிகளுக்கு ஸத்தா ஹேதுவாயிருக்கிறவனை நம்மாலே கிட்டப்போமோ? ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனாயிருக்கிறவனை நம்மாலே கிட்டப்போமோ? என்று அஞ்சக்கூடுமே; அப்படி அஞ்சவேண்டா வென்கிறார் மூன்றாமடியினால். அவன் இவனென்று கூழேன்மின் = நித்யஸூரி நாதனான எம்பெருமான்படியையும், நாம் ஏறி யருளப்பண்ணும் அர்ச்சாரூபியான பெருமானுடைய படியையும் பார்த்து, தேசகால வஸ்து பரிச்சேதரஹிதனாய் அஸாதாரண விக்ரஹத்தோடே நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யனாய்க் கொண்டிருக்கிற அப்பெருமான், தேசகால வஸ்துக்களால் பரிச்சின்னனாய் நாமுகந்ததொரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக் கொண்டு நம்முடைய புத்திக்கு அதீனனாயிருக்கின்ற இம்மூர்த்தியாக எப்படி யிருக்கக்கூடும் என்று சங்கிக்கவேண்டா என்பது தேர்ந்த கருத்து. கூழ்ப்பு—ஸம்சயம்; கூழேன்மின்—எதிர்மறை ஏவற்பன்மை வினைமுற்று. நெஞ்சினால் நினைப்பான்யவன் அவனாகும் = யாதொன்றை அவனுக்கு ரூபமாக நினைக்கின்றீர்கள், அதுதன்னையே அவன் திவ்யரூபமாகக் கொண்டருளு மென்றபடி. "* प्रतिमास्वप्रबुद्धानाम् (ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்) என்னும் ரிஷிகளைப் போலே தம்வாயாற் சொல்லமாட்டாமையாலே அவனிவ னென்கிறார்" என்ற நம்பிள்ளை யீடு காண்க. .... .... .... .... (கூ)

கடல்வண்ணன்கண்ணன் விண்ணவர்கருமாணிக்கமெனதாருயிர் *
படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர் பண்டுநூற்றுவர் *
அடவரும்படைமங்க ஐவர்கட்காகிவெஞ்சமத்து * அன்றுதேர்
கடவியபெருமான் கனைகழல்காண்பதென்றுகொல்கண்களே? (கO)

| | | | |
|---|---|---|---|
| கடல் வண்ணன் | கடல் போன்ற நிறத்தை யுடையவனும் | படம் அரவு இன் அணை கிடந்த | படங்களையுடைய ஆதிசேஷனாகிற இனிய படுக்கையில் சயனித்த |
| கண்ணன் | கண்ணபிரானும் | பரம் சுடர் | பரஞ்சோதியாயும் |
| விண்ணவர் | பரமபதத்திலுள்ளவர்கட்கு | பண்டு | முன்பொருகால் |
| கரு மாணிக்கம் | நீலமணிபோலே போக்யனும் | அட | கொல்வதற்காக |
| | | வரும் | திரண்டு வருகின்ற |
| எனது ஆர் உயிர் | எனது அருமையான உயிராயும் | நூற்றுவர் படை | துரியோதனாதிகளின் சேனை |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| மங்க | தொலையும்படியாக | பெருமான் | பெருமானாயுமிருக்கின்ற எம்பெருமானுடைய |
| ஐவர்கட்கு ஆகி | பாண்டவ பக்ஷபாதியாகி | கனை | (வீரத்தண்டையினால்) ஒலிக்கின்ற |
| வெம் சமத்து | கொடிய பாரத யுத்தத்தில் | கழல் | திருவடிகளை |
| அன்று | பகைவர் மேலிட்டுவந்த அந்நாளில் | கண்கள் காண்பது | (என்) கண்கள் ஸேவிக்கப்பெறுவது |
| தேர் கடவிய | (அர்ஜுனனுக்குத்) தேர் செலுத்திய | என்று கொல் | என்றைக்கோ!. |

* * * [கடல்வண்ணன்கண்ணன்.] ஆழ்வார்தாம் உபதேசிக்கத் தொடங்கின ஸௌலப்ய காஷ்டையை அர்ச்சாவதார பர்யந்தமாக அருளிச் செய்து முடித்து, தாம் அகப்பட்ட துறையான க்ருஷ்ணாவதாரத்தை அநுபவிக்க ஆசைப்படுகிறாரிப்பாட்டில். இவ்வாழ்வார் அர்ச்சாவதார ஸௌலப்ய மறிந்திருக்கச் செய்தேயும் க்ருஷ்ணாவதாரத்திலே எத்திறம்! என்று மோஹிக்கு மியல்வினராதலால் அவ்வவதாரந்தன்னிலேயே இப்போதிவர் ஈடுபட்டுப் பேசுவதும் பொருந்தும்.

பரிச்சேதிக்க வொண்ணாத மஹிமையை யுடையனாய் * அயர்வறுமமரர்களுக்கு இனியனாய், நாகபர்யங்கசாயியா யிருந்துவைத்து வஸுதேவ க்ருஹத்தில் அவதரித்தவனாய் எனக்குப் பிராணனாய், துரியோதனன் முதலானோர் படையொடும் மாளும்படியாகப் பாண்டவ பக்ஷபாதியாய்ப் பார்த்தஸாரதியாயிருந்த எம்பெருமானுடைய திருவடிகளை என்னுடைய கண்கள் ஸேவிக்கப் பெறுவது என்றைக்கோ என்கிறார்.

ஸேநாதூளியும் உழவுகோலும் பிடித்த சிறுவாய்க்கயிறும் தேருக்குக் கீழே தொங்கவிட்ட திருவடிகளும் அதிலே சாத்தின சிறு சதங்கையுமாய் ஸாரத்ய வேஷத்தோடே நின்றபோதைத் திருவடிகளில் ஆபரணத்வநி செவிப்படவும் அவ்வடிவைக் காணவுமாயிற்று இவர்க்குண்டான ஆசை. ... (௧௦)

கண்கள்காண்டற்கரியனாய்க் கருத்துக்குநன்றுமெளியனாய் *
மண்கொள்ஞாலத்துயிர்க்கெல்லாம் அருள்செய்யும்வானவரீசனை *
பண்கொள்சோலைவழுதிநாடன் குருகைக்கோன்சடகோபன்சொல் *
பண்கொளாயிரத்திப்பத்தால் பத்தராகக்கூடும்பயிலுமினே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| கண்கள் காண்டற்கு | கண்களால் பார்ப்பதற்கு | அருள் செய்யும் | (அர்ச்சாவதாரமுகத்தாலே) க்ருபை பண்ணுகிற |
| அரியன் ஆய் | அருமைப்பட்டவனாகி | வானவர் ஈசனை | தேவாதிதேவனைக் குறித்து, |
| கருத்துக்கு | தியானத்திற்கு | பண் கொள் சோலை | (வண்டு முதலியவற்றின்) இசைமிகுந்த சோலைகளையுடைய |
| நன்றும் எளியன் ஆய் | மிகவும் சுலபனாய் | வழுதி நாடன் | திருவழுதி நாட்டையுடையராய் |
| மண் கொள் ஞாலத்து | பூமண்டலத்திலுள்ள | | |
| உயிர்க்கு எல்லாம் | பிராணிகளுக்கெல்லாம் | | |

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



| | | | |
|---|---|---|---|
| குருகை கோன் | திருநகரிக்குத் தலைவரான | இ பத்தால் | இப்பதிகத்தினால் |
| சடகோபன் | ஆழ்வார் | பத்தர் ஆக கூடும் | பக்தியையுடையவ ராகக்கூடும்; (ஆதலால்) |
| சொல் | அருளிச் செய்த | | |
| பண் கொள் ஆயிரத்து | ராகப்ரதாநமான இவ்வாயிரத்தினுள்ளும் | பயிலுமின் | (இப்பதிகத்தை) அப்யஸியுங்கோள். |

* * * [கண்கள்காண்டற்கு.] இத்திருவாய்மொழியை ஓத, பழுதில்லாத பக்தியுடையராகை திண்ணம்; ஆனபின்பு இத்திருவாய்மொழியை ஓதுங்கள் என்கிறார்.

காணப்பெறாத க்லேசத்தோடே அருளிச் செய்கிறார் கண்கள்காண்டற்கு அரியனாய் என்று. பகவத் தத்வம் ஒருநாளும காணக்கிடைக்க மாட்டாதது என்று மறந்து பிழைக்கலாமே, அப்படியும் பிழைக்கவொண்ணாதபடி நெஞ்சுக்கு முன்னிலையாயிருக்கும் படியை "கருத்துக்கு நன்றுமெளியனாய்" என்றவிதனால் அருளிச் செய்கிறார்.

ஆழ்வார்க்கு விச்லேஷமாவது—பாஹ்ய ஸம்ச்லேஷா பேக்ஷையாலே மாநஸாநுபவத்துக்கு வரும் கலக்கம்; ஸம்ச்லேஷமாவது—ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான ஜ்ஞாந ஸாக்ஷாத்காரம் என்றுணர்க.

மண்கோள்ஞாலத்து இத்யாதி. நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யனாயிருப்பது போலவே, ஸம்ஸாரிகளென்று வாசி வையாதே அர்ச்சாவதார முகத்தாலே வந்து ஸுலபனானவன் என்றபடி. ஆக இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயமாக ஆழ்வாரருளிச் செய்த ஆயிரத்திப்பத்தால், எல்லாம் கிடைக்கினும் கிடையாததான பகவத்பக்தியும் கிடைக்கும்; ஆதலால் இப்பதிகத்தை அப்யஸியுங்கோள் என்றாராயிற்று.

பண்கோள்சோலை என்றவிடத்து ஈட்டில் "முக்கோட்டைபோலேகாணும் சோலையிருப்பது" என்றுள்ளது. (அதாவது) மலையாளத்தில் முக்கோட்டை என்று ஓரிடமாம்; அது மூகாம்பிகையின் கோயில் என்பர்கள்; அவ்விடத்தில் ஊமைகள் சென்றாலும் அங்கிலமிதியால் வெகு அழகாகக் கவி பாடுவார்களாம். (இது முற்கால வழக்கம்போலும்.) பெரிய திருமொழியில் (8-10-9) "பாட்டினா அன்னை யென்னெஞ்சத் திருந்தமை காட்டினாய்" என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் "இவரைப்பாடுவித்த முக்கோட்டையிருந்தபடி" என்றுள்ள ஸ்ரீஸூக்தியும் இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

பத்தராகக்கூடும் என்றவிடத்து ஈடு;—"பரத்வஜ்ஞானத்துக்கு அடியான ஸுக்ருதமாதல் சாஸ்த்ரஜ்ஞானமாதல் ஸதாசார்யோபதேசமாதல் நிர்ஹேதுக பகவத் கடாக்ஷமாதல் இவையனைத்து மில்லாதார்க்கும் அர்ச்சாவதார ஸௌலப்யத்தை யநுஸந்திக்கவே பகவத்பக்தி யுண்டாகக் கூடும்; அவாப்த ஸமஸ்த காமனான ஸர்வேச்வரன் ஆச்ரித வாத்ஸல்யத்தாலே இவனுகந்த தொன்மைத் திருமேனியாக விரும்பி இவனமுதுசெய்வித்ததை அமுது செய்து,

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



அகங்கள்தோறும் புக்கு விடமாட்டாதே யிருந்தால் 'இவன் நம்மை விடமாட்டாதேயிருந்த பின்பு நாமும் இவனுக்கு ஸ்நேஹித்தாலாகாதோ' என்னக்கூடுமிறே. 'நிதி இங்கே யுண்டு' என்று சொல்லக் கற்பர்களிறே; அப்படியே 'பக்தி யுண்டாம்' என்ன அப்பவிப்பர்களென்று அருளிச் செய்கிறார்."

பத்தர்—பக்தர். ... ... .... ... (கக)

ஆறுந் திருவாய்மொழி உரை முற்றுப்பெற்றது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

## த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி.

पद्माक्षीं पापहन्त्रीं मणिरुचिममराधीशचिन्त्याङ्घ्रिपद्मां
तत्तादृक्कुन्तलश्रीसघटितमकुटां भावुकप्राप्यपादाम् ।
शुद्धास्वाद्यस्वभावां [illegible] वृत्तिहव्याम्
[illegible] वृत्तिं हरितनुमवदन्निर्मलार्चानुरक्तः ॥

(நிர்மல அர்ச்சாஅநுரக்தஃ ஹரிதநும் பத்மாக்ஷீம்..................அவதத்= அர்ச்சாவதாரத்தில் அன்பு கொண்டவரான ஆழ்வார் எம்பெருமானுடைய திருமேனியை * செய்யதாமரைக் கண்ணனுயென்கிற திருவாய்மொழியில் இங்ஙனே பேசினர்; எங்ஙனே யென்னில் ;)

1. பத்மாக்ஷீம். * செய்யதாமரைக் கண்ணனுய் * செந்தாமரை போன்ற திருக்கண்களை யுடையதாகவும்.

2. பாபஹந்த்ரீம். * பாவநாசனை.* பாவங்களையெல்லாம் போக்கடிக்க வல்லதாகவும்.

3. மணிருசிம். * குரவைகோத்த குழகனை மணி வண்ணனை.* நீலமணிபோன்ற நிறத்தை யுடையதாகவும்.

4. அமராதீச சிந்த்ய அங்க்ரிபத்மாம். * வானவர்தம்மை யாளுமவனுமித்யாதி.* தேவாதிபதிகளான பிரமன் சிவனிந்திரர்களாலே சிந்திக்கத்தக்க திருவடித்தாமரைகளை யுடையதாகவும்.

5. தத்தாத்ருக்குந்தளஸ்ரீஸங்கடிதமகுடாம். * சுரியும் பல்கருங்குஞ்சி யெங்கள் சுடர்முடியண்ணல்.* அழகிய திருக்குழலின் சோபையோடே சேர்ந்த திருவபிஷேகத்தை யுடையதாகவும்.

6. பாவுகப்ராப்யபாதாம். * சிற்றத்தோடருள் பெற்றவனடிக் கீழ்ப்புக நின்ற செங்கண்மால.* பக்தனை ப்ரஹ்லாதாழ்வான் வந்து கிட்டலாம்படியான திருவடிகளை யுடையதாகவும்.

7. சுத்தஆஸ்வாத்யஸ்வபாவாம். * விழுமியவமரர் முனிவர் விழுங்குங் கன்னற்கனியினை.* தூய அமரர் முனிவர்களால் கன்னற்கனிபோல் அநுபவிக்க வுரியதாகவும்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.



8. யமபடமதநீம். * அபரவாங்கு நமன்தமர்க்கு அருநஞ்சினே.* யமபடர்கள் உணுக அஞ்சும்படி அவர்களைத் தொலைக்கவல்லதாகவும்.

9. பக்ததீவ்ருத்திபவ்யாம். * நெஞ்சினுல் நினைப்பான் யவனவனுகும்.* அடியவர்கள்நெஞ்சில் பாவித்தபடியே பவ்யமாகின்றதாகவும்.

10. நீசஉச்சஅபீஷ்டவ்ருத்திம் * கடல்வண்ணன் கண்ணனித்பாதி.* நிம்நோந்நதமான யதேஷ்ட வ்யாபாரத்தை யுடையதாகவும். அதாவது—திருப்பாற்கடலில் திருக்கண் வளர்வதாகிற உத்துங்கமான செயலையும், பார்த்தனுக்குத் தேர் செலுத்துவதாகிற தாழ்ச்சியான செயலையும் செய்தமையைச் சொன்னவாறு.—ஆக இப்படிப்பட்ட தன்மைகளை யுடையதாக [ஹரிதநும் அவதத்.] எம்பெருமானது திருமேனியை ஆழ்வார் பேசியருளினர்.

தூப்புல்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

செய்ய பரத்துவமாய்ச் சீரார் வியூகமாய் *
துய்ய விபவமாய்த் தோன்றிவற்றுள் — எய்துமவர்க்கு
இந்நிலத்தி லர்ச்சாவதார மெளிதென்றான் *
பன்னுதமிழ் மாறன் பயின்று

| | |
|---|---|
| செய்ய | விலக்ஷணமான |
| பரத்துவம்ஆய் | பரமபதத்திலிருப்பாய் |
| சீர் ஆர் | மேன்மை பொருந்திய |
| வியூகம் ஆய் | க்ஷீராப்தியிலிருப்பாய் |
| துய்ய | பரிசுத்தமான |
| விபவம் ஆய் | ராமக்ருஷ்ணுதி அவதாரமாய் |
| தோன்று | (இங்ஙனே சாஸ்த்ரங்களினுல்) காணப்படுகின்ற |
| இவற்றுள் | இந்நிலைமைகளுள், |
| எய்துமவர்க்கு | ஆச்ரயிப்பவர்களுக்கு |
| இந்நிலத்தில் | இவ்விபூதியிலே |
| அர்ச்சாவதாரம் | அர்ச்சாவதாரமே |
| எளிது என்றான் | ஸுலபமென்று அருளிச்செய்தார்; (அவர்யாரென்னில்) |
| பயின்று பன்னு தமிழ் மாறன் | ஆராய்ந்து அருளிச்செய்யப்பட்ட தமிழ் வேதத்தையே நிரூபகமாகவுடைய ஆழ்வார். |

பரமபதத்திலே யெழுந்தருளியிருந்து நித்ய முக்தர்கட்குக் காட்சி தரும் நிலைமை யென்ன, திருப்பாற்கடலிலே வ்யூஹபளித்திருக்கும் நிலைமை யென்ன, ஸ்ரீராமக்ருஷ்ணுதி ரூபேண அவதரித்த விபவாவதார நிலைமை யென்ன—ஆகிய இவற்றை யெல்லாம் விட, அர்ச்சாவதாரமாகக் காட்சி தந்தருளும் நிலைமையே இவ்வுலகில் பக்தர்களுக்கு மிகவும் எளிய தென்னுமிடத்தை ஆழ்வார் இத் திருவாய்மொழியினுல் அருளிச் செய்தாரென்றுராயிற்று.

எம்பெருமானுடைய நிலைமைகளுள் அந்தர்யாமித்வமும் சேர்ந்திருக்க அதனை இங்கு எடுத்துக்கூருதது அதில் ஆச்ரயண ப்ரஸக்தி யில்லாமை பற்றி யென்று கொள்ளலாம். உபலக்ஷண விதத்தினுல் அதுவும் இங்குக் கொள்ளத் தக்கதே யென்பாரு முளர்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

CC-0. Bhagavad Ramanuja National Research Institute, Melukote Collection.